30

உ

முருகக்கடவுள் துணை

ஸ்ரீ ஆளவந்தார் முனிவர்

மொழிபெயர்த்தருளிய

# ஸ்ரீ ஞானவாசிட்டம் மூலமும்

மதுரை

ஸ்ரீ பிரஹ்மாநந்த சுவாமிகள்

மடாதிபதியாக இருந்த

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரஞானதேசிக சுவாமிகளின்

மாணுக்கரும் "சிவஞானபோத"

உரையாசிரியரும்

மேற்படி மடாதிபதியுமாகிய

ஸ்ரீலஸ்ரீ சின்மயானந்த ஞானதேசிக சுவாமிகள்

# இயற்றிய உரையும்

இவை

மேற்படி ஸ்ரீ சின்மயாநந்த சுவாமிகளால்

பதிப்பிக்கப்பட்டது.

(முதற்பாகம் 1301 பாடல்கள்)

அச்சிட்டோர்:

சி. வி. என். பிரஸ், மதுரை.



1974

முதற்பாகம்
விலை ரூ. [illegible]

# சிறப்புப் பாயிரம்

கருப்பக்கிளர் உயர்திரு :
சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள்

ஆளவந்தான் எனவந்து வாசிட்ட நன்னூலை
அந்நாளில் அருளிச் செய்தோன்
மீளவுந்தான் இடைக்காட்டூர் தனில்வந்து சின்மயா
நந்தப்பேர் விளங்கப் பெற்று
நீளவுந்தான் வாசிட்ட அந்நூற்குப் பேருரையை
இந்நாளில் நினைத்துச் செய்தான்
நாள்வந்தான் போகாமல் உலகத்தீர் கற்றுநல
மெய்யறிவு நண்ணு வீரே.



# பொருளடக்கம்

# சின்மயாநந்த அட்டகம்

## தவத்திரு: இராசையா அவர்கள் இயற்றியது

சீர்திகழ் மதுரைப் பிரமவா நந்தத் திருமட மதனிலே குருவாய்ப்
பேர்திகழ் சிந்ம யானந்த ஞகிப் பெரியநற் பிரமமாய் விளங்கும்
தார்திகழ் சாமி தாளிணை போற்றில் தாரணி தன்னிலே நல்ல
ஏர்திகழ் சிறப்பு யாவுமே இயையும் என்பதை உணர்ந்துநீ நன்கு. (1)

சின்மயா நந்தத் தேசிகா என்று தினந்தினம் போற்றியே பணிந்தால்
நின்மய மாகி நீளொளி பெற்று நிலத்திலே அகண்டமாய் வாழ்வாய்
பொன்மய மான உலகமும் பொய்யாம் போற்றுநற் பிரமமே மெய்யாம்
உன்மய மாக உணர்ந்துநீ இதனை உள்ளத்தில் கொள்ளுவ தழகே. (2)

சத்தியப் பிரம சதுரினைப் பெறுவான் தானுளம் விழைந்திடுந் தூயோர்
நித்தியப் பொருளாய் நிகழ்ந்திடு பிரம நின்மல நற்பொரு ளாகச்
சித்தியைப் பெறவே சிந்மயா நந்த தேசிகர் தாள்களைப் போற்றிப்
பத்தியைச் செய்தால் பயன்பெறல் உண்மை பரகதி தானுமுண் டாமே. (3)

பிரமவா நந்த சுவாமிகள் மடத்தில் பெரியநற் சாமியாய் விளங்கும்
தருமமே வடிவ மானநன் மூர்த்தி சதுரெலா மோருரு வானோன்
கருமமே யின்றிக் காரணப் பிரமம் கணித்திடத் தானென நின்றோன்
திருமய மான சிந்மயா நந்தத் தேசிகன் தனைத்தினம் பணிவாம். (4)

பூவுல கெங்கும் பொருந்திய அகண்டப் பொருளெனப் புகன்றிடும் பிரமம்
தாவிலா தென்றுந் தானென நிற்கும் தன்மைசேர் பெரியவன் நாளும்
நாவினுற் சிவோகம் நவின்றந்தச் சிவமாய் நண்ணியே தானென நின்றோன்
மூவுல கத்து உயிர்களும் போற்றும் முனிசிந்ம யாநந்தற் பணிவாம். (5)

ஐம்பெரும் பூத மாகியே யிந்த வகிலத்தில் எங்குமாய் நிறைந்த
செம்பொரு ளான சீர்பரப் பிரம சிந்மயா நந்தனைப் போற்றில்
தம்பெரும் பதந்தான் தாவிலாப் பிரம தற்பத மாகுதல் உண்மை
உம்பதம் வேண்டில் உடனிதைச் செய்வீர் உலகுவாழ் நல்லறி வோரே. (6)

உண்மைசேர் பொருளாய் உலகினர் போற்ற உயர்ந்திடு நற்பொரு ளான
எண்மைசேர் பொருளாய் இயம்பிடு பிரம எழில்சச்சி தாநந்தப் பொருளைத்
தண்மைசேர் உளத்தில் தகவுடன் காணச் சால்புடன் நீங்கடாம் விரும்பில்
வண்மைசேர் பொருளாய் வந்திடு சின்ம யானந்த வள்ளலைப் பணிவீர். (7)

சிற்பொரு ளான சிந்மயா நந்தத் தேசிகர் தாந்தினம் வாழி
நற்பொரு ளதனை நவின்றிடு குருவாம் நற்சிந்ம யானந்தர் வாழி
பொற்புட னிந்தப் பூவுல கதனில் பொருந்திய சச்சிதா நந்தத்
தற்பதங் கடந்த சிந்மயா நந்தர் தகவுடன் விளங்கியே வாழி. (8)

---



| | | |
|---|---|---|
| ஸ்ரீ பாலானந்த சுவாமிகள். | ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள். | ஸ்ரீ சுத்த பிரஹ்மானந்த சுவாமிகள். |

உ

ஓம் மகாகணபதயே நம:

# ஞானவாசிட்டம்

## மூலமும் உரையும்

### முகவுரை.

சத்தியஞான அனந்த அத்வீதிய பரமாத்மாவாகிய பகவான் நாராயணர் கற்பாதியின்கண்ணே தமப்பிரதானமாகிய க்ஷேத்திரங்களையும் சிற்பிரதானமாகிய ஜீவர்களையும் பாவனை ஞானகருமானுசாரமாகச் சிருஷ்டித்தார்; தமப்பிரதானமாம் க்ஷேத்திரங்கட்கும் சிற்பிரதானமாஞ் சீவர்கட்கும் பரம் காரணமாம் பாண்மையைப் பற்றும், பாவனை ஞானகருமங்களினுல் என ஸ்ரீ மதாசிரியரும் கூறியுள்ளார். தம்மாற் சிருஷ்டிக்கப்பட்ட பிராணிகளின் சொர்க்க மோக்ஷத்தின் பொருட்டு உபாயமாகக் கொள்ளத் தக்கனவாயிருக்கும் கரும ஞானவடிவவேதார்த்தத்தை மரீசியாதிகட்கும் சனகாதிகட்கும் உபதேசித்தனர்; அவர்களானேயுபதேசிக்கப்பட்டுப் பிராணிகளானே யனுஷ்டிக்கப்பட்டு வந்த அந்த வேதார்த்தமானது இராவணுதி துஷ்டர்களானே யனுஷ்டிக்கப்படாதவாறு இடையூறு செய்யப்பட்டதையுத்தேசித்து அதை இரக்ஷிக்க வேண்டுமென்னு மிச்சையினுலே மாயையைத் தன்வயப்படுத்திய சத்திய சங்கற்ப முடைய பகவான் சங்கற்பத்தினுலே இனிது சம்பாதித்துக்கொண்ட அறியாமை யுடையவராகிக் கௌசல்ய தசரத குமாரரா யவதரித்தார். அவதரித்துப் பின் ஸ்ரீ வசிஷ்டபகவானது சீடன்போனடித்து நானுவிதமான கலைமாலைகணிறைந்த அவரது சம்வாதத்தால் ஞானமிர்த ரசத்தையும் வெளிப்படுத்தினுர். கருமத்தையும் பிரவிருத்திப்பித்தார், அரக்கர் குலத்தை நாசஞ் செய்யும் வாயிலாக அவ்விரண் டையுமே காப்பாற்றியருளினர். ஆண்டுப்பிரஹ்மத்திற்கே பிரஹ்மவித்யாதிகாரிக தன்மையை அறிவித்தற்பொருட்டு ஸ்ரீராமர் சீடனுனதாம்; '' இவையெலாமெழுந் திங்கிலங்குதன் முன்னர் நவையறு பிரமமே நண்ணும் நன்கது உவமறுதன்னையே யுணர்ந்ததுயானப், பவமறு பிரமமே படிவமாயுள்ளேன் '' ஆகலீனதுவெலாமாயது கண்டாய் '' என மறையுமறைகின்றது. சர்வ துவைதாகார அஞ்ஞான பரிணமங் களில் தன்னுடைய ஆபாசம் அந்தப்பலகத்தில் (கண்ணுடியில்) இனிதாரூடமாகச் சாக்ஷித்வ ஈசுரத்வகாரணத்வ அந்தர்யாமித்வரூபத்தன்மையை ஆத்மா அடைகின் றது. அதுவும் உலகத்திருந்தபோதினும் உண்மையாயினும் அதனேடு சம்பந்தப் படாதாம். அசங்காகமவிரோதம் வருதலின், ஆகலின் ஈசுரத்வாதி கற்பிதம்'' என வார்த்திகத்துளதாம், அவ் வசிஷ்ட ராம சம்வாதத்தைத் திவ்யஞான சம்பத்தை யுடைய ஸ்ரீ வான்மீகி பகவான் முப்பத்தீராயிரம் சுலோகமாக இயற்றினர். வைராக் கிய முமுக்ஷு விவகார ஜகத்துற்பத்தி திதி உபசாந்தி நிர்வாணப்பிரதிபாதக ஆறு பிர கரணப் பேரலைகளோடு கூடியதும்; அனேக ஆக்கியான தரங்கங்கங்களோடுற்றதும், விவேக வைராக்கிய உபரதி விஞ்ஞானுதி இரத்தினங்கட்கிடமும், ஆகியவிவ்வாசிட்ட சமுத்திரத்தை மந்தமதிகள் கடக்கமுடியாதவாறு கண்டு பரமகாருணிகராயகான்மீர பண்டிதரென்னும் ஸ்ரீ அபினந்தாசாரியர் ஆறுயிரஞ் சுலோகங்களை யதினின்றுந் தொகுத்து, சம்சாரதரணி (சம்சாரம் சமுத்திரம், தரணி = கப்பல்,) என நாமங்

கொடுத்துத் தொகுத்தனர் அவற்றையே வீரை ஸ்ரீ ஆளவந்தான் முனிவர் வடமொழிப் பயிற்சியில்லாது கிளர்தமிழ் மக்கண் மேலுள்ள காருண்யச் சிறப்பால் செந்தமிழ்க் கவிதையில் 2055 செய்யுட்களாக உபோற்காதமாய் மற்றொன்று வந்து கலவாது செய்தருளினர்.

## இந் நூலாசிரியர் மரபு கூறல்

1 3 2 4
தாளவந்த மலரோன்றன் மனத்துதித்த வசிட்டனயன்பாற்கேட்டு
நாளவந்தான் போகாத விராமனுக்கங் குபதேசநல்கியிங்கே
5 6
யாளவந்தான் வீரையின்மா தவப்பட்ட னங்க்சவவதாரமாகி
5
மீளவுந்தான் வந்துதமிழ் வசிட்டரா மாயணமும் விளம்பினனே.

### பதவுரை

| | | |
|---|---|---|
| தாளமலரோன்றன் வந்த | = | தண்டினையுடைய (பிரமாவின்) உந்தியந்தாமரையினின்று உதித்த |
| வசிட்டன் அயன்பாற்கேட்டு | = | வசிட்டர் (பிதாவான) பிரம்மாவினிடத்தில் சிரவணித்து |
| நாள் அவந்தான் போகாத இராமனுக்கு அங்கு உபதேச நல்கி | = | நாளெல்லாம் வீணாளாகக் கழியாத ஸ்ரீ இராமபிரானுக்கு) தசரதரது அரண்மனையின் சபையில் உபதேசஞ் செய்து |
| இங்கே | = | இப் பாண்டியநாட்டின்கண்ணே |
| மீளவுந்தான் வீரையின் | = | மீண்டும் தான் வீரசோளன் என்னும் கிராமத்தில் |
| மாதவப்பட்டன் அங்கிச ஆளவந்தான் வந்து | = | மாட்சிமை பொருந்திய தவப்பட்டன் வம்சத்தில் ஆளவந்தான் அவதாரமாகி |
| தமிழ் வசிட்டராமாயணமும் விளம்பினன் | = | பாண்டிநாடென்னும் தமிழ்நாட்டில் பிறந்து செந்தமிழில் 2055 செய்யுள் வடிவமாக இயற்றியுள்ளார். |



# ஞானவாசிட்டம்

## மூலமும் உரையும்

### பாயிரம்.

பெண்மை பாதியன் பெற்றக ளிற்றினை
யண்மை தூரமறவகத் துன்னுவாந்
திண்மை ஞானச்சிறப்புயர் வாசிட்ட
முண்மை யாகவொருங் குரைசெய்யவே. (1)

| | | |
|---|---|---|
| பெண்மை பாதியன் | = | பராசக்தியைப் பாதிப்பாகத்திற்கொண்ட |
| பெற்ற களிற்றினை | = | பரமசிவன் உலகம் உய்ய ஈன்றருளிய யானைமுகத் தோனாகிய விநாயகப் பெருமானை |
| அண்மை தூரமற | = | (சர்வகதமாதலின்) சமீபதூரமிலாது தன்வடி வாகவே |
| அகத்து உன்னுவாம் | = | சுத்தசத்துவ அந்தக்கரணத்தில், அகண்டாகார விருத்தியால் சந்ததம் சிந்திப்பாம் |
| திண்மை ஞானச் சிறப்புயர் வாசிட்டம் | = | ஐயந்திரிபு இல்லாமல் அபரோக்ஷமாய் உண்டாகும் சாக்ஷாத்கார ஞானத்தைப் பயத்தலினும் அதன் அந்தரங்க பகிரங்க சாதனங்களைக் கூறுவதிலும் சிறப்புமிக்க இஞ் ஞானவாசிட்ட நூலை |
| உண்மையாக | = | எவ்வாறு கீர்வாண பாஷையில் ஸ்ரீ வான்மீகிபக வான் அருளியிருக்கின்றாரோ அவ்வாறே அருத் தமுங் கருத்தும் மாறாமலும் வேதாந்த சம்பிரதாய விரோதமில்லாமலும், |
| ஒருங்கு உரை செய்யவே | = | ஒருங்கே செந்தமிழ்ச் செய்யுளால் கூறும் பொருட் டும் விக்கினமின்றி முடியும்பொருட்டும் சுத்தசத்துவ அந்தக்கரணத்தில் அகண்டாகார விருத்தியால் சந்ததம் சிந்திப்பாம். |

போற்றி ராமன்பு கல்வயி ராக்கியம்
தோற்று நூற்றிரு பத்திரண் டாஞ்சுகன்
சாற்று சீரிரு பத்தைந்து தற்பதத்
தேற்றம் வேண்டினர் சீரிரு பத்தெட்டே. (2)

| | | |
|---|---|---|
| போற்றி ராமன் | = | அறிவுடையார் யாவரும் நிரந்தர ஸ்தோத்திரஞ் செய்யும்படியாயும் எல்லாருடைய மனங்களும் மிக ரமிக்கும்படியாயுமுள்ள ஸ்ரீ இராகவன் |

புகல் வைராக்கியம் = நம்மனோர் பொருட்டுக் குறையுள்ளவன் போல
தோற்று நூற்றிருபத்திரண் = நடித்துக்காட்டி மகரிஷிகளின் சந்நிதியிற் சித்தரும்
டாம் தேவரும் புகழப் பதினொரு வகையாகப் பிரித்துக் கூறிய வைராக்கியப் பிரகரணம் நூற்றிருபத் திரண்டு செய்யுட்களாம்.

சுகன் சாற்றுசீர் இருபத் தைந்து = ஸ்ரீ வியாசபகவானது அருந்தவப் புதல்வராகிய சுகர் ஜனகமகாராஜாவாலே பரிசோதித்து உபதே சிக்கப்பட்ட ஞான மணம் மணக்கும் செய்யுள் இருபத்தைந்தாம்.

தற்பதத்தேற்றம் வேண் டினர் சீரிருபத்தெட்டு = பிரஹ்மானந்தத்தில் விசிராந்தியுற்று (தேற்றம் தெளிவு கிருத கிருத்தியராயிருக்க இச்சையுற்ற முமுட்சுப் பிரகரணம் செய்யுள் இருபத்தெட்டாம்)

ஞான விண்மக னாற்பத்து நாலதா
மான லீலம கிமைதொண் ணூறதா
மான வூசியு மையெட்டு மேழுமா
மீன மற்றசீ ராய்ந்தவ ரீரைந்தே. (3)

ஞான விண்மகன் = கர்த்தவ்யமில்லாது யாவையுஞ் செய்து காலனுக்கு
நாற்பத்தி நான்கதாம் = அகப்படாத சிதாகாசஜன் கதை நாற்பத்திநான்கு செய்யுட்களாம்.

மான லீல மகிமை = (மானம்=நேசம், கற்பு) சரஸ்வதியின் அருளினலே ஞானம் பெற்றுப் பிரபாவமுடைய லீலை கதை

தொண்ணூறதாம் = தொண்ணூறு செய்யுட்களாம்.
ஆன ஊசியும் = பெரிய ஆகிருதியுடைய கற்கடியானவள் பூர்வம் ஆசையால் தவம் புரிந்து அயரூப ஊசிவடிவந்தரித் தும் பின்னர் நிராசையால் தவம்புரிந்தும் புராதன ஆகிருதியையும் ஞானத்தையும் அடைந்ததான கற்கடியின் கதை

ஐயெட்டு ஏழுமாம் = நாற்பத்து ஏழு செய்யுட்களாம்.
ஈனமற்ற சீராய்ந்தவர் = கைலாசபதியின் திருவருளால் இந்து மறையவ னுக்குப் புத்திரனாய்ப் பிறந்து ஐந்தவர் எனப் பெயர் பெற்றவராய் யாவற்றினும் சிறந்த பதம் யாது என ஆராய்ந்து பிரம்மாவின் பதமே எனத் தவஞ்

ஈர் ஐந்து = செய்து அடைந்தவர் கதை பத்துச் செய்யுட்களாம்.

வஞ்ச விந்திரன் வன்கதை யொன்பதா
நெஞ்சி னுக்கிரு பத்திரு நீள்கவி
தஞ்ச பாலகன் றன்கதை யெட்டதா
மெஞ்சு சித்தனி ருபது மாறுமே. (4)



| | | |
|---|---|---|
| வஞ்சவிந்திரன் | = | பெயர்மாத்திரத்தானே இந்திரன் என நினைந்து பெருவஞ்சஞ்செய்து |
| வன்கதை யொன்பதாம் | = | தீரமனத்துடனிருந்த அவன் மனத்தின் செயலே செயல் என்று காட்டிய கதை ஒன்பது செய்யுட்களாம். |
| நெஞ்சினுக்கு | = | மனத்தின் சொரூபமும் |
| இருபத்தொரு நீள்கவி | = | அதற்கு வேறு வேறு வகையானே விசேட பயனடைதலும் போதிக்கும் செய்யுள் இருபத்திரண்டாம். |
| தஞ்சபாலகன்றன் கதை எட்டதாம் | = | தஞ்சம் = எளிமை = துணை செவிலித்தாய் பொய்யாகக் கட்டிச்சொன்ன கதை எட்டுச் செய்யுட்களாம். |
| எஞ்சு சித்தன் இருபதுமாறுமே | = | இலவணராஜாவிற்கு இராஜசூயபயனை துயரைத் தந்து தான் சேடித்துநின்ற சித்தன் கதை இருபத்தாறு செய்யுட்களாம். |

துன்னு முற்பத்தி சொல்லெழு பத்தொன்று
நன்னர் வெள்ளியு நாற்பதோ டேழுதா
மன்ன தாமனு மையெட்டு மூன்றுமா
மின்ன வீமனி ருபது மைந்துமே. (5)

| | | |
|---|---|---|
| துன்னு | = | மனத்தினுனே வாசனைக்குத் தக்கபடி நெருங்கி |
| உற்பத்தி சொல் எழுபத்து ஒன்றும் | = | உண்டாம் உற்பத்திப்பிரகரண இதோபதேசம் எழுபத்தொரு செய்யுட்களாம். |
| நன்னர் வெள்ளியும் நாற்பதோடேழுதாம் | = | நன்மையாக தியானஞ் செய்துகொண்டிருந்து வாசனையினுலே பலபிறப்பையடைந்து எமதருமரது திருவருளால் இனியபதமடைந்த சுக்கிரன் கதை நாற்பத்தேழு செய்யுட்களாம். |
| அன்னதாமனும் | = | வாசனையற்றிருந்து பின்னர் வாசனையினுலே கட்டுண்டிருந்தவரான தாமவியாளகடர் கதை |
| ஐயெட்டு மூன்றுமாம் | = | நாற்பத்துமூன்று செய்யுட்களாம். |
| இன்ன வீமன் | = | இச் சூழ்ச்சியை யுணர்ந்த |
| இருபதுமைந்துமே | = | சம்பராசுரனுல் ஞானத்தோடு சிருஷ்டிக்கப்பட்ட வீமபாசதிடர் கதை இருபத்தைந்து செய்யுட்களாம். |

துதிகொ டாசூரன் றொல்கதை நூற்றெட்டா
மதிநெ டுங்கசன் வன்கதை நாலைந்தாந்
திதியெ னுங்கதை யேழுஞ்ச னகன்றன்
முதிய நற்கதை முப்பது மாறுமே. (6)

துதிகொள்தாசூரன் = பவித்திரமான இடத்தை அக்கினிபகவானால்பெற்று தவம் புரிந்ததால் யாவரும் துதிக்கும்படி வாழ்ந்த தாசூரமுனிவர்

தொல்கதை = வனதேவதை புத்திரனுக்கு ஞானோபதேசம் செய்து அம் மைந்தனும் ஞானம் அடைந்த கதை

நூற்றெட்டாம் = நூற்றெட்டுச் செய்யுட்களாம்.

மதிநெடுங்கசன் = சூக்கும தீர்க்கபுத்தி விருத்தியால் சமாதியடைந் திருந்த வியாழபகவான் புத்திரராகிய கசன்

வண்கதை நாலைந்தாம் = அனுபூதி நிறைந்த கதை இருபது செய்யுட்களாம்.

திதியெனுங் கதை ஏழுஞ் = திதிப்பிரகரண இதோபதேசமாய்ப் பெரியோர் சொரூபமும் நடையுங் குணமும் அதிகாரிகள் செய்ய வேண்டிய கடமையுங் கூறுங் கதை ஏழு செய்யுட்களாம்.

சனகன்றன் முதியநற்கதை = ஆகாசபலம்போலத் தெய்வ சம்பத்தாலடைந்த சனக ராஜா திடஞானபோதக இனிமையான கதை

முப்பதும் ஆறும் = முப்பத்தாறு செய்யுட்களாம்.

உரிய புண்ணிய னொன்பது நாற்பது
நரகின் மாவலி நாலுட னைம்பதாம்
பிரக லாதன்பி ழைப்பெழு பத்திரண்
டரிய காதியு மைந்துடன் முப்பதே. (7)

உரிய = உபசாந்திக்கு உரியவனாய்

புண்ணியன் நாற்பது ஒன்பது = (தம்பி பாவனனுக்கு அநுக்கிரகம் புரிந்த) புண்ணியன் கதை நாற்பத்து ஒன்பது செய்யுட்களாம்.

நரகு இல் = துன்பமற்ற (பெரிய வலியையும் பேராயுளையும் பெற்ற)

மாவலி = மகாபலிச் சக்கிரவர்த்தி கதை

நாலுடன் ஐம்பதாம் = ஐம்பத்திநான்கு செய்யுட்களாம்.

பிரகலாதன் பிழைப்பு = (ஸ்ரீமந் நாராயணனது அருளால் ஞானம் பெற்றுச் சமாதியடைந்திருந்த) பிரகலாதன் கதை

எழுபத்திரண்டு = எழுபத்திரண்டு செய்யுட்களாம்.

அரிய = ஏனையோரால் செய்தற்கரிய (தவஞ் செய்து மாயையை ஜெயித்த)

காதியும் = காதிப் பிராமணரது கதை
ஐந்துடன் முப்பது = முப்பத்தைந்து செய்யுட்களாம்.

சித்த மாறித்தெ ளிந்தவுத் தாலக
னொத்த வெண்பதுக் கொன்றுகு றையவாஞ்
சுத்த நாற்பது மாறுஞ்சு ரகுவாம்
பத்து மேழுமாம் பாசவி பாசரே. (8)

சித்தம் ஆறித் தெளிந்த ஒத்த உத்தாலகன் = மனத்தைப் போராடி யோகவலியால் வென்று சம திருஷ்டியடைந்த உத்தாலக முனிவரது கதை
எண்பதுக்கொன்று குறையவாம் எழுபத்தொன்பது செய்யுட்களாம்.
சுத்த சுரகுவும் = விவகார வேளையெல்லாஞ் சமாதியே பெற்று அரசாட்சி செய்த தூயகுண சுரகு மன்னவன் கதை
நாற்பத்து ஆறும் நாற்பத்தாறு செய்யுட்களாம்.
பாச விபாசர் = பாசவிபாசர் என்னும் இந்நாமம் வாய்ந்த இரு நேயரும் சம்பாஷணையால் ஞானம் அடைந்த கதை
பத்தும் ஏழுமாம் பதினேழு செய்யுட்களாம்.

ஏத மற்றவெ ழுபது மாறுமே
வீத கவ்வியன் மேலெழு பத்தொன்றும்
போத முந்துப சாந்திபு சுண்டனு
மோத நூறுக வியிலொன் றில்லையே. (9)

ஏதமற்ற = (பூர்வஞ் சிவகணமாயிருந்துவந்து) குற்றமற்ற சித்தமுடைய
வீதகவ்வியன் வீதகவ்வியன் கதை
மேல் எழுபதும் ஆறும் = எழுபத்தாறு செய்யுட்களாம்.
போதமுந்துபசாந்தி = ஞானமகிமையால் ஆகாசகமனாதிகளும் துச்சமெனக் காட்டும் உபசாந்தியைத் தரும் இதோபதேசம்
எழுபத்தொன்றும் = எழுபத்தொரு செய்யுட்களாம்.
புசுண்டனும் ஓத = பிராணவிருத்தி அனுசந்தானங்கொண்டு நீண்ட காலம் விசிராந்தியடைந்து புகழ்ந்து கூறத்தக்க புசுண்டன் கதை
நூறு கவியில் ஒன்றில்லை = தொண்ணூற்றொன்பது செய்யுட்களாம்.

2 1 3
தேவி பூசைசி றந்தவெ ழுபதா
5 2 6
மேவும் வில்வமி குபதி னுறதா
மேவ மற்றசி லைக்கதை யெட்டதாந்
தாவி லர்ச்சுனன் சாற்றிரு பத்தொன்றே. (10)

சிறந்த தேவபூசை = பரமசிவன் வசிஷ்ட பகவானுக்குபதேசித்த விசிராந்தி சாதக விசேடமான தேவபூஜை கதை

எழுபதாம் = எழுபது செய்யுட்களாம்.

மேவும் மிகும் = மேலான பிரஹ்மசொரூபமே எல்லா வடிவமாகவுமிருக்கின்றது என உணர்த்தும்

வில்வம் பதினுறதாம் = வில்வப்பலக் கதை பதினுறு செய்யுட்களாம்.

ஏவம் அற்ற சிலைக்கதை = அச்ங்கத்தன்மையினுலே திருசியசம்பந்த குற்றமற்ற சித்தானது அசையாமல் சிலைபோன்றது என உணர்த்தும் கதை

எட்டதாம் = எட்டுச் செய்யுட்களாம்.

தாவுயில் அர்ச்சுனன் சாற்றிருபத்தொன்று = யுத்தம் பெரிதும் வந்தும் பகவான் திருவருளால் சித்த விசிராந்தி மாருது செய்த அர்ச்சுனன் கதை இருபத்தொரு செய்யுட்களாம்.

1
சதவு ருத்திரன் றன்கவி முப்பதா
3 2
முதவு மையைந்தோ டொன்றென்பர் பேய்க்கதை
4
முதுப கீரதன் முப்பத்து மூன்றதா
மெதிர்சி கித்துவச னெண்பது மும்மையே (11)

சதவுருத்திரன் றன்கவி = ஜன்ம பரம்பரை சங்கற்பமாத்திரமெனக் காட்டும் முனிவரன் கதையைக் காட்டும் செய்யுள்

முப்பதாம் = முப்பது செய்யுட்களாம்.

உதவும் பேய்க்கதை = சர்வ சம்சயங்களையும் நீக்கி விடை உதவும்படியான வேதாளமன்ன சம்வாத கதை

ஐயைந்தோடொன்றென்பர் = இருபத்தாறு செய்யுட்களாம்.

முதுபகீரதன் = மிகுந்த வைராக்கியமடைந்த பகீரதன் கதை

முப்பத்து மூன்றதாம் = முப்பத்திமூன்று செய்யுட்களாம்.

எதிர்சிகித்துவசன் = இதத்தை உபதேசித்த சூடாலையை எதிர்த்து அவள் சொன்ன கதை நம்பாமல் காட்டிற்குச் சென்று தவம் வருந்திச் செய்து அவளாலேயே ஞானமடைந்த சிகித்துவசன் கதை

எண்பதுமும்மை = இருநூற்றிநாற்பது செய்யுட்களாம்.

1 3
புகல்க சன்பதின் மூன்றுபொய் யாமவ
2 4
னிகழு நாலைந்து நீண்டவி ரதங்க
5 6 8
ளிகலில் பத்தொன்ப தாமிக்கு வாகுவி
7 9
னகில ஞானம றுபது மாறுமே (12)

புகல்கசன் = பிதாவால் மனத்தியாகமே சகலத்தியாகம் என உபதேசிக்கப்பட்ட கசன் கதை
பதின்மூன்று = பதின்மூன்று செய்யுட்களாம்.
இகழு பொய்யாமவன் = அக்ங்காரத்தோடுகூடி விவகரிக்கும் யாவரும் துக்கியரே எனக்காட்டும் மித்தியாபுருடன் கதை
நாலைந்து = இருபது செய்யுட்களாம்.
இகல்இல் நீண்ட விரதங்கள் = சித்த விசிராந்தி கெடாதபடி அதிதிடமான புத்தியால் செய்யத்தக்கனவாமென பரமசிவன் பிருங்கீசற்கு உபதேசித்த மூன்று விரதங்கள்
பத்தொன்பதாம் = பத்தொன்பது செய்யுட்களாம்.
அகில ஞானம் = ஜகத்காரணம் யாதென மநுபக்வானிடம் கேட்டு ஞானமடைந்த
இக்குவாகுவின் அறுபத்தும் ஆறும் = இட்சுவாகு கதை அறுபத்தாறு செய்யுட்களாம்.

1
மானு வேடனு மற்றிருபத் தைந்தா
மான யோகம றுபது மெட்டுமா
3
மோன வுண்மைமொ ழிந்துள வாசிட்ட
2 4
ஞான நூற்கதை நாற்பது மூன்றுமே (13)

மானு வேடனும் = மானைக் காணேமென்று பின்றொடர்ந்து சென்ற வேடன் ஆங்குறை முனிவனைக் கேட்ப அவர் துரியத்தைக்கூறி இலௌகீக மறந்த தன்மையைத் தெரிவிக்கும் கதை
இருபத்தைந்து = இருபத்தைந்து செய்யுட்களாம்.
ஆனயோகம் = சர்வ கிரந்த சாரார்த்தத்தையும் தொகுத்துக் கூறுவதான நிர்வாணத்தின் இதோபதேசம்
அறுபது எட்டுமாம் = அறுபத்து எட்டு செய்யுட்களாம்.

மோனவுண்மை மொழிந்துள = மறுகுவாதனைகள் தீர்ந்த மவுனத்தையொழிய வேறு ஒருகதி நல்லதில்லை என உணர்த்தும் ஞான சாதனத்தினை விஸ்தரித்துக் கூறும்
ஞானவாசிட்ட நூற்கதை = சிரேஷ்டமிக்க ஞானவாசிட்ட நூற்கதை
நாற்பது மூன்றுமே = நாற்பத்துமூன்று கதைகளாம்.

1
பாக மார்பதி கம்பதி னுன்கதா
4
மாக வேயிரண் டாயிரத் தைம்பது
2 5 3
மாக விக்கைந்த திகமிவ் வாசிட்டம்
6
யோக ஞானத்தி னுண்மை யுரைக்குமால் (14)

பாகமார்பதிகம் = பாகம் = பங்கு = பிரிவு அதிபக்குவமாக உபோற்காதமாய் மற்றொன்று வந்து கலவாது மங்களம் உள்படக் கூறும் பாயிரச் செய்யுள்
பதினுன்கதாம் = பதினுன்கு செய்யுட்களாம்.
ஆகவே, இவ் வாசிட்டம் இரண்டாயிரத்தைம்பது கவிக்கு ஐந்து அதிகம் = இவையாவும் ஒருங்கு சேர்ந்துமா இவ் வாசிட்டம் இரண்டாயிரத்தி ஐம்பது செய்யுட்களுக்கு ஐந்து கவிகள் அதிகம்.
யோக ஞானத்தின் உண்மை உரைக்கும் = திட நிருவிகற்ப சமாதியாலுண்டாகும் சாக்ஷாத்காரத்தினுலெய்தும் பிரஹ்மானந்த மோக்ஷமுதலியவற்றின் எதார்த்த தத்துவத்தைப் பிரதிபாதிக்கும்.

பாயிரம் முற்றிற்று.



# வைராக்கியப்பிரகரணம்

## அவதாரிகை

ஸ்ரீ வான்மீகி பகவான் இயற்றற்கிச்சித்த கிரந்தம் நிர்விக்கினமாக நிறைவேறவும், குருசீட பாரம்பரியமாக யாவருஞ் சிரவணஞ் செய்யவும், சிஷ்டா சாரத்தாற் பெற்ற இஷ்டதெய்வ பிரத்யக்க பின்னபிரஹ்ம நமஸ்காரவிலக்கணமான மங்கலத்தைக் கூறுகின்ருர்.

1
பொன்னுல கத்தினிற் புவியி லந்தரத்
3
தென்னுடை யுட்புறத் திலங்கு கின்றது
2 4
மன்னுசிற் சோதியே வடிவ மியாவுமாய்த்
துன்னுவ தப்பொரு டொழுதி றைஞ்சுவாம் (1)

பொன்னுலகத்தினில் = (எந்த ஆத்மா) சுவர்க்கலோகத்திலும்
புவியில் = பூலோகத்திலும்
அந்தரத்து = அந்தரிக்ஷலோகத்திலும்
என்னுடை உள்புறத்து மன்னு சிற்சோதியே = எனது உள்ளிலும்? வெளியிலும் நிலைபெற்று விளங்கா நிற்குமோ
இலங்குகின்றது = நிலைபெற்ற சின்மாத்திர வஸ்துவே விளங்குகின்றது
வடிவம் யாவுமாய்த் துன்னுவது = சர்வான்மகமாகச் செறிகின்றதோ
அப்பொருள் = அவ்வான்மாவை மனம், மொழி, மெய்களால்
தொழுது இறைஞ்சுவாம் = மீண்டும் மீண்டும் வணங்குவாம்.

திகழுநான் முகன்முதற் றேவர் மூவரும்
சகலவே தங்களுஞ் சாத்தி ரங்களும்
புகலுஞா னத்தினுற் புரண மானது
நிகரில்வா சிட்டமா நிபுண ஞானநூல் (2)

திகழு நான்முகன்முதற் றேவர் மூவரும் = மரீசியாதி சகல முனிவர்களுக்கும் ஞானசிரியராய் விளங்கும் நான்கு வேதங்களையும் நான்கு முகத்தாலருள்புரியும் பிரம்மா முதலிய மூவரும் அருளிய கீதாத்திரயங்களும்
சகல வேதங்களும் = காண்டத்திரய வடிவமாய் தருமப் பிரஹ்மத்தை பிரதிபாதிக்கும் வேதங்களும்
சாத்திரங்களும் = அவ் வேதானுசாரமாய் மகரிஷிகளால் பிரதிபாதிக் கப்பட்ட ஸ்மிருதி இதிகாசங்களும்

புகலுஞானத்தினுல் = சொல்லாநின்ற ஞானம், ஞான சாதனங்களால்
நிகர் இல் = தன்னிடத்திலேயே சகல கிரந்தங்களின் அர்த்தங் களும் இருத்தலின் சமானமற்ற
வாசிட்டமா நிபுண ஞான நூல் புரணமானது = இந்த ஞானவாசிட்ட நூலானது பூரிக்கப்பெற்றுப் பொலிகின்றது.

தலைமைநான் முகன்மனத் தாம ரைக்கினன்
சிலையில்ரா கவன்றிருச் செவிக்குத் தெள்ளமு
துலைவில்வான் மீகிவாக் குதித்த தத்துவ
நிலைமைவா சிட்டமா நிபுண ஞானநூல் (3)

தலைமை நான்முகன் = பிரதானமாயிலங்கும் பிரம்மாவினது
மனத்தாமரைக்கு இனன் = திருவுள்ளமாகிய தாமரைவிகசிதமாதற்கு சூரியன் போன்றதாம்
சிலையில் = வில்வித்தைக்கு இல்லமாயிருப்பவரும், சிலையாகிய அகலிகையை திருவடிப்பரிசத்தால் இல்லக்கிழத்தி யாக்கியவரும் சிலை = ஜடம் இல் சந்ததம் சேதன இயற்கையையே யுடையவரும், சிலை = வில் சீதா பிராட்டியை உத்தேசித்துக் கோதண்டத்தைச் சிதைத்தவரும், சிலையைப்போலச் சமாதியுற்றிருப் பவரும் கல்யாணகுணங்கள் நிறைந்தவருமாகிய
இராகவன் = ஸ்ரீ இராமச்சந்திரரது
திருச்செவிக்கு = அழகிய சுரோத்திரங்கட்கு
தெள்ளமுது = பரம அமிர்தமானதாம்
உலைவு இல் வான்மீகி வாக்குதித்தது = அநேக காலம் இராமஜப மகிமையால் சஞ்சலமின் றித் தவம்புரிந்து ஞானம் அடைந்து சர்வஞ்ஞத் தன்மையால் இராமசரிதங் கூறிய வான்மீகி வாக்குதித்தது.
தத்துவ நிலைமை = சொரூப ஸ்திதியைப் பயப்பிப்பதும்
மா வாசிட்ட நிபுண ஞான நூல் = மாட்சிமை பொருந்திய நித்திய மோக்ஷத்தை அனுக்கிரகஞ் செய்வதில் சிறப்புடையதும் ஆகியது வாசிட்ட சாஸ்திரமேயாம்.

பெரியவ ரறிவுறு பெருமை சான்றது
விரிவுறு சிறியவர் மேவொ ணுதது
வரிசையி லுயர்ந்தது வசிட்ட சங்கிதை
யுரியமெய்ஞ் ஞானநூ லனைத்தின் மிக்கதே (4)

பெரியவர் அறிவுறு = சாதனங்கள் நிறைந்த ஜிஞ்ஞாசையுடைய அதிகாரிகள் ஆசிரியர் வாயிலாக எளிதில் அறிந்துகொள்ளும்படியான

| | | |
|---|---|---|
| பெருமை சான்றது | = | மேன்மை மிக்கது. |
| விரிவுறு சிறியவர் | = | இந்திரியாதிகள் விஷயங்களில் விரிவாகச் சென்று மொத்துண்டு அவதியடையும் அற்பர்கள் |
| மேவொணுதது | = | கரத்தினுந்தீண்ட அருகமல்லாதது |
| வசிட்டசங்கிதை | = | வசிட்டபகவானது இதோபதேசம் |
| வரிசையில் உயர்ந்தது | = | ஞானத்தையும் ஞான சாதனங்களையும் பிரதிபாதிப்பதில் சிரேஷ்டமிக்கது. |
| அரிய | = | அனதிகாரிகளாலடைதற்கரிய |
| மெஞ்ஞான நூல் அனைத்தின் மிக்கது | = | சிதானந்த பூரணத்தைப் போதிக்கும் வேதாந்த சாஸ்திரம் யாவற்றுள்ளும் மிகவும் உயர்ந்தது. |

தெருளுரு மகர்க்கிதஞ் செய்யு மன்பினு
லருமைவா சிட்டநூற் கன்னை யொப்பளோ
வுரியதாய் பிறவியை யுள்ளதாக்குவள்
பெருமைவா சிட்டமிப் பிறப்பை மாற்றுமே (5)

| | | |
|---|---|---|
| தெருளுரு | = | ஞானத்தை அடையாதவரும் ஞானத்தையடைய வேண்டுமென்னும் விருப்பினருமான |
| மகர்க்கு | | முமுட்சுக்களுக்கு |
| இதஞ்செய்யும் அன்பினுல் | = | பக்குவநோக்கி அவரவர்கட்கு இதோபதேசம் செய்யும் பிரியத்தினுல் |
| அருமை | = | சொல்லாலும் பொருளாலும் மிக அருமை வாய்ந்த |
| வாசிட்ட நூற்கு | = | ஸ்ரீ வசிட்டகீதமாய் மனக் கலக்கத்தைப் போக்கும் இச் சாஸ்திரத்துக்கு |
| அன்னையொப்பளோ | = | மாதா சமானமாவளோ |
| உரியதாய் பிறவியை யுள்ளதாக்குவள் | = | சரீரத்தைப் போஷிப்பதற்கு உரியவளானதாய் ஜனன மரண சம்சாரத்தை மேலும் மேலும் வாசனையால் யுண்டுபண்ணி விருத்தியடையுமாறு செய்விப்பள். |
| பெருமை வாசிட்டம் | = | திருசியதோஷத்தையகற்றி உயர்வுமிக்க இவ் வாசிட்டம் |
| இப் பிறப்பை மாற்றுமே | = | (அவித்தையோடு) இந்த ஜன்மத்தைப் போக்குமே. |

எண்ணுறு பெருங்குணத் திராமன் றன்மய
நண்ணுற வசிட்டனே நவின்ற ஞானநூல்
பண்ணுறு தமிழினுற் பாடுகேன் சுதை
மண்ணுறு கலத்தினும் வைக்கு மேழையேன் (6)

| | | |
|---|---|---|
| எண்ணுறு | = | மைத்திரியாதிகளும் பொருமையுற்றனவென்று கருதத்தக்க |

| | | |
|---|---|---|
| பெருங்குணத்தி ராமன் | = | அரும்பெரும் சமதமாதிகுணங்கட்கு ஆஸ்பதமாக, விளங்கிய ஸ்ரீ இராகவர் |
| தன்மய நண்ணுற | = | இயல்பாகவே சித்தித்திருக்கும் தமது சொரூபத்தை அதன்கண்ணே சதா சுகிக்க |
| வசிட்டனே நவின்ற ஞான நூல் | = | ஸ்ரீ பிரம்மாவின் மானசீய புத்திரராகிய ஸ்ரீ வசிட்டரே தமது வாக்கியாமிர்தத்தால் ஸ்ரீ இராமரை முன்னிலைப்படுத்திச் சகல அதிகாரிகளுக்கும் ஞான முண்டாகக் கூறிய இந்த ஞான சாஸ்திரத்தை |
| பண்ணுறு தமிழினல் பாடுகேன் | = | பண்=இயல், இசை, இனம் என்னும் செந்தமிழ்ப் பாஷையிற் கூறுகின்றேன். |
| சுதை மண்ணுறுகலத் | = | தேவாமிர்தத்தை மண்ணாலாய கலசத்தில் |
| தினும் வைக்கும் ஏழையேன் | = | வைக்கின்ற எளிமையுடைய யான், குணமே கொள்க. |

2
பந்தமுற் றனன்பர பதத்தைச் சேர்கவென்
3 5 8
றந்தநிச் சயமுளா னறிவிலா னலன்
சிந்தனைத் துயர்கெடச் சித்தைச் சேர்ந்துளா
1 4 7 9
னிந்தநூற் குரியவ னென்று கொள்கவே (7)

| | | |
|---|---|---|
| இந்த நூற்குரியவன் | = | இந்த நூலின் அதிகாரியாவான் |
| பந்தமுற்றனன் பரபதத் தைச் சேர்கவென்று அந்த நிச்சயமுளான் | = | நான் பந்தத்தையடைந்திருக்கின்றேன் மேலாகிய மோக்ஷபதத்தை இனி அடைவேன் என்று அந் நிச்சயமுடைய முமுக்ஷுவே |
| அறிவிலான் (இந்த நூற்கு உரியவன் அலான்) | = | விஷயங்களில் ஆசக்தியுடைய மூடன் இந்த சாஸ்திரத்திற்கு அதிகாரியாகான் |
| சிந்தனைத் துயர்கெடச் சித்தைச் சேர்ந்துளான் | = | சித்தத்தின்கண் துன்பம் ஒழியச் சிற்சொரூபத்தை அடைந்த கிருத கிருத்தியன் இச் சாஸ்திரத்துக்கு |
| அலான் | = | அதிகாரியாகான் |
| இந்த நூற்கு உரியவன் என்று கொள்க | = | இந்த நூற்கு அதிகாரியாமென்று அறிந்துகொள்ளக்கடவது. |

2
ஒருங்குணர் குரவனு முயர்வான் மீகனை
4 1 3 6
மருங்குறப் பரத்துவன் வணங்கி வன்பவ
8 7 9
நெருங்குவெ ந்துயரிலே நின்ற தெங்ஙன
5 10 0
மருங்குணத் திராமனீ யருளிற் கூறென்ருன் (8)

| | | |
|---|---|---|
| பரத்துவன் | = | பரத்துவாசர் |
| ஒருங்குணர் குரவனும் உயர் | = | சர்வஞ்ஞரும் அசேஷ சாஸ்திர பாண்டித்தியமும் பிரஹ்மநிஷ்டையுமுடையராய |
| வான்மீகனை | = | வான்மீகி பகவானை |
| வணங்கி | = | சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து |
| மருங்குற | = | பக்கலிலுற்று |
| அருங்குணத்திராமன் | = | அரிய கல்யாணகுணங்களையுடைய ஸ்ரீ ராமன் ஜீவன் முத்தனுய் நின்று |
| வன்பவம் நெருங்கு வெந் துயரிலே எங்ஙனம் நின்றது | = | கொடிய சம்சார துன்பம் செறிந்ததில் இராஜரீகஞ் செய்தது எவ்வாறும் |
| நீ அருளிற் கூறென்ருன் | = | ஞானுசிரியராகிய ஸ்ரீதேவரீர் கருணையினுல் அனுக் கிரகிக்கவேண்டுமென்று கேட்டார். |

2 1 3
நல்லது சிறுவநீ யுரியை நானது
சொல்லுவன் கேட்குதி துயர்செய் மோகநீ
வெல்லலா மோகந்தான் சகத்தின் வேறன்றி
மல்லல்வா னிறம்படைத் தென்ன வந்துறும் (9)

| | | |
|---|---|---|
| சிறுவ | = | உத்தமோத்தமமான குழந்தாய் |
| நல்லது | = | எது உன்னுல் வினவப்பட்டதோ அது உத்தம மானது |
| நீ உரியை | = | பூர்வ இராமாயண பாராயண மகிமையால் மனத் தூய்மையும் சாதனமும் நீ அடைந்திருக்கின்ருய் நீயே உரியவனுவாய் |
| நான் அது சொல்லுவன் கேட்குதி | = | நான் அவ் விருத்தாந்தத்தை விளக்கமாய்க் கூறு வேன் ஏகாக்கிரமாய்க் கேட்பாயாக |
| துயர்செய் மோகம் நீ வெல்லலாம் | = | ஜனன மரண விக்ஷேபமாகிய துன்பத்தை உண்டு பண்ணப்பட்ட ஆவரண விக்ஷேபவடிவமாதி பாவ ரூப அஞ்ஞானத்தை நீ நாசஞ் செய்து வெற்றி கொள்ளலாம். |

இறப்பிலா விந்தமோக மிறையுமீட் டெண்ணமின்றி
மறப்பதே நல்லதென்று மதித்து யர்மனத்திநுக்குத்
திறப்படக் காணப்பட்ட தில்லெனச் சித்திநுலே
யுறப்பெறு மெப்போ தப்போ துயர்பரசுகமதாமே (10)

| | | |
|---|---|---|
| மோகந்தான் சகத்தின் வேறன்றி | = | மேலே சொல்லப்பட்ட அஞ்ஞானமானது பிரபஞ்சத்தின் வேறில்லாத சம்சாரம் ஆம் |
| மல்லல் வான் நிறம் படைத்து என்ன வந்துறும் | = | மல்லல் = வளப்பம் = வியாபகம், ஆகாயம் அறியாதார்தம் அறியாமையினுல் நீலவர்ணம் உடைத்தானதேபோல அஞ்ஞானிகளின் அத்தியாசத்தாலாரோபிக்கப்பட்டு வந்து பொருந்தும். |
| இறப்பிலா | = | அதிஷ்டான ஞானத்தாலன்றிக் கெடாத |
| இந்த மோகம் | = | மேர் கரூப ஜகத்பிரதீதியை |
| இறையும் | = | கிஞ்சிற்றும் |
| மீட்டெண்ணமின்றி | = | திருசியவிஸ்மரணமே |
| மறப்பதே | = | அதாவது அசம் வேதனமே |
| நல்லது என்று மதித்து உயர் | = | உத்தமமானது என்று மதித்துளேம் உயர்தி |
| மனத்திநுக்குத் திறப்படக் காணப்பட்டது | = | மனதிற்கு மெய்யாகப் பார்க்கப்படுவது |
| இல் லெனச் சித்திநுலே யுறப்பெறும் எப்போது | = | இல்லவே இல்லை என ஞானத்திநுலே அடையப் பெறும்; எக்காலம் |
| அப்போது உயர்பர சுகமது ஆம் | = | அக்காலத்திலேயே நிரதிசய கைவல்ய ஆனந்தம் ஆம். |

## அவதாரிகை :

திருசியவிஸ் மரணம் இன்றேல் அதனுல் வருந் தோஷம் இஃதாமென்கின்றூர்.

வழிபடுமிதனை விட்டுமற்றுள நூல்க ளென்னுங்
குழிகளிற் புரண்டஞ்ஞானக் குணத்திநுற் பிறப்போர்க்கெல்லா
மொழிவற வொருவர்செய்தற் குரித்தன்றுய்த் தானேயுண்டாங்
கழிதலிற் பரமவின்பங் கற்பங்களானுங் கூடா (11)

| | | |
|---|---|---|
| வழிபடும் இதனை விட்டு | = | வித்வான்களால் வணங்குவதான திருசியவிஸ்மரணத்தையும் இதனை உண்டுபண்ணும் அத்தியாத்ம சாஸ்திரத்தையும் விட்டு |

| | | |
|---|---|---|
| மற்றுள நூல்களென்னும் | = | இதற்கு அன்னியமான சாஸ்திரங்களென்னும் |
| குழிகளில் புரண்டு | = | படுகுழிகளாகிய கிடங்குகளில் தாங்களும் உருண்டு தங்களைச் சேர்ந்தாரையும் உருட்டி |
| அஞ்ஞானக்குணத்திஞற் பிறப்போர்க்கெல்லாம் | = | அறியாமையின் நீர்மையால் பிறந்துகொண்டிருப் பவரனைவருக்கும் |
| ஒழிவற வொருவர் செய்தற்கு உரித்தன்ருய் | = | கெடுதலின்றி அகாரணமாகலின் யாவரானும் இயற்றற்குத் தக்கதன்ருய் |
| தானேயுண்டாம் | = | பூர்வசித்தமாய் |
| கழிதல்இல் பரமவின்பம் | = | நித்தியசித்தமான மேலான ஆனந்தம் |
| கற்பங்களாலுங் கூடா | = | ஆயிரங்கோடி பிரமா ஆயுட்களாலும் உதியாதாம். |

## அவதாரிகை

ஞானத்தால் திருசிய நீக்கம் திருசிய வாசனை நீக்கவாயிலாகவேயாமாகலின் வாசனுத்தியாகம் திருசிய நீக்கம் மோக்ஷத்திற்கு உபயோகமாதலின் அனுஷ்டிக்கத் தக்கதாம்.

1
அலைசெய்வா தனையைச்சேட மறவிடநல்லதென்று
3 2 4
நிலைபெறு முத்தியென்று நிமலமாநெறியீ தென்றுந்
தலைமையோர் பகர்வ ரன்னதிருவகைச் சனனநல்கி
யுலைதரு மலினமொன்ற தொழித்திடுஞ் சுத்தமொன்றே. (12)

| | | |
|---|---|---|
| அலைசெய் வாதனையைச் சேடமறவிடல் நல்ல தென்றும் | = | விக்ஷேபத்தை உண்டுபண்ணும் வாசனைகளை மிச்ச மின்றி விடுதலே ஜீவன் முத்தியென்றும் |
| ஈது நிலைபெறு முத்தி யென்றும் | = | இதுவே விதேக முக்தியெனவும் |
| நிமலமாம்நெறியீதென்றும் | = | விமலமான கிரமம் இஃது என்றும் |
| தலைமையோர் பகர்வர் | = | சற்புருடர்கள் கூறு நிற்பர் |
| அன்னது இருவகை | = | அவ் வாசனை இருவித வேற்றுமையுடைத்தாம் |
| சனனம் நல்கி உலைதரு | = | பிறப்பைக்கொடுத்துச் சுழற்றுவதான |
| மலினம் ஒன்று | = | அசுத்த வாசனை ஒன்றும் |
| சுத்தம் ஒன்று | = | அச் சனனத்தை நாசஞ் செய்யும் சுத்த வாசனை ஒன்றும் ஆம். |

## அவதாரிகை

கூறிய பொருளையே விரித்து விளம்புகின்றார்.

மடமையின்செறிவே மெய்யாய்மலி யகங்காரந் துன்றிப்
படர்தரு பிறப்பைமேன்மேற் பயில்விக்கும லினமென்ப
ரடர்மறு சனனமென்னு மங்குரமின்றிச் செந்தீச்
சுடமுளை யாவித் தொக்குஞ் சுத்தவாதனை யதென்பர். (13)

| | | |
|---|---|---|
| மடமையின் செறிவே மெய்யாய் | = | அறியாமையினது நெருக்கமே ஆகாரமாய் |
| மலிஅகங்காரந்துன்றி | = | கனமான அகங்காரத்துடன் நெருங்கி |
| படர்தரு பிறப்பை மேன்மேல் பயில்விக்கும் | = | துன்பம் பயவாநின்ற சன்மத்தை மேலும் மேலும் உண்டாக்கும் |
| மலினமென்பர் | = | மலினவாசனையென்று பெரியோர் கூறுவர் |
| அடர்மறு சனனமென்னும் அங்குரமின்றி | = | செறிந்த மறுபிறவியைத் தருவதென்னும் முளையில்லாமல் |
| செந்தீச் சுட | = | சிவந்த அக்கினியென்னும் தீ தகிக்க |
| முளையாவித்தொக்குஞ் சுத்தவாதனை யதென்பர் | = | அங்குரியாத பீஜத்திற்கு ஒப்பாகும் தூய வாசனை என்று மேலோர் சொல்லுவர். |

## அவதாரிகை

இப்போது சுத்த வாசனுசித்தியே ஜீவன்முக்தியாமெனக்கூறி பிரதான மான கதையைக் கூறுசின்றார்.

மெய்தரி[1] நிமித்தமாகத் தரிப்பதாம் விளம்புஞ்சுத்த
மெய்தினர்[3] பிறவியான வர்த்தத்தி[2] னென்றுமெய்தார்[4]
நொய்தினி னேக்கவேண்டு நோக்கெலா நோக்கியின்பஞ்
செய்திடுஞ் சீவன்முத்தி சேர்ந்தவ ரென்னலாமே. (14)

| | | |
|---|---|---|
| மெய்தரி நிமித்தமாகத் | = | வர்த்தமான சரீர நிர்வாகத்தின் பொருட்டு |
| தரிப்பதாம் விளம்புஞ்சுத்த மெய்தினர் | = | தரிக்கத்தக்கதாம் தூயவாசனையைப் பொருந்தினவர் |
| என்றும் பிறவியான அனர்த்தத்தில் எய்தார் | = | எக்காலத்தும் ஜன்மமாகிய துன்பத்தில் பொருந்தார் |
| நொய்தினி நோக்கவேண்டு நோக்கெலாம் நோக்கி | = | சூக்குமமாக அறியவேண்டிய விஷயங்களனைத்தையும் அறிந்து |

இன்பஞ் செய்திடுஞ் சீவன் முத்திசேர்ந்தவரென்னலாம் = ஜீவிக்குங் காலத்திலேயே சுகத்தைத் தரத்தக்க முத்தியைப் பொருந்தினவரென்று கூறலாம்.

## அவதாரிகை

ஜீவன் முக்தியின் சாதன நிருபணத்தைப் பிரதிஞ்ஞை செய்கின்றார்.

ஆன்றதோர் சீவன்முத்திப் பதத்தினையடைந் திராமன்
பூன்றமா மனத்தனுன நெறியினைப் புகலக்கேட்பிற்
சான்றவிக் கேள்வியாலே சரைமரணங்க டீர்தி
2 1 3
தோன்றலே யெனவான் மீகித்தொன்முநி சொல்லலுற்றான். (15)

ஆன்றதோர் சீவன்முத்திப் பதத்தினை அடைந்து இராமன் = மாக்ஷிமையான ஒப்பற்ற ஜீவன்முக்தர்களுடைய நிர்வாண பரமானந்த சொரூபத்தையடைந்து

பூன்ற மாமனத்தனுன நெறியினை = ஸ்ரீ இராகவன் மகத்தாகிய மனதுடையவனுன சன்மார்க்கத்தினை

புகலக்கேட்பில் = யாம் உனக்குக்கூற நீ சிரத்தையோடுஞ் சிரவணஞ் செய்வையேயாயின்

சான்றவிக்கேள்வியாலே = சான்று = ஏகசாக்ஷியான நீயே சர்வசாக்ஷியென்று தெளிவிப்பதான இச் சிரவணத்தினாலே

சரைமரணங்கள் தீர்தி = தான் நிர்விகாரியாதலின் ஜனனமரணமே முதலாய அனர்த்தம் யாவும் நீங்கியவனுவாய்

தோன்றலே என = சற்குணங்கள் நிறைந்த பரத்துவாசனே என்று

தொல்வான் மீகிமுனி = பழைமையான ஆதிகவியென்னும் வான்மீகிமுனி

சொல்லலுற்றான் = அனுக்கிரகிக்கத் தொடங்கினார்.

## அவதாரிகை

ஞானசாஸ்திர விசாரத்தால் நித்தியாநித்திய வஸ்து விவேகமும் தீர்த்தாடனமூர்த்தி வழிபாட்டின் புண்ணியத்தானே சித்த தூய்மையும் வைராக்கியமும் ஸ்ரீ வசிட்டாதி முனீசுவரர்கட்கு அன்புடன் பணிவிடை செய்வதால் சமதமாதி சம்பத்தும் முத்தி விருப்பும் அதிகாரியான இராகவருக்கு ஜீவன்முக்தி சித்திப்பதில் தடையாம் யெனக் கருதிக் கூறுகின்றார்.

2 4
சதுமறை நூல்களியாவுந் தரித்தனன் விநோதத்தாலே
3 6 5 7
யெதுபய மென்னவஞ்சா திருந்தனன்சின் னுட்பின்னுண்
9 8 10
முதுபய னதிகளியாவு முனிவரதிடமுங் காண்பான்
1
கதுமெனக் காதலானுன் கார்நிறக்கமலக் கண்ணன். (16)

கார்நிறக் கமலக் கண்ணன் = நீலமேக வர்ணனும் தாமரை இதழ்போன்ற கண்களையுடைய ஸ்ரீ இராகவர்

சதுமறை நூல்கள் யாவும் = இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் ஆறு
தரித்தனன் எதுபயமென்ன அங்கங்கள் ஸ்மிருதி புராண முதலிய சர்வ சாஸ்
அஞ்சாது சில நாளில் திரங்களையும் சில தினங்களில் அஞ்சாது லீலையி
விநோதத்தாலே தரித்து னுல் = விளையாட்டினுல் கற்று போக்கி இருந்தான்
இருந்தனன்
பின் நாள் = வாலிபகாலஞ் சென்றதன் பின்பு
முதுபயன் நதிகள் முனிவ = மிகுந்த பிரயோஜனத்தைத் தராநின்ற
ரது யிடமும் யாவும் = கங்கையாதி நதிகள் முனிவர்கள் வசிக்கும் ஆச்சிர மங்கள் தேவாலயம் முதலிய அனைத்தையும் தெரி சிக்கவேண்டுமென்று
கதுமெனக் காதலானுன் = மிக விரைவோடும் விருப்புடையவனுனன்.

2 1 3
தந்தைதன் சரணமான நகமெனுந் தாதுபூத்த
வந்தமில் கலப்போதை யன்னம்போ லணைந்துதாழ்ந்து
முந்தைநன் னதிகடேவ ராலயமுனி வர்கான்க
5 4
ளெந்தைநின் னருளிற்காண் பானெண்ணிய தென்றனுள்ளம். (17)

தன் தந்தை சரணமான = தன் பிதாவினது பாதமாகிய
நகமெனுந் தாதுபூத்த = நகம் = கர்ணிகை = யுகிர் என்னும் கேசரங்களை யுடையதான
அந்தமில் கமலப்போதை = குவிதலில்லாத தாமரை மலரை
அன்னம்போல் அணைந்து = அம்சம்போல சார்ந்து
தாழ்ந்து = வணங்கி
முந்தை நன்னதிகள் தேவராலயம் = பழமையான புண்ணிய தீர்த்தங்களையும் தேவா லயங்களையும்
முனிவர் கான்கள் = தவத்தோர் அவர் வசிக்கும் தபோ வனங்களையும்
எந்தை = எனது பிதாவே
நின்னருளிற் காண்பான் = நினது காருண்யத்திஞல் தரிசித்தற்கு
என்றன் உள்ளம் எண்ணியது = எனது மனம்விரும்பியது.

1 3 2
முடிவிலா திரந்ததெல்லாம் முடிவுறுதில்லை நின்று
4
லடியனேன் முன்னம்வேட்ட வரமுநீ யருடியென்னப்
படிபுகழ் வசிட்டனேடும் பார்த்திப னினிதினெண்ணிக்
6 5 7
கடிதுபோய் மீடியென்னக் கார்கழல் வணங்கிப்போனுன். (18)

முடிவிலாதிரந்ததெல்லாம் = யாசகருக்குள் ஒருவரேனும் யாசித்த பொருள் அனைத்தும்

| | | |
|---|---|---|
| நின்னால் முடிவுருதில்லை | = | தேவரீரால் நிறைவேருதது ஒன்றுமில்லை |
| அடியனேன் முன்னம் வேட்ட | = | அடியேன் முதலில் யாசித்த |
| வரமும் நீ அருள்தி | = | இவ் வரத்தையும் அருள்வாய் எனக் கேட்க |
| படிபுகழ் வசிட்டனேடும் | = | உலகத்திலுள்ள மகான்கள் புகழாநின்ற ஸ்ரீவசிட்ட முனிவருடன் |
| பார்த்திபன் இனிதின் எண்ணி | = | அரசன் நன்கு ஆலோசித்து |
| போய் கடிது மீடியென்ன | = | சென்று சீக்கிரம் திரும்புதி யென்று விடைகொடுக்க |
| கார்கழல் வணங்கிப் போனன் | = | மேகவண்ணனுகிய இராமன் அம் மன்னவனது சரணத்தை இறைஞ்சி தனது கிருஹத்திற்குச் சென்ருன். |

2 1 3
தம்பியரோடு நன்னளேகித் தன்னடு நீங்கிப்
5
பம்பிய நதியுங்கானும் பற்றற்ருே ரிடனும்பாலை
4 6
வெம்பிய நிலனும் வேலைக்கரைகளும் விலங்கற்சார்வும்
8 7
வம்பிய லலங்கல் வீரனேக்கினன் மகிழ்ச்சிகூற (19)

| | | |
|---|---|---|
| நன்னள் | = | சுப வாரத்தில் சுப திதியில் சுப நக்ஷத்திரத்தில் சுபயோகத்தில் சுப லக்கினத்தில் ஸ்ரீ இராகவர் |
| தம்பியரோடும் | = | பரத லக்ஷ்மண சத்துருக்கனென்னும் சகோதரருடன் |
| ஏகி | = | தனது கிருகத்தினின்றும் மறையவர்களாலாசீர்வாதத்துடன் கௌசலை முதலிய தாய்மார்களால் தழுவித் தழுவிச் செய்யப்பட்ட ஆசீர்வாதங்களுடன் புறப்பட்டு |
| தன்னடு நீங்கி | = | தமது கோசல மண்டலத்தினின்றுந் தீர்த்தயாத்திரை நிமித்தம் புறப்பட்டுக் கடந்து |
| பம்பிய நதியும் | = | நீர் நிறைந்த புண்ணிய தீர்த்தங்களையும் |
| கானும் | = | தபோ வனங்களையும் |
| பற்றற்ருேரிடனும் | = | மகாத்மாக்களது ஆச்சிரமங்களையும் |
| வெம்பியபாலை நிலனும் | = | வெப்பமுள்ள பாலை நிலங்களையும் |
| வேலைக்கரைகளும் | = | சமுத்திரங்களையும் |
| விலங்கற்சார்வும் | = | மலைச்சார்புகளையும் |
| வம்பு இயல் அலங்கல்வீரன் | = | வாசனை பொருந்திய மாலை தரித்த வெற்றிவீரனை இராமன் |
| மகிழ்ச்சிகூற நோக்கினன் | = | களிபேரு வகையோடு ஸ்நானதான ஜபதியான பரனேடு பார்த்தனன். |

2
துன்னுறு மமரர்போற்ற மானிடர்துதிப்ப மீண்டு
1
தன்னுயர் சிவலோகத்தைச் சார்தருமீச னென்னப்
3
பொன்னுல கத்தைமேவும் புரந்தரன்புதல்வ னென்ன
8
மன்னுறை யயோத்திபுக்கான் மலர்சொரிந்தியாரு மேத்த. (20)

| | | |
|---|---|---|
| தன்னுயர் | = | தனது மேலான |
| சிவலோகத்தை | = | உமாசகித பரமசிவன் நிவாசமாகிய கைலாச பர்வதத்தை |
| சார்தருமீசனென்ன | = | பக்தானுக்கிரநிமித்தம் விஜயஞ்செய்து மீண்டும் வந்து பொருந்தாநின்ற பார்வதிசமேத மகேசுவரன் போலும் |
| துன்னுறும் அமரர் போற்ற | = | 'அந்த இராமபிரான்' நெருங்காநின்ற தேவதைகள் புகழவும் |
| மானிடர் துதிப்பமீண்டு | = | மனிதர் துதிக்கவும் திரும்பி |
| பொன்னுலகத்தை மேவும் | = | சுவர்க்கலோகத்தைப் பொருந்தாநின்ற |
| புரந்தரன் புதல்வனென்ன | = | தேவேந்திரன் மைந்தனுகிய சயந்தன்போலும் |
| மன் உறை அயோத்தி புக்கான் | = | தசரதர் வீற்றிருப்பதான அயோத்திமாநகரைச் சார்ந்தான் |
| மலர்சொரிந்தியாருமேத்த | = | ஆடவர் பூமலரும் அரிவையர் பொரிமலரும் சொரிந்து போற்ற (சேர்ந்தான்). |

நோக்கிய தேசநீதி நுவல்வுற்றுப் புலருமுன்னே
சேக்கைநின் றெழுந்துநித்த நியமங்கள் செய்துந்தாதை
நீக்கமில் சரணந்தாழ்ந்து நெடுந்தவ வசிட்டன்முன்னோர்
வாக்கினுல் ஞானநீதிவாய்ந்த பல்கதைகள் கேட்டும். (21)

| | | |
|---|---|---|
| நோக்கிய தேசநீதி நுவல்வுற்று | = | தான் பார்த்துவந்த தேச ஆசாரங்களை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டும் |
| புலருமுன்னே | = | விடிவதற்கு முன்பு |
| சேக்கைநின்றெழுந்து | = | சயனத்தைவிட்டெழுந்திருந்து |
| நித்த நியமங்கள் செய்தும் | = | நித்திய கருமங்களை விதிப்படி செய்தும் |
| தாதை நீக்கமில் சரணந் தாழ்ந்தும் | = | தமது தந்தையினது பிரிவில்லாத பாதத்தை வணங்கியும் |
| நெடுந்தவ வசிட்டன் முன்னோர் வாக்கினுல் | = | மகா தவமுடைய ஸ்ரீ வசிஷ்ட்டாதிகளது அமிர்தமயமான மொழிகளால் |

| | | |
|---|---|---|
| ஞான நீதி வாய்ந்த | = | உண்மையான ஞானத்தைத் தாராநின்ற |
| பல்கதைகள் கேட்டும் | = | பற்பல விசித்திரமான கதைகளை வினவியும் இருந்தனர். |

1 3 2 4
தந்தைசொற் படியேதானைதன் னுடன்வேட்டைகண்டும்
பந்துமித் திரர்கள்பின்னோர் தம்மொடும் பருகிராநீத்
திந்துவுமமு தும்போல நிருபருக்கினிய செய்து
மைந்துடனீ ரைந்தாண்டு புக்கினனணைய நாளில் (22)

| | | |
|---|---|---|
| தந்தை சொற்படியே | = | பிதாவினது உத்திரவின்படியே |
| தன்தானையுடன் | = | தமது சேனையோடும் |
| வேட்டைகண்டும் | = | வேட்டையாடியும் |
| பந்துமித்திரர்கள் பின்னோர் தம்மொடும் பருகி | = | பிறிதலுக்கு ஆற்றுதவர்களாய பந்துக்கள் மித்திரர்கள் தம்பிமார்களோடு அமுது செய்து |
| இரா நீத்து | = | நிசியைக் கழித்து |
| இந்துவும் அமுதம்போல | = | சந்திரனும் அமிர்தரசமும் போல |
| நிருபருக்கு இனியசெய்து | = | மன்னர்களுக்கு சம்மதமான விவகாரங்களை இன்பமாகச் செய்து |
| ஐந்துடன் ஈரைந்துஆண்டு புக்கினன் அணையநாளில் | = | பதினைந்து வருஷம் = ஊன சோடசவருஷம் (சிறிது குறையப் பதினறுவருஷம்) அடைந்தனன் அக்காலத்தில். |

## அவதாரிகை

வைராக்கியத்தை நன்கு வருணித்தற்கு இனிது தொடங்குகின்றுர்.

1
நிறையெழின் மேனியெல்லா நெடுஞ்சரற் காலநீர்போற்
3 2
குறைவுற நெடுங்கட்செய்ய குளிர்முகம் விளர்ப்பத்தும்பி
4
யுறையும்வெண் கமலம்போலவொரு கையாற்கபோ லமேந்தி
யறைகழ லிராம னம்புயாசனத் திருப்பதானுன். (23)

| | | |
|---|---|---|
| நிறையெழில் மேனி யெல்லாம் | = | பேரழகினையுடைய திருமேனி முழுதும் |
| நெடுஞ்சரற்கால நீர்போல் | = | சரற்காலத்தில் = மழை பேய்ந்து ஓய்ந்தபோது குறைந்துகொண்டே போகும்படியான தடாக ஜலம் போல |
| குறைவுற | = | கிருசத்தன்மையையடைய |

தும்பியுறையும் வெண் கமலம்போல = தும்பி = வண்டு விழுந்த வெண்டாமரை போல
நெடுங்கண் = விசால நேத்திரங்களையுடைய
செய்ய குளிர்முகம் விள்ரப்ப = சிறந்த சந்திரசீதள வதனம் வெளுப்புற
ஒருகையாற் கபோலமேந்தி = ஒரு கரத்தால் கபோலம் ஏந்தி
அறைகழல் இராமன் = வீரகண்டை காலில் தரித்த ஸ்ரீ இராமன்
அம்புயாசனத்திருப்ப தானுன் = பத்மாசனத்தில் வீற்றிருந்து சிந்தை பரவசராகி மௌனமுடையவராய்ச் சேட்டையற்றிருந்தார்.

சிந்தனைவயத் தனுகிச் செய்தொழி லனைத்தும்விட்டு
புந்திநைந்தி யார்க்குங்கூருன் புனையுமோ வியமேபோலச்
சந்ததமிருப்பை நோக்கித் தமரடி தாழ்ந்துவேண்ட
நொந்தயர் முகத்தனுகி நோக்கருநிய மஞ்செய்தான். (24)

சிந்தனைவயத்தனுகி = ஸ்ரீ இராகவர் ஆசனத்தசைவற்றிருந்து சிந்தா பரவசராகி
செய்தொழி லனைத்தும் விட்டு = ஒரு செய்கையுமின்றி தூஷ்ணீம்பூதராகி
புந்திநைந்து = புத்தி துக்கிதராய்
யார்க்குங்கூருன் = யாவரிடத்தும் எதையுமே பேசாதவராய்
புனையும் ஓவியமேபோல = பித்திகையில் எழுதிய சித்திரம்போல
சந்ததம் மிருப்பைநோக்கி = எப்போதும் இருப்பதைப்பார்த்து
நொந்து அயர்முகத்தனுகி = கேதத்தோடுகூடிய முகத்தையுடையவராய் இருப்ப
தமர் அடிதாழ்ந்து வேண்ட = பரிஜனங்கள் = ஊழியஞ் செய்பவர் பணிந்து மீண்டும் மீண்டும் பிருர்த்திக்க
நோகக்கரு நியமஞ் செய்தான் = பார்த்தற்கு முடியாதபடி அலக்ஷியமாகக் கடன் கழிப்பதே போல ஸ்நானுதி தின ஆசாரங்களை இயற்றினுன்.

அவதாரிகை

தசரதர் துக்கத்தோடும் இளைத்துவரும் ஸ்ரீ இராமரைப் பார்த்து சிந்தாகுலமுண்டாகியிருக்கின்றதே யாது காரணம் என வினுவுதல்:

2 1 3
மடிமிசை கொண்டுதாதை வருந்துவதென்கொ லென்ன
வடிபணிந் தயர்வொன்றில் லென்றனையவனி ருந்தநாளிற்
படிபுகழ் காதிமைந்தன் வருதலும்பணிந்து போற்றி
முடியுடை வேந்தர்வேந்தன் பூசனைமுறையிற் செய்தான். (25)

தாதை = பிதாவாகிய தசரத அரசர்
மடிமிசைகொண்டு = தமது உச்சங்கத்தின்மீது யிருத்தி

வருந்துவதுயென்கொல் = சிந்தாகுலமுண்டாயிருப்பது யாது காரணம் என பிதா கேட்ப

அடிபணிந்து அயர் வொன்று இல்லென்று = அவரது பாதகமலங்களில் நமஸ்கரித்து யாதொரு துயரமும் தங்களது கிருபையால் இல்லையென்று சொல்லி

அனையவனிருந்தநாளில் = அந்த ஸ்ரீ இராகவர் தந்தையினது மடியிற்றனே இருந்துவந்தபோது

படிபுகழ் காதிமைந்தன் வருதலும் = உலகமெல்லாம் புகழும்படியான காதிமைந்தராகிய விஸ்வாமித்திர மகரிஷி அயோத்தியாநகர் அரசனை தசரதரைப் பார்க்கும்பொருட்டு வருவதைக் கண்டு

பணிந்து போற்றி = எதிர்கொண்டு அழைத்துவந்து நமஸ்கரித்து

முடியுடை வேந்தர் வேந்தன் = கிரீடந்தரித்த மன்னவர்கட்கெல்லாம் மன்னவரான தசரதர்

பூசனைமுறையிற்செய்தான் = கிரமமாகப் பூஜை செய்தார்.

அவ்தாரிகை

ஸ்ரீ விசுவாமித்திரரை நோக்கி தசரதர் கொண்டாடல்

நினைவற வெளிதின்வந்த நின்னுயர் காட்சியாலே
வினையெலாந் தவிர்ந்துவெய் யோன்மேவியகமல மொத்தே
னினையதோ ரின்பமென்று மியைந்திலேன் மழையிலாநா
ணனைதரு மழையுமந்த னண்ணியகண்ணு மொத்த. (26)

நினைவற வெளிதில்வந்த = எனது எண்ணமின்றியே எனது சமீபமாயடைவுற்ற

நின்னுயர் காட்சியாலே = தேவரீரது பரம தரிசனத்தாலே

வினையெலாந்தவிர்ந்து = தூலசரீர, சூக்கும சரீர, காரணசரீர பீடைகள் யாவும் ஒழியப்பெற்று

வெய்யோன் மேவிய = சூரிய சந்நிதியைப் பொருந்திய

கமலமொத்தேன் = தாமரைபோல திருவருளையடைந்து உய்ந்தேன்

இனையதோரின்பம் = இத்தகைய பேரானந்தத்தை

என்றும் இயைந்திலேன் = எக்காலத்திலும் அடைந்தேனில்லை

மழையிலாநாள் நனைதரு மழையும் = மழையின்றி குடிகள் கஷ்டப்படுங் காலத்தில் பூமியை நனைத்து பயிர்களை உண்டாக்கும் மகா விருஷ்டியையும் ஒப்பிடும்படியாகப் பெருமழையும்

அந்தன்நண்ணிய கண்ணுமொத்த = பிறவிக்குருடன் தேவதையின் திருவருளாலடைந்த திவ்ய நேத்திரங்களையும் ஒப்பிடும்படியாக யிருக்கின்றது.

உடலொடு விண்சென்மார்க்க முற்றெனவொ ழிந்தவாவி
கடமுற வந்ததென்னக் கனைகடலமுத கும்ப
மிடமுற வெய்திற்றென்ன வெந்தைநீவந்த வின்பஞ்
சடமெலாங் குளிர்ப்பனின்றென் றளர்வெலா மகற்றிற்றன்றே. (27)

| | | |
|---|---|---|
| உடலொடு விண்செல் மார்க்கம் உற்றென | = | தேகத்தோடுகூட ஆகாயத்தில் கமனஞ்செய்யும் நெறிகிடைத்ததேபோலும் |
| ஒழிந்த ஆவி | = | சரீரத்தைவிட்டுப் பிரிந்துபோனதான உயிரானது |
| கடமுறவந்ததென்ன | = | சரீரத்தில் பொருந்தும்படியாகத் தெய்வசகாயத்தால் பிராப்தமானதேபோலும் |
| கனைகடலமுதகும்பம் | = | சப்தியாநின்ற க்ஷீராப்தியில் கடைந்தெடுத்து மேருகிரியின்பால் அக்கினிபகவானது காவலிலிருக்கும் அமிர்தகலசம் |
| இடமுறவெய்திற்றென்ன | = | தான் யிருக்குமிடத்திற்கே தேடிவந்ததுபோலவும் |
| எந்தைநீ வந்தவின்பம் | = | என் தந்தையைப்போலும் வேண்டியதையறிவுறுத்துந் தேவரீர் தரிசனந் தந்த ஆனந்தம் |
| சடமெலாங்குளிர்ப்ப னின்றென் தளர்வெலாம், அகற்றிற்று, | = | தேகமுழுதும் சீதளமாம்படி தங்கி நின்று எனது சர்வ தாபங்களையும் நீக்கியது. |

## அவதாரிகை

தேவரீரது வரவு புதுமைத்தாயிருத்தலின் அவசியம் தாங்கள் விரும்பியதை அடியேன் தானஞ்செய்தேவிட்டேன் என அரசர் கூறுதல் :

காதலும் பயமு மன்பும் கதமும்வன் பிணியுமில்லா
மாதவ விவணீவந்த வரவிது புதுமைத்தாகும்
யாதுநீ கருதிற் றன்னதியன்றனை னுணர்த்துகென்றுன்
மேதகு முனிவன்கேட்டு மெய்புளகெறிந்து சொல்வான். (28)

| | | |
|---|---|---|
| காதலும் | = | ஒன்றைப்பார்த்தமாத்திரத்திலுண்டான இச்சையும் |
| பயமும் | = | அச்சமும் |
| அன்பும் | = | விசேஷ இச்சையும் |
| கதமும் | = | குரோதமும் |
| வன்பிணியும் இல்லா | = | கொடிய குன்மம் குஷ்டம் முதலிய வியாதியும் எப்போதுமில்லாத |
| மாதவ | = | மகா தவத்தையுடைய முனிவரே |
| இவண் நீ வந்த | = | இவ்வெமது அரண்மனையை நாடி தேவரீர் |
| வரவிது | = | அகஸ்மாத்தாக வந்தவரவான இது |

| | | |
|---|---|---|
| புதுமைத்தாகும் | = | அதி அற்புதமாகயிருக்கிறது |
| யாது நீ கருதிற்று | = | எக்காரியத்தை தேவரீர் யெண்ணிவந்தீரோ |
| அன்னது இயன்றனன் | = | அக்காரியத்தை யான் செய்து முடித்துவிட்டதாக எண்ணிக்கொண்டு |
| உணர்த்துகயென்ருன் | = | தெரியப்படுத்தலாமென்று மன்னவனான தசரதன் கூறினன் |
| மேதகு முனிவன் கேட்டு | = | உத்தமோத்தராகிய ஸ்ரீ விசுவாமித்திரர் கேட்டு |
| மெய்புளகெறிந்து சொல்வான் | = | உடம்பு முழுவதும் மயிர்சிலிர்ப்பக்குலுங்கி கூறத் தொடங்கினர் : |

மன்னவர்வணங்கவாழ்வோய் வசிட்டன்சொன் மருதோய்பானு
தன்னுயர்குலத்தில்வந்தோ யாதலாற் றக்கசொன்னய்
முன்னுறுசெந்தீ வேள்வி முயல்வதற் கிடையூருகி
இன்னல்செய்யரக்கர்க் காற்ருதெய்தினு னிரங்கல்வேண்டும். (29)

| | | |
|---|---|---|
| மன்னவர் வணங்க வாழ்வோய் | = | ஐம்பத்தாறு தேசதீதரசர்களும் கப்பங்கட்டி நமஸ்கரிக்க இந்திரனை நிகர்த்து வாழும் அரசசிங்கமே |
| வசிட்டன் சொல் மருதோய்பானு தன்னுயர் குலத்தில் வந்தோய் | | ஸ்ரீ வசிட்டபகவான் ஆணையை மறுக்காமலிருக்கப் பட்ட சற்குணனே சூரிய வம்சத்தில் அவதரித்தோய் |
| ஆதலால் தக்கசொன்னய் | = | இத்தகைய மகிமை வாய்ந்தவனுயிருத்தலினன்ருே தகுதியாய வார்த்தையைச் சொன்னய் |
| முன்னுறுசெந்தீ வேள்வி | = | சில சித்திகளையடையும் பொருட்டு மந்திரபூர்வமாக அக்கினியின் கண்ணே ஆகுதி கொடுத்து முடிக்கவேண்டியதாய யாகத்தினை |
| முயல்வதற்கு | = | செய்ய எத்தனப்படுவதற்கு |
| இடையூருகி இன்னல் செய் | = | இடைத்தடையாயுற்று யாகத் திரவியங்களையும் யாகசாலையையும் ருத்விக்குகளையும் துன்புறுத்தும் கரதூஷண தாடகை முதலியு |
| அரக்கருக்கு ஆற்ருது | = | இராக்கதருக்கு ஆற்ருது |
| எய்தினன் இரங்கல் வேண்டும் | = | உன்னிடத்தில் தெரியப்படுத்த வந்தேன் கருணை செய்யவேண்டும். |

அருள்செய வல்லைநீயென் றரும்புகல்புகுந்தே னின்னை
வெருளுறும் புலிபோன்மொய்ம்பன் விண்ணவர்க்கிறைபோல் வீரன்
மருளுறு மரக்கர்காலன் வாய்மைநின்முதன்மை மைந்தன்
தெருளுறு மிராமனென்னுஞ் சிகைமுடிச்சேயை யீவாய். (30)

| | | |
|---|---|---|
| அருள்செயவல்லைநீயென்று | = | எண்ணிவந்த காரியத்தை யினிதாக முடித்து அனுக்கிரகஞ்செய்ய சாமர்த்தியசாலி நீதான் என்று |

நின்னை அரும்புகல் புகுந்தேன் = உன்னை தஞ்சமாகவடைந்தேன்
வெருளுறும் புலியேபோன் = பயப்படத்தக்க வியாக்கிரத்தைப்போல
மொய்ம்பன் = பலமுடையவன்
விண்ணவர்க் கிறைபோல் வீரன் = தேவர்களுக்கெல்லாம் இறைவனுகிய தேவேந்திரனைப்போலவீரமுடையவன்
மருளுறும் = கள், காமாதிகளால் கலங்கி மயங்கும்
அரக்கர் காலன் = அரக்கர்குல காலன்
வாய்மை நின்முதன்மை மைந்தன் = சத்திய பராக்கிரமமுடைய உனது சேஷ்டபுத்திரன்
தெருளுறும் இராமன் யென்னும் = சர்வத்தையும் உணரும் இராமனென்னும்
சிகைமுடிச் சேயை ஈவாய் = காகபக்ஷம் போன்ற முடிவைத்திருக்கும் புத்திரனை என் காரியசித்தியின் பொருட்டுக் கொடுத்தல் வேண்டும்.

## அவதாரிகை

வில்வித்தையில் தேர்ச்சியில்லாத பாலகனுகிய இராமன் கரதூஷணுதியரக்கரைக்கொன்று எங்ஙனம் தங்களுடைய யாகசித்தியைச் செய்தல் கூடும் எனின் கூறுகின்றுர்.

தேவரீர் றேசுமிக்க வென்பெருஞ் சேமந்தன்று
லேவரு நிருதர்சேனை யிராமனேயெளிது கொல்லுங்
காவல சிறுவனென்னுங் கவலையையொழி யென்போல்வா
ரோவலிற் சங்கையான கருமத்தினுள்ளம் வையார். (31)

தேவரீர் றேசுமிக்க = சுரர்களைக்காட்டிலும் பராக்கிரமமுடைய
என்பெருஞ்சேமந்தன்றல் = எனது பெரும் ஜாக்கிரதையுடன் காப்பினுல்
ஏவரும் நிருதர்சேனை = பணிதற்கில்லாத இராக்ஷதப்படைகளை
இராமனே எளிதுகொல்லும் = ஸ்ரீ இராமனே அதிசுலபமாக நாசஞ் செய்வன்
காவல சிறுவன் யென்னுங் கவலையை யொழி = பூபாலனே மைந்தனுயிற்றே என்ன நேரிடுமோ வென்னுங் கவலை உனக்கு வேண்டாம்
என்போல்வார் = என்னைப்போன்ற அறிவு நிறைந்த பெரியோர்
ஓவலில் சங்கையான = முற்றுதலில்லாததும் சந்தேகத்தோடு கூடியதுமான
கருமத்தில் உள்ளம்வையார் = காரியங்களைச் செய்யக் கருதார்கள்.

இயாரினு மிராமன்மேன்மை வசிட்டனுமியானு மாதி
யாரியரறிவே மாட்சியறம் புகழ்வேண்டி னந்தப்
பேரியலானை யீதிபெருமையோர் கொடாத துண்டோ
வீரிய வரக்கர்மாய்தன் மெய்யென விளம்பிவிட்டான். (32)

| | | |
|---|---|---|
| இயாரினும் இராமன் மேன்மை | = | உலகத்தில் மகிமை வாய்ந்த எல்லாரினுமே ஸ்ரீ இராமன் மகா மகிமையோடு கூடியிருத்தலே |
| வசிட்டனும் யானும் ஆதி ஆரியர் அறிவேம் | = | ஸ்ரீ வசிட்டபகவானும் ஜகன்மித்திரனாகிய யானும் இவ்வாறாகிய முக்காலம் உணர்ந்த அறிஞர்களாய மேலோர்களும் உணருவோம் |
| மாட்சி அறம் புகழ் வேண்டில் | = | பெருந்தன்மையும் புண்ணியமும் கீர்த்தியும் விரும்புதியேல் மகா மகத்துவம் வாய்ந்த அவ்வுமது |
| அந்தப்பேர் இயலானை ஈதி | = | ஜேஷ்ட புத்திரனை = அழகுநிறைந்த புத்திரனைக் கொடுப்பாயாக |
| பெருமையோர் கொடாததுண்டோ | = | மகான்மாக்களுக்கு கொடாததான பொருள் இவ்வுலகத்திற்காணோம் = மகா மகத்துவம் வாய்ந்த உனக்குக் கொடுப்பது சிறப்பே, ததீசி என்புதந்தான். சிபிதனதுடை மாமிசத்தைக் கொடுத்தான். கர்னன் கவசந் தந்தான். |
| வீரியவரக்கர் மாய்தல் மெய்யென விளம்பி விட்டான் | = | மிகுந்த பலமுடைய இராக்ஷஸர்கள் மாய்ந்துபோதல் உண்மையென பிரதிஞ்ஞையோடுகூடி வாய்மொழியமைந்தனன். |

1
முனிமொழி கேட்டுமன்னன் முகூர்த்தமொன் றயர்ந்துசோர்ந்து
தனியொரு சிறுவன்மூவைம் பருவத்தன்சமர் கண்டில்லான்
பணிசெய் வல்லரக்கர்க் காற்றான்பகைஞர் கோளறிதறேற்று
3 2 4
னனிகமோ டேகியானேயவ ரொடுமரும்போர் செய்வேன். (33)

| | | |
|---|---|---|
| முனிமொழி கேட்டு | = | ஸ்ரீ விசுவாமித்திரரது வாக்கியமாகிய கரணகடூரத்தைக் கேட்டவுடனே |
| மன்னன் | = | சிங்கம் போன்றவனேனும் அரசன் புத்திர சோகத்தால் |
| முகூர்த்தமொன்று அயர்ந்து | = | ஒரு முகூர்த்தம் வரை சேஷ்டையற்றவராகி மயங்கி வாடி |
| தனியொரு சிறுவன் | = | இராமன் அத்தியந்தம் சிறிய பாலகன் |
| மூவைம்பருவத்தன் | = | கேவலம் பதினைந்து வயதுதானாகிறது |
| சமர்கண்டில்லான் | = | போர்க்களமே கண்டவனல்லன் |

பனிசெய்வல்லரக்கர்க்கு ஆற்றுன் = துன்பத்தையே செய்யும் அனேக மாயைகளைச் செய்யும் வலிமை மிக்க அரக்கரோடு போர்செய்ய சமர்த்துடையனுகான்
பகைஞர்கோள் அறிதல் தேற்றுன் = சத்துருக்களது வஞ்சகங்களை தெரிந்துகொள்ளும் படியான சாமர்த்தியம் அவனுக்கு யில்லை (ஆனுல்)
யானே அனிகமோடேகி = யானே சைன்யங்களோடும் போய்
அவரொடும் அரும் போர் செய்வேன் = அத்துஷ்டர்களாகிய அரக்கரோடும் பெரும்போர் செய்யலாமெனக் கருதுகிறேன்.

முன்னவ னீங்கின் மற்றமூவரு வாழா ரியானு
மின்னுயிர் வாழே னின்றிராவண னெழிந்தோ ரியவ
ரன்னவர்க் கஞ்சேன்முன்ன மிராவணனமர்க்கு மஞ்சேன்
வென்னிடப் பொருதும் வீரர்வீரங்க ணிலைமைத் தாமோ. (34)

முன்னவன் நீங்கில் = சேஷ்ட குமாரனுகிய இராகவன் நீங்குவானே யானுல்
மற்ற மூவரும் வாழார் = பரத, லக்ஷ்மண, சத்துருக்கன் யென்னும் மூன்று தம்பிமார்களும் ஜீவிக்கமாட்டார்கள்.
யானும் இன்னுயிர் வாழேன் = தசரதனுகிய யானும் இனிமையான இவ்விகலோக வாழ்க்கையிலிரேன்
இன்று = விருத்தாப்பியத்தையடைந்த இப்போது கரதூஷணுதிகளைக் கொல்ல யான் வருவனுயின் அவர்கள் நிமித்தம் இராவணன் வந்தால் அவனேடு போர் புரிய என்னுல் முடியாது
இராவணனெழிந்தோர் யாவர் = இராவணன் அன்றி மற்றெவ்வரக்கர் எதிர்ப்படினும்
அன்னவர்க்கஞ்சேன் = அவர்கட்கு யான் சிறிதும் பயப்படமாட்டேன்
முன்னம் = யவ்வனனுக யான் இருக்கும்போது
இராவணன் அமர்க்கும் அஞ்சேன் = கைலாச பர்வதத்தை தூக்கிய தசமுகனுகிய இராவணனுக்கும் பயப்படேன்
வென்னிடப் பொருதும் வீரர் = பகைவர் முதுகுகாட்டியோடும்படி போர்புரியும் வீரர் சூரரது
வீரங்கள் நிலைமைத்தாமோ = வீரங்கள் ஒரேபடித்தாகவோ இருக்கின்றது.

## அவதாரிகை

இராவணனுக்கு இத்தகைய வீரியம் எங்ஙனம் வந்தது. எங்ஙனந்தான் காகுத்தாதி வம்சத்தில் வந்தவர்களாய் இராவணுதிகளைப் பார்க்கினும் அதிக பலத்தோடு கூடிய தங்கட்கு வீரியக்குறைவு ஏற்பட்டது எனின் அதற்குக் கூறுகின்றுர்.

காலவேற் றுமையா லெல்லாப் பொருள்களுங் கலங்கிவேறு
மேலவரி ஊளத்தோராவர் வெய்யவன் குலத்துப் பூமி
பாலனு மியான் மேற்செய்வ தியாதெனப் பரிகேன் மூப்பாற்
சாலவு மென்ருன் மன்னன் ருபதன் முனிந்து சொல்வான். (35)

காலவேற்றுமையால் = காலங்களின் வேறுபாட்டையநுசரித்து
எல்லாப்பொருள்களும் = சிருஷ்டியிலுள்ள சர்வபதார்த்தங்களுமே
கலங்கிவேரும் = கலக்கமுற்று வேறு வேறு தன்மையாம்
மேலவர் இளைத்தோராவர் = வீரர்களும் பலமின்றியவராவர்
வெய்யவன் குலத்துப்பூமி பாலனும் யான் = சூரிய வம்சத்திலுதித்த தசரத மன்னவனுகிய யான்
சாலவு மூப்பால் மேற்செய்வதுயாதுயென = அத்தியந்தம் விருத்தாப்பியத்தையடைந்திருத்தலால் இனித் தங்கட்கு எந்தவிதமாக உதவி செய்வது யென்று
பரிகேன் = வருந்துகின்றேன்
என்ருன் மன்னன் = என இவ்வண்ணம் தசரதர் வணக்கமாகக் கூற
தாபதன் முனிந்து சொல்வான் = மிகுந்த தாபத்தோடு கூடிய ஸ்ரீ விசுவாமித்திர மகரிஷியானவர் மிகவும் கோபாவேசத்துடன் கூறத்தொடங்கினர்.

கருதிய தளித்தேனென்று கழறிய வாய்மை பொய்த்தாய்
செருவுயர் சிங்கமாநீ சிறுவிலங் கியற்கை செய்தாய்
மருவிய கிளைஞ்ஞரோடும் வாழ்த்தி யாம்போது மென்று
பெருமுனி முனிய மண்விண் பெரும் பயம்பிடித்த தன்றே. (36)

கருதியதளித்தேனென்று கழறிய = தாங்கள் எண்ணிவந்த காரியத்தை முடித்துவிட்டதாக உற்சாகமாகக் கூறிய
வாய்ம்மை பொய்த்தாய் = சத்தியம் பிறழ்ந்தனை
செருவுயர் சிங்கமா நீ = போர்க்கஞ்சாத சிங்கமா நீ
சிறுவிலங்கு இயற்கை செய்தாய் = மான் தன்மையை வாஞ்சித்தல் என்னே
மருவிய கிளைஞ்ஞரோடும் வாழ்த்தி = உனது பந்துவர்க்கங்களோடும் சத்தியங்கெட்டவனுய் காகுத்த வம்சத்திற் பிறந்தவனென்று சொல்லிக்கொண்டு நீ வாழ்வாய் என்று
யாம் போதுமென்று = யாம் எங்கிருந்து வந்தோமோ அங்கேயே செல்கின்ரேம் என்று

பெருமுனி முனிய = தவமிக்க அம் முனிவர் கோபமாகக்கூறிய அளவில்
மண் விண் = மண்ணுலகத்திலுள்ளார் சாபம் வருமோ, விண்ணுலகத்திலுள்ளார் இராவண சம்மாரம் தடைப்பட்டுவிடுமோ என
பெரும் பயம் பிடித்தது = மிகுந்த அச்சத்தையடைந்தார்கள்.

மாதவன் முனிவுநோக்கி வசிட்டனு மநு குலத்தே
சாதனுய்த் தசரதப் பேர்தரித்தனே சபதங் காவாய்
தீதுறிற் பிறிதார் காப்பார் திருத்திநீ நிறுத்துநீதி
மேதினி கடவாதென்றால் வேந்தநீ கடக்கற் பாற்றே. (37)

மாதவன் முனிவு நோக்கி = மாக்ஷிமை பொருந்திய பெருந் தவத்தால் சிருஷ்டி முதலிய எல்லா வல்லமையுடைய ஸ்ரீ விசுவாமித்திரர் கோபாவேசத்தைப் பார்த்து
வசிட்டனும் = ஸ்ரீ வசிஷ்டரும் கண்ணுற்று
மநுகுலத்தேசாதனும் = மனு இக்ஷுவாகு வம்சத்தில் பிறந்தவனாய்
தசரதப்பேர் தரித்தனே = தசரதன் யென்னுங் காரணக் கீர்த்தி நாமத்தினை அடைந்தவனும் = சுயம் பத்துத் திசையினுந் தேரைச் செலுத்திப் போர் செய்ததினால் தசரதர் எனப் புகழ்பெற்றும் யிருக்கின்றாய்
சபதங் காவாய் = மகரிஷிக்குச் செய்த பிரதிஞ்ஞையை இரக்ஷிக்க வேண்டும்
தீது உறில் = தபோதனர்கட்கு தவ இடையூறு உற்றால்
பிறிதுயார் காப்பார் = க்ஷத்திரிய அரசனன்றி வேறு யாவர் காத்தற்கு உரியவராவார்
திருத்தி நீ நிறுத்தும் நீதி = இன்ன இன்ன நீதி முறைப்படிதான் இன்ன இன்னவர் நடக்கவேண்டும் என நீ ஆஞ்ஞாபித்த மரியாதையை
மேதினி = உலகிலுள்ள சகல பிரஜைகளும்
கடவாது யென்றால் = கடக்கமாட்டார்கள் யென்றால்
வேந்த நீ கடக்கற்பாற்றே = மன்னவனாகிய நீ தவமுனிவர்க்குச்செய்த பிரதிஞ்ஞையைப் பங்கஞ்செய்தல் உசிதமாமோ ஆகாதாம்.

## அவதாரிகை

ஆனால் சிறு பாலகனாகிய இராமனுக்கு ஏதாவது ஆபத்து வந்தால் யாவரே காப்பர், வில்வித்தையினும் இவன் பாலகனாயிற்றே எனின் கூறுகின்றார் :

1 3 2
எரிகாக்கு மமுதென்ன விம்முனிவ னனிகாக்கு மிராமன் றன்னைச்
4
செருவாழ்க்கை யரக்கர்செயுந் தீங்கணுகா தெனக்கேட்ட திண்டோள் வேந்த
னருள்வாய்த்த குமரனெது செய்கின்றா னெனவுமைய ரங்கை கூப்பி
விரிதீர்த்த மாடிவரு நாடுடங்கி யுறுதுயரம் விளம்ப லுற்றார். (38)

எரிகாக்கும் அமுதென்ன = அக்கினிபகவானாலே காக்கப்பட்ட அமிர்தகும்பமே போல
இராமன்றன்னை = ஸ்ரீ இராகவனை
இம் முனிவன் = எதிரிலிருக்கும் தவக்காந்திவீசும் இந்த விசுவாமித்திர முனிவர்
நனிகாக்கும் = உன்னைக்காட்டிலும் மிகவும் நன்றாக இரக்ஷிப்பர்
செருவாழ்க்கை அரக்கர் செயுந் தீங்கு அணுகாது எனக்கேட்ட = யுத்தமே வாழ்க்கையுடைய இராக்ஷசர் கபடமாகச் செய்யாநின்ற துன்பங்கள் சமீபத்திலும் வரமாட்டா என்று ஸ்ரீ வசிஷ்டர் கூறக்கேட்டு
திண்தோள் வேந்தன் = அதனாலுண்டாய களிப்பால் தருமஹாநியும், புத்திரஹாநியும் வராதென்னுந் துணிவால், புஜபலம் பூரித்த தசரத மன்னன்
அருள்வாய்த்த குமரன் = கலைக்கோட்டு மகரிஷியின் அநுக்கிரகத்தினால் தோன்றிய குமரன் அல்லது மகரிஷிகளின் அநுக்கிரகம் பெற்ற நமது மைந்தன்
எது செய்கின்றான் என = இப்போது எவ்வகை விவகரித்துக்கொண்டிருக்கின்றான் எனக் கேட்க
உமையர் = ஸ்ரீ ராமபிருத்தியர்
அங்கை கூப்பி = அன்புடன் சிரசின்மீது கைகுவித்து
விரிதீர்த்தம் ஆடிவரும் = விஸ்தாரமான தீர்த்த யாத்திரையைச் செய்து முறையே ஸ்நானாதி செய்துவந்த
நாள் துடங்கி = தினமே முதலாக
உறு துயரம் விளம்பல் உற்றார் = அடைந்து வராநின்ற துன்பங்களை யெல்லாம் சொல்லத் தொடங்கினர்.

பதம்பணிந்து வேண்டியபின் பண்டைநிய மஞ்சிறிது பண்ணா நிற்கும்
இதந்தரு மாதருநிதியு மில்லமும்பொய் யாதலினா லென்னே யென்னுஞ்
சிதம்படுநற் றுகிலடிசில் சீதநீராதிகளிற் சிந்தை தீர
மதந்தவிர்சன் னியாசியர்போன் மானமிராச்சிய மகிழ்ச்சிமறுக்க மாற்றும்.(39)

பதம் பணிந்து = அவருடைய திருவடிகளில் வீழ்ந்து நமஸ்கரித்து
வேண்டியபின் = பிரார்த்தித்த பின்னர்

பண்டை நியமம் = எப்போதுஞ்செய்துவரும் தமது தின வியாபாரத்தை
சிறிது பண்ணுநிற்கும் = வாடிய முகத்தையுடையவராய் அற்பஞ் செய்தாலும் செய்வர் சும்மாவிருந்தாலும் இருப்பர்
இதந்தரும் மாதரும்நிதியும் இல்லமும் பொய் = அவிவேகளுக்கு இன்பஞ்செய்யும் மங்கையரும் அளவிறந்த திரவியமும் மாடமாளிகை கூட கோபுரங்களும் அத்தியந்தம் மித்தையாம்
ஆதலினுல் = அவ்வாறு பேய்த்தேருக்கு ஒப்பாக இருத்தலினுல்
என்னே யென்னும் = இவற்ருல் எனக்கு ஆகவேண்டியதென்னே எனச் சும்மாவிருக்கும்
சிதம்படுநல் துகில் அடிசில் சீதநீராதிகளில் = வெண்மை பொருந்திய வஸ்திரங்களிலும் அறுசுவை ஆகாரங்களிலும் குளிர்ந்த ஜலத்தினிடத்திலும் மற்ற போக்கியங்களிலும்
சிந்தை தீரும் = விருப்பமில்லாதவராவார்
மதந்தவிர் சன்னியாசியர் போல் = காமக்குரோத லோபாதி துர்க்குணங்களே வென்ற சர்வசங்க பரித்தியாகமுடைய துறவிகளைப்போலத் தவஞ்செய்யவே முயலுகின்றனர்
மானம் இராச்சியம் = அபிமானம், இராஜரீகம், பற்று
மகிழ்ச்சி மறுக்கம் மாற்றும் = சுகம் துக்கம் அடைவதே கிடையாது.

1 3 2 4
இடரில்பத மொழிந்தபல தொழிலாற்போம் வாணுளென் றிரங்கிப் பாடு
மடர்செல்வ மாபத்துக் கிடமென்றே யாசைதவிர்ந் தியார்க்கு மீயும்
படர்கின்ற கருத்தறியே மிவற்காரே நற்குணங்கள் பயிற்ற வல்லார் (40)
தொடர்செய்கை யிதுவென்று தொழுதுரைத்தார் முனிகேட்டுச் சொல்வ தானுன்.

இடர்இல் பதம் = எல்லாத் துயரங்களும் இல்லாததும் அநாயாசமாக அடையத்தக்கதும் ஆகிய மோக்ஷத்தை
ஒழிந்த பல தொழிலால் = அடைவதற்கில்லாதனவான பற்பல அநாத்மசம் பந்தமான தொழில்களினுலே
வாழ்நாள் போம் = ஆயுளானது கழிக்கப்படுகின்றது
என்று இரங்கிப் = என்று மிகவும் இரக்கத்தோடும்
பாடும் = பாடிக்கொண்டேயிருக்கிருர்
அடர்செல்வம் ஆபத்துக் கிடமென்றே = நிறைந்த சம்பத்துக்களெல்லாம் துக்கத்துக்கு ஆஸ்பதமென்றே
ஆசை தவிர்ந்து = அவற்றில் சிறிதும் ஆசைப்படாமல்
யார்க்கும் ஈயும் = உங்களுக்கு விருப்பமிருந்தால் எடுத்துக்கொண்டு போகலாமெனச் சொல்லி யாசகரிடத்தில் அள்ளி அள்ளித் தனங்களை யெல்லாம் கொடுத்துக் கொண்டே யிருக்கிருர்.

| | |
|---|---|
| படர்கின்ற கருத்து அறியேம் = | இவருடைய மனதில் என்ன எண்ணிக்கொண்டிருக்கின்றார் என்பது எங்களுக்கெல்லாந் தெரியவில்லை |
| இவர்க்கு யாரே நற்குணங்கள் பயிற்ற வல்லார் = | துயரப்படும் இவ்விராகவருக்கு இவர் கருத்தறிந்து யாவர்தாம் நல்ல குணங்களைப் போதிக்கவல்லார் உள்ளார் ஒருவரையுமே காணேம் |
| தொடர்செய்கை = | இராகவர் தொடர்ந்துசெய்யும் செய்கை இத் |
| இதுவென்று தொழுது உரைத்தார் = | தன்மையதாக இருக்கின்றன என நமஸ்கரித்துக் கூறியவுடன் |
| முனிகேட்டுச் சொல்வதானன் = | ஸ்ரீ விசுவாமித்திரர் இவற்றையெல்லாஞ் செவியிற் கேட்டுச் சொல்லத்தொடங்கினர். |

இப்பெரிய செல்வனைநீ ரினக்கலையிற் றனிக்கலைபோ லீங்குத் தம்மின்
கைப்படுமிம் மாமோகங் காதலினு லாபத்தாற் கலந்த தன்றாற்
செப்பரிய நிராசையினுல் விவேகத்தால் வருமுணர்வின் செல்வ மாகுந்
தப்பில்பல யூகத்தான் மோகம்போய்த் தளர்வறுந்தற் பதத்தி லெம்போல். (41)

| | |
|---|---|
| இப் பெரிய செல்வனை = | அமானித்வாதி தெய்வ சம்பத்தையுடைய ஸ்ரீ இராமனை |
| நீர் = | பிருத்தியரே நீவிர் |
| இனக்கலையில் தனிக்கலைபோல் = | கூட்டத்திலுள்ள மானில் பிரிந்த தனி மான்போல் |
| ஈங்கு = | விவேகிகள் நிறைந்த இச் சபையின்கண்ணே |
| தம்மின் = | அழைத்துவாருங்கள் |
| கைப்படும் இம் மாமோகம் = | இப்போது பொருந்திய இப் பெரும் மோகமானது |
| காதலினுல் ஆபத்தால் = | இராகத்தாலேனும் ஆபத்துக்களாலேனும் |
| கலந்ததன்று = | வந்தடைந்ததல்லவாம் |
| செப்பரிய நிராசையினுல் = | சொல்லுதற்கரிய வைராக்கியத்தினுலும் |
| விவேகத்தால் = | பகுத்துணர்வினுலும் |
| வரும் = | உண்டாகாநின்ற |
| உணர்வின் செல்வமாகும் = | சமாதி ஷட்க முமுக்ஷுத்துவ ஞானதிசம்பத்தாகும் |
| தப்புஇல் பலயூகத்தால் = | சுருதியுக்தமாய் மனத்திற்குப் பொருந்தும்படியான நானுவித தர்க்க அனுமானங்களினுலே |
| மோகம்போய் = | இம் மோகத்தைத் துடைத்துவிட்டால் |
| எம்போல் தற்பதப் பதத்தில் தளர்வு அறும் = | ஸ்ரீ வசிஷ்டர் முதலிய எம்மைப்போல் சர்வ ஆயாசங்களும் ஒழிந்து விசிராந்தியடைவன். |

மனநிறைந்து மானமுடன் மானவருக் கேற்றவெலா மகிழ்ந்து செய்யு
மெனமுனிவன் புகல்போதி லிராமனுந்தா தையைத்தொழுவா னேகித் தாதை
கனைகழல்கண் முனிவர்பதங் கலைமறையோ ரடிகுரவர் கால்க டாழ்ந்து
தனதிருதாள் வணங்கினரைத் தலையாற்சொல் லால்விழியாற் சற்கரித்தான்.(42)

| | | |
|---|---|---|
| மனம் நிறைந்து | = | பூரணமான மனமுடையவனாய் |
| மானமுடன் | = | மதிப்புடன் |
| மானவருக்கு ஏற்றவெலாம் | = | மனுகுல வம்சத்தவருக்குத் தகுதியாய விவகாரங்களனைத்தையும் |
| மகிழ்ந்து செய்யும் | = | சந்தோஷமாகச் செய்வன் |
| எனமுனிவன் புகல்போதில் | = | என்றிவ்வண்ணம் முனீந்திரரானவர் சமாதானஞ் சொல்லிக்கொண்டிருக்குஞ் சமையத்தில் |
| இராமனும் தாதையைத் தொழுவான் ஏகி | = | ஸ்ரீ இராமபிரான் தனது அரண்மனையிலிருந்து பிதாவின் திருவடிகளை வணங்குதற்பொருட்டுக் கொலுமண்டபத்திற்கு வந்து |
| தாதை கனைகழல்கள் | = | பிதாவின் ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிகள் |
| முனிவர் பதம் | = | முனீசுரர்தம் திருவடிகள் |
| கலைமறையோர் அடி | = | நான்கு வேதங்கள் ஆறு அங்கங்கள் நியாய வேதாந்தமீமாம்சை புராணாதிகளைக் கற்ற மறையவர் திருவடிகள் |
| குரவர் கால்கள் தாழ்ந்து | = | தமக்குச் சாஸ்திரங்களைக் கற்பித்த ஆசிரியர்கள் திருவடிகளை முறையே நமஸ்கரித்து |
| தனது இருதாள் வணங்கினரை தலையால் சொல்லால் விழியால் சற்கரித்தான் | = | தன்னுடைய இரண்டு பாதங்களை நமஸ்கரித்த அரச சம்பந்திகளைச் சிறிது அசைத்த சிரத்தாலும் இன்சொற்களாலும், பார்வையினாலும் தகுதிக்குத் தக்கபடி உபசாரஞ் செய்தான். |

மடிமிசைவந் திருத்தியென மன்னுரைப்ப வாராது மடித்த தூசைப்
படிமிசையிட் டிருத்தலுமே பார்த்திபன்பார்த் துயருணர்வு படைத்த மைந்தா
முடிவறுநன் னலங்களுக்கு முன்னியல்பாத் திரமானாய் மூர்க்கர் போல
நொடியுமினி மனந்தளர்ந்து நோக்கினிய மெய்வாடி நோதல் வேண்டாம். (43)

| | | |
|---|---|---|
| மடிமிசைவந் திருத்தி என | = | (ஹே மைந்த) உற்சங்கத்தின் மீது வந்து உட்காருவாயாக வென்று |
| மன் உரைப்ப | = | மகீபதி விரும்பி அழைத்தபோதினும் |
| வாராது | = | மகரிஷிகள்கூடிய சபையின்கண் உற்சங்கத்தின்மீது இருத்தல் தகாது என இராது |
| மடித்த தூசை | = | மடித்திருந்த கம்பளத்தை |

படிமிசையிட்டு இருத்தலும் = பூமியில் வேலையாட்களால் விரிக்கப்பட்ட இரத்தினக் கம்பளத்தில் இருத்தலுமே
பார்த்திபன் பார்த்து = பூபாலனுகிய தசரதன் பார்த்து
உயர் உணர்வு படைத்த மைந்தா = உயர்ந்த விவேகத்தோடு கூடிய புத்திர
முடிவறுநல் நலங்களுக்கு = அளவில்லாத நல்ல மங்களங்கட்கு
முன் இயல் பாத்திரமாணுய் = முதன்மையாகப் பொருந்திய தகுதியுடையவனுயிருந்தும்
மூர்க்கர் போல = ஜடர்கள் போல
நொடியும் இனி மனந் நளர்ந்து = ஒருகணமேனும் இன்னும் மனஞ்சோர்ந்து
நோக்கு இனிய மெய்வாடி = பார்ப்பதற்கு இரம்மியமா யிருக்கின்ற சரீரமானது நுடங்க
நோதல் வேண்டாம் = துயரப்படுத்தல் வேண்டாம்.

விருத்தர்மறை யவர்குரவர் விளம்புபதந் தனைமோக மேவா தான
கருத்துடைய வுன்போல்வார் கலந்தனரா னீவாளா கவலா நின்றுய்
வருத்துறுமா பத்தெல்லாம் வன்மோக மறிலருகும் வாரா தென்று
பெருத்தமுடி மன்னவர்கோன் பேசியபின் வசிட்டனிவை பேச லுற்றுன். (44)

விருத்தர் மறையவர் குரவர் = விருத்த விப்பிர குருமார்கள்
விளம்பு பதந்தனை = கூருநின்ற சீரிய விசிராந்தி பதத்தை
மோகம் மேவாதான = மோகத்தைப் பின்தொடர்ந்து செல்லாதான
கருத்துடைய உன்போல்வார் கலந்தனர் = மனத்தோடுகூடிய உன்னையொப்பானவர், அடைந்தனர்
நீவாளாகவலா நின்றுய் = நீ வீணுகவே கவலைப்படுகின்றுய்
வருத்துறும்ஆபத்தெல்லாம் = துன்பப்படுத்தாநின்ற ஆபத்துக்களெல்லாம்
வன்மோகம் அறில் = வலிய மயக்கமானது அற்றுவிட்டால்
அருகும் வாராது = சிறிதும் வராமல் ஓடிவிடும்
என்று பெருத்த முடிமன்னவர்கோன் பேசியபின் = என இவ்வண்ணம் பெரிய நவரத்தினகிரீடந்தரித்த இராஜாதி இராஜன் கூறிய பின்னர்
வசிட்டன் இவை பேசலுற்றுன் = ஸ்ரீ வசிஷ்ட மகரிஷி மேற்கூறப்படுமிவற்றை (ஸ்ரீ இராகவரை நோக்கிக்) கூறத்தொடங்கினுர்.

வெலற்கரிய தீமுயற்சி விடயமெனும் பகையெளிதின் வென்ற சூரா
கலக்குறுபே தையர்க்குரித்தா மடஞ்செறிமோ கக்கடலிற் கவிழ்ந்லென்று
னலக்குறுகோ சிகன்புகல்வா னன்மனேயை எலிநலியு நலிவு போல
வலக்கணுறு காரணமென் காதலித்த தேதத்னை யடைதி யன்றே. (45)

வெலற்கரிய தீமுயற்சி விடயமெனும் பகை எளிதில் வென்ற சூரா = ஜயித்தற்கரிய துராரம்பமாயிருக்கும் விடயங்களாகிய சத்துருக்களை அதிசுலபமாக வெற்றிகொண்ட மகாசூரனே !

கலக்குறு பேதையர்க்கு உரித்தாம் = மிகவுங் கலக்கத்தையடையாநின்ற அஞ்ஞானிகட்கு யோக்கியமாய்
மடஞ்செறி மோகக்கடலில் கவிழேல் என்றான் = அறியாமை நிறைந்த மோக சமுத்திரத்தில் வீழற்க என வசிஷ்டபகவான் கூறினர்
நலக்குறு கோசிகன் புகல்வான் = சகல நன்மைகளையும் தவத்தால் அடைவுற்ற ஸ்ரீ விசுவாமித்திர மகரிஷி கூறுவதாவது
நல் மனையை = நல்ல அழகிய வீட்டை
எலிநலியும் நலிவுபோல = மூஷிகம் குடைந்து கெடுப்பதுபோல
அலக்கண் உறு = துன்பத்தினை அடையும்
காரணம் என் = காரணம் யாது
ஏது = பரிமாணம் எவ்வளவு உள்ளன (பரிமாணம் = அளவு)
காதலித்தது அதனை = விரும்பியது அதனை
அடைதி = அடையலாம் (கூறுவாயாக)

## அவதாரிகை

ஸ்ரீ இராகவர் முனிநாயகர் கூறியதைக்கேட்டு ஆனந்தமுற்று அவர் ஆக்ஞையின்படியே தமது குறையைத் தெரிவிக்கத் தொடங்கல் :

2 1 3
மீட்டணுகா தகத்துயர்போம் விளம்பென்ன முகிற்குரலால் வெம்மை தீர்ந்து
5
வாட்டமறு மயிலென்ன மகிழ்ந்திடர்போ யருண்மூர்த்தி மடவ னேனைச்
4 6
சேட்டமுறு மாதவநீ செப்பெனமுன் செப்புதலாற் செப்பு கின்றேன்
கேட்டருடி மேலவர்சொன் மறுக்குநர்யா ரெனவினிது கிளத்த லுற்றான். (46)

அகத்துயர் மீட்டு = சிந்தாகுலங்கள் யாவும் மீண்டும்
அணுகாது போம் = வந்துருது ஒழிந்துபோம்
விளம்பு என்ன = கூறுவாய் என்று மகரிஷி கூற
முகில் குரலால் வெம்மை தீர்ந்து வாட்டம் அறும் = மேக கர்ஜனையால் வெப்பந் தொலைந்து மகிழ்ச்சியடையும்
மயில் என்ன = மயிலைப்போன்று
மகிழ்ந்து இடர் போய் = சந்தோஷமாய் சந்தாபம் நீங்கி
அருள் மூர்த்தி மடவனேனை = அமூர்த்தமாயினும் கிருபையினால் திவ்யமங்கள திருமேனியைத்தரித்த ஸ்ரீ இராகவர் அஞ்ஞனை
சேட்டமுறு மாதவ நீ = ஐஸ்வரியம் பொருந்திய பெருந்தவத்தையுடைய ஸ்ரீ விசுவாமித்திர மகரிஷியே தேவரீர்

செப்பு என முன் செப்புதலால் = நின்குறையை கூறுவாயென்று முன்னர் ஆக்ஞை செய்ததால்
செப்புகின்றேன் = ஒருவாறு விண்ணப்பிக்கிறேன்.
கேட்டு அருள்தி = செவிசாத்தியருளல் வேண்டும்
மேலவர்சொல் மறுக்குநர் யார் என = சற்புருடர்களுடைய கட்டளையைத் தடுப்பவர்கள் எவ்வறிவாளிகள் என்று
இனிது கிளத்தலுற்றுன் = கேட்பவர்களுக்கு இன்பம் உண்டாகும்படி சொல்லலுற்றுன்.

2 1 3
தந்தையிவ னிற்பிறந்து வளர்ந்துபல கலைதரித்துச் சதாசா ரத்தால்
வந்துயர்நன் னதியாடி வாரிதிசூழ் புவியுழன்று வருத லோடு
5 4 6
மிந்தநெடுஞ் சகமோகத் திச்சையெலாந் தீர்ந்ததிதி லின்ப மில்லை
9 8 7
யந்தமுறல் பிறப்பதற்கே பிறப்பதுமீட் டிறப்பதற்கே யநித்த மியாவும். (47)

இவன் தந்தைஇல் பிறந்து = இந்நாள் தந்தையினது அரண்மனையில் ஜனித்து
வளர்ந்து = கிரமமாக விருத்தியாகி
பலகலை தரித்து = பற்பல சாஸ்திரங்களைப் பயின்று
சதாசாரத்தால் வந்து = நல்லொழுக்கமுடையவனாய் நடந்து
உயர் நல் நதி ஆடி = மிக மகிமைபொருந்திய நல்ல தெய்வ தீர்த்தங்களில் மூழ்கி
வாரிதிசூழ் புவியுழன்று = சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப் பிரதக்ஷணஞ் செய்து
வருதலோடும் = இவ்வரண்மனைக்கு வந்துசேர்ந்ததும்
மோக இந்த நெடுஞ்சகத்து = இச் சம்சாரரூப விஸ்தாரமாம் பிரபஞ்ச விஷயத்தில்
இச்சையெலாந் தீர்ந்தது = ஆசையெல்லாம் ஒழிந்தது
இதில் இன்பம் இல்லை = இச் சம்சாரத்தில் கிஞ்சித்தும் சுகம் இல்லை
அந்தமுறல் பிறப்பதற்கே = மரணமாதல் மீண்டும் பிறப்பதற்கே
பிறப்பதுமீட்டு இறப்பதற்கே = ஜநிப்பது மீண்டும் மரணமாவதற்கேயாம்
யாவும் அநித்தம் = சர்வமும் அஸ்திரமேயாம்.

2
பாவமதா யாபத்துப் பயிலிடமாய்த் தம்மிற்ரும் பற்றின் ருயுந்
4 3 5
தாவுமனக் கற்பனையாற் சம்பந்த மாயிருப்புச் சலாகை போலா
1 6
மேவுபெருஞ் செல்வத்துக் கிடமாகு மெப்பொருளும் விடயத் தாலும்
பூவலயத் தாலுமெது பயன்யாமார் வருவதெது பொய்பொய் பொய்யாம். (48)

மேவுபெருஞ் செல்வத்துக்கு இடமாகும் எப்பொருளும் = கர்மத்தால் வந்து பொருந்திய பெருஞ் சம்பத்துக்கு ஆசிரயமாகும் சராசர வஸ்துக்கள் யாவும்

பாவமதாய் ஆபத்துப் பயில் இடமாய் = பாவ ஏதுவாய் சர்வ ஆபத்துக்களுக்கும் உறையுளாய்
தம்மிற்றும்பற்று இன்றியும் = பரஸ்பரம், சம்பந்தமில்லாதிருந்தும்
தாவுமனக் கற்பனையால் = பாயும் சித்தத்தின் சிந்தனையால்
இருப்புச் சலாகைபோல = இரும்பினாலாய ஊசிபோல
சம்பந்தமாய் ஆம் = சம்பந்தமாய்ப் பொருந்தும்
விடயத்தாலும் = விடயபோகங்களாலும்
பூவலயத்தாலும் = இவ்விராஜ்ஜியத்தாலும்
எது பயன் = என்னே பிரயோஜனம்
யாம் யார் = யான் என்பது என் (ஆத்மவிசாரம்)
வருவது எது = உண்டாவது யாது (சரீரவிசாரம்)
பொய் பொய் பொய்யாம் = ஆத்மாவுக்கன்னியமான திருசியம் யாவும் அத்தியந்தம்மித்தையாம்.

2 1 3
யாதியார் பெற்றதென விவ்வண்ண நினைவேற்கு வழிச்செல் வோர்க்கு
5 4
மோதுகா னலிலம்பு முறைமைபோற் பொருண் முழுதின் மூளா வாசை
6
பேதியா வித்துயர்போ நெறிநாடிற் பெருந்தருதான் பெற்ற தீயால்
8 7
வேதல்போல் வேகின்றேன் விடரடைகல் லாந்திறவா வெய்ய மோகம். (49)

யார் யாது பெற்றது என இவ்வண்ணம் நினைவேற்கு = யாவர்தாம் எப்பொருளைப் பெற்றார்கள் என்று இவ்வாறு விசாரிக்கப்பட்ட எனக்கு
வழிச் செல்வோர்க்கு = வழிப்போகும் பதிகர்கட்கு
மோதுகானலில் அம்பு முறைமைபோல் = வீசும் கானலில் ஜலப்பிராந்தி ஒழிந்த முறையே போல
பொருள் முழுதில் ஆசைமூளா = சர்வ பாவங்களிலும் இரதி உண்டாகமாட்டாது
பேதியா இத்துயர் போம் = ஞானத்தாலன்றிப் பேதிக்கமுடியாத
நெறி நாடில் = இத்துன்பம் ஒழியும் மார்க்கத்தை ஆராய்ந்து அறியாமல்
பெருந்தருதான் = நீண்ட நாளாக நிற்கின்ற (விருக்ஷமானது) மரம்
பெற்ற தீயால் = கோடரத்துற்ற அக்கினியால்
வேதல்போல் வேகின்றேன் = எரிதல்போல வெதுப்பப்படுகின்றேன்
திறவா வெய்ய மோகம் = கொடிய சம்சார மோகத் துயர்
விடரடைகல்லாம் = இடைவெளியில்லாத கல்போல அதிகக் கடினமாம்.

## அவதாரிகை

1. தனம், 2. ஆயுள், 3. அகங்காரம், 4. மனம், 5. ஆசை, 6. சரீரம், 7. பால்யம், 8. யௌவனம், 9. ஸ்திரீ, 10. விருத்தம், 11. காலன், இவைகளினால் அனர்த்தமே உண்டாமெனக் கூறுகின்றார்.

1 3
இனமிகழு மென்றஞ்சி யித்துயருக் கழுதாற்றே னீன்ற மாதர்
2 4
தனமுதலா மாபத்தோர்க் கெனச்சிந்தா வினஞ்சுழலுந் தான மாகுங்
6 5 7
கனமிலதா முதாரமதா மென்னினுமின் பம்பயவாக் கயவ ரென்ன
10 8
வனகரெனத் தரமறியா தரசரைப்போ லடைந்தார்பா லணுகுஞ் செல்வம். (50)

இனம் இகழுமென்று அஞ்சி = பந்துக்கள் நிந்திப்பார்களே யென்று பயந்து
இத்துயருக்கு அழுது ஆற்றேன் = இச்சமயம் சம்சாரதுன்பத்தைக் குறித்துக்கண்ணில் தண்ணீர்விட்டு ரோதனஞ் செய்து இத்துயரைத் தீர்க்கேன்
தனம் ஈன்றமாதர் முதலாம் ஆபத்தோர்க்கு என = (தனதூஷணம்) தனம் அனேக மக்களைப்பெற்ற மாதர் முதலாகிய ஆபத்தோர்க்கு உளதாம் துன்பம்போல
சிந்தாவினஞ் சுழலுந் தானமாகும் = சிந்தாகுலக் கூட்டம் சுழற்றும் இடமாம்
உதாரமதா மென்னினும் = உதாரமாய் மிகுதியதாமென்னினும்
கனமிலதாம் = அற்பமாம்
இன்பம் பயவாக் கயவ ரென்ன அனகரென = ஆனந்தத்தைக் கொடுக்காவாம் குணங்கெட்டவர் என்ன
தரமறியாது = 
அரசரைப்போல் = நல்ல குணவானென்றும் தாரதம்மியம் அறியாத மூடராஜாவைப்போல
செல்வம் அடைந்தார்பால் = இலக்குமி சமீபித்தவரிடத்து
அணுகும் = சேரும்.

கருமவகை யால்விரிந்த கட்செவிப்பால் விடமாகுங் கணக்கே போலாந்
திருவெனுஞ்சூ றைக்காற்றுற் பனிபோலச் சிதறுரார் சேரார் சேர்ந்தோ
ரிருவகைக்குங் குளிர்ந்தினியர் நன்றியறி வோரறிஞ ரினியோர் சூரர்
பொருவிலெவ ருந்திருவாற் புழுதிசெறி சுடர்மணிபோற் புன்மை சேர்வர். (51)

கரும வகையால் விரிந்த = விதி நிஷேத கருமங்களால் அதிகரித்த தன்வானுக்கு

கட்செவிப்பால் விடமாகும் கணக்கேபோல் ஆம் = சர்ப்பத்திற்கு க்ஷீரமும் விடமேயாகுந் தன்மை ஆம்
திருவெனுஞ்சூறைக்காற்றால் = இலக்குமிருபக்ஷீரம் சர்ப்பாதிவிடவேகமாம் தனம் என்னும் பிரசண்டமாருதத்தால் இமம்போல
பனிபோலச் சிதறார் ஆர் = அடித்துக்கொண்டு போகப்படாதவர் யாவர்
சேரார் சேர்ந்தோர் = அயலவர்; தம்மவர்
இருவகைக்குங் குளிர்ந்து இனியர் = இருதிறத்தவரிடத்தும் தண்மையோடும் நன்மையே புகன்று நன்கே செய்வர்
நன்றியறிவோர் = கிருதஞ்ஞர் பிறர்செய்த நன்றியை அறிபவர்
அறிஞர் = பிராஞ்ஞர்
இனியோர் சூரர் = இனியவர் குசலர்
பொருவு இல் எவரும் = சமானமற்ற யாவராயினும்
சுடர்மணிபோல் = பிரகாசம் பொருந்திய மணிபோல்
திருவால் புன்மை சேர்வர் = இல்க்குமியாலே தாழ்மையே அடைவர்.

[2] தீதடையாச் செல்வர்மொழி [1] திறம்பாத சூரர்நடுத் தெரிந்து நோக்கு
நாதரிவர் [3] மிகவரியர் நாகஞ்சூழ் குழிவல்லி நனைபோற் செல்வஞ்
சாதனத்துக் கரிதுளத்தை யிழுத்திமைப்பி லிறும் [5] தலைகீழ்த் [4] தளிரி னன்ற
[6] வோதுதுளி யொத்தவுயிர் மத்தரென வகாலத்தி லுடல்விட் டோடும். (52)

மொழிதிறம்பாதசூரர் = சொல்தவறாத சூரரும்
நடுத்தெரிந்து நோக்கும் நாதர் = சமதிருஷ்டியாய்ப் பார்க்கும் அரசர்
இவர் = இவர் (அரிதுபோல)
தீதடையாச் செல்வர் = ஜன அபவாதமின்றிய செல்வர்
மிகவரியர் = அத்தியந்தந்துர்லபராவர்
நாகஞ்சூழ் குழிவல்லிநனை போல் = சர்ப்பம் மண்டலமிட்டுக்கொண்டிருக்கும் குழியிலுள்ள முல்லை அரும்புபோல
செல்வம் சாதனத்துக்கு அரிது = இலக்குமி (லோபிகளான பாபிகளால்) நல்ல சாதனங்கள் சம்பாதித்தற்கு அசாத்தியமாம்
உளத்தை இழுத்து இமைப்பில் = சித்தவிருத்தியை வசஞ் செய்யில்
இறும் = (க்ஷணத்தில்) நாசமாம் (ஆயுள் தூஷணம்)
நான்றதலைகீழ்த் தளிரின் = தொங்காநின்ற தலைகீழ்த்தளிர்
ஓது துளியொத்த = இப்போதே விழப்போகிறதென்று சொல்லும்படியாயுள்ள துளி ஒத்த (ஜலத்துளி போல)

| | | |
|---|---|---|
| உயிர்மத்தரென அகாலத்தில் உடல்விட்டு ஓடும் | = | ஆயுளானது உன்மத்தரைப்போலச் சமயமல்லாத போது சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து கணத்தில் நீங்கும். |

1
வளர்புலமா மராத்தீண்ட மனமயர்வோர் மெய்யுணர்வு வாய்த்தி லாதோர்
3 2 4
தளர்வுறுகா ரணம்வாணுட் டனிமோக மெனுமுகிலிற் சார்மின் போலு
மளவுபடு முடன்மெய்யென் றழுந்திநா மிதின்மகிழே மாகா யத்தைப்
பிளவிடவா யுவைப்பிடிக்கத் திரைகோக்க வெளிதிதனைப் பேண வொண்ணு.(53)

| | | |
|---|---|---|
| வளர்புலமாம் அராத்தீண்ட மனம் அயர்வோர் மெய்யுணர்வு வாய்த்திலாதோர் | = | சமஸ்கார பலத்தால் விருத்தியாகாநின்ற விஷயமாகிற பாம்பு கடிக்கப் பிரஞ்ஞா நாசமுடையோருக்கும் ஆத்ம நிச்சயம் லபியாதவருக்கும் |
| வாணுள் தளர்வுறுகாரணம் | = | ஆயுள் ஆயாசகாரணமாம் |
| தனிமோகம் என்னும் | = | தாழ்வில் ஒப்பற்றீ சரீரமென்னும் |
| முகிலில்சார் மின்போலும் | = | மேகத்தில் பொருந்திய மின்னலைப்போலும் |
| அளவுபடும் உடல் மெய்யென்று அழுந்தி நாம் இதில் மகிழேம் | = | பரிச்சின்னமாகும் ஆயுள் சத்தியம் என்று நத்தியாம் இவ்வாயுளின் கண்ணே சந்தோஷியேம் |
| ஆகாயத்தைப் பிளவிட | = | வியோமத்தைப் பேதிக்க |
| வாயுவைப் பிடிக்க | = | காற்றைப்பிடித்துக் கட்டிப்போட |
| திரைகோக்க | = | சமுத்திரத்தின் அலைகளைக் கோர்க்க |
| எளிது | = | சுலபமாம் |
| இதனைப்பேணவொண்ணு | = | இவ்வாயுளைக் காப்பாற்றமுடியாது. |

சரற்பருவ மேகமெனத் தைலந்தீர் விளக்கென்னத் தரங்க மென்னத்
திரப்படநீங் குவதாகிச் சிறிதுமிளைப் பாருத சிந்தைத் தாகிப்
பரப்புடைய சேட்டையதாய்ச் சூனியமாம் வாணுளின் பயனை நாடிற்
றுரப்பரிய துயராக்கு மொட்டகத்துக் குயிர்தொலைக்குஞ் சூலே போல. (54)

| | | |
|---|---|---|
| சரற்பருவ மேகம் என | = | சரற்காலத்து முகில் போலும் |
| தைலந்தீர் விளக்கு என்ன | = | எண்ணெயில்லாத தீபம் போலும் |
| தரங்கம் என்ன | = | அலைபோலவும் |
| திறப்பட நீங்குவதாகி | = | அத்தியந்தம் ஒழிவதாகி |
| சிறிதும் இளைப்பாருத | = | கிஞ்சித்தும் விசிராந்திபெருத |
| சிந்தைத்தாகி | = | மனத்தோடுங் கூடியதாய் |
| பரப்புடைய சேட்டையதாய் | = | விஸ்தார விவகாரத்தோடு கூடியதாயிராநின்ற |
| சூனியமாம் வாணுளின் | = | இல்லாததாயிருக்கும் ஆயுளின் |

| | | |
|---|---|---|
| பயனை நாடில் | = | பிரயோஜனத்தை ஆலோசிக்கில் |
| துறப்பரிய | = | நிவர்த்தித்தற்கரிய |
| ஒட்டகத்துக்கு உயிர் தொலைக்கும் சூலே போல | = | அசுவதரி யென்னும் மிருகத்துக்குப் பிராணனை நாசஞ்செய்யும் கர்ப்பம் போல. |

## அவதாரிகை

ஆயின் எத்தகைய ஜீவனம் சிலாக்கியமாம் எனில் கூறுதல் :

அடையவேண் டியதடைந்து மேற்றுயர மற்றின்ப மளவி லாதாய்க்
கடையதாந் தருவிலங்கு பறவைகள்போல் வீணாள்கள் கழியா தாகித்
தடையிலா மனனத்தால் வாழ்வதே யுயர்வாணாள் ஜனனந் தீர்ந்தோ
ருடையபிறப் புயர்ந்ததாங் கிழவேச ரிப்பிறப்பா மொழிந்த வெல்லாம். (55)

| | | |
|---|---|---|
| அடையவேண்டியது அடைந்து | = | எந்த வஸ்துவை அடையவேண்டியதோ அதனை அடைந்து |
| மேல் துயரம் அற்று | = | மறித்தும் சோகம் வராதபடி |
| இன்பம் அளவிலாதாய் | = | பரமானந்தத்தைப் பெற்று |
| கடையதாந் தருவிலங்கு | = | கீழாகிய விருக்ஷம் மிருகம் |
| பறவைகள் போல | = | பக்ஷிகள் இவைகளைப் போல |
| வீணாள்கள் கழியாதாகி | = | வாழ்நாளை வீண்நாளாகப் போகாமல் |
| தடையிலா மனனத்தால் | = | இடைவிடாது செய்யும் விசாரத்தால் |
| வாழ்வதே உயர்வாணாள் | = | ஜீவிப்பதே மேலான ஜீவனமாம் |
| ஜனனந் தீர்ந்தோருடைய | = | இனி வரும் பிறப்பற்றவருடைய |
| பிறப்பு உயர்ந்ததாம் | = | அவதாரம் சாது ஜீவிதமாம் |
| ஒழிந்தவெல்லாம் | = | மற்றைய சேஷ ஜீவரெல்லாம் |
| கிழவேசரிப் பிறப்பாம் | = | (அசுத்தமாகிய தேகாத்ம புத்தியுடைத்தாயிருத்தலின்) கிழக்கழுதையொப்ப நிந்தித வாழ்க்கையுடையவரேயாவர். |

அவிவேகிக் குப்பாரஞ் சாத்திரமெய் யறிவிலோர்க் கங்கம் பார
நவில்சாந்தி யில்லாதோர்க் குளம்பார மவாவினர்க்கு ஞானம் பாரஞ்
செவிதான வுருவாணன் மனம்புந்தி யகங்காரஞ் செயல்க ளெல்லாங்
குவிபார மாஞ்சுமடர் சுமைபோலப் புந்திநலங் கூடா தார்க்கே. (56)

| | | |
|---|---|---|
| அவிவேகிக்கு சாத்திரம் பாரம் | = | பகுத்தறிவில்லாதோர்க்கு சாஸ்திரம் சுமையாம், |

| | | |
|---|---|---|
| நவில் சாந்தியில்லா தோருக்கு | = | மூர்க்கர்களென்னும் அசத்தர்கட்கு |
| உளம் பாரம் | = | மனம் சுமையாம் |
| அவாவினர்க்கு ஞானம் பாரம் | = | இராகாதிகளால் தூஷிக்கப்பட்ட சித்தத்தினருக்கு மெய்யுணர்வு சுமையாம் (அதுபோல) |
| மெய்யறிவு இல்லோர்க்கு அங்கம் பாரம் | = | அத்தியாத்ம சாஸ்திர போதம் இல்லாதவருக்கு சரீரம் சுமையாம் |
| செவிதான உருவாளுள் | = | மனம் கவரத்தக்க ரூபம் ஆயுள் |
| மனம் புந்தி அகங்காரம் | = | மனம் புத்தி அகங்காரம் |
| செயல்களெல்லாம் | = | தொழில்கள் இயம்பிய யாவும் |
| சுமடர் சுமைபோல | = | பாரம் தூக்குகிறவனுக்குப் பாரம்போல |
| புந்திநலங் கூடாதார்க்கு | = | துர்ப்புத்தியுடையோருக்கு |
| குவிபாரம் | = | மிகுந்த சுமையாம் (பெரும் பாரமாம்). |

2 1 3
சின்னுண்மெய்ப் பயின்றிளமை தீநட்பை விடுமறிஞர் திறம்போ னீங்கு
5 7 4 6 8
மன்னுது சுகநிலைமை மரணத்தின் பாத்திரமாம் வாணுள் போல
வின்னுத தில்லையிடர் மோகத்தால் வாளாவந் தெங்கும் வாளா (57)
துன்னுநின் றதுபொல்லாப் பொய்யகங்கா ரப்பகையாற் றுணுக்கென் கின்றேன்

| | | |
|---|---|---|
| இளமை | = | எவ்வன ஆயுளானது |
| சின்னுள் மெய்ப்பயின்று | = | சிலதினங்கள் சரீரத்தின்கண்ணே இருந்து |
| தீ நட்பை விடுமறிஞர் திறம்போல் நீங்கும் | = | துர்ஜன சகவாசத்தை விட்டுவிடும் விவேகிகள் தன்மைக்கொப்பாய் விட்டுவிடும் |
| சுகம்மன்னுது நிலைமை (மன்னுது) | = | ஆனந்தம் அடையாது நிலைமை (ஸ்திரம் அடையாது) |
| மரணத்தின் பாத்திரமாம் | = | மரண (பாஜனமாம்) இடமாம் |
| வாணுள் போல | = | ஆயுளைப்போல |
| இன்னுதது இல்லை | = | குணவர்ஜிதமாகும் வேறு பொருள் உலகத்தில் இன்றும் (அகங்கார தூஷணம்) |
| இடர் மோகத்தால் | = | துன்புறுத்தும் மயக்கத்தினுலே |
| வாளாவந்து எங்கும் | = | வீணுகவே உண்டாகி எவ்விடத்தும் |
| வாளாதுன்னு நின்றது | = | வீணுகவே பொருந்தி நின்றது |
| பொல்லாப் பொய் அகங்காரப் பகையால் | = | துஷ்டமயமித்தியாவடிவமான அகங்கார சத்துரு வரால் |
| துணுக்கென்கின்றேன் | = | மிகப் பீதியை அடைகின்றேன். |

மனத்துயரு மாபத்தும் வளர்தொழிலு மகங்கரத்தால் வருமித் தைப்போற்
கனத்தபகை யிலதுநெடுங் காலம்வினை யிதுசேர்ந்து கலங்கா நின்றே
னனத்தொடுதண் ணீர்நுகரே னரும்போகம் விளம்புவதென் னகங்கா ரஞ்சேர்
தினத்தொழில்க ளோமமுண வனைத்தும்பொய் யகங்கார ந் தீர்தல் மெய்யே. (58)

| | | |
|---|---|---|
| மனத்துயரும் ஆபத்தும் | = | மனப்பீடையாம் துஷ்ட ஆதிகளும் பெரிய ஆபத்துக் களும் |
| வளர்தொழிலும் | = | விரிந்த விவகாரங்களும் |
| அகங்கரத்தால் வரும் | = | அகங்காரவசத்தால் உண்டாம் |
| இத்தைப்போல் | = | இவ்வகங்காரத்துக்கு இணையாக |
| கனத்த பகையிலது | = | பெருஞ் சத்துரு வேறு இல்லை |
| நெடுங்காலம் வினையிது சேர்ந்து | = | வெகுகாலம் அகங்காரமாம் சத்துரு இதனைப் பற்றி |
| கலங்கா நின்றேன் | = | விக்ஷேபத்தை அடைந்துள்ளேன் |
| அனத்தொடு தண்ணீர் நுகரேன் | = | அடிசில் புசியேன் சீதநீர் பருகேன் (என்றால்) |
| அரும்போகம் விளம்பு வது என் | = | விசேஷ போகங்களை நான் புசித்திலன் என்று கூறுவதற்கு என்னுளது |
| அகங்காரஞ்சேர் | = | அகங்கார பரவசப்பட்டு |
| தினத்தொழில்கள் | = | அனுதினம் யான் செய்துகொண்டுவந்த செயல்க ளாகிய |
| ஓமம், உணவு, அனைத்தும் பொய் | = | பரலோக சம்பந்த காரியங்கள் இகலோக சம்பந்த காரியங்களாகிய உணவாதிகள் யாவும் (பொய் மித்தையாம்) |
| அகங்காரந் தீர்தல் மெய் | = | அகங்கார அந்தமே தத்துவமாம். |

அகங்கார முகில்படர வாசைமலை மல்லிகையவ் வளவிற் ருகு
மிகுந்துயரிவ் வகங்காரத் தொழில்பிரிந்தும் பேதைமையின் மிகவு நொந்தேன்
செகந்தனிலா பத்திடமாய்த் திரந்துறப்ப தாயுள்ளாய்ந் தியக்க மாயு
முகந்தவிசா ரமுமுணர்வு மிலாவகங்கா ரம்போமா றுபதே சிப்பாய். (59)

| | | |
|---|---|---|
| அகங்கார முகில்படர | = | (தேகமான மலையில்) அகங்காரமாகிய மேகமானது விஸ்தாரமாகுமோ |
| ஆசைமலை மல்லிகையவ் வளவிற்ருகும் | = | திருஷ்ணையாகிய குடசமஞ்சரி அவ்வளவு விரிவை யடையும் |
| மிகுந்துயர் இவ்வகங்காரத் தொழில் பிரிந்தும் | = | பெருந் துன்பத்தைத்தரும் இவ்வகங்காரத்தொழில் ஒழிந்தும் (நிரகங்கார விருத்தியைப்பெற்றும்) |
| பேதைமையின் | = | மூர்க்கத்தன்மையால் |

மிகவும் நொந்தேன் = சோகத்தாலாய பெருந்துயரமே பெற்றேன்
செகந்தனில் ஆபத்திட மாய் = இவ்வுலகத்தின்கண்ணே சர்வ ஆபத்துக்கட்கும் நிலையமாய்
திரம் துறப்பதாய் = ஸ்திரமற்றதாய்
உள்ளாய்த் தியக்கமாயும் = அந்தர்க்கதமாய் துன்பமாயும்
உகந்த விசாரமும் உணர்வும் இலாவகங்காரம் = கொள்ளத்தக்க ஆராய்ச்சி விவேகம் முதலிய உத்தம குணங்கள் விடுபட்டதாயுள்ள அகங்காரம்
போமா றுபதேசிப்பாய் = பீஜம் ஒழியுமாறு உபதேசிப்பாய்.

3 5 4
காமமுதல் வினைக்குடைந்து கற்றவர்நற் றொழிலகலுங் கடுங்காற் றுற்ற
7 6 8
மாமயிலின் பீலிபோ னதிதூர நகர்நாய்போல் வாளா சுற்று
10
மாமதுகிஞ் சிலுங்கிடையா தருநிதிபெற் றுலுமகிழ்ந் தமைந்துட் கொள்ளாச்
9 2 1
சேமமுறு கரண்டகநீர் தரியாபோற் றிரியுமனத் தீய தன்றே. (60)

தீயதிரியும் மனம் = (மனதூஷணம்) கெட்டதாய்ச் சுழலும் மனம்
காமம் முதல்வினைக் குடைந்து = இராகாதி தோஷங்களால் மெலிந்து
கடும் காற்று உற்ற மாமயிலின் பீலிபோல = சண்டமாருதத்திலகப்பட்ட அழகிய மயில் தோகை போல
கற்றவர் நல்தொழில் அகலும் = ஆசிரியர் சேவை சற்காரியமான சிரவணுதிகளி னின்றும் நீங்கும்
நகர்நாய்போல் வாளா அதிதூரஞ் சுற்றும் = நகரின்கண்ணே நாய் ஓடி அலைவதேபோல அங்கும் இங்கும் ஓடி அலையும்
ஆம் அது கிஞ்சிலும் கிடையாது = சஞ்சலமாம் அந்த மனது ஒரு சிறிதும் பெருமல்
சேமமுறு கரண்டகம் நீர் தரியாபோல் = தேவாராதனைக்கு நன்மையாகப்பொருந்தியகுடலை ஜலத்தைச்சேமித்து வைத்துக்கொள்ளாததுபோலப்
அருநிதி பெற்றுலும் மகிழ்ந்து அமைந்து உள்கொள்ளா = பெருந்தனங்களை அடைந்தபோதினும் போதும் என்று சந்தோஷித்து உள்ளே பூரணத்தன்மையை அடையமாட்டாது.

காதலெனு மனைவியின்பின் செல்கின்ற மனமென்னுங் கடிய ஞாளி
பேதைமைமே வியவென்னைப் பிணந்தின்னு மாறுபோற் பிடுங்கித் தின்னு
மோதுபெருங் காற்றினான் முறிந்தெழுந்த துரும்புபோன் மோக மெய்த
வாதைமனம் பெரும்பாழின் மிகவீழவதிதூர மலங்கத் தள்ளும். (61)

| | |
|---|---|
| காதலெனும் மனைவியின் பின் செல்கின்ற மனமென்னும் கடியஞாளி = | திருஷ்ணையென்னும் பாரியைப் பின்பற்றிச் செல்லுகின்ற குரூர ஆண்நாய் ஆசையாகிய மனைவியைப் பின்பற்றும் |
| பேதைமை மேவிய என்னை = | அறியாமையோடு கூடிய என்னை |
| பிணந்தின்னுமாறுபோல் = | சவத்தைப் பிடுங்கித்திண்பதே போல |
| பிடுங்கித் தின்னும் = | துண்டுபடுத்தி உண்ணும் |
| மோது பெருங் காற்றினால் = | வீசியடிக்கும் சண்டமாருதத்தால் |
| முறிந்தெழுந்த துரும்பு போல் = | துண்டித்துக்கிளம்பிய திரணத்துக்கொப்பாய் |
| மோகம் எய்த வாதை மனம் = | (விஷயாதிகளில் மொத்துண்டு) மயங்கி உழலும் ஜடவடிவமாய சித்தம் |
| பெரும்பாழில் மிகவீழ = | கிருமி கீடாதிகளில் மிக வீழ |
| அதிதூரம்மலங்கத்தள்ளும் = | சொர்க்க நரகாதிகளில் கலங்கும்படி தள்ளும். |

வேரறுபொய் யாய்ச்செறிந்த வடிவாகி விசாரத்தால் விரோத மாகுங்
கோரமனம் பேய்பிடித்த சிறுவரைப்போற் பலதொழிலில் கூட்டா நிற்கும்
பாரகன்று பாதலம்போம் பாதலத்தி னின்றகன்று பாரின் மீளுஞ் (62)
சோரமனங் கிணற்றுமரம் பழங்கயிற்று லெடுப்பதுபோற் றொழிலிற் றள்ளும்.

| | |
|---|---|
| வேர் அறு பொய்யாய்ச் செறிந்த வடிவாகி = | எதார்த்தமூலமின்றியதாய் மித்தையேயாய் நெருங்கிய வடிவாகி |
| விசாரத்தால் விரோதமாகும் கோர மனம் = | ஆராய்ச்சியால் ஒழிதலாகும் கோரவடிவ துஷ்ட சித்தமானது |
| பேய்பிடித்த சிறுவரைப்போல் = | பிசாசுபிடித்த பாலகரைப்போல் |
| பலதொழிலில் கூட்டா நிற்கும் = | பற்பல விவகாரங்களில் சேர்க்கா நிற்கும் |
| பார் அகன்று பாதலம்போம் = | பூமியை விட்டுப் பாதாள உலகம் செல்லும் |
| பாதலத்தினின்று அகன்று = | பாதாளத்தை விட்டு நீங்கி |
| பாரில் மீளும் = | பிருதுவியில் வந்து சேரும் |

சோரமனம் கிணற்று மரம்
பழங்கயிற்ருல்
எடுப்பதுபோல் = கள்ள வஞ்சமனம் கிணற்றில் ஊறிய மரம் இற்றுப் போன இரச்சுவால் எடுப்பதுபோல
தொழிலில் தள்ளும் = ஊர்த்துவ அதோகதிகளில் வீழ்த்தும்.

1 2 3 4
கடுமனவன் பேய்கனலிற் கொடிதாகு மலைகளினுங் கடத்தற் கொண்ணு
நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி மேருவினை நேரே பேர்த்துச்
சுடுகனலை விழுங்குகினு நிறுத்தரிது புலன்முழுதுந் தோன்று மூலங்
கெடுமுலகீ துண்டெனிலுண் டிலதாகி லிலதிதனைக் கெடுத்தல் வேண்டும். (63)

கடும் மனம் வன் (மனம்) = அடக்கற்கரிய நிஷ்டூர மனம் வலிமை மிக்க மனம்
பேய் (மனம்) = பூதவடிவ மனம்
கனலிற் கொடிதாகும் = அக்கினியினும் மிகப் பொல்லாதாம்
மலைகளினும் கடத்தற்கு ஒண்ணு = மலைகளைத் தாண்டினும் இதனைத் தாண்டக்கூடாதாம்
நெடுவயிரத்தினும் வலிது = நீண்ட வஜ்ஜிரத்தினும் திடமுடையதாம்
கடல்பருகி மேருவினை நேரே பேர்த்து = சமுத்திரத்தைப் பானஞ் செய்து மேருவினை வேரோடும் பிடுங்கி
சுடுகனலை விழுங்குகினும் = தகிக்கின்ற அக்கினியை விழுங்கினுலும்
நிறுத்தரிது = நிக்கிரகஞ் செய்தல் கூடாதாம்
புலன்முழுதும் தோன்று மூலம் = எல்லாப் பொருள்களும் பிரதீதியாவதற்குக் காரணமாம்
கெடும் உலகு ஈது உண்டெனில் உண்டு = நைசுவரமான இந்தஜகத்திரயமும் இம்மனமானது இருந்தால் இருக்கும்
இலதாகில் இலது = லயமானல் க்ஷீணமாம்
இதனைக் கெடுத்தல் வேண்டும் = இத்தகைய மனத்தைப் பிரயத்தனத்தால் சிக்ஷித்து அடக்கவேண்டும்.

வரையிலெழு வனம்போல மகிழ்ச்சியிட ரிவையனைத்தும் மனத்திற் ருேன்றும்
புரையில்விவே கத்தின்மநம் பொன்றிலவை பொன்றுமெனப் புந்தி செய்தேன்
கரைதலறு மோகமெனுங் காரிருளிற் ருெழிற்கடங்காக் காத லல்லா
லுரைதருகா மாதிகளா முலூகநிரை யுணர்வெனும்வின் ணுலாவு மன்றே. (64)

வரையிலெழு வனம்போல = மலையின்கண்ணே நிரூடமாய்ப் பெருங்காடுகள் உண்டாவதேபோல
மகிழ்ச்சியிடரிவையனைத்தும் மனத்தில் தோன்றும் = சுகதுக்கங்களென்னும் இந்தச் சங்கடங்கள் மனத்தின்கண்ணே திரமாய் உண்டாகின்றன

புரையில் விவேகத்தின் குற்றமற்ற விசாரத்தினலே அம் மனம் லயமடையு
மனம் பொன்றில் அவை மாயின் கூறிய இடர் யாவும் அடியோடுந்
பொன்றுமெனப் புத்தி தொலைந்துவிடுமென்று எண்ணுகின்றேன் (ஆசை
செய்தேன் = தூஷணம்)
கரை தலறு மோகமெனுங் ஞானத்தாலன்றி நாசமாகாத அஞ்ஞான கரிய
காரிருளில் = இருளோடு கூடிய
தொழிற்கு அடங்கா காதல் விவகாரஞ்செய்து முடியாமல் அலுத்துப்போகும்படி
அல்லால் = செய்விக்கும் ஆசையாகிய இருளில்
உரைதரு காமாதிகளாம் மேலே சொல்லப்பட்ட காமமே முதலான கோட்
உலூகநிரை = டான் கூட்டங்கள்
உணர்வு எனும் விண்
உலாவும் = சிதாகாசத்தின் கண்ணே உலாவும்.

ஆதரித்த நற்குணங்க ளாகுவினுற் றந்திரிபோ லாசை யாலே
சேதமுறுஞ் சொருபநிலைசெறிதரவல் லமையில்லாச் சிந்தை யேங்கண்
மீதுவலை யுறுபுட்போன் மெலிபவரு மாசைத்தீ வெதுப்ப நொந்தேன்
கோதிலமு திற்குளித்துங் குளிராதென் றென்மனத்திற் குறிக்கின் றேனுல்.(65)

ஆதரித்த நற்குணங்கள் = நேயத்தோடு சம்பாதித்த மைத்திரியாதி நல்ல குணங்களெல்லாம்
ஆகுவினுல் தந்திரிபோல் = மூஷிகத்தால் நாதசாதகங் கெடுக்கப்படுவதேபோல
ஆசையாலே = திருஷ்ணையென்னும் ஆசையாலே
சேதம் உறும் = அழிவு எய்தும்
சொருபநிலை செறிதர = தற்சொரூப ஸ்திதியை அடைவதற்கு
வல்லமையில்லாச் சிந்தை
யேங்கள் = சாமர்த்தியமின்றிய மதியையுடைய யாங்கள்
வலைமீது உறும் புட்போல் = ஜாலத்தில் அகப்பட்ட பக்ஷிபோல
மெலியவரும் = நைந்து வாடுகின்றேன்
ஆசைத்தீ வெதுப்ப = ஆசையாகிய அக்கினி சுட்டுக்கொளுத்தத் துய
நொந்தேன் ருற்றேன்
கோது இல் அமுதிற்குளித்
தும் குளிராது என்று குற்றமற்ற அமிர்தசரசில் மூழ்கியும் சாந்தியை
என் மனத்தில் குறிக் அடையமாட்டேன் என்று என் மனத்தில் எண்ணு
கின்றேன் = கின்றேன்.

பின்னுறுபக் கத்திருள்போற் பேராண்மைத் தீரரையும் பீதி செய்யு
நன்னயனங் குருடாக்கு புபசாந்தத் தோர்தமையும் நடுக்கஞ் செய்யுங்
கின்னமுறு காதலெனுங் கிழமடந்தை யொருபொருளுங் கிட்டா தேனு
மின்னிதிய நயந்தெவர்க்கும் பின்றொடரு மநோரதமு மெய்தா தாகும். (66)

பின்னுறுபக்கத்திருள்போல் = அமரபக்ஷத்துற்ற இரவு இருளேபோல
பேராண்மைத் தீரரையும் = புருஷத்தன்மையுடைய தீரரையும்
பீதி செய்யும் = ஆசை பயப்படுத்தாநிற்கும்
நல்நயனங் குருடாக்கும் = நல்ல விழிகளோடுகூடியிருந்த போதினும் (குருடாக்குகின்றது) ஒன்றுந்தெரியவொட்டாமல் செய்கின்றது
உபசாந்தத்தோர்தமையும் நடுக்கஞ்செய்யும் = பரமசாந்தமாயிருக்கும் நல்லோரையும் (நடுக்கும்படி) கம்பிதமாகச்செய்யும்
கின்னமுறு காதலெனும் கிழமடந்தை = துன்பமயமான ஆசையென்னும் விருத்த தாசியானவள்
ஒருபொருளுங் கிட்டா தேனும் = யாதொரு தனமும் கிடைக்காவிடினும்
இன்நிதியம் நயந்து எவர்க்கும் பின்தொடரும் = அவிவேகிக்கு இனிமையாயுள்ள தனத்தை விரும்பி யாரைக்கண்டபோதினும் பின்பற்றி ஓடும்
மனோரதமும் எய்தாதாகும் = போகலாப (மனோபீஷ்டமும்) வாஞ்சிதப்பொருளும் அடையப்படாவாம்.

முதிர்பருவத் தளர்ச்சியான்[1] முடியாத நடனகதி முயல்வா ளாகி
மதிமகிழ்ச்சி யறநடிக்கு மாடுங்கூத்[3] தியைப்போல[2] வருத்து மாசை
யெதிர்கிடைத்தற்[4] கரும்பொருளிற் சென்றெய்து மமைந்தாலு மின்பந் தேடு
கதியறவோ[6] ரிடத்துறையா துலைகின்ற[5] வானரம்போற் காத ருனே. (67)

முதிர்பருவத் தளர்ச்சியால் = கிழ அவஸ்தையின் அங்கத் தளர்ச்சியால்
முடியாத நடனகதி முயல்வாளாகி = ஆற்றலின்றித் தள்ளாடி நடனஞ்செய்யும் பிரயத்தனத்துடன்
மதிமகிழ்ச்சியறநடிக்கும் கூத்தியைப்போல் = புத்தியின்கண் சந்தோஷமின்றி நடனஞ்செய்யும் கூத்தாடுபவள் போல
வருத்தும் ஆசை = துன்பப்படுத்தும் (ஆசை) திருஷ்ணை விஷயலாபப் பொருட்டு
ஆடும் = ஆடும்

| | |
|---|---|
| எதிர்கிடைத்தற்கு அரும் | பிரத்தியக்ஷமாக அடைதற்கு முடியாததாயிருக்கும் |
| பொருளில் சென்றெய்தும் = | வஸ்துவின்கண்ணே போய்ப் பெரிய பிரயத்தனஞ் செய்யும் |
| அமைந்தாலும் = | வாஞ்சித்த பொருள் ஒருவாறு அடையப்படினும் |
| இன்பந்தேடும் = | (திருப்தியடையாமல்) மேலும் மேலும் சுகத்தின் பொருட்டு முயற்சிக்கும் |
| உலைகின்ற வானரம்போல் = | ஓடி அலைகின்ற குரங்குபோல |
| காதல் கதியற ஓரிடத்து உறையாது = | ஆசை சலனமின்றி (செல்லுதலற்று) ஓரிடத்தும் நிலைபெற்றிராது. |

காவின்மதர் வண்டென்னப் பாதலம்விண் டிசையனைத்துங் கணத்து லாவும்
வாவிவளர் மயலொன்றே வருத்தமனைத் தினும்பெரிய வருத்த நல்கு
மேவுமர ணுறைபவர்க்குந் துயர்செய்யு மாசையெனும் விடுசி கைக்குத்
2 1 4 3
தேவர்புகழ் மந்திரமாஞ் சிந்தையற லுலகிடர்போஞ் சிந்தை யற்றால். (68)

| | |
|---|---|
| காவின்மதர் வண்டென்ன = | பூஞ்சோலையிலுள்ள தேனை உண்டு போதையோடு சஞ்சரிக்கும் அறுகால் வண்டைப்போல |
| பாதலம் விண்திசையனைத்தும் கணத்து உலாவும் = | க்ஷணத்தில் பாதாள லோகம் போய் மீளும் க்ஷணத்தில் ஆகாசம்போய் மீளும் க்ஷணத்தில் திசைபோய் மீளும் |
| வாவி வளர்மயல் ஒன்றே = | பரவி வளர்ந்துகொண்டே திரியும் இருதயத்திருக்கும் ஆசையொன்றே |
| வருத்தமனைத்தினும் = | துயரைக் கொடுக்கும் சம்சார தோஷங்களுக்குள்ளும் |
| பெரிய வருத்தம் நல்கும் = | அதி துக்கத்தைத் தருவதாம் |
| மேவும் அரண் உறைபவர்க்கும் துயர் செய்யும் = | காப்புப்பொருந்திய கோட்டையில் இருப்பவருக்கும் அதிசங்கடத்தை உண்டாக்கும் |
| ஆசையெனும் விடுசிகைக்கு = | இத்தகைய திருஷ்ணையென்னும் விஷ வியாதி நிவர்த்திக்கு |
| சிந்தை அறல் = | சித்தம் நாசமாகுதலே |
| தேவர் புகழ் மந்திரமாம் = | இந்திராதி தேவர்களும் கீர்த்திக்கும் மந்திரமாம் |
| உலகு இடர் போம் = | உலத்திலுள்ள எல்லாத் துயருமே உலகருக்கு நீங்கும். |

1 3 2 4 6
பைந்தொடியா ராசைநோய் கெம்பீர மனிதரையும் பதுமந் தன்னை
6 5 7 8 11 9
முந்திரவிக் கதிர்போலு மிளிர்விக்குங் கனவிடியின் முனைகூர் வாளும்
12 18 13
வெந்தவிருப் புப்பொறியு மெனக்கொடிய மனவேட்கை மேரு வொத்தோர்
சுந்தரஞா னியர்தீரர் சூரரை யெல்லா மிமைப்பிற் றுரும்பு செய்யும். (69)

| | | |
|---|---|---|
| பைந்தொடியார் | = | பசிய வளையலணிந்த தருணியும் |
| நோய் ஆசை | = | ரோகபீடை, திருஷ்ணை |
| கெம்பீர மனிதரையும் | = | தீரவீரராய புருடரையும் |
| பதுமந்தன்னை இரவிக் கதிர்போலும் | = | தாமரையைச் சூரியனது கிரணங்கள் விகசிதஞ் செய்வதேபோல |
| முந்துமிளிர்விக்கும் | = | விரைவில் விகசிதஞ் செய்யும் |
| கன இடி முனை கூர்வாளும் | = | பேரிடியும் மிகவுங் கூர்மை வாய்ந்த கட்கமும் |
| வெந்த இருப்புப் பொறியும் | = | தப்த அயக்கணங்களும் |
| கொடிய இல் என | = | அவ்வளவு தீக்ஷயண்யம் அல்லது கொடியது இல்லை யென்று சொல்லும்படியாக |
| மனவேட்கை | = | மனத்தின்கண்ணுள்ள ஆசை |
| மேரு ஒத்தோர் | = | பொன்மலைபோன்றவரையும் |
| சுந்தர ஞாநியர் | = | மிகுந்த அறிவுடையவரையும் (வியாசர் பெண் வடிவந்தரித்து சைமினியைப் பரீக்ஷிக்கப்பட்ட சரிதம்) |
| தீரர் சூரர் | = | தைரியசாலிகளையும், மகாசூரரையும் |
| எல்லாம் | = | மற்ற மநுடர்கள் யாவரையும் |
| இமைப்பில் துரும்புசெய்யும் | = | நிமிஷமாத்திரத்தில் திரணத்துக்கொப்பாய்க் கெடுத்துவிடும். |

1 3
ஈரித்த குடனரம்பாற் செறிந்துபல விகாரியாய் யிரங்க வாடிப்
2 4
பூரித்த வுடல்பிறப்பிற் பொலிந்தாலுந் துன்பத்தின் பொருட்டே யாகும்
பாரித்த சிற்றின்பஞ் சிறுதுன்ப மநுபவிக்கும் பகர்ந்த மெய்போ
னேரிட்ட குணமிலதுந் துயருளது நீசமுமா நிலைவே றுண்டோ. (70)

| | | |
|---|---|---|
| ஈரித்த குடல் | = | (சரீர தூஷணம்) மல மூத்திரங்களால் நனைந்த சிறுகுடல், பெருங்குடல் முதலியவற்றுலும் |
| நரம்பால் செறிந்து | = | கோடானுகோடி நரம்புகளாலும் நிறைக்கப்பெற்று |
| பல விகாரியாய் | = | சட்பாவ விகாரியாய் |
| பூரித்த உடல் | = | பருத்திருக்கும் சரீரம் (ஓர்கால்) |

| | |
|---|---|
| இரங்கவாடி = | வியாதியாதிகளால் பார்த்தவர்கள் இரங்கும்படி யாய் மெலிந்ததாய் |
| பிறப்பிற் பொலிந்தாலும் = | சம்சாரத்தில் நன்கு எனத் தோற்றியபோதினும் |
| துன்பத்தின் பொருட்டே யாகும் பாரித்த சிற்றின்பம் சிறுதுன்பம் அனுபவிக்கும் = | கேவலம் துக்கத்தின் பொருட்டேயாம் கருமஜன் னியமாகச் சம்பாதித்த சிற்றின்பம் சிறுதுன்பமனு பவிக்கும் கூறிய சரீரம் |
| பகர்ந்த மெய்போல் = | அன்னபானுதிகளாலும், சீதோஷ்ணுதிகளாலும், ஆனந்தத்தை அடைகின்றது, துக்கத்தையும் அடைகின்றது |
| நேரிட்ட குணமிலதும் துயருளதும் = | செவ்விதான இன்பமில்லாததும் |
| நீசமுமாம் நிலைவேறுண்டோ = | துயருடையதும் தாழ்வுற்றதும் ஆகிய நிலைமை யுடைய வஸ்து தேகத்தின் அயலாக உளதோ ? |

அற்பமதாஞ் சுகாசுகத்தி லழுந்துமுட னிலையெனினு மழிவென் ருலு
நற்பலமென் னகங்கரனுக் ககமாகிப் பொறிபசுக்க ளுலோ டாறுங்
கற்பனைசெய் மனத்தொழும்பு மாசைமனை வியும்வாயாங் கடையு மாங்கே
பற்பலபல் லென்புகளாந் தோரணமு நாக்குரங்கும் பயின்று தோன்றும். (71)

| | |
|---|---|
| அற்பமதாஞ்சுக அசுகத்தில் அழுந்தும் உடல் = | சிறிது சிறிது வாராநின்ற இன்ப துன்பங்களிலும் சந்தோஷ விஷாதங்களை அடைந்துள்ள இத்தேகம் |
| நிலையெனினும் = | நிலையுடையதாயிருப்பினும் |
| அழிவென்ருலும் = | நிலையற்றதாயிருப்பினும் |
| நல் பலம் என் = | நல்ல பிரயோஜனம் யாது தரும் |
| அகங்கரனுக்கு = | அகங்காரமாகிய இல் வாழ்வோனுக்கு |
| அகமாகி = | இத்தேகம் வீடாகி |
| பொறி பசுக்கள் நாலோடு ஆறும் = | ஞானேந்திரியங்களாகியபசுக்கள் நான்கு, கருமேந் திரியமாகிய எருமைகள் ஐந்து |
| கற்பனைசெய் மனத் தொழும்பும் = | யாதாவதொன்றைச் சிந்தித்துக்கொண்டேயிருக் கும் மனமாகிய வேலைக்காரனும் |
| ஆசை மனைவியும் = | ஆசையாகிற இல்வாழ்க்கைத் துணைவியும் |
| வாயாங்கடையும் = | பயங்கரமான வாயாகிய வாசலும் |
| ஆங்கே பற்பல பல் என் புகளாம் தோரணமும் = | அவ்வாயின்கண்ணே அநேகவிதமான துர்க்கந்த எலும்புகளாலாக்கப்பட்ட தோரணமும் |
| நா குரங்கும் = | ஜிங்குவேந்திரியமாகிய குரங்கும் |
| பயின்று தோன்றும் = | பொருந்தித் தோன்றும் இத் தேக கிரகத்தில் எனக்கு விருப்பமின்று |

1 3 2
நிதியுமர சுஞ்செயலு மிவ்வுடம்பும் வேண்டுவன நிற்கி னன்ரே
4
விதியில்வரு காலனுற் சிலநாளி லிவையெலாம் வீந்து போகு
முதிரமொடு தசையுடைத்தா யுடைவதியல் பாய்த்தாழ்ந்தோ ருயர்ந்தோ ரொத்தே
யதிகசரா மரணமுறுந் தரமறியா திவ்வுடலி லழகென் கொல்லோ. (72)

| | |
|---|---|
| நிதியும் அரசும் செயலும் நிற்கின் அன்ரே = | ஸ்ரீயும் இராஜ்யமும் செய்கை ஸ்திரமாக இருந்தா லல்லவோ |
| இவ்வுடம்பும் வேண்டுவன = | இத் தேகமும் நிலையாய் இருந்தாலல்லவோ விரும் பப்படுவனவாகும் |
| விதியில்வரு காலனுல் சிலநாளில் இவையெல்லாம் வீழ்ந்துபோகும் = | வினையின் இறுதியில் வரும் தருமராஜாவால் சில தினங்களிலேயே நாசமுற்று இருந்த இடந்தெரி யாமல் போய்விடும் |
| உதிரமொடு தசையுடைத் தாய் உடைவதுஇயல்பாய் = | இரத்தத்துடன் பொத்தையூன்மயமாய் நாசமடை வது நிச்சயமாய் |
| தாழ்ந்தோர் உயர்ந்தோர் ஒத்தே = | தரித்திரர்கள் போகிகள் என்னும் இருவர்பாலும் சமமேயாய் |
| அதிகசரா மரணமுறும் தரமறியா இவ்வுடலில் = | விசேட ஏற்றத்தாழ்வு ஒன்றும் அறியாதிருப்பதா யுள்ள இச் சரீரத்தில் |
| அழகு என்கொல்லோ = | யாது ரம்மியத்தன்மை இருக்கின்றது கூறுங்கள். |

மின்னிடத்திற் சரற்கால மேகத்திற் கந்தர்வ வியன்மூ தூரி
னன்னிலைமை யெண்ணுவோ னெவனவனே யுடனிலைமை நாடு கிற்போன்
மன்னுகிலா தசைந்துபல தொழிற்றரங்கஞ் செறிபிறவி வாரி தன்னி
லென்னபிறப் பெய்துகினும் மிளமைமிகு துயரத்துக் கேது வாகும். (73)

| | |
|---|---|
| மின்னிடத்தில் சரற்கால மேகத்தில் = | மின்னல்களிடத்திலும் சரற்போதுற்ற வெள்ளிய மேகங்களிலும் |
| கந்தர்வவியன் மூதூரில் = | அற்புதமான கந்தர்வ நகரங்களிலும் |
| நல்நிலைமை எண்ணுவோன் எவன் அவன் = | நன்காய திரத்தன்மையை நிர்ணயஞ் செய்வனோ அம் மூடனே |
| உடல்நிலைமை நாடுகிற் போன் = | இச்சரீரத்தின்கண்ணே ஸ்திரத்தன்மையை எண்ணு நிற்பன் |
| மன்னுகிலாது அசைந்து = | (பால்ய தூஷணம்) நிலைபெருது சஞ்சலப்பட்டு |
| பலதொழில் தரங்கஞ்செறி பிறவிவாரி தன்னில் = | நானாவிதமான கிரியைகளென்னும் அலைகள் நிரம் பிய சம்சார சாகரத்தில் |

என்னபிறப்பு எய்துகினும் = எவ்வகையான உயர்ந்த ஜன்மத்தை அடைந்த போதினும்

இளமைமிகு துயரத்துக்
கேதுவாகும் = பால்யம் பெருந்துன்பத்திற்கே காரணமாகும்.

1 தொலைவறுமா பத்தெளிமை சொல்லின்மை மடமாசைத் துவட்சி யெய்தி
3 2 4
யுலைவுறுசை சவத்துடனே யுலையியல்பா மனங்கூடி யோத நீரி
னலைமடவார் விழியனலின் கொழுந்தொடுமின் னிவைக்கெலா மலைவு கற்பித்
தலைதலுறு நாய்போல மலமருந்து மற்பத்தான் மகிழும் வாடும். (74)

தொலைவரும் ஆபத்து
எளிமை = ஒழிவில்லாத ஆபத்து அதற்கேதுவான தீனம் +
சொல்லின்மை மடம் = ஊமைத்தன்மை அறியாமை
ஆசைத்துவட்சி எய்தி = திருஷ்ணை, சலனம் முதலியவுற்றை அடைந்து வருந்துறும்
உலைவுறுசைசவத்துடனே
உலை இயல்பாம் மனம் = மிகவுஞ் சஞ்சலத்தன்மைவாய்ந்த சைசவம் குழந்தைப் பருவம் இயல்பாகவே சஞ்சலத்தன்மை வாய்ந்த மனத்துடனே கூடி
ஓதம்நீர் அலைமடவார் விழி = கடல்நீர், மங்கையர் கண்கள்
அனலின் கொழுந்துமின் = தீச்சுவாலை, மின்னல்
இவைக்கெல்லாம் அலைவு
கற்பித்து அலைதலுறும் = இவைகளுக்கெல்லாம் சலனத் தன்மையை உபதேசித்து அலைந்தே திரியும்
நாய்போல் மலம் அருந்தும் = மலமுண்ணும் நாய் பாலன் சுவானம் மலத்தைப் புசிப்பதுபோல மலத்தைப் புசிப்பவை
அற்பத்தால் மகிழும் வாடும் = அற்ப உபகாரத்தால் சந்தோஷிப்பன், அற்ப அபகாரத்தால் கிலேசமடைவன், துன்புறுவன்.

மண்ணுகரும் விண்மதியை வரவழைக்கு மிம்மடமை மகிழ்ச்சி யாமோ
நண்ணுதரு தாய்தந்தை யுற்றோர்முத் தோரெவர்க்கு நடுக்கங் கூடும்
புண்ணுறுசை சவம்பயத்துக் கிடமாகுங் குற்றமெலாம் பொதிந்த கூடா
மெண்ணுமவி வேகவிடன் வாழ்மனையாம் யார்க்குமிதி லின்ப மெய்தா. (75)

மண்நுகரும் விண்மதியை
வரவழைக்கும் = மண்ணைப் புசிப்பன், ஆகாயத்தில் தோன்றிய சந்திரனைப் பிடித்துக்கொடுக்கச் சொல்லுவன்
இம் மடமை மகிழ்ச்சியாமோ = அறியாமையாகிய சைசவம் சுகத்தின் பொருட்டு எங்ஙனம் ஆம் ஆகா

நண்ணுகுரு தாய்தந்தை — படிப்புச் சொல்லித்தர வரும் உபாத்தியாயர்
உற்றோர் மூத்தோர் — இதத்தை விரும்பும் மாதா பிதா பந்துஜனங்கள்
எவர்க்கும் = மூத்த சகோதரன் ஆகிய இவர்களைக் கண்டால்
நடுக்கங்கூரும் = மிகப் பயந்து நடுங்குவதும்
புண்ணுறுசைசவம் = புன்போன்று துக்க ஏதுவாகப் பொருந்திய பால்யம்
பயத்துக்கு இடமாகும் = சர்வ பீதிக்கெல்லாம் ஸ்தானமுமாகும் இடமாம்
குற்றமெலாம் பொதிந்த கூடாம் = சர்வ தோஷங்களும் நிரம்பிய நீடமாம்
எண்ணும் அவிவேகவிடன் = முடித்தற்கரிய காரியத்தை முடிக்கவேண்டுமென்று கருதும் அவிவேக மூடன்
வாழ்மனையாம் = இன்புற்று வாழும் பவனமாம்
இயார்க்கும் இதில் — எத்தகைய பிராணிக்கும் இந்தப் பால்யத்தில்
இன்பம் எய்தா = சந்தோஷம் உண்டாகமாட்டாது.

இப்பருவத் தனர்த்தமகன் றிடரில்வீ ழெவ்வனத்தி லேறி நெஞ்சா
மொப்பரிய பொந்திலுறை காமனெனும் பேயறைய வுள்ளம் வாடுஞ்
செப்பரிய விரிவுடைத்தாய்த் தெளிந்து பரிசுத்தமாய்ச் சிறந்த தேனு
மைப்புயனு ணதிநீர்போன் மதிகலங்கு மெவ்வனத்தின் மயங்கு நாளில்.(76)

இப்பருவத்து அனர்த்தம் — (எவ்வன தூஷணம்) இந்தப் பால்ய பருவத்து
அகன்று இடரில்வீழ் = அனர்த்தங்கள் ஒழிந்து காமாதி துன்பத்தில் வீழ்வதற்காக
எவ்வனத்தில் ஏறி — காளைப்பருவத்தில் ஆரோகணித்து
ஒப்பு அரிய நெஞ்சாம் = உவமையின்றிய
பொந்தில் உறை = தன்மனப் பொந்தினுள்ளே யிருந்து
காமன் என்னும் பேய் அறைய = மன்மதன் என்னும் பிசாசானது வலுத்த அடி கொடுக்க
உள்ளம் வாடும் = மனம் பரவசமாய்த் துயருறும்
செப்பரிய விரிவுடைத்தாய் = சொல்லுதற்கரிய புத்தி சாஸ்திரப் பிரஞ்ஞையோடு கூடியதாய்
தெளிந்து பரிசுத்தமாய் = குருசேவையில் பிரசன்னமாய்ப் புண்ணியகதியால் பாவனமாய்
சிறந்ததேனும் = விசேடித்திருந்தபோதினும்
மைப்புயல்நாள் = கரியமேகம் நிறைந்த மழைக்காலத்தில்
நதிநீர்போல் = ஆற்றில் வரும் ஜலம் கலங்கிவருவது போல

ஏவ்வனத்தில் மயங்கும்
நாளில் = எவ்வனத்தோடுகூடி மயலுற்றிருக்குங்காலத்தில்
மதிகலங்கும் = புத்தி கலக்கத்தையடையும்.

கருத்தெனுமான் மருண்டோடி விடயமெனுங் குழியில்விழக் காய மென்னு
மருத்தலத்தி லெவ்வனமாங் கடுங்கான லெழுந்துமிக வளரா நிற்கும்
2 1 3
பெருத்ததுய ரிளமைநல மெவ்வளவுண் டவ்வளவும் பெருகா நிற்கும்
5 4 6
அருத்திகளு மெவ்வனமவ் வளவும் விரைந்தெழுந்து மிகவனர்த்தஞ் செய்யும். (77)

கருத்தென்னும் மான்
மருண்டு ஓடி விடயமெனுங் குழியில் விழ = மனமாகிய மானனது மயங்கி ஓடிச் சப்தாதி விஷயங்களென்னும் படுகுழியில் விழும்படியாக
காயமென்னும் மருத்தலத்தில் = சரீரமாகிய மருப்பூமியில்
எவ்வனமாம் கடுங்கானல் எழுந்துமிக வளரா நிற்கும் = தாருண்யம் யென்னும் பேய்த் தேர் உதித்து மிக விருத்தியாம்
இளமை நலம் எவ்வளவு உண்டு அவ்வளவும் பெருத்த துயர் பெருகா நிற்கும் = எவ்வனமானது எவ்வளவு காலம் உளதோ அவ்வளவு காலபரியந்தம் பெருந்துன்பம் மிக விருத்தியாம்
எவ்வனம் அவ்வளவு = எவ்வனமானதிருக்கும் பரியந்தம் அவ்வளவு
அருத்திகளும் = காமாதிகளும்
விரைந்தெழுந்து = வேகமாகத்தோன்றி
மிக அனர்த்தஞ் செய்யும் = நாசத்தையே செய்யாநிற்கும்.

1 3 2 4
எத்திறத்தோ ரெவ்வனமா மிடையூற்றைக் கடந்தெளிதி னேற வல்லோ
ரத்திறத்தோ ரேபுருடரவர்களே தொழற் குரியோ ரவரே சான்றோர்
மெய்த்திறத்தோர் சேரிடமாய் வினயநிதி படைத்தருளால் விளங்கா நிற்குஞ்
சுத்தகுண வெவ்வனமிவ் வுலகினுளதோ விசும்பிற் சூழ் காடுண்டோ. (78)

எத்திறத்தோர் = எங்ஙனம் தோஷ ஆஸ்பதமாகலின் எத்தன்மையர்
எவ்வனமாம் இடையூற்றை = தாருண்யராய்க் கொல்லாமை பொய்யாமை கள்ளாமை பிறர்மனை நயவாமை முதலியவற்றை விடாமல் சுகமாக எவ்வன சங்கடத்தினின்றும்
எளிதில் கடந்துஏற = எளிதில் அல்லது சுலபமாகக் கடந்து
வல்லோர் அத்திறத்தோரே புருடர் = ஏற ஆற்றலுற்றவராவரோ அத்தன்மையரே நர உத்தமர்

| | |
|---|---|
| அவர்களேதொழற்குரியோர் | அப் பெரியோர்களே போற்றி வாழ்த்தற்குரியவர். |
| அவரே சான்றோர் = | அப் புருடோத்தமரே இவ்வுலகில் மகாத்மாக்களெனப்படுவர் |
| மெய்த்திறத்தோர் சேர் இடமாய் = | ஆரிய ஜனங்கள் அதாவது ஒழுக்கமுடைய சாதுக்கள் அடைவதற்கு ஆஸ்பதமாய் |
| விநயநிதிபடைத்து = | வணக்கமுதலிய தெய்வசம்பத்தையடைந்து |
| அருளால் விளங்கா = | கருணையானே கவின்வாய்ந்திலங்கும் |
| நிற்கும் சுத்தகுணம் = | கல்யாணகுணங்களோடுகூடிய |
| எவ்வனம் இவ்வுலகில் உளதோ = | எவ்வனம் இவ்வுலகின்கண்ணே எளிதாயுளதாமோ |
| விசும்பில் சூழ்காடுண்டோ = | ஆகாயத்தில் தருநிறைந்த காடு உளதோ? |

## அவதாரிகை

எவ்வனனுக்கு ஸ்திரீவாயிலாகப் பெரும்பான்மையும் அனர்த்தம் வந்து சேர்தலின் அனர்த்தகாரணமான ஸ்திரீயை நிந்திக்கின்ருர்:

**சந்துறு நரம்போ டென்பு தசைசெறி பாவை யொப்பா**
**ரெந்திறத் தியங்கு மங்க பஞ்சரத் தினிமை என்னே**
**கந்தமென் குழலார் கண்ணிற் ரேறசை கண்ணீர் புண்ணீர்**
**சிந்தையிற் பிரித்து நோக்கிற் சீரிதேன் மோகஞ் செய்வாம். (79)**

| | |
|---|---|
| சந்துறு நரம்போடு என்பு தசைசெறிபாவை யொப்பார் = | (ஸ்திரீ தூஷனம்) கணுக்களோடு பொருந்திய சநாயு, அஸ்தி மாமிசம் நிறைந்த பதுமைக்குச் சமானமானவராய மடவார் |
| எந்திரத்தியங்கும் அங்க பஞ்சரத்து இனிமை என்னே = | எந்திரம்போல, லோலமாயிலங்கும் சரீரபஞ்சரத்தில் சோபனம் யாதுளது |
| கந்தமென்குழலார் கண்ணில் = | மணங்கமழா நின்ற மெல்லிய கூந்தலார் தம் நேத்திரத்தில் |
| தோல், தசை, கண்ணீர், புண்ணீர் = | தொக்கு, மாமிசம், கண்ணீர் இரத்தம் என |
| சிந்தையில் பிரித்து நோக்கில் = | மனதில் பகுத்துப்பார்க்கில் |
| சீரி தேல்மோகஞ் செய்வாம் = | இரம்மியமாகத் தோற்றுமாயின் மோகம் அடைவாய். |

மேருவின் குவட்டின் வீழும் விரிதிரைக் கங்கை நீர்போ
லாரமுற் றிலங்குகின்ற வணியிழை மடவார் கொங்கை
2
யூரயன் மயானந் தன்னி லுற்றபோ துருண்டைச் சோற்றி
1 3
னேருறு கவளம்போல நிரைநிரை நாய்க டுய்க்கும். (80)

மேருவின் குவட்டில் வீழும் = மேருகிரி முகட்டின்கீழ் வீழாநிற்கும்
விரிதிரைக் கங்கை நீர்போல் = விஸ்தாரமான தரங்கங்களோடுகூடிய பாகீரதி ஜலம்போல
ஆரமுற்று இலங்குகின்ற அணியிழை மடவார் கொங்கை = முத்துமாலை பொருந்தி விளங்காநின்ற ஆபரணங்களைத் தரித்திருக்கும் மங்கையர் கொங்கைகள்
ஊர் அயல் மயானந் தன்னில் உற்றபோது = கிராமத்தின் வெளியேயிருக்கும் மயானங்களில் பிணத்தைக்கொண்டுபோய்ப் போட்டபோது
நேருறு உருண்டைச் சோற்றின் கவளம்போல = அழகுபொருந்திய அன்னத்தாலாய உருண்டையாகத் திரட்டப்பட்ட பிண்டம்போல
நிரைநிரை நாய்கள் துய்க்கும் = வரிசை வரிசையாக நாய் நரிகள் பிடுங்கித் தின்னும்.

மேவுதற் கரிதாய்க் கேசம் புகையதாய் விழிக்கு நன்காய்த்
தீவினைச் சிகைசேர் மாத ரெனுங்கனற் றிரணம் போல
யாவரைச் சுடாது தூரத் தெரிகின்ற நரகத் தீக்குப்
2 1 3
பாவையர் குளிர்ந்த மேனி பசையிலா விறக தாமே. (81)

மேவுதற்கரிதாய் = தீண்டத்தகாதவராய்
கேசம் புகையதாய் = கூந்தலாகிய மையைத் தரித்தவராய்
விழிக்கு நன்காய் = கண்ணிற்குமாத்திரம் அழகாயிருப்பவராய்
தீவினைச் சிகைசேர் = பாவவடிவ சுவாலை சேர்ந்தொளிராநின்ற
மாதர் எனுங் கனல் = மங்கையரென்னும் அக்கினி
யாவரைச் சுடாது = எவரைத்தான் தகிக்கமாட்டாது
தூரத் தெரிகின்ற = அதி தூரத்தில் சுவாலைவிட்டு எரியும்
நரகத்தீக்கு = நரக அக்கினிகளுக்கு
குளிர்ந்த பாவையர் = பார்வைக்கு இரசத்தோடு பொருந்திய
மேனி = ஸ்திரீகளின் சரீரம்
பசையிலா விறகதாம் = காய்ந்த கட்டையாம்.

மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பி டிக்கக்
காமனும் வேடன் வீசும் வலையொப்பார் கருங்கண் மாதர்
தீமனச் சேறார் சன்மச் சிறுகுழி மீனா மாந்தர்க்
கேமவா தனைக்க யிற்றுத் தூண்டிலுக் கிரையு மொப்பார். (82)

| | |
|---|---|
| மாமடஞ் செறிந்தநெஞ்சில் மனிதராம் புள்பிடிக்க = | மிகுந்த அறியாமையுற்ற மனத்தோடு கூடிய மனிதராம் பக்ஷிகளைப் பிடித்தற்கு |
| காமனும் வேடன்வீசும் வலையொப்பார் = | மன்மதன் யென்னும் கிராதனால் வீசாநின்ற ஜாலம்போல |
| கருங்கண் மாதர் = | நீலோற்பலம்போலும் விழிகளையுடைய மடவார் |
| தீமனச்சேறு ஆர்சன்மச் சிறுகுழி மீனாமாந்தர்க்கு = | கொடிய மனச்சேறு நிறைந்த ஜன்மமாகிய அற்பப் பள்ளத்தில் உள்ள மச்சங்களாகிய புருடர்களைப் பிடித்தற்கு |
| ஏமவாதனைக் கயிற்றுத் தூண்டிலுக்கு இறையும் ஒப்பார் = | துர்வாசனைத் தூண்டில் கயிற்றிற்கு மாவு முதலிய வைகள் போன்று ஸ்திரீகளேயாவர். |

## அவதாரிகை

இங்ஙனம் ஸ்திரீகளின் தோஷங்களைக்கூறி அவற்றை அறிந்துகொள்வதால் வரும் பயனை அறிவிக்கின்றார்:

முதுதுயர் விலங்கு மாகி முடிவில் காமாதி யென்னும்
புதுமணி வைத்த செப்பாம் பூவைய ரின்பம் வேண்டே
னிதுதசை யிதுநெய்த் தோரென் பிதுநரம் பிதுவென் றெண்ணில்
விதுமுக மாதர்வேட்கை விரோத மாஞ் சிறிது நாளில். (83)

| | |
|---|---|
| முதுதுயர் விலங்குமாகி = | பேரிடரைப் பயக்கத்தக்க சங்கிலித்தடையுமாய் |
| முடிவில் காமாதியென்னும் = | அளவுபடுத்தவொண்ணாத இராகாதி தோஷங்களென்று சொல்லப்பட்ட |
| புதுமணிவைத்த செப்பாம் பூவையர் இன்பம் = வேண்டேன் | நவரத்தினங்கள் வைக்கப்பட்ட சம்புடமாம் மங்கையர் சம்பந்தத்தால் வரும் சுகத்தை விரும்பேன் |
| இது தசை இது நெய்த்தோர் = | இது மாமிசம்; இது இரத்தம் |
| என்பு இது நரம்பு இது யென்று எண்ணில் = | இது அஸ்தி; இது சநாயு என பகுத்து ஆராய்ந்து கொண்டேயிருந்தால் |
| விதுமுக மாதர் வேட்கை = | சந்திரன்போன்ற வதனம் வாய்ந்த மடவார்களிடத்து வைத்த ஆசை |
| சிறிதுநாளில் விரோதமாம் = | சிலதினங்களிற்றானே பகையாகி அருவருப்பாம். |

2 ௭ 1 3 5 4
பாரியை யுடையோன் யாவ னவனுக்கே பற்றும் போக
6
நாரியை யில்லா தார்க்குப் போகத்தி னலமெங் குண்டாங்
காரிகை தன்னை நீங்கிற் கருத்துறு சகத்து நீங்கும்
பேரியல் ஜகத்து நீங்கிற் பிரிவில் பேரின்ப முண்டாம். (84)

யாவன்பாரியையுடையோன் = எவன் மனைவியின்பால் விருப்புடையவனோ
அவனுக்கே போகம் பற்றும் = அச் சம்சாரிக்கே இன்பத்தின்கண் இச்சையாம்
நாரியை யில்லாதார்க்கு = பெண் ஆசை விட்டிருப்பவருக்கு
போகத்தின் நலம் எங்கு உண்டாம் = போக சுகம் எங்ஙனம் கிடைக்கும்?
காரிகைதன்னை நீங்கில் = ஸ்திரீ ஆசையை விட்டமாத்திரத்தானே
கருத்துறு சகத்து நீங்கும் = மனத்தின்கண் பொருந்தாநின்ற உலகப்பற்று (சத்திய புத்தி) அகன்றுபோம்
பேர் இயல் சகத்து நீங்கில் = நாமரூபமயமாய உலக சத்தியத்வாதி அகன்ற கணத்திலேயே
பிரிவுயில் பேரின்பம் உண்டாம் = பேதவர்ஜித பேரானந்தம் (ஆவிர்ப்பவிக்கும்) தோன்றும்.

வந்துறு போதி னன்றாய் வரியளிச் சிறகு போலச்
சந்ததஞ் சலித்துத் தள்ளற் கரியதாம் போகந் தன்னை
முந்துநோய் மரணமூப்பு முதலவாந் துயர்கட் கஞ்சிச்
2 1 3
சிந்தையில் விரும்பே னெங்ஙன் சேர்வரும் பதத்தைச் சேர்வேன். (85)

வந்துறுபோதில் நன்றாய் வரியளிச் சிறகுபோல = எட்டிப்பழம் போன்று பார்வைக்கு ஆபாதரமணீயமாய் பார்வைக்குமாத்திரமழகு பொருந்திய பொறிவண்டின் இறகுபோல
சந்ததம் சலித்துத் தள்ளற் கரியதாம் போகந்தன்னை = எப்போதும் அதி சஞ்சலத்தையுடையவாய் சுலபமாய்த் தாண்டற்கு முடியாததாயுள்ள மகளிர் அநுபோகத்தினை
முந்துநோய் மரணம் மூப்பு = விரைந்து வராநின்ற வியாதி இறப்பு சரை இவை முதலிய துன்பங்களுக்கும்
முதலவாம்துயர்கட்குஅஞ்சி = பயந்து
சிந்தையில் விரும்பேன் = மனத்தின்கண் இரமிக்க விருப்பமுறேன்
சேர்வரும் பதத்தை எங்ஙன் = அடைதற்கரிய ஆனந்தவீட்டைத்
சேர்வேன் = தங்கள் ஆசீர்வாதத்தால் எவ்வாறு முயன்றேனும் அடைவேன்.

ஈறுறு சைச வத்தை யெவ்வனம் விழுங்கு மித்தை
3 2 1 4
மாறுறு சரை விழுங்கு மயக்கநோய் வருத்த மிக்க
பேறுறு சரைகைக் கொண்டாற் பேரறி வகன்றிட் டோடும்
வேறுறு மணங்கான் முன்னை மெல்லிய லகலு மாபோல். (86)

| | |
|---|---|
| ஈறுறு சைசவத்தை எவ்வனம் விழுங்கும் = | (விருத்த தூஷணம்) முடிவுருத பால்யத்தை எவ்வனம் விழுங்கும் |
| இத்தை = | இந்த எவ்வனத்தை |
| மாறுறு சரை விழுங்கும் = | முரணுடைய வார்த்திக அவஸ்தை பானஞ் செய்து விடும் |
| வருத்தம் நோய் மயக்கம் = | துன்புறுத்தும் வியாதிகளும் அவற்றிற்குக் காரணமாகிய ஆகாராதிகளில் அகந்தை மமதைகளும் |
| மிக்க பேறுறுசரை கைக்கொண்டால் = | மிக்க வளர்தலையே பிரயோஜனமாகவுடைய கிழப் பருவம் வந்துவிட்டதேயாயின் |
| பேரறிவு அகன்றிட்டோடும் = | பெரும் பிரஞ்ஞையானது அவரை விட்டு ஓடியே விடும் |
| முன்னை மெல்லியல் வேறுறு அணங்கு அகலுமாபோல் = | அயலாக வந்த சக்களத்தியால் = இரண்டாவது வந்த மனைவியால் முதல் மனைவி பிரிவதே போலவாம். |

1 3
புரையுட னெகிழ்வு சோர்வு பொருந்திய லோபந் துன்பங்
கரையுறு கருமந்தன்னில் வலி யின்மை கடுநோய் தோற்றம்
வரைபொருள் செயமாட் டாமை மைந்தரே முதலோர் நிந்தை
2 4
சரைநரை வருகாலத்துத் தருந் துயர் விவித மாகும். (87)

| | |
|---|---|
| புரையுடன் சரை நரை வருகாலத்து = | அனேக குற்றங்களுடன் கூடிய தோல் சுருங்கி வெண்மயிர் பொருந்தி வருங்காலத்து |
| பொருந்தியலோபந்துன்பம் நெகிழவுர சோர்வு பொருந்திய = | தளர்ச்சியும் அயர்ச்சியும் கண்டவற்றிலெல்லாம் ஆசையும் லோபமும் அநேக துயரங்களும் பொருந்திய |
| கரையுறு கருமந்தன்னில் = | எல்லை = விதி = வரம்பு தொழில் செய்வதன்கண்ணும் |
| வலியின்மை = | சாமர்த்தியமில்லாமையும் |
| கடுநோய் தோற்றம் = | குன்மம் குஷ்டம் முதலிய வியாதிகள் எழுச்சியும் |
| வரை பொருள் செய மாட்டாமை = | குறித்த காரியத்தைச் செய்யமுடியாமையும் விரும்பிய பொருளை உண்ணமுடியாமையும் |
| மைந்தரே முதலோர்நிந்தை தருந்துயர் விவிதமாகும் = | புத்திரன் முதலியவருங்கூடச் செய்நன்றி மறந்து நிந்தை செய்தலும் விளையா நின்ற துன்பங்கள் அனேகமாகும். |

1
விருத்தராய் நடுக்கு வோரை மித்திரர் மைந்த ருற்ருர்
3 2
கருத்துறு மாதர் தாசர் நகை செய்வர் காணெ ணுதாய்
4 6
வருத்தமுஞ் சரையு முற்று வலிகுண மிழந்த மூப்பை
5
யருத்திவந் தடையுங் கட்டை மரங்கழுக டையு மாபோல். (88)

விருத்தராய் நடுக்குவோரை = வயோதிகப் பருவமடைந்து நடுங்கிய தேகமுடைய வரை

மித்திரர் மைந்தர் உற்ருர் = நேயர்களும், பாலர்களும், உறவினர்களும் அல்லது ஞாதியர்களும்

கருத்துறு மாதர் தாசர் = மனதுக்கு இசைந்து நடந்த மங்கையர்களும், அடிமைகளும்

காணெணுதாய் நகை செய்வர் = காண்பதற்கு அருவருப்பாய்ப் பரிகாசஞ் செய்வார்கள்

வருத்தமுஞ் சரையு முற்று வலிகுணம் கட்டைமரங் கழுகு அடைவதேபோல = பட்டுக்கட்டையாயிருக்கும் மரத்தில் கழுகு நிறைய அடைவதேபோல

இழந்த மூப்பை அருத்திவந்தடையும் = இழந்த மூப்பை=கவலையும், சரையும் அடைவுற்றதாய் குணபராக்கிரமங்கள் குன்றிய கிழவனை பெரும் ஆசை வந்து அடையும்.

குற்றமு மிளைப்பு மேவிக் குறிதன்றி யுளத்தைச் சுட்டு
துற்றவா பத்துக் கெல்லாந் தோழியா மாசை துன்னு
2 1 3 7
முற்றதோர் பரலோகத்துக் குறுதியே தென்று மூப்பிற்
5 4 6 8
பற்றுறு பரிகாரந்தீர் பயமிகப் படரு மன்றே. (89)

குற்றமும் இளைப்பும் மேவி = தீனத்தன்மையாகிய பயமும் மெலிவும் பொருந்திய

குறிதன்றி யுளத்தைச் சுட்டு = மிகவும் இருதயத்தின் எப்போதும் தாபத்தை யாற்றுவதாய்

துற்றவாபத்துக்கெல்லாம் = நிறைந்த ஆபத்துக்கட்கும்

தோழியாம் ஆசைதுன்னும் = முக்கிய சகியாகிய ஆசை வயோதிகத்தில் விருத்தியாம்

பரலோகத்துக்கு உற்றதோர் உறுதி ஏது என்று = அடுத்த க்ஷணத்தில் பிராணன் நீங்கினுல் வராநின்ற பரலோக அடைவிற்கு ஏதுவாகப் பொருந்திய புணணியம் யாது, யான் எக் கருமஞ் செய்திருக்கின்றேன் என்றும் பாவஞ் செய்திருப்போமாயின்

பரிகாரம் பற்றுறுதீர் = பிராயச்சித்தஞ் செய்து பொருந்திய தோஷத்தை நிவர்த்தி செய்ய முடியவில்லையே யென்றும்

வயோதிகத்தில் பயம் மிகப் படரும் = கிழப்பருவத்தில் பெரும் பயம் விருத்தியாம்.

2 4 1
ஆதரச் செருக்கு மல்கு மருந்துதற் கரிது மூப்பிற்
3 5
காதல்செய் வலியிலாமை கருத் தெலாம் வெந்து சோரும்
7 6 8
போதுறு நீருர் முற்றற் பூசினைப் பெருங்காய் போல
மேதகு காலன் மாந்தர் வெண்ணரைத் தலையைத் தின்னும். (90)

மூப்பில் ஆதரச் செருக்கு மல்கும் = வயோதிகத்தில் ஆசையானது இறுமாப்புடன் எழும்

காதல்செய் வலியிலாமை = விரும்பிய காரியத்தைச் செய்யச் சிறிதும் ஆற்றல் இல்லாமையும்

அருந்துதற்கரிது = இச்சித்த போகத்தை உண்ணமுடியாமையினாலும்

கருத்தெலாம் வெந்து சோரும் = இருதயமுழுவதும் தகிக்கப்பட்டு வாடும்

போதுறு நீறு ஆர் முற்றல் பெரும் பூசினைக்காய் போல = பருவகாலத்தில் நீர்பூத்த பழுத்த பெரிய கூஷ்மாண்டம்போலவிருக்கும்

மாந்தர் வெண்ணரைத் தலையை = மக்கள் தம் வெள்ளிய மயிர் மூடிய சிரங்களை

மேதகு காலன் தின்னும் = மேன்மைமிக்க காலன் உண்ணும்.

1 3 2 4
மரணமா மன்னன் முன்னர் வருநரைக் கவரி வீசித்
8 6 5 7 9
திரளுறு வியாதி யாதி யாகிய சேனை செல்லுந்
தரமறு நரைவெண் சாந்தார் சரீரமா மனைக்கு ளாபத்
துரவலி யின்மை சோர்வா மொண்டொடி மகளிர் வாழ்வார். (91)

மரணமாம் மன்னன் வருமுன்னர் = இறப்பாகிய அரசன் முன்னே வராநின்ற பவனி வரும்போது

நரைக்கவரிவீசி = சரையென்னும் வெள்ளிய சாமரையிரட்டி

ஆதி வியாதியாகிய = காமமுதலிய குன்மாதிகளென்னும்

சேனைதிரளுறு செல்லும் = சேனைகள் கூட்டம் கூட்டமாகச் செல்லும்

தரம் அறுநரை வெண் சாந்து ஆர் சரீரமா மனைக்குள் = நலம் இல்லாத நரை குணம் குலம், கல்வி இவற்றைப் பாராது வெள்ளிய சாந்து தீட்டப்பெற்ற அரண்மனைக்குள்

9

ஆய்த்து உரவலியின்மை சோர்வாம் = மிகுந்த பயமும்; ஞானம்; பலம்; இன்மையும் தளர்ச்சி இவைகளாகிய

ஒண்டொடி மகளிர் வாழ்வோர் = ஒள்ளிய தோள்வளையலணிந்த ராணிமார்கள் சுகமாக வாழ்வார்கள்.

1
நரையுறு தீவா ணாளாம் பேயுட னண்ணி வாழ்வென்
3 2 4
சரைவெலற் கரிதி யார்க்கு மீடணை மூன்றுந் தள்ளு
நிரைபவத் தவினை யாகி நிகழின்பப் பொருள்க ளெல்லாம்
புரையுறு மெலியா னூல்போற் காலனாற் பொன்று மன்றே. (92)

நரையுறு தீவாணாளாம் பேயுடன் நண்ணி வாழ்வு என் = ஜரையோடு கூடிய (துர்ஜீவிதம்) ஆயுளாகிய பிசாசுடன் பொருந்தி வாழ்வதாலென்னே பிரயோஜனம்

யார்க்கும் சரை வெலற் கரிது = எத்தகையவருக்கும் சரை வெல்லுதற்கு அரியதேயாகும் நீக்கிவிடும்

ஈடணை மூன்றும் தள்ளும் = மூவித ஆசைகளையும் (திரஸ்கரித்துத் தள்ளும்)

நிரைபவத்த வினையாகி நிகழின்பப் பொருள்களெல்லாம் = (கால தூஷணம்) வரிசையான எழுவகைப் பிறவியாகிய சம்சாரத்து அஞ்ஞானத்தினாலே மூடர் மயலுடையவராகி பொலியாநின்ற ரமணீய சுகப் பொருள்கள் யாவுமே

புரையுறும் எலியால் நூல் போல் காலனால் பொன்றும் = பதார்த்தங்களைக் கேடுசெய்யும் சுண்டெலி முதலிய ஜந்துக்களால் வஸ்திர முதலியவைபோல சங்கார தேவனால் கெடுக்கப்படும்.

மகரநீர் கடல் குடிக்கும் வடமுகக் கனலே போலச்
2 1 3
சகலமும் விழுங்குங் காலன் சகத்திடை விழுங்கா தில்லைப்
5 4 6
புகலரும் பெரியோ ரேனும் பொழுதொரு கணமுந் தாழா
னகிலமும் விழுங்கித் தானே யகிலமாய் நிற்குமன்றே. (93)

மகரநீர் கடல் குடிக்கும் வடமுகக் கனலேபோல = முதலை முதலிய ஜந்துக்கள் நிறைந்த நீர் நிலயமாகிய சமுத்திரத்தை பானஞ்செய்து வற்றடிக்கும் வடவாமுகாக்கினிபோல

காலன் = சகலமும்விழுங்கும் = காலன் எமனால் யாவற்றையும் தொம்சஞ் செய்யும்

சகத்திடை விழுங்காதில்லை = விவகார பூமியான உலகில் உண்டாய வஸ்து யாவற்றையுமே விழுங்கிவிடுவன்

புகலரும் பெரியோரேனும் = சொல்லுகற்கரிய புகழையுடைமகான்களாயிருந்த போதினும்
ஒரு கணப் பொழுதும் தாழான்தானே = ஒரு கணமுந் தாழாது கௌளீகரித்து அக் காலன் தானே
அகிலமாய் நிற்கும் = விஸ்வமூர்த்தியாய் நிற்பன்.

விழுமியர் சுபத்தின் பாலர் மேருவை யொப்போ ரெல்லாம்
பழுதறு கருடன் கொல்லும் பாம்பெனக் காலன் கொல்லும்
புழுதியோ டிலைதுரும்பு பொன்மலை புணரி வெள்ளஞ்
செழுமகேந் திரமுங் காலன் சிதைத்துத்தன் வடிவ மாக்கும். (94)

விழுமியர் சுபத்தின் பாலர் = மேலோர், திக்குப்பாலர்
மேருவையொப்போ ரெல்லாம் = மேருகிரிக்குச் சமானமாய வல்லமையுள்ளவர் ஆகிய யாவரையும்
பழுதறு கருடன் கொல்லும் பாம்பென = குற்றமற்ற பக்ஷிராஜாவாகிய கருடன் சங்கரிக்கும் சர்ப்பம் போல
காலன் கொல்லும் = காலபகவான் சங்கரிக்கும்
புழுதியோடு இலைதுரும்பு பொன்மலை புணரிவெள்ளம் = தூளி, பர்ணம், திரணம் சொர்ணகிரி சப்த சமுத்திரம்
செழுமகேந்திரமும் காலன் சிதைத்துத்தன் வடிவ மாக்கும் = வளப்பம் நிறைந்த மகேந்திரகிரி யென்னும் யாவற்றையும் காலன் தொம்சப்படுத்தி ஆன்மமயமாய்ச் செய்துகொள்ளுவன்.

அகல்பூதக் கொதுகிரையு மண்டமெனுங் கனியுகுத்த வத்தியாயும்
பகலவனே கண்ணகப் பகற்பொழுது பார்வையாற் பதங்கள் பார்த்துச்
1
சகமெனுந் தொல்வனத்துலக பாலரெனும் பழம்பறித்துத் தானே தின்னுந்
திகழுலகா மணிமாலைக் குணமுன்றுற் கோத்தணிந்து சிந்துங் காலன். (95)

அகல்பூதக் கொதுகிரையும் = விஸ்தீரணமான = அளவற்ற பிராணிகளாகிய மசகங்கள் கும் கும்மென்று இரைச்சலிடுவதும்
அண்டமெனுங் கனியுகுத்த = பிரமாண்டங்களென்னும் கனிகள் உதிர்ந்துகொண்டிருக்கும்
அத்தியாயும் = அத்திமரமாயும்
பகலவனே கண்ணகப் பகற் பொழுது பார்வையால் = பகற்பொழுது சூரியன் நேத்திரமாக நோக்கத்தால்
பதங்கள் பார்த்து = பழுத்திருப்பவை பார்த்து
சகமெனுந் தொல்வனத்து = பிரபஞ்சமென்னும் பழைய வனத்து
உலக பாலரெனும் பழம் பறித்து = ஜகத்து இரக்ஷகரென்னும் பழங்களைக் கொய்து

தானே தின்னும் = சுயம் புசித்துக்கொண்டிருப்பன் (இது பாலக சங்கா ரத்தன்மையாம்)
திகழ்லக மணிமாலே = விளங்காநின்ற லோகரத்தினாவலியை
குணமூன்றுற் கோத்து = முக்குணங்களால் நிரப்பித்து,
அணிந்து = அலங்கரித்து
காலன் சிந்தும் = எமனால் மீண்டும் சிதறுமாறு செய்யும்.

1 3 2 4
சிறியசகப் பழங்குடிலிற் சிதறுலக மணியமனுஞ் செப்பிற் சேர்க்கும்
மறிவில்பல பூதமாம் விலங்குகளும் பறவைகளு மளவற் றெங்கு
முறியவுலர் சகப்பாலே தனில்வேட்டை யாடிநெடு முதுகற் பத்திற்
பொறிவடவைத் தாமரைசேர் கடல்விளையாட் டோடைகளாப் பொருந்துங் காலன். (96)

சிறிய பழம் சகக்குடிலில் = அற்பமான பழைய உலகமாகிய சிற்றில்லின்கண்
சிதறுலகமணி யமனுஞ் செப்பில் சேர்க்கும் = பரவிக்கிடக்கும் பெரியோர்களென்னும் லோக மணியை எமனுஞ் சம்புடத்தில் பொறுக்கி அடைக்கும்
அறிவு இல் பல பூதமாம் = தீனர்களாயும் மூடங்களாயுமிருக்கும் பற்பலபிராணி
விலங்குகளும்பறவைகளும் = களாகிய மிருகங்களும் பக்ஷிகளும்
அளவற்று எங்கும் = அளவில்லாமல்
முறியவுலர் = நாசமாமாறு சுஷ்கமான உலர்வுற்ற
சகப்பாலேதனில் வேட்டையாடி = பிரபஞ்சமாகிய பாலேதனில் வேட்டையாடி விரிந்த உலகமாகிய வனத்தில்
நெடுமுதுகற்பத்தில் = பெருங் கற்பாந்தத்தில்
பொறிவடவைத் தாமரை சேர் கடல் விளையாட்டு ஓடைகளாக = அக்கினிப் பொறிகளையுடைய வடவானலமென்னும் தாமரையை அலங்கரித்துக்கொண்டிருக்கும் சமுத்திரத்தை கிரீடா புஷ்கரணியாக
காலன் பொருந்தும் = காலன் அடையா நிற்பன்.

1
கைப்பினொடு புளிப்புக்கார்ப் பிவைமுதலாஞ் சுவைபடைத்த கன பூதத்தா
லொப்பரிய பாறயிரை யாதியாய் வருகின்ற வுததி தன்னுற்
3 2 4 7
றுப்புடையன் விவிதமாந் தோற்றமுள் சகங்களினுற் சுற்றிச் சுற்றி
5 8
ளைவப்புடைய வவற்றவற்றும் பெருங்கற்பம் பலகாலும் வட்டஞ் செய்யும். (97)

கைப்பினொடு புளிப்புக் கார்ப்பு இவை முதலாஞ் சுவை படைத்த கனபூதத்தால் = கைப்பு, புளிப்பு, உறைப்பு இவைமுதலாகிய இரசங்களுற்ற சகல பிராணிகளும் வெஞ்சனமாகவும்

| | |
|---|---|
| ஒப்பரிய பால் தயிரை யாதியாய் வருகின்ற வுததி தன்னுல் = | உவமை சொல்லுதற்கரிய பாற்கடல், தயிர்க்கடல் முதலியவாய் எழுகடல், குடிக்கும் ஜலமாகவும் |
| தோற்றமுள விவிதமாம் சகங்களினுற் றுப்புடையன் = | காணப்படுகின்ற ந[illegible]விதமாம் உலகங்களை அன்னமாகவும் புஜிப்பன் |
| வைப்புடைய அவற்றவற் றும் பெருங்கற்பம் பலகாலும் சுற்றிச்சுற்றி வட்டஞ்செய்யும் | சிறிதுசாலமிருப்பனவாய கடல் முதலிய அவற்றவற்றின் மகாகற்பம் அனேகமுறை சூழ்ந்து ஆவர்த்தனஞ் செய்துகொண்டிருக்கும். |

[1]தொல்லுலகிற் றோன்றுகின்ற சராசரமாம் பொருள் ளனைத்துந் [3]தொலைத்து
[4]வெல்லரிய சங்கார காளராத் திரிமிகவும் வெருட்சி மிக்க [2][மாற்றி
வல்லபமா நடையுடைத்தாய் மாதர்கண மனைத்துமுடன் மருவப் பட்டுப்
[7]புல்லரிய [6]சக[5]மோகப் [8]பொறிவனத்திற் புலிப்பேடு போல வாழும். (98)

| | |
|---|---|
| தொல் உலகில் தோன்றுகின்ற சராசரமாம் பொருளனைத்தும் = | பிராசீனமான உலகத்தில் காணப்படுகின்ற ஸ்தாவர சங்கம ரூபமான சகல வஸ்துக்களையும் |
| மாற்றித் தொலைத்து = | வேறுபடுத்தி நாசஞ்செய்யும் |
| வெல்லரிய சங்காரகாளராத்திரி மிகவும் வெருட்சி மிக்க = | யாவராலும் ஜயம் செய்தற்கரிய சண்டிகாதேவியானவள் அதிகோரமாய்ப் பயப்படும்படி |
| வல்லபமாம்நடையுடைத்தாய் | சாமர்த்திய சஞ்சாரமுடையவளாகி |
| மாதர்கணம் அனைத்துமுடன் மருவப்பட்டு | சப்தமாதர் கணம் பின் தொடரப்பெற்றவளாகி |
| மோக சகம் புல்லரிய பொறிவனத்தில் = | மோகரூபப் பிரபஞ்சத்தில் அடைதற்கரிய ஐஸ்வரியம் நிறைந்த மாவனத்தில் |
| புலிப்பேடுபோல வாழும் = | பெண்புலியைப் போல வாழ்ந்துகொண்டிருக்கும் (காலபகவானுக்கு மனைவியாம்) |

படர்பூதந் தொலைத்திரதம் பயில்புவியாம் பானபாத் திரங்கைப் பற்றி
மடல்சூழுற் பலங்கழுநீர் வனசமென வுலக நிரைமாலை சூடி
விடுகோடை யிடிநகைக்கு நரவரியை விளையாட்டு விகங்க மாக
நெடுநீள்வன் புயமாம்பஞ் சரத்தினிடை யேந்துகின்ற நெறிய ளாகி. (99)

| | |
|---|---|
| படர்பூதந் தொலைத்து இரதம் பயில் = | பிராணி சமூகங்களை நாசஞ் செய்து சட்ரச கடல் சூழ்ந்த |

| | |
|---|---|
| புவியாம் பானபாத்திரங் கைப்பற்றி = | பிருதுவியென்னும் குடிகுடத்தைக் கையில் ஏந்தி |
| மடல்சூழுற்பலம்; கழுநீர் வனசமெல்லா = | இதழ் நிறைந்த கருங்குவளை, செங்கழுநீர், தாமரை என |
| உலக நிரை மாலை சூடி = | சொர்க்க மத்திய பாதாள உலக வரிசைகளை மாலையாகச் சூடி |
| விடு கோடையிடி நகைக்கு நரவரியை விளையாட்டு விகங்கமாக = | வெளிப்படுகின்ற கோடைகாலத்து இடியும் அற்பமென்று சொல்லும்படியாக சிரிக்கும் நரசிங்கமூர்த்தியைக் கிரீடாசகுந்தமாக (பறவையாக அசுரர்களைக் கொல்லும் பொருட்டு) |
| நெடுநீள் வன்புயமாம் பஞ்சரத்தினிடை யேந்து கின்ற நெறியனாகி = | நீண்டு உயர்ந்து திண்மை பொருந்திய புயமாகிய கூண்டினுள்ளே தொங்கவிட்டுக்கொண்டிருக்கின்ற தன்மையுடையவனாகி அக்காலபகவான் இருப்பன். |

மன்னுசரற் ககனம்போன் மாசின்றிச் சுரவீணை மதுர மேவி
முன்னுயர்கா லனைக் கேளிஇக் கோகிலக்குஞ் சாக்கொண்டு முழுதுமின்மை
யென்னுமடற் சிலைதாங்கி யெழுதுயரா கியகணைக ளேந்தி யெங்குந்
துன்னுநட னம்புரிந்து தன்வசமாய் மிகவிளங்கிச் சுற்று நிற்கும். (100)

| | |
|---|---|
| மன்னுசரற் ககனம்போல் = | வியாபகமாகப் பொருந்திய சரத்கால ஆகாயம் போல |
| மாசின்றிச் சுரவீணை மதுரமேவி = | களங்கமற்ற ஒலியையுடைய சுரவீணையின் மாதுர்யத்தைச் செவியிற் கவர்ந்து |
| முன்னுயர் காலனைக்கேளி இக்கோகிலக் குஞ்சாக் கொண்டு = | மகாகாலன் என்னுந் தேவனையே விளையாட்டுக் குயில் குஞ்சாகப் பேணிக்கொண்டு |
| முழுதுமின்மை யென்னும் = | அத்தியந்தா பாவமென்னும் |
| அடற்சிலை தாங்கி = | வெற்றி வில்லைத்தரித்து |
| எழுதுயராகிய கணைக ளேந்தி = | உண்டாகாநின்ற துன்பங்கள் விம்மி பொம்மி வரும் பெருந் துன்பங்களாகிய அம்புகளை ஏந்திக் கொண்டும் |
| எங்கும் துன்னு நடனம் புரிந்து = | எல்லா இடங்களிலுஞ் சுற்றுபவனாய் |
| தன்வசமாய் மிக விளங்கிச் சுற்று நிற்கும் = | நெருங்கிய வாத்திய கோஷங்களுடன் கூத்தாடிக் கூத்தாடி சுயமே சுற்றுவன். |

பொன்னுலகு தரியணியாம் புணர்பாவ மெனுநூலாற் பூட்டிக் கட்டும்
பன்னரகச் சிலம்புகளைப் பாதலமாம் பதத்தணியும் பானுத் திங்க
ளென்னுமணி சேரிமவா னெனுமெலுப்பு மணிமேரு வென்னும் பொற்பூண்
டன்னிருகா தினுந்தரிக்குஞ் சக்கரவெற் பணிகலையாத் தழுவு மன்றே. (101)

| | |
|---|---|
| பொன்னுலகுதரியணியாம் = | சொர்க்கலோக முதலியவைகளே அணிந்துகொள்ளும் ஆரகேயூர பூடணமாம் |
| புணர்பாவமெனும் நூலால் பூட்டிக் கட்டும் = | தீவினையால் சம்பந்தமாய ஜீவர்களிடத்தே பொருந்திய துஷ்கிருத்தவினைச் சூத்திரத்தால்க் கோர்த்து (பந்திக்கும்) கட்டும் |
| பல்நரகச் சிலம்புகளை = | பலவிதமான நரகச் சிலம்புகளை |
| பாதலமாம் பதத்து அணியும் = | பாதாளமாகிய சரணத்தில்=திருவடியில் அணிந்து கொள்ளுவான் |
| பானு திங்கள் என்னும் = | சூரியன் சந்திரன் என்னும் |
| மணிசேர் = | இரத்தினம் பதித்த |
| இமவான் எனும் எலுப்பு மணி = | பனிமலையென்னும் வெண்ணிறமாகிய ஆபரணத்தையும் |
| மேருவென்னும் பொற்பூண் = | சொர்னகிரியென்னும் தங்க ஆபரணத்தையும் |
| தன்னிரு காதினும் தரிக்கும் = | தனது இரண்டு காதுகளிலும் கர்ணபூஷணமாகத் தரித்துக்கொள்வன் |
| சக்கர வெற்பு அணி கலையாத் தழுவும் = | சக்கரவாளகிரியைக் கட்டிக்கொள்ளும் இடை வஸ்திரமாகத் தரித்துக்கொள்வன். |

பின்னுறத்தாழ்ந் தலைந்திலங்கு முருகன்வா கனமயிலின் பீலி சூடு
முன்னயனப் பெருங்குழிகள் பயஞ்செய்யு மதிச்சடைதாழ் முடிகள் பூணுங்
கன்னியுமை குழற்கவரி மலைநிகர்பை ரவராடுங் கவந்த மேவும்
பன்னயனக் குழிவிளங்கு மிந்திரன்றன் மேனியெனும் பலியோ டேந்தும். (102)

| | |
|---|---|
| பின்னுறத்தாழ்ந்து அலைந்து இலங்கும் முருகன் வாகன மயிலின் பீலி சூடும் = | பின்பக்கத்துத் தாழ்ந்து அலைந்துகொண்டு விளங்காநின்ற சுப்பிரமணியருடைய வாகனமாகிய மயிலின் தோகைகளை அணிந்து அலங்கரித்துக் கொள்வன் |
| முன் நயனப் பெருங்குழிகள் பயஞ்செய்யும் மதிச்சடை தாழ் முடிகள் பூணும் = | மூன்று விழிகளாகிய பெருங்குழிகள் மிகப் பீதியையுண்டாக்கும்படி நிற்பச் சந்திரனை அலங்காரமாகத் தரித்த அரன் சிரங்களை அலங்காரமாகத் தரித்துக்கொள்ளுவன் |
| கன்னியுமை குழற்கவரி = | அழகொழுகும் கௌரியின் கேச சாமரைகள் கொண்டும் |

ஆடும் பைரவர் மலைநிகர் கவந்த மேவும் = கூத்தாடும் பைரவருடைய மலைபோன்ற கவந்தங்களைத் தாங்கியும் (கவந்தம் தலை முண்டம்)
பல்நயனக் குழிவிளங்கும் இந்திரன்றன் மேனியெனும் பலியோடு ஏந்தும் = பலவிழிகளாகிய கண்ணோடுகூடி விளங்கும் தேவேந்திரனுடைய சரீரங்களெனப்படும் பிக்ஷாபாத்திரங்களை வைத்துக்கொண்டிருப்பன்.

1 4 3
மிகவுனங்கு சாரீர கட்வாங்கப் பங்குகளால் விளக்கந் துன்று
2 5
மகமுடைத்தாய்த் தனைத்தானே பயஞ்செய்து புவனமெலாந் தொலைத்து மாற்று
மகிலமுமா மொருவடிவின் முடிவட்ட மெனுங்கமலத் தலங்க லோடு
நிகரினட னம்புரிந்து பெருங்கற்பந் தனில்விளங்கா நிற்கு மன்றே. (103)

மிகவுணங்கு சாரீர கட்வாங்கப் பங்குகளால் = மிகவுங் காய்ந்த சரீர சம்பந்தமாகிய முதுகெலும்பினால் செய்த என்புப் பாரங்களானே
மகம் துன்று விளக்கம் உடைத்தாய் = ஆகாயத்தின்கண் நிறைந்து வியாபித்து விளக்கமுடையதாய்
தனைத்தானே பயஞ் செய்யும் = பிறர் பயப்படும்படி தன்னைத்தானே பயப்படுத்திக் கொண்டும்
புவனமெலாந் தொலைத்து மாற்றும் = சர்வ உலகங்களையும் நாசஞ் செய்தும்
அகிலமுமாம் ஒருவடிவின் முடிவட்டமெனுங் கமலத் தலங்களோடும் = விஸ்வரூபமாகிய ஏக வடிவத்தின் சிரசக்கரமென்னும் தாமரை மாலைகளோடும்
நிகர் இல் நடனம்புரிந்து = ஒப்பற்ற தாண்டவத்தைச் செய்து
பெருங் கற்பந்தனில் விளங்கா நிற்கும் = மகா கற்பங்களில் மிகவும் விளங்கிக்கொண்டிருப்பன்.

## அவதாரிகை

இக் காலாதிகளிடத்தில் எனக்குத் தோஷந் தெரிதலின் சம்சாரரூப இவற்றில் பற்று எங்ஙனம் கூடும் எனக் கூறுகின்றார் :

பொருள்களெல்லாம் பொருளன்றாங் கடியமன மகங்கரத்தின் பொருட்டே யாகுந்
தெருளுறுபா வங்களெலா மபாவமாம் பவமுடிவு தெரியா தாகும்
மருளுமதி யாகுலத்தா லுளம்வெதும்பு மாசைநோய் வளரா நிற்கு
மிருண்மயறீர் பவரறிய ரெவ்வனந்தான் வருத்தத்தா லேகா நிற்கும். (104)

பொருள்களெலாம் பொருளன்றும் = சத்தியஞ்ஞானனந்த லக்ஷணமுடைய ஆன்மா அசத்தியத்தை அடைகின்றன

கடியமனம் அகங்கரத்தின் பொருட்டேயாகும் = கொடூர சித்தமானது அகங்காரத்தின் வசமேயாகும்
தெருளுறு பாவங்களெல்லாம் அபாவமாம் = ஞானவிஷயமாகப் பொருந்திய பாவ பதார்த்தங்களெல்லாம் அபாவமாகின்றன
பவமுடிவு தெரியாகும் = சம்சார தீர ஆத்மா புலனாகவில்லை
மருளுமதியாகுலத்தால் உளம் வெதும்பும் = மயங்கும் புத்தியானது சிந்தாகுலங்களால் உள்ளே தபித்துக்கொண்டிருக்கின்றன
ஆசைநோய் வளராநிற்கும் = இராகாதிகள் ரோகாதிகள் விஸ்தாரமாம்
இருள்மயல் தீர்பவர் அரியர் = வைராக்கியமுடையவர் அரிதேயாவர்
எவ்வனந்தான் வருத்தத்தாலே = தாருண்யமானது பெருமுயற்சியின்
ஏகாநிற்கும் = கஷ்டத்தாலேயே கழிந்தேகும் புருஷார்த்தம் அடையப்படுகிறதில்லை.

பெரியவர்நண் பதிதூரஞ் செல்கதிகிட்டா துண்மை பெறற்கொ ணாதாங்
கரியமன மோகிக்கு முண்மகிழ்ச்சி தூரமதாங் கருணை தோன்று
விரியுமிழி வதிதூரத் தினுமணுகு நிலைமைபோய் வேறும் வீழ்வோர்
திரியவுட னெழுவர்சிறி யவர்கூட்ட மெளிதரிது தெளிந்தோர் கூட்டம். (105)

பெரியவர் நண்பு அதிதூரம் = சற்ஜன சினேகிதம் மிகு தூரத்ததாம்
செல்கதி கிட்டாது = பரமபதம் இருப்பதாகக் காணப்படவில்லை
உண்மை பெறற்கொணாதாம் = சத்தியம் அடையப்படாவாம்
கரியமனம் மோகிக்கும் = விடயங்களில் கலக்கமுற்ற துர்மனம் மயலை அடையும்
உள்மகிழ்ச்சி தூரமதாம் = அகத்தே சந்தோஷம் வெகுதூரத்தில் சென்று விட்டது
கருணை தோன்று = துயருற்றவரிடத்தே கருணையுதிப்பதையுங்காணோம்
விரியும் இழிவு அதிதூரத்தினும் அணுகும் = விஸ்தாரமாக நிந்தை அதி சேய்மையினின்றும் வந்தடைகின்றது
நிலைமை போய் வேறும் = தைரியங்கெட்டு அதைரியமாம்
வீழ்வோர் திரியவுடன் எழுவர் = பிராணிகள் அதோகதியடைவதும் மாறுக ஊர்த்துவகதியடைவதுமாயுள்ளார்கள்
சிறியவர் கூட்டம் எளிது = துர்ச்சன சம்பந்தம் சுலபமாம்
தெளிந்தோர் கூட்டம் அரிது = சற்ஜனசங்கமோ துர்லபமாய்விட்டது.

கொண்ட பாவலை பிறவியாம் பூதங்கள் குலைந்துபோந் திசைதோன்ரு
கண்ட தேசங்கள் பிறசொலாத் திரிந்திடுங் கனகிரி துகளாகு
முண்டெ னுந்தன்மை விழுங்கிட வுலகுபோ மும்பர்போ புவனம்போ
மண்டு வாரிபோ முடுக்கள்போந் தானவர் வானவர் கணம்போகும். (106)

| | | |
|---|---|---|
| கொண்டபாவலை பிறவியாம் | = | மனங்கவர்ந்த சமஸ்காரமே (போக்கு வரவுடைய பொருள்களாற் பெரிது கவர்ந்த பாவனையே) பவபந்தினியாம் |
| பூதங்கள் குலைந்துபோம் | = | சகல பிராணிகளும் சிதறி எங்கேயோ ஓடிப்போய் விடும் |
| திசைதோன்ரு | = | காலபகவானல் திசைகளும் காணவேகாணும் |
| கண்ட தேசங்கள் பிற சொலாத் திரிந்திடும் | = | காணப்பட்ட தேசம் அஸ்தினபுரம் டில்லியென்று வழங்கப்படுகின்றது |
| கனகிரி துகளாகும் | = | பலமான பர்வதங்களும் தூளாகிப்போம் |
| உண்டெனுந்தன்மை விழுங்கிட உலகு போம் | = | சத்துத்தன்மையுடைய பரமான்மா உட்கொள்ள இவ்வுலகமும் காணமற்போம் |
| உம்பர்போம் புவனம்போம் | = | பாதாள உலகமும் காணமற்போம் சொர்க்கமும் போம். மத்திய உலகமுங் காணமற்போம் |
| மண்டுவாரிபோம் | = | ஜலம் நிறைந்த கடல்களுங் காணமற்போம் |
| உடுக்கள்போம் | = | தாரகைக் கூட்டங்களும் காணமற்போம் |
| தானவர் வானவர் கணம் போகும் | = | சுரர்சுரர் கூட்டங்களும் காணமற்போம். |

சித்தர் பொன்றுவர் துருவனுஞ் சிதைகுவன் சிவனயன்திரு மார்பன்
தத்துவந்தனி லொன்றுவர் காலமுங் கருமமு முடிவாகு
மத்தவானும்போ மயக்கமே தருவதாய் வாக்கொடு செவிக்கெட்டாச்
சுத்தமாம் பொருளொன் றினுலிகழ்வுறத் தொல்லுல கிழிவாகும். (107)

| | | |
|---|---|---|
| சித்தர் பொன்றுவர் | = | ஆகாச கமனமுடைய சித்தர்களும் சிதைவுறுவர் |
| துருவனுஞ் சிதைகுவன் | = | கற்பபரியம் நிலையாயுள்ளதுருவனும் சிதைவுறுவன் |
| சிவன், அயன், திருமார்பன் தத்துவந்தனில் ஒன்றுவர் | = | ருத்திரன், பிரம்மா, விஷ்ணுவென்னும் மும்மூர்த்திகளும் பரமபதத்தில் ஒடுங்குவர் |
| காலமுங் கருமமும் முடிவாகும் | = | காலமும் நியதியும் முடிவையடையும் |
| மத்தவானும் போம் | = | வியாபக ஆகாசமும் அழிந்துபோம் எம்போன்றவர் மாட்டு என்னே |
| மயக்கமே தருவதாய் வாக்கொடு செவிக்கெட்டா | = | பிராந்தியை உண்டுபண்ணுவதாய வாக்கொடு செவிக்கு கோசரிக்கமுடியாத |

சுத்தமாம் பொருளொன்

றினால் = சுத்த தத்துவமாகிய ஞானமூர்த்தியினால்

இகழ்வுறத் தொல்லுலகு நிந்திதமாமாறுமுன் உள்ளதாகச் சொல்லப்பட்ட

இழிவாகும் = பிரபஞ்சம் வெறுந் தோற்றமாய் மாய்ந்துபோகும்.

இன்ன போதுமங் கலங்களா மிருதுவீ தியாத்திரைக் கிதுகால
1 3 2
மன்னதே யுறவிச்சுக மிருந்தவா வற்புத முளபோக
4
மென்ன வென்னவா ளாநினைத் துலகங்க ளிறக்கின்ற வுயர்ந்தோரை
6 5 7
யுன்னிமுந்துறப் பகலெலாந் தேடிடா தொழியுமேற் றுயி லுண்டோ. (108)

இன்னபோது மங்கலங்

களாம் = இப்போது இப்போது உற்சவங்களாம்

இருது ஈது யாத்திரைக்கு = வசந்தருது இதுவாம் யாத்திரை செய்வதற்கு

இதுவே காலம் = இதுவே சமயமாம்

அன்னதே உறவு = அவர்களும் இவர்களுமே பந்துக்கள்

இச் சுகபோகம் இருந்தவா = இச் சுகம் எத்தகைய சிறப்புற்றிருக்கின்றது ஆ! ஆ! விசேடத்தோடு கூடிய

அற்புதம் உள என்ன என்ன = அற்புதம் என்னே என்னே இந்த இந்த வண்ணம்

வாளா நினைத்து வீணாகவே எண்ணி உலகங்களிலுள்ள பிராணிகள்

உலகங்களிறக்கின்ற = இறக்கின்றன.

உயர்ந்தோரை யுன்னி = பிரமவித்துக்களை நினைந்து

முந்துறப்பகலெலாந் தேடிடா இராப் பகல் முழுவதும் அடைவதற்கு முயற்சி

தொழியுமேல் துயில் செய்து சிரவணாதிகளைச் செய்யாது வாளா பொழுது

உண்டோ = போமாயின் யாவர்தாம் கவலையின்றி நித்திரை செய்யமுடியும்.

1
மனைவியு மகரும் பொன்னு மமதைசெய் தமுதம் போல
நினைவின னேயஞ் செய்து நீணிலத் துள்ள வெல்லா
3 2
மனையவர்க் காகச் செய்வர் ஏருத்திக ளான வெல்லா
4
வினையுற முடியுங் காலை விடங்களின் மயக்கஞ் செய்யும். (109)

மனைவியும் மகரும்

பொன்னும் = தாரத்தையும் தனயரையும் தனத்தையும்

மமதை செய் அமுதம்போல = எனது எனது என ரசாயனம்போல

நினைவினால் நேயஞ் செய்து = புத்தியினாலே விருப்பம் வைத்து

நீள்நிலத்துள்ள வெல்லாம் = இவ் விஸ்தாரமாகிய ஜகத்தின்கண்ணுள்ள சகல காரியங்களையும்
அனையவர்க்காக = மேற்கூறிய மனைவி மைந்தராதியர்கட்காகவே
அருத்திகளானவெல்லாம் = ஆசையினலாக்கப்பெற்றனவான அனைத்தையும்
செய்வர் = செய்துகொண்டேயிருப்பர்
வினையுற முடியுங்காலை விடங்களில் மயக்கஞ் செய்யும் = துரதிர்ஷ்டம் பொருந்த நாசமடையுங் காலத்தில் விஷமூர்ச்சனைபோலப் பெருந் துயரத்தையே யீயும்.

1 3 5 4
பகையெலாந் துரந்து தள்ளிப் பாக்கியம் பலவந் தெய்த
2 7
விகலறத் துய்க்கு நாளி லெவ்விடத் திருந்தோ வந்து
மிகையறு காலன் கொல்லும் விவிதமா மிடத்தி னின்று
வகுந்தின்வந் தொன்று வார்போல் மனைவிசேய் முதலா மாயை. (110)

பகையெலாம் இகலற துரந்து தள்ளி = சத்துரு ஜனங்களனைவரையும் வலிகுன்றும்படி மீட்டணுகாது துரத்தி
பலபாக்கியம் வந்தெய்த = சகல பாக்கியங்களாகிய அஷ்டலெக்ஷிமிகளும் இனிதாக வந்தடைய
துய்க்குநாளில் = அனுபவித்துக்கொண்டிருக்குங் காலத்தில்
எவ்விடத்திருந்தோ வந்து = எங்கிருந்தோ தெரியாமல் வந்து
மிகையறு காலன் கொல்லும் = தனக்குமேலொன்றும் வலுவில்லாத காலன் சம்மரிக்கும்
விவிதமாமிடத்தில் நின்று = இங்கிருந்தும் பிற இடத்திலிருந்தும்
வகுந்தின் வந்தொன்று வார்போல் = நாற்சந்தியின் வழியில் ஒருங்குசேர்வார்போல
மனைவி சேய் முதலா மாயை = களத்திர புத்திராதி மாயையாம்.

1
கற்பமாங் கணகாலத்திற் கமலயோ நிகளும் மாய்வர்
3 2
சிற்பமாங் கலைகளாலே செறிந்த காலத் தின்சால
4
வற்பமு மகத்து நாடி யளப்புறுபுந்தி பொய்யாம்
பற்பல தீதின் மாலும் பயிலுமன் னுயிர்க ளெல்லாம். (111)

கற்பமாங் கணகாலத்தில் = அநாதியாய சம்சாரத்தில் கற்பமெனப் பெயரிய நொடிப்போதில்
கமலயோனிகளும் மாய்வர் = பிரமாக்களும் மாய்ந்துபோவர்
சிற்பமாங் கலைகளாலே = நுண்மை அற்பம் குறுகல் நீட்சி மதிகளும் அற்ப அதி வாழ்க்கை மதிகளும் ஓரைகளாலே காண் போன் கற்பனையாயிருத்தலின்

செறிந்தகால சாலத்தின் = அடுக்கு அடுக்காகப் பொருந்திய காலசாலத்துற்ற
வற்பமும் மகத்தும் நாடி = லகுத்தன்மை தீர்க்கத்தன்மைகளைச் சிறிது பெரிதாகப் பாவித்து
அளப்புறு புந்தி பொய்யாம் = வரையறுத்துக் கூறமுடியுமோ அசத்தியங்களேயாம்.
பயிலும் மன்னுயிர்கள்
பற்பல தீதில் மாளும் = பொருந்திய சகல ஜீவர்களும் நானுவிதமாய குற்றங்களிலேயே மூழ்கி நாசம் அடைகின்றூர்கள்.

1 3 2 5
கற்றவ ரரியர் சாலக் கருமமுந் துயரினுலே
4 6 8 7
யுற்றசூ னியமா மெல்லா முயிர்தரித் துழல்வதெங்ங
9
னற்றவத் தினமு மேலாஞ் செல்வமு மந்தச்செய்கை
முற்றுமாய்ந் துளத்தே தோன்று மியாமுமம் முறையிற் செல்வோம். (112)

கற்றவர் சால அரியர் = விவேகிகள் இவ்வுலகின்கண்ணே சுலபமாகக் காணப்படவில்லை
எல்லா கருமமும் துயரினுலே
உற்ற சூனியமாம் = சகல கரும உபாசனைகளினுலுற்ற சுக சூனியமாம்
உயிர்தரித்து எங்ஙன்
உழல்வது = ஜீவிதத்தோடு எங்ஙனந்தான் நடத்துவதோ தெரியவில்லை
அற்ற அத்தினமும் மேலாஞ்
செல்வமும் அந்தச்செய்கை
முற்றுமாய்ந்து
உளத்தே தோன்றும் = முன் ஒழிந்த மாந்தாதாசிபி அரிச்சந்திரன் வாழ்ந்த அத்தினங்களும் உயர்வான ஐஸ்வரியங்களும் அவர்கள் செய்த கிருத்தியங்களும் பிறயாவும் நசித்து நினைவுமாத்திரமாக மருவி நின்றன
யாமும் அம்முறையிற்
செல்வோம் = நாமும் அம் மார்க்கத்தின்படியே செல்லப்போகின்றோம்.

பிணிசெயா பத்துச் செல்வம் பிறப்பிறப் பென்ப வெல்லாங்
3
கணிதமாங் கணத்திற் போகா தனவில்லைக் கடிய சூரன்
2 6 1
றுணிவனே ரேழை யாலே நூறுட றுணியு மொன்றுற்.
4 5
பணிதரு கீழோர் மேலாம் பலவட்டம் வருமிவ் வாறே. (113)

பிணிசெய் ஆபத்துச்
செல்வம் = ரோகாதி துன்பத்தை உண்டாக்கும் ஆபத்துக்கள் சம்பத்து
பிறப்பு இறப்பு என்ப
வெல்லாம் = ஜன்மம், மரணம் என்று சொல்லப்படும் பொருள்களியாவுமே
கணிதமாம் = க்ஷணத்தில் நாசமாம்
கணத்திற் போகாதன
வில்லை = க்ஷணகாலத்தில் கழியாதனவே இல்லையாம்

ஒன்றால் ஓர் ஏழையாலே

| | | |
|---|---|---|
| நூறுடல் துணியும் கடிய சூரன் துணிவன் | = | ஏகனான ஒரு பலஹீனனாலே அனேக சரீரங்களைக் கொல்பவனாகிய சூரன் நாசமாகுவன் |
| பணிதரு கீழோர் மேலோர் | = | வணங்கும்படியான தன்மை வாய்ந்த கீழோர் பிரபுவாம் |
| இவ்வாறு பலவட்டம் வரும் | = | இங்ஙனந்தானே சகல ஜகத்தும் அநேகமுறை சுற்றிக்கொண்டேயிருக்கும். |

## அவதாரிகை

தோஷத்தை வர்ணித்து அவை சாந்தியாம் பொருட்டு உபதேசிக்கப் பிரார்த்திக்கின்றார்.

அனையகுற் றங்களாங் காட்டெரியி னுலறவும் வெந்த
நினைவினீ ரிற்கா னற்போ னெடியபோ கங்க டோன்று
வினையுறு மரணம் வாணா ளிரண்டையும் விரும்பு கில்லே
னினையதோ ரிடரு மின்றி யிருந்தவா றிருக்கின் றேனால். (114)

| | | |
|---|---|---|
| அனையகுற்றங்களாங் காட்டெரியினால் அறவும் | | மேற்கூறிய தோஷங்களாய காட்டுத் தீயால் |
| வெந்த நினைவில் | = | அத்தியந்தம் வெதுப்பப்பட்ட சித்தத்தின்கண்ணே |
| நீரில் கானற்போல் | = | ஜலத்தில் பேய்த்தேர் தோற்றுவது போல |
| நெடிய போகங்கள் தோன்று வினையுறு மரணம் வாணாள் | = | பெரிய போக ஆசைகள் தோன்றவில்லை கர்மாதீனமாகப் பொருந்தாநின்ற |
| இரண்டையும் | | மரணம், ஜீவிதம் என்னும் இரண்டின் கண்ணும் |
| விரும்புகில்லேன் | = | விருப்பத்தையடையமாட்டேன் |
| இனையதோரிடருமின்றி | = | இத்தகைய ஏவ்விடருமில்லாமல் |
| இருந்தவாறு | | சித்தமோ அதி சஞ்சலத்தாற் கெடுக்கப்பட்டுள்ளது |
| இருக்கின்றேன் | = | ஆகலின் எங்ஙன் சுகம் உண்டாம் பரிசுத்தனாக இருக்கின்றபடியே இருக்கின்றேன். |

## அவதாரிகை

விஷயத்தில் சுழலுஞ் சித்தத்தை விருத்த அவஸ்தையில் அடக்குவதே தகுதியாம் தாருண்யத்தில் யாதின் பொருட்டு அடக்கவேண்டும் எனின் கூறுகின்றார் :

தெரிவுறு வயதில் வந்த புந்தியாற் சித்தந் தன்னைப்
பரிகரி யாது விட்டாற் பரிகரிப் பதுமற் றெந்நாள்
விரிவிடம் விடம தன்று விடயமே விடமாந் துன்பும்
புரிவிடங் கொல்லு தோர்மெய் புலன்மறு பிறப்புங் கொல்லும். (115)

வயதில் வந்த தெரிவுறு புந்தியால் = யௌவன காலத்தில் விவேகத்தோடு கூடிய மதியினுல்
சித்தந்தன்னை பரிகரியாது விட்டால் = விடயத்தை நாடும் மனத்தை சிக்ஷித்து அடக்காவிடில்
பரிகரிப்பது மற்றெந்நாள் = சிக்ஷிக்கக் காலம் வாய்ப்பது எப்போதோ?
விரிவிடம் விடமதன்று = மிகுந்த காளகூட விஷம் விஷமதல்ல
விடயமே விடமாம் துன்பம் = சப்தாதி பஞ்ச விஷயங்களே விஷமாம்
புரிவிடம் கொல்வது ஓர் மெய் = துன்பத்தைச் செய்யும் விஷம் நாசஞ் செய்வது ஒரே சரீரம்
புலன் மறுபிறப்புங் கொல்லும் = சப்தாதி விஷயம் வாதனை வடிவமாகி மறு மறு பிறப்புக்களிலும் கொன்றுகொண்டேயிருக்கும்.

## அவதாரிகை

ஞானிகளும் விடயங்களோடு ஜீவிப்பவராய்ச் சுகாதிகளை அனுபவிப்பதாகக் காணப்படுகின்றனரே அவர்களிடத்தில் யாது விசேடம் கூறுகின்றார்.

மகிழ்வுசோர் வுறவு சார்வு வாழ்வுசா வென்ப வெல்லாந்
திகழ்வதா மறிவு சான்றோர் சிந்தையிற் பந்த மாகாப்
புகலுறு மாயு வாயுச் சிதறிய புயனீ ரொக்கும்
நிகரறு போக மேக மிசையெழு நெடுமின் போலும். (116)

மகிழ்வு, சோர்வு, உறவு, = சுகங்கள், துக்கங்கள், மித்திரர்கள்
சார்வு, வாழ்வு, சாவு = சுற்றத்தார்கள், ஜீவிதம், மரணம்
என்பவெல்லாம் = என்று கூறப்பட்ட அனைத்துமே
திகழ்வதாம் அறிவு சான்றோர் = விளங்காநின்ற பரிபூரண ஞானத்தையுடைய பெரியோரது
சிந்தையில் பந்தமாகா = சித்தத்தில் கட்டுப்பாட்டைச் செய்யப்பட்டனவாக மாட்டாவாம்
புகலுறும் ஆயுள் = பெரிதாக இருக்கின்றதென்று புகழ்ந்துகொள்ளும்படியான ஆயுளானது
வாயுச்சிதறிய புயல் நீர் ஒக்கும் = காற்றினுல் சிதறடிக்கச்செய்த மேக ஜலத்துக்குச் சமானமாம்
நிகரறு போகம் மேகமிசை யெழு நெடுமின் போலும் = சமானமற்ற போகம் மேகங்களுக்குள் மின்னுநின்ற மின்னலைப்போலச் சஞ்சலமாம்.

## அவதாரிகை

தாங்கள் பேரானந்தம் நீங்காது இருப்பத் தேவரீரையடைந்த அடியேன் பரதந்திரமாய்த் துயருறல் நீதியன்றெனக் கூறுகின்றார் :

மாந்தர்த மிளமை நில்லா திவையெலா மனத்தி னெண்ணிச்
சாந்திகொள் பெரியோர் நீவிர் சமாதியோ கத்தைச் சார்மி
னுய்ந்தவென் சிந்தை ஜீவ நாயகன் வசமா கைக்கே
யேய்ந்தது நிலையு மெய்தா திறைவனைப் பிரிந்தாள் போல. (117)

| | |
|---|---|
| மாந்தர்தம் இளமை நில்லாது = | மக்களின் யௌவனமானது நீர் வேகம் போல நிலையாததாம் |
| இவையெலாம் மனத்தில் எண்ணி = | கூறிய யாவற்றையும் சித்தத்தின்கண்ணே சிந்தித்து |
| சாந்திகொள் பெரியோர் நீவிர் = | பரம சாந்தியை அடைந்த பெரியோர்களாய தாங்கள் |
| சமாதி யோகத்தைச் சார்மின் = | நிருவிகற்ப சமாதியை அடைந்து சுகியுங்கள் |
| ஆய்ந்த என் சிந்தை = | இவற்றையெல்லாம் விசாரித்துப் பார்த்த அடியேனது சித்தம் |
| சீவநாயகன் வசம் ஆகைக்கே இயைந்தது = | ஜீவேசுவரவசமாகுதற்கே பொருந்தியது |
| நிலையும் எய்தாது இறைவனைப் பிரிந்தாள் போல = | அவஸ்திதியையும் அடையாது எதுபோலுமெனின் நாயகனது வீட்டில் அந்த நாயகனது அதீனமாய் இளைப்பாறுதலையடையாமல் வாஞ்சித்த தேயத்தையும் விடயத்தையும் அடையாமல் இருக்கின்றவள் போலவாம். |

ஆதலால் வருத்தங் குற்ற முபாதியோ டைய மின்றி
மீதுறு மோக மின்றி விளங்கிய நிலைமை யேது
காதல்செய் யின்ப மிக்க விடயமாங் கனலில் வீழ்ந்துந்
தீதுரு நிலைமை யேது தீயினு ளிரதம் போல. (118)

| | |
|---|---|
| ஆதலால் வருத்தம் குற்றம் = | விசிராந்தி பெருமையால், துக்கம், விட்சேபம் |
| முபாதியோடு ஐயம் யின்றி = | உபாதி = மனம் (மனமன்றோ எல்லா மயக்கங்கட்கும் மூலமாவது) சங்கையில்லாமல் |
| மீதுறு மோகம் இன்றி = | மேலோங்கி வராநின்ற மயக்கமில்லாமல் |
| விளங்கிய நிலைமை யேது = | சோபனமாகிய ஆனந்தரூபமாயிருக்கப்பட்ட நிலைமையாதாம் |

| | | |
|---|---|---|
| காதல் செய் இன்பம் மிக்க | = | பிரஹ்மானந்தானுபவரசத்தை ஆஸ்வாதித்து மகிழும் சத்துக்கள் |
| விடயமாங் கனலில் வீழ்ந்தும் | = | தாபத்திரயங்களுக்கிருப்பிடமான சம்சார விடயமாகிய அக்கினியில் வீழ்ந்தும் |
| தீதுரு நிலைமை ஏது | = | கெடுதலில்லாத ஆஸ்பதம் யாது (எதுபோலுமெனின்) |
| தீயினுள் இரதம் போல | = | அக்கினியின்கண்ணே வீழ்ந்த பாதரசமானது தாபமுருது ஓடிப்போவது போலவாம். |

## அவதாரிகை

துக்க ஏதுவான விவகாரத்தை விட்டுச் சுகமாக இருவெனின் கூறுகின்றார்.

வசனமாந் தொழிலே யன்றி வருபவந் தான்வே றில்லை
யசைதரு புனலை யன்றி யளக்கர்வே றிலாத தேபோ
னசையுறு பெரியோ ரெங்ங னவையுறு துயரந் தீர்ந்தா
ரிசையநீ யுணர்ந்த தந்த நிலையினை யெனக்குச் சொல்வாய் (119)

| | | |
|---|---|---|
| வசனமாந் தொழிலேயன்றி | = | பற்பலவாகச் சொல்லப்படுந் தொழில்களை விட்டு (விவகாரத்தை விட்டு) |
| வருபவந்தான் வேறு இல்லை | = | வாரா நின்ற சம்சாரமானது அயலாக விலதாம் |
| அசைதரு புனலையன்றி | = | சலியா நின்ற ஜலத்தை விடுத்து |
| அளக்கர் வேறு இலாததே போல் | = | சமுத்திரம் அயலாக இல்லாததே போலவாம். |
| நசையுறு பெரியோர் | = | யாவரும் விரும்பத்தக்க மகான்கள் |
| எங்ஙன் நவையுறுதுயரந் தீர்ந்தார் | = | குற்றம் பொருந்திய தான பெருந்துயரத்தை நிவர்த்தித்தார்கள் |
| இசைய | = | மோகம் நிவர்த்தியாகுந்தன்மையையும் சுகம் பொருந்துமாறும் |
| நீ உணர்ந்தது அந்த நிலையினை | = | தேவரீர் அறிந்திருக்கின்ற அந்த விசிராந்திப் பதத்தை |
| எனக்குச்சொல்வாய் | = | அடியேனுக்குத் திருவருள் செய்யவேண்டும். |

## அவதாரிகை

தேவரீர் உபதேசியாவிடின் எனது தேகத்தியாகப் பரியந்தம் போஜனுதிகள் செய்யாமல் ஜீவன விவகாராதிகளைச் செய்யாமலிருப்பேன் என்கின்றார்,

இந்நிலை யிலதா வேனு முளதியம் பாரா வேனு
மந்நிலை யைய மின்றி யகங்கர மின்றி யானே
துன்னுற மாட்டேன் செய்வ தேதெனிற் சோறும் வேண்டே
னன்னய நீரும் வேண்டே னலம்பெறு துகிலும் வேண்டேன் (120)

முழுகுத ருன மாதி நியமங்கள் முழுதுஞ் செய்யேன்
விழுமிய கருமஞ் சம்பத் தாபத்தின் மேவே னியாக்கை
நழுவுவ தன்றி யொன்று நயக்கிலன் மௌனியாகி
யெழுதுமோ வியம்போற் காமம் கோபம்பற் றின்றி நிற்பேன் (121)

இந்நிலையிலதாவேனும் = சித்தலய உபாயம் இல்லாமற் போனாலும்
உளது இயம்பாரேனும் = உண்டாயினும் உபதேசிக்கமாட்டாரேனும்
அந்நிலை = உத்தமமாகிய அந்த விசிராந்தி பதத்தை
ஐயமின்றி அகங்கரமின்றி = சம்சயமில்லாமல் நிரகங்காரமாய்
யானே துன்னுறமாட்டேன் = சுயமாகவே அடையமாட்டேன் (மாட்டாயேல் என் செய்வாயெனின்)
சோறும் வேண்டேன் = அன்னத்தையும் அயிலேன்
நல நய நீரும் வேண்டேன் = குளிர்ச்சியும் வாசனையும் பொருந்திய நீரையும் பருகேன்
நலம் பெறுதுகிலும் வேண்டேன் = அழகு பொருந்திய பீதாம்பராதிகளும் அணியேன்
முழுகுதல் தானமாதி = ஸ்நானம், தன்னதைப் பிறரதாக்கும் தொழில் முதலிய
நியமங்கள் முழுதும் செய்யேன் = பிறநியமங்களாய்ச் செய்யவேண்டிய யாவற்றை யுமே இயற்றமாட்டேன்
விழுமிய கருமம் சம்பத்து ஆபத்தில் மேவேன் = பெருங்காரியங்களிலும் சம்பத்துகளிலும் ஆபத்து களிலும் பொருந்தமாட்டேன்
ஆக்கை நழுவுவதன்றி = தேகத்தை விட்டொழிப்பதேயல்லாமல்
ஒன்றும் நயக்கிலன் = மற்றொன்றையும் விரும்புகில்லேன்
மௌனியாகி = மௌனத்தையேயுடையவனாய்
எழுதும் ஓவியம் போல் = பித்தியில் தீட்டிய சித்திரம் போல்
காமம், கோபம் பற்று இன்றி நிற்பேன் = இச்சை சினம், அபிமானம், இவைகளைப் பரித்தியா கித்து இவ்வனர்த்தமாகிய தேகத்தை விட்டொழிப் பேன்.

## அவதாரிகை

ஸ்ரீ வான்மீகி கூறல்

எனவுரைத் தமல சீத மதியென வினியோ னின்சொல்
வின்வுநல் விவேகந் தன்னால் விரிந்தலர் மனத்திராமன்
மனமகிழ் முனிவர் முன்னர் வாய்மொழி யமைந்து நின்றான்
கனமுகின் முன்னர்க் கேகா ரவந்தவிர் கலாபி போன்றே (122)

| | | |
|---|---|---|
| எனவுரைத்து | = | என்று இவ்வண்ணம் இயம்பி |
| அமல சீதமதியென | = | நிர்மல குளிர்ந்த சந்திரன்போல |
| இனியோன் இன்சொல் | = | காண்டற்கு இனியோனுன ஸ்ரீ ராமன் இனிமை யான மொழி விருந்தி |
| வினவுநல் விவேகந் தன்னுல் | = | அதி விசாரத்தோடு கூடிய மிகத்தர விவேக மிகுதி யால் |
| விரிந்து அலர் மனத்தி ராமன் | = | விகசிதமாய் மலர்ந்த மனத்தையுடைய ஸ்ரீ இராகவர் |
| கனமுகில் முன்னர் கேகார வந்தவிர் கலாபிபோன்று | = | மேக மண்டலத்தின் சன்னதியில் ஹேற! ஹேற! சப்தம் நீங்கிய மயில் போல |
| மனமகிழ் முனிவர் முன்னர் | = | அகத்தே எஞ்ஞான்றும் சந்தோஷமுடையவர் களாய் மகரிஷிகளின் சந்நிதியில் |
| வாய்மொழி அமைந்து நின்ருன் | = | தூஷ்ணீம்பூதமாக இருந்தனர் (அஃதாவது ஒன் றும் பேசாதிருந்தனர்.) |

வைராக்கியப்பிரகரணம் முற்றிற்று,

ஆக விருத்தம் 136

# ஞானவாசிட்டம்

# சுகர் கதை

## அவதாரிகை.

(வைராக்கியப் பிரகரணத்தில் சுகர்கதை) ஸ்ரீ இராமரது இந்த வாக்கியாமிர்தங்கள் தாமாக விசாரஞ் செய்யும் ஆற்றலில்லாத முமுக்ஷுக்களுக்கு உபதேசரூபமாயிருத்தலின் ஆதர அப்யாசங்களால் உயர்வாகக் கருததக்கனவெனக் குறிக்கும் பொருட்டுப் புகழ்பவராய் அவர் மேலினும் வாதராயண ரமைதலினு அஃதாவது மநுடர்கட்கும் மேலாய தேவதைகட்கும் பிரஹ்ம வித்தையின் கண்ணே அதிகாரம் உளதாமென வாதராயண ஆசாரியர் அங்கீகரித்தலின்யென்னும் நியாய சித்தமாய் தேவதைகட்கும் கூறப்படும் பிரஹ்ம வித்தை அதிகாரத்தைத் தரிசிப்பிக்கும்பொருட்டு அவர்கள் மகிழ்ச்சியை ஸ்ரீ வான்மீகி பகவான் கூறத் தொடங்கல்.

மைம்மல மாமோகத்தை மாய்த்திடும் புதுமைத்தான
செம்மல்வா சகங்கள் கேட்டுத் திருந்தவை யிருந்தோ ரெல்லா
மிம்மொழி கேட்ப போல வெழப்புள குவகை மிக்கார்
விம்மல்சேர் சித்தர் சேணை விண்மிசைக் களித்த வன்றே (1)

| | | |
|---|---|---|
| மைம்மல்மா மோகத்தை | = | அஞ்ஞானமலமாகிய பெரிதான மோகத்தை |
| மாய்த்திடும் புதுமைத்தான | = | நிவர்த்தி செய்யும் அற்புத மகிமை வாய்ந்த |
| செம்மல் வாசகங்கள் | = | செம்மல் (அரசன்) ஈசன், செந்தாமரை இதழ் போலும் நேத்திரங்களையுடைய ஸ்ரீ இராகவரது திருவாக்கியங்கள் |
| திருந்து அவையிருந்தோர் எல்லாங்கேட்டு | = | மதி தெளிந்த சபையிலுள்ளோர் யாவருங்கேட்டு |
| இம்மொழி கேட்பபோல | = | ஸ்ரீ இராமபிரானது இனிய மொழிகளைச் சிரவணிக்க வருவனபோல |
| எழப்புளகு உவகை மிக்கார் | = | எழுந்துவாராநின்ற ரோமங்கள் சிலிர்த்து மிக மகிழ்வுற்றனர் |
| விம்மல் சேர்சித்தர்சேண் | = | திரளாகக்கூடிய சித்தர் கூட்டம் |
| விண்மிசைக் களித்தவன்றே | = | சந்தோஷத்தை அடைந்தன, |

நன்றுநன் றென்னுஞ் சொல்லு நன்மலர் மழையுங்கூடி
யொன்றியோர் கடிகை பாதி யிழிந்தபின் னூழி காலம்
வன்றுய ருழன்று சிந்தை மயங்கிய யாங்க ளெல்லா
மின்றிரா கவன்சொ லென்னு மின்னமு தமையப் பெற்றேம் (2)

நன்று நன்று என்னுஞ் = நன்கு நன்கு என்று நல்ல கோஷமும்
சொல்லும் நன்மலர்மழையுங் உற்சாகப்படுத்தும் தேவர்கள் இறைத்த நல்ல
கூடியொன்றி = வாசனைபொருந்தியபுஷ்பவிருஷ்டியும்ஒன்றுசேர்ந்து
ஓர் கடிகை பாதி இழிந்த அரை நாழிகை = கால் முகூர்த்தம் பெய்தன
பின்னர்
ஊழிகாலம் வன்துயர் கற்பபரியந்தம் வலியதுயரங்களை மிக மிகவு
உழன்று = மடைந்து
சிந்தை மயங்கிய யாங்கள் மனமயலுற்ற சித்தர் கூட்டங்களாகிய யாங்கள்
எல்லாம் = யாவருமே
இன்று இராகவன் சொல் இப்போது ஸ்ரீ இராகவர் இயம்பிய சொற்களாகிய
என்னும் இன் அமுது அமை நலமிக்க அமிர்தத்தைச் செவிகளில் சிரவணித்து
யப்பெற்றேம் = உய்ந்தோம்

திருந்திய விவன்சொ லாலே தெளிவுறு சிந்தை பெற்றேம்
பெருந்தகை முனிவர் சொல்லும் பொருளினிப் பெறுது மென்னுப்
பொருந்திய விண்ணி னின்று பூதலத் திழித லோடு
மிகுந்தபே ரவையோ ரெல்லா மெழுந்தெதிர் கொள்வதானர் (3)

திருந்திய இவன் அதி விசாரதிருஷ்டியோடு ரைத்த உபசம அமிர்த
சொல்லாலே = வாக்கியங்களாலே
தெளிவுறு சிந்தை பெற்றேம் = மிக நிர்மல மனத்தை அடைந்தோம்.
பெருந்தகை முனிவர் சொல் பரம மகத்துவத்தையடைந்த மகரிஷிகள் உபதேசிக்
லும் பொருள் = கும் நிர்ணயதத்துவத்தை
இனிப்பெறுது மென்ன = இப்போது கேட்டு பரமானந்தத்தை அடைவோம்
என்று கூறி
பொருந்திய விண்ணில் நின் தாங்களிருந்த ஆகாயத்திலிருந்து பூமண்டலத்தே
றும் பூதலத்துயிழித்லோடும் = யிலகும் தசரது புண்ணிய சபையை நோக்கி
இறங்கி வரவும்
இருந்த பேரவையோரெல் அந்த உயர்ந்த சபையின் கண்ணிருந்த பெரியோர்
லாம் = யாவரும்
எழுந்து எதிர்கொள்வ வந்தவர்கட்கு மரியாதை செய்யும் பொருட்டு
தானர் = எழுந்து எதிர்கொண்டு வணங்கினர்.

வந்துறு சித்தர்க் கெல்லாம் வசிட்டனுங் காதிசேயு
முந்துபூ சனைகள் செய்தார் முனிவருக் கவருஞ்செய்தார்
ரந்தநல் லவையின் வேந்து மருச்சனை யவர்க்குச் செய்தா
னந்துமன் னவர்க்கு மன்னர் நன்சொலாற் பூசை செய்தார் (4)

| | | |
|---|---|---|
| வந்துறு சித்தர்க்கெல்லாம் | = | ஆகாயத்தினின்றும் இறங்கி வந்த சித்தர்கள் யாவருக்கும் |
| வசிட்டானும் காதி சேயும் | = | ஸ்ரீ வசிஷ்டர் விசுவாமித்திரமகரிஷிகளிருவரும் |
| முந்து பூசனைகள் செய்தார் | = | முதலில் முறையே அர்க்கியங்களாலும் பாத்தியம் நன்மொழிகளாலும் பூஜித்தனர். |
| முனிவருக்கு அவருஞ் செய் தார் | = | ஸ்ரீ வசிஷ்ட விசுவாமித்திர மகரிஷிகட்கு அச்சித்த சேனைகளும் பூஜை ஆதரவோடு செய்தார்கள் |
| அந்த நல் அவையின் வேந்தும் | = | ஐஸ்வரியம் விருத்தியாகப் பெற்ற அந்த தசரத பூபதியும் |
| அருச்சனை அவர்க்குச் செய் தார் | = | சர்வ ஆதரத்தோடும் சித்தருக்கு அர்ச்சனை செய்தனன் |
| நந்து மன்னவருக்கும் | = | கீர்த்தி மிக்க தசரத அரசருக்கும் |
| அன்னார் நன் சொலால் பூசை செய்தார் | = | அச்சித்தர் குசலப்பிரசின வார்த்தையால் இன்மொழிகளாலும் அக்காலத்துக்கேற்ற கதைகளாலும் மகிழ்வித்தனர். |

1 3
தொழுதுமுன் னிருந்த செங்கட் டோன்டற்கு முபசாரங்கள்
2 4
பழுதில்பூ மழையா னல்ல மொழிகளாற் பரிந்துசெய்து
விழுமிய குணத்தான் மிக்கோன் விரத்தியாய் விளம்புஞ் சொற்கள்
முழுதுநல் லுதார மாகி முடிவிலற் புதமா மென்றார். (5)

| | | |
|---|---|---|
| தொழுது முன்னிருந்த | = | நமஸ்கரித்துச் சந்நிதானத்தில் நின்றுகொண்டிருந்த |
| செங்கண் தோன்றற்கு | = | செந்தாமரைபோன்ற நேத்திரங்களையுடைய ஸ்ரீ இராகவருக்கும் |
| பழுதில் பூமழையால் நல்ல மொழிகளால் உபசாரங்கள் பரிந்து செய்து | = | அவையின்கண்ணுள்ள நாரதாதி ரிஷிகள் குற்றமற்ற புஷ்ப விருஷ்டியாலும் சாது வாதத்தாலும் மரியாதைகள் மிகவும் அன்புடன் செய்து |
| விழுமிய குணத்தான் மிக்கோன் | = | பெருமை வாய்ந்த அனந்த கல்யாணகுணங்கட்கு ஆதாரமாக மேன்மை மிக்க இக் குமரன் |
| விரத்தியாய் விளம்புஞ் சொற்கள் | = | வைராக்கிய ரசம் நிறைந்தனவாய்க் கூறும் வாக்கியங்கள் |
| முழுதுநல்லுதாரமாகி | = | அத்தியந்தம் ஆழ்ந்த கருத்துடையதாய் |
| முடிவில் அற்புதமாமென்றார் | = | அளவில்லாத விஸ்மயத்தைக் கொடுப்பனவாம் என்று கூறினார்கள். |

2 1
ஈசனே படைத்த தாகி யெண்ணிறீ முயற்சி மிக்க
3 5 4
மாசுறு மாயை தன்னில் வருசுக மரிது சாலத்
6
தேசுறு சதுரச் சிந்தைச் செல்வனுக் குணரற் பாற்றேற்
பேசுறு நாங்க ளெல்லாம் பேதைய ரென்னச் சொன்னார். (6)

| | | |
|---|---|---|
| மிக்க ஈசனே படைத்ததாகி | = | தைவ நிர்மாண நிர்மிதமாகி |
| எண்ணில் தீமுயற்சி | = | அளவில்லாத கொடிய துர்வடிவமாய் |
| மாசுறு மாயைதன்னில் | = | குற்றம் பொருந்திய சம்சாரத்தின்கண் |
| வருசுகம் சால அரிது | = | வாராநின்ற ஆன்ம சுகம் அத்தியந்த துர்லபமாக விருக்கின்றது |
| தேசுறு சதுரச்சிந்தை செல்வனுக்கு | = | விவேகமுடையவரும் உதார கம்பீர வடிவும் சத்துவ மனமும் உடையவராகிய ஸ்ரீ இராமபிரானுக்கு |
| உணரற்பாற்றேல் | = | உணரவேண்டிய பரம்பொருளை உணர்த்தாமல் உபேக்ஷிப்போமேயானால் |
| பேசுறு நாங்களெல்லாம் பேதையரென்னச் சொன்னார் | = | எல்லோராலுங் கீர்த்திக்கத்தக்க நாம் யாவரும் கெட்ட மதியுடையவர்களாவோம் என்று கூறினார்கள். |

1 3
ஈதவ ருரைத்த பின்ன ரிராமனை யினிது நோக்கிக்
2 4
காதிசே யுரைப்பா னீயே களங்கமில் புந்தியாலே
தீதற வனைத்துங் கண்டாய் தெளிவுறப் பிறிதொன் றில்லைப்
போதமார் சுகனும் நீயும் புந்தியா லொப்பீ ரன்றே. (7)

| | | |
|---|---|---|
| ஈதவர் உரைத்த பின்னர் | = | இவ்வண்ணம் அச்சபையிலுள்ள மகரிஷிகள் கூறிய பின்னர் |
| காதிசேய் | = | ஸ்ரீ விசுவாமித்திரர் |
| இராமனை இனிது நோக்கி உரைப்பான் | = | முன்னர் இருந்த இராகவரை நன்கு நோக்கிக் கூறுவதாவது |
| நீயே களங்கம் இல் புந்தியாலே | = | நீதானே மாசற்ற அதிசூக்கும மதியினனே |
| தீதற அனைத்துங் எண்டாய் | = | விபரீதமில்லாமல் அறியவேண்டிய வஸ்து அனைத்தும் அறிந்தாய், |

(ஆதலின்) தெளிவுறைப் பிறிதொன்றில்லை = ஆதலின் அறிந்துகொள்ளத் தக்கதாக அயலொன்றையுங் காணேம்

போதமார்சுகனும் நீயும் புந்தியாலொப்பீர் = ஞானமயமான ஸ்ரீ வியாசபகவானுடைய புத்திரரான சுகமுனிவரும் நீயும் உன் மனதால் அறிய வேண்டியவற்றையும் அறிந்தபோதினும் உள்ளே விசிராந்திமாத்திரத்தை விரும்புதலால் ஒப்பாக விருக்கின்றீர்.

## அவதாரிகை

தமது மதியினானே விசாரித்தினிதுணர்ந்தும் தந்தையானுபதேசிக்கப்பெற்றும் நம்பிக்கையற்றவராகி ஜனகரது உபதேசத்தால் சுகர் தத்துவத்தில் இளைப்பாறினாரென்று கூறத்தொடங்கினார் :

இகலற வுணர்வுற் றோனும் மிளைப்பற நயந்தா னென்று
மகமுனி யுரைப்பக் கேட்ட வள்ளலு முரைப்பா னையா
வகமறு முணர்வுண் டாயு மாறுதன் முன்ன மின்றி
3 1 4 2 5
சுகமுறப் பின்னுண் டான தெங்ஙனஞ் சுகனுக் கென்றான். (8)

இகலற வுணர்வுற்றோனும் இளைப்பு அற நயந்தான் என்று மகமுனியுரைப்ப = விபரீதமில்லாமல் அறியவேண்டிய வஸ்துவை அறிந்தவனாயிருந்தபோதினும் விசிராந்தியடையாமல் மீண்டும் விசிராந்தியை அடைந்தான் என்றுயாக தற்பரரான விசுவாமித்திரர் கூற

கேட்ட வள்ளலும் = வினவிய ஸ்ரீ இராகவரும்

உரைப்பான் = கூறுவதாவது

ஐயா = ஹே தேசிகோத்தமரே !

அகமறும் உணர்வு உண்டாயும் ஆறுதல் முன்னமின்றி = தற்போதமிழந்த ஞானமானது உற்பத்தியாகியும் விசிராந்தியானது முன்னர்க்கிட்டாமல் பின்னர் பிரஹ்மானந்தம்

பின் சுகமுற சுகனுக்கு எங்ஙனம் என்றான் = பெறுமாறு விசிராந்தியுண்டானது சுகருக்கு எங்ஙனமென்று கேட்டனர்.

என்னலு முனிவன் சொல்வா னெழுபிறப் பறுக்கு ஞானந்
துன்னிய சுகனு நின்போற் றெல்லுல கியல்யை நாடி
மன்னிய விவேக முண்டாய் மாசறு முணர்வு பெற்று
மன்னிலை யைய மாகி யாறுத லற்றா னன்றே. (9)

என்னலும் முனிவன் சொல்வான் = என இராகவர் வினவுதலும் ஸ்ரீ விசுவாமித்திர மகரிஷி கூறுவதாவது ;

| | | |
|---|---|---|
| எழுபிறப்பறுக்கும் ஞானம் | = | சுர நர திரியக்காதி எழுவகைப் பிறவித் துன்பத்தைப் போக்கும் பிரஹ்ம வித்தையை |
| துன்னிய சுகனும் | = | விசாரதிருஷ்டியினுலே சுலபமாக அடைந்த் சுகப் பிரஹ்ம ரிஷியும், |
| நின்போல் | = | உன்னைப்போலவே |
| தொல் உலகியல்பைநாடி | = | அனுதி அனிர்வசனீயமாய உலகின் அசுத்தம் துக்கம் அநித்தியத்தன்மையை ஆராய்ந்து, |
| மன்னிய விவேகம் உண்டாய் | = | நிறைந்த விவேகமானது உதயமாகி |
| மாசு அறும் உணர்வுபெற்றும் | = | விபரீதமில்லாத பூர்ண ஞானத்தைச் சுயமாகவே யடைந்தும் |
| அந்நிலை ஐயமாகி ஆறுத தலற்ருன். | = | அந்தச் சொரூப நிலைமையானது சம்சயத்தாலே பிறழ்ச்சியையடைந்து சித்த விசிராந்தியை அடைந்தானில்லை, |

விடலறு மசைவு விட்டு விடயத்தின் மீண்ட நெஞ்சன்
வடவரை யுறையுந் தாதை மருங்குற வெய்தி யிந்த
விடருறு மாயை வந்த தெங்ஙன மிறப்ப தெங்ஙன்
தொடர்பிலா ருடைய தெம்மட் டென்றிது தோன்றிற் றென்ருன் (10)

| | | |
|---|---|---|
| விடல் அறும் அசைவு விட்டு | = | விடுதற்கு முடியாத தான சஞ்சலத்தை விடுத்து |
| விடயத்தில் மீண்ட நெஞ்சன் | = | சர்வ போகங்களிலும் நிவர்த்தியான மனத்தையுடைய அச் சுகன் |
| வடவரையுறையுந் | = | சுமேருபர்வதத்தில் ஏகாந்தமாக |
| தாதை மருங்குற எய்தி | = | வெழுந்தருளியிருக்கும் தந்தையினது சமீப சந்நதியை அடைந்து |
| இந்த இடர் உறும் மாயை | = | இந்தத் துன்பமயமான சம்சார ஆடம்பரம் |
| எங்ஙனம் வந்தது | = | எம்முறையாக உண்டாயது |
| எங்ஙனம் இறப்பது | = | எவ்வாறு நாசமாகும் |
| தொடர்பு இல் யாருடையது | = | தொடர்பில் எவரையுடையது அபிமான ஆசிரயம் ஜீவனைப் பற்றியது தொடர்பு இல் எவரையுடையது அதிஷ்டான ஆசிரயம் ஈசுவரன் ஆசிரயமாக உடையது |
| எம்மட்டு | = | எதுவரை உளதாம் |
| என்று இது தோன்றிற்று | = | எக்காலத்து இது தோன்றியது. |
| யென்ருன் | = | என்று சீட விதிப்படி வினவினன், |

அன்னவன் கேட்ட வெல்லா மறிவுற வுரைத்த போது
முன்னநா னுணர்ந்த வாறே மொழிந்தனை யெனவச் சொல்லா
னன்னிலை பெருமை கண்டு நல்லுணர் வெனக்குத் தோன்ற
மன்னவன் சனக னென்பான் வழுவறு முணர்வின் மிக்கோன் (11)

❋

ஆயவன் றனையே கேட்கென் றருளொடு தாதை யேவப்
போயினன் சனகன் வாழும் பொன்மனை வாயிற் சேர்ந்தான்
றூயவன் வரவு கேட்டுச் சோதிப்பான் கருதி மன்ன
னேயின னில்லை நாளே ழிருந்தனன் விகற்பமில்லோன் (12)

| | | |
|---|---|---|
| அன்னவன் கேட்டவெல்லாம் அறிவுற உரைத்தபோது | = | அந்த மைந்தன் வினவிய யாவற்றிற்கும் ஞானம் உதயமாமாறு உபதேசித்தபோது |
| முன்னம் நான் உணர்ந்த வாறே | = | பூர்வம் அடியேன் தெரிந்திருந்த பொருளையே |
| மொழிந்தனையென | = | நீருங்கூறினீர் என்று கூற |
| அச்சொல்லால் | = | கூறிய அம்மொழிகளால் |
| நன்நிலை பெருமை கண்டு | = | சம்சயமற்ற சுபாவ சொரூபஸ்திதியை அடையாதது கண்டு |
| நல் உணர்வு எனக்குத் தோன்ற | = | சம்யக்ஞானம் எனக்கு நன்ருக இலங்காதாதலின் |
| மன்னவன் சனகன் என்பான் | = | ஜனகராஜாவென்று ஒருவர் மிதிலையில் இருக்கின்ருர் |
| வழுவறும் உணர்வில் மிக்கோன் | = | ஐயந்திரிபுஇன்றி உள்ளபடியே எல்லாம் உணர்ந்தவர் அவர் |
| ஆயவன்றனையே கேட்க வென்று | = | உணர்வில் மிக்க ஜனகராஜாவையே வினவித் தெரிய விரும்பியதைத் தெரிந்துகொள்ளுதியென்று |
| அருளொடுதாதை யேவ | = | பரம கருணையோடு நல்லாசி கூறி வழியனுப்ப |
| போயினன் | = | மிதிலை சென்றனன் |
| சனகன் வாழும் பொன்மனை வாயிற் சேர்ந்தான் | = | ஜனகமகாராஜன் எழுந்தருளியிருக்கும் ஐஸ்வரியம் நிறைந்த அரண்மனை வாயிலில் வந்து சேர்ந்தான் |
| தூயவன் வரவு கேட்டு | = | பரிசுத்த பிரமசரியமுடைய சுகர் வந்து வாசலில் நிற்பதாகச் சேவகர்களால் கேள்வியுற்று |
| சோதிப்பான் கருதி | = | பரீக்ஷிக்க வேண்டுமென்று உத்தேசித்து |
| மன்னன் ஏயினனில்லை | = | அரசர் போய் அழைத்து வரவில்லை |
| விகற்பமில்லோன் | = | விகற்பம் ஒழிந்த அச்சுகர் |
| நாள் ஏழு இருந்தனன் | = | தினம் ஏழு பரியந்தம் அவ்விடத்திலேயே நின்றனர் |

மற்றுநா ளேழும் வேருே ரிடத்துற வைத்த பின்னர்ப்
பொற்றிர ளழகா ரந்தப் புரத்திசை நாளேழ் வைத்துச்
சிற்றிடை மகளிர் போகஞ் சிறந்தவூ ணளிப்பத் துய்த்தான்
குற்றமுங் குணமு நாடான் குளிர் நிறை மதிய மொத்தான் (13)

| | |
|---|---|
| மற்று நாள் ஏழும் வேருேரி டத்துறவைத்த பின்னர் = | அதன் பின்பு சப்த தினங்கள் வரை மற்ருேர் அங் கணத்தின்கண்ணே இருக்கும்படியாக நியமித்து பின்பு |
| பொற்றிரளழகு ஆர் அந்தப் புரத்திடை நாள் ஏழ் வைத்து = | பொன் முதலிய ஐஸ்வரியங்கள் நிறைந்து அழகு வாய்ந்த உள் அங்கணத்தின் கண்ணே ஏழு தினம் இருக்கும்படி செய்வித்து |
| சிற்றிடை மகளிர் போகம் சிறந்த ஊண் அளிப்ப துய்த்தான் = | சிறிய இடையையுடைய மங்கையர் போகமும் அறுவகையாய ரசங்களோடுற்ற நால்வகை உண் டியையும் ஈயும்படி செய்விக்க அநுபவித்தான் |
| குற்றமும் குணமும் நாடான் = | தோஷத்தையேனும் நன்மையையேனும் நண்ண யில்லை, |
| குளிர் நிறை மதியமொத் தான் = | தண்ணென்று நிறைந்த பூரண சந்திரனுக்குச் சமா னமாக விளங்கினன். |

மன்னவன் சனகன் றந்த போகத்தின் மகிழ்ச்சி யாவு
மன்னவன் முன்னஞ் செய்த வவமதித் துன்ப மியாவு
மின்னவன் மனதைச் சற்று மிழுத்தில விளமென்றென்றல்
பொன்னச லத்தின் மிக்க பொருப்பினை யிழுக்க வற்ருே (14)

| | |
|---|---|
| மன்னவன் சனகன் தந்த போகத்தின் மகிழ்ச்சியாவும் = | இராஜாதிராஜ ஜனகர் தரும்படி செய்வித்த போகங்களின் மகிழ்ச்சியைத் தரத்தக்க விருப் பத்தையும், |
| அன்னவன் முன்னஞ் செய்த அவமதித்துன்பம் யாவும் = | அவ்வரசர் பூர்வஞ் செய்வித்த அவமானத்தாலாய துன்பத்தைத் தரத்தக்கருவறுப்பையும் |
| இன்னவன் மனதைச் சற்றும் இழுத்தில = | இச்சுகமகரிஷியின் உள்ளத்தை ஒரு சிறிதும் அசைத்திலவாம் |
| பொன் அசலத்தின் மிக்க பொருப்பினை இழுக்க = | சுமேருவைப் பார்க்கினும் அதிகமாகத் தோன்றி நிற்கும் |
| வற்ருே = | பர்வதத்தை அசைக்கமுடியுமோ? |

## அவதாரிகை

சுகரை மரியாதையுடன் அழைத்து வந்த காரியம் வினவினுரென்கின்ருர்.

2 1 3
ஆங்கவ னிலைமை நோக்கி யடிபணிந் தரசன் போற்றித்
தாங்குல கத்தின் செய்கை தவிர்ந்துபே றனைத்தும் பெற்ருே
யீங்குறு பொருளே தென்ன வெங்ஙன மாயை தோன்றிற்
ருேங்கிய தெங்ஙன் போவ துள்ள வா றுரைசெய் யென்ருன் (15)

அரசன் ஆங்கு அரசன் நிலைமை நோக்கி = அவ்விடத்தில் மன்னவனுகிய ஜனகர் அச்சுகர் இருந்த நிலைமையைப் பார்த்து
அடிபணிந்து போற்றி = திருவடியில் முறையே நமஸ்காரஞ் செய்து
தாங்கு உலகத்தின் செய்கை தவிர்ந்து பேறனைத்தும் பெற்ருேம் = இர்ஜோ குணதமோ குணவிசிட்டனுல் இரக்ஷிக்கும் உலக காரியமனைத்தையு மறந்து சர்வ பிரயோஜனங்களையும் அடைந்த பெரியோய்
ஈங்குறுபொருள் ஏது என்ன = இவ்விடத்திற்கு என்னை நாடி வந்த காரியம் யாது என்று கேட்க
எங்ஙனம் மாயை தோன்றிற்று = எவ்வாறு இச்சம்சார ஆடம்பரம் எழுந்து வந்தது
ஓங்கியது எங்ஙன் போவது = விஸ்தரித்த இது எவ்வாறு உபசாந்தி அடையும்
உள்ளவாறு உரை செய் உள்ளபடியே அனுக்கிரகிக்க வேண்டுமென்றனன்

## அவதாரிகை

ஸ்ரீ சுகர் வினவியதற்கு மன்னவர் விடை கூறுதலும் சுகர் அங்கீகரித்தலும் கூறப்பெறுகின்றது.

மெய்ம்முறை முனிவன் கேட்ப வேந்தனும் வியாசன் சொன்ன
அம்முறை யுரைத்த லோடு மறிஞனும் விவேகத்தான் முன்
னிம்முறை யறிந்தே னீயு மெந்தையு மதுவே சொன்னீர்
மொய்ம்முறை நூல்க ளெல்லா மொழிபொரு ளொன்றே யென்ருர் (16)

மெய்ம்முறை முனிவன் கேட்ப = உண்மையான மார்க்கத்தைக் கேட்க வேண்டிய நெறியே மனனசீலராகிய சுகர் வினவ
வேந்தனும் வியாசன் சொன்ன அம்முறை உரைத்தலோடும் = ஜனகராஜாவும் ஸ்ரீ வியாசர் கூறிய அந்தப்பிரகாரமே அனுக்கிரகித்த மாத்திரத்தில்
அறிஞனும் = விவேகியாகிய சுகரும்

விவேகத்தால் முன்இம்முறை அறிந்தேன் = விவேகமாகிய விசாரத்தாலே பூர்வம் சுயமாகவே இந்தநெறி இத்தகையதெனத் தெரிந்து கொண்டேன்

எந்தையும் நீயும் = யான் முன்னர் வினவியபோது என் தந்தையும் இப்போது தாங்களும்

அதுவே சொன்னீர் = யான் நிர்ணயித்த வண்ணமே உபதேசித்தீர்கள்

மொய்ம்முறை நூல்களெல்லாம் மொழி பொருள் ஒன்றேயென்றார் = கூட்டமாயுள்ள வேதங்களும் அதனை அனுசரித்த மற்றைய அத்தியாத்ம சாஸ்திரங்களும் சொல்லப் பட்ட அர்த்தம் ஒன்றேயாமென்றார்.

2 1 3

தன்னுள்விகற் பித்தெழுந்த விகற்பம்போகிற் றவிர்ந் திடுமாயையிற் பயனோர் சற்றுமில்லை

யின்னவகைத் தோருண்மை யியம்பவேண்டு மியாவர்ம யக்கமுமாற்று மிறைவவென்ன

மன்னனதற் குரைசெய்வான் முனிவ நீயேமதித்துணர்ந்தும் பிதாவுரைக்க மறித்துங் கேட்டா

யன்னிலையே நிச்சயமிங் ககண்டஞான வாகாய புருட னுளனயலொன் றில்லை. (17)

தவிர்ந்திடும் மாயை தன்னுள் விகற்பித்தெழுந்த விகற்பம் போகில் இல்பயன் ஓர் சற்றுமில்லை = சம்சாரம் தன்னிடத்தில் மனோராஜ்ய முதலிய விகற்பத்தால் எழுந்ததாம் விசாரத்தால் விகற்புத்தாலா சம்சாரம் இதில் ஒரு சிறிதும் பிரயோஜனமில்லை சரீரமற்றதாம்

இன்னவகைத்து ஓர் உண்மை இயம்பவேண்டும் = இந்தப்பிரகாரம் என்றால் முன்னரே சுயமாகவே விசாரத்தால் அறியப்பெற்றது இத்தகைய ஐயப்பாடுற்ற விஷயத்தில்ஒப்பற்றசத்தியத்தை சஞ்சலம் நீங்கும்படி இதுதான் துணிபு என அருளல் வேண்டும்

இயாவர் மயக்கமும் மாற்றும் இறைவ என்ன = லௌகீக வைதீக பிரஜைகளின் மயக்கங்களை மாற்றியருளும் அரசரே உம்மால் யான் இதைப்பெற வேண்டுமென்று சுகர் கூற

மன்னன் அதற்கு உரை செய்வான் = அரசர் பெருமான் அவ்வினாவிற்கு விடை கூறுவதாவது

முனிவ நீயே மதித்துணர்ந்தும் பிதா உரைக்க மறுத்துங் = மனனசீலராகிய நீரே நிச்சயித்து தெரிந்து கொண்டும் உமது தந்தை வியாசபகவான் உபதேசிக்க மீண்டும் கேள்விகளைக்கேட்டனை ஹே முனிவரே நீர் உணர்ந்ததைப் பார்க்கினும் அதிமேன்மையானது யாதொன்றும் வேறு நிச்சயிக்கத் தக்கதாயில்லை

அந்நிலேயே நிச்சயம் = அந்த மெய்யான ஸ்திதியே நிண்ணயமான தென்றறிதி
இங்கு அகண்டஞான = இவ்விடத்தில் கண்டிதப்படாத சிதா
ஆகாய புருடன் உளன் = காச புருடனே யிருக்கின்ருனன்றி
அயலொன்றில்லே = மற்ருெரு பொருளும் இல்லவே இல்லே

அவ்வறிவு சங்கற்பத் தாற்கட் டுண்ணு மதுவிடில்வீ டுறு அந்தவறிவு தன்னேச்

3 2 4
செவ்விதினீ யறிந்தனேயாற் போகந்திச்சை செகக் காட்சியனேத்தினேயும் தீர்தியாறு

யெவ்வம்ற நிறைமனத்தா லடையற்பால யாவும டைந்தாய் காட்சிக்கெட்டா தொன்றில்

கவ்வையற வடைகின்ருய் முத்தனுய்க் கருத்தி னுறுமயக்கமெனுங் கவலே தீர்வாய் (18)

அவ்வறிவுசங்கற்பத்தால் கட்டுண்ணும் = அந்தச்சிற் சொரூபமானது நான் எனதென்னுஞ் சங்கற்பவசத்தால் பந்தப்படும்
அது விடில் வீடுறும் = அச்சங்கற்பம் ஒழியில் மோக்ஷமுறும்
அந்த அறிவு தன்னே = அறியத்தக்க அந்த பரம்பொருளே
நீ செவ்விதி அறிந்தனே = தேவரீர் மிகத்தெளிவாக சாக்ஷாத்கரித்திருக்கின்றீர்
போகத்திச்சை செகக்காட்சி அனேத்தினேயுந்தீர்தி = போகங்களினின்றும் இச்சை தீர்ந்துள்ளீர் உலக திருசியமெல்லாவற்றினும் நாட்டம் தீர்ந்துள்ளீர்
எவ்வம் அற நிறைமனத்தால் = சலனம் நீங்கிப் பரிபூரணமனத்திஞலே
அடையற்பால யாவும் அடைந்தாய் = அடைய வேண்டிய அகிலத்தையும் அடைந்துள்ளீர்
காட்சிக்கெட்டாதொன்றில் = பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்கதீதமான வஸ்துவின்கண்ணே
கவ்வையற அடைகின்ருய் = களங்கமில்லாமல் உபஸ்திதி பெற்றிருக்கின்றீர்
முத்தனுய் = கேவலம் மோக்ஷ சொரூபமாகவே விளங்குகின்றீர்
கருத்தில் உறும் மயக்கம் யெனும் கவலே தீர்வாய் = சித்தத்தின் கண்ணேயுள்ள பிராந்தியாகிய கவலேயை விட்டொழிப்பீராக.

1 3
சனகனெனு மன்னவர்கோ னிவ்வாருேதத் தன்னிலேயாம் பரம்பொருளிற் றளர்சி யாறி

2 4
யனகசுகன் பயநீங்கிச் சோகமாறி யயர்வகன்று செயலடங்கி யையந் தீர்ந்து

கனகவரை யேறிநிருவிகற்ப மானகலங்காத சமாதியிற் [6] சிற்ககனத்துற்ருன்
[5] தினகரனைச் செறிவருட மீரைஞ்நூற்றிற் றிரியொரு நெய்ம்மாண்டவிந்த
தீபம் போன்றே. (19)

| | | |
|---|---|---|
| சனகனென்னும் மன்னவர் கோன் | = | மகான்மாவாகிய ஜனகராஜா |
| இவ்வாறு ஓதத் | = | ஞான அடைவினுனே பிரதிபந்தமெனப்பட்டதன் பால் அதிஷ்டானத் தன்மையைக்கண்டு |
| தன்நிலையாம் பரம்பொருளிற் | = | தன் வடிவமாகிய பரம வஸ்துவின்கண்ணே |
| தளர்ச்சியாறி அனகசுகன் | | விசிராந்தியையடைந்து அகங்காரமின்றி சுகன் |
| பயநீங்கி | = | அச்சம் நீங்கி |
| சோகம் ஆறி அயர்வு அகன்று | = | சோகத்தை விட்டு ஆயாசம் அகன்று |
| செயல் அடங்கி ஐயம் தீர்ந்து | = | பரம உபரதியுற்று சந்தேகங்கள் ஒழிந்து |
| தினகரனைச் செறிவருடம் | = | சூரிய சம்பந்தமாய் வரும் வருடங்கள் |
| ஈரைஞ்னூற்றில் | = | ஆயிரங் கழிந்தபின்னர் |
| திரியொடுநெய் மாண்டவிந்த | = | திரியும் எண்ணெய்யும் தீர்ந்து |
| தீபம் போன்று | = | அணைந்த விளக்கேபோல |
| சிற்ககனத்துற்ருன் | = | சிதாகாச ஆன்மாவின்கண்ணே விதேகமுத்தியை அடைந்தார். |

சிந்தனையாங் களங்கமறச் சுத்தனுகித் திரைகடலிற் செறிந்தொன்ருந் திவலைபோல
வந்துறுவா தனைபோய்த்தற் பதத்தொன்ருனன் மாயாமோகந் தீர்ந்துவருத்தந் தீர்ந்தான்
னந்தநெறி யுனக்குமா மறிவதெல்லா மறிந்தமனத்திற் குரிய வடைவே தென்னிற்
சந்ததமு மகிழ்சிசெறி போகமெல்லாந் தனதென்னுஞ் சுதந்தரத்தை தவிர்ந்து நிற்றல். (20)

| | | |
|---|---|---|
| சிந்தனையாங்களங்கம் அற சுத்தனுகி | = | சங்கற்பமூலமான அஞ்ஞானம் ஒழிந்து பரிசுத்தனுய் |
| திரைகடலிற் செறிந்தொன்ருந் திவலைபோல | = | அலைகடலதனில் தூளியானது சேர்ந்து ஐக்கிய பாவத்தை அடைதலே போல |
| வந்துறு வாதனை போய் | = | வந்து சேர்ந்திருந்த வாதனைகள் நீங்கி |
| தற்பதத்து ஒன்ருனன் | = | அமலபரமான்மாவின்கண்ணே ஐக்கியத்தையடைந்தான் |

மாயா மோகந் தீர்ந்து வருத்தந் நீர்ந்தான் = மாயையாலுண்டாகியிருந்த மோகம் போய்ச் சோகங்களெல்லாம் விட்டொழித்தான்

அந்த நெறி உனக்கும் ஆம் = அந்த மார்க்கம் உனக்கும் ஆம் அதிகம் வேண்டுவதில்லை

அறிவதெல்லாம் அறிந்த மனத்திற்குரிய அடைவு யேதென்னில் = தெரியவேண்டியதைத் தெரிந்த சித்தத்திற்குப் பொருத்தமான இலக்கணம் யாது என்றால்

சந்ததமும் மகிழ்ச்சி செறி போகமெல்லாம் = எப்போதும் சந்தோஷத்தைப் பயக்கும் போகங்கள் யாவற்றிலும்

தனதென்னுஞ் சுதந்தரத்தை தவிர்ந்து நிற்றல் = தன்னுடையவென்பதான சுதந்திர மதியை தியாகஞ்செய்து சொஸ்தமாகியிருத்தலேயாம்.

2 1 3
போகமுறு பாவனையாற் பொருளல்லாத பொருளிலெழு பந்தநிலை
பொருந்த வன்பாஞ்
சோகமுறு பாவனைதான் சாந்தமாகிற் றுயர்பந்த மிகத்தேய்ந்து
துலைந்து போகு
மிராகவனே வாதனையி னேர்மைவீடா மிகப்பொருளின் வாதனையி
னிறுகல் பந்தஞ்
5 4 6
சேகறவென் றவர்கேது வின்றிப் போகத்திரள் வெறுப்பா மேலவரே
சீவன்முத்தர். (21)

பொருளல்லாத பொருளில் எழுபோகமுறு பாவனையால் = ஆன்ம வஸ்து அல்லாத தேகாதிகளில் எழும்போக ஏதுவான

பந்தநிலை பொருந்தவன்பாம் = அசுத்த வாசனை மிகவுந் திடமுடையதாம்

சோகமுறு பாவனைதான் சாந்தமாகில் = துயர் செய்யும் பாவனையானது உபசாந்தியுற்றால்

துயர்பந்த மிகத் தேய்ந்து துலைந்து போகும் = துக்கமய சம்சாரம் அத்தியந்தந் தேய்ந்துபோய் அடியோடு அழிந்து போம்

இராகவனே வாதனையின் நேர்மை வீடாம் = ஹேரகுநந்தன வாசனக்ஷயமே முத்தியாம்

இகப்பொருளின் வாதனையி னிறுகல் பந்தம் = காணப்பட்ட இகலோக பரலோக பொருள்களின் திடவாசனையே பந்தம்

ஏதுவின்றி சேகு அறவென்ற வர்க்கு = ஜயித்தவருக்கு கீர்த்தி முதலியகாரணங்களை முன்னிட்டு வராமல் அத்தியந்தம் நீங்கும்படி ஜெயித்தவருக்கு

போகத்திரள் வெறுப்பாம்மேலவரே சீவன் முத்தர் = போகக் கூட்டங்களில் இயல்பாகவே அசுத்தம் துக்கம் அநித்தியமென்று வெறுப்பு ஆம் அத்தகைய பெரியோரே ஜீவன் முத்தர் ●

1
இராமன்மனத் துணர்பொருளே பொருள் வேறில்லையென வுயர்ந்தோர்வாக்கினு லியம்பக்கேட்டு
3 2 4
மாமனத்தி னிளைப்பாறி யையநீங்கு மகத்தான விவனுக்கு மதித்துச் சொல்வா
6 5 7
னேமமுறு காலமூன் றறிந்தோனுகி யிரவிகுல குருவாகி யெல்லா நோக்கி
நாமவுரு வனைத்துக்குஞ் சான்றுய்நின்ற நல்வசிட்டனென சபையி னவின்ற பின்னர் (22)

இராமன் மனத்துணர் பொருளே பொருள் வேறில்லை என = இராகவன் மனத்தில் உணர்ந்த பொருளே பொருள் அயல் இல்லை என்பதாக.

உயர்ந்தோர் வாக்கினல் இயம்பக் கேட்டு ஐயம் நீங்கும் இளைப்பாறி = சத்துக்களின் திருவாக்கினுலே கூற ச்சிரவணித்து சம்சயம் நீங்கி விசிராந்தியடைந்து சுகரூபமாவன்.

மகத்தான இவனுக்கு மதித்துச் சொல்வான் = பேரதிகாரியாமிவன் மதியை அநுசரித்து உபதேசிக்கக்கூடியவர் யாரென்றால்

காலம் மூன்றறிந்தோனுகி ஏமமுறு இரவிகுல குருவாகி எல்லாம் நோக்கி = திரிகாலங்களிலுமுள்ள யாவற்றையும் நன்கு அறிந்தவராகி க்ஷேமம் அடைவிப்பவராய் சூரிய வம்ச அரசருக்கெல்லாம் குலகுருவாய்ச் சர்வ சரஸ்திரங்களையுமுணர்ந்து

நாமவுருவனைத்துக்குஞ் சான்ருய் நின்ற = சர்வ நாம ரூபங்கட்குஞ் சாக்ஷியாய் இலங்கா நின்ற

நல்வசிட்டன் என = பிரம்மாவின் புத்திரராகிய மைத்திசரியாதி குணங்கள் நிறைந்த வசிட்டரே என்று,

சபையில் நவின்ற பின்னர் = ஹே முனீசுரர்களேயென்று அப்பேரவையின் கண்ணே கூறினர் கூறிய பின்னர்

நல்வசிட்டன் முகநோக்கி யுணர்தி யோமுன் னுமிருவர்பகை நீங்க நல்லோரெல்லாந்
தொல்வினைபோய் முத்திபெறக் கமலவேதா சொன்னதனிஞானத்தின் தொகுதி யெல்லாங்
கல்விமிகு மிராமனுக்குச் செப்பல்வேண்டுங் காதறீர்மாணுக்கன் கருத்திற் சொல்லுஞ்
செல்வவுப தேசமே ததுவே ஞானச்செழு நூலின்பொ ருளுமிது சிறப்பு மீதே. (23)

| | |
|---|---|
| நல்வசிட்டன் முகம் நோக்கி = | சத்துவசீலராய்ப் பரம சாந்தராய ஸ்ரீ வசிட்டரது திருவதனத்தைப்பார்த்து |
| உணர்தியோமுன் நாம் யிருவர் பகை நீங்க = | ஞாபகமிருக்கின்றதோ பூர்வம் நம்மிருவரின் வைர சாந்தியின் பொருட்டும் |
| நல்லோரெல்லாந்தொல்வினை போய் முக்திபெற = | உயர்ந்த மகாத்மாக்களெல்லாம் அநாதியாம் அஞ்ஞானம் நீங்கி மோக்ஷத்தையடையும் பொருட்டும் நிடதகிரியின் கண்ணே |
| கமலவேதா சொன்ன தனி ஞானத்தின் தொகுதியெல்லாம் = | தாமரையின்கண் வீற்றிருக்கும் வேதநாயகரான பிரமா உபதேசித்தருளிய ஞானம் ஞான சாதனங்களையெல்லாம் |
| கல்வி மிகும் இராமனுக்கு செப்பல் வேண்டும் = | வித்யா விநயகுண சம்பன்ன ஸ்ரீ இராகவருக்கு உபதேசித்தருளல் வேண்டும் |
| காதல் தீர்மாணுக்கன் கருத்தில் சொல்லும் = | சகல ஆசைகளையும் நீக்கிட உத்தம சீடனது மனத்தில் ஞான முதிக்கும்படி உபதேசிக்கும் |
| செல்வ உபதேசம் யேது அதுவே ஞானம் = | எந்நல்ல உபதேசமுண்டோ அதுவே ஞானமாம். |
| செழு நூலின் பொருளுமிது சிறப்பும் ஈது = | வளமை வாய்ந்த வேதாந்த சாஸ்திரத்தின் அர்த்தம் இதுவேயாம் |

காதல்செறி பொல்லாமா ணுக்கனுக்குக் கற்பித்தவுபதேசங் கருநாய்த் தோலுண்
மேதகுபா லெனவசுத்த மேவுமென்று மிகுகாதிசேய் பலவும் விளம்பக் கேட்டு
தீதறுநாரதன்வேத வியாதனுதித் திரண்முனிவர்நன்றி தெனச் சிறப்புச்செய்தார்
காதிபுதல் வனைநோக்கிக் கமலத்தோனேர் கமலமுனி புதல்வனிவை கழற லுற்றான் (24)

காதல்செறி பொல்லா மாணுக்கனுக்கு = சிக்ஷைப்படாத அவிரத்ததுஷ்ட சீடனுக்கு

| | | |
|---|---|---|
| கற்பித்த உபதேசம் | = | அனுக்கிரகித்த உபதேசமானது |
| கருநாய்த்தோலுள் | = | கறுத்தக்கழிபட்ட நாய்த்தோலாலாக்கப்பட்ட பையில் வார்த்த |
| மேதகு பால் என | = | மேன்மை தங்கிய காராம்பசுவின் பால் போல |
| அசுத்தம் மேவும் என்று | = | அசுத்தம் மேவும் நிந்தித மரம் என இவ்வண்ணம் |
| மிருகாதி சேய் பலவும் விளம்பக் கேட்டு | = | தவமேன்மை மிக்க காதிபுத்திரராகிய ஸ்ரீ விசுவாமித்திரர் அநேகமாக எடுத்துக் கூறியபோது அதைக் கேட்டு |
| தீதறுநாரதன் வேத வியாதனுதித்திரண் முனிவர் | = | அச்சபையின் கண்ணிருந்த மாசற்ற ஸ்ரீ நாரதர் (வியாசாதி) வேத வியாச முனிவரெல்லாம் |
| நன்று இது எனச் சிறப்புச் செய்தார் | = | நல்லது நல்லது என்று விசேடமாக ஆமோதித்தனர் |
| காதி புதல்வனை நோக்கி | = | காதி புத்திரராகிய ஸ்ரீ விசுவாமித்திர மகரிஷியை விளித்து |
| கமலத்தோன் நேர்கமல முனி புதல்வன் | = | ஸ்ரீ பிரம்மாவுக்குச் சமானமான பிரம்மபுத்திரராகிய வசிஷ்ட பகவான் |
| இவை கழறலுற்றான் | = | இம்மொழிகளைக் கூறத் தொடங்கினார் |

கலைமுனியே நீர்மொழிந்த படியேசெய்வேன் கற்றுணர்ந்தபெ
ரியோர்சொற் கடப்பாரியாரே
நிலையில்பவ மயக்கமறப் பதுமவேதா நிடதமலை மேலுரைத்த
நிமல ஞான
மலைவில் மனத்திருக்கின்ற துரைப்பே னென்ன வஞ்ஞானத்
தொகுதிகெட வகண்ட ஞானந்
தொலைவில்பர பதமெவர்க்குந் தோன்றுமாறு சுத்த விநயத்து
டனே சொல்வ தானான். (25)

| | | |
|---|---|---|
| கலைமுனியே | = | சர்வசாஸ்திரங்களையும் உணர்ந்த மகரிஷியே |
| நீர் மொழிந்தபடியே செய்வேன் | = | தாங்கள் ஆணையிட்ட பிரகாரமே செய்யக் கடமைப் பட்டுள்ளேன் |
| கற்றுணர்ந்த பெரியோர் சொல் கடப்பார் யாரே | = | கற்கவேண்டியதைக்கற்று உணரவேண்டியதை உணர்ந்த மகான்களினுடைய வாக்கியத்தை சமர்த்தராயினும் கடப்பவர் யார் |
| நிலையில் பவ மயக்கம் அற | = | நைஸ்வரமான சம்சாரப் பிராந்திஒழியும்படிதாமரை |
| பதுமவேதா | = | ஆசனத்தராகிய என் அருமைப்பிதா |
| நிடதமலைமேலுரைத்த நிமல ஞானம் அலைவில் மனத்திருக்கின்றது உரைப்பேன் என்று | = | நிடதகிரி மீதெழுந்தருளியிருந்து முன்னர் உபதேசித்தருளிய நிர்மலமான ஞானார்த்தங்கள் யாவும் நிச்சலசித்தத்தில் ஒன்றும் மறையாதுவிருக்கின்றது இராகவனுக்கு உபதேசிக்கின்றேன் என்று |

| | | |
|---|---|---|
| அஞ்ஞானத் தொகுதி கெட அகண்ட ஞான தொலைவுயில் பரபுதும் | = | அஞ்ஞானக் கூட்டங்களனைத்தும் நாசமாக தேச கால வஸ்துபரிச்சேதரகித அழிவு இல்லாத |
| எவர்க்குந் தோன்றுமாறு சுத்த விநயத்துடனே சொல்வதானன் | = | பரமகைவல்யம் எல்லா அதிகாரிகட்கும் புலப்படுமாறு அதி வணக்கத்தோடும் அடக்கத்தோடும் உபதேசிக்கத் தொடங்கினர். |

சுக்கதை முற்றிற்று.

வைராக்கியப் பிரகரணம் முற்றிற்று.

ஆக விருத்தம் 161



உ

# முமுக்ஷுப் பிரகரணம்

## அவதாரிகை

என் தந்தையாகிய பிரம்மாவினால் எந்த ஞான சாதனமான சாஸ்திரம் அருளப்பட்டதோ அதனையே கூறுகின்றேன்.

இராகவகே ளிப்பவத்தி லென்று மெல்லா மியல்புறு நன்முயற்சியினு லியார்க்கு மெய்தும்
மாகலைநன் னூன்முயற்சி யொன்ரு மொன்று வருநூலி லாமுயற்சி மற்றி வற்றின்
சோகமினால் வழிவிடா நூலிலாமை துன்பமாஞ் சைசவத்திற் ெருடரு மிந்நூன்
மோகமினல் லோர்கூட்டங் குணங்களாலே முயற்சியுறுபெரி யோர்க்கு முத்தி பேரும். (1)

| | | |
|---|---|---|
| இராகவகேள் | = | ஹே இரகுகுலதிலக பூத்ராதிய இராமா ஒருமையுடன் கேட்பாயாக |
| இப்பவத்தில் என்றும் எல்லாம் | = | இச்சம்சாரத்தில் எப்போதும் யாவுமே |
| இயல்புறு நல்முயற்சியினால் | = | சகஜமாகப் பொருந்துறும் நல்ல முயற்சியினலே |
| யார்க்கும் எய்பதும் | = | எவ்வகையினரும் அடைவர் |
| மாகலை நன்நூல் முயற்சி ஒன்ரும் | = | மாட்சிமை பொருந்திய உபநிஷத் வேதாந்த சாஸ்திர சம்பந்தமான ஆன்ம முயற்சியாம் |
| வருநூலில்லா முயற்சி மற்ற ஒன்று | = | சாஸ்திர சம்பந்தமில்லாமல் வரும் அனுத்ம முயற்சி இரண்டாவதாம் |

இவ்வற்றில் = இவ்விரண்டில்
நூல்வலி சோகம்இல் வீடாம் = சாஸ்திரநெறி துயரமற்றமோக்ஷத்தைத் தருவதாம்
நூல் இல்லாமை துன்பமாம் = சாஸ்திரவழியிற் செல்லாமை பந்தரூப துன்பமாம்;
சைசவத்தில் தொடரும்
இந்நூல் = பால்யத்திலேயே பயின்றுவந்த இச் சாஸ்திரம்
மோகம்இல் நல்லோர் கூட்டம் மயக்கங்களையொழித்த சாதுக்களின் சங்கம் மைத்
குணங்களாலே = திரியாதி சற்குணங்கள் முதலிய இவற்றுனே
முயற்சியுறு பெரியோர்க்கு மிகவும் முயற்சிக்கப்பட்ட மகான்கட்கு மோக்ஷமே
முத்தி பேரும் = பிரயோஜனமாக லபிக்கும் = கிட்டும்.

1
முற்பிறப்பின் வாதனையின் வயத்தினின்றேன் முயற்சியிலே னென்செய்கேன்
3 2 4 முநிவ வென்ன
வற்புதனே தன்வருத்த முயற்சியாலே யடையலாம் பரமபத மயல் வேறின்று
சொற்பயில் வாதனைத்திரளின் பேதஞ்சொல்லிற் சுபம சுபமெனவிரண்டாஞ்
சொன்னவற்றில்
6 5 7
வற்புறுமுற் பவந்தோறுந் தொடர்ந்துவந்த வாதனையே அதுவொன்றே
மருவி நிற்கும். (2)

முற்பிறப்பின் வாதனையின் பூர்வஜன்மத்தின் வாசனையின் வசமாகி அஃது
வயத்தில் நின்றேன் = ஏவியபடியே செய்கின்றேன்
முயற்சியில்லேன் என்செய் சாஸ்திரமுயற்சியில்லாத கிருபணனாகிய யான்
கேன் முனிவவென்ன = செய்வதென்னோ யாவற்றையுமுணர்ந்த பக
வானே என்று வினவுதியேல்
அற்புதனே = அற்புத குணங்கள் வாய்ந்த இராமா
தன்வருத்த முயற்சியாலே = தான் கஷ்டப்பட்டுச் செய்யும் அதிதீவிர பிரயத்
தனத்தால்
பரமபதம் அடையலாம் = சாசுவதமான சிரேயசை அடையலாம்
அயல்வேறின்று = மாறுகவோ வேறு வழி இல்லையாம்
சொற்பயில் வாதனைத்திரளின் முற்புகன்ற வாசனைக் கூட்டங்களின் வேற்றுமை
பேதஞ் சொல்லில் = யைக் கூறுமிடத்து
சுபம் அசுபம் மென சுப வாசனையென்றும் அசுப வாசனையென்றும்
இரண்டாம் = இரு விதமாம்
சொன்ன அவற்றில் = கூறிய அவ்விரண்டில்
முற்பவந்தோறும் தொடர்ந்து பூர்வஜன்மங்கள்தோறும் அனுசரித்து வந்த திட
வந்த வற்புறு வாதனையேது வாசனையாதாம் அது ஒன்றுதானே அடைந்து
அது ஒன்றே மருவிநிற்கும் = வளர்ந்து நிற்கும்.

1
சுத்தவா தனைதொடரி லதனுன் மெல்லத்தூயபர பதம்பெறுவை சுத்தமல்லாப்
3 2 4
பெத்தவா தனைதொடரிற் றுன்பமாக்கும் பெரிதுவருந்தியுமிதனைப் போக்க
வேண்டும்
வைத்தசுப மசுபமெனும் வழியிரண்டால் வாதனையாம் நதிபெருகில்
வருத்தத்தாலே
மெத்தமுயன் றசுபவாதனையைத் தள்ளி மிக்கசுபவாதனையின்
மேவி நிற்பாய். (3)

| | | |
|---|---|---|
| சுத்த வாசனை தொடரில் | = | தூயவாசனைக் கூட்டத்தானே நடத்தப்பெறுதியேல் |
| அதனுல் மெல்ல தூயபரபதம் பெறுவை | = | அப்பயிற்சியின் முதிர்ச்சியால் பையப்பையப் பரி சுத்த சாசுவத கைவல்யத்தையே அடைவாய் |
| சுத்தமல்லா வாதனைத் தொடரில் | = | தூய்மையற்ற கெட்ட வாசனை நின்னை இழுத்துச் செல்லுமாயின் |
| துன்பம் பெத்தம் ஆக்கும் | = | துன்பத்தையும் பந்தத்தையும் உண்டாக்கும் |
| பெரிது வருந்தியும் இதனைப் போக்கல் வேண்டும் | = | மிகக் கஷ்டப்பட்டு முயன்றேனும் இம்மலின வாதனையை ஒழித்தல் வேண்டும் |
| வைத்தசுபம் அசுபம் எனும் வழியிரண்டால் வாதனையாம் நதிபெருகில் | = | பழக்கத்தால் வாராநின்ற சுபம் அசுபம் மார்க்கம் இரண்டினுலே வாசனையாம் நதிபெருகி ஓடுமாயின் |
| வருத்தத்தாலே மெத்த முயன்று | = | எத்துணைச் சிரமப்பட்டேனும் மிக மிகவும் புருடப் பிரயத்தனஞ் செய்து |
| அசுப வாதனையைத் தள்ளி | = | கெட்ட வாதனையை அடியோடு தொலைத்து |
| மிக்க சுப வாதனையில் மேவி நிற்பாய் | = | அதிகரித்த நல்ல வாசனையையே அநுசரித்து வாழ்வாயாக. |

மிகமுயன்று வருந்தாமற் சமமாகின்ற வேண்டுகோளாற் றன்முயல்வால்
வினைதந் தன்னுற்
பகர்மனமாஞ் சிறுமகவை நிறுத்தல்வேண்டும் பலபிறப்பிற் பரிசயங்க
ளகலப்பண்ணி
2 1 3
யகல்சுபவா தனையுதித்தான் முயற்சிபேரு மையுறினுஞ் சுபமுயல்வையது
தீதல்ல
திகழ்மனம்போய்த் தற்பதத்தைத் தெளியுமட்டுந் தேசிகனூற் சொல்வழியிற்
செல்லுவாயே. (4)

| | | |
|---|---|---|
| மிகமுயன்று வருந்தாமல் | = | ஹடயோகத்தால் அதிப்பிரயத்தனஞ்செய்து நிற்கா விடினும் முயற்சியை விட்டுவிடாமல், |
| சமமாகின்ற வேண்டுகோளால் | = | பிரியாப் பிரியவிடயப் பிராப்தியில் மகிழ்ச்சிவாட்ட மற்ற சமத்வப் பிரார்த்தனையினுலும் |

| | | |
|---|---|---|
| தன்முயல்வால் | = | இடைவிடாது செய்யும் தனது புருஷப் பிரயத்தனத்தாலும் |
| விநோதந்தன்னால் | = | அதற்கு இதமான கதா சல்லாபத்தாலும் = சம்பாஷணையினாலும் |
| பகர்மனமாஞ் சிறு மகவை நிறுத்தல்வேண்டும் | = | சிறுபாலகன் என்னும் மனத்தைபையப் பையலயப்படுத்தல் வேண்டும் |
| பலபிறப்பில் பரிசயங்கள் அகலப்பண்ணி | = | அனந்தஜன்மங்களிலுண்டான வாசனைகளை நீங்குமாறு செய்து |
| சுபவாதனை அகல்உதித்தால் | = | தூய வாசனை விரிந்து உண்டாயின் |
| முயற்சி பேறு ஆம் | = | அப்பியாசமானது பெரும்பயனையுடையதாம், |
| ஐயுறினும் | = | சந்தேகம் வந்தாலும் |
| சுபமுயல்வை அதுதீது அல்ல | = | தூய வாசனையையே சம்பாதனஞ் செய்தி அது மாசாகமாட்டாது |
| திகழ்மனம்போய்த் தற்பதத்தைத் தெளியுமட்டும் | = | சுத்தமானதும் சாந்தமானதுமான பரம்பொருளை அற சாக்ஷாத்கரிக்கும் வரை |
| தேசிகன் நூல் சொல்வழியிற் செல்லுவாய் | = | குரு சாஸ்திரப்பிரமாணங்களால் நிர்ணயமானதைப்பற்றி ஆசரிப்பாயாக. |

தூயதா யிகத்தினிதாய்ப் பெரியோர்மேவுஞ் சுபத்தினால் மனவழுக்குந் துயருமற்ற
நேயமாம் பதமேவி யதுவுந்தள்ளி நிலைநிற்பாய் மீட்டணுகா நெறியதாக
மாயைநினை வொழித்து நிறைசாந்தியின்பம் வழுவாம லுதாரமா மதியாலெய்தி
யாயமொழிப் பொருண் முன்பின்கருதுநெஞ்சை யமர்சமஞ்செய்து ஆன்மாவி லநுசந்திப்பாய். (5)

| | | |
|---|---|---|
| தூயதாய் இகத்தினிதாய் | = | பரிசுத்தமாய் இங்கே மனோரமணீயமாய் |
| பெரியோர் மேவும் சுபத்தினால் | = | அறிஞர் அடையும் சுத்த வாசனையினால் |
| மன அழுக்கும்துயரும் அற்ற | = | மனோமயக்கமும் துன்பமுமில்லாத |
| நேயமாம் பதம் மேவி | = | பரமப்பிரேமாஸ்பதமான பரமான்ம வஸ்துவை சாக்ஷாத்கரிப்பாயாக |
| அதுவுந்தள்ளி | = | பின்னர் அப் பதத்தையும் விடுத்து |
| நிலை நிற்பாய் | = | சொரூபத்தின் கண்ணே ஸ்திதிபெற்றிருத்தி |
| மீட்டணுகா நெறியதாக | = | மீண்டுந் தொடராதபடி |
| மாயை நினைவொழித்து | = | சம்சார பாவனையை நீக்கி |
| நிறை சாந்தியின்பம் | = | பூரண உபசாந்தியும் சந்தோஷமும் |

| | |
|---|---|
| வழுவாமல் | = இடைவிட்டு நீங்காமல் |
| உதாரமாம் மதியாலெய்தி | = உதாரபுத்தியாலேயடைவுற்று |
| ஆயமொழிப்பொருள் | = உபதேசிக்கப்பட்டதாய வாக்கியார்த்தத்தை |
| முன்பின் கருதுநெஞ்சை | = பூர்வபக்ஷம் சித்தாந்தம் விசாரியா நின்ற மனத்தை |
| அமர்சமஞ் செய்து | = அடங்குமாறு சமரசப்படுத்தி |
| ஆன்மாவில் அநுசந்திப்பாய் | = உனது சொரூபத்தின் கண்ணே நிலைபெற்று நிற்றி |

தேங்கமலத் தயனுரைத்த மொழிகேளென்னச் செப்பிய காரணமேதென்
றிராமன் கேட்ப
வோங்குமுனி யுரைசெய்வான் முடிவற்றெங்கு முளதாகி யனைத்தினுக்கு
முறையுளாகி
வீங்குபொருள் களில்விளக்க மாகிமேவு மெய்ஞ்ஞான விண்ணின்று
விண்டு வந்தா
னுங்கவன்றன் மனக்கமலத் தயனுண்டாகி யகிலமன விகற்பம்போ
லளித்தா னன்றே. (6)

| | |
|---|---|
| தேங்கமலத்தயனுரைத்த மொழிகேளென்ன | = தேன் நிறைந்து வாசனைபரிமளிக்கும் தாமரையிலெழுந்தருளியிருக்கும் பிரம்மா அனுக்கிரகித்த வாக்கியத்தைக் கேட்பாயாக என வசிஷ்டர் கூற, |
| செப்பிய காரணம் ஏதுவென்று இராமன் கேட்ப | = முன் சுயம்பு யாது காரணத்தால் உபதேசித்தார் என இராகவன் வினவ |
| ஓங்குமுனி உரை செய்வான் | = தவம் மிகுந்த மனன சீலராகிய வசிஷ்ட மகரிஷி கூறுவதாவது |
| முடிவற்று எங்குமுளதாகி | = அந்தமின்றி = தேசகாலவஸ்து பரிசசேதரகிதமாய் சர்வகதமாய் |
| அனைத்தினுக்கும் உறையுளாகி வீங்குபொருள்களில் விளக்கமாகி | = சர்வத்திற்கும் ஆசிரயமாய் உண்டாகி வளரும் எல்லாப் பிராணிகளது இருதயத்தில் நல்விளக்கந்தந்து |
| மேவும் மெய்ஞ்ஞானவிண்ணின்று விண்டு வந்தான் | = சொப்பிரகாசமாய்ப் பொலியும் சத்தியஅறிவானந்த ஆகாயத்திலிருந்து ஸ்ரீ மகா விஷ்ணு வானவர் அவதரித்தனர். |
| ஆங்கு அவன்றன்மனக்கமலத்து அயன் உண்டாகி | = அத்தகைய விஷ்ணுவினது இருதய தாமரையினின்றும் பிரம்மதேவர் அவதரித்து |
| மனவிகற்பம் போல் | = மனமானதுவிகற்ப விவகாரங்களையுண்டாக்குதல் போல |
| அகிலம் அளித்தான் | = சகல சிருஷ்டியையும் உண்டாக்கினர். |

உலகளித்த வயன்ருனே நாஞவாக வோங்கிய பாரதவ ருடத்
துயிர்க ளெல்லா
மலகிறுய ருறக்கண்டு புதல்வர்நோ வுக்கழுங்கு பிதா வென வழுங்கி
யவர்க ளுய்வான்
பலகருமந் தவந்தானநதி மற்றெல்லாம் பவந்தீரா ஞானத்தாற்
பவம் போ மென்றே
3 2
கலகமிலா மனத்தளித்தா னென்னைத்தன்போற் கமண்டல முஞ்செபுவடமுங்
கையிற் காண (7)

| | | |
|---|---|---|
| உலகளித்த வயன்ருனே | = | சகல லோகங்களையும் சிருஷ்டித்த பிரம்மதேவரே |
| நாஞவாக வோங்கிய பாரத வருடத்துயிர்கள் | = | பலவித வேறுபாட்டுடன் விஸ்தரிக்கப்பட்டிருக்கும் பாரத வருடத்து வாழும் ஜீவர்கள் |
| எல்லாம் | = | எல்லாம் |
| அலகில் துயருறக்கண்டு புதல்வர் நோவுக்கு அழுங்கு பிதா வென அழுங்கி | = | அளவில்லாத துன்பம் அடைதலைப்பார்த்து மைந்தர்களடைந்த துன்பத்துக்கு வருத்தப்படும் தந்தை போல துயரடைந்து தன்னை மறந்து திரியும் |
| அவர்கள் உய்வான் | = | அவ்வுயிர்கள் நன்மையடையும் பொருட்டு |
| பல கருமம் தவம் தானம், நதி மற்றெல்லாம் பவந்தீரா | = | நாஞவகையான் காயிக மானச கருமங்களையும் தவங்களையும் தானங்களையும் தீர்த்தங்களையும் வேறும் அனேக சாதனங்களையும் உண்டாக்கியும் (இவற்ருல் சம்சார துக்கம்நிவர்த்தியாகாதென்றும்) |
| ஞானத்தால் பவம் போம் என்றே | = | பிரஹ்ம வித்தையிஞலேயே அவசியம் ஜனன மரணம் நீங்குமென்று திண்ணமாயெண்ணி |
| என்னைத்தன் போல் கமண்டலமும் செபவடமுங் கையிற் காண | = | என்றனைத் தம்மைப் போல ஜலபாத்திரமும் ஜப மாலையும் கரத்தில் தரித்திருக்கும்படியான ஆகுருதியாக |
| கலகமிலா மனத்தளித்தான் | = | அருமையோடு கூடிய உள்ளத்தினின்றும் சங்கற்பித்து சிருஷ்டித்தான். |

வந்திறைஞ்சு மென்னைத்தான் மகிழ்ந்து மேவும் வனசத்தின்
வடபாலோர் மடன்மேல் வைத்தென்
சிந்தைதனை நாழிகையோரிரண்டு மாயைசேர்கவெனச் சபித்தலுமே
தியக்க முற்ற

புந்தியுடன் மெய்யுணர்வை மறந்தேன் கல்லாப்புல் லரைப்போற்
புலம்புமெனைப் போதன் பார்த்து
வெந்துயரென் னெனமாயை விளைந்தவாறும் வீடுறுமாறுங் கேட்டேன்
விளங்கச் சொன்னான். (8)

| | | |
|---|---|---|
| வந்து இறைஞ்சும் என்னை | = | தோன்றி வணங்கும் என்றனை |
| தான் மகிழ்ந்து மேவும் | = | தாம் சந்தோஷித்து வீற்றிருக்கும் |
| வனசத்தின் வடபால் ஓர் | | பொற்றாமரைத் தளத்தின் உத்தரபாகத்திலிருக்கும் |
| மடல் மேல் வைத்து | = | ஓர் மடல் மீது இருக்குமாறு செய்து |
| என் சிந்தைதனை நாழிகை | | எனது மனத்தை நாழிகை ஓரிரண்டு=ஒரு முகூர்த் |
| ஓர் இரண்டு மாயை சேர்க | | தம் அஞ்ஞானம் அடையும்படியாக சாபங்கொடுத் |
| வெனச் சபித்தலும் | = | தலும் |
| தியக்கமுற்றபுந்தியுடன் | = | மயக்கத்தோடுற்றமதியுடன் |
| மெய்யுணர்வை மறந்தேன் | = | பூரணசச்சிதானந்த வஸ்துவை மறந்தேன் பொன் னைப்புறி கொடுத்தவன் போல தீனத் தன்மையை அடைந்தேன். |
| கல்லாப் புல்லரைப்போல | = | படியாத மூடரைப் போல, |
| புலம்பும் எனை | = | புலம்பா நின்ற என்றனை |
| போதன் பார்த்து வெந்துயர் என் | = | பிரம்ம தேவர் நோக்கி மைந்த ஏன் கொடுந்துய ரடைகின்றனை என வினவ |
| மாயை விளைந்தவாறும் வீடுறு மாறுங் கேட்டேன் | = | துக்கமய சம்சாரம் தொடங்கிய வகையும் தொலை யுமாறும் கேட்டேன் |
| விளங்கச் சொன்னான் | = | அபரோக்ஷமாயறிய வருள்புரிந்தனர். |

1
ஆன்மாவை யறிந்தலைவுற்றி ருந்த என்னை யயன் பார்த்துநாமே
நின்னறிவை மாற்றி

3 2 4
யூன்மாயை பின்பொழித்தே முயிரெலாநின் னுபதே சம்பெற்றுய்ய
வுபாயஞ் செய்தோ

மேன்மாயும் வினைநிறைந்த சம்புத்தீவின் மேவிய பாரதவருடம்
விரைவின் மேவித்

தான்மாளாக் கிரியினர்க்குக் கிரியைசாற்றி சாதனமுள்
ளோரர்க்குணர்வைச் சாற்று கென்றான். (9)

ஆன்மாவையறிந்து அலைவிற்றிருந்த வென்னை அயன் பார்த்து = அறிய வேண்டிய பிரஹ்மா பின்னை ஆன்மாவை உணர்ந்து யதார்த்த நிலையில் சஞ்சலமில்லாமலிருந்த என்னை பிரமதேவர் நோக்கி யாமே

நாமே நின்னறிவை மாற்றி = உன்னுடைய பிரஞ்ஞையை மாறுபடுத்தி

பின்னர் மாயை ஒழித்தோம் = பின்னர் சாப நிவர்த்தி செய்து தோஷத்தோடுற்றதேகாதிமாயையை நீங்கும்படி செய்தோம் அஞ்ஞானம் ஒழிந்த அனந்தரம் விசிராந்தியடைந்திருக்கும் என்றனை நோக்கி

உயிரெலாம் நின்னுபதேசம் பெற்று உய்ய உபாயஞ்செய்தோம் = அதிகாரிகளாயுள்ள ஜீவரெல்லாம் உன்னுடைய அனுக்கிரகத்தையடைந்து சம்சார துன்பம் ஒழிய ஞானஞ்சித்திக்கும் பொருட்டு உபாயத்தை இயற்றினேம்.

மேன்மாயும் வினை நிறைந்த சம்புத்தீவில் = மேலும் மேலும் இறந்து பிறந்துழல்வதற்கேதுவான கருமங்களைச் செய்து கொண்டிருக்கும் பிரஜைகள் நிறைந்த கடல் சூழ்ந்த சம்புத்தீவில்

மேவிய பாரத வருடம் விரைவில் மேவி = சிறப்பாகவிருக்கும் பாரத கண்டத்தை அதி சீக்கிரமாக அடைந்து

தான்மாளாக்கிரியினர்க்கு = தற்போதம் நீங்காதகருமிகட்கு

கிரியை சாற்றி = கருமகாண்டத்தை உபதேசித்தும்

சாதனமுள்ளோர்க்கு = நான்கு சாதனங்களையுமுடைய அதிகாரிகட்கு

உணர்வைச் சாற்றுக என்றான் = பிரஹ்ம வித்தையை உபதேசித்தும் விளங்குவாயாக வென்றருளினர்,

அவனுரைப்ப வந்துயிர்களுள நாளெல்லா மாகுவனிங் கொருசெயலு மாஞ்செயலில்லை
யிவணிருந்து சுழுத்தியுறு செய்கையாலே யிடர்மனத்தைக் கடந்துசெயல் யாவுஞ் செய்கேன்
கவருறுமென் செயலொன்று மில்லைவீர கலைநிறைவும் பேதைமையுங் கருமத்தாலே
விவரமதா யாராய்ந்து மேன்மையான மெய்க்குருவைக்கொண்டுணர்வோர் மேதை மிக்கோர். (10)

அவன் உரைப்பவந்து = பிரம்மதேவராகிய பிதா ஏவி அருள் இவணுற்று

உயிர்களுள நாளெல்லாம் ஆகுவன் = ஜீவர்களின் பரம்பரை வாழுங்கால பரியந்தம் அநுக்கிரகஞ் செய்து கொண்டிருப்பேன்.
இங்கு ஒரு செயலும் ஆசை யில்லை = ஈண்டு செய்து தீர வேண்டு மென்பதாக யாதொன்றும் இச்சை கிடையாது
இவண் இருந்து = இவ்விடம் இருக்கவேண்டுமென்பதின்றி
சுழுத்தி யுறுசெய்கையாலே = துயிலையடைந்தவன் நிரபிமானமாய் இருக்கையாலே.
இடர் மனத்தைக் கடந்து = துயர் செய்யும் உள்ளத்தை அடக்கி
செயல் யாவுஞ் செய்கேன் = சர்வ காரியங்களையுஞ் செய்வேன்
கவருறும் என் செயல் ஒன்று மில்லை = கொள்ளற்பாலனவாய எனது கர்த்தவ்யம்யாதொன்றுங் காண்கிலேன்
வீர = பேசாதிபகையை நாசஞ் செய்வதில் தீரனே
கலை நிறைவும் = சாஸ்திர ஜன்ய பூரண உணர்வும்
பேதைமையும் = அறியாமையும்
கருமத்தாலே = காரியத்தினலே = அநுஷ்டானத்தாலே
ஆராய்ந்து = நன்ருக நிர்ணயித்து
மேன்மையான மெய்க் குருவை கொண்டுணர்வோர் = பிரஹ்ம நிஷ்டையும் அசேஷ சாஸ்திர பாண்டித்தியமுமுடைய ஞானசிரியர் மனம் உவக்க சதுர்வித பணிவிடையாற்றி அவர் அநுக்கிரகம் பெற்று அறிவோர்
மேதைமிக்கோர் = மகாமதியையுடையவராவர்.

ஓதுகின்ற பொருள்முழுது முன்பின்கூட்டி யுணர்பவர்க்கல் லதுபசுவை யொப்போர்க் கெல்லாந்
தீதகன்ற குருவுண்மைசெப் பாரன்றே திகழ்சமமே விசார மொடுசெறி சந்தோடஞ்
சாதுசங் கமெனவீட்டின் வாயில்காக்குஞ் சதுட்டயரு முறவாகி றடை வேறுண்டோ
2 1 3
மேதினிகா வலர்மனையிற் கடைகாப்பாளர் விடுவது போல் வீட்டிலவர் விடுவரன்றே. (11)

ஓதுகின்ற பொருள் முழுதும் முன்பின் கூட்டி = உபதேசமுகமாகச் சிரவணித்த சகல பதார்த்தங்களையும் அன்வயித்து

உணர்பவர்க்கல்லாமல் = உணர்ந்துகொள்ளுபவர்க்கல்லாமல்

பசுவையொப்போர்க்கெல்லாம் = பசுதர்மத்தையுடைய அதமர் தமக்கு

தீது அகன்ற குரு உண்மை செப்பார் அன்றே = குற்றமற்ற ஆசிரி[illegible] தத்துவத்தை உபதேசியார் இஃது உண்மையேயல்லவா

திகழ்சமமே விசாரமொடு செறி சந்தோடஞ் சாதுசங்கம் என வீட்டின் வாயில் காக்குஞ் சதுட்டயரும் உறவாகில் வேறு தடை உண்டோ = சாதனமாக விளங்கும் சாந்தி, விசாரம், சந்தோஷம், சாதுசங்கம் என்று பெரியோர்களாற் கூறப்பட்ட மோக்ஷத்துவாரபாலகராகிய நால்வரும் நேசித்து அணுகில் மோக்ஷ வீட்டில் புகுதற்கு வேறு தடையுளதோ இன்றும்

மேதினி காவலர் மனையில் கடைகாப்பாளர் விடுவதுபோல் வீட்டில் அவர் விடுவர் = பூபாலரது அரண்மனையில் வாயிற் காவலாளர் உள்ளே விடுவது ஒப்ப மோக்ஷத்தில் அவர் நால்வரும் விடாநிற்பர்.

[1]
அந்நால்வர் தமிலொருவ ரன்பானுலு மனைவருமொத் தன்பாவ ராதலாலே
பன்னுளு மிகமுயன்று யாதுநீத்தும் [3] பற்றியொரு [2] வரையேனும் [4] பழகவேண்டு
மன்னுத பிறப்பறுக்க நல்லோர்நன்னூன் மாதவத்தாலறிவைமுதல் [5] வளர்க்க வேண்டு
மின்னுத மாயையெனு நஞ்சம்போத மென்கின்ற காருடமந்திரத்தான் மீளும். (12)

அந்நால்வர்தம்மில் ஒருவர் அன்பானுலும் = அந்த நான்குபேர்களுள் ஒருவர் நேயமாயினுரெனினும்

அனைவரும் ஒத்து அன்பாவர் = நால்வரும் ஒருமித்து நேயமாவர்

ஆதலாலே = ஆகையினுலே

பன்னுளும் மிகமுயன்று யாதுநீத்தும் = பலகாலமும் பெரும் பிரயத்தனஞ்செய்தும் எதனைத் தியாகஞ்செய்யவேண்டுமானுலும் செய்தும்

ஒருவரையேனும் பற்றிப் பழகவேண்டும் = ஒருவரையேனும் பின்பற்றி நேசஞ் செய்துகொள்ள வேண்டும்

மன்னுத பிறப்பறுக்க = நிலைபெருத ஜனன மரண சம்சாரத்தைக் கெடுக்க

நல்லோர் நன்னூல் மகா தவத்தால் = சற்புருடர், சற்சாஸ்திரம் மகாதவ முதலியவற்ருல்

அறிவை முதல் வளர்க்க வேண்டும் = பிரக்ஞையை ஆதியில் விருத்திசெய்யவேண்டும்

இன்னுத மாயையெனும்
நஞ்சம் = துன்பம் பயவாநின்ற சம்சாரம் என்னும் விஷம்
போதமென்கின்றகாருட மந்திரத்தால் மீளும் = ஞானம் என்று சொல்லப்பட்ட கருட மந்திரத்தாலே விஷசோதனஞ் செய்யவே தொலைந்துபோம்.

சரமழைக ணெய்தன்மலர் மழையையொக்கும் தழற்பள்ளிபனிநீரிற் சயன மொக்குஞ்
சிரமரிதற் சுகமுறுநித் திரையையொக்குந் தேகமரிவது கலவைச்செறி பூ சொக்கும்
நிரலதிக நாராசமர்மம்பாய்த லெடுங்கோடைச் சிவிறியினன் னீரை யொக்கும்
விரவரிய விடயமெனும் விடவிடுசி விவேகமிகுத் தவர்க்கல்லால் விலக்கொணுதே. (13)

சரமழைகள் நெய்தன் மலர் மழையை யொக்கும் = சப்தாதி விஷயமென்னும் விஷவியாதியைக்குறித்து பாணவருஷங்கள் குவளைப்புஷ்ப மரம் விருஷ்டியை யொக்கும்
தழற்பள்ளி பனிநீரிற் சயனம் ஒக்கும் = அக்கினி சயனம், பனிநீர் தெளித்த சயனம் போன்ரும்
சிரம் அரிதல் சுகமுறு நித்திரையை யொக்கும் = தலையை வெட்டுதல் ஆனந்தமேலிடும் தூக்கத்திற் கொப்பாம்
தேகம் அரிவது கலவைச் செறிபூச்சொக்கும் = சரீரத்தைத் துண்டம் துண்டமாய்ச் சேதிப்பது சந்தனக்குழம்பைப் பூசிக்கொள்வது போலவாம்
நிரலதிக நாராசம் மருமம் பாய்தல் = அளவற்ற நாராசங்கள் மர்மஸ்தலங்களில் பாய்தல்
நெடுங்கோடை சிவிறியின் நன்னீரையொக்கும் = பெருங் கோடை காலத்தில் தாரைக்கிரகம் வீசும் சுத்த ஜலத்தைப் போன்றனவாம்
விரவரிய விடயமெனும் விடவிடுசி விவேகமிகுத்தவர்க் கல்லால் விலக்கொணுதே = பொருந்துதற்கு கூடாத சப்தாதி விஷயமாகிய விடயமய விடுசிகை அதிவிவேகிகட்கேயல்லாமல் மற்றையர்கட்கு விலக்கமுடியாததேயாம்.

1
ஊனமிலா ஞானநூல் விசாரத்தாலே யுயர்வீடு நண்ணுமென லுண்மை யன்றே
தானறியு மனுபூதி ஞானநன்னூற் சற்குருவிம் மூவகையுந் தம்மி லொத்தே
3 2 4
யானவகை யியற்றில்விடா தூன்மாத்தோன்று மற்பவறிவினர்கற்ற வரிய மெய்நூ
லீனமுறு மடமைதெறு மிதுபோன்மற்ற வெந்தநூல்களுமடமை யிக்வா தன்றே. (14)

ஊனமிலா ஞான நூல் விசாரத்தாலே = குற்றமற்ற ஞான சாஸ்திரங்களின் ஆராய்ச்சியானே.

உயர்வீடு நண்ணுமெனல் உண்மையன்றோ = சர்வோத்கிருஷ்டமான மோக்ஷம் கிடைக்குமென்பது சத்தியமேயல்லவா

தானறியும் அனுபூதி ஞான நன்னூல் சற்குரு இம்மூவகை யுந்தம்மில் ஒத்தே விடாது = சுவானுபூதி தன் [illegible] ஞான சாஸ்திரம் (சற்குரு இம்மூன்றும் ஏக வாக்கியத்தையடைந்து அல்லது ஏகோபித்து விடாது கூடுமானவரை பயிற்சி செய்யில்

ஆனவகையியற்றில் ஆன்மாத் தோன்றும் = பிரஹ்மாபின்ன ஆன்மா சாக்ஷாத்கரிக்க வரும்.

அற்ப அறிவினர்கற்ற வரிய மெய்ந்நூல் = சிறிதுவிற்பத்தியுடைய மதியினர் சிரவணித்த இத் தத்துவ சாஸ்திரம்

ஈனமுறு மடமை தெறும் = இழிவு பொருந்திய ஜனன மரணத்தை உண்டாக்கும் அறியாமையைப் போக்கும்

இதுபோல் மற்ற எந்த நூல் களும் மடமையிகவாது = இதற்கு நிகராக வேறு எச்சாஸ்திரங்களும் அறியாமையைக் கெடுக்கமாட்டாவாம் இது மும்மடித் தேவர் பாடத்தை அநுசரித்ததாம்

மடமையொடு வாழ்கின்ற வாழ்வினீசர் மனைதொறுமோட் டிரந்துழல்கை வரிசை யாகு
மடர்தன நட்புறவுபர தேசந்தீர்த்த மாச்சிரமமெய் வருத்த மனைத்தி னாலுந்
தொடருதவி யில்லைமன வருத்தத்தாலே நூயபரபதமுறு முத்தித் துவார பாலர்க்
கடவகுணங் கேட்டியுயர் சாந்திவந்தாற் காதலுந் துன்பமுங் கதிர்முன்கங் குல்போற்போம் (15)

மடமையொடு வாழ்கின்ற வாழ்வில் = அறியாமையுடன் கூடி மூர்க்கத் தனமாய் வாழ்வதைக் காட்டிலும்

நீசர்மனை தோறும் ஒட்டிரந் துழல்கை வரிசையாகும் = சண்டாளர் கிரகந்தோறும் திரிந்து யாசித்து அதாவது பிச்சை வாங்கி உண்டு திரிதல் மேன்மையுதாகும்

அடர்தனம், நட்பு-உறவு-பர தேசம் தீர்த்தம், ஆச்சிரமம், மெய்வருத்தம் அனைத்தினாலும் = மிகுந்த தனம், மித்திரர், பந்து, அயல் நாடேகுதல் தீர்த்தங்கள் ஆச்சிரமங்கள் காயக்கிலேசம் என்னுமியாவற்றாலும்

தொடர் உதவியில்லை = பற்றி உண்டாம் உதவி ஒன்றுமன்றும்

| | |
|---|---|
| மன வருத்தத்தாலே தூய | மனோமாத்திர ஜயத்தினாலே பரிசுத்த பரமபதங் கிடைக்கும் |
| முத்தித்துவாரபாலர்க் கடவ குணங்கேட்டு = | மோக்ஷத் துவார பாலகருக்கு உரிய குணங்களை முறையே கூறக் கேட்பாயாக; |
| உயர்சாந்தி வந்தால் = | மேலாய சாந்தியானது உண்டாயின் |
| காதலும் துன்பமும் கதிர்முன் கங்குல்போற்போம் = | ஆசைகளும் துன்பங்களும் சூரியன் சன்னிதியில் இருள் நீங்குவது போல் ஒழிந்து போம். |

நல்லவருந் தீயவரு மன்னைபோல நம்புதற்கா யமுதுண்ண நண்ணி
னாலு
மல்லல்மலர் மகட்புணர்ந்தபோது மொவ்வாமகிழ்ச்சிதருஞ் சாந்தியுள்ளோர்
மரணஞ் செல்வங்
கொல்லம ரெய்தினுமசையார் புலனைந்தாலுங் குற்றமு நன்மையுநுகர்ந்து
குனிரார் வாடார்
தொல்லறிஞர் மகம்புரிந்தோர் முனிவர்மொய்ம்பர் தூயவரியா
வரினும்விளங்கும் தூய்மையோரே (16)

| | |
|---|---|
| நல்லவரும் தீயவரும் = | சாதுக்களும் குரூரமாயும் கோணலாயுமிருக்கும் உள்ளத்தினரும் கோக்கன்று முதலானவும், துன்பஞ் செய்யும் சிங்கம் சிசு முதலனவும் எப்படித் தமது மாதாவின் கண் விசுவாசம் வைக்கிறதோ அப் படியே) சாதுக்களும்,குரூரமாயுங்கோணலாயுமிருக் கும் உள்ளத்தினரும் |
| அன்னை போல நம்புதற்கு = | தாயினிடத்தில் விசுவாசஞ் செய்தற்கு |
| ஆய அமுதுண்ண எண்ணி னாலும் = | சமமானது சாதகமாய் ரசாயனம் பருகக் கிடைப் பினும் |
| மல்லல்மலர் மகள் புணர்ந்த போதும் ஒவ்வா மகிழ்ச்சி தரும் = | வளப்பம் பொருந்திய தாமரைச் செல்வியாம் இலக்ஷுமி அளவற்று வந்தபோதினும் உவமை யற்ற ஆனந்தத்தைச் சமம் தரும் |
| சாந்தியுள்ளோர் மரணம் செல்வம், கொல்லமர் எய் தினும் அசையார் = | சமசாலிகள், ம ர ண ம் - சம்பத்து-யுத்தம்வரினும் ஆகுல மெய்தினும் துயர் அடையார் |
| புலன் ஐந்தாலும் குற்றமும் நன்மையும் நுகர்ந்து குனி ரார் வாடார் = | சுரோத்திராதியால் சப்தாதி விஷயங்களினாலாய அசுபத்தையும் சுபத்தையும் அநுபவித்தும் மகிழ்ச்சி வாட்டங்களை அடையார். |

தொல்லறிஞர் மகம் புரிந்தோர் = பேரறிஞர்கள் யாகஞ் செய்வோர்கள்
முனிவர் மொய்ம்பர் தூயவர் = மனன சீலர்களாய் வீரர்கள் குணமுடையவர்கள்
யாரினும் = இவர்கள் எல்லாரினும்
தூய்மையோரே விளங்கும் = சிறந்துள்ள சமம்[illegible]யவரே அத்தியந்தம் பரிசுத்தமாயிலங்குவர்.

'ஆரியர்பே ணுவதாகி யயலோர்க் கெல்லாமரிதான சாந்தி யமுதருந்தி மேலோர்
சீரியவீட் டினையுற்றார் நீயுமந்தச் செயல்புரிவாய் நன்னூலாற் றெளிந்தசுத்த
நேரியபுந்தியினாலே விசாரந்தன்னை நிறைத்திடுக வதுநிறைந்தா னிகரில்புந்தி
கூரியதாய் வீடுணரும் விசாரந்தானேகொடும் பவநோய்க் கருமருந்தாங் குறிப்புளோர்க்கே. (17)

ஆரியர் பேணுவதாகி அயலோர்க்கெல்லாம் அரிதான = மேலோர்கள் விரும்பி அநுஷ்டிப்பதாகி மற்றவர்கட்கெல்லாம் அருமையினும் அருமையாய்க் கிடையாதான
சாந்தியமு தருந்தி மேலோர் = உபசம அமிர்தத்தைப் பானஞ் செய்து உயர்ந்தவர்
சீரிய வீட்டினையுற்றார் = சிறப்புப் பொருந்திய கைவல்ய பரமபதத்தையடைவுற்றார்
நீயும் அந்தச் செயல் புரிவாய் = நீயும் மகாநுபாவர் வழியையே அநுஷ்டானத்துக்கு கொண்டு வருதி
நன்னூலால் தெளிந்த = நல்ல வேதாந்த சாஸ்திரங்களின் ஆராய்ச்சியினாலே நிர்மலமான
நேரிய சுத்த புந்தியினாலே = பரம பாவன புந்தியினாலே
விசாரந்தன்னை நிறைத்திடுக = ஆத்ம விசாரத்தை மிக மிக அநுஷ்டிப்பாயாக
அது நிறைந்தால் = அந்த விசாரம் பூரணமானால்
நிகரில் புந்தி கூர்மையதாய் = உவமையற்ற மதிசூக்ஷ்மமாய்
வீடுணரும் = பரமபதத்தைத் தரிசிக்கும்
குறிப்புளோர்க்கு = மோக்ஷத்தை அடைய வேண்டுமென்னுங் கருத்துடையவருக்கு
விசாரந்தானே கொடும் பவநோய்க்கு அருமருந்தாம் = ஆராய்ச்சியே கொடிய சம்சார ரோக நிவர்த்திக்கு பரம ஔஷதமாம்

கருகியகங் குலின்மறையாக் கதிர்க்குமட்காக் காண்பரிய பொருளெல்லாங் காணுங்கண்ணாற்
தெருளுறநா னுருலகம்வந்த வாறென் செறிபிறவியார தெனுந் திகழ் விசார
மிருளுறுமா பத்தினுக்குமருந்தா மப்பாலேற்றமுள சந்தோட மேதென்றேதில்
வருபொருளி லின்பமறத்துய்த்து வாராவனபொருளிற் துன்பமிலா மகிழ்ச்சிதானே. (18)

| | | |
|---|---|---|
| கருகிய கங்குலில் மறையா | = | விசார திருஷ்டி இருண்ட இரவினாலும் மறைபடாமலும் |
| கதிர்க்குமட்கா | = | சூரியனது பேரொளியாலும் மங்காமலும் இலங்கி |
| காண்பரிய பொருளெல்லாம் | = | காணுதற்கரிய பதார்த்தங்களையும் |
| காணுங்கண்ணால் | = | விசாரதிருஷ்டியினால் |
| தெருள்உற நான் யார் உலகம் வந்தவாறு என் | = | ஞானம் உதயமாமாறு நான் என்பது யாது பொருள் இத்தோஷமயசம்சாரம் வந்த வகை யென்னை |
| செறி பிறவியாரது எனும் திகழ் விசாரம் | = | துயரம் நிறைந்த இப்பிறவி எதைச் சம்பந்தித்தது என்று விளக்கமாக உண்டாகின்ற ஆராய்ச்சி |
| இருளுறும் ஆபத்தினுக்கு மருந்தாம் அப்பால் | = | அந்தகாரமய அவித்தையையும் அதனாலாய ஆபத்துக்களையும் ஒழிப்பதில் பரம ஔஷதமாம் அதன் பின் |
| ஏற்றமுள சந்தோடம் ஏதென்றேதில் | = | மேலான சுகத்தை யீயும் சந்தோஷம் யாது என்னக் கேட்கில் கூறுவாம் |
| வருபொருளில் இன்பம் அற துய்த்து | = | கருமவயத்தாற் கிடைத்த வஸ்துவை ஆசையின்றி அநுபவித்து |
| வாராவன பொருளில் துன்பமிலா மகிழ்ச்சிதானே | = | கிடையாத பொருள்களில் வருத்தமின்றிய சந்துஷ்டியே சந்தோஷமாம். |

1
நிகரறுசந் தோடவமு தமையப்பெற்று நெடும் போக நஞ்சா மந்நிறை சந்தோட
மகலுறவா சையில்விழுநெஞ் சறிவைநோக்கி லழுக்குறு கண்ணாடியிலா னனம்போற் றேன்று
மகிழ்துண மெய்தியபுருட மகிமையோனை மாதவரும்நராதி பரும் வணங்கா நிற்பர்
3
சகமெனுமா யையைவெல்லத் தக்கோர்க்கெல்லாந்தப் பாத சகாயமாஞ்
2
சாது சங்கம். (19)

| | | |
|---|---|---|
| நிகரறு சந்தோடவமுது அமையப்பெற்ருல் நெடும் போகம் நஞ்சாம் | = | உவமையில்லாத சந்தோஷமாகிய அமிர்த பானஞ் செய்து திருப்தியடைந்தவருக்கு விஸ்தார போக பாக்கியமானது விஷம்போலாம். |
| அந்நிறை சந்தோடம் அகலுற | = | அந்தப் பரிபூரண சந்தோஷமில்லாமல் |
| ஆசையில் விழு நெஞ்சு | = | ஆசை வசமாகிப் பரவசமுற்ற சித்தம் |
| அறிவை நோக்கில் | = | சிதான்மாவைப் பார்க்கில் |
| அழுக்குறு கண்ணுடியில் | = | களங்கமான தர்ப்பணத்தில் |
| ஆனனம் போல் தோன்ரு | = | முகம் போலத் தோன்ருதாம் |
| மகிழ்குணம் எய்திய புருட மகிமையோனை | = | சந்தோஷமாகிய உயர்ந்த குணமடைந்த புருஷப் பெருந்தகையை |
| மாதவரும் நராதிபரும் வணங்கா நிற்பர் | = | மகாதவத்தையுடையவரும் நரேந்திரராகிய இராஜாக்களும் நமஸ்காரஞ் செய்து தோத்தரிப்பர் |
| சகமெனும் மாயையை | = | ஜனன மரண சம்சார ரூபமாயையை |
| வெல்லத்தக்கோர்க்கெல்லாம் | = | ஜயிக்கவேண்டுமென்று முயன்று கொண்டிருப்பவருக்கெல்லாம் |
| தப்பாத சாதுசங்கம் சகாயமாம் | = | எவ்விடத்திலும் எவ்வாற்ருனும் மாருத உதவியாவது மகத்துக்களின் கூட்டமேயாம். |

**[1] அறக்குறைவை நிறைவாக்குஞ் [3] சம்பத்தாக்கு [2] மாபத்தைச் [5] சுபமாக்கு [4] மசுபந்தன்னைச்**
**[6] சிறக்குமுயர்ந் தவர்கூட்ட மென்னுங்கங்கைச் சீதநீராடி னர்க்குச் செந்தீ வேள்வி**
**யிறக்கரிய தவந்தானந் தீர்த்தம்வேண்டா மிடர்பந்தம றுத்தெவர்க்கு மினியோராகிப்**
**பிறப்பெனும்வே லைப்புணையா முணர்வுசான்ற பெரியோரையெவ் வகையும் பேணல் வேண்டும். (20)**

| | | |
|---|---|---|
| அறக்குறைவை நிறைவாக்கும் | = | சூனிய ஸ்தலத்தைப் பிராணிகளின் சமுதாயமுடையனவாகச் செய்விப்பதில் மைந்தராதி பந்துக்கள் தனுதிகளில்லாமல் துயர் அடைபவர்கட்கு நிறைவுறுகின்றது. |
| ஆபத்தைச் சம்பத்தாக்கும் | = | ஆபத்தினைச் சம்பத்தாக்கும் |
| அசுபந்தன்னைச் சுபமாக்கும் | = | அமங்கலத்தை மங்கலமாக்கும் |
| சிறக்கும் உயர்ந்தவர் கூட்டம் என்னுங்கங்கைச்சீத நீராடினர்க்கு | = | யாவராலும் முடியாததை முடித்து வைக்கும் விசேடம் வாய்ந்த மேலோர் சங்கம் யென்னுங் கங்கை சீத நீராடினவருக்கு |

செந்தீவேள்வி = மந்திராக்கினி மகமும்
இறக்கரிய தவம் = கெடாத பயனைப் பயக்கும் தவமும்
தானம் = தன்னதைப் பிறரதாக்கும் தானமும்
தீர்த்தம் = மூழ்கிய மாத்திரத்தில் பாவத்தைப் போக்கும் தீர்த்தமும்
வேண்டா = அவசியமில்லை
இடர் பந்தம் அறுத்து எவர்க்கும் இனியோராகிப் பிறப்பெனும் வேலைப்புணையாம் உணர்வு சான்ற பெரியோரை எவ்வகையும் பேணல் வேண்டும் = துயரைத் தரும் அகங்காரக்கட்டை அகற்றி/சர்வ சம்மத சாதுக்களாய்/ஜனன மரண சம்சார சமுத்திரத்தைத் தாண்டுவதற்கு ஓடமாய் அறிவுமயமாய் விளங்கும் ஞாநிகளாகிய மகான்களை எல்லா உபாயங்களாலும் இனிது சேவிக்க வேண்டும்.

நிறைபவந்தீ ருபாயநான்கா மிவர்களோடு நிறைநட்பார் பவக்கடலை நீத்தா ரன்னுய்
குறையுமன மோகந்தீ ரிச்சொற் கேட்பாய் குணம்வி ரும்பாதிச்சொல்லைக் குறிக்கொண் டோர்க்கு
மறையுணர்வு வலிதின்வருங் காமமாதிமயக்கமறுஞ் சரற்காலவாவி நீர்போற்
கறைதவிர்ந்து மனந்தெளியுங் கவசத்தோரைக் கணைகள் போன்மிடிமுதலாங் கவலைதாக்கா. (21)

நிறைபவந்தீர் உபாயம்நான்காம் = எழுவகையாக நெருங்கியசம்சாரம்தீரும்நெறி நான்காம் சந்தோஷம் சாது சங்கம், விசாரம் சமம் என்னும் இந்நால்வரோடும் மநுடர்கட்கு சம்சார சாகரங்கடப்பதற்குப் பெரிய உபாயமாம் சந்தோஷமானது பரமலாபத்தைத் தருவதாம் சாது சங்கமானது பரமகதியைத் தருவதாம் விசாரமான்து ப்ரமஞானத்தைத் தருவதாம் சமமானது பரமசுகத்தை தருவதாம் மோக்ஷத்து வார பாலரையும் ஒருமித்து அநுவதிக்கின்றார்

இவர்களோடு நிறை நட்பார் பவக்கடலை நீத்தார்அன்னுய் = இந்நால்வரோடும் பூரண சிநேகமுடையவர்கள் சனன மரண சம்சாரத்தைக் கடந்தவர்களேயாவார்கள் அத்தகையனாய் இவவகண்டிதகுண லக்ஷ்மியோடு நீ விளங்குகின்றனை ஆதலின்

குறையுமன மோகந்தீர் இச்சொல் கேட்பாய் = மலின வாசனை பொதிந்த மனத்தின் மோகத்தை நிவர்த்திக்கும் உபதேசிக்கப்பட்ட இவ் வாக்கியத்தைக் கேட்பாயாக

| | | |
|---|---|---|
| குணம் விரும்பாதிச்சொல் | | பயனை விரும்பாமல் இம்மோக்ஷவுபாய கதையைச் |
| லைக் குறிக்கொண்டோர்க்கு | = | சிரவணித்தவருக்கும் |
| மறையுணர்வு வலிதில்வரும் | = | வேத போதித பரஞானம் பலாத்காரமாய் உண்டாம் |
| காமமாதி மயக்கம் அறும் | = | இச்சைலோப மோகாதிதோடங்கள் ஒழிந்துபோகும் |
| சரற்கால வாவி நீர் போல | = | சரற்காலத்திய ஏரிக ஜலம் போல |
| கறை தவிர்ந்து மனம் தெளியும் | = | களங்கம் நீங்கி உளம் தெளிவையடையும் |
| கவசத்தோரை கணைகள் போல் | = | கவசம் அணிந்திருப்பவரை அம்புகள் பேதிக்க முடியாதது போல |
| மிடி முதலாங்கவலை தாக்கா | = | தரித்திரம் செல்வம் முதலியவைகள் சாரம் அற்றனவெனத்தெளிந்திருத்தலால் உபத்திரவம் உண்டாக்காவாம். |

2 1 3
தருபயஞ்செய் மாயைமன மீராதாகுஞ் சமபாவந்த ரங்கந்தீர் சாக
ரம்போன்
மருவலுறும் விசாரத்தான் மிக்கோர்க்கெல்லாம் வாரிதிபோலாழமும்
பொன்வரை போன்மொய்ம்புந்
திருமதியின் குளிர்ச்சியும்வந் தெய்துநன்னூற்செய்கையி னல்லோர்புந்தி
5
செவ்வையான
4 6
கருமவழி மகிழ்வெய்து மறுவிலாத கற்புடையா டன்மனையிற்
களிக்குமா போல் (22)

| | | |
|---|---|---|
| மாயை தருபயஞ் செய் | = | பயங்கரமான சம்சாரமும் சம்சாரம் தாரா நின்ற பீதியும் |
| மனம் ஈராதாகும் | = | இருதயத்தைச் சேதியாதாகும் |
| சமபாவம், தரங்கந்தீர் சாகரம் போல மருவலுறும் | = | சமத்தன்மையானது மந்தரகிரியை எடுத்த அலை ஒழிந்த பாற் கடல் போல அடைவுறும் |
| விசாரத்தால் மிக்கோர்க்கெல்லாம் வாரிதிபோல் | = | ஆராய்ச்சி மிகுந்த மகான்களுக்கு எல்லாம் சமுத்திரம் போல |
| ஆழமும் பொன்வரைபோல் | = | கெம்பீரமும் சொர்ன கிரிக்குச்சமானமான திடமும் |
| மொய்ம்பும் திருமதியின் குளிர்ச்சியும் வந்தெய்தும் | = | அழகிய பூரண சந்திரனைப்போல் அந்தர் சீதளமும் வலிதிற் கிட்டும் |
| நன்னூல் செய்கையினல்லோர் புந்தி வழி செவ்வையான கருமம் மகிழ்வெய்தும் | = | நல்ல சாஸ்திரங்களையும் நல்ல கிரியைகளையும் உடையவர்களது புத்தியானது நேர்மையான சாஸ்திர அவிரோதமான கருமத்தில் இரமிக்கும் |
| மறுவிலாத கற்புடையாள் | = | களங்கமற்ற கற்புடைய ஸ்திரீயானவள் |

| | | |
|---|---|---|
| தன்மனையில் களிக்குமா போல் | = | தன் அந்தப்புரத்தில் ஆனந்தமுறுவது போலும். |

அற்புதங்க ளனைத்துமிலா விவனுக்கந்த வருஞ்சீ வன்முத்திபத மடைவின்முற்றுஞ்
சொற்புலனுக் கதீதனு யுலகர்போலத் தோன்றிடு வோன்புந்தியி லோர்தொழில் பற்றுதோ
னற்பயன் பொல்லாப்பயனாற் சுகஞ்சோர்வில்லோ னண்ணியது புசித்தினிதி னன்றாய் நிற்போன்
பொற்புறுநல் லாசாரவிரோத மானபோகங்கடமிற் சிறிதும்- பொருந்திடாதோன். (23)

| | | |
|---|---|---|
| அற்புதங்கள் அனைத்துமிலா இவனுக்கு | = | சடை, நகம் வளர்த்தல் முதலிய விசேஷங்கள் ஒழிந்த இவனுக்கு |
| அந்த அருஞ் சீவன் முத்தி பதம் அடைவில் முற்றும் | = | அந்த அருமை வாய்ந்த சீவன் முத்தித் தன்மை/ கிரமமாகச் சித்திக்கும் |
| சொற்புலனுக்கதீதனாய் | = | வாக்குக்கு மனதுக்கு அகோசரனாய் |
| உலகர் போலத் தோன்றிடு வோன் | = | லோகசாமானியமாகக் காணப்பெறுவன், |
| புந்தியில் ஓர் தொழில் | = | புத்தியில் அபிமானமாக ஒரு தொழிலையுஞ் |
| பற்றாதோன் நற்பயன் பொல் லாப் | = | செய்யாமல் நேர்ந்ததில் நிற்பின் இஷ்டம் அநிஷ்டங்களில் |
| பயனால் சுகஞ் சோர்வில் லோன் | = | மகிழ்ச்சி வாட்டமில்லாமல் மனத்தை ஜயித்தவனாவன் |
| நண்ணியது புசித்துஇனி தில் நன்றாய் நிற்போன் | = | கருமத்தால் கிடைத்ததை அயின்று சுகாசனத் திருந்து வாழ்வன் |
| பொற்புறு நல்லாசார விரோதமான போகங்க ளிற் சிறிதும் பொருந்திடா தோன் | = | அழகு பொருந்திய சதாசார விரோதமான போகங்களில் கிஞ்சிற்றும் வாஞ்சை வையாதவனாவன் |

4 ஒருகணமு 2 மொழியாமற் 1 சுகமதாகி யுடல்கடவானாய்ச் 3 சான்றோ ருசாவினாலே
பெருகியவிவ் வீட்டுநெறி 5 விசாரஞ்செய்வோன் பிறவிதீர்மெய்ஞ் ஞானம்பெற் றேனாகி
வெருளுமறு பிறப்பினுறுன் தாயர்யோனி விதனமுறுன் சிறிதாகி மிளிர்போ கத்தின்
மருளுமனப் பாவியராய் வெருள்வோர் தாயர் வயிற்றின்மலப்புழு வென்றே வழங்கற்பாலோர் (24)

| | |
|---|---|
| உடல் கடவானுய் சுகமதாகி = | சரீரத்துக்கேற்ப சுகாசனத்திருந்து நிதித்தியாசன முடையவனுய் |
| ஒரு கணமு மொழியாமல் சான்ருேரு சாவினுலே = | எக்கணத்தினும் எத்தேசத்திலுமாருமல் சாது சங்கத்துடன் கூடி ஆராய்பவனுய் |
| பெருகிய இவ்வீட்டு நெறி = | மகத்தான இம்மோக்ஷமார்க்கத்தை |
| விசாரஞ் செய்வோன் = | விசாரித்துக்கொண்டேயிருப்பவன் |
| பிறவி தீர் மெய்ஞ்ஞானம் பெற்ருேனுகி = | யோனியந்திரத்தில் நெருக்குண்டு சுழலும் ஜனனந் தீர்ந்த தத்துவஞானத்தை அடையப்பெற்ருேனுகி |
| வெருளும்பிறப்பில் உருன் = | பயப்படும்படி மீண்டும் பிறவியை அடையான் அதனுனே |
| தாயர்யோனி விதனமுருன் = | மாதாவின் யோனியந்திரத்தில் துயரமடையான் |
| சிறிதாகி மிளிர்போகத்தில் = | அற்பமாகத் தோற்றும் போகங்களில் |
| மருளும் மனப்பாவியராய் வெருள்வோர் = | மயங்கிவிழும் மனப்பாவிகளாகி பயந்து நடுங்குவோர் |
| தாயர்வயற்றின் மலப்புழு வென்றே வழங்கற்பாலோர் = | மாதாவின் உதரத்தில் தன்தாயகட்டிலுறும் மலக் கிருமிகள் என்பதாக அவ்வதமர்கள் விவகரிக்கப் படுவார்கள் |

**தகுமவர்க டம்மிற்ரு மெய்தப்பட்ட தருமமொடுபொ ருடேடுஞ் சரிதை யோராய்த்**

**துகடீர்தம் மிடத்திலிளைப் பாறிமாருத்துரிய மெனுஞ்சாந்திநிலை தோன்று மட்டு**

**மிருநூல்க ளுபசாந்தி யொழுக்கம்போதம் மிக்கவர்கூட் டுறவிவற்ருல் விசாரம்வேண்டு**

**நிகரிலா விசாரத்தாற் ருேன்றிநிற்கு நிமலதுரியத் தினிலை நிகழ்த்தற் பாற்ருே. (25)**

| | |
|---|---|
| தகுமவர்கள் தம்மிற்ரும் எய்தப் பட்ட தருமமொடு பொருள் தேடுஞ் சரிதையோராய் = | தகுதியுடைய அறிஞர்கள் இல்லாத காலத்துதான் அறிஞர்களாலடையப்பெற்ற தருமத்தையும் அர்த்தத்தையும் தேடுங் கிரியையுடையவராகி |
| துகள்தீர் தன்னிடத்தில் இளைப்பாறி மாருத்துரிய மெனுஞ் சாந்திநிலை தோன்றுமட்டும் = | சர்வதோஷ விநிர்முக்தமான ஆன்மாவின் கண்ணே விசிராந்தியடைந்து அஜன்ம அமர அவ்வியபிசார சாக்கிராதி அவஸ்தாதீதமான நான்காவதான துரியமெனுஞ் சாந்தி ஸ்தானம் கிடைக்கும் பரியந்தம் |
| மிகுநூல்கள் உபசாந்தி ஒழுக்கம் போதம் மிக்கவர் கூட்டுறவு இவற்ருல் விசாரம் வேண்டும் = | அதிக சாஸ்திர விசாரங்களும் உபசாந்தியும் சீலமும் முன்மொழிந்த பிரக்ஞையும் மேலோர் சங்கமும் ஆகிய இச் சாதனங்களினுலே ஆராய்தல் வேண்டும் |

| | |
|---|---|
| நிகர் இலா விசாரத்தால் தோன்றி நிற்கும் நிமல துரியத்தின்நிலை நிகழ்த்தற் பாற்றே. = | ஒப்பற்ற ஆராய்ச்சியினுல் பிரதீதியாகி விளங்கும் நிர்மலமான துரியபதத்தின் நிலைமை கூறவும் விளக்கவும்படுமோ. |

பாவனைதீர் துரியமதி னிளைப்புநீங்கிப் பவமென்னுங் கடல்கடந்து
பாரஞ்சேர்ந்தோன்

சீவனென நின்றுலுஞ் சீவத்தன்மைதீர்ந்தாலு மில்லறத்திற் செறிவுற்றுலுங்

கேவலஞ் சன்னியாசியா யிருந்தபோதுங் கிளர்சுருதி மயக்கத்தாற்
கிடைப்பட்டாலு

மியாவதுஞ் செய்துந்தவிர்ந்தும் பயனென்றில்லை யிமகிரியுருக்கடல்போ
லியல்பினிற்பன். (26)

| | |
|---|---|
| பாவனைதீர் துரியமதில் இளைப்பு நீங்கி = | எண்ணமெல்லாம் நண்ணுத துரிய அவஸ்தையின் கண் விசிராந்தியை அடைந்து |
| பவமென்னுங் கடல் கடந்து பாரஞ் சேர்ந்தோன் = | ஜனன சமுத்திரத்தினின்றும் ஏறி முத்திக்கரை அடைந்தவன் ஏனையர்போல சமாதியுத்திதனுய் |
| ஜீவன் என நின்றுலும் = | (ஜீவத்தன்மையுடன்) விவகரித்தபோதினும் |
| சீவத்தன்மை தீர்ந்தாலும் = | அகம்பாவமற்று சமாதிதனுயிருந்தாலும் |
| இல்லறத்தில் செறிவுற்றுலும் = | மனைவி மக்களுடன் கிரகஸ்த ஆச்சிரமத்திலுற்றுத் தருமத்தை நடத்திய போதினும் |
| கேவலஞ் சன்னியாசியா யிருந்தபோதும் = | சர்வ சங்க பரித்தியாகியாகிய பரிவிராஜகனுய் விளங்கியபோதினும் |
| கிளர் சுருதி மயக்கத்தாற் கிடைப்பட்டாலும் = | யாவரையுஞ்சிக்ஷிக்கும் சுருதிஸ்மிருதிகளைப் படித்தும் படிப்பித்தும் விளையாடித் திரிந்தபோதினும் |
| இயாவதுஞ் செய்தும் தவிர்ந்தும் பயன் ஒன்றில்லை = | மற்று இயாவற்றையுஞ் செய்தபோதினும் செய்யாது வாளாவிருந்த போதினும் யாதொரு பிரயோஜனமும் இன்ரும். |
| இமகிரியுருக் கடல் போல் = | பனி நிறைந்த மந்திர பர்வதம் மதனஞ் செய்யாத பாற் கடல் போல் |
| இயல்பில் நிற்பன் = | கம்பீரமாய்ப் சுபாவசித்த சித்தாகவே விளங்குவன். |

## அவதாரிகை

இதனையும் நீ எம்மனோரது கௌரதையையுத்தேசித்துக் கவரவேண்டு மென்பதாக இன்றும் மற்றோ, பிரமாணங்களை அநுசரித்து ஊகத்தோடு கூடியதாக இருந்தாற் கேட்கலாம் அவ்வாறே யுளதென்கின்றார்.

1
ஊகமுள தேற்சிறுவ ருரையுங்கொள்க வொழிந்ததய னுரைசெயினுந் திரணமொப்ப
வேகவிடு வாய்ஞானமெளிது தோன்றவியம்பு முவமான மெல்லா
3 2 4
மேகதேச மாகநினைவா யுருவமற்ற ஞானமாகாரமா முவமைக் கண்டாதென்னு
மூகரனு பவமில்லா விகற்பததாலே மொழிகுதர்க்கமறிவழிக்கு முயல வேண்டாம். (27)

| | |
|---|---|
| ஊகமுளதேல் = | சுருதியுக்தி தொல்லோரனுபவத்துக்கு பொருத்த மாயின் |
| சிறுவர் உரையுங்கொள்க = | பாலக வசனமுங்கொள்வாயாக |
| ஒழிந்தது அயன் உரை செயினும் திரணமொப்ப வேகவிடுவாய் = | இவ்வாறில்லாதது பிரமதேவர் அருளியபோதினும் துரும்புக்குச்சமானமாக வெகுதூரத்தில் விட்டு விடுவாய் |
| ஞானம் எளிது தோன்ற = | பிரஹ்மவித்தை சுலபமாக உதிக்கும்பொருட்டு |
| இயம்பும் உவமானமெல்லாம் = | தோன்றக் கூறும் ஒப்புவமைகள் யாவுமே |
| ஏகதேசமாக நினைவாய் = | ஒருவாறுகக் கொள்வாய் |
| ஆகாரம் உருவமற்ற ஞானமாம் உவமைக்கு அண்டாதென்னும் = | ஆகிருதி உருவம் இல்லாத சிதாகாச பிரஹ்மத்திற்கு, உருவத்தோடுகூடியவை எவ்வாறு திருஷ்டாந்தமாம் என்று கூறும் |
| மூகர் அநுபவமில்லா விகற்பத்தாலே மொழிகுதர்க்கம் = | மூர்க்கரது அநுபவமற்ற விபரீத கற்பனையாலே (பசுவை ஒநாய் ஆக்கிய திருடர் கதை) சொல்லப் படும் கெட்டதர்க்கம் |
| அறிவழிக்கும் முயல வேண்டா = | விவேகத்தைக் கெடுக்கும் அதில் நீ முயற்சிக்க வேண்டாம். |

தந்திரியி லெழுமிசைபோற் சாந்திமுன்னுஞ் சற்குணத்தின்ஞானமெழுந் தம்மிற் ருமா
மிந்தவிரண் டுங்குளமுமலரும் போலவினிதுவளர்ந்திடு மொக்கவிரண் டுங்கற்கில்
வந்தணுகுந் தனித்தனியே யிரண்டுங்கற்கில் வருபய னென்றிலதாமிவ் வாய்மை கேள்வி
முந்துமறம் பொருளின்பங் கீர்த்திவாணுண் முழுதளிக்கு மனத்தெளிவான் முத்தி நல்கும். (28)

தந்திரியில் எழும்இசைபோல் = யாழ் நரம்பில் எழாநின்ற சப்தசுரம்போல

| | |
|---|---|
| சாந்திமுன்னுஞ் சற்குணத்தின் ஞானம் எழும் = | உபசாந்தி முதலிய கல்யாணகுணங்களால் ஞானம் உதயமாம் |
| தம்மில்தாம் ஆம் = | ஞானத்தால் சாந்தி முதலியவையுண்டாம் |
| இந்த் இரண்டும் குளமும் மலரும்போல வளர்ந்திடும் = | இவ்விரண்டும் தடாகமும் தாமரையும் போல நன்ருக வளராநிற்கும் |
| ஒக்க இரண்டுங் கற்கில் வந்தணுகும் = | சமமாய் இரண்டையும் அப்பியாசிக்கில் மோக்ஷம் சுலபமாம் |
| தனித்தனியே இரண்டுங் கற்கில் = | ஒவவொன்ருக இரண்டையும் அப்பியசித்த போதினும் |
| வருபயன் ஒன்றிலதாம் = | வராநின்ற பிரயோஜனம் ஒன்றையுங் கண்டிலோம் |
| இவ்வாய்மை கேள்வி = | இந்த உண்மையைச் சிரவணித்தால் அது |
| முந்தும், அறம், பொருள் இன்பம், கீர்த்தி, வாணுண் முழுதளிக்கும் = | முதன்மையான தருமம், அர்த்தம், இன்பம், புகழ், ஆயுள் முதலியவற்றை நிறையத்தரும். |
| மனத்தெளிவால் முத்தி நல்கும் = | புத்தி நிர்மலத் தன்மையைத் தந்து அதனுல் மோக்ஷத்தைத் தரும். |

முமுக்ஷுப்பிரகரணம் முற்றிற்று.



சர்வதிருசியங்களும் விண்ணினின்று கந்தருவநகரம் உண்டாவதேபோல அறியாமலிருக்கப்பட்ட அதிஷ்டான பிரஹ்மத்தினின்றும் உண்டாகின்றனவென்று கூறப்படும் அத்தன்மை.

## உற்பத்திப்பிரகரணம்

# ஞானவிண்மகன் கதை

### அவதாரிகை

ஞானத்தினுலேயே ஆன்மாவிற்கு மோக்ஷமல்லாமற் கருமோபாசனைகளினுலே இல்லையென்பதையும், ஆன்மாவானது தன்னைத்தானே அறியாமல் தன்பால் திருசிய உலகத்தை மனச்சங்கற்பத்தால் சிருஷ்டிக்கின்றனவென்றும் மனதுஞ் ஜீவ விவர்த்தமாதலினுனும் இப்போது ஜீவசொரூபமிதுவென்கின்ருர். (ஏக ஜீவவாதம்)

முத்தியை நயந்தோர் செய்கை மொழிந்தனஞ் சகங்க டோன்று
மத்திற மினிது கேட்பா யநுபவப் பேற்றினுலே
யொத்துமுன் னிலைப்பேர் பெற்றவுணர்வு நஞ்சீவ னித்தைச்
சித்தொடு புமான கந்தை முன்னிலைச் சீவ னென்ப. (1)

முத்தியை நயந்தோர் = மோக்ஷத்தை விரும்பினவீர்
செய்கை மொழிந்தனம் = விவகாரத்தை இயம்பினேம்
சகங்கள் தோன்றுமத்திறம் = சர்வநாமரூபாத்மக உலகங்களின் உற்பத்தியை
இனிது கேட்பாய் = விளம்ப நன்கு ஒருமையுடன் கேட்குதி
அநுபவப்பேற்றினாலே யொத்து முன்னிலைப் பேர்பெற்ற வுணர்வு நம் ஜீவன் = (ஒவ்வொரு மதஸ்தர்களின் தத்தமது கருத்துக் கிசைந்த ஜீவசொரூபம் கூறிம் வாயிலாய் அதற்கு பிரஹ்மைக்கியத்தையறைவார் அநுபவமென்றூர், பிரதிபத்தியம், வேதனம், அநுபூதி, பிரத்தியக்ஷ மென்பது தனித்தனி வாதிகளாலே அங்கீகரித்த விசேஷணம், அதுவே நமது உபநிடதவாதியர் கட்கு ஜீவனும் அதுவே பிரஹ்மமாம்
இதனையே சித்தொடு புமான் = இதனையே புத்தியின் கண்ணிருக்கும் பிரதிபிம்ப வடிவத்தால் புருடனும்
அகந்தை முன்னிலைச் சீவ னென்ப = அகந்தை சொப்பன சாக்கிரங்களில் இப்பிரமாதாவையேகிலேசிபுமான் பிரத்தியக்ஷ இயற்கையன் என்பர்கள்.

சீவனெவ் வறிவினாலே தெரிவுறு மது[1] பதார்த்தந்
தாவுறும் விவித மான சங்கற்ப விகற்பமுற்று
மேவிய மயக்கந் தன்னால் விரிந்தநீ ரலையா மாபோற்
பூவலயங்க ளாகிப் பொலிந்தது புகன்ற[2] சீவன். (2)

சீவன் எவ்வறிவினாலே = அந்தச்சீவனானவன் பகிர்முகமாய் அறியா நின்ற
தெரிவுறும் அதுபதார்த்தம் = கடபடாதி எவ்வுணர்வினாலே அறியா நிற்கும் அது ஆகாசாதிப் பொருள்களாம்
தாவுறும் விவிதமானசங்கற்ப விகற்பமுற்று = மாறி மாறி உண்டாம் பற்பலவகையான சங்கற்ப விகற்பமுற்று
மேவிய மயக்கந்தன்னால் = பொருந்திய பிரமைகளால்
விரிந்த நீர் அலையாமாபோல் = அசைந்த ஜலம் தரங்காதியாக விளங்குவதுபோல
புகன்ற சீவன் பூவலயங் களாகிப் பொலிந்தது = கூறிய அந்தப் பரமாத்மா சிருஷ்டி காலத்தில் சாமான்யமாகத் திருசியத்தன்மையையடைந்து ஜீவத்துவத்தை அபிமானத்தால் பெற்று ஜகதாகாரமாக விளங்குகின்றது.

3 2 4
பன்னுகா ரணமொன் றில்லைப் படைக்குமுன் படைக்கவேண்டு
6
மென்னும்லீ லையினுற் றானே யியைந்த காரணமதாகி
1 7
முன்னுறு பொதுவாங் காட்சி மொய்ப்பொருட் டிரள்களாகித்
5 8
தன்னுளே சகமாய்க் காற்றுட் சலனம்போல் அறிவுட்டங்கும் (3)

முன்னுறு பொதுவாங்காட்சி = பிரத்தியக்ஷ சாமான்ய சைதன்யம்

படைக்குமுன் பன்னுகாரண மொன்றில்லை = யாவற்றையும் உண்டாக்குவதற்கு முன்பு சொல்லத்தக்க காரணம் யாதொன்றுமே இல்லை வாஸ்தவமாக அகாரணமாதலின்,

படைக்க வேண்டுமென்னும் லீ லையினுல் = சிருஷ்டிக்க வேண்டு மென்னும் மாயாமயமான விளையாட்டினுல் தன்னில் தானே ஏகரூபமானயான்

தன்னுளே தானே இயைந்த காரணமதாகி மொய்ப் பொருள் திரள்களாகி சகம் ஆய் = அனேக ரூபமாவேன் என சங்கற்பித்து ரக்ஷித்தது உலகிற்குப் பொருந்திய காரணமதாகிச் சப்தாதி குணங்கள் நெருங்கிய ஆகாசாதி பொருள் கூட்டங்களாய் உற்பத்தியாய் அவ்வுலகம் அவ்யாகிருதம் ஆய்

காற்றுள் சலனம் போல = வாயுனிடத்து அசைவுற்றவாறுபோல

அறிவுள் தங்கும் = சித்தின்பால் லயித்திருக்கும்.

எல்லையிறிசைகள் காலம் புறம்பெனு மிவற்றிற்கேற்ற
1
பல்லுரு வாயெங் கெவ்வா றெழுந்ததப் படியங்காகுஞ்
3 5 4 2
செல்லுமிந் நெறியா லிந்தச் செகமெனும் பிரமகற்பம்
6
புல்லுகா ரணமி லாத பொருளெனப் புந்திசெய்க. (4)

எல்லையில் திசைகள் காலம் புறம்பு என்னும் இவற்றிற் கேற்ற/பல்லுருவாய் எங்கு எவ்வாறு எழுந்தது அப்படி அங்கு ஆகும் = வரம்பற்ற திக்குகள் சமயம் உள்ளும் புறம்பும் என்னும் இவைகட்குத் தக்க/அநேக வடிவங்களாய் எவ்விடத்தில் எவ்வளவு சப்தமுதயமாயதோ அப்படி அங்கு சப்தவாச்சியார்த்தமாகவேஉண்டாகும்.

பிரமகற்பம் செல்லும் இந் நெறியாலெனும் இந்தச் செகம் = பிரம கற்பபரியந்தஞ் சென்று கொண்டிருக்கின்ற இம்மார்க்கத்தால் மயல் மயமான இச்சமுசாரத் தோற்றம்

புல்லுகாரணமிலாத பொருளெனப் புந்தி செய்க = பொருந்தா நின்ற ஆரம்ப காரணமிலாத வஸ்துவென்று காரியம் பொய்ம்மையானே அதனை அபேக்ஷித்த காரணத்தன்மைக்கும் பொய்ம்மையாம் என சித்தித்தது புந்தி மாட்டு ஆரூடப் படுத்துக.

இதனை முன் னிலையாஞ் சீவனிமைப்பினிற் படைத்ததாகு
3 2
மதன்வடி வாகிநிற்கு மனுமான முதல வெல்லாம்
4
விதமுறு காட்சி மெய்ம்மை பந்தமஃ தின்மை வீடாம்
திதமறு மிதுபோ மாறு செப்புதுந் தெரியக்கேட்பாய். (5)

| | | |
|---|---|---|
| இதனை முன்னிலையாஞ் சீவன் படைத்ததாகும் | = | பிராத்தீதமாய் தோற்றுநின்ற இந்த ஜகத்தைப் பிரத்யக் சைதன்யம் கணத்தினில் சிருஷ்டித்த தாகும் (திருஷ்டியே சிருஷ்டியாகலின்) |
| அனுமான முதலவெல்லாம் அதன் வடிவாகி நிற்கும் | = | அந்தப்பிரத்தியக்ஷப் பிரமாணமாகிய அபரோக்ஷ சைதன்யம் பிரஹ்மத்தின் அங்கிசங்கள் போன்ற அங்கிசங்களாம். |
| விதமுறுகாட்சி | = | நீ நான் அது எனப் பொருந்திய திருசியம் உனது என்னும் |
| மெய்ம்மை பந்தம் | = | எண்ணமே கட்டாம் |
| அஃதின்மை வீடாம் | = | அவ்வெண்ணம் அறவே விடுதலையாகுதல் மோக்ஷ மாம் |
| திதம் அறுமிது போமாறு | = | நிலையில்லாததாகிய இத்திருசியம் கற்பிதமாகலின் அதன் சம்பந்த ரூபமான பந்தமும் கற்பிதம் ஆக லின் சத்தியத்வபுத்தி நீங்குமாறு |
| தெரியச்செப்புதும் கேட்பாய் | = | விளங்கக்கூறுதுங்கேட்குதி |

2 1 3
மண்டிய சுழுத்தி தன்னில் வருகனுப் போவதென்னக்
கண்டன வுலக மெல்லாங் கற்பனை முடிவிற் போக
வெண்டரு மலைவு தோற்றம் பெயரெலா மின்றியாழ்ந்து
தண்டலி லிருடே சின்றித் தனித்ததோ ருண்மைநிற்கும். (6)

| | | |
|---|---|---|
| வருகனு மண்டிய சுழுத்தி தன்னில் போவதென்ன | = | நித்திரா தோஷத்தால்வரா நின்ற சொப்பனம் வாசனை பொருந்திய சுழுத்தியவஸ்தையில் மறைந்து போவதே போல |
| கண்டனவுலகமெல்லாம் கற்பனை முடிவிற் போக | = | திருசியமாய்த் தோற்றும் சகங்கள் யாவும் கற்பாந் தத்தில் அழிந்து போகப்பின்; |
| எண்தரும் அலைவு தோற்றம் | = | கருதப்பட்ட சஞ்சலம், பிரதீதி |
| பெயர் எலாம் இன்றி | = | நாமம் இவையாவுமற்று |
| ஆழ்ந்து தண்டல் இல் | = | கெம்பீரமாய் பூரணமாய் |
| இருள்தேசு இன்றி | = | அப்பிரகாசம், பிரகாசம் கடந்து |
| தனித்த தோருண்மை நிற்கும் | = | கேவலமாய் ஏகாகாரமானசத்மாத்திரசைதன்யம் சேடித்திருக்கும். |

## அவதாரிகை

பெயர் அற்றது எனக்கூறியது பிழையாகும். அதற்குப் பிரஹ்மாதி நாமங்களிருத்தலின் எனச் சங்கித்துக் கூறுகின்ருர்.

3 சத்தியம் பிரம மான்மா பரமுதற் 2 சாற்றவேண்டி
4 இத்திறப் பெயர்மே லோரா லிடப்பெற்ற 1 விந்தவான்மா
5 சித்திர மாகத் தானே வேறுபோற் றிகழ்ந்து தீது
மெத்தி மேல்வரு சீவப்பேர் மேவிய போலவாகும். (7)

| | | |
|---|---|---|
| இந்த ஆன்மா | = | நித்திய அபரோக்ஷ வடிவ அயம் ஆன்மா |
| சாற்றவேண்டி | = | உபதேசித்தற்குக் கருதி |
| சத்தியம், பிரம்மம்-ஆன்மா | = | உண்மை. பெரிதினும் பெரிது சொரூபம் |
| பரம் முதல் இத்திறப் பெயர் | = | உயர்ந்தது ஆதியவாக இத்தன்மையனவாய நாமங்கள் |
| மேலோரால் இடப்பெற்ற | = | மகான்களால் கற்பிக்கப்பட்டனவாம் |
| சித்திரமாகத்தானே | = | விசித்திர வைபவங்களாய் விலாசமாய் |
| வேறு போல் தீதுமெத்தி | = | சுயம் இலங்கி அன்னியம் போலபிரமையால் உல்லாசித்து தோன்றி ஆபாசத்தையடைந்து |
| மேல்வருசீவப்பேர் | = | தேகாதி அபிமான அனந்தரம். |
| மேவிய போலவாகும் | = | ஜீவநாமம் பெற்றது போல ஆகும். |

## அவ்தாரிகை

சமஷ்டி ஜீவபாவமடைந்த பரமாத்மாவிற்கு அகங்கார புத்தி வாயிலாய் சமஷ்டி மனேபாவத்தைக் கூறுகின்ருர்.

சீவனென் கின்ற சொல்லும் பொருளுமாய்ச் செறிந்தவான்மா
பாவனை மனனத் தாலே பருத்தெழு மனமதாகு
மேவரும் பிரமந் தன்னில் வேலையி லலைபோல்வந்து
தாவுறு முள்ளந்தானே நினைந்தவா சகங்கற்பிக்கும். (8)

| | | |
|---|---|---|
| சீவன் என்கின்ற சொல்லும் பொருளுமாய்ச் செறிந்த ஆன்மா | = | ஜீவசப்தார்த்தமாய் கலனையா குலத்தன்மையைப் பொருந்திய ஆன்மாவானது. |
| பாவனை மனனத்தாலே பருத்துஎழு ம்மனமதாகும் | = | சங்கற்பவிகற்பாதி சிந்தனையினுலே தூலித்து உதிக்கும் மனமதாகும்; |
| மேவரும் பிரமந்தன்னில் | = | அனதிகாரிகளால் அடைதற்கரிய மகத்தாகிய பிரஹ்மத்தில் |

| | |
|---|---|
| வேலையில் அலைபோல் வந்து = | கடலின்கண்ணே கல்லோலம் போலத் தோன்றி |
| தாவுறும் உள்ளந்தானே = | விஷயங்களை நாடித்தாவும் மனந்தானே |
| நினைந்தவாசகங் கற்பிக்கும் = | தான் எண்ணியபடியே உலகத்தைக் கற்பனை செய்யும். |

உன்னுறு மனத்தி னாலே யுலகமா மிந்த்ர சாலந்
துன்னுறும் பணிக ளென்னுஞ் சொற்பொருட் பொன்னை யன்றி
யன்னிய மில்லைப் பொன்னாற் பணியென வறைய வேண்டா
பன்னிய வுலகாஞ் சொற்குப் பரமன்றி பொருள் வேறில்லை. (9)

| | |
|---|---|
| உன்னுறு மனத்தினாலே உலகமாம் இந்திரசாலம் | வாசனையினால் சங்கற்பிக்கும் உள்ளத்தினாலே ஜகத் சம்பந்தமான இந்திரஜால ஐஸ்வரியமானது |
| துன்னுறும் = | விரிந்து பிரசித்தது நெருங்கித் தோன்றும் |
| பணிகளென்னுஞ் சொற் பொருள் = | ஆரகேயூர கடககங்கணாதி ஆபரணம் என்னும் சப்தார்த்தம் |
| பொன்னையன்றி அன்னிய மில்லை = | சொர்னத்தைக்காட்டிலும் வேற்றுயுறத்தக்க தன்றாம் |
| பொன்னால் பணியென அறையவேண்டாம் = | சொர்ன கங்கணாதிகள் வேறு எனக் கூறவேண்டாம் |
| பன்னிய உலகாஞ்சொற்குப் = | கூறிய உலகமெனுஞ் சப்தத்திற்கு |
| பரம் அன்றிப் பொருள் வேறில்லை = | பரமாத்மாவைத் தவிர அர்த்தம் யாதொன்றுமே இல்லையாகும். |

செல்லுறு கான லாற்றிற் றோன்றிடுந் திரைகள் போல
வில்லையாம் மனத்தி னுண்டு போலெழு மிந்த ஞால
மல்லல்செய் மோகம் பந்தந் தமமல மவித்தை மாயை
புல்லுசம் சார மென்றே ஞானிகள் புகலப் பட்ட. (10)

| | |
|---|---|
| செல்லுறு கானல் ஆற்றில் தோன்றிடுந் திரைகள்போல = | செல்வதுபோன்று சூரியகிரணத்தால் ஓடாநின்ற அசத்தான மருமரீசி கையில் பிரதீதியாகும் தரங்க பரம்பரை போல |
| இல்லையாம் இந்த ஞாலம் உண்டுபோல் எழும் = | அத்யந்தம் இல்லாதிருந்தும் இவ்வுலக இந்திர ஜாலம் சத்தியம்போல விரியாநிற்கும் |
| அல்லல் செய் மோகம் | மிகத் துன்புறுத்தும் பொருட்டே அறியாமல் |
| பந்தம்=கட்டு = | பொருந்திய அதற்கு பந்தம்=கட்டு |

அவித்தை சம்சாரம் = வித்தையால் நாசமாகுதலால் அவித்தை
மோகம், பந்தம் தமம் மலம் மேல்கீழ் சுழற்றுவிக்கும் ஏதுவாகுதலின் சம்சார
என்றே = மாம் சுதந்தரமில்லா ஆசையாகியகயிற்ருல் கட்டப்
படுவதால் பந்தமாம், ஜக உபாதானமாயிருத்
தலின் மாயையாம். மயக்க ஏதுவாகலின் மோக
மாம், தற்சொரூபத்தை மறைத்தலால் தமமாம்,
மலம் அசுத்தமாவதால் மலமாம் என்பன நாமங்கள்
ஞானிகள் புகலப்பட்ட = பேரறிவாளிகளால் கூறப்பட்ட நாமங்களாம்.

1 3 2
பந்தத் துருவங் கேட்டுணரில் பரவீட்டுருவு மேல் வெளியா
4
மிந்தச் சகநீ நான்முதலா மிவைமெய் யென்றல் பந்தமதா
மந்தக் கருத்து நிற்பளவு மரிதாமுத்தி வித்தி னிடைத்
தொந்தத் தருப்போற் காண்பவன்பாற் றேன்ருதுறையுங் காண்ப
வெல்லாம். (11)

பந்தத்துருவம் கேட்டுணரில் = முதலில் பந்தத்தின் உருவத்தைக் கூறக் கேட்டுணர்ந்துகொள்ளுதியேல்,
பரவீட்டுணர்வு மேல் வெளியாம் = பின் மேலான மோக்ஷத்தின் சொரூபம் நன்ருகத் தெரிந்துகொள்ளலாம்,
இந்தச்சகம் நீ நான்முதலா மிவை = திருசியமய இவ்வுலகம் திருஷ்டிவடிவமே, நீ அகம் முதலாமிவை
மெய்யென்றல் = இதையுண்மையென்றல்
பந்தமதாம் = பந்தமென்று சொல்லப்படும்
அந்தக் கருத்து நிற்பளவும் முத்தி அரிதாம் = அந்தப்பிராந்தியான கருத்திருக்கும் வரையும் மோக்ஷம் கிடையாதாம்
வித்தினிடை தொந்தத்தருப் போல் = பீஜத்தின்கண்ணே மரங்கொடி செடி பிறங்குவ போல
காண்பவன்பால் காண்ப வெலாம் தோன்ருதுறையும் = திருஷ்டாவினிடத்தில் காணப்பட்டவை யாவும் அடங்கியிருக்கும்.

1 3 2
பிறிவாம் பொருளின் மரத்திருந்த பேதப்படியே யுதரத்திற்
4
செறிவாஞ் சிருட்டி சமத்காரஞ் சிதைவற்றுண்டாய்ச் செறிவதுபோ
லறிவாஞ் சரீரி யெனும்பொருளி னகன்றவுதரத் தங்குரமாய்
நெறியார் சகத்தின் வடிவமெலா நீங்காவியல்பாய் நிறைந்திருக்கும். (12)

பிறிவாம் பொருளின் உதரத்தில் மரத்திருந்த பேதப்படியே = வடபீஜ முதலிய காரண ரூபத்திரவியத்தின்து கருப்பத்தினுள் விருக்ஷத்தின்வைசித்திரியப்பிர காரமே

செறிவாஞ்சிருட்டி சமத்காரம் = பொருந்தியிருந்த ஆத்தூய காரணியானசத்தி,

சிதைவற்றுண்டாயச் செறிவது போல = கெடாமல் உதிதமாகி அடைவதுபோல

அறிவாஞ்சரீரியெனும் பொரு ளில் அகன்ற உதரத்தங்குரமாய் = அவித்தைச் சரீரமுற்ற ஆன்மத்திரவியத்தின் பூரணோதரத்தில் அங்குரமாய்

நெறியார் சகத்தின் வடிவமெலாம் நீங்காயியல்பாய் நிறைந்திருக் கும் = ஜடாஜடங்களைக்கிளப்பும் அநேக மார்க்கங் களைப் பொருந்திய உலக ஆகுருதிகளெல்லாம் மாருத இயற்கைத்தாய்ப் பூரித்திருக்கும்.

1 3
பருவங் களிலே விதைமுளைக்கும்படிபேரூற் காணப் படுமவற்றிற்
2 4
கருதுங் கருத்து முடலெடுக்கும் ககனத்துதித் தோன்கதையாலே
யிருளுஞ் சகத்தி னுற்பத்தி யெளிதாய் விளங்கு மிதுகேட்பாய்
பெருகுங் ககனம் பிறப்பிடமாய்ப் பிறந்தான்மறையோர் பெருங்குலத்தோன். (13)

பருவங்களிலே விதை முளைக்கும் படி போல் = (சர்வதிருசியங்களும் இருதயத்திருக்குமாயின் இப்பொழுதே யாவரானும் அநுபவிக்கப்படாத தென்னை எனின் திருஷ்டாவின் கண்ணிருக்கும் திருசியப்பிரகாரம்) அததற்குத் தக்க பருவம் தேசம், காலம் இவைகளில்,

கருதுங் கருத்தும் காணப்படும் அவற்றில் உடல் எடுக்கும் = வாசனையினுலே எண்ணும்எண்ணமும்திருசியா காரமய சரீராதிகளை அடையா நிற்கும்

ககனத்துதித் தோன்கதையாலே இருளுஞ்சகத்தின் உற்பத்தி எளி தாய் விளங்கும் = கூறப்படும் ஆகாயத்தின் கண் தோன்றியவன் தானே மோகமயத்தால் சம்சாரத்தின் உற்பத் தியையுரைக்கும்பிரகரணம் சுலபமாகவிளங்கும்

இது கேட்பாய் = ஞானவிண் மகன் யென்னும் இக்கதையைக் கூறக் கேட்பாயாக

பெருகுங்ககனம் பிறப்பிடமாய் பிறந்தான் = விசாலமான ஆகாயமே பிறப்பிடமாக உதித் தான்

மறையோர் பெருங்குலத்தோன் = பரம தார்மீக புருஷோத்தமன்.

ஒழிவிற் றியான முயிர்க் கிதம்வீறுடையோ னெடுநாளுய்ந்திருப்ப
விழியு முலகை விழுங்குறும்நா மிவனை விழுங்காதிருந்தமை என்
னழிவு செய்யு மெனதுவலி யழுந்தும் கல்லில்வாண் முனைபோற்
கழிய மழுங்கிற் றெனவெண்ணிக் காலனவ னூர்கடிதணைந்தான். (14)

| | | |
|---|---|---|
| ஒழிவுஇல் தியானம் | = | நிரந்தரம் அநுசத்தான பரனும் |
| உயிர்க்கு இதம்வீறுடை யோன் நெடுநாள் உய்ந் திருப்ப | = | ஜீவகருணையுடையவனும் பராக்கிரமமுடைய வனும் ஆகிய அத்தருமமூர்த்தி நீண்டகாலம் வாழ்ந்துகொண்டிருக்க, |
| இழியும் உலகை விழுங்கு றும் நாம் | = | அற்பமாய இவ்வுலகத்துள்ளவர் யாவரையும் எளி தாகக் கபளீகரிக்கும் நாம் |
| இவனைவிழுங்காதிருந்தமை யென் | = | இவ்வாகாயத்தில் தோன்றியவனை யேன்கவுளீ கரியாமலிருந்தோம் |
| அழிவு செய்யும் எனது வலி | = | யாவரையும் விழுங்குறும் என் சாமர்த்தியம் |
| அழுந்தும் கல்லில்வாண் முனை போல் | = | கடினமான பாறையின்பால் இட்டகட்கத்தின் முனை போல |
| கழிய மழுங்கிற்று | = | அத்தியந்தம் அழிந்து கெட்டுப் போயிற்று |
| என எண்ணி | = | என்று நினைந்து |
| காலன் அவன் ஊர்கடி தணைந்தான் | = | யமதூதன் அவன்புரத்தை விரைவில் கொல் லும் பொருட்டு அடைந்தான். |

**வினையின் முயல்வார் தங்கருமம் விடுவதுண்டோ வெனமறையோன்**
**மனையின் வாயிற் புகுமளவின் மண்டு மூழிக்கடுங் கனல்போற்**
**கனையுங் கடுந்தீ யெரித்திடவுங் கடிதுபுகுந்து கண்டவனைப்**
**பனைசெய் கரமாயிரத் தாலும் பற்றியிழுத்துப் பயனற்றான். (15)**

| | | |
|---|---|---|
| வினையில் முயல்வார் தம் கரு மம் விடுவதுண்டோ என | = | காரியம் முடிக்கத்தற்பரராய் முயலும் தீரர் தாம் தொடங்கிய காரியத்தை முடிக்காமல் விடுவது துர் லபமல்லவா என, |
| மறையோன் மனையின் வாயில் புகுமளவில் மண்டு கடும் ஊழிக்கனல் போல | = | பிரம்மாவின் வீட்டு வாயிலில் புகுங்கால் பொருந் திய பிரளயகால அக்கினி போல |
| கனையுங் கடுந்தீ | = | சப்தியா நின்ற சுவாலைத் தீ |
| எரித்திடவும் | = | தகித்திடவும் |
| கடிது புகுந்து கண்டு அவனை | = | அதையும் பிளந்து மிருத்யுவானவன் உள்ளே வேக மாய்ப் பிரவேசித்துத் தரும மூர்த்தியைப்பார்த்து, |
| பனைசெய் கரம் ஆயிரத்தா லும் பற்றியிழுத்துப் பய னற்றான் | = | பனை மரங்கள் போன்ற ஆயிரங்கரங்களாலும் பிடித் திழுத்து யாதொரு பிரயோஜனத்தையும் அடைந் தானில்லை. |

**அவன் சங்கற்ப புருடனைப்போ லசைவற்றிருப்ப வடர்ப்பரிதா**
**யிவனிங் ககன்று நமன்பாற்போ யிவ்வாறுரைப்ப யமனுரைப்பான்**
**புவனங் கருமத்தா லன்றிப் பொன்றுநுதவிப் பொருளவையே**
**தவறும் படிசெய் கருமங்கள் சகாயமாகச் செல்கென்றான். (16)**

அவன் சங்கற்ப புருடனைப் போல அசைவற்றிருப்ப = அவ்வாகாசத்தினின்றுண்டானவென் மனோராஜ்யப் புருடனையொப்பச் சலனமில்லாது நிலை பெற்றிருப்ப
அடர்ப்பரிதாய் = கொல்ல = கெடுக்கமுடியாதொழிக
இவன் அங்கு அகன்று = காலன் அவ்விடம் விட்டுச்சென்று
நமன்பால் போய் = தருமராஜாவை அணுகி
இவ்வாறுரைப்ப = நடந்த வரலாற்றைக்கூற
யமன் உரைப்பான் = தருமராஜாகூறுகின்றார்
புவனம் = புவனத்துள்ளவர்கள்
கருமத்தாலன்றிப் பொன்றுது = கரும இறுதியினாலன்றி மரியார்கள்
உதவிப் பொருளவையே = சகாயமான வஸ்துக்கள் கருமங்களேயாம் (வினைப் போகமே யொருதேகங்கண்டாய்) வினை தானொழிந் தால் தினைப்போதளவு நில்லாது கண்டாய்
தவறும்படி செய் கருமங்கள் சகாயமாகச் செல்கவென்றான் = மாரணீயமான கருமங்களை உதவியாகக்கொண்டு நீ செல்லுவாயாகவென்று கூறினார்.

காலனிதுகேட் டவன்செய்த கருமந்தேடி நதியோடை
ஞாலந்திசைக ளெலாமுழன்று நண்ணுதாக மீண்டெய்தி
சீலநமனுக் குரைசெய்யச்சிந்தித் தவனு முரைசெய்வான்
மூலவிசும்பிற் பிறத்தலினுன் முடிவி லவனும் விசும்பன்றே. (17)

காலன் இதுகேட்டு = மிருத்யுவானவன் இவ்வண்ணம் இயம்பியதைக் கேட்டு
அவன் செய்த கருமம் தேடி = அம்மறையவன் ஆற்றிய கருமத்தை ஆராயலுற்று,
நதியோடை = புண்ணியநதிகள் புஷ்கரணிகள்
ஞாலந் திசைகள் எலா முழன்று = மண்டலங்கள், திசைகள் திக்கந்தங்கள் எல்லா விடங்களிலும் பன்முறை சுற்றிப்பார்த்தும்
நண்ணுதாக = கர்த்தாவின் சூக்கும சரீரத்தில் பேதப்பட்டிருக்கும் அதிருஷ்டங்களை புறத்தில் தேடுதல் கூடாமையின் ஒன்றுமே கிடையாமற்போக,
மீண்டு எய்தி = மறுபடியுந் தருமர் சந்நிதியுற்று
சீல நமனுக்கு உரைசெய்ய = எல்லாப் பொருள்களையும் அறிந்துள்ள யமனுக்கு நடந்தவற்றைக் கூற
அவனுஞ் சிந்தித்து = அத்தருமரும் ஆராய்ந்து,
உரை செய்வான் = இதைக்கூறுவாராயினர்.
மூலவிசும்பில் பிறத்தலினல் = சர்வகற்பனுவதிஷ்டான சிதாகாசத்தில் உண்டாயிருத்தலால்
முடிவில் அவனும் விசும் = அனந்தமான அவனும்
பன்றே = அச்சிதா காசமேயாவனல்லவா?

[1] விண்ணிற் பிறந்தோன் காரணத்தை மேவாமையினுற் கருமங்கள்
பண்ணிற் றிலன்கா ரணமிலதேற் பண்ணுங் கரும முளதாமோ
வெண்ணற் குரியசகா யமுனக் கிலதாமென்று யமன்கூற.
நண்ணற் கரிதென் றுயர்கால [4] னடந்தான் [3] மனையின் நனிவியந்து. (18)

| | |
|---|---|
| விண்ணிற் பிறந்தோன் காரணத்தை மேவாமையினுல் — | சிதாகாயத்தினின்றுஞ் ஜனித்தோன் கர்த்திருத்வாதி சககாரி காரணத்தைப்பொருந்தாமையினுல், |
| கருமங்கள் பண்ணிற்றிலன் = | தொழில்கள் செய்திலன், |
| காரணம் இலதேல் = | சககாரி காரணமில்லாதொழியவே |
| பண்ணுங்கருமம் உளதாமோ = | செய்யா நின்ற வினை நிற்குமோ |
| எண்ணற்குரிய சகாயம் = | நீ நினைத்தவண்ணம் முடிக்கத்தக்க சககாரி காரணம் |
| உனக்கு இலதா மென்று எமன் கூற = | கொல்ல முயன்ற உனக்கு இல்லையாகு மென்று தருமராஜா சொல்லியவுடன் |
| நண்ணற்கரிது என்று = | நாம் பிடித்தற்கு முடியாதென்று |
| உயர்காலன் நனிவியந்து மனையில் நடந்தான் = | தன் உத்யோக முயல்வில் பெருமை வாய்ந்த மிருத்யு மிகவும் ஆச்சரியமடைந்து தனது அரண்மனையை நோக்கிச் சென்றனன். |

என்னு வுரைத்த முனிமுகம்பார்த் திராமனுரைப்பா னீயிசைத்த
வன்னுன் சுயம்பு விஞ்ஞானமங்க மானே னென்றுகத்
துன்னு நின்றேன் பிரமனெனத் துணிந்தே னெனலுந் தூயமுனி
முன்னு முரைத்த தயன்றனையே மொழிந்த கதையின் முறைகேளாய் (19)

| | |
|---|---|
| என்னுவுரைத்த முனிமுகம் பார்த்து இராமன் உரைப்பான் = | என இவ்வண்ணம் இயம்பிய ஸ்ரீவசிஷ்ட பகவானது திருமுகத்தைப் பார்த்து ஸ்ரீ இராகவர் கூறுவதாவது |
| நீஇசைத்த அன்னுன் சுயம்பு = | தேவரீர் அருளிச் செய்த அம்மறையவன் தானேயுண்டானவன். |
| விஞ்ஞானம் அங்கமானேன் = | பேரறிவே வடிவமானேன். |
| ஒன்றுகத்துன்னு நின்றேன் = | ஒரே வடிவமாக விளங்குபவன், |
| பிரம்மன் எனத்துணிந்தேன் எனலும் = | ஜீவசமஷ்டி ரூபமாயிருக்கும் பிரஹ்மமாகிய இப்பிரபிதாமகனே அஜன் என்று நிச்சயித்தேன் என்று கூறலும் |
| தூயமுனி முன் நாம் உரைத்தது அயன்றனையே = | பரிசுத்த மகாமுனீந்திரர் பூர்வம் யாம்புகன்றது பிரமாவினையேயாம் |
| மொழிந்த கதையின் முறை கேளாய் = | யாம் கூறிய சரிதையினது கிரமத்தைக் கூறக் கேட்குதி. |

செயல்செய் காலன் யமனுடனே செப்பும்வழக்குத் தாமுணர்ந்தே
முயருமனுவி னந்தத்தி லுலக மெல்லா முண்டெழுந்த
வயர்வில் கால னயன்றனையு மடர்ப்பமுயன்ற வப்போதிற்
றுயரில் காலன் முகநோக்கித் துங்கயமனுங் கிவை சொன்னன். (20)

| | | |
|---|---|---|
| செயல் செய்காலன் யமனுடனே செப்பும் வழக்குத் தாம் உணர்ந்தே | = | யாவரையுந் தொலைக்குந் தொழிலைச் செய்யும் மிருத்யுவானவன் தருமராஜாவுடன் சம்பாஷித்த விவாதத்தையே இன்னதன் பொருட்டெனஉணர்ந்துளோம், |
| உயரும் மனுவின் அந்தரத்தில் | = | மேன்மையான மன்வந்தரத்தில் |
| உலகமெல்லாம் உண்டு எழுந்த | = | எல்லாப் பிரஜைகளையும் உண்டு நிமிர்ந்து உலவிய |
| அயர்வுஇல் காலன் | = | பலம் படைத்த மிருத்யு |
| அயன்றனையும் அடர்ப்ப | = | பிரம்மாவையும் கொன்றுவிட, |
| முயன்ற அப்போதில் | = | வேண்டுமென்று பிரயத்தனஞ் செய்தஅக்காலத்தில் |
| துயரில் காலன் முகம்நோக்கி | = | துக்கத்திற்கு இல்லமாகிய மிருத்யுவினுடைய வதனத்தைப் பார்த்து, |
| துங்கயமனுங்கிவை சொன்னன் | = | பரிசுத்த தருமராஜாவானவர் அவ்விடத்தே இவ்வுபதேசஞ் செய்தனர். |

நிகரில் பரம[1] வாகாய நிமல வடிவாய் நிற்கின்ற
இகலி[3] லயனை[2] யடர்த்தற்கென்[4] றெண்ணு மெண்ண மெளிதாமோ
திகழும் வெளியே வடிவாகிச் செறிந்த[6]பூத வடிவிலனுய்ப்
புகல்[5]சங்கற்ப, புருடனைப்போற் பொன்[6]ருதயனும் பொலிந்திடுமால். (21)

| | | |
|---|---|---|
| நிகர்இல் பரமவாகாய | = | உவமையற்ற மேலான சிதாகாச |
| நிமல வடிவாய் நிற்கின்ற அயனை | = | நிர்மலமான சொரூபமாய் எழுந்தருளியிரா நின்ற பத்மாசனத்தனனை பிரம்மாவை, |
| இகல்இல் அடர்த்தற்கு என்று | = | விரோதமுடையவனுய்க் கொன்றுவிட வேண்டுமென்று |
| எண்ணும் எண்ணம் எளிதாமோ | = | நினையா நின்ற நினைவு சுலபமாமோ? |
| திகழும் வெளியே | = | விளங்காநின்ற சிதாகாசமே |
| வடிவாகி | = | ஆகாரமாகி, |
| புகல் சங்கற்ப புருடனைப் போல் | = | சொல் மாத்திரமாய் சங்கற்ப புருடனை யொப்ப, |

| | |
|---|---|
| செறிந்த பூதவடிவிலனுய் = | ஒன்ருேடொன்று உறைந்த பிருது வியாதி சரீர சம்பந்தமில்லாதவனுய், |
| பொன்ருது அயனும்பொலிந் திடும் = | கொல்லப்படாதுபிரம்மாவும் விளங்கிக்கொண்டிருப் பன் |

1
ஞான விண்ணுய்க் கேவலமாய் நடுவு முடிவு முதலில்லா
3 2 4
தான சுயம்பு வாம்பிரம மடுத்ததனது மனவசத்தான்
மான முருவ முடையதுபோன் மன்னுபுமான்போல் வயங்கிடுமா
லீன மலடி மகன்போல் விதுமெய்ம்மையினுல் வடிவிலதாம். (22)

| | |
|---|---|
| ஞானவிண்ணுய்க் கேவலமாய் = | சிதாகாசமாய், தனித்ததாய், |
| நடுவு முடிவு மில்லாதான = | ஆதிமத்தியாந்தரகிதமான |
| பிரமம், சுயம்புவாம் = | பெரிதுக்கெல்லாம் பெரிய பிரஹ்மம் தானேயிலங் கும் சுயம்புவாம், |
| அடுத்த தனது மனவசத்தால் = | தன்பால் அத்யசித்த மனோ வசத்தால் |
| மான உருவமுடையது போல் = | யாவரும் புகழும்படியான ஆகாரவான் போலவும், |
| மன்னுபுமான் போல் வயங் கிடும் = | நிலைபெற்ற புருடோத்தமன் போலவும், விவகார யோக்கியமாகப் பிரம்மாசுயம்பு என விளங்கா நிற் பன், |
| ஈன மலடிமகன் போல் = | இழிவான வந்தியாபுத்திரன் ஒப்ப |
| இதுமெய்ம்மையினுல் வடி வில தாம் = | இதற்கு வாஸ்தவமாக தேகம் இல்லையாம். |

என்று காலன் றனக்கியமனிசைத்தானென் றேன்முக நோக்கி
நின்ற வாதி வாகியமாய் நிகழ்ந்தவாதி பௌதிகமா
யொன்று முடல முயிர்க்கெல்லா முபயவிதமாம் பிரமனுக்குத்
துன்று மாதி வாகியமாஞ் சூக்கவுட லொன்ருயதென. (23)

| | |
|---|---|
| என்று காலன்றனக்கு = | என மிருத்யுவுக்கு |
| இயமன் இசைத்தான் என் றேன் முகம் நோக்கி நின்ற ஆதிவாகியமாய் நிகழ்ந்த ஆதி பௌதிகமாய்யொன் றும் உடலம் = | எமதருமராஜர் கூறினுர் என அருளிய வசிஷ்ட பக வானைப் பார்த்து வாசனுவசத்தினுல் ஆதிவாகிய மாய் நிலைபெற்ற சூக்கும சரீரம் ஒன்றும் அவ்வப் போது வந்து போயிலங்கா நின்ற ஆதிபௌதிக சரீ ரம் ஒன்றும் ஆக, |
| உயிர்க்கெல்லாம் உபயவிதமாம் இரண்டுவகையாகயிருக்கும் பிரமனுக்குத்துன்றும் = | ஜீவர்கள் யாவருக்கும் இரண்டு பிரகாரமாகப் பொருந்தும் |

பிரம்மாவுக்கு பொருந்தும் ஆதிவாகியமாஞ்சூக்கும உடல் ஒன்ருகியது என = ஆதிவாகியமென்று கூறிய சூக்கும சரீரம் ஏகமாத்திரமாகயிருப்பது என்ன காரணம்,

## அவதாரிகை

தூலதேக ஆரம்பஞ்செய்யும் ஆகாசாதி பூதசத்துவ அசத்துவங்களால் ஜீவர்கட்குத் தேகமிரண்டாம் பிரம்மாவிற்கோ தூலதேக அசத்துவமாம் என ஸ்ரீ வசிஷ்ட பகவான் அருளுகின்ருர் ;

பிரம வொளியாற் பிறந்தசகம் பிறக்குமுயிர்க்குக் காரணமாய்
விரவு மதனு லுயிர்க்கெல்லா மேவுமுடல மிரண்டாகும்
பரம பிரமத் தினையொழியப் பயில்காரணம் வேறிலாமையினுல்
வரவி லயனுக் கோருடலாய் மருவு மாதி வாகியமே. (24)

பிரமவொளியால் பிறந்த சகம் = இரண்யகர்ப்பனுடைய பிரகாசமான சங்கற்பத்தால் உண்டான உலகம்

பிறக்கும் உயிர்க்குக் காரணமாய் விரவுமதனுல் உயிர்க்கெல்லாம் = தேகம் எடுக்கும் ஜீவர்கட்குக் காரணமாய்க்கலந்து கொண்டிருக்குமதனுல் சர்வப்பிராணிகட்கும்

மேவும் உடலம் இரண்டாகும் = பொருந்தாநின்ற தேகங்கள் இரண்டாம்,

பரமபிரமத்தினையொழிய பயில் காரணம் வேறிலாமையினுல் = மேலாய பிரஹ்மசொருபத்தையொழிந்துஉபாதான காரணம் பூதங்களாகும் அயல் ஒன்றும் இல்லாமையினுல்

வரவு இல் அயனுக்கு ஓர் உடலாம் = போக்குவரவு இல்லாத பிரம்மாவுக்கு ஓரே சரீரமாய்

ஆதிவாகியமே மருவும் = ஆதிவாகிய மாத்திரம் பொருந்தா நிற்கும்.

சகக்காரணமா[1] மயனுக்குத்[3] தானே தோன்று[2] மனவடிவாய்[4]
மிகத்தாஞ் சகத்து விரிந்திடலால் விரிந்தவெல்லா மனவடிவென்
றுகப்பா லுரைத்த வசிட்டனைப்பார்த் துலகமாயை தனைவிரித்த
மகத்தா மனத்தின் வடிவுதனை வகுத்தோதென்ன முனிசொல்வான். (25)

சகத்காரணமாம் அயனுக்கு = மூவுலகத்திற்கும் காரணத் தன்மை வாய்ந்த பிரம்மாவிற்கு

மனவடிவு தானே தோன்றுமாய் = மனமாத்திரமாய்த்தோன்றுவதாய் சுயம் உண்டாய்

மிகத்தாம் = மேன்மை மிகுந்த தன்மனத்தினுலே

சகத்து விரிந்திடலால் = விஸ்வமானது விஸ்தரித்துக்காணப்பெறுதலினுனே

விரிந்தவெல்லாம் = விரிவாகக் காணப்பெறுவன யாவையுமே
மனவடிவென்று = மனோமயமாம் என்று இவ்வண்ணம்
உகப்பால் உரைத்த வசிஷ்டனை = சந்தோஷத்தால் உபதேசித்தருளிய ஸ்ரீ வசிஷ்ட பகவானை நோக்கி
உலகமாயைதனை விரித்த மகத்தாம் மனத்தின் வடிவுதனை வகுத்து ஓது என்ன = சம்சாரத்தினை விரியுமாறு செய்த பெருமை பொருந்திய மனத்தினது உருவத்தைப் பிரித்து அனுக்கிரகிக்கவேண்டுமென்று இராமபிரான் வேண்டிக் கொள்ள
முனிசொல்வான் = மனனசீலராகிய ஸ்ரீ வசிஷ்டர் கூறுகின்றார் ;

1
சடசூ னியமா யெங்கணுஞ்சேர் தனிநெஞ்சுக்குப் பேரொழிய
3 2 4
வுடனுங் ககனந் தனைப்போல வுள்ளும்புறம்பு முருவிலதாம்
படர்தீர் மெய்பொய் யெனும்பொருளிற் பயிறோற்றரவே மனமாகும்
6 5 7
தொடர்சங் கற்ப மெங்குளதாந் தோன்றுமனமு மங்குளதே. (26)

சடசூனியமாய் = சடம் அறிவற்று, சொரூபமற்றதாய்
எங்கணுஞ்சேர் = சர்வப் பொருள்களிலுஞ் சேரா நின்ற
தனி நெஞ்சுக்கு = இழிவில் ஒப்பற்ற மனத்தினுக்கு
பேரொழிய = நாமமாத்திரமேயல்லாமல்
உடனுங்ககனந்தனைப்போல உருஉள்ளும் புறம்பும் இலதாம் = பிரதமத்தில் உற்பத்தியாகும் ஆகாசத்தைப்போல அஞ்ஞர்த ஞ்ஞராலும் சிறிதும் சத்துருபம் இருதயத்தும் பாகியத்தும் பார்க்கப்படுவது இல்லையாம்
படர்தீர் மெய் பொய் = பரிச்சின்னமான சத்து அசத்து
என்னும் பொருளில் பயில் தோற்றரவே மனமாகும் = என்னும் வஸ்துக்களில் அத்தியாசமாகப் பொருந்திய பிரதீதிமாத்திரமாய் அவ்வவ்வாகாரத்தை யடைந்து தோற்றுவதே மனம் என்று சொல்லப் படும்.
தொடர் சங்கற்பம் எங்குளதாம் அங்கு தோன்றும் மனமும் உளது = விஷயங்களைப் பின்பற்றும் சங்கற்பமானது எவ்விடத்திலுண்டாகா நிற்குமோ அவ்விடத்துப் பிரதீதியாம் மனமும் இருப்பதேயாம்.

மனத்தின் வடிவு சங்கற்ப மற்றிவ்விரண்டு மொன்றுகும்
மனர்த்த மோகமலம் பந்தம வித்தைமாயை தமமுதலா
மினத்த பெயர்சங் கற்பத்துக் கேற்றபெயரா மிதுநமுவிற்
3 2
கனத்த சகக்காட்சியும் போகுங்கதிர் விட்டெ றிக்கும் பரவடிவம். (27)

மனத்தின் வடிவு, சங்கற்பம் = மனத்தினது சொரூபம் சங்கற்பமாம்,
இவ்விரண்டும் ஒன்ருகும் = எவ்வகையானும் வேறு பிரியாவாகும்,
அனர்த்தம், மோகம், மலம், = சம்சாரம், மயக்கம், அசுத்தம்,
பந்தம், அவித்தை, மாயை, அகங்காரக் கிரந்தி, ஞானத்தால் நாசமாவது,
தமம் முதலாம்இனத்தபெயர் = சர்வவிக்ஷேப காரணம் ஆன்து சொருபத்தை மறைத்தல் என்பனவாதிய திரளாய நாமங்கள்!

சங்கற்பத்துக்கேற்ற பெயராம் = சங்கற்பத்துக்கு பொருத்தமான நாமங்களாம்
இது நழுவில் = இந்தச் சங்கற்ப ஜாலமானது நசிக்கில்;
கனத்த சகக்காட்சியும் போகும் = திடதரமான ஆகாசாதி தோற்றத்திருசியமுந் தொலைந்துபோம்;
பரவடிவம் கதிர்விட்டெறிக்கும் = மேலான சொப்பிரகாச சைதன்யம் நிர்மலப்பிரகாசமாய்ப் பிரகாசித்துக்கொண்டிருககும்.

நிற்ப நடப்ப வெனுமனைத்தி னிழலாடாது வெறிதிருக்குந்
தற்ப ணந்தா னெப்படியோ தானேவிளங்கு மப்படியே
கற்ப முறுநீ நான்முதலாங் காட்சிவிகற்ப மெலாமடங்கி
யற்ப மெனினுங் காட்சியறி லதுவேதனிக் கேவலநிலைமை. (28)

நிற்ப நடப்பவெனும் அனைத்தின் நிழலாடாது = அசரம், சரம் அல்லது தாவர, சங்கமமென்னும் எல்லாவற்றின் பிரதிபிம்பங்கள் தன்னிடத்தில் ஏறாது,
வெறிதிருக்குந்தர்ப்பணந் தான் எப்படியோ = களங்கமற்ற கண்ணடி எப்படித்தானே தெளிவாய் விளங்குமோ
அப்படியே = அவ்வாறே,
கற்பமுறு நீ நான் முதலாங் காட்சிவிகற்பமெலாம் அடங்கில் = ஆயிரங்கோடியாய் சங்கற்பஞ் செய்து கொண்டிரா நின்ற துவம், அகம் ஆதிய திருசியப்பிராந்தி அனைத்தும் நாசமாகில்=மனோநாசம்
காட்சி அற்பமெனினும் = திருசியம் கிஞ்சிற்றேனுமின்றி
அறில் அதுவேதனிக் கேவல நிலைமை = ஒழியில் அதுவே திருசிய வாசனை நீக்கமாம் திருசியத்தைப் பற்றுத அதுவே சைதன்யதிருஷ்டாவின் தான் மாத்திரமாய் ஒளிரும் ஸ்திதியாம்.

## அவதாரிகை

இவ்விதமான கைவல்யப் பிராப்தியில் மனமே விரோதியாம் ஆகலின் அதன் அழிவின் பொருட்டுப் பெருமுயற்சியைச் செய்ய வேண்டுமெனக் காட்டற்பொருட்டு அதனது துராத்மத் தன்மையையே விரித்துக்காட்டுகின்ருர்.

காண்பரிய மனக்காட்சிப் பொருளெல்லாங் கனவுதருகனவுபோற் காட்டா நிற்கும்
பூண்பதிலா மனஞ்சலன சத்தியாலே பொலியுமசை யுந்தியங்கும் போகுமீளும்
வீண்பயிலுஞ் செருக்குமிகு மகங்கரிக்கும்வேற் றுருவாம் பெருங்கற்ப மேவும் போதிற்
சேண்படவெல் லாப்பொருளுந் தீரமாய்ந்து செறியுமுப சாந்தமே சேடமாகும். (29)

காண்பரிய மனம் = அசாத்தாகாரமானமனம்,
காட்சிப்பொருளெல்லாம் = அசத்தாகார இத்திருசியத் தோற்றங்களியாவற்றையும்,
கனவுதரு கனவு போல் = சொப்பனமானது வேறு சொப்பனத்தை உண்டு பண்ணுவதே போல,
காட்டா நிற்கும் = வாசனுவயமாய்த் தோற்றுவித்துக்கொண்டேயிருக்கும்;
பூண்பதிலா மனம் = தனக்கென வடிவமில்லாத சித்தம்,
சலன சத்தியாலே விளங்கும் = அலைவு தரும் ஆற்றலாலே விளங்கும்
அசையும் தியங்கும் போகும் மீளும் வீண் பயிலும் செருக் குமிகும். அகங்கரிக்கும் = சலிக்கும், மயங்கும் அல்லது பிரமிக்கும் செல்லும், மொத்துண்டு திரும்பும் வாளாதிரியும், களிப்புமிகும் கர்விக்கும்
வேற்றுருவாம் = உயர்வைவிட்டுத்தாழ்வை அடையும்
பெருங்கற்பம்மேவும் போதில் சேண்பட எல்லாப் பொருளும் தீர மாய்ந்து = மகாப்பிரளயமானது வந்தடையுங் காலத்தில் ஆகாசம் உள்பட சர்வ திருசியங்களும் முற்றினும் அசத்தாகி
செறியுமுபசாந்தமே சேடமாகும் = வரும் சிருஷ்டியின் ஆதியில் உபசாந்தமே எஞ்சி நிற்கும்,

அத்தமி யாதசோதி யருக்கனு யளவி லாதாய்
மெத்திய பிணியி லாதாய் மேவரும் பிறப்பி லாதா
யெத்தலங் களினு மென்று மியாவுமா யாவுஞ்செய்து
முத்தியு மாகி யோங்கு முதற்பரம் பொருளொன் றுண்டு. (30)

அத்தமியாத சோதி அருக்கனாய் = திருசியம் அசத்வம் போலத் திருஷ்டாவும் அசத்துவமே யாமெனின் சதோதயமான ஞான பாஸ்கரனாய்,
அளவிலாதாய் = அப்பிரமேயமாய்
மெத்தியபிணியிலாதாய் = அநாமயமாய் வியாதியற்றதாய்

| | | |
|---|---|---|
| மேவரும் பிறப்பிலாதாய் | = | அடைதற்கரிய அஜன்மமாய் |
| எத்தலங்களினும் | = | எல்லா இடத்திலுமிருந்து தேசபரிச்சேத மற்றதாய் |
| என்றும் | = | எல்லாக் காலங்களிலுமிருந்து காலபரிச்சேத மற்றதாய் |
| யாவுமாய் | = | சர்வான்மகமாயிருந்து |
| யாவுஞ் செய்து | = | வஸ்துபரிச்சேதமற்றதாய் உபாதி சகிதத்தினுல் பஞ்சகிருத்தியங்களைச்செய்து, |
| முத்தியுமாகி | = | உபாதிரகிதத்தினுல் செய்யாததாகி |
| ஓங்கு முதற்பரம் பொருளொன்று உண்டு | = | மேலான அத்வீதீய உண்மைப் பொருள் மாத்திரம் இருக்கின்றது. |

1 3 2 4
பகர்வரிதாய் முத்தராற் பயில்வதாகிப் பரமுதலாம் புதிதான பலபேர் பெற்று
மிகவுணர்சாங் கியர்புருட னென்றுஞ் சுத்த வேதாந்தம்விளங்கினோர் பிரமமென்றுந்
துகளறு விஞ்ஞானிகள் விஞ்ஞானமென்றுஞ் சூனியர் சூனியமென்றுஞ் சொல்லப்பட்டுந்
திகழிரவி தேசுக்குந் தேசாய்நின்று தேசளித்துத் திகழ்வித்துத் திகழா நிற்கும். (31)

| | | |
|---|---|---|
| பகர்வரிதாய் | = | வேறுபடுத்திச் சொல்லக்கூடாததாய் |
| முத்தரால் பயில்வதாகி | = | ஜீவன் முக்தர்களால் அநுபூதியால் அடையத்தக்கதாய், |
| புதிதான பரமுதலாம் புலபேர் பெற்று | = | மாணக்கர்களுக்கு உபதேசிக்கும் பொருட்டுக் கற்பித்த சத்து சித்து பூரணம் என திருநாமங்களை உடையதாகி, |
| மிகவுணர் சாங்கியர் புருடன் என்றும் | = | மிக்க மேதாவிகளாகிய சாங்கிய சாஸ்திரமுடையார் புருடன் என்னவும், |
| சுத்த வேதாந்தம் விளங்கினோர் | = | தூயதாகிய மனத்தினர்க்குரிய மறைமுடி உணர்ந்த பெரியோர் |
| பிரமமென்றும் | = | பெரிதுக்கெல்லாம் பெரிதான பிரஹ்மமென்றும் |
| துகளறு விஞ்ஞானிகள் விஞ்ஞானம் எனவும் | = | குற்றமற்ற யோகாசார பௌத்தராகிய விஞ்ஞானிகள் க்ஷணிகவிஞ்ஞானமெனவும், |
| சூனியர் சூனியமென்றும் | = | மாத்தியமிக பௌத்தராகிய சூன்யவாதிகள்சூனியமெனவும் |
| சொல்லப்பட்டும் | = | நாமங்கள் கூறப்பெற்றதாகி. |
| திகழ் தேசாய் நின்று இரவி தேசுக்கும் தேசு அளித்து திகழ்வித்துத் திகழா நிழ்கும் | = | சொப்பிரகாச சுயஞ்சோதியாயிருந்து சூரியன் முதலிய பிரகாசங்கட்கும் பிரகாசத்தைக் கொடுத்து ஒளிர்வித்துப்பிரகாசியா நிற்கும். |

உரைபகர்வோ னுசாவிடுவோன் கேட்போன்காண்போ னுண்பவன்சிந்திப்பவனு
யுலகின்மெய்யிற்
றிரமுறமே வியும்மேவாப்பொருளி னின்றுந்தினகரன் றேசெனச்சித்தின்
றிகழ்ச்சி யுண்டாம்
விரைமனம்வேர் கரணமலர் அண்டங்காயாய் விண்ணெழு மாமாயைக்
கொடியைவிதிர்க்குங் காற்றும்
புரைசெயுடற் செப்பனைத்துண் மணியாய்நிற்கும் புணர்புரியட்டகவுடலைப்
போய்மீள்விக்கும். (32)

| | | |
|---|---|---|
| உரைபகர்வோன், உசாவிடுவோன் | = | சொல்பவன், பரஸ்பர விசாரிப்பவன் |
| கேட்போன், காண்போன், உண்பவன் | = | சிரவணிப்பவன், பார்ப்பவன், போக்தா |
| சிந்திப்பவனும் உலகின் மெய்யில் | = | கர்த்தா. இங்ஙனமாகி ஜகத்திலும் தேகத்திலும் |
| திரமுறமேவியும் | = | சர்வாதிஷ்டான சொரூபமாயிருத்தலால் திண்ணமாக இருந்தும் |
| மேவாப் பொருளினின்றும் | = | சர்வவிலாக்ஷணனுதலால் பிரதீதியாகாத பரமான்மாவினின்றும், |
| தினகரன்தேசு என | = | சூரியனது பிரகாசம் போல |
| சித்தின் திகழ்ச்சியுண்டாம் | = | சிற்பிரகாசமானது பரவா நிற்கும் அப்பரமான்மாவினின்றும் |
| விரைமனம், வேர் | = | வேகமாய்ச் செல்லும் மனமே மூலமாம் |
| கரணம் மலர் | = | இந்திரியங்கள் புஷ்பமாம் |
| அண்டங்காயாய் | = | பிரமாண்டங்கள், பழங்களாம் |
| விண்ணெழுமா மாயைக் கொடி விதிர்க்குங் காற்றும் | = | சிதாகாசத்தில் உதித்த பிரகிருதிலதையை அசைப்பிக்கும் காற்றும் |
| புரைசெய் உடல்செப்பனைத்துள் மணியாய் நிற்கும் | = | நவத்துவாரங்கள் பொருந்திய தேகங்களாகிய சிமிள்களுள் சின்மணியாகி நிற்கும் |
| புணர்புரியட்டகவுடலைப் போய் மீள்விக்கும் | = | சூக்கும தேகத்தை இங்கும் அங்கும் அலைக்கும். |

2
சுத்தவறி வாதலா லாகாய பாவனையாற் சூழ்விண்ணுரு
1 3
மத்திறனே யெப்பொருளும் பாவித்தபோ துள்ள ததுவா மந்தச்
சித்திடையே மூவுலகுந் திடர்கான லெனத்தோன்றிச் சிதையும் பல்கா
லித்தனையுஞ் செய்யவுந்தா னித்தனையுஞ் செய்யாம லிருக்குமன்றே. (33)

| | | |
|---|---|---|
| உள்ளது | = | சன்மாத்திரமான பிரஹ்மம் |
| சுத்த அறிவாதலால் | = | (பரமான்மா சரீரத்துட்புகுந்து சமுசாரத்தை ஆற்று வாராயின் அதற்கு யாங்ஙனம் கைவல்யம் எனின் ஞானகாரசர்வான் மதுதேலினல் |
| ஆகாய பாவனையால் சூழ் விண்ணுகும் | = | வியோமபாவனையால் வியாபகமான ஆகாசமாகும் |
| அத்திறனே எப்பொருளும் | = | அம்முறையாகவே சர்வபதார்த்தங்களும் |
| பாவித்தபோது அதுவாம் | = | பாவனை செய்த காலத்தில் அப்பொருளாம் |
| அந்தச்சித்தினிடையே | = | அவ்வறிவு வடிவ ஆன்மாவின் கண்ணே |
| மூவுலகுந் திடர்கானல் என | = | திரிபுவனமும், மருப்பூமியினிடத்து, பேய்த்தேர் தோற்றுவதேபோல; |
| தோன்றிச்சிதையும் | = | உற்பன்னமாகி திரோ பாவத்தையடையும், |
| இத்தனையும் செய்யவும் இத் தனையுஞ் செய்யாமலிருக்கும் | = | மாயைமாயாகாரியங்களான கூட்டத்தைத்தோற்றி வைத்து விளையாடின போதினும் இவ்வளவையும் நிர்விகார உபாதானமுடைமையின் எப்போதுமே செய்யாமலிருக்கும். |

**நிருவிகற்ப வான்மாவிற் சகத்தோற்றமொடுக்கமிவை நேரா யில்லை**
**மருவிகற்ப பேதமுறுப் பராபரமா மப்பொருளை வயங்கக் கண்டாற்**
**பெருமனக்கட் டறுமைய மறுங்கரும மறுமென்றுன் பெரியோன் வள்ள**
**லொருகடுகிற் பொன்மேரு புகிலன்றே பிரமாண்ட மொடுங்கு மென்றுன்.**
**(34)**

| | | |
|---|---|---|
| நிருவி கற்பவான்மாவில் | = | நித்தியஞான வடிவமாயும் விகற்பமில்லாததாயு முள்ள பிரஹ்மா பின்ன ஆன்மாவினிடத்தில், |
| சகத்தோற்றமொடுக்கமிவை | = | உலகின் உதயதிதி நாசம் என்னுமிவை |
| நேராயில்லை | = | வாஸ்தபமாகவில்லை; |
| மருவிகற்ப பேதம் உரு | = | யாதொரு அஸ்தமயாதிபேதமும் மருவாது அறி வாகவேயிருக்கும்; |
| பராபரமாம் அப்பொருளை | = | வியாவகாரிகத்தில் பரங்களும்அபரமாகும்படியிலங் கும் அத்தகைய பரமாத்மாவை |
| வயங்கக்கண்டால் | = | ஐயந்திரிபு அற தரிசித்தால், |
| பெருமனக்கட்டறும் | = | இருதயப் பெருங்கிரந்தியானது நாசமாம் |
| ஐயம்அறும் கருமம் அறும் யென்றுன் பெரியோன் | = | சர்வசம்சயங்களும்போம் கருமங்கள் யாவுங் காணு மல் ஓடிப்போம் என்றிந்தப்பிரகாரம் ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூற |
| வள்ளல் | = | தாதாவாகிய ஸ்ரீ இராகவர் |



| | | |
|---|---|---|
| ஒரு கடுகில் பொன்மேரு புகிலன்றோ பிரமாண்டம்ஒடுங்குமென்றான் | = | அற்பமான ஒரு கடுகின் உதரத்தில் அதி விசாலமாகிய சுவர்ண பர்வதம் நுழைந்தாலல்லவோ சர்வதிருசிய மயமாய பிரமாண்டம் காணாமல் ஒழிந்தோடிவிடும் யெனச் சங்கித்தனர். |

அருந்தவன்சொல் வானூலா னல்லோராற் றிங்களாலன்றி நாளாற்
றெரிந்துவிடும் பன்னூலின் சித்தாந்த மிதுவிதனைச் சிந்தைசெய்யிற்
புரிந்தபுவி யிராநிற்கப் போயொளிக்கு நிட்டை யுடன் போதஞானம்
விரிந்துணர்வோர்க் குயர்சீவன் முத்திபெறலா மிதுவே விதேகமுத்தி. (35)

| | | |
|---|---|---|
| அருந்தவன் சொல்வான் | = | அரியதவத்தினையுடைய ஸ்ரீ வசிஷ்ட பகவான் உத்தரங் கூறுவதாவது; |
| நூலால் | = | அத்தியாத்ம சாஸ்திரங்களாலும் |
| நல்லோரால் | = | சாது சங்கத்தாலும் உயர்ந்தோரால், |
| திங்களாலன்றி நாளால் தெரிந்துவிடும் | = | மாதங்களாலல்லாமல் சிறிது நாளிலேயே இப்பாரபோதத்தை அடைவாய் |
| பன்நூலின் சித்தாந்தம் இது | = | எல்லா இதிகாசங்களின் சாரம் இதுவேயாம் |
| இதனைச் சிந்தை செய்யில் | = | இதனையே சந்ததம் விசாரித்துக்கொண்டிருக்கில் |
| புரிந்த புவியிரா நிற்கப் போயொளிக்கும் | = | மனோ கற்பனையால் தோற்றிய திருசிய ஜாலம் இருக்கும்போதே அஸ்தத்தை அடைந்துவிடும்' |
| நிட்டையுடன் போதஞானம் | = | ஞான ஏக நிஷ்டர்களாய் லௌகீக வைதீகக்கருமத்தியாகிகளாய் ஆத்மஞான விசாரமுடையவராம் மூதுணர்வோர்க்கு, |
| உயர் ஜீவன் முத்தி பெறலாம் | = | மேன்மைமிக்க ஜீவன் முக்தித்தசையை அடையலாம்; |
| இதுவே விதேகமுத்தி | = | இதுவே தேகத்தை விட்ட பின்புண்டாம் விதேக கைவல்யமாம். |

1
என்பதுசொல் லியமுனியை யுடலிறந்தவீடு முட லிருந்த வீடு
நன்பழநூல் வழியியற்ற நவில்கென்ற விராமனுக்கு நல்லோன் சொல்வான்
3 2 4
வன்பலசெய் கையிற்பயின்று முன்றோன்றும் விண்டோன்றுமை வகைமை யுற்றோ
ரின்பமுற வருஞ்சீவன் முத்திபதம் பெற்றுயர்ந்த வியல்பினோரே. (36)

| | | |
|---|---|---|
| என்பது சொல்லிய முனியை | = | மேற்கூறிய வகையே ஜீவன் முக்தர் பெருமையைக் கூறியபோது ஸ்ரீ வசிஷ்ட பகவானை நோக்கி, |

உடலிறந்த வீடும் உடல் = விவேகமுத்தியும் ஜீவன் முக்தியும்
இருந்த வீடும் நன்பழநூல் = இனிய பிராசீன சாஸ்திர முறையே
வழிஇயற்ற நவில்கவென்ற = யான் முயன்று அப்பியசித்து அடைய அவ்விரண்
இராமனுக்கு = டனையும் அவற்றையடைந்தோர் இலக்கணத்தையும் உபதேசித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்த ஸ்ரீ இராமபிரானுக்கு
நல்லோன் சொல்வான் = ஸ்ரீ வசிஷ்ட பகவான் திருவருள் செய்கின்றார்;
வன்பல செய்கையில்பயின்று = கொடூரமான அனேக வியாபாரங்களில் கூடி விவகரித்தும்,
முன்விண் தோன்று = முன்பிரதீதியாகும் திருசிய வியோமாதிகள் தோன்றாமல்;
தோன்றும் வகைமையுற்றோர் = அவைகட்கு வேறாக பரமாத்மாவே தோன்றும் தன்மையையுற்றோர்
இன்பமுற வருஞ்சீவன் = ஆனந்தம் பெருகவாரா நின்ற ஜீவன்
முத்திபதம் பெற்றுயர்ந்தவியல்பினோரே = முக்திபதத்தைப் பெற்று உயர்வடைந்த சுபாவத்தினரேயாவர்.

1 4 3 2 5 6

மிகவருகா மாதிகளாம் விகாரமடைந் தும்விண்போல் மிகநொய்தானோ
ரகமெனலின் றிச்செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலு மழுத்த மற்றோர்
சகநெறிகள் செய்திடினு மன்னியர்போற் கண்டுகுளிர் தன்மைசான்றோர்
திகழ்மனமு நினைவுமிருந் துஞ்சிறிது மில்லாதோர் சீவன்முத்தர். (37)

மிகவரு விகாரம் ஆம்காமாதிகள் அடைந்து = பிராரப்த்த வேகத்தால் மிகுந்து வாராநின்ற அந்தக்கரண பரிணாமமாகியஇராகத்துவேஷப்யாதிகளை அடைந்து விகாரப்பட்டபோதினும்
விண்போல் மிக நொய்தானோர் = உள்ளே ஆகாயம் போல மிகவுந் தெளிந்து பற்று அற்றவர் சீவன் முக்தர்
அகமெனலின்றிச் செயல்கள் செய்தாலுந் தவிர்ந்தாலும் அழுத்தமற்றோர் = அகம்பாவப் பிராந்தியின்றி நித்திய கருமானுஷ்டானங்களை செய்தபோதினும் செய்யாத போதினும் திட வாசனையின்றியவர் சீவன்முக்தர்
சகநெறிகள் செய்திடினும் அன்னியர்போல் கண்டு குளிர் தன்மை சான்றோர் = உலக பரிபாலன இராஜ்யாதி விவகாரங்களைச் செய்தபோதினும் தற்பிரயோஜனத்தை அன்னியர் விவகரிப்பது போல் கண்டு தாபமுறில் சீதளமுற்றிருப்பவரே ஜீவன் முக்தர்,
திகழமனமும் நினைவும் = சம்சார சம்பந்தமான எண்ணங்கள்
இருந்தும் சிறிதும் இல்லாதோர் சீவன் முத்தர் = இருந்தபோதினும் அற்பமும் இல்லாதவரே ஜீவிக்கும்போதே விடுபட்டவர் ஆவர்.

துக்கசுகங் களிலமிழ்ந்தி மிதவாத புந்திநிலை சுபாவமானோர்
புக்கசுழுத் தியினனவாய் நனவின்றி வாதனைதீர் போதமுற்றோர்
மிக்கசம மாயுலகால் வெருளாம லுலகினையும் வெருட்டா மேலோர்
சிக்கறநன் னினைவி...ந்து நினைவிலா தவரிவரே சீவன்முத்தர். (38)

துக்க சுகங்களில் அமிழ்ந்தி = இன்ப துள்பங்களில் மூழ்கியும்
மிதவாத புந்திநிலை சுபாவமானோர் = சங்கமற்ற நிர்மல இயல்பாகிய புத்தியையுடையவர் ஜீவன்முத்தர்,
புக்க சுழுத்தியில் = மனதிகள் லயமுற்ற துயிலின்கண்
நனவாய் = சொரூப விழிப்புமாய்,
நனவின்றி = பாகியானு சந்தானமற்று,
வாதனைதீர் போதமுற்றோர் = வாசனைக்ஷயம்லபித்து உணர்வுற்றவரே ஜீவன்முத்தர்;
மிக்க சமமாய் உலகால் வெருளாமல் உலகினை வெருட்டாமேலோர் = முற்றினும் சமதிருஷ்டியை அடைந்து உலகத்தினரால் பயப்படாமல் உலகத்திலிருப்பவர்களையும் பயப்படுத்தாது உயர்ந்தோர் சீவன் முத்தர்;
சிக்கற நல்நினைவிருந்தும் = ஜகத்பந்தம் அற ஆத்மாகார நினைவிருந்தும்,
நினைவிலாதவர் இவரே சீவன் முத்தர் = அநாத்மாகார நினைப்பின்றியவர் இத்தகையரே ஜீவன் முத்தர்.

நிலையான [1] விச்சீவன் முத்தியைவிட்டுடலிறந்தா னிறைந்தவாயு
வலையாம னிற்பதுபோ லுடலில்லா முத்திபெறு மதனின்றன்மை
தொலையாது மறையாது [3] தோன்றாது [2] நனித்தல்ல தூரத்தல்ல
வுலையாது முடியாது நானல்லப் பிறனல்ல வொன்று மல்ல. (39)

நிலையான இச்சீவன் முத்தியை விட்டு = பிராரப்த்தக்ஷயபரியந்தம் இந்த ஜீவன் முத்தி அவஸ்தையைத் தீர்த்து
உடல் இறந்தால் நிறைந்த வாயு அலையாமல் நிற்பது போல் = தனது தேகம் நாசமானபின் சூழ்ந்த காற்றுச் சஞ்சலப்படாமல் திரபாவத்தை அடைவது போல்
உடல் இல்லா முத்திபெறும் = விதேக முத்தித்தன்மையை அடையும்
அதனின் தன்மை = அவ்விதேக முத்தியின் தன்மையாதெனில் கூறுதும்
தோன்றாது தொலையாது = உதய அஸ்தமனமாகாது
மறையாது நணித்தல்ல = லயமாகாது. அண்மையல்லன்
தூரத்தல்லன் = சேய்மையனல்லன்
உலையாது, முடியாது, = சத்தாகான், அசத்தாகான், சத்துமல்ல, அசத்துமல்ல

தானல்ல, பிறன் அல்ல = அகமுமாகான், இதரனுமாகான்
ஒன்றுமல்ல = மற்றெரு பொருளுமாகான்.

இருளன்றி யொளியன்றி யளவன்றிஇயல் பொன்றின்றிப்
பொருகின்ற பூதங்கள் பலபொருள்க ளன்றி நிறை பூரணமாகி
யுருவன்றி யருவன்றி யுளதன்றி யுண்டில்லை யன்றியொன்ருய்
வருகின்ற திரிபுடியி னடுத்தோன்று மறவாது மதித்துக்கொள்வாய். (40)

இருள் அன்றி, யொளியன்றி = தமம் இன்றி, பிரகாசமின்றி
அளவன்றி = பிரமாணங்களுக்கப்பால்ப்பட்டதாய்
அலைவன்றி, இயல்பொன்றின்றி, பொருகின்ற பூதங்கள் பல பொருள்களன்றி = அசையாததாய், கருமம் தருமம் மின்றி, முரண்பாடுடைய ஜீவர்கள், பல பௌதிகம்யின்றி
நிறை புரணமாகி = தேசகால வஸ்து பரிச்சேதரகித புரணமாகி,
உருவன்றி, அருவன்றி = ஆகாரமின்றி, சூன்யமின்றி
உளதன்றி, உண்டில்லையன்றி = சத்து அன்றி. சத சத்துமன்றி,
ஒன்ருய் = அத்வைதமாய்,
வருகின்ற திரிபுடியின் நடுத் தோன்றும் = சாக்ஷாத்கார உபாயம் மாறி மாறி வினைவயமாய் வருகின்ற திருஷ்டா தரிசனம் திருசியங்கள் முத்தியில் ஏத்தரிசனமானதிருந்து இலங்குகின்றதோ
மறவாது = அதனை இடைவிடாமல் அநுசந்தித்து
மதித்துக்கொள்வாய் = நினது வடிவமாயும் விதேகமுத்தி வடிவமாயும் அறிந்து கொள்வாய்

1 3 2 4
அவ்வகையாம் பரவடிவை யறிவுநிறை வுறவிரிவா யருள்வாயென்ற
செவ்வியவள் ளலுக்குமுனி செப்புவான் பெருங்கற்பஞ் சேர்ந்தபோதி
லெவ்வகைமூ லங்களுக்கு மூலமாம் பிரம்மமே யிலங்கா நிற்கும்
வவ்வுமனத் தொழில்மாற்றித் தனைமாய்த்தாற் பெயரிறந்த வஸ்துவாகும். (41)

அவ்வகையாம் பரம வடிவை = அனந்தமாயும் அறிவாகாரமாயும் பரமார்த்தமாயுமிருக்கும் அவ்வானந்த வடிவத்தை,
நிறை அறிவுற = பூரணபோதம் விருத்தியாதற் பொருட்டு
விரிவாய் அருள்வாய் என்ற = விஸ்தாரமாக அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்த,
செவ்விய வள்ளலுக்கு = சிறந்த குணங்கள் வாய்ந்த தலை வள்ளலாகிய ஸ்ரீ இராகவருக்கு,
முனி செப்புவான் = தவேந்திரராகிய ஸ்ரீ வசிஷ்டர் அருளுவதாவது;
பெருங்கற்பஞ் சேர்ந்த போதில் = மகாப்பிரளயம் வரும்போது

எவ்வகை மூலங்களுக்கும் மூலமாம் பிரமமேயிலங்கா நிற்கும் = சர்வ காரண காரணமும் பரமும் ஆகிய பரப்பிரஹ்மமே எஞ்சியிருந்திலங்கும் அஃது அபரோக்ஷமா மாறு கூறக் கேட்பாய்
வவ்வு மனத்தொழில் மாற்றி = விஷயாதிகளைப் பற்றும் மனோ விருத்திகளை நன்கு நாசஞ் செய்து சமாதியின்கண்ணே மனோ விருத்திகள் நசிக்கின்றன மனம் நசிப்பதில்லை,
தனைமாய்த்தால் = தனது மனதையும் நாசம் பண்ணுவதான தற்போதம் ஒழிக்கில் ஜீவபோதங்கெட்டால்
பெயர் இறந்த வஸ்துவாகும் = நிருபாதிகமாதலின் சப்தஅகோசர சிவமாகும்.

தெரித்தறியும் பொருணோக்காச் சீவவறிவதுவாகச் செப்பலாகும்
விரித்தபுல னனுபவித்து மனுபவியா மனமதுவாய் விளம்பலாகும்
புரித்தவுணர் வொளிநெஞ்ச மூலகிவற்றி னறிவது வாய்ப் புகல லாகும்
பருத்ததொழிற் செய்யினுங்கற் போலிருக்கு நிலையதுவாய் பகரலாகும். (42)

தெரித்தறியும் பொருள் நோக்கா சீவ அறிவு = (அந்தப்பரமான்மவஸ்து சமாதி நிலையிலும் விவகார அலையிலும் இருக்கும் விதத்தை அறிவித்தல்) சுட்டியறியும் திருசிய பரிசயமற்ற கூடஸ்தனே;
அதுவாகச் செப்பலாகும் = தற்பதலக்ஷியார்த்த வஸ்துவென்று சொல்லப்படும்
விரித்த புலன் அனுபவித்தும் அனுபவியா மனம் = சப்தாதி விஷயங்களை இந்திரிய வாயிலாக மனமானது அனுபவித்தும் அனுபவியா மனம்,
அதுவாய் விளம்பலாகும் = தற்பதலக்ஷியார்த்த பிரஹ்மமாய்க் கூறப்படும்;
புரித்தவுணர், ஒளி, நெஞ்சம், உலகு = பாகியார்த்த ஞானம், தோற்றம், மனம், அஞ்ஞான கடாதி விஷயங்கள்
இவற்றின் அறிவதுவாய்புகலலாகும் = கூறியவற்றின் அறிவு (சாக்ஷியே வடிவாய்) அந்தப் பரமான்மாவின் அபின்னமாய்ப் பகரப்படும்.
பருத்த தொழில் செய்யினும் = மிகுந்த விவகாரத்தோடு கூடியிருப்பினும்;
கல்போல் இருக்கும் நிலை அதுவாய்ப் பகரலாகும் = பாஷாணம் போல் அசையாமலிருக்கும் ஸ்திதி அந்தப் பரமான்ம வடிவமாய்க் கூறலாகும்.

முடிவுகன வஞ்ஞான மில்லாநீ டுயிலதுவா மும்மையாகி
யடர்தருஞா துருஞான ஞேயமெழுந் தொடுங்குமிட மதுவேயாகுந்
திடவிசும்பன் ருயிருந்தும் விசும்பானநிலை யதுவாஞ் சித்தம்புந்தி
படர்மனம்போய்த் தாவரம்போற் பெறுமுளறி வொப்பா மப்பரமருபம். (43)

முடிவு (1) கனவு (3) அஞ்ஞானம் (5) இல்லா (2 4 6) = நனவு இன்றியதுங்கனவு இன்றியதும் அஞ்ஞானம் இன்றியதும்
நீள் துயில் அதுவாம் = சுழுத்தியுமில்லாத யோக நித்திரையில் எவ்வுருவமுளதோ அது பரமாத்மவஸ்துவாம்;

| | | |
|---|---|---|
| மும்மையாகி அடர்தரு ஞாதுரு ஞானம், ஞேயம் யெழுந் தொடுங்குமிடம் அதுவேயாகும் | = | திரிபுடியாய் நெருங்கி விவகரிக்கும் அறிபவன், அறிவு, அறிபடும் பொருள் உதித்து என்னுமிவைகள் ஒடுங்கும் அதிகரணம் அந்தப்பரமாத்மாவேயாகும். |
| திட விசும்பு அன்ருயிருந்தும் விசும்பான நிலே அதுவாம் | = | லௌகீக சப்பிரபஞ்ச ஆகாச பின்னமாயிருந்தும் சிதாகாசமாந்தகைமை அந்தப்பரமான்ம வஸ்துவாம், |
| சித்தம், புந்தி, படர்மனம் போய் | = | சிந்தித்தலின் சித்தம், நிச்சயித்தலின் புத்தி, விஷயங்களில் விரிந்துணர்வளித்தலால் மனம் ஆகிய இவை ஒழிந்து சாந்தியாகி; |
| தாவரம் உள் அறிவு பெறும் ஒப்பாம் அப்பரம ரூபம் | = | தாவரங்கட்கு எவ்வசை விலா வடிவமுளதோ எம் மனோபுத்தியாதி விடுபட்ட வடிவமுளதோ அந்த ரூபம் ஞான மயமாகயிருப்பின் அது ப்ரமான்மாவோடு உவமிக்கப்பெறும். |

அயனெடுமால் சங்கரனுஞ் சதாசிவனு மிந்திரனு மருக்கன் ருனும்
வியனிலுப சாந்தராம் வேலேயினி லுபாதியெலாம் விட்டு நீங்கிப்
பயனில்சக மென்கின்ற பற்றகன்று சின்மயமீம் பரமரூப
முயர்விகற்ப மிலாவடிவா யெங்குநிறை சிவமாகி யொன்ருய் நிற்கும். (44)

| | | |
|---|---|---|
| அயனெடு மால் சங்கரனும் சதாசிவனும் இந்திரனும், அருக்கன்ருனும் | = | பிரம்மாவும், விஷ்ணுவும், ருத்திரனும் மகேசுரனும் சதாசிவனும், மகபதியும், சந்திரனும், சூரியனும் |
| வியனிலுப சாந்தராம் வேலே யினில் | = | பெருமையான உபசாந்த நிலையைப் பெறும் போது, |
| உபாதியெலாம் விட்டுநீங்கி | = | அவ்வவ்வதிகாரத்துக்குத் தக்க வேடங்களியாவற்றுந் தள்ளி நீக்கி அவற்றினின்றும் அசங்கமாய், |
| பயனில் சகமென்கின்ற பற்றகன்று | = | அதனனே யாதொரு பிரயோஜனமுமில்லாமல் உலகமென்று சொல் மாத்திரமாயுள்ள பற்றையும் (நீக்கி) விட்டு |
| உயர்சின் மயமாம் பரமரூபம் விகற்பமிலா வடிவாய் எங்கும் நிறை சிவமாகி ஒன்ருய் நிற்கும் | = | சர்வோத்கிருஷ்டசிற்சொரூபமாம் பரம்பொருள்; சகல உபாதிகளும் விடுபட்ட நிருவிகற்பரூபமாய் தேசகால வஸ்து பரிச்சேதரகிதமான மங்களசொரூபமாகி அத்விதீயமாய் நின்றிலங்கும். |

ஞானவிண் மகன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் 233.

# லீலை (மண்டபக்) கதை.

அவதாரிகை

முன் ஞானவிலாமகன் கதையில் சின்மாத்திர சொரூபமாயப் பரமான்மாவிற்கு மாயையே மனமாகி உலகத்தைச் சிருஷ்டிப்பதாகக் கூறப் பெற்றது இப்போது லீலை கதையில் மாயையின்து மகா துர்க்கட ஏதுத்தன்மை கூறப்படுகிறது.

இந்தப்பொருளையம றுத்திளைப் பாறு மாறோர்
முந்தக்கதை கேண்குண முற்றிவி வேகமுற்றேன்
விந்தைப்புயத் தோன்பது மப்பெயர் வேந்தன் மண்மேற்
சிந்தைக்கினி தாங்குண லீலையச் செம்மறேவி. (1)

இந்தப் பொருள் ஐயமறுத்து = நாமரூபான்மகமான இந்தஜகம் மனோசங்கற்பத்தாலாம்எனக்கூறிய அர்த்தத்தைச்சந்தேகமில்லாமல்

இளைப்பாறுமாறு ஓர் முந்தக் கதை கேள் = சித்தத்தின் கண்ணே விசிராந்தையுறும் வண்ணம் ஒப்பற்ற முதன்மையும் பழமையும் வாய்ந்த மண்டப ஆக்யானத்தைக் கூறக் கேட்பாயாக

குண முற்றி விவேகமுற்றேன் = சமதமாதி சற்குணங்கள் நிறைந்தவனும் மரியாதையைப் பாலனஞ் செய்வதில் கடல் போன்றவனும் துர்க்குணத்திரணத்தை ஒழிப்பதில் வல்லவனும்

விந்தைப்புயத்தோன் = வீரலக்ஷுமி பொருந்திய பகையாம் இருளைப் போக்க பாஸ்கரனும்

பதுமப்பெயர் வேந்தன் = பத்மராஜாவென நாமம் பொருந்திய அரசன் இப்பூமியில் இருந்தனன்

மண்மேல் அச்செம்மல் சிந்தைக்கினிதாங்குண லீலை தேவி = இப்பூமியில் அனேகம் புத்திர பாக்கியம் படைத்த அந்த ஸ்ரீ மானுக்கு மனோகரமான அனந்த கல்யாண குணங்களால் அலங்கரிக்கப்பெற்ற சௌபாக்கியவதியாய லீலா தேவி பட்ட மகிஷியாகவிருந்தனள்.

அன்னானிழல் போன் மனம்போ லயலற்ற வன்னா
ணன்நாயகன் முப்பிறப் பின்றிநற் காளையாகி
யென்னாளுமொத் தின்புற வென்கொ லுபாயமென் னத்
தொன்னூன்மறை யோர்க் குரைத்தாளவர் சொல்லலுற்றார். (2)

அன்னான் நிழல்போல் மனம்போல் = அந்தப் பத்மராஜாவின்து பிரதி பிம்பம் போல உள்ளம் ஒப்ப,

| | | |
|---|---|---|
| அயல் அற்ற அன்னாள் | = | வேற்றுமையற்ற அந்த லீலாதேவி, |
| நல் நாயகன் மூப்பிறப்பு இன்றி நற்காளையாகி | = | எழிலும் வீரமும் நிறைந்த நமது நாதன் விருத்தாவஸ்தை மரணாவஸ்தையடையாமல் நவயவ்வனம் நண்ணி, |
| எந்நாளும் ஒத்து இன்புற | = | எக்காலத்தும் அபேதமாய்ச்சுகமடைய |
| என்கொல் உபாயம் என்ன தொல் நான்மறையோர்க் குரைத்தாள் | = | யாதேனும் உபாயம் உண்டு கொலோ வென்று அநாதியாம் நான்கு வேதங்களையும் அத்தியயனஞ் செய்து தேர்ந்த விப்பிரரிடம் கூறினாள் |
| அவர் சொல்லலுற்றார் | = | அவ்வேதியர் கூறுவாராயினர். |

செபமுந் தவமும்முத லியாவையுஞ் சித்தி நல்கும்
புவனங்களிற் பொன்றுதல் போக்கரி தியார்க்கு மென்ன
விவள்சிந் தைசெய்வா ளிறைவற்குமுன் யாமிறந்தாற்
கவலொன்றறத் தற்பத வாழ்வுகை கூடலாகும். (3)

| | | |
|---|---|---|
| செபமும், தவமும், முதல் யாவையும் சித்தி நல்கும் | = | மந்திர ராஜாவாகிய பஞ்சாக்ஷராதி ஜெபமும், கிருச்சிர சாந்திராயணாதி தவமும், இவை முதலிய எல்லாமும் பயனைத் தரும் |
| புவனங்களில் பொன்றுதல் போக்கரிது யார்க்கும் என்ன | = | உலகங்களில் எவ்விடத்திருந்தபோதினும் இந்திரர் சந்திரர்களாயிருப்பினும் மரணத்தை தவிர்த்தல் முடியாத காரியமாகும் என மறையோர் கூற; |
| இவள் சிந்தை செய்வாள் | = | இந்த லீலை ஆலோசிப்பதாவது; |
| இறைவற்குமுன் யாம் இறந்தால் | = | பர்த்தாவிற்கு முன்பு தெய்வ யோகத்தால் யாம் மரணத்தையடையின், |
| கவலொன்றற | = | கவலையாதி சிறிதுமின்றி; |
| தற்பத வாழ்வு கை கூடலாகும் | = | மோக்ஷ வாழ்வையடைந்து பரமானந்தமுறுவோம். |

இறைவன்முதற் சாகிலச் சீவனை யிந்த வீட்டி
லுறையும்படி செய்தது வென்னையு வந்து காண்க
நிறையின்பமெய் தியிருப் பேனிது நேருமாறு
மறைதந்தவா ணிபத மேத்துவன் வாழ்த்தியென்றே. (4)

| | | |
|---|---|---|
| இறைவன் முதற்சாகில் | = | பர்த்தா நமக்கு முன் மரிக்கில், |
| அச்சீவனை இத்த வீட்டில் | = | அம்மன்னவன் உயிரை இந்த சுத்தாந்த மண்டபத்தில், |
| உறையும்படி செய்து அது என்னையு வந்து காண்க | = | இருக்குமாறு செய்து அவ்வுயிர் எம்மையும் மங்களரூபமாக வந்து கண்டு கொண்டிருக்க? |

| | | |
|---|---|---|
| நிறையின்ப மெய்தியிருப்ப | | பரிபூரண சுகத்தையடைந்து மகிழ்வோம்; |
| இது நேருமாறு | = | இந்தப்பாக்கியம் கிடைத்தற்பொருட்டு |
| மறை தந்த வாணி பதம் வாழ்த்தியேத்துவன் | = | நான்கு வேதங்களையும் அநுக்கிரகஞ் செய்யும் சரஸ்வதி தேவியின் திருவடிகளை ஜப உபவாச நியமங்களினலே பூஜிப்பேனகயென்று நிச்சயித்து முயலலானள். |

மன்னற்குரை யாதுநன் மந்திரங் கற்பம் வல்லோர்
சொன்னத்தினின் றுசுரர் பூசுரர் பூசை பண்ணி
யன்னத்தைநா ளுன்கினுக் கோர்பக லற்பமாயுண்
டின்னிட்டையா லேமதி பத்துந டந்தவெல்லை. (5)

| | | |
|---|---|---|
| மன்னற்கு உரை யாது நன் மந்திரங்கற்பம் வல்லோர் சொன்னத்தில் நின்று சுரர், பூசுரர் பூசை பண்ணி | = | மகாராஜாவிற்குச் சொல்லாமல் நல்ல மந்திர கற்ப சாஸ்திரங்களில் தேர்ந்தவர்கூறிய பிரகாரமே பிடிவாதமாக தேவப்பிராமண குரு பிராஞ்ஞ வித்வான்களை விதிப்படி பூஜை பண்ணி; |
| அன்னத்தை நாள் நான்கினுக்கு ஓர் பகல் அற்பமாயுண்டு | = | தான் புசிக்கும் ஆகாரத்தை தினம் நான்கினுக்கு ஒரு பகலாக (பாரணை செய்பவளாய்) திரிசதாரத்திரி விரதம் அஃதாவது முந்நூறு நாள் (பத்து மாசம்) சிறிதாகப்புஜித்து, |
| இன்னிட்டையாலே மதி பத்து நடந்தவெல்லை | = | இவ்வினிமை பொருந்திய தவத்தினலே பத்துமாசங் கழிந்த பின்னர். |

வானோர் மதிபோ னிறவாணி மகிழ்ந்து தோன்றி
நீநாடிய தென்னென நீள்பவ மாநெ ருப்புக்
கானுவ முகதக் கதிரே யகத் துன்ப மென்னும்
பாநாளகற் றுங்கதி ரேயெனப் பாதமேத்தி. (6)

| | | |
|---|---|---|
| வானர் மதிபோல் | = | ஆகாயத்தின் கண் பொருந்திய பூரண சந்திரனைப் போல; |
| நிறைவாணி மகிழ்ந்து தோன்றி | = | வெண் காந்தி வீசும் ஸ்ரீ சரசுவதிதேவி சந்தோஷத்தையடைந்து பிரசன்னமாகி; |
| நீ நாடியது என் என | = | நீ வாஞ்சித்த வரம் யாது எனக்கேட்டருள; |
| நீள்பவ மாநெருப்புக்கு | = | எழுவகைப் பிறவிகளாகிய நெருப்பினை சாந்தி செய்தற்கு, |
| ஆனுவமுதேக் கதிரே அகத் துன்பமென்னும் பா நாள் அகற்றுங்கதிரேயெனப் | | ஒழியாத அமிர்த கிரணங்கள் வீசும் சசிப்பிரபையே நீடூழி வாழ்க இருதய அந்த காரக் கூட்டமாகிய அந்தத்தை நிவாரணஞ்செய்யும் சூரியப்பிரபையே |

பாதம் யேத்தி = நீடூழி வாழ்க, ஹேமாதாவே எனத்துதித்து திருவடிகளில் முறைப்படி பூஜை செய்து இக்கிருபனேயாகிய அடியாளைக் காப்பாயாக.

1
என்னுயகன் றுஞ்சிலச் சீவனிவ் வில்லி நிற்க
3 2 4
முன்னுகவுன் னைநினை போதி லென் முன்பு தோன்ற
வன்னுய வரங்களிரண்டும ளித்தி யென்ன
நன்னுமக ளன்பொடு நல்கி நயந்து போனுள். (7)

என்னுயகன் துஞ்சில் = என்னுயகன் உயிர்விடில்
அச்சீவன் இவ்வில்லில்நிற்க = அவ்வுயிர் இவ்வந்தப்புர மண்டபத்தை விட்டுப் போகாமல் இங்கேயே இருக்கவும்;
உன்னை நினைபோதில் என் முன்பு முன்னுக தோன்ற = தேவியாம் உன்னை எப்போது எப்போது சிந்தை செய்வனே(பிரார்த்திப்பனே)அப்போது அப்போது என்முன் பிரத்தியக்ஷமாகப் பிரசன்னமாகவும்
அன்னுய், அவ்வரங்களிரண்டும் அளித்தி என்ன = ஹேதாயே அப்படியான வரங்கள் இரண்டையும் திருவருள் செய்தி என,
நல்நாமகள் அன்பொடுநல்கி நயந்து போனுள் = பக்த வாத்சல்யம் பொருந்தியவளான வாக்தேவியானவள் மிகப்பிரீதியுடன் கொடுத்து விருப்பத்தோடும் ஆங்கே அறிவிற் கரந்தனள்,

பக்கத்தொடு திங்க ளுறும் பருவங்க டேர்க் காற்
ருெக்கிச்செறி நாளதிற் கூம்பு தொடர்ந்த வாண்டு
புக்குற்றதோ ரச்சிமைப் போததி னுபியாதி
மிக்குத்திரி கால வன் றேர்விரைந் தோடலோடும். (8)

பக்கத்தொடு திங்கள் உறும் பருவங்கள், தொக்கிச் செறி நாள் அதின் கூம்பு தொடர்ந்த ஆண்டுபுக்குற்றதோர் அச்சு இமைப்போது அதின் நாபி ஆதிமிக்குத்திரி காலவன்றேர் விரைந்தோடலோடும் = 1 சுக்கில 2 கிருஷ்ணபக்ஷம், மாதம், இரண்டு இரண்டாகப்பொருந்தியருது ஆக 4 நான்கும் தேர்க்கால் அதனைத் தொடர்ந்து பொருந்திய தினம் அதன் அராவாம் ஆறுருதுக்கள் பொருந்திய வருடம் இடையில்ப்பொருந்திய அச்சு நொடிப்போது அத்தேரின் நாபியாம் (குடமாம்) இவை முதலியவையோடு கூடிய வேகமாய்ச் செல்லும்காலபகவான்து ரதம் வேகமாகச் சென்று கொண்டிருக்கும்அக்கால்

2 1 3
இன்பங் கரையற் றிடலீலை யிருந்த வெல்லை
யன்பன் சிலநா ளிலிறந்தன னன்னமன்னா
டுன்பஞ் சுடும் வெம்மை பொருதுயிர் துஞ்சு முன்னே
முன்பின்றி விண்ணின்று சொன்மாதி வண்மோக மாற்றி. (9)

| | | |
|---|---|---|
| லீலை இன்பங்கரையற்றிட இருந்தவெல்லை | = | லீலாதேவி ஆனந்தம் அளவின்றி வாழ்ந்துவந்த போது, |
| அன்பன் சில நாளில் இறந்தனன் | = | தனது நாயகன் சில காலங்கழித்து உயிர் துறந்தனன், |
| அன்னம் அன்னாள் | = | அம்சம் போன்ற அவ்வரசியான லீலை, |
| துன்பஞ்சுடும் வெம்மை பொருது துஞ்சுமுன்னே | = | சோகமானது அக்கினிமயமாய்த் தகிக்கலால் தாபம் பொறுக்கமுடியாமல் தன் பிராணனைத் தியாகஞ் செய்து கொள்வதன் முன்னரே, |
| முன்பு இன்றி விண்ணின்று சொல்மாது | = | எதிரில் வராமல் ஆகாயத்திலிருந்துகொண்டே ஸ்ரீ வாக்தேவி |
| இவள் மோகம் மாற்றி | = | இவ்வரசியின் சோக காரண மயக்கத்தை மாறுபடச் செய்து (மயக்கம் நீங்கி தேறுதலடையும்படி கூறி.) |

1
மாய்வுற்றவேந் தைமல ரான்மறை வித்துவைப்பா
யேய்வுற்றபூ வுலரா மெய்யழி யாதுசீவன்
பாய்வுற்றக லாதுபொன்மண்டபம் பற்றிநிற்குந்
4 3 2 5
தோய்வுற்றிவன் றோள்விரைவிற் றுயர் தீர்தியென்றாள். (10)

| | | |
|---|---|---|
| மாய்வுற்ற வேந்தை மலரால் மறைவித்து வைப்பாய் | = | பிராணன் நீங்கிய மன்னவனை (ஹே குழந்தாய்) புஷ்பக் குவியலுள் தெரியாதபடி ஆச்சாதனஞ் செய்து ஸ்தாபிப்பாய். ஒழித்து வைப்பாய் |
| ஏய்வுற்ற பூ உலரா | = | வாசனை பொருந்திய புஷ்பங்கள் வாடா, |
| மெய் அழியாது | = | சரீரங்கெடாது |
| சீவன் பாய்வுற்று அகலாது பொன் மண்டபம் பற்றி நிற்கும் | = | உயிர் பாய்ந்து வேறிடஞ் செல்லாது அழகிய சொர்னமய அந்தப்புரமண்டபத்தையே ஆசிரயித்து நிற்கும், |
| விரைவில் இவன் தோள் தோய்வுற்று, துயர் தீர்தியென்றாள் | = | சீக்கிரம் உனது நாயகனாகிய பத்மராஜாபுஜம்தழுவி ஆலிங்கனஞ் செய்து துக்கத்தை விடுத்துச் சுகியாக வாழ்தி என அநுக்கிரகித்தாள். |

1
வாடாவச ரீரிதன் சொற்படி மன்னை வைத்தா
ளோடாதவா வியுடை யாளுளத் துன்ன வாணி
நீடாதுவந் தாளென தன்பனை நீங்கிவாழ்தல்
3 2 4
கூடாதவன் சேர்வுழி கூட்டுதி வல்லை யென்றாள். (11)

| | | |
|---|---|---|
| வாடா வசரீரிதன் சொற்படி மன்னை வைத்தாள் | = | கெடாத வாகீசுவரி உத்தரவின்படியே தனது நாயகனைப் புஷ்ப சமூகங்களால் மூடிவைத்தாள்; |
| ஓடாத ஆவியுடையாள் உளத்து உன்ன | = | மூர்ச்சையால் பிராணன், தன்னை விட்டு நீங்காதவளாய்த் துயரத்தினால் மரிக்குந்தருவாயிலிருக்கும் அந்த லீலையானவள் சரசுவதி தேவியை மனத்தில் பிரசன்னமாகுமாறு தியானித்தவளவில்; |
| வாணி நீடாது வந்தாள் | = | ஸ்ரீ வாக்தேவி தாமதியாது உடனே பிரசன்னமானாள் ஹே குழந்தாய்! எதன்பொருட்டு என்னைத் தியானித்தாய் சோகமுடையவளாகக் காணப்படுகின்றாயே எனக் கேட்க; |
| எனது அன்பனை நீங்கி வாழ் தல் கூடாது | = | அடியாளது உயிர் போன்ற நாயகனை விட்டுத் தனியே வாழ்தல் முடியாது, |
| அவன் சேர்வுழி | = | எனது பர்த்தா எத்தகையனாய் என்ன செய்து கொண்டு எங்கேயிருக்கின்றனன் அங்கே அவன் சமீபத்தில் |
| வல்லை கூட்டுதியென்றாள் | = | சீக்கிரம் சேர்ப்பித்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனள். |

மனவானமும் வானமும் மாசறு ஞானவானு
மெனவானமூன் றில்முதல் வானமிரண்டு மின்றிக்
கனஞானவா னெய்துதல் கண்டதைவிட் டுப்போத
னனவாயய லொன்றை யுற்றனடு ஞான வானும். (12)

| | | |
|---|---|---|
| மனவானமும் வானமும் | = | வாதனை மயமாயசித்த ஆகாயம், |
| மாசறு ஞானவானும் | = | பிரசித்த விவகார சம்பந்தமாய பூதவாகாயம். குற்றமற்ற சிதாகாயம், |
| என வானம் மூன்றில் | = | என்று சொல்லப்பட்ட மூன்று ஆகாயத்துள்; |
| முதல் வானம்இரண்டுமின்றி | = | முதலில் கூறிய உள் ஆகாசம் வெளி ஆகாசம் (பாகிய ஆகாசம்) இரண்டினையுமொழித்து, |
| கனஞானவான் எய்துதல் | = | அகண்டைகரசசிதாகாச சொரூபத்தை அடைய வேண்டும், |
| நனவாய போதம், கண்டதை விட்டு அயலொன்றை | | உற்று நோக்கின் மனோ விருத்தியானது முன்பற்றிய திருசியத்தை விட்டு அன்னிய விஷயத்தை |

யுற்றுல் னடுஞானவானும் = கவர்ப்புகின் இவ்விரண்டிற்கும் மத்தியில் விளங்கும் இதனை சிதாகாசமாக அறியலாம்.

1
சங்கற்பசாலந்தவிர்ந் தாலுப சாந்தமாகித்
துங்கப்புவி யாவையு மாகிய சோதி தோன்றும்
3 2 4
மிங்கற்பமுங் காண்பன வில்லைவெறும் பொய்யென்று
லங்கப்பொழு தவ்வறி வாலது சேர்த லாகும். (13)

| | | |
|---|---|---|
| சங்கற்ப சாலந்த விர்ந்தால் உபசாந்தமாகி | = | முயற்சி வலியால் அநான்மாகார எல்லாச்சங்கற்பங்களையும் அடியோடு விடுதியாயின் பரமசாந்தமாய்; |
| துங்கப்புவியாவையுமாகிய சோதி தோன்றும் | = | பரிசுத்தமாகியும் சர்வான்மகமாகியுமிரா நின்ற செிற்ப்பிரகாச வடிவம் நின்வடிவமாயில்கும், |
| காண்பன இங்கு அற்பமும் இல்லை வெறும் பொய் என்ருல் | = | காணப்படும் உல்கம் அத்தியந்தம் அசத்தியம் இவ்விடத்தில் தோற்ரு நின்ற யாவும் சிறிதும்இல்லவே இல்லை என்ற நிச்சயம் வந்தால்; |
| அங்கு அப்பொழுது அவ்வறிவால் | = | அவ்விடத்தில் அக்காலத்திலேயே அந்தப் பிரதிபந்தரகித ஞானத்தால், |
| அது சேர்தலாகும் | = | அந்தப்பரம் பொருள் அடைதல் கூடும். |

1
நம்மாலது சேர்கென நாமக ணல்கியேக
விம்மாது விகற்ப மிறந்த சமாதி யெய்தித்
3 2
தம்மா லுறைக்கூ டகல்புள் ளெனத் தாவுநெஞ்ச
5 4
மைம்மா லுறுக்கூட் டினைமாற்றின ளக்கணத்தில். (14)

| | | |
|---|---|---|
| நம்மாலது சேர்கெனநாமகள் நல்கியேக | = | நமது வரப்பிரசாதத்தால் அந்தப் பரம்பொருளை நீ சாக்ஷாத் கரிப்பாயென்று வாக்தேவி அருளிச்செய்து தமது பரந்தாமத்திற்கெழுந்தருள, |
| இம்மாது விகற்பமிறந்த சமாதியெய்தி | = | இந்த லீலையானவள் நிருவிகற்ப சமாதியை எளிதாக அடைந்து, |
| தாவுநெஞ்சம் மைம்மாலுறு கூட்டினை | = | விஷயங்களில் பாயும் மனமானது சூக்குமமாய் மயக்கத்தால் விரிவாகும் |
| தம் மாலுறை கூடு அகல் புள்ளென அக்கணத்தில் மாற்றினள் | = | தேகமாகிய கூட்டினைத் தாமாகவேயிருக்கும் கூட்டினின்றுஞ் சென்று சுதந்திரமாய் விளையாடும் பறவையைப் போல அப்போதே விட்டகன்ருள் (சுதந்தரமாயினள்.) |

மங்காத ஞான விசும்பூடொரு மாநகர்க்கே
வெங்கா தலனெட்டிரண் டாண்டுள வீரனாகிச்
சிங்கா தனமேற்செறி வேந்தருஞ் சேனை நாலும்
பொங்காதர மாதரும் போற்ற விருத்தலோடும். (15)

| | |
|---|---|
| மங்காத ஞான விசும்பூடு ஒரு மா நகர்க்கே = | யாதொரு பிரகாசங்களாலுங்கெடாத சிதாகாசத்தின் கண்ணே இருப்பவளாய் அவ்வாகாய ஆலயத்தில் வெளிப்பட்ட வாசனை கரும அனு ரூபமாகத் தோற்றும் தேககிருகாதியோடுற்றிருக்கும் ஒப்பற்ற பெரிய தேசத்துக்கு, |
| வெங்காதலன் எட்டிரண் டாண்டுள வீரனாகி = | விருப்பம் பொருந்திய நாயகன் பதினாறு வயதுடைய வீர மிக்கவனாகி; |
| சிங்காதனமேற், செறிவேந்தரும் சேனை நாலும்பொங்கு ஆதர மாதரும் போற்ற இருத்தலோடும் = | சிங்காசனத்தில் வீற்றிருக்கும் பூபாலனைக் காணப் பட்டான் நெருங்கிய மன்னவரும் நால்வகைச் சேனைகளும் மிகுந்த ஆதரவோடு கூடிய மங்கையரும் (ஜயஜீவ) நீடூழி வெற்றி பெற்று வாழ்க என வாழ்த்தப்பெற்று வீற்றிருப்பதை நோக்கி. |

தன்னுயிர்க் கேள்வனையந்த லீலைநோக்கிச்சபை புகுந்தாள்மி கவியந்தாள் சபையைச் சூழ்ந்த
மன்னவரு முனிவரருமறை வல்லோரு மங்கையருநாற்ப டையு மற்று ளோரு
நன்னிலமுங் குன்றுகளுமூரு நாடு நதித்திரளும் பலபொருளு நண்ணி நோக்கி
மின்னனையாண் மீண்டுதன திடத்தில்மேவிவெண் ணிறவா ணியை நினைத்தாள் விருப்பினோடும். (16)

| | |
|---|---|
| தன்னுயிர்க் கேள்வனை = | தனது பிராண நாயகனை |
| அந்த லீலை நோக்கி = | அந்த லீலா தேவி பார்த்து, |
| சபை புகுந்தாள் = | அரச சபைக்குச் சென்றனள், |
| மிக வியந்தாள் = | மிகமிகவும் ஆச்சரியத்தையடைந்தாள் |
| சபையைச் சூழ்ந்த மன்னவரும் = | சபையின் கண்ணே நெருங்கிக்கூடி மேற்குவாசலை யனுசரித்திருக்கும் இராஜராஜேச மண்டலத்தையும், |
| முனிவரரும் மறைவல்லோரும் = | கிழக்குவாசலை யனுசரித்திருக்கும் முனிவரரும் அளவில்லாத முனிவிப்பிர இருடி மண்டலத்தையும் |
| மங்கையரும் = | தெற்குவாசலில் அளவில்லாத மதோன்மத்தம்மடவாரையும், |
| நாற்படையும் = | வடக்குவாசலில் ரதகஜதுரகபதாதி சேனு சைன்யங்களையும், |

மற்றுளோரும் = அன்னிய பிரஜைகள் அனேகரையும் நன்ருகப் பார்த்துவிட்டு,

நன்னிலமும் குன்றுகளும் = நல்லதேசங்களையும் பர்வதங்களையும்,
ஊரும், நாடும், நதித்திரளும் நகரங்களையும், நாடுகளையும், நதிக்கூட்டங்களையும்,

பல பொருளும் நண்ணி நோக்கி மின்னனையாள் = மற்றும் பிற பொருள்களையும் நன்ருக உற்று உற்றுப்பார்த்து மின்னலைப்போன்ற அந்த லீலாதேவி,

மீண்டும் தனது இடத்தில் மேவி = மறித்தும் தன் அரண்மனையை வந்து சேர்ந்து

விருப்பினேடும் வெண்ணிறவாணியை நினைத்தாள் = மிக்க அன்புடன் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ளும் பொருட்டு வெண்ணிறமுடைய சரசுவதியை தியானித்தாள்.

1
வந்துயரா தனத்திருந்த வாணிதன்னைவணங்கி யெனதன்பனுக்கு மரித்தபின்பு
பந்தமுறு மயக்கமேவடிவாய் நிற்கப்பழையபடி பிறப்புற்ற படியீதென்ன
விந்தவுல குறுமயக்கம் போகச் சொல்வா யெனலீலை கேட்டலுமே யிறைவி சொல்வா
4 8 2 5
ளுந்துசிருஷ் டியின்முன்பு மயக்கம் மட்டேயுருவா மிச்சிருஷ்டிவே றுதித்ததாகும். (17)

வந்து உயர் ஆதனத்திருந்த வாணிதன்னை = விஜயஞ்செய்து மேன்மைமிக்க ஆசனத்திருந்த ஸ்ரீ சரசுவதி தேவியை

வணங்கி எனது அன்பனுக்கு மரித்தபின்பு = நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்து எனது நாயகனுக்கு மரணத்தின்பின்

பந்தமுறு மயக்கமே வடிவாய் நிற்க = பந்த ஏதுவாகப் பொருந்திய அமூர்த்தமாய் (மயக்கமேயுருவமாயிருக்க) பிராந்தியே மூர்ச்சையாயிருக்க,

பழையபடி பிறப்புற்றபடி ஈது என்ன = மீண்டும் வேறு ஜன்மம் வந்தவகை இஃது என்ன அற்புதம் ?

இந்த உலகுறுமயக்கம் போகச் சொல்வாய் என லீலை கேட்டலுமே = அங்ஙனம் இச்சகம் ஜனனப் பிராந்தி நீங்க உபதேசிப்பாய் என்று லீலை வினவியபோது

இறைவி சொல்வாள் = ஜகன்மாதா திருவாய்மலர்ந்தருளுவாள்

முன்பு சிருட்டியின் உந்து = பூர்வ ஜன்மங்களிலுண்டான

மயக்கமட்டே உருவாம் இச் சிருஷ்டிவேறு உதித்ததாகும் = பிராந்திமாத்திர வடிவமாய இச் சன்மம் எப்படி வேறு உதித்ததாகுமோ.

அப்படியே யுன்கணவற் கிரண்டாஞ்சென்ம மாயினதாலீதுரைப்ப வறிந்து கேட்பாய்
மைப்படிவி லாவிமலஞான விண்ணின்மற்றொருபான் மாயாமண்டப மொன் றுண்டாஞ்
செப்பரிய விசும்பென்னு மயூரப்பீலித்திரை யாலேமறைத்திருக்குஞ் செம்பொற் குன்றுங்
கப்புறுபொற் றூணிலுறை யுலகபாலர்காரிகை யாரெனும்பொறிகள் கலந்து நிற்கும். (18)

| | |
|---|---|
| அப்படியே உன் கணவனுக்கு இரண்டாஞ்சென்மம் ஆயினது = | அவ்வாறே உனது நாயகனுக்கு இரண்டாவது பிறப்பு ஆகியிருக்கிறது பூர்வஜன்ம சமஸ்காரமே காரணம், |
| ஈது உரைப்ப அறிந்து கேட்பாய் = | இதனை யாம் தெளிவுபடுத்த உணர்வுடன் கேட்பாயாக, |
| மைப்படிவிலா விமலஞானம் விண்ணில் ஒருபால் மாயா = | யாதொரு களங்கமும் உண்மையில் இல்லாத நிர்மல சிதாகாசத்தில் |
| மண்டபம் ஒன்று உண்டாம் = | ஒரு சம்சார மண்டபமானது இருக்கின்றது, |
| செப்பரிய விசும்பென்னும் = | சொல்லுதற்கரிய விண்ணென்னும் |
| மயூரப்பீலித்திரையாலே = | மயில் தோகைத் திரைச்சீலையினாலே |
| மறைத்திருக்கும் கப்புறு செம் பொற்குன்றும் பொன்தூணில் உறை உலகபாலர் காரிகை யாரெனும் பொறிகள் கலந்து நிற்கும் = | ஆச்சாதிக்கப்பட்ட ஆகிருதியுடையதாகவிருக்கும் பல விசித்திரங்கள் பொறிக்கப்பட்ட சொர்ணகிரியாகிய பொன்ஸ்தம்பத்தின்கண் வாழும் இந்திராதி தேவர்கள் அவர்தங் குடும்பினிகளென்னும் பதுமைகள் கூடி விளங்கா நிற்கும். |

ஒருகோணந் தனிற்பூதப் புற்றுமாங்கே யுறைகின்றமலைகளென்னு மோடு முண்டாம்
வருகாதற் புத்திரர்சூழ் விருத்தவால மறையவனுங்கொருவனுறை மனைய தாகுங்
குருவான வாயுவின் மார்க்கத்துலாவு கோலவிமானப்புழுவின் குழுவை மேவு
மருகான விண்ணிலுறை சித்தர்கூட்டமான கொதுகிரைகின்ற வரவ நண்ணும். (19)

| | |
|---|---|
| ஒருகோணந்தனில் பூதப்புற்று மாங்கே உறைகின்ற = | ஒருமூலையில் ஜீவவன்மீகம் உண்டாம், அவைகளால் வியாபித்திருக்கின்ற |
| மலைகளெனும் ஓடும் உண்டாம் = | பர்வதங்களென்னும் லோஷ்டங்களும் (மண்பிண்டங்களுமுண்டாம்) இருக்கின்றனவாம்; |
| வருகாதல் புத்திரர்சூழ் விருத்தவால மறையவன் ஆங்கு ஒருவன் உறை மனையதாகும் = | அநேகராய் வராநின்ற அன்பிற்கு விடயபூதராகிய புலத்தியராதி புத்திரர்கள் சூழப்பெற்ற பேரறிவுடைய பிரஜாபதி ஒருவன் வாழும் இல்லமும் இருக்கின்றது |

| | |
|---|---|
| குருவானவாயுவின் மார்க்கத் துலாவுங் கோலவிமானப் புழுவின் குழுவை மேவும் = | கனமான அந்தரிக்ஷலோகத்து அங்குமிங்கு திரியும் அழகான விமானங்களோடு கூடிய இந்திராதி தேவதைகளாகிற கிருமிக்கூட்டங்களுடன் கூடி விளங்கும் ; |
| அருகான விண்ணிலுறை சித்தர்கூட்டமானதொரு இறைகின்ற அரவம் நண்ணும் = | அதற்குச் சமீபித்ததான ஆகாயவீதியில்சஞ்சரிக்கும் சித்தர்கூட்டமென்று சொல்லப்பட்ட மசகம் சப்திக்கின்ற கும் கும் ஒலி நிறைந்திருக்கும். |

2 1 3
வானவர்தா னவரென்னுந் தீயமக்கண் மதர்த்தவிளையாட்டோசை மாரு தாகு
மானதொரு மாமாயா மண்டபத்திலாங் கொருபாலொருகோணத் தகத்தி னுள்ளே
மானமிகு மலையென்னு மோட்டிலொன்றின் மலைகளினுலாறுகளால் வனங்க டம்மான்
மேனலமார் நகரொன்றுண் டதனில்வாழ்வோன் வெங்கனலோன்வேதியரின் மிகவும் மிக்கோன். (20)

| | |
|---|---|
| மதர்த்த = | மதத்தால் கலகஞ் செய்துகொள்ளும் |
| வானவர் தானவரென்னுந் தீயமக்கள் விளையாட்டோசை மாருதாகும் = | சுரர் அசுரர்களென்று சொல்லப்பட்ட துர்ப்பாலரது லீலா கலகல ஆகுலமானது எப்போதுமுளதாம் ; |
| ஆனதொருமா மாயா மண்டபத்தில் ஆங்கு ஒருபால் ஒருகோணத்தகத்தினுள்ளே = | இத்தகையதான ஒப்பற்ற சம்சார மண்டபத்தில் குறிப்பான ஓரிடத்தில் ஓர் பக்கத்தின் மூலையில், |
| மானமிகு மலையென்னும் ஓட்டில் ஒன்றில் = | யாவராலும் புகழத்தக்க வளப்பம் நிறைந்த பர்வதமாகிய லோஷ்டத்தலமொன்றில் |
| மலைகளினுல் ஆறுகளால் வனங்கடம்மால் மேல் நலம் ஆர் நகர் ஒன்று உண்டு = | குன்றுகளால் நதிகளால் பூங்காவனங்களினுல் மேன்மையான நன்மை மிகுந்து விளங்கும் கிரிக்கிராமம் என்று ஒரு பட்டணம் இருக்கிறது, |
| அதனில் வாழ்வோன் வெங்கனலோன் வேதியரில் மிகவுமிக்கோன் = | அந்நகரின்கண் இல்வாழ்க்கையை நடத்தப்பட்டவனுகியும் அக்கினிகோத்திரம் செய்யப்பட்டவனுகியும் வேதத்தைப் பூரணமாக உணர்ந்து ஒழுக்கமுடையவனுகலின் மறையவர் யாவரினும் மேன்மையுற்றவனுகியும் உள்ள ஒரு பிராமண சிரேஷ்டன் மனையாளுடன் வாழ்ந்தான். |

வடிவுபொருள் வயதொடுக்கஞ் சேட்டைவிஞ்சை வசிட்டனுக் கொப்போனந்த
வசிட்டனென்றே
படியுமுணர் வினனல்லன் பெயராலிந்தப் பனவனையும் வசிட்டனெனப்
பகரலாகு
மடிபரவு மருந்ததியை யொப்பாளந்த வருந்ததியினுணர் வினளன்
றமைந்த பேரா
நெடியவருந் ததியாகுமிவற்குத் தேவிநிலத்திலிவள் விண்ணிலவ
ணிகர் வேறில்லை. (21)

| | |
|---|---|
| வடிவு பொருள் வயது ஒடுக்கம் = | அழகு, செல்வம், ஆயுள், அடக்கம் |
| சேட்டைவிஞ்சை வசிட்டனுக் கொப்போன் அந்த வசிட்ட னென்றே பகரலாகும் = | கிரியை, சாஸ்திர ஞானமென்னு மிவற்றானே வசிஷ்டமுனிவருக்கு ஒப்பானவன் ஆனால் அந்த வசிஷ்டனல்லன்; |
| படியுமுணர்வினன் அல்லன் = | ஆழ்ந்த அறிவினன் அல்லன், |
| பெயரால் இந்தப் பனவனையும் வசிஷ்டனெனப் பகரலாகும் = | நாமத்தால் இம் மறையோனையும் வசிஷ்டனெனச் சொல்லிக்கொள்வார்கள் |
| அடிபரவும் அருந்ததியை யொப்பாள் அந்த அருந்ததி யின் உணர்வினள் அன்று அமைந்த நெடியபேரால் அருந்ததியாகும் = | அவ்வசிஷ்ட முனிவரது பாதங்கட்கு அன்புடன் பணிசெய்யும் அருந்ததியை ஒப்பிடத்தக்க இந்தச் சுந்தரியானவள் ஆனால் வசிஷ்டர் பாரியான அருந் ததியின் சம்பந்தமான அறிவுடையவள் அல்லள் உடற்கு அமைந்த நீண்ட நாமத்தால் அருந்ததி யாகும்; |
| இவற்கு நிலத்தில் இவள் தேவி = | இம் மறையவனுக்குப் பூமியில் மனைவி இவள், |
| தேவி விண்ணில் அவள் நிகர் வேறில்லை = | மனைவியாக வியோமத்தில் அவள், அருந்ததி வசிஷ்டரோடு சமானராம் அன்றி ஞானத்தினால் சமானர் அல்லர். |

இந்துவருந் ததிகணவ னென்றுசொன்ன விவ்வசிட்ட னம்மலையி
னிலங்கு சாரன்
முந்தியொரு நாளிருப்ப வேட்டைக்காங்கோர் முடிநிருபன் சேனையொடு
முன்வந் தெய்த
வந்தநிரு பனைநோக்கி வசிட்டன்றோர்வா ன்கோவகோ மன்னவர்வாழ்
வறவு நன்றுஞ்
சுந்தரநாம் புவிக்கரசாய்ச் சேனைசூழத் துணைக்கவரிபரிமாறச்
சுகிப்ப மென்றாள். (22)

இந்த வருந்ததிகண்வன்
என்று சொன்ன இவ்வசிட்டன் = இப்பூலோக அருந்ததி நாயகன் என்று மேன்மைப் படுத்திக் கூறிய இவ்வசிஷ்டப் பிராமணன்,

இலங்கும் அம்மலையின்
சாரல் முந்தியொரு
நாளிருடப = செழிப்பாக விளங்கும் அப்பர் வதத்தின் சார்பிலுள்ள பசும்புல் தரைசூழ்ந்த பாறையில் முன்னொரு சமயத்தில் தவஞ் செய்து பகிர்முகமாயிருக்க,

வேட்டைக்கு ஆங்கு ஓர்முடி
நிருபன் சேனையொடு முன்
வந்தெய்த அந்த நிருபனை
நோக்கி வசிட்டன்தேர்வான் = நவரத்தினகசித கிரீடம் தரித்த ஓர் அரசன் வேட்டையாடும் பொருட்டு நால்வகைச் சைன்யங்களோடும் கண்ணுறும்படி அவ்வழியே செல்ல அந்த அரசனைக்கண்டு வசிட்டப்பிராமணன் சிந்திப்பதாவது

அகோ அகோ மன்னவர்
வாழ்வு = ஆச்சரியம் ஆச்சரியம் அரசனுக விருந்து

அறவும் நன்றும் நித்தரமாம்
புவிக்கரசாய சேனை சூழ
துணைக் கவரி பரிமாறச்
சுகிப்ப மெந்நாள் = அரசாட்சி செய்யுந்தன்மை அத்தியந்தம் ரம்மியமாய் சௌபாக்கியங்களோடு கூடி மகாராஜாவாய்ச்சதுரங்க சைன்னியங்கள் சூழ இரட்டைக் கவரி இருபுறத்து மிரட்ட ஆனந்திக்கும்படியாக ஒரு காலங்கிட்டுமா.

[1] கொடிகுடையி னிழனெருங்க வாழ்ந்துமாதர் குங்குமக்கொங் கையின் மூழ்கிக் [3] குளிப்போ [2] மெந்நாண்
[4] முடிவறுமிப் பயனென்று பெறுவ [6] மென்றே [5] மொய்காத லன்று [7] முதன் முளைத்த நெஞ்சன்
மடியறுதன் கருமத்தினின்றுன் மூப்புவனசஞ்சேர் பனியின்வர மனைவி நிற்போ
[9] லடிபர [8] வி [10] யெனைவேட்டும் வரமுமீந்தே [11] னந்தணனுமிறப் [12] புற்ரு ஞைசையோடும் (23)

கொடி குடையினிழல்
நெருங்க வாழ்ந்து மாதர்
குங்குமக்கொங்கையில் மூழ்கி
எந்நாள் குளிப்போம் = பதாகை சத்திர சாமரைகளினது சம்பிரமம் பூரிக்கச் சாம்ராஜ்ய வாழ்க்கையையடைந்து யவ்வனதருணிமாது குங்குமப்பூ கலந்த தனங்களில் காடாலிங்கனுதியால் ஆழ்ந்து எக்காலம் காமரசத்தால் மூழ்குவோம்,

முடிவறும் இப்பயனென்று
பெறுவமென்றே அன்று
முதல் மொய்காதல் முளைத்த
நெஞ்சன் = அந்தமில்லாதஇந்தப்பிரயோஜனமானதுஎப்போது அடைவோம் என்பதாக அரசனைக்கண்ட அக்காலந் தொடங்கிப் பேராசை உதித்த மனதையுடைய அவ் வந்தணன்,

மடியறுதன் கருமத்தில் நின்றான் = சோம்பலின்றித்தான் செய்யுந்தலத்தில் முயற்சியுற்றிருந்தான்,

மூப்பு வனசஞ்சேர் பனியின் வர = தாமரையுற்ற பனியே போல விருத்தாவஸ்தை வர

மனைவி நிற்போல் எனை அடி பரவி வேட்டும் வரமும் = பாரியாளான அருந்ததி என்னுடைய திருவடிகளில் துதித்து உன்னைப்போல விரும்பிய வரமும் கேட்பதானாள்

ஈந்தேன் = யானும் திருவருளையே செய்தேன்

அந்தணனும் ஆசையோடும் இறப்புற்றான் = அம்மறையவனும் ஆசையோடும் மரணத்தை யடைந்தான்.

1
அவன்மனை யாகாசத்திற் சீவாகாசமாய் நின்றா னாகாச வடிவானோனே
3 2 4 6 5 7
கவருறுமுன் னாளழுந்து சங்கற்பத்தாற் காவலன்னானே யாகிக்கலந்து நின்றான்
தவமறையோன் சவமாக மனைவிசோர்ந்து தன்னியத்திரண் டாகிச் சரீரந் தன்னை
யுவமையுறு கணவனுடன் சவமாய்ப் போக்கி யுயர்சூக்கவுட லொடவனுடன்போ யுற்றாள். (24)

அவன் மனையாகாசத்தில் ஜீவாகாசமாய் நின்றான் ஆகாச வடிவானோனே = அம்மறையவன் அஃதேகிருக ஆகாயத்தில் ஜீவ ஆகாச வடிவமாய் நின்றான் ஆகாசம் வடிவம் வாய்ந்த அவ்வந்தணனே

முன்னாள் கவருறு அழுந்து சங்கற்பத்தால் தானே காவலனாகிக் கலந்து நின்றான் = பூர்வ காலத்தில் பற்றிய திட மனோ ராச்சியத்தால் சுயமாகவே பரம சத்தியாதிகளைப் பொருந்தி விளங்கினான்,

தவமறையோன் சவமாக = தவம் ஆற்றிய அவ்வந்தணன் பிணமாகி வீழ்ந்த அளவில்,

மனைவி சோர்ந்து = அவ்வருந்ததி சோகமிகவுற்று மூர்ச்சித்து

தனது இதயத்திரண்டாகி = தனது இதயத்தால் இருவகையாகித் தனது தூல

சரீரந்தன்னை உவமையுறு கணவனுடன் சவமாய்ப் போக்கியுயர்சூக்கவுடலொடு அவனுடன் போயுற்றாள் = தேகத்தைத்தனக்குத்தானே சமானமாகப் பொருந்திய கணவனுடன் அமங்கலமாகவே லிடுத்து மேலான சூக்ஷம தேகமுடையவளாய் நாயகனை அடைந்தாள்.

ஆயமறை யோன்மக்கண் மனையும்பூமி யடவிகடா வரங்களெலா மங்கே யுண்டாய்
மேயவுயிர் போயவற்கு நாளெட்டாகும் விண்வடிவாஞ்சீவ னுமவ் வீட்டி னிற்கும்
போயபவத் துனக்கன்பனான வந்தப்பூசுரன்பூ பதியாகிப் புணர்ந்தா னன்று
தூயவருந் ததிப்பெயர்கொள் பனவியாகித் துணைவியாமந்த மடத்தோகை நீயே. (25)

| | | |
|---|---|---|
| ஆய மன்றயோன், மக்கள் மனையும் பூமி அடவிகள் தாவரங்கள்யெலாம் அங்கே யுண்டாய் | = | இவ்வாருய அவ்வந்தணன் மைந்தரும் கிருகமும் பூவும் தனங்களும் வனங்கள் விருக்ஷாதிகள்முதலிய யாவும் அவ்விடத்திலேயே அப்படியேயிருக்கவும் |
| மெய்வுயிர் போய் அவற்கு நாள் எட்டாகும் | = | அவன் தேகத்தில் பொருந்திய பிராணன் நீங்கி அவ்வந்தணனுக்குத் தினங்கள் எட்டுத் தான் ஆகிறது |
| விண்வடிவாம் சீவனும் அவ் வீட்டில் நிற்கும் | = | ஆகாச ரூபமாய் உயிரும் அக்கிரகத்திலேயே இருக்கின்றது; |
| போயபவத்து உனக்குஅன்பனை அந்தப்பூசுரன் பூபதியாகிப் புணர்ந்தான் அன்று தூய்வருந்ததிப் பெயர் கொள் பனவியாகித்துணைவியாம் அந்த மடத்தோகை நீயே | = | சென்ற ஜன்மத்தில் நினக்கு நாயகனை அந்தப் பிராமணன் பத்மராஜவாகப் பிறந்தான் அப்போது பரிசுததமான குணத்துடன் கூடி அருந்ததியென்னும் நாமங்கொண்டு விளங்கி பிராஹ்மணியாகியிருந்த தருமபத்தினியாம் அந்த அழகு வாய்ந்த மயில் இயலணையாள் நீயேயாவாய். |

புதியனசக் கரவாகந் துணையதென்னப் பூதலஞ்சேருமை யொடுபுராரி யென்ன
வதிகநலத் துணைவரா மிருவராயிங் கரசுசெயு நீரவரே யாதலாலே
மதிநுதலாய் முதற்பிறப்பின் மயக்கஞ்சொன்னே மற்றிதுதான் மயக்கமாத்திர மதாகு
முதிதமுறு மாகாயவுடலாஞ் சென்மமொளி பெறத்தோன்றியதென் றுலகி லன்னே. (26)

| | | |
|---|---|---|
| புதியன சக்கர்வாகந்துணைய தென்ன பூதலஞ்சேர் உமை யொடு புராரியென்ன | = | அற்புதமான சக்கரவாகப்பக்ஷி கூடி வாழ்வது போலவும் பக்தானுக்கிரகார்த்தம் பூமண்டலத்தை அலங்கரிப்பான் எழுந்தருளியிருக்கும் தேவி சகித திரிபுரசங்கரன் ஆகிய சிவன் போலும்; |
| அதிக நலத்துணைவராய் இங்கே அரசு செய்யும் நீர் அவரே ஆதலாலே மதிநுதலாய் | = | பேரானந்தத்துக்கு இணைந்தவராய் ஓர் மனம் இரு தேகம் பெற்றவராய் இவ்விடத்தில் அரசாக்ஷி செய்யும் நீங்கள் அவ்வந்தண தம்பதிகளே ஆகையினலே சந்திரனுக்கொப்பான வதனமுடையாய்! |
| முதற்பிறப்பின் மயக்கஞ் சொன்னேம் | = | முந்திய ஜன்மத்தின் மயக்க விருத்தாந்தத்தை இன்னவிதமெனக் கூறினேம், |
| இதுதான் மயக்கமாத்திரமதாகும் | = | கேவல இத்தோற்றம் பிராந்தி மாத்திரமேயாம், |

| | | |
|---|---|---|
| உதிதமுறும் ஆகாயவுடலாஞ் சென்மம் ஒளிபெறத் தோன் றியதென்றுள் உலகிலன்னை | = | எந்தக் காரணத்தினால் பிராந்தி மாத்திரத்துதித்த ஆகாசந்தான் இங்ஙனம் ஜீவரூபத்தைச் சத்தியம் போலத் தரித்து ஆடுகின்றது பின்பின்மயல்களுக்கு முன்முன் மயலே காரணமாகும் என்றனள் ஜகன் மாதா. |

இந்தவுரை கேட்டலுமே லீலைசொல்வா ளிறைவிபொய்யே யியம்பினையீ தெங்ஙன் கூடு
மந்தணன்வீட் டுறைசீவ னதுவெங்கேயோ வன்னியமாயிருந்த யாமடைந்த தெங்கே
முந்துறுமவ் வேற்றுலகத் திருப்பாரந்த மொய்கிரிக டசதிசை கண்முற்றுஞ் சேர
வந்தினிதிங் கியாங்களுறை மனையினூடே மருவுமடை வெப்படியோ மாசி லாளே. (27)

| | | |
|---|---|---|
| இந்த உரை கேட்டலுமே லீலை சொல்வாள் | = | (பொருத்தமில்லாப் பொருள் எனப் புகன்றதை ஆக்ஷேபித்தல்) சூன்ய ஆகிருதியுடையதாயியாவும் தோற்றுமாத்திரமேயென்ற உரையைச்சிரவணித் தலும் லீலையானவள் கூறுகின்றாள். |
| இறைவி பொய்யே இயம் பினை | = | ஹே ஜகன்மாதாவே மித்தையேசொன்னாய் |
| ஈது எங்ஙன்கூடும் | = | இத்தகைய விவகாரம் எவ்வாறு பொருந்தும் |
| அந்தணன் வீட்டுறை சீவ னது எங்கேயோ அன்னிய மாயிருந்த யாம் அடைந்த தெங்கே | = | கிரிக்கிராமப் பிராமணன் கிரகத்தில் இருக்கின்ற ஜீவனது எவ்விடத்திலேயோ அயலாக இங்கேயிருக் கின்றயாம் பொருந்திநிற்பதுதான் எவ்விடத்தில் |
| முந்துறும் அவ்வேற்றுல கத்து | = | கண்காணத் தோன்றிய விடூரத காண்டத்து |
| இருப்பார் அந்த மொய்கிரி கள் தசதிசைகள் முற்றுஞ் சேர வந்து இனிதுயாங்க ளுறை மனையினூடே மருவும் அடைவு எப்படியோ மாசி லாளே | = | இருப்பவர்களும் அந்த வளப்பம் பொருந்திய விஸ் தாரமலைகள் பத்துத் திசைகள் யாவுங் கூடிவந்து இனிமையாக யாங்கள் வசிக்கும் இவ்விடமாகிய எங்கள் வீட்டின் உள்ளே பொருந்தும் விதம் எங் ஙனமாமோ இயற்கையாகவே யாதொரு குற்றமு மற்ற தேவியே எனப் பிரார்த்தித்தாள். |

மத்தவயி ராவதமோர் கடுகிஞேர்பான் மறிபடுமோவடமேரு வந்தோர் கஞ்ச
வித்தினிடைப் புகுந்திருந்தோர் வண்டின்குஞ்சான் மிகநெரியுமோ கொதுகு
வெகுண்டுமோதி யுத்தமியற்றிட சிங்கமனேக
மத்தோ டோரணுவினிடைப் புகுமோ வுரைத்த நின்சொ
லித்திறமே யொன்றுக்கு மிசையாதாகு மெனலீலைசொல்லுதலு மிறைவி
சொல்வாள். (28)

| | | |
|---|---|---|
| மத்தவயிராவதம் ஓர்கடுகின் ஓர்பால் மறிபடுமோ | = | மும்மதம் பொருந்திய ஐராவதம் ஓர் சிறு கடுகின் ஒரு பாகத்தில் கட்டுப்படுமோ |
| வடமேருவந்து ஓர்கஞ்சவித்திடைப் புகுந்திருந்து ஓர் வண்டின் குஞ்சால் மிக நெரியுமோ | = | பொன் மேருகிரியானது வந்து ஒரு தாமரைக் கொட்டையினுள்ளே பிரவேசித்து வாசஞ் செய்து ஓர் அற்ப வண்டின் இளங்குஞ்சினுலே தூள் தூளாய்ப் போகுமோ? |
| அனேகமத்துசிங்கம்கொதுகு வெகுண்டு மோதி யுத்தம் இயற்றிடஓர்அணுவினிடைப் புகுமோஇத்திறமேஉரைத்த நின் சொல் ஒன்றுக்கும் இசையாதாகும் என லீலை சொல்லுதலும் இறைவி சொல்வாள் | = | அனேகம் சிங்கங்கள் அக்கொதுகு (மசகத்தோடு) சினந்து தாக்கிப்போர் புரிய ஓர் அணுவின் பொந்தில் புகுந்துகொள்ளுமோ, இங்ஙனம் கூறிய தங்களது திருவாக்கியம் வீட்டிற்குள்ளே பிருதுவியும் பர்வதங்களும் எங்ஙனந்தான் இருக்கும் ஒருவிதத்தாலும் பொருத்தமல்லாத தாகும் என்று லீலை கூறலும் ஸ்ரீ வாக்தேவி திருவருள் செய்கின்ருள், |

2 1 3
பொய்யாக வுரைத்திலம்யா மிதனினுண்மை புகலக் கேளெ னைப்போல்வார்
புத்தே ணீதி
மெய்யாகக் கொள்வதலாற் பேதியார்கள் வேதியன்றன்சீ வனவனூரில் வீட்டி
லெய்யாமை யுறைகின்ற திந்தநாடுமிவ்வரசும் விண்வடிவே யிவற்றை யெல்லா
மையாரும் விழிமடவா யந்தவிண்ணேவடிவான வவன்ருனே மகிழ்ந்து
பார்க்கும். (29)

| | | |
|---|---|---|
| யாம் பொய்யாக வுரைத்திலம் இதனின் உண்மை புகலக் கேள் | = | ஹே குழந்தாய்! யாம் மித்தையாகக் கூறினே மில்லையாம், இவ்விடயத்தினது எதார்த்தத்தைக் கூறக்கேட்பாய் |
| எனைப்போல்வார் புத்தேள் நீதி மெய்யாகக் கொள்வதலால் பேதியார்கள் | = | சர்வஞ்ஞமுடைய என்னைப் போன்றவர்களாகிய ஈசுர நியதியை உண்மையாக அறிவதேயல்லாமல் வேறுபடுத்தமாட்டார்கள் |

| | | |
|---|---|---|
| வேதியன்றன் சீவன் அவன் ஊரில் வீட்டில் எய்யாமை உறைகின்றது | = | அப்பிராமண ஜீவாத்மா அக்கிரிக் கிராமத்திலுள்ள அவனது வீட்டில் கெடாமல் விண்ணின்கண்ணே அரசவாசனையுபகிதசிதாகாச வடிவமாகவிருந்தே காண்கின்றது; |
| இந்த நாடும் இவ்வரசும் விண்வடிவே | = | இந்த தேசமும் இவ்விராஜ்ஜியமும் சம்பத்தும் சிதாகாசவடிவமேயாம், |
| இவற்றையெல்லாம் மை யாரும் விழிமடவாய் அந்த விண்ணே வடிவான அவன் மகிழ்ந்து பார்க்கும் | = | இத்திருசிய சம்பத்தெல்லாம் அஞ்சனந்தீட்டிய நேத்திரத்தையுடைய பெண்ணே அவ்வாகாசமே வடிவமாயிரானின்ற அம்மறைய வன்றனே சந்தோஷித்துக் காணும். |

2 1 3
தொன்மையா மந்தநினை வுங்களுக்குத் தோன்றுது வேருகித் தோன்றுங் கண்டாய்
5 4 6
பன்மையா நனுநினைவு கனவிற் றேன்றுப்பரிசென வம்மரணததின் பான்மை தோன்றுத்
தன்மயமாஞ் சத்ததினல் விளங்குமந்தத் தடஞான விசும்பி டையோர்தனி மூலைக்கே
8 7
வன்மையா மிப்பூமி தோன்றிநிற்கு மனநினைவிற்கண் ணடியில் வயங்கு மாபோல். **(30)**

| | | |
|---|---|---|
| உங்களுக்கு தொன்மையாம் அந்த நினைவு தோன்றுது வேருகித் தோன்றும் | = | உங்களிருவருக்கும் மரணதுக்கம் இளமையால் பழமையாம் பூர்வஜன்ம சமஸ்காரமானது மறைபட்டதாகி வேறுவகையாகத் தோன்றும் |
| நனுபன்மையாம் நினைவு கனவில் தோன்றுப்பரிசு என அம்மரணத்தின் பான்மை தோன்று | = | ஜாக்கிரததின் அனேகவிதமான ஸ்மிருதிகள் சொப்பனத்தில் பிரதீதியாகாத தன்மை போல அவ்விறப்பின் தன்மை பிரதீதியாகாதாம்; |
| தன்மயமாஞ்சத்தினல் | = | தன்மயமாகிய உண்மையினுலே |
| விளங்கும் அந்தத்தடஞான விசும்பிடையோர் தனி மூலைக்கே | = | பிரகாசியா நிற்கும் அந்த அகண்டசிதாகாசத்தின் கண் மிகவுஞ் சிறிதாய அற்ப கோணத்திலேயே |

| | | |
|---|---|---|
| மனநினைவில் கண்ணடியில் வயங்குமாபோல் | = | உள்ளத்தின் நினைவால் கண்ணுடியில் பிரதிபிம்பதம் போல, |
| வன்மையாம் இப்பூமி தோன்றி நிற்கும் | = | கடினுதி சிறப்புகள் வாய்ந்த இந்தப் பூமண்டலம் பிரதீதியாகா நிற்கும். |

1 4
தெளிபரம வணுவாஞ்சிற் சொருபத் தொன்றுஞ் செகலொ மொளியுருவாய்ச் செறிந்திருக்கு
3 2 5
மொளிபெற வுள்ளேவுள்ளே யாதலான்முன் னுரைசெய்தபூ மியுஞ்சித் துள்ளே தோன்றும்
வெளிபெறவீ தறியென்றே வாணி கூறவேதிய னெட்டாம் பகலில் வீந்தா னென்ரு
யெளிதிலெமக் கனேகவருடங்கள் போனதென்னெனலீ லைக்குமீண் டிறைவி சொல்லாள். (31)

| | | |
|---|---|---|
| தெளிபரம அணுவாஞ்சிற் சொருபத்து | = | நிர்மலமான பரம அணுவெனப்படும் அறிவுருவத் தின்கண்ணே |
| உள்ளே உள்ளே ஒளிபெற ஒளியுருவாய்ச் செறிந் திருக்கும் ஆதலால் | = | அந்தர் அந்தரமாயிரா நின்ற திருசியவர்க்கங்கள் யாவும் பிரதீதிமாத்திர வடிவமாகப் பொருந்தி யிருக்கும் ஆதலால் |
| முன்உரை செய்த பூமியும் சித்துள்ளே தோன்றும் | = | பூர்வம்புகன்ற பூமியாதிகளும் அறிவுருப ஆன்மாவின்கண் பிரதீதியாம் |
| வெளிபெற ஈதுஅறியென்றே வாணி கூற | = | சமுசயரகிதமாகி இதனைத் தெரிந்துய்வாயாக என ஸ்ரீ சரஸ்வதி தேவி திருவருள் செய்ய |
| வேதியன் எட்டாம் பகலில் வீந்தானென்ருய் | = | அம்மறையவன் எட்டாவது தினத்தில் இறந்தான் என்று அருளினையே, |
| எமக்கு எளிதில் அனேக வருடங்கள் போனது என் என லீலைக்கு மீண்டுஇறைவி சொல்வாள் | = | எங்களுக்கு சுலபமாக அனேக வருடகணங்கள் சென்ற காரணம் என்னையெனக் கேட்ட லீலைக்கு பின்னரும் பரமேசுவரி திருவாய்மலர்ந்தருளு வாளாயினள். |

1
தேய நீடியில்லாமை போற்காலமுஞ் சிறிதுநீ ளியதல்ல
மாய பேதமிற் சிற்சுடர் தோன்றிடு மாத்திர மொழிந் தில்லை
3 2 4
மேய பொய் மரணத்தினு லொருகணமெய்ம் மறந்திடச் சீவன்
போய தன்ன பாவனைமறந் திப்பவம் பொருந்து பாவனை யெய்தும். (32)

| | |
|---|---|
| தேயம் நீடியில்லாமைபோல் = | தேசம் விஸ்தரித்து இல்லாமை போல, |
| காலமும் சிறிது நீளியதல்ல = | காலமும் கிஞ்சிற்றும் விஸ்தாரத்தகைமையின்றிய தாம், |
| ஆயபேதமில்சிற் சுடர் தோன்றிடும் மாத்திரம் ஒழிந்ததில்லை = | பிராந்தியாலாய துவைதம் அற்றசிற் பிரகாசத்தின் விவர்த்த வடிவமேயாகி வெறுந்தோற்றமாத்திரமே யல்லாமல் ஒரு சிறிதும் இல்லை, |
| பொய் மேய மரணத்தினால் ஒரு கணம் மெய்ம்மறந்திடச் சீவன் போய தன்ன பாவனை மறந்து இப்பவம் பொருந்து பாவனை யெய்தும் = | பொய்யாகப் பொருந்திய மூர்ச்சையினால் ஓர் கணப்போது உண்மை ஸ்மிருதியில்லாமல் உயிரானது முன் ஜன்ம சமஸ்காரம் மறந்து இச் சம்சாரத்தில் செறியா நின்ற அன்னிய பாவனையை அடையும். |

2 1 3 5 4
தாங்குகின்ற தீங்கிது விதனுன்மிகத் தாங்கிடப் படுவோ நாம்
6
வீங்குகின்ற நம்மெய்யிது பிதாவிவன் வீந்ததித் தனையாண்டிங்
கோங்குகின்ற நம்சுற்றமீ தின்பமா யுறைவிட மிதுவென்றே
தேங்குகின்ற பொய்மரண மூர்ச்சைத்திறந் தெளிந்தபின் சிந்திக்கும். (33)

| | |
|---|---|
| ஈங்குஇது தாங்குகின்றது = | இவ்விடத்து இச்சம்சாரத்தை யாம் மிக தாங்குகின்றோம். |
| இத்னால் நாம் மிகத்தாங்கிடப் படுவோம் = | இம்மனைவி மைந்தராதியரால் மிகவும் யாம் தாங்கப்படுகின்றோம், |
| வீங்குகின்ற நம் மெய் இது = | பருத்திருக்கின்ற நம் சரீரம் இது, |
| பிதாயிவன்வீந்தது இத்தனை ஆண்டு இங்கு ஓங்குகின்ற நம் சுற்றம்யிது இன்பமாய் உறைவிடம் யிதுவென்றே தேங்குகின்ற பொய் மரணம் மூர்ச்சைத் திறந்தெளிந்தபின் சிந்திக்கும் = | எனது தந்தையிவன் எனக்கு இத்தனைவயதாயிற்று இவ்விடத்து விருத்தியாய்க் காணப்படுகிறது நம் உறவினர் இவர் இரம்மியமாய் வசிக்கும் கிரகம் இதுவென்று விவகரிக்கின்ற கரணங்களெல்லாம் உபரதியடையாநின்ற மித்தையால் மரண ரூப மூர்ச்சை தீர்ந்து தெளிவடைந்த பின்னர் பிராந்தி யினாலே சிந்தனை செய்யும். |

ஆதலான்முதற் பவமறைந் திப்பவ மறியலா யின தென்னப்
போதமாம்விழி நீதர வகோவகோ புரணமாய்த் தெளிவுற்றேன்
காதறீர்வுற யனையவ ருறைவிடங் காட்டென் விவளோத
வேதநாயகி யுரைசெய்வா ளத்தற்கிந்த விணையுடல் விலங்காகும். (34)

ஆதலால் முற்பவம்மறைந்து இப்பவம் அறியலாயின தென்ன = ஆகையினுல் பூர்வஜன்ம வாசனை மறைந்து இந்தச் சம்சாரம் அறியலாயினவென்று தேவி அருள் செய்ய

போதமாம் விழி நீதர அகோ அகோ = சிற்சொரூபமாகிய சத்திய வஸ்துவை அறியும் ஞான நேத்திரத்தைத் தாங்கள் அருள ஆச்சரியம் ஆச்சரியம்

புரணமாய்த் தெளிவுற்றேன் காதல் தீர்வுற = வெளிப்படையாக அறிந்துகொண்டேன், அவர்களைக் காணவேண்டுமென்னும் ஆசைதீரும்படியாக

அனையவர் உறைவிடம் காட்டு என இவள் ஓத = அம்மறைச்சிறுவர் இருக்கும் இடத்தைக் காட்ட வேண்டுமென்று லீலைப் பிரார்த்திக்க,

வேதநாயகி உரைசெய்வாள் = மறைச்செல்வி திருவருள் செய்கின்ருர்

அதற்கு இந்த வினையுடல் விலங்காகும் = அங்ஙன் காண்குதற்கு இந்தக்கரும சரீரம் பிரதிபந்தமாகும்.

இந்தயாக்கையை மறந்துவே றறிவதற் றிலங்குஞ்சிற் சுடர் மெய்யா
மந்தநல்லறிவே வடிவாய் மலமறுத்தி யேலது கூடுந்
தந்தமக்கொரு வடிவிலா வுலகங்க டமனியம் பணியாகி
வந்தவாறென வுங்கண் மோகத்தினுன் மதித்திடப் படுமன்றே. (35)

இந்த யாக்கையை மறந்து = இந்தச் சரீரத்தில் அபிமானத்தை விடுத்துத்திருசிய நாட்டமற்று

இலங்குசிற்சுடர் மெய்யாம் அந்த நல்லறிவே வடிவாய் மலம் அறுத்தியேல் அது கூடும் = சுயம்பிரகாசமாக விளங்கும் அறிவு சொரூபமாக விருந்து மலம் அற்றவளாதியேல் அச்சர்க்கத்தைக் காணலாம் = கிரிக்கிராமஞ் சென்று பார்க்கக் கூடும்

தந்தமக்கொரு வடிவிலா உலகங்கள் = உண்மையாகக் காரணத்தை விடுத்துத் தமக்கென அமூர்த்தமாயிருக்கும் இவ்வுலகங்கள்

தமனியம்பணியாகிவந்தவாறு என = சொர்னத்தை கம்மியன் வியாபாரத்தால் ஆபரணமாய் விவகரிக்கபடுவதுபோல

உங்கள் மோகத்தினுல் மதித் திடப்படும் = உங்களது அறிவின்மையினுலே மூர்த்தமாக எண்ணப்படுகின்றன

அன்றே = அறிவைத் தவிர இவை அல்லவேயல்லவாம்,

2
தத்து வம்பயில் வாதனையன்றியே சகங்க டன்மயமாகா
1 3
மெத்து செய்தொழில் விட்டிலை யாதலான் மேவுதற் கரிதுன்னுற்
5 4 6
சுத்த தற்பத மெம்மனேர் நிற்பது தொடர் மனவடிவாக
வைத்த சூக்கமெய் தீர்க்கபா வனையினுல் வளர்ந்து பேருடலாகும். (36)

| | |
|---|---|
| மெத்துதத்துவம்பயில்வாதனை யன்றியே = | பரம பிரஹ்ம தத்துவத்தைத் தியானஞ் செய்யும் சுத்த வாசனையில்லாமல் |
| சகங்கள் தன்மயமாகா செய்தொழில் விட்டிலை ஆதலால் = | உலகங்கள் பிரஹ்மசொரூப ஆத்மாவாகமாட்டாது கர்த்தா போக்தாவென மிகவுஞ் செய்யா நின்ற வினையினை விட்டுத் தொலைத்தாயில்லை ஆகையினாலே |
| மேவுதற்கரிது உன்னால் = | சென்று காண்பதற்கு உன்னால் முடியாது |
| யெம்மனோர் நிற்பது சுத்த தற்பதம் = | எம்போன்ற ஹரிபிரமாதியர் நிற்பது தூய்மையான பதமே; |
| தொடர்மன வடிவாக வைத்த சூக்கமெய் = | லோகாந்தரகமனயோக்கியமான இந்தச் சித்த தேகமென்னும் ஆதிவாகிகமே உன்போல்பவர்களால் |
| தீர்க்க பாவனையினால் வளர்ந்து பேருடலாகும் = | நீண்ட பாவனையினால் விருத்தியாகி ஆதிபௌதிக தூலதேகமாகக்கைகவரப்பெறும். |

கட்டி யாம்பனி வெம்மையாற் கரைந்துபோங் கணக்கென மெய்ஞ்ஞானஞ்
சுட்டி நோக்கலும் வாதனைவிடுதலுந் தூலமாமுடலைவிட்டுத்
திட்ட மாகியசூக்கமெய் நிலைபெறுஞ் சீவன் முத்தியுமாகும்
முட்ட ஞானமே நிறையுமுன் னிவ்வுடனிறுத்தி முற்பவங் காண்பாய். (37)

| | |
|---|---|
| கட்டியாம்பனி வெம்மையால் கரைந்துபோங் கணக்கென = | பனிக்கட்டியானது வாயுவினாலே இறுகிவெப்பம்பட மிகுந்து நெகிழ்ந்து நீராகும் நேர்மைபோல, |
| மெய்ஞ்ஞானஞ்சுட்டி நோக்கலும் = | சத்தியஞானனந்த சொரூபத்தை நிரந்தரம் அப்பியாசித்தலாலும் |
| வாதனை விடுதலும் = | வாசனக்ஷயத்தினாலும் |
| தூலமாம் உடலைவிட்டுத் திட்டமாகிய சூக்கமெய் நிலைபெறும் = | தூலதேகத்தை மறந்து வியாவகாரிகதிடமாகிய சூக்கம சரீரமென்னும் ஆதிவாகிக சரீரம் மீண்டு ஸ்திதிபெறும் |
| சீவன் முத்தியும் ஆகும் முட்டஞானமே நிறையுமுன் = | சீவன் முக்திப்பதத்தையுமடைந்து சுகிப்பாய் அவதி பரியந்தம் உண்டாகா ஞானமே பூரணமாவதற்கு முன்னரே, |
| இவ்வுடல் நிறுத்தி முற்பவங் காண்பாய் = | இத்தூல தேகத்தை இங்குவைத்து பூர்வஜன்மம் லோகாந்தரஞ் சென்று காண்பாயாக, |

என்ற வாணியை யத்திறனியற்று மாறென்னென விவள் கேட்கத்
துன்று சிந்தையும் வசனமு முசாவுமத்தொல் பொருட் பொருட்டாகி
நின்ற வின்பமு முதாரமும் விராகமு நிறைந்து நீள்சகமென்று
மொன்று மில்லெனக் கலைவழி யூகமாயுணர்வர் சாதக ரானோர். (38)

| | |
|---|---|
| என்ற வாணியை அத்திறனி யற்று மாறு என்என விவள் கேட்க = | ஞானமானது என்னல் உபதேசிக்கப்பட்டது அந்த ஞானம் அடைவதற்கு சாதனம் கூறுகின்றனம் என்ற சரஸ்வதி தேவியை அந்தப் பேரறிவான ஞானத்தை அப்பியாசிக்குமாறு எங்ஙனம் என்ப தாக லீலே கேட்க ; |
| துன்று சிந்தையும், வசனமும் உசாவும் = | நிரந்தரம் அபேத சிந்தனேயும், சிரவணமும், ஒருவர்க்கொருவர் தெளிவித்தலும் |
| அத்தொல்பொருள் பொருட் டாகி நின்ற இன்பமும் = | அப்புராதன வஸ்துவை அறிவித்தற்கு ஏதுவாய் நின்ற சந்தோஷமும் |
| உதாரமும் விராகமும் நிறைந்து நீள்சகம் என்றும் ஒன்றும் இல்லென கலேவழி யூகமாய் சாதகராஞேர் உணர்வர் = | ஔதார்யமும் வைராக்கிய சாரத்தை உள்ளே வைத்திருப்பதும் சர்வ திருசியங்களும் எக்காலத் தும் சிறிதும் இல்லவே இல்லேயென்று சாஸ்தி ரோக்த யுக்திப்பிரகாரம் அப்பியாசிகளானவர்கள் உணர்வுறு முயற்சி செய்வார்கள். |

**அகமிதங்க ளிச்சிருட்டியின் முன்வரு மபாவமாதலி னென்று**[1][3][2]
**மிகவுமில் லெனத் தெளிதரு போதமும் வேறுகாண் பனவற்று**[4]
**நிகழுஞா னத்தாற் காமமே முதற்பகை நீங்கிட வந்தெய்துஞ்**[6][5]
**சுகமுமென் றிவை சாதகமாகவே தொடர்வர் சாதக ராஞேர். (39)**

| | |
|---|---|
| அகம் இதங்கள் இச் சிருஷ்டி யில் முன்வரும் என்றும் = | நான் இஃது என்பனவாதி இச் சக திருசியங்கள் இச் சிருஷ்டியுமுன் = சென்ற காலத்தும் வருங் காலத்தும் நிகழ்காலத்தும், |
| அபாவம் ஆதலின் = | இல்லவே இல்லேயாம் ஆதலிஞல் |
| மிகவும் இல்லெனத் தெளி தருபோதமும் வேறு காண் பன அற்று நிகழும் ஞானத் தால் காமமே முதற் பகை நீங்கிட வந்து எய்துஞ் சுகமும் = | அத்தியந்தம் இன்றேயாம் என்று ஆராய்ந்து அறிதல் ஞாஞப்பியாசமெனவும் பிரஹ்ம பின்ன மான திருசியம் இல்லவே இல்லேயென்று தான் மாத்திரமாக விளங்கும் ஆன்மஞானத்தால் இராகத் துவேஷாதி ஒழிந்தவழி வந்து அடையாநின்ற ஜீவன் முக்தி சுகம் அடையும்யென்று |
| சாதகராஞேர் சாதகமாகவே தொடர்வர் = | அப்பியாசஞ் செய்பவர்கள் பிரஹ்மாப்பியாசம் அநுசரிப்பார்கள். |

**ஞேய மின்றிய ஞானமே ஞானமு நினேத்து மேற்பெரும்பேறு**
**மாய வந்நிலேப் பரிசய முத்தியென் றதில்பரி சயம்பண்ணற்**
**றூய தோற்றர வென்றந்த விரவிலே சொன்னவ ரிருவோருங்**
**காய வாதனே யறிவறச் சமாதியைக் கலந்தசை வறநின்ருர். (40)**

| | | |
|---|---|---|
| ஞேயமின்றிய ஞானமே ஞானமும் நினைத்து மேற் பெறும் பேறும் ஆய அந் நிலைப் பரிசயமுத்தி யென்று | | திருசியத்தைக் கவராத அறிவே மெய்யுணர்வும் தியானத்தின்அனந்தரம்அடையத்தக்க நிர்வாணம் (மோக்ஷம்) ஆம் பெரும்பயனைப் பயப்பதாகிய அந்த நிலையில் நின்று அப்பியசித்தால் முத்தியென்று |
| அதில் பரிசயம் பண்ணல் | = | எண்ணி அதன்கண் பயிற்சி செய்தல் |
| தூய தோற்றரவு என்று | = | பிரஹ்ம ரூபமே நான் என்னும் மகோதயமென்று |
| அந்தஇரவிலே சொன்னவர் இருவோரும் | = | அவ்விரவின் கண்ணே சம்பாஷித்துக் கொண்ட லீலையும் ஸ்ரீ தேவியும் நிருவி கற்ப சமாதியை அடைந்து |
| காயவாதனையறிவற சமாதி யைக் கலந்து அசைவற நின்றார் | = | முற்சரீரவாசனையுணர்வு அற நிச்சலஅங்கமுடைய வராயினர். |

அங்குலங்கள் பத்தளவென வறிவினு லாகிய வடிவுற்ற
மங்கைதன்னெடு முன்னுள ஞானத்தால் வயங்கிய கலைமாதுந்
துங்கவிண் ணிடையெழுந் தனரளவறு தூரநீங் கிடவேகிப்
பொங்குமூழியி னெடுங்கட லனையவான் புகுந்தி வையிவை கண்டார். (41)

| | | |
|---|---|---|
| அங்குலங்கள் பத்தளவென அறிவினால் ஆகிய வடிவுற்ற மங்கை தன்னெடும்முன்னுள ஞானத்தால் வயங்கியகலை மாதும் துங்க விண்ணிடை எழுந்தனர் அளவறுதூரம் நீங்கிட ஏகி | = | ஞானத்தினால் ஒருஓட்டையளவாக உண்டாகிய தேகாந்தரத்தை அடைந்த லீலையோடும் இயற்கை யாயுள்ள உணர்வால் விளங்கிய ஞான தேவியும் பரிசுத்தமான ஆகாயத்தின் கண்ணெழுந்தனர் தூரத்தினுந்தூரமாகவுள்ள இடங்களையெல்லாங் கடந்துசென்று |
| பொங்கும் ஊழியின் நெடுங் கடல் அனைய வான் புகுந்து | | பொங்கி எழும் பிரளய கால மகோதயம் போல விளங்கும் ஆகாயத்தின்கண்ணே பிரவேசித்து |
| இவை இவை கண்டார் | = | இன்ன இன்னவற்றைப் பார்த்தார்கள். |

மட்டி லாததாய்த் தெளிந்து கோமளமதாய் மந்தமா ருதத்தின்ப
முட்டி லாததாம் விசும்பிடை மனத்தினு-முடுகு சித்தர்கடுன்றி
யட்ட மெங்கணு மரக்கரும் பிசாசருமளவின்றி நாய்காக
மொட்ட கம்கரம் போன்முக யோகினியொழுங்கு விண்ணுழல்வுற்று. (42)

களிகொ ளுடகத் திடாகினித் திரள்களுங்காற் றினுற் றிரிகின்ற
வெளிறு கங்கையுஞ் சுவரிலா மனையிடை மேவி வீணையின் பாட
றெளியு நாரதர் தும்புரு கானமுஞ்சித்திரத் தினிற் கோட்டுந்
துளிகொள் கற்பத்தின் முகில்களு மாதர்தந் தொகுதியு முளதாகி (43)

எல்லை யின்றிய யோசனை தூரங்க ளியார்க்கு மெய்தரிதாகிக்
கல்லை யொத்தற விறுகுறத் திரண்டநீள் காரிரு ளுடைத்தாகி
யொல்லை யோடுதே ரிரவியுங் கனலுமேயொப்பதா மொளி யுண்டாய்ச்
சொல்லு மித்திர ளியாவையும் பற்பலவிடந் தொறுந் தொடர்வுற்று. (44)

1 6 3
தொதுகி ளீடிர ளத்தியின் காயிடைக்குமுறுவ தென வெங்குஞ்
2 4
சதுமு கன்றரு முயிரெலா மணைவுறுந்தன்மை மூன் றுலகுண்டா
மதுல வானகங் கடந்தனர் மீட்டுமோரவனியின் வர வெண்ணிப்
பதுமு வண்டத்தை நீக்கிவே றண்டத்திற் பருப்பத நகர்புக்கார். (45)

மட்டிலாததாய்த் தெளிந்து கோமளமதாய் = ஏளவுற்று கெம்பீரமாய் மலமற்றதாய்

மந்தமாருதத்தின்பம் முட்டிலாததாம் விசும்பிடை = அதி மிருதுவாய்த் தென்றல் காற்றால் உண்டான சுகம் தடையின்றித் தருவதாயுள்ள விண்ணின் கண்ணே,

மனத்தினுமுடுகு சித்தர்கள் துன்றி அட்டம் எங்கணும் அரக்கரும் பிசாசரும் அளவின்றி = மனவேகத்தினும் வேகம் மிகுந்த மகாசித்தர்களான வெற்றி கொள்ளப்பட்ட வாதத்தின் கமனம் பொருந்தி அட்டம் பக்கம் திசையெங்கணும் இராக்ஷசரும் அலகைகளும் (பூதரும்) அளவில்லாமல் திரிந்தார்கள்;

நாய், காகம், ஒட்டகம், கரம் போல் முகம் யோகினி யொழுங்கு விண்ணுழல் வுற்று = சுவானம், வாயசம், ஒட்டகம், கழுதை இவற்றைப் போல் வதனங்கள் படைத்த யோகினிகளின் கூட்டங்களும் அவர்களின் பத்தினிமார்களும் ஆகாயத்தில் உழன்று திரிந்தனர்.

களிகொள் நாடகத்திடாகினித்திரள்களும், காற்றினுல் திரிகின்ற வெளிறு, கங்கையும் சுவரிலாமனையிடை மேல் வீணையின் பாடல் தெளியும், நாரதர் தும்புரு கானமும் சித்திரத்தினிற் கோட்டும் துளி கொள்கற்பத்தின் முகில்களும் மாதர்தந் தொகுதியும் உளதாகி = சந்தோஷத்துடன் நிர்த்தனஞ் செய்து திரியும் டாகினிக் கூட்டங்களும் வாயு மண்டலத்தில் அலைகின்ற வெண்மை பொருந்திய கங்கையும் பித்திகையற்ற கிரகத்தின் கண் அடைவுற்று யாதின் சுரங்கள் விளக்கமாக்கும் நாரதர் தும்புருக்களின் கான விசேடமும் சித்திரத்தினில் தீட்டியதற்குச் சமானகார ஜலஞ்சூழ்க்கொண்ட மேகங்களும் நிரந்தர உன்மத்தமாதர் கூட்டங்களும் தொடர்ந்து விளங்கிக் கொண்டிருந்தன.

| | | |
|---|---|---|
| எல்லையின்றிய யோசனை தூரங்கள் | = | அளவற்ற யோசனை தூரங்கள் |
| யார்க்கும் எய்தரிதாகி | = | பிராணிகள் யாவரும் காண்டற்கரிதாகி |
| கல்லையொத்த அறஇறுகுறத் திரண்டநீள் கார் இருள் உடைத்தாகி ஒல்லையோடு தேர் இரவி கனலுமே ஒப்ப தாய் ஒளி உண்டாய் | = | பாஷாணம் ஒப்ப அத்தியந்தம் இறுகித்திரண்டு விசாலமான கரிய அந்தகாரமுடையதாய் விரைந்து செல்லும் தேரினையுடைய சூரியனும் அக்கினியுமே சமானமாய் பிரகாசமானது பிரகடமாம் |
| சொல்லும் இத்திரள் யாவையும் பற்பல இடந்தோறும் தொடர்வுற்று | = | மேற்கூறிவந்த இக்கூட்டங்கள் யாவையும் ஒவ்வொரு இடந்தோறும் தொடர்ந்து விளங்கிக் கொண்டிருந்தன. |
| கொதுகின் நீள்திரள் அத்தியின் காயிடை குமுறுவதென்ன | = | மசகத்தின் கூட்டங்கள் உதும்பரவுதரத்தில் சப்திப்பதே போல் |
| சதுர்முகன் தரும் உயிரெலாம் எங்கும் அணைவுறுந்தன்மை மூன்றுலகு உண்டாம் | = | நான்முகனுற் சிருஷ்டிக்கப்பட்டே பிராணிகள் யாவும் எல்லாவிடங்களிலும் பொருந்தியிருக்குந் தன்மையுடைய திரிவித உலகம் உளதாம்; |
| அதுலவானகம் கடந்தனர் மீட்டும் ஓர் அவனியில்வர எண்ணிப்பதுமஅண்டத்தை நீக்கி வேறு அண்டத்தில் பருப்பதநகர் புக்கார் | = | உவமையற்ற இவ்வாருயவானகத்தை இருவருங் கடந்து மீண்டும் ஓர் பூமியையடையவிச்சித்துப் பத்மாண்டத்தை விட்டு மறையவனிருந்த அண்டத்திலுள்ள அந்தக் கிரிக்கிராமத்தையடையவுற்றனர். |

**வினையர் சுற்றமுந் தனையருந் துக்கமாய் வெம்பு**
**மனைய வேதியன் மனைபுகுந் தார்கண்ணி லணுகா**
**ரினைய போதின்மெய்ச் சங்கற்ப மெய்திய லீலை**
**மனையு ளோரெமைக் காண்கெனச் சங்கற்பம் வகுத்தாள். (46)**

| | | |
|---|---|---|
| வினையர், சுற்றமும், தனையரும் துக்கமாய் வெம்பும் அனைய வேதியன் மனை புகுந்தார் | = | ஏவலாளரும் (வேலைக்காரிகளும்) உறவினரும், மைந்தரும், பெருந்துயரமடைந்து தபிக்கும் அத்தகைய அந்தணனுடைய கிருகத்திற் புகுந்தனர்; |
| கண்ணில் அணுகார் | = | அவர்கள் கண்ணுக்குத் தெரியாமல் நின்றனர் |
| இனையபோதில் | = | இச்சமயத்தில் |
| மெய்ச்சங்கற்பம் எய்தியலீலை மனையுளோர் எமைக்காண்க எனச் சங்கற்பம் வகுத்தாள் | = | சத்திய சங்கற்பத்தையடைந்த லீலாதேவியானவள் இக்கிருகத்திலிருப்போர் எங்களிருவர்களையுந் தரிசிக்குக என்பதாகச் சிந்தித்தனள். |

**பூமகளு மலைமகளும் போல்வாரை வனதெய்வம் போலுமென்றே**
**தாமவர்கண் டருச்சித்தார் தலைமகன்பார்த் தெமதன்னை தாதை மாய**
**யாமணுனுகுந் துயரொழிப்பீ ருயர்ந்தோரை யெதிர்ந்தோருக் கெய்தா துண்டோ**
**மாமதியி னீரென்னத் தலைதடவித் துயரொழித்தாள் வயங்கு லீலை. (47)**

| | | |
|---|---|---|
| பூமகளும் கலைமகளும் போல் வாரை வனதெய்வம்போலும் என்றே தாம் அவர் கண்டு அர்ச்சித்தார் | = | இலக்ஷுமியையும் பார்வதி தேவியையு மொத்த அத்தேவிமார்களை வன தேவதைகள் போலு மென்றே அக்கிரகத்துற்ருர் தரிசித்துப் பூசனை செய்தார்கள். |
| தலை மகன் பார்த்து | = | சேஷ்ட புத்திரன் நோக்கி |
| எமது அன்னை தாதைமாய | = | எங்களுடைய தாயும் தந்தையும் பரமபதம் அடைய |
| யாம் அணுகுந்துயர் ஒழிப்பீர் | = | யாங்கள் அடைந்த துக்கத்தை போக்குவீர்களாக |
| உயர்ந்தோரை யெதிர்ந்தோ ருக்கு யெய்தாதுண்டோ | = | மேன்மை மிக்கவரைத் தரிசித்தவருக்கு அகப்படாத பொருள் எங்கேனும் உளதோ |
| மாமதியினீர் என்ன | = | மிகுந்த மேதை வாய்ந்த பெரியோர்களே யென்று கூற, |
| தலைதடவித் துயரொழித்தாள் | = | சிரத்திற் கைவைத்து அன்போடுந்தழுவித் துன் பத்தைத் துடைத்தாள் |
| வயங்கு லீலை | = | அம்பிகையின் பூரண கிருபையையடைந்து விளங்கும் லீலாதேவி துக்கத்தைதுடைத்ததுமன்றி அக்கிரகத்திலுள்ளார் துக்கத்தையும் ஒழித்தாள். |

**இருவருமவ் வயின்மறைந்தா ருலகத்தின் சற்பாவ மிவ்வாருகுங்**
**கருதியது முடித்தனமேற் கருத்தென்கொ லென்றுகலைக் கன்னி கேட்ப**
**மருவுசமா தியிற்கண்ட மன்னவையோ ரெனைக் காணு வகையுமிந்தத்**
**திருமனையோர் கண்டமையு மென்கொலெனச் செப்பென்ரு டெய்வ**
**மன்னுள். (48)**

| | | |
|---|---|---|
| இருவரும் அவ்வயின் மறைந் தார் | = | இரண்டு தேவிமார்களும் அவ்விடத்திலேயே உருக் கரந்தனர். |
| உலகத்தின் சற்பாவம் இவ் வாருகும் | = | ஜகத்தின் பிரஹ்ம சத்தையின் வடிவமாயிருக்குந் தன்மை கூறிய வண்ணமேயாகும்; |
| கருதியது முடித்தனம் | = | வாஞ்சித்ததைப் பூர்த்தி செய்தோம். |
| மேற்கருத்து என்கொல் என்று கலைக்கன்னி கேட்ப | = | இன்னும் வேறு ஏதாவது கேட்க வேண்டியதாக எண்ணம் உண்டு கொலோ என்பதாக ஸ்ரீசரசுவதி தேவி வினவ |

| | | |
|---|---|---|
| மருவு சமாதியிற் கண்ட மன்னவையோர் | = | பொருந்தானின்ற அரசனது சபையிலுள்ளார் என்னைப் பாராத பிரகாரத்தையும் |
| திருமனையோர்கண்டமையும் என் கொல் என | = | தவமறை அந்தணனது அழகிய இல்லத்தின் கண்ணுள்ளவர்கள் கண்ட தன்மையையும் என்ன காரணம் என்று |
| தெய்வம் அன்னாள் செப்பென்றாள் | = | தேவியின் கருணையினால் தெய்வத்தன்மையை யடைந்துள்ள லீலை சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்கொள்ள. |

சாதகத்தா லன்றியிரண் டொன்றாகா தகம்பாவந்தனை நீங்காமற்

போதமடைந் தனையதனாற் சத்தியமாஞ் சங்கற்பம் பொருந்திற்றில்லை

யாதலினா லவர்காணா ரகம்பாவமற்ற வறி வறிதலாலே

பேதமற நீவிதிக்க விவர்கண்டா ரெனவாணி பேசலோடும். (49

| | | |
|---|---|---|
| சாதகத்தாலன்றியிரண்டு ஒன்றாகாது | = | ஞானப்பியாசமில்லாமல் நினது துவைத நிச்சயம் சமன்வயமாகாது |
| அகம்பாவந்தனை நீங்காமல் போதமடைந்தனை | = | லீலையான் என்னும் பாவனை நீங்காமையினாலே அதிடஞான மடைந்தனை |
| அதனால் சத்தியமாஞ் சங்கற்பம் பொருந்திற்றில்லை | = | ஆகையால் சத்திய சங்கற்பம் உனக்கு உண்டாக வில்லை |
| ஆதலினால் அவர் காணார் | = | ஆகையினால் அவ்விடூரத சபையிலுள்ளார் நின்னைக் கண்டிலர் |
| அகம்பாவமற்ற அறிவு அறிதலாலே | = | பயிற்சியின் முதிர்ச்சியானே நிரகங்கார வஸ்துவை அறிந்து கொண்டமையால் |
| பேதம் அற நீ விதிக்க இவர் கண்டார் என | = | துவைதம் ஒழியவே சத்திய சங்கற்பமுடைய நீ புத்திரர்கள் கிரகத்திலுள்ளவர்கள் காண்கவென சங்கற்பிக்க சுதன் முதலிய யாவருங் கண்டனர் என்று |
| வாணி பேசளோடும் | = | ஸ்ரீ சரசுவதிதேவி கூறியபோது. |

1
பெருவெளியா யுன்னருளான் முழுதுணர்ந்தேன் முக்குணத்தின் பிறப்புமற்றே
3 2 4
னிருவடிவாய்ப் பிரமத்தி லகன்றெண்ணாற் றுடல்பலவா யெடுத்தேன் முன்னே

மொருதனிமா யாவிகற்பத் தோருலகாந் தாமரைமே லுறை வண்டாக

மருவியவிஞ் சையர்மகளாய் வாதனைதீ தானமனித வடிவுமானேன். (50)

| | |
|---|---|
| பெரு வெளியாய் உன்னரு ளால் முழுதுணர்ந்தேன் = | வியாபகமான சிதாகாச சொரூபியே தேவரீரது திருவருளால் இச்சகத்து விஷயமெல்லாம் இப்போது யான் அறிந்தேன் |
| முக்குணத்தின் பிறப்பும் அற்றேன் | சாத்வீக ராஜசதாமத மென்னும் முக்குணங்களால் உண்டாய ஜன்மங்கள் ஒழிந்தன, |
| பிரமத்தில் அகன்று இருவடிவாய் எண்ணூற்று உடல் பலவாய் எடுத்தேன் = | பிரஹ்மத்தினின்றும் பிரிந்து அந்தக்கரண உபாதியையடைந்த யான் வேறுவடிவாய் அஷ்டசத தேகங்களை பலவாக யடைந்தேன் |
| முன்னம் ஒரு தனி மாயாவி கற்பத்துஓர்உலகாந்தாமரை மேல் உறை வண்டாக மருவியவிஞ்சையர் மகளாய் = | பூர்வம் ஒப்பற்ற மகாமாயாவிச் சம்சார மண்டலத்தில் லோகாந்தரத் தாமரையில்உலவும் வண்டைப் போல மனோரத யோக்கியமாய்ப் பொருந்திய வித்தியாதர அங்கனையாய் இருந்தேன், |
| வாதனை தீதால் மனித வடிவும் ஆனேன் = | துர்வாசனையினாலே இன்னொரு சன்மத்தில் மாநுடப் பெண்ணாக அவதரித்தேன். |

**வேறொருமா யாவிகற்பத் தரமகளாய்த் தழையுடுக்கும் வேடப்பெண்ணாய்ச்**
**சூறைவலைப் புள்ளரசாய்க் கொதுகுமுதற் பல பிறப்பிற் சுழன்று சோர்ந்து**
**சீறுகடற் றிரையிலசை திரணம்போன் மாயையிலே தியங்கினேனை**
**யேறுவித்தாய் கரையென்ன விவள்சொன்ன ளிருவரும் விண்ணெழுந்து**
**போனார். (51)**

| | |
|---|---|
| வேறு ஒரு மாயாவிகற்பத்து அரமகளாய்த் தழையுடுக்கும் வேடப் பெண்ணாய் சூறை வலைப்புள்ளரசாய் கொதுகு முதல் பல பிறப்பில் சுழன்று சோர்ந்து = | வேறு ஒரு சம்சார மண்டலத்தில் நாககன்னிகையாய் இலையை ஆடையாகக் கட்டிக்கொள்ளும் கிராதர் குல மாதராய் சர்ப்பங்களைக் கொல்லும் ஜால பந்தன வைரியாய் மசகாதி அனந்த சன்மங்களில் சுற்றிச் சுற்றி சோகமுற்று |
| சீறுகடல் திரையில் அசை திரணம் போல = | சப்தியா நின்ற சமுத்திரத்தின் தரங்கங்களில் அகப்பட்ட துரும்புக்கு ஒப்பாகுஞ் |
| மாயையிலே தியங்கினேனை = | சம்சாரத்தின் கண்ணே மயங்கி கலங்கிக் கொண்டிருந்த என்னை |
| கரையேறுவித்தாய் என்ன இவள் சொன்னாள் = | முத்தியங்கரையில் ஏற்றுவித்தாய் என்பதாக லீலை கூறினாள் |
| இருவரும் விண்ணெழுந்து போனார் = | தேவிமார் இருவர்களும் யோகசாமர்த்தியத்தினாலே அந்தணர் வீட்டினின்றும் மேலே கிளம்பி ஆகாயத்தின் கண் வெகுதூரஞ் சென்றனர். |

1 3 2 4
யோகநெறி யால்விண்போய்ப் பதுமனிடஞ்சேர்ந்து சவவு டல்கண் டப்பா
லேகியிவன் மறுபிறப்பாம் வேந்தனை யெய்தலு மவன்மே லெதிர்ந்து வந்து
வேகவினை யாகியொரு வேல்வேந்த னமர்துடங்கி மிகவு மோத
மாகமயி லனையார்க ணோக்கினு ரிருபடையு மலைந்த வன்றே. (52)

| | | |
|---|---|---|
| யோகத்தால் விண் நெறி போய் சவவுடல் கண்டு அப் பாலேகி | = | யோகத்தால் ஆகாசவழி சென்று சர்க்காந்தர மண்டபமாகிய அந்தப்புரம்போய் இராஜ தேகத்தைப்பார்த்து விட்டு விடூரத அண்டத்திற்குச் சென்று, |
| இவன் மறுபிறப்பாம் வேந்தனை யெய்தலும் | = | பத்மராஜனது புனர் ஜன்மமாகிய விடூரதமன்னனை அடைதலும். |
| அவன் மேல் எதிர்ந்து வந்து வேக வினையாகி ஒரு வேல் வேந்தன் அமர்துடங்கிமிகவும் மோத | = | அவ்வரசன் மேல் எதிர்த்து வந்து வேக (மிகுந்த) வலிமை பொருந்திய வினையாகிக் கோபாவேச முடையவனாய் ஒப்பற்ற வெற்றி வேலாயுதந்தரித்த இராஜன் ஒருவன் போரை ஆரம்பித்து மிகவும் பொருதுதலைச்செய்ய, |
| மாகமயில் அனையார்கள் நோக்கினார் | = | ஆகாயத்தில் நிற்கும் மயில் இயல்தேவிமார்கள் இருவர்களும் கண்டார்கள், |
| இருபடையும் மலைந்த | = | இருதரப்புச் சேனைகளும் தொந்தயுத்தஞ் செய்யத் தொடங்கியது. |

மட்டிலா விருபடையு மறலிநடுக்குற வெம்போர் மலைக்குங் காலை
யெட்டிலோர் கூறுக வெதிர்ந்தவனு லிவன்சேனை யிறத்த லோடும்
பட்டுளோர் பிணக்குன்ருன் மறைந்தனனே சமர்கண்டு பயப்பட்டானே
தட்டிலா வெய்யவன்போ யிருணிறைந்த திருபடையுந் தணந்து போன. (53)

| | | |
|---|---|---|
| மட்டிலா இருபடையும் மறலி நடுக்குற வெம்போர் மலைக் குங்காலை | = | அளவில்லாத இரு சேனைகளும் யமனும் அஞ்சுமாறு கொடிய யுத்தஞ் செய்யும்போது. |
| எட்டில் ஓர் கூருக எதிர்ந்த வனுல் இவன் சேனை இறத்தலோடும் பட்டுளோர் பிணக்குன்ருல் மறைந்தனனே | = | எட்டில் ஒரு அம்சம் மீதமாக பகைவனுல் இம் மன்னவன் சேனை இறந்து சென்றபின் இறந்து போனவர்கள் தம் பிரேதபர்வதத்தால் ஆச்சாதிக்கப் பட்டனனே |
| சமர்கண்டு பயப்பட்டானே | = | போரைக்கண்டு தான் பயந்து நடுங்கினனே |

| | |
|---|---|
| தட்டிலா வெய்யவன் போய் இருள் நின்றந்தது = | பூரணப்பிரகாசமுடைய சூரியன் அஸ்தமனமாகி இருள் மிகுந்துண்டாயது. |
| இருப்டையும் தண்ந்துபோன= | இரண்டு சேனைகளும் தத்தம் பாசறையை அடைந்தன. |

பகைக்வேந்தன் படைவாங்கப் படாதசிறு படையோடும் பரிந்து மீண்டு
தகைவேந்த னரமியத்திற் றுயிலுதலு மிவர்களுமத் தலத்தி லெய்த
நகையார்ந்த நிலவனைய விவரொளியா லிளைப்பாறி நயனக் கஞ்ச
முகைதோன்ற விழித்தெழுந்து புகழ்ந்திறைஞ்சி யருச்சித்தான் முன்னின்
றோரை. (54)

| | |
|---|---|
| பகைவேந்தன் படை வாங்கப் படாத சிறுபடையோடும் பரிந்து மீண்டு = | சத்துருமன்னவன் சேனையால் நாசமானது போக கொல்லப்படாத எஞ்சிய சிறிய சேனையோடும் சிறிது கவலையுற்றவன் போன்ற மனத்தோடும் திரும்பி நகர் நோக்கிச் சென்று, |
| தகைவேந்தன் அரமியத்தில் துயிலுதலும் இவர்களும்அத் தலத்தில் எய்த = | (தக்கத் தரும அரசன் அரண்மனையின்மேல் வீட்டு வெளியில் நித்திரை செய்தலும் இவ்விருவித தேவி மார்களும் அவ்விடத்தில் போய்ச்சேர. |
| நகையார்ந்த நில வனைய இவரொளியால் இளைப்பாறி நயனக்கஞ்சம் முகைதோன்ற விழித்தெழுந்து = | பிரகாசம் பொருந்திய சந்திரனையொப்ப இவர் களுடைய அமிர்தகிரணத்தால் தளர்ச்சியாறிவிழி தாமரை அரும்பு விகசிதமானது போன்று நனவை அடைந்து |
| முன்னின்றோரை புகழ்ந்து இறைஞ்சி அருச்சித்தான் = | தரிசிக்குமாறு இரண்டு ஆசனங்களில் அமர்ந்திருக்கும் அத்தேவிமாரை ஸ்தோத்தரித்து நமஸ்கரித்துப் புஷ்பாஞ்சலி செய்தனன். |

1 4 2 5
இவனதுநற் குலப்பழமை லீலைக்கு விளம்புவிப்ப வெண்ணரி வாணி
யவனருகிற் றுயிலமைச்சன் விழிக்கவென வெண்ணுதலு மவனப் போதே
கவர்துயில்விட் டெழுந்திறைஞ்சக் கண்டகலைமக ளவனைக் கருணை கூர்ந்து
புவனபதி குலத்தொன்மை புகலென்று ளமைச்சனிவை புகல லுற்றான். (55)

| | |
|---|---|
| இவனது பழமை குலம் லீலைக்கு விளம்புவிப்ப வெண்ணிவாணி அவன்ருகில் துயில் அமைச்சன் விழிக்கவென எண்ணுதலும் அவன் அப்போது கவர்துயில் விட்டு எழுந்து = | இம்மன்னவனது புகழ் வாய்ந்த புராதன குல பரம்பரையை லீலை கேட்குமாறு சரசுவதிதேவி கருதி அம்மன்னவன் சமீபத்தில் நித்திரை தெளிந்து எம்மைக் காண்கவென்று சிந்தித்தலும் அம்மந்திரி நித்திரை தெளிந்து அம்மந்திரிஅக்காலே கவர் (மறைத்த) நித்திரையினின்றும் சாக்கிரத்தை யடைந்து |

இறைஞ்ச கண்டகலை மகள் = தோத்தரித்துப் பாதங்களில் வணங்கி நின்றதை நோக்கிய வாக் தேவி,
அவனைக் கருணை கூர்ந்து = அவன் பேரில் கிருபாகடாக்ஷம் வைத்து
புவனபதி குலத்தொன்மை ராஜனது குல பரம்பரையைக் கூறுவாயாக
புகலென்றாள் = வென்றனள்
அமைச்சன் இவை புகல
லுற்றான் = மந்திரி அதைக்கேட்டு இவ்வாறு மொழியலுற்றான்

1 3 2
மன்னவரெண் மநுகுலத்தின் மன்னவனுங் கும்பரதன் மன்னர் மன்ன
4
னன்னவன்பத் திரரதனை யளித்தான்மற் றவனகிலரதனைத் தந்தான்
னின்னவன்பே ரிரதனைத்தா னீன்றானங் கிவன்சிந்துரதனைப் பெற்றான்.
சொன்னவன்சேய் சைலரத னவனுக்குக் காமரதன் தோன்ற லானான். (56)

இனையவன்சேய் மகாரதன்மற் றிவன்சிறுவன் விண்டுரதனிவன் குமாரன்
வினையமிகு மனோரதனிங் கிவனளித்த விடூரத னிவ்வேந்தர் வேந்த
னனையிவற்குச் சுமித்திரையா மையிரண்டு வயதிலிவற் கரசு நல்கி
நினைவொடுங்கும் பிதாவனமே நீங்கினா னிவன்செங்கோ னெறியி
னின்றான். (57)

மன்னவரெண் = இம்மன்னவர் யாவரும் மதிக்கத் தக்க இக்குவாகு
மநுகுலத்தின் மன்னவனும் வம்சத்தின் அரசனாகி வந்த இராஜாதிஇராஜனாகிய
மன்னர் மன்னன் கும்பரதன் = கும்பரதன்
அன்னவன் பத்திர ரதனை
யளித்தான் = அக்கும்பரதன் பத்திரரதனையீன்றனன்,
அவன் அகில ரதனைத்
தந்தான் = அந்த பத்திரரதன் அகில ரதனைப்பெற்றனன்
இன்னவன் பேரிரதனைத்
தானீன்றான் = இவ்வரசன் பிருகத்ரதனைப் பெற்றனன்
இவன் சிந்துரதனைப்
பெற்றான் = இப்பிருகத்ரதன் சிந்துரதனைப்பெற்றான்
சொன்ன அவன் சேய்
சைலரதன் = கூறிய சிந்துதரனுக்கு சைலரதன் புத்திரனானான்
அவனுக்குக் காமரதன்
தோன்றலானான் = அவ்வரசனுக்குக் காமரதன் உற்பவித்தனன்.

இனையன் சேய் மகாரதன் = இந்தக் காமரதன் புத்திரன் மகாரதன்
இவன் சிறுவன் விண்டுரதன் = மகாரதன் புத்திரன் விண்டுதரன்

| | |
|---|---|
| இவன் குமாரன் வினையமிகு மனோரதன் = | விண்டுரதன் புத்திரன் கல்வி, ஒழுக்கம், அறிவுமிக்க மனோரதன், |
| இவன் அளித்த விடூரதன் = | இம்மனோரதன் பெற்ற விடூரதன் |
| இவ் வேந்தர் வேந்தன் = | இந்த ராஜாதிராஜன் (முன்னிலையில் வீற்றிருக்கும்) |
| இவற்கு அன்னை சுமித்திரையாம் = | இவ்விடூரத ராஜனுக்கு தாய் சுமித்திரையாம் |
| ஐயிரண்டு வயதில் இவற்கு அரசு நல்கி நினைவொடுங்கும் பிதாவனமே நீங்கினான் = | பத்து வயதில் இவ்விறைவனுக்கு ராஜ்யாதிபத்தியத்தைக் கொடுத்துவிட்டு மனத்தை ஏகாக்கிரஞ் செய்யும்படியான தவத்தின் பொருட்டு இவரது தந்தையானவர் வனஞ் சென்றனர் |
| இவன் செங்கோல் நெறியில் நின்றான் = | இம்மன்னவன் அது முதலாகத் தருமத்தோடும் பூபிடத்தைக் காப்பாற்றி வருகின்றார், |

**என்பளவில் வேந்தனை நின் முதற்பிறவி ஞானத்தாலெளிது காண்கென்**
**றன்பினொடு கையினா லவன்முடியை நாமகடொட் டருளலோடுந்**
**தன்பகையா மனவிருள்போய் லீலையுடன் வாழ்பதுமன் றனைக் கண்டா**
**னின்பமுற வியப்புற்றான் மாமாயை யிருந்தபடி யென்னே யென்றான். (58)**

| | |
|---|---|
| என்பளவில் = | மந்திரி கூறி முடித்த அளவில் |
| வேந்தனை நின்முதற்பிறவி ஞானத்தாலெளிது காண்கவென்று அன்பினொடு கையினால் அவன் முடியை நாமகள் தொட்டு அருளலோடும் = | மன்னவனே உனது பூர்வ ஜன்மத்தை விவேகத்தால் சுலபமாய் காண்பாயாகவென்று கூறிப்பிரீதியோடு திருக்கரத்தால் அவனது சிரத்தை ஸ்ரீ வாக்தேவி பரிசித்தருளலும் (கையால் தொட்டு அருளியவுடனே) |
| தன்பகையாம் மனவிருள் போய் லீலையுடன் வாழ்பதுமன்றனைக்கண்டான் = | தனது விவேகத் தடையாகிய இருதய அந்தகார மாயை நீங்கி லீலையோடு கூடி வாழும் பதுமராஜா தானாகவே பார்த்தான் |
| இன்பமுற வியப்புற்றான் = | ஆனந்தம் இனிது ஆச்சரியத்தையடைந்தான் |
| மாமாயைஇருந்தபடிஎன்னேயென்றான் = | அகடிதகடித மாயை இச்சம்சாரத்தைத் தோற்றுவிக்கும் விதம் எவ்வளவு விசித்திரம் இச்சம்சார மயமாய் நமது மனதில் இவ்வண்ணமன்றோ விரிந்து கிடக்கின்றது என்றான். |

தாயரிவ ராற்றெளிந்தே னெனநாடி யவர்சரணந் தலேமேற்சூடிப்
போயபவத் துடனீங்கி நாளொன்ரு மிவ்வுடலிற் புக்க பின்னேச்
சேயரெழு பதுவருடஞ் சென்றதாற் செய்ததெலாந் தெளியா நின்றேன்
மாயமிது வென்கொலென மன்னவன் கேட்டலுங்கருணே வாணி
சொல்வாள், (59)

| | | |
|---|---|---|
| தாயரிவரால் தெளிந்தேன் என நாடி அவர் சரணந்தலே மேல் சூடி போய பவத்து உடல் நீங்கி நாள் ஒன்ரும் | = | பிரசன்னமாயிருக்கும் தாய்மார்களாகிய இவர்களது கிருபையால் தெளிவை அடைந்தேன் என்று எண்ணி அவர் தந்திருவடிகளேத் தலே மீது அணிந்து சென்ற ஜன்மத்துத் தேகம் போய் ஒரு தினமாம் |
| இவ்வுடலிற்புக்க பின்னே | = | இத்தேகத்தில் புகுந்தபின்னர் |
| சேயஎழுபது வருடஞ் சென்றது | = | நீட்சியான எழுபது வருடங்கழிந்ததே |
| செய்ததெலாந்தெளியா நின்றேன் மாயம் இது என் கொல் என மன்னவன் கேட்டலும் கருணேவாணி சொல்வாள் | = | செய்யப்பட்ட அனேக காரியங்களே சென்ற ஜன்மத்து தேகம் போய் அஃதாவது அநேக விவகாரவித்தாரங்களேயும் பாலியத்தையும் தாருண்யத்தையும் மித்திரர்களேயும் பந்துக்களேயும் நினேக்கின்றேன் இஃது என்ன மாயமோ என மன்னவன் கேட்ப தயாவடிவமான சரசுவதி அநுக்கிரகஞ் செய்வாளாயினள். |

1
இறப்பென்னு மாமூர்ச்சை யெய்தியபின் னப்பொழுதவ் விடத்திற் ருனே
பிறப்பென்னு மாமோகம் பெரிதுண்டாம் விண்போலப் பிறங்கித் தூய்தாஞ்
3 2 4 6 5 7
சிறப்புள்ள வுன்மனதிற் செய்தொழிலா மயக்கமே தெரியா நின்ற
துறத்துன்னு மெழுபதாண் டுனக்ககன்ற தென்பதனே யுணர்ந்து
நோக்காய். (60)

| | | |
|---|---|---|
| இறப்பென்னுமாமூர்ச்சை யெய்தியபின் அப்பொழுது அவ்விடத்தில் தானே பிறப் பென்னும் மாமோகம் பெரி துண்டாம் | = | மரண மகாமோக மூர்ச்சை அடைந்த பின்னர் அம் முகூர்த்தத்திலேயே அவ்வுலகத்திலேயே ஜன்ம மென்னும் மகாமயக்கம் மிக மிகவும் உண்டாகும் |
| விண்போலப் பிறங்கித் தூய் தாம் உன் சிறப்புள்ளமனதில் மயக்கமே செய் தொழிலாம் தெரியா நின்றது | = | ஆகாசம் போல் நிர்மலமாக விளங்கும் உன் சிறப் புடைய சித்தத்தில் பிராந்தி மாத்திரமே வியவகார வித்தாரம் தோற்ரு நின்றது, |
| உறத்துன்னும் எழுபது ஆண்டு உனக்கு அகன்றது என்பதனே உணர்ந்து நோக்காய் | = | அறவுஞ் செறிந்த எழுபது வருடம்உனக்கு அனேக விததிடவிவகாரத்துடன் கழிந்ததன்ரு என்பதை நீயே ஆராய்ந்து நோக்குவாயாக. |

2 1 3 0
கடிகையிரண் டினினெடிய காலமுறுங் கனவொக்குங் கழிந்த வாணாட்
படியுறுமா யாவிகற்ப நனவிலே வெகுவிதமாய்ப் பரந்து தோன்று
5 4 6
நெடியபிறப் பிறப்பென்று நினக்கில்லை மெய்ஞ்ஞான நினக்கு ரூப
முடிவில்பதத் திருக்கின்றாய் சகமெல்லாங் கண்டிருந்து முழுதுங் காணாய். (61)

| | | |
|---|---|---|
| இரண்டு கடிகையில் நெடிய காலமுறும் கனவு ஒக்கும் | = | இரண்டு நாழிகையில் நூறு வருடத்தில் உற்பன்ன மாயாஆடம்பரம் உளதாகும் சொப்பனத்திற்குச் சமானமாம் |
| கழிந்த வாழ்நாள் | = | சென்ற உனது வாழ்நாள் |
| படியுறுமாயாவிகற்பம் | = | பூமியில் ஜநிக்கும் எல்லாத் தோற்றங்களுக்கும் காரணமாயமாயா விலாசம் |
| நனவிலே வெகுவிதமாய்ப் பரந்து தோன்றும் | = | ஜாக்கிரத்தின்கண்ணே அநேக வகையாக விஸ்தரித்து விளங்கும் மித்தையாகத் தோற்றும் மகா மயக்கம் இதுவாம் |
| நினக்கு நெடிய பிறப்பு இறப்பு என்றும் இல்லை | = | ஆயின் பரமார்த்த சத்தியமாயிருப்பது யாதெனின் உனக்கு உண்மையாகவோ ஜனனமும் மரணமும் ஒரு போதும் இல்லவே இல்லை |
| மெய்ஞ்ஞானம் நினக்கு ரூபம் | = | சத்தியக்ஞானானந்தமே உனது உண்மையான வடிவமாம், |
| முடிவில் பதத்திருக்கின்றாய் | = | அனந்த வடிவ ஆன்மாவின் கண்ணே நிலை பெற்றிருக்கின்றாய் |
| சகமெல்லாங் கண்டிருந்தும் முழுதுங்காணாய் | = | அத்தியஸ்தபதார்த்தத்துக்கு சத்தையின்மையால் பிரபஞ்சம் யாவையும் பார்த்தும் பாராதவனாகவே யிருக்கின்றாய். |

1
எல்லாமா மியல்பினா லுன்னாலுன் னிடத்திலிருந் திலங்கா நின்றாய்
3 2 4
சொல்லாமைந் தரைப்பிடித்த தொட்டிலிற்பேய் சுடலையிற்போந் தொன்மை போலப்
பொல்லாத மூகர்க்குப் புவியுறுதியாய்த் தோன்றும் பொன்கா ணாதோ
ரல்லாது பணியென்பர் தற்பதத்தைக் காணாதோ ரகில மென்பர். (62)

| | | |
|---|---|---|
| எல்லா மாமியல்பினால் உன்னால் | = | சர்வான்மகத்தன்மையால் நீ |
| உன்னிடத்திலிருந்து இலங்கா நின்றாய் | = | உனது ஆன்மாவினிடத்தில் நித்தியம் விளங்குகின்றாய், |

| | | |
|---|---|---|
| சொல்லா மைந்தரைப் பிடித்த பேய் | = | ஊமைப்பிள்ளையைப் பிடித்த வேதாளம் |
| தொட்டிலில் சுடலையிற் போந் தொன்மை போல | = | தொட்டிற்கால முதலாக மயானம் போம் வரை தொடர்ந்து துயர்தருவதே போல் |
| பொல்லாத மூகருக்கு | = | தீய வாசனையுடைய மூடருக்கு |
| புவி உறுதியாய்த்தோன்றும் | = | அசத்தாகிய உலகம் சத்தியம் போலத் தோன்றும் |
| பொன்காணுதோர் | = | சொர்ணத்தைக் காரணமாக அறியாதவர் |
| அல்லாது பணியென்பர் | = | பொன் திருஷ்டியை விட்டு ஆபரணம் எனக் கூறுவர் அதுபோல, |
| தற்பரத்தைக் காணுதோர் | = | அதிஷ்டான பரமாத்மாவாகிய தம்மை உள்ளபடி கண்டறியாதவர் |
| அகிலமென்பர் | = | திருசிய நாம ரூபம் சத்தியமென்றுதிகைப்பர், |

தனைமுதலாய்க் காண்கின்ற சகமெல்லா நீள்கனவாஞ் சகத்திற் றேன்று
மினையபொருள் களுங்கனவிற் காண்கின்ற பொருள்களா மென்று தேர்வா
யனையபொருள் களுங்காணு வறிவுமாத் திரம்வடிவா யனைத்து மேவி
வினையில்செறி வாய்க்கனமாய்ச் சுத்தமாகிப் பிரம விண்ணே யுண்டாம். (63)

| | | |
|---|---|---|
| தனைமுதலாய்க் காண்கின்ற | = | அகங்காராதிகளாகப் பார்க்கப்படுகின்ற |
| சகமெல்லாம் நீள் கனவாம் | = | நாமரூபான்மகமான பிரபஞ்சமனைத்தும் தீர்க்க சொப்பனமாம், |
| சகத்தில் தோன்றும் இனைய பொருள் | = | ஜாக்கிரத்தில் தோன்றும் கடாதி திருசிய பொருள்களும் |
| கனவிற் காண்கின்ற பொருள்களாம் | = | சொப்பனத்தில் பார்க்கப்படுகின்ற பொருள்களுக்குச்சமானமாம், |
| அறிவு மாத்திரம் வடிவாய் | = | சின்மாத்திரமே வடிவாய் |
| அனைத்து மேவி வினையில் செறிவாய் கனமாய் | = | சர்வகதமாய் நிஷ்கிரிய பரமார்த்தமாய் |
| சுத்தமாகிப் பிரம விண்ணே உண்டாம் | = | ஏகரசமாய் நிர்மலமாகிய வியாபகபரம ஆகாசமே உளதாம். |

முழுதுமாய் முழுதுடைத்தாய்ச் சத்திமுழுது முள்ள மூர்த்திதானே
பழுதிலா தெவ்விடத்தெப் படித்தோன்று மவ்விடத் தப்படியே தோன்றும்
வழுவிலா மெய்ஞ்ஞான நிலைலீலை பொருட்டானும் வழங்கப் பெற்றுய்
நழுவிலா வுண்மையொடுந் தெளிந்தனை யாம் போதுமென நவில லோடும்.
(64)

| | | |
|---|---|---|
| முழுதுமாய்-முழுதுடைத்தாய்ச் சத்தி முழுதுமுள்ள மூர்த்தி தானே | = | அதனது மாயா சபள ரூபத்தைக் கூறுகின்றுர் யாவுமாய்=சர்வகதமாய், சர்வசத்தியுமுடைய பரமேசுவரர் தானே |

| | | |
|---|---|---|
| பழுதிலாது எவ்விடத்து எப்படித் தோன்றும் அவ்விடத்து அப்படியே தோன்றும் | = | குற்றமிலாது எத்தேசத்து எக்காலத்து எவ் வஸ்துவாய்த் தோற்றுமோ அவ்விடத்து அக் காலத்து அவ்வவ்வஸ்துவாய் அர்த்தக்கிரியா யோக்கியமாகப் புலப்படும் |
| வழுவிலா மெய்ஞ்ஞானநிலை லீலை பொருட்டால் நாம் வழங்கப்பெற்றாய் | = | இராஜனே கெடாத உண்மையுணர்வின் திதியை நினது நாயகியினது நிமித்தமாக யாம் அனுக் கிரகிக்க நீ பெற்றுக்கொண்டாய் |
| நழுவிலா உண்மையொடுந் தெளிந்தனையாம் போதும் என நவிலலோடும் | = | கெடுதலில்லாமல் பிரபஞ்சமித்தியா நிச்சயத்தோடு எதார்த்த சொரூபத்தை அறிந்தனை நீ சுகமாயிரு வென்று ஆசீர்வதித்து யாம் போவோமென்று சொல்லவும். |

இதுபுகலக் கேட்டரச னெனையடைந்தோர் களும்வேண்டிற் றெய்தா நிற்பர்
புதுமணிநே ருமைப்பணிந்து புகழ்ந்தேன்வேண் டியதெய்தல் புதுமைத்தாமோ
பதுமவுட னடைவ தென்றென்ன விப்போரிற் படுவை பட்டா
லதுபுகுவை யெனக்கலைமா தளித்தலுமேற் றலத் தொருவ னறைவ
தானன். (65)

| | | |
|---|---|---|
| இது புகலக் கேட்டு அரசன் எனையடைந்தோர்களும் வேண்டிற்றெய்தா நிற்பர் | = | இத்தன்மையதாக வாகீசுவரி கூறியதைக் கேட்ட விடூரத அரசனும் என்னை அடைந்தோர்களும் வேண்டியதைத் தடையின்றிப் பெறுவர் என்றால், |
| புது மணி நேர் உமைப் பணிந்து புகழ்ந்தேன் வேண்டியதெய்தல் புதுமைத் தாமோ பதுமவுடல் நான் அடைவது என்று என்ன | = | நவசிந்தாமணி யொத்த உம்மை நமஸ்கரித்துப் பூஜித்தயான் விரும்பியதைப் பெறலாமென்பதற்கு அற்புதம் எவ்வாறுமென என் சொல்வது பதுமராஜ சரீரத்தை அடியேன் கிட்டுவதுஎப்போது என்று கேட்ப |
| இப்போரில் படுவைபட்டால் | = | இந்த யுத்தத்தில் இறப்பாய் இறந்தவுடனே |
| அது புகுவை எனக்கலைமாது அளித்தலும் | = | அந்தப்பதும சரீரத்தை அடைவாய் என்று இவ் வண்ணம் வாக்தேவி அருள் செய்து முடியவும் |
| மேல்தலத்து ஒருவன் அறைவதானன் | = | அரண்மனையின் மேல்மாடியிலிருந்து வெளிப்புற விருத்தாந்தங்காணும் சேவகன் விண்ணப்பிப்ப தானன். |

அப்புமழை சொரிந்துவரு மடர்சேனைக் கடலெங்கு மடர்ந்து நிற்க
வெப்புடைய கனற்கொழுந்தா லிந்நகரஞ் சாம்பராய் வேகா நின்ற
திப்புதுமை கண்டிலைகொ லிகல்வேந்தே யென்பளவி லிறைஞ்சார் சேனை
முப்புவனங் களுநடுங்க மோகரிக்கு மோசைசெவி முடுகக் கேட்டான். (66)

அப்புமழை சொரிந்து வரும் — பாண வருஷங்கள் பொழிந்து வரா நின்ற
அடர் சேனைக்கடல் எங்கும் — நெருங்கிய சேனு சமுத்திரம் எவ்விடத்திலும்
அடர்ந்து நிற்க = ஆர்ப்பரித்து சூழ்ந்து நிற்ப
வெப்புடைய கனல்
கொழுந்தால் = வெப்பம் மிகுதியும் வீசும் அக்கினி சுவாலையால்
இந்நகரஞ் சாம்பராய்
வேகா நின்றது = இப்பட்டணம் பஸ்மமாய்த் தகிக்கப்படுகின்றது.
இப்புதுமை கண்டிலை கொல் — இவ்வற்புதத்தைப் பார்த்திலீரோ வலிமை
இகல் வேந்தேயென்பளவில் = பொருந்திய இராஜாவே என்று கூறியபோது
இறைஞ்சார் சேனை முப்பு
வனங்களும் நடுங்க — பகைவரது படை திரிபுவனவாசிகளும் கம்பித முறக்
மோகரிக்கும் செவிமுடுகக் — கோலாகலஞ் செய்யும் சப்தம் செவி செவிடுபடக்
கேட்டான் = கேட்டான்.

1 3 2 4
ஒட்டலர்சே னையின்முழக்கு முலைந்தலறு நகரொலியு முருமே றென்ன
முட்டியெழ வடவனல்போன் முழங்கனலின் புகையெங்கு மூடிக்கொள்ளக்
6 5 7
கெட்டனகண் களுஞ்செவியுங் கிளர்நகர மழிந்ததுவிக் கேடி யாவுந்
திட்டமுற லீலையும்வா ணியும்வேந்து மந்திரியுந் தெரியக் கண்டார். (67)

ஒட்டலர் சேனையின்முழக்கும் = பகைவரது படைகளின் கர்ஜனையும்
உலைந்தலறும் நகரொலியும் = அதனுலே பயந்து தளர்வுற்றுக்கதறும்படியான ஜனங்களின் அழுகையும்,
ஏறு உருவென்ன முட்டி எழ — பேரிடியென்ன அண்டாகடாகம்வரை தாக்கியெழும்
வட அனல் போல் முழங்கு — வடவா முகாக்கினிபோல எரியா நின்ற அக்கினி
அனலின் புகையெங்கு மூடிக் — யின் புகை எவ்விடத்தும் மறைத்துக் கொள்ள
கொள்ள கண்களும் — நேத்திரங்கள் குருடுபட்டன செவிகள் செவிடு
செவியும் கெட்டன கிளர் — பட்டன ஐஸ்வரியங்களால் விளங்கா நின்ற
நகரம் அழிந்தது = பட்டணம் பாழ்பட்டது.
இக்கேடு யாவும் = இவ்வளவு அலங்கோலங்களையும்
திட்டமுற லீலையும்வாணியும் — மிகவும் நன்ருக லீலா தேவியும் வாக் தேவியும்,
வேந்தும் மந்திரியும் தெரியக் — விடூரத மன்னனும், மதி அமைச்சனும்கண்கூடாகக்
கண்டார் = கண்டார்கள்.

1
செருவிறல் வேந்தன் றேவி தெருமந்து நடுங்கி வந்தாள்
வருமிவள் பாங்கி மன்னு மாளிகை மகளிர் யாரும்
3 2 4
பெருகிய நிதியுங் கொண்டார் பேணலா ரென்னக் கேட்டா
னருகுறு தேவி யுங்க ளடைக்கல மென்று போனுன். (68)

செருவிறல் வேந்தன் தேவி = வெற்றி வீரனாகிய விடூரத மன்னன் மனைவி
தெருமந்து நடுங்கி வந்தாள் = சுழன்று பயந்து நடுங்கி சரணாகதியானாள்
வருமிவள் பாங்கி = உடன்வரா நின்ற இத்தேவியினது சேடி
மன்னா மாளிகை மகளிர்
யாரும் = ஹே இராஜாவே அந்தப்புரஸ்தீரிகள் யாவரையும்
பெருகியநிதியும் = அளவிறந்ததனங்களையும்
பேணலார் கொண்டார் பகைவர் கைப்பற்றினர் என்று விண்ணப்பிக்க
என்ன = கேட்ட அரசன்
கேட்டான் அருகுறு தேவி உங்கள் திருவடியின் பக்கத்தில் பொருந்தியிருக்கும்
உங்கள் அடைக்கலமென்று புதிய லீலை தங்கள் காப்பில் வாழ்க எனக்கூறிப்
போனான் = பிரார்த்தித்துப் போருக்குச் சென்றான்.

1 3
எதிர்நிழல் போல வந்த லீலையை யிந்தலீலை
2 4
யதிசய மெய்தி நோக்கி யருங்கலை மாதை நோக்கிப்
7 6 6 8
புதிதுநா னிங்கு வந்த பொருளென்கொ லென்ற லோடு
மதிநிற வாணி யந்த மயக்கந்தீர்த் துரைப்ப தானாள். (69)

எதிர் நிழல் போல வந்த
லீலையை நோக்கி = எதிரே தோற்றும் பிரதிபிம்பம் போலத்தனதாகார சமான ஆகிருதியுடன் வந்த புதிய லீலையை நோக்கி,
இந்தலீலை அதிசய மெய்தி = இப்புராதன லீலை ஆச்சரியமடைந்து,
அருங்கலைமாதை நோக்கி = அரிய ஸ்ரீ வாக்தேவியைப் பார்த்து
இங்கு நான் புதிது வந்த இவ்விடத்தில் நான் ஆதிவாகிக தேகத்தோடிருப்பு
பொருள் என்கொல் என்ற புதிதாக வந்தவகை யாது கொலோ என வேண்டிக்
லோடும் = கேட்டலும்
மதி நிறவாணி = பூரண சந்திரனை யொத்த நிறத்தினையுடைய ஸ்ரீ சரசுவதி தேவி,
அந்த மயக்கந் தீர்த்து அம்மயலையகற்றி அநுக்கிரகஞ் செய்யத் தொடங்கி
உரைப்பானாள் — னாள்.

4 3
நின்னைநீங் காது வாழ நினைத்தனன் மரண காலத்
5 2 1
தன்னதவ் விடத்தே பெற்றா னன்பினா லுனது காந்த
6 8 7
னின்னல்கூர் மரணந் தன்னி லெண்ணிய தெய்து மியார்க்குந்
10 9
தன்னெதி ருற்ற தன்றித் தோன்றுமோ தர்ப்பணத்தில். (70)

உன்து காந்தன் அன்பினுல் மரணகாலத்து நீங்காது வாழ நினைத்தனன் அன்னது அவ்விடத்தே பெற்ருன் = உன்து நாயகன் லீலையின் பர்த்தா நான் என் வாஞ்சையினுல் மரண காலத்தில் உன்னை நீங்காது வாழ பாவித்தனன் பாவனையுடன் இறந்ததால் பாவித்தபடியாய அதனையே அத்தலத்திலேயே அடைந்தனன்,

இன்னல் கூர் மரணந் தன்னில் = பெருந்துயர்மிக்க மரண காலத்தில்

எண்ணியதுயார்க்கும் எய்தும் = சிந்தித்தது யார்வராயிருப்பினும் அடையப்படும்

தர்ப்பணத்தில் தன் எதிருற்ற தன்றி தோன்றுமோ = கண்ணுடியில் தன்னெதிரே அடையப்பட்டதல்லாமல் அயலொன்று தோற்றுமோ.

நாசமுற் பத்தி மூர்ச்சை நனுக்கனுச் சுழுத்தியெல்லா
மேசுற வொன்றி னுள்ளொன் றில்லையா லில்துண் டென்ன
மாசுறு மயக்க மட்டே மட்டற வளரா நின்ற
தாசறு மனுபவங் களிருவகை யவற்றைக் கேட்பாய். (71)

நாசம், உற்பத்தி, மூர்ச்சை, நனுக்னுச் சுழுத்தியெல்லாம் ஏசுற ஒன்றினுள் ஒன்றில்லை = நாசம், ஜன்மம், மூர்ச்சை, சாக்கிரம் சொப்பனம், சுழுத்தி முதலிய அனைத்தும் குற்றமுற நனு முதலிய வற்றுள் கனு முதலியவையிலவாம்,

இல்து உண்டு என்னமாசுறு மயக்கமட்டே = இல்லையெனவும் உண்டு எனவும் குற்றமுற்ற பிராந்தி மாத்திரமேயாம்,

மட்டற வளரா நின்றது = மயலே கணக்கில்லாது விருத்தியாகின்றது

ஆசு அறு அநுபவங்கள் இரு வகையவற்றைக்கேட்பாய் = குற்றமற்ற அநுபவங்கள் இருவிதம் அவ்விரண்டையுங் கூறக் கேட்பாய்.

முன்னநு[1] பவத்துக் கேற்ற முறைமையாய்ச் சிலவை தோன்றும்
பின்னுறு புதுமைத் தாகிப் பேதமாய்ச் சிலவை தோன்றும்
நின்னுடனின்னுசார நின்குல் நின் னெழுக்க
மென்ன[3] வேறன்றி நின்ரு ளெதிர்[2] நிழல் போல லீலை. (72)

முன் அநுபவத்துக்கேற்ற முறைமையாய்ச் சிலவை தோன்றும் = ஜன்மஜன்மாந்தர அநுபவத்துக்குத் தகுதியாய் பூர்வ அநுபூதியினின்றும் உண்டாம் சம்ஸ்கார வாயிலாக உற்பன்னமாய் சிற்சில பதார்த்தங்கள் தோன்றும்,

நின்உடல் நின்ஆசாரம் நின் குலம் நின் ஒழுக்கம் என்ன = உனது சரீரம் உனது சமாசாரம், உனது குலம் உனது நடையென்ன, ஜீவாகாசத்தின் கண்ணே அநுபூதிகள் அசத்தியங்களாயினும் சத்தியங்கள் போல தோற்றுகின்றனவாமாதலின்,

எதிர் நிழல் போல லீலை வேறன்றி நின்றாள் = நினது சீலத்தளாய் நினது ஒழுக்கத்தளாய் நினது குலத்தளாய் நினது தேகமயத்தளாய் இவள்வரற்கு உரித்தேயாய் வேறன்றி அபேதமாய்லீலையானவள் பிரதிபிம்பம்போல நிலை பெற்றாள்,

புரவலனினை வாலுன்னைப் போலிவ டோன்றி நின்றாள்
விரவுமிப் போரிற்பட்டு விடூரதன் பதும னென்னு
நரபதியாகு மென்ற நாமகள் வசனங் கேட்டுப்
பரவின புதியலீலை பணிந் திது பகர்வ தானாள். (73)

புரவலன்நினைவால் உன்னைப் போல் இவள் தோன்றி நின்றாள் = மன்னவனது திட சங்கற்பத்தினாலே நின்னைப் போலவே இந்த லீலைப் புலப்பட்டு நிற்கின்றாள்

விரவு மிப்போரில் பட்டு விடூரதன் = மோதி நடக்கும் இந்த யுத்தத்தில் விடூரதன் அரசன் இறந்து

பதுமன் என்னும் நரபதி யாகும் என்ற நாமகள் வசனங்கேட்டு = பத்ம ராஜாவென்று பிரசித்த பூர்வ நரேந்திரன் ஆவன் என்று திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீசரசுவதி தேவியின் திருவாக்கைச் சிரவணித்து

பரவின் புதியலீலை பணிந்து இது பகர்வ தானாள் = முன்பூஜித்து நின்ற புதிய லீலை நமஸ்கரித்து பின் வருமாறு பிரார்த்தித்துக் கொண்டனள்.

1
பண்டுநான் பூசை செய்த பாமகள் போலு நீயே
3 2 4
விண்டவ ராலென் காந்தன் வீடினு லுறைவ தெங்கே
கண்டுநா னங்கே யிந்தக் காயத்தோ டெய்தி வாழத்
தண்டலில் வரநல் கென்னத் தந்தன மென்ற லோடும். (74)

பண்டு நான் பூசை செய்த பாமகள் போலும் நீயே = மாதாவே, பூர்வம் யான் பூஜித்த ஸ்ரீ சரசுவதிதேவி தேவரீரே போலும்

என்காந்தன் விண்டவரால் வீடினுல் உறைவதெங்கே = எனது நாயகன் பகைவரால் மரிக்கில் எவ்விடத்தில் சென்றிருப்பதாமோ யான்அவ்விடத்தைத் தெரிந்து

கண்டு நான் அங்கே இந்தக் காயத்தோடெய்தி வாழத் = இத்தேகத்தோடு அடைந்து வாழும்படியாக

தண்டலில் வரம் நல்க வென்ன = யாதொரு தடையுமில்லாமல் வரம் தந்தருளல் வேண்டும் என்று கேட்க

தந்தனம் யென்றலோடும் = தத்தருளினோம் அவ்வாறேயென்று தேவி கூறியருளினள்.

புகன்றநா மகளை நோக்கிப் புராதன லீலை சொல்வா
ணிகழ்ந்தவென் னுடலோ டன்றி நின்றவேற் றுடலை மேவி
யுகந்தலோ காந்த ரத்து முயர்கிரி நகரினூடு
மகன்றவா றென்கொ லென்ன வாரணத் தன்னை சொல்வாள். (75)

புகன்ற நாமகளை நோக்கி புராதன லீலை சொல்வாள் = உரைத்த வண்ணம் வரந்தந்த ஸ்ரீ சரசுவதி தேவியைப் பார்த்து பழைய லீலை கூறுவதாவது
நிகழ்ந்த என் உடலோடன்றி நின்ற வேற்றுடலை மேவி = போகாயதனமாய் விளங்கிய என் தூல தேகத்தோடல்லாமல் யோகாப்பியாசத்தால் கிடைத்து நின்ற அங்குலங்கள் பத்தளவாந்தேகத்தை அடைந்து
உகந்த லோகாந்தரத்தும் உயர்கிரிநகரினூடும் அகன்ற வாறு = செல்ல வேண்டுமென்றுவிரும்பிய வேறுலோகத்தும் வளப்பமிக்ககிரிக்கிராமத்தின் கண்ணும் சென்று சேர்ந்த விதமும்
என் கொல் என்ன = இந்தப் புதிய லீலை மாத்திரம் தூல தேகத்தோடு நாயக லோகப் பிராப்தியும் உண்டாவதான சிறப்பு என்னவென்று விண்ணப்பிக்க
ஆரணத்து அன்னை சொல்வாள் = வேதப் பிரதி பாத்திய சின்மாதா அருளுகின்றாள்.

2 1 3
ஒருவ ருக்குநா மொன்று நல்கல முணர்வின்வண்ணமே யுயிர்க ளெய்து மாற்
5 4 6
கருதி முந்திநீ கதிவிரும்பினுய் காத லித்த சிற் கண்ண ளித்தனம்
பெருகு காதலா லிந்த வண்ணமிப் பேதை வேண்ட விப்பேறு நல்கின
9 8 7 10
மிருத யத்திலே நினைந்த தெய்திடுமெமதுபார் வையா லியார்க்கு மென்றனள். (76)

நாம் ஒருவருக்கும் ஒன்றும் நல்கலம் = யாம் யாதாமொருவருக்கும் பார பக்ஷமாக ஒரு சிறிதும் கொடுப்பதில்லை
உணர்வின் வண்ணமே உயிர்கள் எய்துமால் = திடவாசனைப்படியே ஜீவர்கள் யாவற்றையும் சம்பாதித்துக் கொள்கிறார்கள்
முந்தி நீ கருதி கதி விரும்பினுய் = முன்னர் நீ என்னை நன்கு ஆராதித்து மோக்ஷம் அடைய வேண்டும் என எண்ணினுய்
காதலித்த சிற்கண் அளித்தனம் = நீ வாஞ்சித்த ஞான திருஷ்டியைத்தந்தேம்

| | | |
|---|---|---|
| பெருக்காதலால் இந்ந வண்ணம் | = | பேராசையால் நீ செவியுற்ற பிரகாரம் |
| இப்பேதை வேண்ட இப் பேறுநல்கினம் | = | இம்மடந்தை இச்சிப்ப இத்தேகத்தோடு கூடியே பர்த்தாவின் சமீபஞ் செல்ல வேண்டுமென்னு மிப் பேற்றையே தந்தேம் |
| இருதயத்திலே நினைந்தது | = | மனத்தின்கண் எண்ணியது |
| யார்க்கும் எமதுபார்வையால் யெய்திடும் என்றனள் | = | எத்தகையவர்கட்கும் நமது கிருபாதிருஷ்டி யினுனே அடையப் பெறலாம் என்று அநுக்கிரகித் தனள். |

1 3 2 4
திறல்வி டூரதன் சினமி குத்தனன் தேரி லேறினன் சேனையோடு போய்
மறலி யூர்புகும் வழிநெ ருக்கமாய் மருவ லாரெலா மடிய மோதினு
னிறலு றுங்கொலென் றெண்ணி யன்பரு லீலை வாணிதா ளேத்தி யன்னையே
5
விறன்மி குந்துநின் கருணை மேவியும் வினையின்மா ளுமோ வேந்த
7
னென்னவே. (77)

| | | |
|---|---|---|
| திறல் விடூரதன் தேரிலேறி னன், சினமிகுத்தனன் சேனை யோடுபோய் மறலியூர் புகும் வழி நெருக்கமாய் மருவ ரெலாம் மடிய மோதினன் | = | வெற்றி பொருந்திய விடூரத மன்னன் அரன்மனை யினின்றும் புறப்பட்டு இரத ஆரோகணஞ்செய்து கூட்டமான வீரர்களைப்பார்த்து கோபம் அதிகரித் தனன் சைன்னியங்களோடுஞ் சென்று யமபுரஞ் செல்லும் மார்க்கம் இடைஞ்சலாய்ப் பகைவர் எல்லாம் இறப்பப் பெரும் போர் விளைவித்தனன், |
| இறலுறங் கொல் என்று எண்ணி அன்பரு லீலைவாணி தாளேத்தி | = | தன் நாயகன் இறந்து விடுவார் என்று எண்ணிப் பிரியம் நீங்காத லீலை ஸ்ரீ சரசுவதி தேவியின் திருவடித் தாமரையைத் தோத்தரித்து |
| அன்னையே விறல் மிகுந்தும் நின் கருணை மேவியும் வினை யின் வேந்தன் மாளுமோ என்னவே | = | ஹே மாதாவே சுயம் ஆற்றல் மிகப்படைத்தும் தேவியாகிய உனது கிருபை பெற்றும் சத்துருவால் எங்கள் பர்த்தாவாம்மன்னன்மரணம் அடைவரோ என்றனள். |

1
கதிவி கும்பலாற் கலைவி டூரதன் கப்பி லாப்பதங் கலப்பதாயினு
னெதிரி யானவிச் சிந்து வென்பவ னிகலில் வெல்லவென் றெணயி
றைஞ்சலால்
3 2 4
விதியில் வென்றவன் வேந்த னுமென் விளம்பு போதிலே விடிய ரேன்றலுது
மதிர மோதிமே லடர்ந்த வெங்களத் தனிகமொன்று மற்றழிந்து
போனதே. (78)

| | | |
|---|---|---|
| கதி விரும்பலால் கலே | | மோக்ஷத்தை வாஞ்சித்து என்னை ஆரோதித்திருத் |
| விடூரதன் | = | தலால் சாஸ்திரக்ஞனை விடூரதன் |
| கப்பிலாப்பதங் கலப்ப | | துவைதமற்ற பரமபதம் அடைவதற்கு யோக்கிய |
| தாயினன் | = | மாய் நிற்கின்றன் |
| எதிரியான இச்சிந்துவென் | | பகைவனை இந்தச் சிந்துரத மன்னவன் போரில் |
| பவன் இகலில் வெல்ல | | பகைவரை வெற்றி கொள்ளவேண்டுமென்று |
| வென்று என இறைஞ்சலால் | = | என்னை பூஜித்திருத்தலால், |
| விதியில் அவன் வென்று | = | விதிப்படி அச்சிந்து அரசன் ஜயித்து |
| வேந்தன் ஆம் என விளம்பு | | |
| போதிலே விடியல் | | அரசன் ஆவன் என அம்மை சரசுவதிதேவி கூறிய |
| தோன்றலும் | = | போது சூரியன் உதயம் ஆதலும் |
| அதிரமோதி மேல் அடர்ந்த | = | சேனைகள் நாசமாமாறு மிகவுஞ் செறிந்த |
| வெங்களத்து அணிகம் | | போர்க்களத்தில் எல்லாப்படைகளும் அத்தியந்தம் |
| ஒன்று மற்று அழிந்து | | பொடியாகி இறந்து போயிற்று இருதாப்பிலும் |
| போனதே | = | சிறிது வீரரே எஞ்சி நின்றனர். |

1 3 2 4
சிந்து நாமனுந் திறல்வி டூரதச் செல்வவேந்த னுஞ் சிலேக ளேந்தின
6 5 7
ரிந்து பானுவுந் திசைகள் வானுமு மெய்யும் வாளியா லெங்கு மூடினா
முந்து வெங்கணைத் திரளெ ரிந்துதீ முடுகி யூழியின் முடிவை யொத்தலு
முந்து பாகனுந் தேரும் வில்லுமற் றுயர்வி டூரத னொருவ னயினன். (79)

| | | |
|---|---|---|
| சிந்து நாமனும் திறல் செல்வ | | சிந்துரத அரசனும் வலிமை மிகுந்த ஐஸ்வரியம் |
| விடூரத வேந்தனும் | = | நிறைந்த விடூரத அரசனும் |
| சிலேகளேந்தினர் | = | தனுசுகளை வளைத்தனர் அம்பு தொடுத்தனர் |
| இந்து பானுவும் திசைகள் | | பிரயோகியாநின்ற பாணவருடிங்களால் சந்திர |
| வானமும் எங்கும் ஏய்யும் | | சூரியாதிகளும் திக்குகளும் ஆகாசாதி இன்னும் |
| வாளியால் மூடினர் | = | எவ்விடத்தும் பிரயோகிக்கும் பாணங்களால் மறைத்தனர் |
| உந்தும் வெங்கணைத்திரள் | | வேகமாகச் செல்லும் கொடிய அஸ்திரக் கூட்டம் |
| எரிந்து தீமுடுகி | = | எரிந்து அழல் முதிர்ந்து |
| ஊழியின் முடிவை | | |
| யொத்தலும் | = | கற்பாந்த காலத்திற்குச் சமானமாதலும் |
| உந்து பாகனும் தேரும் | | |
| வில்லும் | = | செலுத்தும் பாகனும் செல்லும் இரதமும் வில்லும் |
| அற்று உயர் விடூரதன் | | இல்லாதவனாய் உயர்வுமிக்க விடூரதமானவன் |
| ஒருவனயினன் | = | ஏகனாய் இருந்தான். |

1
பிறைநெ டுஞ்சரங் கவசம் வீழ்வுறப்பிரிந்து மெய்யெலாம் பிளந்து சிந்தலும்
பொறைய ழிந்துவீழ்ந் தவனை நோக்கிவெண் புண்டரீகையைப் புதிய லீலை
பார்த்

3 2 4
திறைவ னுவிபோ மெல்லையாயினு னிவனைநண்ண நானேக நல்கெனு
வறைத லோடுமவ் வன்னைநல்கினு ளவளும்விண்ணினெய் தாகி யேகினுள். (80)

| | | |
|---|---|---|
| பிறை நெடுஞ்சரம் கவசம் வீழ்வுறப் பிரிந்து | = | மூன்றும் பிறை போன்ற வச்சிரசமான பாணங்களினுல் விடூரதன் பாணங்களையும் வர்மத்தையும் தூள் தூளாகும்படி பிளந்து |
| மெய்யெலாம் பிளந்து சிந்தலும் பொறையழிந்து வீழ்ந்தவனை நோக்கி | = | சர்வாங்கமும் ஆகுலப்படும்படிதுண்டந்துண்டமாக்கி எறிதலும் பிரஞ்ஞையில்லாமல் கீழே வீழ்ந்த அவ்வரசனைப் பார்த்து |
| வெண் புண்டரீகையைபுதிய லீலை | = | வெண்டாமரைத் தேவியை நவீன லீலை |
| பார்த்து இறைவன் ஆவி போம் எல்லை ஆயினுன் | = | நோக்கி எனது தேவனுன அரசன் உயிர் பிரியுந் தருணத்திலிருக்கின்ருன், |
| இவனை நான் நண்ண ஏக நல்கெனுவறைதலோடும் | = | இவ்விறைவனது சேவடியை யான் சேரும்படியாக அனுக்கிரகஞ் செய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டபோது |
| அவ்வன்னை நல்கினுள் | = | அத்த ஜகன்மாதா அங்ஙனமே அனுக்கிரகித்தாள் |
| அவளும் விண்ணில் நொய்தாகி யேகினுள் | = | அந்தப்புதிய லீலையும் ஆகாயத்தில் பக்ஷியைப் போல்இலகுவானசரீரமுடையவ்ளாய்ப்பறந்தனள். |

கருமு கிற்றடங்க டந்து வாயுவின் கதிக டந்துவெங் கதிரி னெல்லைவிட்
டருகு தாரகர் பதம கன்றுமே லயனை யாதியா மமரர் நாடொரீஇ
மருவு மிந்தவண் டம்பி ளந்துபோய் வாரி யாதியாய் வளைந்த யாவையு
முருவி யெல்லையு முடிவு மற்றதா முண்மை ஞானவிண் ணெல்லை
யெய்தினுள். (81)

| | |
|---|---|
| கருமுகில் தடங்கடந்து வாயுவின் கதி கடந்து வெங் கதிரின் எல்லை விட்டு அருகுதாரகர்பதம் அகன்று மேல் அயனையாதியாம் அமரர் நாடொரீஇ மருவும் | கரிய மேக மண்டலத்தைக் கடந்து வாத மார்க்கத்தையும் தாண்டிச் சூரிய மார்க்கத்தினின்றுமெழுந்து சமீபித்த நக்ஷத்திர பத நெறியையும் |

| | | |
|---|---|---|
| இந்த அண்டம் பிளந்து போய் வாரியாதியாய் வளைந்த யாவையும் உருவி, எல்லையும் முடிவும் அற்றதாம் உண்மை ஞானவிண் ஒல்லை எய்தினள் | = | கடந்து உயர்ந்த பிரமாதி தேவதைகளின் பதங்களையுங் கடந்து பொருந்தும் இவ்வண்டத்தையும் பிளந்துசென்று, நீர், தீ, கால், விண் அகங்காரம், மகதத்துவம், பிரகிருதிமுதலன வாய்ச்சூழ்ந்த சப்தா வரணங்களையுந் தாண்டி வரம்பும் அந்தமுமில்லாத பெரிதுக்கும் பெரிதாகிய மாயையோடு கூடிய சத்திய சிதாகாயத்தை பின் அடைந்தனள். |

2 1 3

கற்ப கோடிவெங் கருடனோடினுங் கடக்கொ ணுவத்திக் காடு காய்த்தபோ
லுற்ப வங்களா மண்ட கோடியொன் றென்றை நோக்குரு துளவ வற்றினு
ளற்ப மின்றியா வரண பேதமே யயல்வ ளைப்புறு மண்ட மொன் றனுட்
டற்ப தங்கடந் தெய்தி யம்புயச் சவங்கி டந்தமண்டப மடைந்தனள். (82)

| | | |
|---|---|---|
| வெங்கருடன் கற்பகோடி ஓடினுங்கடக்கொணு அத்திக் காடு காய்த்தபோல் | = | மிகுந்த வேகமுடைய கருடன் கற்பகோடி சதங்களாலும் பறந்து சென்றாலும் சிறக்கின்றதைத் தாண்டமுடியாதபடி அதில் உதும்பர ஆரண்யம் காய்த்திருப்பது போலத் |
| உற்பவங்களாம் அண்ட கோடியொன்றென்றை நோக்குருதுள அவற்றினுள் அற்பமின்றிஆவரணபேதமே அயல் வளைப்புறு அண்டம் ஒன்றனுள் | = | தோன்றி ஒடுங்குவனவாயுள்ள அனேகங் கோடி பிரமாண்டங்கள் கணக்கிட முடியாததாய் அன்னியோன்னிய கோண முடியாததாயுள்ள அவற்றுள் விஸ்தாரமாய் ஆவரண பேதமே=நீர், அக்கினி, வாயு ஆகாயம், அகங்காரம்மகதத்துவம், பிரகிருதி முதலிய சப்த ஆவரணங்களின் வேற்றுமைகளாயுள்ள அதின் அருகில் வளைந்து கொண்டிருக்கும் |
| தற்பதங்கடந்து எய்தி அம் புயச்சவங்கிடந்த மண்டபம் அடைந்தனள் | = | ஓர் அண்டத்தின்கண் பிரஹ்மாதி பதங்கடந்து ஆண்டு அப்பதுமசரீரமிருந்த மண்டபத்தை அடைந்தவளாய்ச் சவத்தின் அருகில் இருந்தாள். |

தமர வண்டுசூழ் மலரின் மூடுமிச் சவச ரீரமாந் தரணி பாலனே
யெமது நாயகன் கருணை வாணியா லென்கொல் முன்னமிங் கெய்தினேமெனு
வமர வெண்ணிவெண் கவரி வீசியங் கன்ப னோர் புறத் தவளி ருந்தபின்
விமல ஞானியாம் விறல்வி டூரதன்மேவு சீவன் விண்மீது போயதே. (83)

| | | |
|---|---|---|
| தமரம் வண்டு சூழ் மலரில் மூடுமிச்சவசரீரமாம் தரணி பாலனே எமது நாயகன் | = | சப்தியா நின்ற ஞிமிறினங்கள் மொய்த்த புஷ்பங்களினாலே மூடி வைக்கப்பட்டிருக்கின்ற இந்த உயிர் இல்லாத தேகமேயாய பூபாலனே நம் நாயகன் |

| | |
|---|---|
| க்குணவர்ணியால் என் | கிருபா சொரூபியாகிய ஸ்ரீ சரசுவதி தேவியால் |
| கொல் முன்னம் இங்கு எய்தி | ஆச்சரியம் யாது காரணத்தால் முன்னமே இங்கு |
| னேம் எனு அமர எண்ணி | அடைந்தோமேயென்று சாவதானமாகச் சிந்தித்து |
| வெண் கவரி வீசி அங்கு | வெண்சாமரத்தையெடுத்து வீசி அவ்விடத்தில் |
| அன்பன் ஓர்புறத்து | நாயகனது ஒரு பக்கத்தில் அந்தப் புதிய லீலை |
| அவரிருந்தபின் விமல ஞானி | இருந்த பின்னர் நிர்மல அறிஞனை வெற்றி |
| யாம் விறல் விடு = | பொருந்திய |
| ரதன் மேவு சீவன் விண் மீது | விடூரத மன்னவன் தேகத்தில் பொருந்தியிருந்த |
| போயதே = | உயிரானது ஆகாயத்தின்கண்ணே எழுந்து சென்றது. |

1 2 3 5 4
ஞான நோக்கினு லவனை நோக்கிவிண் ணடந்து பின் வரு நங்கை மார்தமைத்
தான றிந்திடா தகன்ற சீவன் போய்ச் சவமி ருந்தமண் டப மடைந் திடப்
போன மாதரும் புதிய லீலையைப் புரிந்து நோக்கினர் பொன் செய் மண்டபத்
7 6 5 8
தான சீவனைத் தகைந்து மீளவு மம்புயாசனத்தவ ணிறுத்தினள். (84)

| | |
|---|---|
| ஞான நோக்கினல் அவனை நோக்கி விண்பின்னடந்து வருநங்கைமார்தமை தான் அறிந்திடாது அகன்றஜீவன் போய் சவமிருந்த மண்டபம் அடைந்திட போன மாதரும் புதிய லீலையைப் புரிந்து நோக்கினர் = | உணர்வு வடிவ திவ்ய திருஷ்டியினுலே விடூரத ஜீவனை அநுசரித்தே ஆகாச மார்க்கத்தில் பின்னர் வாரா நின்ற உத்தமிமார்களைத் தான் அறியாமல் சென்ற அம்மன்னவனது உயிர்போய் பத்ம சரீரமிருந்த மண்டபத்தையுற்றபின் சென்ற தேவிமார்களும் நவீன லீலையை நன்கு கண்டனர். |
| பொன்செய் மண்டபத்தான அம்புயாசனத்தவள் மீளவும் தகைந்து நிறுத்தினள் (அவ்விடத்தே) = | பொன்னலாய பத்ம மண்டபத்தைப் பொருந்திய உயிரைத் தாமரை செல்வியாகிய ஸ்ரீ சரசுவதிதேவி மீண்டும்தடுத்து நிற்குமாறு செய்தனள்ஆகாயத்தே |

1
பண்டை லீலைதன் மேனி கண்டிலாள் பாம டந்தையைப் பணிந்து கேட்டலு
மண்டு சிந்தைபோய் நிறைசமாதியான் மறிந்துவீழ்ந்த மெய் மாண்ட
தாமெனக்

3 2 4
கொண்ட மைச்சர்வெங் கனல்கொளுத்தினர் குரம்பையோடு நீ குவலயத்துமி
லண்டர் வானினின் றுடலொடேகினு ளந்த லீலையென் றதிசயிப்பரால். (85)

| | | |
|---|---|---|
| பண்டைலீலை தன் மேனி கண்டிலாள் பாமடந்தை யைப் பணிந்து கேட்டலும் மண்டு சிந்தை போய் நிறை சமாதியால் மறிந்து வீழ்ந்த மெய் மாண்டதாமென அமைச்சர்கொண்டு வெங் கனல் கொளுத்தினர் | = | புராதன லீலை தனது தூல தேகத்தைப் பார்த்திலள் ஸ்ரீ வாக் தேவியை நமஸ்கரித்து வினவிய போது வாசனை பொருந்திய சிந்தாகுலங்கள் ஒழிந்து பூரணமான சமாதியினாலே சாய்ந்து கீழே விழுந்த சரீரத்தை இறந்து போயிற்றென்று மந்திரி மார்கள் மயானத்துக்குக் கொண்டுசென்று சந்தனக் கட்டைகளால் சிதையடுக்கி நெய் இவற்றால் ஜொலித்த நெருப்பில் சாம்பலாக்கினர் யாவரும் மேலுலகத்திற்கு லீலை சென்றனளென்று எண்ணிக் கொண்டிருக்கின்றார்கள் |
| குரம்பையோடு நீகுவலயத் துறில் | = | இப்போது சரீரத்தோடும் நீ பூமண்டலத்து அடை வையேயானால் |
| அண்டர்வானின்று உடலோடு ஏகினள் அந்த லீலையென்று அதிசயிப்பர் | = | உன்னைப் பார்த்துப் பரலோகத்திலிருந்து சரீரத் தோடும் வந்துற்றனள் அந்த லீலையென்று ஆச்சரியத்தையடைவார்கள். |

2 3 1
சூக்க மெய்யினோ டிருந்து வாதனைத் தோற்ற மாற்றலாற் றூல காய நீ
போக்க லாயதென் றிவளுக் கோதியப் புதிய லீலையிப் போது காண்கென
வாக்கின் செல்வியுண் ணினைந்த வெல்லையின் மறைந்து நின்றவர் நிறைந்து தோன்றலும்
பாக்கி யங்கள்போற் கண்ட லீலையப் பாவை மார்பதம் பணிந்தி றைஞ்சுவாள். (86)

| | | |
|---|---|---|
| 3 2 நீ தூலகாயம் சூக்க மெய்யினோடு இருந்து வாதனைத் தோற்றம் மாற்றலாற் | = | தூல சரீரம் ஆதிவாகிய சரீரத்தோடிருந்து தூல சரீரவாதனை எழுச்சியை நிவர்த்திசெய்திருப்பதால் |
| நீ போக்கலாயது வென்று இவளுக்கு ஓதி அப்புதிய லீலை இப்போது காண்கென வாக்கின் செல்வி உள் நினைத்த எல்லையில்மறைந்து நின்றவர் நிறைந்து தோன்றலும் | = | உன்னால்போக்கப்பட்டது=அதி திடமானகுறியாக நல்லுணர்வினனே அஃதாவது கன சரீரம்போலும் கருத்திலும் அயலாய ஆதி பௌதிக சரீரம் இல்லை யாமென்னும் திட ஞானத்தானே ஆதி பௌதிகம் சாந்தியை அடையும் அதனானே ஜீவன் முக்தன் தேகம் பிரதிபாசிகமாகத் திகழா நிற்கும் என்பர் பெரியார் அந்த நவீன லீலை இப்போது நம்மை தரிசிக்கவென்று வாக்தேவி திருவுள்ளத்தில் கருதிய வுடனே கண்ணுக்குத் தெரியாமல் நின்றவர் பூரண மாகத் தரிசனந் தருதலும் |

| | |
|---|---|
| பூரக்கியங்கள் போல் கண்ட லீலை அப்பாவை மார்பதம் பணிந்து இறைஞ்சினள் = | பாக்கியங்கள் வந்தெய்தின போலத்தரிசித்த புதிய லீலை எழுந்து அந்தத்தேவி மார்பாதாம்புஜங்களில் அருச்சித்து நமஸ்கரித்துத் தோத்தரித்தாள். |

1
போத வாணியும் பழைய லீலையும் புதிய லீலையும் புணர்ந்தி ருந்துழி
3
சாதி மென்மலர் வாசம் விட்டெனச் சலசமாதுயிர்த் தடைவிடுத்தலும்
வாத ரூபமாய் நாசி யூடுபோய் வறந்த மெய்யெலா நிறைந்துலாவிடச்
2
சீத மாகிநெய்த் துளிபரந்து கண்டிறந்தெழுந்தனன் செத்த மன்னவன். (87)

| | |
|---|---|
| போதவாணியும் பழைய லீலையும் புதிய லீலையும் புணர்ந்திருந்துழி = | ஞானமயமாய ஸ்ரீ சரசுவதி தேவியும் புராதனலீலை நவீன லீலை இரண்டுபேருஞ்சேர்ந்து சம்பாஷித்துக் கொண்டிருந்தபோது |
| செத்த மன்னவன் சாதிமென் மலர் வாசம் விட்டென = | முன்னுயிர் துறந்து சென்ற அரசன் பதும சங்காதம் ஆமோதம் விட்டதொப்ப |
| சலசமாது உயிர்த்தடை விடுத்தலும் = | ஸ்ரீ தாமரைச்செல்வியாகிய சரசுவதி தேவி ஜீவத் தடையை விட்டதும் |
| வாதரூபமாய் நாசியூடுபோய் வறந்த மெய்யெலாம் நிறைந்து உலாவிட சீதமாகி நெய்த்துளி பரந்து கண் திறந்து எழுந்தனன் = | காற்று வடிவமாய் நாசிக்குள் சென்று காய்ந்த சரீரமெல்லாம் ரசம் நிறைந்ததாகிப் பூரணமாய் நிலவ தண்ணென குளிர்ந்து விழிகளை விழித்து விந்தை கிரிபோல எழுந்தனன். |

1 3 2 4
இங்குநின்றுளா ரெவர்கொலென்றுவா னிடிமுழக்கமொத் திவனு ரைத்தலு
மங்குநின்றுளாள் வணங்கி யிப்புவத் தடுத்ததேவிநா னருகு தாழ்ந்தவிம்
மங்கையாரென வென்னையொப்பநீ மனத்தி லெண்ணலான் மகிழ வந்துளா
6 5 7
ளங்குவாணியிங் கிருந்து ளாளெனத் தொல்லை லீலையே தோன்ற
வோதினள். (88)

| | |
|---|---|
| இங்கு நின்றுளார் எவர் கொல் என்று வானிடி யொத்து முழக்க இவன் உரைத்தலும் = | இவ்விடத்திலிருக்கப்பட்டவர்கள் யாவர்கள் யென்று ஆகாயத்திலுண்டாம் இடி கர்ஜனை நிகர்த்து பதும மன்னன் கம்பீரமாய்க் கேட்டலும் |
| அங்கு நின்றுளாள் வணங்கி இப்புவத்து அடுத்த தேவி நான் அருகு தாழ்ந்த இம் மங்கையார் என = | அவ்விடத்தில்யிருந்த புராதன லீலையானவள் நமஸ்கரித்து இச்சனனத்தமைந்த மகிலையாள் நினக்குச் சமீபத்தில் நமஸ்கரித்து நிற்கும் இவ்வங் கனையாவள் யார் என பத்மராஜா கேட்ப |

| | |
|---|---|
| என்னையொப்ப நீ மனத்தில் எண்ணலால் மகிழ வந் துளாள் = | என்னைப் போன்று தேவரீர் மனத்தின் கண்ணே சிந்தித்தலால் சந்தோஷத்தைத் தரவந்த மகிலையா மிவள் |
| இங்கு இருந்துளாள் துங்க வாணி எனத் தொல்லை லீலையே தோன்ற ஓதினள் = | இப்பீடத்தில் எழுந்தருளியிருப்பவள் பரிசுத்தமான ஸ்ரீ சரசுவதி தேவி யென்று புராதனலீலையே தெரியும்படியாகக் கூறினள். |

[1] பகரு மெல்லையிற் பதமி றைஞ்சுமிப் [3] பதும வேந்தனைப் பாமடந்தை தன்
[2] திகழு [4] மங்கையாற் சென்னி தீண்டிநீ தேவிமாரொடுஞ் சிறந்து வாழ்வுறப்
புகழுஞ் செல்வமும்பெருக வையகம் பொலிக தீதெலாம் போகவெங்கணு
நிகழு மேன்மையோர் நிறைகநீடெனுநிமல வாணிதன் னிலைய மேவினள். (89)

| | |
|---|---|
| பகரும் எல்லையில் பதம் இறைஞ்சும் இப்பதும வேந்தனை = | மேற்கூறியபடி புராதன லீலை கூறியபோது பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரிக்கும் இந்தப் பத்ம ராஜாவை |
| திகழும் பாமடந்தைதம் அங் கையால் சென்னிதீண்டி நீ தேவிமாரொடும் சிறந்து புகழுஞ் செல்வமும் பெருக வையகம் பொலிக = | சிற்குணமாய் விளங்கும் வாகீசுவரி அழகியகரத்தால் சிரசில் பரிசித்து நீ தேவிமார்களோடும் கூடிச் சர்வ சிறப்பையுமுற்று வாழ்ந்து கொண்டிருப்பாயாக கீர்த்தியும்-ஐசுவரியமும் நிறைந்துபெருகுக நினது இராஜ்யம் அந்தணர் முதலியவராலும் ஆஇன முதலியவற்றாலும் விளங்கிக் கொண்டிருக்குக |
| தீதெலாம் போக எங்கணும் = | தீயவையனைத்தும் ஒழிக எவ்விடத்தும் |
| நிகழுமேன்மையோர் நிறைக நீடு என = | மைத்திரியாதிநிறைந்து விளங்கும் உயர்ந்தமகான்கள் பூரணமாகுக இங்ஙனம் வெகுகாலம் இராஜ்ய சம்பத்திலிருந்து விதேக முத்தியை அடைவாயாக வென்று திருவருள் செய்து விட்டு |
| நிமலவாணி தன்னிலய மேவினள் = | நின்மலமான ஞான சொரூப ஸ்ரீ வாக்தேவி தனது பரந்தாமத்திற்கு எழுந்தருளினள். |

வாழி வாணிநா மங்கை வாழிசொன் மாது வாழியென் றினிது வாழ்த்தியே
யாழி மன்னனுந் தேவி மார்களு மயுத மெட்டியாண் டரசு செய்தபின்
னேழி ரும்பவந் துடைத்து வாணிமுன் னியம்பு சீவன்முத்தியி லிருந்துபே
ருழி பேரினுஞ்சிறிது பேர்விலா வுடலிறந்த வீடொன்றி மேவினர். (90)

| | | |
|---|---|---|
| வாழிவாணி நாமங்கை வாழி சொல் மாதுவாழி என்று | = | ஸ்ரீ சரசுவதி தேவி வாழ்க ஸ்ரீ பிரமதேவர் நாவில் எழுந்தருளியிருக்கும் பரமேசுவரி வாழ்க கல்விக்கு அதி தெய்வமாகிய சொல்வளச் செல்வந்தரும் தேவியும் வாழ்க என்பதாக |
| இனிது வாழ்த்தியே | = | அன்புடன் மாதுரியமாகவாயார வாழ்த்தி |
| ஆழி மன்னனும் தேவிமார் களும் அயுதம் எட்டு ஆண்டு அரசு செய்தபின் | = | சக்கராயுதப்படை தரித்த இராஜஇராஜேசுவரனும் ஜீவன் முக்த மகாபுத்தியுடையவர்களாய்ப் பூர்வ விருத்தாந்தங்களைப் பேசுவதால் ரமித்துக் கொண்டிருந்தார்கள் அம்மன்னவன் ஸ்ரீ ஞானதேவியால் உபதேசித்ததால் உளதாய ஞானத்தால் தன்வடிவு உணர்ந்தவனாகி இரு லீலா தேவிமார்களோடு கூடி அயுதம் பதினாயிரம்=எண்பதினாயிரவருடம் வரையங்கு மிகுந்த புகழோடு கூட ஜீவன் முக்தர்கள் இவர்கள் என்று சொல்லும்படியாக இடரின்றி அரசு புரிந்து பின்னர் |
| ஏழிரும்பவம் துடைத்து | = | எழுவகைப் பிறவியினின்றும் நீங்கி |
| வாணி முன் இயம்பு சீவன் முக்தியிலிருந்து ஊழி பேரினுஞ் சிறிது பேர்வுஇலா உடலிறந்த வீடொன்றி மேவினர் | = | ஸ்ரீசரசுவதிதேவியால் பூர்வம்புகன்றருளிய ஜீவன் முக்திப் பதத்திலிருந்து மகாப் பிரளயம் மாறி மாறி வந்தபோதினும் அணுவுங்குறைவு நேராத விதேக முத்தித்தசையை அடைந்து பேரானந்த சொரூபமாகவேயிருந்தார்கள். |

லீலை (மண்டபக்] கதை முற்றிற்று.

ஆக விருத்தம் 323.



# கற்கடி (சூசி) கதை.

## அவதாரிகை.

ஞானவிண்மகன் கதை லீலை கதைகளினுல் விஸ்தாரமாகப் பிரதி பாதிக்கப்பட்ட அர்த்தத்தைச் சுகமாய்த் தெளிதற் பொருட்டு கற்கடி கதையைக் கூறத் தொடங்குகின்ருர்.

காட்சி யென்னுங் குற்றமறக் கதித்த லீலை கதையாலே
யாட்சி யான சகமென்னு மதிபாரத்தை யறவிடுவாய்
சூட்சி யான வுலகமெனுந் தோற்றமுடைத் தாய்ப் பேதமற
மாட்சி ஞான சுகவடிவாய் வயங்கும் பிரம மேயுளதே. (1)

| | |
|---|---|
| காட்சியென்னுங்குற்றமற = | திருசியமே சத்தியமாய்த் தோன்றுகின்றபடியினுலே அதன் மாசு நிவர்த்தியின்பொருட்டு |
| கதித்த லீலை கதையாலே = | முற்கூறிய லீலோ பாக்கியானத்தினுலே |
| ஆட்சியான சகமென்னும் அதி பாரத்தை அறவிடுவாய் = | உபேக்ஷிக்க உரித்தான ஜகத் சத்தியமென்னும் திட புத்தியை முற்றினும் விட்டுத்தொலைப்பாயாக |
| சூட்சியான உலகமெனுந் தோற்றமுடைத்தாய் பேத மறமாட்சி ஞான சுக வடிவாய் வயங்கும் பிரமமே யுளது = | பொய்யான உலகமென்கின்ற வெறுந் தோற்ற முண்டாதற்கு அதிஷ்டானமாய்ப் பேத வர்ஜ்ஜித மாய் யாவற்றையும் இலக்கும் மகிமை வாய்ந்த ஞானமயமாய் பேரானந்த வடிவமாய் விளங்கா நின்ற பிரஹ்மமாகிய தானே இருக்கின்றது மற்றொன்றுமே இல்லையாம். |

அதனுக் கிணையாய்ப் புகலரிதாய் அகன்று நிறைந்து ஆழ்ந் தமலமதாய்ச்
சதம தறிந்தோர் களுமியல்புசாற்றற் கரிதாய்ச் சாந்தமதாய்த்
திதமுற் றசையாக் கட லென்னத் தீபமென்னத் திகழ்கின்ற
முதன்மைப் பிரமத் தொளிதானே முடிவில்பர மாகிய சீவன். (2)

| | |
|---|---|
| அதனுக்கிணையாய் புகலரிதாய் அகன்று நிறைந்து ஆழ்ந்து அமலமதாய்சதமதறிந்தோர்களும் இயல்பு சாற்றற்கரிதாய்ச் | அந்தப்பிரஹ்மம் சமமாய் நிர்விசேஷமாதலின் வாக்குக்ககோசரமாய்ப் பரிச்சின்னமின்றிப் பரிபூரணமாய்க் கெம்பீரமாய் நிர்மலமாய் நித்தியமாய அந்தப்பிரஹ்மத்தை நன்ருயறிந்த ஞானிகளும் இதுவென இன்னதெனக்குறித்துக் |

சாந்தமதாய்திதமுற்று அசையாக் கடலென்ன தீபம் என்ன முதன்மைப் பிரமத்தொளி தானே முடிவில் பரமாகிய சீவன் = கூடிருணுததாய் நிர்விகாரமான பரமபதமாயிருக்கும் நிலையாய் திரமான அம்புதி போலும் (=வாயுவின் கலக்கமற்று) நிவாததீபம் போலும் விளங்கா நின்ற அநாதியாய்ப் பரப் பிரஹ்மத்தினது பிரகாசமே இயக்கஞ் சிறிதுயாதோ அதுவே அனந்தவுயர் வாகிய ஜீவனுவன்.

2 1 3
தனையுண் டாக்குநீள் விறகாற் சற்று நெருப்புத் தடிப் பதுபோல்
லினைய சீவன் கனவறிவா லியானென் றுணர்ந்து சங்கற்ப
நினைவி னுலே யகங்கரித்து நிறைந்த சீவன் காரணமாய்
வனையுஞ் சித்த மனம்பகுதி மாயையெனும்பேர் வகுத் துரைப்ப. (3)

சற்று நெருப்புதனையுண்டாக்கு நீள் விறகால்தடிப்பது போல = அற்பமான அக்கினியின் சூக்கும அங்கிசம் தன்னை விளைவிக்கும் (அதிகப்படுத்தும்) இந்தனத்தால் விருத்தியாதலே போல

இனைய சீவன் கனவறிவால் யான் என்று உணர்ந்து சங்கற்ப நினைவினுலே அகங்கரிக்கும் = பிரஹ்மஸ்புரண ஜீவன் திடமான பகிர் முகானு சந்தானத்தால் அகம் என்று அறிந்து சங்கற்போன் முகத்தன்மையால் அகங்காரமென்ருவன்;

நிறைந்த ஜீவன் காரணமாய் வனையும் = வியாபித்த ஜீவனைக் காரணமாய்க் கொண்டு (அகம்பாவ அத்தியாசமூலமாகக் கொண்டு) உதிக்கும் அதற்கே

சித்தம், மனம், பகுதி, மாயையெனும் பேர்வகுத்துரைப்ப = சித்தம், மனம், பகுதி, மாயை என்னும் நாமங்களால் விரித்துக் கூறுப.

1
இனத்தாற் படருக் மனம்பரம னேது வாயிப் படித் தோன்றும்
மனத்தால் விரிந்த சகமெல்லா மன்னவடிவே மற்றில்லை
கனத்தாற் கரைதீர் பல்வறிவாங் கல்லோ லச்சிற் கடல் பொங்குந்
3 2 3
தினத்தா னீண்ட கனவொப்பச் சித்த வசத்தாற் சகந்திரமாம். (4)

இனத்தால் படரு மனம் பரமனே துவாய் இப்படித் தோன்றும் = திருசிய சங்காத வாசனையினுல் விரிந்து செல்லா நின்ற மனம் பரமகாரணமாகிய பிரஹ்மத்தினின்றும் இங்ஙனங் கூறிய முறையால் முதலில் உண்டாம்,

| | | |
|---|---|---|
| மனத்தால் விரிந்த சக மெல்லாம் மனனவடிவே மற்றில்லை | = | மனசங்கற்பத்தால் விஸ்தரித்த பிரபஞ்சமனைத்தும் நினைவு வடிவமேயாமன்றிவேறில்லை |
| கனத்தாற் கரைதீர் பல வறி வாங்கல்லோலச்சிற் கடல் பொங்கும் | = | திடத்தால் எல்லையற்ற பல விருத்திகளாகிற அலை களோடு கூடிய சின்மயமாக விளங்குஞ் சமுத்திர மானது ஜகத்துருவமாய்ப் பொங்கும், |
| நீண்ட தினத்தால் கனவு ஒப்ப சகம் சித்தவசத்தால் திரமாம் | = | அனேக நாட்களை உள்ளடக்கித் தோன்றும் சொப்பன சமானமாய் நாமரூபான்மகப் பிரபஞ்சம் மன ஆதிக்ய வசத்தால்சத்தியம்போலத்தோன்றும். |

தெரியாத் தறியிற் கள்வனெனத் தெளியா மையினு லுலகுண்டா
மரியாப் பிரமத் தொடுசீவன் மறந்தும் பேத மிலாதது போற்
பிரியாச் சீவ சித்தங்கள் பேத மில்லை யிதுபோலத்
தரியாச் சித்தஞ் சகங்களுக்குச் சற்றும் பேத முளதாகா. (5)

| | | |
|---|---|---|
| தெரியாத் தறியிற் கள்வன் எனத் தெளியாமையினுல் உலகு உண்டாம் | = | உள்ளவாறு அறியப்படாத கட்டையில் சோரனது உணர்வு எழுதல் போலத் தனது சொரூபத்தை ஆராய்ந்து பாராமையினுல் ஜகத்தானது சத்திய மாய்த் தோன்றுவதாம், |
| மரியாப் பிரமத்தொடு ஜீவன் மறந்தும் பேதமிலாதது போல் | = | ஜனன மரணரகித பிரஹ்மத்துடன் ஜீவனுக்கு (கூடஸ்தருக்கு அயர்ந்தும் வேற்றுமையில்லாதது போல, |
| பிரியாச்சீவ சித்தங்கள்பேதம் இல்லை | = | பிரஹ்மத்தை விட்டு வேருகாத ஜீவ மனங்களாகிய காரண காரியங்கட்குப் பேதமிலதாம், |
| இதுபோல தரியாச்சித்தம் சகங்ளுக்குச் சற்றும் பேதம் உளதாகா | = | இஃது ஒப்பவே நிலையில்லாச் சித்தம் பிரபஞ்சத் திற்கு ஒரு சிறிதும் வேற்றுமை உண்டாகமாட்டா தாம். |

1 3 2 4
இதுகா ரணமா மொருகதைபண் டிகலா ரரக்கி யியம்பியது
முதுவாம் வினுவா லறிபொருள்கண் முழுதுந்தெளியத் தெளிவிப்ப
ததுநீ கேட்பா யிமவானுக் கயலுத்தரபா லமர்கிற்பாள்
8 5 7 6
விதுவா மெயிற்றுக் கற்கடிப்பேர் பேழ்வா யரக்கி மின்கண்ணுள். (6)

| | | |
|---|---|---|
| இது காரணமாம் ஒரு பண்டு கதை இகலார் அரக்கி இயம்பியது | = | இயம்பியவிடயம் நன்குணருமாறு ஒப்பற்றபுராதன இதிகாசம் உதாகரிப்பர்வல்லமையுடைய இராக்ஷசி கூறியது |

| | |
|---|---|
| முதுவாம்வினவால் அறி பொருள்கள் முழுதும் தெளியத் தெளிவிப்பது அது = | ஆழ்ந்த கருத்துடைய பிரசினத்தால் தெரிய வேண்டிய வஸ்துக்கள் யாவற்றையும் நன்ருகத் தெரிந்து கொள்ளுமாறு தெளிவிக்கச் செய்வது அக் கதையை |
| நீ கேட்பாய் = | ஹே இராகவ நீ சிரவணஞ்செய்தி |
| இம்வானுக்கு அயல் உத்தர பால் அமர்கிற்பாள் = | இமாசல பர்வதத்திற்குச் சமீபித்த வடக்கின் சார்பில் இருப்பவள் |
| விதுவாம் எயிற்று பேழ்வாய் = | மூன்ரும் பிறை போன்ற வக்கிரதந்தங்களையும் அகன்று பெருத்தவாயையும் |
| மின்கண்ணுள் அரக்கி கற் கடிப்பேர் = | மின்னலுக் கொப்பான நேத்திரங்களையுமுடைய இராக்ஷசியாகிய கற்கடியென நாம முடையவள் ஆவள். |

1 3 2 4
கருமே ருவைப்பெண் வடிவாகக் கைகால் வகுத்ததெனத் திரிவா
6 5 7
ளுருமே றனைய சிறுநகையா ளோடா மீன்போ லுழல்கண்ணுள்
பெருமே னியைத்தாங் கிருகுறங்கும் பேரீச்சென்னப் பெரிதுடையாள்
வருமே கத்தைப் பிளக்குநகம் வயிடு ரியத்தின் சுளகொப்பாள். (7)

| | |
|---|---|
| கருமே ருவை கைகால் வகுத்ததெனப்பெண் வடிவாகத் திரிவாள் = | கரிய மேருகிரியைக்கரம்பாதங்களாகப் பிரித்திருப்ப தொப்ப மங்கை வடிவமாகச் சுற்றிக் கொண்டிருப் பாள் |
| ஏறு உரு அனைய சிறு நகையாள் ஓடா மீன்போல் உழல் கண்ணுள் பெரு மேனியைத் தாங்கு இரு குறங்கு = | பேரிடியைப் போன்று புன்சிரிப்பையுடையவள் ஸ்திரமற்ற மின்னலைப்போலும் உழலும் நேத்திர முடையவள் அதிதூல சரீரத்தைத்தாங்கும் இரண்டு பெருந்தொடைகள் |
| பேரீச்சென்னப் பெரிதுடையாள் வருமேகத்தைப் பிளக்கும் நகம் வைடூரியத்தின் சுளகு ஒப்பாள் = | பெருங்கர்ஜூர விருக்ஷத்துக்குச் சமானமாகப் பெரிதாகவுடையவள் நீர் கவர்ந்து வரும் மேகங் களைப் பிளக்கும் நகங்களையுடையவள் வயிடூரியத் தினுல் செய்யப்பட்ட முறத்துக்குச் சமானமானவள். |

பாழிப் புவிமே லுயிரையெலாம் பகலுமிரவுஞ் சொரிந்திடவு
மூழிக் கனல்போ லவியாத வுதரக்கனலா லுள்ளழிந்து
காழிக் கிளர்நா வலன்றீவிற் காணப்படுமன் னுயிரெல்லா
6 5 7
மாழிக் கிடைவீழ் நதித்திரள்போ லருந்திற் சிறிதா றுயிர்நிற்கும். (8)

பாழிப்புவிமேல் உயிரை யெலாம் = கடல் சூழ்ந்த இந்த உலகத்தின்கண்ணுள்ள ஜீவர்களுடைய சரீரங்களையெல்லாம்
பகலும் இரவுஞ் சொரிந்திடவும் = தினமும் ராத்திரியும் வாரி வாரிக் கொட்டிக் கொண்டேயிருந்தபோதினும்
ஊழிக்கனல் போல்அவியாத = பிரளயகால அக்கினிபோலச் சாந்தமாகாத
உதரக்கனலால் உள்ளழிந்து = ஜாடராக்கினியினால் அலைத்து துயர்தந்தது
காழிக்கிளர் நாவலன் தீவில் = சீர்காழி முதலிய ஊர்கள் நிறைந்த ஜம்புத் தீவில்
காணப்படும் மன்னுயிரெல்லாம் ஆழிக்கிடை வீழ் நதித்திரள்போல் அருந்தில் = பார்க்கப்பட்ட சரீரங்களையெல்லாம் கடலினுள்ளே விழும் நதிக்கூட்டங்கட்கு ஒப்பாகப் புஜிக்கில்,
ஆர் உயிர் சிறிது நிற்கும் = பொருந்திய பிராண சம்பந்த பசி அற்பம் தணியும்.

மழையா லவியுங் கானலென வயிற்றிலெரியுஞ் சிறிதவியும்
பிழையா திதனைத் தவம்புரிந்து பிரமனருளாற் பெறுது மென
முழையா ரிமயகிரிமேவி மூழ்கி யொருகா லுற நின்று
புழையார் விழியா னடுவானிற் பொலியுங்கதிரை யெதிர் நோக்கி. (9)

மழையால் அவியுங் கானலென = மழை விருஷ்டியினால் சாந்தமாகும் வெப்பத்தைப் போன்று
வயிற்றிலெரியும் சிறிது அவியும் = யாவற்றையும் விழுங்குவேனாயின் உதராக்கினியும் அற்பந்தணியும்
இதனைப் பிழையாது தவம் புரிந்து பிரமன் அருளால் பெறுதும் என = இப்பசியினை, தவறாமல் பெருந்தவஞ் செய்து நான்முகரது திருவருளால் பெற்றுக்கொள்வேன் என்று இச்சித்து
முழையார் இமயகிரிமேவி மூழ்கி ஒருகால் உறநின்று = குகைகள் நிறைந்த இமாசலத்தை அடைந்து தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து ஒரு காலையூன்றி நின்று
புழையார் விழியால் = பொந்து போன்ற நேத்திரங்களால்
நடுவானிற் பொலியுங்கதிரை = ஆகாயமத்தியில் பிரகாசியா நின்ற சூரிய சந்திரர்களை
எதிர்நோக்கி = எதிராகப்பார்த்து.

வருந்தி நின்று வுயர்தவத்தில் வருடமோரா யிரஞ்செலுத்தத்
திருந்து கமலத்தயன் வந்தான் றீயோரெனினு மருந்தவத்தாற்
பொருந்து ருதபொரு ளுண்டோ புண்டரீகன் போதவுமுன்
னிருந்த படியே யிருந்தரக்கி யிதயத் திறைஞ்சி இது நினைந்தாள். (10)

வருந்தி நின்று உயிர் தவத்தில் வருடம் ஓராயிரஞ் செலுத்த = சித்தக் கிலேசமுற்று மேலான தவத்தினாலே ஆயிர வருடங்கழிப்ப அழகான தாமரை ஆசனத்தில் வீற்றிருக்கும் பிரம்மா பிரசன்னமாயினர்

தீயோர் எனினும் அருந் தவத்தால் பொருந்துருத பொருளுண்டோ = மகாபாதகரேயென்னினும் அரிய தபசினாலே கிடைக்கத்தகாதவஸ்துவும் உளது கொல்

புண்டரீகன் போதவும் = தாமரையாசனத்தனான ஸ்ரீ பிரம்மா எழுந்தருளி வந்து தரிசனமளித்தலும்

முன் இருந்தபடியே இருந்து அரக்கி இதயத்திறைஞ்சி இது நினைந்தாள் = பூர்வம் இருந்த தவநிலையிலேயே ஸ்திதி பெற்று கற்கடி மனத்தினாலேயே இதனைச் சிந்தித்தனள்.

1 3 4
தாவு முதரக் கனறைணியச் சற்ரு மிரும்பாற் சமைந்த வொரு
சீவ வூசி வடிவானுற் சகத்தோ ருடலங் களிற்புகுந்து
மேவு மிரைகள் வேண்டியது விழுங்க லாமென் றுணர்வாளை
7 5 8
யாவ தெண்ண முனக்கென்ன விசைத்த வயனுக் கிவளிசைப்பாள். (11)

தாவும் உதரக்கனல் தணிய = மேன்மேலும் எரியா நின்ற ஜாடராக்கினி சாந்தமாக

இரும்பால் சமைந்த சற்றும் = அயத்தால் செய்யப்பட்ட அற்ப (சூக்ஷ்ம)

ஒரு சீவ ஊசி வடிவானல் = ஒரு சீவ ஊசி வடிவமாக ஆயின்

சகத்தோர் உடலங்களிற் புகுந்து மேவும் இரைகள் வேண்டியது விழுங்கலாம் என்று உணர்வாளை = உலகின் கண்ணுள்ளவர்களுடைய தேகங்களிற் பிரவேசித்து திருப்தியடையும் பரியந்தம் ஆகாரங்கள் வேண்டிய அளவு உட்கொள்ளலாம் எனச் சிந்திப்பவளை

உனக்கு எண்ணம்யாவது என்ன இசைத்த அயனுக்கு = உனது நினைவு யாது எதை உத்தேசித்து இத்தவம் புரிந்தாய் கூறுதியென்று கேட்டருளிய பிரமதேவருக்கு

இவள் இசைப்பாள் = கற்கடி கூறுகின்றாள்.

1
துதிப்பார் துணையே நான்சீவ சூசி யாக வேண்டுமென
விதிப்பான் விகார பூருவமாம் விடுசி யாக மெய்க்கொண்டு
5 2
குதிப்பாய் துர்ச்சேட் டையர்மூர்க்கர் கொடியோர் கொடிய தலத்துறைவோர்
4 3
கதிப்பால் விரும்பா வுணவுண்போர் கருத்திற் சுவாசத் துடன்கலந்து. (12)

1
துதிப்பார் துணையே நான் சீவ சூசியாகவேண்டும் என = துதிக்கப்படுபவர்களது சம்சார சாகரத்துக்குத் தெப்பம் போன்றவரே அடியாள் சீவ சூசியாக வேண்டுகின்றேன் என்ன

விதிப்பான் = யாவரையுஞ் சிருஷ்டிக்கும் ஸ்ரீ பிரமதேவர் அருளுகின்றார்

2
துர்ச்சேட்டையர் மூர்க்கர் கொடிய தலத்துறைவோர் கதிப்பால் விரும்பா உணவு உண்போர் சுவாசத்துடன் கலந்து கருத்தில் குதிப்பாய் விபசாரமுடையவர் மூடர், துட்டர் துர்த்தேசவாசியர் சன்மார்க்கத்தையனுஷ்டிக்கும் ஆன்றோரால் விரும்பாத நிஷேதிக்கப்பட்ட ஆகாரத்தைத் தின்பவர் இவர்களது பிராணனுடன் கலந்த இருதயத்தில் பிரவேசித்து உண்ணுதி.

நல்லா ரிடத்தி னீயெய்தி ரூமே விதித்த மந்திரத்தாற்
கொல்லா தொழிவாய் தீயோரைக் கொன்று தின்பா யெனமலரோன்
சொல்லா முன்ன மலைபோல்வாள் சூசியுருவாஞ் சீவனுமாய்ப்
பொல்லா தவரஞ் சினத்தடித்தோர் பொன்றும்படியுள்
ளுறப்புகுந்தாள். (13)

நல்லாரிடத்தில் நீ எய்தில் நாமே விதித்த மந்திரத்தால் கொல்லாதொழிவாய் = நல்ல குணவான்களிடத்தில் நீ அடைவாயேயானல் ஓம் ஹ்ரீம் ஹருராம், விஷ்ணு சக்தியை நம;- ஓம்ஹர ஹர நயநய பஸ பஸ மத மத உற்சாத்ய தூரே யென்று நாம் விதிக்கப்பட்ட மந்திரத்தால் அவர்களது உயிர் வாங்கா தொழிவாய்

தீயோரைக்கொன்று தின்பாய் = கொடியோர்தமைக்கொன்று பக்ஷிப்பாய்

என, மலரோன் சொல்லா முன்னம் = என்று பிரமதேவர் கூற (தாமரை ஆசனத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீ பிரம்மாவானவர் திருவாய் மலர்ந்தருளியவுடனே)

மலைபோல்வாள் = பர்வதம் போன்ற ஆகிருதியுடையகற்கடி

சூசியுருவாஞ் சீவனுமாய் = ஊசி வடிவமாம் உயிராகித்

பொல்லாதவர் அஞ்சினத் தடித்தோர் பொன்றும்படி உள்ளுறப்புகுந்தாள் = தீயோர்கள், பயப்பட்டவர்களை வதைத்தோர் இத்தகையர் அழியுமாறு மிகுந்த கோபத்தினல் தேகங்களுள்ளே பிரவேசித்தனள்.

வாயு[2] வடிவா யுட்புகுந்து மண்ணில்[1] விண்ணிற்[3] பல்லுயிர்க[5]
ளாயு வெல்லா[4] மிருவடிவா மனேககால[6] மருந்தியபின்
ஞேயு மனத்தா ளர்யவமே யுழன்று வருந்தி யூசியுமாய்த்
தேயும் படியே[9] கெடுத்த[8]தெமை[10] சீ[7]சியாசை[11] யெனத்திகைத்தாள். (14)

| | | |
|---|---|---|
| மண்ணில் வாயுவடிவமாய் உட்புகுந்து விண்ணில் இரு வடிவாய் பல்லுயிர்கள் ஆயு வெல்லாம் அனேக காலம் அருந்தியபின் ஆயு மனத் தாளாய் | = | இப்பூமியில் வாதசூசியுருவமாயும் ஆகாயத்தில் பெரிய ஆகிருதியாய இராக்ஷசி வடிவமாயும் இரண்டு சரீரங்களுடன் அனேக ஜீவர்களின் பிராணன்களையெல்லால் வெகுதினம் புஜித்த பின்னர் ஆசை ஒய்ந்த வைராக்கிய சித்தத்தை யுடையவளாய் |
| அவமே உழன்று வருந்தி | = | வீணாகவே அலைந்து துயருற்று |
| ஊசியுமாய் தேயும்படியே | = | அற்ப ஊசியாகி அறவும் சிறுகும்படி |
| ஆசை எமை கெடுத்தது | = | இச்சை என்னைக் கெடுத்துவிட்டது |
| எனத்திகைத்தாள் | = | என்று தன்னை நிந்தித்துக்கொண்டு வாடினாள். |

1
தீயம னத்தொடு யாமவமே சீவன ருந்தினமா
லேயது விட்டன மென்றிம வானிடை யெய்தரி தானதவ
மேயின ளொன்றுநி னைப்பிலள் சஞ்சலம்விட் டுணவற் றொருமித்
2
தாயிர மாவரு டங்கள் செலுத்தலு மற்றது வல்வினையே. (15)

| | | |
|---|---|---|
| தீய மனத்தொடு யாம் அவமே பல சீவனருந்தினம் | = | இரக்கமின்றிய கெட்ட மனத்துடன் யாம் பிரயோஜனமில்லாமல் அளவற்ற பிராணிகளைக் கொன்று தின்றோம். |
| ஏயது விட்டனம் | = | நம்மால் பொருந்திய இழி தொழிலை விட்டுத் தொலைப்பேம் என சங்கற்பித்துக்கொண்டு |
| இமவானிடை எய்தரிதான அங்கு ஏகினள் | = | இமாசல பர்வதத்தில் அடைதற்கரிதான பெருந்த பசை செய்யத் தொடங்கினள் |
| ஒன்றும் நினைப்பிலள்சஞ்சலம் விட்டு உலாவு அற்று ஒருமித்து ஆயிர வருடங்கள் செலுத்தலும் | = | சங்கற்பமற்றவளாய் (நிஸ்தரங்க மனோமயத்தின ளாய்) நிராகாரமுடையவளாய் ஏகாக்கிரமுடைய வளாய் சகஸ்ரமகா சம்வற்சரங்கள் தவம் புரிதலும் |
| வல்வினை அற்றது | = | பெரும்பாவங்கள் இக்கணமே கழிந்தன. |

பாவம கன்றுமனந் தெளியப் பாவனை தன் வயமே
மேவலு மிவ்வுலகத் தையிகழ்ந்து விருப்புவெறுப் பிலளாய்
மாவரு டங்களொ ராயிர நின்றபின் மன்னு ணர்வுற்றதெனுக்
3 2
கேவலம் வந்திவ ளுக்கொரு வாய்மைகிளத்தி னன் மாமலரோன். (16)

1

| | | |
|---|---|---|
| பாவம் அகன்றுமனந்தெளிய | = | தீவினையினாலாய பாவங்களெல்லாங் கழிந்துபோய் சித்தம் பரம பாவனமடைய |
| பரமபாவனை தன்வயமே மேவலும் | = | பிரஹ்ம சாக்ஷாத்காரம் சுயமாகவே உண்டாதலும் |
| இவ்வுலகத்தையிகழ்ந்து விருப்புவெறுப்பு இலளாய் | = | இந்த உலகத்துள்ள திருசியங்களை அநித்தியமென உபேக்ஷித்து இராகத்து வேடமற்றவளாய் |
| மாவருடங்கள் ஓராயிரம் நின்ற பின் | = | பெரிய தவத்தின்கண் ஓராயிர வருடங்கழித்த பின்னர் |
| மன்னுணர்வு உற்றது எனு | = | பிரஹ்மசாக்ஷாத்காரம் அடைந்தாள் என |
| மாமலரோன் கேவலம் வந்து இவளுக்கொரு வாய்மை கிளத்தினன் | = | மாட்சிமைபொருந்திய பத்மாதனத்தராகியபிரம்மர் தனியே விரும்பி வந்து இந்தக் கற்கடிக்கு ஒப்பற்ற உண்மையை திருவாய் மலர்ந்தருளினர். |

சீவனின் முத்தியடைந்தனை சிந்தைதெளிந்தனை தொல் வடிவாய்ப்
பூவலயத் தறிவில்லவர் தீயவர் பூரியர் மெய்யிறையா
யாவிவளர்த் துறைகென்றய னேகலு மத்துவிதப் பரமே
பாவனையுற் றொருசெய்தொ ழிலற்ற பதத்தி லிருந்தனள். (17)

| | | |
|---|---|---|
| சீவனின் முத்தியடைந்தனை | = | ஹேவற்சையே நீ ஜீவன் முக்தையாக விளங்குகின்றனை |
| சிந்தை தெளிந்தனை | = | மனம் இருள் அற்று தூய்தாயினை |
| தொல்வடிவாய் | = | பழைய பேராகுருதி வடிவமாய் |
| பூவலயத்து அறிவில்லவர் | = | பூவுலகின் பால் சொரூப ஞானமின்றியவர் |
| தீயவர், பூரியர், மெய், இரையாய் ஆவி வளர்த்து உறைக என்று அயன் உரைத்து யேகலும் | = | துர்ச்செயலையுடையவர் ஆசாரமின்றியவர் இவர் தம் தேகங்களை பக்ஷணமாகக்கொண்டு உயிர் ஓம்பி வாழுதி என்று கூறி பிரம்மா செல்லுதலும் |
| அத்துவிதப்பரமே பாவனையுற்று | = | பேதவாஜ்ஜிதசச்சிதானந்த சிவத்தையே தியானஞ் செய்துகொண்டு |
| ஒரு செய்தொழிலற்ற பதத்தில் | = | நிஷ்கிரியமாகிய பிரஹ்ம பதத்தில் |
| இருந்தனள் | = | வீற்றிருந்தனள், |

2 2 3
விகற்பமி றந்தச மாதிநெடும்பகன் மேவினண் மீளவிடா
வுகப்பொடு நெஞ்சொடு கூடினடொல் பசியுன்னின ணானெனுமா
றிகத்துள மட்டுமுடற் குளதானவி யற்கைவிடா ததனாற்
சகத்தில ரக்கர்கு லத்தொழி லானதசைப்பலி கொள்வனெனா. (18)

| | | |
|---|---|---|
| நெடும்பகல் | = | நீண்ட காலம் |
| விகற்ப மிறைந்த சபாதி மேவினள் | = | நிருவிகற்ப சமாதியினை அடைந்த விசிராந்தியை அடைந்திருந்தனள் பின்னர் சமாதி |
| மீளவிடா உகப்பொடு கூடினள் | = | யுத்திதளாய் சந்தோஷ மனத்தோடு கூடினள் |
| தொல்பசியுன்னினள் | = | பழைய பசியை எண்ணினள் |
| நான் எனுமாறு இகத்துள மட்டும் உடற்குளதான இயற்கை விடாது அதனால் சகத்தில் அரக்கர் குலத் தொழிலான தசைப்பலி கொள்வன் எனா | = | அகம் என்னும் அபிமானத்துடன் இவவுலகில் பகிர் முகத்துடன் வாழும் வரை தேகத்திற்குண்டான சுபாவம் விட்டு நீங்காது அக்காரணத்தினால் இவ் வுலகத்தில் இராக்ஷஸர் பழக்கத் தொழிலான மாம்ச பக்ஷணம் கொள்வேன் என்றுசிந்தித்து. |

அயனுரை செய்தது மப்படி யாதலி லந்தவுரைப்படியே
கயவருடற் பலிகொள் ளுவனென்றுக ளித்திம வானயல்போய்
வயமிகு வேடுவர் மண்டலமேவி வனத்தி லுறைந்திடுநா
ணயமுறு மந்திரி தன்னொடு மங்கொரு நரபதி நண்ணி னனால். (19)

| | | |
|---|---|---|
| அயன் உரை செய்ததும் அப்படி ஆதலின் | = | ஸ்ரீ பிரமதேவர் திருவருள் செய்ததும் நாம் எண்ணிய அவ்வண்ணமே யாகலின் |
| அந்த உரைப்படியே | = | அவ்வசனம் போலவே |
| கயவர் உடல்பலி கொள்ளுவன் என்று களித்து | = | தீயோர்தம் தேக பக்ஷணம் செய்து கொள்ளுவேனென்று மகிழ்ந்து |
| இமவான் அயல்போய் | = | இமாசலத்தினின்றுந் இறங்கிப் தாழ்வரையிலுள்ள மேல் பாகத்தை அடைந்து |
| வயமிடுவேடுவர்மண்டலமேவி | = | (வெற்றி) மிகுந்த கிராத மண்டலத்தில் புகுந்து (தேசத்தில் நுழைந்து) |
| வனத்தில் உறைந்திடும் நாள் | = | அங்குள்ள காட்டில் வாசஞ் செய்து கொண்டிருந்த போது |
| நயமுறு மந்திரி தன்னொடும் அங்கு ஒரு நரபதி நண்ணினன் | = | அரசனுக்கும் பிரஜைகளுக்கும் நன்மையே செய்யும் மந்திரியோடுங்கூட அவ்வனத்தில் ஒரு அரசன் வந்தனன். |

முச்சுடர் வந்துறி னுங்கரு கத்தகு முற்றிருண் மூடிரவூ
டச்சமு றுரவர் சோதனை செய்தலு மங்கவள் கண்டளவே
பச்சிரை யாமிவர் மெய்யறி வில்லவர் பாமர ராகியுளா
ரிச்சக மேலுயிர் வாழி லிகம்பர மெங்கு மிடும்பையெனு. (20)

| | | |
|---|---|---|
| முச்சுடர் வந்துறினும் கருகத் தகும் முற்று இருள் மூடு இரவூடு | = | சோமசூரியாக்கினி ஏககாலத்தில் வந்தடைந்த போதினும் பிரகாசங்குன்றி கருகத்தக்க நிறைந்த அந்தகாரம் வியாபித்த பேரிரவில், |
| அச்சமுறுர் அவர் சோதனை செய்தலும் அங்கு அவள் கண்டளவே | = | சிறிதும் பயமற்ற அவர் பரிசோதனை செய்து கொண்டு வருதலும் அவ்விடத்தில் அக்கற்கடி கண்டதும் |
| பச்சிரையாமிவர் | = | ரசம் பொருந்திய உணவு ஆவர் இவர்; |
| மெய்யறிவில்லவர் | = | உண்மை உணர்வு அற்றவர் இவர், |
| பாமரராகியுளார் | = | மூடராகியிருக்கின்றுர் இவர்; |
| இச்சகமேல் உயிர்வாழில் | = | இவ்வுலகத்தில் ஜீவிதத்தோடு கூடியிருப்பாரே யாகில், |
| இகம்பரமெங்கும் இடும்பை யெனு | = | இம்மை, மறுமை, முழுதுமே துயர் மயமாகு மென்று. |

மீளவு நின்றுணர் வானயன் முன்னம் விதித்தது மிப்படியே
கோளற வந்தப யன்கவ ராதவர் கொச்சை மனத்தினரே
நீளநி னைந்துணர் புந்தியுநற் குண நீர்மையு மெய்தியுளார்
மாளவ தஞ்செய் நெஞ்செழுமோ விவர் வன்றுயர் மேவுவரோ. (21)

| | | |
|---|---|---|
| மீளவும் நின்றுணர்வாள் அயன் முன்னம் விதித்ததும் இப்படியே | = | மீண்டும் ஆழ்ந்து நின்று சிந்திக்கின்ருள் பிரம்மா வானவர் பூர்வம் விதானஞ் செய்ததும் இவ் வண்ணமேயாம். |
| கோளறவந்த பயன் கவரா தவர் கொச்சை மனத்தினரே | = | குற்றமின்றி தானே வந்த பொருளை அடையாதவர் தாழ்ந்த மனத்தவரேயாவர் |
| நீள நினைந்துணர்புந்தியும் | = | ஆழ்ந்து ஆலோசித்து உணரும் மதியும் |
| நற்குண நீர்மையும் எய்தி யுளார் மாளவதஞ் செய் நெஞ்சு எழுமோ இவர்வன் துயர் மேவுவரோ | = | நற்குணத்தன்மையும் அடைந்திருப்பார்களாயின் உயிர் துறக்குமாறு கொல்வதற்கு மனம் உண்டாகுமோ இவர் மிகத் துன்பத்தை அடைவரோ அடையார், |

2 1 0 3 5

வஞ்சமினீள் புகழ்வாணுள் வகுப்பரிய சுகமமர்ந்தோர் வணங்க லாவர்
ரெஞ்சலிலா வாவியினு மினியவராதலினவருக் கிடரே வந்தா
லஞ்சலென வுயிர்கொடுத்து வளித்திடவேண் டினராவ ரன் பாேனோர்க்குத்

4

தஞ்சமுறக் காலனையு முறவாக்குந் தன்மையினர் தக்க சான்றோர். (22)

| | | |
|---|---|---|
| நீள் புகழ் (நீள்) வாணுள் | = | விசாலமான கீர்த்தியும் நீண்ட ஆயுளும் |
| வஞ்சம் இல் | = | ஏற்றத்தாழ்வாய் வஞ்சிக்கப்படாத்தன்மையும் |
| வகுப்பரிய சுகம்அமர்ந்தோர் | = | அளவற்ற ஆனந்தத்தையும் அடைய வேண்டுமென்று எவர்கள் இச்சித்தாரோ அவர்களால், |
| தக்க சான்ரேர் வணங்க லாவார் | = | பூஜிக்கத் தக்க குணவான்களால் பெரியோராவர் வழிபட்டு நமஸ்கரிக்கத் தக்கவராவார் |
| எஞ்சலிலா ஆவியினும் இனியவர் ஆதலின் | = | நேயம் குறைவுபடாத பிராணனினும் பிரியமுடையவரேயாவர். உலகத்திலுள்ளவருக்குச் சுகத்தையே செய்பவர் ஆகலின் |
| அவருக்கு இடரே வந்தாள் | = | அவருக்கு ஏதாவது துயரம் நேரிட்டால் |
| அஞ்சலென உயிர்கொடுத்து | = | பயப்படாதீர்களென்று பிராணனை |
| அளித்திடவேண்டினராவர் | = | தானஞ் செய்து பரிபாலிக்கவேண்டும் தகுதியுடையவராவர் |
| அன்பாேனோர்க்கு | = | குணவான்களின் சங்கமென்னும் ஔடதத்தையடைந்தவருக்கு |
| தஞ்சமுறக் காலனையும் | = | அடைக்கலம் அடையும்படியாக எமனையும் |
| உறவாக்குந்தன்மையினர் | = | நேசஞ்செய்விக்கும் பெருமை வாய்ந்தவர் ஆவர். |

அரக்கியெனு மியாமுதலா யுயர்ந்தோரை யாதரிக்கு மன்பு கண்டா
லிரக்கமுறப் பொன்போல யாவரே விரும்பாதா ரிகலோ கத்திற்
புரக்கவரு நிறைமதிபோற் புணர்ந்தோரைக் குளிர்விப்பர் புணராதோரே
பரக்கழியா விறந்தோராம் புணர்ந்தோரே முத்திமுதற் பயன்பெற்
றோரே. (23)

| | | |
|---|---|---|
| அரக்கியெனும் யாம் முதலாம் | = | இராக்ஷசியாயிருக்கும் எம்மனோர்கள் |
| உயர்ந்தோரை ஆதரிக்கும் அன்பு கண்டால் இரக்கமுற பொன்போலயாவரே விரும்பாதார் | = | குணசாலிகளைக் காப்பாற்றும் நேயத்தை உற்று நோக்கின் கருணையோடும் சொர்னஹாரம் போல யாவர் தாம் மனததின்கண் அன்புறுர்? |

இகலோகத்தில் புரக்கவரு நிறைமதிபோல் புணர்ந்தோரைக் குளிர்விப்பர் = இவ்வுலகில் இரக்ஷிக்கவாரா நின்ற பூரணசந்திரன் போலச்சேர்ந்தோரைச் சீதளப்படுத்துவர்

புணராதோரேபரக்கழியாம் இறந்தோராம் = பிரஹ்ம ரூபமாய் தம்மை குணசாலிகளை திரஸ்கரித்தவரே பிரஹ்மத்தையிழந்து மரணமுற்றவராவர்

புணர்ந்தோரே = குணவான்களை இனிதாக அடைந்தவரே

முத்தி முதல் பயன் பெற்றோர் = சுவர்க்க அபவர்க்காதி பலம் அடைந்தோராவர்.

1
ஆதலினு லிவர்தம்மை யறிஞரோ வறிவிலரோ யார்கொலென்னச்
சோதனையாம் வினுவுரைகள் சொல்வோமென் றுருமேறுந் துணுக்கென் றஞ்ச
2 1
மீதுறநின் றுற்பரித்து வெவ்விடிக்குப் பின்னுலி வீழ்க்குங் கார்போ
லோதரிய கொடியவன விசும்புக்கு மதியிரவி யொப்பீ ரென்னு. (24)

ஆதலினுல் = குணவான்களின் திரஸ்காரமே மரணமாம் குணவான்களைச் சேர்தலே ஜீவிதமாம் ஆதலால்

இவர் தம்மை அறிஞரோ அறிவிலரோ யார் கொல் = இவ்விருவரையும் விவேகியரோ அவிவேகியரோ யாவர்தாம் இவர்

என்ன சோதனையாம் வினுவுரைகள் சொல்வோமென்று = என்ன பரீக்ஷைசெய்யும்படியான வினுமொழியால் வினவுவோமென்று

உருமேறுந்துணுக்கென்றஞ்ச வெவ்விடிக்குப்பின் = பேரிடியும் திடுக்கென்று பயப்படும்படியாகப் பேரிடிக்குப்பின்

ஆலி வீழ்க்குங் கார்போல் = மழை = ஆலாங்கட்டியாயே கரகத்தை வீழ்த்துங் கார்மேகம் போல,

ஓதரிய கொடியவன விசும்புக்குமதி இரவியொப்பீரென்னு = சொல்லுதற்கு முடியாத கொடிய காடாம் ஆகாயத்துக்கு விளக்குவதாய் சந்திரன் சூரியன் போன்றவர்களே என்று

மீதுற நின்று ஆற்பரித்து = வீராவேச சப்தத்தோடு கூடி நின்று காஜ்ஜித்து,

மீட்டுரைப்பாள் மாயையெனும் வெவ்விருட்பா றையின்கீழே மிளிர்ந்து மாயு
மீட்டமுறு புழுப்போல்வீ ரெனக்கிரையா யிக்கணத்தே யிறக்க வந்தீர்
சேட்டமுளார் போலிருந்தீர் தீயவர்போன்றீ ரெவர்நீர் செப்பு மென்னக்
கேட்டளவே கொலையரக்கி கேளென்னத் திறல்வேந்தன் கிளத்த
லுற்றுன். (25)

மீட்டு உரைப்பாள் மாயையெனும் வெவ்விருள் பாறையின் கீழே மிளிர்ந்து மாயும் = மீண்டும் கூறுவாள் மகாமாயை யென்னும் பேரிரு

| | | |
|---|---|---|
| ஈட்டமுறு புழுப்போல்வீர் | | ஈடர்ந்த மலைப்பாறையின் பொந்தில் தோன்றி |
| எனக்கு இரையாய் இக் | | யொடுங்கும் கூட்டமான கீடமொப்பீர்என்றனக்குப் |
| கணத்தே இறக்க வந்தீர் | = | பக்ஷணமாக இந்நிமிடத்தே மரணமுற வந்தீர், |
| சேட்டமுளார் போலிருந்தீர் | = | மேன்மையுடைய மகான்கள் போலவுங் காணப்படு கின்றீர் ஆனாலும் |
| தீயவர் போன்றீர் | = | துர்ப்புத்தியுடையவர் போலவுங் காணப்படுகின்றீர் |
| எவர் நீர் செப்பு மென்னக் | | யாவர் நீங்கள் சொல்லுவீர்களாகயென்று கற்கடி |
| கேட்டளவே | = | வினவிய மாத்திரத்தில் |
| கொலையரக்கி கேளென்ன | = | பிராணிகளை கொலை செய்யும் இயற்கை வாய்ந்த இராக்ஷசியே உத்தரங் கூறக் கேட்பாயாகவென்று |
| திறல் வேந்தன் கிளத்த | | பாராக்கிரமம் பொருந்திய அரசன் கூறத் |
| லுற்றான் | = | தொடங்கினன், |

எவ்வுழிநின் றனைநீயிங் கிசைத்தவெலா மிளவண்டினிரைச்சல் போலச்
செவ்விதுகேட் டனமென்ன வரக்கியு நன்றென்றெதி ரேசிரித்த லோடும்
வெவ்வியபல் லொளியாலே வெளியாகக் கண்டிறையும் வெருவலின்றி
மைவரைபோல் வாய்திறந்து வாளாநீ வருந்தலென மன்னன்
சொல்வான். (26)

| | | |
|---|---|---|
| எவ்வுழி நின்றனை நீயிங்கு | | போ, போ, பூதமே நீயார் நீ எங்கிருக்கின்றனை நீ |
| இசைத்தவெலாம் இள | | இவ்விடத்தில் கூறிய யாவும் வண்டுக் குஞ்சின் |
| வண்டின் இரைச்சல் போல | | அற்ப சப்தம் போல இனிமையாகச் செவி மடுத் |
| செவ்விது கேட்டனமென்ன | = | தனம் என்று அரசன் கூற |
| அரக்கியும் நன்றென்று எதிரே | | கற்கடியும் நன்றென்றே எதிரே கர்ஜ்ஜித்து |
| சிரித்தலோடும் | = | சிரித்தலோடும் |
| வெவ்விய பல் ஒளியாலே | | கோரமான தந்தங்களின் காந்தியால் அவள் |
| வெளியாகக்கண்டு | = | ஆகிருதியை வெளிப்படையாகநோக்கியபோதினும் |
| இறையும் வெருவலின்றி | = | சிறிதும் அஞ்சுதலின்றி |
| மைவரைபோல் வாய்திறந்து | = | நீலகிரிபோல வாயை திறந்து |
| வாளா நீ வருந்தல் என | = | வீணாக எதற்கு நீ வருந்துகின்றாய் |
| மன்னன் சொல்வான் | = | என்று அரசன் மேலுங் கூறுகின்றான் |

1 எய்தாநின் றுளபயனுக் கியற்றாதா ரில்லையா மென்றபோது
3 2
நொய்தான கருமத்தி னெய்தானோர் விரைந்திடுவர் நொய்ம்மை தோன்ற
4
வைதான புந்தியினா லாறுதலா லறிவுடையோ ரனைத்துஞ் செய்வர்
6 5
வெய்தாவுன் போல்வாரைக் கொதுகெனவீசிடு மெங்கள் வீரக்காற்று. (27)

| | | |
|---|---|---|
| எய்தா நின்றுள பயனுக்கு இயற்றுதாரில்லையாம் என்ற போது | = | இப்போது அடையும்படியாயுள்ள பிரயோஜனத்துக்கு முயற்சி செய்யாதார் யார் இலராவர் (முயற்சியுடையவரேயாவர்) |
| நொய்தான கருமத்தில்நொய் தானோர் நொய்மை தோன்ற விரைந்திடுவர் | = | அற்பமான காரியத்தில் தமது அற்பத் தன்மை வெளிப்படும்படியாக அற்ப மதியினர் ஆத்திரப்பட்டு முயல்வர் |
| ஐதானபுந்தியினல் ஆறுதலால் அறிவுடையோர் அனைத்துஞ் செய்வர் | = | சூக்ஷ்மமான மதியினுல் உபசாந்தமாக விவேக மிகுத்தவர் யாவற்றையுஞ் செய்துமுடிப்பர் |
| வெய்தா உன்போல்வாரை எங்கள் வீரக்காற்று கொதுகு என வீசிடும் | = | மந்திரி கூறல் கொடியவளே உன்னைப்போன்றவர்களை எங்களது தைரியமாகிய காற்று கொதுகுக் குச்சமானமாக தூர எறிந்துவிடும். |

**ஆதலால் விரைவையொழி யுன்கருத்தை யுரையெங்க ளருகு வந்தோர்**
**காதலா லிரந்தபொருள் கனவிலுநல் குவமென்று கழற லோடும்**
**போதமுங்கல் வியும்வலியும் பொறையுமள விலரென்றே புந்தி செய்தாள்**
**மேதகமா மவருரையை மிகவியந்தா ளிழிவிலா மெய்ம்மை கண்டாள். (28)**

| | | |
|---|---|---|
| ஆதலால் விரைவையொழி | = | ஆகையினுல் துரிதத்தை (அவசர ஆடம்பரத்தை) விடுதி |
| உன் கருத்தை உரை | = | உனது அபிப்பிராயத்தைக் கூறுதி |
| எங்கள் அருகு வந்தோர் காதலால் யாசித்த பொருள் கனவிலும் நல்குவம் யென்று கழறலோடும் | = | எங்களுடைய சமீபத்தில் யாசகார்த்தம்வந்தவர்கள் இச்சையால் யாசித்த வஸ்துவைச் சொப்பனத்தின் கண்ணும் கொடுப்போம் என்று இவ்வண்ணம் கூறியபோது, |
| போதமுங் கல்வியும் | = | ஞானமும் சாஸ்திர பாண்டித்யமும் |
| வலியும் பொறையும் அளவில ரென்றே புந்தி செய்தாள் | = | மனோவலியும் மனத்திலுபசாந்தியும் அபரிமிதமாக வுடைத்தாயிருக்கிறார்கள்என அறிந்து கொண்டாள் (தீர்மானஞ் செய்தனள்) |
| மேதகமாம் அவருரையை மிக வியந்தாள் | = | மகா மேன்மை தங்கிய அவர் தம் வாக்கியங்களை அதியற்புதம் எனக்கேட்டு ஆச்சரியப்பட்டாள் |
| இழிவிலா மெய்ம்மை கண்டாள் | = | தோஷரகித சத்தியவஸ்துவை சாக்ஷாத்கரித்தவள் |

2 1
வாக்குமுகங் கண்களான் மாறுபடா துயாந்தோர்தம் மறுவில் சித்த
3
மேக்குயரு மிவற்ருலே யுண்ணினைவு மறியலா மேலோர் தாமே
பாக்கியம்போல் வந்தெய்திற் சந்தேகந் தெளியாதார் பதக ராகுந்
தாக்குமுரை யாலிவரை யறிதுமெனு யாவர்நீர் சாற்று மென்ருள். (29)

உயர்ந்தோர் தம் மறுவில்
சித்தம் = பெரியோர்களுடைய குற்றமிலா சித்தமானது
வாக்கு, முகம், கண்களால் மாறுபடாது = வாய் மொழியினுலும், வதனத்தினுலும், திருஷ்டியினுலும் ஒன்றுக்கொன்று பேதமுருது,
மேக்கு உயரும் இவற்ருலே = மேன்மை பொருந்திய இவற்ருலே
உள் நினைவும் அறியலாம் = உட்கருத்தையும் உணரலாம்
மேலோர் தாமே பாக்கியம் போல் வந்தெய்தில்சந்தேகம் பெரியோர் சுயமே பூர்வ புண்ணியத்தால் ஐஸ்வரியம் வருவதுபோல் வந்து தரிசனந்தரில் ஐயத்தைத்
தெளியாதார் பதகராகும் = தீர்த்துக் கொள்ளாதவர் அதமர் ஆவர்
தாக்கும் உரையால் = ஆழ்ந்த அபிப்பிராயமுடைய வினுவால்
இவரை அறிதும் எனு = இவர் தம்மை அறிந்து கொள்ளுவோமென்று
யாவர் நீர் சாற்றுமென்ருள் = எவர் கொனீவிர் உரைப்பீராக என்று சாந்தத்துடன் கேட்டனள்,

1 3
வினையமுற வரக்கியிது விளம்பிடமந் திரிவிளம் பும் வேடர்க் கெல்லா
2 4 6 5 7
மினையவன்மன் னவனமைச்ச ஞனுகுமிருட்போதி லெங்கு நாடி
யுனைநிகர்வா ரைச்சோதித் தொறுக்கவுயி ரொடுக்க வுயிர் நிறுத்தவந்தோம்
9 8 10
நினைவிதுவந் ததற்கென்னு விவன்கூற மீண்டந்த நிருதிகூறும். (30)

வினையமுற அரக்கி இது விளம்பிட மந்திரிவிளம்பும் = சாந்தமாக வினயத்துடன் இராக்ஷசி இதனைக் கேட்க அமைச்சன் கூறுவதாவது,
இனையவன் வேடர்க்கெல்லா மன்னவன் நான் அமைச்சனுகும் = இவர் கிராதர்கட்கெல்லாம் அரசராவர் நான் மந்திரியாவேன்
இருள்போதில் எங்கும் நாடி இராக்காலத்தில் எவ்விடத்திலுஞ் சுற்றிப்பார்த்து
உனை நிகர்வாரைச்சோதித்து நின்னைப்போன்றதுட்டரைப் பரீக்ஷித்து நிக்கிரகஞ்
ஒறுக்க உயிர் ஒடுக்க உயிர் நிறுத்த வந்தோம் = செய்ய மீறினல் பிராணனை வாங்க (தண்டிக்க) சிட்டருக்கு வந்துற்ற ஆபத்தை நீக்கிக் காப்பாற்ற இங்கு வந்துற்ருேம்,

வந்ததற்கு நினைவு இது என்று இவன் கூற = யாங்கள் வருகைக்கு கருத்து இதுவே என மந்திரி கூறவும்,
மீண்டு அந்த நிருதி கூறும் = மீளவும் அவ்விராக்ஷசி கூறுவாளாயினள்.

1
தீயவனு மந்திரியா னல்வேந்துந் தீவேந்தா தீமையில்லாத்
தூயவனு மந்திரியாற் றீவேந்து நல்வேந்தாந் தொடர்ச்சி போல
3 2 4
வாயநெறி மன்னவரா லமைச்சருமப் படியாகுமாதலாலே
நேயவிவே கத்தமைச்ச னுண்டாகி லெப்பயனு நிருபர்க் குண்டாம். (31)

1
தீயவனும் மந்திரியால் நல் வேந்தும் தீவேந்தாம் = தீச்செயல் தீய எண்ணமுள்ள அமைச்சனால் நல்ல குண அரசனும் துர்க்குண மன்னவனும்
தீமையில்லாத்தூயவனும் மந்திரியால் = துராலோசனையின்றிய பரிசுத்த குணமுடைய மந்திரியால்
தீவேந்தும் நல்வேந்தாம் = கொடுங்கோல் மன்னனும் செங்கோல் மன்னவனாய் விடுவன்
தொடர்ச்சி போல = இம்முறைமை போல
நெறி ஆய மன்னவரால் = மனுநூல் மார்க்கப்பிரகாரம் ஆட்சி செய்யும் அரசரால்
அமைச்சரும் அப்படியாகும் = மந்திரிமாரும் அவ்வாறே யாவர்
ஆதலாலே = ஆகையினால்
நேய விவேகத்தமைச்சன் உண்டாகில் = தலைவனிடத்து அன்பும் அறிவுமுள்ள மந்திரி உண்டாகில்
எப்பயனும்நிருபர்க்குண்டாம் = இக. பர. சர்வ பிரயோஜனங்களும் பிராப்தமாம்.

மன்னவனெப் படியுலகின் மன்னுயிரு மப்படியா மகிமை தானு
நன்னடுவு நிலைமையுமெய்ஞ் ஞானநூ றெளிந்த வர்க்கே நண்ணு நிற்கு
மன்னதுகற் றிலரென்னி லரசரமைச்சர் களென் போரபத்த ராகு
மின்னகலை யிலதாகி லெனக்கிரையா யிளமைநல மிழந்தீரின்றே. (32)

மன்னவன் எப்படி உலகில் மன்னுயிரும் அப்படியாம் = அரசன் எந்தப் பிரகாரம் ஒழுகுகின்றனனோ ஜகத்திலுள்ள பிரஜைகளும் அவ்வாறே யாம்,
மகிமை தானும் நல்நடுவு நிலைமையும் மெய்ஞ்ஞான நூல் தெளிந்தவர்க்கே நண்ணு நிற்கும் = பிரபுத்துவமும் சிறந்த சமதிருஷ்யும் உண்மை ஞானத்தையுணர்த்தும் அரச வித்தைச் சாஸ்திர சிரவணஞ் செய்த அரசருக்கே உண்டாகும்

| | | |
|---|---|---|
| அன்னது கற்றிலரேனில் | = | அந்த ராஜ வித்தையை அறிந்திலராகில் |
| அரசர் அமைச்சர்களென் போர் அபத்தராகும் | = | இராஜ மந்திரிகளெனப்படுபவர் பெயர்ப்போலியரே யாவர் (பொய் வேடமுடையவரேயாவர்) |
| இன்ன நிலையிலதாகில் | = | பிரபுத்துவம், சமதிருஷ்டி அத்தியான்மக சாஸ்திர ஆராய்ச்சி இல்லையாகில் |
| எனக்கு இரையாய் இளமை நலம் இன்றே இழந்தீர் | = | இராக்ஷஸ சுபாவமுடைய எனக்கு ஆகாரமாய் யௌவனாதி நன்மைகளை இப்போதே இழந்தவராவீர்கள். |

சிங்கமெனு முங்களையான் செப்புகின்ற வினக்கூட்டிற் சிறைசெய் கின்றே
னுங்கண்மதி யாற்றிறந்தா லுயிர் வாழ்வீ ரென வகுத்தென் னுரைசெய் கென்னுத்
துங்கநர பதியுரைப்பத் தொல்லரக்கி நல்லமுதத் துளிகள் போல
வங்கவருக் குரைத்தவெலா மிராகவகே ளெனவ சிட்ட னருள லுற்றான். (33)

| | | |
|---|---|---|
| சிங்கமெனும் உங்களை செப்பு கின்ற வினக்கூட்டில் சிறை செய்கின்றேன் | = | சிங்கத்துக்குச் சமான சூரத்தன்மையுற்ற உங்களிருவரையும் கேட்கின்ற வினக்களாகிற பஞ்சரத்தில் அடைக்கப்போகின்றேன், |
| உங்கள் மதியால் திறந்தால் உயிர் வாழ்வீர் என | = | உங்களுடைய விசாரபுத்தியால் பிளந்தால் பிழைத்திருப்பீர்கள் என கற்கடி கூற |
| வகுத்து என் உரை செய்க என்னு | = | பிரித்துப் பிரித்து நீ யாது கேட்க வேண்டுகின்றனையோ அவற்றையெல்லாம் கூறுவாயாக வென்று |
| துங்கநரபதி உரைப்ப | = | பரிசுத்த குண நரேந்திரன் கூற |
| தொல் அரக்கி | = | நீள் காலம் தவம் புரிந்த இராக்ஷசியாகிய அக் கற்கடி, |
| நல்லமுதத்துளிகள் போல | = | இனிய அமிர்த பிந்துக்களை சிதறினாற்போல |
| அங்கு அவருக்கு உரைத்த வெலாம் | = | அவ்விஷயத்தில்அம்மன்னன் மந்திரிகளை நோக்கிக் கூறிய வினக்களையெல்லாம் |
| இராகவ கேள் என | = | ஹே இராமச்சந்திரா கேட்பாயாக என்று |
| வசிட்டன் அருளலுற்றான் | = | ஸ்ரீ வசிட்ட பகவான் திருவருள் செய்யத் தொடங்கினார். |

3 2 1
அண்டநிரை பலகோடி பலவாயு மொன்றுமெவ் வணுவி னுள்ளே
5 4 6
விண்டகடற் குமிழிகள்போல் விரிந்தொடுங்கும் விண்ணுயும் விண்ணன் றேது
தண்டறவுண் டாயிருந்து மிலாததெது சரித்தேயுஞ் சரியா தேது
கண்டிடநில் லாதாயு நிற்பதெது சித்தாயுங் கல்லாமேது. (34)

| | |
|---|---|
| பலவாயும் ஒன்ரும் எவ்வணு வினுள்ளே = | (முதலாவது வினு) அனேகமாயும் ஏகமாயிருக்கும் எவ்வணுவின் உள்ளே |
| நிரை பலகோடி அண்ட | பல கோடி அண்ட வரிசைகள் |
| கடல் விண்டகுமிழிகள்போல = | சமுத்திரத்தில் எழுந்து தோற்றும் புற்புதங்கள் போல |
| விரிந்து ஒடுங்கும் = | விவர்த்தமாகத் தோற்றிலயமடையும் |
| விண்ணுயும் விண்ணன்றேது = | (2 ஆவது வினு) ஆகாசமாயும் அநாகாசமாயிருப் பது யாது? (இலௌகீக பிரசித்தம் சிறிதுமில்லா மலிருந்தும் தத்துவவித்துப் பிரசித்தம் சிறிதே யாவது யாது) |
| தண்டறவுண்டாயிருந்தும் இலாதது எது = | (3ஆவது வினு) தடையாச் சிறிதில்லாததாயிருந்தும் சிறிது இருப்பது யாது (இல்லாதிருந்தும் இருப்பது யாது) |
| சரித்தேயுஞ் சரியாதேது = | (4–ஆவது வினு) நடந்தும் நடவாதிருப்பது யாது? அசத்தாயிருந்தும் சத்தாயிருப்பது யாது? |
| கண்டிட நில்லாதாயும் நிற்பது எது = | (5ஆவது வினு) காணும்படியாக நில்லாததாயினும் நிற்கின்றது யாது? |
| சித்தாயுங் கல்லாமேது = | (6ஆவ்து வினு) சேதனமாயினும் பாஷாணமாவது யாது? |

வானிடையோ வியமெழுது கின்றதெது வித்திடையின் மரங்கள் போல
வீனமிலா வெவ்வணுவி லுலகமெலா மிருக்கின்ற தியாதி னின்று
மானகடற் றிரைநுரைபோ லொருபொருளும் பிரிவாகா தமைந்த நீரு
மீனமறு நெகிழ்ச்சியும்போ லேதோன்றி யிருமையுமெங் கொருமையாகும். (35)

| | |
|---|---|
| வானிடை ஓவியம் எழுது கின்றது எது = | (7ஆவது வினு) சிதாகாயத்தின் கண்ணே சித்திரம் எழுதுகின்றது யாது? |
| வித்திடையின்மரங்கள்போல ஈனமிலாஎவ்வணுவினுள்ளே உலகமெலாம்யிருக்கின்றது = | (8ஆவது வினு) விதையில் தருக்கள் இருப்பது போல் உத்கிருஷ்டமான எவ்வணுவின்கண்ணே பிரபஞ்சமனைத்தும் இருக்கின்றன? |
| யாதில் நின்றும் கடல்ஆன திரை நுரைபோல் ஒரு பொருளும் பிரிவாகாது = | (9ஆவது வினு) எதனினின்றும் சமுத்திரத்தில் உண்டான தரங்கபேன புற்புதாதிகள் போல எவ் வஸ்துவும் வேற்றுமையை அடையாது? |
| அமைந்த நீரும் ஈனம் அறு நெகிழ்ச்சியும் போலே தோன்றி இருமையும் எங் | (10ஆவது வினு) ஜீவன ஏதுவாகப் பொருந்திய ஜலமும் அதன் கண் கெடாது தோற்றும் திரவத் தன்மையும் போல பிரதீதியாகா நின்ற துவைதமும் |

| | | |
|---|---|---|
| கொருமையாகும் | = | வேற்றுத்தன்மையைஅடையாது. (பெரிய வாசிட்டம் 84 வினு. அதில் அபினந்தாச் சாரியார் 10 வினுவை மட்டும் இங்கு கூறியுள்ளார் கள்.) |

இந்தவினு வின்பயனை நும்முணர்வா லேதோன்ற வியம்பு வீரேற்
கந்தமுற வென்குழன்மே லெப்போது மிருக்கின்ற கமழ்போ தாவீர்
மந்தமுறு புந்தியினுல் வகுத்துரைக்க மாட்டாது மயங்கு வீரேல்
வெந்தவயிற் றெரிகனற்கு விறகாவீ ரென்றரக்கி விளம்பலோடும். (36)

| | | |
|---|---|---|
| இந்த வினுவின் பயனை நும் உணர்வாலே தோன்ற இயம்புவீரேல் | = | இயம்பிய வினுக்களின் பொருளை உங்களுடைய விசார ஞானத்தினுலே விளங்கும்படியாகக் கூறுவீர் களாயின் |
| கந்தம் உற என் குழல்மேல் எப்போதுமிருக்கின்ற கமழ் போதாவீர் | = | மணம் பொருந்த எனது கூந்தலின் மீது எக்காலத் திலுமிருக்கின்ற நற்கந்த புஷ்பமாவீர்கள், |
| மந்தமுறு புந்தியினுல் | = | தாமதம் பொருந்திய பிரஞ்ஞையினுல் |
| வகுத்துரைக்கமாட்டாது | = | பிரித்து உத்தரங் கூற முடியாமல் |
| மயங்குவீரேல் | = | மயங்கி விழிப்பீர்களாயின் |
| வெந்த வயிற்றெரிகனற்கு விறகாவீர் என்று அரக்கி விளம்பலோடும் | = | கொளுத்தானின்றவயிற்றிலுள்ள ஜாடராக்கினிக்கு இந்தனம் ஆவீர்கள் முன் உங்களை விழுங்குவேன் பின் உங்கள் ஜனபதமண்டலத்தை விழுங்குவேன் என்று. |

1
மந்திரிமுன் னுரைசெய்வான் மாசிலாப் பரம்பொருளை வகுத்துச் சொன்னுய்
சிந்தைமுத லாம்பொறிக ளாருலு மெட்டரி தாந் திறத்தினுலே
யந்தமில்சின் மாத்திரமாய் விண்ணிலு நொய்தாம் பரம மணுவேயாகு
3 2 4 5
முந்துபிர மாண்டமெலா மவ்வணுவிலே தோன்றி முதிர்ந்து மாயும். (37)

| | | |
|---|---|---|
| மந்திரி முன்னுரை செய்வான் | = | (முதலாவது வினுவுக்கு விடை) அமைச்சன் முதலில் விடை கூறுகின்ருன் |
| மாசிலாப் பரம்பொருளை | = | குற்றமற்ற பரமாத்ம வஸ்துவையே |
| வகுத்துச் சொன்னுய் | = | விரித்துக்கூறினுய் |
| சிந்தை முதலாம் பொறிகள் ஆருலும் எட்டரிதாந்திறத் தினுலே | = | மனமுதலியசுரோத்திராதிஆறுஇந்திரியங்களாலுங் கோசரிக்கமுடியாததாந்தன்மையினுலே |

அத்தமில்சின் மாத்திரமாய் விண்ணிலு நொய்தாம் பரம அணுவேயாகும் = தேசகால வஸ்து பரிச்சேதரகிதஅறிவு மாத்திரமாய் ஆகாயத்தினும் அதி சூக்குமமாம் பரமாத்மா அணு ரூபமேயாகும்

அவ்வணுவிலே முந்து பிரமாண்டமெலாம் தோன்றி மாயும் = அவ்வணுவின் கண்ணே பிராசீன பிரமாண்டங்கள் எல்லாம் விவர்த்த ரூபமாய் உற்பத்தியாகி நாசத்தை அடையும்

முதிர்ந்து = (8ஆவது வினவுக்கு விடை) அவ்வணுவின்கண்ணே ஸ்திதி பெற்று ஸ்திதி சக்தியைத் தாண்டி உப சங்கார சக்திவயமாம்.

தடமான வதன்புறமில் லாமையினுல் விண்ணுகுந் தனிப்போ தத்தா
லிடமான விண்ணன்று மின்னதெனத் தெரிவரிய வியல்பி னுலே
திடமாக விலதாகுஞ் சற்பாவத்தா லுளதாய்ச் செப்பலாகும்
புடமாக விளங்குதலாற் சித்தாகு மறிவதிலாப் பொருட்டாற் கல்லாம். (38)

தடமானவதன்புறமில்லாமை யினுல் விண்ணுகும் = (2ஆவது வினவுக்கு விடை) விசாலமானதாற்பகிர் பூதவத்து சூன்யமாதலின் = (வாயுவாதி நான்கு பூதங்களையும் அடக்கியிருத்தலால்) ஆகாசமாகும்

இன்னதெனத் தெரிவரிய வியல்பினுலே திடமாக விலதாகும் = (மூன்றுவது வினவுக்கு விடை) இவ்வண்ணந்தான் இருக்கின்றதென அறிய முடியாத தன்மையினுல் அகிஞ்சித்தாம் (எக்காரணத்தால் பிரஹ்ம வஸ்து குறிக்கப்படாமலிருக்குமோ அக்காரணத்தால் கிஞ் சித்தாகாதாம்

சற்பாவத்தால் உளதாய்ச் செப்பலாகும் = பரமார்த்த சத்து ரூபமாயிருத்தலால் கிஞ்சித் உளதென்று சூக்குமமாய் இருக்கிறது என்று கூறலாகும்

புடமாக விளங்குதலால் சித்தாகும் = (6ஆவது வினவுக்கு விடை) பிரகாச வடிவமாக வெளியாய் இலங்குதலின் சேதனமாகும்,

அறிவதிலாப் பொருட்டால் கல்லாம் = அப்பிரமேயமாதலின் அறிய முடியாததால் சிலை சமானமாம் (கற்பிதஞேய சன்னதியுற்ற போதினும் விகாரமற்றிருத்தலின்)

தானுகு மிகநொய்தா மாகாயத்திற் சகத்திரளாஞ் சித்திரத்தைத் தானே கோட்டு
மானுத வுலகமெலாந் தனதுசோதியா தலிலனுதற்குவே றயலொன் றில்லை
நீ நானுஞ் சகபேத வடிவந்தானு நிற்கின்றவ தன்வடிவாய் நீங்காதென்றும்
நானுவாம் பொருட்புணர்வா னடந்ததாகு நடக்கவிடமிலாயினு னடவா தாகும். (39)

| | | |
|---|---|---|
| தானுகும் மிக நொய்தாம் ஆகாயத்தில் சகத்திரளாஞ் சித்திரத்தைத்தானே கோட்டும் | = | (7ஆவது வினவுக்கு விடை) தனது சொரூபமாகும் மிகத் தெளிவான சிதாகாயத்தில் உலகக் கூட்டங் களாய ஓவியங்களைச் சுயமாகவே வித்தாரஞ் செய்யும் (எழுதும்) |
| ஆனுத உலகமெலாம் தனது சோதியாதலினுல் அதற்கு வேறு அயல் ஒன்றில்லை | = | (9 ஆவது வினவுக்கு விடை( ஞானத்தாலன்றிக் கெடாத பிரபஞ்சமியாவும் தன்னறிவு வடிவமே யாகலின் அதற்கு அயலாக அன்னியம் ஒன்றுமே இல்லை |
| நீ நானுஞ் சகபேத வடிவந் தானும் நிற்கின்ற அதன் வடிவாய் நீங்காதென்றும் | = | (10ஆவது வினவுக்கு விடை) நீ நான் என்பதாதி யாய்த் தோற்றும் உலக பேதவடிவமும் நிலைபெற்ற அதன் பிரகாசமயமாய் அயலாகாமல் பொருந்து மென்றும், |
| நாறுவாம் பொருள்புணர் வால் நடந்ததாகும் நடக்க விடமிலாமையினுல் நடவா தாகும் | = | (4வது வினவுக்கு விடை) பற்பலவாம் வஸ்துக் களின் சம்சர்க்கத்தால் எங்குஞ் சென்றதாகும் நடக்கஇடம்இல்லாமையினுல்வியாபகமாதலினுலும் அதிசூக்கும வடிவமாதலினுலும் கதி செய்வதற்கு இடம் இல்லாமையின் கதி செய்யாததாகும். |

**அடைவதற்கோன் றிலாமையினு லில்லையாகு மனவரதஞ் சத்தையிலுண்**
**டாகுமென்று**
**புடைபெயர்நன் மதியமைச்சன் புகலக்கேட்டுப் போதவியந் ததற்பின்பு**
**பூபாலனேயுன்**
**னுடையவுணர்வு ரையென்ன வவனுஞ்சொல்வா னுலகத்தி லுறுதியிலா**
**வுறுதி தானே**
**தடையறுசிற் பரம்பொருளி னுறுதியாகுந் தற்பதத்தினியல் பின்னஞ்**
**சாற்றக் கேளாய். (40)**

| | | |
|---|---|---|
| அடைவதற்கொன்றிலாமை யினுல் | = | (5ஆவது வினவுக்கு விடை) ஆசிரயித்திப்பதற்கு ஆசிரயம் யாதொன்றும் இல்லாமையினுலே |
| இல்லையாகும் | = | இது நாஸ்தியாம் நில்லாததாகும் |
| அனவரதஞ் சத்தையினுல் உண்டாகும் என்று | = | எஞ்ஞான்றும் பிரகாசமயத்து ரூபத்தன்மையானே அஸ்தியாம் (நிற்பதாகும் என்று) |
| புடைபெயர்நல்மதியமைச்சன் புகலக்கேட்டு போதவியந்து அதன் பின்பு | = | அரசனது பக்கமாக நிற்கின்ற நல்ல புத்தியை யுடைய மந்திரி கூற செவியுற்று மிக மிகவும் புகழ்ந்ததன் பின்னர் |
| பூபனே உன்னுடையவுணர்வு உரையென்ன அவனுஞ் சொல்வான் | = | நரேந்திரனே நினது போதத்தைக் கூறுவாயாக வென்று கற்கடி கேட்டலும் அம்மன்னனுங் கூறுவான், |

| | |
|---|---|
| உலகத்தில் உறுதியிலா உறுதிதானே தடையறு சிற் பரம்பொருளின் உறுதி யாகும் = | பிரபஞ்ச ஞானமில்லாஞானந்தானே தடையில்லாத சின்மயப் பரமாத்ம வஸ்துவின் பிரத்யயமாகும் (ஞானமாகும்) |
| தற்பரத்தினியல்பு இன்னஞ் சாற்றக்கேளாய் = | அந்தப் பிரஹ்மத்தின் சுபாவத்தை மேலுங் கூறக் கேட்பாய். |

1
கருத்ததனுற் சங்கற்பவி கற்பமெல்லாங் கைவிடுதல் கைக்கொள்ளப் படுவதாகுந்
திருத்தமுறு தன்விரிவுங் குவிவுதானுஞ் சிருட்டியுங் கற்பமாகுந்
3
2 4 திரள்வேதாந்தத்
தருத் தமுறுவாக்கி யத்தினிட்டையாகு மவ்வேத வாக்கியத்துக் கயலுமாகும்
முருத்திகழு முள்ளாதிலதிரண் டினுக்குமுள்ளாகு மவையிரண்டி னுருவுமாகும். (41)

| | |
|---|---|
| கருத்ததனல் சங்கற்பவிகற்ப மெல்லாம் கைவிடுதல் கைக்கொள்ளப்படுவதாகும்= | சிந்தையினுல் எழும் சர்வ சங்கற்பவிகற்பங்களையும் கைவிடுதலால் பரமான்ம வஸ்து பரிக்கிரகமாம் |
| திருத்தமுறு தன்விரிவும் குவிவுதானும் சிருட்டியுங் கற்பமுமாகும் = | நிர்மலமான அதனது விகாச சங்கோஷங்களும் ஜகத்சிருஷ்டியும் பிரளயமும் ஆம், |
| அருத்தமுறு திரள்வேதாந்த வாக்கியத்தின் நிட்டையாகும்= | அர்த்தகெம்பீரமுடைய சாந்தோக்கியாதி உபநிஷத்து வாக்கியங்களின் லக்ஷணவிருத்தியால் பிரதிஷ்டமாம் |
| அவ்வேத வாக்கியத்துக்கு அயலுமாகும் = | அவ் வேதவாக்கியத்தின் சக்திவிருத்திக்கு அகோர மாகும் ; |
| உருத்திகழும் உள்ளது இலது இரண்டினுக்கும் உள்ளாகும்= | வடிவத்தோடு விளங்குகின்ற அஸ்தி நாஸ்தி இரண்டினுக்கும் ஆந்தரமாகும் |
| அவையிரண்டின் உருவுமாகும் = | பிரஹ்மம் சர்வப்பிரபஞ்ச அதிஷ்டானமாதலால் அவ்விரு வடிவமுமாகும் |

சராசரமா முலகனைத்து மனருபத்தாற் ருன்செய்யும் விளையாட்டாஞ்சகமாய் நின்றும்
புராதனமா மொருமையினிற் பிரியாதாகும் பூரணசின்மாத்திரமாம் பொருளே சொன்னுய்
நிராசையுளத் தவரறியும் பரமீதென்று நிருபனுரைத்திட நிருதி நெஞ்சுட்கொண்டு
விராவமுத மழைசொரியக் குளிர்ந்தவாபோன் மிகக்குளிர்ந்தாள் சாந்தமுற விளம்பலுற்ருள். (42)

சராசரமாம் உலகனைத்தும் = சங்கமஸ்தாவர வடிவமான பிரபஞ்சமனைத்தும்
மனத்தால் தான் செய்யும் விளையாட்டாகும் = மனரூப உபாதியினுல்தான் செய்யாநின்ற லீலையே யாகும்
சகமாய் நின்றும் = விவர்த்த ரூபத்தால் விஸ்வான்மகத்தன்மையை அடைந்தபோதினும்
புராதனமாம் ஒருமையினில் பிரியாதாகும் = மாயிகமாய அநேகரச சர்வதாதாத்மியத்தானே வாஸ்தவத்தன்மைவாய்ந்த புராதன ஏகரசத் தன்மை கெடமாட்டாவாம்,
பூரணசின்மாத்திரமாம் பொருளே சொன்னுய் = பரிபூரண சின்மாத்திர சாசுவதம் பிரஹ்மத்தையே ஹே கல்யாணி நீ கூறினுய்,
நிராசையுளத்தவர் அறியும் பரம் ஈது என்று நிருபன் உரைத்திட = ஆசை தீர்ந்த மனத்தவர் தெரிந்துகொள்ளத்தக்க பரம்பொருள் ஈது என்று அரசன் கூறியபோது
நிருதி, நெஞ்சுட்கொண்டு விராவு அமுதமழை சொரிய குளிர்ந்தவாபோல் மிகக் குளிர்ந்தாள் = கற்கடி உள்ளத்துணர்ந்து அமிர்தங்கலந்த மழை பொழிய மயூராதி பரமதண்மைஅடைந்ததேபோல அந்தர் சீதளத்தையும் பரம விசிராந்தியையும் அடைந்து
சாந்தமுற விளம்பலுற்ருள் = பரம சாந்தமுடன் கூறத்தொடங்கினுள்.

1 3 2 4
அற்புதமா யமுதமா யறிவேயாகி யத்தமனமுதயமிலா வருக்கன் போலாய்த்
பொற்புமிகும் புந்தியுள வும்மைப்போல்வார் பொன்னடியை முடியாகப்
புனைந்தாரன்ருே
தற்பரமா முலகாளும் வேந்தராவோர் தமையுணர்ந் தோரைச்சேர்ந்தாற்
6 5
றளர்வுண்டாமோ
நற்பயன்போல் வருமுமக்கிங் கரிதின்றேனு நான்செய்யுங் கைம்மாறு
நவிலுமென்ருள். (43)

அற்புதமாய் அமுதமாய் அத்த மனம் உதயமிலா அறிவே யாகி அருக்கன்போலாய் பொற்புமிகும் புந்தியுள = தங்களுடைய பவித்திரமாகிய மதியானது மனேகர மாய்க் கெடாத சாரபூதமாய் உதயாஸ்தமனமில் லாத சிற்கன பிரபோத சூரியனுல் இலக்கப்பட்ட தாகி மிகக் கவின்வாய்ந்து உங்கள் மதி மிளிர் கின்றது
உம்மைப்போல்வார் பொன் னடியை முடியாகப் புனைந்தாரன்ருே = அத்தகைய புத்திமான்களாய உம்மைப்போன்றவ ரது அழகிய திருவடியை சிரசில் கிரீடம்போல தரித்தவரல்லவோ

| | |
|---|---|
| தற்பரமாம் உலகு ஆளும் வேந்தராவோர் = | அதிசுந்தர உலகபரிபாலன மன்னவராவோர் |
| தமையுணர்ந்தோரைச் சேர்ந்தால் = | பிரஹ்மரூபதம்மையுணர்ந்த மகத்துக்களைச் சேவித்துக்கொண்டிருந்தால் |
| தளர்வுண்டாமோ = | மீண்டும் துக்கம் பாதிக்குமோ (பாதிக்காது) |
| இங்கு நற்பயன்போல் வரும் உமக்கு = | பழங்கள் நிறைந்த இவ்வனத்தில் நல்ல தவத்தின் பிரயோஜனத்துக்கொப்பாக எழுந்தருளிவந்த உங்கட்கு, |
| அரிது இன்றேனும் = | இவ்வுலகத்தில் கிடையாதது ஒன்று இன்றேனும் |
| நான் செய்யும் கைம்மாறு நவிலுமென்றாள் = | அடியாள் தங்களுக்குச் செய்யாநின்ற பிரதியுபகாரத்தைக் கூறவேண்டும் என்றனள். |

சிலையரக்கர் குலமென்னு மெட்டிக்காட்டிற் செறிகனித் தேமாவனையாய் சகத்திலொன்றுங்
கொலைபுரியா தொழியென்று வேந்தன்கூறக் கொலையொ ழிந்தேனென் றரக்கி கூறலோடுந்
தொலைவருமூ னுணவாநீ செய்யுமாறென் சொல்லென மன்னவன் கேட்பத் தொல்லை நாளி
லலைவில்சமா தியிலிருந்து பசியைவென்றே னவ்வகை யேயின்றுமிருந்தாற்ற லுற்றேன். (44)

| | |
|---|---|
| சிலையரக்கர் குலமென்னும் எட்டிக்காட்டில் = | தனுசுபாணியாய் பிற உயிர்களுக்கு இம்சை செய்யும் இராக்ஷசர் குலமாகிய விஷக்காட்டில் |
| செறிகனித்தே மாவனையாய் = | பழங்கள் நிறைந்ததேமா அனையாய் |
| சசத்தில் ஒன்றுங்கொலை = | உலகினுள்ள பிராணிகளை கொலை |
| புரியா தொழியென்று வேந்தன் கூற = | செய்யாது விட்டுவிடுவாயாக என்று மன்னவன் சொல்ல |
| கொலையொழிந்தேன் என்று அரக்கி கூறலோடும் = | இக்கணமுதல் என்னால் ஒருபிராணியுமே இம்சிக்கப் படமாட்டாது |
| தொலைவரும் ஊன் உணவாம் நீ = | என்று கற்கடி கூறியபோது அபரிமிதமான தேகங்களை |
| செய்யுமாறு என்சொல்லென = | ஆகாரமாகக் கொள்ளும் நீ இனி ஆகாரஞ் செய்யும் |
| மன்னவன் கேட்ப = | விதம் எவ்விதம் என்று சொல்வாயாக என்று அரசன் வினவ, |
| தொல்லை நாளில் அலைவுஇல் = | முன் அனேக காலம் சித்த விக்ஷேபமின்றி |
| சமாதியிலிருத்து பசியை | நிருவிகற்ப நிட்டையில் நிலைத்து ஜாடராக்கினியை |
| வென்றேன் அவ்வகையே | சாந்தி செய்துளேன் அவ்விதமே இனிமேலும் |

| | | |
|---|---|---|
| இன்றுமிருந்து ஆற்ற லுற்றேன் | = | சமாதியிலிருந்து பசியை வெல்ல உத்தேசிக்கின்றேன் |

1
தெள்ளமுத தாரணையால் வேண்டுங்காலந் தேகமுடனி ருந்தப்பாற் றேகந் தீர்வே
னுள்ளநிறை யுணர்வுடையே னென்றுங்கொல்லே னுண்மையெனவுரைத்தேக வுன்னுவாளைக்
கொள்ளரிய நட்பெளிதிற் கொண்டேம் நீயெங்குல மகளாயெம்பதிக்குக்கூட வேகிற்
3
கள்ளருட லிரைதருது முடல்போமட்டுங் கருதுமுடல் வாதனைகண் கழலா காண்பாய். (45)

| | | |
|---|---|---|
| தெள்ள முததாரணையால் வேண்டுங்காலந்தேகமுட னிருந்து அப்பால் தேகந் தீர்வேன் | = | (அரசன் வேறு உபாயங்கூறல்) சமாதியில் தெளிந்த அமுததாரணையினலே வாழ விருப்புள்ள பரியந்தம் சரீரத்தோடிருந்து பின்னுல் உடம்பை விட்டொழிப்பேன், |
| உள்ளம் நிறையுணர்வுடையேன் கொல்லேன் உண்மை என உரைத்து ஏக உன்னுவாளை | = | மனத்தின்கண் பரிபூரண சிவஞானமுடையவளாக யிருத்தலின் ஒருயிரையும்இம்சியேன் இது சத்தியம் என்று பிரதிஞ்ஞை செய்துவிட்டுச் செல்ல முயன்ற கற்கடிகையை, |
| கொள்ளரிய நட்பு எளிதில் கொண்டேம் | = | கைப்பற்றற்கரிய சிநேகம் அதி சுலபமாய் அடைந்தேம், |
| நீ எங்குலமகளாய் எம்பதிக்கு கூட ஏகில் | = | நீ எங்கள் குலஸ்தீரியாயிருந்து எமது நகர அரண்மனைக்கு கூட வருதியேயாயின் |
| கருதுகள்ளர் உடல் இரை தருதும் | = | பிறர் பொருளை கொள்ளையடிக்கக் கருதும் திருடர்கள் சரீரங்களை உணவாகக் கொடுப்பேம் பிற நாடுகளிலிருந்தும் தருவித்து நற்போஜனமாகத் தருவேம் |
| உடல்வாதனைகள் கழலா கண்டாய் | = | சரீரம் நீங்கும் பரியந்தம் சரீரவாசனைகள் நீங்காதென்பது நினக்கே தெரியும். |

ஆதலினுற் பாதகருட லிரையைக் கைக்கொண்டரும் பசிபோய் சமாதிதனை யடையிவ்வாறு
காதலுடன் பலகாலுஞ் செய்தியென்று காவலன்கூற மரக்கி களிகூர்ந்தேகப்
போதகமன் னுர்தமது நகரமேவிப் பொன்மனை புக்காரிரவி பொலிய வந்தான்
பாதகர்மூ வாயிரரை யாறுநாளிற் பார்த்திபனீந் தானரக்கி பற்றிக்கொண்டாள். (46)

| | | |
|---|---|---|
| ஆதலினாற் பதகருடல் இரையைக்கைக்கொண்டு அரும்பசிபோய் சமாதிதனை அடை | = | விதேக முத்திவரையும் சரீர வாதனைகளிருக்கு மாதலினால் பாதகருடை ஆகாரத்தைப் பெற்றுக் கொண்டு சகித்தற்கரிய பசி நீங்கி சமாதியை அடைந்து சுகித்திரு |
| இவ்வாறு காதலுடன் பல காலுஞ் செய்தியென்று காவலன் கூறவும் | = | இந்தப் பிரகாரம் பாதகரைப் பிடித்து சிறையில் வைத்திருக்கிறேன் நீ மீளவும் வந்து வந்து அன்போடும் எப்போதுஞ் செய்தியென்று அரசன் கூறியபோது. |

பூமகள்போ லங்கிருந்த வடிவைக்கங் குற்போதிலொழித் தரக்கர்குலப் பூவை யாகிப்
பாமரராம் பாதகரைத் தோண்மேற்கொண்டு பார்த் திபனோடமைச்சனுக்கும் பண்பு கூறி
யேமமுறு யிமகிரியிற் சமாதிமேவ வேகினாளி ன்றளவு மிந்த வாறே
கோமகனு மரக்கியு நட்பானாரென்று குரிசிலுக்கு வசிட்டமுநி கூறினானே. (47)

| | | |
|---|---|---|
| பூமகள் போல் அங்கிருந்த வடிவைக்கங்குற்போதில் ஒழித்து அரக்கர் குலப் பூவையாகி | = | இலக்ஷுமிக்கொப்பாக அவ்வரண்மனையிலிருந்த காத்திரத்தை (சுந்தரி வடிவத்தை) இரவு வந்ததும் விடுத்து இராக்ஷச வடிவ மங்கையாய் |
| பாமரராம் பாதகரை தோள் மேல்கொண்டு | = | பாமரராய்த் துஷ்ட கிருத்தியஞ் செய்பவரை தோளின்மீது வைத்துக்கொண்டு |
| பார்த்திபனோடு அமைச் சனுக்கும் பண்பு கூறி ஏம முறும் இமகிரியில்சமாதி மேவ ஏகினாள் | = | அரசனுக்கும் மந்திரிக்கும் இனிய வசனங்களைக் கூறி நிர்ஜனப் பிரதேசமுஞ் சொர்ண மயமுமான இமாசலத்தில் போய் சந்தோஷத்துடன் புஜித்து திருப்தியடைந்து சமாதியுற சென்றாள் |
| இன்றளவும் இந்தவாறே | = | இன்றைய தின பரியந்தம் இவ்வண்ணமே |
| கோமகனும் அரக்கியும் நட்பு ஆனார் என்று | = | அரசனுங் கற்கடியும் நேயமிக்கு வாழ்கின்றனர் என்று |
| குரிசிலுக்கு வசிட்டமுனி கூறினான் | = | ஸ்ரீ இராமச்சந்திரருக்கு ஸ்ரீ வசிட்ட பகவான் திருவாய் மலர்ந்தருளினர். |



௨

# ஐந்தவர் கதை.

## அவதாரிகை.

தொடங்கியதின் அனுவாத பூர்வகம் ஜகத்தின் மனோ விலாசத்தன்மையின் விரிவின் பொருட்டு மற்றொரு கதையை வர்ணிக்கின்றார்.

உரைசெயூசி கதையாலே யுண்மை யாகிப் பரமான
கரையில் பிரம மேயுளதாங் காணப் படுவ தொன்றில்லை
வரையில் சிருட்டி களின் முதலாய் மனமே விளங்கு மிதுபொருட்டோர்
புரையில் கதைகே ளெனவசிட்டன் புயல்மே னியற்குப் புகல்கின்றான். (1)

உரைசெய் ஊசி கதையாலே = முன்னர்க்கூறிய கற்கடிகதையினானே சத்தியமாகி
உண்மையாகிப்பரமான மேலான பிரத்யக்க பின்னமாய் அபரிச்சின்ன
கரையில் பிரமமேயுளதாம் = (ஆத்மாவே இருக்கின்றது)
காணப்படுவதொன்றில்லை = அன்னிய சம்சாரகாட்சிகள் இல்லவே இல்லையாம்
வரையில் சிருட்டிகளின் அளவில்லாத சிருட்டிகளின் காரணமாய்ச் சித்தமே
முதலாய் மனமே விளங்கும் = திகழும்
இது பொருட்டு ஓர்புரையில் ஈண்டு ஜகத்து மனோவிவர்த்தம் என்பதில் ஓர் குற்ற
கதை கேள் என = மற்ற கதை (இந்துவெனப் பெயரிய பிராமணரின் மைந்தராகிய ஐந்தவரதுஆக்கியானத்தைக்கேட்பாயாகவென்று
வசிட்டன் புயல் மேனியற்கு இது பிரம்மாவாகிய உலக பிதாமகரால் எனக்கு
புகல்கின்றான் = அநுக்கிரகிக்கப்பட்டதுவென்று ஸ்ரீ வசிட்ட மகரிஷி மேக மேனிய இரகு நாயகனுக்குச் சிரவண பூடணமாய இக்கதையை கூறத்தொடங்குகின்றார்.

1
மேவு கதையாற் சிற்சத்திவிரிவே யுலகென் றறிதிவரும்
3
வாவு மனமாஞ் சிறுமகவு மடமையாலே வெறும்பொய்யே
2 4
தாவு சகப்பேய் வரக்காணுந் தனைப்போதிக்கி லறிந்திடர்போம்
பாவும் விகாரம் பலசேரிற் பவமா மவற்றை விடல்வீடாம். (2)

| | | |
|---|---|---|
| மேவு கதையால் சிற்சத்தி விரிவே உலகென்று அறுதி வரும் | = | உரைக்கப்படும் ஆக்கியானத்தால் சேதன ஆசிரித சத்தி (மனத்தின் உல்லாசமே) ஜகத்துவென்ற நிச்சயம் உண்டாம் |
| தாவு | = | விஷயங்களிற் தாவி |
| வாவு மனமாஞ் சிறுமகவு மடமையாலே வெறும் பொய்யே சகப்பேய் வரக் காணும் | = | பற்றுகின்ற சிறு சித்த பாலகன் அறியாமையாலே தேகச்சாயை அத்தியந்தம் மித்தையேயாயுள்ள உலகயக்ஷனை உண்மையாக இருத்தல் போலப் பார்ப்பன் |
| தனைப்போதிக்கில் அறிந்து இடர்போம் | = | தனது சொரூபத்தினை உணர்த்தினுே நிராமய தன்னையறிந்து ஆனந்திப்பன் |
| பரவும் விகாரம் பல சேரில் பவமாம் | = | விரியும் இராகாதி கிலேசங்களே அமைவதால் சம்சாரமாம் |
| அவற்றை விடல் வீடாம் | = | அக்கிலேசங்கள் ஒழிதலே மோக்ஷமாம், |

1
ஒருகால் விரிஞ்சன் சிருட்டியெலா மொடுக்கி யிரவி லுறங்கியபின்
3
வருகாலையின்மீண் டுலகளிப்பான் வானோக்குதலு
4 2
பெருகா நின்ற விண்ணிடையே பேதமான மனத்தாலே பல சிருட்டி
யருகா நின்ற படிகண்டா னுர்செய்தனரென் றதிசயித்தான். (3)

| | | |
|---|---|---|
| ஒரு கால் விரிஞ்சன் சிருட்டி யெலாம் ஒடுக்கி இரவில் உறங்கியபின் | = | ஒரு சமையத்தில் நான்முகன் சிருட்டியெலாம் (அகில சர்க்கத்தையும் சங்கரித்து நைமித்திகப் பிரளயம் திவசாந்தத்தில் சுழுத்தியை அடைந்தான் பின் |
| வருகாலையில் மீண்டு மனத் தாலே உலகளிப்பான் வான் நோக்குதலும் | = | இரவு நீங்கி வருகாலையில் விதிப்படி அநுஷ்டானஞ் செய்து மறுபடியும் பிராணிகளைச் சிருஷ்டித்தற்கு, |
| பெருகா நின்ற விண்ணிடையே | = | விஸ்தாரமாய வியோமத்தின் மத்தியில் |
| பேதமான பல சிருட்டி அருகா நின்றபடி கண்டான் | = | வேறு வேறுன விசித்திர சர்க்கங்களை அணைந்த (கிட்டிய)படி கண்டான் |
| செய்தனர் ஆர்யென்று அதிசயித்தான் | = | இவற்றை சிருஷ்டித்தவர் யாவர் என்று விஸ்மயத்தையடைந்தான். |

அதிலோ ரிரவி வருகென்னு யாரே யளித்தா ரெனக்கேட்பக்
கதிரோன் வணங்கி யுரைசெய்வான் கரைதீருலகின் காரணமாம்
விதியா நீயீ தறிந்திலையேல் விளம்பக் கேட்பாய் வெண்கயிலைப்
பதியா கியநா வலந்தீவிற் பரப்பா மிடத்தோர் பக்கத்தில். (4)

| | |
|---|---|
| அதில் ஓரிரவி வருகென்னு யாரே அளித்தார் எனக் கேட்ப = | அவ்வுலக புவன அம்பரத்திலேகும் ஒரு சூரியனை வரவழைத்து நீயார் உன்னையும்இஜ்ஜகஜாலத்தையும் யாவர் உண்டாக்கினர் என்று வினவ, |
| கதிரோன் வணங்கி உரை செய்வான் = | சூரியன் நமஸ்கரித்துச் சொல்வதாவது, |
| கரைதீர் உலகின் காரணமாம் = | எல்லையற்ற ஜகத் காரண பிரம தேவராகிய |
| விதியாநீயீது அறிந்திலையேல் = | தேவரீர் இதனைத் தெரிந்தீரில்லையேல் |
| விளம்பக் கேட்பாய் = | கூறுகின்றேன் கேட்பீராக |
| வெண்கயிலைப்பதியாகிய நாவலன் தீவில் = | வெள்ளிய ஸ்ரீ கைலாச பர்வதத்தின் அடிவாரத்திலிருக்கும் ஜம்புத்தீவின் சம பூப்பிரதேச ஓர் கோணத்தில். |

சிறக்குஞ் சுவர்ண தடமென்னுந் தேசமொன்றுன் மைந்தர்களா
னிறக்குஞ் சிருட்டி படைத்ததி னெடுங்காசிபன்றன் குலத்திடையே
பிறக்கு மறையோ னிந்துவெனும் பெரியோன் மக்கட் பேறின்றிப்
பறக்குங் கருத்தாற் றேவியொடும் பரமன் கயிலைப்பதிமேவி. (5)

| | |
|---|---|
| சிறக்குஞ் சுவர்ண தட மென்னும் ஒரு தேசம் = | வளப்பங்கள் பொருந்திய சுவர்ண சடமென்னும் ஒரு தேசம் |
| உன் மைந்தர்களால் = | மரீசியாதிதங்களுடைய புத்திரர்களால் |
| நிறக்குஞ்சிருட்டி படைத்தது அதில் நெடுங்காசிபன்றன் குலத்திடையே = | விஸ்தார சுக சுந்தரமாகக் கற்பிக்கப்பட்டது அம் மண்டலத்தில் பெருந்தவமுடைய (கஸ்பய) காசிப மகரிஷியின் குலத்தின் கண்ணே |
| பிறக்கும் மறையோன்இந்து வெனும் பெரியோன் = | உற்பவமாகிய பிஹ்மவித்தமன் இந்து நாம அதி தர்மாத்மா |
| மக்கட்பேறு இன்றி பறக்குங் கருத்தால் தேவியொடும் பரமன் கயிலைப்பதிமேவி = | மைந்தரில்லாமல் துன்புற்ற சிந்தா குலத்தினால் தன் மனைவியோடும் ஸ்ரீ பரமேசுவரன் எழுந்தருளியிருக்கும் கைலாச பர்வதத்தை அடைந்து, |

1
தவமேற் கொண்டு பாதவம்போற் சலமேயருந்தி வருந்திடுநாட்
சிவனுண் மகிழ்ந்து வேண்டியதென் செப்புமென்னச் சிரம்பணிந்து
3 2 4
கவலை தீர வீரைவர் கலைதேர் புதல்வர் வேண்டுமென
வவனங் களிப்ப விவர்களிப்போ டகன்ருர் புதல்வ ரவதரித்தார். (6)

| | | |
|---|---|---|
| தவமேற்கொண்டு பாதவம் போல் | = | தவஞ் செய்யத் தொடங்கி தருவைப்போல |
| சலமேயருந்தி வருந்திடு நாள் | = | கைநீர் அருந்தி வேறு ஆகாரமின்றி கோரமான தவத்தைச் செய்து நின்றபோது |
| சிவன் உள் மகிழ்ந்து | = | (சசிகலாதரராகிய)மகாதேவர்பரம சந்தோஷத்தை யடைந்து |
| வேண்டியது என் செப்பு மென்ன | = | நீங்கள் விரும்பியது யாதோ அதனைக் கூறுவீர் களாகவென்று கேட்டருள |
| சிரம்பணிந்து கவலைதீர | = | சிரசால் வணங்கி அர்ச்சனை தோத்திரங்கள் செய்து சிந்தாகுலம் ஒழிய |
| கலை தேர், ஈரைவர் புதல்வர் வேண்டும் என | = | மகாமதிமான்களாஞ் சகல சாஸ்திர சம்பன்ன பத்துப் புத்திரர்கள் உதயமாக வரந்தரவேண்டும் என்று வேண்ட |
| அவன் அங்கு அளிப்ப | = | ஸ்ரீ மகாதேவர் அவ்வாறே வரந்தர |
| இவர் களிப்போடு அகன் ருர் புதல்வர் அவதரித்தார் | = | தம்பதிகளிருவரும் மிக மகிழ்ச்சியுடன் சுவஸ்தானத் திற்கேகினர் மைந்தர்கள் பிறந்தனர். |

2 1 3
மைந்த ரொருப துளராகி மறைநூ னிறைந்து வளர்ந்த தற்பின்
றந்தை தாய ரிறந்தேகத் தனயர் கயிலைத் தலமெய்திச்
சிந்தை செய்வார் நல்குரவு தீரவுயர் வன்னிய ராவோ
மந்த நிலைசற் றுதலினு லதிகநிலைமன் னவராவோம். (7)

| | | |
|---|---|---|
| ஒரு பதுமைந்தர் உளராகி | = | நல்ல காலத்தில் அவ்வுத்தமப் பிராஹ்மணியான வள் தசபுத்திரர்களைப் பெற்ருர் |
| மறைநூல் நிறைந்து வளர்ந் ததற் பின் | = | அப்புத்திரர்கள் சர்வ சாஸ்திரங்களைப் பூரணமாக கற்று வளர் பிறை போன்று வளர்ந்து அதன்பின் |

| | | |
|---|---|---|
| தந்தை தாயர் இறந்து ஏக | = | பிதாமாதாக்கள் மோக்ஷமடைய |
| தனயர் கயிலைத்தலமேவி | | மைந்தர் கிருகத்தைவிட்டு ஸ்ரீ கைலாச பர்வத |
| சிந்தை செய்வார் | = | சிகரத்தையடைந்து சிந்திக்கலாயினர் |
| நல்குரவுதீர | = | துயரந்தீர்ந்து மேலான சிரேயசுற |
| உயர்வன்னியரா வோம் | = | மேலான சாமந்தர் ஆவோம் |
| அந்த நிலை சற்றுதலினால் | = | அச்சாமந்த பதமும் அற்பமாம் ஆகலின் |
| அதிக நிலை மன்னவ | | |
| ராவோம் | = | அதிக செல்வந்திகழ்ந்த அரசபதம் அடைவோம். |

அதுவுஞ் சிறிதாம் புவியனைத்துக் கரசராவோ மதுசற்று
நிதிதுன் னியவிந் திரராவோ நிகழ்த்து மதுவு நெடிதல்ல
பதுமஞ் செறியு பதுமயனுதல் பழுதில்பதவி யெனத்துணிந்தார். (8)

| | | |
|---|---|---|
| அதுவுஞ் சிறிதாம் புவி | | அப்பதமும் அற்பமாம் சர்வ பூமண்டலத்தையும் |
| யனைத்துக்கு அரசராவோம் | | ஆட்சி செய்யும் சக்கிரவாத்தியாவோம்அச்சாம்ராட் |
| அது சற்றும் | = | டின் சாம்ராஜ்யமும் அற்பமாம் |
| நிதிதுன்னிய இந்திர | | சங்கநிதிபதும நிதி முதலிய செல்வம் நிறைந்த |
| ராவோம் | = | தேவேந்திர பதமடைவோம் |
| நிகழ்த்தும் அதுவும் நெடி | | கூறிய அவ்விந்திர ஐஸ்வரியமும் பெரிது |
| தல்ல | = | ஆகாதாம் |
| பதுமஞ் செறியும் அயன் | | தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம்மாவாக |
| ஆதல் பழுதில் பதவியெனத் | | ஆகுதலே கெடாதபதமாம் மூத்த சகோதரன் |
| துணிந்தார் | = | ஆராய்ந்து கூற அப்பதமே சிறந்தது என நிச்சயித்தார்கள். |

பிரமனுமே சிருட்டியெலாம் பிறப்பதெம்பா லென்றுள்ளே
திரமதான மனத்தாலே சிந்தித்துடலிற் சிந்தையற
மரமதென்ன விருத்தலுமே வருநாட் பலபோய் மனோபாவ
முரமதாகி யயனுனொ ரொருப துலக முளதான. (9)

| | | |
|---|---|---|
| பிரமன் நாமே சிருட்டியெ | | சதுர்முகப் பிரம்மாயாமே சர்வ சிருஷ்டிகளும் |
| லாம் பிறப்பது எம்பால் | | உண்டாவது எம்மிடத்தினின்றும் என்று அகத்தே |
| என்று உள்ளே திரமதான | | திடமான சித்தத்தினால் தியானித்து, |
| மனத்தாலே சிந்தித்து | = | |
| உடலிற் சிந்தையற | = | தேகஸ்மரணமின்றியவராய் |

| | | |
|---|---|---|
| மரமதென்ன விருத்தலுமே | = | விருக்ஷம் போல இருந்து தவம் புரிந்தபோது, |
| வருநாள்பல போய் | = | சூரியனுல் மாறி மாறி வருகின்ற அனேக காலம் கழிந்ததன் பின்னர் |
| மனேபாவம் உரமதாகி | = | மதி திட பாவனேயுடையவராகி பிரம்மாவாயினர் |
| ஒருபதுவுலகம் உளதான | = | இப்பத்து அண்டங்களும் உண்டாயின. |

மனவா னகத்தி லிவர்பத்து வகையிற் சிருட்டி தந்தனரா
லினமா மவற்றி லோரிரவி யானுமென்று வேகினுற்
கனமா மனத்தின் விரிவாலே காணுஞ்சகங்க ளுளவாமென்
றனவா கனத்தோன் மனத்தாலே யளித்தா ளிராமற் கருள் செய்தான். (10)

| | | |
|---|---|---|
| மனவானகத்தில் இவர் பத்து வகையில் சிருட்டி தந்தனர் | = | மனே வியோமத்தில் இந்த தசப் பிரமாக்கள் தசப்பிரகாரமாக அண்டங்களேச் சிருஷ்டித்தனர் |
| இனமாம் அவற்றில் ஓர் இரவியானும் என்று வேகினுல் | = | பதின்மரில் ஒரு சூரியன் நானும் என்று சென்றனன் |
| கனமாமனத்தின் விரிவாலே | = | திடபாவனேயோடு கூடிய மனத்தின் விலாசத்தினுலே |
| காணுஞ்சகங்கள் உளவாமென்று | = | தோற்றும் உலகங்கள் யிருக்கின்றனவாம் என்று |
| அனவாகனத்தோன் மனத்தாலே யளித்தான் இராமற்கு அருள் செய்தான் | = | அம்ச வாகனத்தினுகிய பிரமதேவர் மானசபுத்திரராகிய ஸ்ரீ வசிஷ்டபகவான் ஸ்ரீ இராகவருக்கு உபதேசித்தனர் |

ஐந்தவர் உபாக்கியானம் முற்றிற்று.

ஆக விருத்தம் 380



௳

# வஞ்சவிந்திரன் கதை.

## அவதாரிகை

மூன் சூரியனால் ஐந்தவர் விருத்தாந்தத்தைக் கேட்ட பிரமதேவர் இனி யான் படைக்கவேண்டிய அவசியம் ஒன்றையுங் காணேமே என, அதற்குச் சூரியன் விநோத மாகத்திரமாத் தாங்கள் சிருஷ்டிக்கலாம். பற்றியின்றிய மனத்தால் செய்வது பந்தமாகாது மனமேயல்லவோ பந்தமோக்ஷ காரணம் என்பதற்குத் திருஷ்டாந்தமாக வஞ்ச விந்திரன் கதையைக் கூறல்.

பொருவில் சகத்தை யளிப்போனும் புருடன்றனும் புகன்மனமே
கருதுமனத்தின் செயல்செயலாங் காயச்செயல்கள் செயலன்றாம்
பகுதியுரைசெய் புதுமறையோர் பதுமாதனராய்ப் பார்படைத்தார்
பெருமாமனத்தி னுயர்சாந்தி பிறரால்றிதற் கெளிதாமோ. (1)

| | | |
|---|---|---|
| பொருவில் சகத்தையளிப் போனும் புருடன்றனும் புகல் மனமே | = | உவமையில்லா விசித்திர ஜகத்தைச் செய்பவனும் பரபுருடனும் கூறிய உள்ளமே (மனமேயாகும்) |
| கருது மனத்தின் செயல் செயலாம் காயச் செயல்கள் செயலன்றாம் | = | எண்ணுநின்ற சித்தஞ் செய்ததே செய்ததாம் சரீரஞ் செய்தது செய்ததாகாதாம் |
| பருதி உரை செய் புது மறையோர் | = | சூரியனால் சொல்லப்பட்ட அற்புத மறையோராம் ஐந்தவர் |
| பதுமாதனராய் பார் படைத்தார் | = | பிரம்மாவாய் மனோ பாவனையின் வலுமையானே உலகங்களை உண்டாக்கினர் |
| பெருமாமனத்தின் உயர் சத்தி | = | மகா ஆற்றலையுடைய மனத்தினது மேலான ஆற்றலானது |
| பிறரால் அறிதற்கெளி தாமோ | = | சாமானியரால் தெரிந்து கொள்வதற்கு சுலபமாமோ ஆகாதாம். |

உள்ள முடலைப் பாவிக்க வுடலாயதனு லுள்ளயரும்
வெள்ள ஞானத் தவருள்ளே மேவா நின்ற பாவனையாற்
பொள்ள வுடலி னலந்தீது புந்திசெய்யார் புராதனநாட்
கள்ள வினைசெ யகலிகையுங் கரவிந்திரனு மிதற்கொப்பாம். (2)

| | |
|---|---|
| உள்ளம் உடலைப்பாவிக்க | |
| உடலாய் அதனுல் உள் அயரும் = | மனம் தேகத்தைப் பாவித்தலும் தேகமாகி அக் காரணங்கொண்டு சிந்தாகுலஞ் செய்யும் |
| வெள்ள ஞானத்தவர் = | பரிபூரண ஞானத்தையுடைய புண்ணிய சீலர் |
| உள்ளே மேவா நின்ற பாவனையினுல் பொள்ள வுடலில் நலந்தீது புந்தி செய்யார் = | அந்தரத்திற் பொருந்திய அதிதிடபாவனையினுலே நவத்துவாரங்கள் பொருந்திய சரீரத்தினதுநன்மை தீமைகளை மதியின் மாட்டுவையார் |
| புராதன நாள் கள்ள வினை செய் அகலிகையுங் கரவிந் திரனும் இதற்கொப்பாம் = | முன்னொரு காலத்தில் வஞ்சகத் தொழில் செய்த= கூடாத தொழிலைச் செய்த அகலிகை யென்னும் மாதும் கூடாவொழுக்கம் ஒழுகிய வஞ்சக இந்திரனும் இதற்கிணையாவர். |

என்ன விவர்க ளாரென்று விராமன் கேட்ப முனி சொல்வான்
முன்னர் மகத நாடுடையோன் மொழியிந்திரத்துய்ம் மனனென்றோர்
மன்ன னவனுக் குயிர்போல மகிழுந்தேவி யகலிகையாஞ்
சொன்ன நகரிலொருவனுளன் றூர்த்தனவன்பே ரிந்திரனும். (3)

| | |
|---|---|
| என்ன இவர்கள் யார் என்று இராமன் கேட்க = | என்று திட்டாந்தப்படுத்த கூறிய இவர்கள் யாவர் என்று இராகவர் கேட்ப |
| முனி சொல்வான் = | ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவார் |
| முன்னர் மகதநாடுடையோன்= | பூர்வம் மகதநாட்டை ஆண்டு கொண்டிருந்தவன் |
| மொழி இந்திரத்துய்ம்மனன் என்று ஓர் மன்னன் = | கீர்த்தி பெற்ற இந்திரத்துய்ம்மன் என்னும் ஒப்பற்ற ஓரரசன் இருந்தனன் |
| அவனுக்குயிர்போல மகிழுந் தேவி அகலிகையாம் = | அவ்வரசனுக்குப் பிராணன் போலச் சந்தோஷ முறும் மனைவி அகலிகையென்னும் நாமத்தினளாம் |
| சொன்ன நகரில் ஒருவன் தூர்த்தன் உளன் = | முற்கூறிய அதே பட்டணத்தில் ஒரு விடன் இருந்தனன் |
| அவன் பேர் இந்திரனும் = | அவன் இந்திரன் என்னும் பெயரினனுவன். |

அன்னு ளந்த வகலிகையுமவ் விந்திரனுஞ் செறி கதைகேட்
டின்னு ளிந்த வகலிகையு மிவ்விந் திரனை யினி தணைந்தா
டொன்னுட் பிரிந்தோர் கூட்டமெனத் தூர்த்த சூடா மணியுடனே
சின்னுண் மகிழ்ந்தொன் ருமளவிற் செங்கோ லரசன் செவிப்படுத்தார். (4)

| | |
|---|---|
| அந்நாள் அந்தஅகலிகையும் அவ்விந்திரனுஞ் செறி கதை கேட்டு = | பூர்வ காலத்தில் கௌதமர் பத்தினியாகிய அகலிகையும் தேவேந்திரனுங் கூறிய சரித்திரத்தைக் கேள்வியுற்று |
| இந்நாள் இந்தஅகலிகையும் = | இக்காலத்திற் கூறிய இவ்வகலிகையும் |
| இவ்விந்திரனையினி தனைந்தாள் = | இத்தூர்த்த சூடாமணியாமிந்திரனைச் சேர்ந்து இரமித்தாள் |
| தொன்னாள் பிரிந்தோர் கூட்டமென தூர்த்த் சூடாமணி யுடனே = | வெகுதினம் பிரிந்திருந்தவர் சில காலஞ் சந்தோஷித்து விடசிகாமணியோடு மிக நேயமுற்றிருக்கும்போது |
| செங்கோல் அரசன் செவிப் படுத்தார் = | மநுநீதி தவருது ஆட்சிசெய்யும் அரசனது சன்னிதியில் தெரியப்படுத்தினர். |

கேட்ட வேந்தன் மிகமுனிந்து கிளருநீரி லமிழ்வித்துங்
கோட்டு மதமா வெதிரிட்டுங்கொடுந்தீக் கொழுந்திற் குளிப்பித்தும்
வாட்டுங் கசையான் மோதுவித்தும் வருத்தஞ் செய்ய வருந்தாம
னுட்ட மெதிர்பார்த் துளமொன்றி நகைசெய்திருந்தார் நலிவுணரார். (5)

| | |
|---|---|
| கேட்ட வேந்தன் மிக முனிந்து = | செவியுற்ற செந்நெறி மன்னன் சினத்தை மிகவுமடைந்து |
| கிளரு நீரில் அமிழ்வித்தும் = | மகரமச்சங்களோடு விளங்கா நின்ற கடலின்கண் மூழ்கடித்தும் |
| கோட்டு மதமா வெதிரிட்டும் = | கொம்புகளையுடைய மதயானையைக் கொண்டு மிதிக்குமாறு செய்தும் |
| கொடுந்தீக் கொழுந்திற் குளிப்பித்தும் = | கொடிய தீச்சுவாலையிற் போட்டு வாட்டியும், |
| வாட்டுங்கசையால் மோதுவித்தும் = | துன்புறுத்தும் கசையினலே இரத்தம் கிளம்ப அடித்தும் |
| வருத்தம் செய்ய வருந்தாமல் = | இவ்வாறு அனேக துன்பங்களைச் செய்யத் துயரத்தையடையாமல் |
| நாட்டம் எதிர்பார்த்து உளமொன்றி = | விழி ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டு மன்மானது ஒருமைப்பட்டு |
| நகை செய்திருந்தார் நலிவு உணரார் = | சிரித்துக்கொண்டிருந்தாரேயன்றி ஒரு சிறிதுந் துயரத்தையும் அடைந்திலர். |

அரச னேக்கி மிக வியப்புற் றறவும் வருத்த வருந்தாவா
னுரைசெய் திடுமினென் றலுமேயுள்ளங் களிப்பா ருரைசெய்வார்
வரைசெய் புயத்தாயெங் கள்முகமதியினமுதம் விழியருந்த
கரைசெய் யரியகளிப்பான் மெய்காணேம் வருத்தங் காண்பேமோ? (6)

அரசன் நோக்கி மிக வியப்புற்று அறவும் வருத்த வருந்தாவாறு = இராஜாவானவன் பார்த்து அதிக அற்புதத்தையடைந்து மிகவும் துன்புறுத்தவும் துயருருவாறு கண்டு என்னே

உரை செய்திடுமின் என்றலுமே = கூறுவீர்களாகவென்று வினவுதலும்,

உள்ளங்களிப்பார் உரை செய்வார் = மனமகிழ்ச்சியில் மூழ்கிக்கிடக்கும் அன்னூர் இன்னவாறு சொன்னூர்

வரைசெய் புயத்தாய் எங்கள் முகமதியினமுதம் விழியருந்த = மலேபோலும் புயங்களேயுடைய மன்னனே எங்களுடைய அநித்தித முகமதியினமுதத்தை அக்ஷங்கள் அயில

கரைசெய்யரிய களிப்பால் = அபாரமான ஆனந்த மிகுதியால்

மெய் காணேம் = சரீரத்தை நினேந்திலேம்

வருத்தங் காண்பேபோ = அச்சரீரத்தால் வருந்துயரை எங்ஙனம் அடைவேம்

[1] அரிந்த பொழுது முடற்றுன்ப மறியே மொன்றி லன்பாகிப்
புரிந்து பற்றுமனத் தினுடல்பொன்ற [3] வரினுந் [2] துயர் [4] தோன்ருத்
தெரிந்த பொருளின் மனமழுந்திற் றேகத்தொழில் வேறெவர் காண்பார்
விரிந்த முனிவர் சாபமும்பல் வினேயு மதனே மீட்பரிதாம். (7)

அரிந்த பொழுதும் உடல் துன்பம் அறியேம் = ஈர்வாள் கொண்டு எங்களுடைய அங்கங்களேத் துண்டந் துண்டமாக வெட்டிய போதினும் சரீர துக்கத்தை அறிந்திலேம்

ஒன்றில் அன்பாகி புரிந்து பற்றும் மனத்தில் = ஒரு பொருளின் கண்ணே மிகுந்த பிரியமாகி அழுந்தப் பற்றுறும் வனத்தின்பால்

உடல்பொன்ற துயர்வரினும் தோன்ரு = தேகங் கெடும்படியான துக்கம் உண்டாயினும் அத்துயரங்கள் தோற்ருவாம்

தெரிந்த பொருளில் மனம் அழுந்தில் = பரமப்பிரேமாஸ்பதமான வஸ்துவில் அபரோக்ஷமாய் உள்ளமானது அழுத்தமாக மூழ்கில்

தேகத்தொழில் வேறு எவர் காண்பர் = அபாரமான ஆனந்த மிகுதியால் சரீரம் வருந்துவதாதியை வேறே யாவரே காண்பார்

விரிந்த முனிவர் சாபமும் பல் வினேயும் அதனே மீட்பரிதாம் = பெருந்தவத்தினேயுடைய மகரிஷிகளது சாபமும் பெருந்தவத்தினேயுடைய மகரிஷிகளது சாபமும், எத்தொழிலும் அசைக்கமுடியாதாம்.

1 0
மாண்டு வாளா போனவுடன் மட்டொன்றில்லை யவையெல்லாந்
தாண்டு மனத்தா லுண்டாகுஞ் சலத்தாலன்றிக் காடுண்டோ
3 2
தூண்டு மனமே முதல்வடிவாய்த் தூல வுடலம் போனாலும்
4
வேண்டு முடல்களை விரைந்தெடுக்கும் விரியுங் கனவிற் செயல்போல. (8)

| | |
|---|---|
| மாண்டு வாளா போனவுடல் மட்டொன்றில்லை = | ஜனித்து மரித்து வீணாகச் சென்ற சரீரங்கள் கணக்கே இல்லை |
| அவை எல்லாம் = | அத்தேகங்கள் யாவையும் |
| தாண்டு மனத்தால் உண்டாகும் = | தாவிக்கொண்டேயிருக்கும் மனத்தாலே சகலமும் உண்டாகும் அதுவே உபாதான காரணம் |
| சலத்தாலன்றிக் காடுண்டோ = | நீரை விடுத்து வனத்தில் தருவும் கொடியும் கனியும் உளவாமோ |
| தூல உடலம் போனாலும் = | தூல சரீரங்கள் தொலைந்தாலும் |
| தூண்டு மனமே = | இந்திரியங்களைச் சலிப்பிக்கும் மனமே காரண வடிவாய் |
| முதல் வடிவாய் வேண்டும் உடல்கள் விரைந்தெடுக்கும் = | நாய் நரி முதலியவை பக்ஷணமாகக் கொள்ளும் வேண்டிய சரீரங்களை விரைவில் எடுத்துக் கொள்ளும் |
| விரியுங் கனவில்செயல்போல = | விரிந்த சொப்பனத்தில் மாறி மாறிச் செயல்கள் செய்வதே போலவாம். |

இந்த மனமே யொடுங்கிலுட லேதுமறியா தெனக்கேட்ட
வந்த நிருபன் பரதனெனு மருகின் முனியை முகநோக்கிச்
சிந்தை மயலுற் றிருந்துமிவர் சிற்பா வனைசெப் பினரென்று
புந்தி மகிழ்ந்து புறநாட்டிற் போமென்றவரைப் போக்கினனால். (9)

| | |
|---|---|
| இந்த மனமே யொடுங்கில் உடல் ஏதும் அறியாது என கேட்ட அந்த நிருபன் = | இம்மனம் புருஷப் பிரயத்தனத்தால் அதிஷ்டான மான தனது சொரூபத்தில் ஒடுங்கிடில் தேகாதி எதனையுமே அறியாது என்று கூறியதைக் கேட்ட அம்மன்னவன் |
| அருகில் பரதனெனு முனியை = | பக்கலிலுற்ற பரதனெனுமுநிசிரேஷ்டரின் திரு முகத்தைப்பார்த்து |
| சிந்தை மயலுற்றிருந்தும் = | மனோமயக்கத்தையடைந்திருந்தும் இவர் |

| | | |
|---|---|---|
| சிற்பாவனை செப்பினரென்று | = | பரமார்த்தரசம்பந்த சமானமான மொழிகளைக் கூறினர் என்று |
| புந்தி மகிற்து | = | மதி மகிழ்வுற்று |
| புறநாட்டிற் போம் என்று | = | வேறு தேசத்திற்கு ஓடிப்போங்கள் என்று |
| அவரைப் போக்கினன் | = | அவரைத் துரத்திவிட்டனன். |

வஞ்சவிந்திர கதை முற்றிற்று.

ஆக விருத்தம் 389.



உ

# மனத்தின் கதை.

இந்தக் கதையை விளையாட் டென்ன விசைத்தோ மெவர்க்கு
மந்தத் தமதா முடலொன் றயலா முடலொன் றவற்றிற்
சிந்தைச் சரீரம் விரைவிற் செயல்களெல்லாஞ் செய்து
தொந்தித் தலையு மற்ற தூலவுட லொன்றறியா. (1)

| | | |
|---|---|---|
| இந்தக்கதையை விளையாட் டென்ன இசைத்தோம் | | (மனோ சக்தியை விரித்துக் கூறுகின்றார்) இவ்வஞ்ச விந்திரவியாக்யானத்தை விநோதமாகக் கூறினோம் |
| எவர்க்கும் | = | எல்லாவுயிர்கட்கும் |
| அந்தத்தமதாம் உடல் ஒன்று | | அந்தஸ்தம் (உள்ளிருப்பது) உள்ளிருப்பதாய் தேகம் ஒன்று |
| அயலாம் உடல் ஒன்று | = | மாமிசநிர்மிதமாய் மற்ற தேகம் ஒன்று |
| அவற்றில் சிந்தைக்சரீரம் | = | அவ்விரண்டினுள் மனோ சரீரம் |
| விரைவில் செயல்களெல்லாஞ் | | சீக்கிரத்தில் தொழில்கள்யாவற்றையுமேதொடங்கி |
| செய்து தொந்தித்தலையும் | = | சம்பந்தித்துச் சுற்றிக்கொண்டே திரியும் |
| மற்றதூல உடல் ஒன்றறியா | = | அயலதாகிய தூலசரீரம் யாதொன்றையுமே தெரிந்து கொள்ளமாட்டாது=யாதொரு காரியமும் செய்யவல்லதல்லவாம். |

6
3 4
என்ருன் வசிட்ட னவனை யிந்தச்சட மாமனத்துக்
2 5
கொன்ரு வடிவ மிலதா முள்ள வடிவை விரித்து
நன்ரு யுரைப்பா யென்று ஞானக் குரிசில் கேட்பப்
பொன்ரு விதி சொற்படியே போத முனிவன் புகல்வான். (2)

| | | |
|---|---|---|
| என்ருன் வசிட்டன் | = | திருவருள் செய்தனர் ஸ்ரீ வசிஷ்டர் |
| அவனை | = | அவ்வாசிரியரை |
| சடமாய் ஒன்ரு வடிவமில | | சடமாயும் அசடமாயும்நிராகுருதியாயுமுள்ள இந்த |
| தாம் இந்த மனத்துக்கு | = | மனதுக்கு |
| உள்ள வடிவை விரித்து | = | சங்கற்ப ஆரூடமான சொரூபத்தை விஸ்தாரமாக |
| நன்ருயுரைப்பாய் என்று | | மனதிற்படும்படி அனுக்கிரகிக்க வேண்டுமென்று |
| ஞானக் குரிசில் கேட்ப | = | ஞானமயமாய் ஒளிரும் ஸ்ரீ இராகவன் கேட்ப |
| பொன்ரு விதி சொற்படியே | | கெடாத ஸ்ரீ பிரம தேவர் தமக்கனுக்கிரகித்த |
| போத முனிவன் புகல்வான் | = | வண்ணமேஞானசிரியராகிய ஸ்ரீ வசிட்டர் திரு |
| | | வருள் செய்யத் தொடங்கினர். |

2
அகில சத்தி யுடைத்தா யனந்தமான பரமம்
1 3
புகல் சங்கற்பத் தோடே பொருந்தும் வடிவே மனமா
5
மிகலுஞ் சத்தோ டசத்தா யிரண்டி னுள்ளுந் தோன்றிப்
4 6
பகருந் தொழில்க ளோடே பயில் பாவனையு மஃதே. (3)

| | | |
|---|---|---|
| புகல்அகிலசத்தியுடைத்தாய் | | சொல்லா நின்ற சர்வசக்தியுடையதாய் |
| அனந்தமான பரமம் | = | நாசமற்றதாகிய ஆன்மதத்துவம் |
| சங்கற்பத்தோடே பொருந் | | சங்கற்ப சக்தியுடன் கூடும் எவ்வுருவமுளதோ அது |
| தும் வடிவே மனமாம் | = | மனமெனப்படும் |
| இகலும் பகரும் சத்தோ | | முரண்பாடாச் சொல்லப்பட்ட ஆன்மா அனான்மா |
| சத்தாமிரண்டினுள்ளுந் | | இரண்டின் மத்தியிலிருப்பதாய் தொழில்கள் = சங் |
| தோன்றி தொழில்களோடு | | கற்பான்மகமாகச் சலிக்குமோ ஆன்மா அனான்மாக் |
| பயில் பாவனையும் அஃதே | = | களின் இடையில் ஊஞ்சலாடுகின்றதோ அந்த |
| | | வடிவம் அம்மனமே. |

எங்கே யெனினுந் தோன்றுமிந்த மனத்தைத் முத்திச்
சங்கே தத்தா லூகந்தன்னிற் கூட்டி னன்றும்
பங்கே ருகனே தியதோர் பழையகதை நீகேட்பாய்
வெங்கே தமுமச் சமுமாய் வெறும் பொய் யாமோர் வனமே. (4)

| | | |
|---|---|---|
| எங்கேயெனினும் தோன்றும் இந்த மனத்தை | = | எக்காரணத்தினுலேயும் மயலால் புலப்படும்=ஆராயாமல் இரமணீயமென நாடுங்காரணத்தால் உற்பன்னமாம் இந்த மனதினை |
| முத்திச் சங்கேதத்தால் ஊகந் தன்னில் கூட்டில் நன்றும் | = | மோக்ஷசாதனங்களில் சங்கேதம் = (இடுகுறி) சாதனம் விவேகாதி கூட்டங்களினுலாய உபாயத்தால் சேர்ப்பிப்பில் மிக நலமுடையதாம் |
| பங்கேருகன் ஓதியது ஓர் பழையகதை நீ கேட்பாய் | = | பிரம்மா கூறியதாகிய ஒரு புராதன ஆக்கியானத்தை நீ கேட்பாய் |
| வெங்கேதமும் அச்சமுமாய் வெறும் பொய்யாம் ஓர் வனம் | = | மிகுந்த துக்கமும் பயமுமாய் அத்தியந்தம் சூன்யமுமாம் ஓர் அடவியிருக்கின்றது. |

அதினோர் கோடி நீள மனந்தகோடி காத
மிதிலோர் புருடன் கண்கை யெண்ணிலாத துடையோன்
சிதருநின்ற நினைவோன் சேணு யகன்ற வடிவோன்
பதருநின்ற கணையம் பலவுங் கரத்தால் பற்றி (5)

| | | |
|---|---|---|
| அதில் ஓர் கோடி நீளம் அனந்த கோடி காதம் | = | அடவியாதிகளின் யதார்த்த ரூபத்தை ஸ்ரீ இராமருக்கு ஸ்ரீ வசிஷ்டர் தாமே தெளிவிப்பர்) அதின் ஓர் கோணமாத்திரத்தின் அளவு வெகு கோடி யோஜனையுற்றதாம் |
| இதில் ஓர் புருடன் எண் கை உடையோன் | = | இச்சம்சார ஆரண்யத்தில் ஒரே புருடன் சகத்திர கரலோசனன் அளவற்ற விஷயாகார விருத்திகள் சொல்ல விளைந்ததாம். |
| சிதரு நின்ற நினைவோன் | = | ஆகுலம் நிறைந்தவுளத்தன் |
| சேணுயகன்ற வடிவோன் | = | ஆகாயம்போன்ற விசாலமான ஆகிருதியுடையவன் |
| பதரு நின்ற கணையம் (2) | = | துடிக்கின்ற |
| பலவுங்கரத்தாற்பற்றி (1 3) | = | பலதடிகளைஆயிரக்கணக்கான கைகளால் கொண்டு. |

தனைத்தான் சிதறமோதித் தகர்ந்தே யுலறி யலறி
யனைத்தாந் திசையு மோடி யவசமாகி யடிபட்
டெனைத்தா முறுப்புந் தூளா யிருளாய் நடுக்கமிகுந்த
வினைத்தாழ் வுறுபாழ்ங் கிணற்றில்வீழ்ந்து நெடுநாண் மெலியும். (6)

தனைத்தான் சிதறமோதி = தன்னுடைய பின் பாகஞ் சின்ன பின்னமாகத் தானே தாடனஞ்செய்து
தகர்ந்தே யுலறி அலறி = நொறுங்கி வெகுண்டு ஓவென்று அலறி
அனைத்தாந்திசையும் ஓடி = எல்லாத் திக்குகளிலும் ஓட்டமிட்டு
அவசமாகி அடிபட்டு = பரவசமாய்த்தன்னைத்தானே அடித்துக்கொண்டு
எனைத்தாம் உறுப்பும் தூளாய் = சர்வ அங்கங்களும் பொடியாகி
இருளாய் நடுக்கம் மிகுந்த = அந்த காரமயமாய்ககம்பிதம் அதிகரித்த
வினைத்தாழ்வுறு பாழ்ங் கிணற்றில் வீழ்ந்துநெடுநாள் மெலியும் = தீவினையால் ஏறமுடியாது தாழ்வுறும் அந்த கூபத்தில் வீழ்ந்து வெகுகாலம் பதிதனாகித் துன்புறுவன்.

மீட்டு மெழுந்து வந்து மெய்யின் மோதிக் கதறி
யோட்டந் தனிலே சுழலு முயர்முண் ணிறைந்த கருவேற்
காட்டின் முறிய விழுந்து கனலிற் புழுப்போற் பதைக்கும்
வாட்டந் தவிர்ந்து கதலி வனத்தின் மகிழ்வுற் றிருக்கும். (7)

மீட்டு மெழுந்து வந்து = அந்த கூபத்தினின்றும் எழுந்துவந்து
மெய்யில் மோதிக் கதறி = சரீரத்தின்கண்ணே அடித்துக்கொண்டு அழுது
ஓட்டந்தனிலே சுழலும் = அனேக இடங்களில் ஓடிக்கொண்டே சுற்றுவன்
உயர்முள் நிறைந்த கருவேற் காட்டில் முறிய விழுந்து = அதி கூர்மையான முட்கள் நிறைந்துள்ள கருவேல் மரங்கள் அடர்ந்த வனத்தில் பீறும்படி விழுந்த வனாகி
கனலில் புழுப்போல் பதைக்கும் = நெருப்பில் பாய்ந்த விட்டிற் போல பெருந் துன்புறுவன்
வாட்டந்தவிர்ந்து = புண்ணிய விசேஷத்தால் தளர்வு தீர்ந்து
கதலி வனத்தில் மகிழ்வுற் றிருக்கும் = வாழைத்தோப்பிலுற்றுக் களிப்படைந்திருப்பன்.

கதலி வனத்தை விட்டுக் கருவேல் வனத்திற் சுழலும்
பதறிக் கிணற்றில் வீழும் பலகா லுழக் கண்டு
விதரு வகையாம் பற்றி வீணே வருந்து நீயா
ரெது செய்கின்ருய் நினைவென் னென்னவவ னீதிசைத் தான். (8)

| | | |
|---|---|---|
| கதலி வனத்தை விட்டு | = | வாழைத்தோப்பினின்றும் நீங்கி |
| கருவேல் வனத்திற்சுழலும் | = | கருவேலங்காட்டில் திரியும் |
| பதறிக்கிணற்றில் வீழும் | = | நடுங்கி அந்தகூபத்தில் பதிதனுவன் |
| பலகால் உழலக் கண்டு | = | அனேக முறை இங்ஙனம் அவதிப்படுதலைப்பார்த்து |
| விதரும் வகையாம் பற்றி | = | தெரித்தோடா அல்லது தப்பியோடாவண்ணம்யாம் பிடித்து |
| வீணே வருந்தும் நீயார் | = | வாளாதுயருறும் நீயாவன் |
| எது செய்கின்ருய் நினைவு என் என்ன | = | என்ன செய்கின்ருய் நினது அபிமதம் யாது என்று (விவேகன்) கேட்க, |
| அவன் ஈது இசைத்தான் | = | அவன் இதனைக் கூறத்தொடங்கினுன். |

யானென் றெருருவ னில்லை யிங்கோர் செயலுங் காணே
னீநின் றுரைக்க நினைந்து நின்னுற் றளரா நின்றே
னூனென் றியவெம் பகைநீ யுன்னு லின்பதுன்ப
நானின் றறிந்தே னென்று நல்குந் தன்னை நோக்கி. (9)

| | | |
|---|---|---|
| யான் என்று ஒருவனில்லை | = | அகமெனவொருவனுமில்லை |
| இங்கு ஓர்செயலுங்காணேன் | = | இவ்விடத்தில் ஒரு தொழிலையுங்கண்டிலேன் |
| நீ நின்றுரைக்க நினைந்து | = | நீ தடுத்து நின்று உபதேசிக்க அவ்வாறு எண்ணி |
| நின்னுல் தளரா நின்றேன் | = | உம்மால் துயருரு நின்றேன் |
| ஊன் ஒன்றியவெம்பகைநீ | = | தோஷம் பொருந்திய இத்தேகத்துக்குக் கொடிய சத்துரு நீர். |
| உன்னுல் இன்ப துன்பங்கள் நான் | = | உம்மால் சுகம் துக்கம் நான் |
| இன்று அறிந்தேன் என்று | = | இப்போது உணர்ந்தேன் என்று |
| நல்குந்தன்னை நோக்கி | = | நலியுந்தனது அங்கங்களைப் பார்த்து. |

இடிக்கு முகிலின் மழைபோ லிரங்கிக் கதறி யழுதா
னெடிக்கு ளழுகை விட்டு நுணுக்கந் தன்னை நோக்கி
வெடிக்க நகைத்தா னொடிதா மீள வெமது முன்னே
தடிக்கு மங்க மனைத்துந் தானே யுடைவே தவிர்ந்தான். (10)

| | | |
|---|---|---|
| இடிக்கும் முகிலின் மழை போல் | = | ஒலிக்கும் மேகத்தின் விருஷ்டியொப்ப |
| இரங்கிக்கதறி அழுதான் | = | இரக்கமுற்று வாடி ஓலமிட்டு அழுதான் |
| நொடிக்குள் அழுகைவிட்டு | = | கணமாத்திரையில் ரோதனத்தைவிட்டு |
| நுணுக்கந்தன்னை நோக்கி | = | சிதறிய தனது அங்கங்களைப்பார்த்து |
| நெடிதாம் வெடிக்க நகைத்தான் | = | சிரகாலம் அகங்கார மமகார பாதிதமானதால் அட்டகாசத்துடன் சிரித்தனன் |
| மீள எமது முன்னே | = | மீண்டு எம்முடைய சன்னிதியில் |
| தடிக்கும் அங்கமனைத்தும் | = | தூலித்த அங்கங்கள் யாவற்றையும் |
| தானே யடைவேதவிர்ந்தான் | = | சுயமே முறையே தொலைத்தான். |

1
விதியின் வசத்தா லிவனே ரிடமே மேவலுற்று
3 2 4
னெதிர் வந்தொருவ னயலே யிவன்போ லடியுண்டேக
முதல்வந் தவனைப்போ னமொய்ம்பா யுணர்த்த வந்தப்
6 5
பதிகன் றானும் போனான் பழைய வடிவ மொழிய. (11)

| | | |
|---|---|---|
| விதியின் வசத்தால் இவன் ஓரிடமே மேவலுற்றான் | = | புண்ணிய ஊழின் வசத்தால் இவன் ஜீவன் முக்திப் பதம் அடைவுற்றான் |
| ஒருவன் அயலே எதிர் வந்து | = | மற்றொருவன் சன்னிதியில் வந்து |
| இவன் போல் அடியுண்டு ஏக | = | முன்னவன் போல அடித்துச் சுழன்று ஆகுலத் துடன் போவதை |
| முதல் வந்தவனைப்போல நாம் மொய்ம்பாய் உணர்த்த | = | யாம் பார்த்து முன்வந்துற்றவனுக்கு அனுக் கிரகித்தது போலயாம் சாமர்த்தியமாக வினு பூர்வகம் அருள |
| அந்தப் பதிகன்றானும் | = | அந்த வழிப்போக்கனும் |
| பழைய வடிவம் ஒழிய போனான் | = | பழைய அங்கங்கள் குலைப்ப அழுது சிரித்துப் போனான் |

பிறிது மொருவன் வந்தப் பெரியகிணற்றில் வீழ்ந்தான்
சிறிதல் லாத காலந் திரும்பி யேறக் காணேம்
வெறிதுன் றியவவ் வனத்தில் வேறு மொருவன் வரலு
மறிது மென்னத் தகைந்தே யானதெல்லா முரைத் தேன். (12)

| | | |
|---|---|---|
| பிறிதும் ஒருவன் வந்து | = | மற்றொருவன் ஓடிவந்து |
| அப்பெரிய கிணற்றில் வீழ்ந்தான் | = | அந்தப் பெரிய கூபத்தில் விழுந்தனன் |
| சிறிதல்லாத காலம் | = | வெகு காலமாகியும் |

திரும்பி ஏறக்காணேம் = மீளவும் ஏறிவரக் கண்டிலேம்
வெறி துன்றியஅவ்வனத்தில்= வாசனையுடைய=பைத்தியமுடைய அக்காட்டில்
வேறும் ஒருவன் வரலும் = மற்றொருவன் எதிர்ப்படலும்
அறிது மென்னத்தகைந்தே அறிவிப்போமென்று வலுவில் நிறுத்தி என்ஞல்
ஆனதெல்லாமுரைத்தேம் = முடிந்த பரியந்தம் சர்வப்பிரகாரத்தானும் உபதேசித்தேம்.

1
ஓதிற் றென்றுங் கேளா துரப்பி யிகழ்ந்து மேன்மேன்
3 2
மோதிக் கொண்டு போஞன் மூர்க்க ரவனைப் போல்வார்
4
வாதிப் புறுவார் நிறைந்து வயிர முள்ளாற் செறிந்து
பீதிக் கிடமா யிருள்சூழ் பெருங்கா டின்று முளதால். (13)

ஓதிற்றென்றுங்கேளாது = உபதேசித்தவற்றுள் ஒன்றையுமேசெவிகொள்ளாது
உரப்பி யிகழ்ந்து மேன்மேன் = அதட்டித்திட்டிவிட்டு மிகவும் அடித்துக்கொண்டு
மோதிக்கொண்டு போஞன் = அழுதுகொண்டு போஞன்
அவனைப்போல்வார் மூர்க்கர் = அவனைப்போன்று அநேகம் உபத்திரவங்கட்குட்பட்டு
வாதிப்புறுவார் நிறைந்து சுழன்று கொண்டு திரியும் மூர்க்கர் வயிரம்போன்ற
வயிரமுள்ளால் செறிந்து = முட்களால் பூரிக்கப்பெற்று
பீதிக்கிடமாய் இருள் சூழ் பயத்துக்கு ஆஸ்பதமாய் விளங்கும் அந்தகாரம்
இன்று முளது = நிறைந்த மகாகோர அடவி இப்போதும் இருக்கின்றது.

அறவே கொடிதாய் வெந்த வடவி யெனினு மறியார்
நறவே கமழ்ந்து குளிர்ந்த நந்தவ னம்போன் மகிழ்வர்
மறவே லரசே யென்ற வசிட்ட முனியை நோக்கித்
துறவே புரிவா யிவற்றைத் தோன்றச் சொல்வா யென்ருன். (14)

அறவே கொடிதாய் = மிகவுங்கோரமாய்
வெந்த அடவியெனினும் = தாபத்திரயமாம் அக்கினி பொருந்திய காடேயாயினும் தேனும் வாசனையும் பொருந்திய சீதளமான
அறியார் நறவேகமழ்ந்து
குளிர்ந்த நந்தவனம்போல்
மகிழ்வர் = மூடர் நந்தவனம் போல் மகிழ்வர்
மறவேல் அரசேயென்றே = பகைவரை யுத்தஞ் செய்வதில் வலிபொருந்திய வேலாயுதத்தையுடைய ராமாவென்று கூறியு

வசிட்ட முனியை நோக்கி = ஸ்ரீ வசிட்டபகவானைப்பார்த்து
துறவே புரிவாய் = ஐயந்திரிபை நிவர்த்தி செய்வோய்
இவற்றைத் தோன்றச் கூறியவற்றை மனதிற்படும்படியாகத் திருவாய்
சொல்வாய் என்றான் = மலந்தருளல் வேண்டும் என்று பிரார்த்தித்தனர்.

கேட்ட குரிசி லறியக் கிளர்மா முனிவ னுரைப்பா
ஞட்ட வடியு முடியு நடுவுமின்றிப் பொய்யாங்
கூட்ட மாகி யாழ்ந்து கொடிதாய் விகற்ப நெடிதா
மீட்ட வுலகத் தியல்பே யாமுன் சொன்ன வனமே. (15)

கேட்ட குரிசில் அறிய = வினவிய ஸ்ரீஇராகவர் அறிந்துகொள்ள
கிளர்மாமுனிவன் மைத்திரியாதி குணங்கள் நிறைந்த மகத்தான
உரைப்பான் = ஸ்ரீ வசிஷ்ட பகவான் திருவாய் மலர்ந்தருளு வதாவது
நாட்ட = இதனை நிர்ணயித்தற்கு
அடியுமுடியு நடுவுமின்றி = ஆதி மத்தியாந்தரகிதமாய்
பொய்யாங் கூட்டமாகி
யாழ்ந்து கொடிதாய் விகற்ப அத்தியந்தஞ் சூன்ய விகாரத்தோடு கூடியதாய்=
நெடிதாம் = அசத்துவிகார அனேகவிகற்பங்களோடு கூடியதாம்
ஈட்டவுலகத்தியல்பே = ஈட்ட (சமுதாயம்) பிரபஞ்சத்தியல்பே
யாம் முன்ன சொன்னவனம் = யாம் முன்னர்க்கூறிய அடவியாந் (தூரத்திருப்பது மன்று மற்றென்னெனின் சம்சாரபதவியாம்)

1 3 2 4
புகையார் வனத்திற் புருடன் புலம்பிச் சுழலு மனமே
தகையா நின்ற நாமுந் தனி விவேகந் தானே
பகையா மிதனு லுள்ளம் பரத்தை யறிந்தா றினதான்
மிகையார் மனங்க ளிகழ்ந்து வேட்கை வசத்தோ டினவால். (18)

புகையார் வனத்தில் புருடன் இராகத்துவேஷமாகிய புகை பொருந்தியதாயுள்ள
புலம்பிச்சுழலும் மனமே = அவ்வாரண்யத்தில் அழுது திரியும் புருடன் மனமாம்
தகையா நின்ற நாமும் = தடுத்துக் கூறிய நாம் என்றது
தனி விவேகந்தானே = ஒப்பற்ற விவேகமேயாம்
பகையாமிதனல் உள்ளம் = சத்துருவாம் நல்ல மனமாகிய புருடன்

பரத்தையறிந்து ஆறினது = பரிபூரண பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்து விசிராந்தி யுடைந்தது

மிகையார் மனங்கள்
இகழ்ந்து வேட்கை வசத்து ஓடினது = துடிப்புற்று தீய வினைகளாற்றி நிந்தித்துவிட்டு ஆசையின் வசமாக ஓடி மாய்ந்தன.

1
விதறி யோடு மனங்கள் மேவு நரகங் கிணறு
கதலி வனம்வின் ணுலகாங் கருவேல்வன மண்ணு லகாஞ்
3 2 4
சிதறி விழுந்த கிணற்றிற் றிரும்பி யேரு தொழிந்தோன்
பதறி நரகம் புகுந்து பாவந் தொலையா ததுவாம். (17)

விதறி ஓடும் மனங்கள் = கட்டுக் கடங்காது ஓடும் சித்தங்கள்
மேவு நரகங்கிணறு = அடையா நின்ற நரகமே கூபமாம்
கதலி வனம் விண்ணுலகம் = வாழைத்தோட்டம் சுவர்க்கலோகமாம்
கருவேல் வனம் மண்ணுலகாம் = கருவேலங்காடு பூவுலகமாம்
கிணற்றில் சிதறி விழுந்த = கிணற்றில் தவறி விழுந்த புருடன்
திரும்பி ஏருதொழிந்தோன் = மீண்டும் மேலே ஏறாது போனுன் என்றது
பதறி நரகம் புகுந்து பாவந் தொலையாததுவாம் = துடிப்புற்றதீயவினைகளாற்றிரௌரவாதிபிரவேசித்து பாதகங்களின் பயன் அனுபவித்து முடியாதது ஆம்.

முனையார் முள்ளொன் றதுதான் மோக மனிதர் மடவார்
நினையா வின்ப துன்ப நின்ு லடைந்தேன் நீயே
வினையா மென்ற துணர்வால் வீயு மனநொந் துரைத்த
தனையா ரழுத தென்ற தாசை யறுக்கு மலக்கண். (18)

முனையார் முள்ளென்றது தான் = கூர்மை பொருந்தியமுள்ளென்று கூறியதானது
மோக மனிதர் மடவார் = மோகத்தையுடையவராய களத்திராதி குடும்பங்களில் ஆசாபாசங்களாகியதுரபிமானஞ் செய்வதால் மனைவிமக்களையே முள்ளென்று சொல்லப்படும்
நினையா இன்பம் துன்பம் = கருதாத சுக துக்கங்களை
நின்னால் அடைந்தேன் நீயே = உம்மால் அடைந்தனன் நீயே
வினையாமென்றது உணர்வால் = சத்துருவாம் என வியம்பியது தத்துவத்தை விசாரிக்கும் விவேகத்தால் நாசமாகா நின்ற மனமே வருந்திக் கூறியதாகும்

வீயுமனம் நொந்துரைத்தது

அனையார் அழுதது என்றது = அப்புருடனுதியர் அழுதார்கள் என்று

ஆசையறுக்கும் அலக்கண் = போக ஆசையை விடும் மனங்கள் புலப்பமாய துன்பமாம்.

2 1 3

போதம் பாதி யாகிப் புரண மாகா மனந்தான்

காதல் விடிலொந் தயர்தல் கதறி யழுத துவாஞ்

சீத மாக மகிழ்ந்து சிரித்து நின்ற தென்ற

தேத மில்லா ஞானத் தேக மான மகிழ்ச்சி. (19)

பாதி போதம் ஆகி = அர்த்த விவேகம் உடையவனாய்

புரணமாகா மனந்தான் = பரிபூரணத்தை அடையாததான மனமானது

காதல் விடில் = போக ஆசையை விடும்போது

நொந்து அயர்தல் = பரிதாபப்படுதல்

கதறி அழுதது அதுவாம் = ஓலமிட்டழுதான் என்பதாம்

சீதமாக மகிழ்ந்து சிரித்து = தண்மையாக்கச்சந்தோஷித்து

நின்றது என்றது ஏதமில்லா நகைத்துஉலவியது என்றதுகுற்றமில்லாதுண்டாய

ஞானத்து ஏகமான மகிழ்ச்சி = பூரண ஞானம் பொருந்திய மனம் சந்தோஷமுற்றதேயாம்.

முடிவின் ஞானத் தாலே மோகம் விட்ட மனந்தான்

வடிவை மாய்க்கும் பொழுது மகிழு மதுவே மகிழ்வாம்

நெடிய மொய்ம்பி னாலே நிறுத்திக் கேட்டே மென்ற

தொடிவின் ஞான வலியா லுள்ள மொருப்பட் டதுவே. (20)

முடிவில் ஞானத்தாலே = நாசரகிதமான பரிபூரண சாக்ஷாத்காரத்தானே

மோகம் விட்டமனந்தான் = சம்சார ஸ்திதியினின்றும் விடுபட்ட சித்தமானது

வடிவைமாய்க்கும்பொழுது = சங்கற்ப விகற்ப ரூபத்தை விடும்பொழுது

மகிழும் அதுவே மகிழ்வாம் = சந்தோஷிப்பதே ஆனந்த விருத்தியாம்

நெடிய மொய்ம்பினாலே = மிகுந்த பலத்தினாலே

நிறுத்திக் கேட்டேம் என்றது = நிற்குமாறு செய்து வினவினேம் என்றது

ஒடிவுஇல் ஞானவலியால் = அபரிச்சின்ன விவேக வலியால்

உள்ளம் ஒருப்பட்டதுவே = மனமானதுதன்வயமானது(அடங்கியதென்பதாம்).

அங்கத் தறைந்து கொண்ட தடர்கற் பனைகளாலே

பங்கப் படுவன் றுயராம் பரந்தோ டினதென் றதுதான்

மங்கத் தகுவா தனையான் மருண்டு சுழல்வ தாகுஞ்

2 1 3

சங்கற் பமும்வா தனையுந் தனைத்தான் வலைபோற் றளைக்கும். (21)

அங்கத்தறைந்து கொண்டது= தானே தனது சரீரத்தில் அடித்துக் கொண்டான் என்றது
அடர் கற்பனைகளாலே = நெருங்கிய கற்பனு ஜாலங்களாலே
பங்கப்படுவன் றுயராம் = கட்டுப்படுவன் பொருந்தும் துன்பமாம்
பரந்தோடினது என்றது அடித்துக்கொண்டு ஓடினனென்றது ஒளியின்றிய
தான் மங்கத்தகுவாதனையால் மலினவாதனையால் மயங்கிச் சுற்றுவதாகும்
மருண்டு சுழல்வதாகும் =
சங்கற்பமும் வாதனையும் திருசிய சங்கற்பமும் திருசிய வாசனையும் உடைய
வலைபோல்தான் தனைக்கும் = தன்னை வலையிற் கட்டுண்பதே போலத்தானே கட்டுப்படுவன்,

1
கோச காரப் புழுப்போற் கொடுங்கற் பனைவா தனையாற்
3 2 4
பாச மடைவ ரியாரும் பகர்ந்த மனத்தின் கதையை
மாசி லாத மனத்தான் மதித்து மனத்தை மாய்ப்பாய்
தேச முடையா யென்று தெளிந்த வசிட்டனுரைத்தான். (22)

கோசகாரப் புழுப்போல் = கோசகாரக் கிருமியே போல
கொடுங்கற்பனை வாதனை
யால் = தீய சங்கற்பத்தால் தீய வாசனையினுல்
யாரும் பாசமடைவர் = எவருந் தாமே பந்தமுறுவர்
பகர்ந்த மனத்தின் கதையை = கூறிய சித்தோபாக்கியானத்தை
மாசிலாத மனத்தால் = குற்றமற்ற சுத்த சத்துவசித்தத்தால்
மதித்து மனத்தை மாய்ப்பாய்= சிந்தித்துச் சித்தத் தியாகஞ் செய்வதிற்றிரமுடைய வனுதி
தேச முடையாய் என்று = எல்லாத் தேசங்கட்கும் இறைவனே (ஞான சப்த பூமியில் ஆரூடமாயிருப்பவனே) யென்று
தெளிந்த வசிட்டன் சுத்தசத்துவகுண சம்பன்னராய் ஸ்ரீ வசிஷ்ட
உரைத்தான் = பகவான் கூறியருளினர்.

மனத்தின் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் 411.



# பாலன் கதை.

## அவதாரிகை

முற்கதையில் மன சொரூபம் நிரூபிக்கப்பட்டது இப்போது பிரபஞ்சம் மித்தியா ரூபமாயினும் சங்கற்ப மாத்திரத்தால் விசாரமற்ற மதியீனருக்குப் பாரமார்த்திகபுத்தி அதிதிடப்படுவதெனப் பாலன் கதை கூறப்படுகிறது.

முழுதுசத் தியுமாய்ப் புரணமாயென்று முடிவறு பிரம மாவதுதான்
பழுதின்ஞா னிகடம் மனமலாதில்லைப் பரமமா மிதிலிலா தில்லை
யெழுதருஞ் சத்தி யாவுமாயிலங்கு யிவைக ளோர்கால மொன்றுளதாம்
வழுவிலாப் பிரமமுடைய சிற்சத்தி மறிதரு முடல்களிற் றோன்றும். (1)

| | | |
|---|---|---|
| முழுது சத்தியுமாய்ப் புரணமாய் | = | சகல காரியங்களில் மாயையெனப் பெயரியசக்தியே சர்வ சத்தியுடையதாய் |
| என்றும் முடிவறு பிரமமாவதுதான் | = | பூர்ணமாய் நித்தியமாய் அவ்யயமாய் விளங்கும் பிரஹ்ம சொரூபமாவதுவே |
| பழுது இல் ஞானிகள்தம் மனமலாதில்லை | = | காமம், வெகுளி, கோபமற்ற பிரமவித்துக்கள் மனம் அதனினும் அன்னியமாகவேனும் அனன்ய மாகவேனும் இன்ரும், |
| பரமமாம் இதிலிலாதில்லை | = | உயர்ந்ததாகிய இதன்கண் இல்லாததில்லை |
| எழுதருஞ் சத்தியாவு மாயிலங்கும் | = | கணித்தற்கரிய சக்திகளுடன் கூடியாடி எல்லாமாகி விளங்கும் |
| இவைகள் ஓர் காலம் ஒன்று உளதாம் | = | இச்சத்திகளுள் ஒவ்வொரு போதில் ஒவ்வோரிடத் தில் ஒவ்வொருசத்தியுல்லாசமுறும் |
| வழுவிலாப்பிரமமுடைய சிற் சத்தி மறிதருமுடல்களிற் றோன்றும் | = | கெடாத பிரஹ்ம சம்பந்தியாய=பிரஹ்ம ஆசிரித சிற்சத்தியானது சென்று திரும்பப்பட்ட சரீரங்களில் புலப்படும். |

காற்றிலே யசைவுங் கல்லிலே திடமுங் கனலிலே சூடும் வான்றனிலே
தோற்றலா மையுநன் னீரிலேநெகிழ்வுந் தொலைவுறு மாய்விலே மாய்வு
முற்றமாம் விதையின் மரங்களும்போல வுள்ளுறை பிரமசத் திகடா
மாற்றல்சால் காலதேச சித்திரத்தா லவனியிற் சாலிபோற் றோன்றும். (2)

| | | |
|---|---|---|
| காற்றிலேயசைவும் | = | வாயுவின்கண் சலன சத்தியும் |
| கல்லிலே திடமும் | = | பாஷாணத்திலே தாட்டிக சத்தியும் |
| கனலிலே சூடும் | = | அக்கினியில் தாக சத்தியும் |
| வான்றனிலேதோற்றலாமையும் | | ஆகாயத்திலே சூன்ய சத்தியும் |

நன் நீரிலே நெகிழ்வும் = நல்ல ஜலத்திலே திரவ சத்தியும்
தொலேவுறு மாய்விலே மாய்வும் = நாசமாகக் கூடிய பொருளிலே நாசசத்தியும்
ஊற்றமாம் விதையின் மரங்களும் போல = உள்ளீடு பொருந்திய பீஜத்தில் அடங்கியிருக்கும் தருக்கள் போல
பிரம உள்ளுறை சத்திகள் தாம் = பிரஹ்மத்தை ஆசிரயித்தீரா நின்ற சக்திகள் யாவும்
ஆற்றல் சால கால தேச சித்திரத்தால் அவனியிற் சாலி போல் தோன்றும் = மிகவும் விவஸ்தை செய்கின்ற சிற்சத்தி எக்காலத்தில் எத்தேசத்தில் எப்பொருள் பிரகடமாமோ அக்காலத்தில் அத்தேசத்தில் அப்பொருள்கள் பூமியின் கண்ணே நெற்களேப்போல உண்டாகா நிற்கும்.

பரமமே யெங்கு[1] மென்றுமுண் டாதும் பயின்மன னத்தினுன்மனமாந்
தரமறு[3] பந்தமுத்திபே[2] ருலகாஞ்[4] சத்திக ளனேத்துமாய் நிற்குந்
திரமறு தனேயர்க் கன்னேசொற் கதைபோற் செப்பியவிவையெலாந்திரமாங்
கரமலர் முகிலே யென்றலு அந்தக்கதையினே யிராகவன் வினவ. (3)

பரமமே எங்கும் என்றும் உண்டாகும் = பூரண பிரஹ்மா பின்ன ஆன்மாவேஎவ்விடத்திலும் எப்போதும் இருப்பதாகும்
பயில்மனனத்தினுல் மனமாம் = மனனஞ் செய்யும் சலனம் வாய்ந்த மனத்தால் மனமாம்
சத்திகள் = சத்திகள்
தரமறுபந்த முத்தி பேருலகாம் = மேன்மையின்றிய பந்த மோக்ஷ விஸ்தாரப் பிரபஞ்சம் ஆகிய அனேத்துமாய் நிலே பெற்றிருக்கும்
திரமறுதனேயர்க்கு அன்னே சொற்கதைபோல் = திடபுத்தியில்லாத குழந்தைகட்குத் தாய் வார்த்தையால் கட்டிச் சொல்லும் கதையையொப்ப
செப்பிய இவையெல்லாம் திரமாம் = கூறிய இவையாவும் திடமாம்
கரமலர் முகிலேயென்றலும் = கை தாமரை போன்ற மேக வண்ணனை ராமாவென்று ஸ்ரீ வசிட்ட பகவான் கூறலும்
அக்கதையினே இராகவன் வினவு = அவ்வாக்கியாயிகையை ஸ்ரீ இராகவர் எவ்வண்ணமென்று கேட்ப.

சித்தவஞ் சனையின் மூலமாங் கதையைச் செல்வனுக் கருந்தவ னுரைப்பான்
மெய்த்தக விலாதோர் சிறுவனீ யன்னை விரும்பியோர் கதைவிளம் பென்னச்
சத்தியம் போல வெறும்பொய்யே யுரைப்பாள் தரணிபன் குமரரோர் மூவர்
சுத்தவீ ரமுநற் குணங்களுஞ் சிறந்தோர் சூநிய நகரிலே யுறைவோர். (4)

| | | |
|---|---|---|
| சித்த வஞ்சனையின் மூல மாங்கதையைய் | = | மனத்தினை வஞ்சித்தற்குக் காரணமாங் கதையினை |
| செல்வனுக்கு அருந்தவ னுரைப்பான் | = | ஸ்ரீ இராகவருக்கு அரியதவசிரேஷ்டராகிய வசிஷ்டர் அருளுவார் |
| மெய்த்தவிலாதோர் சிறுவன் | = | உண்மை உணர்ச்சியில்லாத பாலகன் |
| விரும்பி அன்னை நீ ஓர் கதை விளம்பென்ன | = | அன்புடன் தாயே நீ ஒரு கதை சொல்வாயாக வென்று கேட்ப |
| சத்தியம்போலவெறும் பொய்யேயுரைப்பாள் | = | உண்மை போல அத்தியந்தம்மித்தையே கூறுவாள் |
| ஓர் தரணிபன் குமரர் மூவர் | = | ஒப்பற்ற அரச மைந்தர் மூன்று பேர் புண்ணியராய் |
| சுத்த வீரமும் நற்குணங் களுஞ் சிறந்தோர் | = | சௌரிய வீரியாதியுடையவராய் முதிதை முதலிய குணங்களால் சிறப்புடையவராய் விளங்குபவராய் |
| சூனிய நகரிலேயுறையோர் | = | அத்தியந்த அசத்துப் பட்டணத்திலமர்வோர். |

[1] மூவரி லிருவா பிறந்தில ரொருவன் மூலமாங் கருவினுமில்லை
யாவதுங் கருதித் திரிபவர் விண்ணிலளவறு பழமரச் சோலை
மேவலு மதனிற் செழுங்கனிதுய்த்து வெம்பசிதணிந்து மேற்சென்றார்
காவரு காக[3]மூன்று[2] நன்[4]னதிகள் கரை பொரு திரையொடுங் கண்டார். (5)

| | | |
|---|---|---|
| மூவரிலிருவர் | = | உரைத்த மூன்று பேரில் இரண்டு பேர் |
| பிறந்திலர் | = | உற்பத்தியாயிலர் |
| ஒருவன் மூலமாங்கருவினு மில்லை | = | ஏகன் கருப்பத்தினும் உளதாகவேயில்லை |
| யாவதுங்கருதித்திரிபவர் | = | சர்வலாபத்தையுங்கருதி வெளிச்சென்றனர் |
| விண்ணில் அளவறு பழமரச் சோலை மேவலும் | = | ஆகாயத்தில் அபரிமிதமான கனிகள் நிறைந்த விருக்ஷங்களடர்ந்த சோலையை அடைதலும் |
| அதனில் செழுங்கனிதுய்த்து | = | அதனில் இளைப்பாறி சுவாதாய கனிகளை புஜித்து |
| வெம்பசி தணிந்து மேற் சென்றார் | = | கடும்பசியினைச் சாந்தப்படுத்தி உல்லாசமாக இவர் முற்றேகினர் |

| | | |
|---|---|---|
| காஅருகாகநல்மூன்றுநதிகள் | | சோலையின் சமீபமாக நல்லமூன்று ஆறுகளைக் |
| கரை பொருதிரையொடுங் | | கரையோடு போராடும் அலைகளோடும் |
| கண்டார் | = | பார்த்தனர். |

3
ஓடுநன் னதியிலிரண்டுநீ ரில்லையொன்று வெண்மணலதா மிதனி
2 4 4
லாடிநீர் துளைந்துபருகினு ரந்தியாகி மேல்வரு நகரடைந்தார்
வீடுமூன றெதிர்ந்தா ரதிலிரண்டில்லை மேன் மரஞ்சுவரிலா தொன்று
கூடிய வவற்றிற் சுவரிலாவீட்டிற் குடிபுகுந்திருந் தனர்குமரர். (6)

| | | |
|---|---|---|
| ஓடும் நல் நதியில் இரண்டு நீரில்லை | = | பெருக்கெடுத்துச் செல்லா நின்ற நல்ல ஆற்றுனுள் இரு நதிகளின் தண்ணீரே இல்லையாம் |
| ஒன்று வெண்மணலதாம் | = | ஒன்று வெள்ளை மணல் நிறைந்தாம் |
| இதனில் நீராடி துளைந்து பருகினுர் அந்திவரலும்மேல் வருநகரடைந்தார் | = | இந்நீரில் ஸ்நானஞ்செய்து சிலநேரம் ஜலக்கிரீடை செய்து பாலுக்குச் சமானமான அந்நீரை அருந்தினர் பகல் முடிவாகி இனி உண்டாகப் போவதாகிய பவிஷயந் நகரத்தைச் சேர்ந்தார் |
| வீடுமூன்றெதிர்ந்தார் | = | இரம்மியங்களாகிய கிரகம் மூன்று கண்டனர் |
| அதில் இரண்டு இல்லை | = | அம்மூன்றனுள் இரண்டு உண்டாகவேயில்லை |
| ஒன்று மேல் மரம் சுவரிலாது ஒன்று கூடிய அவற்றில் | = | மற்ரென்ரு மேல் தம்பம்=கட்டை பித்தியாதிகளில்லாதிருந்தது ஒன்று இவ்வித இலக்கணத்தோடு கூடிய அம்மூன்றில் |
| சுவரிலா வீட்டில் | = | பித்திகையில்லா தபவனத்தில் |
| குமரர் குடிபுகுந்திருந்தனர் | = | இராஜபுத்திரர்கள் கிரகப்பிரவேசஞ் செய்து வாழ்ந்தனர். |

ஒருவருங் காணுநகரிலே வெளிவீட்டுறைபவர் கனக பாத்திரமூன் றருகுறக் கண்டா
ரதிலிரண் டோடா மறவிலுந் தூளியா மொன்று
சொரூபமில் கடத்திற் றுரோணமூன் றதனிற் றுரோணமூன்றகன்று மிக்கிருந்த
பருவரி சியைத்தாஞ் சமைத்துவாயில்லாப் பனவரெண்ணிலரர்க்கு முன் படைத்தார். (7)

| | | |
|---|---|---|
| ஒருவருங்காணு நகரிலே | = | எவரும் பாராத பட்டணத்தில் |
| வெளிவீட்டுறைபவர் | = | வெட்ட வெளியாகிய இல்லத்திலிருப்பவர் |
| கனக பாத்திரம் மூன்று அருகுறக் கண்டார் | = | சொர்ண பாத்திரம் மூன்று சமீபத்தில்யிருக்கப் பார்த்தனர் |
| அதில் இரண்டு ஓடாம் | = | அம்மூன்றனுள் இரண்டு கபாலமாம் |

அறவினுந்தூளியாமொன்று = அத்தியந்தம் பொடியாம் மற்றென்று
சொருபம் இல் கடத்தில் = வடிவமற்ற பானையில்
துரோணம் மூன்று அதனில் = துரோணம் (மரக்கால் இரண்டு) பதக்கு
துரோணம் மூன்று அகன்று மிக்கிருந்த பரு அரிசியை தாம் சமைத்து = மூன்று மரக்காலில் மூன்று கழிந்தது போக சேடித்திருந்த பருத்து நீண்டு மிகுந்த அரிசியை அரச குமாரர் பக்குவப்படுத்தி
வாய் இல்லாம் பனவர்கீகு எண்ணிலார்க்கு முன் படைத்தார் = வயிறும் வாயுமில்லாத வைதிக மறையவர்களளவில்லாதவர்கட்கு முன்னர் விருந்து செய்தார்.

1
அவரெலா நிரம்ப வுண்டபின் மிகுந்ததருந்தினர் வேட்டைகளாடி
யிவர்கண் மூவருமங் கிருந்தனரென்ன விளமையா னம்பினன் சிறுவன்
3 2 3
புவனமு மிவ்வா றறிவிலோர் காண்பர் புகல் மனவிரிந்த சங் கற்பம்
விவரமா மிதனு லுலகமா மிதனை விடுநிரு விகற்பமா யிடுநீ. (8)

அவரெலா நிரம்ப வுண்ட பின் மிகுந்த தருந்தினர் = அப்பிராமனர் யாவரும் பூரணமாக அருந்திய பின்னர் சேடித்தை புஜித்தனர்
வேட்டைகளாடி இவர்கள் மூவரும் அங்கிருந்தனர் என்ன = வேட்டைக்கு குதூகவத்துடன் விநோதித்து இவ்வரச புத்திரர் மூவர்களும் அப்பவிஷயநகரத்தில் வாழ்ந்திருந்தனர் (என்று தாத்திரி கூற)உபமாதா கூற
இளமையால் நம்பினன் = விசாரமில்லாத மதியினுல் அப்பாலன் நிச்சயமாகவே விசுவசித்தனன்
இவ்வாறு புவனமும் அறிவில்லோர் காண்பர் = இங்ஙனம் விசாரமில்லாத சித்தமுடையவர் சம்சாரரசனையைதிரமுறுவதாய் பார்ப்பார்
புகல் மனம் விரிவு சங்கற்பம் விவரமாம் = சொல்லாநின்ற மனோவிலாசமே சங்கற்ப வகைகளாம்
இதனுல் உலகமாம் = இவற்றுல் சர்வ ஜகத்தும் ஆம்
இதனைவிடு = ஆகலின பீஜபூதமாய சங்கற்பமாத்திரத்தை நீ விட்டொழித்தி
நிருவிகற்பமாயிடு நீ = நிருவி கற்பத்தைப்பற்றி நிச்சயமாக சாந்தியை யடைந்து சுகிப்பாய்.

பாலன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் 419.

உ

# சித்தன் (சாம்பரிகன்) கதை.

## அவதாரிகை

முன் பாலன் கதையில் பிரபஞ்சம் மித்தையேயாயினும் அவிசாரதசையில் பரமார்த்தம் போல தோற்றுமெனப்பட்டது இப்போது சித்தன் கதையில் கேவல தோற்ற மாத்திரமன்று சுக துக்க அனுபவமுண்டாகலின் அர்த்தக்கிரியாதியுமுள தாயினும் மனோ விலாச மாத்திரம் பிரபஞ்சமெனப்படுகின்றது விசாரத்தால் சம்சாரம் நிவர்த்தியாமாதலின் விசாரமுபதேசித்தல்.

2 1 3
தங்கள்சங் கற்பத் தாலறி வில்லோர் சாலமோகிப்பர் நல்லறிஞர்
பொங்குநல் விசார மதியினுன் மயங்கார் புந்தியாற் பொய்ம்மையை
யொழித்துத்
துங்கமெய் யுணர்வாய் பந்தமற்றிருந்துந் தொடர்புறு பந்த முண்டென்று
பங்கமுற் றயரே லமலமாயழியாப் பரம்பொருள் பந்தமுற் றிடுமோ. (1)

| | |
|---|---|
| அறிவில்லோர் தங்கள் சங்கற் பத்தால் சாலமோகிப்பர் = | விவேகமில்லாத மூடர் தமது சிந்தனை வயத்தால் மிகவும் மயக்கத்தை அடைவர் |
| நல்லறிஞர் பொங்குநல் விசார மதியினுல் மயங்கார் = | மெய்யுணர்வினர் நிரந்தரம்நேயத்தோடு ஆராய்ச்சி மிக்க புத்தியால் மயக்கத்தை மருவுரூர் |
| புந்தியாற் பொய்ம்மையை யொழித்து = | தெளிந்த மதியினுலே அசத்தியமயமான திருசியத்தையகற்றி |
| துங்கமெய்யுணர்வாய் = | பரிசுத்தமான சத்ரூபப் பிரஹ்மத்தை விசாரித் துணர்வாய் |
| பந்தமற்றிருந்தும் = | பந்தரகிதனுகயிருந்தும் |
| தொடர்புறு பந்தமுண் டென்று = | அநாதியாய்த் தொடர்ந்த பந்தமுடையவனென்று புலம்பி |
| பங்கமுற்றயரேல் = | துக்கமுற்றுவாளா சோகிக்கவேண்டாம் |
| அமலமாய் அழியாப் பரம் பொருள் பந்தமுற்றிடுமோ= | நிர்மலமாகிக் கெடாத ஆன்ம தத்துவம் பந்தத்தை எங்ஙனம் எதனுலடையும்? |

1 3 2 4
அந்தமற் றென்றுய் விகற்பமற் றறிவாயழிவிலாப் பரம்பொரு ளிருக்க
6 5
பந்தமுற் றவரார் முத்திபெற்றவரார் பாவனை விகற்பமே யனைத்துஞ்
7
சிந்தனை விரிவு பந்தமா மதனைத்தீர்ந்திடன் முத்தியா மனத்தின்
9 8 10
சொந்தலீ லையினுற் றாரமா மணித்துந் தூரமுமண்ணிதாய்த் தோன்றும். (2)

அந்தமற்று விகற்பமற்று
அறிவாய் அழிவிலாப்
பரம்பொருள் = அனந்தமயமாய் நிருவிகற்ப சிற்கனனந்தமாய் நித்தியமாகிய மேன்மையாம் ஆன்ம வஸ்து

ஒன்ருயிருக்க = துவைதமற்ற அத்வைதமாயிருக்க

பந்தமுற்றவர் ஆர்,
முத்திபெற்றவஞ் ஆர் = பந்தமடைந்தவர் யாவர்? விடுபட்டவர் யாவர்?

அனைத்தும்பாவனைவிகற்பமே = சகலமும் மனத்தின் எண்ணங்களே

சிந்தனை விரிவு பந்தமாம் = மன உல்லாசமே பந்தமெனப்படும்

அதனைத் தீர்ந்திடல்
முத்தியாம் = அம் மனத்தை ஒழித்தலே மோக்ஷமாம்

மனத்தின் சொந்தலீலையினல் = சித்தத்தினுடைய தன் விளையாட்டினலே

அணித்தும் தூரமாம் = தனது எதார்த்த சொரூபம் அதி சமீபமாயிருந்தும் தூரமாகத் தோற்றுகின்றன

தூரமும் அண்ணிதாய்த்
தோன்றும் = நிந்திக்கத்தக்க திருசியங்கள் அதிசேய்மைத்தாயிருந்தும் சமீபமாகத் தோன்றுகின்றன.

1
கருத்தின்வல் லமையாற் கற்பமோர் கணமாங் கணமொருகற்மா மிவற்றைத்
திருத்தமா யுணர்த்து மொருகதை யதனுற் செகமெனு மிந்திர சாலங்
குருத்துவ மானமனத்தினு ளிருக்குங் கொள்கைதோற் றிடுமென வுரைப்பா
5 4 3 2
ளெருத்தனிங் கரிச்சந்திர குலத்துள்ளா னுத்தர பாண்டவ நாட்டோன். (3)

கருத்தின் வல்லமையால் = சிந்த சங்கற்ப சத்தியினலே செய்ய முடியாததையுஞ் செய்விக்கும் சாமர்த்தியத்தினலே)

கற்பம் ஓர் கணமாம் = கற்பகாலம் ஒரு கணமென அற்பமாம்

கணம் ஒரு கற்பமாம் = கண காலம் ஒரு கற்பமென மகத்தாம்

இவற்றைத் திருத்தமாய்
உணர்த்தும் ஒரு கதை = இவ்விடயங்களை மிகத் தெளிவாகத் தெரிவிக்கும் ஒப்பற்ற ஒரு விருத்தாந்தமுளது (நடந்தது உண்டு அதனைக் கூறுகின்றேன்)

அதனல் செகமெனும் இந்திர
சாலம் = அவ்வுத்தமமான கதையினல்பிரபஞ்ச சம்பந்தமான இந்திர ஜாலம்

குருத்துவமான மனத்தி
னுள்ளிருக்கும் கொள்கை
தோற்றிடுமெனவுரைப்பான் = வாசனையினல் கனமான மனத்தினுள் ஸ்திதி பெற்றிருக்கும் இயல்பு இலங்கிடும் என்று கூறத் தொடங்குகின்ருர்

உத்திர பாண்டவ நாட்டோன் = உத்திர பாண்டவமென்னும் விசாலதேசத்தை அரசாண்டவனாய்
அரிச்சந்திர குலத்துள்ளான் = அரிச்சந்திரகுலத்து உதித்தவனாய்
இங்கு ஒருத்தன் = இவ்வுலகில் ஒரு அரசனிருந்தான்.

செந்திரு வாணி புகழ்மகன் விந்தைசெறிபுயன் லவணனும் பெயரோன்
மந்திர நிறைந்த வமைச்சர்தற் சூழ மணிகொள் சிங்காதனத் திருப்ப
விந்திர சால வல்லவனொருவ னெய்தின னிறைஞ்சிநின் றேத்திச்
சந்திர னனைய பீலிகையேந்தித் தராபதி காண்கெனச் சுழற்ற. (4)

செந்திருவாணி புகழ் மகன் = மகாலட்சுமியுஞ்சரசுவதியும் புகழும்படியான மிகச் செல்வமும் கல்வியும் வாய்ந்தவன்
விந்தை செறிபுயலவணனும் பெயரோன் = அற்புதம் நிறைந்த புஜபலத்தையுடைய இலவண மகாராஜன் என்னும் பெயரினை வாய்ந்தவன்
மந்திரம் நிறைந்தவமைச்சர் தற்சூழ்மணி கொள் சிங்காதனத்திருப்ப = ஆழ்ந்த அனேக ஆலோசனை மிகுந்தமந்திரிமார்கள் தன்னைச்சுற்றியிருக்க நவரத்தின கசிதமாய் சிங்காதனத்தின்கண் வீற்றிருந்தபோது (அக்கொலு மண்டபத்தில்)
இந்திர ஜால வல்லவன் னெய்தினன் = இந்திர ஜால வித்தையில் தேர்ந்தவன் ஒருவன் ஒருவன் வந்துற்றனன்
இறைஞ்சி நின்று ஏத்தி = அரசன் எதிரே நமஸ்கரித்து நின்று தோத்தரித்து
ஏத்தி சந்திரன் அனைய = சந்திரனுக்குச் சமானமான
தராதிபதி காண்கென பீலிகை ஏந்திச் சுழற்ற = பூபதியே இவ்விசித்திரத்தைப் பார்ப்பீர்களாகவென மயிற்றோகையைக் கரத்திற் கொண்டு சுற்றிய காலத்தில்.

சுத்தமாம் பரத்தாற் பலவிதசிருட்டி தோற்றிட மாயை தோற்றுதல்போற்
சித்தனுற் காட்டிச் சுழற்றுறு பீலித்திகிரியை மன்னவன் பார்த்தா
னத்தலந் தனிலே சைந்தவதேசத் ததிபதிவிடுத்த வோர்தூதன்
றத்துறு புரவி யொன்றுகொண் டெய்திச் சதமகன் பரிக்குநே ரென்று. (5)

சுத்தமாம் பரத்தால் பலவித சிருட்டி தோற்றிட = பரிசுத்த பரமான்மாவினால் நானாவித ஜகத்து விவர்த்தமாகத் தோன்றிட
மாயை தோற்றுதல் போல் = அவற்றின் பீஜமாய மாயையானது பிரதீதியாவது போல

| | | |
|---|---|---|
| சித்தனுற் காட்டிச் சுழற்றுறு பீலித்திகிரியை மன்னவன் பார்த்தான் | = | இந்திரஜாலக்காரனும் சித்தனுல் காண்பிக்கப் பெற்றுச் சுழற்றப்பட்ட சக்காகாரமான மயிற் பீலியின் தோகையை அரசன் நோக்கினன் |
| அத்தலந்தனிலே சைந்தவ தேசத்ததிபதி விடுத்த ஓர் தூதன்தத்துறுபுரவியொன்று கொண்டெய்திச் சதமகன் பரிக்குநேர்என்று | = | அவ்விடத்திற்றுனே சயிந்தவ தேச அரசன் அனுப்பிய ஓர் சாமந்தன் தாவி விரைந்து செல்லும் குதிரையொன்றைக்கொண்டுவந்து தேவேந்திரரது உச்சைச்சிரவசமானமாம் என்று கூறி. |

1
மன்னவ வுனக்கென் றெங்கள்கோன் விடுத்த வயப்பரியென்றலுஞ் சித்த
னின்னது போல்வதில்லை நீ யிதனிலேறுவா யென்ற னனிணையோன்
சொன்னவை கேட்டுச் சித்திரம் போலத் துரகமே நாட்டமாய் வேந்தன்
3 2
கன்னலீ ரிரண்டங் கிருந்தன னறிஞர் கவலைதீர் சமாதியுற்றென்ன. (6)

| | | |
|---|---|---|
| மன்னவ உனக்கென்று எங்கள் கோன் விடுத்த வயப் பரியென்றலும் | = | ஹே இராஜாதி ராஜனே தங்களுக்குக் கொடுக்கும் படியாக எங்கள் பூபதியாகிய பிரபு அனுப்பிய வயம் (வெற்றி) வேகம் பொருந்திய குதிரை யென்று கூறியபோது |
| சித்தன் இன்னது போல்வதில்லை நீ இதனில் ஏறுவா யென்றனன் | = | இந்திர ஜாலிகன் இதற்கொப்பான நல்ல குதிரை அகப்படுவது அரிது ராஜாவே இதில் ஆரோகணித்துப் புவனஞ் சுற்றிப் பார்த்து வரலாம் என்று |
| இனையோன் சொன்னவை கேட்டு | = | இவ்விந்திர ஜாலக்காரன் சொல்லிய வாக்கியங்களைக் கேட்டவுடனே |
| சித்திரம் போலத்துரகமே நாட்டமாய் வேந்தன் | = | ஓவியம்போல குதிரையையே நோக்கிக்கொண்டு மன்னவன் |
| அறிஞர் கவலைதீர் சமாதியுற் றென்ன | = | மகான்கள் கிலேசம் அறக்கழிந்த நிருவி கற்ப சமாதியையடைந்திருந்தது போல |
| கன்னல் ஈரண்டு அங்கிருந் தனன் | = | இரண்டு முகூர்த்தம் நான்கு நாழிகை அச்சிங் காதனத்திலேயே இருந்தனன். |

வேத்தவை யிருந்தோ ரையமும் வியப்பு மிகுந்தன ரரும்பிய கமலப்
பூத்திர ளோடை போற்குவிந் திருந்தார் போதமோ ருபாதியோ டலைந்து
மூர்த்தமோ ரிரண்டு சென்றபின் றவிசின் முன்னுற வீழ்வுரு நின்ற
பார்த்திபன் றன்னை யயலுளோர் தாங்கப்பரந் துழன் மனந்தெளிந்
துணர்ந்தான். (7)

| | | |
|---|---|---|
| வேத்தவையிருந்தோர் | | மன்னவனது சபா மண்டபத்திருந்தோர் |
| ஐயமும் வியப்பும் மிகுந்தனர் | = | சந்தேகத்தையும் விஸ்மயத்தையும் பெரிதடைந்தனர் |
| அரும்பிய கமலப்பூத்திர ளோடை போல் | = | தாமரைப் புஷ்பவனமுற்ற தடாகம் ஒப்ப |
| குவிந்திருந்தார் | = | குவிதலையுற்றிருந்தனர் |
| போதம் ஒரு பாதியோ டலைந்து | = | பிரஞ்ஞை=ஒப்பற்ற மனத்தோடு மோக வயத்தால் சலித்து |
| மூர்த்தம் ஓர் இரண்டுசென்ற | | இரண்டு முகூர்த்தம் (நாழிகை நான்கு) கழிந்தபின் |
| தவிசின் முன்னுற வீழ்வுரு | | ஆசனத்தினின்றும் முன் பாகத்தில் வீழ்வதற்கு |
| நின்ற பார்த்திபன் றனனை | = | முயலா நின்ற அந்த மன்னவனை, |
| அயலுளோர் தாங்க | = | சமீபத்திலிருப்பவீர் ஏந்த |
| பரந்துழல் மனம் தெளிந் துணர்ந்தான் | = | விரிந்து சஞ்சரித்த மனந்தெளிந்து முன் நிலையை அறிந்தான். |

1 அனையவன் றன்னை 3 யமலநெஞ்சினை நீ யயர்வுற லுந்ததென் னென்ன
2 வினையமந் திரியர் 4 வினவலும் வேந்தன் விழித்திது கேளுமென்றுரைப்பான்
6 றுணையுறப் பீலி சுழற்றியிச் 5 சித்தன் சொல்லிட மயங்கி யிப்பரிமே
னிணைவுற 7 வேறி வேட்டையின் பொருட்டா னீநெறி கடிதுறச் சென்றேன். (8)

| | | |
|---|---|---|
| அனையவன்றன்னை | = | அவ்வரசனை |
| வினைய மந்திரியர் | = | கவனமாய அமைச்சர் |
| அமல நெஞ்சினை நீ | = | தெளிந்த மதியுடைய தேவரீர் |
| அயர்வுறவந்தது என் என்ன வினவுதலும் | = | மயங்கும்படியாக நேர்ந்தது யாதோ என்று கேட்டலும் |
| வேந்தன் விழித்து இது கேளு மென்று உரைப்பான் | = | அரசன் ஆச்சரியமான கதையைக் கேட்பீர்களாக வென்று சொல்லத் தொடங்கினன் |
| இச்சித்தன் துணையுறப்பீலி சுழற்றி | = | இவ்விந்திர ஜாலக்காரன் வேகமாக மயிற்றோகையைச் சுழற்றி |
| சொல்லிடநிக ன்ற மயங்கி யிப்பரிமே னிணைவுற ஏறி | = | நல்ல குதிரை ஏறலாமென்று இவன் கூறிடப் பிராந்த சித்தனாகி இக்குதிரையின் மீது ஆரோகணித்து |

வேட்டையின் பொருட்டா = வேட்டையாடவேண்டுமென்ற எண்ணத்தால்

னீள் நெறி கடிதுறச்

சென்றேன் = வறியவனாகவேவெகு தூரம் வேகமாகச்சென்றேன்.

1
அறிவறு மனத்தா லயர்வுறுபோகத் தறிவிலார் மருண்டு போவது போற்
3 2
செறிநெடுந் தூரம் பரியினூற்சென்று தீயினுலியா வையும் வெந்து
பொறியெழும் பாலை வனத்திலே புகுந்து புரவியு மியானு மெய்வருந்தி
யெறிசுடர் மேற்பா லெய்துறுமளவு மிடருற மயங்கிநெஞ் சிளைத்தேன். (9)

அறிவுரு மனத்தால் = விவேகமில்லாத சித்தத்தினுலே (அஞ்ஞான மனத்தாலே)

அயர்வுறு போகத்து அறிவிலார் மருண்டு போவது போல் = துக்க ஏதுவாகப் பொருந்திய விஷயாதி போகங்களில் ஜடமூடர் மயக்கமுற்றவதிப்படுவது போல,

பரியினுல் செறிநெடுந்தூரம் சென்று தீயினுலியாவையும் வெந்து = குதிரையின் மீது ஆரோகணித்து வெகு தூரம் சென்று அக்கினிக்கணம் எழும்பும்படியான அவற்ருல் தகிக்கப்பட்டு

பொறி எழும்பாலைவனத்திலே புகுந்து புரவியும் யானும் மெய்வருந்தி = அக்கினி கணம் மிகும் பாலைவனத்தில் பிரவேசித்துக் குதிரையும் யானும் மெய்வருந்தி = சரீரம் களைத்துப்போய்,

எறிசுடர் மேற்பா லெய் துறுமளவும் = கிரணங்களை வீசும் சூரியன் மேற்குத் திசையில் செல்லும் பரியந்தம்,

இடர் உற மயங்கி நெஞ் சிளைத்தேன் = துன்பம் பொருந்த மயக்கமுற்று மனம் கன்றினேன் (வருந்தினேன்).

1
குடும்பபா ரத்தை விவேகிகள் கடக்குங்கொள்கை போற் பாலையைக் கடந்து
நெடும்பனை நாவல் கடம்பெலுமிச்சம் நிறைந்து புட்குரலினு னிரம்பி
3 2
யிடும்பைதீர் சோலை யெய்தலு மாங்கோரிளங்கொடி பிணித்தன்தெகழுத்திற்
4
கடும்பரி யெனைவிட் டகன்றது கங்கை கலந்தவர் பாவமேயென்ன. (10)

குடும்ப பாரத்தை விவேகிகள் கடக்குங் கொள்கை போல் = சம்சார பாரத்தை ஆத்மானுத்ம விவேகியர் தாண்டுந்தன்மை போல்

பாலையைக் கடந்து = அப்பாலைவனத்தைத் தாண்டி,

| | | |
|---|---|---|
| நெடும்பணை நாவல் கடம்பு எலுமிச்சம் நிறைந்து | = | நீண்ட சாகோபசாகைகளைப் பரப்பிய நாவல் கடம்பு எலுமிச்சம் நிறைந்து |
| புள் கிரலினுல் நிரம்பி இடும்பை தீர் சோலை எய்தலும் | = | பட்சிகளின் ஆரவாரங்களினுல் ஆகுலம் மிகுத்து துயரைத் துடைக்கும் குளிர்ந்த சோலையை அடைதலும், |
| ஆங்கு ஓர் இளங்கொடி என் கழுத்திற் பிணித்தது | = | அவ்விடத்தில் ஒரு சிறிய லதை எனது கண்டத்தில் சுற்றிக்கொண்டது |
| கடும்பரி என்னை விட்டகன்றது | = | அதிவேகக் குதிரை என்னைவிட்டு ஓடிப்போய் விட்டன |
| கங்கை கலந்தவர் பாவமே யென்ன | = | கங்கையில் ஸ்நானஞ் செய்தவரது பாவந் தொலைந்து போவது போல. |

1
கழுத்துறு கொடியா லூசல்போற் றூங்கிக்காவுறை தென்றலாற் குளிர்ந்து
முழுத்திற மோகத் தழுந்திநெஞ் சயர்ந்தேன் முழுக்குநற் பூசனை நியமம்
3 2
விழுத்தகு நல்லூ ணின்றியே நிசியாம்வீண் பொழுதனைய வப்பொழுதிற்
பழுத்தவல் லிருளுந் துன்பமுங்குளிரும் பல்லறை யோசையுந் துணையாய். (11)

| | | |
|---|---|---|
| கழுத்துறு கொடியால் ஊசல் போல் தூங்கி | = | கண்டத்திற்பற்றிக் கொண்டலதையால் ஊஞ்சலைப் போலத் தொங்கியாடிக் கொண்டு |
| காவுறை தென்றலாற் குளிர்ந்து | = | அச்சோலையில் வீசும் தென்றற் காற்றினுலே சீதளத்தையடைந்து |
| முழுத்திறம் மோகத்தழுந்தி நெஞ்சு அயர்ந்தேன் | = | அத்தியந்தம் பெரு மயக்கத்தில் அமிழ்ந்து மன மழுங்கினேன் |
| முழுக்கு நற்பூசனை நியமம் விழுத்தகு நல் ஊண் இன்றியே வீண் நிசியாம் பொழுதனைய | = | ஸ்நானம், நல்ல தேவார்ச்சனை முதலிய நியமங்களைச்செய்யாமலும் இராஜ போஜனஞ் செய்யாமலும் சிரார்த்தாதி செய்ய யோக்கியமல்லாத அப்பொழுதில் |
| பழுத்த வல்லிருளும் துன்பமும் குளிரும் பல்லறை யோசையும் துணையாய் | = | மிக்க பேரிருளும் துயரமும் சீதளமும் தந்த பந்திகளின் டங்காரமும் ஆகிய சதுரங்க சேனைகளோடும் சகாயமாய் இருந்தேன். |

மனத்திரு ளகற்று மறிவுபோ லந்தவல்லிரு ளிரவிவந் தகற்றப்
புனைத்துறு கொடியை யறுத்தவ ணிறங்கிப் பொழில்புகுந் தொருவரைக் காணேன்
கனத்ததோர் பகலி லெட்டிலொன்றுன கடிகையங் ககன்றதற் பின்ன
ரினத்தலா ளொருத்தி தன்னைமுன் னெதிர்ந்தே னிரவினை மதியெதிர்ந் தன்ன. (12)

| | | |
|---|---|---|
| மனத்திருள் அகற்றும் அறிவு போல் அந்தவல்லிருள் இரவி வந்து அகற்ற | = | இருதய அந்தகாரத்தை நீக்கும் உணர்வுபோலும் அக்கொடிய பூதாந்தகாரத்தை சூரியன் வந்து நீக்க |
| புனேத்துறு கொடியை அறுத்து அவன் இறங்கி பொழில் புகுந்து ஒருவரைக் காணேன் | = | சுற்றிக்கொண்டிருந்த லதையை சேதித்து அவ்விடத்தில் இறங்கி சோலையிற் பிரவேசித்து ஒரு பிராணியையுஞ் சந்தித்திலேன் |
| இரவினே மதியெதிர்ந்தன்ன | = | இருளினே சந்திரன் சந்தித்தது போல் |
| கனத்ததோர் பகலில் எட்டில் ஒன்ருன கடிகையங்கு | = | தொழில் மிகுதியாகச் செய்வதற்கு கனமாகப் பொருந்திய எட்டில் ஒன்ருன கடிகையங்கு(மூன்றே முக்கால் நாழிகை) |
| அகன்றதன் பின்னர் | = | கழிந்ததன் பின்னர் |
| இனத்தல்லாள் ஒருத்தி தன்னே முன்னெதிர்ந்தேன் | = | தாழ்ந்த ஜாதியான ஒரு பதினறு வயதுப்பெண்ணே யான் சந்தித்தேன். |

கருகிய நிறமுங் கருநிறத்துகிலுங் கைத்தலத் தன்னமு மாகி
யருகுவந் துறலும் பசிப்பிணியாற்ரு தவளேநா னன்னமே யன்னந்
தருதியென் றிரந்தேன் பசியினுலெவர்க்குந் தாழ்வு வந்துறு மெனல் கண்டேன்
வருதவஞ் செயாதோர் விரும்பிய பொருட்போன் மற்றவ ளளித்தில ளன்னம். (13)

| | | |
|---|---|---|
| கருகிய நிறமுங்கருநிறத் துகிலும் கைத்தலத்து அன்னமுமாகி அருகு வந்துறலும் | = | கறுத்த வண்ணமும் கருப்பான அழுக்குப் புடவையும் கரத்தில் கஞ்சிப் பானேயைத் தாங்கினவளாய் ஒய்யாரமாக அம்மடந்தை சமீபத்தில் வந்தெய்தலும் |
| பசிப்பிணியாற்ருது அவளே நான் அன்னமே அன்னந் தருதியென்றிரந்தேன் | = | பசி நோய் பொறுக்க முடியாமல் அக்குமரியையான் அன்னப்பேடு போன்றவளே கொஞ்சம்சோறுகொடுவென்று யாசித்தேன் |
| பசியினுலெவர்க்கும் தாழ்வு வந்துறும் எனல் கண்டேன் | = | பசிப்பிணியால் (க்ஷுத்பிபாசையினுலே) எத்தகையவர்கட்கும் கஷ்டம்வந்துறுமென்பதை கண்கூடாகக் கண்டேன் |
| வருதவஞ் செயாதோர் விரும்பிய பொருட்போல மற்றவள் அளித்திலள் அன்னம் | = | பின்வருஞ் செல்வத்துக்கு சகாமதவம் இயற்ருதவர் இச்சித்தபோக்கியம்போல் தாழ்ந்த அக்கறுப்பி அன்னம் சிறிதுந் தந்திலள். |

1 6
சோலைதோ றுழலு மவள்பிறகேகிச் சோருமென் பசித்துயர் சொல்ல
நீலைநின் றுரைப்பா ணீசர்கன்னிகையானினக் கெனதன்னமா மென்னின்
3 2 4
மாலையிட் டெங்கள் சேரியிற்பிதாமுன் வந்தெனைப் புணர்தியே லிந்த
வேலையி லளிப்பே னென்றலு மியைந்தேன் விருப்பொடு மளித்தனளன்னம். (14)

| | | |
|---|---|---|
| சோலைதோறுழலும் அவள் பிறகேகி சோரும் என் பசித் துயர் சொல்ல | = | சோலைதோறும் திரிகின்ற அக்கன்னிகையின் பின்னே சென்று வாட்டும் என்னுடைய பசி துக்கத்தைக் கூறி யாசிக்க |
| நீலை நின்றுரைப்பாள் | = | கறுப்பி சற்று நின்று கூறுவாள் |
| நீசர் கன்னிகையான் நினக்கு எனது அன்னம் ஆம் எனில் எங்கள் சேரியில் பிதா முன் வந்து எனை மாலையிட்டுப் புணர்தியேல் | = | யான்புலையர் தம் மகள் உனக்கு என்னுடைய சோற்றுக்கஞ்சி உண்ணலாமென்றால் நாங்கள் வாழும் சேரியில் என் தந்தை உத்தரவு மூலமாக என்னை விவாகம் செய்துகொண்டு என்னோடு கூடி வாழச்சம்மதிப்பையேல் |
| இந்த வேளையில் அளிப்பேன் | = | இவ்வாபத்துக்காலத்தில் அன்னந்தருவேன் என்றலும் |
| இயைந்தேன் | = | சம்மதித்தேன் |
| விருப்பொடும் அளித்தனள் அன்னம் | = | அன்போடும் பாதி அன்னந்தந்தனள். |

1
நல்கிய பாதி யன்னமு மருந்தி நாவலின்கனிச் சுவை பருகி
யொல்கிய துயர்போ யிருத்தலும் புறத்திலுலாவுநல் லுயிரென வென்னைப்
2 4
புல்கிய கரத்தாற் பற்றினள் பிதாமுன்போயினள் யாதனு சரீர
3 5
மல்கிய பயஞ்செய் நரகிலேகொடு போய்மறுக் கமே செய்யு
மாறென்ன. (15)

| | | |
|---|---|---|
| நல்கிய பாதி அன்னமும் அருந்தி நாவலின் கனிச் சுவை பருகி ஒல்கிய | = | அவள் அன்புடன் அளித்த பாதி அன்னத்தையும் புசித்து நாவற்பழரசத்தை மாந்தி |
| துயர் போயிருத்தலும் | = | பெருந்துன்பம் போய் இளைப்பாறி இருந்தபோது |
| புறத்தில் உலாவும் நல்லுயிரென என்னைப் புல்கிய கரத்தால் பற்றினள் பிதா முன் போயினள் | = | பாகியத்தில் சுற்று நின்ற இன்னிய பிராணனைப் போல என்னை அனுசாரம் பொருந்திய கையினாலே பிடித்துக்கொண்டு அவள் தந்தையின் முன்பாகப் போய்ச் சேர்ந்தனள் |

| | | |
|---|---|---|
| யாதனு மல்கிய சரீரம்பயஞ் செய் நரகிலே கொடுபோய் மறுக்கமே செய்யுமாறென்ன | | வேதனை மிகுந்த சரீரங்கொடுந்துத்துயரஞ்செய்யும் பொருட்டு நரகத்திற்கொண்டு போய்ப் போட்டு வெந்துயர் தந்துழற்றுவதே போலுமிருந்தது. |

நண்புறு மிவனென் னுயகனுக நல்கெனத் தாதையும் பொருந்திப்
பண்புற விருவர் தமையும்வே தாளபந்தனவ னத்தினின் றகன்று
கண்புகத் தோன்றுங் காலதூதரைப்போற் கருநிறத்தவன் கொடு போகி
யுண்புலால் வீசுஞ் சேரியிலடைந்தா னொருப்படு மணஞ்செய்வா
னுன்னி. (16)

| | | |
|---|---|---|
| நண்புறுமிவன் என் நாயக னுக நல்கென | = | நேசத்தோடுற்ற இம்மன்னவனை என் மணாளனுக மணஞ்செய்து வைப்பாயாகவென்று அவள் வேண்ட |
| தாதையும் பொருந்திபண்புற இருவர் தமையும் வேதாள பந்தன வனத்தினின்றும் அகன்று கண்புகத் தோன்றுங் கால தூதரைப் போல் கருநிறத்தவன் கொடு போகி உண்புலால் வீசும் சேரியில் அடைந்தான் | = | தந்தையும் இசைந்து அழகாக அவ்விரண்டு பேரையும் வேதாள பந்தனமென்னும் அவ்வனத்தினின்றும் புறப்பட்டு மரண காலத்தில் பிரத்தியக்ஷமாய்த் தோற்றும் யமகிங்கரரைப்போல கறுப்பு வண்ணத்தவன் கொண்டு போய் உண்ணு நின்ற புலால் நாற்றம் வீசும் சேரியிற் சேர்ந்தான் |
| ஒருப்படு மணஞ் செய்வா னுன்னி | = | ஒருமைப்பட்டு விவாகஞ் செய்ய உத்தேசித்து. |

1
வானரம் புரவி குக்குடங் காகம் வராகமென்பனவரிந் தெடுப்ப
2 4
வூனரம் புணங்கப் பறவைவீழ்ந்தலைப்ப வுலவியசி றுவர்கைத் தசையி
6 7
லீனவீ யிரைப்ப வுதிரமுமென்பு மெல்லையில் சேரியி லெய்திக்
கானரம் பைகளே நாட்டியகுடிலிற் கடிம ணந்தொடங்கினர் களிப்பால். (17)

| | | |
|---|---|---|
| வானரம் புரவி. குக்குடம் காகம் வராகம் மென்பன வரிந்து எடுப்ப | = | குரங்கு, குதிரை, கோழி, காக்கை பன்றியென்னும் ஜந்துக்களின் தசையைப் பிரித்து ஒரு புறமெடுப்ப |
| ஊன் நரம்பு உணங்கப் பறவைகள் வீழ்ந்தலைப்ப | = | மீதி மாமிசத்தை உலரும்படி கட்டிய நரம்புகளில் கோர்த்து அமைத்துள்ள தோரணங்களில் பருந்து முதலியவைகள் அடித்து அலைக்க |

| | |
|---|---|
| உலவிய சிறுவர் கைத் தசையில் ஈன ஈ இரைப்ப வுதிரமும் எல்லையில் என்பும் சேரியிலெய்தி = | விளையாடித் திரியும் குழந்தைகளின் கரத்தில் உள்ள மாம்சத்துண்டத்தில் தாழ்ந்த ஈக்கணங்கள் மொய்த்து சப்தமிட அளவற்ற எலும்புகளும் கிடக்கின்ற அச்சேரியையடைந்து |
| கான் அரம்பைகளே நாட்டிய குடிலில் களிப்பால் கடிமணந் தொடங்கினர் = | காட்டு வாழைகள் நாட்டிய குடிசைகளில் சந்தோஷத்துடன் விவாகஞ் செய்ய ஆரம்பித்தனர். |

2
மலினவூண் றுன்னுஞ் சிறுகணுனேக்கி மருகனல் லவ னென மகிழ்ந்தாள்
1 3
கலியினுங் கறுத்த கூன்கிழமாமி கடையர்மற் றியாவருங் கூடி
யொலிபடு பறைகண் முழக்கினர் மதுவு மூன்களுஞ் சமைத்தன ரவளை
நலிதரு பாவம் யாதனுசரீர நல்குமா றெனவவ னளித்தான். (18)

| | |
|---|---|
| கலியினுங்கறுத்த கூன் கிழ மாமி = | கலி புருடனைப் பார்க்கினும் மிகவுங் கறுத்து விற்போல் வளைந்த கிழட்டு மாமியார் |
| மலின ஊன் துன்னுஞ் சிறுகணுல் நோக்கி மருமகன் நல்லவன் என மகிழ்ந்தாள் = | மலினமாம்சம் மன்னும் சிறிய விழிகளால் நன்ருகப் பார்த்து மருமகன் நம் மகளுக்கேற்ற மன்மதன் என்று சந்தோஷித்தாள் |
| கடையர் மற்றியாவருங்கூடி ஒலிபடுபறைகள் முழக்கினர் = | அவர் தம்முறவினர்களாகிய நீசர் யாவரும் ஒருங்கு கூடிச் சப்திக்கும்படி தம்பட்டம் முதலியவற்றைக் கொட்டினர் |
| மதுவும் ஊண்களும்சமைத்தனர் | தேன் பெங்த மாமிசங்கள் பலவகை அட்டனர் |
| அவளை நலிதருபாவம்யாதனு சரீரம் நல்குமாறென அவன் அளித்தான் = | அக்கன்னிகையை துயரந்தரும் அதருமம் வேதனை சரீரம் கொடுப்பதே போல அம்மாமன் நல்லோரையிற் கன்னிகாதானஞ் செய்தான். |

கடிய பாதகங்க ளுருவுகொண்டனைய கடையர் கல்யாண நாளேழின் முடிதலு
மவளோ டெண்மதி கழித்தேன் முகிற்முலை பூத்தவள் வாணுள்
கொடியதோர் விபத்து தருந்துயர்போ லோர்குழந்தையை யளிக்க வக்குழந்தை
வடிவற வெந்த கட்டைபோனிறத்து வளர்ந்தது மூர்க்கர்தம் மனம்போல். (19)

| | |
|---|---|
| கடிய பாதகங்கள் உருவு கொண்டனைய = | கொடிய பிரமஹத்தியாதி மகா பாதகங்கள் மானிட வடிவத்தை யெடுத்து வந்தது போன்று |
| கடையர் கல்யாணம் நாள் ஏழில் முடிதலும் = | நீசர் விவாக உற்சவம் ஏழு தினம் நடந்து முடிந்த பின்னர் |

| | |
|---|---|
| இவளோடு எண்மதிக் கழித்தேன் = | இம்மங்கையோடு எட்டு மாதங்கள் கூடி வாழ்ந்தேன் |
| முகிள்முலை பூத்தவள் வாழ் நாள் = | கோங்கு அரும்பினையொத்த தனங்கள் வாய்ந்த புஷ்பவதியான குமரியுடன் வாழுங்காலத்தில் |
| கொடியதோர் விபத்து தருந் துயர்போல் ஓர் குழந்தையை யளிக்க = | மிகவுங் கொடியதாகிய ஒரு ஆபத்தானது துயரந் தருவது போல ஒரு பெண் குழந்தையைப் பெற்றனள் |
| அக்குழந்தை வடிவு அற வெந்த கட்டைபோல்நிறத்து வளர்ந்தது மூர்க்கர்தம்மனம் போல் = | அக்குழவியானது அழகு சிறிதும் இல்லாமல் கொள்ளிக்கட்டையைப் போல நிறத்தினையுடைய தாய் மிகக்கறுத்து மூர்க்கரது மனம் தூலித்து வளர்வதே போல் வளர்ந்தது. |

2 1 3
பின்னர்மூ வாண்டிற் பேதைமையளிக்கும் பிறப்பென வொருமகப் பெற்று
ளன்னவண் மீட்டு மாசையிற்றோன்று மனர்த்தமே யென்னவோர் குழவி
தன்னையு மளித்தா ளிவரொடுநெடுநாட் டங்கினன் குடும்ப பாரத்தி
னின்னலா லவர்தா பத்தினுல்வருந்து மிடும்பையாற் சரைத்த தென்
யாக்கை. (20)

| | |
|---|---|
| மூவாண்டின் பின்னர் பேதைமையளிக்கும் பிறப் பென ஒரு மகப்பெற்றுள் = | மூன்று வருடங்கழிந்ததன் பின்னர் அறியாமையைத் தரும் ஜன்மமே போல ஒரு புத்திரனைப் பெற்றெடுத்தாள் |
| அன்னவள் மீட்டும் ஆசையிற் றோன்றும் அனர்த்தமே யென்ன ஓர் குழவி தன்னையும் அளித்தாள் = | எனது மனைவி மறுபடியும் ஆசாபாசத்தினுலே தோன்றும் துன்பமே போல ஒரு குழந்தையையும் பெற்றுள் |
| இவரொடு நெடுநாள் தங்கினன் = | இக்குடும்பத்தோடும் அனேக வருடங்கள் வாழ்ந்தேன் |
| குடும்ப பாரத்தின் இன்னலால் அவர் தாபத்தினுல் வருந்தும் இடும்பையால் சரைத்தது என் ஆக்கை = | சம்சார பாரந்தின் துக்கத்தால் அக்களத்திரபுத்திராதியருறும் அவதியின் சிந்தையினுல் மிகமிகவும் வெந்து கொண்டிருக்கும் மதியுடன் அனேக கஷ்டங்களால் எனது சரீரமானது சராவஸ்தையை யடைந்தது. |

வெம்புறு முப்பான் மெலியுநாளந்த விந்தவெற் பருகுறு சாரற்
பைம்புயன் மறுத்து மண்ணினீர்சுண்டிப் பசியினுலுயி ரெலாம் பதைப்பக்
கொம்பொடு கொடியும் புல்லும்வெந் தெங்குவெங் கோடையாற் பொடிபட வரலு
மெம்புதுக் கிளைஞ யிறந்தவரனேக ரெங்கணு மேகின ரனேகர். (21)

| | |
|---|---|
| வெம்புறு மூப்பால் மெலியுநாள் அந்த விந்தவெற்பு அருகுறு சாரல் பைம்புயல் மறுத்துமண்ணில் நீர்சுண்டிப் பசியினால் உயிரெலாம் பதைப்ப கொம்பொடு கொடியும் புல்லும் வெந்து எங்கும் கோடையால் பொடிபடவரலும் = | முத்தாபங்களால் தபிக்கும் ஜரையினாலே வாடுங் காலத்தில் அவ் விந்தியாசலத்தருகே யிருக்கும் பொழில்களில் கார்மேகங்கள் பொழியாமல் ஒழியவே பூமியில் ஜலம் அற்பமுமில்லாமல் வறண்டு பசி தாகமென்னும் பிணியால் பிராணிகளெல்லாம் தடுமாற்றமடைந்து தபிக்கப் பல சாகைகள்லதைகள் யாவும் கருகி அப் பிரதேசம் எவ்விடத்திலும் மிகுந்த தாபத்தினாலே பஞ்சம் உண்டாதலும் |
| எம்புதுக்கிளைஞர் இறந்தவர் அநேகர் எங்கணுமேகினர் அநேகர் = | எனது நவீன உறவினர் பலபேர் உயிர் துறந்தனர் பலபேர் பல இடங்கட்கும் ஓடிப் பிழைத்தனர். |

தனையரி லிருவர் தோள்களிலிருப்பத் தலையின்மீ தொருவனைத் தாங்கி
மனைவியோ டேகி மெய்யெரிகொளுத்த மாய்வுரு தந்தநா டகன்றோர்
பனையடி நிழலின் மைந்தரையிறக்கிப் பதைப்பொரு சிறிதொழிந் திருந்தேன்
வினைநர கேறிப் பழவினையோடே மேவிய வின்பம தென்ன. (22)

| | |
|---|---|
| தனையரில் இருவர் தோள்களிலிருப்ப தலையின்மீது ஒருவனைத் தாங்கி மனைவியோடேகி மெய் எரி கொளுத்த மாய்வுருதுஅந்த நாடு அகன்று ஓர் பனை அடி நிழலில் மைந்தரையிறக்கி ஒரு சிறிது பதைப்பு ஒழிந்திருந்தேன் = | யானோ மாமனார் முதலினோரைவிட்டு மனைவியைக் கூட்டிக்கொண்டு இரண்டு தோட்களிலும் குழந்தைகளுள் இரண்டு இருப்பச் சிரசினிடத்தேயொரு பையனைத் தூக்கிக்கொண்டு களத்திரத்தோடுஞ் சென்று தேகம் அக்கினிமயமாய்க் கொளுத்த சாவுறாமல் அந்தத் தேசத்து எல்லை கடந்து ஒரு தாலவிருக்ஷத்தினது சாயையில் குழந்தைகளைக் கீழே விட்டு அற்பநேரம் இளைப்பாறியிருந்தேன், |
| வினைநரகேறிப் பழவினை யோடே மேவிய இன்பம தென்ன = | பாபத்தானே ரௌரவத்தில் வீழ்ந்து வருந்தி வெளிப்போந்து நரகசேட பாபகருமத்தோடு மறுபிறப்பையடைந்துள்ள அற்ப சுகம்போலும். |

1
வளைதரு மூப்பால் வழிவருந்துயரான் மைந்தர்க ளிருவரை யணைக்கக்
3 2 5 4 6
களைகொலோ துயிலோ சாய்ந்தனன்மனைவி கண்டுளங் கரைந்துநா னிருந்தே
ரிளையவன் றுயிலா தென்மடியேறி யிருந்துநீர் சொரிதர வழுது
விளைபசி யாற்றே னுதிரமுழுதும் வேண்டுமிப் போதுதா வென்ன. (23)

| | |
|---|---|
| வளைதருமுப்பால்வழிவருந்துயரால் மைந்தர்களிருவரை அணைக்க களைகொலோ துயிலோ மனைவி | நாளடைவில்பற்றியுள்ளஜரையால்வெகுதூரம் நடந்த துக்கத்தாலும் இருபாலர்களை அணைத்ததும் ஆயாசமோ நித்திரையோ மனைவி கீழே படுத்தனள் |

| | |
|---|---|
| சிறிந்தனள் நான் கண்டு மனங்கரைந்து இருந்தேன் = | நான் அதனைப் பார்த்து மனம் உருகி கவலைப் பட்டிருந்தேன், |
| இளையவன் துயிலாது என் மடியேறியிருந்து நீர் சொரிதர அழுது விளைபசியாற்றேன் உதிரமும் ஊனும் வேண்டும் இப்போது தாவென்ன = | கடையனுகிய பிருச்சகன் என்னும் தனயன் தூங் காது எனது மடிமீது ஏறி நின்றுகொண்டு கண்ணீர் பெருக, ரோதனஞ் செய்து உண்டாகாநின்ற பசி பொருக்கமுடியவில்லை, இரக்தமும், மாமிசமும், உண்பதற்கு வேண்டும் இப்போதே தருதியென்று கூறி. |

இட்டமா மிளவ லென்னெதிர்பதைப்ப வென்செய லேதுமற் றுயிர்போய்க்
கட்டைபோ லிருந்தேன் விடாதவனழுத கண்ணினீர் கண்டறக் கரைந்து
மட்டிவன் வாரா னென்றுயிர்விடுவான் வனக்க கனல்வளர்த் ததில்வீழக்
கிட்டிநின் றுகைத்தே னிந்தவாசனத்தின் கீழ்வுற வீழ்வுறு மளவில். (24)

| | |
|---|---|
| இட்டமாம் இளவல் என் எதிர் பதைப்ப = | அதிப்பிரியமாய கடைக்குட்டி என் எதிர் நின்று கத்தித்துள்ள |
| என்செயல் ஏதுமற்று உயிர் போய்க் கட்டைபோல் இருந்தேன் = | என்னால் அவ்வாபத்தை நீக்க யாதொரு உபாய முஞ் செய்யமுடியாதவனாய் உயிர் சென்றுவிட்டது போல காஷ்டம்போலிருந்தேன், |
| விடாது அவன் அழுதகண்ணில் நீர் கண்டு அறக்கரைந்து மட்டு இவன் வாரான் என்று = | ஓயாமல் அக்குழந்தை ரோதனஞ் செய்த விழிகளி னீரைப் பார்த்து அத்தியந்தம் பரிதாபத்தை யடைந்து எவ்வளவு கூறினும் அடங்கியிருக்கமாட் டான் கத்திச்சாவான் என்று |
| உயிர் விடுவான் = | பிராணத்தியாகஞ் செய்துகொள்ளும் பொருட்டு, |
| வனக் கனல் வளர்த்து அதில் வீழ கிட்டி நின்று உகைத்தேன் இந்த ஆசனத்தில் கீழ்வுற வீழ்வுறுமளவில் = | காட்டுத் தீயைமூட்டி அதன்கண் வீழும்பொருட்டு அதன் அருகாமையினின்று குதிக்க முயற்சித்தேன் இச் சிங்காதனத்தினின்றும் பூமியில் கீழே விழப் போனேன் வீழ்வுறும் அப்போது. |

2 1 3
தாங்கினீர் பலருஞ் சயசயவென்னத் தாக்குறு பல்லிய முழக்க
வீங்குணர் வுற்றே னீசனன்ருகி லவணனு மன்னவ னுனேன்
றீங்குறு சித்தன் செயலின்மோகித்தேன் சீவனுக் கவத்தைக ளனேகம்
புரங்தற வுளவென் றறிந்தனனென்று பகர்வுழி யொளித்தனன் சித்தன். (25)

| | |
|---|---|
| பலரும் தாங்கினீர் சயசய வென்ன = | அனேகர் என்னை விழாமற் பிடித்துக்கொண்டீர் ஜய ஜயவென்று நீங்களுரைத்த சப்தத்தினாலும் |
| தாக்குறு பல்லியம் முழக்க ஈங்கு உணர்வுற்றேன் = | தூரி முதலிய வாத்தியங்களைக் கோஷித்ததாலும் இவ்விடத்தில் பிரஞ்ஞையையடைந்தேன், |

| | |
|---|---|
| நீசன் அன்ருகிலவணனும் மன்னவனுனேன் = | தீக்குதித்த புற்கசன் அல்லனுகிலவண மகாராஜா வாயினேன் |
| தீங்குறு சித்தன் செயலில் மோகித்தேன் சீவனுக்கு அவத்தைகள் அனேகம் பாங்குறவுள வென்று அறிந்தனனென்று பகர்வுழி = | தீதைத் தோற்றுவிக்கும் மாயச்செய்கையினுல் மிகவும் மோகத்தை அடைந்தேன் ஜீவனுக்கு வாசனையால் அவத்தைகள் அளவில்லன ஒழுங்காக அஞ்ஞானத்தினுல் திரமாக இருக்கின்றனவென்று அறிந்தனனென்று இவ்வண்ணம் கூறியபோது, |
| சித்தன் ஒளித்தனன் = | சித்தன் மறைந்துவிட்டனன். |

இருந்தமந் திரிகள் சித்தனன் றிவனென் றேற்றி லனிமைப்பினுண் மறைந்தான்
பொருந்திய வுலக மனவிரிவென்றே புலப்படக் காட்டுவான் விடுத்த
திருந்திய தெய்வ மாயையீதாகுஞ் செப்புமிச் செயலினுற் றீரப்
பெருந்தகை பரத்தின் விகாரமே மனமாம் பேருலகென்றன ரென்ருர். (26)

ஒ

| | |
|---|---|
| இருந்த மந்திரிகள் இவன் சித்தன் அன்று ஒன்று ஏற்றிலன் இமைப்பினுள் மறைந்தான் பொருந்திய உலகம் மனவிரி வென்றே புலப்படக் காட்டு வான்விடுத்த திருந்தியதெய்வ மாயை யீதாகும் = | சபையில் சூழ்ந்திருந்த அமைச்சர்கள் இவன் இந்திரசாலக்காரனல்லன் ஒரு வெகுமதியும் வேண்டிலன், நொடியில் அந்தர்த்தானமானுன் தோற்றிய பிரபஞ்சமானது மனோவிலாசமாத்திரமென்றே தெளிவுறுத்தும்படி உணர்த்தும் பொருட்டு அனுப்பிய எல்லா வல்லமையுமுள்ள தெய்வசம்பந்தமான மகா மாயையேயாமிது, |
| செப்பும் இச் செயலினுல் தீரப் பெருந்தகை பரத்தின் விகாரமே மனமாம் பேருலகென்றன ரென்ருன் = | சொல்லாநின்ற இந்தச் செய்கையினுல் சர்வசக்தியையுமுடைய மகாவிஷ்ணுவின் விலாசமே (மனோவிருத்தியே) பெரிய உலகமாமென்று அமைச்சர்கள்கூறினுர்களென்பதாக ஸ்ரீ வசிஷ்டபகவான் இரகுநாதனை நோக்கிக் கூறினுர் : |

சித்தன் (சாம்பரிகன்) கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—445.



# 3. உற்பத்திப்பிரகரண இதோபதேசம்.

## அவதாரிகை

முன் சித்தன் கதையில் தன் சங்கற்பத்தால் அற்பகாலத்திநருனே அனேக வருடம் மனதிற்குச் சம்சாரமென்று சொல்லப்பட்டது இப்போது சித்த ஏகாக்கிரசித்தி யின் பொருட்டு அதனது பாகியவிருத்தி நிரோதஞ் செய்யத்தக்கது என்பதாகக் கூறப்படுகின்றது.

2 1 3
ஆயம னத்தின் செயல்செயலா மதனு லொழிந்ததொ ழிந்துளதா
மேயம னத்தின லைவொழித்தோர் மிகவு நல்லறி யானத்தோர்
5 4 6
தூயம னமாயிடில் வெற்பாற் சுழலாக் கடல்போற் பிறப்பிறப்பா
மாயைம யக்கங்கெடு மென்னு வசிட்டன் மீண்டு முரைசெய்வான். (1)

மனத்தின்ஆயசெயல்செயலாம் அதனுல் ஒழிந்தது ஒழிந்துள தாம் = மனத்தினுலுதயமாகிய தொழிலே தொழிலாம் மனதினுலே யாது தியாகிக்கப்பெற்றதோ அது தியாகிக்கப்பெற்றதாம்,

ஏயமனத்தின் அலைவு ஒழிந் தோர் மிகவும் நல்ல தியானத்தோர் = பொருந்திய மனத்ினது சஞ்சலத்தை ஒழித்தவர் உத்தமோத்தமமான தியானமுடையவர்,

மனம் தூயதாயிடில் வெற்பாற் சுழலாக் கடல்போல பிறப்பு இறப்பாம் மாயை மயக்கங் கெடும் என்னு = மன நோயான சஞ்சலம் நீங்கி சுத்தமாயிடில் மந்தரகிரியால் அசையாத பாற்கடல்போல ஜனன மரண சம்சாரப் பிராந்தி ஒழிந்து சாந்தி உண்டாகு மென்று கூறி

வசிட்டன் மீண்டும் உரை செய்வான் = ஸ்ரீ வசிஷ்ட பகவான் மீளவும் கூறுவாராயினர்.

தளையா நிற்கும் பலபோகச் சங்கற்பஞ்சேர் மனவிருத்தி
முளையால் வளரு மாமாயை மோகமென்னு நச்சுமரம்
விளையா நின்ற மனநோய்க்கு மேலோர் விதித்த பரிகார
மிளையா தெளிதா யதனுலே யியற்றலாகுமிது கேட்பாய். (2)

தளையா நிற்கும் பலபோகச் சங்கற்பஞ்சேர் மனவிருத்தி முளையால் வளரும் = தன்னைப்பிணிக்கும் சப்தாதி பஞ்சவிஷய சங்கற்ப விப்பிரமங்களேயாய மனோவிருத்திகள் சம்சார விஷ விருக்ஷங்களுக்கு அங்குரவரிசைகளாய்விருத்தியாம்

மாமாயை மோகமென்னும் நச்சுமரம் விளையாநின்ற மன நோய்க்கு மேலோர் விதித்த பரிகாரம் = சம்சாரப் பிராந்தியென்னும் விஷவிருக்ஷம் உண்டாகாநின்ற மன நோயான துன்ப நிவர்த்திக்கு மகான்கள் நியமித்த அருமருந்து,
இளையாது எளிதாய அதனாலே இயற்றலாகும் = வருந்தாது சுலபமாகச் சாதிக்கப்பெறுவது மற்றொருவர் அபேக்ஷையின்றித் தன் பிரயத்தனத்தாலே அல்லது அந்த சத்துவமனத்தினாலே செய்து
இது கேட்பாய் = கொள்ளத்தக்கது அவ்விதுதன்னைக் கேட்குதி.

**மிகமா லுறுபல பொருள்களையு மேவாதொழித்தோர் மனம்வென்றோர்**
**சுகமா யெளிதாய்த் தனக்குரித்தாந் துயர்தீர் நிராசை யறிவரியோர்**
**சகமார் மனித புழுவொப்பார் சான்றோருரைத்த நூற்பழகி**
**யகமா நினைவு தீர்மனத்தா லயருமனதைத் திருப்பிடலாம். (3)**

மிகமாலுறுபல பொருள்களையும் மேவாதொழித்தோர் மனம் வென்றோர் = மிகவும் விரும்பாநின்ற பல பொருள்களையும் பற்றறுது விட்டவர்கள் மனத்தை ஜயித்தவராவர்
சுகமாய் எளிதாய் தனக்குரித் தாந்துயர்தீர் நிராசையறி வரியோர் = இன்பமாய் அநாயாசமாய்த் தன்வயமாய்த் துன்பந் துடைக்கும் அசங்கற்பமாய் வைராக்கியமாய் உணர்ந்து தேடுதற்கு முடியாதோர்,
சகமார் மனித புழுவொப்பார்= உலகத்தில் இகழத்தக்க புருடகீடமாவர்
சான்றோர் உரைத்த நூற் பழகி = பெரியோர் கூறிய சாஸ்திரங்களை அப்பியசித்து
அகமாம் நினைவு தீர்மனத் = நானென்றுயெழும் எண்ணந் தீர்ந்த மனத்தினாலே
தால் அயரும் மனதைத் திருப்பிடலாம்= விஷயங்களில் மொத்துண்டு மயங்கும் மனதை வயப்படுத்தலாம்.

**இரும்பா லிரும்பு திருந்துவபோ லியற்றுமனத்தான் மனந்திருந்தும்**
**திரும்பா நிராசை வடிவாகிச் செறியுந்தன்னு லியற்றுவதாய்**
**விரும்பா நின்றோர்க் கெளிதான வெய்யமனத்தி னுபசாந்தி**
**பெரும்பா ரந்தீர் நற்கதியாம் பிறிதோர்கதியு நன்றாகா. (4)**

இரும்பால் இரும்பு திருந்துவபோல் = சம்மட்டியாம் இரும்பால் அக்கினியில் காயவைத்த இரும்பைத் திருத்தப்படுவதேபோல
இயற்றும் மனத்தால் மனம் திருந்தும் = யோகக்ஷேம சிந்தனையைச் செய்யும் அவிவேக மனத்தை சத்துவமனத்தால் சேதிக்கலாம்

| | |
|---|---|
| திரும்பா நிராசைவடிவாகி செறியுந்தன்னால் இயற்றுவ தாய் விரும்பா நின்றோர்க்கு எளிதான வெய்யமனத்தின் உபசாந்தி பெரும்பாரந்தீர் நற்கதியாம் பிறிதோர் கதியும் நன்றாகா = | மாறுபடாத வைராக்கியவுருவமாய் முயலாநின்ற தன்னாலேயே சாதிக்கத்தக்கதாய் பேரானந்தத்தை வாஞ்சிப்பவர்கட்கு அதிசுலபமான மலினவாசனா விசிஷ்டமனத்தினது பரமசாந்தியானது பெரிய சம்சார பாரத்தைத் தீர்க்கும் சுப கதியாம் மற்றெக் கதியும் நலமுடையதாகாது. |

1 3 2
வாவு மனத்தை யசங்கற்ப வாளாலறுக்கி னிறைந் தெங்கு
4
மியாவு மதுவாம் பொருடோன்று மிந்தவழிநின் றறிவாலே
மேவு மனதை விழுங்கியதின் மேலா மாயா விகற்பமெலா
மோவு மதியா லறிவுகடந் துளத்தை விழுங்கும் பொருளுணர்வாய். (5)

| | |
|---|---|
| வாவு மனத்தை அசங்கற்ப வாளாலறுக்கில் = | விஷயங்களைப் பற்று நின்ற மனத்தை அசங்கற்ப மென்னுஞ் சஸ்திரத்தால் சேதிக்கில் |
| எங்கும் நிறைந்து யாவும் அதுவாம் பொருள் தோன்றும் = | சர்வகதமாயும் சர்வான்மகமாயும் சாந்தமாயுமுள்ள பிரஹ்மம் விளங்கும் |
| இந்த வழி நின்றுஅறிவாலே மேவுமனதை விழுங்கியதின் மேலாய் = | இம்மகா பதவியில் நிலைத்து நின்று விவேகத்தாலே வாசனாவசமாய் பொருந்திய மனத்தை உட்படுத்தி அதின் மேலாம் வஸ்து ஆவாய் |
| மாயாவிகற்பமெலாம் ஓவும் மதியால் அறிவு கடந்து உளத்தை விழுங்கும் பொருளு ணர்வாய் = | பவபாவனையினின்றும் விடுபட்ட பரம மதியினாலே எண்ணங்கள் தீர்ந்து சித்த உபாதிரகித பரமான் மாவைச் சாக்ஷாத்கரிப்பாய். |

வருந்தி முயன்று மனந்தன்னை மாற்றி யில்லை யுண்டென்னு
திருந்த பதத்தி லிருந்திடுவா யிடர்தீர் செல்வ மிடரின்றிப்
பொருந்த வேண்டு மனம்வென்றாற் புவன மூன்றுந் துரும்பாகுந்
திருந்த வினிதென் றனவெல்லாந் தீதாய்த் தோன்றின் மனமாளும். (6)

| | |
|---|---|
| வருந்தி முயன்று மனந் தன்னை மாற்றி இல்லையுண் டென்னு திருந்த பதத் திலிருந்திடுவாய் = | இயமநியமாதி ரூபமான யத்தனவிசேடத்தை ஆசிரயித்துச் சித்தத்தை சங்கற்பாதி ரகிதமாக்கிப் பேததிருஷ்யும் அபேத திருஷ்டியுமில்லாத மகா சத்தையைப் பொருந்திடுவாய், |

| | | |
|---|---|---|
| இடர்தீர் செல்வம் இடரின்றிப் பொருந்தவேண்டும் | = | கலங்காதிருத்தலென்னும் சர்வ துக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தி ரூப பிரஹ்ம சொரூபத்தை அடையவேண்டும் |
| மனம் வென்றால் புவனம் மூன்றுந்துரும்பாகும் திருந்த இனிதென்றனவெல்லாம் தீதாய்த் தோன்றில் மனம் மாளும் | = | சித்தத்தை வெற்றி கொள்ளில் முப்புவனத்தையும் வெற்றி கொள்வது திரணம் ஒப்பாம் அழகாக இது ரமணீயம் எனத்தோற்றுவன யாவும் அத்தியந்தம் இது தீயது இது தீயது என உள்ளவாறு தோன்றில் மனம் ஒழியும். |

சித்த விண்ணிற் றிகழறிவாந் தியானத்தாலே யறிவென்னு
மொத்த படையா லையமற வுளத்தை யறுப்பா யறுத்த தற்பின்
மெத்து துயர்போ மவனிவனுன் மேவுமென்ன ததுவிதுவாய்
வைத்த விவையே மனமிதனை மறப்பாம் வாளாலறுத்திடுவாய். (7)

| | | |
|---|---|---|
| சித்த விண்ணில் திகழ் அறிவாந்தியானத்தாலே அறிவென்னும் ஒத்த படையால் ஐயமற உளத்தையறுப்பாய் | = | மனமாகிய ஆகாயத்தில் விளங்கா நின்ற சிற்சொரூபத்தை அநு சந்திக்கும் தியானத்தாலே ஞானமென்னும் அஞ்ஞான சத்துருவை சேதித்தற்குத்தகுதியாகப் பொருந்தியகட்கத்தால் சங்கையை விட்டு மனத்தை வெட்டித் தள்ளுதி |
| அறுத்ததன்பின் மெத்து துயர்போம், அவன் இவன் நான் மேவும் என்னது அது விதுவாய் வைத்த இவையே மனம் | = | மாய்த்ததன் பின்னர் மிகத் துன்புறுத்திக்கொண்டிருந்த ஆதிகள் துன்புறுத்தமாட்டா. அவன், இவன், அகம், மம அது இது என்பதான எண்ணங்களையுடைந்து கொண்டிருப்பதுவே மனமாம், |
| இதனை மறப்பாம் வாளால் அறுத்திடுவாய் | = | இம்மனந்தன்னைத் திருசிய விஸ்மரணமாங்கட்கத்தால் சேதித்துத்தள்ளுவாய். |

பெருகத் திரண்ட முகிலெல்லாம் பெருங்காற்றாலே யொருவுதல்போல்
வருகற் பனைநா சத்தாலேமனம் போயிறக்கும் மனமிறந்தாற்
பெருகற் பாந்த மாருதமும் பொங்குகடலும் புவியனைத்து
முருகச் சுடுபன் னிருகதிரு மொருகால்வரினு மிடருண்டோ. (8)

| | | |
|---|---|---|
| பெருகத்திரண்ட முகில் எல்லாம் பெருங்காற்றாலே யொருவுதல் போல் வருகற்பனை நாசத்தாலே | = | நாற்புறமுஞ் சூழ்ந்து நிற்கும் மேக மண்டலங்கள் யாவும் பிரசண்டவாயுவினாலே சிதறி ஓடுவதேபோல வாசனையின் வசமாக எழுந்து வரும் சங்கற்ப நாசத்தாலே |

| | |
|---|---|
| மனம் போய் இறக்கும் = | மனம் மீட்டணுகாது நசித்துப்போம் |
| மனம் இறந்தால் பொரு கற்பாந்த மாருதமும் பொங்கு கடலும் புவியனைத் தும் உருகச் சுடும் பன்னிரு கதிரும் ஒரு கால்வரினும் யிடர் உண்டோ = | மனம் நாசமானுல் யாவற்றையும் அழிக்கும் பிரளய கால பிரசண்டவாயுவும் எல்லாக்கடலும் ஒன்ருகி யோங்கி எழும் சப்த சமுத்திரமும் சர்வ பூமிகளையும் எரிக்கும் பன்னிரெண்டு சூரியர்களும் ஓர் போது வரினும் துயரஞ்சிறிதுமுண்டாமோ? |

தன்னைக் கொண்டே தனையறுக்கிற் ருனுய்ச் சகல பூமிக்கு
முன்னைத் தலைமைபோ லின்பமுதிர நிறைந்து வகற்ப னைக்கே
துன்னித் திகழ்தற் பதம்பற்றிச் சுகத்தை யடைவாய் பலவாக
வுன்னிப் படர்கற் பனைச்செல்வமுடைய மனமே யுயிர்ப் பகையாம். (9)

| | |
|---|---|
| தன்னைக் கொண்டேதனை யறுக்கில் தானுய்ச் சகல பூமிக் கும் முன்னைத்தலைமை போல் அகற்பனைக்கே முதிர நிறைந்து இன்பம் துன்னி ச திகழ்தற்பதம் பற்றி சுகத்தையடைவாய் = | அசங்கற்ப வடிவதன்னைக் கொண்டே வாசன விசிஷ்ட சங்கற்பத்தை ஒழிக்கில் ஏகச்சக்கரவர்த் தியைப் போல சங்கற்பங்களின் அபாவமான நிர் மனஸ்தையென்னும் சகல சித்தியுந்தாரா நின்ற சாம்ராஜ்யத்திலிருந்து ஆண்டு ஆவரணம் நீங்கி விளங்கா நின்ற நினது சொரூபமாகிய பிரஹ் மானந்தத்தை அடைவாய் |
| பலவாக வுன்னிப் படர் கற்பனைச் செல்வமுடைய மனமே யுயிர்ப்பகையாம் = | ஜன்மாந்தர வாசனனுசாரம் பலவாருகக் கருதி விரிந்து செய்யும் சங்கற்பமாகிய ஐஸ்வரியத்தை யடைந்துள்ள மனமே ஜீவனது சத்துருவாம். |

உள்ளப் பகைவன்[1] பலவிதமா யுறுகாட்சிகளால் வெல்லாமற்
றெள்ளத் தகுசந் தோடமெனும் செல்வமுடைய நிராசையினுற்
கள்ளத்[3] தனி[2]நெஞ்[4] சினைவெல்வாய் கற்ருேர்க்கன்பாய் நின்மலமாய்க்
குள்ளக் குளிர்ந்தாங் காரத்தாற் கூருகாது சமபாவம். (10)

| | |
|---|---|
| உள்ளப் பகைவன் பலவித மாயுறு காட்சிகளால் வெல் லாமல் தெள்ளத்தகு சந் தோடமெனுஞ் செல்வ முடைய நிராசையினுல் தனி கள்ள நெஞ்சினை வெல்வாய் = | மனமென்னுங்காமாதிசத்துருக்கள் நானுவித வஸ்து தரிசனத்தினுல் உன்னை வென்று விடாமல் எப் போதும் விளங்குவதாய் எய்துவது கொண்டு சந்தோஷிப்பதாகிய ஐஸ்வரியத்தோடு ஆசை யின்மையினுலே தன்னைச் சார்ந்தவர்களை துன் புறுத்துவதில் ஒப்பு உயர்வு அற்ற மகா வஞ்சக மனத்தினை வெற்றிகொள்வாய், |

கற்றோர்க்கு அன்பாய் நின் மலமாய் குள்ளக் குளிர்ந்து சமபாவம் ஆங்காரத்தால் கூறுகாது = ஆன்ம வித்துகட்குப் பிரியமாய் (சம்மதமாய்) மிகவுங் குளிர்ந்து சம்சொரூபபரமாத்ம பதமானது அகந்தையினுற் பரிச்சின்னப்படாது அதுவே உனக்கு அடையத்தக்கதாகுக,

தாழ்வு முயர்வு மில்லாத சமபாவனையாற் பிறப்பில்லா
வாழ்வு நல்கும் பரமபத மாருப்பதமா மலைவாலே
வீழ்வு றுத மனமரிதாம் வெம்மை கனலை விடாததுபோ
லாழ்வு செய்யு மலைவுமன மகலா வறிவி னலைவுமனம். (11)

தாழ்வும் உயர்வும் இல்லாத சமபாவனையால் பிறப்பில்லா வாழ்வு நல்கும் பரமபதம் மாருப்பதமாம் = வைஷம்மியமின்றிய சர்வம் பிரஹ்மமென்னும் ஒரே திருஷ்டியால் ஜன்ம மின்றிய பேரானந்தப் பெருவாழ்வினைத்தரும்படியான என்றும் அழிவில்லாத பரமபதம் உண்டாம்,

அலைவாலே வீழ்வுறுதமனம் அரிதாம் = சஞ்சலம் அற்ற மனம் காண்பது முடியாதாம்

வெம்மை கனலை விடாதது போல் = உஷ்ணத்தன்மை அக்கினியை விட்டிராதது போல

ஆழ்வு செய்யும் அலைவு மனம் அகலா = சம்சாரத்தில் மூழ்கச் செய்யும் சஞ்சலத் தன்மை மனத்தின் தரும மாதலின் மனத்தை விட்டிரா,

அறிவின் அலைவு மனம் = சித்தின் சலன சக்தியே மனமாம்,

அலையு மந்த மனமுலகா மலைவுபோகின் மனங்கெடுமிந்[1]
நிலையே தவமு நூற்கருத்து நிமல வீடுந் துணிபொருளுந்[3][2]
துலைவி லலைவே மனமாயை தொடர்வாதனையு மதன்பெயரா[4]
மலையு மனமு மதுவதனை மாரு விசாரத் தான் மாய்ப்பாய். (12)

அலையும் அந்த மனம் உலகாம் அலைவு போகில் மனங்கெடும் இந்நிலையே தவமும் நூல் கருத்தும் துணி பொருளும் நிமல வீடும் = அசையும் அந்த மனமே ஜகதாகாரமாய் விளங்கும் அலைவு போகில் சஞ்சலத் தன்மை நீங்கில் மனம் நாசமாம் இந்த ஸ்திதியே தவமும் சாஸ்திர சித்தாந்தமும் மோக்ஷமும் ஆம்

துலைவில் அலைவே மனம் = தொலையாத சஞ்சலத் தன்மையே மனம்

மாயை தொடர்வாதனையும் = மாயை நெடுநாள் சம்பந்தித்துள்ள வாசனையும்

| | |
|---|---|
| அதன் பெயராம் மலையு மன மும் அது அதனை மாறு விசாரத்தால் மாய்ப்பாய் = | அதன் நாமங்களாம் பிரமிக்கச்செய்யும் மனமும் அதுவேயாம் அம்மனோசஞ்சலத்தை நிரந்தரஞ் செய்யும் ஆராய்ச்சியானே நாசஞ்செய்தி. |

1
மெத்து கின்ற வாதனையை விட்டான் மேலா நலமுளதாஞ்
3
சத்தி னசத்தி னிடை நின்று சைதன்னியத்திற் சாட்டியத்தி
2 4
லொத்து நடுநின் றலைவதுவே யுள்ளமாகு மிவ்வுள்ளஞ்
சித்தின் முயல்வாற் சித்தாகுஞ் சடத்தின் முயல்வாற் சடமாகும். (13)

| | |
|---|---|
| மெத்துகின்ற வாதனையை விட்டால் மேலாம் நலம் உளதாம்= | பெருகுகின்ற மலின வாசனையை விட்டுத்தொலைத்தால் பரமசிரேயசான இன்பம் உண்டாம், |
| சத்தினசத்தினிடை ஒத்து நின்று சைதன்யத்தில் சாட்டியத்தில் நடுநின்றலைவதுவே உள்ளமாகும் = | உளதிற்கும் இலதிற்கும் மத்தியிலிருந்து ஆன்ம வஸ்துவின் அநான்மவஸ்துவின் மத்தியில் நின்று ஊசலாடுவதே மனமெனப்படும், |
| இவ்வுள்ளம் சித்தின்முயல்வால் சித்தாகும் சடத்தின்முயல்வால் சடமாகும் = | இம்மனமானது சொரூபானுசந்தானத்தால் சின்மயமாகும் திருசிய அநுசந்தானத்தாலே ஜடபாவத்தையடையும் காஷ்டலோஷ்டத்திற்குச் சமமாம். |

1
ஊக்க முளதாய் மனமொன்றி லுறைக்கி லதுவா மாதலினாற்
றூக்கு மனத்தை மனத்தாலே தள்ளி யேறித் தளர்வின்றி
3
யாக்க மழிவில் பதம்விரைவி லடைவாய் மனத்தை மனத்தாலே
2
நீக்க வலதாந் தகைமைத்தா நிருபனிறுத்து நெறிபோல. (14)

| | |
|---|---|
| ஊக்கமுளதாய் மனம் ஒன்றில் உறைக்கில் அதுவாம் ஆதலினால் தூக்குமனத்தை மனத்தாலேதள்ளி ஏறி தளர்வின்றி ஆக்கம் அழிவு இல் பதம் விரைவில் அடைவாய் = | புருஷப்பிரயத்தன உற்சாகத்தால் மனமானது சோகமின்றிய சிரேயசான பதத்தில் ஊன்றில் அப்பதத்தில் நிலையாம் ஆகையினால் விஷயங்களில் சம்பந்திக்கும் மனத்தினைச் சுத்தசத்துவமனத்தாலே அகற்றி தியானாதிகளில் ஆரூடமாகி சோகமற்று உபத்திரவமற்று புத்திர களத்திராதிகளிடத்துள்ள மமதாபிமானம் விட்டு சீக்கிரத்தில் நித்தியபதம் அடைவாய் |

| | |
|---|---|
| நிருபன் நிறுத்தும் நெறிபோல = | இராஜாவை நிக்கிரகஞ்செய்வதில் பிரஜைகள் சமர்த்தராகார் புத்திசாலி ராஜாவே சமர்த்தனும் அதுபோல |
| மனத்தை மனத்தாலே நீக்க வல்லதாந்தகைமைத்தாம் = | மனத்தினது திடநிக்கிரகவிடயத்தில் சாஸ்திரசம் பன்ன விவேக மனமேசமர்த்துடையதாம். |

1
பிறவிக் கடலிற் காதலெனும் பெருவாய்முதலை பிடித்தீர்க்க
3 2
விறவுச் சுழியாற் சுழலுமவர்க் கிதயநாவா யெட்டாவா
4
மறமுற் றுளத்தை யுளத்தாலே மாய்த்துப் பிறப்பில்வருந்தாம
லுறவுற் றுனைநீ யுய்விப்பா யுயிர்க்குப் பிறரா லுய்வுண்டோ. (15)

| | |
|---|---|
| பிறவிக்கடலில் காதலெனும் பெருவாய் முதலை பிடித்து ஈர்க்க இறவுச்சுழியால் எட்டாவா சுழலுமவர்க்கு இதயம் நாவாய் = | சம்சார சமுத்திரத்தில் பேராசையென்னும் பெரிய வாயையுடையக்ராகம்பற்றி வலுத்தில் இழுக்க மனைவி மைந்தராதிகளிடத்தில் உள்ள மமதாபி மான சுழலில் மூழ்குபவர்க்கு (சுழல்பவர்க்கு) தீரம் அடைய கிட்டாவாய் தன் மனமே மரக்கலமாம் (ஓடமாம்) |
| மறமுற்றுள்ளத்தை உள்ளத்தாலே மாய்த்துப் பிறப்பில் வருந்தா மல் உறவுற்று உனை நீ யுய்விப்பாய் = | திடபந்தனபாசமா மனத்தைச் சத்துவமனத்தாலே சேதித்து (அறுத்தெறிந்து) சம்சாரத்தில் அவதிப் படாமல் தன்னைக்காப்பதில் நேயமடைந்து உன்னை நீயே உத்தாரணஞ் செய்தி (கரையேற்றுவாய்) |
| உயிருக்குப் பிறரால் உயர்வுண்டோ = | இவ்வாத்மாவிற்கு அயலோரால் முத்தியுண் டாகுமோதாம்தானே தனக்குச் சுற்றமமாம். |

எந்த வெந்த வாதனைக ளிதயத்தெழுந்த வவையெல்லா
மந்த வந்த விடத்தழிக்கி லதுவே மாயைக்கழிவாகு
முந்து போக பேதமென மொழிந்த விருவாதனைவிட்டு
வந்த பாவா பாவங்கண் மாற்றி விகற்பமற மகிழ்வாய். (16)

| | |
|---|---|
| எந்த எந்த வாதனைகள் இதயத் தெழுந்த அவையெல்லாம் அந்த அந்த இடத்தில் அழிக் கில் அதுவே மாயைக்கு அழிவாகும் = | எவ்வெச்சமஸ்காரங்கள் மனோரூபமாய் எப்போது எப்போது உதிப்பனவோ அம் மனோரூபமான வாசனைகளைப் பொய்ம்மை அநுசந்தானத்தானே அவ்வவ்விடத்திலேயே பரிகரிக்கில் அம்முயற்சியே அவித்தையைக் கெடுப்பதாகும், |

முந்துபோக பேதமென் மொழிந்த இரு வாதனைவிட்டு வந்த பாவ அபாவங்கள் மாற்றி விகற்பமற மகிழ்வாய் = முன்பு போகவாசனைத்தியாகமும் பின்பு பேதவாசனையின் தியாகமுஞ்செய்து வாசனை உண்டாவதற்கு ஆசிரயமான பாவ விஷய அபாவ விஷயங்களை நீக்கி நிருவிகற்பமாகிச் சுகிப்பாய்.

அறிபவற் றுசை யறிலதுதானே யவித்தையு மனமுமாண்டதுவாம்
பொறிபயி லாசை துன்பமா நிராசை புகலரு முத்தியா மின்பம்
பிறிவறு தனது முயற்சியா லுண்டாம் பேதையருண்டெனு மவித்தை
செறிதரு பொய்யாய் நாமமாத்திரமாய்ச் சித்தெனத் தேர்ந்திடி லிலதாம். (17)

அறிபவற்று ஆசை அறில் அதுதானே அவித்தையும் மனமும் மாண்டதுவாம் = திருசியப் பொருள்களில் இச்சை நீங்கில் ஆசாநிவர்த்தியே அவித்யாநாசமும் மனோநாசமும் ஆம்.
பொறிபயில்ஆசை துன்பமாம்= விடயங்களில் இரமணீயத்தன்மை துயரமாம்,
நிராசை புகலரும் முத்தியாம் ஆசை ஒழிந்த நிராசயே சொல்லுதற்கரிய நிர்வாண பதமாம்,
பிரிவறு தனது முயற்சியால் உண்டாம் = இடைவிடாதியற்றும் தன்னுடைய பிரயத்தனத்தினுல் தனது உண்மை வடிவம் அடையப்பெறும்,
பேதையர் உண்டெனும் அவித்தை செறிதரு பொய்யாய் நாமமாத்திரமாய்ச் சித்தெனத் தேர்ந்திடில் இலதாம் = ஞானஹீனரிடத்துச் சுயம் இருப்பதுபோற்றிருசியமாகானின்ற அவித்தையானது அத்தியந்தம்மித்தையாய்ப் பெயர் மாத்திரத்தால் விளங்கப்பெறுவதாகி அறிவுமாத்திரமென்னும் ஆராய்ச்சியில் நற்பிரஞ்ஞையுடையவரிடத்து அஃதெங்ஙனமிருக்கும் இராதாம்.

என்றலு மிராம னவித்தையின் செல்வத்தெழுந்தற நெருங்கு மிவ்விருடா
னொன்று மிங்கின்றி யெவ்வகைநீங்கு முரைத்தரு ளின்னநீயென்ன
வன்றவ னுரைப்பான் வன்றுயர்முட்சேர் வன்பவக் குழியின்மன்னுயிரை
யொன்றவீழ்த் ததனொடொக்கவிழ் மாயையுண்டெனி னுண்மைநோக்
கில்லை. (18)

என்றலும் இராமன் அவித்தையின் செல்வத்தெழுந்து அற நெருங்குமிவ்விருள்தான் ஒன்றும் இங்கு இன்றி எவ்வகை = இவ்வண்ணம் இயம்பலும் ஸ்ரீ இராகவர் அவித்யாவைபவமாகத் தோன்றியதாய அத்தியந்தம் நிபிடமாகி விவேகியையும் மறைக்கும் இவ்வந்தகாரம் ஒரு சிறிதுமில்லாமல் எங்ஙனம் அகலும் ஸ்ரீ பகவா

நீங்கும் நீ இன்னம் உரைத் தருளென்ன = ஞகிய தேவரீர் மேலும் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும் என்று வினவ,

வன்தவன் உரைப்பான் = அபாரமான பெருந் தவத்தையே யலங்காரமாக வுடைய ஸ்ரீ வசிஷ்டர் கூறுவார்,

வன்துயர் முள்சேர் வன்பவக் குழியில் மன்னுயிரை யொன்ற வீழ்த்து அதனேடு ஒக்கவீழ் மாயையுண்டெனில் உண்மை நோக்கில்லை = கொடிய துக்கத்தைக் கொடுக்கும் முட்கள் பொருந்திய கொடிய சம்சாரப் படுகுழியில் தேகாபிமானத்தோடுற்ற ஜீவனைத் துயரையே அனுபவிக்கும்படி யாகத் தள்ளி அவ்வுயிரோடு சேர்ந்து வீழும் அவித்தை இருக்குமட்டும் எதார்த்தமான ஆன்ம தரிசனம் உண்டாகவேமாட்டாது.

பிறப்பெனு மாயைக் கரையதா யெங்கும்பிறிவறு பெரும்பொரு டோன்றி
லிறப்புறு மாயைக் கிச்சையேவடிவா மிதனுடை நாசமே வீடு
சிறப்பில்சங் கற்பஞ் சிதைந்திடி லிதுதான் றேய்ந்திடுஞ் சித்தெனுங் கதிரோன்
புறப்படி லிதய விசும்பில்வாதனையாம் பொங்கிருள் போமெனப் புகல. (19)

பிறப்பெனு மாயைக் கரை யதாய் எங்கும் பிரிவறு பெரும் பொருள் தோன்றில் இறப்புறும் மாயைக்கு இச்சையே வடிவாம் இதனுடை நாசமே வீடு = ஜனனமரண சம்சாரத்தின் அணையாய் எவ்விடத்திலும் நிறைந்து பேதமற்ற பரம்பொருள் அபரோக்ஷமாய் உண்டாகில் நாசமாகும் மாயைக்கு இச்சையே சொரூபமாம் இவ்விச்சையை நாசஞ் செய்தலே மோக்ஷமாம்;

சிறப்பு இல் சங்கற்பஞ் சிதைந் திடில் இதுதான் = நன்கலாத சங்கற்பம் யாவும் தொலைந்திடில் இவ் விச்சையானது கெட்டுப்போம்

தேய்ந்திடும் இதய விசும்பில் சித்தெனுங்கதிரோன் புறப் படில் வாதனையாம் பொங்கு இருள் போம் எனப் புகல = மனோவியோமத்தில் ஞானமெனுஞ் சூரியன் பிரதி பந்தரகிதமாய் உதயமாயின் வாசனையாகிய இரவால் உண்டாகிய இருளானது க்ஷயமாம் என்று கூறியபோது.

கண்டன வனைத்து மாயையேயென்ருய் கண்ணெனுந் தத்துவத்தாலே
தண்டற வதுதான் கரைந்துபோ மென்ருய் தத்துவமாவதே தென்ன
வெண்டவ னுரைப்பான் காண்பவற் றிடைசென்றெய்திடா தெங்கணுஞ் சமமா
யுண்டென லாகி நாமமற்றுயர்ந்த வுணர்வு தற்பரமமா முணர்வே. (20)

கண்டனவனைத்தும் மாயையே யென்றாய் கண்ணெனுந் தத்துவத்தாலே தண்டற அது தான் கரைந்து போம் என்றாய் = இத்திருசியங்கள் யாவும் அவித்தையேயென அருளிச் செய்தீர் திருக்கு ரூபமென்றஆன்மபாவனையினாலே எஞ்சுதலின்றி அத்திருசியம் யாவும் இல்லாமற்போம் எனவும் அருளிச் செய்தீர்,

தத்துவமாவது ஏது என்ன எண் தவன் உரைப்பான் = இவ்வான்மதத்துவம் எத்தகையதுவென்று ஸ்ரீ இராகவர் கேட்க மதிக்கத்தக்க ஸ்ரீ தவசிரேஷ்டரான ஸ்ரீ வசிஷ்ட பகவான் அருளுவார்

சென்று காண்பவற்றிடை எய்திடாது எங்கணுஞ் சமமாய் உண்டெனலாகி நாமமற்று உயர்ந்த உணர்வு தற்பரமமாமுணர்வே = மனமானது இந்திரிய வழி சென்று திருசியங்களைப் போய் அடையாது எவ்விடத்தும் விஷமபாவமின்றியவாய்ச்சத்ரூபமாய் யாதொரு விதத்துங் கூற முடியாததாய் அறிவுக்கும் அறிவான பிரத்யக்சைதன்யமே பரமேசுவரரென்னும் ஆன்மாவாம்.

2 1 3

**இவையெனு மனைத்துஞ் சிற்கனமாகி யிறப்பிலாப் பிரமமே யென்று**
**நவையுறு மனமாங் கற்பனையில்லை நாசமும் பிறவியு மென்னு**
**மவையெலாம் புவன மூன்றினுமில்லை யறுவகை விகாரமு மில்லைக்**
**கவையறு சமமாங் குறிபெறுமறிவு மாத்திரங் காணநின் றுளதால். (21)**

எனும் இவை அனைத்துஞ் சிற்கனமாகி இறப்பிலாப் பிரமமே யென்றும் = இதம் விருத்திக்கு விஷயமாய்ச் சர்வதிருசியங்களும் அறிவின் மயமாகி அவ்யயமாய பிரஹ்மமே நித்தியமாயிருப்பதாம்

நவையுறு மனமாங்கற்பனை யில்லை = சங்கற்பித்துக்குற்றமே பொருந்திய மனமென்னுங் கற்பனை ஒரு காலத்திலும் இல்லவே இல்லை

நாசமும் பிறவியுமென்னும் அவ்வயெலாம் புவன மூன்றினு மில்லை அறுவகை விகாரமு மில்லை சுவையறு சமமாங்குறி பெறும் அறிவு மாத்திரங்காண நின்றுளதால் = தோற்றங்களான ஜன்ம ஜராமரணாதியனைத்தும் புவன மூன்றும் ஒரு சிறிதும் உண்டாவதுமில்லை ஒழிவதுவுமில்லை சட்பாவ விகாரங்களுமில்லை துவைதம் அற்ற சர்வாநுகத சத்ரூப இலக்கணமுடைய சின்மாத்திரமே பிரத்தியக்ஷமாயிருக்கின்றது.

1

**கேவல மாகிக் கேவல வொளியாய்க் கேடறு சுத்தமாய் விரிவா**
**யோவலி லறிவு மாத்திர மாகியுறுதுய ரொன்று மற்றுறி**
**மேவரு மிரத மனைத்தினுக்கொத்து விகாரமற்றுள பொருளிடத்தே**
**தாவருந் தனது நினைவையே விரும்பித் தன்வயத் தெழுந்த தோரறிவு. (22)**

கேவலமாகி கேவலவொளியாய்க் கேடறு சுத்தமாய் விரிவாய்ஒவல்இல்அறிவு மாத்திரமாகியுறு துயரொன்று மற்று ஆறிமேவரும் இரதமனைத்திநுக்கும் ஒத்து விகாரமற்றுள பொருளிடத்தே = தான் மாத்திரமாய் அஷ்டப்பிரகாசங்களை அபேக்ஷியாது சுயம்பிரகாசமாய்சநாதனமாய்ப்பரம பாவனமாய் வியாபகமாய்க்கெடாத சின்மாத்திரமாகிச் சம்சாரத்துறுந் துன்பம் எதுவுமேயில்லாததாகிச் சாந்தமாய்அடைதற்கரிதாயுள்ளரசம் அனைத்தினுக்கும் சமமாய்ச் சட்பாவவிகாரமின்றிய ஆன்மாவின் கண்ணே

தனது தாவறு நினைவையே விரும்பிதன் வயத்து ஓர் அறிவு எழுந்தது = தன்னுடைய இயற்கைக்கு விருத்தமான பாவனா விஷயத்தை இச்சித்துச்சுயமாகவே ஸ்புரணம் (சங்கற்பம்) உதித்தது.

செப்பிய வறிவு முடிவில்சங்கற்பஞ் செய்வதிற் சென்றிடு மிதுதா
னிப்பிரமத்தின் மனமதாமிதனுக் கெண்ணில்சத்திகளுள வாகுங்
கப்பிலா தெங்கு நிரந்தரஞ்செய்யுங் கடுமை யாமிம் மனந்தனிலே
யப்பிலே தோன்றுந் திரைகள்போற் பேதமாகிய வல்லபந் தோன்றும். (23)

செப்பிய அறிவு முடிவு இல் சங்கற்பஞ் செய்து அதில் சென்றிடுமிதுதான் இப்பிரமத்தின் மனமதாம் = முற்கூறிய சைதன்யம் அளவில்லாத எண்ணங்களையாற்றி அவ்வெண்ணவழித்தாயே ஓடித்திரியும் இதற்குத்தான் மனோவிசிஷ்ட சைதன்யமென்று சொல்லப்படும்

இதற்கு எண்ணில் சத்திகளுள வாகும் = இம்மனோ விசிஷ்ட தேவதைக்கு அளவில்லாத சத்திகள் உள்ளனவாம்

கப்பிலாதெங்கும் நிரந்தரஞ் செய்யும் கடுமையாம் இம்மனந் தனிலே அப்பிலே தோன்றுந் திரைகள்போல் பேதமாகிய வல்லபந் தோன்றும் = பேதமில்லாது எங்கும் நிறைந்து திருசியத்தையாற்றும் மகாத்மாவாயிருக்கும் இம்மனந்தனிலே வாயுவயுத்தால் சமுத்திரத்தில் தோன்றும் நுரை குமிழியாதிகள் போலப் பேத கற்பனைச் சத்தியானது எழும்பும்.

5
உள்ளுறு சங்கற் பத்தினுற் றேன்று முள்ளமற்றதனினு லொடுங்குந்
தள்ளுறு காற்று லெழுந்ததீக்கொழுந்து சமிப்பதுங் காற்றினுற்போல
3 2 4
நள்ளுறு பிரம மன்று நானென்று நாடுதன் மனத்துறு பந்த
மெள்ளுறு மிடமும் பிரிவிலாப் பொருளே யாமெனு மழுத்தமே வீடாம். (24)

| | |
|---|---|
| உள்ளுறு சங்கற்பத்தினுல் உள்ளம் தோன்றும் = | இதயத்தில் காணப்படுகின்ற திருசிய எண்ணத்தினுலே மனம் பிரதீதியாம் |
| அதனினுல் ஒடுங்கும் = | சர்வம் பிரஹ்மம் என்னுஞ் சங்கற்பத்தினுல் நசித்துப்போம் |
| தள்ளுறு காற்ருல் எழுந்த தீக்கொழுந்து சமிப்பதுங் காற்றினுற் போல = | மோதுகின்ற வாயுவினுலே ஓங்கிய அக்கினிச் சுவாலை சாந்தமாவதும் அவ் வாயுவினுலேபோல |
| நள்ளுறுபிரமம்நான் அன்று என்று நாடுதல் மனத்துறு பந்தம் = | வியாபகமாம்பிரஹ்மம் அகம் அல்லனென்று நாடுதலே மனத்தின் கண்ணுற்ற பந்தமாம் (கட்டாம்) |
| எள்ளுறுமிடமும் பிரிவிலாப் பொருளே யாம் எனும் அமுத்தமே வீடாம் = | அணுப்பிரதேசத்தினும் நீக்கமற நிறைகின்ற பரப்பிரஹ்மமே அகமென்னும் திட ஞானமே மோக்ஷமாம். |

2 1 3

**மடமையுந் துயரு மவயவநிறைந்த வடிவமு முடையனு னென்றே**
**படர்தரு மவற்றிற் கேற்றபன்னடையாற் பாசமும் பந்தமு முளதாஞ்**
**சடமுறு மிவற்றி லேதுமொன் றல்லேன் றசை நரம்பென்புநீ ரல்லே**
**னுடலின்மே லானபரமநா னென்னுமுறுதி யோர் மாயைசெற்றுணர்ந்தோர். (25)**

| | |
|---|---|
| நான் மடமையுந்துயரும் அவயவம் நிறைந்த வடிவமும் உடையவனென்றே படர்தரும் அவற்றிற்கேற்றபன்னடையால் பாசமும் பந்தமும் உளதாம் = | யான் அஞ்ஞன்நான் கிருசன் நான் பெத்தன் யான்அதி துக்கி நான் அஸ்தபாதாதி ஆகிருதியுடையவன் என்பதாகப் பரவிவரும் தூல சரீரத்தனவாயஜாதிவருணச்சிரமங்களுக்குரிய பல விவகாரத்தால் ஆசாபாசமுங் கட்டும் உண்டாம் |
| சடமுறும் இவற்றில் ஏதும் ஒன்றல்லேன் தசைநரம்பு என்பு நீர் அல்லேன் = | ஜடமாகிய இவை தம்மில்எப்பொருளும்யான் அல்லன்மாமிசம்,சநாயுஅஸ்தி, உதிரம்; மூத்திரம், மலம் அல்லன், |
| உடலின் மேலான பரமம் நான் என்னும் உறுதியோர் மாயை செற்றுணர்ந்தோர் = | தேகாதி சங்கற்பங்களின்அஜீரணமான பிரஹ்மமே நானென்றும் நிச்சயமுடையமகான்கள் மாயையைக் கொன்று அறிந்தவராவர். |

**தானலா தான வுடன்முதற்பொருளிற் ருனெனும் பாவனையாய**
**வூனமா மாயை யுணர்விலோர்விதிக்கவுள்ளதாமுணர்வுளோர்க்கிலதா**
**மானத நினைத்த தைம்பொறியியற்று மன்னவர்க் கமைச்சர்போல் விரைவி**
**லானநன் மதியான் முயற்சியாற் போகத்தாசை வாதனையைவே ரறுப்பாய். (26)**

| | |
|---|---|
| தானலாதான உடல்முதற் பொருளில் தான் எனும் பாவனையாய ஊனமா மாயை உணர்விலோர் விதிக்க உள்ளதாம் = | சொரூபமல்லாததான தேகாதி சப்த உபாதிகளில் நானென்னும் உணர்ச்சியாய நீசத்தனமான அவிவிவேகிகள் எண்ண இருப்பதாகும், |
| உணர்வுளோர்க்கிலதாம் = | ஞானமுடையோர்க்கு இல்லையாகும், |
| மானதம் நினைத்தது ஐம்பொறிஇயற்றும் ஆனநல் மதியால் முயற்சியால் மன்னவர்க்கு அமைச்சர்போல் விரைவில் போகத்தாசை வாதனையை வேரறுப்பாய் = | மனது அநுசந்தானஞ் செய்ததை சர்வேந்திரிய விருத்திகளும் கணத்தில் சம்பாதிக்கும் அப்பியாசத்தாலான பரமமான புந்தியினாலே யத்தனத்துடன் மேலான பௌருஷத்தை ஆசிரயித்து அரசர்கட்கு எண்ணியதை மந்திரிமார்கள் கணத்தில் சம்பாதித்துக்கொடுப்பதேபோல போக ஆசைக்கு ஏதுவான வாதனையை மூலஞ் சிறிதுமில்லாதபடி நாசஞ் செய்வாய். |

1
என்னுடை மைந்த ரென்னுடைநிதிநா னிவனவ னிதுவது வென்னு
3 2 4
மின்னுடை நிலைமை யிந்த்ரசாலத்தால் வீங்கிய வாதனை யோங்கும்
6 5 7
நன்னுடை நிலையஞ் ஞானமாநிலைபோய் நாசமாயை யிற்கருத் தொழிவாய்
நின்னுடை வடிவி லவற்றைநீயென்றே நினைவிலார்போல்வருந் துவதென். (27)

| | |
|---|---|
| என்னுடை மைந்தர் என்னுடைநிதி நான் இவன் இது அதுவென்னுமின் நிலைமையுடை இந்திரசாலத்தால் வீங்கிய வாதனையோங்கும்= | எனது புத்திரர், எனது தனம், அகம், இவன், அவன், இது, அது என்பதாக மின்னலைப்போலும் அதிசாஞ்சல்ய இந்திரஜாலத்தினாலே நாளுக்கு நாள் பருத்துவரும் வாதனையே விருத்தியாம், |
| அஞ்ஞானமாம் நிலைபோய் நன்னுடை நிலை நாசமாயையின் கருத்தொழிவாய் = | அஞ்ஞன் ஆகாது ஆன்மாவின்கண் நிலைத்து, நைஸ்வரமாகா நின்ற சம்சார பாவனையை விடுவாய், |
| நின்னுடை வடிவு இல் அவற்றை நீ யென்றே நினைவிலார்போல் வருந்துவது என் = | உன்னுடைய சொரூபமல்லாத அனாத்மாக்களாய அவற்றை ஆன்மபாவனையால் அறியார்போல அழுவது என், |

2 1 3
மூகமாய்ச் சடமாய்ச் சுகாசுகங்களிலே மூழ்கியோர்பயனற வருந்துந்
தேகமார் நீயா ரகோவகோ வீதோர்சித்திர மிருந்தவா காணா
யேகமாய் மெய்யா யிலங்கியபிரம மெங்குமா யிருக்கவுந் தோன்றாச்
சோகமாய்ப் பொய்யாய் விளங்குருமாயை தோன்றுருதிருக்கவுந் தோன்றும்.(28)

| | |
|---|---|
| சடமாய், மூகமாய், சுக அசுகங்களிலே மூழ்கி ஓர் பயனற வருந்தும் தேகம் ஆர் நீயார் அகோ அகோ ஈதோர் சித்திரம் இருந்தவா காணாய் = | அறிவற்றதாய், ஒன்றுந் தெரியாததாய், இன்ப துன்பங்களிலே வருந்தி (அழுந்தி) யாதொரு பிரயோஜனமுமில்லாமல் துன்புறும் தேகம் யாது? உன் சொரூபம் யாது? அந்தோ! அந்தோ! இஃதோர் அற்புதம் இருந்தவாறு காண்பாயாக, |
| ஏகமாய், மெய்யாய் இலங்கிய பிரமம் எங்குமாயிருக்கவுந் தோன்றா = | ஒன்றாய், உண்மையாய், ஒளிரா நின்ற சிவசொரூபம் எவ்விடத்திலும் சத்தாஸ்பூர்த்தியைக் கொடுத்துக் கொண்டிருந்தும் இறையளவும் விளங்கவில்லை, |
| சோகமாய்ப் பொய்யாய் விளங்குருமாயை தோன்றுரு திருக்கவுந் தோன்றும் = | அனர்த்தரூபமாய், அசத்தாய், தெரிவுறாதிருந்த சம்சாரமாய அவித்தை அசத்தியமாயிருந்தும் சத்தியம்போலத்தோன்றும் இஃதென்னஆச்சரியம். |

2 1 3
படிகநன் மணிகள் பற்றிபாய்நிறங்கள் பற்றறப் பற்றுறும் படிபோன்
முடிவறு தொழிலிற் பின்விருப்பின்றி முடித்தியென் றருந்தவ வசிட்ட
னெடிதுரைத் தலுமே பரத்துவகேளாய் நிறைகுணத் திராகவன் கேட்டு
மடியறு விதய பங்கயமலர்ந்து வசிட்டனை நோக்கியீ துரைத்தான். (29)

| | |
|---|---|
| நல்படிகமணிகள் பற்றிபாய் நிறங்கள் பற்றற பற்றுறும்படி போல் = | சிறந்த வெண்பளிங்கு மணிகள் பிரதிவிம்பித்த சித்திரங்கள் பற்று இல்லாமலிருந்தும் சம்பந்தமுற்றது போல், |
| முடிவறுதொழிலிற்பின் விருப்பின்றி முடித்தியென்று அருந்தவ வசிட்டன் நெடிதுரைத் தலுமே = | அளவில்லாத இன்றியமையாத காரியங்களில் பின் வரும் பயனை இச்சியாது நிராசையினால் செய்வாயாகவென்று பெருந் தவபூஷண ஸ்ரீ வசிஷ்டபகவான் அநேக திருஷ்டாந்ததாஷ்டாந்தங்களோடு விஸ்தாரமாய் உபதேசித்தபோது, |
| பரத்துவகேளாய் = | ஹே பரத்துவாஜனே நீ ஒருமையுடன் இப்போது கேட்பாயாக, |
| நிறைகுணத்திராகவன் கேட்டு மடியறு இதயபங்கய மலர்ந்து வசிட்டனை நோக்கி ஈதுரைத்தான் = | அனந்தகல்யாணகுணாகனலங்கிருத இராமபிரான் கேட்டு சோம்பலில்லாத (காமாதிபகையற்ற) விகசித அந்தக்கரணமுடையவனாய் ஸ்ரீ வசிட்டபகவானைப்பார்த்து இதனைக் கூறத் தொடங்கினார். |

2 1 3
அற்புத மீதொன் றிருந்தவாறென்னே யம்புய ஞால நூலாலே
வெற்பினம் பிணிப் புண்டறநெரிவதுபோல் வெறும்பொய்யா மாயையா லுலகம்
பற்பல துயரம் பயில்வதாந்திரணம் பருவயிரத்தின்வன் புறல்போ
லுற்பவ மிலங்கு மதனினுலேற்கு முறுதியை யென்று மீட்டுரைப்பான். (30)

ஈதொன்று யிருந்தவாறு அற்புதம் என்னே அம்புய ஞால நூலாலே வெற்பினம் பிணிப் புண்டு அறநெரிவது போல்= இவ்வண்ணமிருந்தது ஆச்சரியம் ஆச்சரியம் என்னே தாமரைத்தண்டிலுள்ள நூலால் பர்வத சமுதாயம் கட்டுப்பட்டு அத்தியந்தம் நொறுங்குவதுபோல்,

வெறும் பொய்யாம் மாயையால் உலகம் பற்பல துயரம் பயில்வதாம் = அத்தியந்தம் இல்லாததேயாகிய அவித்தையினுல் விசுவத்திலுள்ள ஜீவர்கள் அனேகவிதமான துய்ரங்களை அனுபவிப்பார்கள்,

திரணம் பருவயிரத்தின் வன் புறல் போல் உற்பவமிலங்கு மதனினுல் உறுதியை யேற்கு மென்று மீட்டுரைப்பான்= துரும்பானது வஜ்ஜிராயுதம்போன்று கடினப்படுவதைப்போலும் ஜனன மரண சம்சார திருசியம் இருப்பதுபோலச் சத்தியமாய்த் தோற்றும் இஃதென்னே ஆச்சரியமென்றிவ்வண்ணம் உரைத்து மீளவுங் கூறுகின்றுன்.

ஈதுமோ ரைய மென்மனத்துளதா லியம்பிய லவணனு மன்னன்
மாதுய ரடைந்த தென்னெனக்கேட்ப வசிட்டமாமுனியதற் குரைப்பான்
றீதகன் மனத்தா லியற்றலாலந்தச் செயல்பயனுடல் புசித்திலதா
லோதுறு மந்த மன்னனேர்நாளி லுபவனத் தொருவனு யிருந்து. (31)

ஈதுமோர்ரையம் என்மனத்துளதால் இயம்பியலவணனு மன்னன் மாதுயரடைந்த தென் எனக்கேட்ப வசிட்டமா முனி அதற்கு உரைப்பான்= அன்றியும் இஃதோர் ஐயமானது எனதுஇருதயத்திலிருக்கின்றது முற்கூறிய இலவண மகாராஜாவானவன் பெருந் துயரத்தையடைந்தது யாது காரணத்தால் என்று ஸ்ரீ இராகவர் வினவ ஸ்ரீ வசிஷ்ட பகவான் அதற்கு உத்தரங் கூறுவதாவது,

தீது அகல்மனத்தால் இயற்றலால் அந்தச்செயல் பயன் உடல் புசித்திலதால்= குற்றமற்ற மனத்திலுலே இராஜசூய யாகத்தைச் செய்தலால் அக் கிரியாபலத்தை தூலசரீரம் அநுபவியாது,

ஓதுறும் அந்த மன்னன் ஓர் நாளில் உபவனத்து ஒருவனு யிருந்து= கூறிய அந்த லவணமகாராஜன் ஓர் தினத்தில் உத்யானவனத்தில் தனியனுக இருந்துகொண்டு சிந்திப்பதாவது.

1
இருதயத் துணர்வான் பிதாமகன்குருவா மிராஜசூயஞ் செய்வோமென்னாக்
கருதிய மனத்தான் மகத்தினுக்குரிய கலப்பைக ளனைத்து முண்டாக்கிச்
சுருதிநூல் வழியே சாலையிற்புகுந்து துறவரை வரித்தருச் சித்து
3 2 4
வருதிரென் றிமையோர் களைமறைமொழியால் வரவழைத்தா ரழல்கிளப்பி. (32)

இருதயத் துணர்வான் பிதாமதன் குருவா இராசசூயஞ் செய்வோமென்னா கருதிய மனத்தால் மகத்தினுக்குரிய கலப்பைகளனைத்து முண்டாக்கி சுருதி நூல் வழியே சாலையிற் புகுந்து துறவரை வரித்து அருச்சித்து இமையோர்களைவருதிரென்றுமறை மொழியால் வரவழைத்துஆர் அழல் கிளப்பி = மனத்தின் கண்ணே இவ்வாறு சிந்திப்பானாயினன் எனது பாட்டன் அரிச்சந்திரன் பெரிய மகானாயிருந்தார். இராஜ சூய யாகத்தைச் செய்து முடித்தற்கேற்ப மனத்தினாலேயே செய்வோமென்று எண்ணிய எண்ணத்தால் யாகத்திற்கு வேண்டிய சாமக்கிரியைகள் யாவற்றையுஞ் சேகரித்து (வரவழைத்து சாஸ்திர மரியாதைப்படியே எக்ஞசாலையிற் பிரவேசித்து முனீசுவரர்களைருத்துவிக்குகளாக்கி அர்ச்சனை செய்து இந்திராதி தேவர்களை வந்தருள் வீராகவென்று வேதமந்திரங்களால் ஆவாகனஞ் செய்து யாகாக்கியை ஓங்கி சொலிக்குமாறுசெய்து.

கடவுளர் முனிவர் மறையவர்பூசை கடைப்பிடித் தாரொரு வருடந்
தொடர்புற நடத்தித் தன்பொருண்முழுதுந் தொலைவுறத் தானமா வழங்கித்
திடமுறு மனத்தான் முடிந்தபின் பகலுஞ் சென்றது விழித்தனனிதனா
லிடவிய மனமே துன்பவின்பங்க ளெய்துறப் புசிப்பதென் றுணர்வாய். (33)

கடவுளர், முனிவர், மறையவர் பூசை கடைப்பிடித்தார் ஒரு வருடம் தொடர்புற நடத்தி தன்பொருள் முழுதுந் தொலைவுறத்தான மாவழங்கி திடமுறு மனத்தால் முடிந்த — தேவ, இருடி, விப்பிரர் பூஜையோடு அந்த யாக ஆராதனையை செய்யத் தொடங்கியவராய் ஏக சம்வத்சரம் விடாமற் செய்து தன்னுடைய சர்வ ஐசுவரியங்களையும் சர்வஸ்வதக்ஷிணையெனும்படியாவருக்கும் தானமாகக் கொடுத்து அதிதிடமாகிய சித்தத்தினாலே யாக சமாப்தி செய்த பின்பு தினமும்

பின் பகலுஞ் சென்றது = அந்தமாயது,

விழித்தனன் = உணர்ச்சியுற்றனன் (மனம் பகிர்முக நாட்டமுற்றனன்)

இதனால் இடவிய மனமே துன்பவின்பங்களெய் துறப் புசிப்பதென்றுணர்வாய் = இக்காரணத்தினால் விரிந்த மனமே துக்க சுகங்கள் அடைவுற அநுபவிப்பதென்றறிவாய்.

சித்தன தியல்பு செப்பிடக்கேண்மோ திருந்திய லவணன் முன்னெய்தி
வித்தையான் மயக்கஞ் செய்துளசித்தன் மீண்டுபோ யொளித்தன னுங்கே
யித்தனை செயலுங் கண்டுடனிருந்த வெம்மையீ தென்னென வினவ
வத்திறல் வேந்து மியாவருங்கேட்ப வகத்துணர்ந்துரைத்தன மனைத்தும். (34)

சித்தனது இயல்பு செப்பிடக் கேண்மோ = இந்திரஜாலக்காரனது நீட்த்தையைக் கூறக் கேட்குதி

திருந்தியலவணன் முன் னெய்தி வித்தையால் மயக் கஞ் செய்துள சித்தன் ஆங்கே மீண்டு போய் ஒளித்தனன் = மநு நீதி தவருது ஆட்சி செய்யும் இலவணனது சபையை அடைந்து தனது மாயா வித்தையினாலே மயக்கித்துயருறுத்திய சித்தன் (இந்திர ஜாலக் காரன்) அவ்விடத்தில் திரும்பிப் போய் மறைந் தனன்.

இத்தனை செயலுங்கண்டுட னிருந்த வெம்மை யீதென் னென வினவ = நடந்த விவகாரங்கள் யாவற்றையும் பார்த்துக் கொண்டு அவர்களோடு கூடவேயிருந்த ஆசிரிய ராகிய என்னை இஃதென்ன விருத்தாந்தமெனக் கேட்க

அத்திறல் வேந்தும் யாவருங் கேட்ப அகத்து உணர்ந்து உரைத்தனம் = அந்தப் பராக்கிரமமும் பொருந்திய மன்னவனும் சபையோரும் செவி கொள்ளுமாறு யாம் சர்வஞ் ஞத் தன்மையால் யாவற்றையுங்கருத்திற்கொண்டு சொன்னேம்.

ஈங்கிது புகல விராகவகேட்டி யிராசசூயத்திலே லவணன்
பாங்குறு மனத்தாற் றொகுத்தவாயாரும் பன்னிரு வருடம் வன்றுயரிற்
றீங்குறு வருத்த முறுதலான் மகவான் சேணினின் றொருவனை யேவ
வாங்கவன் சித்த னாகியேலவணற் கருந்துய ரளித்துமீண் டகன்றான். (35)

இராகவ ஈங்கிது புகல கேட்டி = ஹே இரகுநந்தன ஈண்டு சித்தனது செயலைக் கூறக்கேட்பாயாக,

இராசசூயத்திலேஇலவணன் பாங்குறு மனத்தால்தொகுத்த வாயாரும் பன்னிருவருடம் வன் துயரில் தீங்குறு வருத்த முறுதலால் மகவான் சேணி னின்று ஒருவனை யேவ ஆங்கு அவன் சித்தனாகியேலவணற்கு = இராசசூய யாகத்திற்குக் கர்த்தாவாக விருந்து இலவண மகாராஜன் ஏகாக்கிர மனத்தால் தடை யின்றிச் செய்து முடித்தவாறு எவர்களும் அந்த இராஜ சூய யாகத்தைப் பாகியத்தில் செய்து முடித்த போதினும் துவாதச வருடம் பல ஆகாரத சாமயமாக அதி துக்கத்தையடைதலால் இந்திரன் சுவர்க்கத்திலிருந்து ஒரு தேவ தூதனை அனுப்ப

| | | |
|---|---|---|
| அருந்துயரளித்து மீண்டகன்றுன் | = | அங்கு அத்தேவன் சித்தனுகியே வந்து இலவண மன்னனுக்கு மகா ஆபத்தைக் கொடுத்து திரும்பி துரக்கத்திற்கேகினன். |

## அவதாரிகை

ஸ்ரீ வசிஷ்ட பகவான் ஞான பூமிகளின் போதம் எளிதிலுண்டாகும் பொருட்டு வேண்டியதாய அஞ்ஞான பூமிகளின் பேதத்தை முதலில் கூறுகின்ருர்.

1 3 2
மற்றுமொன் றுரைக்க வள்ளலே கேட்பாய் மடமையாம் பூமியேழ் பதமா
4 6 5 7
முற்றுள ஞான பூமியேழ் பதமாமொழிந்தவிப் பதங்கடம் மிற்ரும்
பற்றுள வாகு மொன்ருேடொன் றளாவிப் பயில்வன பதங்கண் மட்டிலவா
மற்றமில் சொருப நிலைபெறல்வீடா மதினழுவுறுதனு னெனலே. (36)

| | | |
|---|---|---|
| மற்றுமொன்றுரைக்க வள்ளலே கேட்பாய் | = | மேற்கூறியவற்றையுணர்ந்த தாதாவாயுள்ளஇராகவா கேட்குதி, |
| பதமாம் மடமையர்ம் பூமி ஏழ் முற்றுளபதமாம் ஞான பூமியேழ் மொழிந்த இப்பதங்கள் தம்மில் தாம் பற்றுள வாகும் ஒன்ருேடொன்றளாவிப்பயில்வன பதங்கள் மட்டிலவாம் | = | பதமாம் அஞ்ஞான சப்த பூமியென்றும் பூரண சுகத்துக்கு ஏதுவாயிரா நின்ற ஞான சப்தபூமியென்றும் கூறிய இவ்வவஸ்தா விசேஷங்கட்குப் பரஸ்பரம் தொடர்பு உளதாம் அன்னியோன்னியம் விரவி விவகரிக்கப்படுவனவாயுள்ள பதங்கள் அளவிறந்தனவாம், |
| அற்றமில் சொருப நிலை பெறல் வீடாம் | = | களங்கமில்லாத ஆன்ம அவஸ்திதியே முத்தியாம் |
| அதில் நழுவுறுதல் நான் எனலே | = | அவ்வான்ம நிலையினின்றும் பந்த ஏதுவான பிராந்திஜதாதாத்மியம் அடைதலே அஞ்ஞனது லக்ஷணமாம். |

2 1
அடக்கமா யுரைத்தே மஃதறிந்தவர்க்கு மறிகிலாதவர்க்குநற் குறிக
3
டொட்க்கமில் சன்மாத் திரமதா மறிவின் சொருப நின்றசைவிலா தவரே
விடற்கருங் காம முதற்பகை கடந்தோர் மெய்யறிவிலார்கடப் பரியோர்
நுடக்குறு காட்சி விதத்தில்வீழ்றிவே நோக்கருஞ் சொருபத்தி னழுவல். (37)

அஃது அறிந்தவர்க்கும் அறி கிலாதவர்க்கும் நல்குறிகள் அடக்கமாயுரைத்தேம் = பரமாத்மாவைத் தமது சொரூபமாக உணர்ந்தவருக்கும் அங்ஙனம் உணராதவருக்கும் சிறந்த இலக்கணத்தைச் சுருக்கமாகக் கூறினேம்,

தொடக்கம் இல் சன்மாத்திர மதாம் அறிவின் சொரூப நின்றசைவிலாதவரே விடற் கருங்காம முதற்பகை கடந்தோர் = சங்கமற்ற சத்தாமாத்திரசம்வித்தின் சொரூபத்தினின்றும் சலனமில்லாதவரே சாமானியரால் தியாகிக்க முடியாத இராகத்துவேஷாதிசத்துருவை ஜயித்தோராவர்

மெய்யறிவிலார் கடப்பரியோர் = உண்மை ஞானமில்லாதவர் தாண்டமுடியாதவர் ஆவர்

நுடக்குறு காட்சி விதத்தில் வீழ் அறிவே நோக்கருஞ் சொரூபத்தில் நழுவல் = அற்பமாகப் பொருந்திய திருசிய விசித்திரத்தில் மூழ்குதலே கருதுதற்கரிய தான சொரூபத்தினின்றும் நழுவுதலாம் (மகாமோகமாம்.)

சொருபம்விட் டகலன் மோகமாம்வேறு சொல்லிட முன்புபின் பில்லை
யொருபொரு ளினைவை யொழித்துமே லப்பாலொரு பொருணினை வுறிலந்த
விருபொரு ணடுவு ணினைவறவிருக்கு மிதுசொருபத் தியல் பிதுதான்
மருவுகற் பனை மாண்டசைவில் கற்போலாய் வருநனுச் சுழுத்திதீர்
வடிவாம். (38)

சொருபம் விட்டகலல் மோகமாம் வேறு சொல்லிட முன்பு பின்பு இல்லை = தனது சொருபத்தை விட்டிருத்தல் அனர்த்த ஏதுவான மயக்கமாம் மோகத்துக்கு இலக்கணம் இதனினும் அயலாக ஆபத்து என்று சொல்லுவதற்கு இறந்த காலத்தும் வருங் காலத்தும் இல்லை

ஒருபொருள் நினைவைஒழித்து மேல் அப்பால் ஒரு பொருள் நினைவுறில் அந்த இரு பொருள் நடுவு நினைவற விருக்கும் இது சொரூபத்தியல்பு = சித்தமானது ஒரு விடயத்தினின்றும் மற்றொரு விடயப்பொருட்டுச் செல்லுங்கால் அந்த இரு விடயங்களின் மத்தியில் நிருவி கற்பமாயிருக்கும் இது சொரூப ஸ்திதியாம்,

இதுதான் மருவுகற்பனை மாண்டு அசைவுஇல் கற் போலாய் வருநனுச் சுழுத்தி தீர்வடிவாம் = இந்த சொரூபஸ்திதியானது சர்வ சங்கற்பங்களும் நன்ருக சாந்தமாகி சலனமில்லாத சிலை போலும் ஜாட்டிய சுழுத்தி நீங்கிய மோக்ஷ வடிவமாம் அஃதாவது எதார்த்த வடிவமாம்.

நானெனும் பிரிவும் பேதமுமற்று நல்லறி வாயசையாத
மானதநிலையே சொருபமா முன்சொன் மடமையாம் புவி பதங்கேட்டா
யினமாம் விந்து நனவுமே னனவு மியன்றமா நனவுமந் நனவி
லானதோர் கனவுங் கனவுமிக்கனவி லடர்நனுவுஞ் சுழுத்தியுமே. (39)

நான் எனும் பிரிவும் பேதமும் அற்று நல்லவாய் அசையாத மானத நிலேயே சொரூபமாம் முன்சொன மடமையாம் புவி பதம் கேட்பாய்= தேகாதிகளில் நான் என்னும் பரிச்சின்ன அபிமானமும் அதனுல் கற்பனேயாகப் பொருந்திய பேதமும் ஒழிந்து கேவலம் சிற்சொரூபமாய்ச் சலனவடிவ சங்கற்பங்கள் ஒன்றுமில்லாத நிலமையே சொப்பிரகாச பிரத்யக்சொரூபம் என நிலேபெறும் பூர்வம் புகன்ற அஞ்ஞான சப்த பூமிகளேக் கூறக்கேட்குதி,

யீனமாம் விந்து நனவு மேல் நனவு இயன்ற மாநனவு அந் நனவில் ஆனதோர் கனவும் கனவும் இக் கனவில் அடர் நனுவும் சுழுத்தியும்= தாழ்வாம் பீஜ சாக்கிரம், சாக்கிரம், பொருந்திய மகாசாக்கிரம், சாக்கிர சொப்பனம்; சொப்பனம், சொப்பன சாக்கிரம், சுழுத்தியென்பனவாம்,

இத்திற மேழு மோகமாய்நெருக்குற் றிவைபலபெயர்களே யெய்துஞ்
சித்திலே நின்ருே ரறிவுபேரின்றிச் செறிமலமின்றி மேல் வந்து
வத்தியா நிற்குஞ் சித்தசீவாதி வருபெயர் செயல்களுக் கிடமாய்
வித்துரு பமதாய் நின்றிடுமதனுல் விதைநனவா முதற்பதமே. (40)

இத்திறம் ஏழும் மோகமாய் நெருக்குற்று இவை பல பெயர்களே யெய்தும்= இவ்வகைத்தாய் ஏழு பூமிகளும் (எழுவகைத்தாய மோகங்களும்) தொடர்புற்றதாய் இவை பல நாமங்களேயடையும்,

சித்திலே நின்று ஓர் அறிவு பேரின்றிச் செறிமலமின்றி மேல்வந்து வத்தியாநிற்கும் வருசித்தசீவாதிபெயர்செயல் களுக்கிடமாய்வித்துருபமதாய் நின்றிடும் அதனுல் விதை நனவா முதற்பதம்= சேதன வஸ்துவினின்று ஓர் ஸ்புரணவடிவ மாயா சபள அறிவு பெயரற்றதாய் மலமற்றதாய் இனி மேல் வெளிப்போந்து வளராநிற்கும் சர்க்காதியிலேனும், சாக்கிரத்திலேனும் சித்த ஜீவாதி நாம சப்தார்த்தங்களிலும் அவற்றின் அர்த்தங்களிலும் தொழிற்படுவதற்கேதுவாய் பீஜரூபமாயிருந்து கொண்டு ஸ்திதிபெற்றிருக்கும் தன்மையினுனே முதற்பதமானது பீஜ சாக்கிரம் யென்று சொல்லப்படும்.

இதுவறி வுக்கு முதலவத்தையதா மிதத்துறப் பிறந்த பின்னிவனு
னிதுவென தெனப் பண்டிலாமையா னெய்தாயெழுந்துள வறுதியே நனுவா
மிதுதனே யொழிய விவனவனுனே யிதுவதுவென்னதென் றெண்ணு
மிதுமுதற் பிறப்பிற் ருெடர்ச்சியாய்ப் பருக்குமிந்த நிச்சயம் பெறுநனுவாம். (41)

இதுவறிவுக்கு முதலவத்தையாம்= செப்பிய இப் பீஜசாக்கிரத்துளுப்தியாகிய ஜீவனது பிரதம அவஸ்தையாகும்,

இதத்துறப்பிறந்தபின் இவன் நான் இதுவெனதுவெனப் பண்டிலாமையால்நொய்தாய் யெழுந்துளவறுதியே நனவாம்= இததமமாகிய பரமாத்மாவினின்றும் பிறந்தபின், இவன் நான், இதுவெனதெனப் பூர்வம் இல்லாமையின் சூக்ஷுமமாய்ச் சொச்சமாய் உதித்துவரும் நிச்சயமே (நனவாம்) சாக்கிரமாம்,

இதுதனையொழிய, இவன், அவன், அவன் நானே இது அது என்னதென்றெண்ணும் இதுமுதற்பிறப்பின்றொடர்ச்சியாய்ப் பருக்கும் இந்த நிச்சயம் பெறு நனவாம்= இதைத்தவிர இவன், அவன், நானே இது, அது என்று சிந்திக்கும் இது ஜன்மாந்தர உதிதமாய்த் தூலிக்கும் இந்தத் திடமாய பிரத்தியயம், மகா சாக்கிரம் எனப்பெறும்.

**அறிந்துள தெனினு மறிகிலாதெனினு மழுந்துறத் தானது வாகிச்**
**செறிந்துள நனவிற் சித்தராச்சியமே செய்வது நனுக் கனவாகு**
**மெறிந்தகா னலினீர் சுத்திகைவெள்ளி யிருமதியிவை முதற் பலவாய்**
**பிரிந்தபே தங்க ணனவிலேபழகும் பெற்றியாற் கனவு பலவிதமாம். (42)**

அறிந்துளதெனினும் அறிகிலாதெனினும் அழுந்துறத்தான் அதுவாகிச்செறிந்துள நனவிற் சித்தரர்ச்சியமே செய்வது நனுக்கனவாகும்= வாசனாவிலாசவசத்தினால் கிட்டினதைக்குறித்தாவது வாசனாதிடமின்மையால் கிட்டாததைக் குறித்தாவது மிகவும் அழுத்தமாகத்தான் அதன்மயமாகி பாவிக்கும் விடயங்களோடு தாதான்மியம் பொருந்திய சாக்கிரத்தில் மனோராச்சியம் செய்வது சாக்கிர சொப்பனமாம்,

எறிந்தகானலிநீர், சுத்திகை வெள்ளி இருமதி இவைமுதற் பலவாய்ப் பிரிந்த பேதங்கள் நனவிலேபழகும் பெற்றியால் கனவு பலவிதமாம்= அலைவீசும் பேய்த்தேர், கிளிஞ்சில் வெள்ளி, இரட்டைச் சந்திரன் இவை முதலாகப் பற்பலவாய்ப் பிரிந்து தோற்றும் வேற்றுமையின் சாக்கிரத்தின் அப்பியாசத்தை அனுசரித்து சொப்பனம் அநேகவிதமாம்.

**[1] அற்பகா லத்தி லனேகமாஞ் செயல்கண் டறிந்தனமெனுங்கன வழிந்து**
**முற்படு செயலை நினைவது கனவா முந்துகண்டதனை நாளகன்று [3]**
**பிற்படக் [2] காணும் பொருள்களை [4] மறந்து பெரும்பொழு துணர்வுற நோக்குஞ்**
**சொற்பன நனவு போனனவுக்கே தோன்றுமிச்செயல் கனுநனவே. (43)**

| | |
|---|---|
| அற்ப காலத்தில் அனேக மார்ஞ்செயல்கள் கண்டறிந் தன்மெனுங் கனவு அழிந்து முற்படு செயலை நினைவது கனவாம் = | சிறிது போதில் பல பலவாகிய செயல்களைப் பார்த்து அறிந்தோமென்னும் சொப்பனங்கண்டு விழித்தோ னுக்குச் சொப்பனந் தீர்ந்து முன் கண்ட செயலை எண்ணுவது (கண்ட புருடனுக்குங் கால வேறுபாட் டின் அநுசந்தானம் உதியாமல் கேவலம்பரமார்த்த மென்று எண்ணுவது சொப்பனமாம் |
| முந்து கண்டதனை மறந்து நாள்கன்று பிற்படக்காணும் பொருள்களை பெரும்பொழுது உணர்வுற் நோக்குஞ் சொப் பனம் நனவுபோல் நனவுக்கே தோன்று மிச்செயல் கனு நனவே = | முன் சொப்பனத்திலுண்டான தூல பதார்த்தங்களை மறந்து சில தினங்கழிந்து நீள்போது நற்றரிசன மின்மையால் பின்காணும் பொருள்களை வெகுநாள் தொடர்வுற்றதாய் நோக்கும் சொப்பனம். சாக்கிரத் தைப் போல் உதிதமாய் நனவில் அஃதாவது சாக் கிரத்தில் பெரிதும் விளங்கும் இவ்விவகாரம் சொப் பன சாக்கிரமென்று சொல்லப்படும். |

அறுவகை யவத்தை யகற்றியசீவ னடைந்துளவவத்தையி னியற்கை
யுறுசட மாகி மேல்வருந்துயர்கூ ருணர்வுள தாமிது சுழுத்தி
துறுபுவ னங்க ளிதனிடையிருளிற் றொலைவுறு மிப்பத மேழும்
பெறுவன பேத மொன்றுநூறுகும் பேதைமையவத்தையிவ்வேழும். (44)

| | |
|---|---|
| அறுவகையவத்தையகற்றிய சீவன் அடைந்துள அவத்தை யின் இயற்கையுறு சடமாகி மேல் வருந்துயர் கூருணர் வுளதா மிதுசுழுத்தி = | முற்கூறிய ஆறு அவஸ்தைகளையும் பரித்தியாகஞ் செய்த ஜீவன் பிராப்தியுற்ற ஸ்திதியின் இயல்பு ஜாட்டிய மிகுந்ததாய்ப்பின் வரும் துக்க போகத் துக்கு ஏதுவாய நிலையிதுவே சுழுத்தியெனப்படும் |
| துறுபுவனங்களிதனிடை யிருளிற்றொலைவுறும் இப் பதம் ஏழும் ஒன்றுநூறுபேதம் பெறுவன ஆகும் இவ்வேழும் பேதைமை அவத்தை = | ஒன்றொடொன்று விரவிய உலகங்கள் இவ்வஸ்தை யின் அந்த சுழுத்தியாம் தமசில் லயமாகும் கூறிய அஞ்ஞான பூமிகள் ஏழும் ஒன்று நூறு பேதங்களாய் அடையும் ஹே இராகவ இந்த ஏழு அவஸ்தை களும் அஞ்ஞான சப்த பூமிகளாம். |

அவதாரிகை

இனி அரசனே நீ எதனையறிந்தாற் பின்பு சம்சார சாகரத்தின் மூழ்காயோ அந்த ஞான சப்த பூமிகளைக் கேளென்று தெளிவிப்பவராய் மதாந்தரத்தைத் தெரிவித்துத் தம் மதத்தையே ஸ்தாபித்தல்.

1 1 3
ஞான பூமியை முடிவிற் பேதமாக நவிலுவர்வாதிய ரவற்றினமக்கு நல்ல
தான திவையிவை யறிதன்ஞான மாகு மறிந்த விவற்றந்தமே யழிவில் வீடா
மான முறு சுபம் விரும்பன் விசாரமெய்தன் மனஞ்சிறுக லுண்மையிலே மன்னி நிற்ற
லீனமறு சங்கற்ப மறல்பதார்த்த வெண்ண மறுத்திடறுரிய மிவையே யேழாகும். (45)

| | | |
|---|---|---|
| வாதியர் ஞான பூமியை முடிவிற் பேதமாக நவிலுவர் | = | சாங்கியர், யோகர் முதலிய வாதிகள் இந்தஞான சப்த பூமியினை வெகுவேற்றுமையாக விளம்புவர், |
| அவற்றில் நமக்கு நல்ல தானது | = | அவற்றுள் எமக்குச் சுகத்துக்கு ஏதுவானவை இவையேயாம் |
| இவையறிதல் ஞானமாகும் | | இவற்றினை அறிதல் ஞானமெனப்பெறும் |
| அறிந்த இவற்று அந்தமே அழிவுயில் வீடாம் | = | உணர்ந்த இவற்றின் ஏழாவது பூமியாகிய துரியமே நித்திய முத்தியாம் |
| மானமுறு சுபம் விரும்பல், விசார மெய்தல் மனஞ் சிறுகல் உண்மையிலே மன்னி நிற்றல், ஈனமறுசங்கற்ப மறல் பதார்த்த எண்ணம் அறுத்திடல் துரியம் இவை ஏழாகும் | = | வெகுமானம் பொருந்திய சுபேட்சை, விசாரணை, தநுமானசி, சத்துவாபத்தி, அசம் சத்தி, பதார்த்தா பாவனை, துரியம் இவையே ஏழு ஞான பூமிகளாம். |

1
இவையறிந்தோர் மோகமெனு மளற்றில்வீழா ரிவற்றி யலாமுத்திவரிலிடர் மீண்டில்லை
3
நவையுறுமோ கத்தொடுநா மடைவதென்னே நல்லோரா னன்னூலானன்று ஞானச்
2 4
சுவைபெறுது நிராசையினு லென்று நாடல் சுபம்விரும் பலாகுமிந்தச் சுபேச்சைமுற்றிக்
கவையறுநல் லோரியற்கை யாசாரங்கள் கைவருதல் விசாரமாக் கருதல் வேண்டும். (46)

| | | |
|---|---|---|
| இவையறிந்தோர் மோக மெனும் அளற்றில் வீழார் | = | இந்த ஞான சப்த பூமியினை உணர்ந்தோர் சம்சார மயக்கமென்னுஞ் சேற்றில் மூழ்கார் |
| இவற்றியலாமுத்திவரில் இடர் மீண்டில்லை | = | இவற்றின் அப்பியாசத்தால் சுபாவசிததமாம் மோக்ஷம் உண்டாகும் |

நவையுறு மோகத்தொடு நாம் அடைவதென்னே நல் நூலால் நிராசையினுல் நன்ரு ஞானச்சுவை பெறுதுமென்று நாடல் சுபம் விரும்பலாகும் = குற்றத்தோடு கூடியான் மூடனுகவே எதன்பொருட் டிருந்தேன் இங்ஙன் சம்சார மயக்கமுற்றுழன்று மூடனைப்போல யான் இடர்ப்படல் என்னே சாதுக்க ளாலும் அத்தியான்ம சாஸ்திரங்களாலும் வைராக் கியத்தினுலும் சம்யக்ஞானத்தை ஆனந்தமாக அடைவோம் யென்று இச்சித்தல் சுபேச்சை யென்னும் முதற்பூமியாம்

இந்த சுபேச்சை முற்றி கவை யறு நல்லோரியற்கை ஆசா ரங்கள் கைவருதல் விசார மாக் கருதல் வேண்டும் = இந்த முதற்பூமியானது திடப்பட்டுக் குற்றமற்ற சாஸ்திர சஜ்ஜன சங்கமும் வைராக்கிய பயிற்சியும் சதாசாரமும் முற்றுறவருதல் விசாரணையெனத் தெரிந்து கொள்ளவேண்டும்.

இனையசுபம் விரும்பலொடு விசாரமென்ற விரண்டுநிறை தலும் விடயத்திச்சை மாற்றி
நினைவுகுவி வது சித்தஞ் சிறுகலாகு நிகழ்த்தியவிம்மூன்ருலு நெஞ்சந்தன்னில்
வனைதருமவ் விரத்தியினு லுண்மைப்போத மன்னுதலே யுண்மைநிலை மருவலாகு
மனையனவிந் நான்காலு முண்மைப்போதத் தழுந்தியயற்சங் கமறலசங்க மாகும். (47)

இனைய சுபம் விரும்பலொடு விசாரமென்ற விரண்டு நிறை தலும் விடயத்திச்சை மாற்றி நினைவுகுவிவது சித்தஞ் சிறுகலாகும் = கூறிய இலக்கணம் வாய்ந்த சுபேட்சையுடன் விசாரணையென்னும் இரண்டாவது பூமியும் பூரண மாக அவற்றின் வலுவால் இந்திரிய அர்த்தங்களில் தோஷ திருஷ்டியால் விரக்தியுண்டாகி மனஞ் சுருங்குதல் தநுமாநசியாம்

நிகழ்த்திய இம்மூன்ருலும் நெஞ்சந் தன்னில் வனைதரும் அவ்விரத்தியினுல் உண்மைப் போதமன்னுதலே உண்மை நிலைமருவலாகும் = கூறிய இம்மூன்றின் பயிற்சி வலியால் மனத்தில் தோற்றுநின்ற முன்மொழிந்த வைராக்கியத் தினுலே சத்திய சுத்த நித்திய சொரூப ஆன்மா வில் சித்தத்தினது நிலை பேறே சத்துவாபத்தியாம்

அனையனவிந்நான்காலும் உண்மைப்போதத்தழுந்தி அயல் சங்கமறல் அசங்க மாகும் = கூறிய நான்கு பூமிகளின் அப்பியாசவலியால் சத் துவசமஸ்காரம் ரூடமாகி சம்சர்க்க பலமுறல் அசம் சத்தியாம்.

அறைந்தபத மைந்தாலுந் தாமும்போதத் தழுந்தியவின் பத்தமைவாற் புறனுமுள்ளு
முறைந்தபதார்த் தங்கண்மறந் தயலோர்வன்பா லுணர்வதுவே பதார்த்தநினை வொழிதலாகு
நிறைந்தவிவை யாருலும் பேதம்போக்கி நிலைபெறுதற்சு பாவத்தே நிற்றருனே
மறைந்தபொருள் வெளியாக்குந் துரியமாகு மாசறுசீவ னின்முத்தர் வழியீதாகும். (48)

அறைந்த பதம் ஐந்தாலும் தானும் போதத்து அழுந்திய இன்பத்தமைவால் புறனும் உள்ளும் உறைந்த பதார்த் தங்கள் மறந்து அயலோர் வன்பால் உணர்வதுவே பதார்த்த நினைவொழித லாகும் = கூறிய ஐந்து பூமி அப்யாச வலுவால் ஆத்ம சொரூபத்தில் இரமித்துத் திடமாக அந்த நிரதிசயானந்த திருப்தியால் வெளியிலும் உள்ளிலுமுள்ள பொருள்களில் பாவனையின்மையின் பரப்பிரயத்தனத்தால் அவபோதம் அடைதல் (சமாதியினின்றும் எழுதலே) பதார்த்தா பாவனையென்னும் ஆருவது பூமியாம்

நிறைந்தவிவை ஆருலும் பேதம் போக்கி நிலைபெறுதற்சு பாவத்தே நிற்றல் தானே மறைந்த பொருள் வெளியாக் குந் துரியமாகும் = நிறைந்த ஆறு பூமிகளின் அப்பியாச வலுவால் வேற்றுமை தோற்ருமல் மாற்றி உபாதியால் மறைபட்ட பதார்த்தத்தை வெளிப்படுத்தும் நிலைபெற்ற தனது சுபாவ ஏக நிஷ்டத்வமே துரிய பூமியாம்

மாசறு சீவனின் முத்தர் வழி யீதாகும் = இதுவே சர்வதோஷவிநிர் முக்த ஜீவன் முத்தரிடத்தே இருப்பதாகும்.

சொன்னதன்மே லுடலிறந்த முத்தர்மேவுந் துரியாதீதப் பதமாந் துரியச்செல்வந்
தன்னுணர்வாற் றனையறிந்த பெருமைசான்ற தலைவனலெய்த லுறுந் தன்மையாகு
மன்னியவிப் பதமடைந்த சீவன்முத்தர் மகிழ்ச்சிமறுக்கத் தழுந்தா மரபினுலே
யன்னியர்சொல் வழிதுயில் விட்டெழுந்தார்போல வடுத்தனசெய் குவர்செய்யா ராகி வாழ்வார். (49)

சொன்னதன்மேல் உடலிறந்த முத்தர்மேவுந் துரியா தீதப் பதமாந்துரியச் செல்வம் தன் உணர்வால் தனையறிந்த பெருமை சான்ற தலைவனல் எய்தலுறுந்தன்மையாகும் மன்னிய இப்பதமடைந்த = ஏழு பூமிகளாகக் கூறப்பட்டனவாமவற்றுள் மேலாகிய விதேகமுத்தர் அடைவுறுவது துரியா தீதமென்னும் பதமாம் துரிய ரூப ஆத்மா தனது ஞானத்தால் ஆத்மாவை அறிந்துரமிக்கும். மகாத்மாவாகிய மகாபாக்கியவானல் அடையப் பெறுந் தன்மையுடையதாம் நிலைபெற்ற இப்பதத்தை

| | |
|---|---|
| சீவன் முத்தர் மகிழ்ச்சி மறுக்கத்து அழுந்தா மரபினுலே = | அடைந்த ஜீவன் முத்தர் சந்தோஷம் வாட்டம் இவைகளில் மூழ்காத தன்மையினுலே |
| அன்னியர் சொல்வழி துயில் விட்டெழுந்தார் போல அடுத்தனசெய்குவர் செய்யாராகி வாழ்வர் = | பக்கத்திருப்பவர் (சீடர்) கூறிய நெறியில் நித்திரையை விட்டு எழுந்தவர் போன்று வருணுச்சிரமத்துக்குரிய காரியங்களைச் செய்யினுஞ் செய்வர் செய்யாமலிருப்பினுமிருப்பர் இவ்வாருய நடையுடையவராகி இனிது மகிழ்ந்திருப்பர். |

1
இஞ்ஞான பதமேழு மிகவும்புந்தியெய் தினர்க்கல்லது தோன்ரு விவற்றையெய்தி
லஞ்ஞான மிலேச்சனே யெனினுந் தேகியதேகியெனி னும்முத்த னையமில்லை
3 2
மெய்ஞ்ஞான மென்பது தான்மனத்தின்கட்டு விடுதலிது பெறிலிதுவே வீடுபேரும்
4
பொய்ஞ்ஞானக் கானலினீர் முதலா மோகம் பொய்யெனப் போமடமையும் பொய்யென்னிற்போம். (50)

| | |
|---|---|
| இஞ்ஞானபதம் ஏழும் மிகவும் புந்தியெய்தினர்க்கல்லது தோன்ரு = | இவ்வேழு ஞான பூமிகளும் சாதனசதுட்டயமுடைய அதிகாரிகளுக்கேயல்லாது பிறருக்கு இன்ரும் |
| இவற்றை எய்தில் அஞ்ஞான மிலேச்சனேயெனினும் தேகி அதேகியெனினும் முத்தன் ஐயமில்லை = | இந்த ஞான தசைகளை அடையில் அஞ்ஞான மிலேச்சன் (தர்மவியாதன் பிரகலாதன் கற்கடி பறவை மிருகம் (அனுமார்) என்னினும் தேகத்தோடிருப்பினும் தேகமில்லாவிடினும் முக்தரென்பதில் சமுசயமின்ரும் |
| மெய்ஞ்ஞான மென்பதுதான் மனத்தின் கட்டுவிடுதல் இது பெறில்இதுவேஆம் வீடுபேறு | தத்துவஞானமென்பது தான் அகங்காரக்கிரந்தி விச்சேதமாம் (விநாசமாம்) அக்கிரந்தி நிவர்த்தியாயின் இதுவேமோக்ஷபிராப்தி ஆம் |
| பொய்ஞ்ஞானக் கானலில் நீர் முதலா மோகம் பொய் மடமையும் பொய்யென்னிற் போகும் = | பிராந்தி ஞானத்துக்கு விஷயமான பேய்த்தேர் முதலான மயக்கம் மித்தையென்று பார்த்த அளவில் ஓடிப்போம். அஞ்ஞானமும் அதன் காரியமான சம்சாரமும் ஞாநபூமி இரண்டாம் பூமியிலாயினும் நான்காம் பூமியிலாயினும் பொய்யென்று நாடில் போய்விடும். |

தனையறியு நிட்டையுளோர்க் கெய்தலாகுந் தத்துவபூ மிகளறிந்த தலைமை மேலோர்
நினையவுந்தா ழவுமுரியார் பொறிகளென்னு நெடும்பகை வென்றோ ரழியா நிலையி னின்றோர்
துணைதருபல் லுயிரிறைஞ்ச மேலாய் வாழுஞ் சுரேந்திரரு நரேந்திரருந் துரும்பாய்த் தோன்று
மனையபெரும் பதம்பெற்றோ ரவரேயாகு மல்லாதோர்பவக் கடலிலமிழ்ந்தா நிற்போர். (51)

தனையறியும் நிட்டையுளோர்க்கு எய்தலாகும் தத்துவ பூமிகள் அறிந்த தலைமை மேலோர் நினையவுந்தாழவு முரியார் = சுவாத்மலாபபராயணர்கட்கு (தமது சொரூபத்திலே திதிபெற்றவர்கட்கு) பிரயாசைக்குத் தக்கபடி அடையத்தக்கனவாகக்கூறிய ஞானபூமிகள். இப்பூமிகளில் வாழும் மகாத்மாக்கள் தியானித்தற்கும் வணங்குதற்கும் தகுதியுடையவராவர்

பொறிகளென்னும் நெடும் பகைவென்றோர் அழியா நிலையில் நின்றோர் துணைதரு பல் உயிர் இறைஞ்சமேலாய் வாழுஞ் சுரேந்திரரும் நரேந்திரரும் துரும்பாய்த் தோன்றும் = இந்திரியாதிகளென்னும் பெரிய சத்துருவை ஜயித்தவர் சாஸ்வதமான நிலையில் வாழப்பெற்றவர்கள் தம்மைச் சூழ்ந்த அனேகம் பிரஜைகள் தோத்தரிப்ப உயர்வாக வாழும் தேவேந்திரரும் பூலோகத்ததிபராஞ் சக்கரவர்த்தியும் திரண சமானமாகக் காணப்படுவர்

அனைய பெரும் பதம் பெற்றோர் அவரேயாகும் = அத்தகைய மகா பதவியை அடைந்தவர் அப்பாக்கியவான்களே யாவர் (துரியபதத்திலிருப்பவராவர்)

அல்லாதோர் பவக்கடலில் அமிழ்ந்தா நிற்போர் = மாறுகத்திரிபவர் சமுசார சாகரத்தில் மூழ்கி மாழ்குவர்.

உளமொடுங்கு முபாயமே யோகமாகு முணர்வுறுபூமிக ளிந்தவுபாய மாகும்
வளமிகுமிப் பூமிகளா லன்றியிந்தமாதேவ பெரியபத மருவலாகா
வளவறநீ நான்ருன்வே றென்றுமின்றி யபேதமா யனுமயமா யமலமாகிக்
கிளர்சுகமாய்ச் சாந்தமா யறிவாயொன்றாய்க் கேடின்றிப் பெயரின்றிக் கீழ்மேலின்றி. (52)

உளம் ஒடுங்கு முபாயமே யோகமாகும் உணர்வுறு பூமிகள் இந்த உபாயமாகும் = மனநிரோத உபாயமே யோகமாகும் (யோகம்= ஞானம்) முற்கூறிய ஞான பூமிகள் ஏழுமே மனோநாச உபாயமாகும்

வளமிகும் இப்பூமிகளாலன்றி = இன்பமே பயக்கும் இந்த ஞான பூமிகளாலல்லது

இந்த மாதேவ பெரிய பத மருவலாகா = இப்பெரிய பிரஹ்மானந்த பதமானது அடைய மாட்டாது

அளவற நீ நான்ருன்வே ரென்றுமின்றி அபேதமாய் அநாமயமாய் அமூலமாகிக் கிளர் சுகமாய்ச் சாந்தமாய் அறிவாய் ஒன்ருய்க்கேடின்றி பெயரின்றி கீழ்மேலின்றி = பரிச்சின்னமின்றி துவம், அகம், சுயம், அயல் ஒன்றுமேயில்லாமல் பேதமின்றி நோயின்றி காரண மின்றி பேரானந்தமாய் பரம உபரமமாய் ஞானமய மாய் ஏகமாய் ஆபத்தற்று நாமமில்லாமல் தாழ்வு உயர்வு இல்லாமல்.

**பாவனையு மபாவனையு முதலுமீறும் பற்றுமுளதும் மிலதும் பலவுந் தேசு**
**மேவறிவு மடமையுமென் றிவைகளின்றி விண்ணிலே யிருப்பதாய் விசாலமாகி**
**யாவதுமா யன்ருகி மனத்தால்வாக்கா லெட்டரிதா யின்பத்தி லின்பமாகி**
**யோவரிய நிறைவினிறை வாகியாசையொழி விடமாய்த் தன்ருற்ரு னுணரு**
**மொன்று. (53)**

பாவனையும் அபாவனையும் முதலும் ஈறும் பற்று முள தும் இலதும் பலவுந்தேசு மேவு அறிவு மடமையும் மென்றிவைகளின்றி விண் ணிலேயிருப்பதாய் விசால மாகி யாவதுமாய் அன்ருகி மனத்தால் வாக்கால் எட்டரி தாய் இன்பத்திலின்பமாகி ஒவரிய நிறைவினிறைவாகி ஆசையொழிவிடமாய்த் தன் ருற்ருன் உணருமொன்று = பாவாபாவ நிச்சயமும் ஆதியும் அந்தமும் சங்கமும் சத்தும் அசத்தும் நானும் ஒளியும் பொருந்தா நின்ற சம்வேதனமும் அஃதாவது நினைப்பும் மறைப் பும் கூறிய இவை போன்றனவொன்றுமில்லாமல் சிதாகாச சொரூபமான சுவசொரூபத்திலிருக்குந் தன்மையதாய் (தன் மகிமையிலிருப்பதாய்) வியா பகமாய் வியாவகாரிகத்தில் சர்வமுமாய் பரமார்த் தத்தில் அவை அல்லாததாய் அவாங் மனோகோ சரமாய், நிரதிசயானந்த ரூபமாகலின் விஷய சுகத் தினும் சுகமாய் ஒழிவின்றிய பூரணத்தினும் பூரண மாய் ஆசையற்றவர்களுக்கு ஸ்தானமாய் சுயம் பிரகாசமாய் ஒளிரும் பிரஹ்ம வஸ்து ஒன்று. (உள்ளதாம்.)

**எழுவகையாம் பூமியினுற் பெறும்பிரமமிது மாயையேற் றங் கேண்மோ**
**விழுமமுறு லவணன்ருன் மெய்ம்மறந்து முன்கண்ட விந்தச்சாரற்**
**பழுவமனக் கண்ணுடி பயில்கின்ற வுடலொடும்போய்ப் பார்க்கிற் கண்ணிற்**
**றழுவுறுங்கொ லெனுமமைச்ச ருடனெண்ணித் தானையுடன் சமைந்து**
**போனன். (54)**

எழுவகையாம் பூமியினுற் பெறும் பிரமம் இது = சப்தவிதமான ஞான பூமிகளினுலே அடையத்தக்க ஞானனந்தப்பிரஹ்மம் சொல்லப்பட்டது இதுவரை

மாயையேற்றங் கேண்மோ = இனி அவித்தையின் பெருமையை மீட்டுங் கூறக் கேட்குதி,

விழுமமுறுலவணன்ருன் மெய்ம் மறந்து முன் கண்ட விந்தச்சாரல் பழுவ மனக் கண்ணுடி பயில்கின்ற உட லொடும் போய்ப் பார்க்கில் கண்ணிற்றழுவுறுங் கொல் எனும் அமைச்சருடன்எண்ணி தானேயுடன் சமைந்து போனுன் = பெருமேதாவியாகிய இலவண மன்னன் தான் தேகத்தை மறந்து பூர்வம் பார்த்த விந்த கிரியின் தாழ்வரையிலுள்ள ஆரண்யம் அதின் கண்ணுள்ள பொருள் மனக்கண்ணுடியில் பதிந்திருக்கின்றன. இத்தேகத்தோடுஞ் சென்று பார்ப்போமானுல் பிரத்தியக்ஷமாகக் காணலாமோ என்று மந்திரிமார் களோடு ஆலோசித்து நால்வகைச் சேனேயோடும் சம்பிரமத்தோடுஞ் சென்றனன்.

2 1
தென்றிசைசென் றனன்மீட்டுந் திக்குவிச யஞ்செய்யச் செல்வான்போல்
3
முன்றிகழும் விந்தகிரி முற்பட்டான் வடக்கொழிந்த மூன்றுதிக்கிற்
5 4 6
றுன்றிவளர் வனமெல்லாஞ் சுற்றினு னனிநொந்தான் சூழலொன்றி
லன்றுகரு தியகருத்து வடிவெடுத்த தெனப்பழைய் வடவிகண்டான். (55)

மீட்டுந் திக்குவிஜயஞ் செய் யச் செல்வான்போல தென் றிசை சென்றனன் முன்திக ழும் விந்தகிரி முற்பட்டான் வடக்கொழிந்தமூன்றுதிக்கில் துன்றிவளர் வனமெல்லாஞ் சுற்றினன் நனிநொந்தான் சூழலில் ஒன்று அன்று கரு திய கருத்து வடிவெடுத்தன பழைய அடவிகண்டான் = மீளவுந் திக்குவிஜயஞ் செய்வதற்காக செல்வான் போலத் தெற்குத்திக்கை நோக்கிச் சென்றவனுய் முன்னர்த்தோன்றிய விந்தியமகீரதத்தை அடைந் தனன். கிழக்கு, தெற்கு, மேற்குத் திசைகளில் ஓங்கிய விருக்ஷமடர்ந்த ஆரண்யமுழுதுஞ் சுற்றிப் பார்த்தான் மிகவும் வருத்தமுற்றனன் ஆங்கு (சூழல்=இடம்) ஓர் இடத்தில் அப்போது சிந்தித்த எண்ணமானது ஆகிருதியாகவுற்றதேபோல, புரா தன மகாரண்யத்தைப் பார்த்தனன்.

காலனகர் நிகராமக் கடியவனத் துலாவுதலுங் கடையர் செய்கை
போலவன்முன் சஞ்சரித்த தலங்களுமச் சேரிகளும் பொருந்தக் கண்டான்
சாலவியந் தானந்தக் கடையர்கடைச்சியர் குடில்க டப்பாவண்ண
ஞாலநரபதி நோக்கி வியப்பினுன் மனமயக்க நண்ணிநின்ருன். (56)

காலன் நகர் நிகராம் அக்கடிய வனத்துலாவுதலும் கடையர் செய்கைபோல் அவன் முன் சஞ்சரித்ததலங்களும் அச்சேரி களும் பொருந்தக்கண்டான்= சாலவியந்தான் கடையர் கடைச்சியர் குடில்கள் தப்பா வண்ணம் ஞால நரபதி நோக்கி வியப்பினுல் மன மயக்கம் நண்ணிநின்ருன்=

எமபுரிக்குச் சமானமான அம் மகாரண்யத்தில் சுற்றிச்சுற்றிப் பார்த்தலும் நீசர் செயல்கள்போல அவ்வரசன் நீசனுயிருந்தபோது அங்குச் சஞ்சரித்த இடங்களும் அப் பழைய பறையர்வீட்டுக் கூட்டங் களும் முன்னிருந்தபடியே பார்த்தான்,

அத்தியந்தம் ஆச்சரியமடைந்தனன், புலேயர் புலேச் சியர் குடிசைகள் யாவற்றையும் ஒன்றும் விடாமல் பூபதியான லவணன் பார்த்து ஆச்சரியத்திஞல் மனேமயக்கத்தையடைந்து பிரமித்து நின்றனன்.

கருத்தயருந் துயர்கரைப்பக் கண்கரைந்து மெய்கரைந்து கதரு நின்ற
விருத்தையர்தங் கூட்டத்தின் மிகமெலிவால் வாய்விட்டு விம்மி விம்மி
யொருத்திமுத ளுளிறந்த தன்கிளேஞர் பெயரெல்லா முரையா நின்று
பெருத்தநெடுங் குரலாலே யிவ்வாறு புலம்பினுள் பேதமாக. (57)

கருத்தயருந்துயர்கரைப்ப கண்கரைந்து மெய் கரைந்து கதரு நின்ற விருத்தையர்தங் கூட்டத்தில் மிக மெலிவால் வாய்விட்டு விம்மி விம்மி ஒருத்தி முதல் நாளிறந்த தன் கிளேஞர் பெயரெல்லாம் உரையா நின்று பெருத்த நெடுங்குரலாலே யிவ்வாறு புலம்பினுள் பேதமாக =

மனஞ்சோருந்துன்பம் வருத்த விழிகளில் நீர் சொரி யச் சரீரந்தளர்வுற்று ஓலமிட்டு அலரு நின்ற கிழவி களின் கூட்டத்தில் அதிக மெலிவினுல் வாய்திறந்து துயர் பொருமல் (பொம்மிப் பொம்மி) தேம்பித் தேம்பி ஒரு கிழவி முந்திய தினத்தில் இறந்து போன தனது பந்துக்களின் நாமங்களேயெல்லாம் சொல்லிக்கொண்டு பெரிய நீண்ட சப்தத்திஞலே இவ்வண்ணம் புலம்பி அழுதாள் வேற்றுமையாக.

மாருன விதியாலென் மடிவிட்டு மடிந்துபோ மைந்தர்காளோ
வேருகி யெத்தூரமேகினீர் யார்முகத்தே விழிக் கின்றீரோ
கூருன செங்குன்றின் மணிமாலேத் தோளாலே குளிரப் புல்லி
யாருத வென்னெருப்பை யாற்றுவா யோமகளே யந்தோவந்தோ. (58)

மாருன விதியால் என் மடி விட்டு மடிந்து போம் மைந் தர் காளோவேருகி யெத் தூரம் ஏகினீர் யார் முகத்தே

வாழ்விற்கு எதிர் மறையான தீவிஜேயால் மரித்துப் போம் புத்திரர்களே முன்னிலேக்கி மாருக என்னேப் பிரிந்து எவ்வளவு தூரஞ் சென்றீர்களோ எவர் முகத்தில் தீனர்களாய் விழிக்கின்றீர்களோ சிவப்பு

| | |
|---|---|
| விழிக்கின் றீரோ கூருன செங் குன்றின் மணிமாலைத் தோளாலே குளிரப்புல்லி ஆருத என் நெருப்பை ஆற்று வாயோ மகளே அந்தோ அந்தோ = | கறுப்பு இருநிறப்பிரிவான சிவந்த குன்றின் மணி மாலையணிந்த புஜங்களாலே சீதளமாகும்படி இறு கத்தழுவி ஆற்றமுடியாத எனது மன அக்கினியைத் தணிப்பாயோ புத்திரியே ஐயையோ யான் என்ன செய்வேன்? |

1
முன்னஞ்செய் தவத்தினுற் றேடாத மாநிதிபோன் முன்வந் தெய்திப்
3 2 4
பொன்னனூர் நின்குலத்தோ ரவர்மயல்விட் டென்மகளைப் புணர்ந்து வாழ்ந்த
மன்னனு மருமகனே மறந்தனையோ மதிமுகத்தை வந்து காட்டாய்
பின்னைநா யகவுனக்கென் பேதைசெயுஞ் சிறுபிழையாற் பேதித்தாயோ. (69)

| | |
|---|---|
| முன்னஞ் செய்த தவத்தினுல் தேடாத மாநிதிபோல் முன் வந்தெய்தி நின்குலத்தோர் பொன்னனூர் மயல் விட்டு = | பூர்வஞ் செய்த தவத்தினுல் இப்போது சம்பாதித்து தேடாமலே வலிதிற் கிடைத்த மாட்சிமை பொருந் திய நிக்ஷேபம் (பு தை ய ல்) போலத்தானே வந் தடைந்து நின்னுடைய வங்கிசத்தாராகிய ராணி களிடத்துள்ள மோகத்தைவிட்டு |
| என் மகளைப் புணர்ந்து வாழ்ந்த மன்னனும் மரு மகனே மறந்தனையோ மதி முகத்தை வந்து காட்டாய் பின்னை நாயக உனக்கு என் பேதை செயுஞ்சிறுபிழையால் பேதித்தாயோ = | என்னுடைய அவலக்ஷணமான புத்திரியையும் மணஞ் செய்து கொண்டு வாழ்ந்து வந்த ராஜ புத்திரனும் மருமகனே மறந்து விட்டாயோசந்திரன் போன்ற வதனத்தைக் காட்டித் தரிசனந்தாராயோ சாம்ராஜ்ய லக்ஷ்மி நாயகனே உனக்கு என் னுடைய அறியாக்குமரி செய்த சிறு குற்றத்தால் சித்த விகற்பத்தை அடைந்து விட்டாயோ? |

வன்பிறவிப் பேராற்றில் வல்வினையா குந்திரைகள் வந்துகூடித்
தன்பிறவி யரசியற்கை தவிர்ந்தெமது தையலுக்குத் தலைவனுகிப்
புன்பிறவிப் புலையரைப்போற் பூதலத்துப் புரந்தரனும் புன்மை பூண்டான்
மின்பிறவி நிற்கரிது மிகக்கொடிது மிகக்கொடிது விதியே யென்ருள். (60)

| | |
|---|---|
| வன்பிறவிப் பேராற்றில் வல் வினையாகுந் திரைகள் வந்து கூடித் தன்பிறவி அரசியற்கை தவிர்ந்து எமது தையலுக்கு தலைவனுகி புன் பிறவிப் புலை | கொடிய சம்சாரமென்னும் பெரிய நதியில் தீவினை யாகுந்தரங்கங்கள் வந்து சேர்ந்து தான் ஜனித்த க்ஷத்திரிய வம்சத்தினின்றும் நழுவி எனது புத்திரிக் குக் கணவனுகி நீச ஜன்ம சண்டாளரைப்போல |

| | |
|---|---|
| பூயரைப்போல் பூதலத்துப்புரந் தரனும் புன்மை பூண்டான் = | மண்டலேசுவரனுகிய சக்கரவர்த்தியும் கீ ழ ா ன தன்மையை அடைந்தனன், |
| மின்பிறவி நிற்கரிது மிகக் கொடிது மிகக் கொடிது விதியே யென்ருள்= | மின்னலைப்போன்று ஜன்மம் நிலையற்றது மிகவுங் கொ டி ய து மிகவுங்கொடியது ஈதெல்லாந் தலை விதியேயல்லவோ என்று புலம்பினுள். |

என்றழுது வவள்புலம்பி யிசைத்தவெலா நனிகேட்ட லவணனுங்கே
நின்றுளதன் சேடியரா லவடுயரந் தனையாற்றி நேயத்தோடுங்
கன்றியநின் னிடரேது நீயார்நின் மகளார்நின் காதலோரா
ரொன்றுமொழி வற்மொழி யென்றிவன்வினவப் புலைக்கிழத்தியுரைப்ப
தாளுள். (61)

| | |
|---|---|
| என்றழுது அவள் புலம்பி இசைத்தவெலாம் நனிகேட்ட லவணன் ஆங்கேநின்றுளதன் சேடியரால் அவள் துயரந் தனை ஆற்றி நேயத்தோடும் கன்றிய நின் இடர் ஏது நீ யார் நின்மகள் யார் நின் காதலோர் யார் ஒன்றும் ஒழி வற்மொழியென்று இவன் வினவ புலைக்கிழத்திஉரைப்ப தாளுள் = | என்று சொல்லி அழுதுகொண்டிருந்த அப்புலைச்சி புலம்பி, புலம்பிக் கூறிய யாவற்றையும் நன்ருகக் கேட்ட ல வ ண ன் அவ்விடத்திற்ருனே நின்று கொண்டிருந்த த ன து பணிப்பெண்களால் அவ் விருத்தையின் துக்கத்தைத் தீர்த்து அன்போடும் சித்தம் நையும்படி உனக்குற்ற துயரம் யாது நீ யாவள் நின் மகள் யாவள் நினது விருப்பத்துக்கு விஷயமான பு த் தி ர ர் யார் ஒரு விடயத்தையும் விடாமல் கூறுவாயாக என்று லவண ராஜன் கேட்ப புலையக் குல விருத்தைகூறத் தொடங்கினுள். |

ஈதுபுலைச் சேரியிதி லொருபுலைய னென்கணவ னிவனுக் கிங்கோர்
மாதுபிறந் தனளவளை யிந்திரன்போ லொருமன்னன் வந்துசேர்ந்தான்
போதுநெடும் புணர்வித்த விதியாலே யவண் மூன்று புதல்வர்ப்பெற்ரு
ளேதுறுநல் வினைபோலத் தீவினைவந் தென்கிளைகு ரிறந்துபோனுர். (62)

| | |
|---|---|
| ஈது புலைச்சேரியிதில் ஒருபுலையன் என் கணவன் இவனுக்கு இங்கு ஓர் மாது பிறந் தனள் இந்திரன்போல் ஒரு மன்னன் வந்து சேர்ந்தான் போது நெடும் புணர்வித்த விதியாலே மூன்று புதல்வர் பெற்ருள் = | அப்புலைச்சி அ ழு து கொண்டே சொல்வதாவது இதுபுக்க சகோஷப் பெயரிய கிராமம் இ த ன் கண்ணே ஒருபுக்கசன் எனது நாயகன் இருந்தான் இவனுக்கு ஓ ர் கன்னிகை உற்பவித்தனள் அப் பெண்ணை தேவேந்திரனுக்குச் சமானமான ஒரு ராஜகுமாரன் வந்து நாயகனுக அ டை ந் தா ன் நீண்டகாலம் அநுபவித்தலால் தெய்வயோகத்தால் அக்குமரி மூன்று புதல்வரைப்பெற்ருள், |

ஏதுறு நல்வினைபோல தீவினை வந்து என் கிளைஞரிறந்து போனூர்= நல்வினையின் காரணத்தாலுண்டாகும் புண்ணிய பலன்போலத் துன்பத்தைத் தருவதற்கு ஏதுவாய தீயகருமத்தின் பலன் முன்னுற எனது பந்துக்கள் எல்லாம் மாண்டுபோனூர்கள் ஏனெனின்.

1
நெடுங்காலம் வாழ்ந்ததற்பி னீலமுகிற் றுளிவரண்டு நிலனீர் சுண்டிக்
கடுங்கால னிகர்கலியாற் றிசைதிசைபோய்க் கடையரெலாங் கழிந்து போனூர்
3 2 4
நடுங்காநின் றனதுயருந் தனிமையுமே துணையானே நாங்க ளென்ன
6 5
வடுங்கால வேல்வேந்த னமைச்சரைப் பார்த்ததிசயித்தா னவச னுகி. (63)

நெடுங்காலம்வாழ்ந்ததன்பின் நீல முகில்துளிவரண்டு நில நீர்சுண்டி கடுங்காலன் நிகர் கலியால் திசை திசைபோய்க் கடையரெலாம் கழிந்துபோ னூர் நடுங்கானின்ற துயரும் தனிமையுமே நாங்கள் துணை யானேம் என்ன= நீண்டகாலம் ஒன்றுகூடி வாழ்ந்ததன் பின்னர் கார் மேகம் மழைபெய்யாமையின் வறட்சியாய்ப் பூமியி லுள்ள குளங்குட்டைகள் காய்ந்து கடுமையான யமனையொப்பான வறுமையால் நாலுதிக்குகளி லும் ஓடிப்போய்ப் புலையர் யாவரும் மடிந்துபோனூர் கள். நடுக்கத்தைத்தரும் துன்பமும் காப்பாரின் மையானே தனிமையாக யாங்களே துணையாகக் கொண்டு உயிர் வாழ்கின்றோம் என்று கூற,

அடுங்கால வேல்வேந்தன் அமைச்சரைப் பார்த்து அவசனுகி அதிசயித்தான்= யாவரையுங் கொல்லும் யமனை நிகர்த்த வேலா யுதத்தையுடைய லவணராஜன் மந்திரிமார்களைப் பார்த்துப் பரவசனுய் ஆச்சரியத்தையடைந்தான்.

2 1 3
வேண்டுவன கொடுத்திவளை வெந்துயர்தீர்த் தந்நகரின் மீண்டு மேவி
நீண்டவுல கத்தியல்பு மாயையின் வல்லபமுமவ னெடிது கண்டான்
காண்டகைய பரம்பொருளு நாமுரைப்ப வறிந்தமைந்தான் கருணை வள்ளா
லீண்டியவிம் மாமாயை கடப்பரிய வன்மோக மியற்றுங் கண்டாய். (64)

இவளைவேண்டுவனகொடுத்து வெந்துயர் தீர்த்து அந்நகரில் மீண்டுமேவி நீண்ட உலகத் தியல்பும் மாயையின் வல்லப மும் அவன் நெடிதுகண்டான்= இவளுக்கு விரும்பிய யாவற்றையுங் கொடுத்து இனிய வார்த்தைகளால் கொடிய துயரங்களையெல் லாம் இல்லாமற் செய்து அந்த விந்தியச்சாரலி னின்றும் தனது நகரை மீளவும் அடைந்து நீடிய விசால ஜகத்தியல்பையும் மகா மாயையின் மகிமை யையும் அவ்வரசன் நன்ருக உணர்ந்தனன்,

காண்டகைய பரம்பொருளும் நாம் உரைப்ப அறிந்து அமைந்தான்= காணத்தக்கதான பரமான்ம வஸ்துவையும் எம்மைக் கேட்டுக்கொண்டதால் நாம் உபதேசிக்க நன்ருக உணர்ந்தவனுய் உபசாந்தமடைந்தான்,

கருணைவள்ளால் = கருணைரூபமான இராகவ

ஈண்டிய மாமாயை கடப்பரிய வன் மோகம் யியற்றுங் கண்டாய் = ஆடம்பரம் நிறைந்த அகடிதகடித அவித்தையானது கடத்தற்கரிய மகத்தான மயக்கத்தைத் தருவனவென்று அறியக்கடவாய்.

2 1 3
இலதுளதா முளதிலதா மிம்மாயை வல்லபத்தா லென்ன லோடுங்
கலனமுறு சொற்பனத்திற் கண்டதெலாஞ் சாக்கிரத்திற் கண்டதென்னே
குலமுனிவ வெனக்கேட்ட வள்ளலுக்கு முனியுரைப்பான் கொடிய மாயை
5 4 6
யலகறுமோ கம்புரியுங் காதிகதையா லிதுமே லறிய லாகும். (65)

இம் மாயை வல்லபத்தால் இலது உளதாம் உளது இல தாம்என்னலோடும் கலனமுறு சொப்பனத்திற்கண்டதெலாம் சாக்கிரத்தில் கண்டதென்னே குலமுனிவ எனக்கேட்டவள்ளலுக்கு முனி உரைப்பான் கொடிய மாயை அலகறு மோகம் புரியும் இது காதி கதையால் மேல் அறிய லாகும் = இம் மகா அவித்தையின் சாமர்த்தியத்தால் இல்லாத பொருளும் உளதாகும் இருப்பதும் இல்லாததாகும் என்று ஸ்ரீ வசிஷ்டர் அருளலோடும் கலக்கம் பொருந்திய அஸ்திரமான கனவிற் பார்த்த அனைத்தும் சாக்கிரத்தில் அநுபவ யோக்கியமாய்ப் பார்த்த காரணம் எங்ஙன் கூடும் எங்கள் குலத்திற்கு, குருவாகிய முனிநாதரே யெனக்கேட்ட தாதாவாகிய ஸ்ரீ இராகவருக்கு ஸ்ரீ வசிஷ்ட பகவான் அருளுவதாவது, கனவின்கண் தன் மரணத்தையுங் காண்பதுண்டு, ககனத்திற் பறப்பதாகப் பார்ப்பதும் உண்டு, இவ்விதமாக மிகத் துன்புறுத்தும் மாயையானது அளவற்ற மயக்கத்தைச் செய்யும் இதன் விபரத்தை காதி விருத்தாந்தத்தால் இனி தெளிவாகத் தெரிந்துகொள்ளலாம்.

1 4
காகதா லீயம்போல் வாதனையின் வசத்திலுளங் கலந்து நிற்கு
3 2 5
மேகமுறத் தம்மிற்ரு மென்றுணர்வி னிலை நின்றோரியம்பா நிற்ப
ராகலினுன் முன்னுளிற் சித்தனுற் புலைச்சேரி யாகக் கண்ட
7 6
மோகமதே பின்னுளுங் கண்டது வேறன்றுநா மொழிந்த வேந்தன். (66)

காகதாலீயம்போல் வாதனையின் வசத்தில் உளம் ஏகமுற கலந்து நிற்கும் என்று உணர்வு நிலை நின்றோர் = காகத்தின் தாலதரு சம்யோக சமயத்திலேயே தெய்வ யோகத்தால் சித்தத்தின் சமஸ்காரவயத்தினுல் மனம் தானகவே பரஸ்பரம் பலருக்கும் விவகாரங்கள் ஒன்றுக விரவியுண்டாம், லவணனுல் கண்ட

இயம்பா நிற்பர்= எச் சொப்பன விப்பிரமமுளதோ அதுவே விந்திய புக்கசமனத்தில் ஆரூடமாயது அதாவது லவண னது சித்தத்தில் யாது தோற்றியதோ அத்தகை யதே விந்தியபர்வதத்திருந்த புலேயர் சித்தங்களில் தோற்றியது என்று சொரூபநிலேயில் ஸ்திதிபெற் றவர்கள் கூறுவார்கள்,

ஆகலினுல் முன்னுளிற் சித்த ஞல் புலேச்சேரியாகக் கண்ட மோகமதே நாம் மொழிந்த வேந்தன் பின்னுளுங் கண்டதுவேறன்று= ஆதலினுல் பூர்வஞ் சித்தனுல் நீசக் கிராமமாகப் பார்த்த மயக்கந்தானேயாம் இயம்பிய லவண ராஜன் பிற்போதிலும் பார்த்தது வேறு அல்ல.

மன்னவன் கண்டுள கனவின் மதிமயக்கந் தன்னேயே மலேயின்சார
லன்னவரு நன்னினேவா லறிவுற்ருர் லவணனுமறிவின் ரேற்றந்
துன்னிவரு கடையர்மனங் களிற்ரேற்றக் கடையரெனத்தோன்றும் போத
மின்னநர பதிமனத்திற் தோன்றியதான் மாமாயை யேது செய்யா. (67)

மன்னவன் கண்டுள கனவின் மதிமயக்கந்தன்னே மலேயின் சாரல் அன்னவரும்நன்னினே வால் அறிவுற்ருர்= இலவணராஜன் சிம்மாசனத்தின்கண்ணே யிருந்து பார்த்ததான சொப்பனத்தின் புத்திமயக்கந் தன் ஊேயே விந்தியபர்வதத்தின் தாழ்வரையில் வாழ்ந்த அக் கடையரும் திடமான எண்ணத்தால் தெரி வுற்ருர்,

லவணனும்அறிவின்ரேற்றம் துன்னிவரு கடையர் மனங் களில்தோற்ற கடையரெனத் தோன்றும் போதம் இன்ன நரபதிமனத்தில் தோன்றியது மாமாயை ஏதுசெய்யா= இலவணனுடைய மனத்தின் பிரதிபைவிந்தகிரிசார லில் நெருங்கியிருந்த நீசர் மனங்களில் ரூடமாக விந்தியபுக்கச சம்பந்தியாய போதம் இந்த லவண னது சித்தத்தில் தோற்றியது. இது காரணங் கொண்டு நாட்டின் பெருமை பொருந்திய அவித் தையானது எக் காரியத்தைத்தான் செய்யமாட் டாது, எதனேயுமே செய்யுமென்பதாம்.

1
தோன்றியவை விளக்கத்தா லுண்மையா மைம்பொறிக்குந் தொடர்பாய் நிற்கு
மான்றபதார்த் தங்களெலா மறிவினு லொழிந்துண்மை யாக மாட்டா
3 2 4 2
வேன்றறிவா னறிபொருளா மிரண்டினிடை யறிவானுக் கியைந்த ரூப
6 5 7
மூன்றியறி பொருளறிவா னறிவிலியை யுற்றிடுவ துயர்ந்த வீடு. (68)

தோன்றியவை விளக்கத்தா லுண்மையாம் ஐம்பொறிக்கும் நாமரூபான்மகமாய்த் தோற்றிய பதார்த்தங்கட்கு

தொடர்பாய் நிற்கும் ஆன்ற பதார்த்தங்களெலாம் அறிவி னுலொழிந்து உண்மையாக மாட்டா= பிரதீதிமாத்திரத்தால்சத்தையுளதாம் பஞ்சேந்திரிய விவகார சம்பந்தமுண்டாகுமாதலால் எத்தகைய சர்வ பதார்த்தங்கள் யாவும் சச்சிதானந்த பிரஹ்மத் தைத்தவிர அயல் சத்தையாகாதாம்,

அறிவான், அறிபொருளாம் இரண்டின் ஏன்று இடைஅறி வானுக்கியைந்தரூபம்ஊன்றி யறிபொருள், அறிவான், அறிவு இவைஇல் உற்றிடு வது உயர்ந்த வீடு= திருஷ்டா திருசியங்களிரண்டின் சம்பந்தமுண்டா கிய வழி திருஷ்டாவுக்கு எச் சொரூபமுளதோ ஆழ்ந்து ஆராயுங்கால், ஞேயம், ஞாதுரு, ஞான மென்னுந் திரிபுடியில்லாத அச்சொரூபமாய் துவம் பதலக்ஷிய, தற்பதலக்ஷியங்கள் ஒன்றுபட்டிருப்பது பரம மோக்ஷமாம்.

1 ஓரிடம்விட் டோரிடத்தே யுள்ளமுறி னவற்றினடு வுண்மை யாகிப்
3 2
பேரிலதா யுணர்விலதாய்ச் சடமிலதா யதுநீயாய்ப் பிரியே லென்றுங்
4 6
கூரியபுந் தியினுலே யூகித்துக் குடும்பியெனுங் குறிப்பை மாற்றித்
6 5 7
தூரியதாம் படிமனத்தின் றுவக்கறுத்து விருந்தபடி துணிந்து நிற்பாய். (69)

ஓரிடம்விட்டு ஓரிடத்தே உள்ள முறில்அவற்றின் நடுஉண்மை யாகி பேரிலதாய் உணர்வில தாய் சடமிலதாய் அது நீயாய் என்றும் பிரியேல்= (அதற்கு திரிபுடி சூன்யத்தன்மை எப்போது பிர சித்தமெனிற் கூறல்) ஓர் விடயத்தை விட்டுப் பிறி தோர் விடயத்து மனம் புகில் அவற்றின் மத்தியி லிருப்பதாகி (சத்து சொரூபமாகி) நாமமற்றதாய், அறிவற்றதாய், ஜாட்டியமற்றதாய், ஆகிய மூன் றும் இன்மையதாம், அதுவே ஆன்மாவின் சொரூ பம் என எப்போதும் பாவிப்பாய்,

கூரிய புந்தியினுலே யூகித்து குடும்பியெனும் குறிப்பை தூரியதாம்படி மனத்தின் துவக்கறுத்து மாற்றி இருந்தபடிதுணிந்துநிற்பாய்= அதிசூக்கும மதியினுனே மனத்தின் அபிமான மாசு தவிர்ந்து (ஜனன மரண சம்சார பாவனையினின் றும் விடுபட்டு) எத்தன்மையான ரூபனுயிருந் தனையோ அதுவாகவே திரமாய் இலங்குவாய்.

1 பிறப்பிறப்பாம் பூட்டைதனைப் பிணித்துழற்றும் வாதனையாம் பெரிய பாச
2 3
மறப்பெரிய முயற்சியினு லறுத்திடுவாய் பரமமா மறிவின் முன்னே
2 4
புறப்படும்பொய் யாமுள்ளம் புவனவிகற்பங்க ளெனும் பொய்யைக் காட்டுஞ்
6 5 7
சிறப்புளவின் ஞிலதாயு மிலதான நீலநிறஞ் செறிவதே போல். (70)

| | |
|---|---|
| பிறப்பு இறப்பாம் பூட்டை தனைப் பிணித்துழற்றும் வாத னையாம் பெரியபாசம் அறப் பெரிய முயற்சியினல் அறுத் திடுவாய்= | ஜனன மரண சம்சாரமாகிய கடிய யந்திரத்தை (சுழலுஞ் சக்கரத்தை) பந்தித்து மேலுங் கீழும் சுழற்றும் வாசனையாகிய பெரிய வடத்தை அத்தியந்தம் பெரிய பிரயத்தனத்தினல் சேதிப்பாய், |
| பரமமாம் அறிவில் பெய்யாம் உள்ளம் முன்னே புறப்படும் புவன விகற்பங்களென்னும் பொய்யைக் காட்டும்= | பரமான்ம தத்துவத்தினின்றும் மித்தையாம் மனம் பூர்வம் உண்டாம் அநிர்வசனீயமாம் அதனது விகற்ப ஜாலங்களால் இச் சக விகற்பங்களென்னும் பொய்யைச் சிருஷ்டிக்கும், |
| விண்ணிலதாயும் இலதான சிறப்புள நீல நிறஞ் செறிவதேபோல்= | ஆகாசம் சூன்யமாகினும், இல்லாததான சிறப்பாக நீலநிறம் கொப்பரை கவிழ்த்தாற்போன்ற உருவம் தோற்றுவதற்கு அதிஷ்டானமாவதே போலும். |

[1] சோகமுறு சங்கற்ப நாசத்தான் மனமாளிற் ருென்று தொட்ட
மோகமெனு மூடுபனி விட்டகலுஞ் சரற்கால முதிர வந்தா‌ன்
மாகம்விளங் குவதென்ன நல்லறிவு மாத்திரமாய் மாயா தாகி
யேகமாய் வடிவின்றிப் பிறப்பிறப்பி லாப்பிரம[3] மிலங்கு[2] நொய்தாய். (71)

| | |
|---|---|
| சோகமுறு சங்கற்ப நாசத் தால் மனம் மாளில் தொன்று தொட்ட மோகமெனும் மூடு பனி விட்டகலும்= | துயரை விளைவிக்கும் சங்கற்ப நாசத்தால் சித்தம் மாளும் சித்தம் நாசமாகில் வெகு காலமாகப் பீடித்திருக்கும் சம்சார மோக மூடு பனியானது விட்டு நீங்கும் |
| சரற்காலம் முதிரவந்தால் மாகம் விளங்குவதென்ன = | சர ருதுவானது வளர்ந்து வந்தால் ஆகாயம் சொச்சமாய் விளங்குவதேபோல |
| நல்லறிவு மாத்திரமாய் மாயாதாகி ஏகமாய் வடிவின் றிப்பிறப்பு இறப்பு இலாப் பிரமம் நொய்தாய் இலங்கும்= | கேவலஞ்சின் மாத்திரமாய், அனந்தமாய், அத்வைதமாய், நிராகாரமாய். அஜமாய், அமரமாய், பிரத்யக்க பின்ன பிரஹ்மம், சூக்குமமாய் இருதயத்தில் தானே விளங்கும். |

உற்பத்திப்பிரகரண இதோபதேசம் முற்றிற்று.

ஆக விருத்தம் 516.



உ

# 4. திதிப்பிரகரணம்

## அவதாரிகை.

முற்பிரகரணத்தில் பிரபஞ்சம் மநோ விலாசத்தினுல் உற்பன்னமாயிற்று அதுவும் யோகத்தால் மநோவிலாசம் நசிக்கில் பிரபஞ்சமும் நசிக்குமெனப்பட்டது இப்பிரகரணத்தில் மனத்தினின்றும் உற்பன்னமான பிரபஞ்சம் மனத்தின் கண்ணே இருக்கின்றதென்றுஞ் சொல்லப்படுகின்றது அவற்றில் மனோமயமான திருசியம் மன தோடு ஆன்மாவின் கண்ணிருத்தலின் ஆதாரமாக ஆன்மாவைத் தெரிவித்தற்கு ஆதேயமான திருசியத்தைக் கூறல்.

1
எழுதுவோனு மெழுதிடமு மெதிர்காண் பொருளுமிலதாகி
3 2
வழுவிலாத விண்ணி டையே வந்து தோன்று மோவியந்தான்
4
பழுதின் மேவுந் தனைத்தானே பாரா நிற்கும் பலபொறியு
நழுவு துயிலி னுலன்றி நனவான்மேவுங் கனவொக்கும். (1)

எழுதுவோனும் எழுதிடமும் எதிர்காண்பொருளுமிலதாகி வழுவிலாத விண்ணிடையே ஓவியந்தான் வந்து தோன்றும் = நிஷ்கிரியமானதால் கர்த்தாவும் அமூர்த்தமாதலின் பித்தியா முதலிய மூர்த்தத் திரவியங்களும் அத்வைதமாதலின் சுவேத நீலபீதாதி வர்ணத்திரவியங்களும் இல்லாமல் களங்கமற்ற சிதாகாசத்தில் சித்திரங்கள் உதித்து எழுந்து இலங்கும்

பழுதுஇல் மேவுந்தனைத் தானே பாரா நிற்கும் = நிர்த்தோஷமாகப் பொருந்தும் சித்திரம் தனக்கு வேறான திருஷ்டா இருந்து பார்க்கப்படும் இஃது அங்ஙனமன்று திருஷ்டா திருசியங்களுக்குப் பேத மின்மையின் சுயமே அனுபவிக்கும்

பல பொறியும் நழுவு துயினுலன்றி நனவால் மேவுங் கனவொக்கும் = சர்வேந்திரியங்களும் உபரமமான துயில்கனுவென்பதின்றிச் சாக்கிரத்தின் கண் தோன்றும் சொப்பன சதிருசமாம் கானல் நீர் போலவும் ஆம்.

1
கரியாய்ச் சமமாய் நொய்தாகிக் கலந்தவிகற்பந் தீரறிவிற்
3 2
பரியா நின்ற வுலகமெலாம் பற்றிபாய்தல் கண்ணடியிற்
4
தெரியா நின்ற பொருள்போலாஞ் செறிகாரணகா ரியமின்றிப்
6 5 7
புரியா நின்ற வுலகெல்லாம் பொலிந்து பிரமத்திடையிருக்கும். (2)

கரியாய்ச் சமமாய் நொய்தா கிக்கலந்த விகற்பந்தீர் அறிவில் பரியா நின்ற உலகமெலாம் கண்ணடியில்தெரியா நின்ற பொருள் போல் பற்றி செறி காரண காரியமின்றி புரியா நின்ற உலகெல்லாம் பிரமத்திடை பொலிந்திருக்கும் = சாக்ஷிபூதமாய் எங்கும் ஒரே படித்தாயிருப்பதாய் அதிசூக்குமமாய்ப்பேத சூன்யமான சிதான்மாவில் துன்பத்தைப் பயவாநின்ற பிரபஞ்சமனைத்தும் முகுரத்தில் (கண்ணடியில்) தோற்றும் பிரதிபிம்பம் போல வாசனைப்படி மனத்தில் புலப்படல் ஆம் வாஸ்தபமாகப் பொருந்திய காரண காரியத்தன்மையை அடையாமலே கற்பனையாகத் தோற்று நின்ற பிரபஞ்சம் யாவும் பிரஹ்மத்தின் கண்பிராதிபாசிகமாத்திரமாயிருக்கும்.

1
சொன்ன வுலகங் களுக்குருவந் தோன்றுநின்ற மாத்திரமாம்
பின்னமின்றி யாவையுமாய்ப் பேராவறிவாய்ப் பெருவிண்ணாய்
மன்னு பிரம மொன்றென்றே வருந்திமுயன்று பாவிப்பாய்
2 2 4
யன்ன நிலையே கைவந்தா லலைவற் றுள்ள மறிவுருவாம். (3)

சொன்ன உலகங்களுக்கு உருவம் தோன்று நின்ற மாத்திரமாம்= பிரஹ்மத்திடை ஆரோபிதமாயிருக்குமென்று கூறிய பிரபஞ்சத்திற்கு வடிவம் பிரதீதி மாத்திரமேயாம் அதிஷ்டானத்தினும் வேறு சத்தை இன்மையின்

பின்னமின்றி யாவையுமாய்ப் பேரா அறிவாய்ப் பெருவிண்ணாய் மன்னுபிரமம் ஒன்றென்றே வருந்தி முயன்று பாவிப்பாய் = அகண்டிதமாய் அனைத்துமாய்ச் சின்மாத்திரமாய்ச் சிதாகாசமாய் இரா நின்ற பிரஹ்ம சொரூபம் ஏக்மென்பதாகவே மிகக்கஷ்டப்பட்டு!யத்தனித்துத்தன்மயசிந்தனஞ் செய்வாய்

அன்ன நிலையே கைவந்தால் உள்ளம் அலைவற்று அறிவுருவாம் = அத்தகைய ஸ்திதியானது சாக்ஷாத்கரிக்கவரின் சித்தம் சாஞ்சல்யத்தைவிட்டு சின்மாத்திரமேயாம்.

2 1 3 5 4
கீற்றுப் பலசே ரொருகற்போற் கிளருஞ்சகங்கள் செறிபிரமந்
6
தோற்றப் படுமா லிரண்டென்னத் தொடர்கா ரணம்வே றிலாமையினு
லாற்றச் சகமென் றென்றிலதா மறிவேயுளதா மனைத்துலகுந்
தேற்றப் பிரமத் திருக்குமிவை தெளியவெள்ளி கதை கேட்பாய். (4)

பலகீற்று சேர் ஒரு கற்போல் செறிபிரமம் கிளருஞ் சகங்கள் தோற்றப்படும் = பலரேகைகள் பொருந்திய ஒரே கல்லானது விக்கிரகபேத ரூபமாய் பிரதீதியாவது போல

| | |
|---|---|
| செறிபிரமம் கிளருஞ்சகங்கள் தோற்றப்படும் = | பரிபூரணப் பிரஹ்மம் ஒன்றே நாமரூபான்மகப்பிர பஞ்ச ரூபமாய் நிச்சயிக்கப்படும் |
| இரண்டென்னத் தொடர் காரணம் வேறிலாமையின் ஆற்றச் சகமென்று ஒன்று இலதாம் அறிவேயுளதாம் = | துவிதீக காரணம் இன்மையின் இவ்வுலகம் உண் டாவனவுமல்ல, ஒழிவனவும் அ ல் ல, வருவனவு மல்ல. சச்சிதானந்தப் பிரஹ்மமே இருப்பதாம், |
| அனைத்து உலகும் தேற்றப் பிரமத்திடையிருக்கும் இவை தெளிய வெள்ளி கதை கேட் பாய் = | சர்வப் பிரபஞ்சமும் சொச் சொரூப பிரஹ்மத்தின் கண்ணே ஆரோபமாக விருக்கும் இ வ் ற் றை த் தெரிந்து கொள்ளச் சுக்கிரன் கதை கேட்பாய். |

1 3 2 4
முன்ன மொருநாட் பிருகுமுனி முதுமந்தரமால் வரைச்சாரன்
மன்னு தவஞ்செய் யுழியவன்றன் மைந்தன் மதிமான் மதியனையோன்
றன்ன தாதை கழற்பிரியான் றனிமெய்ஞ்ஞான மஞ்ஞான
மென்னு மிருபார்வை யினடுவே யியங்கா நின்ற பெரும்பதத்தோன். (5)

| | |
|---|---|
| முன்னம் ஒரு நாள் பிருகு முனி முதுமால் மந்தரவரைச் சாரல் மன்னுதவஞ் செய்யுழி அவன்றன்மைந்தன் மதி மான், மதி அனையோன் தன்னதாதை கழற்பிரியான் தனி மெய்ஞ்ஞானம் அஞ் ஞான மென்னும்இருபார்வை யினடுவே இயங்கா நின்ற பெரும்பதத்தோன் = | முன்னொரு காலத்தில் ப க வ ா ன் பிருகு வளம் நிறைந்து நீண்டு உயர்ந்த பெரிய மந்தரகிரிச் சார லில் கோரமான தவத்தைச் செய்து கொண்டிருந்த போது அம்மகாமுனிவனது குமாரன் மகாமதியை யுடையவன் சந்திரனைப்போன்றவன். தன்னுடைய தந்தையின் தி ரு வ டி யை ப் பூஜித்துக்கொண்டே யிருப்பவன் ஒப்பற்ற மெய்ஞ்ஞான அஞ்ஞானமென் னும் இ ரு திருஷ்டிகளின் இடையிலிருந்து பூசு வர்க்கமத்தியிலிருக்கின்ற தி ரி ச ங் கு யென்னும் (ஜிஞ்ஞாசைபதத்திலிருந்து) வி வ க ரி ய ா நின்ற பரமபதத்தை அடையத்தகுதியுடையவன். |

2 1 3
செறியுந் தரத்தே நிற்கின்ற திரிசங்கு வைப்போற் சுக்கிரனு
மறிவோ டறியா மையினடுவே யமருநாளி லவன்றாதை
பிறிவில் சமாதி யுறநிற்பப் பிரியாவெள்ளி தனியிருந்து
வெறிய விசும்பை நோக்குதலும் விண்மாதொருத்தி வரக்கண்டான். (6)

அந்தரத்தே செறிநிற்கின்ற திரிசங்குவைப்போல் சுக்கிரனும் அறிவோடு அறியாமையின் நடுவே அமருநாளில் அவன்தாதை பிறிவு இல் சமாதியுறநிற்பப் பிரியா வெள்ளி தனியிருந்து வெறிய விசும்பை நோக்குதலும் விண் மாது ஒருத்தி வரக்கண்டான்=

(பூமி சுவர்க்கமத்தியில்) அந்தரிக்ஷ லோகத்தில் பொருந்தியிருக்கின்ற திரிசங்குவென்னும் அரசனைப்போல் வெள்ளியும் ஞான, அஞ்ஞான மத்தியில் அப்பியாசியாயிருக்கும் நாளில் அவனுடைய தந்தை விகற்பமற்ற நிருவிகற்பசமாதியில் திடமாக விருக்கத் தந்தையைவிட்டு நீங்காத சுக்கிரன் ஏகாங்கியாயிருந்துகொண்டு நிர்மலமான ஆகாயத்தைப் பார்த்தலும், தேவாங்கனை (விச்சுவாசி) யொருத்தி வரப்பார்த்தான்.

1 3 2 4
மந்தா நிலத்தா லசைகின்ற மந்தாரஞ்சூழ் மலர்க் குழலா
டந்தா வளத்தின் பிடிபோலத் தனியேவரலு மெதிர்நோக்கிச்
சிந்தா வசனு யவள்வடிவைத் தியானித்திருகண் முகிழ்த்திருந்து
முந்தா நின்ற வேட்கையினுன் முடிவின்மனோ ராச்சிய முயன்றான். (7)

மந்தானிலத்தால் அசைகின்ற மந்தார மலர்சூழ்குழலால் தந்தாவளத்தின் பிடிபோலத் தனியேவரலும் எதிர்நோக்கிச் சிந்தாவசனாய்அவள்வடிவைத் தியானித்திருகண் முகிழ்த் திருந்துமுந்தாநின்றவேட்கையினால் முடிவில் மனோராச்சிய முயன்றான்=

தென்றல் காற்றினால் சலியாநின்ற மந்தாரமலர் மாலையணிந்த அளகபாரத்தையுடையவள் பெண் யானைபோலத் தான்மாத்திரம் வருதலும் முன்னிலையிற்கண்டு சிந்தாபரவசனாய் அந்தத் தேவாங்கனையின் அழகையே தியானஞ்செய்து இரு நேத்திரங்களையும் கொஞ்சநேரம் மூடியிருந்து மேல்மேலும் எழும் ஆசையினால் அனந்த மனோராச்சியஞ் செய்யத் தொடங்கினான்.

2 1 3
பொன்னாட் டணங்கே யிவளந்தப் பொன் னாட்டியானும்போய்ப் புகுந்தே
னின்னாட் டமர ரிவர்போற்ற வெழில்கூர்சிங்கா தனத்திலிவன்
மின்னாற் செறியு முகிலென்ன வேந்தாமிவனைச் சூழ்ந்துமதன்
றன்னாற் களிக்கு மரம்பையர்தஞ் சமுகமிவை யென்றுளத் துணர்ந்து. (8)

இவள் பொன்னாட்டணங்கே இந்தப் பொன்னாட்டு யானும் போய்ப்புகுந்தேன் இந்நாட்டு அமரர் இவர் போற்ற எழில் கூர் சிங்காதனத்திலிவன் மின்னாற்செய்த முகில் என்னவேந்தாம் இவனைச் சூழ்ந்து மதன்

இம் மங்கை சுவர்க்கத்திலுள்ள தேவாங்கனையே அச் சுவர்க்கலோகத்தில் சுக்கிரனாகிய யானும் வந்து அடைந்தேன். இவ்வுலகத்தில் வாழும் தேவர்களாகிய இவர் வணங்க, கவின் வாய்ந்த சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் இத் தேவேந்திரன் மின்னலிலே ஆலிங்கிக்கப்பெற்ற மேகம் ஒப்ப சதுர்த்தசபுவன நாயகன் ஆவன் இத் தேவேந்

றன்னல்களிக்கும் அரம்பையர் தஞ்சமூகம் இவையென்றுளத் துணர்ந்து= திரனை நெருங்கி மன்மதாவேசத்தால் மகிழும் அரம்பையர்தங்கூட்டம் இவையென்று மனத்தானே சிந்தனை செய்து.

இருவர் விழியு நினைவுகளு மேகமாக வுறப்பற்றி
யுருகு மளவிற் சங்கற்பத் தொன்றும்பிழையா வுயர்வெள்ளி
கருகு மிருண்மு டுகவென்று கற்பித்திடலுங் கற்பாந்தப்
பருவம் போலு மிருள்சூழப் பலருமகன்றார் பலதிசையும். (10)

இருவர் விழியும் நினைவுகளும் ஏகமாக உறப்பற்றி உருகுமளவில் ஒன்றும் பிழையா சங்கற்பத்து உயர்வெள்ளி கருகு மிருள் மூடுகவென்று கற்பித்திடலுங் கற்பாந்தப் பருவம் போல் இருள்சூழலும் பல திசையும் பலரும் அகன்றார்= இரண்டுபேர்களுடைய நேத்திரங்களும் எண்ணங்களும் ஒன்றாக அழுந்தி மூழ்கி கசிந்துருகியபோது சத்திய சங்கற்பமுடைய தவமிகுந்த சுக்கிரன், யாவற்றையும் மறைக்கும் பேரிருள் வியாபிக்குக என சங்கற்பித்த மாத்திரத்தில் கற்பாந்தகாலம் போல் அந்தகாரம் மிகுத்தலும் தத்தமது இச்சை வயமுற்ற திசைகளில் யாவரும் போயினர்.

அன்னா ளிவனை வந்தணைய வழகார்தரு நீழலி லொருபாற்
றுன்ன முயங்கி யோருயிராய்த் துன்பமில்லா வின்பத்தி
னன்னா ளாகச் சதுர்யுக நாலுநாலு நடந்த தற்பின்
முன்னும் புரிந்த தருமமெலா முடியுமுடியு மெனுங் கருத்தால். (11)

அன்னாள் வந்து இவனை அணைய அழகார்தரு நிழலில் ஒருபால் துன்னமுயங்கி ஓருயிராய் துன்பமில்லாவின்பத்தில் நல்நாளாக சதுர்யுகம் நாலு நாலுநடந்ததற்பின் முன்நாம் புரிந்த தருமமெலாம் முடியும் முடியும் யெனுங் கருத்தால்= அவ் விச்சுவாசியென்னும் தேவமாது வந்து இச்சுக்கிரனை ஆலிங்கனஞ் செய்துகொள்ள ஓரிடத்தில் இறுகத்தழுவி இருதேகமாயினும் ஒருமனமுடையவராய் சிறிதுந் துயர் உறாத சிற்றின்பத்தில் ஆனந்த தினங்களாக எட்டுச் சதுர்யுகங்கள் கழிந்த தன்பின்னர் பூர்வம் யாம் செய்த அறங்கள் யாவும் எஞ்சுதலின்றி முடிந்ததென்னும் எண்ணத்தால் (அநுசந்தானத்தால்).

விழுந்தான் புவன மண்டலத்தின் மெய்யைமறந்தா னிவன்சீவன்
கொழுந்தார் மதியின் கலைசேர்ந்து குளிர்ந்தபனியாய் நெல்லாகிச்
செழுந்தாள் நெல்லைத் தசார்ணதேச மறையோன் சமைத்தருந்த
வெழுந்தா துவுமாய்ச் சுக்கிரன்வந் திவன்பாரியை பான்மகவானான். (12)

புவன மண்டலத்தில் விழுந்தான் மெய்யை மறந்தான் இவன் சீவன் கொழுந்தார் மதியின் கலை சேர்ந்து குளிர்ந்த பனியாய் நெல்லைத்தசார்ணதேசமறையோன் சமைத்தருந்த வெழுந்தாதுவுமாய் சுக்கிரன் வந்து இவன் பாரியை பால் மகவானுன் =

பூமண்டலத்தில் வீழ்ந்தனன் சரீரத்தை மறந்தான் இவன் உயிர் இளமை பொருந்திய சந்திர கலையிற் சேர்ந்து சீதளமான பனியாம் சாலித்தன்மையை அடைவுற்றுக் கொழுத்தாள் களையுடைய அந்த நெல்லைத்தசார்ணதே சத்துப் பிராமணன் பக்குவஞ் செய்து சாப்பிடச் சாரமாயுற்ற சுக்கிலமாய்ப்பார்க்கவன் (சுக்கிரன்) கருப்பத்தையடைந்து இப்பிராமணன் மனைவியினிடத்தில் புத்திரனுனுன்.

1 3
அன்னுன் முனிவர் தொடர்ச்சியினு லரியதவமோர் மனுக்காலம்
2 4
பொன்னுர் வரைசூழ் வனத்திடையே புரிந்தா னவனங் கொருபெடைமான்
றன்னு லொருசேய் நரவடிவாய்ச் சாதனுனு னவனன்பாற்
பின்னு நின்ற பேதைமையாற் பேராவுண்மை நிலைபெயர்ந்தான். (13)

அன்னுன் முனிவர் தொடர்ச்சியினுல் பொன்னுர் வரை சூழ் வனத்திடையே அரிய தவம் ஓர் மநுக் காலம் புரிந்தான் = அவன் அங்கு ஒரு பெடைமான் றன்னுல் ஒரு சேய் நர வடிவாய்ச் சாதனுனுன் அவன் அன்பால் பின்னு நின்ற பேதைமையால் பேராவுண்மை நிலை பெயர்ந்தான் =

மைந்தனுய் வந்த அவன் முனிவர் தம் சம்சர்க்கத்தினுல் சொர்ணமயமான மேருகிரியை சுற்றியுள்ள ஆரண்யத்தில் உக்கிரமான பெருந்தவத்தை ஒரு மநுவந்தரகாலம் நோற்ருன்
அம்மறையவன் மைந்தனுக்கு அவ்விடத்தில் ஒரு பெட்டைமானுல் ஒகு புத்திரன் மனுட ஆகிருதியாய் உற்பன்னமாயினுன் அம்மறையவன் அக்குழந்தையின் சினேகத்தால் (புத்திர வாஞ்சையால்) அக்குழந்தைக்குத் தனம் ஆயுள் வேண்டுமென்று சிக்கி நின்ற மோகத்தினுல் சத்தியமான நிலைமையை (தவதியானுதிகளை) கைவிட்டனன்.

1 3 2 4
மற்று மளவில் பிறவிகளின் மருள்வாதனையாற் பிறந்திறந்து
முற்று முயர்கங் கையின்றடத்தோர் முனிவன் மகவாய் முனியானுன்
பற்று முயிர்போய் முதற்காயம் பவனனுலும் வெயிலாலும்
பெற்று வளர்த்த பிருகுவின்பாற் பெரிதுமுணங்கி யென்பாகி. (14)

மற்றும் மருள் வாதனையால் அளவில் பிறவிகளில் பிறந்

பிறவும் மயக்கமிக்க வாசனையால் அனந்த ஜனனங்களில் ஜனித்து மரித்து சரீர பரம்பரைகளை அனு

திறந்து முற்றும் உயர்கங்கையின் தடத்து ஓர் முனிவன் மகவாய் முனியானுன் = பவித்துத் தெய்வ யோகத்தால் மிகவும் மகிமை வாய்ந்த கங்காதீரத்து ஒரு மகரிஷியின் மைந்தனுகி அசஞ்சல விருத்தியுடையவனுய் தவசிரேஷ்டனுயினன்

(பூர்வ விருத்தாந்தம்) பற்றும் உயிர்போய் முதற்காயம் பவனுலும் வெயிலாலும்பெற்று வளர்த்த பிருகுவின் பால் பெரிது முணங்கியென்பாகி = மனோ ராச்சியங்களானே கற்பித்துக்கொண்டிருந்த சுக்கிரனது சரீரத்தில் பொருந்திய ஜீவன்போய் சுக்கிர சரீரம் காற்றுலும் சூரிய ஆதபத்தாலும் ஈன்று போற்றிய பிருகு மகரிஷியின் சன்னதியில் மிகவும் வறண்டு கங்காளமாய்.

1
பிருகு முனிவன் பெருமையினுற் பிணங்குமிருகம் புள்ளிணங்க
ளருகு மணுக லற மண்மே லங்கமுழுதுங் கெடாதிருப்பத்
3 2 4
திருகு மனந்தீர் சமாதியிலே தெய்வமருட மாயிரம்போ
யிருகண் மலரத் தவமுனிவ னிட்டமகவை யெதிர்நோக்கி. (15)

பிருகு முனிவன் பெருமையினுல் பிணங்கு மிருகம் புள்ளினங்கள் அருகும் அணுகலற மண்மேல் அங்கம் முழுதுங் கெடாதிருப்ப மனம் திருகு தீர் சமாதியிலேதெய்வ வருடம் ஆயிரம்போய் இரு கண் மலர தவ முனிவன் இட்ட மகவை எதிர்நோக்கி = பிருகு மகரிஷியினது மகாத்மியத்தினுல் ஆண்டுச் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் பசுபக்ஷியாதிகள் சுக்கிர சரீர சமீபித்தும் வராமல் பூமியின் மீது சரீர முழுவதும் அழியாதிருப்ப மன விபரீதந்தீர்ந்த நிருவிகற்பசமாதி தெய்வ வருடம் ஆயிரம் சென்ற பின்னர்ப் பெருந்தவப் பிரஹ்ம தரிசியாய முனீந்திரன் இரண்டு நேத்திரங்களும் யுத்திதமடையபரமப்பிரியமான மைந்தனைச்சன்னதியில் பார்த்து.

அறத்தின் வடிவா யஞ்சலிசெய் தருகேயிருக்கு மகற்காணுன்
வறக்கு முடலின் கங்காளம் வறுமைவடிவா யெழுந்ததென
நிறக்குநிர்ப்பாக் கியம்வடிவாய் நிற்பதென்ன வெதிர்கிடப்பத்
துறக்கு மனத்தான் பிருகுவெனுந் துய்யதவத்தோன் றனிநோக்கி. (16)

அறத்தின் வடிவாய் அஞ்சலி செய்து அருகேயிருக்கும்மகற் காணுன் வறக்கும் உடலின் கங்காளம் வறுமை வடிவாய் எழுந்ததென நிறக்கும் நிர்ப் = தரும மூர்த்தியாய் நமஸ்கரித்து வணக்கத்துடன் சமீபத்திலிருக்கும் மைந்தனைக் கண்டிலன் பசையின்றிக்காய்ந்த சரீரத்தின் எலும்பு தரித்திரம் மூர்த்தி

அபாக்கிய வடிவாய் நிற்ப தென்ன எதிர்கிடப்பதுறக்கு மனத்தால் பிருகுவெனுந் துய்யதவத்தோன் தனி நோக்கி = கரித்ததுபோலவும் அதிகரிக்கும் அபாக்கியமானது ஆகத்தோடு கூடியமர்ந்து நிற்கின்றது போலவும் சந்நிதியில் வீழ்ந்து கிடப்ப வாசனைகளை அறவே ஒழித்த பிருகு மகரிஷியென்னும் பரிசுத்தனுன தவத் தோன் கூர்ந்துபார்த்து.

1
மென்றேல் போர்த்த வெலுப்புமனை வெளிகடோறுந் தித்திரிப்புள்
சென்றே டுவது முதரகுகை செறியுமண்டு கத்திரள்க
ளொன்றே டொன்று பாய்வதுங்கண் டுற்றவாறென் னென்வறிவா
3 2 4
னின்றோர் கில்ன்றுஞ் சின்னென்றே நேயமைந்தன் றனைநினைந்தான். (17)

மென்றேல் போர்த்த வெலுப்புமனை வெளிகடோறுந்தித்திரிப்புள் சென்றேடுவதும் உதரகுகை செறியும் மண்டுகத்திரள்கள் ஒன்றேடொன்று பாய்வதுங்கண்டு உற்றவாறு என்என அறிவால் நின்று ஓர் கிலன் நேய மைந்தன்றனைதுஞ் சினனென்றே நினைந்தான் = மெல்லிய சர்மத்தால் வியாபிக்கப்பெற்ற அஸ்திக் கிரகத்துள்ளே சந்துக்கள் தோறும் கிச்சிலிக்குருவி புகுந்து பாய்வதையும் வயிற்றுக்குகையின்கண் இளைப்பாறியிருந்த தவளைக் கூட்டங்கள் ஒன்றுக் கொன்று குதித்து விளையாடுவதையும் நோக்கி நிகழ்ந்த காரணம் யாது என்று விவேக அறிவால் ஆய்ந்து நின்று பாராமல் பிரியமான புத்திரனை இறந்தனனென்பதாகவே எண்ணினுன்.

அடைத்த காலத் தன்றியென தரியமகவை யகாலத்திற்
றுடைத்த காலன் றனைக்கணத்திற் றுடைப்பனென்னு விடைப்பாகன்
விடைத்த வாபோற் பிருகுமுனி வெகுண்டுசாப மிடநினைப்பக்
கிடைத்த கால னடுநடுங்கிக் கிளரைம்பூத வடிவெடுத்து. (18)

அடைத்த காலத்தன்றியென தரிய மகவை அகாலத்தில் துடைத்த காலன்றனைக் கணத்தில் துடைப்பனென்னு விடைப்பாகன் விடைத்தவா போல் பிருகுமுனி வெகுண்டு சாபமிட நினைப்பக் கிடைத்த காலன் நடுநடுங்கிக்கிளர்ஐம் பூத வடிவெடுத்து = ஈசுரன் நியமித்த காலத்தல்லாமல் என்னுடைய கல்யாண குணங்களுடைய மைந்தனைக் காலமல் லாக்காலத்தில் கொன்றயமனை இம்மப்போதில் சம்மரிப்பேனென்று ரிஷபவாகனுருடனை பரமேசுவரன் மார்க்கண்டனுக்காகக் கோபித்ததைப் போல பிருகுமகரிஷியானவர் கோபித்து சாபங் கொடுக்கக் கருதுதலும் ஈசுவரஆணையைப் பெற்ற யமன் விளங்கா நின்ற பஞ்சபூத சம்பந்த (ஆதி பௌதீக சரீரம்) தூல சரீரத்தைத் தாங்கி.

1 வதன மாறுங் கரமாறும் வாளுங்கயிறுங் குண்டலமும்
பதன கவசத் துடன்மேவிப் பரந்தசேனை புடைசூழ
விதன முனியை வந்தணுகி வேண்டிக்கொள்வான் மெத்தென்ன
நிதன மூல மெனுங்கால னிமலமுனிவற் கிவையுரைத்தான். (19)

வதனம் ஆறும் கரம் ஆறும் வாளும் கயிறும் குண்டலமும் பதன கவசத்துடன் மேவிப் பரந்த சேனை புடைசூழவிதன முனியை வந்தணுகி மெத்தென்ன வேண்டிக் கொள்வான் நிதனமூலமெனுங் காலன் நிமல முனிவற்கு இவையுரைத்தான் = இருதுக்கள்ஆறும் ஆறுமுகங்களும் பக்கத்துக்குஆறு கைகளும் கட்கமும் பாசமும் தாங்கி குண்டலாதி களும் காக்கத் தக்க கவசத்துடன் வந்துகிட்டி நாற் புறமுங்கிங்கர சைன்யம் சூழ்ந்து கூடவர நொந்து கொண்டிருக்கும் பிருகு மகரிஷியைக்கிட்டி சொற் களால் பிரார்த்தித்துக் கொண்டனன் சங்காரகார ணனுகிய யமன் தவத்தால் பரிசுத்தரான பிருகுமக ரிஷியை நோக்கிப் பின்வருமாறு கூறத்தொடங்கி னன்.

ஈன்ற நியதி பாலிக்குமியாங்க ணின்னை யீறில்லா
வான்ற தவத்தாற் றுதித்திடுது மல்லாதில்லை யாதலினுற்
சான்ற தவத்தை வெங்கோபத் தழலாற்சுடுத றகவன்ருற்
றேன்று மூழிக் கனலுமெமைச் சுடாதுநின்சொற் சுடவற்றே. (20)

ஈன்ற நியதிபாலிக்கும் யாங்கள் நின்னையீறில்லாவான்ற தவத்தால் துதித்திடுது மல்லாதில்லை ஆதலினுல் சான்ற தவத்தை வெங்கோபத்தழலாற் சுடுதல் தகவன்ருல் தோன்றும் ஊழிக் கனலும் எமைச் சுடாது நின்சொல் சுடவற்றே = பரமேசுரனுல் ஏற்படுத்தப்பட்ட நியமத்தைத் தவ ருது நடத்தும் எம்போலியர் உம்மை முடிவில்லா உன்னதம் பொருந்திய தவத்தினுலே போற்றுவ தாம் அஃது அல்லாது அயல் ஒரு உத்தேசத்தாலன் ரும் ஆகையால் கஷ்டப்பட்டு நோற்ற பெருந் தவத்தை மிகுந்த கோபாக்கினியினுல் தீத்தல் தகுதி யன்று மிகுத்துவாரானின்றபிரளயகாலஅக்கினியும் எம்மைத் தகிக்காது உமது சாபம் தகித்தற்கு உரியதாமோ.

குடும்ப வலையிற் பிணிப்புண்ட கோடா கோடி யுநத்திரரு
நெடும்பங் கயக்கண் மாதவரு நிலையா மென்னுற் ருலைவுற்ரு
ரிடும்பை யுலகி லெனைக்கடந்தா ரில்லையாரு மெனக்கிரையாம்
படும்பல் லுயிரு மியாம்படுத்தல் பததியாய பழநியதி. (21)

| | |
|---|---|
| குடும்பவலையிற் பிணிப்புண்ட கோடா கோடி யுருத்திரரும் நெடும்பங்கயக்கண் மாதவரும் நிலையாம் என்னல் தொலைவுற்றார் இடும்பை உலகில் எனைக்கடந்தாரில்லை யாரும் எனக்கு இரையாம் படும்பல்லுயிரும் யாம்படுத்பல் பகுதியாய பழநியதி = | சம்சார ஜாலத்தில் அகப்பட்டு உழலும் அனேகங் கோடி ருத்திரபதவியுற்றவரும் நீண்ட செந்தாமரை யிதழ் போன்ற நேத்திரங்கள் வாய்ந்த விஷ்ணு கணங்களும் (தவசு அடைந்தவரும்) நீடித்த ஆயுளை யுடைய என்னல் மாய்வுற்றனர். துயர் மயமாய இச்சகத்தில் என்னைத்தாண்டினவர் இவர் யாவருமே எமக்குப்பக்ஷணமாவர் தோன்றும் எல்லாப் பிராணிகளையும் யாம் சங்கரித்தல் இயல்பான புராந்தகன் நியதியாம். |

2 1
எமது விதியன் றிந்நியதி யென்று முள்ள படியாகு
மமல விழியிற் செய்வோனு மருந்துவோனு மிலவாகும்
விமல மல்லா விழிக்கிவர்கண் மிகவு முளவாம் விதிவயத்தாற்
றமது நினைவாற் பல்லுயிருஞ் சனிக்குங்கற்ப முடிவிற்போம். (22)

| | |
|---|---|
| இந்நியதி எமது விதியன்று என்றும் உள்ளபடியாகும் அமலவிழியில் செய்வோனும் அருந்துவோனும் இலவாகும் = | இந்த நியமமானது எம்மனோரால் விதிக்கப்பெற்றதல்லவாம் எப்போதும் பரம்பொருளால் ஆக்கப்பட்டுள்ளதேயாம் களங்கமற்ற திருஷ்டியால் பார்க்குமிடத்து (பரமார்த்தத்தில்) கர்த்தாவுமில்லை போக்தாவுமில்லை |
| விமலமல்லா விழிக்கு இவர்கள் மிகவுமுளவாம் விதி வயத்தால் தமது நினைவாய் பல்லுயிருஞ் சனிக்கும் கற்ப முடிவிற்போம் = | அசுத்த வாசனு விசிட்டமனதுக்குக் கர்த்தா போக்த்தா முதலிய இவர்கள் சத்தியமாக விதிஹேதுவினல் உளவாம் தமது பாவனையால் சகல பிராணிகளும் உண்டாம் கற்பாந்தத்திற் செல்லும். |

கற்ப தான மறைதருசிற் கண்ணதெங்கே சிரத்தையதாய்
நிற்ப தெங்கே யுயர்வெங்கே நெடியோர்விளங்கு மிந்நெறிக்கே
யற்ப ரான குருடரென வயர்வதென்னத் தம்வினையா
லுற்ப விக்குஞ் செயல்பாரா துருத்துச்சபிக்க வுரியாயோ. (23)

| | |
|---|---|
| கற்பதான மறைதருசிற் கண்ணதெங்கே சிரத்தை யதாய் நிற்பதெங்கே உயர் | அத்தியயனஞ் செய்வதான உபநிஷத்துக்களினுலுண்டான ஞான திருஷ்டி எவ்விடத்து சிரத்தையாக நிலைபெறுவதான தீரதையாண்டையது |

யெங்கே நெடியோர் விளங்கும் இந்நெறிக்கே அற்பரான குருடரெனஅயர்வதென் தத்தம் வினையாலுற்பவிக்குஞ் செயல்பாராது உருத்துச் சபிக்க உரியாயோ =

மேன்மையாண்டையது தீர்க்கதரிசிகளாகிய மகான்கள் திதி பெற்று விளங்கும் இம்மார்க்கம் நிற்கும் நீரும் சொற்ப மதியையுடைய அந்தகர்போல மோகமுறுவது என்ன காரணம் தத்தமதுகர்ம பரிபாகத்தினுலே இறந்து பிறக்கும் தசையை நோக்காது கோபித்துச் சபிக்க உரித்தானவராவீரோ?

1
மனமே புருடன் மற்றில்லை மனத்தின்செயலே செயலாகுங்
கனசீ வனத்தாற் சீவனுமாங் கவர்நிச்சயத்தாற் புந்தியுமாஞ்
சினவு மபிமா னத்தாலே தீயவகங்காரமுமாகுந்
3 2
தனது விகற்ப சாலத்தாற் ருனே சகமாந் தனி மனமே. (24)

மனமே புருடன் மற்றில்லை மனத்தின் செயலே செயலாகும் கனசீவனத்தாற் சீவனுமாங்கவர் நிச்சயத்தால் புந்தியுமாம் சினவும் அபிமானத்தாலே தீய அகங்காரமுமாகும் தனது விகற்பசாலத்தால் தானேதனி மனமே சகமாம் =

ஈண்டு சித்தமே ஜீவனும் பிறிது அல்லவாம் சித்தஞ் செய்ததே செய்ததாகும் நீண்டநாள் வாழ்வுற்றிருத்தலால் ஜீவனும் கிரகிக்கும் துணிபால் மதியுமாம் வருத்தா நின்ற அபிமானத்தாலேகொடிய அகங்காரமுமாகும் தனது விகற்பக் கூட்டங்களாலானே அனர்த்தந்தருவதில் ஒப்பற்ற மனந்தானே உலகமாம்.

1 3 2
ஆதலா லுன் புதல்வனுநீ யலைவில்சமாதி யமர்போதிற்
4
காத லாலே சுக்கிரனுங் காயந்தன்னை யிவணி றுத்தி
மீதில் விச்சு வாசியெனும் விண்ணுட்டணங்கை மேவியபின்
6 5 7
னேது புவியிற் றேசார்ண வொருவே தியன்பா லுற்பவித்து. (25)

1 3 2
ஆதலால் உன்புதல்வனும் நீ அலைவில் சமாதியமர்போதில்
4
காதலாலே சுக்கிரனுங்காயந் தன்னை இவண் நிறுத்தி மீதில் விச்சுவாசியெனும் விண்ணுட்டணங்கை மேவிய பின் =

மனமே யாவற்றையும் இயற்றுமாதலால் நீர் நிருவிகற்பசமாதியை அடைந்திருந்தபோது நினது மைந்தனும் காமபரவசத்தால் உசனு சம்பந்தியான சரீரத்தை இவ்விடத்திலேயே இருக்குமாறு இயற்றிச் சொர்க்கலோகத்திலுற்ற விச்சுவாசியென்னும் பெயர் வாய்ந்த தேவசுந்தரியை அடைந்து ஆனந்தித்தபின்,

புவியில் ஓதுதே சார்ண ஒரு வேதியன்பால் உற்பவித்து = பூமண்டலத்திற் புகழ்ப்பெற்றதே சார்ணதேயத் திருந்த ஒப்பற்ற மறையவனிடத்து ஜனித்து பின்.

1
கோசல தேசந் தன்னிற் கொற்றவ னாகத்தோன்றி
2
வீசலர் வனத்தி னூடே வேடனாயுதித்துக் கங்கை
2 4
மாசல மருவு பாரின் மராளமாய்ப் பௌண்டரத்திற்
6 5
பேசரு நிருப னானன் பெருங்கதிர் குலத்து வந்து. (26)

கோசல தேசந்தன்னில்கொற்றவனாகித் தோன்றி வீசுஅலர் வனத்தினூடே வேடனாயுதித்து மாகங்கை சல மருவு பாரில் மராளமாய்ப்பௌண்டரத்திற் பெருங்கதிர் குலத்துவந்து பேசரு நிருபனானன் = அச்சுக்கிரன் கோசலமென்னும் நாட்டில் சிற்றரசனாக ஜனித்துப் பின் வாசனை நிரம்பிய ஆரண்யத்தின் கண்ணே வேடனாய்ப் பிறந்து மாட்சிமை பொருந்திய கங்கா தீர்த்தம் பரவிய தடத்தில் ஹம்சமாய்ப் பிறந்து பின் பௌண்டரமென்னும் தேசத்தில் சொல்லுதற்கரிய சூரிய வம்சத்தில் பிறந்து அரசனானன்.

1
சாலுவ நாட்டிற் பானு மந்திரத் தலைவனானன்
3 2 4
மேலுயர் கற்ப காலம் விஞ்சையர் வேந்தனானன்
வாலுணர் வுளதா யங்கோர் மாதவன் மதலையானன்
சேலுகள் சவ்வீ ரத்திற் சேர்ந்தசா மந்தனானன். (27)

சாலுவ நாட்டில் பானுமந்திரத்தலைவனானன் கற்ப காலம் மேலுயர்விஞ்சையர் வேந்தனானன் வாலுணர் வுளதாய் அங்கோர் மாதவன் மதலையானன் சேலுகள் சேர்ந்த சவ்வீரத்தில் சாமந்தனானன் = பின் சாலுவமென்னும் தேசத்தில் பிறந்து சௌராச்சாரியானன் பின் கற்ப காலம் மேன்மை மிக்க வித்யாதர ஸ்ரீ மானானன் அதன்பின் மகாபுத்திமானாய் அவ்விடத்து ஒரு மகாதபசியினது மைந்தனாய்ப் பிறந்தான் பின் கயல் மீன்கள் துள்ளித்திரியும் வயல் சேர்ந்தசவ்வீரத்தில்மண்டலேசுவரன் ஆனன் பின்.

1 3 2
திரிகத்த தேசந் தன்னிற் றேசிகச் சைவனானன்
முருகர்சூழ் வேட ரூரின் மூங்கிலா ரணிய மானன்
னரிணத்தோர் பிறப்பாய்ச் சீரணசாங்கலத் தமரலுற்றான்
விரிவில்சூழ் பனையின் காட்டில் வெஞ்சினப்பாந்த ளானன். (28)

திரிகத்த தேசந்தன்னில்சைவ தேசிகனுனன் முருகர்சூழ் வேடர் ஊரில் மூங்கில்ஆரணியமானுன் ஓர் பிறப்பு அரிணத்துஆய் சீரணசாங்கலத்து அமரலுற்ருன் விரிவில் சூழ் பனையின் காட்டில் சினப்பாந்தளானுன் = திரிகத்தமென்னுந் தேயத்தில் சைவ தேசிகனுனன் பின் வாசனை பொருந்திய விருக்ஷங்களடர்ந்த காட்டில் கிராதர் வசிக்கும் கிராமத்தில் மூங்கில் புதரானுன் பின் ஓர் பிறப்பில் மானுய் சமணசாங்கலத்தில்) வறண்ட காட்டில் உழன்று திரிந்தான் பின் வித்தாரமான தால விருட்சமடர்ந்த காட்டில் கொடுங்கோபத்தோடு கூடிய பாம்பாயினுன்.

1 5 3 2 4 6
இவ்வண்ண மனந்த யோனி யிழிவுயர் வாகவெய்தி
8 7
மைவண்ண மனத்தி னுலே வாதனை வயத்தினின்று
9
மெய்வண்ணக் கங்கை மாட்டோர் மெய்ம்முனிக் குமாரனுகிப்
பொய்வண்ணப் பொறிக ளென்னும் புன்பகை யறுத்துவென்று. (29)

இவ்வண்ணம் அனந்த உயர்வு இழிவு ஆக யோனியெய்தி வாதனை வயத்தினின்று மைவண்ண மனத்தினுலே மெய்வண்ணக் கங்கை மாட்டு ஓர் மெய்ம் முனிக் குமாரனுகிப் பொய் வண்ணப் பொறிகளென்னும் புன்பகை அறுத்துநின்று = இந்தப்பிரகாரம் அளவில்லாத ஏற்றத்தாழ்வாய் ஜன்ம பரம்பரையை அடைந்து வாசனு வசமாகக் கட்டுற்றுக் கலக்கம் பொருந்திய சித்தத்தினுலே இப்போது உண்மைப்பயனைக் கொடுப்பதானகங்கா நதியின் தீரப் பிரதேசத்தில் ஒப்பற்ற உண்மைத் தவத்தினன் புத்திரனுகி மித்தையாகப்பொருந்திய சப்தாதி விஷயங்களில் செல்லும் இந்திரிய மனே சத்துருக்களை வெற்றி கொண்டு.

4 2 1 3 5
வரிசடை பலவுங் கட்டி வாசுதே வப்பேர்மேவிப்
8 7 9 6
புரிதவத் தெண்ணு ருண்டு பொருந்தின னினது மைந்தன்
10
திரிதரு கனவை யொத்த சித்தத்தின் மயக்கந்தன்னைப்
பரிவுறக் காண்டி யென்னிற் சிற்கணுற் பார்த்தியென்ருன். (30)

பலசடையும் வரி கட்டி வாசுதேவப் பேர் மேவி நினது மைந்தன் தவத்து எண்ணுறு = பல சடைகளையும் ஒன்று சேர்த்துப்பந்தித்து வாசுதேவனென்னுந் திருநாமம் பூண்டு மதிமான்களின் மத்தியில் சகல சுருதிகளையும் நன்ருகக்கற்று உம்

ஆண்டு புரி பொருந்தினன் திரிதருகனவை யொத்த சித்தத்தின் மயக்கந்தன்னை பரிவுறக் காண்டியென்னில் சிறகணுற் பார்த்திவென்ருன் =

முடைய குமாரன் வருடங்கள் எண்ணூருகிப்பெருந் தவத்தைச் செய்து கொண்டிருக்கின்றனன் விபரீதமாகத் தொடராநின்ற நித்திராதோஷ ஜன்னிய சொப்பனத்தைப்போன்ற மனோவிப்பிரமத்தைப் பார்க்க வேண்டுமென்று விருப்ப முளதேல் ஞான நேத்திரத்தால் காண்பீராக வென்று தருமராஜா கூறினுர்.

காலனீ துரைப்பக் கேட்ட கலைமுனி ஞானக் கண்ணுற்
பாலகன் செய்கை யெல்லாம் பார்த்தனன் கணத்தினெல்லை
மேலதா மொளியாற் ரேற்ற மாத்திரம் விளங்கி நல்ல
சீலமார் புந்தி யென்னுந் தெளிந்தகண் ணடியிற் பாய்ந்த. (31)

காலன் ஈதுரைப்பக்கேட்ட கலை முனி மேலதாம்ஒளியாற் தோற்ற மாத்திரம் விளங்கி நல்ல சீலமார்புந்தியென்னுந் தெளிந்த கண்ணடியிற் பாய்ந்த பாலகன் செய்கை யெல்லாம் கணத்தின் எல்லை ஞானக்கண்ணுல் பார்த்தனன்=

யமதருமர் இவ்வாறு இயம்பக் கேட்ட சர்வ சாஸ்திர சம்பன்னரான மகரிஷியானவர் உயர்வுடைய ஸ்புரணத்தால் பிரதிபானவயமாகத் தோற்றியோக ஐதரும விசுத்த புத்தியாகிய அதி சொச்சமானதர்ப்பணத்தில் பிரதிபிம்பித்த புத்திர சரித்திரம் யாவற்றையும் முகூர்த்த மாத்திரத்தில் ஞான திருஷ்டியால் கண்டனர்.

வானதிக் கரையி னின்று மந்தரச் சாரலிற்றன்
மேனியில் வந்து சார்ந்த மெய்ம்முனி வியந்துசால
வூனமில் காலன் றன்னை யொன்றலா வேண்டுகோளா
லானதோர் காத லில்லா வருமுனி பகர்வதானுன். (32)

வான்நதிக்கரையினின்று மந்தரச்சாரலிற்றன் மேனியில் வந்து சார்ந்த மெய்ம் முனி சால வியந்து ஊனம் இல் காலன்றன்னையொன்றலா

பெருமை பொருந்திய ஸ்ரீ க ங் கா நதிக்கரையிலிருந்து மந்தரகிரியின் சாரலிலிருக்கும் தனது சரீரத்தில் திரும்பி வந்தடைந்த விருத்தியைப் பொருத்தி சத்தியதபோ முனிவர் அதி அற்புதத்தையடைந்த திருஷ்டியானே யாதொரு குற்றமுமில்லாத ய ம

| | | |
|---|---|---|
| வேண்டுகோளால் ஆன்றோர் | | தருமரைப் பார்த்து பலவித்பிரார்த்தனைகளுடன் |
| காதலில்லா அருமுனி பகர்வ | | யாதொருவிதமான ஆசையுமற்ற அரிய தவத்தை |
| தானுன் | = | யுடைய பிருகுமுனி கூறத்தொடங்கினர். |

1
மாதவன் கையைப் பற்றி மந்தரக் கந்தரத்தின்
மீதகன் றமர ராற்றை மேவின னிவரிலாங்கே
பேதமாம் வாசு தேவப் பெயரொடு மிருந்த சேயைக்
3 2 4
காதலான் முனிவன் கண்டான் காலனு மிதனைச் செய்தான். (34)

| | | |
|---|---|---|
| மாதவன் கையைப்பற்றி மந் | | மகாதவசிரேஷ்டரானபிருகுமுனியின்கரத்தைக்கரத் |
| தரக்கந்தரத்தின் மீது | | தாற்பற்றி மந்தரகிரியின் குகையினின்றும் மேலே |
| அகன்று அமரர் ஆற்றை | | எழும்பித் தேவநதியாகிய கங்கா தீர்த்தை அடைந் |
| மேவினன் இவரில் ஆங்கே | = | தனர், |
| பேதமாம் வாசுதேவப் பெய | | வந்துள்ள இருவர்களில் அக்கங்கைக்கரையி |
| ரொடும் இருந்த சேயை | | னிடத்தே சுக்கிரனினும் அன்னியமாக வாசுதேவ |
| முனிவன் காதலாற் கண்டான் | | நாமத்தோடு தவஞ் செய்து கொண்டிருந்த புத்திர |
| காலனும் இதனைச் | | ஞகிய சுக்கிரனை பிருகு மகரிஷியானவர் அன்போ |
| செய்தான் | = | டும் பார்த்தனர் யமதருமரும் இதனைச் செய்தனர். |

1
இங்குற்ற சமாதி நீங்கி யிவனெமைக் காண்கவென்று
சங்கற்பஞ் செய்த லோடுஞ் சமாதிவிட் டிவரை நோக்கி
வெங்குற்ற மில்லா மைந்தன் பணிதலும் விரும்பியாருந்
3 2 4
துங்கத்தோ ரொருகல் மீது மூவருஞ் சூழ்ந்திருந்தார். (35)

| | | |
|---|---|---|
| இங்குற்ற சமாதி நீங்கி | | இவ்விடத்தில் கூடியிருக்கும் நிருவிகற்ப சமாதி |
| இவன் எமைக்காண்கவென்று | | கலைந்து இப்பிருகு மைந்தன் எம்மிருவரையும் |
| சங்கற்பஞ் செய்தலோடுஞ் | | பார்க்கக்கடவனென்பதாகத் தருமராஜா சங்கற்பஞ் |
| சமாதிவிட்டு இவரை நோக்கி | | செய்தவுடனே சமாதி விட்டு இருவரையும் தரிசித் |
| வெங்குற்றமில்லா மைந்தன் | | துக் கொடிய குற்றமொன்றுமில்லாத புத்திரன் |
| பணிதலும் விரும்பியாருந் | = | நமஸ்கரித்தலும் |
| துங்கத்து ஓர் மூவரும் ஒரு | | பரஸ்பரம் சன்மானிக்கப்பட்டவர்களாகிய பரிசுத்த |
| கல் மீது சூழ்ந்திருந்தார் | = | ரான ஒப்பற்ற மூவரும் ஒரு சிலையின் மீது இனிது வீற்றிருந்தனர். |

வாசுதே வப்பேர் மைந்தன் மற்றிவர்தம்மை நோக்கித்
தேசுடை யுமது நல்ல தெரிசனப் பேற்றினுலே
மாசறு தவத்தா னூலான் மகங்களாற் றனத்தாற் போகா
வேசுறு மோகந் தீர்ந்தே இதிலமு தின்பஞ் செய்யா. (86)

வாசுதேவப்பேர் மைந்தன் மற்றிவர் தம்மை நோக்கித் தேசுடை உமது நல்லதெரிசனப்பேற்றினுலே மாசறு தவத்தால் நூலால் மகங்களாற் தனத்தால் போகா ஏசுறு மோகந்தீர்ந்தேன் இதில் அமுது இன்பஞ் செய்யா = வாசுதேவனென்னும் நாமம் வாய்ந்த அம்முனிவன் வந்து தரிசனந்தந்த அவ்விருவரையும் பார்த்து மகாதேஜசு பொருந்திய தங்களுடைய தரிசன விசேடங்கிடைத்ததினுலே குற்றமற்ற தபசினுல் சாஸ்திரத்தால் யாகங்களால் திரவியத்தால் நீங்காத இழிவு பொருந்திய மயக்கம் ஒழியப்பெற்றேன் இதுபோல இதனினும் அமிர்தம் ஆனந்தத்தைப் பயவாதாம்.

1
என்றுரை செய்தோன் றன்னை யியன்முனி யினிதுநோக்கி
நன்றுயர் ஞானஞ் சேர்க நவைதரு மூட்மைதீர்க
வுன்றனக் கென்ற லோடு மூனக்கண் ணிரண்டு மூடிப்
பொன்றலின் ஞானக் கண்ணுற் புராதன மெல்லாங் கண்டான். (37)

என்று உரை செய்தோன் றன்னை இயல் முனி இனிது நோக்கி உன்றனக்கு உயர்ஞானஞ்சேர்க நவைதரு மடமை தீர்கவென்றலோடும் ஊனக்கண் இரண்டும் மூடிப் பொன்றல் இல்ஞானக்கண்ணுல் புராதனமெல்லாங் கண்டான் = என இவ்வண்ணம் வேண்டிக் கொண்ட மைந்தனை மைத்திரியாதி குணம் பொருந்திய மகரிஷியானவர் கருணையோடும் பார்த்து உனக்குச் சுபம் உண்டாகுக. குற்றத்தை விளைக்கும் அறியாமை தீர்ந்தொழிகவென்று ஆசீர்வாதஞ் செய்த பின் சர்மசட்சுக்கள் இரண்டையுங் குவித்துக் கெடுதலில்லாத ஞான திருஷ்டியினுல் பழமையான சரிதமெல்லாம் பார்த்தனன்.

1 3 2
நீத்தன பிறவி யெல்லா நிமிடத்தின் ஞானக்கண்ணுற்
4 6 5 7
பார்த்தபின் வியந்து சொல்வான் பகுதியா மிகுதிமோகங்
கோத்தனுா லங்க ளாகிக் கோரவென் மனத்தினூடே
யாத்தமாய் வளராதகோ வகோவீதொன் றென்ன. (38)

நீத்தன பிறவியெல்லாம் ஞானக்கண்ணால் நிமிடத்தில் பார்த்த பின் வியந்து சொல் வான் மிகுதிபகுதியாம்மோகம் கோத்தஞாலங்களாகிக்கோர வென்மனத்தினூடே ஆத்த மாய் வளரா நின்றது அகோ அகோ ஈதொன்றென்னே = வாசுதேவப் பெயரினையுடைய சுக்கிரன் தான் பிறந்து பிறந்து சென்றனவான ஜன்மங்கள் அனைத்தையும் ஞான திருஷ்டியினால் நிமிடத்தில் கண்ட பின்னர் ஆச்சரியப்பட்டுச் சொல்லுவ தாவது மகாமாயையாலுண்டான மயக்கத்தால் அடுக்கு அடுக்காய்ச் செறிந்த ஜகத் ஜாலங்களாய்ப் பிரவிருத்திக்குமாறு இரஜோமய எனது சித்தத்தில் மெய்போல திடமாய் சாங்கோபாங்கமாய் விருத்தி யாகின்றது அந்தோஅந்தோ இஃதொன்றிருந்தது என்னையோ.

1
கற்பன வனைத்துங் கற்றேன் காண்பன வனைத்துங்கண்டே
னுற்பவத் தனேக கால முழன்றவெந் துயரந்தீர்ந்தே
3 2 4
னற்பய னறிவைப் பெற்றே னுமினியையவேகி
6 5 7
யெற்படர் மந்தரத்திலிருக் கின்ற வுடலைக் காண்பேம். (39)

கற்பன வனைத்துங்கற்றேன் காண்பனவனைத்துங்கண் டேன் உற்பவத்து அனேக காலம் உழன்ற வெந்துய ருந்தீர்ந்தேன் நற்பயன் அறி வைப் பெற்றேன் ஐய நாம் இனியேகி மந்தரத்திலிருக் கின்ற எற்பு அடர் உடலைக் காண்பேம் = கற்கவேண்டிய ஞான சாஸ்திரம் யாவற்றையும் அறிந்தனன் பார்க்க வேண்டிய யாவற்றையும் பார்த்தனன், இச்சம்சாரத்தில் வெகுகாலம் பிறந்து இறந்து சுழன்ற கொடிய துக்கங்களையும் அகன் றேன். மாநுடவாக்கையின் பிரயோஜனமான ஞானத்தையும் அடைந்தேன் எந்தையேநாம் இனி சென்று மந்தராசலத்திருப்பதாய என்புமயமாய்ப் பொருந்திய காயகங்காளத்தைப் பார்ப்போம்.

கருமமே யேது வாகுங் காயகங் காளந்தன்னை
யிருகணு னோக்கி யின்ப மெய்துவா னினைந்தேனியாது
மொருசெயல் வேட்கையில்லை யொழிப்புறு செயலுமில்லை
வருதிரா லென்ன வன்னூர் மந்தரங் கணத்திற் சேர்ந்தார். (40)

கருமமே யேதுவாகுங்காய கங்காளந்தன்னை இருகணால் நோக்கி இன்ப மெய்து வான் நினைந்தேன் யாதும் = நியதியின் இரசனையால் உண்டாவதாயிரா நின்ற அவ்வுடல் எலும்பு தன்னை இரண்டு நேத்திரங்களா லும் காட்சியாகக் கண்டு ஆனந்தத்தையடையும் பொருட்டு எண்ணினேன் இவ்வுலகத்தில் எத்தகைய

ஒரு செயல் வேட்கையில்லை யொழிப்புறு செயலுமில்லை வருதிரென்ன அன்னார் மந்தரங் கணத்திற் சேர்ந்தார் = தொழிலைச் செய்யவும் இச்சையில்லை தள்ளத்தக்கன அதனானே பிரகிருதமான பிராரப்த சேஷபோஜன விவகாரத்தை ஆசரிப்பேன் வாருங்கள் என்று கூற அம்மூவரும் மந்தராசலத்தை நொடிப்போதில் சார்ந்தனர்.

முந்துறு[1] சகத்தி னெல்லை தெளிதரு மூவர்தாமும்
வந்துழி முன்னைச்[3] சென்ம மருவிய வுடலை[2] மைந்த
னந்தமின்[4] மகிழ்வா னோக்கி யருந்தவப் பிதாவை நோக்கி
யிந்தவன் கங்கா ளங்கொ லீன்றுநீ வளர்த்த தென்றான். (41)

முந்துறுசகத்தினெல்லை தெளிதரு மூவர் தாமும் வந்துழி மைந்தன் முன்னைச் சென்மம் மருவிய உடலை அந்தமில் மகிழ்வான் நோக்கி அருந்தவப் பிதாவை நோக்கி இந்தவன் கங்காளங்கொல் ஈன்று நீ வளர்த்ததென்றான் = பிராசீனமான ஜகத்தின் கதியை இனிது ஆராய்ந்தறிந்த பிரபஞ்ச அந்தமான பரமாத்மாவை நன்குணர்ந்த அம்மூன்று பேர்களும் ஆசிரமத்துற்ற போது பிருகு புத்திரன் பூர்வ ஜன்ம உற்பவ சுஷ்கமான சரீரத்தை அளவற்ற சந்தோஷத்தோடும் பார்த்து அரிய தவசிரேஷ்டரான தந்தையை விளித்துப்பார்த்து இதோ காணப்படும் எலும்புக் கூண்டையா நீர் போஷிக்கலானீர் என்று புன்சிரிப்புடன் புகன்றனன்.

பின்னரு முரைப்பானைய பெறலருஞ் சுகங்களாலே
முன்னநீ வளர்த்த காய மொய்துய ரனைத்துமாறி
யின்னல்கூர் காத லைய மிதாகித மெல்லாமின்றி
மன்னிய சுகம தாகி மனமிறந் திருந்ததன்றே. (42)

பின்னரும் உரைப்பான் ஐய பெறலருஞ் சுகங்களாலே முன்னம் நீ வளர்த்த காயம் மொய்துயரனைத்தும் ஆறி இன்னல்கூர்காதல் ஐயம் இதாகிதமெல்லாமின்றி மன்னிய சுகமதாகி மனம் இறந் திருந்ததன்றே = பின்னருங் கூறுவதாவது பிதாவே கிடைத்தற்கரிய அனேக வித சுகம் சுக சாதனங்களினாலே பூர்வம் தேவரீர் பாலனஞ் செய்த இத்தேகம் துயரந்தரும் ஆசை சந்தேகம் அனுகூலம் பிரதிகூலமென்பன யாவுமேயின்றி நிறைந்த ஆனந்தத்தையுடையதாகி மனோலயத்தையடைந்தன்றோ வாழ்கின்றது.

1
மனமிலா நிலையி னன்றி மன்னுயிர்க் கின்ப முண்டோ
3
கனமுறு சுகசம் போகக் கடலிலே திளைக்க லாகு
2 4
மனகபே ரறிவு சாந்த மறிவுளோர் தாப நீங்கித்
6 5 7 9 8 10
தனதுயர் நிலையா மிந்தத் தனியுடல் வாழ்ந்த தன்றே. (43)

மனமிலா நிலையினன்றி மன்னுயிர்க்கின்பமுண்டோ அனக பேரறிவு சாந்தம் அறிவுளோர் கனமுறு சுக சம்போகக்கடலிலே திளைக்கலாகும் தாபம் நீங்கி உயர் தனது நிலையாம் இந்த உடல் தனி வாழ்ந்ததன்றே = சித்த நிரோதத்தாலன்றி இச்சம்சாரத்துழலும் ஜீவனுக்கு ஆனந்தம் லேசமும் உளதாமோ புனிதமான மகாமதியராய்ச் சாந்தராய்ச் சொரூப சாக்ஷாத்கார முற்றவர் பேரானந்த சம்போசக் கடலிலே மூழ்குவர் சர்வ துக்கங்களும் அகன்று மேலான தமது சொரூபஸ்திதியிலிருக்கும் ஜீவன் முக்தர்களது திருமேனி போல ஏகாந்தமாய் வாழ்ந்து கொண்டிருக்கிறது (தூங்கிக் கிடக்கின்றது).

அருந்தவப் பயனு லிந்த வற்புதங் கண்டேனென்ன
விருந்தவக் கால னேக்கி யிவ்வுரை யிகந்து மாற்றிப்
பொருந்திய வுடலின் மன்னர் புரிபுகு மதுபோற் புக்குத்
திருந்திய வசுரர்க் கெல்லாந் தேசிகச் செய்கை செய்வாய். (44)

அருந்தவப் பயனால் இந்த அற்புதங்கண்டேனென்ன விருந்தவக் காலன் நோக்கி இவ்வுரை இகந்து மாற்றிப் பொருந்திய உடலில் மன்னர் புரிபுகுமது போல்புக்கு திருந்திய அசுரர்க்கெல்லாந்தேசிகச் செய்கை செய்வாய் = செய்தற்கரிய தவத்தின் பாக்கிய வசத்தினால் இவ்வாச்சரியமான சிந்தையற்ற காயத்தைப் பார்த்தேனென்று அம்மைந்தன் கூற அதனைக் கேட்டுக் கொண்டிருந்ததவத்தினையுடைய அத்தருமர்பார்த்து மைந்தன் கூறிய இவ்வார்த்தையை திரஸ்கரித்து திருப்பி கங்கைக்கரையில் வாசுதேவனென்னும் நாமத்தோடு தவஞ்செய்து கொண்டிருந்த இச்சரீரத்தை விடுத்து வெளிப்போந்த அரசன் தன்நகரை அடைதல் போல் இந்தச் சுக்கிர சரீரத்தில் பிரவேசித்து தவம் ஆற்றிச் செவ்வையாய் வாழும் அசுரருக்கெல்லாம் குருவாகயிருந்து நீடூழி வாழ்க.

என்று சுக்கிரனை யேவி யிவரிரு வரையும்வாழ்த்தி
நின்றுழி மறைந்தான் கால நீத்தவர் மறுகிநின்றார்
பின்றைய வாசு தேவப் பேருறு கருத்தைநீக்கி
வன்றகை வெள்ளி முன்ன மருவிய வுடலிற் புக்கான். (45)

| | | |
|---|---|---|
| என்று சுக்கிரனையே விஇவர் இருவரையும் வாழ்த்தி நின் றுழி காலன் மறைந்தான் | = | கூறிய வகையால் பார்க்கவனை ஆதிசரீரத்தில் புகுமாறு கட்டளையிட்டுப் பிருகு மகரிஷியையும் சுக்கிரனையும் சந்நிதியில் ஆசீர்வதித்து யமதருமர் நிற்கின்ற நிலையிலேயே அந்தர்த்தானமானுர். |
| நீத்தவர் மறுகி நின்றுர் | = | தரிசன பாக்கியமிழந்த அவ்விருவரும் கண்ணீர் விட்டு நின்றனர் |
| பின்றைய வாசுதேவப் பேர் உறு கருத்தை நீக்கி வன் தகை வெள்ளி முன்னம் மருவிய உடலிற்புக்கான் | = | பின் உண்டாய வாசுதேவப் பெயருடையவன் யான்யென்னும் அபிமானத்தைநீக்கித்தவ வலிமையும் தகைமையும் வாய்ந்த சுக்கிரன் பூர்வம் பொருந்திய சரீரத்தில் பிரவேசித்தான். |

1
வினையது வயத்தி ஞலே வெள்ளிசே ருடலந் தன்னைத்
தனைநிகர் பிருகு வேத மந்திர சலத்தாலாட்ட
3 2 4
புனைதலு நாடி யெல்லா நயம்பெறப் பிராணன்ருங்கி
நனையவ னெழுந்து தாதை யடிபணிந் தருகுநின்ருன். (46)

| | | |
|---|---|---|
| வினையது வயத்திஞலே வெள்ளி சேர் உடலந்தன்னை தனைநிகர் பிருகு வேதமந்திர சலத்தாலாட்ட நாடியெல்லாம் நனைதலும் நயம் பெற பிராணன் தாங்கி அனையவனெழுந்து தாதை அடி பணிந்து அருகு நின்ருன் | = | நியதியின் (கரும வீசத்திஞலே சுக்கிரன் புகுந்த மக்கின சரீரமாமதனைத் தமக்குத் தாமே உவமிக்கத் தக்க பிருரு மகரிஷியானவர் வேதோக்த மந்திரங்களை மந்திரித்துக் கமண்டலு நீரால் அபிஷேகஞ் செய்ய நரம்புகள் யாவும் பசைபற்றியவுடன் சௌக்கியமுறுமாறு பிராணன் சஞ்சரிக்க அப்புராதன சுக்கிரன் எழுந்து சமீபத்தில் வணக்கத்துடன் கைகட்டிக்கொண்டு நின்றனன். |

பிருகுவு மைந்தன் ருனும் பிறங்குமந் தரத்திற் கானிற்
றிருகிய சித்த மென்னுந் தீப்பகை தீரமாற்றி
வருதிரை யிலாத நீர்போன் மாசறு நிலையில் வாழ்ந்தார்
கருணைமா முகிலே யென்று கற்றுணர் வசிட்டன் சொன்னுன். (47)

| | |
|---|---|
| பிருகுவும் மைந்தன்ருனும் பிறங்கு மந்தரத்தின் கானில் திருகிய சித்தமென்னும் தீப் பகை தீர மாற்றி வருதிரை | பிருகு மகரிஷியும் பார்க்கவ மகரிஷியும் தவத்திற்கு தகுதியாய் விளங்கும் மந்தரகிரிக்கு அடுத்த ஆரண்யத்தில் எதார்த்தத்தினின்றும் மாறுபட்ட மனம் யென்னுங் கொடிய சத்துருவை அறவே ஒழித்து |

| | |
|---|---|
| யிலாத நீர் போல் மாசறு நிலையில் வாழ்ந்தார் கருணை மாமுகிலேயென்று கற்றுணர் வசிட்டன் சொன்னான் = | வரும் அலைகளற்ற கடல்போல ஜீவன் முக்திப் பதத்தில் ஆனந்தித்திருந்தார் கிருபாமேகமே என இவ்வண்ணம் கற்றுணர்ந்த ஸ்ரீ வசிஷ்ட பகவான் ஸ்ரீ இராகவருக்கு உபதேசித்தருளினார். |

சுக்கிரன் கதை முற்றிற்று.

4.1 ஆக விருத்தம் 563.



உ

# 4-2 தாம வியாள கடர் கதை.

## அவதாரிகை.

முன் சுக்கிரன் கதையில் சித்தம் மயம் சம்சாரமென்று தெரிவிக்கப்பட்டது. இந்தத் தாமாதி கதையில் சித்தமயமான சம்சாரம் விவேகத்தால் சித்தசாந்திவரில் சிதையுமென்றும் விவேகமின்றேல் சம்சாரம் விருத்தியாம் என்றுஞ் சொல்லுகின்றார் அதிற்சித்தப் பிரசாதத்துக்குரிய சாமக்கிரியையைத் தெரிவித்தற்கு மூன்று கவியால் உரைத்தல் மீண்டென்பது.

1
மீண்டுரை செய்வான் முற்றும் விசாரத்தோர் தொழிறீர் நெஞ்சோர்
நீண்டதோர் மனனம் விட்டோர் நிகழ்சுக வறிவையுள்ளோர்
3 2 4
பூண்டுள காட்சி தன்னிற் போவபோய்க் கொள்வகொண்டோர்
காண்டகு தன்னைக் கண்டோர் காணுதோர் தமைக்காணுதோர். (1)

| | |
|---|---|
| மீண்டுரை செய்வான் முற்றும் விசாரத்தோர் தொழில் தீர் நெஞ்சோர் நீண்டதோர் மனனம் விட்டோர் நிகழ்சுகவறிவையுள்ளோர் தன்னில் பூண்டுளபோவ போய்க் கொள்வ கொண்டோர் காண் தகு தம் | மீளவும் ஸ்ரீ வசிஷ்ட பகவான் அருளுகின்றார் நிரந்தரம் ஆராய்ச்சியுடையோர் கோர மூட விருத்தி ஒழிந்த சத்துவசித்தத்தையுடையவர் நெடுங்காலமாய்த் தொடர்ந்த புவன விஷயங்களைச் சிந்தியாதோர் விளங்கா நின்ற ஆனந்த சிற் சொருபத்தில் விசிராந்தியுற்றவர் ஆன்மாவின்கண்ணேவிவார்த்தரூபத்தால் தோன்றிய திருசியத்தை மீட்டும் அணு |

மைக்கண்டோர் காணுதோர் = தமைக் காணுதோர். — காது விட்டவராய்த்திருக்கு மாத்திரத்தைக் கைக் கொண்டவராவர் திருஷ்டாவாகிய ஆன்மாவைதன் மயமாகவே கண்டோர் அதிருஷ்டாவாகிய அநான்ம விஷயத்தைக் காணுதவர் பெரியோர்.

1
சீவனு யிருந்து காணுஞ் சிற்பர தத்துவத்தே
3 2 4
மேவிய நனவை யுற்ருேர் வெம்பவ மோக மார்க்கத்
தோவலில் சுழுத்தி யுற்ருே ரோர் முதிர் நிராசையாலே
பாவனை நலனிற் றீங்கிற் பயிலும்வாதனை யைமாய்த்தோர். (2)

சீவனுயிருந்து காணுஞ் சிற்பர தத்துவத்தே மேவிய நனவை யுற்ருேர் வெம்மோகபவமார்க் கத்து ஓவலில்சுழுத்தியுற்ருேர் ஓர் முதிர் நிராசையாலே பாவனை நலனிற் றீங்கிற் பயிலும் வாதனையை மாய்த்தோர் = ஜீவன் முக்தியோடு கூடி ஜீவிப்பவராயிருந்து சுவ சொரூபமாகக் காணத்தக்க சின்மய மேலான தத்துவத்தில் பொருந்திய (ஜாக்கிரத்தை) விழிப்பை யுடையவர். கொடிய (சம்மோகமய) அஞ்ஞான விகாரர்த்மக சம்சார நெறியில் நீங்காத நித்திரை யையுடையவர் ஒப்பற்ற மேலாகிய வைராக்கியத்தி ஞலே பாவனுரூபமான சுக போகம் மிகுந்த பர லோக விஷயங்களிலும் சொற்ப சுகபோகமான இக லோக விஷயங்களிலும் சிந்தித்துழலும் வாசனையை அடியோடு ஒழித்தவர் பெரியோர்.

1
வாதனை வலையைச் செற்று மனப்பந்த மாற்றி விட்டாற்
காதல்செய் தேற்றின் வித்தின் கலங்குநீர் தெளிவதென்ன
மேதகு விஞ்ஞா னத்தான் மெய்ம்மையாஞ் சுபாவந்தானே
3 2
யேதமற் றெளிரு முன்ன மியம்பிய வியல்பினேர்க்கே. (3)

வாதனை வலையைச் செற்று மனப்பந்தம் மாற்றி விட்டால் காதல் செய்தேற்றின் வித்தின் கலங்குநீர் தெளிவதென்ன மேதகு விஞ்ஞானத்தால்மெய்ம் மையாஞ் சுபாவந்தானே முன்னம் இயம்பிய இயல்பி — எலியினுல் பக்ஷிகளின் ஜாலத்தைப்போல வைராக் கியமாகிய எலியால் வாசனுமய சம்சார ஜாலத் தைத் தொம்சஞ் செய்து இருதயக்கிரந்தியை ஒழித் துவிடின் தெளிவித்தற்குச் சாதகமாக விரும்பியகதக ரேணுவால் கலங்கியிருந்த ஜலம் தெளிவதுபோல மேன்மையான விஞ்ஞான வசத்தினுலே சன்மாத் திரமாகிய மனமானது (மனது சத்துவ சொரூபம்)

ஞோர்க்கு ஏதமற்ருேளிரும் = பூர்வம் புகன்ற கல்யாண குணங்கள் வாய்ந்த மகான்கள் இரஜோதமோ குணம் ஒழிந்து பிரசன்ன மாக விளங்குவார்கள்.

3 2 1 4
சங்கஞ்செய் மயல்போய்த் தொந்தந் தவிர்ந்தொன்றைச் சார்வதின்றி
சிங்கிசெய் கூட்டி னின்றுஞ் சேணுறச் செல்லும் புட்போற்
றுங்கமோ கத்தி னின்றுந் தூயமனம் வெளியிற்போந்து
பங்கமா மையந் தீரப் பற்றெனு மனைத்துந் தீரும். (4)

மயல் செய் சங்கம் போய்த் தொந்தந் தவிர்ந்து ஒன்றைச் சார்வதின்றிச் சிங்கி செய்கூட்டில் நின்றும் சேணுறச்செல்லும் புட்போல் துங்கமோகத்தினின்றுந் தூய மனம் வெளியிற்போந்து பங்கமாம் ஐயம் தீரப்பற்றெனு மனைத்துந் தீரும் = தாரபுத்திராதிகளிலுண்டாவதாகிய இராகாதிமயக் கமும் அவ்விஷயப்பற்றும் ஒழிந்து அதனுல் சுகதுக்காதி பேதானு சந்தான ரகிதமாய் அதனுல்நிரால்ம் பனமாய் பந்திக்கப்பட்ட பஞ்சரத்தினின்றும் ஆகாய மார்க்கமாக இஷ்டப்படி வெளிப்பட்டுச் செல்லும் பக்ஷியைப்போல உன்னதமான மயக்கத்தினின்றும் பரிசுத்த மனமானது பாகியப்பட்டு விடுபட்டு, இழிவையுடைய சந்தேகங்கள் தொலைந்து பிராந்தியும் அதனுலாய சர்வ அநர்த்தமும் ஒழிந்து அம்மன மிருக்கும்.

1 2 3 2 4
ஆன்றவம் மனம்பூர் ணத்தை யடைந்துபூ ரணவெண்டிங்கள்
போன்றுற விளங்கு மிந்த நிலையிலே பொலிவுற் ருேர்கண்
7 6 5 8
மூன்றுமூர்த் திகளாந்தேவ முதல்வர்க்குங் கருணைசெய்வ
ரூன்றிய விசாரத் தாலே யுயர்பொரு ளெய்தவேண்டும். (5)

ஆன்றவம் மனம் பூர்ணத்தை யடைந்து வெண் பூரண திங்கள் போன்றுற விளங்கும் இந்த நிலையிலே பொலிவுற்ருேர்கள் தேவ முதல்வர்களாம் மூன்று மூர்த்திகட்கும் கருணை செய்வர் ஊன்றிய விசாரத்தாலே உயர் பொருளெய்தவேண்டும் = மாட்சிமையுடைய அந்த மனமானது உள்ளும்புறனும் அறிவாகவே செறிந்து கலை முழுவதும் நிறைவுற்ற வெள்ளிய பூரண சந்திரனைப் போல மிகவுஞ் சோபிக்கும் கூறிய இன்பத்திதியின்கண்ணே இலங்கிக் கொண்டிருக்கும் பெரியோர்கள் தேவமுதல்வர்களாம் பிரம்மா விஷ்ணு ருத்திரரென்னும் மும்மூர்த்திக்கும் கிருபைபாலிப்பர் சர்க்கஅவதாராதி அதிகாரக் கிலேசம் அவருக்கு இருத்தலின் பெரியோர் கருணைக்கு விஷயமாவர் நிரந்தரஞ் செய்யும் ஆராய்ச்சியினுனே மேலான பரமான்ம வஸ்துவைச் சாக்ஷசத்கரிக்க வேண்டும்.

உ

உலகெது நாமா ரென்ன வுற்றுநின் றுணரு மட்டுங்
கலகமார் பிறவி மோகங் கங்குல்போன் மூடி நிற்த
மலகறு முலகுந் தாமு மழிவில்சிற் சோதி யென்றே
சலனமில் கண்ணுற் கண்டோர் தத்துவநிலைமை கண்டோர். (6)

உலகெது நாம் யாரென்ன வுற்று நின்றுணருமட்டுங் கலகமார்பிறவிமோகங் கங்குல்போல் மூடிநிற்கும் அலகறுமுலகுந் தாமும் அழிவுஇல் சிற்சோதி யென்றே சலனம்இல் கண்ணுற் கண்டோர் தத்துவநிலைமை கண்டோர் = ஆடம்பரம் நிறைந்த இப் பிரபஞ்சத் தோற்றம் எங்ஙனமுண்டாயது யானென்பதன் பொருள் யாது என இவ்வண்ணம் ஆசாரியர் அருளால் அழுத்தமாய் ஊன்றிநின்று அறியும்பரியந்தம் இராகத்துவேஷமயமான ஆடம்பரம் நிறைந்த சம்சாரமயக்கம் அந்தகாரமயமாய் ஆச்சாதித்துக் கொண்டிருக்கும் அனந்த அண்டமாகிய ஜகத்தும் ஜீவ சமுதாயமும் நாசரகித சிற்சோதியே என அசஞ்சலமான விவேகலோசனத்தால் தனது சொரூபத்தைத் தரிசித்தவரே சத்தியவஸ்துவை சாக்ஷாத்கரித்தவராவர்.

அகிலசத் தியுமா யொன்ருய் அனந்தமா மறிவுதானே
சகலபா வனைக்கு முள்ளா மெனக்கண்டோர் தம்மைக் கண்டோர்
பகர்வுறு நானு மில்லை பிறிதில்லை பரமே யுண்டென்
றிகமுற வுள்ள தில்ல திடையுறக் கண்டோர் கண்டோர். (7)

அகிலசத்தியுமாய் ஒன்ருய் அனந்தமாம் அறிவுதானே சகல பாவனைக்கும் உள்ளா மெனக் கண்டோர்தம்மைக்கண்டோர் பகர்வுறும் நானுமில்லை பிறிதில்லை பரமேயுண்டென்று இகமுற உள்ளது இல்லது இடையுறக் கண்டோர் கண்டோர் = சகல சத்திகளையும் தனதிடத்தடக்கியதாய்ப் பேதத்திரய வர்ஜ்ஜிதமாய் அபரிச்சின்னமாய் உள்ள தனது சொரூபமாகிய சித்தே பாவனு விஷயமான சகலத்திற்கும் ஆந்தரமாயிருக்கின்ற தென்று தங்கள் எதார்த்த வடிவத்தைத் தரிசித்தவராவர். சொல்லாநின்ற அகங்காரமும் இல்லை, இதரமும் இல்லை, நிர்விகாரமான பிரஹ்மமே இருக்கின்றதென்று இவ்வுலகத்திலுற்ற சத்து அசத்துக்களின் மத்தியமாகத் தம்மைத் தரிசித்தவரே தமது உண்மை வடிவினை அறிந்தவராவர்.

முயல்வறத் தாமே தோன்று மொய்திசைப் பொருள்க டம்மின்
மயலறச் செல்லுங் கண்போன் மாசறு நீரார் புந்தி
செயல்களிற் செல்லு மன்றே தெளிந்துபல் போகந் துய்த்தாற்
றுயர்செயா தறிந்து சேர்ந்தாற் சோரருந் தோழ ராவர். (8)

| | | |
|---|---|---|
| முயல்வறமொய்திசை தாமே தோன்றும் பொருள்கள் தம்மில் மயலறச்செல்லுங் கண்போல் மாசறுநீரார்புந்தி செயல்களிற் செல்லும் தெளிந்துபல்போகந் துய்த்தால் துயர்செய்யாது அறிந்துசேர்ந்தால் சோரருந் தோழராவர் | = | முயற்சியின்றியே பத்துத் திக்குகளிலும் இயல்பாகவே தோன்றும் பர்வதம் தடாகம் ஆரண்யம் முதலிய வஸ்துக்களில் (நீராகமாகவே) விருப்பு வெறுப்பின்றியே செல்லும் சட்சு இந்திரியம் போலக் காமம், வெகுளி, மயக்கமென்னுங் குற்றமற்ற அறிஞனுகிய தீரனது புத்தியும் விவகாரங்களில் நீராகமாகவேசெல்லும். நன்கு உணர்ந்து பலபோகங்களை அநுபவித்தால் துக்கப்பொருட்டாகாவாம். காளகூட விஷம் ஏனையோருக்கு துக்கமயமாயினும் சிவனுக்கு கண்டமுற்று புகழையே தந்து பொலியாநிற்கும், தெரிந்து கூடினுல் திருடரும் மித்திரரேயாவர். |

நெறியிடை வந்தோர் கூட்ட நெறிசெல்வோர் காணுநேர்போற்
செறிதரு போக மெல்லாஞ் சேதனர் காண்பரன்றே
யறிவினுன் மனதை வென்ருே ரற்பமே பெரிதாய்க்காண்பர்
பிறகது துயரா மென்றே பெரியன போகம் வேண்டார். (9)

| | | |
|---|---|---|
| நெறியிடைவந்தோர்கூட்டம் நெறிசெல்வோர் காணும் நேர் போல் செறிதருபோகமெல்லாம் சேதனர் காண்பரன்றே அறிவினல் மனதைவென்ருேர் அற்பமே பெரிதாய்க்காண்பர் அதுபிறகு துயராமென்றே பெரியனபோகம் வேண்டார் | = | தேர் திருவிழா நிமித்தமாக மார்க்கத்தில் வந்து கொண்டிருக்கும் ஜனக்கூட்டத்தை அம் மார்க்கத்தில் செல்பவர் யாதொரு பற்றுமற்றுப் பொதுவாய்க் காணுந்தகைமைபோல, நுகர்வினைவயத்தால்தானே தோன்றிய போகங்களையெல்லாம் அறிஞர்கள் பற்றற்றுப் பொதுவாய்ப் பார்ப்பர். யோகவிசாரஜன்னிய விவேகத்தால் மனத்தை அறிவாக்கி ஜயித்தவர் சிறிது கிடைத்தபோதினும் மகத்தாக எண்ணுவர். அது பின் சித்த விக்ஷேபத்துக்கு ஏதுவாயிருந்தால் துக்கமாமென்று பெரிதான போகங்களை விரும்பார். |

நலங்கிய சிறைதீர் மன்ன னகர்மட்டு மகிழ்வு கூரு
மலங்கல்வேல் வெற்றி வேந்த னவனியுஞ் சிறிதென் றெண்ணுங்
கலங்குறு மனதை வெல்வோர் கை கையாற் கால்கள் காலா
லிலங்குபற் பல்லா லங்க மியாவுமிப் படிமுன் சேர்க்க. (10)

| | |
|---|---|
| நலங்கிய சிறைதீர்மன்னன் நகர்மட்டும் மகிழ்வுகூரும் வெற்றி அலங்கல் வேல்வேந்தன் | வாட்டமுற்றிருந்து (காராக்கிரகம்) சிறையில் நின்றும் நீங்கிய (விடுதலையடைந்த) சிற்றரசன் அன்னபானதி சௌகரியப்பொருட்டு ஒருகிராமம் |

அவனியுஞ் சிறிதென்றெண்ணும் கலங்குறு மனதை வெல்வோர் கை, கையால், கால்கள் காலால் இலங்குபல் பல்லால் அங்கம் யாவும் இப்படி முன்சேர்க்க = கிடைத்தபோதினும் சந்தோஷத்தை அடைவன். வெற்றி மாலை தரித்த வேலாயுதத்தையுடைய சக்கரவர்த்தி பூமண்டலமுழுதையும் ஆட்சி செய்யினும் அற்பமெனவே எண்ணுவன். விஷய விக்ஷேபமுடைய சித்தத்தை வெற்றிகொள்ள முயன்றவர். கரத்தைக் கரத்தாலும் (பிசைந்து கொண்டாயினும்) பாதத்தைப் பாதங்களாலும் (உதைந்துகொண்டாயினும்) விளங்காநின்ற தந்தத்தைத் தந்தத்தாலும் (பற்களைக் கடித்துக் கொண்டாயினும்) அங்கங்களை அங்கங்களாலும் (ஆசனாதிகளாலும்) ஒன்றுசேர்த்து வருத்துக.

பகைமன வெற்றி யல்லாற் பவக்கடல் வங்க மில்லை
வகைபடு முலகிற் செல்வர் வரிசையோர் மறுவி லாதோர்
மிகையுயர் புருடர் கீர்த்தி மிக்கவ ரென்போ ருள்ளக்
குகையிடைத் தொழில்க ணஞ்சார் கொடுமனப் பாம்பைக் கொன்றார். (11)

பகைமனம் வெற்றி பவக்கடல் வங்கம் அல்லால் இல்லை வகைபடும் உலகில் செல்வர் வரிசையோர்மறுவிலாதோர்மிகையுயர் புருடர் கீர்த்திமிக்கவர் என்போர் உள்ளக்குகையிடைத் தொழில்கள் நஞ்சு ஆர்கொடு மனப் பாம்பைக் கொன்றார் = சத்துருவாகிய மனோஜயமே ஜன்மசாகரத்தைக் கடத்தற்குக் கப்பல் அல்லாமல் வேறு இல்லை, நானாபிரிவாகச் சொல்லப்படும் பிரபஞ்சத்தில் பாக்கியவான்கள் மரியாதை செய்யத்தக்கவர், களங்கமற்றவர், மிகவும் மேன்மைவாய்ந்தவர், புருடோத்தமர், மிகப்புகழ்மிகுந்தவர் என்பவரே. இருதயபிலத்தில் விருத்திகளாகிற விஷம் பொருந்திய கொடிய மனமாகிய அரவைக் கொன்றவராவர்.

மனமெனும் வினையை வென்றோர் மலரடி முடிமேற் கொள்வர்
மினநர கங்க ளென்னு மிராச்சியத் திருந்து வாழ்ந்த
முனமுறு பாவ மென்னு மும்மதக் களிற்றி னாலுங்
கனமயற் படைக ளாலுங் கரணமாம் பகையை வெல்வாய். (12)

மனமெனும் வினையை வென்றோர் மலரடி முடிமேற்கொள்வாம் முனமுறு பாவமென்னும் மும்மதக்களிற்றினாலும் கனமயற் படைகளாலும் இன நரகங்களென்னும் இராச்சியத்திருந்து வாழ்ந்த கரணமாம் பகையை = மனமாகிய சர்ப்ப சத்துருவை ஜயித்தவரது தாமரை மலர்போன்ற திருவடிகளைச் சிரசின்மீது பூஷணமாகத் தரித்துக்கொள்வாம், பூர்வஜன்மத்தில் பொருந்திய தீவினையென்னும் மதோன்மத்த யானைகளோடும் பேராசையாகிற அஸ்திர சஸ்திரங்களோடும் அவீதிமார்க்கமாகிய மகா நரக சாம்ராஜ்யத்தில் அரசுசெலுத்திக்கொண்டிருந்து

வெல்வாய் = வாழ்ந்த இந்திரியங்களாகிய சத்துருக்களை நீ வெல்வது மிகத் துர்லபம் கஷ்டப்பட்டேனும் வெற்றிகொள்வாய்.

துனிமனச் செருக்கு மாய்த்துத் தொடர்பொறிப் பகையை வெல்லிற்
பனிபடு பதுமக் கான்போற் படர்ந்தவா தனைகண் மாளுந்
தனியறி வொன்றே யென்று சாதித்திம் மனம் வென்மட்டுங்
கனியிருள் செறியும் பேய்போற் கருத்தில்வா தனைவந் தெய்தும். (13)

துனிமனச் செருக்குமாய்த்துத் தொடர்பொறிப்பகையை வெல்லில் பனிபடுபதுமக்கான் போல் படர்ந்தவாதனைகள் மாளும் தனியறிவு ஒன்றே யென்று சாதித்து இம் மனம் வெல்மட்டுங்கனியிருள் செறியும் பேய்போல் கருத்தில் வாதனை வந்தெய்தும் = துன்பம் பயக்கும் மனதர்ப்பத்தை (கர்வத்தை) விரைவில்நாசஞ்செய்து அதனோடு சேர்ந்துஆடும் இந்திரிய சத்துருவை ஜயிக்கில் பனி தோய்ந்த தாமரைக் காடு நாசமாவது போல நெருங்கி நிறைந்த போகவாதனைகள் தொலைந்துபோம், அசங்க சிற்சொரூப ஏகத்வதிட அப்பியாசத்தி னாலே அவதிபரியந்தம் சாதித்து இம் மனம் ஜயிக்கப்படாதவரையினும் பேரிருளில் உலவும் வேதாளங்கள்போல் இருதயத்தில் வாதனைகள் சுழன்றே திரியும்.

மந்திரி யெனலா முண்மை மருவுறும் விசாரத்தாலே
யிந்திரி யங்க ளென்னு மிடர்ப்பகை யறுத்தலாலே
தந்திரி யெனலா மிட்டஞ் சமைத்தலா லேவ லாளா
நொந்திரி கிலாத வுள்ள நோக்கிய விவேகத் தோர்க்கே. (14)

நொந்து இரிகிலாத உள்ளம் நோக்கிய விவேகத்தோர்க்கு உண்மை மருவுறும் விசாரத் தாலே மந்திரியெனலாம் இடர் இந்திரியங்களென்னும் பகை அறுத்தலாலே தந்திரியென லாம் இட்டஞ் சமைத்தலால் ஏவலாளாம் = நைந்து கெடாத சத்துவமனத்தால் தனது சொரூ பத்தை அறிந்த மகான்கட்கு மெய்ப்பொருளை அடைவிக்கும் ஆராய்ச்சியாலே மந்திரியெனப் பெறும், அனர்த்தத்தை விளைவிக்கும் பத்து இந்திரியங்களென்னும் சத்துருவைச் சம்மரித்த லாலே(சாமந்தன்,)சேனாதிபதி எனச் சாற்றலாம் வேண்டிய காரியத்தைச் சம்பாதித்துத் தருத லாலே வேலைக்காரன் எனச் சொல்லலாம்.

ஆலிக்கு மின்பத் தாலே யன்புறு மனைவி யாகும்
பாலிக்கு மியல்பி னாலே பாவன தந்தை யாகுஞ்
சீலிக்கு முறுதி யாலே தேடரு நட்பு மாகுந்
தூலிக்கும் வினைக ளில்லாத் தூய்மனம் விவேகத் தோர்க்கே. (15)



| | |
|---|---|
| தூலிக்கும் வினைகளில்லாத் தூய்மனம் விவேகத்தோர்க்கு ஆலிக்கும் இன்பத்தாலே அன்புறு மனைவியாகும் பாலிக்கும் இயல்பினாலே பாவன தந்தையாகும் சீலிக்கும் உறுதியாலேதேடருநட்புமாகும் = | விஷய வாசனையினால் பருக்கும் நான் எனதென்னும் வாசனையில்லாத (அபிமானம் இல்லாத) பரிசுத்த சித்தமானது மகான்கட்கு, களிக்கும் சுக சாதனத்தினாலே வாஞ்சிக்கும் பாரியாகும், பரிபாலனஞ்செய்யும் தன்மையினாலே பவித்திர மான தந்தையாகும், ஒழுங்கான மைத்திரியாதி குணத்தினாலேதேடிக்காண்பரியசுகிருத்துமாகும். |

நல்லன நூல்க ளாலே நல்லன நெறியை நோக்கி
நல்லன தியானஞ் செய்து நல்லனு பவத்தை நண்ணி
நல்லன சித்தி நல்கு நல்லதாய்த் தன்னை மாய்த்து
நல்லதோர் தாதை யாகி நல்லவர்க் குள்ளந் தானே. (16)

| | |
|---|---|
| நல்லவர்க்கு உள்ளந்தானே நல்லன நூல்களாலே நல்லன நெறியைநோக்கி நல்லன தியானஞ்செய்து நல்லனு பவத்தை நண்ணி நல்லதோர் தாதையாகி நல்லதாந்தன்னை மாய்த்து நல்லன சித்தி நல்கும் = | மகான்கட்குச் சித்தமானது இன்பத்தைப் பயப்பனவான வேதாந்த சாஸ்திரங்களினாலே சன்மார்க்கத்தைப் பொருந்தியுற்று இன்பமாக அப்பியாசஞ் செய்து சுவானுபூதிகம்மியமாய் நன்மை பாலிக்கும் பிதாவாகி (மனதுக்கு பிதிருத்தன்மையில் வேறு ஏதுவும் உண்டு, 15-வது பாட்டில் மனதைப் பிதாவென்று கூறப்பட்டிருத்தலின்) தனக்கு அநுகூலமாய்க் கோரரூப மனத்தை மாய்த்துக் கைவல்யத்தை அடையச்செய்யும். |

துணிவுறு திடமாய்ச் சாலத் துகளற நோக்கி யாதும்
பிணியறக் கண்டு ஞானப்பே ருணர் வுணர்த்தப் பட்டாற்
பணிவுறு மிதயந் தன்னிற் பழுதிறன் குணத்தி னாலே
மணியென விளங்கா நிற்கு மாசறு முள்ளந் தானே. (17)

| | |
|---|---|
| மாசறும் உள்ளந்தானே துகள் அற சாலநோக்கி துணிவுறு திடமாய் யாதும் பிணியறக் கண்டு ஞானப் பேருணர்வு உணர்த்தப்பட்டால் பணிவுறும் இதயந்தன்னில் பழுது இல் குணத்தினாலே மணியென் விளங்காநிற்கும் = | திருசிய களங்கமற்ற மனமானது ஐயந்திரிபின்றி மிகமிகவும் ஆராய்ந்து திடநிச்சயமாய் அதனாலே யாதொரு தோஷமுமின்றித் தெளிவாய் அறிந்து சர்வஞ்சின்மயம் அதுவே நீயென்று அறிவிக்கப் பட்டால் குற்றமற்ற சமமுதலிய குணத்தினாலே வஜ்ஜிரமணி என பொலியாநிற்கும். |

மனமணி பேதச் சேற்றின் மறைந்தொரு வருக்குந் தோன்றுக்
கனமுறு விவேக நீராற் கழுவினுற் சித்தி காட்டும்
வினவுறு விவேக வன்பான் மெய்ம்மையை மதியாற் கண்டு
சினமுறு பொறியை வென்று தீர்வுறும் பிறவி தீர்வாய். (18)

மனமணிபேதச் சேற்றில் மறைந்து ஒருவருக்குந் தோன்ருகனமுறு விவேகநீரால் கழுவினுல் சித்திகாட்டும் வினவுறு விவேகவன்பால் மதியால் சினமுறு பொறியை வென்று மெய்ம்மையைக்கண்டு தீர்வறும் பிறவிதீர்வாய் = மனமாகிய வஜ்ஜிரமணி மலினவாசனையாகிற துவைத அளற்றில் மறைந்து (களங்கத்தை அடைந்து) எவருக்குமே மோக்ஷத்தைப்பயவாது புலப்படாது நிரந்தரஞ்செய்யும் திடவிசாரஜன்னிய விஞ்ஞான ஜலத்தினுல் சுத்தஞ்செய்தால் கைவல்யத்தைத்தரும் ஆராய்ச்சியாலுறும் விவேகத்தோடு கூடிய திடநிச்சய புத்தியால் பகையாகப்பொருந்திய இந்திரியாதிகளை ஜயித்து நிச்சயித்து தாண்டுதற்கரிய பவசமுத்திரத்தைக் கடப்பாய்.

இத்திறத் திவனு னென்றே யிறுகிய வறுதி வீணு
மத்திறம் புந்தி யாலே யழுத்தமா யகற்றி மற்ற
மெய்த்திறம் பற்றி நீயா மதினின்று விழைந்த செய்வாய்
பொய்த்திற மனத்தி ஞேடே புசித்தவை பந்த மாகா. (19)

இத் திறத்து இவன் நானென்றே இறுகிய அறுதி வீணும் அத் திறம்புந்தியாலே அழுத்தமாய் அகற்றி மற்ற மெய்த்திறம் பற்றி நீயாம் அதினின்று விழைந்த செய்வாய் பொய்த்திறம் மனத்திஞேடே புசித்து அவை பந்தமாமா = இத் தூலதேகாதிகளிடத்து அகமென்பதாகிய திடப்பட்ட துணிபு யாதொரு பயனின்றியதாம், அத் தேகான்ம மயக்கத்தைத் தனது விவேக மதியினுலே அத்தியந்தம் திடமாய்விடும்படி செய்து அவைகளுக்கு எதிரிடையான சச்சிதானந்தவடிவபரதத்துவத்தை அவலம்பித்துச் சாக்ஷிரூபமாகிய நின்னுடைய திதியிலிருந்து கொண்டே விடயங்கள் மித்தையாத் தோன்றுமென்னும் அமனஸ்கனுய் இச்சைப்படி விவகரிக்கில் பந்தம் அடையாய்.

## அவதாரிகை

வாசனையின் திடத்தன்மையான தாம வியாளகடர்போல அனர்த்தப்பிராப்தியானது அகற்றமுடியாதாம் என்பதை அருளல்.

தாம ஞேடுவி யாளக டாசுரர் சாருநீதியை நீயனு காதொழி
வீம பாசதி டாசுரர்நீதியை மேவிவேதனை தீர்கென வோதலு
நாம மேபகர் தானவராரென ஞானவீரன் வினுவிட மாமுனி
யாம தோதிட வாதரமாகியதேது நீயதின் மேவென வோதுவான். (20)

தாமனோடு வியாளகடர் அசுரர்
சாருநீதியை நீ அணுகாதொழி
வீமபாசதிட அசுரர் நீதியை
மேவி வேதனை தீர்கவென
ஓதலும் ஞானவீரன் நாமமே
பகர் தானவர் ஆர் என வினவிட
மாமுனி அது யாம் ஓதிட
ஆதரமாகியது ஏது அதில்
நீ மேவு என ஓதுவான் =

தாமன்=கயறு. வியாளம்=சர்ப்பம். கடர் = பாய். என்னும் பெயர் வாய்ந்த அசுரர்கள் பொருந்திய நியாயத்தை, ஹே ராமா! நீ பொருந்தாதிருத்தி, வீமன்=கெம்பீர சொரூப நிஷ்டன், பாசன்=சதாசொரூபமாகவே யிலங்கு பவன், திடன்=திடப்பிரஞ்ஞன், நியாயத்தை= விவேகி யுக்த விவகாரத்தைப் பொருந்தி துயரந் தொலைந்து ஆனந்திப்பாயாக எனக் கூறுதலும், அறிவு ரூப கம்பீர இராகவன், பெயர் மாத்திர மாக அருளிய அசுரர் யாவர் எனக் கேட்ப, மாட்சிமை பொருந்திய ஸ்ரீ வசிஷ்ட மகரிஷியா னவர் அந்த விபரத்தை யாம் கூற விருப்பமா கியது யாது அதன்கண்ணே பொருந்துதி என்று கூறத் தொடங்கினர்.

சஞ்ச ரித்துயர் பாதலமேவிய சம்பரப்பெய ரானொரு தானவன்
வஞ்ச முற்றிய மாயையில் வாழ்பவன்வன்படைக்கட லாலம ரேசனை
யெஞ்ச லித்திட வானவர்தாமுமே யிவன்சுழுத்தி யிலாகிய போதினு
விஞ்ச வம்பர மேவியபோதினும் வெம்பியெற்றினர் தானவர் மாளவே.(21)

சஞ்சரித்து உயர் பாதல
மேவிய சம்பரப் பெயரான் ஒரு
தானவன் வஞ்சமுற்றியமாயை
யில் வாழ்பவன் வன்படைக்கட
லால் அமரேசனையெஞ்சலித்திட
வானவர் தாமுமே இவன்
சுழுத்தியிலாகிய போதினும்
அம்பர மேவியபோதினும் விஞ்ச
வெம்பிதானவர்மாளவெற்றினர்=

திரிலோகமும் உலாவி ஐஸ்வரியம் நிறைந்த பாதாள லோகத்தில் வாழும் சம்பராசுரனென் னும் பெயர்வாய்ந்த ஒப்பற்ற தைத்திரேந்திரன் ஒருவன் இருந்தனன். வஞ்சனை நிறைந்த மாயை வித்தை செய்துகொண்டு தன் காலங்கழிப்பவன் சேனாசமுத்திரத்தால் தேவேந்திரனைக் குறைந்து வருந்தும்படி செய்து கொண்டிருப்ப, தேவர்கள் யாவரும், இச் சம்பராசுரன் நித்திரைசெய்து கொண்டிருக்கும்போதும் தேசாந்தரம் சென்ற காலதிலும், மிகக் கோபாவேசத்துடன் அசுரர் அழியும்படியாக துரத்தி விரட்டினர்.

ஆய வன்பைய றிந்துயர் சம்பர னாகுவன் றுருமன்றிறன் முண்டிக
னேய விங்கிவர் தம்படை முன்செலவேவினன் பெரிதங் கெவரும்பட
மேய வண்டரடர்ந் தனரென்றலும் வேகமிஞ்சிய சம்பரன் வந்திட
மாயை விஞ்சைநி றைந்தவனென் றெதிர்மாகர் நின்றிடவஞ்சி
யொதுங்கினர். (22)

ஆயவன்பையறிந்து உயர்
சம்பரன் ஆகுவன், துருமன்

இவ்வாறாய தேவரியற்றிய கொடுமையைத் தெரிந்து மாயைவித்தையில் மேன்மையுற்ற சம்

திறல்முண்டிகன் ஏய இங்கிவர்
தம்படை முன்செலவேவினன்
அங்கு எவரும் பெரிதுபட மேய
அண்டர்அடர்ந்தனரென்றலும்
மிஞ்சியவேகம் சம்பரன் வந்திட
மாயை விஞ்சைநிறைந்தவ
னென்றுமாகர் எதிர்நின்றிட
அஞ்சியொதுங்கினர் =

பரன் அங்கன், துருமன், ஆற்றலுடைய முண்டி கனும் இவர்முதல்வர்களாகப்பொருந்தி தலைமை வாய்ந்து செல்ல தமது படைகளை முன்னர் போகும்படியாக யுத்தத்துக்குச் செலுத்தினன். அவ்வாறு அனுப்பிய சமரில் எவரும் மிக நாச மாக, அந்தரம் அடைந்த தேவர்கள் மோதி வென்றார்களென்பதைச் சாரணர் கூறக் கேட்ட லும் அதிவேகத்தோடுகூடிய சம்பரன் தேவர்களை தேடிவர மாயைவித்தையில் வல்லவன் என்ப தாக, தேவர்கள் அவன் முன்னிலையில் நிலைத் துப் போர்புரியப் பயந்து விலகி ஓடினர்.

மேரு கந்தர மும்ப ரடைந்தனர் வீதியெங்கு மரம்பையர் நின்றழ
யாரு மின்றிய விந்திரன் றன்பதி யீசன்வென்ற புரங்க ளெனும்படி
நேரு மங்கி சொரிந்துதிரும்பின னீடகன்று ளவந்தனர் பின்றையு
மூருள் வந்தன ரென்றுபெரும்படை யோய்விலன் பெரிதுந்தினன்
விஞ்சையால். (23)

உம்பர் மேருகந்தரம் அடைந்
தனர் வீதியெங்கும்அரம்பையர்
நின்றழ யாருமின்றிய விந்திரன்
றன்பதி ஈசன்வென்ற புரங்க
ளெனும்படி நேரும் அங்கி
சொரிந்து திரும்பினன்.
நீடகன்றுள அந்தணர் பின்றை
யும் ஊருள் வந்தனரென்று
பெரும்படை ஓய்விலன் விஞ்சை
யால் பெரிது உந்தினன் =

தேவர்கள் மேருகிரிக் குகைகளிற் சென்று ஒழிந்து கொண்டார்கள். தெருக்களிலெல்லாம் அரம்பை மேனகை, முதலிய தேவ மாதர்கள் நின்று ரோதனஞ் செய்யத் தேவர்களாகிய எவரும் இன்றிய தேவேந்திரனது பட்டணமானது சிவ பெருமான் சிரித்தெறித்த முப்புரங்களென்று சொல்லும்படியாக எரிந்து நீருகும்படி தீயைக் கொளுத்தித் தன்னிடத்திற்கு வந்துசேர்ந்தனன். வெகுதூரஞ்சென்று மறைந்திருந்த சுரர்கள் மறு படியும் ஊருள் (சுவர்க்கத்தில்) புகுந்தனர் என் பதாகக் கேள்யுற்றுப் பெரிய சேனாதிநாயகரை மாயைவித்தையால் உண்டாக்கி மிகவும் ஏவிக் கொண்டிருந்தனன்.

ஆவ தாகிய தானவர்பற்றற வாதிதேவர்கண் மோதினர் மற்றது
தாப மாயசுரேசன் விதித்துள தாமனேடுவி யாள கடப்பெயர்
மூவர் மாயையினால் வரலுற்றவர் மூரிமேருவு லாவுவ தொப்பவர்
பாவ னுவச வாதனை யற்றவர் பரசமாமபிமான நினைப்பிலர். (24)

ஆவதாகிய தானவர் பற்றற
ஆதிதேவர்கள் மோதினர்

சம்பராசுரன் மாயையால் சிருஷ்டித்து அனுப் பியதாய அசுர வீரரெல்லாம் அடியோடுநாசமாக



| | | |
|---|---|---|
| மற்றது தாபமாய் அசுரேசன் விதித்துள தாமனேடு வியாள கடப்பெயர் மாயையினல் மூவர் வரலுற்றவர் மூரிமேருஉலாவுவ தொப்பவர் பாவனுவசவாதனே யற்றவர் பாசமாம் அபிமான நினைப்பிலர் | = | இந்திராதி தேவர்கள் பொருது விரட்டினர், மடிந்துபோனதைக்கேட்டு அதனுல் கோபத்தை யடைந்த தைத்திரேந்திரன் சிருஷ்டிக்கப்பெற்ற மாயை வித்தையினுலே தாமன். வியாழன், கடன் என்னும் நாமம் வாய்ந்தவராய் மூவர் வெளிவந் தனர். வல்லமையுடைய மேருகிரி சஞ்சரிப்ப தொப்ப சமானமானவர் பாவிக்கப் பாவிக்க வளர்ந்துவரும் உலகவாதனேயற்றவர் தேகாதிய பொருள்களில் யான் எனதென்னும் அபிமான எண்ணமே யில்லாதவர் : |

சாதல் வாழ்தல்க ளிப்புறல்சோர்வுறற் ருமவாகைகொள் வெற்றிக டோல்விகள்
போதன் மீடல னைத்தையுநாடலர் போர்செய்வோரை முருக்குவர் கேவல
மாதலா லிவர் பற்றலர்சேனையை யாசுகங்கொ டழிப்ப ரழிப்புருர்
பாதலா சுரன் வெற்பினர்வேலையர் பாருளாரிவர் பிற்செல வேவினுன். (25)

| | | |
|---|---|---|
| சாதல், வாழ்தல், களிப்புறல் சோர்வுறல் தாமவாகைகொள் வெற்றிகள்தோல்விகள்போதல் மீடல் அனைத்தையும் நாடலர் போர்செய்வோரை கேவலம் முருக்குவர் ஆதலால் இவர் பற்றலர் சேனையை ஆசுகங் கொடு அழிப்பர், அழிப்புருர் பாதலாசுரன் வெற்பினர் வேலையர் பாருளார் இவர் பிற்செல ஏவினுன் | = | அத்தாமாதிகள் பூர்வசித்த ஜீவர்கள் அல்லராக லின் அவர்கட்கு வாசனையில்லாததால் (கர்மத் தொடர்பு இல்லாததால்) மரித்தல், ஜீவித்தல், மகிழ்தல், வாடுதல் அனைத்தையும் நாடலர் வெற்றிமாலையைத் தரித்து விளையாடும் ஜயங்கள், அபஜயங்கள், பின்போதல், திரும்புதல் என்பன யாவற்றையும் கருதாதவர். யுத்தம் இயற்று வோரை மாத்திரம் துரத்தியடிப்பவர் ஆதலால் இத் தாமாதியர் சத்துருக்களது சைன்னியத்தை அஸ்திரங்களைக்கொண்டு நாசஞ் செய்வர், தாங் கள் நாசமாகமாட்டார் ; சம்பராசுரன், மலைவாசி கள், கடல்வாசிகள் பல இடவாசிகள் ஆகிய அசு ரர்களை சிருஷ்டித்து இத் தாமாதி மூவருக்குஞ் சகாயமாகப் பின்செல்லும்படி ஏவினுன். |

தான வாதிபன் விட்டநெடும்படை தாள்களோடு கிரித்திரள் வந்தென
மீன வேலைப் பரப்பில் விரிந்தென மேவினுர்கள் சிருட்டி முடிந்தென
வான நாடரு மப்படிவந்தனர் வாயுவோடு நெருப்புமலைந்தென
வான சேனைகண் முட்டியுடன்றன வாதலாற் மறுகற்பம் விளைந்ததே. (26)

| | |
|---|---|
| தானவாதிபன் விட்ட நெடும்படை தாள்களோடு கிரித்திரள் | தைத்திரேந்திரனுகிய சம்பரன் ஏவிய பெரும் சேனைகள் பாதங்களோடு பர்வதக் கூட்டங்கள் |

வந்தென்மீன வேலைப் பரப்பில்
விரிந்தெனமேவினூர்கள் சிருஷ்டி
முடிந்தென வானநாடரும்
அப்படி வந்தனர் வாயுவோடும்
நெருப்புமலைந்தென. வான
சேனைகள் முட்டியுடன்றன ஆத
லால் மறுகற்பம் விளைந்ததே =

கூடிவந்தனபோன்று மகரங்கள் நிறைந்த கடல் விஸ்தரித்து விரிந்துவந்ததென வந்தார்கள். பிரளயம் ஆயிற்று என்பதாகத் தேவர்களும் அவ்வாறே = அசுரர்கள் வந்ததொப்ப வந்தார்கள் யுகாந்தத்தில். காற்றும், அக்கினியும் எதிர்த்துப் போர்புரிவதுபோல துறக்கவாசிகளாகிய தேவர்கள் சைன்னியங்கள் மோதிப் போர்புரிந்தன ஆதலால் வேறு கற்பம் உண்டாயது.

ஆயு தங்களெ ரிந்துநெருங்கிட வாகமெங்கும் விழுந்தென வெற்பென
மாயு மங்கமு மிழ்குருதிக்கடன் மாதிறங்கட தும்பியலைந்தன
காயு வஞ்சகர டர்ந்துமுடுக்கினர் காதுமும்பர்தளர்ந் தோட வுற்றனர்
சாயு மண்டர்கள் பின்றொடர்வுற்றனர் தாமனும்பிறருந் திசை முற்றுமே. (27)

ஆயுதங்கள் எரிந்து நெருங்கிட
வெற்பு என ஆகம் எங்கும்
விழுந்தன. மாயும் அங்கமும்
உமிழ்குருதிக்கடல் மாதிரங்கள்
ததும்பி அலைந்தெனகாயும் வஞ்
சகர் அடர்ந்து முடிக்கினர்
காதும் உம்பர் தளர்ந்து ஓட
வுற்றனர் சாயும் அண்டர்கள்
தாமனும் பிறரும் திசைமுற்றும்
பின்தொடர்வுற்றனர் =

அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகித்து அதனல் அக்கினிமயமாய்த் தகித்து அடர்ந்திட மலைகள் போல சரீரங்கள் எவ்விடத்திலும் வீழ்ந்தன நாசமாகும் சரீரங்களில் பொழியும் இரத்தக் கடலில் மலைகள் தத்தளித்து சலித்தன, கோபம் மிகுந்த அசுரர்நெருங்கி துரத்தினர். வருத்தமுற்றதேவர்கள் மெலிவுற்று ஓடினூர்கள். தோல்வியுற்று ஓடும் தேவர்களைப் பின்பற்றி தாம வியாளகடரும் மற்ற சேனு நாயகரும் எல்லாத் திக்குகளிலும் தொடர்ந்தே ஓட்டினர்.

உம்ப ரோடிம றைந்தமைகண்டில ருந்துமூவரு நின்றுதிருமபினர்
சம்ப ராசுரன் முன்புறவந்தனர் சங்க வானவரென் செயலென்றுகொ
டம்பு யாசனன் முன்புநடந்தன ரன்பினேடுப ணிந்து புகன்றனர்
வெம்பு தீநிகர் சம்பரன்வஞ்சமும் வெங்கண்மூவர் துரந்து தொடர்ந்ததும்.(28)

உம்பர் ஓடிமறைந்தமை கண்
டிலர் உந்துமூவரும் நின்று
திரும்பினர் சம்பராசுரன் முன்
புற வந்தனர் சங்கவானவர்
செயல் என்னென்றுகொல்
அம்புயாசனன்முன்புநடந்தனர்
அன்பினேடும் பணிந்து புகன்
றனர் வெம்புதீநிகர் சம்பரன்

தேவர்கள் ஓடிப்போய் ஒளிந்துகொண்டதைக் காணுதவராய்ப் பின் துரத்திய தாமாதி மூவரும் சிறிது தாமதித்துத் திரும்பினர், பாதாளகோசத்தில் வசிக்கும் பிரபுவாம் தைத்திரேந்திரனிடத்தில் வந்தனர் ஓடிக் கூடிய தேவர்கள் நாம் செய்வது யாது என்று கருத்திற்கொண்டு ஸ்ரீபிரமதேவர் சந்நதியில் சரணுகதி அடைந்தனர். மிகுந்த பக்தியுடன்நமஸ்கரித்துத் தோத்தரித்துச் சுவாலை

வஞ்சமும் வெங்கண்மூவர் துரந்து தொடர்ந்ததும் = விட்டு எரியும் அக்கினியைப்போல, தைத்தியேந்திரனாகிய சம்பரன் வஞ்சனையும் சினந்த செங்கண்கள் வாய்ந்த தாமாதி மூவர் துரத்திப் பின்றொடர்ந்துவந்ததையும் விண்ணப்பித்தனர்.

கேட்ட நான்முக னஞ்சலென் றிவ்வுரை கிளத்தா
னீட்ட மாகிய வருடமோ ராயிர மிறந்தால்
வாட்டு சம்பரன் போரிலே யரியினுன் மடிவான்
வீட்டு மவ்வள வுஞ்செயத் தக்கது விதிப்பாம். (29)

கேட்ட நான்முகன் அஞ்ச லென்று இவ்வுரை கிளத்தான் நீட்டமாகிய வருடம் ஓராயிரம் இறந்தால் வாட்டு சம்பரன் போரிலே அரியினால் மடிவான் வீட்டும் அவ்வளவுஞ் செயத் தக்கது விதிப்பாம் = தேவர்தங் குறைகளைத் திருச்செவிக்கொண்டஸ்ரீ பிரமதேவர் பயப்படாதீர்கள் என்று அபயமருளி இவ் வாக்கியத்தைச் சொல்லத் தொடங்கினர். நெடுநாளாகிய ஒரு சகஸ்ரம் வருடம் சென்றால் உங்களைக் கஷ்டப்படுத்தும் சம்பரன் யுத்தத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவினாலே நாசமாவான் கொல்லுமவ்வளவும் செய்யவேண்டிய உபாயத்தைத் தெரிவிப்பாம்.

என்ற தாமனும் வியாழனுங் கடனு மென் பவரைச்
சென்ற றழைத் தமர்செய்வது திரும்புவ தாகத்
தொன்று தொட்டுநீர் தொந்திக்கின் வாதனை தொடர்ந்து
நின்ற கண்ணடி நிழலென மனத்திலே நிற்தும். (30)

என்றதாமனும் வியாழனுங் கடனுமென்பவரைச் சென்றழைத்து அமர்செய்வதுதிரும்புவதாகத் தொன்றுதொட்டு நீர் தொந்திக்கில் வாதனை தொடர்ந்து கண்ணடி நிழல் நின்ற என மனத்திலேநிற்கும் = துரத்திவந்தனரென்று நீங்கள் கூறிய தாம வியாளகடர் மூவரையும் மாயப்போரால் இவர்களோடு போருக்குச்சென்றுகூப்பிட்டுப் போரைப் புரிவதும் திரும்புவதுமாக நீண்டநாளாக நீங்கள் மாறிமாறிச் செய்யும் யுத்தத்தில் கண்ணாடியில் பதிந்த பிரதிபிம்பம்போல வாதனை தொடர்ந்து மனத்தின்கண்ணே பதியும்.

நிலைபெ றும்படி நானென்னும் வாதனை நின்றால்
வலைபு குந்தபுள் ளாமென மூவரு மடிவர்
கொலை செயற் கெளிதாசையே யுயிர்க்கெல்லாங் கூற்றாய்த்
தொலைவி றுன்பமா நிராசையே துன்பமி லின்பம். (31)

நானெனும் வாதனை நிலை பெறும்படி நின்றால் வலைபுகுந்த புள்ளாமென மூவருமெளிது = அகம் விருத்தியினாலே முறையே வளர்வுற்ற வாசனை உறுதியாகப்பற்றிக்கொண்டால் ஜாலத்தில் அகப்பட்டுக்கொண்ட பறவையே போலத்

கொலை செயற்கு எளிது மடிவர் ஆசையே தொலைவில் துன்ப மாம் உயிர்க்கெல்லாங் கூற்றுய் நிராசையே துன்பமில் இன்பம் = தாமாதி அம் மூவரும் அதி சுலபமாகவே வெல்ல வும் பெறுவர். நாசமுமாவர், ஆசைமாத்திரமே அனந்த துக்கங்களுக்கு ஆலயமாம், சகல ஜீவர் கட்கும் யமனும். நிராசையே துன்பம் அணுவும் பொருந்தா இன்பமாம்.

வாதனைப் பாசத் தாலே மன்னுயிரெல்லாங் கட்டுண்
டேதமா மந்தப் பாச மிறுகுமே லிடரைச் செய்யும்
வேதனை யிலதாந் தீர நழுவுமேல் வேட்கை யாலே
தீதிலோ ரனேகங் கற்ருேர் தீரரென் னினுங் கட்டுண்பார். (32)

வாதனைப்பாசத்தாலே மன்னுயி ரெல்லாங் கட்டுண்டு ஏதமாம் அந்தப் பாசம் இறுகுமேல் இடரைச் செய்யும் தீர நழுவு மேல் வேதனையிலதாம் தீதி லோர் அனேகங் கற்ருேர் தீர ரென்னினும் வேட்கையாலே கட்டுண்பார் = ஆன்மபின்னமாகச் சுகம் உண்டென்னும் வாச னுக் கயிற்றினுலே உலகத்திலுள்ள பிராணிகள் யாவுமே பந்தப்பட்டுத் துன்பத்தை அடையாநிற் கும் அந்த வாசனை வளர்ந்துகொண்டே போமா கில் மிகுந்த துக்கத்தையுண்டாக்கும். அடியோடு வாசனை நீங்கப்பெறினே துன்பமின்றி இன்பமே உண்டாகும். குற்றமற்ற குலத்தினராயினும், பண்டிதர்களாயினும், தீரராயினும் ஆசையி னுலே கட்டுப்பட்டு உழல்வார்கள்.

விலங்குறு சிங்கம் போல வேட்கையா லுயர்ந்தோர் தாழ்வர்
கலங்கன்மி னென்று வேதா கண்டுழி மறைந்த பின்னர்
புலன்கொள வனைத்துங் கேட்ட புங்கவர் பொன்னுட் டெய்தி
நிலங்கிழிந் தண்டம் பீறநெடியதுந் துமியோடார்த்தார். (33)

வேட்கையால் உயர்ந்தோர் விலங்குறுசிங்கம்போல தாழ்வர் கலங்கன்மின்னென்று வேதா கண்டுழி மறைந்த பின்னர் அனைத்தும் புலன்கொள கேட்ட புங்கவர் பொன்னுட்டுஎய்தி நிலங்கிழிந்து அண்டம்பீற நெடிய துந்துமி யோடு ஆர்த்தார் = ஆசையால் மகான்களும் சங்கிலியில் கட்டுண்ட சிங்கம்போலத் தீனபாவமுற்றுத் துன்பமே அடை வர். ஹே! தேவர்களே நீங்கள் ஒன்றுக்கும் பயப் படவேண்டாமென்று ஸ்ரீ பிரம்மா பார்த்துக் கொண்டிருக்குங் காலத்து அவ்விடத்திலேயே திருவுருக்கரந்தபின்னர் யாவற்றையும் புத்தியிற் படும்படி கேட்ட தேவர்கள் சுவர்க்கலோகஞ் சென்று பூப்பிளந்து அண்டம் வெடிப்பப் பேரின் பம் பயக்கும் துந்துபி வாத்திய கோஷங்களோடு போர்ப்பறை அடித்தனர்.

ஆர்த்தன கேட்ட வந்த வசுரர் பாதலத்தி னின்றும்
வேர்த்தனர் பொங்கி வந்து வெம்படை யமரர் மீது
தூர்த்தனர் காலம் போக்குஞ் சுரர்பொரு துடைந்து போகிப்
போர்த்தும்வந் தமர்செய் தோடிப்பின்னும் வந்ததனைச் செய்தார். (34)

ஆர்த்தனகேட்ட அந்தஅசுரர் தாம வியாளகடர் பாதலத்தினின்றும் வேர்த்தனர் பொங்கிவத்து வெம்படை அமரர்மீது தூர்த் தனர் காலம்போக்குஞ் சுரர் பொருது உடைந்துபோகிப் பேர்த்தும்வந்து அமர்செய்து ஓடி பின்னும்வந்து அதனைச் செய்தார் =

போர்ப்பறை முழக்கத்தைக்கேட்ட அத் தாம வியாளகடாதி அசுரர் பாதாளலோகத்தினின்றும் மிகவுஞ் சினமுடையவராய் (வேர்த்தனராய்) வந்து கொடிய பாணங்களை தேவர்மீது பிர யோகித்தனர் பொழுதைக்கழிக்க தேவர் சிறிது போர்புரிந்து சிதறியோடி திரும்பவும் வந்து யுத்தஞ்செய்து ஓடி பின்னருந் திரும்பிவந்து அப்போரைச் செய்தார்.

இவ்வகை பல வுபாய மிறந்தநீள் காலஞ்செய்ய
நைவரு திடமீ தான நானெனும் பழக்கத்தாலே
மெய்வர நானென் றுன்னும் வேட்கையை விருப்பமுற்று
ரவ்வகை யாலே யுள்ள மகப்பட்டு நின்றதன்றே. (35)

இவ்வகை பல வுபாய மிறந்த நீள்காலஞ் செய்ய நைவருதிடம் நானெனும் அது ஆன பழக்கத் தாலே மெய் நானென்றுன்னும் வேட்கைவர. ஐ. விருப்பமுற்றுர் அவ்வகையாலே உள்ளங் அகப்பட்டு நின்றதன்றே =

இந்தப்பிரகாரம் நானுவித உபாயங்களினுல் முப் பத்தைந்து வருஷம் எட்டுமாசம் இருபத்தொரு நாள் (35-வஷ 8-மீ 21-நாள்) யுத்தஞ்செய்யச் சிதிலமின்றிய திடம் நானென்னும் அகங்கிருதி யின் திடஅப்பியாசத்தால் தேகத்தில், அக மென்று கருதும் அபிமானம் உண்டாக ஐ = அதனை அஃதாவது சரீரத்தைப் பேணுவதில் அதிமுயற்சியுற்ருர் அவ்வாறுசரீரத்தைப்பேணும் முயற்சியினுலே மனமானது பந்திக்கப்பட்டு நின்றது.

பயம்வந்து பிடித்துக் கொள்ளப் படர்தரு மோகங் கட்ட
வயர்வுறு மாசா பாசத்தழுந்தி யென் செய்து மென்னு
துயருற விளைத்துக் காயந் துஞ்சுரு திருக்கு மாறு
மயலுற தனத்தா லின்பம் வருவது மெவ்வா றென்ருர். (36)

பயம்வந்து பிடித்துக் கொள்ளப் படர்தரு மோகங்கட்ட அயர் வுறும் ஆசாபாசத்து அழுந்தி

வாசனையினுல் பயம் நன்ருகப் பற்றிக்கொள்ளத் துன்பத்தைத்தரும் மயலானது பந்திக்கத் தளர்ச் சியைத்தரும் ஆசைப் பாசத்தினுல் அழுத்தமாய்க்

என்செய்து மென்ஞ துயருற காயம் இளைத்து துஞ்சுரு திருக்குமாறு மயலுறு தனத்தால் இன்பம் வருவதும் எவ்வாறு என்ருர். = கட்டுப்பட்டு இனியாம் செய்வது யாது என்று கிருபணத்தன்மையை அடைந்து துன்பம் உண்டாகச் சரீரம் இளைத்து மெலிந்து சரீரம் நாசமடையாதிருக்கும்பொருட்டு மயக்கத்தைத் தரவல்ல திரவியத்தால் அவற்றினுலுண்டாய இன்பமும் எம்மார்க்கத்தாலெனக் கவலையுற்றுச் சிந்திக்கத் தொடங்கினர்.

சந்தத மிவ்வா றெண்ணத் தளைப்புண்ட மனத்த ராகி
யந்தமில் தீர மின்றி யமரென்ரு லறவு மஞ்சிப்
புந்திநொந் திறப்போ மென்றும் புகலிட மெமக்கே தென்றுஞ்
சிந்தனை யாலே கெட்ட சித்தத்தாற் றியங்கிச் சோர்ந்தார். (37)

சந்ததம் இவ்வாறு எண்ணத் தளைப்புண்ட மனத்தராகி அந்தமில் தீரமின்றி அமரென்ருல் அறவும் அஞ்சிப் புந்திநொந்து இறப்போமென்றும் புகலிடம் எமக்கு ஏது வென்றும் சிந்தனை யாலே கெட்ட சித்தத்தால் தியங்கிச் சோர்ந்தார் = எப்போதும் இவ்வண்ணஞ் சிந்திக்கப் பிணிக்கப்பட்ட கருத்தையுடையவராய்க் கெடாத தைரியமின்றிப் போரென்ருல் மிக மீகவும்பயந்து சிந்தாகுலமுற்று மரித்துப் போவோமென்றும் சரணுகதமாக அடையும் இடம் எமக்கு யாது எனவும் ஓயாமல் எண்ணுதலால் மயங்கி வாடினர்.

வலியெலா மிழந்து முன்னே வந்தொரு பெயர் நின்ருலு
நலிவுற மாட்டா ராகி நடுங்கினர் விறகு மாண்டாற்
பலிதரு மவியை யங்கி பருகிட வல்ல துண்டோ
வொலிதர வுறைத்தே னஞ்சி யோடினுர் பொன்றிப் போனுர். (38)

வலியெலாம் இழந்து முன்னே வந்து ஒருபெயர் நின்ருலும் நலிவுறமாட்டாராகி நடுங்கினர் விறகுமாண்டால் பலிதரும் அவியைஅங்கி பருகிட வல்லதுண்டோ ஒலிதர உறைத்தேன் அஞ்சி ஓடினுர் பொன்றிப் போனுர். = பல முழுதும் இல்லாமல் எதிரில் ஒரு அசமர்த்தன் சண்டையிட நின்றபோதினும் கொல்லும் வல்லமையில்லாராகி கம்பிதராயினர் இந்தனம் க்ஷீணமாயின் தேவதையை உத்தேசித்துக் கொடுக்கும் அவியை, அக்கினி புஜிப்பதற்கு சாமர்த்தியம் உளதோ, உளதாகாது. மிகுதியாகக் கூறுவதில் என்னேபயன் பீதியடைந்து ஓடினுர் இறந்து போயினர்.

தாமனும் வியாளன் ருனுங் கடனுமுன் சரித்த மார்க்கந்
தோமறு முணர்வுண் டாகச் சொல்லினம் வினேதத் தாலே
மாமன மவிவேகத்தை வரம்பறப் பழகி விட்டாற்
புரமரப் பிறவித் துன்பம் பற்றரு திந்த வண்ணம். (39)



| | |
|---|---|
| தாமனும் வியாளன்ருனுங் கடனும்முன் சரித்தமார்க்கம் தோமறும் உணர்வுண்டாக சொல்லினம் விநோதத்தாலே மாமனம் அவிவேகத்தை வரம்பறப் பழகிவிட்டால் பாமரப் பிறவித்துன்பம் இந்தவண்ணம் பற்றருது = | தாமன்வியாளன். கடன் ஆகிய மூவரும் முன் நடந்த நெறியானது உனக்கு உண்டாகவேண்டாம் ஐயந்திரிபு குந்றம்நீங்கி உனக்கு ஞானம் உண்டாக லீலையாலே கூறினேம் வாசனைமிகுந்த மனம் அவிவேகத்தால் துர்வாசனையை அளவுக்கு மிஞ்சி அப்பியாசித்துக்கொள்ளில் அஞ்ஞர்களால் அனுபவிக்கப்படும் ஜனனமரண துக்கம் இத் தன்மையதாக தொடர்ந்தே நிற்கும். |

இனையவர் நியாய நீயிங் கெய்தலை யென்ற லோடு
மனையவர் பரத்தி னின்று முதித்தவா றறிய வேண்டு
முனைவகூ றென்றி ராமன் மொழிதலு முனிவன் சொல்வான்
றுனையுறு தாமன் முன்னோர் தோற்றமாத் திரமெய் யானோ. (40)

| | |
|---|---|
| இனையவர் நியாயம் நீஇங்கு எய்தலை யென்றலோடும் அனையவர் பரத்தினின்றும் உதித்தவாறு அறியவேண்டும் முனைவகூறு என்று இராமன் மொழிதலும் முனிவன்சொல் வரன்துனையுறு தாமன் முன்னோர் தோற்றமாத்திரம் மெய்யானோர் = | இத்தாமாதியர் கிரமத்தைப்போல ஹே! இராகவ நீ மருவவேண்டாம் என்பதாக ஸ்ரீ வசிஷ்ட பகவான் அருளளோடும் அத்தாமாதியர் பரமாத்மாவினின்றும் ஜனித்த வகையை யான் தெரிந்து கொள்ள தலைவரே தாங்கள் திருவருள் செய்ய வேண்டும் என்று வினவ ஸ்ரீ வசிஷ்ட மகரிஷி யானவர் உத்தரம் அருளுவதாவது, துன்பம் அடைந்த தாமாதியர் மூவரும் பிரதிபாமாத்திர ரூப சரீரமுடையவராவர். |

எதிருறு தோற்ற மெய்யா யிவர்கள்போ லிங்கு யாமும்
விதியதாய்ப் புறத்தி லொன்று மேவலம் வீர னேநின்
மதியினு னெனலும் பொய்யே மதியினீ யெனலும் பொய்யே
யதிர்குரற் றமன் முன்னு மவர்களுண் டெனலும் பொய்யே. (41)

| | |
|---|---|
| தோற்றமெய்யாய் இவர்கள் போல, இங்கு எதிருறு யாமும் விதியதாய்ப் புறத்திலொன்றும் மேவலம் வீரனே நின்மதியின் நானெனலும் பொய்யே மதியில் நீயெனலும் பொய்யே அதிர் குரல் தாமன்முன்னும் அவர்கள் உண்டெனலும் பொய்யே = | பிரதிபாமாத்திரம் ஆகுருதியுடையவரான இம் மூவர்போலவே இவ்வுலகத்திலுள்ள பிரத்தியக்ஷ மாயம்யா இவரும் நியதமாய் விசாரிக்கில் ஆன்மாவிற்கும் பின்னமாக யாதொன்றையும்அடைந் திருந்திலேம் ஆந்தரசத்துருக்களாய காமாதிகளை ஜயித்த வீரனே! நினது புத்தியில் யானெனலும் மித்தையே என்புத்தியில் நீயெனலும் மித்தையே பெருங் கர்ஜனைகள் வாய்ந்த தாமவியாளகடர் கள் இருந்தார்களென்பதும் மித்தையேயாம். |

பரத்தின தொளியே மெய்யாய்ப் பாரித்தோர் சீவசக்தி
திரத்துறு சம்பரன் றியானத்தா லசைந்து மூன்றும்
யுரத்தவுல் லாச மேவிற் றுரைத்தவித் திறத்தி னுலே
வரத்துறு மவரும் நாமும் வாய்மையே யெங்கு மில்லை. (42)

| | | |
|---|---|---|
| பாரித்து பரத்தினதொளியே மெய்யாய் ஓர் சீவசத்தி சம்பரன் திரத்துறு தியானத்தால் அசைந்துமூன்றும் உரத்த உல்லாசமேவிற்று உரைத்த இத்திறத்தினுலே வரத்துறும் அவரும் நாமும் எங்கும் வாய்மையே இல்லை | = | வியாபகமாய்ப் பரமாத்மாவினின்றும் பிரகாசமே சொரூபமாகிய ஓர் ஜீவசக்தியானது சம்பராசுரனது திடமான தியானத்தினுல் விக்ஷேபத்தமாகி சலனமுற்றதாகி மூவகையான திடஉல்லாசத்தைப் பொருந்தியது கூறிய இந்தத் தன்மையினுலே பிரதிபாசமாத்திரமாய் வந்து பொருந்திய அத்தாமாதியரும் இந்தயாமும் எவ்விடத்திலும் சத்தியமாய் இல்லை. |

அறிவதா யறிவே மெய்யா யமலமா யனைத்தா யாறிப்
பிறிவுறு வரவு போக்கில் பிரமமே யுளதா மந்தச்
செறிபொருட் சத்தி தோற்ற மாத்திரஞ் சகமாய் நிற்கும்
பொறிகள்பல் காட்சி பொய்யே பொருண்மெய்யே யென்று வாழ்வாய். (43)

| | | |
|---|---|---|
| அறிவதாய் அறிவேமெய்யாய் அமலமாய் அனைத்தாய் ஆறிப் பிரிவுறு வரவு போக்குஇல் பிரமமே யுளதாம் அந்தச் செறிபொருட் சத்திதோற்ற மாத்திரஞ் சகமாய் நிற்கும் பொறிகள்பல் காட்சிபொய்யே பொருள் மெய்யே என்று வாழ்வாய் | = | சம்வேதனமாய், ஞானமே சொரூபமாய்ப் பரிசுத்தமாய் சர்வகதமாய் சாந்தமாய்ப் பேதமும் உதயாஸ்தமனமும் இல்லாததாய் ஒளிரும் பிரஹ்மமே இருப்பதாகும். அந்தப் பூரணவஸ்துவானது சக்தியின் உல்லாசமாத்திரம் வியாவகாரிக திருஷ்டியில் உலகமாய் திதியுருநிற்கும். பாரமார்த்திக திருஷ்டியில் இந்திரிய முதலிய திருசியங்கள் யாவும் மித்தையே எங்கும் எதுவுமே கிடையாதாம். |

தாம வியாழ கடர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—606.



உ

# வீமபாசதிடர் கதை

## அவதாரிகை

முன்பு தாமாதி உபாக்கியானத்தில் அகம் மம அபிமானங்களால் இச்சம்சாரம் வர்த்திக்குமென்று சொல்லப்பட்டது. இப்போது வீமாதி உபாக்கியானத்தில் தேகாதிகளில் அகங்காரமின்மை புருடார்த்தத்தைக் கொடுப்பதற்குச் சாமர்த்தியம் உளது எனக் கூறப்படுகிறது.

இதுநமக் கிதுந மக்கென் றிரங்குறு பொல்லா வாழ்வா
லுதவியோர் சாம்ப ரேனு முறப்பெரு துதார மிக்குச்
சுதமுறு முலகு மெல்லாந் துரும்புபோற் காண்போர் தம்பால்
விதனங்க ளனைத்தும் வாரா மிருகங்க ளுலர்புற் றீண்டா. (1)

இதுநமக்கு இதுநமக்கு என்று இரங்குறு பொல்லா வாழ்வால் உதவியோர் சாம்பரேனும் உறப்பெருது உதாரம்மிக்குச் சுதமுறும் உலகமெல்லாம் துரும்புபோற் காண்போர் தம்பால் மிருகங்கள் உலர்புல் தீண்டா. விதனங்களனைத்தும் வாரா = தாரபுத்திராதி தனங்கள் நமக்கு வேண்டுமென்று ஏங்குகின்ற (இழிந்த) தைன்ய ஜீவனத்தால் புருஷார்த்தம் ஓர் அணுவேனும் கிடைக்கமாட்டாது ஔதாரமிகுந்த மனமுடையவராய்க் கேடு பொருந்திய மூவுலகங்களையும் திருணத்துக்குச் சமானமாய்த் துச்சமாய்ப் பார்ப்பவரிடத்து, மான் இனங்கள் காய்ந்த புல்லைத் தொடாதது ஒப்ப சர்வ ஆபத்துக்களும் சம்பந்திக்கமாட்டா.

உளத்துறச் சமத்கா ரஞ்சே ருண்மையை யுணர்வோர் தம்மை
யளக்கரும் பிரமாண் டம்போ லட்டதிக் காளர் காப்பர்
கிளப்பருங் குணத்தி லன்பாய்க் கேள்வியில் விருப்பா யுண்மை
விளக்குறு வருத்த மிக்கோர் நரர் நின்றோர் மிருகந்தானே. (2)

உளத்துறச் சமத்காரஞ்சேர் உண்மையை உணர்வோர் தம்மை அட்டதிக் காலர் அளக்கரும் பிரமாண்டம்போல் காப்பர் கிளப்பருங் குணத்திலன்பாய்க் கேள்வியில் விருப்பாய் உண்மை அந்தக்கரணத்தின்கண் திடமான பிரஹ்மாநுசந்தானத்தைப் பொருந்திச் சத்தியவஸ்துவை அறிந்து அடைந்த மகான்களை லோகேசர் அளவிடற்கரிய பிரம்மாண்டத்தைக் காப்பதுபோல் இரக்ஷிப்பர். சம்பாதித்தற்கு அருமை வாய்ந்த சற்குணங்களை அடைவதில் சந்தோஷ

விளக்குறு வருத்தமிக்கோர் நரர். நின்றோர் மிருகந்தானே = ராய் சிரவணத்தில் பிரியமுடையவராய்ச் சத்திய வஸ்துவை அடைந்து அடைவதற்கு, வருத்தம்= வியசனம் = முயற்சிமிக்கவர் யாவரோ அவரே நரர்=புருடராம் மாநுட வாக்கையைப் பெற்ற தற்கு பிரயோஜனமாவர். தவிர்ந்தவர் கழுதை யாம்.

செயலருந் துயருற் றுலுஞ் செயத்தகாச் செயல்க ளாகா
வியல்பலா வழியா லுண்ண விராகுவை யமுதங் கொன்ற
தயலெலாம் வசமா யாபத் தனைத்தும்போம் யென்று நன்று
முயலுநற் குணங்க ளாலே மொய்புக ழெய்தி னோர்க்கே. (3)

செயலருந் துயருற்றுலுஞ் செயத்தகாச் செயல்கள் ஆகா இயல்பலா வழியால் உண்ண இராகுவை அமுதங்கொன்றது முயலுநற் குணங்களாலே மொய்புகழ் எய்தினோர்க்கு அயலெலாம் வசமாய் ஆபத்தனைத்தும்போய் என்றும் நன்றும் = பொறுத்தற்கரிய (சகித்தற்கரிய) துன்பம் ஊழ் வினையால் அடைந்தாலும் வேதங்களுக்கும் மகான்களுக்கும் விரோதமான அக்கிரமத்தில் செல்லலாகாது தேவர்குழாத்தோடு சேர்ந்து சிரமமில்லா நெறியில் மாந்தியும் இராகுவை = (கரும்பாம்பை) அமுதமாயினும் அழித்தது இடை யின்றிப் பிரயத்தன சாத்திய சமதமாதி குணங்க ளாலே நிறைந்த கீர்த்தியுற்ற மகான்கட்கு அன்னியர்களால் பெறப்படாத பொருளெல்லாம் தன்வயமாய் சர்வ ஆபத்துக்களும் போய் அக்ஷய மான சிரேயசு உண்டாம்.

ஒழிவறு முயற்சி தன்னு லூகத்தா லுயர்ந்த நூலா
லிழிவற வியற்று வோர்கட் கெப்பய னௌிதி லெய்தா
வழிபடு நன்னூ லாளர் வருபயன் கருத்தாச் செய்யி
லழிவற முற்று முற்றி யளவறு பயனை நல்கும். (4)

ஒழுவறு முயற்சிதன்னல் உயர்ந்த நூலால் ஊகத்தால் இழிவற இயற்றுவோர்க்கு எளிதில் எப்பயன் எய்தா. வழிபடு நன்னூலாளர் பயன் வரு கருத்தாச்செய்யில் அழிவற முற்றும் முற்றி அளவறு பயனை நல்கும் = நிரந்தரஞ்செய்யும் பிரயத்தனத்தால் சற்சாஸ்தி ரங்களால் ஆராய்ச்சியால் தைரியத்தோடு பிர விருத்திப்பவர்க்கு அதிசுலபமாக எந்த பிரயோ ஜனந்தான் எய்தமாட்டாது எவராலும் வணங் கத்தக்க சாஸ்திரக்ஞர் பயன் உண்டாகும் பரியந்தம் ஊகமாக அவசரப்படாமல் இயற்றில் கேடின்றி சித்திக்கும் அந்த பரிபக்குவ சித்தி யானது பூரணபலத்தைப் பயப்பதேயாகும்.

வருத்தமற் றச்சஞ் சோக மதமின்றி நன்னூற் பின்போ
யொருத்தரா லேவ லின்றி யுலாவுக நசிக்க வேண்டா
வருத்தங்க ளனர்த்த மாகு மளவில்போ கங்க ணோயாம்
பெருத்தவா பத்தாஞ் செல்வம் பேரின்பம் நிராசை தானே. (5)

வருத்தமற்று, அச்சம், சோகம் மதமின்றி நன்னூற் பின்போய் ஒருத்தரால் ஏவலின்றி உலாவுக நசிக்கவேண்டா. அருத்தங்கள் அனர்த்தமாகும் அளவில் போகங்கள் நோயாம். செல்வம், பெருத்த ஆபத்தாம் நிராசை தானே பேரின்பம் = ஆயாசமின்றி, பயம், அயர்வு, கெர்வம், இல்லாமல் சற்சாஸ்திரங்களைப் பின்றொடர்ந்து மதவாதி ஒருவரானே நிர்ப்பந்தரகிதனாய் மன இந்திரியாதிகரண நிஷ்டமாய் விவகாரங்களைச் செய்வாய் விநாசத்தை யடையவேண்டாம். பொருள்களும் (தனம்) அதைத் தேடுதலும் இன்னல்தரும் பொருளையீட்டுதலுந் துன்பமே பின்னதனைப் பேணுதலுந் துன்பமே அன்னதளித்தலுந் துன்பமே அந்தோ பிறர்பாலிழத்தலுந்துன்பமே ஆம். போகசமுதாயம் பவரோகத்தைத் தருவதாம். சம்பத்துக்கள் யாவுமே, மகத்தான உபத்திரவங்களைக் கொடுப்பதாம் ஆசாத்தியாகமே பேரானந்தமாம்.

இடும்பைகூர் சங்க மின்றி யியற்கையா சார மெய்திக்
குடும்பமாந் துயர்சிற் றின்பங் குறித்திடாப் பெருமை யோர்க்கு
நெடும்புகழ் வாணாள் செல்வ நிறைகுண மனைத்து முண்டாய்ப்
படும்பலன் வசந்த காலக் கொடிகள்போற் பலிக்கு மன்றே. (6)

இடும்பைகூர் சங்கமின்றி இயற்கை ஆசாரமெய்திக் குடும்பமாந் துயர் சிற்றின்பங் குறித்திடாப் பெருமையோர்க்கு நெடும்புகழ் வாழ்நாள் செல்வம் நிறைகுணம் அனைத்தும் உண்டாய் பலன்படும் வசந்தகாலக் கொடிகள்போல் பலிக்கு மன்றே = துன்பமிக்க சம்சாரப்பற்றில்லாமல் விரக்த சித்தனாய் வருணாச்சிரமத்துக்குரிய ஆசார சரிதம் பொருந்தி சம்சார சௌக்கியமலம் துன்பவடிவ விஷய இன்பத்தைப் பொருள்ப்படுத்தா மகான்கட்கு, நீண்ட கீர்த்தியும், ஆயுளும், இலட்சுமியும், மைத்திரியாதி குணங்களும் இன்னும் யாவும் உற்பன்னமாகி பலனை உண்டாக்கும் வசந்தகாலத்திலுள்ள முல்லை மல்லிகையாதி லதைகள்போல சத்பலத்தையே தரும்.

தவங்களாற் றெய்வ நீராற் சாத்திரங் களினூற் போகா
பவங்களை யுயர்ந்தோர் பாதம் பணிந்து பற்றறுக்க வேண்டு
மவங்களாங் காமங் கோப மறவுந்தேய்ந் தியற்கை யான
சுவங்களி னடந்து நன்னூற் றுறைநின்றே றுயர்ந்த மேலோர். (7)

தவங்களால் தெய்வ நீரால் சாத்திரங்களினால் போகா பவங்களை உயர்ந்தோர் பாதம் பணிந்து பற்றறுக்கவேண்டும் அவங்களாங் காமம், கோபம் அறவுந் தேய்ந்து இயற்கையான சுவங்களில் நடந்து நன்னூற்றுறை நின்றோர் உயர்ந்த மேலோர் = கிருச்சிரசாந்திராயணுதி தவங்களால் கங்கைமுதலிய தீர்த்தங்களினாலும், நூல்களினாலும் கடக்க முடியாத பவசாகரத்தைச் சற்புருடரான மகான்களைச்சேவித்து அவரது அனுக்கிரகத்தாலும்கடக்க வேண்டும். பயனற்ற காமம், சினம், லோபம், மோகாதி தோஷாதிகள் அத்தியந்தம் அழிந்து வருணச்சிரமத்துக்கு உரித்தான சுபகருமங்களில் ஒழுகிச் சற்சாஸ்திரமுறைப்படி திதிபெற்றவர் எவரோ அவரே சற்ஜனராவர்.

நானெனும் பொருள்கா ணுதோர் ஞானவா காயங் காணர்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார் ஞானவிண் மதியை மூடி
னனெனுப் பரம வாம்ப னன்மலர் விரியா தன்றே. (8)

நானெனும்பொருள்காணுதோர் ஞானவாகாயங்காணர் நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவாகாயமாவார் நானெனும் அகங்காரக்கார் ஞானவிண்மதியைமூடி நானெனு நல்பரஆம் பலமலர் விரியாதன்றே = அகம் சப்த இலக்ஷியார்த்தமான பிரத்யகான்மாவை அறியாதவர் சிதாகாச பரமாத்மாவை அறியார். அகம் சப்த இலக்ஷியாச்த்தமான பிரத்யகாத்மாவை அறிந்த வர்சிதாகாச பிரஹ்மமேயாவார். நானெனும் அகங்கார மேகம் சிதாகாச சந்திரனை ஆச்சாதிக்கில் நிரகங்காரமாகிய பரமார்த்த கைவல்யமென்னும் குமுதமலர் விரிந்திலங்காது.

மடிவறு பிறவி யென்னு மரத்திர ளெனதீ தென்னு
நெடியபல் பணைக ணீட்டி நிரயமாங் காய்கள் காய்க்கு
முடிவறு துயராங் கார முளையாக விளையா நிற்கு
மிடியிலா ஞானத் தீயால் வேரொடும் வெந்து போமே. (9)

முடிவறுதுயராங்காரமுளையாக மடிவறுபிறவியென்னு மரத்திரள் எனது ஈதென்னும் நெடியபல பணைகள் நீட்டி நிரய மாங்காய்கள் காய்க்கும் மிடியிலா ஞானத்தீயால் வேரொடும் வெந்துபோம் = அனந்த துக்க ஏதுவாய் அகங்காரத்தையே அங்குரமாகக் கொண்டு விருத்தியாகா நிற்குமோ ஞானத்தாலன்றி கர்மோபாசனைகளால் நாசமாகாத ஜன்மமென்னும் விருக்ஷசமுதாயம், மம, இதமென்னும் நீண்டபல சாகைகளைப் பரப்பி நரகங்களான பக்குவமற்ற காய்களை விளைவிக்கும் ஐயந்திரிபில்லாத ஆவணமற்ற சௌபாக்கியமான ஞானக்கினியால் காரணத்தோடு கருகி நீருகிவிடும்.

என்றலு மிவ்வாங் கார மெவ்வுரு வுடைத்தெவ் வாறு
வென்றிட லாகுந் தேக மேவியு மேவா தாய
நின்றொரு காலம் வென்று னேருறு பயனே தென்னு
நன்றுணர் வள்ளல் கேட்ப ஞானமார் வசிட்டன் சொல்வான். (10)

என்றலும் இவ்வாங்காரம் எவ் வுருவுடைத்து எவ்வாறு வென் றிடலாகும் தேகம் மேவியும் மேவாதாயும் நின்று ஒருகாலம் வென்றால் நேருறு பயன் ஏதென்னு நன்றுணர் வள்ளல் கேட்ப ஞானமார் வசிட்டன் சொல்வான் = என இவ்வண்ணம் அகங்காரத்தின் கொடுமையைக் கூறலும் இயம்பிய அகங்காரம் என்ன ஆகிருதியையுடையது எங்ஙனம் விடுபடவும் நனவின்கண்ணே தூலதேகத்தோடு கூடியிருந்தும் கனவின்கண்ணே தூலதேகத்தோடு கூடாமல் மனோமாத்திரமாயிருக்கும் இதனை முயன்று நின்று ஒருபோது ஜயித்தால் (கொன்றால்) உண்டாகும் பயன்யாதாம் என்பதாக நன்மையை உணரும் வேட்கைமிக்க ஸ்ரீ இராகவர் வினவ ஞானசொரூபராகிய ஸ்ரீ வசிஷ்டபகவான் விடை தருவாராயினர்.

மூவகை யுலகி லிந்த வகங்கர மும்மை யென்று
மேவரு மிரண்டு நன்று மிகவுமொன் றீன மாகும்
யாவதும் பரமு நாமே யீறில மெமைய லாதோர்
பாவனை யிலதென் றோரும் போதமே பரமாங் காரம். (11)

மூவகையுலகில் இந்த வகங்காரம் மும்மையென்றும் மேவரும் இரண்டு மிகவும் நன்றும் ஒன்று ஈனமாகும் யாவதும்பரமும் நாமே யீறிலம் எமையலாது ஓர் பாவனை இலதென்று ஓரும்போதமே பரமாங்காரம் = ஜகத்திரயத்தில் கூறிய இவ்வகங்காரம் மூன்று வகையாயிருக்கும் அம்மூன்றில் அடைதற்கருமையான இரண்டும் அதிமேன்மையது (உத்தமமானது) இதரமோ அத்தியந்தம் தியாகிக்கத்தக்கதாய கீழாயதாம், பிரபஞ்சம் அனைத்தும் அதற்கு அதிஷ்டானமாகிய பரமாத்மாவும் அகமேயாம். அகமே நித்தியம் எம்மைத்தவிர ஓர் பாவனை பதார்த்தம் கிடையாது என எண்ணுஞ் சிந்தனையே பரம அகங்காரம் (தன்மயதிருஷ்டி)

செந்நெல்வா லினுஞ்சற் றுகிச் செகங்களுக் கயலா வென்று
மன்னுது மெனக்கொள் போத மற்றையாங் கார மாகு
மிந்நிலை யிரண்டுஞ் சீவன்முத்தர்பா லிருந்தீ டேற்றித்
துன்னரு முத்தி நல்குஞ் சூழல்வுறு பந்த நல்கா. (12)

செந்நெல்வாலினுஞ் சற்றுகிச் செகங்களுக்கு அயலாமென்றும் மன்னுது மெனக்கொள்போதம் = செந்நெல் வால்நுனியினுஞ் சூக்குமமாகி பிரபஞ்ச வெதிரிக்தமாய் எப்போதும் நிலைபெற்றுள்ளேம் என் உண்டாம் உணர்ச்சியானது சுப

மற்றையாங்காரமாகும் இந்நிலை இரண்டுஞ் சீவன்முத்தர்பா லிருந்து ஈடேற்றித் துன்னரும் முத்திநல்கும் சுழல்வுறு பந்தம் நல்கா = அகங்காரம் (சூக்ஷ்ம அகங்காரமாம்) (மித்யா திருஷ்டி). இத்தன்மையான இரண்டு அகங் காரங்களும் ஜீவன்முக்தர்களாகிய மகான்களிடத் தில் இருந்து அவர்களுக்கு அனுகூலஞ் செய்து அடைதற்கரிய மோக்ஷத்தைக்கொடுக்கும் சுழற்சி யுற்று மூழ்குவிக்கும் பந்தத்தைப் பயவாதாம்.

கரசர ணாதி மட்டா நானிது வென்று காணுந்
திரமது தானே மூன்று மகங்கரஞ் செகத்தோர்க் கெல்லா
முரியதா மிகவும் பொல்லா துற்பவ மென்னு நச்சு
மரமெழு மூல மாகும் வருந்தியு மொருக்க வேண்டும். (13)

கரசரணாதிமட்டாம் இதுநா னென்றுகாணுந் திரமது தானேமூன்றும் அகங்கரம் செகத்தோர்க் கெல்லாம் உரியதாம் மிகவும் பொல்லாது உற்பவமென்னும் நச்சுமரம் எழுமூலமாகும் வருந்தியும் ஒருக்கவேண்டும் = கை, கால் முதலிய அளவாகிய தேகத்தை இவன் நானென்று உணரும் நிச்சயவடிவமித்தை யாபிமானமே மூன்றுவதான அகங்காரத்தின் சொரூபமாம் ஜீவன்முக்தர்களைத் தவிர ஏனைய உலகத்தோர்க்கெல்லாம் இருப்பனவாம் அத்தி யந்தம் துராத்மாவாம் (கொடியதாம்) துச்சமே யாம் ஜனனமரண சம்சாரமென்னும் விஷ விருக்ஷம் விருத்தியாதற்குப் பீஜமாகும் வெகு பிரயத்தனப்பட்டு இதனைக் கெடுக்க (தள்ளல்) வேண்டும்.

கொடிதிது கொடிது சாலக் கொடிதிதன் கொடுமை யாலே
முடிவறு முயிர்க ளெல்லா மோகமுற் றறிவு கெட்டார்
கடிதிலவ் விரண்டி னுலுங் கடிந்திதெவ் வளவு விட்டாய்
படிவுறவ் வளவே யெய்தும் பரமமாந் தற்ப தார்த்தம். (14)

கொடிது இது கொடிது சாலக் கொடிது இதன் கொடுமை யாலே முடிவறும் உயிர்களெல் லாம் மோகமுற்று அவுகெட் டார் கடிதில் அவ்விரண்டி னுலும் கடிந்து இது எவ்வளவு விட்டாய் படிவுற அவ்வளவே தற்பதார்த்தமாம்பரமம் எய்தும்= மிக மிகவும் உபத்திரவத்தையே கொடுக்கும் இவ் வகங்காரம், இத்தூல அகங்காரத்தின் கொடுமை யாலே, அளவிறந்த=முடிவில்லாத சகலபிராணி களும் மயக்கமடைந்து உணர்வு இழந்தார்=துர் வாசனுவிருத்தி, துஷ்பிரவிருத்தி பீடிதராய்ச் சங்கடங்களிலே மூழ்காநிற்பர், விரைவில் முன் புகன்ற அத் தூய அகங்காரம் (பரம அகங்காரம்) சூக்கும அகங்காரம் இரண்டினுலும் குரு பணி விடை, சிரவணுதி உபாயங்களால் தண்டித்து இம் மூன்றுவது அகங்காரத்தை எத்துணை தியா கித்தாய் அடங்கிய அம்மட்டே, தற்பத இலக்ஷிய மாம் பிரஹ்மம் சித்தியாம்.

ஏற்றமா மகங்கா ரங்க ளிரண்டினுற் பரம மெய்தி
யூற்றமா மவற்றை நீக்கி யோரகங் கரமு மின்றி
யாற்றலா னிற்றி யென்னி லறவுயர் பதம தாகுந்
தோற்றுட ஞனெ ஞமை சுருதிகள் சொல்லு முத்தி. (15)

ஏந்றமாம் அகங்காரங்கள் இரண்டினுல் பரமம் எய்தி ஊற்றமாம் அவற்றை நீக்கி யோரகங்கரமுமின்றி ஆற்றலால் நிற்றியென்னில்அறவுயர் பதமதாகும், தோற்று உடல் நான் எனுமை சுருதிகள் சொல்லுமுத்தி = சிரேஷ்டமாய் முன்மொழிந்த பரம சூக்கும அகங்காரங்கள் இரண்டின் பயிற்சியினுலும் பரம தற்பத இலக்ஷியார்த்த பிரஹ்மத்தை, தானுக= பிரத்யக்கான்மாவாக அடைந்து சர்வ அகங்கிருதிவர்ஜிதனுய் உபநிடதங்கள் கூறும் பரம பதமாம் ஸ்திதியில் திடமாக நிலைபெறுவாயாயின் அதிஉச்சபதத்தையே அடைவாய். (நூறுமுறை யெனினும் நல்லதே சொல்லுகவென்னும் நியாயம்பற்றி, மீண்டுந் தேகாத்மபாவனை ஒழிவிப்பதற்கு உபாயங்கூறல்) வினைவயத்தால் உண்டாம் சரீரத்தில் அகமென்னும் அபிமானத்தைச் செய்யாமையே உபநிடதங்கள் கூறும் முத்தியாம்.

இதனியல் புரைக்கக் கேண்முன் னிசைத்துள தாமன் முன்னே
ரதமுற மடிந்த பின்ன ரனைய சம் பரன்வேகித்து
மதமுறு மிமையோர் சேனை வதஞ்செய்வா னுபாயந் தன்னை
விதமுற வினையவாறு நினைந் தனன் விஞ்சை வல்லான். (16)

இதனியல்பு உரைக்கக்கேள்முன் னிசைத்துள தாமன்முன்னேர் அதமுற மடிந்தபின்னர் அனைய சம்பரன்வேகித்து. மதமுறும் இமையோர் சேனை வதஞ்செய் வான் உபாயந்தன்னை விதமுற இனையவாறு விஞ்சைவல்லான் நினைந்தனன் = இவ் வகங்காரத்தின் தன்மையைச் சொல்லக் கேட்பாயாக பூர்வம் புகன்ற தாமாதி மூவரும் தாழ்வுற நாசமான பின்னர் அம் மாயாவித்தையில் குசலனுன சம்பரன் மிகக் கோபங்கொண்டு யுத்தத்தில் கர்வங்கொண்ட தேவசேனையை அதஞ் செய்யும்பொருட்டு என் உபாயம் என்பதனை நானுவிதமாக இந்தப்பிரகாரம் மாயை வித்தையில் சமர்த்தனுன அச்சம்பரன் சிந்திப்பானுயினன்.

தானவ ரெனமுன் னுஞ்செய் தாமனை முதலா மூவர்
ஞானமில் லாமை யாலே நானென தென்று பொய்யாய்
வானவர் போரின் மாண்டார் மற்றினி ஞான நன்னூற்
போனவர் விவேகத் தோராய்ப் புணர்ந்தமா யத்தாற் செய்வேன். (17)

தானவரென முன் நாம்செய் தாமனை முதலாமூவர் ஞானம் அசுர சேனு வீரர்களாகப் பூர்வம் யாம் சிருஷ்டித்த தாமன், வியாளன், கடனென்னும் மூவரும்

இல்லாமையாலே நான் எனது என்று பொய்யாய் வானவர் போரில்மாண்டார் மற்று இனி ஞான, நன்னூற் போனவர் விவேகத்தோராய்ப் புணர்ந்த மாயத்நால் செய்வேன் = பிரஹ்ம வித்தை இல்லாதபடியினுல் யான் என தென்னும் வெறும் பொய்யாம் மூர்க்கத்தன்மையி ஞலே துரகங்கிருதியை அடைந்து தேவர்களோடு எதிர்த்த யுத்தத்தில் நாசம் அடைந்தனர் இனி அப்படி மோசம்போகாமல் அத்தியாத்ம சாஸ்திரத்தில் செல்பவராய் ஆன்மா அனுன்ம விவேக நிறைந்தவராயுள்ளவரை, என்பால் சம்பந்தித்த மாயையினின்றும் உதயமானவராக சிருஷ்டிப்பேன்.

மெய்யுணர் வுறுத லாலே வெறும்பொய்யா மகங் காரத்தி
னையுருர் விண்ணுேர் சேனை நலிவுற வெல்வ ரென்னு
மையுரு மனத்தி னெண்ணி மாயையா லவரைச் செய்தான்
மொய்யுறு வேலை தந்த மொக்குள்போன் மூவர் வந்தார். (18)

மெய்யுணர்வுறுதலாலே வெறும் பொய்யாம் அகங்காரத்தில் நையுருர் விண்ணுேர் சேனை நலிவுற வெல்வரென்னுமையுரு மனத்தில் எண்ணி மாயையால் அவரைச் செய்தான் மொய்யுறு வேலைதந்த மொக்குள்போல் மூவர்வந்தார் = சச்சிதானந்த வஸ்துவைச் சாக்ஷாத்கரித்தலாலே அத்தியந்தம் மித்தையான அகங்காரத்தினுல் மெலிவுருர் தேவ சைன்யங்களைத் துன்புறும்படி ஜயிப்பர் என இவ்வண்ணம் தெள்ளியசித்தத்தில் சிந்தித்து மாயாவல்லபத்தால் அத்தகையரைச் சிருஷ்டித்தான். மகர மச்சங்கள் நிறைந்துள்ள சமுத்திரத்தில் உண்டான நீர்க்குமிழிபோல (புற்புதங்கள்போல) மூன்றுபேர் வந்தனர்.

அனைத்தையு மறிந்தோர் தம்மை யறிவென வறிவாற் கண்டோர்
வினைத்தொட வரிலாதோ ரொன்றின் விருப்பமும் வெறுப்பு மில்லோர்
நினைத்துள நிகழ்கா லத்தி லெய்திய நிலையி னிற்போர்
தினைத்துணை யெனினு மைய மிலாதவர் தெளிவு சான்ருேர். (19)

அனைத்தையும் அறிந்தோர் அறிவால் தம்மை அறிவெனக் கண்டோர் நினைத்துள வினைத் தொடரிலாதோர் ஒன்றில் விருப் பமும் வெறுப்புமில்லோர் நிகழ் காலத்தில் எய்திய நிலையில் நிற்போர் தினைத்துணை யெனினும் ஐயமில்லாதவர் தெளிவு சான்ருேர் = முழுதும் உணர்ந்தவர், விவேக திருஷ்டியினுல் பிரஹ்ம சைதன்யம் எனப் பார்த்தவர் சம்சார காரணமாகக் கருதியுள்ள கருமசம்பந்தமில்லாத வர் ஒரு பொருளிலேனும் பிரியமும், அப்பிரியமும் இல்லோர், வர்த்தமான காலத்தில் எதிரிச்சையால் அடைவுற்றபடியே விவகரிப்பர். அணுவளவேனும் சம்சயமும் விபரீதமுமில்லாதவர் ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்த உத்தமர்.

பேரினுன் வீமன் பாசன் றிடனெனப் பிரிக்கப் பட்டோர்
சீரிஞு லுலகை யெல்லாந் திரணமாய்த் தேருஞ் சுத்தர்
போரிலே போமி னென்று சம்பரன் புகலப் போகி
நேரிலா வமர ரோடு நெடுஞ்சமர் புரிய லுற்ருர். (20)

பேரினல் வீமன்,பாசன்,திடன் எனப் பிரிக்கப்பட்டோர் சீரினல் உலகையெல்லாந் திரணமாய்த் தேருஞ் சுத்தர் போரிலே போமினென்று சம்பரான் புகலப் போகி நேரிலா அமரரோடு நெடுஞ்சமர் புரியலுற்ருர் = நாமத்தினல் வீமன், கெம்பீர சொரூபநிஷ்டன் பாசன், சதா சொரூபமாகவே இலங்குபவன் திடன், திடப்பிரஞ்ஞனென வகுத்துக் கூறப்பட்டோர், பிரஹ்மவித்தையின் சிறப்பினல் பிரபஞ்ச மனைத்தையும் துரும்புக்குச் சமானமாய்ப் பார்க்குந் தெள்ளிய உள்ளத்தினர் யுத்தத்தில் வெற்றி அடைவீர்கள் செல்லுங்களென்று சம்பரன் ஆணையிட விடைபெற்றுச் சென்றவர்களாய் ஒப்பில்லாத தேவர்களோடும் பெரிய யுத்தஞ் செய்யத் தொடங்கினர்.

எண்ணிலா வருடம் வெம்போ ரியற்றின ரிவர்க ணெஞ்சிற்
றுண்ணென வெனதி யானுந் தோற்றர வுதித்த போது
நுண்ணறி வாலே யாமா ரென்றுற நோக்க லோடும்
புண்ணிய மிலாதோர் வாழ்வு போலிது பொய்யாய்ப் போகும். (21)

எண்ணிலா வருடம் வெம்போர் இயற்றினர் இவர்கள் நெஞ்சில் துண்ணெனயான் எனது ஆம் தோற்றரவுதித்தபோது நுண் ணறிவாலேயாமாரென்னுற நோக்கலோடும் புண்ணியமிலா தோர் வாழ்வுபோல் இது பொய்யாய்ப்போகும் = அநேக வருஷங்கள் தேவர்களோடு கொடும் யுத்தத்தைச் செய்தனர், இம் மூவர்கள் உள்ளத்தில் திடுக்கென்று யான் எனது என்னும் வாசனை எழும்பியபோது சூக்ஷ்மவிசார திருஷ்டியினல் நாம் யாவர் இஃது என்னே என்பதாக அழுத்தமாய் நாடியவுடனே தருமமற்றவரது ஜீவனம் போல இவ்வத்தியாசமும் அத்தியந்தம்மித்தையாய் ஓடிப்போகும்.

பன்மையாம் விசாரத் தாலே படரகங் கார மற்ருேர்
சன்மமே மரண மேயென் றஞ்சுறு சலிப்பி லாதோர்
நின்மல ரெளிதின் வந்த பொருள்கொள்வோர் நிகழ்ந்த வெல்லாந்
தொன்மையா நவமாங் கண்ணுற் றுகளறச் சமமாய்க் காண்போர். (22)

பன்மையாம் விசாரத்தாலே படரகங்காரமற்ருேர் சன்மமே மரணமேயென்று அஞ்சுறு = பலவிதமாகச் செய்யப்பட்ட ஆன்மா அனன்மா ஆராய்ச்சியினுனே இறுகிய அகம்பாவமகன்ருேர் ஜன்மஜராமரணங்களாதி சட்பாவ விகாரங்கள்

சலிப்பிலாதோர் நின்மலர் நிகழ்ந்தவெல்லாம் எளிதில் வந்த பொருள்கொள்வோர் தொன்மையாம் நவமாங் கண்ணுல் துகளறச் சமமாய்க் காண்போர் = உண்டு என்னும் அச்சமேயில்லாதவர் பரிசுத்தர். வர்த்தமான காலத்தில் அனைத்தும் எதிரிச்சையானே அநாயாசமாக நேரிட்ட பொருள்களைக் கொண்டே விவகரிப்பவர், அநாதியாயும் அற்புதமாயுமுள்ள ஞானதிருஷ்டியினுல் விஷமபாவமின்றிச் சந்ததம் ஒப்பாகப் பார்ப்போர் அம் மூவருமாவர்.

ஆதலால் வீர ரான வவர்களா லமரர் சேனை
காதலாற் புசித்து மாய்க்குங் காமுகர் செல்வம் போலப்
போதலே புரிந்து திக்கிற் போயொளித் துலக முண்ட
மாதவா சரண மென்றே மாயனைச் சேர்ந்த தன்றே. (23)

ஆதலால் வீரரான அவர்களால் அமரர்சேனை காமுகர் காதலால் புசித்துமாய்க்குஞ் செல்வம் போல திக்கில் போதலே புரிந்து போயொளித்து உலகமுண்ட மாதவா சரணமென்றே மாயனைச் சேர்ந்தது அன்றே = ஞானகுணசம்பன்னராதலால் அதிதீவிர வீரசூரர்களான அம் மூவர்களால் தேவ சைன்யங்கள், போகடம்பலர் பேராசையினுலே புஜித்துக்கெடுத்துக்கொள்ளும் ஐஸ்வரியம்போலத் திசைகளில் ஓடோடிப்போய் மறைந்து பல உலகங்களைப்பற்றிப் பவளத்திரு வாயில் வைத்த இலட்சுமிநாயக தேவரீரே அடைக்கலம் என க்ஷீராப்தியை அடைந்தன.

அடைக்கலம் புகுந்த வானோர்க் கஞ்சலென் றபய நல்கி
விடைத்துவந் தமரின் மோதும் விண்டுவோ டரும்போர் செய்து
படைக்கல நேமி யேவப் பாய்கன றீய்க்கத் தீய்ந்து
தொடைத்துழாய் மார்பன் வாழுந் தூயவை குந்தம் புக்கார். (24)

அடைக்கலம் புகுந்த வானோர்க்கு அஞ்சல் என்று அபயம் நல்கி விடைத்துவந்து அமரில் மோதும் விண்டுவோடு அரும்போர்செய்து நேமிபடைக்கலம் ஏவப் பாய்கனல் தீய்க்கத் தீய்ந்து துழாய் தொடைமார்பனை வாழுந் தூய வைகுந்தம் புக்கார் = சரணுகதி அடைந்த தேவர்கட்குப் பயப்படாதீர்களென்று அபயஹஸ்தம் தந்தருளிக் கோபித்து வந்து போரில் யுத்தஞ்செய்யும் ஸ்ரீமகாவிஷ்ணுவினேடு அம் மூவரும் சம்பராசுரனும் அரிய யுத்தத்தைச்செய்து சக்கராயுதத்தை விடுக்க எழும்பிய அக்கினிச்சுவாலையால் தகிக்கப்பெற்றுப் பஸ்மமாகித் துளபமாலை திருமார்பிலணிந்த ஸ்ரீபகவான் எழுந்தருளியிருக்கும் பரிசுத்த வைகுண்டம் அடைந்தார் (வீமபாசதிடர் மூவரும் பரமபதத்தையும், சம்பராசுரன் வைகுண்டத்தையும் அடைந்தார்.

ஓ

மற்றினி யிந்த வாற்ருல் வாதனை யாலே பந்தம்
பற்றுறு மதனை நீங்கிற் பந்தம்போம் விவேகத் தாலே
யுற்றறி வுண்மை சேரி லுளத்தில்வா த்னைபோம் போனு
லற்றமில் சித்த நெய்தீர் தீபம்போ லாகு மன்றே. (25)

மற்றினி இந்தவாற்ருல் வாதனையாலே பந்தம் பற்றும் அதனை நீங்கில் பந்தம்போம், விவேகத்தாலே உண்மை அறிவு உற்று சேரில் உளத்தில் வாத்னைபோம் போனல் அற்றம் இல் சித்தம் நெய்தீர் தீபம்போல் ஆகும் = இப்பொழுது கூறிய முறைமையால் தேகாபிமானம் ஜகத் சத்தியமென்னும் வாதனையால் பந்தமாம்=கிரந்தி (முடிச்சு) ஆம், நிரந்தரஞ் செய்யும் விசாரத்தாலுண்டாகும் தத்துவ ஞானத்தால் ஒழியின் சச்சிதானந்த சொரூபத்தைச் சாக்ஷாத்கரிக்கப்படும் சித்தத்தில் சேர்ந்துள்ள வாதனை நாசமாம், தீர்ந்து ஒழிவான சோர்வு இல்லாத மனம் எண்ணையில்லாத விளக்குச் சாந்தமாதல் போலச் சாந்தமாம். ஹே இராகவ வீமாதியர் போலச் சுகமாக வாழ்த்தி நினக்கு உபதேசித்த இஃது எமக்கு எனது பிதாவாகிய ஸ்ரீ பிரமதேவரால் முன் அருளப்பெற்றதாம்.

உ

வீமபாசதிடர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் 631.



உ

# தாசூரன் கதை

## அவதாரிகை

முன்பு வீமபாசதிடர் கதையில் அகங்காரபரித்தியாகம் புருடார்த்தத்தைக் கொடுக்கச் சமர்த்தமாமெனப்பட்டது. இனித் தாசூரன் கதையில் அதனை ஸ்தாபித்தற்காக ஜகத்திற்கு மாயாமயத்வம் தெளிவாகச் சொல்லப்படுகிறது. அதில் இப்போது உபாயம் உபதேசிக்கின்றார்.

ஒழியாத துயர்மாயை யெனுமாபத்தை யொழிக்கமன நாசமோ ருபாயமாகும்
மிழியாத மெய்ஞ்ஞானப் பொருளையெல்லா மியம்பக்கேட் டயராம லிதயங் கொள்வாய்
பழியான போகத்தி னிச்சைதானே பந்தமா மதுவிடலே பரமமாகும்
வழியான பன்னூலாற் பயன்கொலென்ன வருந்தாம லிவ்வழியே வருதல் வேண்டும். (1)

ஒழியாத துயர் மாயையெனும் ஆபத்தையொழிக்க மனநாசம் ஓர் உபாயமாகும். இழியாத மெய்ஞ்ஞானப் பொருளையெல்லாம் இயம்பக்கேட்டு அயராமல் இதயங்கொள்வாய் பழியான போகத்தி னிச்சைதானே பந்தமாம் அதுவிடலே பரம மாகும் இவ்வழியான பன் னூலால் என்ன பயன்கொல் வருந்தாமல் இவ்வழியே வருதல் வேணடும் = பிரஹ்ம சாக்ஷாத்காரத்தாலன்றி நாசமாகாத துன்பத்தைத் தரும் சம்சாரமென்னும் உபத்திரவத்தை அடியோடுங் கெடுக்க தனது மனத்தின் நிக்கிரகம் ஒன்றே உபாயமாக உள்ளதாம். தாழ்வுறாத மெய்ஞ்ஞானமாகிய சர்வ ஐஸ்வரியத்தையும் உபதேசிக்கக்கேட்டு மறந்துவிடாமல் உனது மனத்தில் தாரணஞ்செய்து நிந்தைக்கிடமான போகங்களிலுள்ள இச்சைமாத்திரமே பந்தந்தருவதாம் அதனது தியாகம் மோக்ஷமெனப்பெறும், பல மார்க்கங்களான அநேக சாஸ்திரப் பயிற்சியால் யாது பிரயோஜனம் கொல் என ஆயாசப்படாமல் யாவற்றையும் ஒழித்து இதனையே இம் மனோலயத்தையே அநுஷ்டிக்கவேண்டும்.

இன்பமிதா மின்பமிதா மென்றவெல்லா மெரியெனநஞ் செனநினைக வேற்றத்தாழ்வாய்த்
துன்புறுபோ கம்பலகாற் றேர்ந்துநெஞ்சிற் றோயாமவெளி தருந்திற் சுகமேயாகும்
வன்புபயில் மனத்தோற்ற நாசமாகு மனத்தினதுநாசமே மகத்தாந் தோற்றம்
நன்பரம ஞானிகணெஞ் சிறந்துபோகு நடைவிலங்கர மறிவிலர்க்கு நவைகூர்நெஞ்சம். (2)

இன்பமிதாம் இன்பமிதா மென்ற வெல்லாம் எரியென நஞ்சென நினைக ஏற்றத்தாழ்வாய் துன்புறு போகம் பலகால் தேர்ந்து நெஞ்சில் தோயாமல் எளிதருந் தில் சுகமேயாகும். அன்புபயில் மனத்தோற்றம் நாசமாகும் மனத்தினது நாசமே மகத்தாந் தோற்றம் நன்பரம ஞானிகள் நெஞ்சு இறந்துபோகும் மறிவிலர்க்கு நவைகூர்நெஞ்சம் நடைவிலங்காம் = எந்தெந்தப்பொருள்இரமணீயமாம்இரமணீயமா மென்றுமனது கருத்துருத்துவம்தோன்றுகிறதோ அவ்வியாவற்றையும் அக்கினியெனவும் விஷமெனவும் பார்த்தல்வேண்டும், உயர்வுதாழ்வாய துயர்மய விஷயபோகங்களை மாறி மாறி விசாரித்துச் சந்தாப ஏதுவாதலின் மனதில் தரியாமல் அநாயாசமாகப் புஜிக்கில் ஆனந்தத்தையே யளிப்பதாகும், வலிமைபொருந்தியவிஷயங்களில் மீண்டும்மீண்டும் பிரவிர்த்திசெய்யும் மனத்தினது உதயம் கேட்டினையுறும், மனோநாசமே மகோதயமாம், நல்ல ஜீவன்முக்தர்களது மனம் நாசத்தை நண்ணும், அஞ்ஞானிகளுக்கு மலின வாசனைமனம் காலில் பூட்டிய சங்கிலியாம்.

ஆனந்த நிரானந்த மிரண்டுமில்லை யசைவு மசைவின்னமையுமா மவையுமில்லை
யீனந்தீர் சத்தசத்தன் றிவற்றுக்கெல்லா மிடையல்ல ஞானிமன மென்றலோடுந்
தானந்த மிலாவறிவா யுலகின்மேலாந் தத்துவத்தி லுலகிருக்குந் தன்மைதனை
ஞானந்தான் வளர்பொருட்டா யுரைப்பாயென்று நாதனியம்பிட வசிட்டன் நவில்வதானுன். (3)

ஞானிமனம் ஆனந்தம் நிரானந் தம் இரண்டும் இல்லை அசைவு அசைவின்மையுமாம் அவையு மில்லை ஈனந்தீர் சத்து அசத்து அன்று இவற்றுக்கெல்லாம் இடையல்ல என்றலோடும் தான் அந்தமிலா அறிவாய், உலகின் மேலாந் தத்துவத்தில் உலகு இருக்குந் தன்மைதன்னை ஞானந்தான் வளர்பொருட்டாய் உரைப்பாயென்று நாதன் இயம்பிட வசிட்டன் நவில்வதானுன் = ஜீவன்முக்தனது மனம் வாசனை இல்லாமையினாலும் விவகார ஏதுவாதலினாலும் நிரூபிக்க அரிதாம் ஜடமாதலின் ஆனந்தரூபம் அன்று ஆனந்தானுபவ ஏதுவாதலின் நிரானந்தமும் அன்று ஆன்மாவில் முக்கிய நிஷ்டையுடையதாதலின் அசைவும் அன்று வெளியிலும் விளங்குவதால் அசலமுமன்று கெடுதல் என்னுஞ் சங்கற்பாதிகாரியம் இன்மையால் சத்தும் அன்று, விடயங்களில் இந்திரியங்களுக்கு பிரவிருத்தி வருதலின் அசத்துமன்று பரஸ்பர விரோதமாயிற் பக்ஷாந்தரம் உதியாதாதலின் ஆனந்த நிரானந்தாதிகளினது மத்தியமுமன்று என இவ்வியாவுமே பிரஹ்மசத்தையாம் இவ்வதிகாரி சரீரத்திலேயே பரப்பிரஹ்மத்தைக் காணும். ஞானியின் மனம் அநிர்வசநீயமென்றறியென்பது கருத்து தன்வடிவாய்ப் பரிச்சின்னமில்லாத பரமான்ம

வஸ்துவில் பிரபஞ்சம் ஸ்திரமாயிருக்குந் தன்மை தனை ஞானமானது விருத்தியாதற்பொருட்டு மீண்டும் கூறுவீர்களாகவென்று ஸ்ரீ இராம பிரான் விண்ணப்பித்துக்கொள்ள ஸ்ரீ வசிஷ்ட மகரிஷியும் கூறியருளத் தொடங்குகின்றார்.

வேறிலா தெவ்விடத்து மேவிநின்று மேவாம னுண்மையினுல் வேரும் விண்போல்
கூறிலாச் சிற்பாவ மெங்குநின்றுங் கூறுபடுமவற் றொன்றுங் கூடிப்பற்றுப்
பேறிலாச் சங்கற்ப மனைத்துமின்றிப் பேரின்றி யழிவின்றிப் பேத மின்றி
யூறிலா வாகாயங் கோடிகூறு வுரித்தவற்றி லொருகூற்றை யொப்ப நொய்தாம். (4)

வேறிலாது எவ்விடத்தும் மேவி நின்றும் நுண்மையினுல் மேவாமல் வேரும் விண்போல் கூறிலாச்சிற்பாவம் எங்கும் நின்றும் கூறுபடு மவற்றுஒன்றுங் கூடிப் பற்று, பேறிலாச் சங்கற்ப மனைத்துமின்றி பேரின்றி அழிவின்றி பேதமின்றி ஊறிலா ஆகாயம் கோடிகூறு வுரித்து அவற்றில் ஒரு கூற்றையொப்ப நொய்தாம் = (சிதான்மாவில் விவர்த்தரூபத்தால் தோன்றும் உலகம் ஸ்திதிபெறுந் தன்மையைத் தெரிவிக்கு மிச்சையுடையவராய் சிற்சொரூபத்தை நிரூபித் தற்கு துர்லக்ஷியமெனல்) அன்னியமில்லாமல் சர்வகதமாயிருந்தபோதினும் சூக்குமத் தன்மை யானே சம்பந்தமுருமல் நிரவயமாதலின் வேரும் (இலக்ஷியப்படுத்தனின்றும்) வாயுவாதி பூதங்க ளுடன் சம்பத்தித்தும்ஆகாசம் சம்பந்தமில்லாதது போல நிரம்சமாகிய சித்தியற்கையானது எவ் விடத்திலும் நிறைந்திருந்தும் அம்சத்தோடு கூடி விவகரிக்குமாயினும் அந்த அம்சபதார்த்தங்கள் எவற்ருேடும் சம்பந்தித்துப் பற்றையடையாது குறிக்கப்படாது பயனற்ற எண்ணங்கள் யாவுமே யற்று நாமமின்றி நாசரகிதமாய்ப் பேதவர்ஜித மாய் வாயுவாதி பரிசமற்ற ஆகாயத்தைக் கோடி கூருய் அங்கிசப்படுத்தி அவ் வங்கிசங்களுள் ஓரங்கிசத்துக்கும் சமானமாகாச் சூக்குமமாம்.

நன்றிதரு முண்மைமுதற் பெயர்கள்பெற்று ஞானிகள்பா னிமலமா ஞானமாகி
யொன்றுமல வுறுவானகுடும்ப ரூபமொன்ருகித் தனைத்தெரிவித் துணர்வே மெய்யாய்த்
தன்றுனைச்சின் மாத்திரத்துக் கயல்ற்றிந்தத் தொத்தாமத்தா மயமாஞ் சகங்களெல்லாந்
துன்றுதிரை முதலாகப் பிறந்தவெல்லாஞ் சூழ்கடலில் வேருகாத் தொடர்ச்சி போலாம். (5)

நன்றிதரும் உண்மைமுதல் பெயர்கள் பெற்றும் ஞானிகள் பால் நிமலமாம் ஞானமாகி மலவுருவானயொன்றும் குடும்ப ரூபம் ஒன்ருகித் தனைத்தெரி வித்து உணர்வே மெய்யாய் தன்றுணைசின்மாத்திரத்துக்கு அயலற்று இந்தத் தொத்தாமத் தாமயமாம் சகங்களெல்லாம், துன்றுதிரை முதலாகப் பிறந்த வெல்லாம் சூழ்கடலில் வேருகாத் தொடர்ச்சிபோலாம் = நன்மையைப்பயக்கும் சத்துசித்து ஆனந்தம் நித்திய முதலிய நாமங்களையடைந்து அறிஞர்க ளிடத்தில் நிஷ்களசித்துருவமாகி அறிவிலா ரிடத்தே, களங்கரூபமாகப் பொருந்தும் சம்சார மய அத்தியாச ஐக்கியமாய் விளங்குந் தன்மைய தாகிய ஆன்மாவை தரிசிப்பித்து அறிவுசொரூ பமே உண்மையாய் தனக்குத்தானே சமானமான சின்ம மாத்திரத்திற்கு வேறிலாமலே பிரதீதி யாகாநின்ற நீ உனது என்னுந் தன்மையால் எனதென்னுந் தஸ்மை உலகங்கள் யாவும் பிரதீதியாம் எதுபோலாமெனில், கோர்த்துஎழும் அலை குமிழியாதிகளாக எழும்பிய யாவும் நிறைந்தசமுத்திரத்தில் அன்னியமின்றித் தோற் றும் திருஷ்டாந்தம் போலவாம்.

துனைதருபல் பிறப்பாகிக் கொடிதாய்ப்பொல்லாச் சுபாவமாந் தனையறியாச் சுமடர்க்கென்றுந்
தனையறிந்தோர்க் கொளியுருவா யெல்லாமொன்ருய்த் தானுக வநுபவிக்குந் தன்மையாலே
நினைவொடுசெய் வோன்செய்கை செயலிம்மூன்று நிகழ்விக்கும்பாவித்த நினைவுக் கெல்லா
மனையசுவை யாய்நிற்கும் பிறவிப்போக மருந்துவோர்கப்போக மாகி நிற்கும். (6)

தனையறியாச்சுமடர்க்கென்றும் துனைதருபல்பிறப்பாகிக் கொடி தாய் பொல்லாச் சுபாவமாம் தனையறிந்தோர்க்கு ஒளியுரு வாய் எல்லாம் ஒன்ருய் தானுகவநுபவிக்குந் தன்மை யாலே நினைவொடு செய்வோன்- செய்கை-செயல் இம் மூன்றும் நிகழ்விக்கும் பாவித்த நினைவுக் கெல்லாம் அனையசுவையாய் நிற்கும் பிறவிப்போகம் அருந்து வோர்க்கு அப்போகமாகி நிற்கும் = தனது சொரூபத்தை உணராத அஞ்ஞர்கட்கு எப் போதும் துன்பந்தரும் சம்சாரமயமாய் தீயதாய் இராகத் துவேஷாதிகளங்கமுடையதாதலின் துஷ்ட சுபாவமாம், தனது சொரூபத்தைப் பிரஹ்மரூபமாயறிந்த ஞானிகளுக்குப் பிரகாச ரூபமேயாய்ச் சகலத்தினும் ஒன்ருய் ஆத்மாவா கவே அநுபூதிவசத்தால் கருதிச்செய்யுங்கர்த்தா, கர்மம், கிரியை இம் மூன்றினையும் பிரகாசிப்பிக் கும். எண்ணிய சகல போக்கிய வஸ்துக்களினது இரசனான ஏதுவாம், பவபோகிகளாம் சம்சாரி களுக்குப் பிரவிருத்தி ஏதுவாய் அவ்வப்போக மாகி நின்றிலங்கும் அச் சித்து.

அத்தமன முதயமில்லை யெழுதனிற்ற லயல்போதல்வருதலெனு மனைத்து மில்லை
யித்தலத்தி லில்லையிலா திருக்கவில்லை யித்திறமாஞ்சித்து மலமில்லா மெய்யாய்ச்
சுத்தமுறு தானேதன் னிடத்தினிற்குஞ் சொன்னநெறியே சுகமாய்ச் சொல்பேராலே
மெத்தவெகு ரூபமாந் தற்சுபாவம் விரிந்தெங்குஞ் சிற்பெயரால் விளங்கிநிற்கும். (7)

அத்தமனம் உதயம் இல்லை யெழுதல் நிற்றல் அயல்போதல் வருதலெனும் அனைத்துமில்லை இத்தலத்திலில்லை, இலாதிருக்க வில்லை இத் திறமாஞ்சித்து மலமில்லா மெய்யாய்ச் சுத்தமுறு தன்னிடத்தில் தானே நிற்கும் சொன்ன நெறியே பிரபஞ்சமாய் பெயர் மாத்திரத் தானே மெத்தவெகு ரூபமாம் = (அஞ்ஞர்கட்கு ஜன்மாதிநிமித்த பாவமாயிருப்பினும் அறிஞரது திருஷ்டியானே கூடஸ்த அபரிச்சின்ன ஏகரூபமேயாம் அந்தச் சித்து) சதோதய மாதலின் அஸ்தத்தையும் உதயத்தையும் அடைவதில்லை. (நிர்விகாரியாதலால்) எழும்புவதும் நிற்பதும் பிறவிடத்துக்குச் செல்லுவதும் வருவதும் என்பனவாதி பிற எவையுமில்லை (நிஷ்கிரியமாதலால் இவ்விடத்தினின்றுநிராதாரமாதலின்) இலாதிருக்கவுமில்லை (பரிபூரணமாதலின்) இத்தன்மைத்தான அறிவானது நிர்மல சத்து ரூபமாய்த் தன்பால் சுயம் நன்னிலைபெறும், கூறிய முறையே நாமமாத்திரத்தானே அவ்வஸ்துவானது மிக மிகவும் விஜ்ரும்பணத்தை யடையும் (விவர்த்தமாய் விரிந்தொளிரும்).

இன்னசுபா வந்தானே யொளியாய்நிற்கு மிருளாகுநிற்குமொன் றுகுமீறில் கூறுந்
தன்னுடைய தொழிலாலே தானேபூரண தத்துவம்விட் டிவனவனு னென்னுந்
தன்மையுன் னியபாவனை யாலேமெள்ளச்சீவ னுருவாகிக் குடும்பியெனு முகத்தாலே
பன்னியநா னுத்துவத்தி லழுந்திப்பாவா பாவம்பற்றுதல் விடலாம் பதத்தினிற்கும். (8)

இன்னசுபாவந்தானே ஒளியாய் இருளாகும் நிற்கும், ஒன்றுகும் ஈறில்கூறும் தன்னுடைய தொழிலாலேதானே பூரணத்துவம் விட்டு இவன், அவன், நானென்னுந் தன்மையுன்னிய பாவனை யாலே மெள்ளச் சீவனுருவாகிக் குடும்பியெனும் ஊகத்தாலே பன்னியநானுத்துவத்தில் இத்தன்மைய ஆத்மசொரூபமே பரமார்த்தமாகப் பிரகாசமாய் வியவகாரிகத்தன்மையானே அப்பிரகாசமாய் விளங்கும் ஏகமாகியதானே முடிவில்லாத நிரவயவசாவயவரூபமாய்த் தன்னுடைய சங்கற்பவசத்தினுல் சுயமே பரிபூரண சொச்சொரூப ஸ்திதியை விட்டு இவன், அவன், யான் என்னும் முன்னிலை படர்க்கைத்தன்மையைக் கருதிய சிந்தனையாலே மெதுவாகசீவனும் அஞ்ஞபதத்தையடைந்து சம்சாரமென்னும் எண்ணத்

அழுந்தி பாவாபாவம் பற்றுதல் விடலாம் பதத்தில் நிற்கும் = தால் சொல்லிய நானுத்துவத்தில் அழுந்தி பாவ அபாவ, வேண்டும், வேண்டாமை என்பதாகிய இப் பேதரூப பதத்தில் ஸ்திதிபெறும்.

அப்பதத்தி னின்றுபுரி யட்டகத்தை யளவிலசைவால மைக்குமமைத் திடாதா
மிப்பரிசி னின்றுரவே வடிவமான வெழுபிறவி வகைமாலை யியற்று மெங்கு
மொப்பரிய தற்பிரம சுபாவத்தாலே யுரைத்ததெலா மெழுமீண்டு மொருங்கிப்போகு
மெய்ப்படிவ மில்லாத விண்ணிற்கானல் விரிவதுபோற் சிதினினைவு விரிந்துதோன்றும். (9)

அப்பதத்தினின்று புரியட்டகத்தை அளவிலசைவால் அமைக்கும், அமைத்திடாதாம் இப்பரிசில் நின்று உரவே வடிவமான எழுவகை பிறவிமாலையை எங்கும் இயற்றும். ஒப்பரிய தற்பிரம சுபாவத்தாலே உரைத்ததெல்லாம் எழும் மீண்டும் ஒடுங்கிப்போகும், மெய்ப்படிவமில்லாத விண்ணில் கானல் விரிவதுபோல் சித்தில் நினைவு விரிந்துதோன்றும் = (சிற்சொரூப ஸ்திதியே ஜகத்ஸ்திதியாம் சித்திற்கே ஜகத்ரூபமாக அவஸ்தானத்தால் என இயம்பும்பொருட்டு முன்மொழிந்ததை அநுவதித்தல்) மேற்புகன்ற பதத்தில் திதிபெற்றிருந்து சூக்கும சரீரத்தை அனந்தவிகற்பங்களால் விதிக்கும். உண்மையில் அமைக்காதாம் (செய்யாதாம்) இவ்வண்ணம் ஸ்திரபல ஆகாரமான எழுவகை ஜன்மமாலையைச் செய்யும், உவமையில்லாத தனது பிரஹ்ம சுபாவத்தாலே கூறிய யாவுமே மீளவும் வருவனவும் போவனவும் ஆம், உண்மை வடிவமில்லாத ஆகாரமில்லாத ஆகாயத்தில் வெப்பத்தின் பின் விருஷ்டிகள் காணப்படுவதுபோல நிஷ்களங்கமான சித்து தத்துவத்தில் சிருஷ்டிரூபமான திருஷ்டிகள் வித்தாரமாகி விளங்கும்.

படர்மதத்தாற் றனைப்பிறர்போற் றோன்றுமாபோற் பகுத்தலிலா வந்தசிற்பாவந்தானே
யடர்பொய்போற் தோன்றியதாற் சத்தமாதி யைம்புலனு மேதொன்ருலறியா நின்ருய்
தொடர்கின்ற வதுவிந்த வான்மாவாகுந் தோற்றமெலாந் தானுகித்துன்னி நின்ற
விடமுடைய பரப்பிரம மிதுவேயீதிங் கிருப்பதுவும் பெயர்மலமா மிதின்வேறில்லை. (10)

படர்மதத்தால் தனைப்பிறர்போல் தோன்றுமாபோல் பகுத்தலிலா அந்த சிற்பாவந்தானே அடர் பொய்போல் தோன்றியதால், = கள்குடித்து அதனுல் மதவசத்தாய் புருடன் அன்னியமாகிய தன்னை அன்னியமாய்க் காண்பதேபோல அனன்யமாகிய அவ்வறிவு இயற்கையேயாயதான் அவித்தையினுல் நெருங்கிய

சத்தமாதி ஐம்புலனு மேதொன் ருல் அறியாநின்ருய் தொடர் கின்ற அது இந்த ஆன்மாவாகும் தோற்றமெலாந் தானுகித் துன்னிநின்ற இடமுடைய இதுவே பரப்பிரமம், ஈதுஇங்கு இருப்பதுவும் இதின்வேறு பெயர்மலமாம் இல்லை. = அசத்துவஸ்துவைப்போல் இலங்கா நிற்கும். சப்த, பரிச, ரூப, ரச, கந்தமென்னும் ஐந்து விடயங்களையும் எவ்வறிவால் நீ உணர்கின்றனையோ சர்வ திருசியங்களும் ஆரோபமாகலின் யாவற்றுள்ளும் சத்தாஸ்பூர்த்திமயமாய் அநுகூதமாயிருக்கும் அது அகமென்னும் இவ்வான்மாவாம். இவ்வான்மாவே சர்வ திருசியங்களும் ஆரோபமாகலின் சர்வான்மாவாய் சர்வத்தையும் பூரித்து நின்ற வியாபகமாகப் பொருந்திய இவ்வான்மாவே மேலான பிரஹ்மசொரூபமாம். பிரஹ்மாபின்ன ஆன்மாவே விவர்த்த ரூபத்தால் ஆகாசாதி நாமபேதத்தானே சகத்துருபமாகத் திதிபெறும் இவ்வான்மாவினும் வெதிரிக்தமாக அவித்யாதற் காரியரூபம் கிஞ்சிற்றும் இல்லை.

பொருகடலிற் றிரைமுதலாய்ப் பிறந்தவெல்லாம் புனலாகி விளங்காமற் புழுதியாமோ
வொருபொருளாம் பிரமமாத்திரமே யல்லாலுபய மெனுங் கற்பனைப்பே ரொன்றுமில்லை
யெரியிடத்திற் சூடுமாத்திரமேயல்லா லிரண்டுண்டோ வவ்வகைபோ லென்றுமொன்ருஞ்
சரியைகிரி யாயோகப் பதத்தின்முற்றிச் சாதனங்க ணிறைந்தவர்க்கே சாற்றல்வேண்டும். (11)

கடலில் பொருதிரை முதலாய்ப் பிறந்தவெல்லாம் புனலாகி விளங்காமல் புழுதியாமோ ஒருபொருளாம் பிரமமாத்திரமே யல்லாமல் உபயமெனுங் கற்பனைப்பேரொன்றுமில்லை எரியிடத்திற் சூடுமாத்திரமே யல்லால் இரண்டுண்டோ அவ் வகைபோல் என்றும் ஒன்ரும் சரியை கிரியா யோகபதத்தில் முற்றிச் சாதனங்கள் நிறைந்த வருக்கே சாற்றல்வேண்டும் = சமுத்திரத்தில் மோதும் அலைமுதலாகிய அனைத்தும் ஜலமே விளங்குகின்றதேயல்லாமல் தூஷியாமோ, அத்வைத பிரஹ்மவஸ்துவேயல்லாமல் இரண்டாவதாய கற்பனை பெயர்மாத்திரமுங் கிடையாது. அக்கினியினிடத்தில் உஷ்ணமாத்திரமேயல்லாமல் இரண்டாவதொன்றுமுளதோ அவ் வகைபோல், எப்போதும் ஒருபொருளேயுளதாம். சரியை, கிரியை, யோகம் முதலிய மூன்று பதங்களிற்பரிபாகமுடையவராய் = மூன்றுபதத்தினுங் கைவந்தவராய் சாதனங்கள் அவதிபரியந்தம் உடையவருக்கே உபதேசித்தல் வேண்டும்.

இயற்கைகுணஞ் சோதித்து முன்னேபின்னே யாவையுமாம் பிரமநீ யென்னல்வேண்டும்
வியப்புறவா சையிலுழல்வார்க் கிவவாருேதின் மீளாததீநரகில் வீழ்த்த தாகும்

தியக்குறுபோ கத்தாசைதீர்ந்து புந்திதெளிந்த மகத்தாவார்க்கே திகழத் தோன்றும்
மயக்கமறவு ணர்த்தவல்ல குருவைக்கிட்டா வருந்தியுந்தன் பிறப்பறுக்கு மகனுமாங்கே. (12)

முன்னே இயற்கைகுணஞ் சோதித்து பின்னே யாவையு மாம் பிரம்மம்நீ யென்னல் வேண்டும் வியப்புற ஆசையில் உழல்வார்க்கு இவ்வாறு ஓதில் மீளாத தீநரகில் வீழ்த்ததாகும் தியக்குறு போகத்து ஆசை தீர்ந்து புந்திதெளிந்த மகத்தா வார்க்கே திகழத் தோன்றும் மயக்கமற உணர்த்தவல்ல குரு வைக்கிட்டா. தன் பிறப்பறுக் கும் மகன் வருந்தியும் ஆங்கே =

ஆதியில் சீடனை சமதமாதி குணங்களுடையவனு விஷயப்பிரீதியுடையவனு எனப் பரீட்சித்து சமதமாதி சாதனமுடையனுயின் பின்னர் சர் வான்மக பிரஹ்மமே நீ என உபதேசித்தல்வேண் டும், பாமரன்முதல் பண்டிதன் ஈருக விஸ்மயத் தால் விஷயாசக்தி மேலிட்டு திருசிய வஸ்த்துக் களேயே பாவித்துப் பாவித்து உழலுபவர்க்கு எல்லா மாயசிவமே நீஎன உபதேசிக்கில் மீட்சி யில்லாத மகா நரகஜாலங்களில் தள்ளியதாகும், மயக்கத்தைச் செய்யும் போகங்களில் அவா ஒழிந்த புந்தி தெளியப்பெற்ற மகாத்மாக்கட்கே உபதேசித்தல் உசிதம் விளங்க வெளியாம், மோகம் ஒழிந்து ஆற்றல்மிக்க சற்குரு கிடைப் பது துர்லபம் அதுபோல தன்னுடைய ஜனன மரண சம்சாரத்தைத் தீர்த்துக்கொள்ளும் முயற்சி யுள்ள சீடனும் துர்லபமாம். (கிடைப்பதரிதாம்)

விளக்குமிர வியும்மலரு முண்டாயுண்டாம் வீசொளியும் பகற்பொழுதும் விரையும்போலத்
துளக்கமில்சித் துண்டாகி லுண்டாஞாலந் தோற்றரவு மாத்திரமே சொருபமாகுங்
கிளத்தபர மார்த்தத்தா லில்லையென்னக் கேட்டலுமே பாற்கடல்போற் கெம்பீரத்தா
லளக்கரிதாய்ச் சீதளமா யமலமாகி யற்புதமா நின்மொழியென் றண்ணல்சொல்வான். (13)

விளக்கும், இரவியும், மலரும் உண்டாய் உண்டாம் வீசு ஒளியும், பகற்பொழுதும் விரை யும்போலத் துளக்கமில் சித்து உண்டாகில் ஞாலம் உண்டாம். தோற்றரவுமாத்திரமே சொருப மாகும் கிளத்தபரமார்த்தத்தால் இல்லையென்னக் கேட்டலுமே,

தீபமும், சூரியனும், புஷ்பமும் இருக்குமாயின் உண்டாம் பிரகாசமும், பகற்காலமும், வாசனை யும் உளவாகும். அதுபோல, சலனமும் கலங்கமு மில்லாத சின்மாத்திரவஸ்து இருக்கில் பிரபஞ்சம் உளதாம் பிரதிபாசமாத்திரமே சொருபமாகும் ஆராய்ச்சியாற்றேற்றும் உண்மை ஞானத்தால்

பாற்கடல்போல் கெம்பீரத்தால் அளக்கரிதாய் சீதளமாய் அமல மாகி அற்புதமாம் நின்மொழி யென்று அண்ணல்சொல்வான் = உலகம் இல்லவே இல்லையாம் என்றருளக் கேட்ட போது க்ஷீராப்திபோல் கெம்பீரமாய் அதிசீதள மாய் நிர்மலமாகி விசித்திரமாம் தேவரீரது வாக்கியம் என்பதாக ஸ்ரீ இராகவர் கூறுவார்.

இம்மொழிக ளாலிமைப்போ திருளாமீள விமைப்போதே யொளி யாகும்
மிவ்வாருகி மைம்முகிலா லற்பமாய்வெய்யிற் சீதம்வந்து வந்துபோகின்ற மழைநாளொத்தேன்
மெய்முனியே யனந்தமாய்ப் பலவாயொன்றாய் வீயாதாய வளக்கரிதாய் விளக்கமெய்தி
செம்முறையா மாத்துமதத் துவத்துக்கிந்தச் செய்தொழில்கள் வந்தவா செப்புகென்றான். (14)

இம்மொழிகளால் இமைப்போது ஒளியாகும், இமைப்போது மீள இருளாம் இவ்வாருகி மைம் முகிலால் அற்பமாய் வெய்யில் சீதம்வந்து வந்துபோகின்ற மழைநாளொத்தேன், மெய்ம் முனியே, அனந்தமாய், பல வாய், ஒன்றாய், வீயாதாய், அளக்கரிதாய் விளக்கமெய்திச் செம்முறையாம் ஆத்தும தத்து வத்துக்கு இந்தச் செய்தொழில் கள் வந்தவா செப்புகவென்றான் = தேவரீர் உபதேசித்த இவ் வாக்கியாமிர்தங்க ளால், கணநேரத்தில் பிரகாசத் தன்மையை அடைகின்றேன். கணநேரத்தில் மீண்டும் இரு ளாம் (அந்தகாரமாம்) வியாமோகத்தை அடை கின்றேன். இங்ஙனம் இயையுற்றவனாகி கார் மேகத்தால் லேசமாய், ஆதபம், சாந்தம் தோன் றித் தோன்றி மறைகின்ற மழைகால சமான மானேன், சத்தியத்தை உணர்ந்த தபோதனரே அந்தமில்லாததாய் வியாவகாரிகத்தில் அனேக மாய் பரமார்த்தத்தில் ஏகமாய், அஸ்தமிதமற்ற தாய், அப்பிரமேயமாய், அதிபாசுரமாய், அநட்ட சத்தியையுடைத்தான பிரத்யக்கபின்ன பிரஹ் மத்துக்கு இலக்கணை விசேடங்கள் (வியாபாரங் கள்) வந்துற்றது எங்ஙனம் என்பதனை திருவாய் மலர்ந்தருளவேண்டும் என்றனர் ஸ்ரீ இராகவர்.

## அவதாரிகை

உனக்கு இவ்வியாமோகம் எமது வாக்கியதோடத்தானே வந்தது அன்றாம் மற்றேதாற்பரிய அவதானமின்மைத்தோடத்தானேயாம் எனக்காட்டி ஸ்ரீ வசிஷ்ட பகவான் ஸ்ரீ இராகவரைச் சமாதானித்தல்.

மெய்யான பொருளுடைய வாக்கியத்தின் மெய்ப்பொருளாய் முன்னொடுபின் விரோதமின்றிக்
கையாரு நெல்லியெனக் காட்டவல்ல கட்டுரையே யாமிங்கு கழறிற்றெல்லா

மெய்யான ஞானவிழி வெளியாய்ப் போதம்விரிய வுதித்தாலென்சொன் மன்னும்வித்தைக்
கையார வெளிதெளிதென் றுள்ளவாறு கலக்கமற நிலைநின்று காண்டியன்றே. (15)

யாம் இங்கு கழறிற்றெல்லாம் மெய்யான பொருளுடைய வாக்கியத்தின் மெய்ப்பொருளாய் முன்னொடுபின் விரோதமின்றி கையாரு நெல்லியெனக் காட்டவல்ல கட்டுரையே, மெய்யான ஞானவிழி வெளியாய்ப் போதம் விரியவுதித்தால் என் சொல் மன்னும் வித்தை கையார வலிது எளிது என்று உள்ள வாறு கலக்கமற நிலைநின்று காண்டியன்றே = யாம் இவ்விடத்து உனக்கு உபதேசித்த உபதேசங்கள்யாவும் உள்ளபடியேயான பொருளை= அர்த்தத்தையுடைய பதசமுதாயமான வாக்கியார்த்தமாகவுள்ள உண்மைப்பொருளே (அவிசம்வாதிப் பொருளேயாம்) பூர்வாபர விரோதமில்லாமல், கரதலாமலகம்போலக் காட்டக்கூடிய உண்மைவாக்கியமே இங்ஙனமாயின் யாதினல் அங்ஙனந் தோன்றவில்லையெனின் உண்மையான ஞானதிருஷ்டியின்மையின் தோன்றவில்லை ஞானதிருஷ்டி பிரசன்னமாய் பிரபோதம் வியாபகமாக உதயமாயின் எனது வாக்கியமென்னும் உபதேசத்தையும், உபதேசத்தைக் காரணமாகக்கொண்ட ஞானத்தையும், கையார=அபரோக்ஷமாக பிராமாண்யம் அப்பிராமாண்யம் என்று உள்ளபடி சுவஸ்தமாக அறிவாய்.

தன்னுருவ மாய்வதற்கே முயல்வதா யுத்தமமான வவித்தையினற் சகலமான
வின்னலுறு குற்றமிலா வித்தையெய்து மெய்கணைகள் கணையாலே நஞ்சைநஞ்சாற்
றுன்னுபகை பகையாலே தீதுதீதாற் றுடைப்பதுபோ லவித்தைதனைத் துடைத்தல்வேண்டு
முன்னரியுறப் பார்த்தலுமே யிதன்சுபாவ மொழிந்துபோய்த் தன்மாய்வா லுதவுமின்பம். (16)

தன்னுருவம் மாய்வதற்கே முயல்வதாய் உத்தமமான அவித்தையினற் சகலமான இன்னலுறு குற்றமிலா வித்தை யெய்தும் எய்கணைகள் கணை யாலே, நஞ்சை நஞ்சால் துன்னுபகை பகையாலே தீது தீதால் துடைப்பதுபோல் அவித்தைதனைத் துடைத்தல் கோர மூடவடிய தனது ஜீவத்துவத்தைக் கெடுப்பதற்கே பிரயத்தனமாய் பரிபக்குவமடைந்த, சாக்ஷாத்கார வித்தையும் அவித்தையின் பரிணாமமாகலின் அவித்தையினல் சர்வ துக்கந்தருந் தோஷ அபகாரிணியாய் வித்தையைப் பிருர்த்திக்கும் ஏவுகின்ற அஸ்திரம், அஸ்திரத்தாலே விடம் விடத்தினல்நெருங்கியசத்துருசத்துருவால் மலம் மலத்தினலே போக்குவதுபோல் அவித்தைதனை அவித்தையாலே போக்கவேண்டும்,

வேண்டும் உன்னியுறப் பார்த்த லுமேஇத்தன்சுபாவம் ஒழிந்துபோய் தன்மாய்வால் உத்வும் இன்பம் = ஆராய்ந்து அழுந்தி நோக்கலும் அவித்தை இயற்கை அத்தியந்தாபாவமடைந்து அவித்தை நாசத்தால் ஹர்ஷத்தைத் தருவதாம்.

நனிமெய்யாய் மாயையில தென்றிவ்வாறு நாடுவரய்ஞானியாய் ஞேயம் பெற்றுற்
றுனிசெயும் துன்பமாயை யறிதியென்றே துகளிலா நற்போதந்தோன்று மட்டும்
பனிமாயை யில்லையென வென்சொல்லாலே பழுதில்லா வறுதியுறப்பற்றி நிற்பாய்
புனிதமுறு பிரமமே யெல்லாமென்று புந்தியிற்கண்டோர் முத்திபொருந் திஞேரே. (17)

மெய்யாய் மாயை நனிஇல தென்று இவ்வாறு நாடுவாய் ஞேயம் பெற்று ஞானியாய் துனிசெயும் துன்பமாயை அறி திதுகளிலா நற்போதந் தோன்றுமட்டும் பழுதில்லா என் சொல்லாலே அறுதியுறப் பற்றி நிற்பாய் புனிதமுறு பிரமமே யெல்லாமென்று புந்தியிற் கண்டோர் முத்தி பொருந்திஞேரே = உண்மையாக மாயையானது அத்தியந்தம் இல்லையென்று இங்ஙனம் சிந்திப்பாய் ஞான முற்று அறியவேண்டியதை அறிந்து அடைய வேண்டியதை அடைந்த ஞானியாய்த் துன்பஞ் செய்யும் இந்த அவித்தையின் சுபாவத்தை நன்கு உணர்ந்து பிரதிபந்தரகித உண்மை உணர்வு உதயமாங்காறும் பனிபோல ஆவரணஞ்செய்து மூடிக்கொள்ளும் அவித்தை நாஸ்தியாம் எனத் தோஷமற்ற என் வாக்கியத்தாலே நிச்சலநிச்சய முடையவனுகுதி, பவித்திரமாய் பிரத்யக்ஷபின்ன பிரஹ்மமே சர்வமுமென்று தனது மதியில் தரிசித் தவர் மோக்ஷசொரூபமேயாவர்.

பேதமுறு புந்தியே மாயையாகும் பெரிதுவருந்தியுமிதனைப் போக்கல் வேண்டும்
போதமுறு பேற்றிஞ லன்றிமாயைப் பொருநதியின் கரைதோன்ருப் பொருந்தத்தோன்றி
லேதமறு மப்பதமே யிறவாவீடா மிம்மாயைபிறப்பிடமே தென்ன வேண்டாஞ்
சேதமுறக் கொல்வழியே தென்றுதேர்வாய் சிதைவுற்ரு லிதனியல்பு தெரியுமன்றே. (18)

பேதமுறு புந்தியே மாயை யாகும் பெரிதுவருந்தியுமிதனைப் போக்கல்வேண்டும் போதமுறு பேற்றிஞலன்றி மாயைப் பொருநதியின் கரைதோன்ரு பொருந்தத்தோன்றில் ஏதமறும் அப்பதமே இறவாவீடாம் இம் மாயை பிறப்பிடம் ஏதுவென்ன துவைத திருஷ்டியே இவ்வவித்தையாம் சர்வப் பிரயத்தனத்தாலும் இந்த மாயை நிவர்த்திக்க வேண்டும், சொரூப சாக்ஷாத்காரத்தைத் தவிர மாயையென்னுங் கோலாகலம் வாய்ந்த பேராற் றின் பாரம், (தீரம்) அடையமுடியாதாம். நன்ருக ஆன்ம ஞானம் அடையப்பெறின் குற்றமற்ற அந்தப் பதமே அக்ஷயபதமாம் (மோக்ஷமாம்) இந்த மாயையானது யாங்ஙனம் உண்டாயது

வேண்டாஞ் சேதமுறக் கொல்வதியேதென்று தேர்வாய் சிதைவுற்றால் இதனியல்பு தெரியும் = என்னும் விசாரணை உனக்கு வேண்டாம் அதனாலென்னபயன், மற்றே நாசம் அடையும்படியாக அதனைக் கொல்லும் மார்க்கம் யாதென்று விசாரணை செய்திக்ஷீணமாயவழி இதனது சுபாவம் இன்னதென எளிதில் நீயுணர்வாய்.

யாதினிற்றோன் றியதென்றும் யாதீதென்று மிறந்தநெறியாதென்று மிறந்தாற் றேன்று
மாதலினால் வன்றுயரின் சாலையான வவித்தையெனுநோய்க்கு மருந்தருந்தச் செய்தாற்
றீதுபயில் பிறப்பென்னுங் கடலின்மூழ்காய் செறிகாற்றுத் தன்னுருவாஞ் சேணிதன்னாற்
சாதமுறத் திரிவதுபோற் றன்பாற்றோன்றுஞ் சத்தியினா லாத்மதத்துவ நின்றோல்கும். (19)

ஈது யாதினில் தோன்றியதென்றும் யாது என்றும் இறந்தநெறி யாதென்றும் இறந்தால் தோன்றும் ஆதலினால் வன்துயரின் சாலையான அவித்தையெனும் நோய்க்கு மருந்து அருந்தச் செய்தால் தீதுபயில் பிறப்பென்னுங் கடலில்மூழ்காய் செறிகாற்றுத் தன்னுருவாஞ் சேணிதன்னால் சாதமுறத் திரிவதுபோல் தன்பால் தோன்றுஞ் சத்தியினால் ஆத்துமதத்துவம் நின்றோல்கும் = இந்த மாயை எதனினின்றும் உண்டாயது என்றும் எவ்வாறுயது(சொரூபம் எத்தன்மையது)என்றும், இறக்கும்மார்க்கம் யாது என்றும், நஷ்டமாயின் அகிலமும் நன்றாய்ப் புலப்படும். ஆராய்ந்து பாராமையினாலே இது விளங்குவதுபோன்றதாம். ஆராய்ச்சியினாலே இஃது இல்லவே இல்லையாம் ஆதலினால், கொடிய துக்கங்களின் இடமான அவித்தையென்னும் ரோக நிவர்த்திக்கு ஔஷதம் புசிக்கப்பண்ணில் தீமையை விளைவிக்கும் சனன மரண சம்சாரமென்னும் அம்புதியில் அழுந்தமாட்டாய், பொருந்திய வாயுவானது தனக்குக் காரணமான ஆகாயத்தில் தோன்றி உலாவுவதுபோல சுவாத்மாவினிடத்தில் பிரதீதியாகும் ஆத்மசக்தியினாலே தன்னிடத்தில்தானே போலத் தன்மையை அடையும் அஃதாவது சலிக்கும்.

நொய்யநெடுஞ் சிற்கடறன் னிடத்தேயற்ப நுடக்கத்தாற் கணம்விளங்கு நுண்மைநோக்கா
லையமறத் தற்பதமொன் றகண்டமென்றே யழுந்துவாயக்கடலி லசைந்து சற்றே
மொய்யறிவாஞ் சிற்சத்தி கணகாலத்தின் முழுதுறுசத்தியினாலு முழங்கத் தோன்றித்
துய்யவிடங் காலமொடு தொழில்கண் மூன்றுதாயுனசத்திகிடம்மைத் துணையாய்ச் சேர்க்கும். (20)

நொய்யநெடுஞ் சிற்கடறன்
னிடத்தே அற்பநுடக்கத்தால்
கணம் விளங்கும் நுண்மை
நோக்கால் ஐயமறத் தற்பதம்
ஒன்று அகண்டமென்றே
அழுந்துவாய் அக் கடலில்
சிற்சத்தி சற்றே அசைந்து
மொய்யறிவாம் கணகாலத்தில்
முழுதுறுசத்தியினுலும் முழங்கத்
தோன்றி துய்ய இடம் காலம்
ஒடு தொழில்கள் மூன்று தூயன
சத்திகள் தம்மைத் துணையாய்ச்
சேர்க்கும் =

சொச்சமாய்ச் சூக்குமமாய் விசாலமாய சித் அர்ண வம் சுவாத்மாவின்கண்ணே க்ஷணத்தில் ரூபாந் தரந் தோன்றும் சூக்குமதிருஷ்டியால் சம்சயமில் லாமல் பரமான்மபதமானது ஏகாத்மகம் என்ப தாகவே திடதரமாக உள்ளே பாவிப்பாய், அந்தச் சிற்சொரூப சமுத்திரத்தில் அவித்யாரூப சிற்சத்தி கிஞ்சிற்று கலக்கமுற்றுப் பூரணமான தனது சொரூபமாகவே விளங்கும். க்ஷணநேரத்தில் சர்வ சத்தியினுலும் ஆரவாரத்தோடு தோன்றி நிர்மல மான தேசகால கிரியை மூன்று அமலசத்திகள் தம்மைச் சககாரியாகக் கூட்டிக்கொள்ளுவள்.

தனதுசுபா வத்தையறிந் தனந்தமான தற்பதத்தி லிருந்துஞ்சிற்
சத்திதானே
யெனதுருவிவ் வளவென்றே யறிவற்ருற்போ லெண்ணுறு மிப்படியுருவை
யிதுபாவிக்கி
லனுகதமா யப்பொழுதே பெயர்களெண்ணே யாதியாம் பார்வைகள்வந்
தடையாநிற்கும்
கனவிகற்பந் தருவடிவாய்ச் சித்துருபங் கவரிடங்கா லந்தொழிற்குக்
கலந்தபற்ரும். (21)

சிற்சத்திதானே தனது சுபா
வத்தை யறிந்து அனந்தமான
தற்பதத்திலிருந்தும் அறிவற்
ருன்போல் எனதுஉரு இவ்வள
வென்று எண்ணுறும் இப்படி
உருவையிது பாவிக்கில் அநுகத
மாய் அப்பொழுதே பெயர்கள்
எண்ணேயாதியாம் பார்வைகள்
வந்தடையா நிற்கும் கனவிகற்
பந் தருவடிவாய்ச் சித்துரூபம்
கவர்இடம் காலம் தொழிலுக்குக்
கலந்தபற்ரும் =

இந்தச் சித்துருபமான தேவியே ஸ்வசொரூபத் தையறிந்து அபரிச்சின்னமான பரமபதத்தில் இருந்தும் விசாரரகிதமாய் எனது வடிவம் பரிச் சின்னம் என பாவிப்பள், இங்ஙனம் இத் தேவி பரிமிதாகாரமாகப் பாவிக்கில் தொடர்பாய் அக் கணத்திலேயே நாமசங்கை முதலான பேததிருஷ் டிகள் வந்து பொருந்தாநிற்கும் வாசனுதிடத்தால் விகற்பகற்பிதாகாரமாய் சிற்சொரூபம் பிரிவாகிய தேசம், காலம், கிரியைக்கு விரவிய ஆதாரமாம்.

ஈங்குரைசெய் சித்தினுடை யுருவந்தன்னை யாவருஞ்சேத் திரக்கியனென்
றியம்பாநிற்ப
ராங்கதுவும் வாதனையைச் செய்யாநின்றே யகங்கார பாவனையை
யடையாநிற்கும்

வாங்கருமாங் காரமுநிச் சயிப்பதாகி மலினமுறு புந்தியா மலஞ்சேர்புந்தி
வீங்கியகற் பனைவடிவாய் மனனநெஞ்சாம் விகற்பமிகு மனம்பொறியா
மெல்லவந்தே. (22)

ஈங்குஉரை செய்சித்தினுடை யுருவந்தன்னை யாவருஞ் சேத் திரக்கியன் என்று இயம்பா நிற்பர் ஆங்கதுவும் வாதனை யைச்செய்யாநின்றே அகங்கார பாவனையை அடையாநிற்கும் வாங்கரும் ஆங்காரமும் நிச்ச யிப்பதாகி மலினமுறுபுந்தியாம் மலஞ்சேர்புந்தி வீங்கியகற்பனை வடிவாய் மனனநெஞ்சாம் விகற்ப மிகுமனம் மெல்லவந்து பொறியாம் = இவ்விடத்து மேலே கூறிய சிற்சத்தி விசிஷ்ட ஜீவனை யாவரும் சேத்திரஞ்ஞன் சரீரத்தை க்ஷேத்திரமென்பர் அதன் உள்ளும் புறம்பும் அறி தலினுல் சேத்திரஞ்ஞன் என்று கூறுவர் அந்த க்ஷேத்திரஞ்ஞனும் சம்சார பாவனையை அபி விருத்திசெய்து அகங்காரத்தன்மையை அடையா நிற்கும் கெடுதற்கரிய அல்லது கொல்லுதற்கரிய அவ் வகந்தையும் நிச்சயமுடையதான களங்கம் பொருந்திய புத்தியாம் களங்கம் நிறைந்த புந்தி யும் அனேக கற்பனைவ்டிவாய் மனன ஆஸ்பத மாம். விகற்பம் மிகுந்த அம் மனம் பையப் பைய வந்து இந்திரியமாம்.

கரசரண மயவுடலைம் பொறிகளென்பர் கவல்வுறவிப் படியன்றோ
கலந்துசீவன்
விரவியசங் கற்பமெனும் பாசத்தாலே வீக்குண்டு துன்பவலை வீசப்பட்டுத்
தரமறவீ னதையடைவே யடையாநிற்குஞ் சத்திமய மாமனமித்
தன்மையாகிப்
பொரவகங் காரதைமேவிக் கோசகாரப்புழுப் போற்றன் னிச்சையினுற்
பூணும்பந்தம். (23)

கரசரணமய உடல் ஐம்பொறிக ளென்பர் கவல்வுற இப்படி யன்றோ கலந்துசீவன் விரவிய சங்கற்பமெனும் பாசத்தாலே வீக்குண்டு துன்பவலை வீசப் பட்டுத் தரமற ஈனதையடைவே அடையாநிற்கும் சத்திமயமாம் மனம் இத்தன்மையாகி பொர அகங்காரத்தைமேவி கோசகாரப் புழுப்போல் தன் இச்சையினுல் பந்தம்பூணும் = மேற்கூறிய இந்திரியங்கள் அதாவது பாணி பாதாதி இவன் தூலதேகமென்பர், இங்ஙனம் ஜீவன்ருனே கலந்த தாதான்மியமாக விரவிப் பிறக்கின்றது இருக்கின்றது என விவகரித்து வாழ்கின்றது, சங்கற்ப வாசனு இரச்சுவினுல் கட்டுப்பட்டவனுய்த் துக்கஜாலம் பரப்பப்பட்டு உயர்வு இழிவைக் கிரமமாக அடையாநிற்கும். இராகத்துவேஷாதி சக்திமயமான சித்தம் இப் பான்மையைப் பொருந்தி வருத்தாநின்ற அகங் காரத் தன்மையை அடைந்து கோசகாரக் கிருமி போல் ஆசையினுல் கட்டினையடையும்.

தானேசங் கற்பித்துத் தன்மாத்திரத்தாற் றனிவலையாமுட் டொழில்க
டன்னைக்கட்ட
கானேறு சிங்கம்விலங் குற்றதென்னக் கவலையினுன் மிகவுமனங்
கரைந்துசோரு

மானுத மனம்புந்தி ஞானஞ்செய்கை யகங்கரம்வா தனையுடலம்
பகுதிமாயை
யூனுன மலங்கருமம் பந்தஞ்சித்த மோதவித்தை யிச்சையென
வுரைப்பரன்றே. (24)

கானேறு சிங்கம் விலங்குற்ற தென்ன தானே சங்கற்பித்து தன்மாத்திரத்தால் தனிவலையாம் உள்தொழில்கள் தன்னைக்கட்ட கவலையினுல் மானுதமனம். புந்தி, ஞானம், செய்கை, அகங்காரம், வாதனை, உடலம், பகுதிமாயை, ஊனுன மலங்கருமம், பந்தம், ஓதுஅவித்தை இச்சையென உரைப்பர் = காட்டில் திரியுஞ் சிங்கம் சங்கிலியினுல் கட்டுப் பட்டதெனச் சுயமே சங்கற்பித்துச் சப்தாதி விஷயங்களில் வேட்கையுறும் ஒப்பற்றஜாலமாம் ஆந்தர இராகாதிகள் ஜீவனுகிய தன்னையகப் படுத்த மிகக்கிலேசத்தால் மிகவும் உருகி அயரும், விசாரத்தாலன்றிக் கெடாத மனம், புத்தி, ஞானம், கிரியை, அகங்காரம், சூக்குமசரீரம் (புரியட்டகம்) பிரகிருதி, மாயை, குற்றமாகவுள்ள மலம், கருமம், பந்தம், சித்தம், சொல்லாநின்ற அவித்தை, ஆசை இத்யாதிகளாக விவகரிக்கப் படும் எனக் கூறுவர்.

அப்பரிசோ ரோரிடத்தி லோரொன்ருக வாசாபாசத்தினு லமைத்துச் சொன்ன
வொப்பரிய சகவிரிவா மிவற்றையெல்லா முட்கொள்ளும் பலமிதனி
லொன்றுமில்லை
கப்புடைய நெடுவடத்தை வடத்தின்வித்துக் கரந்திருப்பதொக்குமிடர்க்
கவலைத் தீயின்
வெப்பமிகக் கோபப்பாம் பெடுத்துநுங்க வேட்கையெனுங் கடற்றிரையான்
மெலியு முள்ளம். (25)

ஓரிடத்தில் ஒரொன்ருக அப் பரிசு ஆசாபாசத்தினுல் அமைத் துச்சொன்ன ஒப்பரிய சகவிரி வாம் இவற்றையெல்லாம் உட்கொள்ளும் இதனில் பலம் ஒன்றுமில்லை, கப்புடைய நெடு வடத்தை வடத்தின்பீஜம் வித்துக்கரந்திருப்பதொக்கும், இடர்க்கவலைத்தீயின் வெப்பமிக கோபப்பாம்பு எடுத்துநுங்க வேட்கையெனுங் கடற்றிரை யால் உள்ளம் மெலியும் = நானுசக்தி யுக்தமான சைதன்னியமே மனேபுத் தீயாதிரூபத்தால் நானுத்தன்மையை அடைகின் றது ஆனதால், ஒவ்வொருதானத்தில் ஒவ்வொரு நாமமாதியாய் சுருதிகூறிய வகையாக இச்சையி னுல் கற்பித்துக்கூறச் சமானமின்றிய பிரபஞ்ச விஸ்தாரமாய்ப் பிரபஞ்சமய இந்தச் சம்சாரத்தை ஆந்தரத்தில் தரித்திருப்பதாம் இதனுல் கிஞ்சிற் றும் பயன் இலதாம், கிளைகளையுடைய விஸ்தார மாய் விரிந்த ஆலவிருக்ஷத்தை ஆலவிருக்ஷத்தின் பீஜம் அடக்கிக்கொண்டிருப்பதற்குச்சமானமாம், சிந்தனையாம் அக்கினிச் சிகையினுல் தகிக்கப் பெற்றுக் கோபமாகிய அஜகரம் விழுங்கப்பட்டு ஆசையென்னும் கடல் தரங்கங்களால் அடிபட்டு மனமானது வாடும்.

பெருகியவித் துயர்களா லவசமாய்த் தன்பிதாமகனைமறந்து மிகப்பீடை யுற்றுக்
கருகியவிம் மனந்தன்னை யளற்றிலானைக் கரையேற்றிவிடுவதுபோற் கரையி லேற்ருய்
வெருவுசரா மரணமெனும் விடத்தால்வெந்து மிகுநலந்தீங்கெனும்பகையான் மெலியு நெஞ்சுக்
கருள்புரியா நரர்மனித வடிவமான வரக்கரே யருள்வடிவமான் வள்ளால். (26)

அருள்வடிவமான வள்ளால் பெருகிய இத்துயர்களால் அவசமாய் தன் பிதாமகனை மறந்து மிகப் பீடையுற்றுக் கருகிய இம் மனந்தன்னை அளற்றில் ஆனைக்கரையேற்றி விடுவதுபோல் கரையிலேற்ருய், வெருவுசராமரணமெனும் விடத்தால் வெந்து மிகுநலந் தீங்கெனும் பகையால் மெலியு நெஞ்சுக்கு அருள்புரியா நரர் மனித வடிவமான் அரக்கரே =

கிருபையே சொரூபமாகிய தலை வள்ளலாகிய இராகவனே விஷய ஆசையால் மிகுந்த இத் துன்பங்களால் பரவசமாய், ஆன்மா அபின்ன பிரஹ்மப்பிதாமகனை அத்தியந்தம் மறந்துபெரும் பெருந் துன்பங்களையடைந்து தரிக்கப்பெற்றுக் கருகிய இம்மனந்தன்னைச்சேற்றில்அழுந்திய எருதைக் கரையில் ஏற்றிவிடுவதுபோல் நன்கு உத்தாரம் புரிவாய், அஞ்சத்தக்க சனன மரண சம்சாரமென்னும் விஷாதமூர்ச்சிதமாகி விஸ்தரித்து வரும் சுபாசுபங்களாகிய சத்துருக்களானே திரஸ்கரிக்கப்பட்டு வாடும் மனத்திற்குத் தயை அஃதாவது உத்தாரணஞ் செய்யும் இச்சையில்லாத மனிதர் நர ஆகிருதியான இராக்ஷசரேயாவர்.

இவ்வகையே சிற்பாவ சீவபேத மியல்வடிவாம் பிரமத்தினிடையே நின்று
வவ்வியபா வனையாலே வந்தகோடி வாராநின்றனகோடி வருவ கோடி
தெய்வவரை யருவிநீர்த் துளிபோல்வந்தோர் சிலர்பிறவியொன்றிரண்டு மூன்று சேர்ந்தோர்
நைவருசென் மங்கள்சிலர் நூற்றின்மிக்கோர் நாடரியபவஞ்சிலர்க ணண்ணி நின்ருேர். (27)

இயல்வடிவாம் பிரம்மத்தினிடையே நின்று இவ்வகையே சிற்பாவ சீவபேதம் வவ்விய பாவனையாலே வந்த கோடி வாரா நின்றன கோடி வருவ கோடி தெய்வ வரையருவிநீர்த் துளிபோல் வந்தோர், சிலர் பிறவி யொன்றிரண்டு, மூன்று சேர்ந்தோர் நைவருசென்மங்கள் சிலர் நூற்றின் மிக்கோர் சிலர்கள் நாடரிய பவம் நண்ணி நின்ருேர் =

சுபாவமாம் மாயா விசிஷ்டபிரஹ்ம சொரூபத்தினின்றும் இங்ஙனம் உபாதிவிவர்த்த அறிவின் வடிவ ஜீவர்கள் கவர்ந்த பவ (ஜன்ம) பாவனையினுலே வந்தவர்கள் கோடிக்கணக்கானவர்கள் உண்டானுர்கள், இப்போதும் கோடிக்கணக்கானவர் உண்டாகிக்கொண்டேயிருக்கின்ருர்கள், இனிமேலும் கோடிக்கணக்கானவர்கள் உண்டாவார்கள். இவர்களுள் தத்தம் வாசனுவசத்தானே சிலர் ஜன்மம் ஒன்று, இரண்டு, மூன்று எடுத்தவர் ஆவார்கள், துன்புறுத்தும் பிறவிகள் எடுத்த சில பாவிகள் எண்ணிக்கையில்லாத ஜன்மங்களை எடுத்தவராவார்கள்.

சிலர்சிலர்கள் கின்னரர்கந் திருவரானேர் சிலர்விச்சா தரருரகர்திரளாய் நின்றோர்
சிலர்ருக்க ரிமகிரணன் வருணனுனேர் சிலர்பிரமன்றிருநெடுமால் சிவனுய் நின்றோர்
சிலர்மறையோர் சிலரரசராகி நின்றோர் சிலர்வணிகர் வேளாண்மைச் செயலினின்றோர்
சிலர்விலங்கு பறவைகளூர் வனவாய்வந்தோர். சிலரிலைகாய்பழ மூலந்திரண மானேர். (28)

சிலர் சிலர்கள் கின்னரர் கந் திருவரானேர் சிலர் விச்சாதரர் உரகர் திரளாய் நின்றோர் சிலர் அருக்கர் இமகிரணன் வருண னுனேர் சிலர் பிரமன் திருநெடுமால் சிவனுய் நின்றோர் சிலர் மறையோர் சிலர் அரசராகி நின்றோர் சிலர் வணிகர் வேளாண்மை செயலில் நின் றோர் சிலர் விலங்கு பறவைகள் ஊர்வனவாய் வந்தோர் சிலர் இலை காய் பழம்மூலம் திரண மானேர் =

சிற்சிலர் வாசனுநுசாரம் கின்னரர் கந்தர்வர் ஆயினர்கள் சிலர் வித்யாதரர் ஆயினர்கள் ஆதி சேஷன் முதலிய சர்ப்பாதிகளாய் ஆயினர்கள் சிலர் சூரியர் சந்திரன் வருணன் ஆதிய தேவர் களாய் ஆயினர்கள் சிலர் புண்ணியர் அயன், அரி, ருத்திரன் ஆனர்கள் அநேகர் பிராமணர் சிலர் மன்னவர்ஆகி வாழ்ந்தனர் அநேகர் வைசி யர்ஆகி கிருஷிவாணிஜ்யம் கோபாலனுதிசெய்து வாழ்ந்தனர் அநேகர் சூத்திரர்கணங்களாய் மூவருணத்தினருக்கும் தொண்டுபுரிவாராயினர் சிலர் மிருகபக்ஷிகளாய்த் தேள் முதலிய ஊர்வன வாயும் நீர்வாழ்வன மச்சாதிகளாயும் ஆயினர் கள் சிலர் பர்ணம் பழம் காய் கிழங்கு புல்லாதிகள் ஆயினர்கள்.

சிலர்மயேந் திரசைலஞ் சையமேரு தென்மலய மந்தரமாய்ச் சிறந்துநின்றோர்
சிலர்கடம்பஞ் செம்பீரந் தாலஞ்சாலஞ் சிறந்த தமாலங்களாய்ச் செறிந்துநின்றோர்
சிலருவரி தயிர்நெய்பாற் கருப்பஞ்சாறு தேனெடுநீர் பெருங்கடலாய்ச் சேர்ந்துநின்றோர்
சிலர்திசைகள் சிலர்நதிக ளாகிநின்றோர் சிலர்மேலோர் சிலர்கீழோர் சீவரானேர். (29)

சிலர் மயேந்திர சைலம் சைய மேரு தென்மலயம் மந்தரமாய்ச் சிறந்துநின்றோர் சிலர் கடம்பம் செம்பீரம், தாலம், சாலம் சிறந்த தமாலங்களாய்ச் செறிந்துநின் றோர் சிலர் உவரி, தயிர், நெய், பால், கருப்பஞ்சாறு, தேனெடு நீர் பெருங்கடலாய்ச் சேர்ந்து நின்றோர் சிலர் திசைகள் சிலர்

சிற்சிலர் மயேந்திரசைலம் சஹ்யபர்வதம் பொதியமலை மகேந்திரபர்வதம் ஆகவிசேடம் பெற்றுவாழ்வர் சிலர் கதம்பவிருக்ஷம், எலுமிச் சைமரம், பனைமரம், ஆச்சாமரம், கருங்காலி இவைகளாய் விசேடம்பெற்று வாழ்வார்கள் சிலர் உப்புக்கடல், தயிர்க்கடல், நெய்க்கடல், பாற் கடல், கருப்பஞ்சாற்றுக்கடல், தேன்கடல், சுத் தோதகக்கடல் இன்னும் பெரும்புறக்கடல் இவை களாய் வாழ்வர் சிலர் திசைகள் சிலர் ஆறுகள்

நதிகளாகி நின்றோர் சிலர் மேலோர் சிலர் கீழோர் சீவராஞேர் = இவைகளாகி வாழ்வார்கள், சிலர் ஜீவன்முத்தர் சிலர் சமாதிகைவந்தவர்ஆகி வாழ்வர், சிலரோ சண்டாளர் ஆகி வாழ்வர், மாணிக்கவாசகர் திருவாசகம் (புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகி).

கையினு லறையுண்ணும் பந்துபோலக் காலனு லறையுண்டு கணக்கிலாத
மெய்யிலே புகுந்தலுத்து விவேகம்பெற்றும் விரகிலார் சிலர்பிறப்பின் மீண்டும்வீழ்ந்தார்
மையினுன் மூன்றுலகாம் பணதிசெய்து வருநிற்கும் போமாகி வளர்ந்துவாளாப்
பொய்யினுன் மிகவிரியும் வேலையூடே பொருதிரைபோற் பரபதத்தே புரிந்தமாயை. (30)

கையினுல் அறையுண்ணும் பந்துபோலக் காலனுல் அறையுண்டு கணக்கிலாத மெய்யிலே புகுந்து அலுத்து விவேகம்பெற்றும் விரகிலார் சிலர் பிறப்பில் மீண்டும் வீழ்ந்தார், வளர்ந்து வாளா புரிந்த மாயை பொய்யினுல்மிக விரியும் வேலையூடே பொருதிரைபோல் பரபதத்தே மையினுல் மூன்றுலகாம் பணதி செய்துவரும் நிற்கும் போமாகி = கரத்தினுல் அடிபட்டு மேலும் கீழும் உழலும் பந்துபோல, ஜீவர் மேலுங் கீழுமா யோனி பேதத்தையுற்றுத் துன்புறுந்தன்மையைக் கூறி மாமாயையின் செயல் உரைத்தல்) பிராணியினுல் அறையுண்ணும் பந்துபோல (மேலுங்கீழும் உழலும் பந்துபோல) யமனுலே அடிக்கடி அதம் பண்ணப்பட்டு அளவில்லாமல் காயத்தினின்றும் காயத்தை அடைவார்கள். கடைத்தேறும்படியான விவேகத்தைப் பெற்றும், பகுத்தறிவுபெற்றும் சாமர்த்தியமாய் முயற்சிசெய்யாதவர் சம்சார சங்கடத்தில் திரும்பித் திரும்பி மூழ்கி வருந்தினர் வீணுக மயல்செய்யும் மாயை தமோகுணப்பிரதானத்தால் சொர்க்கமத்திய பாதாளமென்னு மூன்றுலகங்களாகிய ஆபரணத்தை உற்பத்தி திதி லயத்தை யடையச்செய்து மித்தையினுல் மிக விஸ்தாரமாயுள்ள சமுத்திரத்தில் மோதும் அலைபோல் பிரஹ்மத்தில் விவர்த்தரூபத்தால் தோன்றித் திதிபெற்று நாசத்தை அடையச்செய்யும்.

தெரிந்துணர்ந்தோ னிவ்வாறு செப்பலோடுஞ் சீவன்ருன் மனப்பகுத்தைச் சேர்ந்துநின்றும்
விரிஞ்சனென்னும்பெயர் பெற்றதெவ் வாறென்று வித்தர்த்தா ளுள்ளபடி விளம்புகென்னு
வரிந்தமன்கேட் டலும்வசிட்ட னுரைப்பான் வள்ளாலந்தநெறி கேட்டலுமே யகிலஞானம்
புரிந்தநெறி யறிதியிதன் றன்மையெல்லாம் புந்தியுறக் கேட்டுணர்வு பொருந்துவாயே. (31)

தெரிந்துணர்ந்தோன் இவ்வாறு செப்பலோடுஞ் சீவன்ருன் மனப் பதத்தைச் சேர்ந்துநின்றும் விரிஞ்சனென்னும் பெயர்பெற்றது எவ்வாறு என்று வித்தரத்தால் உள்ளபடி விளம்புகென்று விரிந் தமன்கேட்டலும் வசிட்டனுரைப் பான் வள்ளால் அந்தநெறி கேட் டலுமே அகிலஞாலம் புரிந்து நெறி அறிதி இதன் தன்மை யெல்லாம் புத்தியுறக் கேட்டு உணர்வு பொருந்துவாயே = அறியவேண்டியதை அறிந்த ஸ்ரீ வசிஷ்டபக வான் மனோமாத்திரம் உலகமெனவும் சங்கற்பமே சதுர்முகனெனவும் அருளிச்செய்ய ஜீவன் மனப் பதத்தை (மனத்திதியை) அடைந்திருந்தும் பிரம் மாவென்னும் நாமமடைந்தது எங்ஙனம் என்ப தாக விரிவாய்த் தெரிந்துகொள்ள உள்ளபடி அருள்செய்தல் வேண்டும் என்று சத்துருக்கனைத் தொம்சஞ்செய்யும் ஸ்ரீ இராகவர் கேட்டலும் ஸ்ரீ வசிஷ்டபகவான் அருளுவதாவது, தாதாவா யுள்ள ஹே ராமா! அந்த மார்க்கத்தைச் சிரவ ணித்தலுமே சர்வஜகத்தும் ஸ்திதியாகியிருக்குந் தன்மையை அறிவாய் பிரம்மா சம்பந்தியாய சரீரக் கிரகணத்தின் முறையைப் புத்தி தெளியும் படி அறிந்துகொள்வாய்.

திசைகால மாதிகளாற் றன்னுடைய சத்தியினுற் றிரியாச் சீவன்
பசையான லீலையினுற் றிசைகால மாதிகளாற் பயின்ற மேனி
யிசையாநின் றுளபோதே சீவனுக்குப் பரியாய மென்னப் பட்ட
வசையான வாதனையின் வசத்தாலே யுலையுமனம் வந்துதோன்றும். (32)

திசைகாலமாதிகளால் திரியச் சீவன் தன்னுடைய சத்தியினால் பசையான லீலையினால் திசை காலமாதிகளாற் பயின்ற மேனி இசையா நின்றுளபோதே சீவ னுக்குப் பரியாயமென்னப்பட்ட வசையான வாதனையின் வசத் தாலே உலையுமனம் வந்து தோன்றும் = தேசகாலமாதிகளால் வரம்புபடா அனவச்சின்ன ஆத்மா சுவசக்தியாகிற ஏதுவினால் ஆசையாகிற லீலையினால் திக்குகாலாதி சகிதமான எத்தே கத்தை எப்போது தாங்குமோ அப்போதே ஜீவ சப்தபரியாய வாச்சியமாம் அந்த ஜீவனது நிந் திதமான வாசனை வசத்தாலே கேவலம் லோலா மயமானமனம் புலப்படத்தோன்றுநிற்கும்.

செயல்செயலின் மைகளிரண்டுஞ் சேர்ந்தெழுந்த மனச்சத்தி செயலை மேவி
யியல்பின்முத னொய்தாகிச் சத்தவித்தை யிரதத்தி லெழுவ தான
வுயர்தருவின் பாவனையைப் பாவிக்குங் கணத்திலே யுடனே யந்த
வியனிலையின் றன்னெறியா லந்தமனங் கனதையினை மேவு மன்றே. (33)

செயல் செயலின்மைகள் இரண் டும் சேர்ந்தெழுந்த மனச்சத்தி செயலைமேவி இயல்பில் முதல் = தொழில்,தொழிலிலாமைகள்இரண்டுங்கூடிஉண் டான மனஆற்றலானது சங்கற்ப வியாபாரத் தோடு சேர்ந்து இயல்பாகப் பிரதமத்தில் சொச்ச

நொய்தாகி சத்தவிதை இரதத்தில் எழுவதான உயர்தருவிண் பாவனையை கணத்திலே பாவிக்கும் உடனே அந்தவியன் அலைவின் தன்னெறியால் அந்த மனம் கனதையினை மேவும் = மாய் சப்ததன்மாத்திரையான சூக்கும ஆகாயத்தைப்பாவித்து அப்பாவனையினின்றும் எழுவதாய வியாபகமாய்த் தூல ஆகாயத்தைப் பாவித்து க்ஷணத்தில் தூல ஆகாயபோதம் உண்டாம். மிகுந்த சலனமார்க்கத்தால் அந்த மனம் தூலத் தன்மையைப் பொருந்தும்.

பரிசவிதை யிரதத்தி லெழுவதாங் காற்றசைவைப் பாவித் துன்னும்
விரிதருவின் காற்றிரண்டின் மெய்ந்நெருக்கிலே நின்றும் வெந்தீத் தோன்றி
யிருதிறச்சத் தப்பரிசந் திடமாகப் பழக்கமுறு மியல்பி னாலே
யுருவதன்மாத் திரைமேவு மிம்மூன்றி னுடன்மேவு முள்ளந் தானே. (34)

பரிசவிதையிரதத்தில்எழுவதாங் காற்றசைவைப் பாவித்துன்னும் விரிதருவின் காற்று இரண்டின் மெய்ந்நெருங்கிலே நின்றும் இருதிறச் சத்தப்பரிசம் திடமாகப் பழக்கமுறும் இயல்பினாலே உருவதன்மாத்திரையை மேவும் வெந்தீத் தோன்றி இம்மூன்றினுடன் மேவும் உள்ளந்தானே = சூக்குமமான பரிசதன்மாத்திரையைப் பாவிக்கும் பாவித்து ஆகாச விசிஷ்ட சேதனத்தினின்றும் உண்டாவதாய வாயு, தூலவாயுவைப் பாவித்துத் தூலவாயு போதம் உண்டாம். வியாபக ஆகாச வாயு இரண்டின் விசிஷ்டசேதனத்தினின்றும் இருவிதமான சத்தப்பரிசம் திடமாகிய சுபாவத்தாலே உஷ்ணமுடைய ரூபதன்மாத்திரையை (சூக்குமதன்மாத்திரையைப்)பாவிக்கும் பாவித்து சூக்குமரூபதன்மாத்திரையாகும். அவ்வக்கினி தூல அக்கினியைப் பாவித்துத் தூல அக்கினி போதம் உண்டாம்.

கணத்திலிர தத்தியல்பைப் பாவிக்க நீரறிவுக் கருத்தி லுண்டாங்
குணத்தினையத் திறங்களொடுங் கூடுமனங் கணத்திலே குறித்து நாடி
மணத்தினைப்பா வித்தலுந்தன் மாத்திரத்தாற் பாரறிவு வருமிவ் வாறே
தணத்தபூதத் தன்மாத்திரம் வளைத்துவளைத்து ருவாய்ச் சகமாய்த் தோன்றும். (35)

கணத்திலிரதத்தியல்பைப் பாவிக்க நீர் அறிவு கருத்தில் உண்டாம் குணத்தினை அத்திறங்களொடுங் கூடும் மனம் கணத்திலே குறித்து நாடி மணத்தினைப் பாவித்தலுந் தன்மாத்திரத்தால் பார் அறிவு வரும் இவ்வாறே தணத்தபூதத் தன்மாத்திரம் வளைத்துவளைத் = க்ஷணத்தில் சப்த-பரிச-ரூப, விசிஷ்ட சேதனத்தினின்றும் உண்டாவதாய ரசதன்மாத்திரை = சூக்கும அப் பூதத்தைப் பாவிக்க சூக்கும ரசம் உண்டாம் (ரசதன்மாத்திரையான அப் பூதம் மனத்தில் உண்டாம்) தூல அப்பூதத்தைப் பாவிக்கத் தூல அப்பு போதம் உண்டாம் மேலே சொல்லிய குணங்களோடு கூடிய மனம் கந்தகுணத்தினைக் கணத்திலே குறித்து நாடி (சப்த-பரிச-ரூப ரச விசிஷ்டசேதனத்தினின்றும் உண்டாம் கந்த

துருவ்ரய்ச் சகமாய்த் தோன்றும் = தன்மாத்திரையைப் பாவித்தலும் சூக்கும கந்த குணம் உண்டாம்) சூக்கும பிருதுவி பூதம் உண்டாம், சம்பந்தமுற்ற பிருதுவிபோதம் உண்டாய் தூல பிருதுவி பூதத்தைப் பாவிக்க, தூலபிருதுவி போதம் உண்டாம். இவ்வாறே தன்மாத்திரா பூதம் ஐந்தும் சூழ்ந்து, சுற்றிச்சுற்றிச் சேர்ந்தத னே பிரபஞ்சப்பிரதீதியாம் தமோகுண சூக்கும பூதங்கள் பஞ்சீகரணஞ்செய்யப்பட்டுத் தூலபூதங் களாய்ப் பிரதீயாம்.

திகழ்ந்தவன்ற் பொறியென்னத் திகழ்வடிவை விண்ணிலே தெரியக் காணு
மகங்கரமாந் தொழில்மேவிப் புந்தியுடன் விதையோடு மணுகி யந்தப்
புகன்றதெலாஞ் சேர்ந்துபுரி யட்டகமா யுயிர்களுளப் பூவில் வண்டா
மிகுந்தகடுங் கூட்டரவாற் பாவிக்குமிக விளங்கு மேனி தன்னை. (36)

விண்ணிலே திகழ்ந்த அனல் பொறியென்ன திகழ்வடிவை தெரியக்காணும் அகங்கரமாந் தொழில்மேவி புந்தியுடன் விதை ஓடும் அணுகி அந்தப் புகன்ற தெலாஞ் சேர்ந்து புரியட்டக மாய் உயிர்கள் உளப்பூவில் வண்டாம் மிகுந்த கடுங்கூட்டர வால் மிகவிளங்கும் மேனிதன்னைப் பாவிக்கும் = ஆகாயத்திலே விளங்காநின்ற அக்கினியின் கணு காரமென விளாங்காநின்ற இலிங்கசரீர ஆகிருதியைப்பாவிக்கும் அகங்கார அம்சங்களென்னும் (ஏகாதச) பதினொரு இந்திரியங்களோடும் (ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரியபஞ்சகம், வாயுபஞ்சகம், அந்தக்கரண பஞ்சகம், பூதபஞ் சகம்) ஆக ஐந்து பூதங்கள் (புந்தியுடன்) காமமும் (விதை) அவித்தையும், (ஓடு) கர்மமும் ஆகிய இவைகளாகப் பொருந்திக்கூறிய யாவுஞ் சேர்ந்து புரியட்டக தேகமென்று சொல்லப்படும். இவை ஜீவர்களின் இருதய தாமரையிலிருக்கும் வண்டாம். தீவிர வாசனுவேகத்தால் பஞ்சீகரணஞ்செய்து தூலபூதம் உண்டாய்ப் பாசுரமாகாநின்ற, சட்பாவ விகாரவடிவ தூலதேகத்தைப் பாவிக்கும்.

பாவனை முற்றிடத் தூலமேனியாய் வில்வத்தின் பழம்போற் சித்த
மேவுகருவிற் பாய்ந்தபொன் னிறம்போன் மிகவிளங்கி விமல விண்ணிற்
ருவரமுண் டாய்நிற்கு மந்தவொளி தன்னுடைய சுபாவந் தன்னுற்
றேவலமேற் றலைகீழ்காற் பக்கங்கை நடுவயிருக் கிளந்தோ றுதும். (37)

பாவனை முற்றிடத் தூலமேனி யாய் வில்வத்தின் பழம்போல, சித்தம் மேவு கருவிற்பாய்ந்த = பாவனையானது முதிர்ந்தபோது பரிபாகவசத்தினல் தூல்சரீரமாய்க் கூவிளங்கனிபோல ஆகிருதியுறும் பின்சித்தமானது விக்கிராதிகள் செய்ய

பொன்நிறம் போல் அந்த ஒளி தன்னுடைய சுபாவந்தன்ஞல் தாவரம் உண்டாய் நிற்கும் கேவலம்மேல் தலை கீழ் கால் பக்கங்கை நடுவயிருக் கிளர்ந் தோனுகும் = சாதகமாய்ப் பொருந்திநிற்கும் மூசையில்பாய்ந்த சொர்ணநிறம் பொலிவதுபோல, விமலமாம்பரத்தில் விளங்குவதுமான அந்தப் புரியட்டகவடிவ தேஜசு தன்னுடைய சுபாவத்திலேயே தூல ஆகிருதியாய்ச் சந்நிவேசத்தையடையாநிற்கும் (தாவரம் உண்டாய் திதிபெறும்) கேவலம் மேலே சிரம், கீழே பாதம், பக்கங்களில் பாணிகள் மத்தியில் வயிருகவும் உடையவனுக விளங்குவன்.

முந்தியகா லத்தினுல்வெளி யாகி நின்மலமா மூர்த்தி யாகிப்
புந்தியொடு சத்துவமொய்ம் புற்சாகம் விஞ்ஞானம் பொறியு மேவு
மந்தவவ னேயகில பிதாமகனுய் முழுதுணர்ந்த வயனு மன்னுன்
சுந்தரமா யுத்தமமாய்த் திகழ்கின்ற தன்வடிவைத் தோன்ற நோக்கி. (38)

முந்தியகாலத்தினுல் வெளியாகி நின்மலமாமூர்த்தியாகிப் புந்தியொடு சத்துவம் மொய்ம்பு உற்சாகம் விஞ்ஞானம் பொறியும் மேவும் அந்த அவனே அகில பிதாமகனுய் முழுதுணர்ந்த அயனும் அன்னுன் சுந்தரமாய் உத்தமமாய்த் திகழ்கின்றதன்வடிவைத் தோன்ற நோக்கி = முற்சொல்லிய பரிபக்குவகாலத்தினுல் ஸ்புடத்தையடைந்து அமலவிக்கிரகனுகி மதி, ஞானம், சத்துவம், சரீரபலம், பிரயத்தனம், விஞ்ஞானம், ஆன்மஞானம் அணிமாதி ஐஸ்வரியமும் ஆம் = அவற்றில் பிரதிஷ்டிதன் ஆம், அந்தப் பிரம தேவன், காந்தியாய் உத்தமோத்தமமானதன் திருமேனியை ஊன்றிப்பார்த்துச் சிந்திப்பானுயினுன்.

குன்ருத வறுகுணத்தோன் மூன்றுகாலமும் வெளியாக் குறிக்கும் வேதா
வொன்ருகிச் சின்மயமே யுருவமாய்க் கரைகாணு வுயர்வா னத்தின்
முன்ருனுண் டாகியதென் னெனநினைந்தா னழுக்கிலா முழுஞா னக்கண்
ணன்ருவப் போதுதித்தோன் பலகோடி சிருட்டிமுத னடத்தக் கண்டான். (39)

குன்ருத அறுகுணத்தோன் மூன்றுகாலமும் வெளியாக்குறிக்கும்வேதா ஒன்ருகிச் சின்மயமே யுருவமாய் கரைகாணு உயர் வானத்தில் முன்தான் உண்டாகியது என், நினைந்தான் அழுக்கிலாமுழு ஞானக்கண் நன்ரும் = ஸ்ரீ தருமம், ஞானம், வைராக்கியம், சக்திபலம், கீர்த்தி, ஆறும் பகம் இதனையுடையவன் பகவான். பகவானுகிய பிரம்மா பூத, பௌஷிய வர்த்தமான திரிகாலங்களையும் நன்ருகப்பார்த்து, ஏகமாய்ச் சிற்கனமாய் அபாரமான பரம ஆகாசத்தில் பிரதமந்தான் ஜனித்தது யாது என எண்ணினுன், யாதொரு தோஷமில்லாத சத்யோ

அப்போது உதித்தோன் பல் கோடி சிருட்டிமுதல் நடத்தக் கண்டான் = ஜாதனுன அப் பிரமதேவன் அனேகசர்க்கஙள் சென்றனவாய சிருஷ்டி சமுதாயங்களைக் கண்டனன்.

சாதிகுலந் தருமமெலா முணர்ந்தவற்றை லீலையினுற் ருன்கற் பித்தா
னோதரிய லீலையினுற் சங்கற்பத் தாற்பிறக்கு முயிரை யெல்லா
மேதமுறு கந்தர்ப்ப நகரம்போ லறம்பொருள்வீ டின்ப மெய்த
மேதகைய பலகோடி சாத்திரங்க ளவர்க்காக விதித்தான் வேதா. (40)

வேதா சாதிகுலம் தருமம் எலாம் உணர்ந்து அவற்றை லீலையினால் தான் கற்பித்தான் ஓதரிய லீலையினால் சங்கற்பத்தால் கந்தர்ப்ப நகரம்போல் ஏதமுறு பிறக்கும் உயிரையெல்லாம் அறம்பொருள் இன்பம் வீடு எய்த மேதகைய பலகோடி சாத்திரங்கள் அவர்க்காக விதித்தான் = பிரமா பிராமணாதி ஜாதி, சூரியகுலம், சந்திரகுலம், தருமம், அதருமம் குணம் என்பன யாவற்றையும் ஸ்மரித்து அவ்வியாவற்றையும்விளையாட்டாகவே கற்பனைசெய்தான்காந்தருவ நகரம்போலச்சொல் வதற்கரிய கிரீடைமாத்திரையானே சங்கற்பத் தால் அவித்யாகர்ம வாசனாதோஷம் பொருந்தி ஜனிக்கும் ஜீவர்கள் யாவரும் தருமம், அர்த்தம், காமம், வீடு அடைதற்காக மேன்மைமிக்க பல் கோடி சாஸ்திரங்களை அழகாக உதிப்பித்தான்.

விரிஞ்சனுரு வாமனத்தா லிச்சிருட்டி யிற்சிருட்டி மேவி நின்றும்
புரிந்தலரு மலரெல்லாம் வசந்தகா லத்தினுற் பூப்ப தொக்கும்
பிரிந்தசுரர் நரர்முதலோர் தத்தஞ்சங் கற்பத்தால் பிறவி யுற்றார்
தெரிந்தனைய சங்கற்ப மறிற் பிறவார் நெய்மாண்ட தீபம்போல. (41)

விரிஞ்சனுருவாமனத்தால் இச் சிருட்டியிற் சிருட்டிமேவிநின்றும் புரிந்தலரும் மலரெல்லாம் வசந்த காலத்தினால் பூப்பதொக்கும் பிரிந்தசுரர் நரர் முதலோர் தத்தஞ் சங்கற்பத்தினால் பிறவி யுற்றார், தெரிந்து அனைய சங் கற்பம் அறில் நெய்மாண்ட தீபம்போல பிறவார் = பிரம்மா ரூபத்தையுடைய மனதினால் உலகம் படைக்கப்பட்டு ஸ்திதியுற்று நின்றும் ஒளிரா நிற்கும் புஷ்பங்கள்யாவும் வசந்தகாலத்தில் உண் டாகி மலர்ந்து மணந்தருவ ஒப்ப முப்பத்துமுக் கோடியாகப் பிரிந்த தேவர், மானுடர், அசுரர் முதலியோர் தங்கள் தங்களது பாவனையினாலே ஜனனத்தையடைந்தனர், பாவனையினால் ஜனன மரண சம்சாரமென்று அறிந்து அத்தகைய சங் கற்பம் உபசமமாயின் ஆதல்நீர்ந்த விளக்குப் போல ஜனியார்.

வானநிக ராமனைத்துங் கற்பனைமாத் திரம்வாளா வளரா நிற்கு
மானசக நனவுதனிற் கனவுபோ லிராகவனே யறிதி யன்றே
யீனமுறப் பிறப்பில்லை யிறப்பில்லை யெவ்விடத்து மொன்று மென்றும்
ஞானபர மார்த்தத்தா லிவையெல்லாம் பொய்யாக நண்ணு மன்றே. (42)

| | |
|---|---|
| அனைத்தும்வானநிகராம் கற்பனை மாத்திரம் வாளா வளராநிற்கும் ஆனசகம் நனவுதனில் கனவு போல் இராகவனே அறிதி அன்றே ஈனமுறப் பிறப்பில்லை இறப்பில்லை எவ்விடத்தும் என்றும் ஒன்றும் பரமார்த்த ஞானத்தால் இவையெல்லாம் பொய்யாக நண்ணுமன்றே = | நாமரூபான்மகப் பிரபஞ்சமனைத்தும் ஆகாசம் போலச் சூன்யரூபமாம் (சங்கற்பமாத்திரமாய்) பாவனைமாத்திரமாய் வீணாகவே விருத்தியுடையா நிற்கும் பாவனையினால் தோற்றுவதான உலகம் சாக்கிரத்தில் சொப்பன பதார்த்தங்கள் பொய் யாய்ப் போவதுபோலப் பொய்யேயாம் நீசமுறும் ஜன்மமில்லை மரணமில்லை. எத்தேசத்தும் எக் காலத்தும் சிறிதும் உண்மையான திருஷ்டியி னையுற்று நோக்கிடில் இவ்வாடம்பரவிப்பிரம மேயாம் (மித்தையாகப் பொருந்தும்) |

வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றுங் குடும்பபுரம் வெறும்பொய் யென்றே
யிங்காசை யறநீக்கி யெல்லையிலாப் பரமபதத் திருந்து வாழ்வாய்
சிங்காரக் கந்தர்ப்ப நகரிருந்தென் சிதைவுற்றென் றீதோ நன்றோ
பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென் பாச மாயை. (43)

| | |
|---|---|
| வெங்காதற் பெரும்பாம்பு நெளி புற்றுங் குடும்பபரம் வெறும் பொய்யென்றே இங்குஆசையற நீக்கி எல்லையிலாப் பரம்பதத் திருந்து வாழ்வாய் சிங்காரக் கந்தர்ப்பநகர் இருந்தென் சிதைவுற்றென் தீதோ நன்றோ பங்கான மனைமக்கள் வாழ்ந் தால் என் கெட்டால் என் பாச மாயை = | கொடிய காதல் பேராசையாம் பெரிய சர்ப்பம் சுழலும் வன்மீகமாம் சம்சார ஆடம்பரம் அத்தி யந்தம் மித்தையென அறிந்து அகற்றி இவ் விடத்திலுள்ள பொருள்களில் எழாநின்ற நசையை ஒழித்து, தேசகால வஸ்து பரிச்சேத மற்ற பிரஹ்ம சொரூபத்தில் ஸ்திதிபெற்றுச் சுகிப்பாய் அதி விசித்திரமான கந்தர்ப்பபட்டணம் இருந்தென்னே, அழிந்தென்னே, துக்கமோ, சுகமோ, பிணிக்கும் அவித்யாம்சமான தன்மை யில் மாத்திரம் பங்குடையவரான மனைவி மைந் தர்கள் வாழ்ந்தால் என், தாழ்ந்தால் என். |

தாரதன மிகுமென்னிற் றளையாகு மப்பாசந் தளைத்துக் கொண்டா
லாரதனை யறுத்தகலும் விரகுடையா ரறிவில்லா ராசை விஞ்சிக்
கூரிதையா மப்போகத் துழன்றுழக்குங் கொடுந்துயரைக் குறித்த போதே
தீரதையா மறிஞர்க்கு விரத்தியுள தாய்ச்சித்தந் தெளியு மன்றே. (44)

| | |
|---|---|
| தாரதனம் மிகுமென்னில் தளை யாகும் அப்பாசந் தளைத்துக் கொண்டால் அதனை அறுத்து அகலும் விரகுடையார் ஆர், அறிவிலார் ஆசை விஞ்சி | மனைவி, புத்திரன் (நிலத்திற்குரிய மைந்தரை நிலம் என்றார்) விருத்தியாயின் (விலங்காகும்) உபத்திரவமாகும் அந்த ஆசையாகிற விலங்கை யடைந்துவிட்டால், அவ்வாசபாச விலங்கைச் சேதித்து உதவும்பொருட்டுச் செல்லும் ஆற்ற |

கூரிதையாம் அப்போகத்து உழன்றுழக்கும் கொடுந்துயரைக் குறித்தபோதே தீரதையாம் அறிஞர்க்கு விரத்தியுள தாய் சித்தந் தெளியுமன்றே = லுற்றவர் யாவர் மூர்க்கர் இராகம் மிகுத்து ஜன்ம ஏதுவாதலிற் கொடுமையான அப்போகங்களில் சுழன்று வருந்துங் கொடிய துக்கத்தை நாடிய அக்கணத்திலேயே தைரியம் வாய்ந்த விவேகிகளுக்கு மேலுண்டாம் நரகஹேதுத்வாதி துக்கம் உண்டாமாதலின் அதனுலே வைராக்கியம் உண்டாகி மனமானது தூய்மையை அடையும்.

ஆனதிறத் தாற்குடும்ப பாரவியா பாரத்தி லணுகும் போது
போனபொருட் கிரங்காமற் பொருந்துபொருண் மாத்திரமே புசித்து வாழ்வாய்
தீனமுற வருபொருளைச் சிந்தியார் வந்தபொருட் டீதென் றெண்ணுர்
ஞானபர ராேேர்க்குச் சுபாவமாங் குணமிதுவே நளினக் கண்ணுய். (45)

ஆனதிறத்தாற் குடும்பபார வியாபாரத்திலணுகும்போது போன பொருட்கு இரங்காமல் பொருந்து பொருள் மாத்திரமே புசித்துவாழ்வாய் தீனமுற வருபொருளைச் சிந்தியார் வந்த பொருள் தீதென்றெண்ணுர் நளினக் கண்ணுய் ஞானபரராேேர்க்கு இதுவேசுபாவமாம்= முற்கூறிய தன்மையினுல் சம்சாரபார வியாபாரங்களில் விவகரிக்கும்போது நஷ்டமான பொருளைக்குறித்துப் பயன் இன்மையின் வருந்தாமல் நுகர் வினைவயத்தால் கிடைத்த வஸ்து மாத்திரத்தையே அநுபவித்துச் சுகிப்பாய் தைனியமுற்று வினைவயத்தால் கிடைத்த அநாகத இனி வரும் போகங்களைப்பற்றித் தேகம் அநித்தியமாகலின் கெட்டதென்று சிந்தியார். தாமரை இதழ் போலும் நேத்திரங்களையுடைய இராமா உணர்வு மயமாய் நின்ற ஜீவன் முக்தர் தமக்கு இதுவே இலக்கணமாம்.

கண்டனவெல் லாம்பொய்யென் றுள்ளத்தி லனைத்தினும் வெங்காத னீத்த
பண்டிதராம் முழுதுணர்ந்த பெரியோரை யீராது பாச மாயை
யுண்டிலையென் பவற்றிடையின் சுத்தமாம் பதம்புந்தி யூன்றப் பற்றி
விண்டவுடற் குட்புறம்பா முலகைநீ பற்றுதலும் விடலும் வேண்டா. (46)

கண்டனவெல்லாம் பொய் என்று உள்ளத்தில் அனைத்தினும் வெங்காதல் நீத்த முழுதுணர்ந்த பண்டிதராம் பெரியோரை பாசமாயையீராது உண்டு இலை என்பவரிடையின் சுத்தமாம்பதம் புந்தி ஊன்றப் பற்றி விண்ட உடற்கு உள் பார்க்கப்பட்ட திருசிய வர்க்கங்கள் யாவற்றையும் மித்தையென்று கருதி மனத்தில் எழாநின்ற சர்வ விஷயகக் கொடிய ஆசையைப் போக்கிய சர்வஞ்ஞத்தன்மை வாய்ந்த வித்வான்களாகிய மகாத்மாக்களை யாவரையும் பிணிக்கும் மாயை உபத்திரவஞ் செய்யமாட்டாது. சத்து, அசத்துக்களின் மத்தியிலிருப்பதாம் தூயதாயுள்ள பதத்தை மதியினுல் அழுத்தமாக அவலம்பித்து

புறம்பாம் உலகைநீ பற்றுதலும் விடலும் வேண்டா = அசுத்தம், துக்கம், அநித்தியமென்று கூருநின்ற யான் அல்லவென்று விட்டுத்தொலைத்த தேகத்துக்குப் பாகியாந்தரத்திருக்கும் உலகைக் கவர்தலும் நீக்குதலும் வேண்டா. எத்திருசியத்தையும் உபேக்ஷிப்பாய்.

எக்கருமத் திலுமிச்சை யனிச்சையற நின்றுணர்வை யெய்தி னோர்க்கே
யக்கருமங் களிலறிவு பற்ருதா மரையிலைசே ரம்புயம் போலத்
தொக்கபொறி விடயனலஞ் சுவையறநின் மனமாரத் தோன்றில் வீரா
தக்கவுணர் வுணர்ந்தோனுய்ப் பவக்கடல்கள் கடந்தன்றே சனனந் தீர்ந்தாய். (47)

இச்சை அநிச்சையற எக்கருமத்திலும் நின்று உணர்வை எய்தினோர்க்கு அக் கருமங்களில் தாமரையிலைசேர் அம்புயம் போல அறிவுபற்ரு, தொக்க பொறிவிடய நலம் சுவையற நின் மனமாரத் தோன்றில் அன்றேவீரா தக்கவுணர் உணர்ந்தோனுய்ப் பவக்கடல்கள் கடந்து சனனந் தீர்ந்தாய் = இச்சையேனும் அநிச்சையேனுமில்லாமல் தொல்லோர் சுருதிகூறிய விகித எக்கருமங்களிலும் ஸ்திதிபெற்றுப் பிரவிருத்திப்பவனுய் ஞானநிஷ்டையுடையவனுக்கே, அத் தொழில்களில் தாமரை இலையில் ஜலம் ஒட்டாததேபோலப் பாதிதானுவிருத்தியினுலே பிரஞ்ஞை சம்பந்தியாது கூட்டமாகிய இந்திரியங்களால் வரும் சப்தாதி விஷயசுக வர்ஜிதமாமென்று உனது சித்தத்தில் இயையில் (சம்மதமாகப் புலப்படில்) அப்போதே வீர இராகவனே சின்மாத்திரவஸ்துவை அடைந்தோனுய்ச் சனன மரண சம்சார சமுத்திரத்தைக் கடந்தவனுவாய்.

உச்சமுறு பதம்வேண்டி லனைத்துவா தனையிலுநின் றுள்ளந் தன்னை
நிச்சயமா முணர்வாலே நீக்குவாய் மலரின்மண நீங்குமா போல்
றுச்சமுறு வாதனையாந் தரங்கநீர் பவக்கடலிற் றுளைவார்க் கெல்லா
மச்சமற நல்லறிவு மரக்கலமாய்க் கரையேற்று மயலொன் றுண்டோ. (48)

உச்சமுறுபதம் வேண்டில் அனைத்துவாதனையிலும் நின்று உள்ளந்தன்னை நிச்சயமாம் உணர்வாலே மலரின் மணம் நீங்குமாபோல் நீக்குவாய் துச்சமுறு வாதனையாந் தரங்கம் நீர் பவக்கடலில் துளைவார்க்கெல்லாம் அச்சமற நல்லறிவு = மேலான கைவல்யபதம் விரும்பில் சர்வ வாசனைக் கூட்டத்தினின்றும் மனத்தினைச் சச்சிதானந்த வடிவ பிரஹ்மமே அகமென்னும் திடப் பிரஞ்ஞையினுலே புஷ்பத்தினின்றும் கந்தம் அகலுவதென்ன நீக்குவாய்; தள்ளத்தக்கனவாய துர்வாசனையாம் அலையும் ஜலம் நிறைந்த சம்சார சாகரத்தில் மூழ்குவோர்க்கெல்லாம் பயம் நீங்கும் படியாகப் பெரும் பிரஞ்ஞையானது நாவாய் (ஓட

முரக்கலமாய்க் கரையேற்றும் அயல் ஒன்று உண்டோ = மாய்) நின்று அவர் யாவரையும் முத்தியங் கரையில் சேர்ப்பிக்கும். மற்றையதொன்றும் இவ்வாறு உளதோ, இலதாம்.

பராபரங்கண் டோரனைத்தும் பின்செல்வ ருலகியல்பு பற்றுர் நீங்கார்
சுராலயநந் தனவனத்தும் பற்றுர்கள் சூனியத்துந் துயர மெய்தார்
விராவுநிய தியுந்தள்ளார் வெய்யவன்போ லனுசரிப்பர் மேன்மை சான்றோ
ரிராகவனே யிவ்வாறு நடத்தியென வசிட்டமுனி யியம்ப லோடும். (49)

பராபரங்கண்டோர் அனைத்தும் பின்செல்வர் உலகியல்பு பற்றுர் நீங்கார் சுராலயநந்தனவனத்தும் பற்றுர்கள் சூனியத்தும் துயரம் எய்தார் விராவுநியதியுந்தள்ளார் வெய்யவன்போல் அனுசரிப்பர் மேன்மை சான்றோர் இராகவனே இவ்வாறு நடத்தியென வசிட்ட முனி இயம்பலோடும் = பாரம் அபாரம், பாரம் மோக்ஷமாகிய தீரம் அபாரம், சம்சாரம் அஃதறிந்த பெரியோர் உலகிலுள்ள விகிதமான விவகாரமனைத்தையும் தியாகியாது பின்தொடர்ந்து விவகரிப்பர் சுவர்க்க லோக உத்யானவனத்திலும் பற்றையடையார்கள். விடயங்களில்லாவிடத்தும் விஷாதம் எய்தார் தெய்வநியதியையுங் கடவாது சூரியனைப் போலப் பரிபாலிப்பர், அதனுனே மகாத்மாக்கள் இரகுகுலதிலகபூதனுனராமா நீயும் இவ்விவேகத்தையுற்று விவகாரங்களை நடத்தியென ஸ்ரீ வசிஷ்டபகவான் உபதேசித்தருளினுர்.

பரத்துவகே ளிவ்வாறு பரமமுனி பரமபதம் பகரக் கேட்டுத்
திரத்துவுமா நிறைந்தான்போற் சீராமன் அமலமாய்த் தீர்ந்து சித்தந்
தரத்துவமை யில்லாத மெய்ஞ்ஞான நல்லமுதாற் றதும்பித் தண்ணென்
றுரத்துவளர் சந்திரன்போ னிறைவுற்றுன் வசிட்டனுமீண் டுரைப்ப தானுன். (50)

பரத்துவகேள் இவ்வாறு பரம முனி பரமபதம் பகரக்கேட்டு திரத்துவுமாம் நிறைந்தான் போல் ஸ்ரீராமன் அமலமாய்த் தீர்ந்து சித்தம் தரத்துவமை யில்லாத மெய்ஞ்ஞான நல்லமுதால் ததும்பி தண்ணென்று உரத்துவளர் சந்திரன்போல் நிறைவுற்றுன் வசிட்டனும் மீண்டும் உரைப்பதானுன் = பரத்துவ கேட்பாயாக இயம்பிய வகையே மேலாய வசிஷ்டர் மோக்ஷபத சாதனங்களை அனுக்கிரகித்தருளச் சிரவணித்து ஸ்ரீ இராகவர் மனம் நிர்மலமாய்ப் பூரணமாய்த் திருப்தியுற்றுற்போல உயர்வு ஒப்பு இல்லாத உண்மை ஞானமிர்தத்தானே பூரித்துச் சீதளமிகுத்து ஆக்கமுற்று வளர்ந்து பூரணபாவமடைந்த மதியொப்ப ஆராய்ந்து ஆராய்ந்து அதி திடமான பரமசாந்தத்தால் பூரண பாவத்தையடைவுற்றுர் ஸ்ரீ வசிஷ்டமகரிஷியும் ஸ்ரீ இராகவர் சிருஷ்டிவிஷயகமான பிரசினஞ்செய்ய உத்தரம் அருளத் தொடங்கினுர்.

## அவதாரிகை

தேவரீரால் நானாவித சிருஷ்டிப் பிரதிபாதகச்சுருதி புராணாதி பிரமாணங்களினாலே உலக உற்பத்தி கூறப்பெற்றதோ அச்சிருஷ்டி ஏகவிதமாகவே ஆகின்றதா அல்லது பலவிதமாக ஆகின்றதா என்று இராகவர் வினவ ஸ்ரீ வசிஷ்டபகவான் தெரிவிக்கின்றார்:

ஒருகால மரன்படைப்ப னொருகால மயன்படைப்ப னுலக மெல்லா
மொருகால மரிபடைப்ப னொருகால முனிவர்படைப் புள்ள தாகு
மொருகாலம் புயத்துதிப்ப னொருகால்வா ரிதியினுதிப்ப னுயர்ந்த வேதா
வொருகாலண் டத்துதிப்ப னொருகால்விண் ணகத்திலே யுதிப்ப னன்றே. (51)

உலகமெல்லாம் ஒருகாலம் அரன் படைப்பன் ஒருகாலம் அயன் படைப்பன் ஒருகாலம் அரி படைப்பன் ஒருகாலம் முனிவர் படைப்புள்ளதாகி ஒருகால் அம் புயத்துதிப்பன் ஒருகால் வாரிதியினுதிப்பன் உயர்ந்த வேதா ஒரு கால் அண்டத்து உதிப்பன் ஒருகால் விண்ணகத்திலே உதிப்பன் = பிரபஞ்சமெல்லாம், ஒவ்வொருபோது ருத்திரன் சிருஷ்டிப்பன், சிலசமயம் பிரமன் சிருஷ்டிப்பன், ஒருபோது விஷ்ணு சிருஷ்டிப்பன் மற்றொவ்வொருபோது மகரிஷிகளே சிருஷ்டியைச் செய்வார்கள். மேன்மைவாய்ந்த பிரம்மா ஒருசமயம் நாராயணனது உந்தியில் உண்டாவான், ஒருபோது சலிலோற்பவனுவன், ஒருபோது முட்டையினின்றும் உதிப்பன், ஒருபோது அம்பரத்தினின்றும் உண்டாவன்.

வன்மரங்க ளேநெருங்கு மொருபடைப்பி லொருபடைப்பின் மனிதர் துன்னும்
பன்மலைக ளேநெருங்கு மொருபடைப்பி லொருபடைப்பிற் படர்மண் ணாகுங்
கன்மயமா மொருபடைப்பி லொருபடைப்பிற் றசைமயமாய்க் காண லாகும்
பொன்மயமா மொருபடைப்பி லிப்படியே பலவிதமாம் பூமி தானே. (52)

ஒருபடைப்பில் வன்மரங்களே நெருங்கும் ஒருபடைப்பில் மனிதர் துன்னும் ஒருபடைப்பில் பன் மலைகளே நெருங்கும் ஒருபடைப் பில் படர்மண்ணாகும் ஒருபடைப் பில் கன்மயமாம் ஒருபடைப்பில் தசைமயமாய்க் காணலாகும் ஒருபடைப்பில் கல்மயமாம் ஒரு படைப்பில் பொன்மயமாம் இப் படியே பலவிதமாம் பூமிதானே = ஒரு சிருஷ்டியில் இப்பூமி இடைவெளியின்றித் தருக்களால் நெருக்கமுற்றுச் சங்கடத்தையுடைத்தாயிருக்கும் ஒரு சிருஷ்டியில் நரரே மிகுந்திருப்பர் ஒருசிருஷ்டியில் பர்வதங்களாலே மறைந்திருக்கும் ஒருசிருஷ்டியில் வெறும் மண்ணேவியாபித்திருக்கும் ஒருசிருஷ்டியில் சிலைகளே நெருங்கியிருக்கும் ஒருசிருஷ்டியில் மாம்சமயமாய்க்காணப்பெறும் ஒருசிருஷ்டியில் சொர்ணமயமாகவே (காஞ்சனமயமாகவே) காணப்பெறும் இவ்வண்ணமே அநேகவிதமாக அநேக சிருஷ்டிகளில் ஆகும் இப்பூமி.

வான்முதலா மண்முதலா நீர்முதலாந் தீமுதலா மற்றை வாயுத்
தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு மோரொன்று தலைமை யாகும்
யான்முதலோ ரயன்சிருட்டி தரிசனமா வுனக்குரைத்தே னிந்த வாற்ருன்
மேன்முதலா நியமமிதற் கொன்ருக விலதுபல விதமாய்த் தோற்றும். (53)

வான்முதலாம் மண்முதலாம் நீர்முதலாம் தீமுதலாம் மற்றை வாயுத்தான்முதலாம் இப்படியே சிருட்டிதொறும் ஓரொன்று தலைமையாகும் யான்முதலோர் அயன் சிருட்டி தரிசனமாம் உனக்கு உரைத்தேன் இந்த வாற்ருல் மேன்முதலாம் இதற்கு நியமம் ஒன்ருகவிலது பலவிதமாய்த் தோற்றும் = ஓர் சிருஷ்டியில் ஆகாயம் பிரதமத்தில் உதிக்கும் ஒருகால் பிருதுவி முதலில் தோன்றும் ஒருபோது சலம் முதலில் தோன்றும் ஒருபோதில் தேயு முதலில் உண்டாம் மற்ருெரு சமயம் வாயு பிரதமத்தில் உண்டாம் இவ்வாறே சிருஷ்டிதோறும் ஒவ்வொருபூதம் முதன்மைபற்றி நிற்கும் பிரஜாபதியாம் ஓர் பிரம்மாவின் சிருஷ்டியைத் திருஷ்டாந்தப்பொருட்டாக ஹேராமா உனக்குக் கூறினேன் இம் முறைபற்றி மேலாக = பின் உண்டாகுஞ் சிருஷ்டியும் இச் சிருஷ்டிக்கும் ஒருவிதமாக நியமம் இல்லையாம் நாஞப்பிரகாரமாய்ப் பிரதீதியாம்.

கிருதமுத லுகநாலும் மீண்டுமீண் டுற்பவிக்குங் கிளத்து ஞாலத்
தொருபொருளும் வளைத்துவளைத் தனந்தமடங் குற்பவமா யுழலா தில்லை
யிருள்பெருகு மாமாயை வன்னனைக்கு முன்னிலையா மியாமிங் கோத
வருமறைதேர் தாசூரன் கதைகேட்டி யிராமவென வறைவ தானுன். (54)

கிருதமுதல் யுகம்நாலும் மீண்டு மீண்டு உற்பவிக்குங்கிளத்து ஞாலத்து ஒருபொருளும் வளைத்து வளைத்து அனந்த மடங்கு உற்பவமாய் உழலா தில்லை இருள்பெருகு மாமாயை வன்னனைக்கு முன்னிலையாம் யாம் இங்கு ஓத அருமறை தேர்தாசூரன் கதை கேட்டி இராமவென அறைவதானுன் = கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆக நான்கும் மாறி மாறி (மீளவும் மீளவும்) உண்டாகிக்கொண்டேயிருக்கும் கூறுகின்ற இந்தப் பிரபஞ்சத்தில் எந்த வஸ்துவுமே மீளவும் மீளவும் அளவில்லாதமுறை ஜனித்துச் செல்லாததில்லை, அந்தகர்ரமயமாய் யாவரையும் மறைக்கும் மாண்புடைத்தாய மாயையின் வர்ணனைக்குத் திருஷ்டாந்தமாக அரியவே தங்கள் யாவையும் கற்றுணர்ந்த தாசூரனது ஆக்யாயிகையை இராகவனே கேட்டி (சிரவணஞ்செய்தி) என்பதாகக் கூறத்தொடங்கினுர்.

இந்தப் புவனத் தூடே யெழிலார் மலரின் பொழில்வாய்
மந்தக் குளிர்கால் கமழு மகத தேசந் தன்னிற்
கந்தக் கதலி கடம்பு கன்னி காரஞ் செறிந்து
சிந்தைக் கினிதா கியதோர் சிறப்பா மலையி னிடத்தே. (55)

இந்தப் புவனத்தூடே எழிலார் மலரின் பொழில்வாய் குளிர்மந் தக்கால் கமழும் மகத தேசந் தன்னில் கந்தக் கதலி கடம்பு கன்னி காரஞ்செறிந்து சிந்தைக் கினிதாகும் சிறப்பாம் ஓர் மலையினிடத்தே = இந்த வசுதாபீடத்தில் விசித்திரமான பூஞ்சோலைகள் நிறைந்து அதனினின்றும் படிந்துவரும் சீதளமான மந்தம் தென்றல் வீசும் மகத தேசந் தன்னில் மணக்கும் மலை வாழைகளும், நீபங்களும், கோங்குகளும் நிறைந்து மனோரம்மியமாகிய சிறப்பான பருப்பதத்தின்பால்.

பரலோ கஞ்சேர் தவமே பண்ணிய யன்போ லுயர்ந்த
சரலோ மாவின் மைந்தன் றசூ ரப்பெயர் முனிவன்
சுரலோ கத்தின் குருவின் றோன்றற் கசனை யொப்பா
னரலோ கத்தின் மேலா னவைதீர் தவத்தாற் பெரியோன். (56)

பரலோகஞ்சேர் தவமேபண்ணி அயன்போல் உயர்ந்த சரலோமாவின் மைந்தன் தாசூரப் பெயர் முனிவன் சுரலோகத்தின் குருவின் தோன்றல் கசனையொப்பான் நரலோகத்தில் மேலாம் நவைதீர் தவத்தால் பெரியோன் = மறுமைப் பயனைப் பயக்கும் மகா தவத்தைச் செய்து பிரம்மாவைப்போலத் தர்மாத்மாவாய் மேம்பட்ட தர்ப்பை சமானமான மயிரையுடையவன் சரலோமாமுனிவன் என்று ஒருவன் இருந்தான், அவனுக்குப் புத்திரன் தாசூரன் என்னும் நாமமுடையவன் தேவலோக ஆசிரியராகிய பிரகஸ்பதியின் குமாரன் கசனுக்குச் சமானமானவன். பூமண்டலத்தில் பூசுரசிரேஷ்டன் குற்றங் கடிந்த மகத்தான தவயோகத்தோடு கூடியவன்.

தனைய னொருவ னோடுஞ் சரலோ மாவா முனிவ
னனைய கிரியின் வனத்தி லனேக யுகஞ்சென் றதன்பின்
புனையுங் கூடு கழிந்து புட்போ வதுபோற் போகி
வினைசெய் யுடலை விட்டு விண்ணோர் வடிவை யெடுத்தான். (57)

தனையன் ஒருவனோடுஞ் சரலோமாவா முனிவன் அனையகிரியின் வனத்தில் அனேக யுகஞ்சென்றதன்பின் புனையுங்கூடு கழிந்து புள்போவதுபோல் போகி வினைசெய் உடலைவிட்டு விண்ணோர் வடிவையெடுத்தான் = அவ்வேகபுத்திரனோடும் சரலோமா வென்னும் அம் முனிவர் முற்கூறிய அப் பர்வதத்தினுள்ள வனத்தின்கண் வெகுகாலம் வசித்தனர். அநேக காலங் கழிந்ததன் பின்னர் பந்தித்திருந்த நீடத்தை விடுத்துப் பறவை செல்வதுபோலச் சுவர்க்கஞ் சென்று கர்மத்தால் உண்டான தேகத்தை விடுத்துத் தேவவடிவத்தை அடைந்தான்.

தனியே யந்த வனத்தே தாசூ ரப்பேர் முனிவ
னினிய தாதை யிறவுக் கிரங்கி யுதகத் தியற்றும்
புனித மான பிரம பூஜை முழுதும் புரியான்
கனியு நெஞ்ச னன்றில் கதறு மாபோற் கதறி. (58)

தனியே அந்த வனத்தே தாசூரப் பேர் முனிவன் இனிய தாதை யிறவுக்குஇரங்கி உதகத்தியற்றும் புனிதமான பிரமபூஜை முழுதும் புரியான் கனியும் நெஞ்சன் அன்றில் கதறுமாபோல் கதறி = ஒருவனேயாக அவ் வனத்தில் தாசூரன் என்னும் நாமம் பொருந்திய அம் முனிவன் பிரியதரிசன மாதா பிதா வியோகத்தால் சால வெம்பி இரக்க முற்று வாட்டமுற்ருன்; ஜலத்திலாற்றும்பவித்திர மான விப்பிரர்க்குரிய பூஜையாவுஞ் செய்யான். உருகிய மனத்தினன் அன்றிலென்னுஞ் சிறிய பறவை துயருற்றுக் கரையுமாறு போலக் கரைந்து.

தந்தை யன்னை பிரிவாற் சால வெம்பித் தளர்ந்த
மைந்தன் றன்னை யருளால் வனதே வதைகண் டருளி
மூந்து ருமல் னின்று முனிமா மகவா முனிவா
சிந்தை தெளிந்தோய் தெளியாச் சிறியோ ரெனநொந் தயரேல். (59)

தந்தை அன்னை பிரிவால் சால வெம்பித் தளர்ந்த மைந்தன் றன்னை அருளால் வனதேவதை கண்டருளி மூந்துருமல் நின்று முனி மா மகவா முனிவா சிந்தை தெளிந்தோய் தெளியாச் சிறியோரென நொந்து அயரேல் = பிதா மாதாக்களினது நீக்கத்தால் அத்தியந்தம் சோக சந்தாப சிந்தையால் மெலிவுற்ற அக்குமாரனை (தாசூரனை) கிருபையினுல் அவ் வனத்தின் தேவதை பார்த்தருளிக் கட்புலனுக்கு விஷயமாகாமல் மறைந்து நின்று மாட்சிமை பொருந்திய சரலோமா முனிவரின் மைந்தனும் ஹே தாசூர முனிவ மகாப்பிராஞ்ஞனே அற்ப அறிவில்லார் போலத் துன்புற்று ரோதனஞ் செய்யாதே.

அனித்த மான குடும்பத் தபத்த முணர்கின் றிலையேன்
சனித்த பொழுதே மரித்தல் சற்றுந் தப்பா கண்டாய்
பனித்த விழியோ டயர்வாய் பகலோ னுதயஞ் செய்தா
லினித்தன் நிலையைத் தமனத் தெய்தா னென்பா ருளரோ. (60)

அனித்தமான குடும்பத்து அபத்தம் உணர்கின்றிலைஏன் சனித்த பொழுதே மரித்தல் சற்றுந்தப்பா கண்டாய் பனித்தவிழியோடு அயர்வாய் பகலோன் உதயஞ் செய்தால் இனித்தன் நிலையைத் = மித்தையான சம்சாரத்தினது பொய்வடிவத்தைக் காரணத்தால் தெரியாமலிருக்கின்ருய் எப்போது தோன்றிற்றே அப்போது அஸ்தமனத்தையடைதல், ஒரு சிறிதும் தவிராதென்றே, நீ தெரிந்து கொள்; நீர்சொரிதர நேத்திரத்தையுடைய கண்ணுங் கண்ணீருமாய் அழுதுகொண்டு திரியும்

தமனத்து எய்தானென்பார் உளரோ = குழந்தாய் தினகரன் (சூரியன்) எழுந்துவந்தால் இன்மேல் தன்து நிலையாகிய அஸ்தமனக்கிரியை அடையமாட்டான் என்று சொல்பவரும் இருப்பாரோ இரார்.

வாளா வயரே லென்று மறைந்து தெய்வ முரைப்பக்
கேளா வுணர்ந்து தளருங் கேத மொழித்து நிலையாய்
நீளா ரணத்தின் படியே நீரின் கடன்கள் முடித்து
மீளா நெறிசேர் தவத்தின் மிகவும் விருப்ப மானுன். (61)

வாளா அயரே லென்றும்மறைந்து தெய்வம் உரைப்பக்கேளா உணர்ந்து தளருங்கேதம் ஒழித்து நிலையாய் நீள்ஆரணத்தின்படியே நீரின் கடன்கள் முடித்து மீளா நெறிசேர்தவத்தில் மிகவும் விருப்பமானுன் = வியாக்கிர திருஷ்டியில் எவ்வெப்பிரமாதியர் பிரசித்தமாயுள்ளரோ அத்தகையரும்விநாசத்தை அடையவேண்டிவரும், அக்காரணத்தினுல் பிதாவின் மரணத்தைக்குறித்து வீணுக மயங்கித் துன்புறேல் என்று அசரீரியாய் அவ்வனதேவதை அருள்செய்யச் சிரவணித்து அதனைச்செவிமடுத்து விவேகத்தால் தீரப்பெற்று வாட்டஞ்செய்யும் துன்பமோகத்தை விடுத்துச் சித்தசுவாதீனனுகி அநாதி வேதத்தின்படியே பிதுர்க்காரியங்களைச் செய்து திரும்பாத பதத்தை அடையச் சாதனமான தவத்தின்மாட்டு அத்தியந்தம் பிரியமுடையவனுனன்.

தக்க பிரம கருமந் தன்னுற் றவமே செய்வான்
றெக்க சங்கற் பத்தாற் சுத்தா சார மிகுந்தான்
மிக்க ஞான மில்லான் விசுத்த மான புவியிற்
புக்க விடங்க ளெல்லாம் புனித மன்றன் றென்னு. (62)

தக்கபிரமகருமந்தன்னுல் தவமே செய்வான் தொக்க சங்கற்பத்தால் சுத்த ஆசாரமிகுந்தான் மிக்க ஞானமில்லான் விசுத்தமான புவியில்புக்க விடங்களெல்லாம் புனிதம் அன்றென்றென்னு = தகுதியாய பிராமணர்க்குரிய கருமங்களானே தவம்புரிய எண்ணிய அவர் தொடர்ந்த அனந்த சங்கற்பத்தால் சுத்தாசுத்தவாசாரம் அடைந்து சாந்தசத்துவம் உண்டாயது அறியவேண்டிய பூரண ஞானமில்லாதவர் பவித்திரமான தரா தலத்தில் சென்ற தலங்கள் யாவற்றினுமே சுத்தம் அல்ல அல்லவென எண்ணினுர்.

வையமுஞ் சுத்த மல்ல மரத்தி னுனியே புனித
மெய்ய புட்போ லாங்கே யமாதற் கான தவமே
செய்ய நிற்போ மென்னுச் சிந்தித் தியார நினைந்து
வெய்ய கனலை மூட்டி விண்ணேர் குழுவை நினைந்து. (63)

வையஞ் சுத்தமல்ல மரத்தின் நுனியே புனிதம் ஐயபுட்போல் ஆங்கே அமர்தற்கான தவமே செய்யகிற்போம் என்று சிந்தை யார நினைந்து வெய்ய கனலை மூட்டி விண்ணோர் குழுவை நினைந்து = பூமண்டலம் புனிதமல்ல விருக்ஷத்தின் அக்கிர பாகமே வெகு சுத்தமாயது அழகிய விருக்ஷங் களில் பக்ஷிபோலவும் தெய்வம்போலவும் உறில் பொருந்தியிருத்தற்கான தவம் இயற்றுவோம் சுத்த தவம் செய்யத்தக்க சாகைகளையும் தளிர் களையுமுடைய விருக்ஷத்தை அடைவேன் என்று புத்தியிற் பொருந்துற மதித்து வெண்மையான தீயைமூட்டித் தேவர்கணங்களைச் சிந்தித்து.

உடலை யரிந்து வாங்கி யோமஞ் செய்ய லோடுங்
கடவு ளவர்க்கென் முகத்தாற் கலைவே தியன்மெய்த் தசைகண்
மிடறும் புயமு முதல வேவ தென்னே யென்னுச்
சுடருங் கனலோ னினைந்து சுருதி முனிமுன் றோன்றி. (64)

உடலை அரிந்துவாங்கி யோமஞ் செய்யலோடும், சுடருங் கன லோன்நினைந்து சுருதிமுனிமுன் தோன்றி கடவுளவர்க்கு என் முகத்தால் கலைவேதியன் மெய்த் தசைகள் மிடறும் புயமும் முதல வேவதென்னே என்று = சரீரத்தைச் சேதித்துக் கரங்கொண்டு ஆகுதியை ஆற்றியபோது ஜொலியாநின்ற அக்கினிபக வான் சிந்தித்துச் சாஸ்திரக்ஞுகிய தாசூர முனி முன் பிரசன்னமாகி, தேவதைகளுக்கு எனது வாயிலாகச் சாஸ்திரங்கற்ற மறையவனது உடம் பின் மாம்சங்கள், கழுத்தின் மாம்சம் முதலியவை எரிந்து சாம்பலாவதென்னே அங்ஙனம் பஸ்ம மாக வேண்டாம் என்று சிந்தித்துப் பிரகஸ்பதிக் குச் சூரியன்போல அருள்வாராயினர்.

கருதிற் றென்ன வென்னக் கைகண் முகிழ்த்துத் துதித்தும்
பரிசுத் தமதா மிடமிப் பாரிற் காணே னதனுற்
றருவிற் றலையிற் றளிர்மேற் றலந்தந் தருள்வா யென்ன
வரமுற் றுதவிக் கனலோன் வாரித் திரைபோன் மறைந்தான். (65)

கருதிற்றென்ன வென்னக் கைகள் முகிழ்த்துத் துதித்து இப்பாரில் பரிசுத்தமதாம் இடம் காணேன் அதனால் தருவின் தலையிற்றளிர்மேல் தலந் தந் தருள்வாய் என்ன வரமுற்று உதவிக்கனலோன் வாரித் திரைபோல் மறைந்தான் = ஹே விப்பிரகுமாரா! நீ விரும்பியதுயாதோ அவ் வரத்தைக் கேட்குதியென்று அக்கினிபகவான் கூறத் தாசூரர் இருகரங்களைச் சிரமேல் கூப்பித் தோத்தரித்து இப் பூமியின்கண் தூய்மையான தானம், (பரிசுத்தமான பிரதேசத்தை) அடையப் பெற்றிலேன் சண்டாளர் நாய் முதலிய பிராணி களாலும் மலம், மூத்திரம், குப்பை, சேரி, மயானுதிகளாலும் சூழப்பட்டிருக்குங் காரணத்தி னுல் மரத்தின் நுனியிலுள்ள இலைமேல் எனக்கு

உறைவிடம் கொடுத்தருள்வாய் என்று பிரார்த்திக்க உனக்கு அவ்வாறே தந்தேன் என்று சொல்லி அக்கினிபகவான் கடல் அலைபோலத் திருவுருக்கரந்தனர்.

கானத் திடையோர் கடப்பங் காரின் பதத்தைக் கடந்து
வானத் துயர்ந்த ததன்மேல் வருபல் லவமென் றவிசின்
ருனத் தைய மின்றித் தாசூ ரன்ரு னிருந்து
மேனற் றவமே செய்வான் மிகவும் விரும்பு மனத்தான். (66)

கானத்திடையோர் கடப்பங்காரின்பத்தைக் கடந்து வானத்துயர்ந்ததன்மேல் மென்வருபல்லவதவிசின்ருனத்து ஐயமின்றித் தாசூரன் தானிருந்து மேல் நற்றவமே செய்வான் மிகவும் விரும்பும் மனத்தான் = அக்கினிபகவான் அருளால் கானமத்தியில் ஓர் கதம்பவிருக்ஷம் இருந்தது அது மேக மண்டலத்தைத்தாண்டி ஆகாயத்தில் வியாபித்திருந்தது, அத் தருமீது மிருதுவான பர்ன ஆசனத்தின் இடத்தில் ஆசங்கையில்லாமல் தாசூர முனிவர் வீற்றிருந்து உயர்வாகிய இனிய தவத்தையே செய்யும்பொருட்டு, அதிக ஆவலுற்ற உள்ளத்தினராயினர்.

ஒருகணந் திசைக ளனைத்தையு நோக்கி யுறைத்த பத்மாதனத்தி ருந்தான்
பெருகிய திசைகண் முழுதினுந் திரும்பிப் பிரமபா வனையறி வரிதாய்க்
கருமமாத் திரத்தி னிற்பதாய்ப் பலமாங்கற்கசம் விரும்புரு மனத்தால்
வருடமைந் திரண்டு மகங்களே நடத்திவா னவர்க்கவியுண வளித்தான். (67)

ஒருகணந் திசைகளனைத்தையும் நோக்கியுரைத்த பத்மாதனத்திருந்தான் பெருகிய திசைகள் முழுதினுந் திரும்பிப்பிரமபாவனை அறிவரிதாய்க்கருமமாத்திரத்தில் நிற்பதாய்ப் பலமாங் கற்கசம் விரும்புரு மனத்தால் வருடமைந்திரண்டு மகங்களே நடத்தி வானவர்க்கு அவியுணவளித்தான் = கணப்போதில் எல்லாத் திசைகளையுமே பார்த்துத் திடபத்மாதனத்திருந்தான். விசாலமான சர்வ திருசியங்களினின்றும் சென்ற மனோவிருத்தியைத் திருப்பிப் பரமார்த்தம் உணராமையின் கிரியாமாத்திரத்தில் நிலைபெறுவதாய்ப் பயனுஞ் சொர்க்காதி பதம் இச்சியாமனத்தால் தசசம் வற்சரங்கள் எக்ஞங்களையே செய்து தேவர்கட்கு அவி ஆகாரங் கொடுத்தான்.

கோத்திரர் புரவி மனிதரா லியற்றுங்கோதறு வேள்விகண் முற்றுஞ்
சாத்திர விதியா லியற்றிநீள் காலந் தவறற நடந்தமை யாலே
மாத்திர மான மனமிகத் தெளிந்து வரம்பில தாதலு மாங்கே
நேத்திர மான ஞானம்வந் தெய்தி நிறைந்தனன் வலிதினன் னெஞ்சம். (68)



கோ புரவி மனிதர் திரள் ஆல் இயற்றுங் கோதறு வேள்விகள் முற்றுஞ் சாத்திரவிதியால் இயற்றி நீள்காலம் தவறு அற நடந்தமையாலே மாத்திரமான மனம் மிகத் தெளிந்து வரம்பிலதா தலும் ஆங்கே வலிதில் நேத்திர மான ஞானம் வந்தெய்தி நல் நெஞ்சம் நிறைந்தனன் = கோ, அசுவம், நராதிவிபுல, சமூகங்களால் தக்ஷி ணைகளுடன்செய்யப்பெறும் குற்றமற்ற யாகங்கள் யாவற்றையும் நூல்முறையே நிறைந்த தட்சணை யாதிகளானேசெய்து நெடுங்காலம் திரவியலோப மந்திர லோபகிரியா லோபமின்றிநடத்தியதாலே சர்வதோஷ விநிர்முக்தமாய்ச் சத்துவமாத்திர மான சித்தம் அத்தியந்தம் அமலத்தன்மையை அடைந்து சாதனம் எல்லையற்றதாலும் அவ் விடத்தே பலாத்காரமாக நேத்திரசமான ஆத்மப் பிரஜாதமாய் ஞானம் வந்தடையவே உள்ளத் துள்ளே பூரணபாவமுநின்றான்.

பிறவியா வரணங் கழிந்துவா தனைகள்பேரற மாண்டுள பெரியோ
னிறவிய தளிர்மே லிருத்தலுமொருநா ணிமலமாம் விழிகளுக் கெதிரே
யுறவிரி மலரின் மேகலை யுடுத்த வுயர்வன தேவதை தோன்ற
வறிவனு நோக்கி யார்கொனீ யென்ன வழகிய வணங்குரை செய்வாள்.(69)

பிறவியாவரணங்கழிந்து வாதனை கள் பேரறமாண்டுள பெரியோன் நிறவிய தளிர்மேல் இருத்தலும் ஒருநாள் நிமலமாம் விழிகளுக் கெதிரே யுறவிரிமலரின் மேகலை யுடுத்த உயர்வன தேவதை தோன்ற அறிவனும் நோக்கி நீ யார்கொல்லென்ன அழகிய அணங்கு உரை செய்வாள் = ஜன்மத்துக்குஏதுவாய் அஞ்ஞானுவரணம் அகன் றவராய் அதன் அப்பியாசத்தாலே வாசனை மலங்களியாவும் நாமமுமில்லாமல் அத்தியந்தம் அழிந்து வாழ்ந்துகொண்டிருக்கும் மகாத்மா, படர்ந்த தளிர்மீது வீற்றிருத்தலும், ஒருசமயம் நிர்மலமான நேத்திரங்கட்கு முன்னிலையில் மிகவும் விரிந்த புஷ்பத்தினுலே அமைந்த மேகலை தரித்த அழகிற்சிறந்த மேலான வனதேவதை தோன்ற உணர்வுமயமான தாசூரர்பார்த்து நீ யார் லதையைப் பிடித்துக்கொண்டு என்னகார ணம்பற்றி நிற்கின்றனையென்று கேட்பக்கவின் வாய்ந்த அவ்வனதேவதை கூறத்தொடங்கினுள்.

பெரியவர் தம்பாற் பெறலரு நேயம் பெற்றவர் விரும்பிய வெல்லா
மரியன வெனினு மிமைப்பினி லெளிதி லணுகுமென் றய்யமற் றறிந்தேன்
றெரிவருண் முனிவ நீயுறை வனத்திற் செறிவன தேவதை யிங்ஙன்
விரியலர் கொடியாம் வீந்தேதவீட் டிடையே விருப்பொடு மிருப்பவ ளுனே. (70)

பெரியவர்தம்பால் பெறலருநேயம் பெற்றவர் விரும்பியவெல்லாம் அரியனவெனினும் இமைப்பினில் எளிதில்அணுகுமென்று ஐயமற்று = மகான்களிடத்தில் பெறுதற்கரிய கருணையை அடைந்தவர் வாஞ்சிக்கப்பெறுவனவாய் அனைத் தும் அருமையாயினவென்றாலும் நொடிப்போதில்

அறிந்தேன் தெரிவருள் முனிவ நீயுறை வனத்தில் செறிவன தேவதை இங்ஙன் விரிஅலர் கொடியாழ் வீடுதைவீட்டிடையே விருப்பொடும் இருப்பவள் நானே = சுபமாகக் கிட்டும் என்று சம்சயமின்றி அறிந்துளேன் ஞானத்தை அநுக்கிரகஞ்செய்யும் முனி சிரேஷ்டரே தேவரீர் வசிக்கும் கடம்பாதி இவ் வனத்தில்வாழும் வனதேவி யான் இவ்வண்ணம் விரிந்த புஷ்பங்கள்நிறைத்த லதையாம் விசித்திர லீலாலயத்தில் இச்சையோடு வாசஞ் செய்பவள்.

மேடமா தத்திற் பிறைபதின் மூன்று கலையுற மேவிய நாளி
னுடரு மதன னுயர்திரு நாளி னந்தன வனத்திலே வந்து
கூடிய வனதே வதைக்கணந் தன்னைக் குறுகினேன் பாங்கியர் முழுதுந்
தேடரு மைந்த ருடன்மகிழ்ந் திருந்தார் சிறுவனில் லாதயான் றளர்ந்தேன். (71)

மேஷமாதத்தில் பிறை பதின்மூன்று கலையுற மேவியநாளில் நாடரும் மதனன் உயர்திரு நாளில் நந்தனவனத்திலே வந்து கூடிய வனதேவதைக்கணந் தன்னைக் குறுகினேன் பாங்கியர் முழுதும் தேடரும் மைந்தருடன் மகிழ்ந்திருந்தார் சிறுவன் இல்லாத யான் தளர்ந்தேன் = சித்திரைமாதத்தில் சுக்கிலபட்சதிரயோதசிதினத்தில் நாடுதற்கரியஸ்மர, மதனபண்டிகையாம் உற்சவத்தில் பூங்காவனத்தின்கண்ணே வந்து ஒருங்குசேர்ந்த வனதேவிகளின் கூட்டத்தை யானும் அடைந்தேன் அந்த வனதேவதைகளின் சமாஜம்யாவும் தவத்தினால் அருமையாய் அடையத்தக்க புத்திரர்களுடன் சந்தோஷமாகக் கீதம் நாட்டியம், போஜனாதிகளும் செய்திருந்தார்கள், குழந்தையில்லாத அபாக்கியவதியாகிய யான் அத்தியந்தம் துக்கிதையானேன்.

காதலித் தவர்க்குக் கருதிய தளிக்குங் கற்பக மனையநீ யிருப்ப
நாதனே நாத ரில்லவர்போல நான்மகற் கிரங்குத னலனே
நீதரல் வேண்டும் புதல்வனையன்றி நின்னரு ளென்பொருட் டிலதேற்
றீதரு மதலை யிலதெனுந் துன்பஞ் செந்தழன் மூழ்கியே தீர்ப்பேன். (72)

காதலித்தவர்க்கு கருதியதளிக்குங் கற்பகம் அனைய நீ இருப்ப நாதனே நாதரில்லவர்போல நான்மகற்கு இரங்குதல் நலனே புதல்வனை நீ தரல்வேண்டும். அன்றி நின் அருள் என் பொருட்டு இலதேல் தீதருமதலை இலதுஎனுந் துன்பம் செந்தழல் மூழ்கியே தீர்வேன் = விருப்பத்தோடு வேண்டுவார்க்கு வேண்டிய யாவற்றையுந் தரும்படியான கற்பகத்தருவிற்குச் சமானமாகத் தேவரீர் எழுந்தருளியிருப்பது காப் பாற்றுந் தேவதேவனே அநாதரரைப்போல அடியாள் குழந்தை இல்லவளாய் இரக்கமாய் வாட்டமுற்றிருத்தல்நன்றோ மைந்தனைத்தேவரீர் அநுக்கிரகஞ் செய்தருளல்வேண்டும். அவ்வாறு அருளாது திருவருள் இலதேயாயின் குற்றமற்ற மைந்தன் இல்லையென்னுந் துயரம் ஜொலிக்கும் அக்கினியில்பிரவேசித்துத் தீர்த்துக்கொள்வேன்.

என்னலு முனிவ னகைத்தொரு மலரை யீந்தொரு மதியிலே யெளிதா
யன்னமே மகவைப் பெறுதியா னீமுன் னருங்கனன் மூழ்குவே னென்னு
வின்னலால் வலித்து மகவும்வண்டுதலா லினிதுநீ யீன்றிடு மகவும்
பின்னுறு வருத்த நெறியினுன் ஞானம்பெறுமெனப் பேசினன் பெரியோன். (73)

என்னலும் முனிவன் நகைத்து ஒரு மலரையீந்து ஒரு மதியிலே எளிதாய் அன்னமே மகவைப் பெறுதிமுன் அருங்கனல் மூழ்குவேன் என்னு இன்னலால் வலித்து மகவு வேண்டுதலால் இனிது நீ ஈன்றிடும் மகவும் பின்னுறுவருத்த நெறியினுல் ஞானம்பெறும் எனப் பெரியோன் பேசினன் =

இவ்வண்ணம் வனதேவி இயம்பலும் தாசூரமுனிவர் புன்னகைகொண்டருளி ஒரு புஷ்பத்தைத் தந்தருளி ஒரு மாசத்திலே அநாயாசமாய் தன வங்கியே புத்திரனைப் பெறுவாய் பூர்வம் அரிய தீயில் யான் வீழ்ந்து என் துயர் தீர்ப்பேன் என்று துயரத்தால் பலாத்காரப்படுத்திப் புத்திரனை யாசித்தலால் பிற்போது பிரயாசம் பெரிதுற்ற மார்க்கமாக அம் மைந்தன் பிரஹ்மவித்தையை அடைவன் என்று மகாத்மாவாய தாசூர முனிவர் அநுக்கிரகித்தார்.

கேட்டவண் மகவு கிடைத்ததே யென்று கிளர்முக மதிநிலாக் குலாவ
மீட்டுமம் முனியை நோக்கிநின் னேவல் விரும்பியீண் டுறைகுவ னென்ன
வாட்டமின் முனிவ னியைந்திலன் விடுப்ப வந்தன ளணங்குதன் னிடத்திற்
சேட்டமா மகவை யளித்தனள் கலையாற்செறிதரு மதியென வளர்த்தாள். (74)

கேட்டவள் மகவு கிடைத்ததே யென்று கிளர்முகம் மதிநிலாக் குலாவ மீட்டும் அம் முனியை நோக்கி நின்னேவல் விரும்பி யீண்டுறைகுவனென்ன வாட்டம் இல் முனிவன் இயைந்திலன் விடுப்ப அணங்கு தன்னிடத்தில் வந்தனள் சேட்டமாமகவை அளித்தனள் கலையாற் செறிதரு மதி என வளர்த்தாள் =

முனிவர் வசனத்தைக்கேட்ட வனதேவி புத்திரப் பாக்கியம் கிடைத்ததே (அடையப்பெற்றேமே யென்று) விளங்காநின்ற முகம் பூரணச்சந்திர காந்திவீச மீண்டும் அம் முனியைப் பார்த்துத் தேவரீரது பணிவிடையை இச்சித்து இவ்விடத்திலேயே வசிக்கின்றேன் என்று கூறச் சந்தோஷ விஷாதமில்லாத தாசூர முனிவர் சம்மதித்திலர். செல்லுமாறு உத்தரவு அளிப்பத்தனதிடம் (தனது வாசஸ்தலம்) அடைந்தனள். வந்தபின் சிறப்பு வாய்ந்த புத்திரனைப் பெற்றனள். கலையால் வளர்ந்துவரும் பூர்வபட்சத்துச் சந்திரன் என வளர்த்தனள்.

இருதுவே யாண்டே யெனுங்குறிகளினு லிறந்தன வாறிரண் டாண்டு
திருமுனி பாத மகவொடுமடைந்து சென்னிதாழ்ந் தெதிருற நின்று
பெருமைகண் டருள்வாய் நீதர யானே பெற்றவிப் பெருங்குணக் குமர
னருமறை நூல்க ளனைத்தையு நானே யளித்திட வறிவினு லறிந்தான். (75)

இருதுவே ஆண்டேயெனுங் குறி களினல் ஆறிரண்டாண்டு இறந் தன திருமுனிபாதம் மகவொடும் அடைந்து சென்னி தாழ்ந்து எதி ருறநின்று பெருமைகண்டருள் வாய் நீதர யானே பெற்ற இப் பெருங்குணக்குமரன் அருமறை நூல்கள் அனைத்தையும் நானே அளித்திட அறிவினல் அறிந் தான் = இரண்டுமாதம் ஒரு ருது பன்னிருமாதம் ஒருவரு டம் என்னுஞ் சின்னங்களினல் பன்னிரண்டு ஆண்டுகள் சென்றன. தாசூர மூனிவரது திரு வடியை மைந்தனேடும் வந்துசேர்ந்து நமஸ் கரித்துச் சந்நிதியிற் கைகூப்பி நின்று தோத் தரித்துத் தவத்தின் மகிமையைப் பார்த்தருள் வாய் தேவரீர் வரம் தந்தருள வனதேவியாகிய யானே ஈன்ற சாந்தியாதி குணங்களையுடைய மைந்தனுக்கு அரிய வேத சாஸ்திரக் கலைகள் யாவையும் யானே படிப்பித்துளேன் சூக்கும மதி யினல் உணர்ந்துகொண்டான்.

கலையெலா நிறைந்தும் பிறப்பிலாஞானங் கண்டிலன் கடற்பவத் துயரா
லலைவுரு நின்ருன் றனையுணர்ஞான மளித்தியென் றணங்குரை செய்ய
நிலைகொண்மா ணுக்க னமக்கிவ ணுக்கி நீயகல் கென வவ ளகன்ரு
டலைமைசேர் முனிவன் ருளிணை விடாது சற்குண மதலையு நின்ருன். (76)

கலையெலாம் நிறைந்தும் பிறப் பிலா ஞானங் கண்டிலன் பவக் கடல் துயரால் அலைவுருநின்ருன் தனையுணர்ஞானம்அளித்திஎன்று அணங்கு உரை செய்ய நிலை கொள் நமக்கு இவன் மாணுக்கன் ஆக்கி நீயகல்கென அவள் அகன் ருள் தலைமைசேர் முனிவன் தாளிணை விடாது சற்குண மதலையும் நின்ருன் = சர்வ சாஸ்திர சம்பத்து நிறைந்திருந்தும் இவன் கேவலம் ஜனனமறுக்கும் பிரஹ்மவித்தையைத் தரிசித்திலன் ஜனன மரண சம்சார சாகரத் துக்கத்தால் அலைந்து வருந்துரு நின்ருன். ஆத் மாவை அறியும் ஞானத்தை உபதேசித்தருள் வாய் என்று வனதேவி கூறியபோது ஸ்திரமாய் என்னேடு கூடியிருக்கும்படி நமக்கு இவனைச் சீடனுக இவ்விடம் விட்டு விட்டு நீ உனது சுவஸ் தானத்தை அடைவாயாகவென்று கூறலும் அவ் வனதேவி தனதிடஞ் சென்றனள். முதன்மை வாய்ந்த முனீந்திரரது திருவடித்தாளிணை விட்டு நீங்காமல் நல்லகுணங்கள் வாய்ந்த மைந்தனும் சேவை செய்துகொண்டிருந்தான்.

வருந்திமெய்ஞ் ஞானம் பெறத்தகு மகவை மாதவ னருளினன் மெல்லத்
திருந்திய கதைக ளளவைக ளிதிகா சத்திலே செப்பிய திறங்கள்
பெருந்துணை மறையின் முடிவிலே துணிந்து பேசிய பழம்பொருண் மற்றுப்
பொருந்திய நெறிக ளனேகமாய் விரித்துப் பூரண போதமே புகன்ருன். (77)

வருந்தி மெய்ஞ்ஞானம் பெறத்தகு மகவை மாதவன் அருளினல் கஷ்டப்பட்டுத் தத்துவ அபரோக்ஷ ஞானத்தை அடையத்தக்க குழந்தையைப் பெருந்தவத்தை

மெல்லத் திருந்திய கதைகள் அளவைகள் இதிகாசத்திலே செப்பிய திறங்கள் பெருந்துணை மறையின் முடிவிலே துணிந்து பேசிய பழம்பொருள் மற்றும் பொருந்திய நெறிகள் அநேகமாய் விரித்துப் பூரண போதமே புகன்ருன் = யுடைய தாசூரர் கிருபையினுல் சாவதானமாகத் திருத்தமான ஆக்கியாகை, ஆக்கியானம் என இருவகை அவற்றில் பிரத்தியக்ஷமாகப் புலப்படும் பொருள் ஆக்கியாகியை, பரோக்ஷவிருத்தாந்தம் ஆக்கியாளம், சாமியதரிசன திருஷ்டாந்தங்கள், சுவஞான கற்பிதமான முமுட்சுக்களுக்கு அரிய துணையான உபநிடதங்களிலே பிரதிபாதிக்கும் நிச்சய வடிவ சித்தாந்தங்கள் இதிகாசங்களிலே செப்பிய தன்மைகள் மைந்தனது அநுபூதிக்கொத்த அநேகவித உபாயங்களாலும் பரிபூரண பிரஹ்மஞானத்தை உபதேசித்தனர்.

வானதி மூழ்க வதுநெறி யாக வானிலே மறைந்துபோ யொருநா
ளானவேழ் முனிவர் பதவிநின் றணுகி யணையதா சூரன்வாழ் கடம்பின்
ருனமே மேவி யிருட்பொழு திருந்து தாபதன் தனயனுக் குரைத்த
ஞானநற் பொருள்கள் கேட்டன மதனை நாமுனக் குள்ளவா றுரைப்பாம். (78)

வானதிமூழ்க அது நெறியாக வானிலே மறைந்து போய் ஒரு நாள்ஆன ஏழ் முனிவர் பதவிநின்றணுகி அணையதாசூரன் வாழ் இடம் பின்ருனமே மேவி இருள் பொழுதிருந்து தாபதன் தனயனுக்கு உரைத்த நல் ஞானப் பொருள்கள் கேட்டனம் அதனை நாம் உனக்கு உள்ளவாறு உரைப்பாம் = ஸ்ரீ கங்கையில் (தெய்வ நதியில்) ஸ்நானஞ்செய்யும் பொருட்டு அம் மார்க்கமாய் ஆகாயவீதி சென்று வந்தேம்; யாம் அதிருசிய ரூபமாய்ப் போய்க்கொண்டிருக்கும் ஒருதினத்தில் மேலான சப்தமுனி மண்டலத்தி னின்றுஞ் சென்று மேலே சொல்லப்பட்ட தாசூர முனிவர் வசிக்கும் கதம்பதருவின் இடமேயடைந்து இராப்போது தங்கி இருந்து தவத்தையுடைய தாசூர முனிவர் மைந்தனுக்கு உபதேசித்த நல்ல ஞானர்த்தங்களைக் கேட்டேம் யாம் இராகவா உனக்குக் கேட்டபடியே கூறுவேம்.

பிறப்பிலாப் பிரம மிதுவென வறுதி பிறப்பதோர் கதையிது கேளாய்
சிறப்பதோ ரரசன் வீரமும் புகழுஞ் சிறந்தவன் தெளியனும் பெயரோ
னிறப்புறு முலக பாலரா யுள்ளா ரவனுடை யேவலை முடிமே
னிறப்புறு மணிபோற் ருங்குவ ரெவர்க்கு நிலைபெற நிறுத்தொணு
நெடியோன். (79)

பிறப்பிலாப் பிரமம் இதுவென அறுதி பிறப்பதோர் கதை இதுவாம் கேளாய் சிறப்பதோர் அஜமாய பிரஹ்மம் இஃதென்று நிச்சயம் உண்டாவதாய ஒப்பற்ற ஒருகதை இதுவாம் கூறக் கேட்குதி அவ்வியாகிருத ஆகாசத்தினின்றும்

அரசன் வீரமும் புகழுஞ் சிறந்த வன் தெளிஞனும் பெயரோன் சிறப்புறும் உலகபாலராயுள்ளார் அவனுடைய ஏவலை முடிமேல் நிறப்புறுமணிபோல் தாங்குவர் எவர்க்கும் நிலைபெற நிறுத் தொணு நெடியோன் = எழுந்தவனுய் ஒருமன்னவன் மிகவுஞ்சிறந்தவன் வீரமும் புகழும் மிக்கவன் சுகோத்தனென்னும் நாமமுள்ள ஸ்ரீமான் அதித்தியமான புவனநாய கராயிருப்பவர் அவ்வரசனுடைய ஆக்ஞையைச் சிரசின்மீது அணியாநின்ற இரத்தின கிரீடம் போலத் தரிப்பர் பிரமாதி எவர்களாலும் ஸ்திதி பெறும்படியாக வசீகரிக்க முடியாத மகாத்மா.

சாகச மொன்றும் விரும்புவோன் பலவாச் சாலவும் வியப்புறு தொழிலோன்
சோகமு மகிழ்வுந் தருவதாய் முயலுந் தொழில்களின் றொகுதியை யெண்ணின்
மாகட லலைக ளெண்ணினுந் தொலையா வாட்படை வாயுவன் னிகளி
லேகமு மிவனை யடர்வுரு தாகு மிருகையால் விண்ணையென் செயலாம். (80)

சாகசம் ஒன்றும் விரும்புவோன் சாலவும் பலவா தொழிலோன் சோகமும் மகிழ்வும் தருவதாய் முயலுந் தொழில்களின் தொகு தியைஎண்ணில் மாகடல்அலைகள் எண்ணினுந் தொலையா வாள் படை வாயுவன்னிகளில் ஏகமும் இவனை அடர்வுரு தாகும் இரு கையால் விண்ணை என் செயலாம் = சாகசம் (பிடிவாதம்) கருதிய விஷயத்தை எவ் வாற்ருலும் நிலைநிறுத்துவது பிடிவாதம் ஒன்றி லேயே இரமிப்பவன் அத்தியந்தம் ஆச்சரியமான விவகாரவான் துக்கசுகங்களை ஈவனவாய்ச் செய்யும் தொழில்கூட்டத்தை அளவிடில் (கணக் கிடுவோமாகில்) மகத்தான சமுத்திரத்தின் தரங் கங்களை அளவிடினும் முடியாதகாரியமாம்; சஸ் திரம், அஸ்திரம், காற்று, அக்கினி இவைகளில் ஒன்றேனும் துன்பம் உனக்குப் பண்ணுவாம்; இரண்டு கரங்களால், முஷ்டிகளால் ஆகாயத்தை யாது செய்தல்கூடும்.

வரம்பற விரிந்து லீலையாற் புரியு மட்டறு முயற்சிக ளனைத்துந்
திரம்பெறு தேவர் மூவரா லெனினுஞ் சிறிதுபிற் செல்லவு மரிதாம்
பரம்பிய விவனுக் குடலமா யெல்லாம் பரிப்பவர் மூவருண் டனைய
ருரம்பயி லுலகை யடர்ந்துநிற் பவர்க ளுத்தமன் மத்திம னதமன். (81)

வரம்பற விரிந்து லீலையாற் புரியும் மட்டறு முயற்சிகளனைத் துந் திரம்பெற தேவர் மூவரா லெனினுஞ் சிறிதும் பிற்செல்ல அரிதாம் பரம்பிய இவனுக்கு உடலமாய் எல்லாம் பரிப்பவர் உண்டு அனையர் உரம்பயில் உலகை அடர்ந்து நிற்பவர்கள் உத்தமன் மத்திமன் அதமன் = எல்லையில்லாமல் விஸ்தரித்து விநோதமாகச் செய்யும் அளவில்லா ஆடம்பரமனைத்தும் நிலை பெற்ற இந்திராதி பிரமாதி மூவராலெனினும் அற்பமும் பின் அநுசரித்துச்செல்ல ஆற்றலற்றவ ராவர்; விரிந்து விளையாடும் இம் மகானுபாவ னுக்குத் தேகங்களாய் யாவற்றையும் ஆக்கித் தாங்குபவர் மூன்றுபேர் இருக்கின்றனர்; அம் மூவரும் அதிதிடமான இப்பிரபஞ்சத்தை ஆக்கிர மணஞ்செய்து வாழ்பவர் உத்தம மத்திம அதம ராவர்.

முடிவிலா விசும்பிற் ரேன்றியாங் குறைவோன் மூவகை யுடலுடை முதல்வ
னெடியவவ் விசும்பி லவன்றரு நகர நீண்டவீ திகள்பதி னுலா
மொடிவறு பகுதி மூன்றினு லெழிலா ருபவனம் வனங்கள்செய் குன்றங்
கொடிநிகர் முத்த மாலையேழ் வாவி குளிர்கொதிப் புளவிரு தீபம். (82)

முடிவிலா விசும்பில்தோன்றி உறைவோன் மூவகை உடலுடை முதல்வன் நெடியஅவ் விசும்பில் அவன் நகரம்தரு நீண்டவீதிகள் பதினாலாம் ஒடிவறு பகுதிமூன்றினுள் எழிலார் உபவனம் வனங்கள் செய்குன்றம் கொடிநிகர் முத்தமாலை ஏழ்வாவி குளிர்கொதிப்புள இருதீபம் = அபரிச்சின்னமான ஆகாயத்தில் உதித்து அங்கு இருப்பவன். மூன்றுபிரகாரமாய்ச் சரீரஞ்சார்ந்த கருத்தன் வியாபக அவ்வாகாயத்தில் பிரமாண்ட ரூப நகரத்தை உண்டாக்கினன் சதுர்த்தச மகா வீதிகள் உளவாம் ஞானத்தாலன்றிக் கெடாத வியாபகத் திரயபூஷிதமாய்க் கெடாதிருக்கும் சிறப்புப்பொருந்திய நந்தன வனங்கள் உப வனங்களும் கிரீடாதக சுந்தரம்வாய்ந்த மேரு மந்தராதிகள் லதைக்குச் சமானமான நதிகள் ஏழால் அதில் மிகுத்துள்ளது சீதள உஷ்ணவடிவ இரண்டு தீபங்களையுடையது அந்நகரம்.

என்பன நிறைந்த விந்நகரத்தி லிவன்றரு மபவர கினங்கண்
முன்புறு கீழ்மே னடுவெனும் பதங்கள் முழுதினு முழல்வுற விதித்த
வன்புறு தூண்கண் மூன்றுள வெலுப்பு மரங்களாற் செறிந்தன புண்ணீர்
மென்படர் தோளா னெய்த்தினி தான விரிமயிர்க் கற்றையான் மேய்ந்த.(83)

என்பனநிறைந்த இந்நகரத்தில் இவன்தரு முன்புறு அபவரகினங்கள் கீழ்மேல் நடுவெனும் பதங்கள் முழுதினும் உழல்வுற விதித்தவன்புறு தூண்கள் மூன்றுள வெலுப்பு மரங்களால் செறித்தன புண்ணீர்மென்படர் தோளால் நெய்த்தினிதான விரி மயிர்க்கற்றையால் மேய்ந்த = இத்தன்மையனவாக நிரம்பப்பெற்ற இப் பட்டணத்தில் இம்மகாத்மாவால் சிருஷ்டிக்கப்பட்ட பிரத்தியக்ஷமாகப் பொருந்திய வீட்டின் கூட்டங்கள் (தேவ மநுஷ்யாதி சரீரங்களே வீடுகளாம்) தாழ்ந்து உயர்ந்து இடைப்பட்டனவென (வாத பித்த கபம்) மூன்றுள்ளனவாய ஸ்தம்பங்களாம் வெண்மைபொருந்திய எலும்பு நிரம்பினவாம் இரத்தம் (உதிரம்) மிருதுவாகப் பொருந்திய சர்மத்தானே பசையோடு அழகாய் விரிந்துள்ள கேசப் புற்கத்தையால் மூடப்பெற்றனவாம்.

மந்தமா ருதஞ்சூழ் சாலக மொன்பான் மருவின வைம்பொறி யென்னுஞ்
சுந்தர விளக்கால் விளங்குவ விரண்டு தோளெனுந் தோற்றமு முடைய
வந்தமில் பரம பாவனைக் கஞ்சு மகங்கரப் பேய்கள்காத் தளிப்பச்
சந்தத மிலாத மாயையா லந்தத் தரணிபன் சமைத்தபா வறைகள். (84)

சந்ததம் இலாத மாயையால் அந்தத் தரணிபன் சமைத்த பாவறைகள் மந்தமாருதஞ்சூழ் சாலகமொன்பான் மருவின ஐம் பொறியென்னுஞ் சுந்தரவிளக் கால் விளங்குவ இரண்டுதோள் எனுந் தோற்றமுமுடைய அந்த மில் பரமபாவனைக்கு அஞ்சும் அகங்கரப் பேய்கள் காத்தளிப்ப = ஏப்போதுமில்லாத மகாமாயா சக்தியால் அந்தச் சுகோத்தன் உண்டாக்கிய அபவரங்கள்(வீடுகள்) தென்றல்காற்று வீசும் ஒன்பது ஜன்னல்கள் பொருந்தியுள்ளன பஞ்சேந்திரியங்களென்னும் அழகிய தீபங்களால் கலங்குவன இருபுயங்கள் என்னும் மார்க்கம் உடையனவாம்; தேசகால வஸ்து பரிச்சேதரகித பரமான்மாவைச்சிந்திக்கப் பயப்படும் அகங்கரமென்னும் யக்ஷர்கள் இரட் சித்துப் போற்றுவனவாம்.

அசைதரு மினிய பாவறைத்திரளி லகங்கரப் பேய்களோ டுலாவிக்
குசைதரு விநோதம் விவிதமா லியற்றிக் கூடுறை புள்ளென வுறைந்து
விசையினு லிவற்றை விட்டகன் றயலே மேல்வரு பாவறை விதித்து
நசையுற மேவிப் பூதவா வேச நண்ணினர் போலவ னடிக்கும். (85)

அசைதரும் இனிய பாவறைத் திரளில் அகங்கரப்பேய்களோ டுலாவி விவிதமாம் விநோதம் இயற்றி குசைதரு கூடுறைபுள் ளென வுறைந்து விசையினால் இவற்றை விட்டகன்று அயலே மேல்வரு பாவறை விதித்து நசையுற மேவி பூதஆவேசம் நண்ணினர்போல அவன் நடிக்கும் = சலனரூபமாய் இன்பாலய அபவரக் கூட்டங் களில் அகங்காரங்களாகிய யக்ஷர்களுடன் சஞ் சரித்து அனேக பிரகாரமான விசித்திரங்களைச் செய்து தர்ப்பைப்புல்லால் உண்டாய நீடத்தில் வாழும் பக்ஷியென்று சொல்லும்படியிருந்து உண்டாகும் சரீரமாகிய வீட்டை விதானஞ் செய்து ஆசையோடு அதனையடைந்து பிசாசு பிடித்து ஆடுபவன்போல் அத்தரணிபன் (ஜீவன்) நடனம்புரிபவன்,

இவற்றைவிட் டவற்றை யெய்துவமென்றே யெண்ணுற வப்படி யெய்து
மவற்றினின் றிறப்போ மென்றெணு நினைவாலப்படி யிறந்துபோஞ் சித்தங்
கவற்றியா லலையப் பிறந்திறந் துழலுங் ககனமே யிவற்றினுக் கிடமாந்
தவற்றினை யெய்தி மீளவுந் தோன்றுந் தவழ்திரை நீரிலே வரல்போல். (86)

இவற்றை விட்டு அவற்றை எய் துவமென்றே எண்ணுற அப்படி எய்தும் அவற்றினின்று இறப் போம் என்றெணு நினைவால் அப் படி இறந்துபோம் சித்தம் கவற்றி யால் அலைய பிறந்திறந்து உழ இவ்வபவரகங்களை விடுத்து அவ்வபவரகங்களை அடைவோம் என்பதாகச் சிந்திக்க அவ்வாறே அடையும் அவ்வபவரகங்களினின்றும் இறந்து விடுவோம் என்பதாகக் கருதுஞ் சங்கற்பத்தால் அவ்வாறு மரித்துப்போம். மனம் வருத்தத்தால்

லுங் ககனமே இவற்றினுக்கு இடமாம் தவற்றினையெய்தி மீளவுந் தோன்றும் தவழ்திரை நீரிலே வரல் போல் = சஞ்சலப்பட ஜனித்து மரித்து அவதிப்படும் சிதாகாசமே இவ்வியாவற்றிற்கும் ஆதாரமாம், நாசத்தினையடைந்து மீண்டும் பிறந்திடும் அசையும் அலை கடலின்கண்ணே வருதல் போலும்.

மேனிமூன் றுடையோன் சிறந்தகந் தர்ப்ப விதித்தவூ ரனையதற் புரத்திற்
றனினி திருந்து தொலைவற மேன்மேற் றழைப்புறு காரிய வசனு
யீனமா மொருகா னன்மையா மொருகா லென்செய்வோ மென்றிடு மொருகான்
மானமா மொருகான் மயக்குறுந் தெளியும் வருந்துறு மகிழ்வுறும் பலகால். (87)

மேனி மூன்றுடையோன் சிறந்த கந்தர்ப்பவிதித்தவூரனைய தற் புரத்தில்தான் இனிதிருந்து தொலைவற மேன்மேல் தழைப்புறு காரியவசனுய் ஒருகால் ஈனமாம் ஒருகால் நன்மையாம் ஒருகால் என்செய்வோமென்றிடும் ஒருகால் மானமாம் மயக்குறுந் தெளியும் பலகால் வருந்துறும் மகிழ்வுறும் = தூல, சூக்கும, காரண முத்தேகங்களையுடையவன் விசித்திர சம்பத்தையுடைய கந்தருவர்களானே நிர்மிக்கப்பெற்ற பட்டணம்போன்ற தனது நகரத்தில்தான் ஆனந்தமாக வீற்றிருந்து ஒழிவின்றி மேலும் மேலும் விருத்தியாகும் தொழிற்பரவசனுய் ஒருபோது கெடுதலையடைவன், ஒருபோது நலத்தையடைவன், ஒருபோது யாதுசெய்யற்பாலதென்று கருதுவன், ஒருபோது அபிமானத்தையடைவன், ஒருபோது மயங்கித் திரிவன், ஒருபோது தெளிவுற்று வாழ்வன், பலபோது துக்கமடைவன், சந்தோஷமடைவன்.

தளர்ந்தன னென்னுந் தடித்தன னென்னுந் தாழ்ந்தன னுயர்ந்தன னென்னும்
வளர்ந்தன னென்னுங் குறைந்தன னென்னு மாருத மோதுறு கடல்போ
லுளந்தனு லந்த மன்னவன் சுழல்வ துரைப்பதெ னென்றலு மைந்தன்
கிளர்ந்ததா தையைநீ தெளிஞனென் றுரைத்த கீர்த்தியோ னுரெனக்
கேட்டான். (88)

தளர்ந்தனனென்னுந் தடித்தனனென்னும் தாழ்ந்தனன் உயர்ந்தனனென்னும் வளர்ந்தனனென்னும் குறைந்தனனென்னும் மாருதம் மோதுறுகடல்போல் உளந்தனுல் அந்த மன்னவன் சுழல்வது உரைப்பதுஎன் என்றலும்மைந்தன் கிளர்ந்த தாதையை நீ தெளிஞனென்றுரைத்த கீர்த்தியோன் யாரெனக் கேட்டான் = இளைத்திருக்கின்றனன் என்பன் பருத்திருக்கின்றேன் என்பன் கிழவன் ஆயினேன் மேலவன் ஆயினேன் என்பன் நெட்டையன் ஆயினேன் என்பன் குட்டையன் ஆயினேன்என்பன், பெருங்காற்றுல் மோதி அடிக்கப்பட்ட சமுத்திரம்போல, மனத்தினுல் அம்மகீபதியானவன் சுற்றித்திரிவது சொல்வது என்னேயென்று தந்தை கூறலும் இவ்வாறருளிய தந்தையாகிய ஆசிரியரை நோக்கித் தேவரீர் சுகோத்தன்என அருளியவன் யார்.

வண்மையா லந்த மன்னனை யுரைத்தால் வரும்பிறப் பிறப்பெனும் பொய்யி
னுண்மைநன் குணர்தி யென்றுதா சூர னுத்தம மைந்தனுக் குரைப்பா
னெண்மய மாகிப் பொய்யெனத் தோன்றி யிடமுற விரிமுயற் சியதாய்க்
கண்மய லான பிறவியி னிலையைக் கட்டுரை யாகமுன் னுரைத்தோம். (89)

வண்மையால் அந்த மன்னனை உரைத்தால் வரும் பிறப்பு இறப்பு எனும் பொய்யின் உண்மை நன்குணர்தியென்று தாசூரன் உத்தம மைந்தனுக்கு உரைப்பான் எண்மயமாகிப் பொய்யெனத்தோன்றி இடமுற விரிமுயற்சியதாய் அயல்கண் மயல்ஆன பிறவியின் நிலையை கட்டுரையாக முன்னுரைத் தோம் = உண்மையாக அவ்வரசன் இன்னானெனத் தெரியச்சொன்னால் கர்மாதீனமாய் வரும் ஜனனம் மரணமென்னும் மித்தியாதத்துவத்தை நன்றாக நீ தெரிந்துகொள்ளுவாய் என்பதாகத் தாசூர மகரிஷியானவர் நான்குசாதனங்களும் நிறைந்த தமது சீடனுக்கு உபதேசிக்கத் தொடங்கினர் சக்கற்பமாத்திர வுருவுடையதாய் அசத்தென எழுந்ததாய் விஸ்தாரமாய் விபரீத திருஷ்டியா லான இப் பிரபஞ்சமியாவும் பொய்யாகப் பூர்வம் யாம் கூறினேம்.

தற்பர விசும்பி லுதித்தசங் கற்பஞ் சாற்றிய தெளிஞனு மன்னன்
பற்பல காலுந் தோன்றியு மறையும் பரம்பிய வுலகதன் வடிவா
மற்பசங் கற்ப முளதெனி லுலகுண் டதுவில தெனிலுல கிலதா
முற்படு மூவர் முதலிய தேவர் மொய்த்தமெய் யவயவ மதற்கே. (90)

தற்பர விசும்பில் உதித்த சங்கற்பஞ்சாற்றிய தெளிஞனும் மன்னன் பற்பலகாலுந்தோன்றியும் மறையும் பரம்பிய உலகு அதன் வடிவாம் அற்பசங்கற்பம் உளதெனில் உலகு உண்டு அது இலதெனில் உலகு இலதாம் முற்படு மூவர் முதலிய தேவர் அதற்கு மொய்த்த மெய் அவயவம் = தற்பத இலக்ஷியார்த்தமான சிதாகாசத்தில் உதயமாகிய எண்ணமே உனக்கு உரைத்த சுகோத்தனென்னும் மகீபதியாவன் பலபல போதும் தானாகவேபுலப்படும் தானாகவே லயமாம் விஸ்தாரமாய இப்பிரபஞ்சமியாவும் அச்சங்கற்ப மன்னனாகிய வடிவாம் தோற்றமாத்திரமாய சங்கற்பம் (நினைவு உண்டாமாயின் இச்சகம் உளதாம்) அவ்வெண்ண மிலதாயின் இச்சகம் இல்லதேயாம். அற்றேல் பிரம்மா விஷ்ணுவாதிகளானே சகத்து உண்டாயதுஎனக் கேட்கப்பெறுகின்றது அங்ஙனமாக யாங்ஙனம் அன்னியத்தினின்றும் உண்டாகின்றதென்று கூறுதல்கூடும் எனச் சங்கித்து விடைதருதல் தலைமைவாய்ந்த பிரம்மவிஷ்ணுவாதிகள் அச்சங்கற்ப மன்னனும் அதற்கே நெருங்கிய அச்சரீர அவயவங்களேயாம் எனக் கூறப்பெறுவார்கள்.

மேயதன் பத்திப் பாச்சன்மாத் திரத்தால் விரிஞ்சனும் பாவனைமேவி
யாய்சங் கற்பம் வடிவிலாவிண்ணி லமைத்தது முப்புவி நகர
நாயக ரீரே ழாகிடு மீரேழ் ஞாலமே னகருறு தெருக்கள்
டூயஞா லங்கள் செறிபொழிற் றிரள்கள் சொல்லிய வனமுப வனமே. (91)

மேயதன் பத்திப்பாய்ச்சல் மாத் திரத்தால்ஆயசங்கற்பம் வடிவிலா விண்ணில் முப்புவிநகரம் அமைத் தது நாயகரீரேழாகிடும் ஈரேழ் ஞாலமே நகருறு தெருக்கள் தூய ஞாலங்கள் செறிபொழில் திரள் கள்சொல்லியவனம் உபவனமே=

கற்பனையாகப் பொருந்திய தனது பிரதிபாச அநு சந்தானத்தால் விரிஞ்சித்தன்மையை அடைந்து அனர்த்த காரணமாய அச் சங்கற்பம் உருவமற்ற (அருவமான) சிதாகாசத்தில் சொர்க்க மத்திய பாதாளமென்னும் முப்புரவடிவ பட்டணத்தை லோகபாலகர் பதினன்காய் உள்ள பதினன்கு புவனங்களே, அந்நகரத்தில் பொருந்திய வீதி களாம், பரிசுத்தமாய் அப் புவனங்களில் பொருந் திய உத்தியான பரம்பரைகள் கூறிய வனோப வனமாலையாம்.

மேருமந் தரமே முதலவந் நகரின் மேவிய விநோதவெற் பினமாஞ்
சூரியன் றிங்கள் காற்றினு லசையாச் சுடர்களா நித்தில மாலை
நீருயர் நதியின் றிரள்களாம் வாவி நிகழ்த்திய வேழெனு மவைதான்
பேரியல் வடவை கமலமாய்ப் பூத்த பெருங்கட லேழுமே பெரியோய். (92)

அந்நகரில் மேவிய விநோத வெற் பினமாம் மேருமந்தரமே முதல சூரியன்திங்கள் காற்றினு லசை யாச் சுடர்களாம் நித்திலமாலை நீர் உயர் நதியின் திரள்களாம் நிகழ்த்தியவாவி ஏழ் எனும் அவைதான் பேரியல் வடவை கமலமாய்ப்பூத்த பெருங்கடல் ஏழுமே பெரியோய் =

அப் பட்டணத்தில் பொருந்திய கிரீடாபர்வதக் கூட்டங்களாம் மேருகிரி மந்தரகிரி சக்யகிரி முதலியனவாம். பருதி, மதி வாயுவால சைக்கப் படா சலனமில்லாத உஷ்ணசீத தீபங்களாம் முத்துமாலை ஜலப்பிரவாகம் நிறைந்த கூட்டங் களாம், கூறிய தடாகங்கள் ஏழு என்று சொல் லப்பட்ட பெருமை வாய்ந்த வடவானலமாம் தாமரைகளாக வாய்க்கப்பெற்ற சப்த சமுத்திரங் களேயாம் மகாமதியையுடைய மைந்தா.

இனையமா நகராஞ் சகத்திடை முன்ன மியம்புசங் கற்பமன் னவனல்
வினையினல் வந்த வுடல்கள் பாவறையா மேற்பதத் திமையவ ரென்றும்
வனையகீழ் பதத்தி னுகரே யென்று மனிதரே நடுப்பதத் தென்றுந்
துனைதரு வாத வெந்திர விசையாற் சுழல்வன தசைச் சுவரகங்கள். (93)

முன்னம் இயம்பு சங்கற்ப மன் னவனல் இனைய மாநகராஞ் சகத்

பூர்வங்கூறிய சங்கற்ப அரசனல் இத்தகைய இம்மகா மகிமைவாய்ந்த பட்டணமாகிய இவ்

திடை வினையினுல் வத்த உடல்கள் பாவறையாம் மேற்பதத்து இமையவரென்றும் வனைய கீழ் பதத்தில் நரகரேயென்றும் நடுப் பதத்து மனிதரேயென்றும் துனை தருவாத எந்திரவிசையால் தசைச்சுவரங்கள் சுழல்வன = வுலகத்தில் கர்மவசத்தால் உண்டாய சரீரங்களே அபவரகங்களாம். சொர்க்கபதத்துத் தேவர்களென்றும் வனைய, செய்யத்தகுந்த பாதாளலோகத்து ஆதிசேஷ நாகாதியரென்றும் மத்திய பூலோகத்து மநுடாதியரென்றும் வேகமுடைய பிராண வாயுவாம் எந்திரப்பிரவாகத்தால் மாமிச மண்சுவராம் வீடு சலித்து உழல்வனவாம்.

பல்வகை தானே யியங்குறு முடலாம் பாவறை தோறுமவ் வேந்த
னல்வழி யுணர்வை நோக்குற நடுங்கு நலமிலா வகங்கர மென்னும்
வல்லவிப் பேய்கள் பொய்களா யிருந்தும் வந்துமெய் போலெழும் வற்ருே
டொல்வதாம் விஞேதம் புரிதருங் கணத்தி லுண்டுமா மில்லையு மாகும். (94)

புல்வகைதானே இயங்குறும் உடலாம் பாவறைதோறும் அவ்வேந்தன் நல்வழி உணர்வை நோக்குற நடுங்கும் நலமிலா அகங்கர மென்னும் வல்ல இப்பேய்கள் பொய்களாயிருந்தும் வந்து மெய் போல் எழும் அவற்ருேடு ஒல்வதாம் விஞேதம் புரிதருங் கணத்தில் உண்டுமாம் இல்லையு மாகும் = பலவர்க்கங்களானும் வாசனைத் திரவியங்களாலும் நானுவிதமாக விளங்காநின்ற தேகங்களாகிற அபவரகங்கள்தோறும் அம்மன்னவன் நிஷ்காமிய கருமத்தால் மனத்தூய்மை வாயிலாய்ச் சிரவணுதிகொண்டு அடையப்பெறும் பரம ஞானத்தைக் காண்புற்றபோதே அச்சத்தையடையும் தீய அகங்காரமென்னும் வலிமை வாய்ந்த இம் மகா பிசாசுகள் மாயாமயங்களாக இருந்தும் சங்கற்ப மன்னவனுல் உண்டாக்கப் பெற்றுச் சத்தியம்போலச் சர்வாங்கமுடைத்தாம் அம் மகா அகங்கர இயக்கர்களோடும் பொருந்துவதாய் கிரீடை செய்திருப்பன் க்ஷணத்தில் உதயத்தை எய்துவன் இலயத்தையுஞ் சார்வன்.

காயமென் றுரைத்த பாவறைதோறுங் கடலிடையலைகள் போற் ருேன்றி
மாயுமே லியற்று மனைகளில்விடாமல் வரு மிவனியற்றிய வெல்லா
மேயதோர் கணத்தில் வீண்களாய்நசிக்கும் வீணிலே திரிதரு மவன்ரு
ணுயதன் சங்கற் பத்திணு லிருக்கு மவ்வளவு வருந்துய ருழக்கும். (95)

காயமென்றுரைத்த பாவறைதோறுங் கடலிடை அலைகள்போல் தோன்றி மாயும் மேலியற்று மனைகளில் விடாமல் வரும் இவன் இயற்றியவெல்லாம் ஏயதோர் கணத்தில் வீண்களாய் நசிக்கும் சரீரமெனக்கூறிய அபவரகங்கள்தோறும் தோன்றும் அம் மன்னவன் சமுத்திரத்தின்கண் உண்டாம் தரங்கங்கள் நீர்மயமாகுவதுபோல பிரஹ்மத்தின்கண் தோன்றி அதன் வடிவமேயாகும். இனிமேல் கற்பிக்கின்றபுரங்களில் இடைவிடாமல் வந்துசேரும் இம்மன்னவன் செய்த யாவும்

இவன்றன் வீணிலே திரிதரும் ஆயதன் சங்கற்பத்தினுலிருக்கும் அவ்வளவு அருந்துயருழக்கும் = அற்பமாய்ப் பொருந்திய க்ஷணநேரத்தில் வாளா விரைவாகவே அழியும் = இவன் ஒருபோதும் இன்பமென்பதேயில்லாமல் உழலும் உண்டாய தன் சங்கற்பத்தினுல் பாலனுக்குப் பேய்போல எவ்வளவுகாலமிருக்குமோ அவ்வளவுகாலம்சகித் தற்கரிய துயரையே அடைந்து வருந்துவன்.

இறையுமோர் சுகமற் றிரங்குவோன் ருனுண் டென்பதோர் பாவனையாலே
நிறைசக மியற்றுந் தானிலதென்றே நினைத்திடி லக்கணத் திறந்து
குறைவறு கதிர்முன் னிருளெனப் போகுங்குறித்த சிற்றின்பமுற் றமிழு
முறைவுறு மிவனுக் குடல்கண்மூன் றுளவாமுத்தம மத்திம மதமம். (96)

இறையும் ஓர் சுகமற்று இரங்குவோன்தான் உண்டென்பதோர் பாவனையாலே நிறை சகம் இயற்றும் தான் இலதென்றே நினைத்திடில் அக்கணத்திறந்து குறைவறு கதிர்முன் இருளெனப் போகும். குறித்தசிற்றின்பமுற்று அமிழும் உறைவுறும் இவனுக்கு உடல்கள் மூன்று உளவாம் உத்தமம் மத்திமம் அதமம் = அற்பமும் யாதொரு இன்பமுமில்லாமல் ஏங்கியிருப்போன். யான் இருக்கின்றேன் என்னும் ஒப்பற்ற ஆத்மசத்தையினுலே விசாலமான பிரபஞ்சத்தை உண்டாக்குவன் தான் இல்லை யென்னும் அசத்தையினுலே அப்போதே நாசமாகும். பாகிய வஸ்துக்களினின்றுந் திருப்பி வாசனையோடு அஞ்ஞானத்தை ஒழிக்கில் பூரணப் பிரகாசத்தின் சந்நிதியில் அந்தகாரம் ஒழிவதுபோல இந்த சுதோத்தன் அழிவன். சுகமென்று கருதிய அற்பசுகங் கிடைத்தமாத்திரையானே மகிழுமிவனுக்குத் தேகங்கள் மூன்றுளவாம் உத்தமம், மத்திமம், அதமம்.

முக்குணத் தானே மூன்றுட லாகி மூலமா மூன்றுலகிற்கு
மக்குணந் தன்னிற் றமங்கொள்சங் கற்ப மாவது பகுதியின் செயலாற்
றுக்கமாய் வருந்திப் பாதலப்புழுவாந் தூயசத் துவங்கொள் சங் கற்ப
மிக்கநற் றரும ஞானம்விடுளதாய் வேந்தர்வேந் தெனமிக விளங்கும். (97)

முக்குணந்தானே மூன்றுடலாகி மூன்று உலகிற்கும் மூலமாம் அக்குணந்தன்னில் தமங்கொள் சங்கற்பமாவது பகுதியின்செயலால் துக்கமாய் வருந்திப் பாதலப் புழுவாம் தூயசத்துவங்கொள் சங்கற்பம்மிக்க நற்றருமஞானம் வீடுளதாய் வேந்தர் வேந்தென மிக விளங்கும் = சத்துவம், இரஜசு, தமசென்னும் மூன்று குணங்களே முத்தேகங்களாகி முச்சகதிதியின் காரணமாம். அம்மூன்று குணங்களுள் தமோரூப சங்கற்பம் எப்போதும் பிராகிருத சேட்டையால் (இயற்கையாலமைந்த பிரவிருத்தியினுலே) துக்கமே வடிவமாய் உழன்று கிருமி கீடத்தன்மையை அடையும் பரிசுத்தமாய சத்துவரூப சங்கற்பமானது நிஷ்காமிய கர்மவசத்தால் புண்ணியம் மேலிட்டு சிரவணுதிகளை அடைந்து சாம்பிராஜ்ஜிய சக்ரவர்த்தியென மிகவும் விளங்கும்.

இராசத குணசங் கற்பமிவ் வுலகி லியல்புறு குடும்பியா யியங்கும்
விராவிய விந்த மூன்றையும் விட்டு மெய்மையாய்த் தானில தென்னி
னிராகுல மாக வனையசங் கற்ப நிமலமாம் பரபத மடையுந்
துராசையாம் பார்வை யனைத்தையு நீக்கித் துகண்மன மனத்தினு
னிறுத்தி. (98)

இராசத்குண சங்கற்பம் இவ் வுலகில் இயல்புறு குடும்பியா யியங்கும், விராவிய இந்த மூன்றையும் விட்டு மெய்மையாய்த் தானில தென்னில் நிராகுலமாக அனைய சங்கற்பம் நிமலமாம் பரபதமடையும் துராசையாம் பார்வை அனைத்தையும் நீக்கி துகள்மனம் மனத்தினுல் நிறுத்தி = இரஜோரூபமாய சங்கற்பமோ இச்சகத்தில் பொருத்தமாய சம்சாரியாய் மனைவி மைந்தராதிகளிடத்தில் ஆசக்தியுற்று விவகரிப்பன் விகாரமான இம் முக்குணங்களையும் விட்டு உண்மையாகத் தான் நாசமாயின் வியாகூலமின்றிய அச்சங்கற்பம் தூயதாய பரமபதமென்னும் மோக்ஷத்தைஅடையும் சங்கற்ப நாசத்துக்கு யாது கொல் உபாயம் எனின் விஷயங்களில் இரமிக்கும் மனோ இந்திரியாதி சர்வதிருஷ்டிகளையும் வைராக்கியத்தினுனே நன்ருக அகற்றி இரஜோதமோ மனத்தினைச் சத்துவமனத்தினுல் தகைந்து.

உள்ளினும் புறத்து மெழுந்த சங்கற்ப மொருக்கிட வொருப்பட நினைவா
யெள்ளருந் தவங்கள் கற்ப கோடிகணீ யியற்றினும் பாதலம் பூமி
தள்ளருந் துறக்க மேவினு முனக்குச் சாற்றுசங் கற்பமாய் வல்லாற்
றெள்ளிய பரம பதத்தினை மேவ தியக்குமி லுபாயம்வே றில்லை. (99)

உள்ளினும் புறத்தும் எழுந்த சங்கற்பம் ஒருக்கிட ஒருப்பட நினைவாய் எள்ளருந் தவங்கள் கற்பகோடிகள் நீ இயற்றினும் பாதலம் பூமி தள்ளருந் துறக்கம் மேவினும் உனக்குச் சாற்று சங் கற்பமாய் வல்லால் தெள்ளிய பரமபதத்தினை மேவத்தியக்கமில் உபாயம் வேறில்லை = ஆந்தரத்தும்பாகியத்திலும் உதயமாகிய எண்ணங்களை க்ஷயம்செய்ய ஒருமனப்பட முயல்வாய் (ஏகாக்கிரதையடைவாய்) இகழ்தற்கரிய தபசுகளை அநேகங்கோடி காலம் மைந்த நீ செய்த போதினும் கீழுலகத்தையேனும் யாவரும் வாஞ்சைசெய்யும் மேலுலகத்தையேனும் பூவுலகத்தையேனும் அடைந்தபோதினும் உனக்கு உபதேசித்த சங்கற்ப உபசமம் அல்லாது தெளிந்த ஆனந்தபதத்தினை அடைய மயக்கமற்ற யாதொருபாயமும் மற்ருென்று கிடையாது.

துயர்களும் விகாரங் களுமிலாப் பிரம சுகஞ்செய் சங்கற்பநா சத்தை
முயலுதி நனிசங் கற்பமாங் கயிற்றின் முடிவறு பாவனை யெல்லா
மியல்புறு கோவை யயலெழு மந்தக் கயிற்றினை யெளிதினி லறுத்தான்
மயல்கொள்பா வனைக ளெங்ஙனே தூளாய் மடியுமோ வறிகில
மைந்தா. (100)

துயர்களும் விகாரங்களும் இல்லாப் பிரமசுகஞ்செய் சங்கற்ப நாசத்தை நனிமுயலுதி சங்கற்பமாங் கயிற்றின் முடிவறுபாவனை யெல்லாம் இயல்புறு கோவையால் எழும் அந்தக் கயிற்றினை எளிதினில் அறுத்தால் மயல்கொள் பாவனைகள் மைந்தா எங்ஙனே தூளாய் மடியுமோ அறிகிலம் = சம்சார அனர்த்தங்களும் இராகாதி கிலேசங்களுமில்லாத பிரஹ்மானந்தம் பயக்கும் சங்கற்ப உபசமத்தை நெடுங்காலம் நிரந்தரம் ஆதரவோடு முயன்று தேடுதி சங்கற்பமாகிய தந்துவின் எண்ணிறந்த அகில பாவனைகளும் சுவாபாவிகமாய்ப் பொருந்தும் நிரை நிரைகோத்தலினாலே நிகழும் அச்சங்கற்பமாகிய தந்துவைச் சுலபமாகச் சேதித்தால் பிராந்தியினாலேகொண்ட அந்தபாவனைகள் ஹே குழந்தாய் எங்ஙனே பொடிப்பொடியாய்ப் பறந்தோடிவிடுமோ யாம் அறிந்திலோம்.

துனிசெய்சங் கற்பமின்றி முன்வந்து தோன்றிய தொழில்வழி நிற்பாய்
பனிசெய்சங் கற்ப மாண்டிடி லறிவு பார்வைக ளனைத்தினும் பற்றுத்
தனியுயர் பிரம பதமடைந் தகில விகற்பமாந் தனையெலாந் தள்ளி
யினியனா யேகத் துவத்திலே சுழுத்தி யிதயமுற் றின்பமே பெறுவாய். (101)

துனிசெய் சங்கற்பமின்றி முன் வந்து தோன்றிய தொழில்வழி நிற்பாய் பனிசெய்சங்கற்ப மாண்டிடில் அறிவு பார்வைகளனைத்தினும்பற்று தனியுயர் பிரமபதம் அடைந்து அகில விகற்பமாந் தனையெலாந் தள்ளி ஏகத்துவத்திலே இனியனாய் சுழுத்தி இதயமுற்று இன்பமே பெறுவாய் = துயரந்தரும் சங்கற்பமற்றவனாகி எதிரிச்சையினாலே வினைவயத்தால் வந்தடைந்த வியவகாரபரனாய் உள்ளத்தை நடுங்கச்செய்யும் சங்கற்பம் ஒழியில் சம்வித்துப் பாவனா விடயங்களனைத்தினும் உண்முகத் தன்மையை அடையமாட்டாது ஒப்பில் மேலான பரமார்த்த பதத்தை அறிந்தடைந்து சகல விகற்பங்களாய் ஜாலங்களையெல்லாம் விலக்கி அவ்வத்விதீயபதத்தில் அன்புடன் அழுந்தி நிரபிமானமுடையவனாய் பேரானந்தத்தைப் பெறுவாய்.

என்னலு முயர்சங் கற்பமே தென்ன வெழுந்ததும் வளர்ந்தது மாய்ந்து
சன்னமா கியது மெங்ஙன மென்று தவஞ்செய்தா சூரனை மைந்தன்
பன்னியே கேட்ப வதற்கவ னுரைப்பான் பரமமா யுண்டெனல் வடிவாய்
மின்னிய சமமா மறிவு காண்பவற்றின் மேவுற வெழுதல்சங் கற்பம். (102)

என்னலும் உயர்சங்கற்பம் ஏது என்ன எழுந்ததும் வளர்ந்ததும் சன்னமாகியதும் மாய்ந்தும் எங்ஙனம் என்று தவஞ்செய்தாசூரனை மைந்தன் பன்னியேகேட்ப அதற்கு அவன் உரைப்பான் பரமமாய் உண்டெனல் வடிவாய் = கூறியவண்ணம் முனிவர் மொழிதலும் உயர்சங்கற்பம் மேலாயசங்கற்பமானது எத்தகையது இதனது உற்பத்தியும் விருத்தியும் தேய்தலும் நாசமாகுதலும் யாங்ஙனம் என இவ்வண்ணம் தவஞ்செய் தாசூரமுனிவரை உசாவியே வினவ அவ்வினாவிற்கு முனிவர் கூறுவதாவது யாவற்றிற்கும் மேலான வாய்ச் சர்வவியாபியாகிய

மின்னிய சமமாம் அறிவு காண்ப வற்றின் மேவுற வெழுதல் சங்கற்பம் = சத்தா சாமானியரூபியாய் விளங்காநின்ற சமரூப சைதன்யம் திருசியோன் மகமாய் எழுதலே அவித்யாபீஜ உற்பவமாய அங்குரம் சங்கற்பம் என்பதாம்.

அற்பமா யெழுந்து தானுள தாகி யடைவிலே பையப் பையப் பருத்துத்
தற்பர மனமாம் வெளியினை மூடிச் சடத்துவந் தடத்தி லுண்டாக
வுற்பவ முகில்போல் வளர்வுறு மைந்தா வுணர்வுகாண்ப வற்றினை யுன்னி
நிற்பதாந் தனக்கு வேறுபோற் கண்டு நிகழ்த்து சங்கற்பமாய் நிகழும். (103)

அற்பமாய் எழுந்து தான் உள தாகி அடைவிலே பையப்பையப் பருத்து தற்பரமனமாம். வெளியினைமூடி சடத்து வந்திடத்தில் உண்டாக உற்பவமுகில்போல் வளர்வுறும் மைந்தா உணர்வு காண்பவற்றினையுன்னிநிற்பதாந் தனக்கு வேறுபோற் கண்டு நிகழ்த்து சங்கற்பமாய் நிகழும் = முதலில் சூக்ஷுமமாங்கி சத்தால் = லேசமாய் சத்தையுடையதரகி திருசியோன் மக பாவரூப அங்குரமாகி, கிரமமாக சாவதானமாய் = மெதுவு மெதுவாகக் கனத்தன்மையை அடைந்து உண் மையில் பரம்பொருள் வடிவமேயாய மனமென் னும் ஆகாயத்தினைத் திருசியம் உண்டாதற் பொருட்டுக் கார்காலத்தில் எழும் சூழ்க்கொண்ட மேகம் ஒப்பவிருத்தியாகும் ஹே குழந்தாய் ஆத்ம சைதன்னியம் திரிசியங்களைச் சிந்தித்து நிலை யாய ஆன்மாவிற்கு அன்னியம்போலப் பாவித்து சொல்லாநின்ற சங்கற்பத்தன்மையை அடையும்.

அறிவெனும் விதைசங் கற்பமாமுளையா மனையசங்கற்ப மாந் தன்னைப்
பிறிவுறத் தானே செய்துதான் பிறக்கும்பெரி துறவளர்ந்திடுந் தானே
செறிதுய ரொழிய வின்பமொன்றில்லை யாதலாற் செப்பு சங்கற்ப
நெறியுற நினையே னிற்புறுநிலையி னிமிடமும் பாவனை நினையேல். (104)

அறிவெனும் விதை சங்கற்பமாம் முளையாம் அனைய சங்கற்பமாந் தன்னைப் பிரிவுறத்தானே செய்து தான்பிறக்கும் தானே பெரிதுற வளர்ந்திடும் செறிதுயரொழிய இன்பம் ஒன்றில்லை ஆதலால் செப்பு சங்கற்பம் நெறியுற நினை யேல் நிற்புறு நிலையில் நிமிடமும் பாவனை நினையேல் = அறிவாகிய பீஜம் சங்கற்பம் அங்குரமாம் அத் தகைய சங்கற்பமாகிய தன்னை பேதத்தைச் செய்து சுயமே உண்டாம் தான் மிகவும் விரை வில் விருத்தியாகும். சங்கற்பத்தால் பொருந்தா நின்ற பிரபஞ்சம் துன்பமேயல்லாது சுகமென் பது லேசமுங் கிடையவேகிடையாது. ஆகை யினாலே செப்பிய சங்கற்பமார்க்கத்தைச் சங்கற்பி யாதே=எண்ணற்க, முன் அனுபவித்த சுக துக் காதிபாவத்தை இப்போதுள்ள திதியின்கண்ணே கணப்போதும் அனுபவித்ததை எண்ணவேண் டாம்.

இவ்வள வான பாவனையாலே யின்பமா மினையசங் கற்பந்
தவ்வுறப் பெரிய முயற்சிகள் வேண்டாந்தாக்கு பாவனையெலா மொழித்த
வவ்வகை யாலே யிறந்துபோந் தன்னெஞ் சலர்வுறு பூவினைக் கசக்கிற்
கைவரு வருத்த மொன்றுளதாகுங் கழறிய விதற்கது வேண்டா. (105)

இவ்வளவான பாவனையாலே இன்பமாம் இனைய சங்கற்பம் தவ்வுறப் பெரிய முயற்சிகள் வேண்டாம் தாக்கு பாவனையெலாம் ஒழித்த அவ்வகையாலே தன் நெஞ்சு இறந்துபோம் அலர்வுறு பூவினைக் கசக்கில் கைவரும் வருத்தம் ஒன்றுளதாகும் கழறிய இதற்கு அதுவேண்டா = இத்தன்மையான நிர்ச்சங்கற்பத்தானே பரமானந்தம் உடையவனேயாவாய், இச் சங்கற்பமானது நாசமாக அதிப்பிரயத்தனங்கள் வேண்டாம். அழுத்திய வாசனையெலாம் நிவர்த்தித்த அம்முறையானே சுயமாகவே தனது சங்கற்பம் நாசமாய்விடும், மலர்ந்த புஷ்பத்தின் இதழினை கசக்க, கரத்திற்கு உணடாகுங் கஷ்டம் ஒரு சிறிதேனும் சேர்வுறும். சங்கற்ப நாசத்துக்கு அக் கஷ்டமும் அணுகாதாம்.

எழுந்தசங் கற்ப பாவனைவிட்டா லிறந்துபோ மிதனை யிங்கிதனு
லழுந்துற மாய்த்து மனத்தினுன் மனத்தையறுத்துநின் னறிவினீ நிற்பா
யுழுந்துருள் பொழுதின் முடியுமீதரிதோ வுலகமும் வானமு மொக்கு
முழுந்திய பொய்யாய்ப் போம்விகற் பத்தான் முளைத்தவையன்றிமுன்
னிலதால். (106)

எழுந்த சங்கற்ப பாவனைவிட்டால் இறந்துபோம் இதனை இங்கு இதனுல் அழுந்துற மாய்த்து மனத்தினுன் மனத்தை அறுத்து நின் அறிவில் நீ நிற்பாய் உழுந்து உருள் பொழுதில் முடியும் ஈது அறிதோ உலகமும் வானமும் ஒக்கும் முழுந்திய பொய்யாய்ப்போம் விகற்பத்தால் முளைத்தவையன்றி முன்னிலதால் = திருசியாகாரமாய்த் தோற்றிய சங்கற்ப பாவனையை விடுதல் மாத்திரையானே இறந்துபோவதான இச் சங்கற்பத்தை இவ்விடத்தில் அந்தர்முக சங்கற்ப முயற்சியினுல் மீட்டணுகாது நன்ருகக் கெடுத்து விசாரத்தோடு கூடிய சத்துவசித்தத்தால் விஷயாபிலாஷையுற்ற மனத்தைச் சிதைத்து உன்து சிற்சொருபத்தில் நிலைபெற்றிருப்பாய் உழுந்து எண்ணை தோய்ந்த கவிழ்த்தப்பட்ட பானை உச்சியிலிருந்து உருளுங்காலத்து ஒரு கண நேரத்தில் முற்றுப்பெறும். இது அரிதோ ஜகத்தும் ஆகாச சூன்யத்தன்மையானே சமமாம் அத்தியந்தம் அசத்துமயமாகிய விகற்பத்தாலே எழுந்தனவேயல்லாமல் பூர்வம் இல்லாத தன்மையையுடையனவேயாம்.

தண்டுலத் தோலுஞ் செம்பினிற்களிம்புஞ் சம்பந்தந் தொழில்விசே டத்தால்
விண்டுபோ மதுபோற் புருடனுமலத்தை மேவியே போக்குத லியலுங்
கொண்டசந் தேக மொழித்துநீ முயல்வாய் குருவின்வல் லபவிளக் கத்தாங்
கண்டனமெனல் வீணுகு நீதானுங் கண்டன பரம்பொருட் பொலிவே. (107)

தண்டுலத்தோலுஞ் செம்பினிற் களிம்புஞ் சம்பந்தந் தொழில் விசேடத்தால் விண்டுபோம் அது போல் புருடனும் மலத்தை மேவியே போக்குதல் இயலுங் கொண்ட சந்தேகம் ஒழித்து நீ முயல்வாய் குருவின் வல்லப விளக்கத்தாங் கண்டனமெனல் வீணுகும் நீதானும் கண்டன பரம்பொருள் பொலிவே =

அரிசிமேலுள்ள உமியும், தாம்பிரத்தின் அழுக்கும் சகஜமாயிருப்பதாம். குத்துதல் தேய்த்தல் என்னுங் கிரிகையின் சிறப்பானே உமியும் களிம்பும் நீங்கிப்போம். அத் திருஷ்டாந்தம்போலப் புருடனும் மலஞ்சகஜமாயினும் அஞ்ஞானரூபமான அம்மலத்தைப் பிராந்தியினுல் அடைவுற்றிருத்தலால் சிரவணுதி பிரயத்தனத்தால் நீக்குதல் கூடும் (ஆதலின்) மதவாதிகளால் வந்த சம்சயவிபரீதங்களை ஞானபூமி சம்பாதனத்தானே ஒழித்து நீ அதனையே செய்யும் முயற்சியுடையவனுகுதி. சம்சார சுபாவத்தையுடைய எனது மகத்தான சம்பத்துக்களினுலே விளங்குவனவாய இப்போத விலாசங்கள் சாஸ்வதம் என்றுண்டாம் பெருமயக்கம் வியர்த்தமாகலால் நினக்கு ஆகாதொழிக நீயும் திருசியமியாவும் பிரஹ்மாபின்ன ஆத்மதத்துவத்திற்கு அயலாய் இல்லவே இல்லை. ஆத்ம விலாசமே விளங்குகின்றது சத்தியம்.

எனவவ ருரைத்த யாவையுங் கேட்டவ்விரவிலங் கவரைநா னெய்த
மனமகிழ்ந் தருச்சித் தென்னுெடத் தளிர்மேல்வதிந்தன னிருவரு மெய்ம்மைக்
கனகதை களினுற் காதலுற்றவர்போற் கங்குலைக் கணமெனக் கழித்தவ்
வனகனை நீங்கிக் கங்கையுற்றனனு னவன்கதை போலுமிச் சகமே. (108)

என அவர் உரைத்த யாவையுங் கேட்டு அவ்விரவில் அங்கு அவரை நான் எய்த மனமகிழ்ந்து அருச்சித்து என்னுெடு அத் தளிர் மேல் வதிந்தனன் இருவரும் மெய்ம்மைக்கன கதைகளினுல் காதலுற்றவர்போல் கங்குலைக் கணமெனக்கழித்து அவ்வனகனை நீங்கிக் கங்கையுற்றனன் நான் அவன் கதைபோலும் இச்சகமே=

என்று அத் தாசூரர், மைந்தனுக்கு உபதேசித்த யாவற்றையும் கேட்டு அப்போது அவ்விரவில் ககனத்தினின்றுஞ் சப்தஞ்செய்யாமல் இறங்கினேம் அத் தாசூர முனிவரையும் வனதேவதை மைந்தனையும் யாம் கிட்டிய மாத்திரத்தே அவ்விருவரும் எம்மைக் கண்டார்கள். ஆசனந் தந்து மனச் சந்தோஷத்தோடும் புஷ்பாதிகளைக் கொண்டு அர்ச்சித்து பூஜை செய்தார்கள். என்னேடு அவ்விலையின்மீது அத் தாசூரர் இருந்தனர். யாங்களிரண்டுபேரும் தத்துவமயமான பெரும் விசித்திரக் கதைகளினுல் ஆசைமிக்கவர் இரவை நொடிப்போதில் கழிப்பதேபோல அவ்விரவை சிறிதுபேர்தாக அகற்றி அந்தப் புண்ணிய முனியைவிட்டு எழுந்து யாம் புறப்படவும்

வெகுதூரம் வரை அவ்விருவருந் தொடர்ந்தனர். அவரை அரிதில் நீங்கி கங்கையை அடைந் தோம் யாம், அத் தாசூரன் கதைபோலும் இவ் வுலகம் ஆம் எனவே கருதல்வேண்டும்.

4 — 4 தாசூரன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் — 739.



# 4-5 கசன் கதை

## அவதாரிகை

முன்பு தாசூரன் கதையில் பிரபஞ்ச ஸ்திதிக்கு மாயிகத்வஞ் சொல்லப்பட் டது. இப்போது திதிப்பிரகரணத்தாற்பரியஞ் சங்கிரகமாக உபதேசப்பிரகாரமாய்ச் சொல்லப்படுகிறது.

முடிவறு காலந் தன்னில் மொழிதரு மாண்டு நூறு
நொடியள வெனினும் பற்று திதனையே நெடிதாய் நோக்கி
யொடிவறு பார வேட்கை யுறுவதென் பொருள்க ளுன்னிப்
படர்வதா முள்ளத் தாசை பற்றற வொருக்கி நிற்பாய். (1)

முடிவறுகாலந்தன்னில் மொழிதரும் ஆண்டு நூறும் நொடியள வெனினும் பற்ருது இதனையே நெடியதாய் நோக்கி ஒடிவறு பார வேட்கையுறுவது என்பொருள்க ளுன்னிப் படர்வதாம் உள்ளத்து ஆசை பற்றற வொருக்கி நிற்பாய் = இவ்வளவிற்றென்று மொழிதற்கியலாத கால ஜாலத்தைக் குறித்து மநுஷ்யர்களுக்குச் சாஸ் திரங்களிற் கூருநின்ற சம்வத்ஸரம் நூறும் க்ஷண மாயினும் நிலைபெருததே அற்பத்தினும் அற்ப மாம். இவ்வாயுளையே நீண்ட (பூரண) ஆயுளா கக்கருதி, ஞானத்தாலன்றி நாசமாகாத சுமை யாம் ஆசையை அடைவது என்னே, திருசிய விஷயத்தை அதுவேண்டும் இதுவேண்டுமென்று எண்ணி அலைந்து திரிவன் இஃது அநுசிதமாம் (ஆகலின்) ஸ்திரீயாதிகளின் சௌந்தரியத்தை மனத்தில் கருதும் ஆசையையொழித்துச் சுகிப் பாய்.

மாலற வெங்ங னின்ரு யங்ஙனே வாழ்வாய் பாரிற்
கோலநன் மணிகள் வேண்டா திருக்கவும் குறுகிப் பாயுந்
தூலநன் னிழல்போ லுண்டா மாத்திரந் தோற்றமான
ஞாலமும் பரமந் தன்னி னலம்பெறந் தோன்று மன்றே. (2)

மால்அற எங்ஙன் நின்ருய் அங்ஙனனே பாரில் வாழ்வாய் கோல நல்மணிகள் வேண்டாதிருக்கவும் குறுகிப்பாயுந் தூல நண்ணிழல் போல் உண்டாமாத்திரந் தோற்றமான ஞானமும் பரமந்தன்னில் நலம்பெறத் தோன்றும் = ஆசையின்றி எவ்வாறுள்ளாயோ (சேடித்திருப்பாயோ) இவ்வுலகின்கண் விவகரிப்பாய் அழகிய நல்ல இரத்தினங்கள் இச்சையில்லாதிருக்கவும் கிட்டி தாவுகின்ற விரிந்த பிரகாசம்போலப் பரமாத்மாவினிடத்தில் சத்தாமாத்திரமாகப் பிரதீதியான பிரபஞ்சமும் பரமாத்மா நிரிச்சையாயிருக்கவும் அவன் சந்நிதி மாத்திரையானே நன்மை பயப்பனபோல உண்டாம். (தோற்றும்)

ஆதலாற் பரமந் தன்பா லகர்த்தனே கர்த்தனே யென்
ரேதுபாவ னைக ளுண்டா முற்றபற் றிலாமை யாலே
சாதமி லகர்த்த னுகுஞ் சந்நிதி மாத் திரத்தான்
மேதகு கர்த்த னுமிவ் விரண்டலால் வேறு மேவா. (2)

ஆதலால் பரமந் தன்பால் அகர்த்தனே கர்த்தனேயென்று ஓது பாவனைகளுண்டாம் உற்ற பற்றிலாமையாலே சாதமில்அகர்த்தனுகும் சந்நிதிமாத்திரத்தால் மேதகுகத்தனும் இவ்விரண்டலால் வேறு மேவா = ஆகையினுல் பிரஹ்மாபின்ன ஆன்மாவின்கண் நிரிச்சைத்தன்மையானே அகர்த்தாவாம், இவன் சந்நிதிமாத்திரையானே கர்த்தாவாம் (அகர்த்தனே, கர்த்தனே, போக்தனே யென்று) நிர்வாணத்துக்கு ஏதுவாகக்கூறும் பாவனைகள் உண்டாம் இதயத்தின்கண் பொருந்திய இச்சையில்லாமையினுலே உற்பத்தியின்றிய அகர்த்தனுகும் நமது சந்நிதிமாத்திரத்தால் சர்வ இந்திரியங்களையும் தொழிலில் பிரவேசிக்கச் செய்வதால் மேன்மையையுடைய கர்த்தனுகும் கர்த்துருதை, அகர்த்துருதையென்னும் இவ்விரண்டும் ஆன்மாவின்கண் இருக்கின்றனவேயாம் வேறல்ல,

அகத்தனிற் கத்தன் றன்னிலமைந்த தேததனி னிற்பாய்
முகத்தமா மிரண்டு மின்றி முளைத்தெழு மனதை நுங்கி
மிகத்தனி திரமாய் நிற்றி யகத்தனு விளம்பு நேரிற்
சுகத்தனு நிற்றி யேனு நன்றிது துயரொன் றில்லை. (4)

அகத்தனிற் கத்தன்தன்னில் அமைந்தது ஏது அதனில் நிற்பாய் முகத்தமாம் இரண்மின்றி முளைத்தெழு மனதைநுங்கி தனி மிகத் திரமாய்நிற்றி அகத்தனாய் விளம்புநேரில் அகத்தன நிற்றியேனும் நன்றிது துயர் ஒன்றில்லை = அகர்த்துரு கர்த்துரு இவ்விரண்டில் உனக்கு இஷ்டமானது ஏது அதனையே பற்றித் திடமுடையவனாகுதி நோக்கியதாம் முன்மொழிந்த கர்த்துரு அகர்த்துரு இரண்டையும்விட்டு வாசனுவசமாய் அங்குரித்து எழும் மனத்தை லயம் செய்து அத்தியந்தம் கேவலமாய்ப் பரிசேஷித்த படி திடமாய் அந்நிலையிலிருப்பாய், ஈண்டு யான் ஒரு சிறிதுமே செய்கின்றேனில்லை யென்னும் அகர்த்தனாய் கூறிய முறையில் நிற்குதி அல்லது மகாகர்த்துரு பாவனையுடையவனாய்ப் பரமானந்த பரிதனாயிருந்து வாழ்வாயேனும் நன்று இம்முறையில் யாதொரு பாதகமுமில்லை (துக்கம் சிறிதுமில்லை.)

முன்னிய கத்த னாகி யான்சக முறை செய்கின்றே
னன்னிய நினைவி லாமை யாலதில் விகார மில்லை
யென்னது நீநான் செய்தேன் செய்திலே னென்னும் பார்வை
யுன்னிய பொழுதே துன்ப முடலைநா னென்பா ருண்டோ. (5)

முன்னிய கத்தனாகி யான் சக முறை செய்கின்றேன் அதில் அன்னிய நினைவு இலாமையால் விகாரமில்லை என்னது நீ, நான், செய்தேன், செய்திலேனென்னும் பார்வை உன்னியபொழுதே துன்பம், உடலை நானென்பாருண்டோ = கருதிய மகா கர்த்துருவாகியான் சகசம்பந்தமாய விவகாரங்களைச் செய்கின்றேன், அதில் அயல் நினைவே முற்றும் இல்லாமையினால் இராகாதிகள் முறையே இல்லை. என்னுடையது இது, துவம், அகம், பண்ணினேன், பண்ணிலேன் என்னும் பாவனானுசந்தான பேத திருஷ்டிசெய்த போதே சம்சார துன்பமாம் துன்ப ஏதுவாய தேகத்தை நான் என நினைவாரும் உளரோ.

மொய்யுட னானே யென்னின் மூவேழு நரகு மஃதே
வெய்யவன் துயரா மேனு மெய்யை யானென வேண்டா
வையமில் கேள்வி நல்லோர் நினைவரோ வனைத்தா மூனுங்
கையுறத் தின்ப ரேனு நாய்ப்பிணங் கவரார் நீசர். (6)

மொய்யுடல் நானே யென்னின் அஃதே மூவேழு நரகும் வெய்யவன் துயராமேனும் மெய்யை யானென்ன வேண்டாம் ஐயம் இல் கேள்வி நல்லோர் நினைவரோ அனைத்தாம் ஊனும் = சர்மாதி கூட்டமாகப் பொருந்திய தேகத்தை அகமேயென்று அபிமானிக்கில் அவ்வபிமானமே இருபத்தொருவிதமான நரகமேயாம், கொடிய வன்மைமிக்க துயர்வந்தடையினும் தேகத்தை நானென்று அபிமானிக்க வேண்டாம் சந்தேகம் விபரீதம் இல்லாத சிரவணாதி செய்த மகான்கள்

கையுறத் தின்பரேனும் நீசர் நாய்ப்பிணங் கவரார் = அங்ஙனமே அபிமானிப்பரோ (அபிமானியார்) மாமிசத்தை வாரி வாரி திகட்டும்படி உண்டாரேனும் நீசர் நாய் மாமிசத்தை தீண்டமாட்டார்கள்,

நாமுட லென்னு மாசான் ஞானக்கண் குருடாய்ப் போகுந்
தோமுறு மதனைத் தூரத் தூர்ப்பரேற் சோதி ஞான
மாமுகி லிலா நி லாப்போல் வயங்கிடு மினைய கண்ணு
லேழுறு பிறவி வேலை யிருங்கரை யெளிது தோன்றும். (7)

உடல் நாமென்னும் மாசான் ஞானக்கண் குருடாய்ப்போகும் தோம்உறும் அதனைத் தூரத் தூர்ப்பரேல் முகில்இலா, மா நிலாப்போல் வயங்கிடும் இனைய கண்ணால் ஏழுறு பிறவி வேலை யிருங்கரை எளிது தோன்றும் = தேகோகமென்னுங் குற்றத்தால் (படர்ந்தால்) உணர்வுவிழி அந்தகனாய் மூடப்பெற்றுப்போம் குற்றமுற்ற அத்தேகோக புத்தியை வெகு சேய்மையில்ஏகுமாறு அகற்றுவாரேல் மேன்மையான சொரூப உணர்வானது மேகம் மறையாத பூரண சந்திரன்போல விளங்காநிற்கும். இத்தகைய திருஷ்டியினால் மயக்கத்தால் பொருந்திய சம்சார சாகரத்தின் முத்தியாங் கரையை சுலபமாகவே காணலாம்.

அனைத்தினுங் கத்த னல்லே னவனிவ னல்லே னென்ன
நினைத்துளத் துறுதி யாகி நிற்றியா லஃதின் றென்னி
லனைத்தினுங் கத்த னானே யளவறு மதுநா னென்ன
நினைத்தசை வொன்று மின்றி நிச்சய மாகி நிற்பாய். (8)

அனைத்தினுங் கத்தன் அல்லேன் அவன் இவன் அல்லேனென்ன நினைத்து உளத்து உறுதியாகி நிற்றி அனைத்தினுங் கத்தன் நானே அளவறு மதுநானென்ன நினைத்து அசைவொன்றுமின்றி நிச்சயமாகி நிற்பாய் = தேகேந்திரியாதிகள் எக்காரியங்களைச் செய்யினும் சர்வத்திற்கும் நான் சாக்ஷி அல்லேன்; அவனும் இவனும் யானல்லேன் என்பதாக மனதின்கண் திடநிச்சயமுடையவனும் சொரூபத்தின் கண்ணே நிலைபெறுதி, (அஃது இன்றெனில்) அவ்வாறு நிலைபெற்று வாழச் சம்மதமின்றாயின் சர்வகர்த்தா நானே அளவில்லாத அவையாவும் நான் (சர்வான்மகம் நான்) என்று உணர்ந்து கிஞ்சிற்றும் சலனமில்லாமல் நிச்சயமுடையவனாக நின்று வாழ்வாய்.

அன்றெனி லொன்று மல்ல வொன்றுநா னுகு மென்றே
நின்றவிப் பதத்தி னன்றே நின்பதந் தனினீ நிற்பா
யொன்றெனும் பதத்தைக் கண்ட வுத்தமர் தன்பா னிற்பர்
துன்று வாதனையே பந்தந் தொலைவீ டதனைத் தீர்தல். (9)

அன்றெனில் ஒன்றுமல்ல நின்ற ஒன்று நான் ஆகுமென்றே இப் பதத்தில் நன்ரும் நின்பதந்தனில் நீ நிற்பாய் ஒன்றெனும் பதத் தைக் கண்ட உத்தமர் தன்பால் நிற்பர், துன்று வாதனையே பந்தம் அதனைத் தீர்தல் தொல்லை வீடு = இது அன்றெனில் வெளியாய் திருசியரூபம் ஒரு சிறிதும் யான் அல்லேன் மாகர்த்தனும் அல்ல அகர்த்தாவும் அல்ல, சர்வ விகற்ப அதீதனுன யாதொருவஸ்து அதுவே நமது சொரூபமென்றே இப்பதத்தில் நிலைபெற்றுச் சுகிப்பாய் இப்பதங் களில் எப்பதம் உனக்குச் சிறந்ததாகுமோ அப் பதந்தனில் நீ நிலைபெறுவாய் ஏக மேவாத்வய மென்னும் தமது சொரூபத்தைத் தரிசித்த மகான் கள் தமது ஆனந்த பதத்திலேயே யிருந்து வாழ்வர், நெருங்கிய துர்வாசனையே பந்தம் அவ்வாசனையை ஒழித்தலே பிராசீனமோக்ஷ மாம்.

புலன்களிற் பழகிச் சித்தம் பூண்டவா தனைகண் முன்னே
யலம்பெற மாற்றி வீட்டிற் கடுத்தவா தனையுந் தீர்வாய்
நலந்திக ழருள்சந் தோட நட்புதா சினமிந் நாலு
மலந்தவிர் குணங்க ளாக மனத்தழுந் தாது செய்வாய். (10)

புலன்களிற் பழகிச் சித்தம்பூண்ட வாதனைகள் முன்னே அலம்பெற மாற்றி, வீட்டிற்கடுத்த வாதனை யுந் தீர்வாய் நலந்திகழ் அருள் சந்தோடம் நட்பு உதாசினம் இந்நாலும் மலந்தவிர் குணங்க ளாக மனத்து அழுந்தாது செய்வாய் = இந்திரியங்களோடு கூடி விடயங்களிற் பயின்று அதன்மயமாய் மனமானது அலங்கரித்துக் கொண்ட வாசனைகளைப் பூர்வம் வருத்தமுற் றினும் பரித்தியாகித்துத் திருப்திபெற்றவனுய் விடுத்து மோக்ஷார்த்த தன்மையையும் விட்டு விடுவாய், துக்கிப் பிராணிகளுக்கு நன்மையைப் பயக்கும் கருணை, புண்ணியர்பால் வைக்கும் முதிதை, சற்புருடர்பால் வைக்கும் மைத்திரி பாவியரிடத்துண்டாம் உபேக்ஷையென்னும் இந்த நான்கையும் சுத்த வாசனையாக உள்ளத் தின்கண் பற்ருது செய்வாய்.

உள்ளுறு தொழில்கண் முற்று மொருக்கியோ ருணர்வைப் பற்றி
மெள்ள வாங்கதுவு மந்தக் கரணங்க ளுடனே விட்டுத்
தள்ளுவ வெல்லா மெத்தாற் தள்ளினு யதுவுந் தள்ளி
தெள்ளுணர் வுள்ளஞ் செய்கை தேசிரு ளனைத்துந் தீர்ந்து. (11)

உள்ளுறு தொழில்கள் முற்றும் ஒருக்கி ஒருணர்வைப்பற்றி வாங்கு அதுவும் மெள்ள விட்டுத் தள்ளுவவெல்லாம் எத்தாற் அந்தக் கரணத்தின்கண் பொருந்திய அமல வாசனையையும் முன்னுள்ள மலினவாசனையை யும் ஆகிய யாவற்றையுஞ் சாந்தி செய்தவனுய்ச் சின்மாத்திர வாசனையுடையவனுய் அச்சின்மாத்

தள்ளிஞய் அதுவுந்தள்ளி தெள்ளுணர்வுணர்வுள்ளம் செய்கை தேசு இருள் அனைத்துந் தீர்ந்து= திரவாசனையையும் மெள்ள (சாவதானமாக) விட்டுத்தள்ளத்தக்கன எல்லாவற்றையும் எந்தப் பிரயத்தன விசேஷத்தால் தியாகித்தாயோ அதனையும் விட்டவனுய் திருசியவிளக்க சித்து (சம்வித்து) மனம் ஆகிய, கலஞகாரம், பிரகாசம், திமிரம் ஆகியவனைத்தையும் விட்டு.

வாதனை வடிவ மான விவைகளு மற்றிவற்றைப்
பேதமாய்ப் பழகு வோனும் பிராணனி லியக்கந்தானு
மியாதுமூ லத்தோ டீர்த்து விண்ணக மென்ன நின்ரு
லியாதுதீர் சாந்த ஞயென்னுயினையது நீ மெய்யால். (12)

வாதனைவடிவமான இவைகளும் மற்றிவற்றைப் பேதமாய் பழகுவோனும் பிராணனிலியக்கந்தானும் யாதும் மூலத்தோடு ஈர்த்து விண்ணகமென்னநின்ருல் யாதுதீர் சாந்தனுய் என்னுயினை அது நீ மெய்யால் = சுத்தவாசனுரூபமான இவைகளையும் இந்தச் சுத்தவாசனையையும் பேதமாய் அப்பியாசிப்பவனையும் பிராண சலனத்தைத் தடைசெய்தலையும் எல்லா விக்ஷேபங்களையும், வேரோடுங் களைந்து (ஆகிய அனைத்தையுந்தள்ளி) தலநீலமாதியொழிந்த ஆகாயம்போல நிர்மலமாகத் திதிபெற்ருல் சர்வதோஷவிநிர்முக்தமாய உபசாந்தனுயினையோ அதேபரமார்த்தரூபம் நீயாகுதி.

உளத்தினி லனைத்து மாற்றி யுலகிலோர் பற்ற தின்றித்
துளக்கிலா நிலையி னின்ருேன் துகளறு முத்த ஞவா
னளக்கறு மீச ஞவா னவன்மிகு சமாதி தானுங்
கொளத்தகு கருமந் தானுங் கூடினும் விடினு முத்தன். (13)

உளத்தினில் அனைத்துமாற்றி உலகில் ஓர் பற்றதின்றித் துளக்கிலா நிலையில் நின்ருேன் துகளறு முத்தனுவான் அளக்கரும் ஈசனுவான் அவன்கொளத்தகு மிகு சமாதிதானுங் கூடினும் விடினும் முத்தன் = இருதயத்தினின்றும் யாவற்றுப் பொருள்களையும் நன்கு பரித்தியாகஞ் செய்து உலகின்கண் ஓர் வாசனையும் இல்லாமல் மகாமதியனுகி விக்ஷேபமற்றதிதியில் நிலைபெற்ற மகான் சர்வ அனர்த்தங்களும் அகன்ற பரமானந்தவடிவ மூத்தனுவன். அனந்த மகிமைவாய்ந்த பரமேசுரனுகின்ருன், அத்தகைய அறிஞன் மேலான சமாதியையேனும் வர்ணச்சிரமத்துக்கு உசிதமாய் அங்கீகரிக்கத்தக்க தொழிலையேனும் செய்யினும் செய்யாவிடினும் விடுபட்டவனேயாகின்ருன் (முத்தனேயாகின்ருன்).

இருதயத் தாசை யொன்று மிலாமையா லெண்ணப் பட்ட
கருமங்கள் செய்துந் தீர்ந்துங் கையுறு பயனென் றில்லை
யொருவழிப் படநீள் கால முளமொருப் படுத லாலே
பெருகுவா தனைதீர் நெஞ்சிற் பேசுநூ லனைத்தும் வேண்டா. (14)

இருதயத்தாசையொன்றும் இலாமையாலெண்ணப்பட்ட கருமங்கள் செய்துந் தீர்ந்தும் ஒருவழிப்பட நீள்காலம் உளம் ஒருப்படுதலாலே கையுறுபயனென்றில்லை பெருகுவாதனைதீர் நெஞ்சில் பேசுநூலனைத்தும் வேண்டா = மனத்தில் எல்லா ஆசைகளும் அபிமானஅத்தியாசங்களும் இன்மையினுனே லோகோபகாரமாய்ப் பயனைக்குறித்துக் கருதாது ஒரே நெறியாக நீள் காலம் முயற்சியால் தொழில்களை மனம் சமாதானமுற்று ஜபாதிகள் செய்தலினாலேனும் செய்யாவிடினும் நைஸ்காமத்தாலும் பயன் சிறிதுமில்லை. மிக்க வாசனையற்ற மனத்தின்கண் விவாத விஷய பூதமாய சாஸ்திரம் யாவுமே வேண்டியதின்றும்.

மறுகுவா தனைக டீர்ந்த மனத்தை யொழிய வேறூ
ருறுகதி நல்ல தில்லை யுணர்வன வுணர்ந்த தாகுந்
துறுதிசை பத்துஞ் சுற்றி மீண்டதாந் தொல்லை ஞாலத்
தறுதியா யுண்மை கண்டோர் சிலர்நின்றூ ரவத்தின் மாய்வோர். (15)

மறுகுவாதனைகள் தீர்ந்த மௌனத்தையொழிய வேறூர் உறு நல்லகதி இல்லை உணர்வன உணர்ந்ததாகும் துறுதிசை பத்துஞ் சுற்றி மீண்டதாந் தொல்லைஞாலத்து அறுதியாய் உண்மை கண்டோர் சிலர் நின்றூர் அவத்தில் மாய்வோர் = சுழலாநின்ற வாசனைகள் ஒழிந்த மௌனத்தை விட்டு அதற்கு அன்னியமாக அடையும் உத்தமமான பதம் யாதொன்றுமில்லை. அறியத்தக்க சாத்திய சாதனம் யாவும் அறிந்ததாகும் = தசதிசைகளும் சுழன்று திரும்பியதாம் பிராசீனமய பிரபஞ்சத்தில் திண்ணமாய் வஸ்துவை உள்ளபடி தரிசித்தவர் ஏகதேசியரேயாவர். (பகவற்கீதை மாயுமாயை மறையாதவென்னுஞ் செய்யுளை நோக்குக) எஞ்சி நின்றூர் யாவரும் அவலவினைகளே புரிந்து கிலேசமேயடைவர்.

தேகத்தை நோக்கி யன்றூ செகமெலாந் திரிவ தல்லா
லேகத்தை நோக்கி யன்றே வெங்கணும் பஞ்ச பூத
நாகத்தை மண்ணைக் கீழை நாடினு மாறு காணே
மோகத்தை விடுது மென்றே திடமுற்றூர் முழுதுஞ் பற்றூர். (16)

தேகத்தை நோக்கியன்றூ செகமெலாந் திரிவதல்லால் ஏகத்தை நோக்கியன்றே எங்கணும் பஞ்சபூதம் நாகத்தை மண்ணைக் கீழை = இலௌகிக வீடு மாடமாளிகை முதலிய விடயத்தொடக்கங்கள் வைதீக யாகமுதலிய தொடக்கங்கள் சிலவர்தஞ் செய்கையாயுளவோ அவை யாவுமே தேகமாத்திரப்பொருட்டே யல்லவோ

| | | |
|---|---|---|
| ஆறுகாணேம் மோகத்தை விடுது மென்றே முழுதும் பற்ருர் திடமுற்ருர் | = | உலகமெல்லாம் உழல்வது அதுவேயன்றி அத்வைத ஆத்மார்த்தப் பொருட்டல்லவே எவ்விடத்தினும் பஞ்சபூத சம்பந்தமே சுவர்க்க, பூதல, பாதாளங்களை நோக்கிச் சென்றபோதினும் ஆருவது ஒன்று கண்டிலோம், இரதியை விட்டொழிப்பேமென்பதாகத்தானே சர்வசங்கபரித்தியாகமுடையவர் தீரமான மதியையுடையராவர். |

ஊகமின் மூகர்க் கெல்லா மூழிவெங் கடலாஞ் சென்ம
மோகமி லூகத் தோர்க்கு முன்னுறு கோவின் ருளாஞ்
சோகமின் ஞானி நெஞ்சிற் ருெடர்ந்தசிற் றின்பம் பற்ருப்
போகமில் சிற்றூர்ப் புன்பெண் பொலிநகர் விடலைக் கென்னும். (17)

| | | |
|---|---|---|
| ஊகமில் மூகர்க்கெல்லாம் சென்மம் ஊழிவெங்கடலாம், மோகம் இல் ஊகத்தோர்க்கு முன்னுறு கோவின் தாளாம் சோகம்இல் ஞானிநெஞ்சிற் தொடர்ந்த சிற்றின்பம் பற்ருப் போகம்இல் சிற்றூர்ப் புன்பெண் பொலிநகர் விடலைக்கென்னும் | = | யுக்தியை வெகுதூரத்தில் விடுத்த மூடர் யாவருக்கும் ஜனனமரண சம்சாரமானது பிரளயகால மீகாத்தியாம் மயக்கமும் குதர்க்கமுமின்றி ஊகத்தோடு கூடி ஆராயும் அறிஞனுக்கு எதிரில் அற்பமாய் தோற்றும் பசுவின் குளப்படி ஜலத்துக்கு சமானமாம் சோகமோகம் ஒழியப்பெற்ற தத்துவக்ஞனுடைய மனதில் ஈசன் முதலியோரைப்பற்றிய சகபாவனைகள் மயக்கா,போகத்துக்கு யோக்கியமல்லாத சிறியகிராமத்தில் வசிக்கும் மயக்குந் திறமற்ற இழிந்த ஏழுவயதுப் பெண் சர்வாலங்கார சோபித பெரும்பட்டணத்தில் வாழும் மன்மதன்போன்ற காளையை மயக்குவதற்கு எவ்வகையினளாவள் அதுபோல ஏனையோரைப் பற்றிய சகபாவனைகள் அற்பமும் விவேகியைப் பற்ருவாம். |

பிரமமாஞ் சுத்த வேலை நுரைகளாம் பிறங்க லெல்லாம்
பரமவா தித்தன் முன்னர்க் காணலாம் பரவை ஞாலந்
திரமதா மிதனை முன்னே செப்பினன் வியாழன் றந்த
வரமகன் கசனும் பேரோன் மற்றது வள்ளல் கேட்பாய். (18)

| | |
|---|---|
| சுத்தமாம் பிரமவேலை பிறங்களெல்லாம் நுரைகளாம் பரவை ஞாலம் பரமஆதித்தன் முன்னர்க் காணலாம், திரமதாம் இதனை முன்னே வியாழன்தந்த வரமகன் | பரிசுத்தமாகிய பிரஹ்ம சமுத்திரத்தில் மேருகிரி முதலிய பர்வதக்கூட்டங்கள் யாவும் நுரைகள் போன்றனவாம், பரவைஞாலம் நாமரூபப் பிரபஞ்சம் பரம ஆதித்தன்போன்ற பரிபூரண பரமாத்மாவின் சன்னிதியில் பேய்த்தேராம் தோற்ரு |

கசனும் பேரோன் செப்பினன் அதுவள்ளல் கேட்பாய் = மாத்திரமாம் அதி திடமாகிய இத்திருஷ்டியை யுடைய தேவகுரு பிரகஸ்பதி ஈன்ற மேன்மை வாய்ந்த புத்திரன் கசனென்னும் நாமதேயம் வாய்ந்தவன் பூர்வம் கூறினன் கூறிய அதனைத் தாதாவாயுள்ள இராகவ கேட்பாய்.

கசனுயர் சமாதி நீங்கி யொருபகற் களிக்கு நெஞ்சன்
வசமறத் தழுத ழுத்த வசனத்தன் யாது செய்கேன்
றிசையுற வெங்கு செல்கேன் றீர்ப்பதென் கொள்வ தென்னு
மிசையுயர் கற்ப நீர்போன் மேதினி யெங்கு நானே. (19)

கசன் உயர் சமாதிநீங்கி யொரு பகல் களிக்குநெஞ்சன் வசமறத் தழுதழுத்த வசனத்தன் யாது செய்கேன் திசையுற எங்குசெல்வேன் தீர்ப்பதென் கொள்வ தென்னு மிசையுயர் கற்ப நீர் போல் மேதினி யெங்கு நானே = (கசன் சுவாநுபூதியை வெளியிட்டபடி வெளியிடல்) தேவகுரு புத்திரனான கசன் மேன்மை தங்கிய நிருவிகற்ப சமாதியினின்றும் எழுந்து ஒருபோது மகிழ்நிறை மனத்தனுய்ப் பரவசமானவனுய் ஆனந்தமேலீட்டால் தடுமாறிய வசனத்தனுய்க் கிருதகிருத்தியனுகலால் எதனை இயற்றுவேன், சர்வான்மகமாதலின் எதனைக் கவர்வேன், எதனைத் தியாகிப்பேன் பரிபூரணனுதலால் எத்திசையை நோக்கி யாண்டுசெல்வேன் மேலே சொன்ன பிரளயகால மகோததிபோல பிரபஞ்ச முழுவதும் யானே வியாபித்துள்ளேன்.

மேனியிற் புறத்தி னுள்ளின் மேலொடு கீழிற் றிக்கில்
வானில்லை யகத்தி லெங்கு நானன்றி மற்றொன் றில்லை
யானிலா விடமு மில்லை யெனதிடத் திலாது மில்லைத்
தானிகழ் பொருள்வே றில்லை சச்சிதா னந்த மென்றான். (20)

மேனியில் புறத்தில் உள்ளில் மேலொடுகீழில் திக்கில் வானில் வையகத்தில் எங்கும் நானன்றி மற்றொன்றில்லை யான்இலா இடமும் இல்லை எனதிடத்து இலாதுமில்லை தான் வேறு நிகழ் பொருள் இல்லை சச்சிதானந்த மென்றான் = தேகத்தில் ஆதிபௌதியாதி பாகியத்தில் அத்தியாத்மிக அப்யந்தரங்களோடும் மேலிலும் கீழிலும் திசைகள் எட்டிலும் சுவர்க்கத்தில் பூவுலகத்தில் பிற யாண்டுமே ஆத்மாவல்லது மற்றொன்று இல்லை யாண்டு அகமில்லையோ அத்தகைய இடமே கிடையாது. என்னிடத்து யாவுந் தோற்றுதலின் இல்லாதது ஒன்றுமே இல்லை. தனக்கு அன்னியமாக விளங்கத்தக்க பொருள் இல்லை வேறில்லை சச்சிதானந்த சொரூபமே இருக்கின்றதுவென்று தனது அநுபூதியை உரைத்தான்.

கசன் கதை முற்றிற்று.

ஆக திருவிருத்தம் — 759.

# நிதிப்பிரகரணம்

## அவதாரிகை

சமதமாதி சர்வகுண சம்பத்தியானே ஆத்மவிசாரண யோக்கியதையுடைய வரும் சமாதிவிக்கினபூத பிராரப்த போகத்தால் சிறிது இரஜசு அடைந்த சாத்வீகமே பெறுவரன்றிச் சுத்தச் சாத்வீகம் பெற்ருர் அத்தகையரே புகழப்பெறுவரெனின் சுத்த சாத்வீக சமாதியிலிருப்பவரைப்பற்றி என்னேயுரைப்பது என்னுங் கருத்துடையவராய் இராஜச சாத்விகரைப் புகழ்ந்து விவேகம் வைராக்கியம் மிகுமாறு உபதேசிக்கத் தொடகங்ல்.

பெறற்கொ ணுதசத் துவகுணப் பிறப்பினர் புவிமே
னிறத்து வாழ்வது வான்றிகழ் நிறைமதி நிகராம்
வறக்குந் துன்பத்தில் வாடல ரிரவுதான் வரினுஞ்
சிறக்கும் பொற்கம லத்தலர் குவியுமோ சிறிதும். (1)

பெறற்கொணுத சத்துவகுணப் பிறப்பினர் புவிமேல் நிறத்து வாழ்வது வான்திகழ் நிறைமதி நிகராம் வறக்குந்துன்பத்தில் வாடலர் இரவுதான்வரினும் சிறக்கும் பொற்கமலத்து அலர் குவியுமோ சிறிதும் = கிடைத்தற்கு அதி துர்லபமான எம்மகான்கள் விசாரணயோக்கியதையைத் தொடர்ந்தவராய்ச் சிறிது இரஜசுகலந்த சத்துவகுணத்துடன் அவதரித்தவர் இவ்வுலகத்தில் தேகத்தோடு கூடிமைத்திரியாதி தேஜசுடன் வாழாநிற்பது ஆகாயத்தில் விளங்காநின்ற பூரண சந்திரனுக்கொப்பாம் சித்தத்வத அபிலாஷையில் உலர்த்தும் துக்கத்திஞல் வாட்டமுருர். நிசிவந்து நிகழ்ந்த போதினும், சொர்ணம் நான்கு வகை ஆடகம் 1, கிளிர்ச்சிறை 2, ஜாதரூபம் 3, ஜாம்பூநதம் 4, ஆக நான்குவிதமாய் விசேடமாய் விளங்கும் பொன்ஞல் செய்யப்பட்ட தாமரை மலர் சங்கோசமாமோ (குவியுமோ) அற்பமும்.

பகுத மன்றியே மற்றுள தொழில்களிற் புற்ருர்
தகுதி யாகிய மேலவர் நெறியிலே சரிப்பர்
மிகுதி யானிறைந் தசைவறு முளத்திஞன் மிகுவர்
தொகுதி யானநட் பருண்முதற் குணங்களாற் சுடர்வார். (2)

பகுதமன்றியே மற்றுள தொழில் களில் பற்ருர் தகுதியாகிய பிராகிருதத்தில் செய்யத்தக்க காரியங்களைச் செய்வரேயல்லாமல் வேருயுள்ள (சாஸ்திர

மேலவர் நெறியிலே சரிப்பர் மிகுதியால் நிறைந்து அசைவறும் உளத்திஞல் மிகுவர் தொகுதியான நட்பு அருள் முதற் குணங்களாற் சுடர்வார் = விரோத) கர்மங்களிற் சம்பந்தியார் ஞானமுடையவராகிய சத்புருடரது சதாசாரத்திலே ஒழுகுவர் மேன்மையால் பூரணத் தன்மையை அடைந்து சஞ்சலமற்ற மனத்திஞல் கவின்வாய்ந்தொழிர்வர் கூட்டமான மைத்திரி கருணையாதிய சற்குணங்களிஞலே பிரகாசிப்பர்.

இயற்கை யாகிய குணத்தின ரிழிவுயர் விரண்டு
நயக்க லாதவர் சமமுளோர் நன்னெறி நடப்போர்
வியக்கு மாறுதன் கரைகடா வேலையை யொப்போர்
மயக்கி லாதவ ரிரவிபோ னியதியை வழாதோர். (3)

இயற்கையாகிய குணத்தினர் இழிவு உயர்வு இரண்டும் நயக்கலாதவர் சமமுளோர் நன்னெறி நடப்போர் வியக்குமாறு தன் கரைகடா வேலையை யொப்போர் மயக்கிலாதவர் இரவிபோல் நியதியை வழாதோர் = அப்பியாச காலத்தில் அநுஷ்டித்த இயல்பாய நல்ல குணத்தினையுடையவர் நிந்தை ஸ்துதி இரண்டினிடத்தும் விரும்பாதவர் சுகதுக்கங்களில் விகாரமின்றி யிருப்பவர் ஆச்சரியம் அடையும்வண்ணம் தன் மரியாதையைத் தாண்டாத சமுத்திரத்தை யொப்போர் நான்குவித மோகம் இல்லாதவர் சூரியனைப்போல கடமையைத் தவருது செய்பவர்.

கொள்ளற் பாலது துயரிலா தவர்நிலை குறுகத்
தள்ளற் பாலது தீயவர் நெறியெனுஞ் சழக்கே
யெள்ளற் பாலதா முலகமே தியாமெவ னென்றே
தெள்ளற் பாலது குரவரா லறிவிஞற் றீர. (4)

துயரிலாதவர் நிலைகொள்ளற்பாலது தீயவர் நெறியெனுஞ் சழக்கே குறுகத் தள்ளற்பாலது எண்ணற்பாலதாம் உலகம் ஏது யாம் எவனென்று குரவரால் அறிவிஞல் தீரதெள்ளற்பாலது = துக்கமில்லாதவர் நீதி கைக்கொள்ளத்தக்கது, கொடியவரது மார்க்கமென்னும் குற்றமே (அறியாமை) அத்யந்தம் பொய் நீக்கத்தக்கது, பெரியோர்களால் இகழத்தக்கதான பிரபஞ்சம் எத்தகையசொரூபம் நான்யார் என்பதாக பிரஞ்ஞையிஞலும் அஞ்ஞாஞதிகள் ஒழிய சிந்திக்கத் தக்கது.

வருந்து கிற்பது தனையறி நெறியிலே மனத்தாற்
றிருந்து கிற்பது கருமத்தி லழுந்திலாச் செய்கை
பொருந்து கிற்பது தீயவ ரல்லவர் புணர்ச்சி
யருந்து கிற்பது நானென்ப தாக்குகிற் பதுவே. (5)



| | |
|---|---|
| தனையறி நெறியிலே வருந்துகிற்பது கருமத்தில் அழுந்திலாச் செய்கை மனத்தால் திருந்துகிற்பது தீயவரல்லவர் புணர்ச்சி பொருந்துகிற்பது ஆக்குகிற்ப நானென்பது அதுவே அருந்துகிற்பது = | ஆன்மாவையறியும் சிரவணாதிமார்க்கத்திலேயே பிரயாசமெடுத்துக்கொள்ளத்தக்கது கருமத்தின் கண்ணே மூழ்காது மனத்தால் பலாபேக்ஷையின்றித் திருந்தச்செய்வதே தேகாதிகளில் நானென்றெழும் அகந்தை மமதை இவற்றை ஞானத்தால்புசிக்கத்தக்கதுசாதுசங்கத்தையேபொருந்தியிருப்பது. |

தீர்க்கத் தக்கது நரம்பெலும் பெனுமுடற் றியக்கம்
பார்க்கத் தக்கது முழுதுயிர்க் குள்ளுறை பரம
மீர்க்கத் தக்கதே றிரவியி னிடத்திலும் பாரி
னீக்கத் தக்கிலாப் புழுவினுஞ் சித்தொன்றே நிற்கும். (6)

| | |
|---|---|
| நரம்பு எலும்பெனும் உடல் தியக்கம் தீர்க்கத்தக்கது முழுதுயிர்க்குள்ளுறை பரமம் பார்க்கத்தக்கது ஈர்க்கத்தக்கதேர் இரவியினிடத்திலும் நீக்கத்தக்கிலாப் புழுவினுஞ் சித்து ஒன்றே நிற்கும் = | மயிர் தோல் மாமிசம் உதிரம் நரம்பு எலும்பு மூளைமய மலஉடலில் யானென்னும் மயக்கமே அடியோடு நீக்கத்தக்கது, சர்வஜீவர்களிடத்தும் சாக்ஷிமயமாய் உள்ளிருக்கும் பரம்பொருளையே (பிரத்யக்க பின்ன பிரஹ்மத்தையே) காணத் தக்கது. ஏழு குதிரைகளாலும் இழுக்கப்பட்ட இரதத்தைச் செலுத்தும் சூரியனிடத்திலும் பூமியில் அகற்றுதற்குக் கூடாத, தள்ளுதற்குக் கூடாத கிருகி இடத்திலும் மணிகளிற் சூத்திரம் போல் அநுசுதமாய் சிறிது ஒன்றே இருக்கும். |

தாம தத்துட னிராசதஞ் சாத்திக மென்னு
நாம முக்குணப் பிறவியு முயற்சியா னண்ணுஞ்
சேம முத்தியைச் செய்திடுஞ் சாத்திகச் செய்கை
யிராம வுத்தம ராகவ வென்றுமீட் டுரைப்பான். (7)

| | |
|---|---|
| தாமதத்துடன் இராசதஞ் சாத்திகமென்னு நாமம் முக்குணப் பிறவியும் முயற்சியும் நண்ணும் சாத்திகச் செய்கை சேமமுத்தீயைச் செய்திடும் இராம உத்தம ராகவவென்று மீட்டுரைப்பான் = | தாமதம், இராஜதம், சாத்திகமென்று சொல்லப்பட்ட பெயர்களையுடைய மூன்று குணங்களாலாகிய தேவ மநுஷ்யாதி பிறவிகளையும் பிரவிருத்திக்கும் கருமவசனுவசத்தாலடைவர்கள் ஜீவர்கள், சாத்திகத்தன்மையானது சர்வ அனர்த்த நிவர்த்திருப மோக்ஷத்தை அடைவிக்கும் ஸ்ரீ இராமபத்திர உத்தம உபாதியுடையோய் இரகு குலதிலகமே என விளித்துரைத்து மீளவுங் கூறத் தொடங்குகின்றேம். |

4. திதிப்பிரகரணம் முற்றிற்று.

ஆக விருத்தம்—766.

# உபசாந்திப் பிரகரணம் - சனகராசன் கதை.

## அவதாரிகை

முன்பு ஜக உற்பத்தி ஸ்திதிகளுக்கு மனதே காரணமெனப்பட்டது, இப்போது அந்த மனம் உபசமத்தன்மையானே சர்வப்பிரபஞ்ச உபசமத்தால் சொரூபப் பிரதிஷ்டையில் தாற்பரியம் ஆம் என ஐந்தாவது உபசமப்பிரகரணத்தைத் தொடங்குபவராய ஸ்ரீ வசிஷ்டபகவான் ஹே! இராகவ என விளித்துக் கூறுகின்றார்.

சுரர்குருவின் மகனுரைத்த படியேயிவ் வுலகெலாஞ் சொரூப மாகும்
விரவியநீள் பிறப்பிறப்பா மிம்மாயை யிராசத்தா மதத்தை மேவும்
புருடர்தரித் திடவற்றுய்த் தூண்சுமக்கு மண்டபமே போல நிற்குந்
திரமுளசத் துவகுணத் துன்போல்வார்கள் சனனபயந் தீர்ந்து நிற்பார். (1)

சுரர்குருவின் மகன் உரைத்த படியே இவ்வுலகெலாஞ் சொரூப மாகும் நீள்விரவிய பிறப்பு இறப்பு ஆம் இம்மாயை இராசத தாம தத்தை மேவும் புருடர் தரித்திட வற்றுய்த் தூண்சுமக்கும் மண்டபமேபோல நிற்கும் திரமுளசத் துவகுணத்துன்போல்வார்கள் சனனபயந் தீர்ந்து நிற்பார் = தேவகுரு பிரகஸ்பதி புதல்வனை கசன் சமாதியினின்றும் யுத்திதனாய்த் தனது அனுபவத்தைக் கூறிய முறையே இப் பிரபஞ்சமுழுதும் தன் மயமேயாகும். அநாதியாயும் பலவாயுமுள்ள ஜனன மரண சம்சார வடிவ இம்மாயை இரஜோ குண தமோகுணத்தை அடைந்திருக்கும் புருடர்களால் தாங்கற்பாலதாய் நல்ல தம்பங்களானே தாங்கப்பெற்ற மண்டபம் ஒப்ப ஸ்திதி பெற்று நிற்கும், தைரியம் மிகுந்துள்ள உன்னைப்போன்றவர்கள் ஜனன மரண சம்சார பீதியை விட்டிருப்பார்கள்.

வழுவறுசத் துவகுணத்தோர் தோலுரிக்குமர வென்ன மாயாபாச
நழுவுவரெல் லாம்பிரம நாமதுவே யென்றெண்ணி நாமும் வேறே
முழுதுலகம் வேறென்னு மோகமொழிப்பாய் பிரமமூலச் சித்தி
லெழுவனகற் பனையெல் லாங்கடலி லலைபோன்மெய்யா யில்லை யன்றே. (2)

வழுவறு சத்துவகுணத்தோர் எல்லாம் பிரமம் அதுவே நாமென்றெண்ணி தோலுரிக்கும் அரவென்ன மாயா பாசம் நழுவுவர் நாமும் வேறே முழுதுலகம் வேறென்னும் மோகமொழிப்பாய் மூலபிரமசித்தில் எழுவன கற்பனையெல்லாங் கடலில் அலைபோல் = முன்மொழிந்த இராஜசுகலந்த சத்துவகுணத்தையுடையவர் சமஸ்தமும் பிரஹ்ம சொரூபம் அந்தச் சர்வான்மகப் பிரஹ்மமே அகம் எனச் சிந்தித்துச் சட்டை கழற்றும் பாம்பைப்போலத் துச்சமாயுள்ள மாயபாசத்தை எளிதாய் விடுவர், நாமும் வேறே (அன்னியமே சர்வப் பிரபஞ்சமும் அன்னியமே) யென்னும் பிராந்தியை அகற்றுவாய் ஜகத்காரண பிரஹ்ம சிற்சொரூபத்தில்

மெய்யாய் இல்லை = உதிப்பனவாய் ஆரோபங்கள் யாவையுமே சமுத்திரத்தில் தரங்கமேபோன்று வாஸ்தவமாக இன்றும் தோற்றினும் அதிஷ்டானத்தைத் தவிர இன்மையின் சின்மயம் அல்லவாம்.

சோகமிலை மோகமிலை பிறப்பில்லை பிறப்பிறப்பிற் சுழல்வா ரில்லை
யேகமென விங்கென்று முள்ளபொரு ளேயுள்ள திரங்க வேண்டா
மூகமுற வருவனபோ வனநினையேற் றெந்தனைக ளொன்று மில்லா
மாகனசத் துவகுணத்தோ டொருவனு யிடரெல்லா மாற்றி நிற்பாய். (3)

மோகவிலை பிறப்பில்லை பிறப்பிறப்பில் சுழல்வாரில்லை சோகமிலை ஏகம் என இங்கு என்றும் உள்ள பொருளே உள்ளது இரங்கவேண்டாம் ஊகமுற வருவன போவன நினையேல் தொந்தனைகளொன்றுமில்லா மாகன சத்துவகுணத்தோடு ஒருவனுய் இடரெல்லாம் மாற்றி நிற்பாய் = (சின்மயமாகிய தன்னையேயுன்னி அன்னியத்தை உபேக்ஷிக்குக) அஞ்ஞானம் இல்லை, ஜன்மம் மரணம் இல்லை ஜனனமரண சம்சாரத்தில் உழல்வாருமில்லை பரமாத்மாவை நோக்குங்கால் சோகமுமில்லை ஒன்றே சத்தியமென்று இவண் எப்போதும் யாது உளதோ அதுவே உளது ஆதலின் நீ தாபப்படவேண்டாம் இதயத்தில் யுக்தியோடுகூடி இஷ்டசாதனமென்னும் யோகமும் அநிஷ்ட நிவாரணமென்னும் க்ஷேமமும் கருதற்கு சீதோஷ்ண சுகதுக்காதிதுவந் துவங்கள் ஒன்றும் இல்லாதவனுகி நித்தியவஸ்துவை சாக்ஷாத்கரிக்கும் சத்துவ குணத்தோடு அத்விதீயனுய் சோகமற்றவனுங் அதனுலே தாபமற்றவனுவாய்.

சமமாகிச் சொருபத்தே திலையாகித் திரமதியாய்ச் சாந்த னுகி
யமர்மனன மௌனியாய் நன்மணிபோற் றெளிந்துதுய ரனைத்துந் தீர்வாய்
நிமலமுற நிகழ்காலத் தொழிற்செய்தி யாவையினு நேய மின்றி
நமதெனக்கொள் ளுதல்விடுத லிரண்டுமறத் துன்பமெலா நாசஞ் செய்வாய் (4)

சமமாகிச் சொருபத்தே நிலையாகித் திரமதியாய்ச் சாந்தனுகி மனனம் அமர் மௌனியாய் நல்மணிபோல் தெளிந்து துயரனைத்துந் தீர்வாய் நிமலமுறை நிகழ்காலத் தொழிற் செய்தியாவையினும் நேயமின்றி நமதெனக்கொள்ளுதல் விடுதல் இரண்டுமறத் துன்பமெலாம் — சமதிருஷ்டியுடையவனுய்ச் சுவஸ்தனுய் திடப்பிரஞ்ஞனுய்ப் பரம சாந்தியையுடையவனுய் மனனத்தோடு கூடிய மௌனமுடைய முனிவனுய் உத்தம இரத்தினம்போலச் சொச்சனுய்ச் சகல அநர்த்தங்களும் அற்றவனுய் வர்த்தமானத்தில் பிராப்தத்தால் வந்த விவகாரங்களில் பற்றின்றிச் செய்வாய், எப்பொருள்களினுமே சிறிதும் இச்சையில்லாமல் எமதென்று கொள்ளுதலும் என்னுடையது அல்லவென்னும் இரண்டு

நாசஞ் செய்வாய் = மின்றிச் சகல துக்கங்களையும் அடியோடு கெடுப்பாய், சசத்த தேகத்திலிருந்துளாயெனினும் கடற்சுகப் பிரஹ்மமாய் கழித்துவாழ்வாய்.

இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞான மெளிதி லுண்டாம்
பனிச்சுடர்வெண் ணித்திலங்க ளுத்தமமா மூங்கிலல்லாற் படுவ துண்டோ
செனித்தவரின் மேலோராய் நல்லோராய் மித்திரராய்த் தெளிந்தோ ராகி
யனித்தமறு முத்தராய் ஞானிகளாங் குணமெல்லா மவரைச் சேரும். (5)

இனிப்பிறவா முடிவான பிறப்பிலே மெய்ஞ்ஞானம் எளிதி லுண்டாம் பனிச்சுடர் வெண்ணித்திலங்கள் உத்தமமாம் மூங்கிலல்லாற் படுவதுண்டோ செனித்தவரில் மேலோராய் நல்லோராய் மித்திரராய்த் தெளிந்தோராகி அநித்தமறும் முத்தராய் ஞானிகளாமவரைக் குணமெல்லாஞ் சேரும் = இனிமேல் ஜன்மம் எடாத அந்திய ஜன்மத்தில் தத்துவஞானமும் சகல சாதனங்களும் அதி சுலபமாக லபிக்கும், குளிர்ச்சியும் பிரகாசமும் பொருந்திய மெள்ளியமுத்துக்கள் உத்தமமாகிய வேணுவில் அல்லாமல் உண்டாவதுண்டோ பிறந்தவருள் சதாசார பரம்பரரய் சர்வசம்மதமுடையோராய்ச் சர்வபூத தயையுடையவராய் மனச் சீதளமுடையவராய் நித்தியமுத்தராய் ஞானநிஷ்டராம் அவரைக் கருணைமுதலிய குணங்கள் யாவும் அடையா நிற்கும்.

மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை யுலகெலாம் விரும்பும் தன்மை
கொத்தொன்று வனமூங்கிற் குழலிசையான் மகிழ்விலங் கின்கூட்டம் போலு
மித்தன்மை யாவருக்கும் பொதுமையினு லியம்பியதா மிதனில் வேருய்ச்
சத்தென்ற வழியிரண் டேழ்பவந் தீர்ப்பவர்க் கவற்றைச்சாற்றக் கேண்மோ. (6)

மெத்தென்ற சரித்திரத்தின் அவர் தம்மை உலகெலாம் விரும்புந் தன்மை கொத்தொன்று வனமூங்கில் குழலிசையால் மகிழ் விலங்கின் கூட்டம்போலும் இத்தன்மை யாவருக்கும் பொதுமையினுல் இயம்பினதாம் இதனில் வேருய் ஏழ்பவந்தீர்ப்பவருக்கு சத்தென்ற வழி இரண்டு அவற்றைச் சாற்றக் கேண்மோ = கோமளமான ஆசாரமாதுரியமுள்ள பெரியோரைச் சர்வஜனங்களும் வாஞ்சிக்குந்தகைமை கூட்டமாகப் பொருந்திய வனத்திலுள்ள வேணுகானத்தால் சந்தோஷத்தை அடையும் வனமிருக சமுதாயம்போலும் ஆம் இம்மார்க்கம் சர்வதேகிகட்கும் சாமானியமாக உபதேசித்ததாம், இதனினும் அன்னியாக விசேடமாய் உத்தமமான இரு கிரமங்கள் உள்ளன. எழுவகைத் தோற்றமான சம்சாரத்தை ஒழித்து மோக்ஷம் அடைபவருக்கு உத்தமமான இரு கிரமங்கள் உள்ளன, அவ்விரண்டையுங்கூறக்கேட்பாயாக.

தேசிகன்சொற் பிழையாம லனுட்டிக்கிற் பையப்பையத் தியக்க நீங்கிப்
பேசியசென் மத்தாத லடுத்தசில பிறப்பினு லாதல் பேரும்
மாசறுவிற் பத்திசிறி துண்டாகு மனத்தாற்றன் மனனத் தாலே
யேசறும்ா காசபலம் விழ்வதுபோன் மெஞ்ஞான மெளிதி லுண்டாம். (7)

தேசிகன்சொல் பிழையாமல் அனுட்டிக்கில் பையப்பையத் தியக்கம் நீங்கிப் பேசிய சென்மத் தாதல் அடுத்த சில பிறப்பினு லாதல் பேரும் மாசறுவிற்பத்தி சிறிதுண்டாகும் மனத்தால் தன் மனனத்தாலேயேசறும் ஆகாச பலம் வீழ்வதுபோல் மெய்ஞ் ஞானம் எளிதுலுண்டாம் = ஞானுசிரியர் உபதேசித்த நெறி தவருமல் ஞான நிஷ்டை செய்துவரில் மெள்ளமெள்ள மோகம் ஒழிந்து உபதேசம் பெற்ற இச்சன்மத்திலேனும் மறு பிறப்புக்களிலேனும் முயற்சிக்குத் தக்கபடி பயனும் இது முதலாவதாம், இரண்டாவதோ சிறிதுபோது உண்டாம். இழிவின்றிய சிரவ ணத்தால் தெளிந்த மனத்தோடு கூடிய விசாரத் தாலே தோஷமற்ற ஆகாயபல வீழ்ச்சியொப்ப உண்மை உணர்வு சுலபமாக உதயமாம்.

இவ்விரண்டி லாகாச பலம்போல மெய்ஞ்ஞான மியைந்த தன்மை
மெவ்வியவள் ளான்முன் ஞேர்கதையாலே யான்செப்பத் திருந்தக் கேட்பாய்
தெவ்வுலகி லாபத்தென் றென்றுமிலோன் விதரணத்தோன் செல்வ மிக்கோ
னவ்வியமில் விதேகநா டரசாள்வோன் சனகனெனு மரசர் கோமான். (8)

இவ்விரண்டில் ஆகாசபலம்போல மெய்ஞ்ஞானம் இயைந்ததன்மை செவ்வியவள்ளால்முன் ஓர் கதை யாலேயான் செப்பத் திருந்தக் கேட்பாய் உலகில் தெவ்வு ஆபத்து என்று ஒன்றுமிலோன் விதரணத்தோன் செல்வமிக் கோன் அவ்வியம் இல் விதேக நாடு அரசாள்வோன் சனக னெனும் அரசர் கோமான் = (மேலே கூறிய இருநெறிகளுள் பிபீலிகாமார்க் கம், பிபீலிகை=எறும்பு, விகங்கமார்க்கம் விகங் கம்=பக்ஷி) இவ்விரு மார்க்கங்களில் ஆகாசபல வீழ்ச்சிக்கொப்பாக, உண்மை உணர்வு உற்ற பான்மையைச் சிறந்த தலைவள்ளலே பூர்வம் நடந்த ஒரு விருத்தாந்தத்தானேயாம் உபதே சிக்க ஒருமையுடன் சிரவணஞ்செய்வாய். பிரபஞ் சத்தின்கண்ணே பகை, ஆபத்து என்று சொல் லப்பட்ட இடர்கள் எதுவும் இல்லாதவன், தேசம்=இடம் பொருளுக்கு ஏற்ப காரியாகாரி யங்களை ஆராய்ந்து செய்பவன் சம்பத்து நிறைந் தவன் பொருமையில்லாதவன் விதேகநாட்டைப் பரிபாலனஞ் செய்பவன் ஜனகராஜாவென்னும் நாமம்வாய்ந்த ஒரு அரசனிருந்தனன்.

சற்குணத்தாற் கடலனையான் சக்கரத்தா னெனவுலகந் தாங்கு நீரா
னற்குணஞ்செய் வசந்தனு னறுமலர்சூழ் நந்தனத்தி னயந்து மேவி
தற்குரிய தந்திரர்கள் புறநிற்பத் தனியனுய்ச் சரிக்கும் வேலை
சிற்குரிய மனமுடைய சித்தர்கணம் பாடுவபண் செவியிற் கேட்டான். (9)

சற்குணத்தாற் கடலனையான் சக்கரத்தான் என உலகந்தாங்கு நீரான் நற்குணஞ்செய் வசந்த னுன் நறுமலர்சூழ் நந்தனத்தில் மைத்திரியாதி கல்யாண குணங்களால் நிறை கடலுக் கொப்பானவன், விஷ்ணுபோல உலகத் தைப் பரிபாலனஞ்செய்யும் பான்மையுடையவன் ஆனந்தத்தைச் செய்விக்கும் வசந்தகாலத்தில்

நயந்துமேவி தற்குரிய தந்திரர்கள் புறநிற்பத் தனியனுய்ச் சரிக்கும்வேலே சிற்குரிய மனமுடைய சித்தர்கணம் பாடுவ பண் செவியிற் கேட்டான் = வாசனைவீசும் புஷ்பங்கள் நிறைந்த உத்யான வனத்தில் உற்சாகத்துடன் உலாவலுற்றுத் தனக்கு உரித்தாகச் சேவைசெய்யும் அநுசரர்கள் தூரத்தேயிருப்ப, ஏகாங்கியாய் குஞ்சங்களில் உலாவும்போது சச்சிதானந்த நிஷ்டைவாய்ந்த சித்தமுற்ற ஞானசித்தர்களின் கூட்டம் இசைத்த கீதையை சிரவணஞ் செய்தனன்.

வெறியாரும் பொருப்புறைவோர் விழிப்புலத்தின் மேவாதோர் விளம்பு கீத
நெறியார்மன் னவன்கேட்ட படியுரைப்ப நெடியவனே நினைவிற் கொள்வா
யறிவானு மறிபொருளுங் கூடியகூட் டரவிலெழு மறிவா னந்தம்
பிறியாத வான்மதத் துவத்தெழுந்த தாமதனைப் பேணல் செய்வாம். (10)

வெறியாரும்பொருப்புறைவோர் விழிப்புலத்தில் மேவாதோர் விளம்புகீதம் நெறியார் மன்னவன் கேட்டபடி உரைப்ப நெடியவனே நினைவிற்கொள்வாய் அறிவானும் அறிபொருளுங் கூடிய கூட்டரவில் எழும் அறிவானந்தம் பிறியாத ஆன்ம தத்துவத்து எழுந்ததாம் அதனைப் பேணல் செய்வாம் = மணங்கமழும் சோலே சூழ்ந்த பர்வதாதிகளில் சஞ்சரிப்பவர் கட்புலனுக்கு விஷயமாகாத சித்தர்கள் தாமே தம்பொருட்டு உரைத்த கீதங்களை நிஷ்காமிய கருமம் விவேகாதி சாதனங்கள் முற்றுப்பெற்ற சனகராஜா சிரவணித்த பிரகாரம் யாம் கூற நீண்ட புகழுடைய இராகவ கருத்தில் தாரணை செய்வாய், திருஷ்டாவும் திருசியமும் சேர்க்கையில் புத்தியில் தோன்றும் விஷயானந்தம், அபேதமாம் தனது ஆன்ம தத்துவத்தில் உண்டாயதாம், சுவான்மாவாகிய அதனையே நிச்சலமாகப் பாவனை செய்வாய்.

காண்பானுங் காண்பனவுங் காட்சியும்வா தனையுடனே கழல விட்டுத்
சேண்பாவு காட்சிக்கு முதலொளியா மச்சொருபஞ் சிந்தை செய்வா
மேண்பாலா முள்ளதில தெனுமிரண்டி னிடையெய்தி யிறவி லாதாய்
மாண்பான வொளிக்கெல்லா மொளியாமச் சொருபத்தை மதித்தல் செய்வாம். (11)

காண்பானுங் காண்பனவுங் காட்சியும் வாதனையுடனே கழல விட்டுச் சேண்பாவு காட்சிக்கும் மூதல்ஒளியாம் அச்சொருபஞ் சிந்தைசெய்வாம் ஏண்பாலாம் உள்ளது இலதெனும் இரண்டினிடையெய்தி இறவிலாதாய் மாண்பான ஒளிக்கெல்லாம் = (2.ஆவது சித்தர்) திருஷ்டா, திருசியம், தரிசனம், திரிபுடியை வாசனையோடு கூடவே மீட்டணுகாது பரித்தியாகித்து வியாபகமாய் விரிந்த தரிசனத்துக்கு அதாவது விருத்தி ஞானத்துக்கு பிரதமப் பிரகாசமாம் பிரஹ்மாபின்ன பிரத்யகாதம் சொருபத்தை இனிது உபாசிப்பாம். (3ஆவது சித்தர்) முரன்பாடில்லாத நிலேத்தற்குரியதான அஸ்தி நாஸ்தியென்னும் இரண்டின்

ஒளியாம் அச்சொரூபத்தை மதித்தல் செய்வாம் = மத்யகதமடைந்து நாசரகிதமாய் மாக்ஷிமை பொருந்திய உள், வெளி, அஷ்டப்பிரகாசங் களுக்கெல்லாம் பிரகாசத்தைக் கொடுத்துக் கொண்டு சொப்பிரகாசமாம் சொரூபத்தை உபா சிப்பாம்.

அகமகமென் றனைத்துயிரி னிடத்துமிருந் தனவரத முரைப்ப தாகி
நிகழொளியா யான்மதத் துவமான சொரூபத்தை நினைத்தல் செய்வாந்
திகழிதய குகையுறையுந் தேவதையை விட்டயலே தெய்வந் தேடன்
மிகவரிய கௌத்துபத்தை யெறிந்துசிறு மணிதேடும் வேட்கை போலாம். (12)

அனைத்துயிரினிடத்துமிருந்து அகம் அகமென்று அனவரதம் உரைப்பதாகி நிகழ் ஒளியாம் தத்துவமான ஆன்ம சொரூபத்தை நினைத்தல் செய்வாம் திகழிதய குகையுறையுந் தேவதையை விட்டு அயலே தெய்வந் தேடல் மிகவரிய கௌத்துபத்தை யெறிந்து சிறுமணி தேடும் வேட்கைபோலாம் = (4-ஆவது சித்தர்) சுரநரதிரியக்காதி ஜீவர்களின் இருதயத்து அந்தரியாமியாயிருந்து எப்போதும் இயம்புவதாகி ஒளிர்வில்லாதாய் உண்மையாம் ஆன்மபின்ன பிரஹ்ம சொரூபத்தை நன்ருகத் தியானஞ் செய்வாம் இரண்யமயமாய் விளங்கா நின்ற இருதய குகைத்தேயத்தே யிரானின்ற ஆன்ம தெய்வத்தை வெறுத்து வேருெரு தெய் வத்தை ஆராய்தல் அத்தியந்தங்கிடைத்தற்கரிய கௌத்துபத்தை எறிந்துவிட்டு அற்ப இரத்தினம் காய்ச்சிக் கல்லைத் தேடும் ஆசைக்கொப்பாம்.

மாளாத காதலெனும் வற்சநாபிக் கொடியின் வனத்தைச் சுட்டு
நீளாசை யனைத்துமறுத் தவர்க்கன்ருே விப்பயன்ரு னேரா நிற்குங்
கோளான பொருளனைத்தின் முன்பொடுபின் பினிமையிலாக் குற்றங் கண்டு
மீளாத பாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேருென் றன்ருல். (13)

மாளாத காதலெனும் வற்ச நாபிக் கொடியின் வனத்தைச் சுட்டு நீள்ஆசை அனைத்தீதும் அறுத்தவர்க்கன்ருே இப்பயன் ருன் நேராநிற்கும் கோளான பொருளனைத்தின் முன்பொடு பின்பு இனிமையிலாக் குற்றங் கண்டு மீளாத பாவனையாற் கட்டுண்பார் வேசரியே வேருென்றன்ருல் = (5-ஆவது சித்தர்) விவேகவிராகாதிகளாலன்றி இகபர ஆசையென்னும் விஷவல்லிக்கொடியின் காட்டைப் பஸ்மமாக்கி நீண்டுகொண்டு போம் சகல ஆசைகளையும் அவற்றின் மூலமான அஞ் ஞானபரம்பரைகளையும் வாசனைகளையும் சேதித்த முமுக்ஷுக்களுக்கே இப் பிரயோஜனமானது அடையப்பெறும். (6.ஆவது சித்தர்) குற்ற முடைத்தான (சாரம் இன்மையான) சகல வஸ் துக்களிலும் பூர்வா பூர்வம் விசாரணையால் தோஷம் என்று அறிந்தும் நீங்காத பாவனை மாத்திரத்தால் பந்தப்படுவார் அவர் கர்த்தபமே நரர் அன்று.

எழுந்தெழுந்து சீறுகின்ற விந்திரியப் பாம்புகளை யிதயந் தன்னி
லழுந்துவிவே கத்தடியால் வச்சிரங்கொண் டிந்திரன்வெற் படர்வ தென்ன
விழுந்திடமோ துறவேண்டுஞ் சாந்தியினாற் சமமேவி யிடர்தீர் நெஞ்ச
முழுந்துசுக வடிவானதற் பதநிலையைப் பெறுமிதுவே முத்தி யென்ன. (14)

எழுந்தெழுந்து சீறுகின்ற இந்திரியப் பாம்புகளை இதயந் தன்னில் அழுந்து விவேகத்தடியால் வச்கிரங்கொண்டு இந்திரன் வெற்பு அடர்வதென்ன விழுந்திட மோதுறவேண்டும், சாந்தியினால் சமமேவி இடர்தீர் நெஞ்சம் முழுந்து சுகவடிவானதற்பத நிலையைப்பெறும் இதுவே முத்தியென்ன =

(7-ஆவது சித்தர்) இந்திரிய நிக்கிரகத்தையே முக்கியம் சாதனம் எனக் கூறல் வாசனாவேகத்தால் குதித்து எழுந்து சீறும் இந்திரியப் பாம்புகளை இதயத்தில் திடவிவேகத்தடியால் வச்சிரங் கொண்டு இந்திரன் பர்வதங்களைப் பொடிப்படுத்தியதுபோல நாசமாகும்படி தத்தம் கோளகைகளில் தகையவேண்டும். (8.ஆவது சித்தர்)வெளி உள் இந்திரிய வியாபார ஒய்வாம் சமத்தானே சாந்தியடைந்து சகல அனர்த்தங்களும் ஒழிந்து மனமானது பேரானந்த பிரஹ்மாபின்ன ஆத்ம சொரூபத்தை அடையும் இதுவே மோக்ஷசுகம் என்றனர்

தெளிவுடைய சித்தர்கணந் திகழ்வுறப்பா டியகீதம் தெளியக் கேட்டுக்
களிதருவெஞ் சினக்கருட னொலிகேட்ட பாம்பென்னக் கலங்கி மன்னன்
குளிர்பொழினின் றகமடைந்தா னனைவரையும் விடைகொடுத்துக் கோயில் புக்கா
னளிர்சுதைசெய் மேனிலத்தி லொருவனே யிருந்துநனி நாட லுற்றான். (15)

தெளிவுடைய சித்தர்கணந் திகழ்வுறப் பாடியகீதம் தெளியக் கேட்டுக் களிதரு வெஞ்சினக் கருடன் ஒலிகேட்ட பாம்பென்னக் கலங்கி மன்னன் குளிர்பொழில் நின்று சுகமடைந்தான் அனை வரையும் விடைகொடுத்துக் கோயில்புக்கான் நளிர்சுதைசெய் மேல்நிலத்தில் ஒருவனேயிருந்து நனிநாடலுற்றான் =

பரமப் பிராந்தியினின்றுந் தெளிந்த சித்தர் கூட்டம் தெளிவாகப்பாடிய கீதையை சம்சயம் விபரீதம் இல்லாமல் சிரவணித்துச் செருக்குடைய கோபத்தோடுற்ற பட்சிராஜனது சப்தத்தைக் கேட்ட கட்செவி ஒப்ப விஷாதமுற்று மகீபதி சீதளமாய் உத்யான வனத்தினின்றும் தனது அரண்மனையை அடைந்தான் சகல பரிவாரங் கட்கும் தத்தமது இருப்பிடத்திற்குப் போகும்படி ஆஞ்ஞைசெய்து உள் அரண்மனையுட் புகுந்தான் குளிர்ச்சிபொருந்திய மேல்மாடியில் ஏகாங்கியா யிருந்து நன்றாக ஆராயலாயினான்.

பறக்கின்ற பறவைகளின் சிறகென்ன வனவரதம் பதைத் துலாவி
யிறக்கின்ற வுலகநடை நோக்கிவாய் விட்டிரங்கி யியம்ப லுற்றா
னறக்கன்றி யவத்திலுழன் றலமருமிவ் வுலகிடையா னந்தோ வந்தோ
நிறக்கின்ற மயக்கத்தாற் கல்லிடைகற் போலு ருண்டுநெரிந் தேனந்தோ. (16)

பறக்கின்ற பறவைகளின் சிற கென்ன அனவரதம் பதைத் துலாவி இறக்கின்ற உலகநடை நோக்கி வாய்விட்டு இரங்கி இயம்பலுற்ருன் அறக்கன்றி அவத்தில் உழன்று அலமரும் இவ்வுலகிடை யான் அந்தோ அந்தோ நிந்திக்கின்ற மயக்கத் தால் கல்லிடை கல்போல் உருண்டு நெறிந்தேன் அந்தோ= மேல் எழுந்து சுழலும் பட்சிகளின் பட்சங்கள் போல் எப்போதுமே துடிப்புற்றுச் சுழன்று இறந்துபோகின்ற உலகவிவகாரத்தைப்பார்த்து (ஆசரணையைப்பார்த்து) அந்தோ கஷ்டம் என்று வாய்திறந்து இரக்கத்துடன் கூறத் தொடங்கி ஞன் முற்றினும் நைவுற்று வீணுகவே சுழன்று திரிந்து துயருற்று மயங்கும் இவ்வுலக விவகாரத் திடையில் அகம்பரிதாபம், பரிதாபம் மிகுந்த மயக்கத்தால் பெரும் பாராங்கல்லில் சிறிய கற் போலப் புரண்டு உருண்டு நொறுங்கினேன் ஐயோ.

காலமொரு கான்முடியா திதனிடைஎன் நூருண்டோர் கனமு மில்லை
சாலவிது தனைமதித்து வன்காத லிடைவீழ்ந்து தளர்வ தேஞன்
றூலமதி யாற்கெட்ட வெனைப்போல வீனரார் சொல்லற் பாற்ருே
சீலமறு வாணுளைப் பெரிதாக நினைவதே சீசீ யந்தோ. (17)

காலம் ஒருகால் முடியாது இத னிடைஎன் நூருண்டு ஓர் கணமு மில்லை இதுதனை சாலமதித்து வன் காதலிடை வீழ்ந்து தளர் வது ஏன் நான் தூலமதியாற் கெட்ட எனைப்போல ஈனர் ஆர் சொல்லற்பாற்ருே சீலமறு வாணுளைப் பெரிதாக நினைவதே சீசீ அந்தோ = (இப்போது காலம் அற்பமெனத்தானே இயம் பல்) காலமானது ஒருபொழுதேனும் அவதி யடையாது இத்தகைய காலஜாலத்தின்கண் எனது வாழ்க்கையாகிய மநுவருடம் நூறும் ஓர்கணும்சம் என்பதாகவும் எண்ணமுடியாது இவ்வற்ப ஆயுளைத்தானே மகத்தாக எண்ணிப் பேராசையில் அழுந்தி வருந்துவது ஏன் யான், அற்பபுத்தியால் கெட்டுப்போன என்னைப் போன்ற நீசர் யாவர் மொழிந்திட முடியுமோ குணமற்ற அற்ப ஆயுளை மகத்தாகக் கருதுவது என்னே இஃதென்ன ஆச்சரியம், திக், திக் ஐயையோ.

எல்லையிலா வண்டத்தி லியாளுளும் புவிநோக்கி லிறையு மில்லை
யல்லலுறு மிதுபெரிதா வாதரித்து நிற்பதே யந்தோ வந்தோ
புல்லிமையற் றினிதாகி யுதாரமாச் செயப்படாப் பொருளீ தென்னத்
தொல்லுலகி லொருபொருளுங் கானே னித்தொடர்ச்சி நிலையென்னே
யென்னே. (18)

எல்லையிலா அண்டத்தில் யான் ஆளும் புவிநோக்கில் இறையு மில்லை அல்லல் உறும் இது பெரிதா வாதரித்து நிற்பதே வரம்பு இல்லா அண்டகோடிகளுக்குள் நான் ஆளும் இராஜ்ஜியத்தைப் பார்த்தால் அணு வெனவும்சொல்லமுடியாது, துன்பங்கள் நிறைந் திருக்கும் இத்தேசத்தை மகத்தாக நினைத்து

ஓ)

அந்தோ அந்தோ புல்லிமை யற்று இனிதாகி உதாரமாச் செயப்படாப் பொருள் ஈதென் னத் தொல்லுலகில் ஒரு பொருளுங் காணேன் இத் தொடர்ச்சி நிலை என்னே என்னே = பற்றுற்று விவகரிப்பது ஐயோ ஐயோ அற்பத் தன்மையின்றி இரம்மியமாய் உதாரமாம் ஒருவ ராலும் ஆக்கப்படாவஸ்து ஈதுவென்று சொல் லும்படியாய அநாதையாய் இப் பிரபஞ்சத்தில் எப்பொருளையுமே கண்டிலேன் அங்ஙனம் இல தாக எனது மதியின் இப்பற்று நிலையாதுகொல் இஃதென்ன ஆச்சரியம்.

தலைவர்தலை மேலுறைவோர் நாட்களினுற் ருழ்ந்தோர்க்குத் தாழ வீழ்வர்
நிலையில்பெரு மையையுறுதி நினைக்கின்ற நெஞ்சே யின்னினைவீ தென்னே
தொலைவில்பெரும் போகங்கள் பெரியோர்கள் கிளையோடுந் தோன்றித் தோன்றி
யுலைவுறமாண் டார்முன்னு ளிந்நாளிங் கிவையனைத்தி லுறுதி யென்னே. (19)

தலைவர் தலைமேலுறைவோர் நாட்களினுல் தாழ்ந்தோர்க்குத் தாழவீழ்வர் நிலையில் பெரு மையை உறுதி நினைக்கின்ற நெஞ்சே இந்நினைவு ஏதுஎன்னே தொலைவில் பெரும் போகங்கள் பெரியோர்கள் கிளையோடும் முன்னுள் தோன்றித் தோன்றி உலைவுற மாண்டார் இந் நாள் இங்கிவை அனைத்தில் உறுதி என்னே = இராஜாக்கள் சிரசின்மேலுள்ள முடிபோன்று வாழ்பவரும் சில தினங்களிலேயே கீழுக்குங் கீழாய் அதோகதியாய் வீழ்ந்துபோகின்றனர், மாய்ந்துபோம் இவ்வற்பமாகிய பெருமையின் கண்ணே நிலையென்று கருதுகின்ற மனமே அசம் பாவிதமாய இந்த எண்ணம் இஃதென்னே புசித் துத் தொலைக்கமுடியாத அளவிறந்த போகங் களும் பிருது முதலிய சக்கரவர்த்திகள் அதிநேய முற்ற பந்துக்கள் யாவருமே முன்னுளில் உதித்து உதித்து நிலைகுலைந்து மடிந்துபோனுர்கள், இப் போது ஈண்டு இவை அனைத்தினும் நிலையாது கொல், ஸ்திரபுத்தி யாதுகொல்.

மண்ணுடு மன்னவரு மவர்தனமு மாண்டன நுண்மணலை யொக்கும்
விண்ணுடு மிந்திரரு மவர்வாழ்வும் போயினவிண் மீனை யொக்கு
மெண்ணுடும் பிரமருமண் டமும்பூதங் களுமிறந்த வெல்லை யில்லைக்
கண்ணுடு மவையெங்கே நின்வாழ்க்கை நிலையென்னே கவலு நெஞ்சே. (20)

மண்ணுடும் மன்னவரும் அவர் தனமும் மாண்டன நுண்மணலை யொக்கும் விண்ணுடும் இந்திர ரும் அவர்வாழ்வும் போயினவிண் மீனையொக்கும் எந்நாடும் அண் டமும் பூதங்களும் பிரமரும் இறந்த எல்லையில்லை கண்ணுடும் அவையெங்கே நின்வாழ்க்கை பூவுலகத்துற்ற மகீபதிகள் அவர்தம் ஐஸ்வரியங் கள் அழிந்தன எண்ணின் சூக்கும மணலையொக் கும் தேவலோகத்துற்ற இந்திரரும் அவர்தம் ஐஸ்வரியங்களும் சென்றெழிந்தன எண்ணின் ஆகாசத்திலுள்ள நக்ஷத்திரங்கட்குச் சமானமாம் பிற எந்த நாடுகளும் அண்டங்களும் பூத பஞ்ச கங்களும் பிரம்மாவும் ஒழிந்தன அளவேகிடையா திருஷ்டிமாத்திரமாய்க் கருதும் அநுபவித்த அவ்

நிலையென்னே கவலுநெஞ்சே = வியாவையும் எங்கே உன்னுடைய ஜீவிதம் திர முடையதோ ஆசக்தியுற்று உழலும் மனமே.

சொல்லாத மாயையிரு ளிரவிலே தேகமயத் தியக்க மான
பொல்லாத நீள்கனவாஞ் சூனியத்தி லிச்சையிறை பூண்டே னென்னிற்
கல்லாத புல்லியனேன் சீசீநா னநவரதங் காணு நாட்க
ளெல்லாம்போ யினபோமா லிறவாதொன் ருய்நின்ரு மெழினுட்
காணேன். (21)

செல்லாத மாயையிருள் இரவிலே தேகமயத்தியக்கமான நீள் பொல்லாதகனவாம் சூனியத்தில் இச்சை இறைபூண்டேன் என்னில் கல்லாத புல்லியனேன் நான் சீசீ அனவரதங் காணும் நாட்கள் எல்லாம் போயின போமால் இறவாதொன்ருய் எழில்நன்ரும் நாள் காணேன் = தத்துவஞானத்தாலன்றி நீங்காத மாயாந்தகார தமோமய இரவில் தேகமயமயலான அகந்தை, மமதை, விவகாரமயமனைத்தும் தீர்க்க துர்ச் சொப்பனமாம் ஒரு பயனுமற்ற சூன்யத்தில் ஆசை அற்பம் அடைந்தேனுயின் ஒன்றும் உண ராத அற்பனேயானுயினேன். திக் திக் நிரந்தரம் அனுஷ்டித்துவந்த ஆசாரங்கள் யாவுமே சென் றன, செல்கின்றன. நித்தியமாயும் அத்வைத மாயும் உத்தமமாயும் ஆனந்தமாயும் உள்ள வஸ்துவை அடையும்படியான தினம் ஒன்றையும் இன்றளவுங் கண்டிலேன்.

நடுவின்முடி வினிலடியி னன்ருனபொரு ளொன்று ஞாலத் தில்லைப்
படுபொருளெல் லாமிறப்பா மலத்தினு லேபூசப் பட்ட தன்ருே
கடுவினைக ளுடோறுங் காய்துயர நாடோறுங் கரையொன் றில்லாக்
கொடுமைகளே நாடோறுஞ் செய்கின்ரு ரறிவில்லார் குரம்பைக் கூத்தால்.(22)

ஞாலத்து அடியில் நடுவில் முடி வினில் நன்ருன பொருள் ஒன் றும் இல்லை, அறிவில்லார் குரம் பைக் கூத்தால் கடுவினைகள் நாடோறும் காய்துயரம் நாடோ றும் கரையொன்றில்லாக் கொடுமைகளே நாடோறும் செய்கின்ருர் = உலகத்தின்கண் பிரதமத்தில் மனோரமம் மாலதி, முல்லை, குசுமாதிகள் நடுவில் = மத்தியில் யௌவனமான வயதில் தேகாதி பொருள் ரமணீ யமாம், முடிவினில் மனோரம்மியமான பொருள் மாம்பழாதிகள், ஆகிய இவை யாவும் மனோரம் மியமான வஸ்துவாய் எதுவுங் கிடையாது. அவை விநாச அமேத்திய தூஷிதங்களாம், ஜடமதியுடைய ஜனங்கள் தேகத்தையான் என (தேகாபிமான நடனத்தால்) தென்னும் அபி மான அபிநிவேசத்தால் பாவ ஏதுவான வினை களையே நாடோறுஞ் செய்கின்றனர். வருத்தும் துக்கமே நாள்தோறும் எல்லையில்லாத நிஷித்த தொழில்களையே நாள்தோறும் செய்கின்ருர்கள்.

பாலகனு யஞ்ஞானத் தழுந்துவனற் காளையாய்ப் பாவை மாராற்
சாலவருந் துவன்விருத் தன்ருனுகிக் குடும்பத்தாற் றளர்ந்து சாவ
னேலவிவ னெக்காலத் தென்செய்வான் மாயக்கூத் திருந்த வாறே
ஞாலமெலா மாடரங்காய்ப் பொறிமேள மாய்மனப்பேய் நடிக்கு மன்றே. (23)

பாலகனய் அஞ்ஞானத் தழுந்துவன் நற்காளையாய்ப் பாவை மாரால் சால வருந்துவன் விருத்தன்ருனுகிக் குடும்பத்தாற் தளர்ந்து சாவன் ஏல இவன் எக்காலத்து என்செய்வான் மாயக்கூத்திருந்தவாறே ஞாலம் எலாம் ஆடு அரங்காய்ப்பொறி மேளமாய் மனப்பேய் நடிக்கு மன்றே = பதார்த்த இயல்பு தெரியாத பால்யத்தில் அறியாமையினுனே வருந்துவன் நற்காளையாகிய யௌனத்தில் ஸ்திரீகளிடத்தில் மன்மத விகாரத்தானே மிக மோகித்து வாடுவன் வயோதிகனுகி களத்திர புத்திர சிந்தையால் வாட்டமுற்று மரிப்பன், துன்பம் பொருந்தப்பட்ட இவன் எப்பருவத்து நன்மையைச் செய்து சுகித்திருப்பன், மாயா நடனம் இருந்தவாறென்னே அசார சம்சார முழுதும் நடனசாலையாம் இந்திரியங்கள் வாத்திய விசேடங்களாக மனதாகிய வேதாளம் கூத்தாடும்.

உள்ளத்தின் முடிமேலே யில்லாமை வீற்றிருக்கு முலகி லென்றும்
தெற்ளூற்ற நல்லறத்தின் சிரத்திலே யெப்பொழுதுந் தீமை வாழு
மெள்ளற்ற வின்பத்தின் றலைமேலே துன்பங்களி ருக்குமென் ருற்
கொள்ளத்தக் கனவான குற்றமிலாப் பொருளேது குறிப்பு ளேற்கே. (24)

உலகிலென்றும் உள்ளத்தின் முடிமேலே இல்லாமை வீற்றிருக்கும் என்றும் தெள்ளூற்ற நல்லறத்தின் சிரசிலே எப்பொழுதுந் தீமை வாழும் எள்ளற்ற இன்பத்தின் தலைமேலே துன்பங்களிருக்கும் என்ருல் குறிப்புளேற்கு கொள்ளத்தக்கனவான குற்றமிலாப் பொருளேது? = பிரபஞ்சத்தில் எப்போதும் கடம் இருக்கிறது படம் இருக்கிறது என்னுஞ் சிரமீது=பரியந்தத்தில் நாசமானது எழுந்தருளியிருக்கும் நல்ல வழியுடைய சுதர்மத்தின் சிரமீது எப்போதும் தாமத தீமைகள் வாழ்ந்துகொண்டிருக்கும், தள்ளத்தகாத சுகத்தின் சிரமீது துயரங்கள் உள்ளனவாயின் ஆராய்வுற்ற எனக்கு அங்கீகரிக்கத்தக்கனவாய தோஷமில்லா வஸ்து யாதுதான் உளது.

விழிப்பதுவு மிமைப்பதுவுஞ் சகத்தோற்ற மொடுக்கமா மேலோ ருண்டாற்
பழிப்பரிய வன்னூர்முன் னென்போல்வா ரென்னென்று பகர லாவ
ரிழிப்பரிய விசித்திரமாஞ் சம்பத்து மாபத்தா மிதயங் காயி
லொழிப்பரிய விசித்திரமா மாபத்துஞ் சம்பத்தா முள்ளம் வேண்டில். (25)

விழிப்பதுவும் சகத்தோற்றம் இமைப்பதுவும் ஒடுக்கமாம் மேலோருண்டால் பழிப்பரிய = கண் விழித்தமாத்திரத்தால் பிரபஞ்சம் உதயமாம், கண் மூடியமாத்திரத்தால் பிரபஞ்ச லயமாம் இவைகளைச் செய்த பிரம விஷ்ணுவாதி

அன்னூர் முன் என்போல்வார் என்னென்று பகரலாவர் இதயங் காயில் இழிப்பரிய விசித்திரமாஞ் சம்பத்தும் ஆபத்தாம் உள்ளம் வேண்டில் ஒழிப்பரிய விசித்திர மாம் ஆபத்தும் சம்பத்தாம் = உயர்ந்தவர்களும் உளர். பூஜித்தற்குரிய அப் பெரியோர் சந்நிதியில் என்போன்ற அற்பர், சூரியன்முன் மின்மினியெனவும் சந்தனம் முன் எட்டியெனவும் என்னென்றுதான் கணிக்கப்பெறு வர். மனமானது பொருந்தி வெறுப்புறில் இகழத்தகாத ஆச்சரியமாம் நானுவித சம்பத்தும் பெரும் ஆபத்தாம். மனம் விருப்பமுறில் அகற்ற முடியாத விசித்திரமாம், நானுவித ஆபத்துக் களும் சம்பத்துக்களாமென்று எண்ணுகின்றேன்.

வெம்மாய வாழ்வன்றே துயர்க்கெல்லாம் பிறப்பிட மாய் விளம்புகின்ற
தம்மாவிங் கிதனிடையே யழுந்துமவர்க் கின்பமுள தாவ தெங்ஙன்
மைம்மாயை யென்னுமரம் பணையிலைபூ காய்பழத்தால் வரம்பற் ரோங்க
விம்மால்செய் மனம்வேரா மிம்மனந்தான் சங்கற்ப மென்ப தாகும். (26)

வெம்மாய வாழ்வன்றே துயர்க் கெல்லாம் பிறப்பிடமாய் விளம்பு கின்றதம்மா இங்கு இதனிடையே அழுந்துமவர்க்கு இன்பம் உளதா வது எங்ஙன்மைம்மாயை யென்னு மரம் பணை இலை பூ காய் பழத்தால் வரம்பற்ரோங்க விம்மால்செய் மனம் வேராம் இம் மனந்தான் சங்கற்பமென்ப தாகும் = கொடிய சம்சாரமே துன்பங்களெல்லாம் உண்டா வதற்கு ஆசிரயமாய்க் கூறப்பெறுகின்றது அந்தோ ஈண்டு இதன்கண் மூழ்கிக்கிடப்பவருக் குச் சுகம் உண்டாவது யாங்ஙனம், மோகத்தை உண்டுபண்ணும் சம்சாரமென்னும் இராகத் துவேஷாதிகள் அங்குரமாம் மரம் மூலச்சாகை தேகமாம்=சாகை புத்திரதாராதிகள், பர்னம், புஷ்பங்கள், காய்கள், பழங்கள், இன்ப துன்பங் களாகிய இவைகளாக எல்லையில்லாமல் வளர இம்மயக்கத்தைச் செய்யும் மனம் மூலமாம், இம் மனமே சங்கற்பமென்று சொல்லப்படுவதாம்.

சங்கற்ப நாசத்தா லெளிதாக மனநாசந் தானே யெய்து
மங்குற்ற மனமிறக்கிற் சனனமரணங் களெனு மரமு மாயு
மிங்கிப்பா லெனைத்திருடுங் கள்ளனைக்கண்டேன் கண்டேனிவன்பேர் நெஞ்சம்
பொங்குற்ற நெஞ்சத்தா னெடுநாளுைந்தே ஙின்று பொன்று விப்பேன். (27)

சங்கற்பநாசத்தால் மனநாசம் எளிதாக தானே எய்தும் மங்குற்ற மனம் இறக்கில் சனன மரணங்க ளெனும் மரமும் மாயும் இங்கு இப்பால் எனைத்திருடுங் கள்ளனைக் கண்டேன் கண்டேன் இவன் பேர் நெஞ்சம் பொங்குற்ற நெஞ்சத் = சங்கற்பத்தைச் செய்யாமையினுனே மனத்தினது அழிவானது சுலபமாகச் சுயமே கிடைக்கும் திரு சியத்தைக் கவராததலின் குன்றிய மனம் நாச மாகில் ஜனன மரண சம்சார விருட்சமும் ஒழிந்து போம். ஈண்டு எனது பாரமார்த்திகரூபதனமா கிய ஆன்மாவை அபகரிப்பவனும் இத்திருடனைக் கண்டுகொண்டேன், இத் திருடன் பெயர் மன

தால் நெடுநாள் நொந்தேன் இன்று பொன்றுவிப்பேன் = மாம். எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி மிகச் செருக்குற்ற மனத்தால் வெகுகாலஞ் சிரமப்பட்டேன். இப்போது யான் அரசன் ஆதலால் கழுவில் போடுவேன்.

இத்தனைநாண் மனமுத்தைத் துளைத்திலே னின்றுதுளைத் தியைந்த நூலாற்
சித்திரமாய்க் கோத்தணிவன் முழுதுணர்ந்த தேசிகராற் றெளிந்தே னெல்லாஞ்
சுத்தபர மாநந்தந் தோற்றுவிக்கு நல்லறிவாஞ் சோதி பெற்றேன்
மெத்தவிவ னெனதிங் கிவையெனும் பொய்யுள்ளொ ழித்தேன்மீண்டு
நாடேன். (28)

இத்தனைநாள் மனமுத்தைத் துளைத்திலேன் இன்று துளைத்து இயைந்த நூலால் சித்திரமாய்க் கோத்து அணிவன் முழுதுணர்ந்த தேசிகரால் எல்லாம் தெளிந்தேன் சுத்தபரமானந்தந் தோற்றுவிக்கும் நல்லறிவாஞ் சோதிபெற்றேன் மெத்த பொய்யெனும் இவன் நான் எனது இங்கு இவை உள்ளொழித்தேன் மீண்டும் நாடேன் = இவ்வளவுகாலமாகப் பராமிருசஞ் செய்யாமையினால் எனது மனமாகிய முத்தினைத் துவாரமிட்டிலேன் விவேக ஊசியால் இப்போது துவாரமிட்டுப் பொருந்திய சமதமாதி சூத்திரத்தால் அலங்காரத்தோடு கோர்த்துத் தரித்துக்கொள்வேன். முற்றுமுணர்ந்த சித்தர்களால் நானாவித உபதேசங்களால் நன்றாகப் போதிக்கப்பெற்றேன். தூய்தாய பிரஹ்மானந்தத்தை வெளிப்படுத்தும் சாதனமாகிய பிரத்யக்கபின்ன பிரஹ்ம சம்யக் ஞானத்தை அடைந்தேன். அதில் நிஷ்டையை அடைவேன். அத்தியந்தம் மித்தையென்று சொல்லத்தக்க இவன், அகமென்பதை அகத்தின் கண் விட்டொழித்தேன். மறித்து எப்போதும் இந்த வண்ணஞ் சிந்தியேன்.

பேதிக்கு மனமென்னும் பெரும்பகையை முழுவழியாற் பிளந்து வென்றேன்
வாதித்த துயரெல்லா மாற்றினே னுபசாந்த வாழ்வு பெற்றேன்
சாதித்த விவேகமே யுனைவணங்கி னேனென்று சனகர் கோமான்
சேதித்த மனவலைவெல் லாமொழித்துத் தானேசித்தி ரம்போ னின்றான். (29)

பேதிக்கும் மனமென்னும் பெரும் பகையை முழுவலியாற் பிளந்து வென்றேன் வாதித்த துயரெல்லாம் மாற்றினேன் உபசாந்த வாழ்வு பெற்றேன் சாதித்த விவேகமே உனை வணங்கினேனென்று சனகர் கோமான் சேதித்த மன அலைவெல்லாம் பிளவுபடுத்தும் அதிபலமுள்ள மனமென்று சொல்லப்பட்ட வலிய சத்துருவைச் சர்வஞ்சின்மயமென்னும் பேராற்றலால் சொரூப நாசஞ்செய்து ஜயித்தேன். இதுகாறும் வேதனை செய்த துன்பமனைத்தையும் நிவர்த்தி செய்தேன். பரமசாந்தமாகிய பதத்தை அடைந்தேன். இதனைப்பெறும்படி செய்த விவேகமே உன்னைப் பன்முறை வழிபட்டேன் என்று சனக மகாராஜாவானவன்

ஒழித்துத்தானே சித்திரம்போல் நின்றான் = கெடுத்த மன சஞ்சலமொழிந்து சாந்தியடையப் பெற்று பித்தியிலமைத்த பதுமைபோல நிருவிகற்ப சமாதியிலிருந்து சுயம் ஆனந்தித்தான்.

வாளாசித் திரம்போல நெடிதிருந்து சனகர்பிரான் மாய்த்து நெஞ்சை
மீளாநல் லுபசாந்த நிறைநெஞ்சா லுலகியல்பை மேவிப் பார்த்தான்
றாளாண்மை யாலியற்றும் பொருளேது கைக்கொள் ளத்தக்க தேது
கோளான கற்பனையென் சுபாவவறிவா மெனக்குக் குறிக்குங் காலே. (30)

சனகர்பிரான் வாளா சித்திரம் போல நெடிதிருந்து நெஞ்சை மாய்த்து மீளாதநல் லுபசாந்த நிறைநெஞ்சால் உலகியல்பை மேவிப்பார்த்தான் தாளாண்மை யாலியற்றும் பொருளேது கைக் கொள்ளத்தக்கதேது சுபாவ அறிவாம் எனக்குக் குறிக்குங்கால் கோளான கற்பனையென் = சர்வஜனோபகாரியாய அம்மன்னவன், அசைவற்ற பித்திகையில் தீட்டிய பதுமைபோல நீள்போது நிருவிகற்ப சமாதியிலிருந்து, மனத்தின் சொரூபத்தை நாசஞ்செய்து மீண்டும் சமாதியினின்றும் யுத்திதனாய் சமசாலியாய மனத்தினாலே பிரபஞ்ச இயற்கையைச் சிந்தித்து நாடினான். தாமதியாது முயற்சியினால் சாதிக்கத்தக்க வஸ்து யாது இருக்கின்றது, பற்றத்தக்கது யாது, இயற்கையாகவே சித்தாமிருக்கும் எனக்கு உத்தேசிக்கும்போது குற்றமுடையதான கற்பனையாது= அசத்தினின்றும் எழுந்த இக்காயம் வினை செய்க வினையை விடுக.

சுத்தமாய்ச் சொரூபமா மென்னுரு வலால்வேறு தோன்றக் காணேன்
வத்தியான் வாராத பொருணயவேன் வந்தபொரு ளனைத்துந் தள்ளே
னித்தமாய்த் தன்னிலையி னிற்குமென தறிவுருவி னிலையா நிற்பே
னுத்தவா றேதவரு மதுவருக வென்றமுந்தி யொருமை யானான். (31)

சுத்தமாய்ச்சொரூபமாம் என்னுருவலால் வேறு தோன்றக் காணேன் யான் வத்தி வாராத பொருள் நயவேன் வந்தபொருள் அனைத்துந் தள்ளேன் நித்தமாய்த் தன்னிலையில் நிற்கும் எனது அறிவுருவில் நிலையாநிற்பேன் உத்தவாறு ஏதுவரும் அதுவருக என்று அமுந்தி ஒருமையானான் = நிர்மலமாய் ஆன்மசொரூபமாம் எனது வடிவத்தைத் தவிர்த்து அயலொன்று பிரதீதியாகக் கண்டிலேன். யான் வாடிக்கிட்டாத பொருளில் ஆசை வையேன். கருமவயத்தால் கிட்டிய பொருளனைத்தையும் நீக்கேன். நாசரகிதமாய் எனது இயல்நிலையில் நிலைபெற்றிருக்கும் சிற்சொரூபத்தின்கண் ஸ்திதிபெறுவேன். அடைந்தவண்ணம் யாது பிராப்தமோ அஃதுண்டாகுக என்று அமுந்தி (ஊன்றி ஏகமாயினன்) விகற்பமற்றான்.

வானேகு கதிரிரவி நாளியற்றும் வாறென்ன வந்து வந்து
தானேதோன் றியதொழிலைப் பற்றின்றிச் செய்துமெனச் சனக னெண்ணித்
தீனேய வருகாலஞ் செல்கால மிவையாவுஞ் சிந்தை செய்யா
னூனேறு நிகழ்காலத் தோரிமைப்பி னகைதலோடு லாவ லுற்றான். (32)

வானேகு கதிரிரவி நாளியற்றும் வாறென்ன சனகன்தானே வந்து வந்து தோன்றிய தொழிலைப் பற்றின்றிச் செய்துமென எண்ணி வருகாலம் செல்காலம் இவை யாவுஞ் சிந்தைசெய்யான் தீனேய ஊன்னேறு நிகழ்காலத்து ஓரிமைப்பில் நகைதலோடு உலாவலுற்றான் = ஆகாயத்திற் செல்லும் சகஸ்ர கிரணங்களோடு கூடிய சூரியன் இச்சா நிச்சைகளின்றித் தினம் செய்யும் முறைபோல ஜனகமகாராஜா காரியங்களை கர்த்திருத்வபோக்திருத்வ அபிமானவடிவ பற்றின்றிச் செய்வோமெனச் சிந்தித்து வருங்காலம் செல்காலம் அணுமாத்திரமுஞ் சிந்தை செய்யானாய் தீனேய (உணவு ஊணேறு) சரீரஸ்திதியோடு வர்த்தமான காலத்து ஓர் நிமிடத்தே புன்னகையுடன் புரிந்து உலாவினான்.

பேசியதன் விசாரத்தாற் சனகர்பிரான் பெரும்பேறு பெற்ற தல்லால்
வாசியுள மற்றொன்றால் வந்ததல்ல வாரீச மலர்க்கண் மாலே
யாசிலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தா லடைவ தல்லாற்
றேசிகரில் லாவீனர் செய்தொழிலாற் பெறலாமோ சிற்சொ ரூபம். (33)

வாரீசமலர்க்கண்மாலே சனகர்பிரான் பேசியதன் விசாரத்தால் பெரும்பேறு பெற்றதல்லால் வாசியுள மற்றொன்றால் வந்ததல்ல ஆசு இலதாய்ச் செவ்வியதாய்த் தனதான விசாரத்தால் அடைவதல்லால் தேசிகரில்லா ஈனர் செய்தொழிலால் சிற்சொரூபம் பெறலாமோ = தாமரை இதழ்போன்ற நேத்திரங்களையுடைய ஹே! இராகவ! ஜனகராஜாவானவர், ஆன்றோராலும் சாஸ்திரத்தாலுங்கூறிய தமது விசாரத்தினால் அடைதற்குரிய ஆன்மபதத்தையடைந்ததேயன்றி ஆத்ம விசாரத்துக்கு அதிகமான அயலொரு கிரியையினாலே அடைந்ததல்ல, குற்றமற்றதாய் சிறப்புற்றதாய் உள்ள ஆத்ம விசாரத்தினாலேயே பிராப்தமாவதேயல்லாமல்ஆசிரியரிடத்துச் சிரத்தாபத்தியில்லாத நீசர் தானாகச் செய்யும்(ஊகாபோக்கு சலப்பிரவிருத்திகளாலே) கிரியைகளாலே சிற்கனானந்த வடிவத்தை அடையமுடியுமோ, முடியாதாம்.

புதப்பேறு களைமேண்டி யியற்றுகின்ற புண்ணியத்தைப் புவியி லுள்ளோர்
சிறப்பான நல்லறிவு மிகவேண்டு மென்றுமுதற் செய்யிற் பேரு
மிறப்பான வாபத்து வினைநிலமா யிருந்துதுயர் வேலை யாகிப்
பிறப்பான நச்சுமர வித்தாகும் பேதைமையைப் பிளக்கல் வேண்டும். (34)

புவியிலுள்ளோர் புறப்பேறுகளை வேண்டி இயற்றுகின்ற புண்ணியத்தைச் சிறப்பான நல்லறிவு மிகவேண்டுமென்று முதல் செய்யில் பேறு ஆம் சிறப்பான ஆபத்து விளைநிலமாயிருந்து துயர் வேலையாகிப் பிறப்பான நச்சுமரவித்தாகும் பேதைமையைப் பிளக்கல் வேண்டும் =

உலகிலுள்ள முமுட்சுக்கள் இகலோக, பரலோக பாக்கியப் பிரயோஜனத்தை விரும்பி செய்யாநின்ற எத்தன விசேடத்தை உத்தமமான சுவான்ம சம்யக்ஞானம் விருத்தியடையவேண்டுமென்பதாகப் பூர்வத்தில் நிஷ்காமியமாக செய்வார்களேயாயின் நல்ல பிரயோஜனமாம். மிகுதியான ஆபத்துக்கள் எல்லாம் உண்டாம். பூமியாய் திடமுடன் நிலைத்து துக்கவடிவ சமுத்திரமாகி, சம்சாரமாகிய விஷவிருட்சங்களின் பீஜமாகும் அஞ்ஞானத்தை (பிரஞ்ஞாமாந்தியத்தை) நாசஞ் செய்யவேண்டும்.

இலங்கியசிந் தாமணியா மிதயமெனுஞ் சரக்கரையி லிருக்கும் போதங்
கலங்கலிலா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்பகம்போற் கணத்தி னல்குந்
துலங்குவிசா ரம்படைத்துப் பேதைமைபோய் நல்லறிவு தோன்றி னோரை
விலங்குகவ சத்தோரை யம்புகள்போற் சரமாதி விகற்பந் தாக்கா. (35)

இலங்கிய சிந்தாமணியாம் இதயமெனுஞ் சரக்கறையிலிருக்கும் போதம் கலங்கலிலா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்பகம் போல் கணத்தில் நல்கும் துலங்கு விசாரம் படைத்துப் பேதைமை போய் நல்லறிவு தோன்றினோரை விலங்கு கவசத்தோரை அம்புகள் போல் காமாதி விகற்பந்தாக்கா =

சிறப்புற்று விளங்காநின்ற சிந்தாமணியாகிய இருதயமென்னும் உக்ரானத்திலிருக்கும் பிரஞ்ஞையானது விட்சேபங்களில்லாத விவேகிகளுக்கு சிந்தித்த பலத்தைக் கற்பகதரு கொடுப்பதுபோல க்ஷணத்தில் கொடுக்கும். விளங்காநின்ற ஆராய்ச்சிமேலிட்டு விவேக வைராக்கியாதி சன்மார்க்கத்தில் பொருத்தப்பெறுமேலாயின், அஞ்ஞானம் சம்சய விபரீதங்களுடன் ஒழிந்து சம்யக்ஞானம்=பிரஹ்மஞானம் உண்டாகும். அத்தகைய ஞானமுடையவரை வஜ்ஜிர கவசம் அணிந்தோரை பாணங்கள் போல, காமக்குரோதாதிகள் சிறிதும் பாதிக்கமாட்டாவாம்.

பரமாதித் தனைமறைத்துக் கறுத்தறிவற் றுக்களித்துப் படர்ந்து மீண்டு
திரமான வகங்கார முகில்விவேகக் காற்றுற் சிதறிப் போகும்
வரமான பதம்வேண்டிற் றன்மனத்தி னுசைமுதன் மாற்ற வேண்டு
முரமான புவியமுத லுழுதன்றோ விளைபயன்க ளுறு கின்றாரே. (36)

பரமாதித்தனை மறைத்துக் கறுத்தறிவற்றுக் களித்துப் படர்ந்து மீண்டு திரமான அகங்கார முகில்

பரமான்மவடிவ சூரியனை ஆச்சாதித்து இருண்டு சடமாய், மதத்து, விசாரித்து, மறித்தும் மறித்தும் பழகப் பழக திடப்பட்டுக்கொண்டே வாரா

விவேகக் காற்ருல் சிதறிப்போகும் வரமான பதம் வேண்டில் தன் மனத்தின் ஆசைமுதல் மாற்ற வேண்டும் உரமான புவியை உழுதன்ருே விளைபயன்கள் உறுகின்ருர் = நின்ற அகங்கார மேகம், பிரஞ்ஞை வடிவக் காற்றினுலே பாதிக்கப்படும் மேலான பரமான்ம பதத்தை அடைய விரும்புறும் அதிகாரியானவன் தனது உள்ளத்திலுள்ள ஆசையை ஆதியில் மீட்டணுகாதபடி நீக்கவேண்டும். கடினமான பூமியை முதலில் மேழிச்செல்வர் உழுது அல்லவோ உண்டாம் உண்பொருள்களாம் பலனை அடையாநிற்பர்.

சனகராசன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—802.



# 5-2 புண்ணியபாவனர் கதை.

## அவதாரிகை

முன்பு ஆகாசபலம் வீழ்வதுபோல தெய்வகதியால் பெற்ற சித்தர் கீதையின் சிரவணத்தினுல் சனகராஜாவுக்குச் சித்தோபசாந்தி சொல்லப்பட்டது. இப்போது புண்ணியபாவனர் கதையால் பரமாத்மாவைச் சுயம் பார்த்தபோதே எல்லாத் துக்க திருஷ்டிகளும் அழிந்துபோமென்று சொல்லப்படுகிறது :—

மோக வற்சநா பிக்கொடி முளைத்தெழு மூலஞ்
சோக மாசுண மிருந்தர சாள்வதோர் சூழ
லாக மேமுத லியானென்ன காணுமஞ் ஞான
மேக மாகிய பராபரந் தோன்றினு லிறக்கும். (1)

ஆகமேமுதல் யான் எனக்காணும் அஞ்ஞானம் மோகவற்ச நாபிக் கொடி முளைத்தெழுமூலஞ் சோக மாசுணம் இருந்து அரசாள்வதோர் சூழல் ஏகமாகிய பராபரந் தோன்றினுல் இறக்கும் = தேகமுதலியவற்றையும் அகம் எனக்காணும் அஞ்ஞானமானது மோகமென்ற விஷ வல்லிக் கொடி உண்டாகியோங்குவதற்கு ஏதுவும் சோக மாகிய சர்ப்பமானது இருந்து அரசாள்வதான ஒப்பற்ற புதராகிய சிம்மாசனமாம். அத்வைத மாகிய பராபர வஸ்துவின் சாக்ஷாத்காரம் உண்டானுல், இதயத்தின்கண்ணுள்ள கிரந்தியும் சர்வ சம்சயங்களும் சகல கருமங்களும் நாசமாம்.

அனித்த மிச்சக மென்பதை நாடொறு மகத்தி
னுனித்து நோக்கினர் சனகனைப் போலநுண் ணறிவாற்
றனித்த மெய்ப்பொருள் பக்குவத் தறிகுவர் தனத்தால்
மனித்த ராற்கரு மத்தினுற் றேவரால் வாரா. (2)

சனகனைப்போல இச் சகம் அனித்தமென்பதை நாள்தொறும் அகத்தில் நுனித்து நோக்கினர் தனித்த மெய்ப்பொருள் பக்குவத்து நுண்ணறிவால் அறிகுவர் தனத்தால் மனித்தரால் கருமத்தினுல் தேவரால் வாரா = ஜனக மன்னனைப்போல நாமரூபான்மக இப் பிரபஞ்சம் அநித்தியமென்பதைப் பிரதி தினமும் உள்ளத்தில் சூக்ஷுமமாக ஆராய்ந்து பார்த்தவர் கேவலமாயும் சத்தியமாயுமுள்ள ஆத்மாவை நிரந்தரம் ஆராய்ச்சி செய்யும் பக்குவத்தால் சாக்ஷாத்கரிப்பர். திரவியத்தாலும், பந்துக்களினுலும், யாகாதி கருமங்களாலும், தெய்வங்களினுலும், ஆன்ம ஞானம்பெற வாராது.

சனன மஞ்சினர்க் கவருடை முயற்சியே சரணுந்
தினமு மிங்கிவ னுனெனுஞ் சிறுமைதான் சிதையி
லனக மாயுல கெங்குமாம் விசாலமு ண்டாகும்
மனனு றத்தன துயர்ச்சிதான் காண்புற வருமால். (3)

சனனம் அஞ்சினர்க்கு அவருடை முயற்சியே சரணும் தினமும் இங்கு இவன் நான் எனுஞ் சிறுமைதான் சிதையில் அனகமாய் உலகு எங்குமாம் விசாலமுண்டாகும் மனனுற தனது உயர்ச்சிதான் காண்புற வருமால் = சனன மரண சம்சாரத்திற்குப் பயந்தவர் தமக்கு அவர் தமது பிரயத்தனமே அடைக்கலமாம், நாளும் இவ்விடத்தில் தேக பரிமிதாகாரமான இவன் நான் என்னும் அகங்காரமானது க்ஷயமாயின், பவுத்திரமாய்ச் சர்வ புவன வியாபியாகிய பரிபூரண சொரூப போதம் உணடாம். அவ்வித விசாரம் பொருந்தியதால் சுயமேவ ஞானம் அபரோக்ஷமாய் உதயமாம்.

பற்றுவீ டென்றி ரண்டிற் பற்றலும் விடுத ருனு
முற்றவை மனத்து ருப முயர்பந்த மதுவே றில்லை
முற்றுறு பற்று வீட்டின் மோகமுந் துயரும் விட்டுத்
துற்றுள பற்று வீடு துடைத்தசை யாது நிற்பாய். (4)

பற்று வீடு என்றிரண்டில் பற்றலும் விடுதல்தானும் உற்றவை மனத்துருபம் அது உயர்பந்தம் வேறுயில்லை முற்று பற்று வீட்டின் மோகமுந் துற்றுள பற்று வீடுந் துடைத்து அசையாது = கொள்ளத்தக்க தள்ளத்தக்கதான பொருள் இரண்டில், அவிவேகத்தால்=மோகத்தால் நல்லது என்று கொள்ளுதலும், தீயது என்று நீக்குதலும் பொருந்தியாவை மனத்தினது வடிவமாம். பற்றுதல் விடுதல் வடிவ அம் மனமே பெரிய பந்தமாம், அயல் ஒன்று இல்லையாம். வாசனை அதி

நிற்பாய் = கரிக்கச்செய்யும் கொள்ளுதல் தள்ளுதலின் மோகமும் அதனாலாய துன்பமும் விட்டோட்டி, உள்ளத்தில் பொருந்தியுள்ள கொள்ளத்தக்க தள்ளத்தக்க பொருளின் வாசனையையும் போக்கிச் சேஷித்த தனது சொரூபத்தில் சமதிருஷ்டியோடு இருப்பாய்.

மயலின்மை யனித்த மின்மை மடமின்மை வருத்த மின்மை
செயலின்மை கரும மின்மை தியக்கின்மை விகற்ப மின்மை
பயமின்மை துவட்சி யின்மை பகையின்மை குறைவொன் றின்மை
கயமின்மை கடின மின்மை கடினமாய்க் கழற லின்மை. (5)

மயலின்மை அநித்தமின்மை மடமின்மை வருத்தமின்மை செயலின்மை கருமமின்மை தியக்கின்மை விகற்பமின்மை பயமின்மை துவட்சியின்மை பகையின்மை குறைவொன்றின்மை கயமின்மை கடினமின்மை கடினமாய்க் கழறலின்மை = ஈது எனக்கு வரவேண்டுமென்னும் ஆசை இல்லாமை, நித்தியம் பரிபூரண ஞானம் துயரின்மை (மகிழ்ச்சி) அப்பிரவிருத்தி, அபரிக்கிரகம், அசஞ்சலத்துவம், ஏகாக்கிரகசித்தத்வம், பூத அபயப் பிரதானம் மத்வாதிகளோடு வழக்கின்மை, எவர்களிடத்தும் மித்திரபாவம், கிடைத்ததில் திருப்தி, பெருமையும், அநிஷ்டூரசித்தத்வம், பிரியவசனம் ஆகிய பதினைந்து குணங்களும் சமதிருஷ்டியிலிருப்பவரது இலக்கணம் ஆம்.

வீடுபற் றிரண்டு நீத்த மேலவ ரிடத்து மேவி
நீடுவா தனைக ளின்றி நிகழ்த்திய குணங்க ணிற்கும்
பீடுறு நினைவர் நூலாற் பிணிப்புற்றுப் பிறவி வேலை
யூடுற மயன்மீன் வாரு முயர்ந்த வாதனையாஞ் சாலம். (6)

நிகழ்த்திய குணங்கள் வீடு பற்று இரண்டும் நீத்த மேலவரிடத்து மேவி வாதனைகளின்றி நீடு நிற்கும் பீடுறு நினைவாம் நூலால் பிணிப்புற்று வேலை உயர்ந்த பிறவி வேலையூடுற மயல்மீன் வாரும் = முன்மொழிந்த பதினைந்து குணங்களும் தள்ளத்தக்க, கொள்ளத்தக்க பொருள்களின் ஆசையையொழித்த சமதிருஷ்டியுள்ள ஞானிகளிடத்துப் பொருந்தி வாசனை, வாசனையின் விதையாய அறியாமையும் அழிந்துபோனமையின் நிலையாக இருக்கும் தன்னைப் பெருமையாகக் கருதும் எண்ணங்களாகிய தந்துவினால் கட்டுண்டு பெரிய வாசனையாகிய வலை ஆசையாகிற மீன்களை அள்ளாநிற்கும்.

வாதனை யென்னு மிந்த வலைபுந்தி வாளா லீர்ந்து
மோதுந் துறைக்காற் சிந்து முகிலெனச் சிந்தி நிற்பாய்
பாதவங் குடாரத் தாலே படுப்பபோ னெஞ்சை னெஞ்சாற்
றீதற மாய்த்து மேலாம் பதத்திலே திரமாய் நிற்பாய். (7)

வாதனையென்னும் இந்த வலை புத்திவாளால் ஈர்ந்து மோது சூறைக்கால் சிந்து முகிலெனச் சிந்தி நிற்பாய் பாதவங்குடாரத் தாலே படுப்பபோல் நெஞ்சை நெஞ்சால் தீதறமாய்த்து மேலாம் பதத்திலே திரமாய் நிற்பாய் = வாசனையென்று சொல்லப்பட்ட இவ் வலையை விவேகமாகிய கட்கத்தால் அறுத்து அடிக்கும் சூறைக்காற்றுச் சிதறடிக்கும் மேகம்போல சின்னபின்னப்படுத்திவிடுவாய், வாசனாக்ஷயம் மரத்தைக் கோடாரியால் வெட்டுவதுபோல மனத்தை, மனத்தால் தீதறமாய்த்து மனோ நாசம் மேலான பிரஹ்மபதத்தில் அதி திடமாக நிலைபெறுவாய்.

ஏகுதல் வருத றுஞ்சல் விழித்திட லிருத்த னிற்ற
லாகிய வெல்லாம் பொய்யென் றழுந்தியுள் ளாசை தீர்வாய்
சேகுற வலையுஞ் சித்தம் பகுதியாற் சித்தின் பின்னே
போகலூன் மணத்தாற் சிங்கந் தனைத்தொடர் பூசை போலாம். (8)

ஏகுதல், வருதல், துஞ்சல், விழித்திடல், இருத்தல், நிற்றல் ஆகிய எல்லாம் பொய்யென்று அழுந்தி உள் ஆசை தீர்வாய், சேகுற அலையுஞ் சித்தம் பகுதியால் சித்தின்பின்னே போகல் ஊண்மனத்தால் சிங்கந்தனைத் தொடர் பூசை போலாம் = செல்லுங்காலத்திலும், திரும்பி வருங்காலத்திலும், தூங்குங்காலத்திலும், விழித்துப் புசிக்குங் காலத்திலும், இருக்குங்காலத்திலும், எழுந்து நிற்குங்காலத்திலும் இவை முதலிய ஆன்ம பின்னமான யாவற்றும் அசத்தேயாமென்று துணிந்து உள்ளே ஆசையை நீக்குவாய். ஓய்வின்றிச் சலிக்கும் மனம் இயற்கையானே ஜடத் தன்மையால் சிற்சொரூபத்தைத் தொடர்ந்து விடயங்களில் செல்லுதல், மாம்ச வாசனையால் மிருகராஜாவாகிய சிங்கந்தனைப் பூனை தொடர்ந்து செல்வதுபோல ஆம்.

மடங்கல்வீ ரியத்தாற் பெற்ற தசைதின்னு மார்ச்சா லம்போற்
றொடர்ந்துசென் மனனுஞ் சித்தாற் றோன்றிய பொருளைப் பற்றும்
படர்ந்துகாண் பவற்றைப் பற்றில் மனங்கெடாப் பந்தம் போகாத்
திடங்கொள் காண்பவற்றை நீக்கிற் சித்தம்போய் முத்தி யாகும். (9)

மடங்கல் வீரியத்தால் பெற்ற தசைதின்னும் மார்ச்சாலம்போல் தொடர்ந்துசெல் மனனுஞ் சித்தத் தால் தோன்றிய பொருளைப் பற்றும் படர்ந்து காண்பவற்றைப் பற்றில் மனங்கெடா பந்தம் போகா, காண்பவற்றை திடங் கொள் நீக்கில் சித்தம்போய் = சிங்கத்தின் பலத்தால் கிடைத்த மாம்சத்தை உண்ணும் பூனைபோலச் சித்தின் பின்பற்றிய மனமும் அறிவால்=சித்தால் பிராப்தமாய் திருசியமாயதன்னையும் தனது விடயத்தையும்பற்றி வாழும், நாமரூபமாக விரிந்து தோன்றும் விடயத்தைப் பாவித்து ஆசிரயிக்கில் மனம் நசியாது பந்தந் தொலையாது. திருசிய வஸ்துக்களில் பிராமாண்யபுத்தியை அகற்றில், மனம் இறந்து

முத்தியாகும் = வீடு உண்டாம். பற்றப்பற்றப் பந்தமேயாம், விட்டுத்தொலைத்தால் வீடேவிளையும்.

யானிவை யிரண்டு மில்லென் றெண்ணிமே ருவைப்போ னிற்பா
யூனிற மில்லா விண்போ லுளத்தனுய் நல்லு ளத்தே
தானும்வை யமுமாய்க் காண்பான் காண்பான் தம்மி னூடே
மேனிகழ் காட்சி யென்னு நின்னைநீ விடாது தேர்வாய். (10)

யான் இவை இரண்டும் இல்லென்று எண்ணி மேருவைப் போல் நிற்பாய் ஊன் நிறம் இல்லா விண்போல் உளத்தனுய் நல் உளத்தே தானும் காண்பான் வையமுமாய் காண்பனதம்மினூடே மேல்நிகழ் காட்சியென்னும் நின்னை நீ விடாது தேர்வாய் = அகம், இதம், பதார்த்தம் இல்லையென்பதாகச் சிந்தித்து, மேருகிரியைப்போல அசையாது நிற்பாய். தலமும், மலமும் இல்லாத ஆகாசம்போல இருதயமுடையவனுய் (திருசியங்களைப் பாவியாதவனுய்) நல்ல இருதயத்தே தானுகிய திருஷ்டா ஜகத்தாம் திருசியமென்னும் இரண்டிற்குமத்தியில் அதிஷ்டானமாக விளங்கும் தரிசனமென்னப் பெயரியதில் தனது ஆன்மாவை நீ எப்போதும் பாவித்து இன்புற்று வாழ்வாய்.

இனியென வினிமை கொள்வா னிரண்டும்விட் டிவற்றி னூடே
தினிநிக ழினிமை நாடித் தற்பர மயமாய் நிற்பாய்
நனிபல துய்ப்பான் துய்ப்ப திரண்டுக்கு நடுவே தானே
யனிசம் பற்றின்றி நிற்கு மதுபற்றி யதனு ணிற்பாய். (11)

இனியன இனிமை கொள்வான் இரண்டும் விட்டு இவற்றினூடே தனிநிகழ் இனிமை நாடித் தற்பர மயமாய் நிற்பாய் நனிபல துய்ப்பான் துய்ப்பது இரண்டுக்கும் நடுவேதானே அனிசம்பற்றின்றி நிற்கும் அதுபற்றி அதனுள் நிற்பாய் = பானமுதலிய போக்கியம் போக்கா என்னும் இரண்டினையும் விடுத்து, இவற்றின் மத்தியில் கேவலமாய் விளங்காநின்ற பரமான்ம வடிவ ரசானுபூதியைத் தியானித்து அதுவேதான் என்று பாவிப்பாய். மங்கையராதியரைக் கூடுபவன், கூடி அநுபவிக்கப்பெறுவதற்கும் இரண்டின் மத்தியில் எஞ்ஞான்றும் யாதொரு பற்று = (சமபந்தமில்லாமல் அசங்கமாயிருக்கும்பிரஹ்மாபின்ன ஆன்மாவை அவலம்பித்து அவ்வான்மாவின்கண்ணே நிலைபெறுவாய். அநுமிதியாதி அநுபவாந்தரங்களிலும் இவ்வண்ணமே உணர்ந்துகொள்ளவேண்டுமெனல்நனிநன்ருக.)

காதலாற் கட்டி லுய்யார் கயிற்றினுற் கட்டி லுய்வ
ராதலா லாசைக் கட்டை யசங்கற்பத் தறுப்பாய் நானென்
ருேதுபா வனையை நானென் னுததோர் வாளா வீட்டி
யேதமில் சுபாவம் பாவித் தெழுபவமிலா வீ டெய்தி. (12)

ம

காதலால் கட்டில் உய்யார் கயிற்றினுல் கட்டில் உய்வார் ஆதலால் ஆசைக்கட்டை அசங்கற்பத்து அறுப்பாய் நானென்று ஒது பாவனையை நான் என்றுதைதோர் வாளால் வீட்டி ஏதமில் சுபாவம் பாவித்து எழுபவமிலா வீடு எய்தி = சம்சாரமாம் ஸ்தம்பத்தில் ஆசையால் கட்டுப் படுவரெனில் வீடுறுர் (விடுபடமாட்டார்) இரஜ்ஜுவினுல் கட்டுப்படுவரெனின் அவிழ்த்துவிடுவராகலின் கட்டில் நின்றும் விடுபடுவர் ஆதலால் சங்கற்பவர்ஜனத்தானே தியாகிப்பாய். அகம் பாவமயபாவனையை, அனகம்பாவனையென்னும் ஒப்பற்ற கட்கத்தினுல் சிதைத்து சர்வதோஷ விநிர்முக்தமாய இயற்கையாயுள்ள ஆத்மசொரூபத்தைத் தியானித்து எழுவகைத்தோற்றம் மற்ற மோக்ஷத்தை அடைந்து சுகிப்பாய்.

அனைத்துயிர்க் கச்ச மில்லா நிலைநிற்பா யதுல வென்ன
வினைத்தொட ரகம்பா வத்தின் வேட்கைதீ ரென்ற நின்சொன்
னினைத்திடின் மிகவு மாழ நீடகங் கார நாசந்
தனைச்செயி லுடல மென்னு மேதுவைத் தவிர்க்கின் றேனுல். (13)

அதுல அனைத்துயிர்க்கு அச்சமில்லாநிலைநிற்பாய்என்னவினைத் தொடரகம்பாவத்தின் வேட்கை தீர் என்ற நின்சொல் நினைத்திடில் மிகவும் ஆழம் நீடு அகங்கார நாசந்தனைச் செயில் உடலமென்னும் ஏதுவைத் தவிர்க்கின்றேன் = ஒப்பற்ற ஹே ராமா! சர்வபூததயையுடைய நீ ஓர் பிராணியையும் பயப்படுத்தாமலும், ஓர் பிராணிக்கும் பயப்படாமலும் உனது இயல் நிலையில் நிற்பாய் என்று அருளியபோது, கருமங்களிற் சம்பந்தப்படுத்தும் அகங்காரத்தினுலாய திருஷ்ணையை (ஆசையைக்) கவரற்கவென்னுந் தேவரீர் வசனம் சிந்தித்து நோக்கில் அதிகக் கெம்பீரமாய் இருக்கிறது. நீண்ட அகங்கார அழிவு தனைச் செய்தால் தேகமெனப்பெயரிய பிராண இந்திரியாதி அனைத்தையும் விட்டவனுகின்றேன், அகங்காரம் = மனம் பிராணன்களுக்கு எப்போதும் ஒருமையாகலின் சரீராதிகளில்லாதவனுகின்றேன்.

அகமென லொழிக்கிற் முனே யங்கமு மடியி லீர்ந்த
நகமென விறக்கு மன்றே யென்றுயர் நாதன் கூற
மகமுனி யுரைப்பான் வள்ளால் வாதனை மாற்று மாறு
நிகழ்வுற தேய ஞேய மிரண்டென நினைப்பர் கற்றோர். (14)

அகமெனல் ஒழிக்கில் தானே அங்கமும் அடியில் ஈர்ந்த நகமென இறக்கும் அன்றே என்று அகங்காரத்தை அகற்றிவிட்டால், முயற்சியின்றிச் சுயமே தேகமும், அடியில் வெட்டப்பட்ட மரம்போல நாசமாகுமல்லவா ஆகலின் ஏங்ஙனம்

நாதன்கூற மகமுனி உரைப்பான் வள்ளால் வாதனை மாற்றுமாறு நிகழ்வுற தேயம் ஞேயம் இரண்டென் கற்றோர் நினைப்பர் = தியாகிப்பேன், யாங்ஙனந்தான் ஜீவிப்பேன் என்று உயர்ந்த ஸ்ரீ இராகவர் கூற, அநேக யாக கர்த்தாவாகிய முனிசிரேஷ்டர் கூறுவார், வாசனைத்தியாகப்பிரகாரம் விளங்காநின்றதேயம் ஞேயம் இரண்டென பெரியோர் எண்ணுவர்.

இந்தநம் பொருட்கு வாணு ளியாமிவை யெமக்கு வாணு
ணந்துறு மிவற்ற லன்றி நாமில்லை நம்மா லன்றி
வந்தப் பொருள்க ளில்லை யெனுமனத் துறுதி மாற்றி
புந்தியா லுசாவி யாமும் பொருள்களும் வெவ்வே றென்றே. (15)

இந்தநம் பொருட்குவாணுள் யாம் இவை எமக்குவாணுள் நந்துறும் இவற்றலன்றி நாமில்லை நம்மாலன்றி வந்த இப் பொருள்கள் இல்லையெனு மனத்துறுதி மாற்றி யாமும் பொருள்களும் வெவ்வேறென்று புந்தியால் உசாவி மாற்றி = ஆன்மபின்னமான பிரத்தியக்ஷமாயுள்ள நமது மைந்தர் மனைவியராதிக்கு ஜீவிதம் யாம் இந்த மனைவி மைந்தராதியர் எனக்கு ஜீவிதம் அபி விருத்தியாகும், இவற்றினுலன்றி நாமில்லை. நம்மாலல்லாமல் கிடைத்த இந்தப் பொருள்கள் இலவாம் யென்னும் நிச்சயமேதியேயம் யாமும் பொருள்களும் வேறு வேறு என்று புத்தியால் ஆராய்ந்து மாற்றி = வேறுபடுத்தி.

பொருளினே மல்ல நாமு நமதல்ல பொருளு மென்றே
தெருளுற்றுட் குளிர்ந்தி யாவும் வினேதமாய்ச் செய்யு நெஞ்சான்
மருளறு நிச்ச யத்தால் வாதனை விடுத ருனே
யருள்பொழி மேக மொப்பாய் தேயமென் றறிவா யன்றே. (16)

நாமும் பொருளினேமல்ல, பொருளும் நமதல்லவென்றே தெருளுற்று உள்குளிர்ந்து யாவும் வினேதமாய்ச் செய்யும் நெஞ்சால் மருளறு நிச்சயத்தால் வாதனை விடுதல்தானே அருள்பொழி மேகம் ஒப்பாய் தேயமென் றறிவாயன்றே = யாமும் பொருள்மயமல்ல, தேகேந்திரியாதிகளும் ஆகாசாதி பொருள்களும் எமதல்ல என்பதாகத் தெளிவுற்று அந்தர் சீதளமாய் மேற்கூறிய சகலமும், பாதிதாநு விருத்தியினுனே தோற்றுநின்ற எல்லாக் காரியங்களையும் லீலையால் இயற்றும் மனத்தின்லே ஐயந்திரிபு அற்ற திடநிச்சயத்தால் வாசனைத் தியாகஞ்செய்தலே கிருபா மழையைப் பெய்யும் முகில்போன்ற ஹே ராமா! தேயத் தியாகம் என்று அறிந்துகொள்வாய்.

தனதுவா தனைமாண் டெல்லாஞ் சமமதா நெஞ்சாற் பண்ணி
யெனதென துடலை நீக்கி னிந்தவா சனைநா சந்தா
னனகமா ஞேய மாகு மகங்கா மயம தான
வினவுவா தனையை முற்றும் வினேதமாய் விட்டோர் மேலோர். (17)

தனதுவாதனை மாண்டு பண்ணி
தமமதாம் நெஞ்சால் உடலை எல்
லாம் எனதெனுது நீக்கில் இந்த
வாசனை நாசந்தான் அனகமாம்
ஞேயமாகும் அகங்கரமயமதான
வினவு வாதனையை முற்றும்
விஞேதமாய் விட்டோர்
மேலோர் =

தன்னுடைய வாசனையை க்ஷயஞ்செய்து தூல, சூக்கும, காரண சரீரங்களையெல்லாம் பேதரகிதமான புத்தியால் யான் எனதென்னும் பாவனையற்றவனுய், இவ்வாசனுக்ஷயமானது பாவமற்ற பரிசுத்த ராமா! ஞேயமென்று சொல்லப்படும் தேயத்தியாகமுற்று ஞேயத்தோடு இருப்பவர் ஜீவன்முத்தர், அகங்காரமயமாகிய விசாரித்துத் தள்ளத்தக்கதாய வாசனை முழுதும் லீலையினுல் விடுத்தவர் ஜீவன்முத்தராவர்.

தீரரா மவரே தேயத் தியாகஞ்செய சீவன் முத்தர்
வேறரத் தொழில்க ளோடே வாதனை விட்டுள் ளாறித்
தூரமா ஞேயம் விட்டோர் துகளறு முத்த ராகும்
வீரனே யிவையிரண்டின் விடுதியுந் தம்மி லொக்கும். (18)

தீரராமவரே தேயத்தியாகஞ்
செய் சீவன்முத்தர் வேரறத்
தொழில்களோடே வாதனைவிட்டு
உள்ளாறித் தூரமாம் ஞேயம்
விட்டோர் துகளறு முத்தராகும்
வீரனே இவை இரண்டின் விடுதி
யுந்தம்மில் ஒக்கும் =

அகங்காரத்தை ஒழித்த தைரியமுடையவர்களே தேயத் தியாகஞ்செய்த ஜீவன்முத்தர்களாம். சேஷமின்றி நிர்மூலமாக வினைகளோடும் வாசனையையும் விடுத்து சாந்தியடைந்தவரே (பிராப்தக்ஷயத்தினுதல், சமாதியினுலாதல் விட்டவரே) ஞேயத்தியாகமுடையவர் குற்றமற்ற விதேகமுத்தராகும் = ஞேயத்தை வெகுதூரத்தில் விட்டவராகும். வீரமுடைய ஹே இராக்வ! இவ்விரண்டின் தியாகங்களுமே ஒன்ருேடொன்று ஒப்பாகவேயொளிரும்.

தேய ஞேயத்தின் றியாகங்கண் முத்தர்பாற் செறிவ
தேய ஞேயத்தின் றியாகங்கள் பிரமத்தைச் சேர்ந்த
தேய ஞேயத்தின் றியாகங்க ளிடரெலாந் தீர்ந்த
தேய ஞேயத்தின் றியாகங்கள் தேடருஞ் செல்வம். (19)

தேயஞேயத்தின் தியாகங்கள்
முத்தர்பால் செறிவ தேயஞேயத்
தின் தியாகங்கள் பிரமத்தைச்
சேர்ந்த தேயஞேயத்தின் தியா
கங்கள் இடரெல்லாந்தீர்ந்த
தேயஞேயத்தின் தியாகங்கள்
தேடருஞ்செல்வம் =

தேய ஞேய இவ்விரண்டின் தியாகங்கள் ஜீவன் முத்தர். விதேகமுத்தர்பால் இருப்பனவாம், இவற்றுள் தேயத்தியாகமுற்று ஞேயத்தோடு இருப்பவர் ஜீவன்முத்தர், எஞ்சுதலின்றி நிர்மூலமாக வினைகளோடும் வாசனையையும் விடுத்துப் பிராரத்தக்ஷயத்தினுலாதல், சமாதியினைவாதல் விட்டவரே ஞேயத்தியாகமுடையவர். தேயஞேயத் தியாகங்கள் ஆனந்த பிரஹ்மமயம்

ஆவனவாம், தேயஞேயத் தியாகங்கள் சகல அனர்த்த நிவர்த்தி வடிவம் ஆவனவாம், தேய ஞேயத் தியாகங்களென்னும் இவை கிடைத்தற் கரிய ஐஸ்வரியமாம்.

சூழுறு மின்ப துன்பந் தொடர்வுறி லொருகா லத்து
மாளுதன் மிதத்த லில்லா வவர்களே சீவன் முத்தர்
கேழுயர் மகிழ்ச்சி யச்சஞ் சினமின்மை பொருமை மேத
மூழுறு மிவற்றை நோக்கா வுளத்தினர் சீவன் முத்தர். (20)

சூழுறும் இன்பதுன்பந் தொடர் வுறில் ஒருகாலத்தும் மாளுத மிதத்தல் இல்லா அவர்களே உயர்கேழ் சீவன்முத்தர் ஊழுறும் மகிழ்ச்சி அச்சம் சினமின்மை பொருமை கேதம் இவற்றை நோக்கா உளத்தினர் சீவன் முத்தர் = (ஜீவன்முக்தன் இலக்கணம் இயம்பல்) நுகர் வினைவயத்தால் ஒன்றன்பின்ஞென்ருய்ச் சூழ்ந்த சுகதுக்கங்கள் வந்துகொண்டே யிருப்பினும் எப் போதும் வாட்டம், மகிழ்ச்சி அடையாத அவர் களே சிறப்புமிக்க குணங்களையுடைய ஜீவன் முத்தர் எனப்பெறுவர், பிராரப்தத்தால் பொருந் திய சந்தோஷம், பயம், கோபம், தைரியமின்மை, சகியாமை, துயரம் என்பனவாதியாய் வந்துற்ற இவற்றைச் சிந்தியார் (இலக்ஷியஞ் செய்யாத வர்) ஜீவன்முத்தர்.

சுழுத்திபோ லாறி நின்ற பாவனைத் தொழிலி ஞலே
பழுத்தநெஞ் சதனு னீங்காச் சாக்கிரம் பயில்வோர் நாளும்
விழுத்தகு கலைகள் சூழ்ந்த மதியென மேலோர் மேவ
முழுத்தமும் பிரிவி லோரே முத்தரென் றுரைக்கத் தக்கோர். (21)

சாக்கிரம் சுழுத்திபோல் பாவனை ஆறிநின்ற தொழிலிஞலே பயில் வோர் நாளும் விழுத்தகு கலைகள் சூழ்ந்த மதியென மேலோர் மேவ முழுத்தமும் பிரிவிலோரே முத்த ரென் றுரைக்கத் தக்கோர் = சாக்கிராவஸ்தையில் சுழுத்தியவஸ்தையிலிருப் பவன்போல் சந்தோஷகிலேசாதி பாவனையி னின்றும் விசிராந்தியுற்ற விருத்தியிஞல் பரி பக்குவ மனத்தால் விடாமல் கூடிநிற்பவர் எப் போதும் பெருமைவாய்ந்த சோடச கலைகள் நிறைந்த சந்திரனையொப்ப முமுட்சுக்களால் பொருந்திக் கணமும் பிரிவுபடாதவரே ஜீவன் முத்தர் என்பதாகக் கூற யோக்கியர் ஆவர்.

புறப்பொருள் விட்டா லுள்ளே பூண்டமா லென்று சொல்வர்
மறப்பற வனைத்தும் விட்டான் மாண்டமா லென்று சொல்வர்
திறப்பட வெனக்கீ தாக வென்றெழுஞ் சிந்தை யாசை
துறப்பில்பொன் விலங்கா மித்தைத் துவக்கறத் துடைத்தல் வேண்டும். (22)

புறப்பொருள் விட்டால் மால் உள்ளே பூண்டவென்று சொல்வர் மறப்பற அனைத்தும்விட்டால் மால்மாண்ட யென்று சொல்வர் திறப்பட எனக்குஈது ஆகவென் றெழுஞ்சிந்தை ஆசை துறப்பு இல்பொன் விலங்காம் இத்தை துவக்கறத் துடைத்தல் வேண்டும் = பாகியார்த்த வாசனைமாத்திரம் விட்டால் ஆசை (இச்சை) உள்ளே பொருந்தியது என்று கூறுவர், மறவாமல் யாவற்றையும் விஷயப்பிராப்திக்கு முன்னரும் விஷய நாச உத்தரகாலத்திலும் துக்க மின்மையின் இச்சை நாசமாம், பந்த இச்சை யின்றிய மோக்ஷ இச்சையென்று சொல்லுவர் விராகமாம் திடமாக எனக்கு இது உண்டாகுக என்றெழும் பாவனையாகிய திருஷ்ணையே நீக்க முடியாது பூண்டுகொண்ட தங்கத்தினாலாய சங் கிலியாம் இதனைத் தொடர்பின்றி ஒழித்தல் வேண்டும்.

சத்தசத் தென்னப் பட்ட சகலபா வனையி லென்றுங்
கொத்தற வாசை யாற்றிக் குறைவில்பே ருளத்த னுகிச்
சுத்தநல் லுதார மான சொரூபத்தி னிற்பாய் பெத்த
முத்தமா மாசை யின்ப துன்பங்கண் முழுது நீக்கி. (23)

சத்து அசத்து என்னப்பட்ட சகல பாவனையில் என்றுங் கொத்தற ஆசைமாற்றி முத்தமாம் ஆசை இன்பதுன்பங்கள் முழுதும் நீக்கி பெத்தமுத்தமாம் குறைவு இல் பேருளத்தனுகிச் சுத்தநல்லுதார மான சொரூபத்தில் நிற்பாய் = உண்டு இல்லையென்று சொல்லப்பெற்ற எல்லா பாவனு விஷயங்களிலும் எப்போதும் சேர்க்கை யின்றி அடியோடு ஆசையை (திருஷ்ணையை) நிவர்த்தித்து மோட்ச ஆசையையும் தியாகித்து சந்தோஷ விவாதங்கள் அனைத்தையுந் தியா கித்துப் பந்தப்படுத்துவதாய உடம்பாதிகளின் ஆசையும் அதன் நிவர்த்தியாய பரிச்சின்னமின் றிய பரிபூரண மனத்தனாய் நிர்மலமான பரமா னந்தத்தைப் பயப்பதில் தெளிவான நல்லுதாரம் (தாராளம்) தெளிவு, விசாலம் இவைகளையுடைத் தாய் நினது வடிவத்தில் ஸ்திதிபெறுவாய்.

பேனமுந் திரையு மில்லாப் பெருங்கடல் போலநிற்பாய்
மானவகேண் மற்றொன்று மாசிலா விசார முள்ளோர்க்
கானநிச்சய நாலுண்டா மடிதலை மட்டு நானே
யீனலுற்ற வர்தாய் தந்தை யென்பதோ ரறுதிதானே. (24)

பேனமுந் திரையுமில்லாப் பெருங் கடல்போல நிற்பாய் மாசு இலா மானவ மற்றொன்றுகேள் விசார முள்ளோர்க்கு ஆன நிச்சயம் நாலு உண்டாம் அடி தலை மட் நுரையும் அலையுமில்லாத பிரளயகால மகோததி போல அமர்ந்திருப்பாய். குற்றமில்லாத மநு வங்கிசத்தை விளக்க அவதரித்த இராகவ! வேறொன்று விளம்பக் கேட்பாயாக, மனத்தில் ஆராய்ச்சியுள்ளவர்கட்கு சித்த விசிராந்தியைப்

டும் நானே ஈனலுற்றவர் தாய் தந்தையென்பதோர் அறுதிதானே = பயப்பனவாய நிச்சயங்கள் நான்கு உள்ளனவாம், ஆபாதமஸ்தகம் வரையிலுள்ள தேகம் யான் என்னும் நிச்சயம் அனேகஜன்மப் பழக்கத்தால் சுயமாயே உண்டாம் என்னைப் பெற்றவர் மாதா பிதா என்பதானதுமான ஒரு நிச்சயம்.

கன்றிய பந்த மாகு மிதுமெய்ம்மை கருதா வாற்ரு
னின்றன வனைத்தின் மேலோ னெல்லின்வா லினுஞ் சற்றேநா
னென்றிரண் டாவதான நிச்சய மெய்து மென்னி
லொன்றிய முத்தி யுண்டா முத்தமர்க் குடைமை யாகும். (25)

இது மெய்ம்மை கருதாவாற்ரல் கன்றிய பந்தமாகும் நின்றன அனைத்தின்மேலோன் நெல்லின் வாலினுஞ் சற்றேநான் என்று இரண்டாவதான நிச்சயம் எய்து மென்னில் ஒன்றிய முத்தியுண்டாம் உத்தமர்க்கு உடைமை யாகும் = தேகம் நான் என்னும் அகங்காரம் எதார்த்தத்தை அறியாதபடியால் துன்புறுத்தா நின்ற பந்தமாம், இது தேகான்மவாதியான சார்வாகர் நிச்சயமாம். நாமரூபமாக விரிந்து நின்ற சர்வ விஸ்வாதீதனை நான் நெல்வால் நுனியினும் நுண்மையன் நான்=சூக்குமன் யான் என உண்டாம், இரண்டாவதான நிச்சயம் கிடைக்குமாயின் அசங்கரூபமாய்ப் பொருந்திய மோட்சமானது உண்டாகும், சற்புருடர்களுக்குப் பாக்கியமாகும்.

புவியெலா மெனது ரூபம் பொன்றுத லிலனு னென்று
குவிவறக் காண்டன் மூன்ரு நிச்சயங் குறைவில் வீடா
மவியுறு முலகு நானு மனைத்தும்பொய் விண்போ லென்றுந்
தவிர்கில மென்ற ஞலா நிச்சயந் தனிவீ டாகும். (26)

புவியெலாம் எனது ரூபம் பொன்றுதல் இலன் நான் என்று குவிவறக்காண்டல் மூன்ரு நிச்சயம் குறைவில் வீடாம் அவியுறும் உலகும் நானும் அனைத்தும் பொய் விண்போல் என்றுந் தவிர்கிலம் என்றல் நாலா நிச்சயம் தனிவீடாகும் = ஜகத்ஜாலங்களியாவும் ஆன்மசொரூபமே நாசமற்றவன் யானென்று பரிச்சின்னமின்றிப் பரிபூரணமாக நோக்குதல் மூன்ருவது நிச்சயமாம் பரிபூரண மோட்சத்தைப் பயப்பதாம் (தன்மய திருஷ்டி) நாசமுறும் பிரபஞ்சமும் யானும் எண்ணும் யாவும் மித்தை, ஆகாசமொப்ப எஞ்ஞான்றும் அவிநாசியாயுள்ளன் என்றிருத்தல் நான்காம் நிச்சயமாம், கேவலம் மோட்சமே பலமாகவுடையதாம், இது மித்யாதிருஷ்டி.

பெத்தவா சையதா முன்னே பேசுநிச் சயம தொன்றுஞ்
சுத்தவா சைகளா மூன்று நொய்யவாய்த் துகளில் சீவன்
முத்தர்பால் விளங்கு மிந்த மூன்றினு ளெல்லா நானென்
ரெுத்ததோர் நிச்ச யத்தை யுறிற் பின்னை யுள்ளஞ் சோரா. (27)

முன்னே பேசும் நிச்சயமது ஒன்றும் பெத்தவாசையதாம் மூன்று சுத்தவாசைகளாம் நொய்ய வாய்த்துகளில் சீவன்முத்தர்பால் விளங்கும் இந்த மூன்றினுள் எல்லாம் நானென்று ஒத்ததோர் நிச்சயத்தையுறில் பின்னை உள்ளஞ் சோரா = முதலில் கூறிய தேகான்ம நிச்சயம், ஒன்றும் பந்தயோக்கிய திருஷ்ணைவடிவமாம். பின்னே கூறிய மூன்று நிச்சயமும், தோஷமற்றதாய் திருஷ்ணை வடிவங்களாம் இவை அதிசூக்கும முடையனவாய் சொச்சங்களாம், சீவன்முக்தரிடத்தில் விளங்குவனவாம் பின் சொல்லப்பட்ட மூன்றினுள்ளுமாயலா வடிவுமாயிருப்பவன் நானேயென்னும் சமதிருஷ்டிவடிவமாய நிச்சயத்தைச் சுருதியுக்தி தொல்லோர் அனுபவத்துக்குச் சம்மதமான நிச்சயத்தைச் சாரில் பின்னர் மனம் கவலையுருது.

சூனியம் பகுதி மாயை பிரமஞ்சிற் சோதி ஞான
மீனமில் புருட ஞன்மா வீசானன் சிவமே நித்த
மானவை யென்ன லாமொன் றிரண்டெனு மகல்பே தத்தால்
வானுயர் சகம்படைக்கும் விஞேதத்தால் வளரு மொன்றே. (28)

சூனியம் பகுதி மாயை பிரமம் சிற்ஜோதி ஞானம் ஈனமில் புருடன் ஆன்மா ஈசானன் சிவம் நித்தம் ஆனவையென்னலாம் ஒன்று இரண்டு எனும் அகல்பேதத்தால் உயர் ஒன்றே வான்சகம் விஞேதத்தால் படைக்கும் வளரும் = (சூனியவாத சங்கையைத் தவிர்த்தற்குச் சூனியமென்பது முதலிய சப்தங்கள் எப்படியும் சிதான்ம பரியாயங்களாம் என்று கூறல்) நிராகாரமாதலின் சூன்யம், உபாதானமாதலின் பகுதி, விக்ஷேப ஏதுவாகலின் மாயை, பெரிதுக்கெல்லாம் பெரிதாயிருத்தலின் பிரஹ்மம், விசுத்த ஞானமாதலின் சிற்சோதி, விஞ்ஞானமாயிருத்தலின் ஞானம் உயர்வுடையதாய் பூரித்தலின் புருடன், தனது சொரூபமாதலின் ஆன்மா எல்லாவற்றையும் இயக்குதல் ஈசானன், மங்களமாகவிருத்தலின் சிவம், நான்கு அபாவங்கள் விடுபட்டிருத்தலின் நித்தம், ஆகிய இவை யாவும் மதவாதங்களால் நிகழ்த்தப்பெறுவதாம், துவைதாத்விதமென்னும் வேற்றுமையானே, மேலான அத்வைதப் பிரஹ்மமே விவர்த்தருபத்தால் ஆகாசாதிப் பிரபஞ்சத்தை லீலையினல் விஜ்ரும்பணமாம், சிருஷ்டிப்பனவாம் ஸ்திதி பெற்று விருத்திபெறுவனவாம்

ஒன்றெனும் பரம ரூபத் தொருசத்தி யொருமை யாலே
நின்றெழு கின்ற தன்றே நின்னது பிறர தென்றும்
பொன்றிய திருந்த தென்றும் பொருள்களிற் கருமந் தன்னி
லென்றுமின் பத்துன் பங்க ளிதயத்தி லூன்ற வேண்டார். (29)

ஒன்றெனும் பரமரூபத்து ஒருசத்தி ஒருமையாலே நின்றெழுகின்றது அன்றே நின்னது பிறரது என்றும் பொன்றியது இருந்தது என்றும் பொருள்களில் கருமந்தன்னில் என்றும் இன்பத் துன்பங்கள் இதயத்தில் ஊன்றவேண்டாம் = அத்வைத பிரஹ்மத்தின்கண்ணே அறியார் பொருட்டு ஒப்பற்ற தெய்வாத்மகசத்தி துவைதாத்வைத பேதங்களானேயிருந்து சிற்சொரூபத்துக்கு வேருகாததாகவே விஜ்ரும்பணமாகின்றதல்லவோ, ஆகுக இங்ஙன் அதனுலென்னேயெனின், மனை மைந்தராதியர் தன்னது எனவும் இவைகளெல்லாம் அன்னியரது எனவும், நாசமாயிற்றென்றும், வாழ்ந்தது என்றும், வஸ்துக்களிலும் பிறகாரியங்களிலும் அறிவுடையவனுகிய நீ சுகதுக்கங்களை எப்போதும் அழுத்தமாகப் பற்றவேண்டாம். எங்ஙனம் என்னுல் விவகரிக்கத்தக்கதெனில் மனதில் அழுந்தவேண்டாம். தருமசாஸ்திராதிகளுக்கு விரோதமாகுமேயெனின் ஆண்டு துவைதாசிரயனமே உசிதமாம் எனக் கருத்தாம்.

யாதினு முயர்ந்து மாளாப் பதம்பற்றி யிதய மென்றுஞ்
சீதமா யின்பத் துன்பஞ் சேர்கிலார் பிறப்பிற் சேரார்
சாதுகொள் பகைகொ ளொத்தல் தஞ்சம் வல்லபங்க ளுள்ளோ
ரோதிய னெறியிற் செல்லு முத்தமர் பிறப்பிற் சேரார். (30)

யாதினுமுயர்ந்து மாளாப் பதம் பற்றி இதயமென்றுஞ் சீதமா யின்பத் துன்பஞ்சேர்கிலார் பிறப் பிற்சேரார் சாதுகொள் பகைகொளொத்தல் தஞ்சம் வல்லபங்களுள்ளோரோதிய நெறியிற் செல்லுமுத்தமர் பிறப்பிற் சேரார் = சர்வாதீதமாய நித்தியபதத்தைஆசிரயித்தவனுய் எப்போதும் இதயம் பூரணச்சந்திரன்போல சீதளமாய் மகிழ்ச்சி வாட்டம் அடையார், சம்சாரத்தில் மூழ்கி இடர்ப்படார். நன்மையுடையவரிடத்தும், தீமையுடையவரிடத்தும் சமதிருஷ்டியுடையவராய்த், தயை தாட்சண்யம், இரக்கமுடையவராயிருப்பார். சுருதி கூறியதும் ஆன்ரேர் அனுஷ்டானத்திலும் பயிலும் உத்தமர் சம்சாரத்தில் துயர் உருர்.

இழிவுயர் விரண்டு மெண்ணு ரிச்சைகோ பங்க ளெய்தார்
தொழிரெு ழிலாமை விட்டோர் துன்னிய பிறப்பிற் சேரார்
ரெழில்பெற விளங்கி யார்க்கு மினியன வினிதிற் சொல்வோ
ரழிபொரு ளணைத்தின் சால்பை யறிந்துளோர் பிறப்பிற் சேரார். (31)

இழிவு உயர்வு இரண்டும் எண்ணுர் இச்சை கோபங்களெய்தார் தொழில் விட்டோர் தொழி = துக்கம், துக்கசாதனம், சுகம், சுகசாதனம் இரண்டையும் நாடார். சமாதியுடையவர் சமாதியுத்திதர் அனர்த்தம் நிறைந்த சம்சாரத்

லாமை (விட்டோர்) துன்னிய பிறப்பிற் சேரார் எழில்பெற விளங்கியார்க்கும் இனியன இனி திற்சொல்வோர் அழிபொருள் அனைத்தின் சால்பை அறிந் துளோர் பிறப்பிற் சேரார் = தைப்பொருந்தி இடருகிருர். மைத்திரியாதி கல்யாணகுணங்களையுடையவராய எப்பிராணி கட்கும் இதமான இன்சொல் கூறுவோர் நாசமா காநின்ற சகல வஸ்துக்களின் பற்றுக்கோடான சொரூபத்தை அறிந்தவர் சம்சாரத்தில் இடர்ப் படார்.

தேயவா தனைநீங்கிப் பூர்ணமாகித் தெளிந்த விழியிமையாமற் சீவன்முத்தி
யாயபா வனையாலே சொரூபமேவி யனவரதமுலகில் விளையாடு வீரா
மாயவா சையைநீக்கிப் பற்றறுத்து வாதனைபோயுள் வெளியா வாகியத்தே
மேயவா சாரமெலா மியற்றியென்றும் வேண்டியவா றுலகில் விளையாடு வீரா (32)

தேயவாதனை நீங்கிப் பூர்ணமாகித் தெளிந்தவிழி இமையாமல் சீவன் முத்தியாய பாவனையாலே சொரூபமேவி அனவரதம் உலகில் விளையாடுவீரா மாய ஆசையை நீக்கிப் பற்றறுத்து வாதனைபோய் உள்வெளியாய் வாகியத்தே மேய ஆசாரமெலாம் இயற்றி என்றும் வேண்டியவாறு உலகில் விளையாடுவீரா = தேயத் தியாகமுடையவராய்த் தெளிந்த பூர்ண மாக நிச்சயித்த திருஷ்டி அகலாமல் ஜீவன்முக் தத்தன்மையினனே சுவஸ்தனாய் எப்போதும் இவ்வுலகின்கண்ணே விவகரித்துவிளையாடுவாய் வீர இராகவனே! மாயாமய சம்சாரத்தில் சர்வ ஆசையும் ஒழித்து வீதராகனுதி (இராகமற்றவ னாய்) வாசனையற்றவனாய் உள்ளே சிதாகாச மனத்தவனாய், வெளியில் பொருந்திய வர்ணாச் சிரமத்துக்குரிய தொழில்களில் நன்றாக அநுஷ் டித்து எப்போதும் இப்பிரபஞ்சத்தில் இஷ்டப்படி இன்புடன் விளையாடிக்கொண்டிருப்பாய்.

சகத்திலே புறத்தொழிலி லாரம்பித்துத் தனியிதயத் தாரம்பஞ்சற்று மின்றி
யகத்திலே செயாதோனாய்ப் புறத்தே செய்வோனாகியே யுலகில் விளையாடுவீரா
வகுத்தவகங் காரம்போய்ச் சித்தந்தேறி வானம்போல்நொய் தாகிமாசொன் றற்று
வெகுத்துவமா மடையாள மனைத்துமின்றி வேண்டியவா றுலகில்
விளையாடுவீரா. (33)

சகத்திலே புறத்தொழிலில் ஆரம் பித்துத் தனி இதயத்து ஆரம்பஞ் சற்றுமின்றி அகத்திலே செயா தோனாய்ப் புறத்தே செய்வோ னாகியே உலகில் விளையாடுவீரா வகுத்த அகங்காரம்போய்ச் சித்தந்தேறி வானம்போல் நொய் தாகி மாசொன்றற்று வெகுத்துவ உலகின்கண் தொழில் செய்யுங்காலத்துவாகியத் தில் தொழிலில் தொடக்கம் சிறிதுமின்றிச் சுய திருஷ்டியில் அகர்த்தாவாய் பாகியத்தில் கர்த்தா வாய் இவ்வுலகின்கண் விளையாடி விவகரிப்பா யாக வீர இராகவ! அகம் விருத்தி இதம் விருத்தியாகப் பொருந்திப் பிரிந்த அகங்காரம் ஒழிந்து மனம் தெளிந்து ஆகாசமொப்ப அதி சூக்குமமாய் களங்கமொன்றின்றி சகல ஜனங்

மாம் அடையாளம் அனைத்து மின்றி வேண்டியவாறு உலகில் விளையாடுவீரா = களும் மதிக்கத்தக்கதாய நானாவேடதாரியாய் இல்லாமல் இஷ்டப்பிரகாரம் சகத்தின்கண் விளையாடிக்கொண்டிருப்பாய் வீர இராகவ.

இதமான வுதாரியாய்க் கடினுசாரமின்றியா சாரங்கட் கெளிதுபின்போய்
விதமான வனைத்துக்குஞ் சார்பைநோக்கி வேண்டியவா றுலகில் விளையாடுவீரா
புதனாகி நிராசைதனை யுள்ளேதேக்கிப் புறத்தேயாசையிற் றொழில்கள் பூண்டான்போலா
யதனாலுட் சீதளமாய்ப் புறம்வெய்தாகி யனவரதமுலகில் விளையாடுவீரா. (34)

இதமான உதாரியாய்க் கடினுசார மின்றி ஆசாரங்கட்கு எளிது பின் போய் விதமான அனைத்துக்குஞ் சார்பைநோக்கி வேண்டியவாறு உலகில் விளையாடுவீரா புதனாகி நிராசைதனையுள்ளே தேக்கிப் புறத்தே ஆசையின் தொழில் பூண்டான் போலாய் அதனால் உள் சீதளமாய்ப் புறம் வெய்தாகி அனவரதம் உலகில் விளையாடுவீரா = இன்பஞ் செய்யும்படியான நல்ல உதாரமுடைய வனாய் ஆன்றோர் ஆசாரங்கட்குரித்தரக வருத்த மின்றி எளிதாக நானாவிதமான யாவற்றிற்கும் பற்றைப்பார்த்து சர்வ கற்பனைக்கும் ஆதாரமாய் வஸ்துவை ஆராய்ந்து உனதிஷ்டப்படி உலகின் கண் விவகரிப்பாய் இராகவனே! அறிஞனாகி வைராக்கியத்தை அகத்தேகொண்டு வெளியில் அவாவோடுகூடி காரியங்கள் செய்பவன்போ லாய் அக்காரணத்தால் அந்தர் சீதளமாய் வெளி யில் கோபதாபமுடையவனாய் எப்போதும் விவ கரித்துப் பிரபஞ்சத்தில் நீகிரீடிப்பாய்.

இவன்சுற்ற னிவன்பகைவ னிவனானென்னு மிவ்வெறும்பொய் யிராமநீ யிறையுமெண்ணே
லவம்பற்று நொய்யமனத் தவர்க்கிவ்வாரு மறிந்தோர்க்குச் சகமுழுது மகலாச்சுற்ற
நிவந்துற்ற பலகோடி பவமோகத்தானீபகை நீயுறவென்பர் நிமிடந் தோறு
முவந்துற்ற மயக்கிதுவாம் பரமார்த்தத்தா லுலகெல்லாம் பகையாகு முறவுமாகும். (35)

இவன் சுற்றன் இவன் பகைவன் இவன் நானென்னும் இவ் வெறும் பொய் இராம நீ இறையும் எண் ணேல் அவம்பற்றும் நொய்ய மனத்தவர்க்கு இவ்வாரும் அறிந் தோர்க்கு சகமுழுதும் அகலாச் சுற்றம் நிவந்துற்ற பலகோடி பவ மோகத்தால் நீ பகை நீ உறவு என்பர் நிமிடத்தோறும் உவந் இவன் பந்து, இவன் சத்துரு, இத்தகையன் யான் என்பதான இஃது அத்தியந்தம் மித்தை யாம். ஹே இராமா! நீ அணுவளவேனும் சிந்தியாதே, அதர்மப்பிரவிருத்தியுடைய அற்ப மனத்தையுடையவருக்கு இத் தன்மையதாம். மித்தையென உணர்ந்தவர்களுக்குப் பிரபஞ்ச மனைத்தும்நீங்காத பந்துவாம், சுரநரதிரியக்காதி களாய் எழுந்த பல ஜன்மங்களிலுண்டாய விபரீ தத்தால் நீ சத்துரு, நீ பந்து எனக் கற்பிப்பர்.

துற்ற மயக்கிதுவாம் பரமார்த்தத்தால் உலகெல்லாம் பகையாகும் உறவுமாகும் = கணந்தோறும் அன்புமிக்குப்பழகிய பிராந்தியே யாகும் இஃது. உண்மையாக நோக்கில் பிரபஞ்சம் யாவும் அபந்துவாம், வியாவகாரிகத்தில் பந்துவுமாகும்.

இதுபொருட்டா லிதிகாச மொன்றுகேள் பண்டியைந்தது கங்கையின்கரையி னிருடிமைந்த
ரதுலமயேந் திரகிரியி னயலேவாழ்வோ ரருந்தவத்தோர் தீர்க்கதவனளிக்க வந்தோர்
சதுர்மறைதேர் புண்ணியபா வனரென்றுள்ளார் தந்தையொடு கங்கையின் பாற்றவஞ்செய் நாளிற்
பொதுவுறச்செய் தவப்பயனுற் காலமுற்றிப் புண்ணியனும் புண்ணியவான் போதம் பெற்றுன். (36)

இதுபொருட்டால் பண்டு இயைந்தது இதிகாசம் ஒன்றுகேள் அதுல கங்கையின் கரையில் அயலே வோர் மயேந்திரகிரியில் வாழ்வோர் அருந்தவத்தோர் இருடி மைந்தர் தீர்க்கதவன் அளிக்கவந்தோர் சதுர்மறைதேர் புண்ணிய பாவனர் என்றுள்ளார் தந்தை யொடுகங்கையின்பால்தவஞ்செய் நாளில் பொதுவுறச்செய் தவப் பயனுல் காலமுற்றிப் புண்ணியனும் புண்ணியவான் போதம் பெற்றுன் = இது விளங்கித் தோன்றும்பொருட்டுப் பூர்வம் நடந்ததான கதை ஒன்று கூறக் கேட்குதி, ஒப்பில்லாத கங்காநதியின் தீரத்தின் பக்கத்தே மயேந்திரபர்வதத்தின் சோலையில் வசிப்பவர் ரிஷிபுத்திரர்கள் அரிய பெருந் தவத்தையுடையோர். தீர்க்க தவரிஷியின் மைந்தர்கள் நான்கு வேதங்களுந் தேர்ந்த புண்ணியர் பாவனரென்னும் நாமதேயம் வாய்ந்தவர் பிதாவோடு கங்காநதியின் கரையில் தவஞ்செய்யுங் காலத்தில் பலாபிலாசையின்றிச் செய்யப்பட்ட நிஷ்காமிய தவத்தின் பயனுக பக்குவகாலத்தில் புண்ணியவானுகிய புண்ணியனென்னுங் குணசிரேஷ்டன் தத்துவ வித்தாயினுன்.

அங்கவன்பின் னவனுன பாவனன்பா லறிவுடைமை பாதியா வாதலாலே
செங்கதிரோ னுதிப்பதன்முன் னருணன்றேன்றச் செங்கமலங் கிண்கிணிவாய்ச் செய்வதொத்துத்
துங்கவறி யாமையு மெய்வீடுமின்றித் தோளாவெந்திரம்போலத் துவண்டு நின்றுன்
பொங்குதவத் தீர்க்கதவ னென்னுந் தந்தைபோகத்தி லிச்சையெலாம் புந்திதீர்ந்தான். (37)

அங்கு அவன் பின்னவனுன பாவனன்பால் அறிவுடைமை பாதியளவு ஆதலாலே செங்கதிரோன் உதிப்பதன்முன் அருணன் = அவ்விடத்தில் புண்ணியன்றன் தம்பியான பாவனன் என்பவனிடத்தே ஞானமானது அர்த்தபரிமாணம் ஆகையினுல் சிறந்து இலங்கும் சூரியன்

தோன்றச் செங்கமலங் கிண்கிணி வாய்ச் செய்வதொத்துத் துங்க அறியாமையும் மெய்வீடும் இன்றித் தோளா எந்திரம்போலத் துவண்டு நின்றுன் பொங்குதவத் தீர்க்கதவனென்னுந் தந்தை போகத்தில் இச்சையெலாம் புந்தி தீர்ந்தான் = உதயமாவதன் முன்னர் அருணோதய சமையத்தில் செந்தாமரையானதுசலங்கையைப்போன்று அத்தியந்தம் அஞ்ஞானமும், நிர்மலமான மிகுந்த = பூரண ஞானமும் பிரஹ்மநிஷ்டையுமின்றி ஊஞ்சல்போல சலனப்பட்டிருப்பவன், நிறைந்த தவத்தினையுடைய தீர்க்க தவரென்னும் பிதா போகத்திலுள்ள ஆசைகள் அனைத்திலும் எண்ணமற்றவரானுர்.

காலமே காரணமாய்க் குடும்பவாழ்விற் காதலொழித் தறச்செறிந்த
காயந்தன்னைச்
சாலமிகு தொழிற்பறவைக் கிடமாங்கூட்டைச் சானவியின் கரைவரையிற்
ருனேதீர்ந்தான்
கோலியொரு சுமைசுமப்பான் குறித்தவெல்லை கொண்டுபோய்ப் போடுவபோற்
குரம்பைப்போட்டு
மாலுறுபற் றென்றின்றிப் பூவினுற்றம் வானுறல்போற் பரமபதவாழ்வு
பெற்றுன். (38)

காலமே காரணமாய்க் குடும்ப வாழ்வில் காதல் ஒழித்து அறச்செறிந்த காயந்தன்னைச் சாலமிகு தொழிற் பறவைக்கு இடமாங் கூட்டைச் சானவியின் கரைவரையில் தானே தீர்ந்தான் கோலி ஒரு சுமைசுமப்பான் குறித்தவெல்லைக் கொண்டுபோய்ப் போடுவபோல் குரம்பைப்போட்டு மாலுறுபற்று ஒன்றின்றிப் பூவின் நாற்றம் வானுறல்போல் பரமபத வாழ்வு பெற்றுன் = பிராரப்த க்ஷயத்தையே நிமித்தமாகக் கொண்டு சம்சார வாழ்க்கையில் இச்சையை அகற்றித் தவம்புரிந்து ஜரையால் மிகவுஞ் ஜீர்ணமான சரீரத்தை, அதி துக்கமிகுந்த தொழில்களைச் செய்யும் அகங்கிருதி யென்னும் பட்சிக்கு இருப்பிடமாகிய பஞ்சரம் போன்ற இச் சரீரத்தை, ஸ்ரீ கங்கைக் கரையின் அருகிலுள்ள மயேந்திர பர்வதத்தில் சுயமே ஒழித்துவிட்டனன். சும்மாடு வனைந்து எஜமானனை வளைந்து சுற்றி கூலியாளனை பாரஞ்சுமப்பவன் நியமித்த இடத்தில் சுமையைப் போடுவபோல் நுகர்வினை தீர்ந்தவுடன் தேகத்தை விடுத்து மயக்கத்தை விளைவிக்கும் வாஞ்சை சிறிதுமின்றி புஷ்பகந்தம் அம்பரம் அடைவதுபோல் பரமபத வாழ்வாகிய விதேக மோக்ஷத்தை அடைந்தான்.

தொழிலின்றிக் காட்சியெனுந் துன்பமின்றித் தொல்லறிவு தோன்றிடமாஞ்
சொரூபம்பெற்ற
வழிவின்முனி யிறத்தலுமே யவன்றன்பன்னி யம்புயம் நின்றகலளிபோ
லங்கம்விட்டாள்
விழிகணிகர் தாய்தந்தை யிறப்பக்கண்டு மேற்செயவேண்டிய கிரியைவிதியிற்
செய்வான்
வழிபடுபுண் ணியன்முயன் ருன்பாவன்ருனும் வருத்தமெனுங் கடற்புகுந்து
மயங்கலுற்றுன். (39)



தொழிலின்றிக் காட்சியெனுந்
துன்பமின்றித் தோன்றிடமாம்
தொல் அறிவு சொரூபம் பெற்ற
அழிவுஇல் முனி இறத்தலுமே
அவன்றன்பன்னி அம்புயம்நின்று
அகல் அளிபோல் அங்கம் விட்
டாள் விழிகள்நிகர் தாய்தந்தை
இறப்பக்கண்டு மேற்செயவேண்
டிய கிரியைவிதியிற் செய்வான்
வழிபடு புண்ணியன் முயன்றான்
பாவன்றானும் வருத்தமெனுங்
கடற்புகுந்து மயங்கலுற்றான் =

கிருதகிருத்தியனாய்த் திருசியசம்பந்தமான துயர மின்றி சர்வ கற்பனாவதிஷ்டானமான புராதன சிற்சொரூபத்தைச் சாக்ஷாத்கரித்த நித்திய முனிவர் சரீரத்தை விடுதலும் உடனே அவரது தரும பத்தினி, தாமரையினின்றும் நீங்கும் வண்டே போல ரோகஜராதி மலினமின்றேனும் முன் பர்த்தாவால் கொடுக்கப்பட்ட யோகபலத்தால் தேகத்தைவிட்டனள். இரண்டு நேத்திரங்கட்குச் சமானமான மாதா பிதாக்கள் தேகம் விட்டதைப் பார்த்தும் பின்னர் செய்யவேண்டிய உத்தரகிரிகைகளைச் சாஸ்திரக் கிரமமாகச் செய்யும்பொருட்டுத் தாய்தந்தையரைத் தெய்வமாகப் போற்றிக் கொண்டிருந்த புண்ணியன் முயல்வதானான், பாவனனோ துக்கமாகிய சாகரத்தில் மூழ்கி மயல் கொண்டு அழத்தொடங்கினான்.

அன்னையன் னையென்னு மென்னையீன்ற வையாவையா வென்னுமந்தோ
வந்தோ
வென்னையென் னையென்னு மாற்றானாகி யெரிமிதித்தாற்போற் கானமெங்கு
மோடுந்
தன்னேரின் முன்னவனை நோக்கித்தேறான் றம்பிமிகத்தளர்வுற்றான்
றளராமுன்னோன்
மின்னேரு முடற்கிறத்த லியல்பேயென்று வேறொன்றுநினையாமல்
விதியேசெய்தான். (40)

என்னை ஈன்ற அன்னே அன்னே
யென்னும் ஐயா ஐயாவென்னும்
அந்தோ அந்தோ என்னே
என்னேயென்னும ஆற்றானாகி எரி
மிதித்தான்போல் கானம் எங்கும்
ஓடும் நேர்இல் தன் முன்னவனை
நோக்கித் தேறான் தம்பி மிகத்
தளர்வுற்றான் தளராமுன்னோன்
மின்னேரும் உடற்கு இறத்தல்
இயல்பேயென்று வேறொன்று
நினையாமல் விதியே செய்தான் =

என்னைப்பெற்ற அம்மா, அம்மாவென்றழுவன். என்னைப்பெற்ற அப்பா, அப்பாவென்றழுவன். ஐயோ, ஐயோ எங்களைப் பரதவிக்கவிட்டுப் போனீர்களே யென்று இஃதென்னகாரணம் என்று அழுவன். பிரிவைச் சகிக்கானாகி அக்கினியை மிதித்தவன் பதறி ஓடுதல் போலச் சோலையெங்கும் சுழன்றுசுழன்று சோகமனத்தையுடைய பாவனன் ஓடி கத்தித்திரிந்தான். சோகமடையாத புண்ணியன் மின்னலுக்குச் சமானமான தேகம் நாசமாகுதல் சகஜமே என எண்ணி அயல் ஒன்றையும் சிந்தியாமல் பிதுர் காரியமே இயற்றினன்.

மறைநெறிகண் முடித்ததற்பின் சோகத்தாலே வாய்மூடாவிள விளவாதனை வந்துசார்ந்து
நிறையறிவாம் புண்ணியன் பாவனனைநோக்கி நெஞ்சழிக்குந் துயரமைந்தா நீத்தலென்னே
பொறைமிகுநின் பிதா நின்ன தன்னையோடும் பொருந்தியிருந்துளபதத்தின் பொழிவைக் கேளாய்
குறைவுநிறை விலதென்றுந் தனதாய்த்தானுய்க் கோதிலதாம் வீடெனும்பேர் கூறவற்றும். (41)

நிறையறிவாம் புண்ணியன் மறைநெறிகள் முடித்ததன்பின் சோகத்தாலே வாய்மூடா இளவல்தனை வந்துசார்ந்து பாவனனை நோக்கி நெஞ்சழிக்குந் துயரம் மைந்தா நீத்தலென்னே பொறைமிகுநின் பிதா நின்னது அன்னையோடும் பொருந்தியிருந்துளபதத்தின் பொலிவைக் கேளாய் குறைவு நிறைவுஇலது என்றுந் தனதாய்த் தானுய்க் கோதிலதாம் வீடெனும் பேர் கூறவற்றும் =

பூரண ஞானம் பெற்ற சிரேஷ்டனுன புண்ணியன் சாஸ்திரக் கிரமமாக மாதா பிதாக்களுக்குச் செய்யவேண்டிய உத்தரகிரிகைகளைச் செய்து முடித்து அதன் பின்னர் துயரத்தாலே சதா அழுதுகொண்டே திரிந்த சின்னவனைத் தேடிக் கண்டு அடைந்து கனிஷ்டனுன பாவனனைக் கருணையோடும் பார்த்து மனம் வருந்தும்படியான துயரத்தை, மைந்தா விடாமலிருப்பது என்னே பரம உபசாந்தம் பொருந்தி உனது தந்தை உனது தாயரோடும் அடைந்திருந்துள்ள இடத்தின் பெருமையைக் கூறக் கேட்பாய். சங்கோசவிகாச தருமங்களற்றதும் ஆத்மாவும் நிர்த்தோஷ மோட்சமெனவும் பேர் சொல்லப்படுவதாம்.

அனைவருக்கு மேவுமிட மதுவேயாகு மறிஞருக்குமெய்யுருவ மதுவே யாகுந்
தனையகலா வப்பதத்தில் வாழுந்தாதை தனைநோக்கித் தளருமது தகவோதம்பி
துனைபுனலி னேட்டத்துக் கெய்தும்பள்ளத் தொகுதிபோற் பிறவிதொறுந் தொடர்பாய்ப்போன
வனையுறுநின் ருய்தந்தைக் கிலக்கமுண்டோ மனைமக்கள் சுற்றமொரு மட்டுண்டாமோ. (42)

அதுவே அனைவருக்கும் மேவும் இடம் ஆகும் அறிஞருக்கு மெய் உருவம் அதுவேயாகும் தனையகலா அப் பதத்தில் வாழுந் தாதைதனை நோக்கித் தளருமது தகவோதம்பி துனைபுனலினேட்டத்துக்கெய்தும்பள்ளத் தொகுதி

மேலே கூறிய சங்கோசவிகாச தருமங்களற்ற நிர்த்தோஷமான பிரஹ்மாபின்ன ஆன்மசொரூபமே ஜந்துக்கள் அனைத்துக்குமே அடையத்தக்க தானமாம், பிரஹ்மவித்துக்களால் பிராரப்த க்ஷயத்தில் அடையப்படும் சொரூபம் அதுவேயாகும். ஆன்மா பின்ன பிரஹ்ம பதத்தில் ஆனந்தமாய் வாழுகின்ற பிதா மாதாக்களைக்

போல் பிறவிதொறுந் தொடர் பாய்ப்போனநின் வனையுறும் தாய்தந்தைக்கு இலக்கமுண்டோ மனைமக்கள் சுற்றம் ஒரு மட்டுண்டாமோ = குறித்துச் சோகமுறுவது தகுதியாமோ இளையோய். விரைவாக ஓடும் ஜலப்பிரவாகத்துக்கு நேரும் நீர் மடுக்கள்போல, ஜனனங்கள்தோறும் தொடர்ந்துகொண்டே சென்ற நீ வருந்தும் தாய் தந்தைக்குக் கணக்கு உண்டோ, மனைவிகள், மைந்தர்கள், பந்துக்கள் ஒரு கோடிக்கணக்கில் அடங்குவனவாமோ ?

பருவங்க டொறும்பெரிய வனத்திற்காய்க்கும் பலங்கள்போற் பவங்கடொறும்
பரந்தசுற்றங்
கருதுங்கா லிறந்தவவர்க் கிரங்கவேண்டிற் கற்பமளவலறினு மோர்
கரையுண்டாமோ
சொருபமிலா வஞ்ஞானக் கானன்மேட்டிற் றொடர்ந்தவாதனைக் கோடைச்சுழல்
வெங்கானற்
பெருகுநீர் சுகாசுகமாந் திரைகண்மோதிப் பேதமொரு கரையின்றிப்
பிறழுமன்றே. (43)

பருவங்கள்தோறும் பெரிய வனத்திற் காய்க்கும் பழங்கள்போற் பவங்கள்தோறும் பரந்த சுற்றம் கருதுங்கால் இறந்த அவர்க்கு இரங்கவேண்டில் கற்பமளவு அலறினும் ஓர் கரையுண்டாமோ சொரூபமிலா அஞ்ஞானக் கானல் மேட்டில் தொடந்தவாதனை வெங் கோடைச் சுழல் கானல் பெருகு நீர் சுகாசுகமாந் திரைகள்மோதிப் பேதம் ஒரு கரையின்றிப் பிறழுமன்றே = ஒவ்வொரு ருதுக்கள்தோறும் மகத்தான வனங்களில் உண்டாகும் பழங்கள்போல எழுவகை ஜன்மங்கள்தோறும் விஸ்தரித்த பந்துவர்க்கம் அளவில்லதாம் ஆலோசிக்கும்போது, மரித்தவரைக்குறித்து அழுவதானல் கற்பகற்பமாக அழுதாலும் ஓர் எல்லை காணமுடியுமோ ? தனக்கெனச் சொரூபமில்லா அஞ்ஞானமாகிய ஊஷர பூமியில் அநாதியாகச் சம்பந்தித்துவரும் வாசனை மிகுந்த வெப்பத்தில் சுழலாநின்ற சம்சாரமாகிய கானலில் பெருகும் நீரானது இன்பதுன்பங்களாகிய அலைகள்மோதி அலைப்ப வேற்றுமையானது ஓர் எல்லையில்லாமல் அனந்தரூபமதாக அநாதியாயே தோன்றுவனவாம்.

இல்லுறவு பகைநேயங் கோபமாசை யிழிவுயர்வாதிகள் வடிவாயெழுந்த ஞாலம்
புல்லுறுதன் னுமமாத்தி ரத்தினலே பொலிந்து விரிகின்றதல்லாற்
புறனிலுண்டோ
நல்லுறவா நினைத்திடி நல்லுறவேயாவர் நண்ணராய்ப்பாவிக்கி னண்ணராவர்
கொல்லுறுநஞ் சமுதிரண்டின் குணங்கள்போலுங் குறித்திடுபாவனைக்
கட்டுக்குலைந்தா லுண்டோ. (44)

இல் உறவு பகை நேயம் கோபம் ஆசை இழிவு உயர்வாதிகள் வடிவாய் எழுந்த ஞாலம் புல்லுறுதன் நாமமாத்திரத்தினலே பொலிந்து விரிகின்றதல்லால் புறனிலுண்டோ நல்லுறவா நினைத்திடில் நல்லுறவேயாவர் நண்ணுராய்ப் பாவிக்கில் நண்ணுராவர் கொல்லுறு நஞ்சு அமுது இரண்டின் குணங்கள்போலும் குறித்திடு பாவனைக் கட்டுக்குலைந்தால் உண்டோ =

மனைவி, பந்து, மித்திரர், சத்துரு, சினம், திருஷ்ணை, கீழ், மேல் முதலிய வடிவங்களாய் இதுவெனத் தோற்றும் பிரபஞ்சம், இழிவாகப் பொருந்திய பெயர் மாத்திரையானே விளங்கி விஸ்தரிக்கின்றதேயல்லாமல் மனதுக்குப் புறம்பாக (விலக்ஷணமாக உளதாமோ) நல்ல பந்துவாக நினைக்கில் நல்ல பந்துவேயாவர், பகைவராய்ப் பாவிக்கில் பரரே (பகைவரேயாவர்) கொல்லாநின்ற விஷம், அமிர்தம், இரண்டின் தன்மைபோலும் பாவித்திடும் பாவனையால் ஆக்கப்பட்ட நிலை சிதைந்தால் இவை உளதோ.

ஒன்றிலே தோன்றியனைத் துருவமான வுணர்வுக்குப் பகையுறவென் றுரைப்பதெங்ஙன்
னின்றியொழி தசைபுண்ணீர் தோல்கண்மேய்ந்த வெலுப்புப்பஞ்சரந் தன்னிலியாமா ரென்று
நின்றிவணீ நின்மனத்தா னினைந்துநோக்காய் நிமலமாம்பரம விழிநெறியா னேக்கிற்
பொன்றுதுயர் நீயில்லை நானுமில்லைப் புண்ணியபாவனெனல் பொய்ப்போதந் தோன்றும். (45)

ஒன்றிலே தோன்றி அனைத்துருவமான உணர்வுக்குப் பகை உறவு என்று உரைப்பது எங்ஙன் இன்றியொழிதசை புண்ணீர் தோல்கள் மேய்ந்த வெலுப்புப் பஞ்சரந்தன்னில் யாமார் என்று இவன் நின்று நீ நின்மனத்தால் நினைந்துநோக்காய் நெறியால் நிமலமாம் பரம விழிநோக்கில் பொன்று துயர் நீ இல்லை நானும் இல்லை புண்ணியபாவன் எனல் பொய்ப் போதந்தோன்றும் =

அத்வைதசொரூபமாயிருந்து விளங்குவதாய்ச் சர்வான்மகமான சைதன்யத்துக்கு சத்துரு என்றும், மித்துரு என்றும் கூறுவது எப்படிக்கூடும்? சிலநாளில் இல்லாது நாசமாகும். மாமிசரத்தாதி நிறைந்து சர்மங்கள் போர்த்திய என்புக்கூட்டில் யாம் யார்? அகம்சப்தார்த்தம் என்னென்று இவ்விடத்தில் ஏகாக்கிரமாய் நின்று நீ உனது சித்தத்திலேயே நன்கு ஆலோசனை செய்து பார்ப்பாய். விசாரக்கிரமத்தால் அமலமாய் உண்மையான திருஷ்டியினுனே பார்த்தால் வருத்தாநின்ற துன்பப்படும் நீயுமில்லை, உனக்கு இதம் உரைக்கும் நானுமில்லை. புண்ணிய பாவனர் என்று தோன்றுதல் மித்தியாஞானமே இவ்வாறு பிரதீதியாகின்றது. இங்ஙனம் பிதுராதி சரீரமும் ஆசையில் மயலேயாம் என்று அறிதி.

ஏகியதீ வுகடோறும் பிறந்தசென்ம மெண்ணவொண்ணு விந்நரவற்
பெருந்தீவத்திற்
கோகிலமாய் முன்பிறந்தாய் விலங்குமேகங் குன்றுமரம்மூர்வன புட்குலங்க
போகியசென் மத்தொகுதி புகலவொண்ணுப் பொருந்துமவற்றுன் [டம்மிற்
கிளையாய்ப்போனுர்க் கெல்லா
மாகுலமுற் றிலையென்னீ யவற்றின்மட்டோ வனந்ததேசப்பிறவி யறையக்
கேளாய். (46)

ஏகிய தீவுகள்தோறும் பிறந்த சென்மம் எண்ணவொண்ணு இந் நரவல் பெருந்தீவத்தில் கோகில மாய் முன்பிறந்தாய் விலங்கு மேகம் குன்று மரம் ஊர்வன புட் குலங்கள் தம்மில் போகிய சென் மத்தொகுதி புகலவொண்ணுப் பொருந்தும் அவற்றுள், உன்கிளை யாய்ப் போனுர்க்கெல்லாம் ஆகுல முற்றிலை என் நீ அவற்றின் மட்டோ அனந்த தேசப்பிறவி அறையக்கேளாய் =

நீ சென்று எடுத்த தீவுகள்தோறும் எடுத்த பிறப்பு அளவிடமுடியா, இப்பெரிய ஜம்புத்தீவில் குயி லாய் பூர்வஞ் ஜனித்தாய், பசு, கார், பர்வதம், விருட்சம், பாம்பு முதலிய ஊர்வன பட்சி இந்தக் குலங்களில் சென்ற பிறப்பின் கூட்டம் கூறமுடி யாது. அவ்வத்தேகத்தோடு சேர்ந்த அவற்றுள் உனது பந்துவாய்ச் சென்றவர்க்கெல்லாம் சோகித்தாயில்லை என்னே நீ அவ்வளவுதானே ஜன்மம் எடுத்தது? அளவிறந்த தேசங்களில் ஜனித்தவைகளைக் கூறக்கேட்பாய்!

கோசலத்துந் தெசார்ணவத்தும் பௌண்டரத்துங் குச்சரத்துந் துழாரத்துங்
கோகனத்தும்
போசலத்தும் மேகையத்துஞ் சாளுவத்தும் பூபதியாய் வானரமாய்ப்
புழுவாய்ப்புல்வாய்
மரசலத்திற் கரண்டமாய்ப் பதங்கமாகி மாசுணமாய்வே சரியாய்மட்டில்
சென்ம
நீசகல வாதனையாற் பிறந்தபோதி னின்கிளைஞர்க் கிரங்காத
நீதியென்னே. (47)

கோசலத்தும் தெசார்ணவத்தும் பௌண்டரத்தும் குச்சரத்தும் துழாரத்தும் கோகனத்தும் போசலத்தும் ஏகையத்துஞ் சாளு வத்தும் பூபதியாய் வானரமாய் புழுவாய் புல்வாய் மாசலத்தில் கரண்டமாய் பதங்கமாகி மாசுண மாய் வேசரியாய் மட்டில் சென்மம்

(புண்ணியன் தனது போதபலத்தானே கண்டன வாய சகோதரனது ஜன்மபேதங்களைச்சிறப்பித்து ஸ்மரித்து உரைத்தல்) கோசலத்தும், தெசார்ண வத்தும், பௌண்டரத்தும், குச்சரத்தும், துழா ரத்தும், கைகயத்தும், போசலத்தும், ஏகையத் தும், சாளுவத்தும், அரசனுய், குரங்காய், கீட மாய், மானுய், மாட்சிமைதங்கிய ஜலம் நிறைந்த தடாகத்தில் நீர்க்காக்கையாய், விட்டிலாய்,

நீசகல வாதனையால் பிறந்தபோதில் நின் இளைஞர்க்கு இரங்காத நீதி என்னே =

பாம்பாய், கழுதையாய், அளவற்ற பிறப்புகளில் நீசர் வாசனையினுலே ஜனித்தகாலத்தில் இருந்த உனது உறவினருக்கு சோகியாத நியாயம் யாது கொலோ.

**அறவிறந்த பிறவிதொறும் பிறந்தோர்க்கெல்லா மன்னைதாதை யெண்ணிலகன்ற கானில்**
**கிளர்மரங்க டருஞ்சருகை யெண்ணவற்றுங் கேதமுறக்கணக் கில்லைக்கேளாய் மைந்தா**
**தளர்வின்றிப் பாவாபாவனை களின்றிச்சார்மரண மற்றவுனைச் சங்கி யாதே**
**யுளமுறநோக் காய்துயர் விட்டஞ்ஞானத்தை யொழித்துணரி லுள்ளபடியுன்னைக் காண்டி. (48)**

அளவிறந்த பிறவிதொறும் பிறந்தோர்க்கெல்லாம் அன்னை தாதையை எண்ணில் அகன்ற கானில் கிளர்மரங்கள் தருசருகை எண்ணவற்றுங் கேதமுறக் கணக்கில்லை கேளாய் மைந்தா தளர்வின்றிப் பாவ அபாவனைகள் இன்றிச் சராமரணமற்ற உனை சங்கியாதே உளமுறநோக்காய் துயர்விட்டு அஞ்ஞானத்தை ஒழித்து உணரில் உள்ளபடி உன்னைக்காண்டி =

அளவில்லாத ஜன்மந்தோறும் ஜனித்தவர்க்கெல்லாம் மாதாபிதாக்களைக் கணக்கிடில் விஸ்தாரமாய கானகத்திலுள்ள நவநவமாய் விருத்தியாகும் விருட்சங்களினின்றும் உதிரும் சருகை எண்ணுவது போலவாம். ஆதலின் துன்பம் பொருந்த அளவுமில்லை, நியாயமுமில்லைமைந்தா சேட்பாய்! விசிராந்தி வடிவமாய்ப் பாவர் பாவ விநிர்முக்தமாய் ஜராமரணவர்ஜித ஆத்மசொரூபத்தை இருக்கின்றேனே, இல்லையா என்று சம்சயப்படாதே. சித்தத்தில் ஊன்றிப்பார்ப்பாய், விட்சேப, இரசாஸ்வாத, கஷாயமென்பனவாந் தடையின்றி அறியாமையை அகற்றிச் சாக்ஷாத்கரிக்கில் எதார்த்தமாக உனது சொரூபத்தைக் கண்டு மகிழ்வாய்.

**உன்னுருவை நீகாணு ஞானக்கண்ணி லொன்றலா வாசையெனுங் காசமூறு**
**மன்னதுதீர்த் துளக்கம லத்துள்ளே நொய்யவறிவுடைய வுன்மனத்தா லுன்னுலுன்னை**
**யின்னபடி யெனநோக்கி மயக்கமெல்லா மிறையுமற வொழித்தின்ப மெய்திநிற்பாய்**
**பின்னவனே யெனமுன்னே னுரைத்தா னென்றுபெருந் தகைக்குவசிட்டமுனி பேசினனே. (49)**

உன்னுருவை நீ காணு ஞானக் கண்ணில் ஒன்றலா ஆசையெனுங் காசம் ஊறும் அன்னது தீர்த்து

நினது சொரூபத்தை நீ தரிசிக்கும் ஞானதிருஷ்டியைப் புத்திர மித்திர களத்திராதிகளிடத்துண்டாம் அனேக ஆசைகளென்னும் காசபடலம்



உளக்கமலத்துள்ளே நொய்ய அறிவுடைய உன்மனத்தால் உன்னுல் உன்னே இன்னபடியென நோக்கி மயக்கமெல்லாம் இறையும் அற ஒழித்து இன்பமெய்தி நிற்பாய் பின்னவனேயென முன்னேன் உரைத்தான் என்று பெருந்தகைக்கு வசிட்டமுனி பேசினனே =

மறைக்கும். அத்தகைய இடையூறுகளை நீக்கி இருதய தாமரை மத்தியில் சூட்சும உணர்வுடைய உனது சத்துவ மனத்தால் பிரயத்தனமுடைய உன்னுல் உனது மெய்வடிவைச் சச்சிதானந்தமாக இருக்கின்றேனென்று சுவாநுபூதியால் கண்டு, சம்சாரப்பிராந்தியைச் சேடமின்றித் தொம்சம் செய்து பரமசந்தோஷ சித்தனய் வாழ்வாய் இளையோய் என்பதாகப் புண்ணியன் உபதேசித்தனன் என்று ஸ்ரீ இராகவருக்கு ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறியருளினர்.

5–2 புண்ணிய பாவனர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் — 851.



# 5-3 மாவலி கதை

## அவதாரிகை

புண்ணியனது இனிய உபதேசத்தால் பாவனனும் ஞானியானன் அன்று முன் கூறி இப்போது இதோபதேசஞ் செய்து மாவலி கதை கூறல்.

புண்ணிய னுரைத்த ஞானம் பொலிந்த பாவனன் றன்னுள்ள
நண்ணிய விடியற் கண்ட ஞாலம்போல் விளங்கித் தோன்றத்
திண்ணிய விருவர் தாமுஞ் சித்தராய் விவேக ஞானத்
தெண்ணிய கரையை யெய்தி யிம்பிய வனத்தி ருத்தார். (1)

புண்ணியன் உரைத்த ஞானம் பாவனன்றன் பொலிந்த உள்ளம் நண்ணிய விடியற்கண்ட ஞாலம் போல் விளங்கித் தோன்ற திண்ணிய இருவர் தாமுஞ் சித்தராய் விவேகஞானத்து எண்ணிய கரையை எய்தி இயம்பிய வனத்திருந்தார். =

தமையனை புண்ணியன் உபதேசித்த பிரஹ்ம வித்தை பாவனன்றன் பொலிந்த உள்ளம் பரிபக்குவ சித்தத்தில் உதயகிரியினின்றும் தோன்றிய சூரியனைக் கண்ட பஞ்சம் விளங்குவது போலச் சம்சயா (தத்துவ ஞானத்தை அடைந்தனன்) திடமுற்ற இரண்டுபேருமே தவசித்தியுடையவராய் ஆராய்ச்சியினுலான ஞானத்தால் கருதிய மோக்ஷமாகிய தீரத்தை அடைந்து கூறிய வனத்தில் வசித்திருந்தனர்.

வேண்டிய கால மெல்லாம் விநோதமாம் விளையாட் டெய்தி
யீண்டிய காலஞ் செல்ல யாக்கைதீர் வீட்டி லெய்தித்
தூண்டிடு திரிநெய் யில்லாச் சுடர்கள்போற் சாந்த முற்றார்
மாண்டிடு முயிர்கட் கெல்லா மரபிந்த மரபு போலாம். (2)

கால மெல்லாம் வேண்டிய விநோதமாய் விளையாட்டெய்தி ஈண்டிய காலம்செய்ய ஆக்கை தீர் வீட்டில் எய்தி தூண்டிடு திரி நெய்யில்லாச் சுடர்கள் போல் சாந்தமுற்றார், மாண்டிடும் உயிர்கட்கெல்லாம் மரபுயிந்த மரபு போலாம் = தேகபதனம்வரை விரும்பிய உபதேசாதிகள் முதவிய விசித்திர கிரீடையுடையவராயிருந்து அனேககாலஞ் செல்ல (பிராரப்தக்ஷயமாக) விதேக கைவல்யம் அடைந்து யாவற்றையும் விளக்குவிக்கும் திரியும் எண்ணெய்யும் இல்லா தனவாய தீபங்கள் சாந்தமாவது போலப் பரம உபசாந்தியை அடைந்தார்கள், சென்ற சுகர் வாமதேவாதி ஜீவன்முத்தர்கட்கெல்லாம் வம்சமும் இந்த முறைமைபோலாம்.

அனந்தமாம் பிறப்புற் றோருக் ககிலமு மயலன் றாகிற்
சினந்திட னயத்தல் வேண்டா வாதலாற் செறிந்த வாசைக்
கனந்தனை விடுவ தல்லாற் கதித்துற வளர்க்க லாகா
மனந்தனில் வளர்க்கிற் சிந்தை வன்னிக்கு விறகா மன்றே. (3)

அனந்தமாம் பிறப்புற்றோருக்கு அகிலமும் அயல் அன்று ஆகில் சினந்திடல் நயத்தல் வேண்டா ஆதலால் செறிந்த ஆசைக் கனந்தனை விடுவதல்லாற் கதித்துற வளர்க்கலாகா மனந்தனில் வளர்க்கில் சிந்தை வன்னிக்கு விறகாமன்றே = அளவில்லாத பிறப்பை அடைந்தவருக்குச் சகலமும் அன்னியம் இல்லையாயின் ஜனசமுதாயமே பந்துவானால் யாதுதான் வெறுத்துத் தள்ளத் தக்கது யாதுதான் விரும்பிக்கொள்ளத்தக்கது ஆதலால் விடயங்கள்தோறும் வெகுவாகச் சேர்ந்துள்ள ஆசைக் கூட்டத்தை விட்டுத் தொலைக்க வேண்டுவதேயல்லாமல் விருத்தியாகும்படி போற்றிக்கொண்டேயிருத்தல் கூடாது உள்ளத்தில் ஆசையை விருத்திசெய்யில் மன அக்கினிக்கு இந்தனமாம், கட்டையாம்,

இச்சையாம் விறகு மாண்டா லெண்ணமாம் வன்னி மாளு
நிச்சய மாகுந் தேயத் தியாகமா நெடுந்தே ரேறி
மெச்சிய வுதாரக் கண்ணால் வேட்கையான் மிகவும் வாடுங்
கொச்சைஞா லத்தை நோக்கிக் குறைவற விருப்பாய் தீரா. (4)

இச்சையாம் விறகு மாண்டால் எண்ணமாம் வன்னிமாளும் நிச்சயமாகுந் தேயத்தியாகமாம் = ஆசையாம் இந்தனம் தீர்ந்துபோனால் (இல்லையாயின்) சிந்தையாகிய அக்கினி அவிந்துபோம் முன்னர் வர்ணித்த துணிபாகும் தேயத்தியாக

நெடுந்தேரேறி மெச்சிய உதாரக் கண்ணால் வேட்கையால் மிகவும் வாடுங்கொச்சை ஞாலத்தை நோக்கிக் குறைவற தீரா இருப்பாய் = மாகிய மகாரத ஆரூடனாகி யாவரும் புகழுங் கருணை உதார முதலிய திருஷ்டியால், ஆசையால் மிகமிக வாட்டத்தையடையும் தீனத் தன்மை வாய்ந்த பிரபஞ்சத்தை நோக்கிப் பரிபூரண அனந்தானந்தபரிதனாகித் தைரியமுடைய ஹே இராகவ! பிரகிருத விவகாரத்தை அநுஷ்டித்துச் சுகிக்க எழுந்திருத்தி.

நொய்ய தாயொரு மயலின்றி நோயெலாம் நீங்கி
மெய்ய தாகிய பிரமமா நிலையிது வீரா
வைய மின்றி யிந்நிலை யுறிலறி விலரேனு
மையன் மேவல இராம நீயிவ்வகை வாழ்வாய் (5)

நொய்யதாய் ஒரு மயல் இன்றி நோயெலாம் நீங்கி மெய்யதாகிய பிரமமாம்நிலையிதுவீராஐயமின்றி இந்நிலையுறில் அறிவிலரேனும் மையல் மேவலர் இராம நீ இவ் வகை வாழ்வாய் = அதிசூக்குமமாய், சொச்சமாய், நிஷ்காம்யமாய், நிராமயமாய் சத்தியமாகிய பிரஹ்மஸ்திதி இதுவாம். ஹே மகாபாகுவே! சம்சயம் விபரீதமில்லாமல் இந்த ஸ்திதியை அடையில் முன் அறியாமையோடிருந்தாராயினும் மோகத்தை அடையார். ஹே இராகவ! நீ இந்தப்பிரகாரம் சுகிப்பாய்.

நல்ல புந்தியும் விவேகமு மெனவிரு நண்பா
லல்ல றீர்ந்திடு மொருவரை யென்னினு மணுகிற்
சொல்லு பல்பொருட் சுற்றங்க டெக்கறத் தீர்ந்து
புல்லு திண்மையி னுலன்றித் துயரெலாம் போகா. (6)

நல்லபுந்தியும் விகேமும் என இரு நண்பால் அல்லல் தீர்ந்திடும் ஒருவரை யென்னினும் அணுகில் சொல்லு பல்பொருள் சுற்றங்கள் துடக்கறத் தீர்ந்து புல்லுதிண்மையினுலன்றித் துயரெலாம் போகா = (தன்மையை அடைந்திட இரு நண்பைத் தெரிவித்தல்) சிறந்த வைராக்கியமும், விவேகமும் என்ற இருவித நேயரால் துக்கம் யாவும் தொலைந்திடும் ஒருவரையேனும் அடையில் ஆசா விஷயங்களென்று சொல்லப்பட்ட சகல வஸ்துக்களையும் பந்துக்களையும் சம்பந்தமில்லாமல் விடுத்துப் பொருந்தாநின்ற தனது தைரியத்நாலன்றிச் சம்சார துன்பம் நீங்கா, ஆதலின் தனது தைரியமே சம்சார கரை ஏற்றும் எனப்பட்டது.

மயலி லாமையா னுள்களான் மகத்துவ முதலா
முயர்கு ணங்களால் வருந்தியு மனத்தினை யுய்க்கிற்
றுயர்க ணீங்குமு வுலகுறு செல்வமுந் தொக்குப்
பயன ளிக்கினு முயர்வுறு மனமெனப் பயிலா. (7)

நூல்களால் மயலிலாமையால் மகத்துவமுதலாம் உயர்குணங் களால் வருந்தியும் மனத்தினை உய்க்கில் துயர்கள் நீங்கும் மூவுலகுறு செல்வமும் தொக்குப் பயனளிக்கினும் உயர்வுறு மனமெனப் பயிலா = சாஸ்திரத்தினாலும் வைராக்கியத்தினாலும் அமானித்வாதி சிரேஷ்டமிக்க கல்யாணகுணங்களினாலும் எவ்வறுத்தமுற்றேனும் சித்தத்தை பிரஹ்மாபின்ன ஆன்மாவின்கண்ணே ஸ்திதிபெறச் செய்யில் துக்கங்கள் தொலையும். திரிபுவன ஐஸ்வரியமும் இரத்தினங்கள்நிறைந்த கோசமும் உயர்ந்த தனது சொரூபத்தை அடைந்த மனதுக்கு சமானமாகா.

மனநி றைந்திடி லமுதமாய் நிறைந்திடும் வையந்
தனது தாட்செருப் புலகெலாந் தோன்முச்சுந் தரம்போற்
கனநி ராசையா னிறையுநெஞ் சாசையிற் கவிழா
தினமுமா சையா னிறைமனங் குறைவென்றுந் தீரா. (8)

மனம் நிறைந்திடில் வையம் அமுதமாய் நிறைந்திடும் தனது தாள்செருப்பு உலகெலாந்தோல் முச்சுந்தரம்போல் கனநிராசை யால் நிறையும் நெஞ்சு ஆசையிற் கவிழா தினமும் ஆசையால் நிறை மனம் என்றும் குறை தீரா = மனம் பூரணமாயின் சர்வப்பிரபஞ்சமும் அமிர்தவாரியால் பூரிக்கப்பட்டுப் பூரணமாகவே விளங்கும். தன்னுடைய காலில் பூண்ட மிதியடி முழுதுமே தோல்பரப்புதல் போலவாம் திடவைராக்கியத்தினாலே பூரணமான மனது இச்சையை அடையமாட்டாவாம். எந்நாளும் ஆசையோடு கூடிய மனம் ஒருபோதும் குறைவு தீரா = பராசரர் வாக்கியம் காமிகளுடைய காமமானது மிகு போகங்களால் ஒருபோதுந் தணியாது. அவிசினால் அக்கினிபோல மீண்டும் விருத்தியேயாம்.

அகத்தி யன்கவர் கடலென நன்னெஞ்சை யழிக்கு
மிகுத்த மாலிலா மனமென நிறைமதி விளங்காப்
பகுத்த பாற்கட னிறைவுருப் பரிமளக் கோக
னகத்தி னுயகி திருமுக நலம்பெறத் தோன்ரு. (9)

மிகுத்தமால் அகத்தியன் கவர் கடலென நல்நெஞ்சை அழிக்கும் இலாமனம் என நிறைமதி விளங் காப் பகுத்தபாற்கடல்நிறைவுருப் பரிமள கோகனத்தினுயகி திருமுகம் நலம்பெறத் தோன்ரு = பேராசை, விருத்திராசுரனைக் கொல்லும்பொருட்டுப் பருகிய சமுத்திரம் வறண்டுபோனதுபோல நல்லமனத்தையும் நாசஞ் செய்யும் அப்பேராசையில்லாத மனம்போலப் பூரணச் சந்திரனும் சோபிதமாய்ப் பிரகாசியா, சப்தசாகரங்களில் ஒன்ருகப்பிரித்த க்ஷீரசாகரமும் பூரணத்தையடைந்திருக்கமாட்டாது. வாசனையுடைய செந்தாமரையில் வீற்றிருக்கும் இலக்ஷுமியின் திருவதனமும் கவின்வாய்ந்து இலங்காது.

மதியை மேகம்போல் வெண்டலச் சுதையினை மைபோ
லதிக நன்னெஞ்சை யாசையாம் பேயழ கழிக்கும்
பொதியு மாலெலா நீக்கிவன் பவப்பயம் போக்கி
முதிர்ம னத்தின்மால் பிணிப்பறின் முத்திவே றுளதோ. (10)

மதியை மேகம்போல் வெண்சுதை தலத்தினைமைபோல் அதிக நல் நெஞ்சை ஆசையாம் பேய் அழகு வழிக்கும் பொதியும்மால் எலாம் நீக்கி வன்பவப் பயம்போக்கி முதிர்மனத்தின்மால் பிணிப்பு அறில் முத்தி வேறுளதோ = சந்திரனை மேகம்போலவும், வெள்ளிய முத்துச் சுண்ணம் தீட்டப்பெற்ற பித்திகையில் கஜ்ஜலம் போலவும், உத்தமமான மனத்தை ஆசையாம் பிசாசு கவின்பெறாமல் கெடுக்கும் களத்திரபுத்திராதிகளிடத்து ஆசைகள் நிரம்பியுள்ள சித்தவிப்பிரமங்களெல்லாம் போக்கிச் சம்சாரபந்தத்தை விட்டுப் பக்குவமான மனத்தின்கண் ஆசைக்கட்டு அற்றுப்போனால் வீடு வேறு ஒன்றுண்டோ?

இன்ன தன்றெனி லிராகவ மாபலி யென்ன
நன்ன தாகிய புந்தியான் ஞானமே நேர்வா
யன்ன தேநல னென்றலும் மனையதே தென்று
சொன்ன மாமுனி தன்னையே யிராமனுஞ் சொன்னான் (11)

இன்னது அன்றெனில் இராகவ மாபலியென்ன நன்னதாகிய புந்தியான் ஞானமே நேர்வாய் அன்னதே நலன் என்றலும் சொன்னமாமுனி தன்னையே அன்னது ஏது என்று இராமனுஞ் சொன்னான் = ஆசை நிவர்த்தி=வைராக்கியம் இல்லையாயின், மகாபலிச்சக்கிரவர்த்தியைப்போல நன்மையைப் பயப்பதாகிய விவேகத்தால் ஞானத்தையே அடைவாயாகவென்று ஸ்ரீவசிஷ்டபகவான் கூறுதலும் அத்தகையது யாது என்று ஸ்ரீ இராமபிரான் வினவினர்.

வினைய வள்ளலுக் கருந்தவ னுத்தரம் விளம்புந்
தனது தோள்களா லுலகெலா மஞ்சுறச் சயித்தோன்
பினாகி சார்ங்கியை முதலினர் தாழ்வுறப் பெரியோ
னநாதி யாமெனப் பாதலத் தரசுசெய் யதுலன். (12)

வினையவள்ளலுக்கு அருந்தவன் உத்தரம் விளம்புந்தனது தோள்களாலுலகெலாம் அஞ்சுறச் சயித்தோன் தாழ்வுற பினாகி சராங்கியைமுதலினர்பெரியோன் அநாதியாமெனப் பாதலத்து பிரசினஞ்செய்த தாதாவான இராகவர்க்கு அரிய தவவடிமான ஸ்ரீவசிஷ்டபகவான் விடைஅருளிச் செய்வதாவது, தனது புயபலத்தால் சகல புவனங்களிலுள்ளார் யாவரும் அஞ்சுற (பயப்படும் படியாக வெற்றிகொண்டவன் பினாகமென்னும் வில்லைக் கையில் தரித்த பாமசிவனும், சாரங்க

அரசு செய் அதுலன் = மென்னும் வில்லைத்தரித்த விஷ்ணுவும், பிரமாவும் ஆகிய மும்மூர்த்திகளையும்தான் செய்யப்பட்ட நமஸ்காராதி வழிபாட்டினுல் வசஞ் செய்திருக்கும் பெரியோன் வெகுகாலமாகப் பாதாள லோகத்தில் அசுர மங்கையரானும் அவர்தஞ் சேனைகளாலும் உத்கிருஷ்ட போகங்களை அனுபவித்து ஆட்சி செய்யும் ஒப்பற்றவன்.

மாவ லிப்பெய ரானுயர் விரோசனன் மைந்த
னுவ லிப்புறு கோடிபத் தாண்டர சானேன்
காவ லிற்றிகழ் மேருவின் சிரமணி கதுவு
மேவ லிற்பொலி சாளர மேனில மேவி. (13)

மாவலிப் பெயரான் உயர் விரோசனன் மைந்தன் ஆ வலிப்புறு கோடிபத்தாண்டு அரசானேன் மேவல் இல் காவலிற்றிகழ் மேரு சிரமணி கதுவுசாளரம்பொலி மேல்நிலம் மேவி = மகாபலியென்னும் பெரும்பெயர் வாய்ந்தவன் சிரேஷ்டமுடைய விரோசனனுடைய குமாரன் ஆச்சரியப்படும்படி சாமர்த்தியம் மிகுந்து பத்துக் கோடி வருடங்களாக அரசாண்டுகொண்டு வரம் பெற்றவன். கிட்டுதற்கரிய காவலோடும் விளங்கும் மேருகிரியின் சிகரத்தின்கண்ணே இரத்தினங்கள் பதித்த வாதாயனம் ஜன்னல்களால் சோபிக்கப்பட்ட உன்னத ஸ்தானத்திலிருந்து.

ஒருப கற்றனி யிருந்தன னிவையிவை யுணர்ந்தான்
பெருகு போகங்கண் முனிந்தனன் பிறவியை நினைந்தான்
பொருவின் மூவுல கங்களிற் போகங்க ணெடுநாட்
பருக நல்கு நம்பேரரசா லென்கொல் பயன். (14)

ஒருபகல் தனியிருந்தனன் இவை இவை உணர்ந்தான் பெருகு போகங்கள் முனிந்தனன் பிறவியை நினைந்தான் மூவுலகங்களில் பொருவு இல் போகங்கள் நெடுநாள் பருக நல்கும் நம் பேரரசால் என்கொல் பயன் = ஒருநாள் ஏகாந்தமாகயிருந்து இனிவருமாறு சிந்திக்கத்தொடங்கினுன், வெகுவகை மிகுத்து வரும் போகங்களை வெறுத்தனன். ஜனனுதி ஐம்பெரும் துக்கத்தை சிந்தித்தனன். மூவுலகங்களிலுள்ள ஒப்பற்ற திவ்ய சப்தாதி விடயங்கள் நீள் நாளாக அனுபவிக்கத்தரும் நமது பெரிய இராஜ்ய சம்பத்தால் என்னே பிரயோஜனம் அந்தோ ஒன்றுமே இல்லை.

எய்து போதினி லினியவா யெங்ஙனே யெனினு
நொய்தி னீங்குமிப் போகத்தி னின்பமே நுவலி
னெய்த ஞேக்கிய ரின்பமு நெருநல் போலின்றுஞ்
செய்த செய்வதே யல்லது கண்டிலஞ் செயல்கள். (15)

நுவலில் இப்போகத்தின் இன்பமே எய்து போதினில் இனியவாய் எங்ஙனே எனினும் நொய்தில் நீங்கும் நெய்தல் நோக்கியர் இன்பமும் நெருநல் போல் இன்றும் செய்த செய்வதே யல்லது செயல்கள் கண்டிலம் = சொல்லுங்கால் இந்தப் போகங்களின் சுகம் அனுபவிக்குங்காலத்தில் இரமணீயமாய் எவ்வாற்றாயினும் கணநேரத்தில் நாசமாகும் கருங்குவளை போல நேத்திரமுடைய மடவாரின் இன்பமும் ஆலிங்கன சுகமும், நேற்றுப்போல் இன்றைக்கும் ஆம் நேற்றுச்செய்த செயல்களையே இன்றைக்கும் செய்வதேயல்லாமல் புதிதான செயல் ஒன்றையுங் காணேம்.

உண்ட வின்பமே மீளவு முண்கின்ற தொருநாட்
கண்ட காட்சியே மீளவுங் காண்கின்ற துவந்து
கொண்ட கோலமே மீளவுங் கொள்கின்ற தென்றால்
விண்ட மேலவர் நாணுறு தொழிவரோ வெறுத்து. (16)

உண்ட இன்பமே மீளவும் உண்கின்றது ஒருநாள் கண்ட காட்சியே மீளவுங் காண்கின்றது உவந்து கொண்டகோளமே மீளவுங் கொள்கின்றது என்றால் விண்டமேலவர் நாணுறுது வெறுத்து ஒழிவரோ = நேற்று அனுபவித்த சுகபோகமே மீண்டும் அனுபவிப்பது ஓர்தினம் பார்த்த விநோதமே மறுபடியும் பார்ப்பது, மகிழ்வுடன் தரித்துக்கொண்ட ஆடை ஆபரணாதிகள் அலங்காரமே மறுபடியும் தரித்துக்கொள்வது என்றால், ஆசையைத் தியாகஞ் செய்த சர்வசங்கப்பரித்தியாகமுடைய பெரியோர் வெட்கமடையாது விஷயத்தில் மூழ்கியிருக்கும் என்னை நீக்குவரோ நாணுறுது, பெரியோர் சந்நிதியில் போகலம்படத்தன்மை இலஜ்ஜையின் பொருட்டேயாமன்றிச் சந்துஷ்டியின் பொருட்டாகாதாம்.

அருந்து மட்டினி தென்றதே மீண்டுமீண் டருந்தி
திருந்தி டாதபுன் சிறுவர்போற் செயல றியாது
வருந்து கின்றன நாள்பக்க மாதபாண டுகங்கள்
பொருந்தி வந்தலே யல்லது புதிதொன்றும் வாரா. (17)

அருந்தும் மட்டு இனிதென்று அதே மீண்டும் மீண்டுமருந்தி திருந்திடாத புன்சிறுவர் போல் செயல் அறியாது வருந்துகின்றனம் நாள் பக்கம் மாதம் ஆண்டு உகங்கள் பொருந்தி வந்ததே யல்லது புதிது ஒன்றும் வாரா = புஜிக்கும் வரை இரமணீயம் இரமணீயம் என்று அதனையே புஜித்து, பதார்த்த இயற்கை அறிந்து தெளிந்திடாத அற்ப பாலகன் போல காரியாகாரியங்களைப் பகுத்தறியாது வருத்தத்தையே அடையா நிற்கின்றேன். தினம், பட்சம், திங்கள், வருடம், யுகம் என்பன வந்ததே அடுத்து வருவதல்லாமல் புதிதாக நாளோ, மாதமோ யாதொன்றும் வரவில்லை.

செய்யத் தக்கன யாவையுஞ் செய்துமிச் செயலா
லுய்யப் பெற்றதென் செயன்மறித் திலாததொன் றுலகி
லையப் பாடற யாதினு லெய்துமப் பொருட்டான்
மையப் போகத்தா லொழிந்து மேல்வருநெறி யாதே. (18)

செய்யத்தக்கன யாவையுஞ் செய்து இச் செயலால் உய்யப் பெற்றது என் மறித்து செயல் இலாதது ஒன்று உலகில் ஐயப் பாடற யாதினுலெய்தும் அப் பொருள்தான் மையப் போகத் தால் ஒழிந்து மேல்வரும் நெறியாதே = இயற்றவேண்டுவனவாக இராஜ்ய விவகாரங்களனைத்தையுஞ் செய்துகொண்டேயிருந்தபோதினும், இக்கிருத்தியத்தால் இவ் விவகாரத்தால் அடையப்பெற்றது என்னே, எப்பதத்தினை அடைந்தால் மீண்டும்செய்யவேண்டுவதொன்றுமில்லாததான அந்த ஒப்பற்ற பதத்தை இவ்வுலகில் சந்தேக விபரீதமில்லாமல் எந்த எத்தன விசேடத்தால் அடையலாமோ? அந்த வஸ்துவானது பிரவிருத்தியோடு கூடிய = மயக்கத்தைத் தரத்தக்க மறைந்த போகத்தாலன்றி அனந்தரம் அடையும் முயற்சி யாது.

அழிவி லாததா யன்னிய மாகிய வதுசேர்
வழிய தேதென்ச் சிந்திப்பான் மனத்தொன்றை நினைந்து
மொழிய லுற்றன னறிந்தன மென்றொரு நொடியில்
விழிபெ ருத்திடப் புருவமே லேற்றினன் வியந்தான். (19)

அழிவிலாததாய் அன்னியமாகிய அது சேர வழியது ஏது எனச் சிந்திப்பான் மனத்து ஒன்றை நினைந்து ஒருநொடியில் அறிந்தனமென்று மொழியலுற்றனன் விழிபெருத்திடப் புருவமேலேற்றினன் வியந்தான் = நாசரகிதமாய் விஷயாதீத வஸ்துவை அடையும் மார்க்கம் யாதாம் என்று ஆராய்ந்துகொண்டிருந்தவன் சித்தத்தில் முன் தன்னால் வினவப்பெற்றுப் பிதாவால் உபதேசித்தவற்றைச் சிந்தித்து ஒரு கணத்தில் ஹா ! தெரிந்துகொண்டேன் என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொள்வானாயினன். நேத்திரத்தை உருட்டிப் புருவமேல் சொருகியவனாய் ஆச்சரியத்தையடைந்தான்.

தன்ன லுள்ளுற நினைத்தது விளம்பினன் றானே
முன்ன மிங்கியான் கேட்டனன் முழுதுணர் முதன்மை
யென்ன னும்பிதா விரோசனன் றன்னை யிப்படியே
யன்ன வன்புகன் றனனென விவையெலா மறைவான். (20)

தன்னது உள்ளுற நினைத்து அது தானே விளம்பினன் முழுதுணர் = தனது இதயத்தில் ஆழ்ந்த கருத்தினனாய் அவ் விஷயத்தைச் சுயமே சொல்லிக்கொண்டான்.

முதன்மை என் அரும்பிதா விரோசனன்றன்னை முன்னம் இங்கு யான் கேட்டனன் அன்னவன் இப்படியே புகன்றனன் என இவையெலாம் அறைவான் =

சர்வஞ்ஞனும் அசுரகுல அக்கிரகன்னியனென்னும் எனது அரிய தந்தையாகிய பகவான் விரோசனன்றனை பூர்வம் யான் வினவினேன். அவ்வரிய பிதா இவ்வாறே உபதேசித்தனன் என்று பின்வருமாறு உள்ளவற்றையெல்லாம் கூறத் தொடங்கினன்.

ஐய துன்பமு மின்பமு மென்பன வனைத்தின்
மைய லியாவையு மடிந்ததோ ரிடமெது மனத்தின்
வெய்ய மோகந்தீ ரிடமெது வேட்கைக ளெல்லாங்
கைய றப்பட்ட விடமெது கருணையா லுரையாய். (21)

ஐய துன்பமும் இன்பமும் என்பன அனைத்தின் மையல் யாவையும் மடிந்ததோரிடம் எது மனத்தின் வெய்ய மோகந்தீர் இடம் எது வேட்கைகளெல்லாங் கையறப் பட்ட இடம் எது கருணையால் உரையாய் =

ஹே பிதாவே! விஷய ஜன்னியமான இன்ப துன்பங்களனைத்தினதும் சர்வ விவகாரப் பிராந்தியும் சாந்தமாகிய பரம அவதி யாது மனத்தின் கொடிய மனோ மோகங்கள் ஒழிந்த இடம் யாது சம்சாரத்தின்கண்ணுள்ள சகல ஆசைகளும் அடியோடு தீர்ந்தவிடம் யாது என் பேரில் வைத்த தயையினால் கூறியருள்வீராக.

நிராசை யாகியே யிளைப்பெலா நீங்கிட மேது
விராவு பேரின்பத் தழகிதாய் விரிவிட மேது
பராப ரந்தெளிந் துணர்ந்தநீ பகர்தியென் நெஞ்சை
யராவு துன்பம்விட் டிளைப்பெலா மாறுதற் கென்றேன். (22)

நிராசையாகியே இளைப்பெலாம் நீங்கிடம் ஏது பேரின்பத்து விராவு அழகியதாய் விரிவிடம் ஏது பராபரந் தெளிந்துணர்ந்த நீ பகர்தியென துன்பம் அராவு விட்டு இளைப்பெலாம்ஆறுதற்கென்றே=

இகபர சகல ஆசைகளுந் தீர்ந்து புனராவிருத்தி ரகிதமாய விசிராந்தியடையும் இடம் யாதாம், பேரின்பமானது நிறைந்து சுந்தரமாயிலங்கும் பதம் யாதாம். பராபர வஸ்துவை ஐயந்திரிபு அற ஆய்ந்து உணர்ந்த தாங்களே எனக்கு உபதேசித்தருளல் வேண்டும். எனது மனத்தை அரத்தைப்போன்று நையச்செய்யுந் துயரமெல்லாம் விடுத்து விசிராந்தி அடைதற்கு என்று எனது பிதாவாகிய விரோசனனை = சுவர்க்கத்திலிருந்து வலிதிற்கொணர்ந்து முற்றத்தில் ஸ்தாபித்திருக்கும் கற்பக விருட்சத்தின் தலத்தில் வீற்றிருந்த என் பிதாவாகிய விரோசனனை வினவினேன்.

எந்தை யப்பொழு துரைசெய்வான் மைந்த கேளியம்ப
வந்த மற்றற விசாலமா யளவற வகன்று
சுந்த ரத்ததாந் தேசமுண் டண்டத்தின் ஞெருகுதி
வந்து தித்திருந் திறப்பதற் கிடமதாய் வயங்கும். (23)

எந்தை அப்பொழுது உரைசெய்வான் மைந்த இயம்பக்கேள் அந்தமற்று அற விசாலமாய் அள வற அகன்று சுந்தரத்ததாந் தேசம் உண்டு அண்டத்தின் தொகுதி வந்துதித்து இருந்து இறப்பதற்கிடமதாய் வயங்கும் = எனது பிதாவிடம் அக்கேள்விகள் கேட்டபோது உத்தரங்கூறத்தொடங்கினர். நாசமில்லாததாய் பரிபூரணமாய், பிரமாண அதீதமாகி அழகு பொருந்தியதாய் பரிச்சின்னமின்றிய தேசம் ஒன்று உளது, அத் தேசமானது அண்டக்கூட்டம் ஆயிரம் வந்து தோன்றி நிலைபெற்று சங்காரமாகி விவகரித்தற்கு இடமாக விள்ங்கும்.

ஆய தேயத்தி லைம்பெரும் பூதமு மில்லைச்
சேய குன்றில்லை வனமில்லைத் தீர்த்தங்க ளில்லைத்
தூய தேவரே முதலிய தொல் லுயிரில்லை
நாய கன்பெருஞ் சுடரெனு மொருவனே நண்ணும். (24)

ஆய தேயத்தில் ஐம்பெரும் பூதமும் இல்லை சேயகுன்றில்லை வனமில்லைத் தீர்த்தங்கள் இல்லைத் தேவரே முதலிய தொல்லுயிர் இல்லை பெருஞ் சுடரெனும் நாயகன் ஒருவனே நண்ணும் = (தேசம்=மோக்ஷம்) (இராஜா=ஆன்மா) (மந்திரி=மனம்) என்று மாபலியின் வினுவின் பின் விரோசனரே சொல்லுவர் முற்கூறிய இலக்கணமுடைத்தாய் தேசத்தில் பரமார்த்தத் தன்மையால் ஆகாசாதி பஞ்ச பூதமும் இலவாம், உன்னதமான பர்வதமுமில்லை, ஆரண்யமும் இல்லை, நதிகளுமில்லையாம் பரிசுத்தமாகிய தேவர்களே முதலிய பிராசீன ஜீவஜெந்துக்களுமில்லை, ஒளிப் பிழம்பு வடிவமான இறைவன் ஏகனே இருப்பன்.

முழுதுங் காண்பவன் முழுதினுஞ் செறிபவன் முதல்வன்
பழுதில் சாந்தனுய் நிறைந்துவா ளாவுறை பண்போன்
வழுவி லாவிவ ணுக்கிய மந்திரி வசத்தாற்
றழுவு செய்கைக ளியாவையு நடத்திடுந் தானே. (25)

முழுதுங் காண்பவன், முழுதினுஞ் செறிபவன், முதல்வன் பழுதில் சாந்தனுய் நிறைந்து வாளா உறைபண்போன் வழுவிலா இவன் ஆக்கிய சர்வஞ்ஞன், சர்வகதன், சர்வான்மகன், நிர்த்தோஷமான சாந்தமூர்த்தியாய் பூரணித்து, யாதொரு செயலுமின்றி யிருக்குந் தன்மையுடையவன், நித்தியனுன இவ்விறைவன் கற்பித்த மந்திரி பிராரத்துவசத்தால் பொருந்திய

மந்திரி வசத்தால் தழுவு செய்கைகளியாவையும் நடத்திருந்தானே = காரியங்கள் எல்லாவற்றையும் மந்திரி சுயம் செய்வித்திடும்.

இல்ல துள்ளதா முள்ளது மில்லதா மிமைப்பிற்
புல்லு மந்திரி நினைத்திடி லிவனென்றும் புசிக்க
வல்ல தில்லையொன் றறிகிலன் மன்னனை விடாது
செல்லுந் தன்மையாற் கேவல மனைத்தையுஞ் செய்யும். (26)

புல்லு மந்திரி நினைத்திடில் இமைப்பில் இல்லது உள்ளதாம் உள்ளதும் இல்லதாம் இவன் ஒன்றுங் புசிக்கவல்லதில்லை என்றறிகிலன் மன்னனை விடாது செல்லுந் தன்மையால் கேவலம் அனைத்தையுஞ் செய்யும் = இராஜனது சந்நிதியில் பொருந்தியிராநின்ற மந்திரி எண்ணிடில், கணத்தில் (விரைவில்) ஆத்மாவினிடத்தில் சம்சாரம் அசம்பவமாயினும் இருப்பதாம், பூரண ஏகரசத்தன்மை ஆத்மாவினிடத்திருந்தும் இலங்கவில்லை இம்மந்திரி சிறிதும் புஜிக்க ஆற்றலற்றவன் ஜடமானதால் யாதொன்றையும் அறிந்திலன் அரசனை ஆயிரத்துப் பிரவிருத்திக்குந் தன்மையால் தனிமையாகவே அரசன்பொருட்டுச் சர்வமுஞ் செய்வன்.

இந்த மந்திரி தன்னெதி ரியாவையு மியற்ற
வந்த மன்னவ னென்றுமே காந்தத்த னுகு
மைந்த வென்றுரைத் தருளிய பிதாவைநான் மகிழ்ந்து
புந்தி யாலந்த வகையெலாம் வினவினேன் புகழ்ந்து. (27)

இந்த மந்திரி தன்னெதிர் யாவையும் இயற்ற அந்த மன்னவன் என்றும் ஏகாந்தத் தன் ஆகும் மைந்த என்று உரைத்தருளிய பிதாவை நான் மகிழ்ந்து புந்தியால் அந்த வகையெலாம் வினவினேன் = கூறிய இம்மந்திரி இராஜனது சந்நிதியில் சர்வ காரியங்களையுஞ் செய்ய அவ்வான்ம இராஜன் எப்போதும் ஏகாந்தமாய் அத்விதீய சுபாவத்தில் சுவஸ்தனுயிருப்பவன் குழந்தாய் என இந்தப் பிரகாரம் உபதேசித்தருளிய பிதாவை நான் சந்தோஷித்து ஸ்தோத்திரஞ் செய்து புத்தியிற் படும்படி அவ்வகையையெல்லாம் விபரமாகக் கேட்டனன்.

அறவி லாசமா யாதியும் வியாதியு மின்றி
நிறைவி தானவத் தேசமே ததுதனை நேருந்
திறவி யாதது யாதினு லெய்துமத் தேசத்
திறவி லாதவம் மன்னனுர் மந்திரி யாவான். (28)

அறவிலாசமாய் ஆதியும் வியாதியும் இன்றி நிறைவிதான = (மகாபலி வாக்கியம்) பரிபூரணமாய்ச் சூக்கும சரீர இராகாதியும் தூல சரீர ரோகாதியுமின்றி

அத்தேசம் ஏது அதுதனை நேருந் திறவு யாது அது யாதினு லெய்தும் அத்தேசத்து இறைவிலாத அம் மன்னன் ஆர் மந்திரி யாவன் = நிறைந்திருப்பதான அத்தோம் யாதாம் அது தனை எங்ஙனம் அடையலாம் விளையாட்டுமாத் திரத்தானே ஜகத்ஜாலங்களையெல்லாம் வெற்றி கொண்டு எம் வசப்படுத்திய எம்மனோராலும் இருவரும் வெற்றிகொள்ளப்பெருமல் இருக்கின் றனரோ எம்முயற்சியால் அடையலாம் அத் தேசத்து நாசரகிதனுன அவ்வரசன் யாவன் மந்திரி யார்?

புவன மியாவையும் விஞேதத்தா லடர்த்த வென்புயத்தா
லவனம் மந்திரி யுடனடர்ப் புருவலி யமர்ந்த
தென்ன றைந்தருள் கென்றலு மென்பிதா விசைப்பான்
கவன நீள்வலி மந்திரி வேகமார் கடப்பார். (29)

புவன மியாவையும் விஞேதத் தால் அடர்ப்ப என்புயத்தால் அவன் அம்மந்திரியுடன் அடர்ப் புருவலியமர்ந்தது எவன் அறைந்தருள்க என்றலும் என்பிதா கடப்பான் நீள் கவனம் வேகம் வலியமர் மந்திரி கடப்பார் = சகல புவனங்களையும் விளையாட்டாக வெற்றி கொண்ட என் புஜபல பராக்கிரமத்தால் அந்த இராஜா அவ்வமைச்சனுடன் யான் வெற்றி கொள்ளப்படாத பலத்தோடு கூடி இருத்தல் யாதுகாரணம் கூறி அருளுதியென்று வணங்கிக் கேட்டலும் அப்போது என் தந்தை கூறியதாவது தீர்க்காலோசனையும் இராஜ காரியங்களைத் துரி தமாக நடத்திச் சாமர்த்தியத்தை அடைந்திருக் கும் மந்திரியை வெற்றிகொள்பவர் யாவர் இருக் கின்றனர் ஒருவருமில்லை.

தேவர் தானவ ரெண்ணறு கோடிக டிரண்டு
மேவ வென்றிலர் சூலநே மிகண்முத லென்ற
மேவ ரும்படைக் கலமெலா மவன்மிசை விட்டான்
மாவ ருங்கல்லி லறைந்தபூ வெனமுனை மடியும். (30)

தேவர் தானவர் எண்ணறு கோடிகள் திரண்டு மேவ வென்றிலர் நேமி சூலங்கள் முதலென்ற மேவரும் படைக் கலமெலாம் அவன்மிசை விட்டால் மாஅருங் கல்லில் அறைந்த பூவென முனை மடியும் = சுரர் அசுரர் சங்கையற்ற கோடானு கோடியாக ஒருங்குகூடி திரண்டாலும் தோல்வி அடையும் படி வெற்றிகொண்டிலர் சக்கரம் சூலம் வச்சிர முதலனவாகப் பிரசித்திபெற்றதும் அருந்தவத் தாலன்றிக் கிடைத்தற்கரியதும் ஆகிய ஆயுத வர்க்கங்கள் யாவும் அம்மந்திரியின்மீது ஏவினுல் கடினமான டங்காரத்தினுலும் பேதித்தற்கரிய பாறையில் அடித்த புஷ்பம்போல முனைமழுங்கி (கூர்மை கெட்டு) பொடியாய்ப் போம்.

விளிவ ருந்திற வந்தமந்திரி யந்த வேந்தா
லெளிது வென்றிடில் வணங்குறு மிவ்வகை யின்றே
லளிய மேருவை யசைப்பினு மசைப்பரி தாகும்
மொளிகொ ளூகபுந் தியினலால் வெலப்படா தொருங்கே. (31)

அந்த வேந்தால் விளிவருந் திறல் அந்த மந்திரி எளிதில் வென்றிடில் வணங்குறும் இவ வகையின்றேல் அளிய மேருவை அசைப்பினும் அசைப்பரிதாகும் ஒளிகொள் ஊகம் புந்தியினலால் ஒருங்கே வெலப்படாது = அவ்வரசனல் கெடாத வலியையுடைய அந்த மந்திரியை எளிதாக வென்றிடில் (சம்மாரஞ் செய்யில்) வயப்படுத்தில் மனமாம் மந்திரி வணங்குவன் (கீழ்ப்படிந்து நிற்பன்) அங்ஙனமாகா தொழியின், அன்புள்ள குழந்தாய் மேரு பர்வதத்தைப் பிடிங்கினும் இவனை அசைப்பிக்க அரிதாகும் பிரகாசம் பொருந்திய விவேக வைராக்கியத்தினல் அல்லாது அத்தியந்தம் ஜயிக்கப்படான்.

ஊக புந்தியா லல்லதவ் வமைச்சனை யுற்றால்
வேக நாகம்போ லெரித்திடும் வேந்தனே டமைச்ச
னேக ராச்சியஞ் செய்யுமத் தேசமு மியாவுஞ்
சோக மற்றிடக் கேளென விரித்திது சொன்னன். (32)

ஊகம் புந்தியாலல்லது அவ் வமைச்சனையுற்றால் வேகம் நாகம்போல் எரித்திடும் வேந்தனேடு அமைச்சன் ஏகராச்சியஞ் செய்யும் அத்தேசமும் இயாவுஞ் சோகம் அற்றிடக் கேள் என விரித்து இது சொன்னன் = வைராக்கியம், விவேகத்தாலன்றி அம் மந்திரியை வெல்லவேண்டும் என்றால் சீற்றம் மிக்க சர்ப்பம்போலப் பஸ்மமாக்கும் அம்மன்னவனேடு கூடி அம்மந்திரி ஏக அரசாட்சி செய்யாநின்ற அத் தேசமும் மற்ற இராஜா மந்திரி முதலிய யாவற்றையும் உனது இருதய துன்பம் ஒழிய ஒருமையுடன் கேட்பாயாகவென்று விரிவாக இதனைக் கூறினன்.

முன்ன நாஞ்சொன்ன தேசமோர் முடிவிலா முத்தி
மன்ன னென்றது மாசிலா மணியென வயங்குந்
தன்னில் வேறிலா வாத்தும தத்துவந் தானே
யன்ன வேந்தனு லமைத்த மந்திரி மனமாகும் (33)

முன்னம் நாம் சொன்ன தேசம் ஓர் முடிவிலா முத்தி மன்னன் என்னது மாசிலா மணியென வயங்கும்தன்னில் வேறுஇலா ஆத்தும தத்துவந்தானே = பூர்வம் எம்மால் சொல்லப்பட்ட தேசம் ஒப்பற்ற நாசரகிதமான மோட்சமே இராஜாவெனக் கூறியது தோஷமற்ற சிரோரத்தினம்போல விளங்கும் பிரத்யக் சொரூபத்தினும் பின்னமாகா தற்பத இலக்ஷியார்த்த பிரஹ்மமேயாம், அத்

| | | |
|---|---|---|
| அன்ன வேந்தனுல் அமைந்த மந்திரி மனம் ஆகும் | = | தகைய வேந்தனுல் இராஜாவால் கற்பித்த மந்திரியே மனமென்று சொல்லப்படும் (சமஷ்டியால் இரண்யகர்ப்பன் எனப்படும்.) |

விடய மியாவையு மொருப்பட வொருக்கி நல்விராக
முடைமை யாவது பரமமாம் யூகமென் றுரைத்தேந்
தடையி லாமனம் விராகத்தால் வெலப்பட்ட தன்மை
படைசெய் மத்தமா தொழுவத்து ளகப்பட்ட பண்பே. (34)

| | | |
|---|---|---|
| இயாவை விடயமும் ஒருப்பட ஒருக்கி நல்விராக முடைமை யாவது பரமமாம் யூகம் என்று உரைத்தேம் தடையிலா மனம் விராகத்தால் வெலப்பட்ட தன்மை படைசெய் மத்தமா தொழுவத்துள் அகப்பட்ட பண்பே | = | சகல விஷயங்களேயும் ஆன்ருேர் சம்மதமாக விடவேண்டுமென்று சொல்லியிருந்த அவ்வனேத்தையும் விடுத்து நன்ருக அனுஸ்தையை வைராக்கியத்தை அடைந்திருத்தலே மேலான யுக்தி என்று கூறினேம் விடயங்களிற் தடையின்றிச் செல்லப்பட்ட மனத்தை வைராக்கியத்தினுல் ஜெயிக்கப்பட்ட தன்மை யுத்தம் செய்யப்பட்ட மதோன்மத்த யானேயானது கொப்பத்தில் வீழ்த்தப்பட்ட (அகப்பட்டுக்கொண்ட) தன்மையே. |

கற்ற றிந்திலார் மனத்தை நாற்கூறெனக் கற்பித்
துற்ற போகத்தி லுபயமு நூல்வழி யொன்றும்
பெற்ற தேசிகன் பூசையி லொன்றுமாய்ப் பேணிற்
றுற்ற கங்குல்போய் விவேகமாஞ் சுடர்வந்து தோன்றும். (35)

| | | |
|---|---|---|
| கற்றறிந்திலார் மனத்தை நாற்கூறு எனக் கற்பித்து உற்ற போகத்தில் உபயமும் நூல்வழி ஒன்றும் பெற்றதே சிகன் பூசையில் ஒன்றுமாய்ப் பேணில் உற்ற கங்குல்போய் விவேக மாஞ் சுடர்வந்து தோன்றும் | = | (சித்த ஜயக்கிரமத்தை அதிகாரி பேதத்தால் மூன்று கவிகளாற் கூறல்) விற்பன்னமில்லாதவர் சித்தத்தினது விவகார காலத்தை நான்கு கூருகக் கற்பனேசெய்து நுகர்வினே வயத்தால் பொருந்திய சரீரபோக விவகாரத்தில் இருமடங்கும் சரணுதிகதியாகத் தான் அடைந்த ஆசிரியர் பணிவிடையில் ஒருமடங்கும் அநுஷ்டித்துவரில் அவிவேகமாம் அந்தகாரம்போய் ஞான பாஸ்கரன் உதயமாம். |

சிறித றிந்தவர் மனத்தை நாற்கூறெனச் செய்து
பொறிவ சத்தொன்றுந் தேசிகர் பூசையி லிரண்டு
மறியு நூற்பொருண் மனனத் தோர்கூறுமே யாக்கி
னெறி விவேகத்தா லொண்றுனர் ஞானமே நிரம்பும். (36)

சிறிது அறிந்தவர் மனத்தை நாற்கூறெனச் செய்து பொறி வசத்தொன்றும் தேசிகர் பூசையி லிரண்டும் அறியும் நூற்பொருள் மனனத்து ஓர் கூறுமேயாக்கி நெறி விவேகத்தால் ஒன்றுணர் ஞானமே நிரம்பும் = கொஞ்சம் விற்பன்னமுடையவர் சித்தத்தினது விவகார காலத்தை நான்குபாகமாகப் பகுத்துப் போகவசத்து ஒருமடங்கும், குரு பணிவிடையில் இருமடங்கும், ஞானசாஸ்திர அர்த்ததாரணை யில் ஒருமடங்கும் பகுத்து இம்முறையில் வரும் விவேகத்தானே அத்வைத பிரஹ்மஞானத்தைப் பூரணமாக உண்டுபண்ணும்.

ஞான முற்றவர் மனத்தைநாற் கூறென நாட்டி
யான நூலினும் விராகத்து மநுபவந் தனிலு
மான நற்குரு பூசையின் வழியினுஞ் செலுத்தி
லீன மற்றநன் முத்திவந் தெய்திடு மெளிதின். (37)

ஞானமுற்றவர் மனத்தை நாற் கூறு என நாட்டி ஆன நூலினும் விராகத்தும் அநுபவந்தனிலும் ஆனநல் குருபூசையின் வழி யினுஞ் செலுத்தில் ஈனமற்ற நல் முத்தி வந்தெய்திடும் எளிதில் = அதிட ஞானமுடையவர் சித்தத்தினது விவகார காலத்தை நான்குபாகமாகப் பகுத்துப் போக வசத்து ஒருமடங்கும், ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தை உண்டுபண்ணுவதான சாஸ்திரத்தும், வைராக் கியத்தும், அநுபவந்தனிலும் பெருமை பொருந் திய நல்ல ஞானசிரியரது பணிவிடையின்கண் ணும் கழிப்பராயின் ஐயந்திரிபு நீங்கித் திடபோ தம் உண்டாய் அனர்ந்த நிவர்த்தி பரமானந்த வடிவமோக்ஷம் சுலபமாகக் கிடைக்கும்.

மிக்க வறிவால் விசாரத்தான் மெய்ம்மையுணர்வு நிராசையுநீ
யொக்க வென்றுங் கைக்கொள்வ யூற்றமானநிரா சையினுற்
றக்க விசாரம் விசாரத்தாற் றவிராநிராசை தம்மாற்றுந்
தொக்கு நிரம்பும் வாரிதியுந் தொடர்மே கமுந்துன் னுதல்போலாம். (38)

மிக்க அறிவால் விசாரத்தால் ஒக்க நிராசையும் மெய்ம்மை உணர்வும் நீ என்றுங் கைக்கொள் வாய் ஊற்றமன நிராசையினல் தக்கவிசாரம் விசாரத்தால் தவிரா நிராசை தம்மாற்றும் தொக்கும் நிரம்பும் வாரிதியும் தொடர் மேகமும் துன்னுதல் போலாம் = இங்ஙனம் திடப்பிரஞ்ஞையினலும் விசாரத்தா லும் சித்தம் உபசமாக ஆசையின் தியாகத்தை யும் நீ எப்போதும் அனுஷ்டித்து வருவாய் அதி திடதர வைராக்கியத்தினல் உபகாரக உபகாரிய பரஸ்பர சகாயமாய்த் தக்க புருடார்த்த விசார மும், புருடார்த்த விசாரத்தால் கெடாத வைராக் கியமும், பரஸ்பரம் தொடர்புற்றுப் பூரணமாகும். சமுத்திரத்தானே சூரியகிரணவாயிலாய் மேகம் பூரிக்கப்பெறுகின்தன. மேகங்களானே மழை வாயிலாய்ச் சமுத்திரம் பூரிக்கப்படுகின்றன போலவாம்.

நாட்டி னியல்பு வழுவாம னட்டோர்க்கிதமா நற்பொருள்க
ளீட்டி முன்ன மதனுலே யினியகுணத்தி லுயர்ந்தோரைக்
கூட்டி யவரா னிராசையினைக் கூடியதனுல் விசாரத்தைத்
தீட்டி யதனுன் மெய்ஞ்ஞானந் தெளிந்தான் முத்திசித்திக்கும். (39)

முன்னம் நாட்டின் இயல்பு வழுவாமல் நாட்டோர்க்கு இதமாம் நற்பொருள்கள் ஈட்டி அதனுலே இனிய குணத்தில் உயர்ந்தோரைக்கூட்டி அவரால் நிராசையினைக்கூடி அதனுல் விசாரத்தைத் தீட்டி அதனுல் மெஞ்ஞானந் தெளிந்தால் முத்தி சித்திக்கும் = பூர்வம் தேச ஆசாரவிருத்தமின்றி முறைமை தவருது களத்திர புத்திராதி உறவினருக்கு இனிமை பயப்பனவாய்த் தருமதனங்களைச் சம்பாதித்து, அப் பொருள்கொண்டு மைத்திரியாதி குணங்கள் நிறைந்த பெரியோரை நமஸ்காராதிகளாலும் சேவையினுலும் பூசிதது்ச் சேர்த்து அம்மகான்களால் வைராக்கியத்தையடைந்து அந்த வைராக்கியத்தினுல் விசாரத்தைக் கூர்மைப்படுத்தி அத்தியாத்ம சாஸ்திர அவ்விசாரத்தால் சச்சிதானந்த சொரூபத்தைச் சாக்ஷாத்கரித்தலால் மோக்ஷமானது தனது வடிவமாகச் சித்திக்கும்.

என்று முன்ன மென்றந்தை யிசைத்தான்றெய்வ சகாயத்தா
லொன்று மொழியா தின்றுணர்ந்தே னுணர்வுபெற்றேன் போகத்தி
னின்ற வாசை யின்றெழித்து நிராசையென்னு நிதியாலே
துன்றி நொய்தா யுபசாந்தச் சுதையிற்குளிர்ந்த சுகம்பெற்றேன். (40)

என்று முன்னம் என் தந்தை இசைத்தான் தெய்வசகாயத்தால் ஒன்றும் ஒழியாது இன்று உணர்ந்தேன் உணர்வுபெற்றேன் போகத்தில் நின்ற ஆசை இன்று ஒழித்து நிராசையென்னும் நிதியாலே துன்றி நொய்தாய் உபசாந்தச் சுதையில் குளிர்ந்த சுகம் பெற்றேன் = என இவ்வண்ணம் பூர்வம் எனது பிதா உபதேசித்தான் பரமேசுரரது திருவருளால் ஒன்றையும் விடாமல் இப்போது ஸ்மரித்தேன், விவேகத்தை அடைந்தேன், போகத்தின்கண்ணே நிலைபெற்று அழுந்திய ஆசையை இப்போது விட்டு, வைராக்கியமென்னும் ஐஸ்வரியத்தானே நிரப்பிச் சொச்சமாய் உபசாந்த அமிர்த சீதள ஆனந்தம் அடைந்தேன்.

அந்தோ வந்தோ விதுநெடுநா ளறிந்திலேனின் றறிவுற்ற
சந்தோ டத்தை யென்சொல்வேன் சகலநினைவுஞ் சமித்தாறி
நொந்தோ ரின்ப துன்பத்தா னேவாதிருக்கு மிடமிதுவே
யுய்ந்தோ ருறையும் பதமிதுவே யுபசாந்தத்தி னுயர்விதுவே. (41)

அந்தோ அந்தோ இது நெடுநாள் அறிந்திலேன் இன்று அறிவுற்ற ஆச்சரியம், ஆச்சரியம் இதனை=பிதா உபதேசித்ததை வெகுகாலம் அறியாமற்போனேன், இப்

சந்தோஷத்தை என்சொல்வேன் சகல நினைவுஞ்சமித்தாறி இன்ப துன்பத்தால் நொந்தோர் நோவா திருக்கும் இடம் இதுவே உய்ந் தோர் உறையும் பதம் இதுவே உபசாந்தத்தின் உயர்விதுவே =

போது அறிந்து தெளிந்த மகிழ்ச்சியை என் எனக் கூறுவேன். எல்லா எண்ணங்களும் மீண்டெழா மல் சாந்தமாய்ச் சந்தோஷ விஷாதங்களால் கவலையுற்றவர், கிலேசமின்றி இருக்கும் பதம் இதுவேயாகும். அவித்தையின் கரைகண்டு தேறியவர் சுகமாய் வாழும் தானமிதுவே, உப சாந்தத்தின் (காஷ்டையும்) எல்லையுமிதுவே.

என்ன வுரைத்து நானுரென்னுருவ மேதன்றியான் விளங்கத்
தன்னை யறியுஞ் சுக்கிரனைத் தாழ்ந்துவினவித் தத்துவத்தை
யுன்னும் பொழுதே யஞ்ஞான மோடுமென்ன வுசனுவை
முன்ன வேண்டு மெனக்கண்கண் முகிழ்த்துநினைந்தான் முழுதன்பால். (42)

என்ன உரைத்து நான் யார் என்னுருவம் ஏது என்று யாவன் விளங்க தன்னை அறியுஞ் சுக்கிரனைத் தாழ்ந்து வினவித் தத்துவத்தை உன்னும்பொழுதே அஞ்ஞானம் ஓடும் என்ன உசனுவை முன்னவேண்டும் எனக் கண்கள் முகிழ்த்து முழுது அன்பால் நினைந்தான் =

எனதன்னிலே பேசி அகமென்னுங் உணர்வுக்கு விஷயமாய ஜீவ தத்துவம் யாது ஆன்ம, எனது வடிவம் யாது என்பதாக யான் விளங்கும்படி யாகஅப=ரோக்ஷமாய் அறிய தனது சொரூ பத்தை அறிந்திருப்பவராய் குலகுருவாகிய ஸ்ரீ சுக்கிராச்சரியரை நமஸ்கரித்து கேட்கில் எதார்த்த வஸ்துவை தியானிக்குங் காலத்தி லேயே = அறிந்த காலத்திலேயே அஞ்ஞான மானது ஓடி ஒழிந்துபோம் எனக் கருதி சுக்கிர பகவானை பிரசன்னமாக வேண்டுமென்று விழி களை மூடி பூரண பக்தியால் தியானித்தான்.

மெய்யா கியசச் சிதானந்த வெளியேவடிவா கியவெள்ளி
யுய்யா நின்ற மாவலிமுன் னுதிப்பவனு முவந்திறைஞ்சிக்
கையார் மணியா லுயர்மலராற் காலிலருச்சித் துரைசெய்வா
னையா நின்னன் பெனையெழுப்ப வடியேனுரைப்ப தறிந்தருள்வாய். (43)

மெய்யாகிய சச்சிதானந்த வெளியே வடிவாகிய வெள்ளி உய்யா நின்ற மாவலி முன் உதிப்ப அவனும் உவந்து இறைஞ்சிக் கையார் மணியால் உயர்மலரால் காலில் அருச்சித்து உரைசெய்வான் ஐயா நின் அன்பு எனை எழுப்ப அடியேன்

சத்தியமாம் சச்சிதானந்த சிதாகாச வடிவராகிய சுக்கிராச்சாரியர் உய்யும் பருவமுடையவனுய் நின்ற மாவலிமுன் பிரசன்னமாகப் பரம சந்தோ ஷத்தை அடைந்து நமஸ்கரித்துக் கைகளால் நிறைந்த இரத்தினங்களினுலும் வாசனை மிக்க மந்தார முதலிய புஷ்பங்களினுலும் பாதங்களில் அர்ச்சனை செய்து விக்ஞாபனஞ் செய்பவனுய் எனது ஆசிரியரே! தேவரீரிடத்திலுள்ள பக்தி

உரைப்பது அறிந்து அருள்வாய் = யானது அடியேனை நூண்ட நாயினேன் விஞ்ஞாபனஞ் செய்துகொள்வதை திருச்செவி கொண்டு விடை அருள்வீராக.

என்னிங் குள்ள தப்பாலென் னெல்லைசொல்லப் பட்டுளதென்
றுன்னு மெல்லை யில்லாதென் சொல்லுநானுர் நீயாரிம்
மன்னு முலக மேதென்று மயக்கந்தீர வருளென்ன
வன்ன தெல்லாந் தெரியவிரித் தவனுக்கிவ னன்னறிவித்தான். (44)

இங்கு என் உள்ளது அப்பால் என் எல்லை சொல்லப்பட்டுளது என் எல்லையில்லாது என் சொல்லும் நான் ஆர், நீயார், துன்னுமன்னு இம் உலகம் ஏது என்று மயக்கந்தீர அருள் என்ன, அன்னதெல்லாந் தெரிய இவன் அவனுக்கு விரித்து நன்று அறிவித்தான் = இவ்விடத்து இருப்பது யாது, அங்கு இருப்பது யாது எல்லைகூறப் பெற்றுள்ளது யாது எல்லையில்லாதது யாது இவ்வாறு வினவும் யான் யார் விடையருளும் தேவரீர் யாவர் நெருங்கி பொருந்திய இப் பிரபஞ்சம் யாது என, எனது மோகம் ஒழிய உபதேசித்தருளல்வேண்டும் என்று கூறிய மாவலிக்கு சுக்கிராச்சாரியர் அம் மாபலிக்கு விரித்து பகுத்து ஐயந்திரிபுயின்றி தெளிவாக தெரிந்துகொள்ளுமாறு நன்கு உபதேசித்தான்.

வருங்கற் பகவிண் விரைந்தேக வந்தேன் பலசொல்லியும்பயனென்
சுருங்கச் சொல்லுட் பயன்கேளாய் தோன்ற விங்குள்ளதாயுஞ்சித்
தொருங்கப் புறத்துஞ் சித்தெல்லை யுள்ள துஞ்சித் தெல்லையற
நெருங்குற் றதுஞ்சித் தியான்சித்து நிசித்துலக நிறைசித்தே. (45)

வருங் கற்பகவிண் விரைந்தேக வந்தேன் பல சொல்லியும் பயன்என் சுருங்கச்சொல்லும் பயன் தோன்றக் கேளாய் இங் குள்ளதுவுஞ் சித்து புறத்தும் ஒருங்க சித்து எல்லையுள்ளதுஞ் சித்து எல்லையற நெருங்குற் றதும் சித்து யான் சித்து நீசித்து நிறைசித்தே உலகம் = எக்ஞாதி புண்ணிய விசேஷத்தால் அடைவுறும் கற்பகவிருட்ச முதலிய ஐஸ்வரியம் நிறைந்த சொர்க்கலோகஞ் செல்ல விரும்பி இருந்தேன் நீ இங்கு நினைத்ததால் வந்தேன் நம்பினும் நம்பரவிடினும் அனேக முபதேசித்தும் பிரயோஜனம் என்னே, சங்கிரகமாக உபதேசிக்கும் பாஜனை=விடை ஐயந்திரிபு இன்றித் தெளிவுண்டாகக் கேட்பாயாகப் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகிற இவண் இருப்பதுவுஞ் சித்து அப்பாலுள்ள அனைத்தும் சித்து எல்லைப்பட்டிருப் பதும் சித்து எல்லையின்றி விரிந்துள்ளதுஞ் சித்து ஆசாரியராகிய யானுஞ் சித்து சீடனுகிய நீயும் சித்தேயாம் பூரணமாகிய சிந்சொரூபமே உலகம் யாவும்.

இதுவே சுருக்க மிவ்வறுதி யிதயங்கொண் டிவ்வகைக்கேற்ற
மதியா னின்னை நினைநீயே மாருதுணர்ந்து நோக்குதியே
லதனு லந்த மாம்பதத்தை யடைதியோரே ழுருந்தவரும்
புதிதோர் தெய்வ காரியத்திற் புகுந்தாரியாமும் போகுதுமால். (46)

இதுவே சுருக்கம் இவ்வுறுதி இதயங்கொண்டு இவ்வகைக் கேற்ற மதியால் நின்னை நீயே நினை, மாருது உணர்ந்து நோக் குதியேல் அதனுல் அந்தமாம் பதத்தை அடைதிஓர் ஏழ்அருந்த விருப் புதிதோர் தெய்வ காரியத் தில் புகுந்தார் யாமும் போகுது மால் = இப்போது உபதேசித்த தேசங்கிரகார்த்நமாம் இந்த நிச்சயத்தை மனதில் கவர்ந்து இவ்வியல் புக்குத் தகுதியாகிய புத்தியால் உன்னை நீயே சுயம் எண்ணுதி பிறழாது அறிந்து பார்ப்பாயேல் அதனுல் தேசகாலவஸ்து பரிச்சேதரகித மோக்ஷ பதத்தையடைந்து சுகிப்பாய் ஒப்பற்ற சப்த மகரிஷிகளும் நவவான ஒரு தெய்வகாரியத்தில் பிரவேசித்தார் யாமும் அங்கு செல்வோம் அவ சியமும் முன் நிற்க வேண்டும்.

என்னு வெள்ளி யேகியபின் னெல்லாமறிவாமுல கினைப்பார்த்
துன்னு வொக்கு மொக்குமெனக் குசனுவுரைத்த துண்மையதே
முன்னு மவனி சித்துலகு மூன்றுஞ்சித்து நான்சித்து
நன்னு லான திசைசித்து நாட்டுகின்ற தெலாஞ்சித்தே. (47)

என்னு வெள்ளி ஏகியபின் உல கினையெல்லாம் அறிவாய்ப் பார்த்து எனக்கு உசனு உரைத் தது உண்மையதே ஒக்கும் ஒக்கும், அவனிமுன்னும் சித்து உலகுமூன்றுஞ் சித்து நான் சித்து நன்னுலான திசை சித்து நாட்டுகின்ற தெலாஞ்சித்தே = என்றிவ்வண்ணம் உபதேசித்தருளி ஸ்ரீ சுக்கிர பகவான் சென்றபின்னர் பிருதுவி முதலிய பிர பஞ்சமெல்லாம் சித்தாகவே (திருக்குருபமாகவே ஆராய்ந்து பார்த்து எனக்கு சுக்கிராச்சாரியர் உபதேசித்தருளியது சத்தியமே. பொருந்தும், பொருந்தும். பிருதுவி முதலிய பிரபஞ்சம் யாவும் சித்தே ஜகத்திரயம் யாவும் சித்தே அகம் சித்தே எட்டு திசைகளும் சித்தே புலப்படுகின்ற எல்லாம் சித்தே.

தெரிக்கும் பொருளுந் தரிசனமுந் தீர்ந்து வெறுநின் மலவடிவாய்
புரிக்கு முதயம் விடாதென்றும் பொலியும் பரமப் பொருளானேன்
வரிக்குங் காட்சி யிலாவறிவே வடிவாயொரு காலே யெங்கும்
விரிக்கு நிறைவா யுபசாந்த ளொளியா யறிவா மிகுபொருளுன். (48)

தெரிக்கும்பொருளுந் தரிசனமும் தீர்ந்துவெறும் நின்மலவடிவாய்ப் புரிக்கும் உதயம் விடாது என்றும் பொலியும் பரமப்பொருளானேன் வரிக்குங்காட்சியிலா அறிவே = (இவ்வண்ணமாகவே யான் யார் என்னும் விஞ வின் பின்னரும் சுயமாகவே என்னுல் உணரப் பெற்றதெனல்) கட்புலனுக்கு விஷயமாகும் பூத பௌதிக திரிசியங்களும், தரிசனமும் விடுபட்டுக் கேவலம் நிர்மலசொரூபமாய் விளங்கும் சதோ

வடிவாய் ஒருகாலே யெங்கும் விரிக்கும் நிறைவாய் உபசாந்த அறிவாம் வெளியாய் மிகுபொருள் நான் = தயமாய நித்தியப்பிரகாசமான உயர்ந்தவத்து வாயுள்ளேன். வாசனையினுலே பிணிக்கும் சேத்தியமில்லாகூடஸ்த சொரூபமாய் ஏகதேச அம்சத்தால் ஒரு போதமே எவ்விடத்திலும் பூரிக்கும் பூரணமாய் உபசாந்தமான சிதாகாசமாய் பிரஹ்மமாம் மகத்வஸ்துவேயான்.

ஓங்குஞ் சின்மாத் திரப்பொருளா மோங்காரத்தை யுண்ணினைந்து
தூங்குந் தியான பரனுகித் தொடர்சங்கற்ப மெல்லாம்போய்
வாங்குந் தொழிலே டணையைய மனனஞான ஞேயமின்வை
தாங்கு ஞாதா வனைத்துமரத் தனிச்சித்திரம்போ னெடிதிருந்தான். **(49)**

ஓங்குஞ் சின்மாத்திரப்பொருளாம் ஓங்காரத்தை உள்நினைந்து தியான தூங்குபரனுகித் தொடர் சங்கற்பமெல்லாம்போய் வாங்குந் தொழில் ஏடனை ஐயம் மனனம் ஞானம் ஞேயம் இவை தாங்கு ஞாதா அனைத்தும் அறத்தனிச் சித்திரம்போல் நெடிதிருந்தான்= யாவற்றிற்கும் மேலான சின்மாத்திரத்தைப் பொருளாகவுடைய அமாத்திரை (பிரணவார்த்த மாத்திரையை) மனதிலேயே தியானித்து யோக நித்திரையில் தற்பரனுய், பற்றிய சகல சங்கற்பங்களும் ஒழிந்து, தன்மயமாய் இழுக்கும் தொழில் ஏடணுத்திரயம், சம்சயம், சிந்தனை தியானம், தியேயம், இவற்றினை நிர்வகிக்கும் படியான தியானகர்த்தா யாவும் அற்று, கேவலம் பதுமைபோல நெடும்போது நிருவிகற்ப சமாதியிலிருந்தனன்.

காற்றி லாதவிளக் கொளிபோற் கலங்காதிருந்த மாவலிதான்
சீற்ற மயறீர்ந் தறநிறைந்து சித்தையென்னு மாசின்றித்
தோற்றுஞ் சத்தா மாத்திரத்தாற் சுடர்விட்டெரித்த படிசொல்லி
லாற்றன் முகிறீர் சரற்காலத் தறவேதெளிந்த விண்போலும். **(50)**

காற்றிலாத விளக்கொளிபோல் கலங்காதிருந்த மாவலிதான் சீற்றம் மயல் தீர்ந்து அறநிறைந்து சிந்தையென்னும் மாசு இன்றி தோற்றுஞ் சத்தாமாத்திரத்தால் சுடர்விட்டெறித்தபடி சொல்லில் ஆற்றல்தீர் முகில்தீற் காலத்து அறவே தெளிந்த விண்போலும்= (நிருவிகற்ப சமாதியையே வர்ணித்தல்) நிவாத ஸ்தலத்தில் வைக்கப்பட்ட தீபச்சுடர் போலும் விட்சேபமில்லாதிருந்த மகாபலியானவன் கோபம், மோகம், அகன்று அத்தியந்தம் பூரணமாகிச் சிந்தனையென்னும் தோஷம் அற்று ஸ்புரணவடிவ சன்மாத்திரமாகவே பிரஹ்ம தேஜசு ஜொலிக்கும்படியுள்ள தன்மையை உவமித்துக்கூறுமிடத்துப் பெய்யும் சமர்த்தம் அற்ற மேகம் புகை துளி விலகிய ஒழிந்த ஆகாசம் போல சிதாகாசமானுன்.

ஆங்கப் படியே யவனிருப்ப வவனதேவற் புரியசுர
ரோங்கற் கோயின் மேனிலத்தை யுற்ருருயர்மா வலிதானு
நீங்கற் கரிய நிருவிகற்பநிலைகூர் சமாதிநெடும் போது
தேங்குற் றதற்பின் விழித்துணர்ந்து மமதைதீர்ந்த சிந்தையனாய். (51)

ஆங்கு அப்படியே அவனிருப்ப அவனது ஏவல்புரி அசுரர் ஓங்கற் கோயில் மேல்நிலத்தை யுற்ருர் உயர் மாவலி தானும் ஏங்கும் போது நீங்கற்கரிய நிலைகூர் நிருவி கற்பசமாதி தேங்குற்றது அதன்பின் விழித்துணர்ந்து மமதை தீர்ந்த சிந்தயனாய் =

அவ்விடத்தில் நிருவிகற்ப சமாதியில் அம் மாவலியிருந்தபோது அவ்வரசனது பணியாள ராகிய தானவர் ஓங்கல் உயர்ச்சி மலை மேருகிரி சிகரத்தின் உன்னதமே மாடி தலத்தினை அடைந் தனர், மேன்மைமிக்க விரோசனன் மைந்தனை மாவலியும் அன்னியர்களால் கலைத்தற்கரியதான வெகுகாலம் திடமிகுந்த நிருவிகற்ப சமாதியில் விசிராந்தியடைந்து மௌனமுற்றிருக்கும் அர சனை நமஸ்கரித்தனர், மாபலி அசலம்போல அசையாதிருப்பதைக் கண்டு அறியாதவர்களாய் நம் அசுரகுல குருவாகிய சுக்கிராச்சாரியரை பிரசன்னமாக வேண்டுமென்று தியானம் புரிந் தார்கள் அச் சுக்கிரனும் பிரசன்னமாய் மாபலி சமாதியிலிருப்பதைக்கண்டு சர்வஞ்ஞத் தன்மை யால் உணர்ந்து தானவர்களைநோக்கி ஆயிரவரு டங்கழிந்த பின்னர் பகிர்முகமாவான் ஆகலின் நீங்களே இராஜகாரியத்தைப் பார்த்து வாருங்க ளென்று கூற அவர்களும் அப்படியே சென்று ஆயிரவருடங் கழிந்தபின்னர் தானவர் மீண்டும் வந்தும் பிரார்த்திப்ப அவர்களது முன்பு சமாதி நீங்கி பகிர்முகமடைந்து யாதொரு வஸ்துவுஞ் வேண்டியதின்ருயினும் உலகுபகாரப்பொருட்டு விவகரிப்போமென நிச்சயித்து எழுந்து மமதை யிலாத சித்தத்தையுடையவனாய் உலாவினன்.

பற்றிலா தமனத்தாலே பயின்றி ராசகா ரியங்கள்
முற்று மியற்றி யாபத்து முதிர்சம்பத் துஞ்சமமாகக்
குற்ற மில்லாக் குறிப்பாலே குறிப்புற் றின்பதுன்பத்திற்
சற்று மிதவா தமிழாது சமபாவனையிற் ருனைன். (52)

பற்றிலாத மனத்தாலே இராஜ காரியங்கள் முற்றும் பயின்று இயற்றி ஆபத்தும் முதிர் சம்பத் தும் குற்றமில்லாக் குறிப்பாலே

யான் எனதென்னும் சங்கமற்ற மனத்தினாலே இராஜ காரியங்கள் யாவற்றையும் விவகரித்துச் செய்தனன், அக்கால் அவன் அசுவமேத யாகம் இயற்ற அங்கு இந்திர சகாயமாய்ச் சென்

சமமாக குறிப்புற்று இன்ப துன்பத்தில் சற்றும் முதவாது அமிழாது சமபாவனையில் தானுனன் = றருளிய ஸ்ரீ விஷ்ணு வாமனவதாரங்கொண்டு மாவலியிடஞ் சென்று மூன்று அடி பூமி வேண்டு மென்று கேட்டு வஞ்சிக்கப்பெற்று பாதாளத்தில் கட்டுப்பாட்டுடன் இன்றும் அம் மாபலியானவன் மறு இந்திரத்தன்மை யேதுவினுனே பிராரப்தத் தானே யுபலக்ஷிதனுய் நன்கு இருக்கின்றுன் ஜீவன்முக்த வடிவையுடையவனுய் சுவஸ்தனுய் நித்தியம் நிருவிகற்ப சமாதியில் கழிந்த மதியை யுடையவனுய் சுகித்து வாழ்கின்றுன் இவ்வண் ணம் பாதாள குகரத்திலிருக்கப்பெற்ற அவன் ஜீவன்முக்த கதியையுடையவனுகி விழித்தபோது விவகரித்தபோதினும் சுகதுக்கங்களில் சிறிதும் மகிழாது வாடாது அவனது பிரஞ்ஞையானது அஸ்தமும் உதயமுமற்ற அறிவுருவாகவே இருந்தது.

ஒவா தவன்ற னுள்ளெழுந்த வூகாபோகம் பலகோடி
பாவா பாவம் பலகோடி பரந்ததெல்லா மிளைப்பாறி
மேவா தின்ரு னெவ்விடத்தென் விண்ணில் மண்ணில்வேட்கைகளிற்
ருவா நின்ற மனந்தன்னைத் தன்னதியத் துள்வைப்பாம். (53)

ஓவாது அவன்றன் உள்ளெழுந்த ஊகாபோகம் பலகோடி பாவ அபாவம் பலகோடி பரந்ததெல் லாம் இளைப்பாறி எவ்விடத்து மேவா நின்ருன் என் விண்ணில் மண்ணில் வேட்கை தாவா நின்ற மனந்தன்னைத் தன்னதிதயத்துள் வைப்பாம் = இடைவிடாமல் அவனுடைய மனத்தில் எழுந்த ஊகம், அபோகம், இஷ்ட சாதன பாவனை ஊக மாம், அநிஷ்ட நிராசபாவனை போகமாம் = கொள்ளத்தக்க, தள்ளத்தக்கனவாய பலவாசனு மய பிரிவுகளும், பலவானபாவ, அபாவ விருத்தி களும் இங்ஙனம் விஸ்தரித்த யாவற்றினின்றும் ஆறுதலையடைந்து எவ்விஷயத்தைத்தான் பொருந்தி நின்ருன் ஓர்விஷயத்தையும் பொருந் திலன், ஆதலால் ஹே ராமா! பரத்தில் இகத் தில் பற்றிய ஆசையால் தத்தளியாநின்ற மனத் தினை உனது இருதய குகையின்கண்ணேயிருத்தி இன்புறுவாய்.

எங்கே யெங்கே மனமோடி யினையோரென்ன வீழ்ந்தழுந்து
மங்கே யங்கே நின்றெழுப்பி யகண்டியறிவி லடைவிப்பாய்
சங்கே தமதா யிவ்வாறு சாதித்துளமா மதகரியை
வெங்கே தமறத் தளைத்தெல்லா விசாரத்தாலும் வீடணைவாம். (54)

எங்கே எங்கே மனம் ஓடி இளையோரென்ன வீழ்ந்து அழுந்தும் அங்கே அங்கே நின்றெழுப்பி அகண்ட அறிவில் அடைவிப்பாய் இவ்வாறுசங்கேதமதாய்சாதித்து உளமாம் மதகரியை வெங்கேத மறத்தளைத்து எல்லா விசாரத்தாலும் வீடு அணைவாம் =

ஜன்மாந்தர வாசனுநுசாரம் எந்தெந்தப் பிரதேசங்களில் மனமானது ஓடி பாலர்போல விழுந்து மூழ்குமோ அந்த அங்கு நின்று மேற்கிளப்பிக் கண்டிதமில்லாத சிற்சொரூபத்தில் சேர்ப்பிப்பாய். இந்தப்பிரகாரம் நியமமாய்க் கடைப்பிடித்து மனமாகிய மதோன்மத்த யானையை மிகுந்த துன்பங்களெல்லாம் ஒழியத்தகைந்து சர்வ பாவத்தானும் பரமசிரேயசை அடைவாய்.

5 – 3 மாவலி கதை முற்றிற்று.

ஆக விருத்தம் — 905.



# 5-4. பிரகலாதன் கதை

## அவதாரிகை

இங்ஙனம் காகதாலீய நியாயக் கிரமத்தாலும் தனது விசாரத்தாலும் ஆசாரிய உபதேசத்தாலும் ஞாதோதயக்கிரமம் சொல்லப்பட்டது இப்போது உபாசிக்கப்பெற்ற ஈசுர அநுக்கிரக ஜன்னிய விசாரத்தானே ஞானோதயப் பிரகாரத்தை உபதேசிக்கப் பிரகலாதன் கதை கூறுகின்றார்.

பின்னு மீதோர் கதைகேட்டாய் பிரகலாதப்பெய ரோனுந்
தன்ன துணர்வான் மெய்ஞ்ஞான தத்துவத்தை சாதித்தா
னன்ன துரைப்பா மிரணியனு மசுரவேந்த னிறந்தனவே
யின்னல் கூருமவன் மைந்தனிதய நடுங்கியிவை யுணர்ந்தான். (1)

பின்னும் ஈதோர் கதை கேட்பாய் பிரகலாதப் பெயரோனுந் தன்னது உணர்வால் மெய்ஞ்ஞான தத்துவத்தைச் சாதித்தான் அன்னது உரைப்பாம் இரணிய

மீட்டும் இஃதொரு கதை கூறச் சிரவணஞ் செய்வாய் பிரகலாதன் எனப் பிரசித்திபெற்ற தைத்தியேசுவரனும் சுவான்ம ஞானத்தால் சச்சிதானந்த பிரஹ்ம வஸ்துவை சாக்ஷாத்கரித்தான்

ணும் அசுரவேந்தன் இறந்தளவே இன்னல் கூடும் அவன் மைந்தன் இதயம் நடுங்கி இவை உணர்ந் தான் = அதனைக் கூறுவாம் இரணியகசிபுவென்னும் தானவேசுரன் மரித்தபோது, துன்பம் மிக்க அவ் வசுரேசனது குமாரன் மனதில் மிகவும் அச்ச மடைந்து இன்னவற்றைச் சிந்தித்தான்.

எனது தாதை முதலரசு ரெனதுகுலத்தோ ரெண்ணிறந்தோர்
கனக மேரு வணுவென்னக் காயநிலைமை பெரிதுடையோர்
வனச யோனி யதிகார மாற்றவல்லோர் தரவல்லோர்
பூளை வண் டுளவோ னெனுங்கனலிற் பூளைவீபோற்போயொழிந்தார். (2)

எனது தாதைமுதல் அசுரர் எனது குலத்தோர் என்னிறந் தோர் கனகமேரும் அச்சவென் னக் காயநிலைமை பெரிதுடை யோர் வனசயோனி அதிகாரம் மாற்றவல்லோர், தரவல்லோர் வண்துளபுனைவோன் எனுங் கனலிற் பூளைவீபோல் போயொழிந்தனர் = என்னுடைய தந்தையே முதலான தைத்தியர் என்னுடைய வம்சத்தினர் அளவற்றவர் சொர்ண கிரியும் அற்பமென்று சொல்லும்படியாகச் சரீர இயற்கை வன்மையும் திண்மையும் மிகவுடையர் பிரம்மாவின் படைப்பு அதிகாரத்தை இஷ்ட மின்றேல் தடுக்கவல்லவர் இஷ்டமாயின் கொடுக்கவல்லவர் வளப்பம் பொருந்திய துளப மாலையணிந்த மகாவிஷ்ணுவென்னும் அக்கினி யின்கண் பூளைபூபோல் போய் எதிர்த்து மடிந்து மடிந்துபோனுர்.

அன்னு ரொக்கும் பேரசுர ரழியுமுழிப் பெருங்காற்ருற்
சின்னு கங்கள் போன்மடிந்தார் செறிநுண் மணலிற்பலகோடி
யின்னு ளவனுக் கஞ்சாதா ரியாருமில்லை யெம்பகையா
மின்னுர் நேமிப் படையோனை வெல்வானுபாயம் யீதொன்றே. (3)

அன்னுரொக்கும் பேரசுரர் அழியும் ஊழிப்பெருங் காற்ருல் சின்னுகங்கள்போல் மடிந்தாற் செறிநுண் மணலிற் பலகோடி பின்னுள் அவனுக்கு அஞ்சாதார் யாருமில்லை எம்பகையாம் மின்னுர் நேமிப் படையோனை வெல்வான் உபாயம் ஈதொன்றே = அத்தகையர்கட்குச் சமானமான பெரிய மலை போன்ற ஆகிருதியுடைய அசுரர் யாவற்றையும் அழியும்படி செய்யும் கற்பாந்த பிரசண்டமாருதத் தால் சிறு குன்றுகள்போல நாசமானுர், அழிந்த வரை எண்ணில் நெருங்கி இருக்கும் சூக்கும மணலினும் அனந்தங்கோடி யாவர், இக்காலத் தில் அந்த நாராயணனுக்குப் பயப்படாதவர்க ளாக நம்மவரில் எவருமே கிடையாது, எமது குலப்பகைவனை பிரகாசம் பொருந்திய அக்கினி போலும் சக்கராயுதத்தை கரத்தில் தரித்திருக் கும் பகவானை ஜயிக்கும்படியான உபாயம் இஃதொன்றேயாம்.

எத்தன் மையினு லெண்ணுகினு மிதில்வேறுயர்ந்த நெறியில்லை
தத்துந் திரையுளஎன் கடலுறைவோன் சரணமன்றிச் சரனில்லை
சித்த மிந்தக் கணந்தொடங்கிச் சேர்கநாராய ணன்சரணம்
பத்த ளுகிநா னவனுய்ப் பகிராதொழிக பாவனையே. (4)

எத்தன்மையினுல் எண்ணுகினும் இதில் வேறு உயர்ந்த நெறி இல்லை தத்துந்திரைப் பாற் கடல் உறைவோன் சரணமன்றிச் சரணில்லை சித்தம் இந்தக்கணந் தொடங்கி நாராயணன் சரணம் சேர்க பத்தனுகி நான் அவனும் பாவனை பகிராதொழிக = எவ்வாற்ருனும் சித்தித்துப் பார்த்தபோதினும் இதளினும் அயலாக மேலான மார்க்கம் கிடையாது, ததும்பி விளையாடும் தரகங்கள் வாய்ந்த க்ஷீராப்தியின்கண்ணே ஆலிலையிற் பள்ளிகொண்டவன் திருவடிகளைத் தவிர்த்து வேறு சரணுகதி இல்லை, மனமானது இந்நொடி தொடங்கி ஸ்ரீ பகவானது திருவடித்தாமரைகளைத் தியானிக்குக, அணன்ய பக்தியுடையவனுய் நானே அவனுக பாவனையானது பேதியாது ஒழிக.

நயந்த தெல்லா மெளிதருளு நாராயணுய நமவென்னு
முயந்த திருமந் திரமென்ற னுளத்தில்விண் ணின்மாருதம்போற்
பெயர்ந்து நீங்கா துள்ளுறைகப் பேணியரியைப் பூசிப்போ
ரியைந்த வரிதா மப்பூசை யியற்றிற் பலனுமலதில்லை. (5)

நயந்ததெல்லாம் எளிதருளும் நாராயணுய நமவென்னும் உயர்ந்த திருமந்திரம் என்றன் உளத்தில் விண்ணில் மாருதம் போல் பெயர்ந்து நீங்காறு உள்ளுறைகப் பேணி அரியைப் பூசிப்போர் இயைந்த அரிதாம் அப்பூசை இயற்றில் பலனு மலதில்லை = விரும்பியவற்றையெல்லாம் சுலபமாக அநுக்கிரகஞ் செய்யும் நாராயணனுக்கு நமஸ்காரமென்று சொல்லப்பட்ட மேன்மைமிக்க அழகிய மந்திரராஜன் எனது மனதில் ஆகாயத்தில் வாயுவைப் போலப் புடைபெயர்ந்து நீங்காது இருதய கோசத்தில் அமைக (நிலவுக) விசுவசித்துப் பகவானைப் பூஜைசெய்வோர் சரணுகதியாகப் பொருந்தியதன்மை விஷ்ணுவே நானென்னும் அந்தப் பூஜையைச் சாதிக்கில் சபலமாம் வேறு ஒன்றுமில்லை.

அந்த நெறியா லரியுருநாளுகி யரியைப் பூசிப்ப
னிந்த வுடன்மா தவன்வடிவா மிதனில்வாயு வடிவாகிப்
பந்த முறுவோன் பராபரனு மிவனே பிராணபவனத்தின்
முந்து மோட்டத் தாலிரண்டா முகுந்தனுகிப் புறத்துறைவான். (6)

அந்த நெறியால் அரிஉரு நாளுகி அரியைப் பூசிப்பன் இந்த உடல் மாதவன் வடிவாம் இதனில் வாயு = கூறிய முறையால் ஸ்ரீ மகாவிஷ்ணு வடிவமேயானுகி ஸ்ரீ முகுந்தனைப் பஜிப்பேன், இந்தச் சரீரம் இலக்ஷுமி நாயகனுன ஸ்ரீ விஷ்ணுவின்

வடிவாகிப் பந்தமுறுவோன் பராபரனும் முந்தும் இவனே பிராண பவனத்தின் ஓட்டத்தால் இரண்டாம் முகுந்தனகிப் புறத்துறைவான் = ஆகிருதியாம், இதன்கண் பிராண வாயுவடிவமாகிப் பந்தப்படுபவன் பர, அபரவடிவ விஷ்ணுவேயாம், முதன்மையான இந்த விஷ்ணுவே பிராண வாயுவின் பிரவாகத்தால் அபர விஷ்ணுவாய் வெளியிலிருப்பன்.

அவ்வா ருன விவ்வரியை யகிலவுபசா ரங்களையுந்
தவ்வா மனத்தா லுளதாகிச் சதாபூசனையே சமைப்பனென
விவ்வா றெண்ணிப் பாரமெலா மெடுத்துச் சுமக்குமனத்தாலே
செவ்வான் பணிப்பாத் திரதூப தீபகந்தமெலாஞ் செறித்து. (7)

அவ்வாருன இவ்வரியை அகில உபசாரங்களையும் தவ்வாமனத்தால் உளதாக்கி சதா பூசனையே சமைப்பனென இவ்வாறு எண்ணிப் பாரமெலாம் எடுத்துச் சுமக்கும் மனத்தாலே செவ்வான் மணிப்பாத்திரம் தூபம் தீபம் கந்தம் எலாஞ் செறித்து = மொழிந்தபிரகாரம் எனது வடிவமான இவ் விஷ்ணுவைப் பூஜித்தற்குச் சகல சரமக்கிரிகைகளையும் சலனமில்லாமனத்தால் இருப்பனவாகப் பாவித்து எப்போதும் பூஜையைச் செய்வேனென்று இந்தப்பிரகாரஞ் சிந்தித்துச் சம்சாரங்களெல்லாவற்றையும் தாங்கிச் சுமந்துகொண்டாடுஞ் சித்தத்தினுனே செக்கர்வான்போன்ற இரத்தினப் பாத்திரங்கொண்டு அபிஷேகமும் தூப, தீபம், சந்தன முதலிய கந்தம் யாவற்றையும் அர்ப்பித்து.

மணிப்பூண் களும்பீ தாம்பரமும் வாடா மலருநல்லமுதுங்
கணிப்பி லாத பொருளெல்லாங் கருத்தாற்பாவித் தருச்சித்துத்
தணிப்பி லாத வன்பான்முன் றந்தப்புறத்தின் பொருட்டிரளாற்
பணிப்பா யவனை யுட்போலப் பரிந்துபுறத்தும் பூசித்தான். (8)

மணிப்பூண்களும் பீதாம்பரமும் வாடாமலரும் நல்லமுதுங் கணிப்பிலாத பொருளெல்லாம் கருத்தாற் பாவித்து அருச்சித்துத் தணிப்பிலாத அன்பால்முன்தந்து அப்புறத்தின் பொருள் திரளால் பணிப்பாயவனை உட்போலப் பரிந்து புறத்தும் பூசித்தான் = நானுவித இரத்தின ஆபரணங்களும் சுவர்ண ஆடையும் அன்றலர்ந்த புஷ்பமும் பரம அன்னமும் என்பன முதலிய எண்ணிறந்த வஸ்துக்கள் யாவற்றையும் மனத்தினுலே பாவனை செய்து அர்ச்சனை பண்ணி அளவுகடந்த தீராத பக்தியினுலே அந்தப்பாகிய வஸ்துக்களைத் தனது ஏவலாளர்களால் சேகரித்துக்கொடுக்கப்பட்டு அவைகளால் சர்ப்பசயன ஸ்ரீமந் நாராயணனை உள்ளே போல (மானச பூசையிற்) புகன்ற முறைபோல அன்புமிக்கு பாகியத்திலும் பூசித்தான்.



ஆய வாறக் கணந்தொடங்கி யகண்டவடிவப் பரமபொருளா
மாய னடிக ளருச்சித்தா னவனைப்போல வாளசுரர்
தீய குணம்விட் டெல்லோருந் திருமாற்கடிமைத் திறம்பூண்டார்
மேய மன்னன் குணமன்றோ விரிந்தவுயிரின் குணந்தானே. (9)

ஆயவாறு அக்கணந்தொடங்கி அகண்டவடிவப் பரம்பொருளாம் மாயன் அடிகள் அருச்சித்தான் அவனைப்போல வாள் அசுரர் எல்லோரும் தீயகுணம் விட்டு திருமாலுக்கு அடிமைத்திறம்பூண்டார் மன்னன் மேயகுணமன்றோ விரிந்த உயிரின் குணந்தானே =

கூறியபிரகாரம் அப்போதாரம்பித்தே கண்டித மற்ற அகண்ட வஸ்துவாம் பரமேசுவரமாயவன் திருவடிகளை அருச்சித்துப் பூசித்தான் அவனைப் போல அவனது ஆட்சிக்குட்பட்டவரானவரளா யுதந்தானவர்கள் எல்லோரும் கொடிய குணங் களைவிட்டு ஸ்ரீமகாவிஷ்ணுவுக்குப் பக்திபூண்டது இராஜாவைப்போலப் பொருந்திய ஆசாரம் அல்லவோ அத்தேயத்தில் பரந்த பிரஜைகளின் ஆசாரமாக இலங்காநிற்பது.

திதிகா தலரு மவர்க்கரசுஞ் செங்கண்மான்மேற் சினந்தீர்ந்து
புதிதா கியபத் தியிலடிமை புக்காரென்று புரந்தரனுந்
துதிவா னவருங் கேட்டலுமே துணுக்கமோடு வியப்பெய்தி
யதிபா தகர்க ளெம்பெருமாற் கன்பா கியதென் னெனவயிர்த்தார். (10)

திதிகாதலரும் அவர்க்கு அரசும் செங்கண்மால்மேல் சினந்தீர்ந்து புதிதாகிய பத்தியில் அடிமைபுக்கார் என்று புரந்தரனும் துதி வானவரும் கேட்டலுமே துணுக்கமோடு வியப்பெய்தி அதிபாதகர்கள் எம்பெருமாற்கு அன்பாகியது என்னென அயிர்த்தார் =

திதிமைந்தரான அசுரர்களும் அவர்களுடைய அரசனும் சிவந்த தாமரை இதழ்போன்ற நேத் திரங்களையுடைய ஸ்ரீ பகவானிடத்துள்ள குரோ தம் நீங்கி நவீனமாகிய பக்தியில் தொண்டரா யினர் என்பதாகத் தேவேந்திரனும், அவனைப் போற்றும் தேவர்களும் செவிகொள்ளலுமே திடுக் கிட்டுப் பயந்தோடும் ஆச்சரியத்தையடைந்து மகா பாதகர்களாகிய அசுரர்கள் எம்பெருமா னுக்குப் பக்திபூண்டது இஃதென்ன காரணம் என ஆச்சரியம் என மயங்கினர்.

திருப்பாற் கடலிற் கண்வளருந் திருமான்முன்பு சென்றணுகி
விருப்பாற் றுதித்திந் திரன்முதலோர் மேகமேனி யனைநோக்கி
நெருப்பாந் தன்மை யசுரரெலா நினைப்பாவித்து நின்வடிவா
யிருப்பா ராஞன் மாயையென வெண்ணினோ மீதென்னென்னு. (11)

இந்திரன் முதலோர் திருப்பாற் கடலிற் கண்வளருந் திருமால் முன்பு சென்றணுகி விருப்பால்

தேவேந்திரன் முதலிய அமரர்கள் க்ஷீராப்தியின் கண்ணே யோகநித்திரை செய்யும் ஸ்ரீ மகா விஷ்ணுவின் சந்நிதியையடைந்து அன்போடும்

துதித்து மேகமேனியனை நோக்கி நெருப்பாந்தன்மை அசுரரெலாம் நினைப்பாவித்து நின்வடிவாய் இருப்பாரானுல் மாயையென எண்ணினோம் ஈது என் என்று = தோத்திரஞ்செய்து நீலமேக சியாமளவர்ண ஞகிய ஸ்ரீ பகவானை நோக்கித் தம்மைச் சார்ந்த வருக்குத் தாபத்தை விளைவிக்கும் அக்கினியைப் போன்றதானவரனைவரும் தேவரீரைத் தியானித்துத் தேவரீருடைய திவ்யமங்களமாய் இருப்பார்களாயின் வஞ்சனையாம் எனக் கருதினோம் இஃதென்னே ஆச்சரியம் என்றனர்.

கொடிய கொலைசெய் வல்லசுரர் குணங்களெங்கே பெறவரிய
முடிவ தானபிறப்பெங்கே முகுந்தன் பத்திப் பேறெங்கே
கடிய தீயோர் நற்குணங்கள் கலந்தாரென்று கதையல்லா
னெடிய மாலே நின்பத்தி நீசர்க்கெல்லா நேருமதோ. (12)

கொடிய கொலை செய்யவல் லசுரர் குணங்களெங்கே பெற வரியமுடிவதான பிறப்பு எங்கே முகுந்தன் பத்திப்பேறு எங்கே கடிய தீயோர் நற்குணங்கள் கலந்தாரென்று கதையல்லால் நெடியமாலே நின்பத்தி நீசர்க்கெல்லாம் நேருமதோ = கொடூரமான கொலையாதி அதிபாதகங்கள் செய்யும் அசுரர்களது துஷ்டகுணங்கள் எவ்விடந்தன பெருவதற்குத் துர்லபமான இனிப்பிறவா அந்திய ஜன்மம் எவ்விடத்தென ஸ்ரீமந் நாராயணனது பக்திப் பிரயோஜனம் எவ்விடத்தன, கொடுமைவாய்ந்த பாதகர் நல்ல குணங்களை அடைந்தார் என்று சொல்லுவது கதையே யல்லாமல் பொய்யேயன்றி வேறல்ல சர்வ வியாபகமாகிய ஸ்ரீ பகவான் தேவரீரது பக்தி தாழ்ந்தோர்க்கெல்லாம் கிடைக்கும் கொலோ?

என்ற விண்ணோர்க் கெம்பெருமா னிமையோரஞ்சா தொழிமின்கள்
வென்றி பயிலும் பிரகலாதன் மீண்டும்பிறவாப் பிறப்புற்றான்
கன்று துயர்போய் மெய்ஞ்ஞானக் கண்ணால்வீடு காண்குவனு
லொன்று மிதனிற் கைதவமென் றுணரற்பால திலதாகும். (13)

என்ற விண்ணோர்க்கு எம்பெருமான் இமையோர் அஞ்சா தொழிமின்கள் வென்றி பயிலும் பிரகலாதன் மீண்டும் பிறவாப் பிறப்புற்றான் கன்று துயர்போய் மெய்ஞ்ஞானக் கண்ணால் வீடு காண்குவன் இதனில் ஒன்றும் கைதவம் என்று உணரற்பால தில்தாகும் = கூறியவண்ணம் தெரிவித்துக்கொண்ட தேவர்கட்கு எமது பெருமானாகிய ஸ்ரீ பகவான் ஹே தேவர்களே! பயப்படாதீர்கள் இந்திராதிகளை வெற்றியையே மேற்கொண்ட பிரகலாதன் இனிப் பிறவாத அந்திய ஜன்மத்தை அடைந்தனன் வருத்தாநின்ற துக்கங்கள் நீங்கித் தத்துவஞான திருஷ்டியினால் மோக்ஷம் அடைவன், இதன்கண் யாதொன்றும் வஞ்சகமென்று அறியத்தக்கது இல்லையாம்.

நல்லோர் தீமை யுறிற்கேடாந் தீயோர்நன்மை யுறினன்று
மெல்லோ ரும்போ மெனவருளி யெம்மானுங்கே மறைதலுமே
கல்லோ லஞ்சூழ் கடனின்றுங் ககனு லயஞ்சேர்ந்தமரரெலாம்
புல்லா ரென்ற வசுரருடன் புரையி லாதமரானுர். (14)

நல்லோர் தீமையுறில் கேடாம் தீயோர் நன்மையுறில் நன்றும் எல்லோரும் போம் என அருளி எம்மான் ஆங்கே மறைதலுமே கல்லோலஞ் சூழ்கடல் நின்றும் ககனுலயஞ் சேர்ந்து அமரர் எலாம் புல்லாரென்ற அசுரருடன் புரையிலாத தமரானுர் = குணவான்கள் குணமின்றியவர்களாயின் கெடுதலாம் குணமில்லாதவர்கள் குணமுடையவராயின் நலமேயாம் ஆகலின் ஹே தேவர்களே! நீங்கள் யாவரும் உங்களிருக்கை சேருங்கள் என்று திருவாய்மலர்ந்தருளி எமது பெருமான் அவ்விடத்திலேயே திருவுருக்கரந்தவுடன் திரைகள் சூழப்பெற்ற திருப்பாற்கடலில் நின்றும் சொர்க்கலோகம் வந்தடைந்து தேவர்கள் யாவரும் பகைவர் என்றிருந்த அசுரர்களுடன் வஞ்சகமில்லா நேயமானுர்.

என்பு குளிரும் பத்தியினு லிமைப்போதொழியா தெப்போது
மன்பு கூர நெடுமாலை யசுரர்வேந்த னருச்சித்தான்
வன்பு மயிலு முக்கரணம் வழுவாப் பூசாபலத்தாலே
முன்பு விவேக மானந்த முதிர்வும் விராக முளைத்தெழுந்த. (15)

என்பு குளிரும் பத்தியினுல் இமைப்போ தொழியாது எப்போதும் அன்புகூர நெடுமாலை அசுரர்வேந்தன் அருச்சித்தான் வழுவா வன்புமயிலும் முக்கரணம் பூசாபலத்தாலே முன்பு விவேகம் விராகம் முதிர்வும் ஆனந்தம் முளைத்தெழுந்த = எலும்பும் நெகிழ்வுற்றுச் சீதளமாகும்படி செய்யும் பக்தியினுல் கணகாலமும் இடைவிடாது அனவரதமும் அன்பு = பக்தி மேலிட ஸ்ரீமந் நாராயணனைத் தரணவேந்திரன் பூஜித்தான் மாறுபாடின்றித் திடவலிமையால் மனேவாக்குக் காயமென்னும் திரிகரணங்களாலுஞ் செய்யின் பூஜையின் வலுவாலே முதலாவதான நித்தியாநித்திய விவேகமும் வைராக்கியமும் முதிர்வும் = சமாறிசட்க சம்பத்தியும் அனந்தம் முமுட்சுத்துவமும் ஆகிய சாதனங்கள் யாவும் உண்டாயின.

சாத னங்கண் முதற்குணங்கள் சாலவுண்டா யிவனெஞ்சங்
காத லான போகத்திற் கவலும்பற்றுக் கழன்றனவாற்
சீத முத்து முத்துடனே செர்ந்தாற்பற்று சேர்வுறுமோ
வாத லாலே போகத்தி லழுந்தாதுள்ள மாறினதே. (16)

சாதனங்கள் முதற்குணங்கள் சாலவுண்டாய் இவன் நெஞ்சங் காதலான போகத்திற் கவலும் = நித்தியா நித்திய வஸ்து விவேகாதியே முதலவாய் மைத்திரி சாநிதியாதி சகல குணங்களும் அவதிபரியந்தம் உண்டாய் பிரகலாதனது மன

பற்றுக் கழன்றன சீதமுத்து முத்துடனே சேர்ந்தால்பற்றுச் சேர்வுறுமோ ஆதலாலே போகத்தில் அழுந்தாது உள்ளம் ஆறினதே = மானறு ஆசைப்படத்தக்க விடயபோகங்களில் வருத்தும் ஆசக்தியானது ஒழிந்தன=அசாஸ்திரீய லோகவிருத்தங்களில் அவன் இரமிப்பதே கிடையாது குளிர்ச்சிபொருந்திய முத்து முத்துடனே சேர்ந்தால் சங்கமுடைமையாகுமோ ஆதலாால சப்தாதி போகங்களில் இரமியாது மனமானது சாந்தியையே அடைந்தது.

பூன்ற வடிவுங் காணுமற் போகத் துள்ளு மழுந்தாம
னூன்ற வூச லாடுவபோ னல்லோ னுள்ளந் திரிவதனை
மூன்று சகத்தின் சான்ருன முகுந்தன் றிருவுள் ளத்துணர்ந்து
சான்ற குணத்தோன் பூசிக்குந் தனிமா மனையிற் தானடைந்தான்.(17)

பூன்ற வடிவங் காணுமல் போகத்துள்ளும் அழுந்தாமல் நான்ற ஊசலாடுவபோல் நல்லோன் உள்ளந் திரிவதனை மூன்று சகத்தின் சான்ருன முகுந்தன் திருவுள்ளத்து உணர்ந்து சான்ற குணத்தோன் பூசிக்குந் தனி மா மனையில் தான் அடைந்தான் = பரிபூரண பரமான்மாவைச் சாக்ஷாத்கரியாமலும் விஷயபோகங்களில் மூழ்காமலும் தொங்கப்பட்ட ஊஞ்சல் ஆடுவதுபோலத் தமது அன்பனுடைய மனம் சஞ்சலப்படுவதனை மூவுலகத்தின் சாக்ஷியான திருமாலானவர் திருவுள்ளத்தின்கண்ணே ஞானசக்தியினுனே தெரிந்தருளி உயர்ந்த அறிஞசிகாமணியாகிய கல்யாண குணங்கள் நிறைந்த பிரகலாதன் பூஜைசெய்யும் ஒப்பற்ற மாட்சிமை தங்கிய அரண்மனையில் சுயம் பிரசன்னமாயினர்.

மூவ ராகி நின்றமுதன் மூலமடைந்த படியறிந்து
தேவ தேவன் றனைமுன்னர்ச் செயலினிரட்டிப் பூசனைசெய்
தியாவ ராலுங் காண்பரியவெம்மா னம்மாவெதிர்ந் தனனென்
ருவ தான படியன்பா லவனைத் துதித்தானசுரேசன். (18)

மூவராகி நின்ற முதல் மூலம் அடைந்தபடி அறிந்து தேவ தேவன்றனை முன்னர்ச் செயலின் இரட்டிப்பூசனை செய்து யாவராலுங் காண்பரிய எம்மான் அம்மா எதிர்ந்தனன் என்று ஆவதானபடி அசுரேசன் அன்பால் அவனைத் துதித்தான் = மும்மூர்த்திகளாகிக் கிரீடிக்கும் ஆதிகாரணனுகிய திருமால் ஆவிர்ப்பவித்ததைக் கண்டு தேவர்களுக்கெல்லாந்தேவனுகிய மகாதேவனும் ஸ்ரீமந் நாராயணனைப் பூர்வஞ் செய்ததைக் காட்டிலும் இரண்டுமடங்கு பூசித்து அன்பில்லார் யாவராலுங் காண்டற்கரிய எம்பெருமான் அகோ ஆச்சரியம் பிரசன்னமாயினன் எனக்கூறிச் சுருதி பெரியோர் சொல்லியபடி தானவேந்திரனுகிய பிரகலாதன் பரமப்பிரீதனுய் மகிழ்ச்சியோடும் அம் மகாவிஷ்ணுவை வாக்கால் தோத்திரஞ் செய்தான்.

அண்ட மென்னு மொருவீட்டி லரியபொருள்சேர் சரக்கறையே
சண்ட பானு வெனவுதயாத் தமுமற்றொளிருந் தற்பரமே
கண்ட வுயிர்க லனைத்திற்குங் களைகண்ணான வான்றுணையே
புண்டரீகை நாயகமே போற்றி போற்றி மிகப்போற்றி. (19)

அண்டமென்னும் ஒரு வீட்டில் அரியபொருள்சேர் சரக்கறையே சண்டபானுவென உதயாத்தமும் அற்று ஒளிருந் தற்பரமேகண்ட உயிர்கள் அனைத்திற்கும் களை கண் ஆன வான்றுணையே புண்டரீகை நாயகமே போற்றி போற்றி மிகப்போற்றி = திரிபுவனமாகிய பிரமாண்டமென்னும் ஒப்பற்ற பவனத்தில் லோகத்திரயங்களிலும் கிடைத்தற்கரிய போக மோட்சங்கள் பொருந்திய உக்ரானம்போன்றவரே! உச்சிக்காலத்திலுள்ள பிரசண்ட சூரியன் என உதியாது ஒடுங்காது பிரகாசிக்கும் பரமப்பிரகாசமே காணப்படுகிற சகல ஜீவர்கட்கும் பற்றுக்கோடான உயர்ந்த சகாயனே செந்தாமரைச் செல்வி மணவாளரே! நமஸ்காரம், நமஸ்காரம் மிகவும் நமஸ்காரம்.

மேலோ னாகிச் சகம்படைக்கும் விளையாட் டுடைய வித்தகனே
நாலோ டொருப தெனுமுலகி னண்ணு வுயர்ந்த நற்பொருளே
யாலோ னாகிக் கண்வளர்ந்த வையா மெய்யா வருண்மூர்த்தி
பூலோ கத்தி னாயகமே போற்றி போற்றி மிகப்போற்றி. (20)

மேலோனாகிச் சகம்படைக்கும் விளையாட்டுடைய வித்தகனே நாலோடு ஒருபது எனும் உலகில் நண்ணு உயர்ந்த நற்பொருளே ஆலோலனாகிக் கண் வளர்ந்த ஐயா மெய்யா அருள் மூர்த்தி பூலோகத்தின் நாயகமே போற்றி போற்றி மிகப் போற்றி = உயர்ந்தோனாகிச் சதுர்த்தச புவனங்களையும் சிருஷ்டிக்குங் கிரீடையையுடைய சர்வஞ்ஞ சிகாமணியே! பதினான்கு உலகினும் கிடைத்தற்கரிய மேலான நல்ல வஸ்துவே ஆலிலையின் கண்ணே துயில்கொண்டருளும் இறைவனே! சத்திய வடிவரே கிருபாவிக்கிரகமே பூவுலகத்தினர் நியந்தாவே நமஸ்காரம் நமஸ்காரம் மீள மிகவும் நமஸ்காரம்.

கேத மிகுந்த வசுரரெனுங் கிளைத்தா மரைக்கு நெடும்பனியே
வேத நெறிச்செல் லமரரெனும் விரிதா மரைக்கு வெய்யோனே
பேத மறுத்தோ ருள்ளமெனும் பெருந்தா மரையிற் பிரமரமே
பூத மனைத்தி னாயகமே போற்றி போற்றி மிகப்போற்றி. (21)

மிகுந்த கேத வசுரனெனுங் கிளைத் தாமரைக்கு நெடும் பணியே வேதநெறிச்செல் = அன்னியர்களுக்கு மிகுந்த குற்றங்களை விளைவிக்கும் அசுரர் என்னுங் கிளைத்தாமரைக் கூட்

அமரரெனுந் தாமரை விரிவுக்கு வெய்யோனே பேதமறுத்தோர் உள்ளமெனும் பெருந்தாமரையில் பிரமரமே பூதமனைத்தின் நாயகமே போற்றி போற்றி மிகப்போற்றி = டங்களுக்குப் பெரிய இமமே வேதமார்க்கத்திற் செல்லும் தேவர்களென்னும் தாமரை விகசிதமாதற்கு பாஸ்கரனே அபேத திருஷ்டியையுடையவரது மனமென்னும் தாமரைக்கு பிரமரமே (மதுகரமே) சர்வஜீவர்களின் தலைவனே! நமஸ்காரம் நமஸ்காரம், மிகவும் நமஸ்காரம்.

என்ப தான துதிபலவு மிசைப்ப விதயங் குளிர்ந்தருளி
யன்ப மறுத்துப் பிறவாவா ருயவரங் கேளெனக் கருணை
முன்ப னுரைப்ப வனைத்திதய முளரி யினுஞ்சேர் முதற்பொருளே
துன்ப மில்லா வுயர்பதமே ததுவே யருள்வா யெனச்சொன்னான். (22)

என்புதான துதிபலவும் இசைப்ப இதயங் குளிர்ந்தருளி அன்ப மறுத்துப் பிரவாவாருய் வரங் கேள் எனக் கருணைமுன்பன் உரைப்ப அனைத்திதய முளரியினுஞ்சேர் முதற்பொருளே துன்பமில்லா உயர்பதம் ஏது அதுவே அருள்வாய் எனச் சொன்னான் = இவ்வண்ணம் கூறிய பிரகாரமாய அனேக தோத்திரஞ் செய்து ஸ்ரீ பகவான் திருவுள்ளம் மகிழ்ந்தருளி அன்ப மறுத்துப் பிறவாவாருய (மீண்டும் ஜனித்தற்குக் கூடாதாய) வரத்தைக் கேட்பாயாக என அக்கிரகண்ணியனான ஸ்ரீமந் நாராயணன் திருவாய்மலர்ந்தருளச் சகல ஜீவர்களின் இதய தாமரைகளில் உறைந்தருளும் ஆதிவஸ்துவே துயரம் அணுவும் அணுகாத மேலான பதம் யாதோ அப்பதத்தினையே அருள்வாய் எனப் பிரார்த்தித்தான்.

சித்தப் பிரம மெல்லாம்போய்த் தெளிந்த பரம சுகம்பெற்றுச்
சுத்தப் பிரமத் திளைப்பாற முடிவாம் விசாரந் தோன்றுகவென்
றத்தப் பதும மமைந்தருளி யமலனேக வவன் றுதியான்
மெத்தப் பரவி மலர்தூவித் தொழுதான் விவேகிகளின் மிக்கோன். (23)

சித்தப் பிரமமெல்லாம் போய்த் தெளிந்த பரம சுகம் பெற்று சுத்தப் பிரமத்து இளைப்பாற முடிவாம் விசாரந் தோன்றுக வென்று அத்தப்பதுமம் அமைத்தருளி அமலன் ஏக, அவன் துதியால் மெத்தப் பரவி மலர் தூவி விவேகிகளில் மிக்கோன் தொழுதான் = சித்தத்திலிள்ள மயக்கங்களெல்லாம் (பிராந்தியால் காரணமான அஞ்ஞானமும்) ஒருங்கு அகன்று அதி சொச்சமாயிலகும் மேலான இன்பத்தையடைந்து தூய சிவசொரூபத்தில் பிரத்யக்கபின்ன பிரஹ்மத்தில் விசிராந்தியடைய அவதிபரியந்தம் ஆராய்ச்சியானது, மனத்தே உளதாகுக என்று கரதாமரையைச் சிரத்தில் வைத்தருளி ஸ்ரீமந் நாராயணன் ஆசீர்வதித்து அந்தர்த்தானமாக அம்மகாவிஷ்ணுவை அனேக தோத்திரங்களால் புகழ்ந்து மிகவும் வணங்கி புஷ்பாஞ்சலி செய்து விவேகளில் சிரேஷ்டனான பிரகலாதன் வணங்கினான்.

பனிவார் கடலிற் றிரையென்னப் பரம புருடன் மறைந்ததற்பின்
னிளிதாம் பதுமா தனத்திலிருந் திறைவன் றுதிக ளேத்தியபின்
சனியா விசாரந் தந்தளித்தான் சனன மறுக்குந் தனிமூர்த்தி
நனிநா நம்மை யாரென்று நாடுவோ முள்ளென நினைவான். (24)

பனிவார் கடலிற்றிரையென்னப் பரமபுருடன் மறைந்ததன்பின் இனிதாம் பதுமாதனத்திலிருந்து இறைவன் துதிகளேத்தியபின் சனனம் அறுக்குந் தனிமூர்த்தி சனியாவிசாரந் தந்தளித்தான் உள் நம்மையார் என்று நாம் நனிநாடுவோம் எனநினைவான் = குளிர்ச்சியும் நெகிழ்ச்சியும் பொருந்திய சமுத்திரத்தின்கண் அலைகள் வந்து போவதேபோல உன்னதமான புருடோத்தமனை ஸ்ரீமகாவிஷ்ணு அந்தர்த்தானமானபின் மிகவும் அனுகூலமாகிய பத்மாசனத்தில் வீற்றிருந்து பரம்பொருளைத் தோத்திரங்களாற் தோத்தரித்தபின்னர், ஜனன மரண சம்சாரத்தை நிவர்த்திக்கும் ஒப்பற்ற தெய்வமூர்த்தி மீண்டும் பிறவாததற்கு ஆராய்ச்சியைக் கொடுத்தருளினர். அகத்தே நமது சொரூபத்தை எத்தன்மையதாகவிருக்கிறது என்று மிக விசாரிப்போம் என்பதாக எண்ணினன்.

யானர் முன்ன மெவனனே னிந்தப்புவி யாடம் பரத்தி
லானு திருந்து நின்றோடி யழுது சிரித்து மகிழ்ந்தயர்ந்தே
னுன வான சகமல்லே னகங்கல் புல்லு மண்மரங்க
டானய்ப் புறம்பா யசேதனமாஞ் சகநா னென்னத் தக்கதோ. (25)

இந்தப் புவி ஆடம்பரத்தில் யான் ஆர், முன்னம் எவன் ஆனேன் ஆனதிருந்து நின்று ஓடி அழுது சிரித்து மகிழ்ந்து அயர்ந்தேன் நானுவான சகம் அல்லேன் நகம், கல், புல்லு, மண், மரங்கள் தானய்ப் புறம்பாய் அசேதனமாஞ்சகம் நான் என்னத் தக்கதுவோ = இப்புவன சம்சார ஆடம்பரத்தில் யான் யாவன் இந்த விசாரந் தோன்றுவதற்குப் பூர்வம் எத்தகைய வடிவமாயிருக்கின்றேன் கெடாதிருந்து எழுந்துசென்று உரோதனஞ் செய்து நகைத்துச் சந்தோஷித்து சர்வேந்திரிய வியாபாரத்தில் மயங்கியுள்ளேன், பர்வதம் பூமிமட்டம் இருப்பதான கல், திருணம், மண், விருட்சங்களாயுள்ள பாகியமாய் ஜடமாம் உலகம் அகம் என்று சொல்ல யோக்கியமாமோ?

இல்லா விடத்துண் டாய்மூக மெனலாய்க் காற்றி லியங்குவதாய்ச்
செல்லா நின்ற சிலநாளிற் சிதைந்து சடமா முடனுனே
நில்லா தாய்ப் பொய்க் கேதோன்றி நிராகாரமதா யறிவின்றிப்
புல்லா வறிவிற் செவிக்குணவாய்ப் பொன்றுஞ் சத்த நானுமோ. (26)

இல்லா விடத்துண்டாய் மூகம் எனலாய்க் காற்றில் இயங்குவ = அசத்தாக இருந்தும் சத்துப்போலத் தோன்றுவதாய்ப் பேசுவதில்லாததாய் பிராணனேட்டத்



தாய்ச் செல்லாநின்ற சிலநாளில் சிதைந்து சடமாம் உடல் நானே நில்லாதாய்ப் பொய்க்கே தோன்றி நிராகாரமதாய் அறிவின்றி அறிவு இல் புல்லா செவிக்கு உணவாய் பொன்றுஞ் சத்தம் நான் ஆமோ = தால் நடிப்பதாய் கிழமை வாரங்களாய்க் கழியாநின்ற சில தினங்களில் கெட்டுப்போவதாய் அசேதனமாகிய தேகம் யானே, சாசுவதமல்லாததாய் சுரம், மந்திரம், பதம் என்னும் மித்தையாகப் பிரதீதியாவதாய்ச் சூன்யாகிருதியாய் ஜடமாம் அவிவேகதசையில் பொருந்திய சுரோத்திரத்திற்கு விஷயமாய் அழிவுபடும் சத்தம் அகம் ஆகுமோ?

தோலி லன்றி யறிவறிதாய்த் தோற்றமின்றிக் கணத்திறந்து
கோலு மறிவா லறிந்தறிவுகூடாப் பரிச நானல்ல
காலி லசைந்து வசித்துருவாய்க் காதன்மிக்குக் கணத்திறக்குந்
தாலு வுணவாய்த் திரவியத்திற் சனித்துச்சட மாஞ்சுவைநானே. (27)

தோலிலன்றி அறிவறிதாய்த் தோற்றமின்றிக் கணத்திறந்து கோலும் அறிவால் அறிந்து அறிவுகூடாப் பரிசம் நான் அல்ல காலில் அசைந்து அசித்துருவாய்க் காதல்மிக்குக் கணத் திறக்கும் தாலு உணவாய்த் திரவியத்தில் சனித்துச் சடமாஞ் சுவை நானே = துவக்கிந்திரியத்தாலன்றி மற்ற இந்திரியங்களால் அறிகற்குக் கூடாதாய் பிரத்தியக்ஷமின்றி க்ஷணத்தில் நாசமாய் விருத்தி அவச்சின்ன வஸ்துவால் கவரும் அசேதனமான பரிசம் அகம் அல்ல காற்றைப்போல் அற்பமாய் அசைவுடையதாய்த் துச்சமாய் ஆன சகத்து விடயமாய் க்ஷணத்தில் நாசமாகும் சிங்குவேந்திரியத்துக்கு விஷயமாய் பொருள்களிலுண்டாய் ரசிக்கும் அசேதனமாம் தசம் அகம் அல்ல.

கணத்தி னிறக்குங் காண்பவற்றிற் காட்சி தன்னிற் பற்றுகிப்
புணர்ப்பில் காண்பா னிடத்திறக்கும் போதமில்லா வொளிநானே
குணக்கு மூக்கா மசேதனத்தாற் குறிப்ப தாகிச் சடமாகி
மணக்கு நொய்ம்மை நியமங்கள் மருவு கந்த நானுமோ. (28)

கணத்தில் இறக்கும் காண்பவற்றில் காட்சிதன்னில் பற்றுகிப் புணர்ப்பு இல்காண்பா னிடத்து இறக்கும் போதமில்லா ஒளி நானே அசேதன மூக்காம் குணக்கு குறிப்பதாகிச் சடமாகி நொய்ம்மை நியமங்கள் மருவு மணக்கும் கந்த நான் ஆமோ = க்ஷணவிநாசிகளாயகடாதி திருசியத்தில் தரிசனத்தில் அவ்விரண்டின் அதீத சித்தியையுடையதாய் சங்கமின்றிய திருஷ்டாவின்கண் நாசமாகும் அசேதனமான ரூபம் அகம் ஆமோ சடமாய்க் கிராணேந்திரிய குணக்கு (வளைந்திருப்பதாய்) அவச்சின்ன வஸ்துவால் நுகரப்படுவதாய் ஜாட்டியமாய் க்ஷணத்தில் நியமமாய்க் கேட்டினைப்பொருந்தும் வீசும் கந்தம் அகம் ஆகுமோ.

எனதற் றெண்ண யெல்லாம்போ யிளைப்பற் றைந்து பொறிமயல்போ
யனக வறிவாய்த் தொழிலின்றி யறியும் பொருடீ ரறிவேயாய்க்
கனமா யுள்ளும் புறம்பினுநிட் களமா யுண்டா மாத்திரமாய்ச்
சனன மரணமிலா வென்னைத் தயங்கக் கண்டேன் சத்தியமே. (29)

எனதற்று எண்ணமெல்லாம் போய் இளைப்பற்று ஐந்து பொறி மயல் போய் அனகன்றி வாய்த் தொழிலின்றி அறியும்பொருள் தீர் அறிவேயாய் உள்ளும் புறம் பினும் கனமாய் நிட்களமாய் உண்டா மரத்திரமாய்ச் சநந மரணமிலா என்னை தயங்கக் கண்டேன் சத்தியமே =

மமதையேகி மனோவிகாரங்களெல்லாம் ஒழிந்து சாந்தமாய் பஞ்ச இந்திரிய பிரமை நீங்கி சுத்த சேதனமாய் நிஷ்கிரியமாய்த் திருசிய சம்பந்த மற்ற சின்மாத்திரமாய் உள்ளிலும் வெளியிலும் வியாபகமாய் அவயவமற்றதாய் சன்மாத்திர மாய் ஜனன மரணமில்லாமல் அமலமாயிருக்கும் எனது சொரூபத்தை அபரோக்ஷமாக விளங்கக் கண்டேன் உண்மையே,

ஆவா விப்போ துள்ளபடி யறியு நெறியி லெனையறிந்தே
னோவா விகற்ப மற்றவுள் ளொளியாஞ் சீவ னுருவிதுவோ
தாவா தெங்கு முளநானுந் தத்துவத்திற் சக மெல்லா
மேவா நின்ற விரவிமுதற் கடமீருக விளங்கிய தால். (30)

ஆ ஆ அறியும் நெறியில் எனை இப்போது உள்ளபடி அறிந்தேன் ஓவாவிகற்பமற்று அறிவு உள் ளொளியாஞ் சீவன் உருவிதுவோ தாவாது எங்கும் உள நானுந் தத்துவத்தில் இரவிமுதல் கடம் ஈருக மேவாநின்ற சகமெல்லாம் விளங்கியது =

ஆச்சரியம்! ஆச்சரியம்! சுருதி ஆன்றோர்கள் எம்முறையில் அறிந்தார்களோ அம்முறையில் எனது சொரூபத்தை இப்பொழுது உள்ளபடியே உணர்ந்தேன், இடைவிடாது சலிக்கும் சலனம் ஒழிந்து, ஞானவடிவ அந்தர்ஜோதியாம் ஆன்ம வடிவம் இதுவேயாம் கெடாது சர்வான்மகமா யுள்ளயானும் உண்மை வஸ்துவில் சூரியன்முதல் குடம் ஈருகப் பொருந்தாநின்ற பிரபஞ்சமியாவும் இலங்காநிற்கும்.

உள்ளி லொளியாற் கனற்பொறிக ளொளிர்வதென்ன வைம்பொறி
தெள்ளி யறியு மென்னாலே செறிசித்திரமாய்த் திகழ்ந்தனவாற்
றள்ளி வயனோ டுட்பட்ட தனிக்கற்பாந்தத் துயிரனைத்தும்
வெள்ள வெளியா மப்போது மீளாதொளிரு மென்வடிவே. (31)

உள்ளில் ஒளியால் கனற்பொறி கள் ஒளிர்வதென்ன சித்திரமாய் தன் இல செறி ஐம்பொறிதெள்ளி அறியும் என்னாலே திகழ்ந்தன

அந்தர்ஜோதியாய், அக்கினியின் பொறிகள் விளங்குவதுபோன்று விசித்திரமாய்ப் பொருந் திய பஞ்சேந்திரிய விருத்திகள் தெளிவாய் அறி கின்றன, என்னாலே விளங்குகின்றன, கற்ப

கற்பாந்தத்துதனி அயனோடு உள்ப்பட்ட உயிரனைத்தும் வெள்ளவெளியாம் அப்போது மீளாது என் வடிவு ஒளிரும் = முடிவில் ஒப்பற்ற பிரம்மாவோடும் அந்தர்க்கதமான ஜீவர்கள் அனைத்தும் அடியோடு மறையும் அப்போது அகலாது எனது உருவம் பிரகாசித்துக்கொண்டிருக்கும்.

இவனு னென்றுள் ளேபற்று மெண்ணமெங்கே யெல்லையறப்
புவன மெல்லா நிறைந்தொளிரும் போதவடிவா மென்றனக்குக்
கவரு மனப்பா வனைதானே கருதிலுண்டோ முடிவில்சுகத்
துவமை யில்லா வுபசாந்த வுணர்வாங்கண்ணே யுலகெங்கும். (32)

எல்லையறப் புவனமெல்லாம் நிறைந்தொளிரும்போதவடிவாம் என்றனக்கு இவன்னென்றுள்ளே பற்றும் எண்ணம் எங்கே கருதில் கவருமனப்பாவனைதானே உண்டோ முடிவில் சுகத்து உவமையில்லா உபசாந்த உணர் வாங்கண்ணே உலகெங்கும் = தேசகாலாதிபரிச்சேதரகிதமாய் எல்லா உலகங்களிலும் பூரித்திலங்கும் ஞானசொரூபமாம் எனக்கு, இவன், நான் என்பதாக ஆந்தரத்தில் அவலம்பனம், பற்றுக்கோடு நினைவுயாங்ஙனமாம், ஆராயில் கிரகிக்கும் சித்தத்தின் சிந்தனை தான் உளதாமோ, அனந்தானந்த உவமானரகித உபசமமய சின்மய திருஷ்டியே சர்வ திருஷ்டிகளிலும் ஜயம் உறும்.

## அவதாரிகை

சர்வான்மகமாய்ச் சுத்தமாயிருக்கும் பிரத்யக்கான்மாவாக விளங்கும் என் பொருட்டே நமஸ்காரம் எனல் :

நோக்கப் பட்ட நோக்கெல்லா நுண்மையறிவா நோக்கொன்றே
யாக்கப் பட்ட வுயிரனைத்தி னகத்தாயறிவ திலா வறிவாய்த்
தாக்கப் பட்ட தொன்றில்லாத் தனித்தத்துவமாய்த் தனையன்றிப்
போக்கப் பட்டா தில்லாவெம் பொருட்டு வணங்கிப் புகழுதுமால். (33)

அறிவாம் நோக்கொன்றே நோக்கப்பட்ட நோக்கெல்லாம் நுண்மை ஆக்கப்பட்ட உயிர் அனைத்தின் அகத்தாய் அறிவதிலா அறிவாய்த் தாக்கப்பட்ட தொன்றில்லாத் தனித் தத்துவமாய்த்தனையன்றிப் போக்கப் பட்டதில்லா எம்பொருட்டு வணங்கிப் புகழுதும் = சின்மய திருஷ்டி ஒன்றே சகல அனாத்ம விஷயங்களையறியும் திருஷ்டிகளுக்கெல்லாம் சூக்ஷுமமே படைக்கப்பட்ட சரீரங்களோடுகூடிய சர்வ ஜீவர்களின் இதயத்திருப்பதாய் அப்பிரமேயமாய்த் திருசியாதிகளில் சம்பந்தமுறாத கேவல உண்மை வஸ்துவாய் பிரத்யக்கானமாவான தன்னைத் தவிர, போக்கப்பட்ட (போற்றப்பட்டதில்லா) துதிக்கத்தக்கதில்லா எனது சொரூபத்தையே நமஸ்கரித்துத் தோத்தரிப்பாம்.

அறவு நொய்தாய்ச் சமமாகி சவிகார மதாயதீதமா
யிறவு நிகழ்வோ டெதிர்வென்ன வெண்ணுங்கால மூன்றிலதாய்ப்
பிறவு நினைக்கு நினைவின்றிப் பேத மற்றவறிவாலே
நிறைவி தான சக்தியெலா நேரேசெய்யப் பட்டனவே. (34)

அறவுநொய்தாய்ச் சமமாகி அவிகாரமதாய் அதீதமாய் இறவு நிகழ்வோடு எதிர்வென்ன எண்ணுங்காலம் மூன்றிலதாய்ப் பிறவும் நினைக்கும் நினைவின்றிப் பேதமற்ற அறிவாலே நிறைவிதான சத்தியெலாம் நேரே செய்யப்பட்டனவே = அத்தியந்தம் சொச்சமாய் எங்கும் ஒரேபடித்தாய் விகாரமற்றதாய் விஸ்வாதீதமாய், பூத, வர்த்தமான, பௌஷியத்தென்று சொல்லப்பட்ட கணக்கிடும் திரிகால அதீதமாய், மற்றும் எண்ணும் எண்ணங்களும் எண்ணப்படாவிடயங்களுமின்றி எவ்வேற்றுமையற்ற உணர்வாலே நிறைந்திருப்பதான விசித்திர சத்திகளெல்லாம் விசித்திர சத்திகள் = பிரமவிஷ்ணுவாதிகள், சந்நிதிமாத்திரத்தால் கற்பிக்கப்பட்டனவேயாம்.

தாக்கற் றொன்றி லறிவுக்குச் சமமேயொழிந்து கண்டதில்லை
வாக்குக் கெட்டாமை யினாலேவச னங்களினாற் சமந்தோன்ரு
நோக்கற் கரிதாம் பொய்ப்பொருள்போ னொய்தாயழியா நிராசைதனைத்
தேக்கிற் சமபா வனைதானே திரைதீர்கடல்போற் சேடிக்கும். (35)

ஒன்றில் தாக்கற்று அறிவுக்குச் சமமேயொழிந்து கண்டதில்லை வாக்குக்கெட்ட ாமையினாலே வசனங்களினாற் சமந்தோன்ரு பொய்ப்பொருள்போல் நோக்கற்கரிதாம் நொய்தாய் அழியா நிராசைதனைத்தேக்கில் திரைதீர் கடல்போல சமபானைதானே சேடிக்கும் = யாதொன்றிலும் சம்பந்தமில்லாத சிதாத்மவஸ்துவிற்குச் சமத்தன்மையே இயற்கையல்லாமல் அயல் ஒருவிதம் பார்த்ததில்லை, நிற்குண நிர்விசேடமாதலின் வசனத்திற்குக் கோசரமாகாமையினால் வசனங்களினால் = சப்தத்தின் சக்கியார்த்தத்துக்குச்சமமானது கோசரமாகா. சூன்யவாதிகள் கூறும் சூன்யம்போல நிர்விஷயமாதலின் அறிதற்கரிதாய்ச் சூக்குமமாய்ச் சாஸ்வதமாய் ஆசையின்மையை நிரம்பச்செய்யில் சமதிருஷ்டியானது அலை ஒழிந்த சமுத்திரம்போலத் தானே எஞ்சிநிற்கும்.

செயலுஞ் செயலி லாமையுமாய்த் தியங்குஞ்செயலிற் சேரறிவு
பயிலும் வலையிற் புட்போலப் பந்தமடையு மாதலினான்
மயல்வெங் கோப மிரண்டாலு வருந்தொந்தனையா மயக்காலே
யுயிர்க ளெல்லா நிலப்புழுப்போ லொன்றுமகலா தாகுவதாம் (36)

செயலுஞ் செயலிலாமையுமாய் செயலிற் சேர்ந்தியங்கும் அறிவு = உபாதிவயத்தால் கிரீடையுடையதாயும் நிருபாதித் தன்மையால் கிரீடையில்லாததாயும்,

வலையிற் பயிலும் புட்போலப் பந்தமடையும் ஆதலினால் மயல் வெங்கோபம் இரண்டாலும் வருந் தொந்தனையாம் மயக் காலே உயிர்கள் எல்லாம் நிலப் புழுப்போல் ஒன்றும் அகலா தாகுவதாம் = கரணேந்திரிய வியாபாரங்களிற் பொருந்திக் கலங்கும் (கோரும் சித்து) கிராதஜாலத்தில் அகப்பட்டதால் பட்சி கட்டுண்டுழல்வதுபோலக் கட்டுப்பட்டு உழலும் ஆகையினால் ஆசை மிகு கோபம், இரண்டாலும் எழுந்த துவந்துவம் (மானாவமானம்) பசி, தாகம் சீதோஷ்ணம் சுகம் துக்கம் முதலிய மோகத்தாலே ஜந்துக்கள் யாவும் தரைக்கீடமென ஒன்றுங்கூட நீங்காமல் உழல்வனவாம்,

நீடத் தகுமன் னுயிர்க்கெல்லா நெஞ்சத் துறைவாய் நெடுநாளாக்
கூடப் பெற்றே னுனையிந்தக் குறைவில் பேற்றை யார்பெற்றார்
தேடப் பட்டாய் பெறப்பெற்றாய் தெரிய நின்றாய் விகற்பமெலாம்
வீடப் பட்டா யெதுவானா யதுவாய் நின்றாய் மிகத்துதிப்பாம். (37)

நீடத்தகுமன் னுயிர்க்கெல்லாம் நெஞ்சத் துறைவாய் நெடு நாளாக உனைகூடப் பெற்றேன் இந்தக் குறைவில் பேற்றை யார் பெற்றார் தேடப்பட்டாய் விகற்ப மெலாம் வீடப்பட்டாய் தெரிய நின்றாய் பெறப்பெற்றாய் எது வானாய் அதுவாய் நின்றாய் மிகத்துதிப்பாம் = எங்கும் விஸ்தாரமாகப் பொருந்தியுள்ள உயிர்கள் எவற்றினதும் உள்ளத்தின்கண்ணே இருப்பதாய் வெகுகாலங் கழித்து உன்னை ஆன்றோர் வசனத்தாலும் சுருதியாலும் அறிந்து சேர்ந்தேன், இந்தப் பூரணமாகிய பிரயோஜனத்தை யாவரே அடைந்தவர், நன்கு விசாரிக்கப்பட்டாய், பரமார்த்த ரூபத் தன்மையானே விகற்பம் யாவும் விடுபட்டாய் (ஒழிக்கப்பட்டாய்) சத்தியக் ஞானானந்த சொரூபமாகப் பிரத்தியக்ஷமானாய் ஐக்கியத்தால் சோகம் பாவனை அதாவது அகம் பிரஹ்மம் என்று அநுபவிக்கப்பட்டாய் முன்னர் எதுவாயிருந்தனையோ இப்போது அதுவாயிருக்கின்றாய் நிரந்தரம் தோத்திரஞ் செய்து அநுசந்திப்பாம்.

## அவதாரிகை

மகாவாக்கிய விசார பூர்வகமாகத் தன்னைத் தொழுதல்.

நானே நீயாய் நீ நானாய் ஞானவடிவாய் முடிவின்றித்
தானே யாகி யண்டத்தின் றலையாய்ப் பரம தத்துவமாங்
கோனே யுன்னைத் தொழுகின்றேன் கொண்டன் மறையா நிறைமதியோ
னானோர் நினைவு களின்மறையா வொளியா முருவே யுனைப்பணிகேன். (38)

நானே நீயாய் நீ நானுய் ஞான வடிவாய் முடிவின்றித் தானே யாகி அண்டத்தின் தலையாய்ப் பரம தத்துவமாங் கோனே உன்னைத் தொழுகின்றேன் கொண்டல் மறையா நிறைமதி போல் நேர் ஊன் நினைவுகளில் மறையா வொளியாம் உருவே உனைப்பணிகேன் = அகமே துவமாய், துவம் அகமாய், அறிவு சொரு பமாய் அனந்தமாய் சுயமேயாய் ஜகநாயகனுகிய மேலான தத்துவமாய் பரமாத்மாவே! உன்னை நமஸ்கரிக்கின்றேன் மேகத்தால் மறைக்கப் படாத பூரண சந்திரன்போலப் பிரத்தியக்ஷமான தேகாதிகளின் அபிமான வடிவ நினைவுகளால் மறைபடாத சிற்பிரகாச சொரூபமே உன்னை நமஸ்கரிக்கின்றேன்.

உன்ன லென்னு மாவரண மொன்று மில்லா வெளியாகித்
தன்ன தான சுகவடிவிற் ருனே விளங்கித் தன்வசமா
மென்ன துருவை யான்பணிகே னிருந்து நடந்துஞ் சாந்தமுற்று
மன்ன தன்ன திலதாகு மனைத்துஞ் செய்தும் பற்றிலதாம். (39)

உன்னலென்னும் ஆவரணம் ஒன்றும் இல்லா வெளியாகித் தன்னதான சுகவடிவில் தானே விளங்கி தன்வசமாம் என்னது உருவை யான்பணிகேன் இருந்தும் நடந்தும் சாந்த முற்றும் அன்னதன்ன திலதாகும் அனைத்துஞ் செய்தும் பற்றிலதாம் = தேகாதிகளை நான் என்று கருதும் மறைப்புகள் யாதொன்றுமின்றிய சிதாகாச சொரூபமாகித் தனது வடிவ ஆனந்தத்தின்கண் சுயமாகவே இளங்கி ஆனந்தான்மக சொச்சொரூபத்தில் நிலையாய் யான் நமஸ்கரிக்கின்றேன் இருப்ப தாயும், நடப்பதாயும், சாந்தமுடைத்தாயும் அவ் வநனை இயற்றுதாகும் யாவற்றையும் விவர்த்த ரூபத்தால் இயந்றியும் சம்பந்தமற்றதாம்.

பல்ல வங்க டனையசைக்கும் பவனன்போல மனமுதலாய்ச்
செல்லுங் கரணங் களையிந்தச் சித்தாம்புருட னசைத்திடுமால்
வல்ல பாகர் நடத்துகின்ற வாசித்திறள்போற் றனதான
வல்லன் மேவப் பொறியெல்லா மவனே பரிக்குமனவரதம். (40)

பல்லவங்கள்தனை அசைக்கும் பவனன்போல செல்லும் மன முதலாம் கரணங்களை அந்தச் சித்தாம்புருடன் அசைத்திடும் வல்லபாகர் நடத்துகின்ற வாசித்திரள்போல் தனதான அல்லல்மேவப் பொறியெல்லாம் அவனே அனவரதம் பரிக்கும் = இலைகளை அசைக்கும் காற்றேபோல் விடயங் களிற்போம் மனமுதலாகிய கரணங்களை இந்த சாக்ஷாத் அபரோக்ஷ சிற்சொரூப புருடன் நடத் திடும் சாமர்த்தியமுடைய சாரதிகள் செலுத்து கின்ற அசுவக் கூட்டங்களைப்போலத் தாங்கள் கவரப்படுவதான அனர்த்த விஷயங்களைப் பொருந்தும் இவ்வான்மா அத்தியந்தந் துர்த் தசையை அடைந்ததேபோலத் தேககேகத்தில்

எப்போதும் வினை விளைத்து விளையாடும் விபுவாகிய அவ்வான்மாவே எப்போதும் சம்ராட்டைப்போல தன்பாலே சொஸ்தமாயிருந்து கொண்டு நடத்தும்.

இவனே தேடப் படுகிற்போ னிவனே துதிக்கப் படுகிற்போ
னிவனே தியானிக் கப்படுவோ னிவனுன் மரண மயக்கொழிந்த
திவனே யெளிதி னெய்திடுவோ னிவனே நன்று யறிகிற்போ
னிவனே யெல்லார் மனக்கமலத் திடையி லிருக்கு மிசைவண்டே. (41)

இவனே தேடப்படுகிற்போன் இவனே துதிக்கப்படுகிற்போன் இவனே தியானிக்கப்படுவோன் இவனுல் மரணமயக்கு ஒழிந்தது இவனே எளிதில் எய்திடுவோன் இவனே நற்ருய் அறிகிற்போன் இவனே எல்லார் மனக்கமலத் திடையிலிருக்கும் இசைவண்டு =

இந்த ஆத்மதேவனே விசாரிக்கத்தக்கவன் இவ்வான்மதேவனேயே தோத்திரஞ் செய்யத் தகுதியாகும் இவ்வான்மதேவனேயே தியானஞ் செய்தற்குரித்தாகும் இவ்வான்மாவால் ஜராமரண சம்மோகமயமான சம்சாரமானது ஒழிந்ததால், இவ்வான்மதேவனேயே சுலபமாக அகப்படுத்தப் பெறும் இவ்வான்மதேவனேயே சம்யக்காகச் சாக்ஷாத்கரிக்கப்பெறும் இவ்வான்மதேவனே சகல ஜீவர்களுடைய இருதய தாமரையின் கண் வீற்றிருக்கும்காண் அறுகால்,

மேவ லுற்ற போகத்தில் விருப்புவெறுப்பு மெனக்கில்லை
யாவ தெய்து மதுவருக யாதுபோகு மதுபோகப்
பாவ மிகுமிவ் வஞ்ஞானப் பகைவனுலே விவேகமெனு
மேவ மில்லாப் பொருளெல்லா மிழந்தேனுணர்வா லவைபெற்றேன். (42)

மேவலுற்ற போகத்தில் விருப்பும் வெறுப்பும் எனக்கில்லை யாவதெய்தும் அதுவருக யாதுபோகும் அதுபோக பாவமிகும் இவ்வஞ்ஞானப் பகைவனுலே விவேகமெனும் ஏவம் இல்லாப் பொருளெல்லாம் இழந்தேன் உணர்வால் அவை பெற்றேன் =

கருமவயத்தால் அடைவுற்ற விஷயங்களில் வாஞ்சையும், துவேசமும் ஆராய்வுற்ற எனக்கு இல்லை. நுகர்வினைவயத்தால் யாது அடையாநிற்குமோ அஃது அடைவுறுக, எஃது அகலுமோ அஃது அகலுக, பாவத்தின் காரியம் துன்பம், துன்பத்தைப் பயக்கும் இந்த அறியாமையாகிய சத்துருவாலே விவேகாதி சாதனங்களென்னும் குற்றமற்ற சர்வ ஐஸ்வரியத்தையும் கைவிடப் பெற்றேன் சம்யக்ஞானத்தால் அவற்றை அடைந்தேன்.



துனையு மனத்தான் மனமறுத்துத் துயர்செய் யகங்கா ரந்தீர்ந்து
நினைவா னினைவு போயசையா நிலைக்கே தனிக்கேவல நின்றேன்
வினையா நினைவற் றகங்கரம்போய் மேவுமனம் போய்த்தொழி லின்றித்
தனையே நிகர்கே வலத்தொடர்ச்சித் தத்து வத்தென் வடிவிருக்கும். (43)

துனையும் மனத்தால் மனம் அறுத்து துயர்செய் அகங்காரந் தீர்ந்து நினைவால் நினைவுபோய் தனிக்கேவலம் அசையா நிலைக்கே நின்றேன் வினையாம் நினைவு அற்று அகங்கரம்போய் மேவு மனம்போய் தொழிலின்றி தனையே நிகர் கேவலத்தொர்டர்ச் சித் தத்துவத்து என் வடிவிருக்கும் = துரிதமாய்ப் பழகும் சுத்தவாசனுவிசிட்ட மனத்தால் மலினவாசனுவிசிட்ட மனத்தைக் கெடுத்துத் துன்புறுத்தாநின்ற அகந்தை ஒழிந்திருக்கு என்னும் பாவனையினுலே திருசிய பாவனை ஒழிந்து ஒப்பற்ற கேவலமாய் (தான் மாத்திரமாய்) ஸ்திரவடிவமாய்ச் சொச்சமாயிருக்கின்றேன். சத்துருவாய்த் துன்பஞ்செய்யும் மன சிந்தனை அகங்காரம் ஒழிந்து இச்சையேதுவாய்ப் பொருந்திய மனம்போய் ஒருசெய்கையுமற்றுத் தனக்கே ஒப்பாம் அத்தியந்தம் சர்வத்திலும் பொருந்தியுள்ள தற்சொரூபத்தில் எனது சொரூபம் இருக்கும்.

காத லென்னுங் கட்டறுத்துக் காயமென்னுங் கூடகன்று
சாதன் மேவு மகங்கரமாந் தனிப்புள்ளெங்கே பறந்துளதோ
வேத மறுநீ நானுனீ யென்னுமொருமை யிருமையதா
யோதும் விதியான் மீண்டொன்றி யுயர்நீநானு னீயானேம். (44)

காதலென்னுங் கட்டறுத்துக் காயமென்னுங் கட்டகன்று சாதல் மேவும் அகங்கரமாம் தனிப்புள் எங்கே பறந்துளதோ ஏதம் அறும் நீ நான் நீயென்னும் ஒருமை இருமையதாம் ஓதும் விதியால் மீண்டொன்றி உயர்நீ நான் நீ ஆனேம் = விடயத்தில் எழும் ஆசையென்னுங் கயிற்றுக் கட்டினை சரீரமென்னும் பஞ்சரத்தில் நீங்கித் தத்துவ ஞானத்தால் நாசமாகும். துரகங்கிருதியென்னும் ஒப்பற்ற பக்ஷியானது யாண்டுப் பறந்தோடி விட்டதோ, சர்வதோஷ விநிர்முக்தமாய நீயே அகம், அகம் நீயென்னும் அபேதபாவனையானது அஞ்ஞானத்தால் துவைதமாம். சுருதியில் கூறும் தெய்வகடாக்ஷத்தால் அறியாமை நீங்கப்பெற்று மீளவும் பொருந்திப் பரிபூரணமாகிய நீ யான் கூடஸ்தனுகிய நானே நீயாய் இருக்கின்ரேம்.

ஒழிவி லுலகின் சீரெல்லா முண்டாயிருந்து நீயிலையேல்
விழியி லவர்க்குப் பேரெழில்கூர்மின்னு ரைப்போல் விளங்காதால்
வழுவி றேவே சயசாந்தி மன்னுமிடமே சயவேத
முழுதுக் கயலே சயவேத முளைத்தவிடமே சயவென்னு. (45)

உலகின் சீரெல்லாம் உண்டா யிருந்தும் ஒழிவு இல் நீ இலேயேல் விழியில் அவர்க்குப் பேரெழில்கூர் மின்னுரைப்போல் விளங்காது வழுவு இல் தேவசய சாந்தி மன்னுமிடமே சயவேத முழுதுக் கயலேசய வேதமுளேத்த இடமே சயவென்னு = இலெளகீகச் சிறப்புக்கள் யாவும் இருப்பனவாகி யும் நீக்கமின்றிப் பூரணவடிவ பரமான்மாவாகிய தேவரீர் இல்லாவிடின் குருடருக்கு மிகுந்த அழ கோடுகூடிய மங்கையரைப்போல விளங்காவாம் அச்சுதனே ஜய (வெல்கி) சாந்தி பொருந்தும் இடம் ஜய சர்வ ஆகமப்பிரமாண அதீதனே ஜய சர்வ ஆகமாதிப் பிரமாணவேத்தியனே = சர்வோபநிஷத் சமன்வயக்கம்மியனே ஜய வென்று தியானித்து.

பிறவிக்கி முதலே சயவென்றும் பிறவாமுதலே சயநாளு
மிறக்கு முதலே சயவென்று விறவாமுதலே சயவென்று
சிறக்கு மனத்தாற் சிந்தித்துச் செம்பொற்பெயரோன் றிருமதலே
பறக்கும் விகற்ப மில்லாத பரமசாந்திச் சுகமுற்ருன். (46)

பிறவிக்குமுதலே சயவென்றும் பிறவாமுதலே சயநாளும் இறக்கு முதலேசயவென்று இறவாமுதலே சயவென்று சிறக்குமனத்தால் சிந்தித்து செம்பொற்பெயரோன் திருமதலே பறக்கும் விகற்பமில் லாத பரம சமாதிச் சுகமுற்ருன் = சர்வ கற்பனு அதிஷ்டானமானவரே வெற்றி யுண்டாகுக, அஜன்மனும் பொருளே வெற்றி யுண்டாகுக, லயஸ்தானரே வெற்றியுண்டாகுக அவிநாசியாம் பொருளே வெற்றியுண்டாகுக என்பதாக மைத்திரியாதி பொருந்திச் சிறப்புற்று விளங்கும் சித்தத்திஞலே தியானித்து இரண் ணியனுடைய தவப்புதல்வஞகிய பிரகலாதன் துடிப்புற்ற சலனமற்ற அசம்பிரஞ்ஞாத சமா தியை இனிதாகப்பெற்று ஆனந்தத்தை அடைந் தான்.

நிருவி கற்ப சமாதியிலே நிகழ்சித் திரம்போ னிலேபெற்று
வருட மையா யிரஞ்செல்ல மாரு வொருபார் வையினிற்ப
வருண மணிசூழ் பாதளத்தி லரசி லாம லசுரரெல்லாங்
கருடன் முதற்புள் ளினங்கவரக் கலங்கு குளமீ னினமொத்தார். (47)

நிருவிகற்ப சமாதியிலே நிகழ்சித் திரம்போல் நிலேபெற்று வருடம் ஐயாயிரஞ்செல்ல மாருவொரு பார்வையினிற்ப அருணமணிசூழ் பாதளத்தில் அரசிலாமல் அசுரர் எல்லாம் கருடன்முதல் புள் அசம்பிரஞ்ஞாத சமாதியின்கண்ணே பித்தியி லமைத்த பநுமைபோல ஸ்திரமான ஸ்திதியை அடைந்து, ஐயாயிர வருடங்கள் கழியப் பிறழ்ச்சி யில்லாத ஏகதிருஷ்டியில் நிலேத்திருப்பச் சிவந்த நவரத்தினங்கள் நிறைந்த பாதாளலோகத்தில் அரசன் இல்லாமையினுல் அசுரர்கள் யாவருமே

இனங்க வரக்கலங்கு குளம் மீன் இனம் ஒத்தார் = கருடன் முதலிய பறவைகள் கிரகணஞ் செய்யக் கலங்கிச் சலனமுற்ற தடாக மச்சகக் கூட்டத்திற் கொப்பானுர்,

ஆவ தாய காலத்தி லனைத்தா முலகு னெறியனைத்துங்
காவல் புரியுந் திருநெடுமால் கடல்வாய் விழித்துக் கண்வளர்வான்
றூவல் வருடக் கார்நாளிற் றுயிலைத் தவிர்ந்து வொருகாலைச்
சேவல் கூருந் திருவுளத்திற் செகத்தி னெறியைச் சிந்தித்தான். (48)

ஆவதாய காலத்தில் அனைத்தாம் உலகின் நெறி அனைத்துங் காவல் புரியுந் திருநெடுமால் கடல்வாய் விழித்துக் கண்வளர்வான் கார் நாளில் தூவல் வருட துயிலைத் தவிந்து ஒருகாலைச் சேவல்கூருந் திருவுளத்திற் செகத்தின் நெறியைச் சிந்தித்தான் = அசுரரெல்லாம் கலக்குற்ற அக்காலத்தில் சகல லோகத்தின் வருணுச்சிரம மரியாதை யாவற்றையும் காப்பாற்றியருளும் ஸ்ரீமந் நாராயணர் க்ஷீராப்தியில் அறிதுயிலிருந்த அவர், கார் காலத்தில் மழைத்துளியானது திருமேனியிற் பரிசிப்ப விழித்தருளி ஒருபோது கருணைபுரியும் திருவுள்ளத்தின்கண் பிரபஞ்ச முறையைச் சிந்திக்கலாயினர்.

பேத மில்லாச் சாந்திபதம் பிரகலாதன் பெற்றிருப்ப
வேதன் சிருட்டி யழிந்துளவால் வெவ்வாலசுர ரிலாமையினு
லேத வசுர ரில்லையெனி லிகலற்றிமையோ ரெல்லோரும்
போத வுபசாந் தியராகிப் பொருவில்வீடு பொருந்துவரால் (49)

பேதமில்லாச் சாந்திபதம் பிரகலாதன் பெற்றிருப்ப வெவ்வாளசுரர் இலாமையினுல் வேதன் சிருட்டி அழிந்துள ஏதம் அசுரரில்லைஎனில் இகலற்று இமையோரெல்லோரும் போதம் உபசாந்தியாகி பொருவு இல்வீடு பொருந்துவர் = அபேதமான பரமசாந்தி பதத்தை பிரகலாதன் நிஷ்டையுடையவனுயிருப்ப கொடிய வாலாயுதத்தையுடைய அசுரர் இல்லாமையினுலே பிரமாவின் சிருஷ்டி கெட்டுள. குற்றத்தை விளைவிக்கும் அசுரர்களில்லையாயின் பகை இன்றித் தேவர்களனைவரும் சிற்சொரூபத்தில் உபசாந்தியை அடைந்தவராகி ஒப்பு உயர்வு இல்லாத மோக்ஷத்தை அடைந்திடுவர்.

தேவ ருபசாந் தியையடையிற் செந்தீ வேள்வி தவமெல்லாம்
போவ தாகிப் பயனெல்லாம் பொருந்தா தெவையும் பொன்றிடுவா
லோவ லுற்ற கிரியையெலா மொழிந்தாற் பூமி யொடுங்கிடுமாற்
கேவ லத்திற் புவியொடுங்கிற் கிளருஞ் சிருட்டி யற்றிடுமால். (50)

தேவர் உபசாந்தியை அடையில் செந்தீவேள்வி தவமெல்லாம் புயன் எல்லாம் போவதாகிப் = அமரர்கள் உபசாந்தத்தை அடைந்துவிடுவார்களாயின் சிறந்த அக்கினியிற் செய்யும் யாகாதிகளும் தவமுதலியனவும் சர்வ மரியாதைகளும்

பொருந்தாது எவையும் பொன்றிடும் ஒவலுற்ற கிரியையெலாம் ஒழிந்தால் பூமி ஒடுங்கிடும் கேவலத்தில் புவி ஒடுங்கில் கிளருஞ் சிருட்டி அற்றிடும் = சர்வ பலன்களும் அற்றனவாகி நிலேயில்லாமல் யாவுமே நாசத்தையடைந்திடும் சதா சிரத்தையோடு செய்யும் வைதிக கிரிகைகள் யாவும் சிதையுமாயின் பூமி அஸ்தத்தை அடையும் அக்கால் பிரளயமாயிடும், அசங்கவடிவபிரஹ்மத்தில் உலகம்=பூமி அழிந்திடுமாயின் குணங்கள் நிறைந்த பிரம்மாசிருட்டி ஒழிந்துபோம்.

இன்ன சிருட்டி சூனியமா யிரவிமதியோ டெலாமிறக்கிற்
பின்னர் யாமும் வடிவொழித்துப் பேதமில்லாப் பதமடைவோஞ்
சொன்ன காலத் தலாதிடையே தொல்லேஞால மெலாமிறக்கி
லுன்ன நலங்காண் கிலமிதனுக் குறுதியுபாய முணர்ந்தனமால். (51)

இன்ன சிருட்டி சூனியமாய் இரவிமதியோடு எலாம் இறக்கில் பின்னர் யாமும் வடிவொழித்துப் பேதமில்லா பதம் அடைவோம் சொன்ன காலத்தலாது இடையே தொல்லே ஞாலமெலாம் இறக்கில் உன்ன நலங்காண்கிலம் இதனுக்கு உறுதி உபாயம் உணர்ந்தனம் = இங்ஙனம் இலங்காநின்ற ஜகத் சிருஷ்டி சூன்யமுற்றுச் சூரிய சந்திர நக்ஷத்திரமுதலிய யாவும் ஒழியில் அதன்பின்பு யாமும், திவ்ய மங்கள வடிவத்தை மறைத்து (கரந்து) அபேதமயமாய தற்பதத்தை அடைந்திடுவோம், சாஸ்திரங்களிற் கூறிய நியாமக காலத்தை விடுத்துப் பிராசீன சகல பிரபஞ்சமும் ஒழியில் மத்தியில் ஆராயில் யாதொரு சிரேயசும் கண்டிலேம், இதற்குச் சிறந்த சாதகம் (உபாயம்) தெரிந்துகொண்டோம்.

தானவ ருய்க வுய்ந்தாற் சமருண்டாஞ் சமரு முண்டேல்
வானவ ருண்டா முண்டேன் மகந்தவ முண்டா முண்டே
லானதோர் சிருட்டி யுண்டா மன்றெனிற் சிருட்டி மாரு
மூனமி லசுரர் கோனிவ் வுடலொடு மூழி வாழ்க. (52)

தானவர் உய்க உய்ந்தால் சமர் உண்டாஞ் சமரும் உண்டேல் வானவர் உண்டாம் உண்டேல் மகம், தவம், உண்டாம் உண்டேல் ஆனதோர் சிருட்டியுண்டாம் அன்றெனில் சிருட்டி மாளும் ஊனம்இல் அசுரர்கோன் இவவுடலொடும் ஊழி வாழ்க = (நிரதிசயானந்த அடைவு வடிவச் சிரேயசானது எவர்க்குமே எய்தாதாதலின், மூலாஞ்ஞானமாம் விரை நீங்காமையினல் பிரபஞ்சலாபப் பொருட்டு) அசுரர் வாழ்க, அசுரர் வாழ்ந்தால் யுத்தம் உண்டாம் அமரர் உண்டேல், யாகம், தவம், மநுடர்களால் செய்யப்படும் ஆயின் தேவர்கள் உண்டாம், அத்தேவர்கள் வாழ்ந்தால் மநுடருமிருப்பர் சம்சாரம் நன்னிலேப்பேறு ஆம் அங்ஙனம் இல்லேயாயின் படைப்புமாளும் (மாயும்) தோஷம் இல்லாத பிரகலாதன் இந்த தேகத்தோடும் கற்பபரியந்தம் வாழ்க,

பரமமா மீச னுலே பாலிக்குங் கடவு ணீதி
திரமுற விவ்வா றென்று சிந்தித்த செங்கண் மாய
னரவணைப் பாய னீங்கி யசுரர்கோ னருகு சேர்ந்தான்
பிரமலோ கத்தை யொக்கும் பெரியபா தளந கர்க்கே. (53)

பரமமாம் ஈசனுலே பாலிக்குங் கடவுள் நீதி இவ்வாறென்று திரமுற சிந்தித்த செங்கண் மாயன் அரவணை பாயல் நீங்கி அசுரர்கோன் பிரமலோகத்தை யொக்கும் பெரிய பாதள நகர்க்கு அருகு சேர்ந்தான் = பரமேசுவரனுலே நியமிக்கப்பெற்ற தெய்வ நியதியானது பிரகலாதனுடைய தேகம் கற்பபரியந்தம் யிருக்கவேண்டியது இன்றியமையாததாய் ஆகவே சமாதியினின்றும் பகிர்முகமடையச் செய்வோமாக என்பதைத் திடமாக எண்ணியருளிய செந்தாமரையிதழ்போலும் நேத்திரங்களையுடைய ஸ்ரீபகவான் சேடசயனத்தினின்றும் அகன்றருளி, சத்தியலோகத்துக்குச் சமானமான அதி விசாலமான பாதாளலோகத்திலிருக்கும் தைத்தியேந்திரனது சமீபத்தை அடைந்தருளினன்.

கருட வாகனத் துறைபவன் கவரிசேர் செங்கைத்
திரும டந்தைவாழ் வலத்தின னைம்படை செறியு
மிருபு றத்தினன் றேவரு முனிவரு மிறைஞ்ச
வருளு நாயக னசுரனை யுணர்தி யென்றருளி. (54)

கருடவாகனத் துறைபவன் கவரிசேர் செங்கைத் திருமடந்தை வாழ் வலத்தினன் ஐம்படை செறியும் இருபுறத்தினன் தேவரும் முனிவரும் இறைஞ்ச அருளு நாயகன் அசுரனை உணர்தி யென்றருளி = கருடவாகன ஆரூடரும் வெஞ்சாமரம் பொருந்திய சிறந்த கரத்தினையுடைய மகாலட்சுமி வசிக்கும் மார்பையுடையவன் சங்கு சக்கரம், சாரங்கம், கதை, தண்டு ஆக பஞ்ச ஆயுதம் படைத்த இரண்டு பாகத்தினன், இமையவரும் இருடியரும் மற்றவரும் இனிது ஏத்த அவர்களுக்கு அநுக்கிரகஞ் செய்யும் எம்பெருமான் பிரகலாதனை நோக்கி உத்தானதசையை அடைவாய் என்று கூறியருளி:

வலம்பு ரித்தொனி கிளப்பினன் மாதிரம் பிளப்ப
நிலம்பி ளப்புற நெடுந்திசை பிளப்புற நிமிர்ந்த
வலம்பு மோதையால் மெல்லென மெல்லென வறிந்தா
னலம்ப யப்புறு தற்பதத் தொன்றிய நல்லோன். (55)

மாதிரம் பிளப்ப நிலம் பிளப்புற நெடுந்திசை பிளப்புற வலம்புரித் தொனி கிளப்பினன் நிமிர்ந்த = மாதிரம் விண்ணுலகம் பர்வதம் விண்ணுலகமும் தலைசாய (பர்வதமும் தலைசாய) பூவுலகமும் பிளக்க, பத்துத் திக்கும் பிளப்புற பாஞ்சஜன்ய

வலம்பு மோதையால் நலம் பயப்புறு தற்பதத் தொன்றிய நல்லோன் மெல்லென மெல்லென அறிந்தான் = சங்கநாதம் செய்தனர் ஓங்கிய மகத்தான அச் சப்தத்தால் பேரானந்தத்தை அடைவிக்கும் தற்பதப் பிரஹ்மத்தின்கண் லீனபாவமுற்றிருந்த நல்ல தானவேந்திரனும் பிரகலாதன் பையப் பைய உணர்ந்தனன் = (சம்பிரபுத்தனுக ஆயினுன்.)

பிராண சத்திதான் பிரமரந் திர நின்று பெயர்ந்து
புராத னப்படி நாடிக ளாலெங்கும் பொருந்தி
விராவ லுற்றன வொன்பது துவாரத்து மேவப்
பராப ரத்தினை யறிந்துளோ னறிவுசம் பவித்த. (56)

பிராண சத்திதான் பிரமரந்திரம் நின்று பெயர்ந்து புராதனப்படி நாடிகளாலெங்கும் பொருந்தி விராவலுற்றன ஒன்பது துவாரத்தும் மேவ பராபரத்தினை அறிந்துளோன் அறிவு சம்பவித்த = சமாதியில் அடங்கியிருந்த பிராணவாயு உச்சிஸ்தானத்தினின்றும் எழுந்து பழையபடி நாடிகளின் வாயிலாக எவ்விடத்திலும் வியாபித்து நின்றது கலந்துற்றனவாய நவரந்திரத்தும் பொருந்திய அளவில் பராபர பரமான்ம வஸ்துவைச் சாக்ஷாத்கரித்த பிரகலாதனது பிரஞ்ஞை திருசியோன்மகமாயது சாதகமாக பிராண வாயுவும் அபான வாயுவும் சகல நாடிகளிலுஞ் சஞ்சரித்தன.

அறிவு தோன்றியுட் பிராண தர்ப்பண நிழலாகி
யறிவ தாம்பொரு ளேக்குற்ற தன்னதா மறிவு
பிறிவ தாமறி பொருளிலே மனத்தன்மை பெற்ற
பிறிவி லாமுகந் தர்ப்பணத் திருமைபெற் றதுபோல். (57)

அறிவுதோன்றி உள் பிராண தர்ப்பண நிழலாகி அறிவதாம் பொருள் நோக்குற்றது பிறிவிலாகமும் தர்ப்பணத்து இருமை பெற்றது போல் தன்னதாம் அறிவு பிறிவதாம் அறிபொருளிலே தனத்தன்மை யேற்ற = பிரஞ்ஞை வெளிப்பட்டு அந்தக்கரண பிராணனும் கண்ணுடியில் பிரதிபலித்துத் திருசிய வஸ்துவில் அங்குரித்தது ஏகமான (ஒரே) கண்ணுடியின்கண் இரண்டாந் தன்மையை அடைந்தது ஒப்ப அப்பிரகலாதனது பிரஞ்ஞை அத்தன்மையானது, அப்பிரஞ்ஞை பேதமான திருசியங்களில் பொருந்தி மனமென்னுந் தூலத் தன்மையை அடைந்தது.

அற்ப முள்ளமங் குரித்தலு மரும்பவிழ் வுற்ற
வுற்ப லங்கள்போன் மெல்லென மலர்வுற்ற வொண்கண்
ணிற்ப தாய்நரம் புறுபொறி யறிவுக ணிறைய
நற்பி ராணனு மபானனு மெங்கணு நடந்த. (58)

உள்ளம் அற்பம் அங்குரித்தலும் ஒண்கண் அரும்பவிழ்வுற்ற உற்பலங்கள்போல் மெல்லென மலர்வுற்ற நிற்பதாய் நரம்புறு பொறி அறிவுகள்நிறைய நற்பிராணனும் அபானனும் எங்கணும் நடந்த = மனம் சிறிது முளைத்தலும், அழகிய நேத்திரங்கள் மொட்டலர்ந்த நீலோற்பலம்போல மெதுவாக விகசிதமாயின, பொருந்திய நாடிகளின் வாயிலாக விடயங்களில் விருத்தி ஞானங்கள் நிரம்பும்படி சாதகமாக உயர்ந்த பிராணனும் அபானனும் சரீரம் எங்குஞ் சஞ்சரித்தன.

அமைவில் காற்றுற்ற பதுமம்போ லசைவினை யடைந்தா
னிமைக ளுக்கிடை யளவிலே மனந்தடித் தெழுந்த
சமைவு றத்தெரி கண்மனம் பிராணன்மெய் தயங்கக்
கமையின் மிக்கவன் விளங்கினன் கருணைமால் காண. (59)

அமைவில் காற்றுற்ற பதுமம் போல அசைவினை அடைந்தான் இமைகளுக்கிடையளவிலே மனந்தடித்தெழுந்த தெரிகண் மனம் பிராணன் சமைவுற மெய் தயங்கக்கமையில் மிக்கவன் கருணைமால்காண விளங்கினன் = சலன சுபாவம் வாய்ந்த வாயுவினாலசைக்கப் பெற்ற தாமரைபோல அப் பிரகலாதன் காயத்திற் அற்ப சலனத்தையடைந்தான். இமைப் பொழுது மத்தியில் அஃதாவது நொடிப்போதில் மனமானது பருமையை அடைந்துநின்றது, விடயங்களை அறியும்படியான நேத்திரம், மனம், பிராணன் இவைகள் பொருந்திச் சரீரத்தோடு விளங்கப் பொறுமை மிகுந்து மைத்திரியாதி குணங்கள் பொருந்திய பிரகலாதன், கிருபா மூர்த்தியான தாமோதரன் (ஸ்ரீபகவான்) பார்த்தருள, கவின்வாய்ந்திலங்கினன்.

பரந்து நாட்டங்க ணோக்கின மனனமும் பருமை
நிரந்த ரித்தன வவ்வயி னவன்றனை நெடுமால்
சுரந்த வன்புட னோக்கியே யருள்செய்வான் றூயோய்
புரந்த ரன்புக ழுனதுசீர் நோக்குவாய் புரிந்து. (60)

நாட்டங்கள் பரந்து நோக்கின மனனமும் பருமை நிரந்தரித்தன அவ்வயின் அவன்றனை நெடுமால் சுரந்த அன்புடன் நோக்கியே அருள்செய்வான் தூயோய் புரந்தரன் புகழ் உனது சீர் புரிந்து நோக்குவாய் = இரு நேத்திர விருத்திகளும் விரிந்து நாடின மன எண்ணங்களும் மிகுந்து (பருத்து) வியாபித்தது. அவ்விடத்து அப் பிரகலாதனைச் சர்வஞ்ஞனாகிய ஸ்ரீமந் நாராயணன் பெருங் கருணையோடும் பார்த்தருளி அநுக்கிரகித்தருள்வார். பரிசுத்தனாகிய எனதன்பனே ! தேவேந்திரனுங் கீர்த்திக்கத்தக்க உனது சீர்த்தியை=ஐஸ்வரியத்தை ஆராய்ந்து எண்ணுதி.

உடலை நோக்குதி யகாலத்தி லுன்னுடை யுடலை
விடநி னைப்பதென் பற்றுதல் விடுதல்சங் கற்பம்
படர்கி லாவுனக் கபாவமும் பாவமு முடலிற்
றொடரிற் சேதமென் னெழுதியா லிருத்தியாற் றூயோய். (61)

உடலை நோக்குதி அகாலத்தில் உன்னுடைய உடலைவிட நினைப்பது என் பற்றுதல் விடுதல் சங்கற்பம் படர்கிலா உனக்கு உடலில் பாவமும் அபாவமும் தொடரில் சேதம் என் தூயோய் எழுதி இருத்தி = (ஸ்ரீபகவான் இதோபதேசஞ் செய்தல்) உன்னுடைய தேகத்தை உற்றுப்பார்ப்பாய், காலமல்லாதகாலத்தில் உனது வஜ்ஜிரதேகத்தைத் தியாகஞ்செய்ய எண்ணுவதென்னே கொள்ளற்பால, தள்ளற்பாலதாய இருவித சங்கற்பமும் இதயத்தின்கண் பொருந்தா உனக்குச் சரீரத்தில் அநுகூல, பிரதிகூல விஷயங்களில் லாபமும், அலாபமும் அணுகில் கேடு (ஹானி) என் ஆகலின் உடனே எழுந்து உனது இராஜ்ய விவகாரத்தைச் சேய்துகொண்டிருப்பாயாக.

சீவன் முத்தனு நீயிந்த வுடலொடுஞ் செங்கோற்
காவ லாளனுய்ச் சுமையறக் கற்பமட் டிருப்பாய்
பாவ கன்சுடப் பன்னிரு கதிர்சுட வுலகம்
யாவ துங்கெடா திருப்பநீ யிறப்பதென் வாளா. (62)

சீவன்முத்தனுய் நீ இந்த உடலொடுஞ் செங்கோல் காவலாளனுய்ச் சுமையறக் கற்பமட்டிருப்பாய் பாவகன் சுடப்பன்னிரு கதிர் சுட உலகம் யாவதுங்கெடா திருப்ப நீ வாளா இறப்பது என்= ஜீவித்துக்கொண்டே முத்தனுயிருக்கும் நீ இத்தேகத்தோடும் இராஜ்யபரிபாலனஞ் செலுத்தும் பூபாலனுய்ப் பாபாதிகளின்றிக்கற்பகாலபரியந்த மிருந்து வாழ்வாய். அக்கினி எரிக்க, பன்னிரு சூரியர் பிரகாசிக்க, பிரபஞ்சமுழுவதும் அறியாமலிருப்ப ; வீணுகவே நீ சரீரத்தை விடுதல் என்ன காரணமோ ?

ஓங்கு மாசையாம் பாசத்தா லுறப்பிணிப் புண்டு
வீங்கு முள்ளுணர் வதன்வழி யோடியே மெலிந்து
தாங்கு செய்கையான் மனமிகச் சலிப்பவர்க் கன்றே
தீங்கு மேவிய மரணந்தான் சிறப்பது சகத்தில். (63)

ஓங்கும் ஆசையாம் பாசத்தால் உறப்பிணிப்புண்டு வீங்கும் உள்ளுணர்வு அதன் வழியோடியே மெலிந்து தாங்குசெய்கையால் மனம் மிகச் சலிப்பவர்க்கன்றே (ஆயின் யாவர்க்கு மரணம் உசிதம் என வினவ விடை அருளுகின்றர்) மேல் மேலும் விருத்தியாகும் ஆசாபாசத்தால் பிணிபபுண்டு (அத்தியந்தங் கட்டுப்பட்டு) திருசியோன்மகமாய் எழும் அந்தர்மனம் அவ்விஷயத்தை அடைவதற்கு ஓடி

தீங்கு மேவிய மரணந்தான் சிறப்பது சகத்தில் = மொத்துண்டு நைந்து தாம் தாம் கொள்ளற் பாலனவாய் கிரியா விசேடத்தால் மனம் ஆசை வழியாக சஞ்சலப்பட்டுழலும் வர்க்கமல்லவா மகா துன்பத்திற்கேதுவாய மரணமானது உலகில் விசேடித்தோங்கா நிற்கும்.

அகங்க ரத்தினை யகற்றி யோர்பற்றின்றி யனைத்துஞ்
சுகந்த ருஞ்சம மானவ ராயுவே சுகமா
முகந்த வாசையுஞ் சினமுமற் றுட்குளிர் மதியாற்
செகங்க ளின்கரி யானவ ராயுவே சிறக்கும். (64)

அகங்கரத்தினை அகற்றி ஓர் பற்றின்றி அனைத்துஞ் சுகந்தருஞ் சமமானவர் ஆயுவே சுகமாம் உகந்த ஆசையும் சினமும் அற்று உள்குளிர் மதியால் செகங்களின் கரியானவர் ஆயுவே சிறக்கும் = (ஆயின் யாவர்க்கு ஜீவிதம் சோபிதமாகும் என வினவ விடை அருளுகின்றார்) தேகாதிகளில் யான் என்னும் எழுச்சியைத் தொலைத்து விடயங்களிற் சிறிதும் பற்றுதல் இல்லாமல் சர்வ ஜீவர்கட்கும் இன்பம் ஈயும் சமபாவனையுடைய பெரியோர்களது ஆயுளே இன்ப வாழ்வாம், இஷ்ட விஷயத்தில் விருப்பும் அநிஷ்ட விஷயத்தில் பொருந்திய வெறுப்பும் ஒழிந்து உள்ளே சீதள புத்தியால் லோகத்திரயங்களுக்கும் சாக்ஷி தானென்றும் அறிந்த பெரியோர்களது ஆயுளே விசேஷித்து விளங்கும்.

பற்று வான் பற்றுபொரு ளிரண்டும் பயில்பந்த
மற்ற போதுப சாந்தி தோன்றிடு மதுநிலைமை
பெற்ற போதுவீ டெனும்பெய ரந்நிலை பெறுமால்
வெற்றி வீரசிங் காதனத் திருத்தியால் விளங்க. (65)

பற்றுவான் பற்று பொருள் இரண்டும் பயில் பந்தம் அது அற்றபோது உபசாந்தி நிலைமை தோன்றிடும் அந்நிலை பெற்ற போது வீடெனும் பெயர்பெறும் வெற்றிவீர சிங்காதனத்து விளங்க இருத்தி = கவர்பவன், கவரப்படும் பொருள் இரண்டும் சேர்ந்து விவகரிக்குஞ் சம்பந்தமே பந்தமாம் அச் சம்பந்தம் ஒழிந்தபோது உபசாந்தி ஸ்திதியுண்டாகும் அவ்வுபசாந்த ஸ்திதி அடைந்தபோது மோக்ஷமென்னும் நாமத்தையடையும், ஜயசாலிகளாகிய வீரர்கள் வீற்றிருந்த இரணியன் முதலானவர்களைப்போல் அல்லாமல் சாஸ்திரமுறை தவறாது நன்றாக யாவருக்கும் அனுகூலத்தனாய் இவன் இத்தகையனேவென யாவரும் போற்ற வீற்றிருப்பாய்.



குறைசெய் சங்கின தோசையாற் குமு றுறவந்த
புரையில் வானவர் மங்கலப் பணிசெய்து புகழ
விரைவி லின்றுனை மாமுடி மிலைச்சுவ னானே
யரசு செய்கநீ யூழியி னளவென வருளி. (66)

குறைசெய் சங்கின தோசையால் குமுறுறவந்த புரையில் வானவர் மங்கலப்பணி செய்து புகழ நானே மிலைச்சுவன் உனை மாமுடி அரசு செய்க நீ ஊழியினளவு என அருளி = முழக்கா நின்ற பாஞ்சஜன்ய சப்தத்தினாலே உற்சாகத்தோடு முழக்கமாய் ஆரவாரத்தோடு வந்த குற்றமற்ற தேவர்கள் புஷ்பம், பல சந்தனாதிகளைக் கொண்டு மங்கள வாழ்த்துக்களை புரிந்து கீர்த்திக்க விரைவில் இன்று யாமே மாட்சிமை பொருந்திய இரத்தினம் பதித்த கிரீடத்தை உனக்குச் சூட்டியருள்வேன் நீ கற்பகால பரியந்தம் தைத்தியர் வாழும் இப்பாதாள உலகத்தைப் பரிபாலனம் செய்து வருவாயாகவென்றருளி:

மங்கலப் புனல் கொணர்கென மஞ்சன மாட்டிச்
சங்குசக் கரந்தரித் தனகை களாற் றானே
புங்க வத்திறள் போற்றிடப் பொன்முடி சூட்டி
யங்க னச்சுத னசுரர்கோ னுக்கிவை யறைந்தான். (67)

மங்கலப் புனல் கொணர்கென சங்கு சக்கரந் தரித்தன கைகளாற் றானே மஞ்சனமாட்டி புங்கவத்திரள் போற்றிடப் பொன்முடி சூட்டி அங்கண் அச்சுதன் அசுரர்கோனுக்கு இவை அறைந்தான் = ஸ்ரீகங்கை க்ஷீராப்தியாதி தீர்த்தங்கள் கொண்டு வருகவென்றாஞ்ஞாபித்து வந்தபின் சங்கையும் சக்கரத்தையும் தாங்கிய கரங்களினால் தாமே அபிடேகித்தருளி சித்த விஞ்சையராதிகள் இருடி முனிக்கூட்டங்கள் ஜய ஜயவென்று தோத்திரஞ் செய்ய நவரத்தினகசிதமான சுவர்ணகிரீடத்தை புனைந்தருளி அழகிய செந்தாமரையிதழ்போலும் நேத்திரங்களையுடைய ஸ்ரீமந் நாராயணன் தானவேந்திரனாகிய பிரகலாதனுக்கு பின் வருமாறு அருளிச்செய்வாராயினர்.

தள்ளின் மேருவும் புவனமு மருக்கனுஞ் சசியு
முள்ள நாளெலா மரசுசெய் துயர்கென வருளிக்
கள்ள மாயையின் சிருட்டியோன் றொளித்தல்போற் கணத்தில்
வெள்ள வானவர் குழாத்தொடு மறைந்தனன் விண்டு (68)

தள்ளின் மேருவும் புவநமும் அருக்கனுஞ் சசியும் உள்ள நாளெலாம் அரசுசெய்து உயர்க என அருளிக்கள்ள மாயையின் = பிரளயகாலத்தன்றி அகலாத மேருகிரியும் சதுர்த்தச புவனமும் சூரியனும் சந்திரனும் இருக்குங் காலமெல்லாம் இராஜ்யபரிபாலனஞ் செய்து மேம்பாடடைதி என்று அநுக்கிரகித்தருளி வஞ்

சிருட்டியொன்று ஒளித்தல்போல் கணத்தில் வெள்ள வானவர் குழாத்தோடு விண்டு மறைந்தனன் = சகமாகிய மாயா சக்தியின் புதிய சம்சாரமான துண்டாய் இலயமாதல்போல க்ஷணப்போதில் நிறைந்த தேவகுழாங்களோடு ஸ்ரீ பகவான் நாராயணன் திருவுருக்கரந்தனன். அந்தர்த் தானமாயினன்.

என்ன வோதிய வசிட்டனை யிராகவ னேக்கி
யன்ன தானவர்க் கரசனுய் வீடுற்ற வறிஞன்
தன்ன துள்ளமெய்ப் பரத்திலே தன்மய மான
பின்னர் மால்சங்கு னேசையாற் பிறந்த தெப்பரிசோ. (69)

என்ன வோதிய வசிட்டனை இராகவன் நோக்கி தானவர்க்கு அரசனுய் வீடுற்ற அன்ன அறிஞன் தன்னதுள்ளம் மெய்ப் பரத்திலே தன்மயமான பின்னர் மால் சங்கனேசையால் பிறந்தது எப்பரிசோ = என்றிவ்வண்ணம் அருளிச்செய்த ஸ்ரீ வசிஷ்ட பகவானை ஸ்ரீ இரகுநந்தனன் பார்த்து அசுரர் களுக்கு மன்னனும் மோக்ஷத்தை அடைந்த அந்த அறிஞ சிகாமணியாகிய பிரகலாதனது மனமானது சத்தியமான பரமபதத்திலே ஏகைக பாவத்தையடைந்தபின்பு ஸ்ரீ பகவானது சங்கத் தொனியால் கிளம்பியது எவ்வாறே = பகிர்முக நாட்டத்தை அடைந்தது எவ்வாறே?

எனவி னுவலு மிராமனுக் கருந்தவ னுரைப்பா
னனல்ப யின்றிவித் தாமென வமலவா தனைதான்
கனமில் சீவன்முத் தருக்கெலா மிதயத்தின் கண்ணே
சனன வங்குர மீண்டில தாகியே சாரும். (70)

என வினுவலும் இராமனுக்கு அருந்தவன் உரைப்பான் அனல் பயின்ற வித்தாம் என அமலவா தனைதான் கனம்இல் சீவன் முத்தருக்கெலாம் இதயத்தின் கண்ணே மீண்டு சனன அங்குரம் இலதாகியே சாரும் = என்று ஸ்ரீ இராகவன் வினவியதும் ஸ்ரீ இராமச் சந்திரமூர்த்திக்கு அரிய தவத்தினையுடைய ஸ்ரீ வசிஷ்டபகவான் அநுக்கிரகிப்பதாவது அக்கினி யில் தகிக்கப்பட்ட (வறுக்கப்பட்ட) விதையானது போலச் சுத்த வாசனையானது சங்காதமற்ற ஜீவன்முத்தருக்கெல்லாம் மனத்தின்கண்ணே மறுபடி பிறப்பாம் முளை ஏதுவின்றியே பொருந் தும் (இலதாமாறே பொருந்தும்.)

சுத்தமாய்ப் பரம மாகித் தோற்றஞ்சா லுதார மாகிச்
சுத்தமாஞ் சாத்தி கத்தைத் துன்றியே விடாம லொன்றிச்
சுத்தவாத் துமத்தி யான மயமதாய்த் துவக்கொன் றில்லாச்
சுத்தவா தனைக ணித்தஞ் சுழுத்திவா தனைபோ னிற்கும். (71)

௶

| | |
|---|---|
| சுத்தமாய்ப் பரமமாகித் தோற் றஞ்சா லுதாரமாகி துன்றியே சுத்தமாஞ் சாத்திகத்தை விடாம லொன்றிச் சுத்த ஆத்துமத் தியானமயமதாய்த் துவக்கொன் றில்லாச் சுத்தவாதனைகள் நித்தம் சுழுத்தி வாதனைபோல் நிற்கும் = | அமல வாசனையானது தூயதாய் மேன்மைய தாய் விளக்கமிக்கதால் பேரானந்தத்தை வரம் பின்றி ஈவதாய் எப்போதுமே விடாமல் பொருந் திச் சுத்த சத்துவகுணத்தை நன்ருகப் பொருந் திப் பரிசுத்தமான பரமான்மத் தியானவடிவ முடையதாய் மலின வாசனு சம்மந்தமில்லாத தூயதாய் சுபவாசனைகள் இடைவிடாமல்சகஜமா கவே துயில் வாதனை போல ஜீவன்முத்தருடைய இருதயத்தில் அடக்கமாய் நிற்கும். |

ஆயிர வருடஞ் சென்று மங்கமே யிருக்கி லுள்ளே
மேயதா மவ்வ வத்தை மெல்லென வொருபா லின்றும்
தேயல தாகித் தோன்றுஞ் செறியுமவ் வவத்தை யாலே
தூயநற் சீவன் முத்த ருணர்ச்சியைத் தொடர்வ ரென்ருன். (72)

| | |
|---|---|
| ஆயிரவருடம் சென்றும் அங்கமே யிருக்கில் உள்ளே மேயதாம் அவ்வவத்தை தேயலதாகி ஒரு பால் நின்றும் தோன்றும் செறியும் அவ்வவத்தையாலே தூயநற் சீவன்முத்தர் உணர்ச் சியைத் தொடர்வரென்ருன் = | சகஸ்ர சம்வத்சரங்கள் சென்றபோதினும் சரீர மானது நுகர்வினை வயத்தால் பழுதுருது இருக் கில் அகத்தே பொருந்தியதான அந்த அவத்தை (சுத்த வாசனையுடைய பிரக்ஞை) க்ஷீண பாவ மடையாமல் பிரமரந்திரத்தினின்றும் மெதுவாக வெளியே வரும், பொருந்தும் அவ்வவத்தை யானே (சுபவாசனையானே) பரிசுத்த ஜீவன் முத்தர் வெளிநாட்டத்தைப் பொருந்துவர்; பர மேசுரப் பிரசாத ஜனித விசாராந்தியானே அவ சியம் ஞானலாபமாம் என்பது இக் கதையின் முக்கிய தாற்பரியம். |

5 – 4 பிரகலாதன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் — 977.

★  ★

# 5-5 காதி கதை

## அவதாரிகை

முன்பு ஈசுவரானுக்கிரகத்தானே உதித்த ஆன்ம தத்துவஞானத்தால் சம்சாரோபரமசாந்தி சொல்லப்பட்டது. இப்போது சித்தஜயத்தைத்தவிர ஜகன்மயமான மாயை உபசாந்தியாகாதென்று அறிவித்தற்பொருட்டு மாயா வைசித்திரியத்தை பிரதிபாதனஞ்செய்ய இலவண விருத்தாந்தம்போல காதி விருத்தாந்தமுங் கூறப்படுகிறது.

**பிறப்பிறப்பாம் பெயருடைய விந்தமாயைப் பெருமையினை முடிவுபெறப்**
**பேச வொண்ணு**
**வறப்பெரிய தன்மனத்தை வென்ருன்மாளு மல்லதொரு வகையாலு**
**மகற்ற லாகாச்**
**சிறப்புடைய வன்மாயை விரிவினுள்ள சித்திரந்தோன்றிட வுனக்குச்**
**செப்புங் காதை**
**மறப்பறுசிந் தையணுகிக் கேட்டியென்ன மனுகுலநாய கனுக்கு**
**வசிட்டன் சொல்வான். (1)**

பிறப்பிறப்பாம் பெயருடைய இந்த மாயைப் பெருமையினை முடிவுபெறப் பேசவொண்ணு அறப்பெரிய தன்மனத்தை வென்ருல் மாளும் அல்லதொருவகையாலும் அகற்றலாகாச் சிறப்புடைய விரிவினுள்ளவன் மாயை சித்திரந்தோன்றிட உனக்குச் செப்புங்காதை மறப்பறு சிந்தையணுகிக் கேட்டியென்ன மனுகுல நாயகனுக்கு வசிட்டன் சொல்வான் = ஜனன மரண சம்சாரமென்னும் நாமதேயம் பொருந்திய இந்த மகாமாயையினது மகாத்மியத்தை வரம்பறுத்துக்கூற முடியாது. இரஜோகுண விசிஷ்ட தன்மனத்தை ஜயித்தால்மாத்திரம் க்ஷயம் எய்தும் (நாசமாகும்) வேருெரு வகையினுலும் நாசமடையாதாம். அகடிதகடனு சிறப்புவாய்ந்து விஸ்தரித்திராநின்ற, வலிய (கொடிய) சம்சாரச்சித்திரம் விளங்கும்பொருட்டு உனக்கு இவ்விதிகாசத்தை ஒருமைப்பட்ட மனத்தனுகிக் கேட்பாயாகவென்று மனுவம்சத்தை விளக்க அவதரித்த வள்ளலுக்கு ஸ்ரீ வசிஷ்ட பகவான் உபதேசிக்கத் தொடங்கினுர்.

மண்ணுலகிற் கோசலமா மண்டலத்தின் மறையவர்கோன்
காதியென வழங்கும் பேரோ
னுண்ணிணைந்தோர் கருமத்தைக் கிளையைநீங்கி யொருவனம்
புக்கொருவாவி யுதகத் தூடே
நண்ணியணி கழுத்தளவா யமிழநின்று நற்றவஞ்செய்
தெண்டிங்க ணடைந்த வெல்லை
கண்ணருளான் மாயவன்வந் தவன்முன் ருேன்றிக்
கருத்தென்கொ லளித்துமெனக் கழறலோடும் (2)

மண்ணுலகில் கோசலமா மண்ட லத்தில் மறையவர்கோன் காதி யென வழங்கும் பேரோன் உள் நினைந்ததோர் கருமத்தைக் கிளையை நீங்கி ஒருவனம்புக்கு ஒருவாவி யுதகத்தூடே நண்ணி அணி கழுத்தளவாய் அமிழ நின்று நற்றவஞ் செய்து எண் திங்கள் நடந்தவெல்லே கண் ணருளால் மாயவன்வந்து அவன் முன் தோன்றி கருத்து என்கொல் அளித்தும் எனக் கழறலோடும் =

இப் பூமண்டலத்தின்கண் கோசலமெனப் பெய ரிய தேசம் ஒன்று உண்டு அதில் விப்பிரசிரேஷ் டன்காதி யென்பதாக விவகரிக்கும் நாமமுடைய வன் உள்ளத்தில் ஓர் கருமத்தை நினைந்து உற வினர்குழாங்களை விடுத்து ஒரு வனத்தின் கண்ணே பிரவேசித்து ஆங்குற்ற ஒப்பற்ற ஒரு தாமரைத் தடாக நீரில் இறங்கி அழகிய கண் டத்தளவு நீரில் மூழ்கியவனுகி நின்று நல்ல தவத்தினைச் செய்து எட்டுமாசங் கழிந்தன பின்னர் பிரத்தியக்ஷமாக ஸ்ரீ பகவான் நாரா யணன் எழுந்தருளி அந்தக் காதிமறையவன் எதிரில் பிரசன்னமாகி எண்ணியது யாது அத னைத் தருதும் என்று திருவாய் மலர்ந்தருளவே.

சலநின்றுங் கரையேறிக் காதியென்னுந் தவமறையோன்
கைதொழுது சகமண்டத்தி
லலகிலுயிர் மனக்கமலத் தகலாவண்டே யச்சுதனே
யனந்தாவென் றன்பாற்போற்றிச்
சலனமறு தற்பரத்திற் சம்பந்தித்துச் சனனமரணத்
துருவாற் சகங்களாகி
யலமருநீ டாச்சரியஞ் செய்வதாய்நீ யளித்தமா
யையைக்காண வருடியென்ருன். (3)

சலநின்றுங் கரையேறிக் காதி யென்னுந் தவமறையோன் கைதொழுது சகம் அண்டத்தில் அலகுஇல் உயிர் மனக்கமலத் தகலாவண்டே அச்சுதனே அனந்தாவென்று அன்பால் போற்றிச் சலனமறு தற்பரத்தில் சம்பந்தித்து சனனமரணத் துரு வால் சகங்களாகி அலமறும் நீடு ஆச்சரியஞ் செய்வதாய் நீ அளித்த மாயையைக்காண அருள்தியென்ருன் =

தாமரைத் தடாகத்தினின்றுங் கரையின்கண் ஏறிவந்து காதியெனப் பெயர்வாய்ந்த தவம்புரி பிராமண சிரேஷ்டன் நமஸ்கரித்து இப் பூமியி லுள்ள சகல அண்டங்களில் வாழும் அளவில் லாத உயிர்களின் இதயதாமரையினின்ருெளி ரும் பிரமரமே கெடாதவனே! தேசகால வஸ்து பரிச்சேதரகிதமே! என இவ்வண்ணம் பக்தியி னுலே தோத்தரித்து, அசலமான பரமபதத்தில் ஆரோபிதசம்பந்த தாதாத்மியத்தால் பற்றுக் கோடுடையதாய் பிறப்பு இறப்பு வடிவத்தால் உலகங்களாகி பிரமிக்கும்படி வெகு அற்புதமியற் றுவதாய்த்தேவரீர் உண்டாக்கியமாயாசக்தியை யான் காணும்பொருட்டு அநுக்கிரகஞ்செய்தருளு வாய் என்று பிரார்த்தித்தனன்.

அந்தணன்வேண் டலுமாயை காண்டி கண்டா லகற்றுகென வருளிமாயன்
கந்தருவ நகரம்போன் மறைதலோடுங் கருணைமூர்த் தியைக்கண்ட
களிப்பி னலே
சந்ததமுட் குளிர்காதியந்தக கானிற்றவத்தொடு சின்னளிருந்து
தானே யோர்நாட்
சிந்தனையி லரியுரைத்த வுரையைநாடித் தேமலரோடையின் மூழ்கச்
சென்றனன்றே. (4)

அந்தணன் வேண்டலும் மாயை காண்டி கண்டால் அகற்றுதியேல் அகற்றுக என அருளி மாயன் கந்தருவநகரம்போல் மறைதலோடுங் கருணைமூர்த்தியைக் கண்ட களிப்பினலே சந்ததம் உள் குளிர் காதி அந்தக்கானில் தவத்தொடு சின்னளிருந்துதானே ஓர்நாள் அரி உரைத்த உரையை சிந்தனையில் நாடித் தேமலரோடையில் மூழ்கச்சென்றன் =

மறையவன் பிரார்த்தித்தலும் மாயையைக்காண்பாய் பார்த்தால் நீக்குதற்குச் சாமர்த்தியம் இருக்குமேல் நீக்கிக்கொள்வாய் என்று ஸ்ரீ பகவான் ஹரியானவர் திருள்வருள் செய்து கந்தருவ பட்டிணம் போல அந்தர்த்தானமானவுடன் கிருபாமூர்த்தியைத் தரிசித்த சந்தோஷத்தினலே எப்போதும் உள்ளே தண்மையுற்றிருந்த காதிப் பிராமணன்அவ்வனத்தில் தவஞ்செய்துகொண்டு சிலதினம் யிருந்து சுயமாகவே ஒருதினம் ஸ்ரீபகவான் அருளிச்செய்த வாக்கியத்தை மனதில் எண்ணி மது வாசனைகள் நிறைந்த புஷ்பங்கள் பொருந்திய சரசில் ஸ்நானஞ்செய்யப் போனன்.

வனம்படிந்தங் கதனுட்செய் விதிக்கேவேத மந்திரமுந் தியானமுந்தான்
மறந்துகாதி
யினம்பயிறன் மனைக்கேதான் தன்னைநோயா லிறந்தவனைக்
கண்டானினத்தோ ரெல்லாங்
கனம்படமொய்த் திருபுறத்து மலறத்தேவி காற்கடைக்கே வீழ்ந்தலறக்
காதன்மாதா
தனம்பருகத் தருவனபோ லணைத்துக்கொண்டு தழழ்மிதித்தாள்போற்
பதைத்துத் தளரக்கண்டான். (5)

வனம் படிந்து அங்கு அதனுள் வேதவிதிக்கே செய் மந்திரமும் தியானமும் தான் மறந்து காதி இனம்பயில் தன்மனைக்கே தான் நோயாய் தன்னை இறந்தவனைக் கண்டான் இனத்தோரெல்லாம் கனம்பட மொய்த்து இறுபுறத்தும் அலற தேவி கால்கடைக்கே

தடாக நீரின்கண்ணே மூழ்கி அத்தடாகத்து வேதவிதிப்படி செய்யும் மந்திரத்தையும் தான் கருதத்தக்க தியானத்தையும் காதிப் பிராஹ்மணன் மறந்து காதிஞாதியர்கள் சூழ்ந்திருக்கப் பட்ட தனது கிரகத்திலேயே வியாதியினல் தன்னை மரித்தவனை (செத்தவனை)ப் பார்த்தான் பந்துக்கள் யாவரும் கூட்டமாகக் கூடி இரண்டு பக்கத்தும் கூ, கா, வெனக் கதற மனைவி பாதங்



| | |
|---|---|
| வீழ்ந்து அலற காதல் மாதா தனம் பருகத் தருவனபோல் அணைத்துக்கொண்டு தழல்மிதித் தாள்போல் பதைத்துத் தளரக் கண்டான் = | களின் பக்கத்தில் வீழ்ந்து புலம்ப, மிகுந்த அன்புடைய மாதாவானவள் ஸ்தன்யங்கள் மாந்தக் கொடுப்பனபோலக் கட்டித் தழுவிக்கொண்டு அக்கினியை மிதித்தனள்போலும் துடிதுடித்து ரோதனஞ்செய்து தேம்புதலைப் பார்த்தான். |

ஆமளவி லடுத்தனசெய் தழுஞ்சுற்றத்தா ரனல்கொளுத்தச் சாம்பராயங்க ளெல்லா
மீமுறக் கண்டானச் சலத்தினூடே யிருக்கின்றகாதி தனதியத் துள்ளே
தோமுறுமா குலமிகுந்த புந்தியாலே துகளறத்தன்பாற் றன்னாற் றோன்றக்கண்ட
வேமுறுசெய் கைகண்மேலு முள்ளவெல்லா மிராகவகே ளெனமுனிவ னிசைப்பதானான். (6)

| | |
|---|---|
| ஆம் அளவில் அடுத்தன செய் தழுஞ் சுற்றத்தார் அனல் கொழுத்த அங்கமெல்லாம் சாம்பராய் ஈமமுறக்கண்டான் அச் சலத்தினூடே யிருக்கின்ற காதி தனது இதயத்துள்ளே தோமுறும் ஆகுலமிகுந்தபுந்தியாலே துகளற தன்பால் தன்னால் தோன்றக் கண்ட ஏமுறு செய்கைகள் மேலும் உள்ளவெல்லாம் இராகவ கேள் என முனிவன் இசைப்பதானான் = | அங்ஙனம் நிகழ்ந்தவளவில் உரியனவாய பிரேத சமஸ்காரங்களைச் செய்து ஆகுலமிகுத்து அழும் ஞாதியர் அக்கினியில் தகனஞ்செய்யச் சரீரமுழுவதும் பஸ்மமாய்ச் சுடுகாட்டில் கிடக்கும்படி கண்டான்; பின் மூழ்கிய தடாகநீரினுள்ளே திதி பெற்றுள்ள காதி மறையவன் தனது இதயத்தின் கண்ணே குற்றமுற்றுக் கவலை அதிகரித்த மனத்தினாலே தடையில்லாமல் தன்னிடத்தில் தன்னாலே பிரதீதியாகக்கண்ட மயக்கம் பொருந்திய செய்கைகளும் பின்னரும் நடந்த செய்கைகள் யாவற்றையும் ஸ்ரீ இரகுகுலதிலகனே கேட்பாயாக என்று ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறத் தொடங்கினார். |

இப்பாரி லூனநாட்டோ ரூரினெல்லை யிருக்கின்றநீசனாய்க் கறிப்போர் தங்கண்
மைப்பாவை யொருத்திவயிற் றொருசூலாகி வருந்தி வளர்ந்துறுகாலம் வந்தவெல்லை
கைப்பால னாய்ப்பிறந்து வளர்ந்துவெந்த கரிக்கட்டைபோ னிறத்துக் காளையாகி
யொப்பாகி நாய்க்கறிப்போர் குலத்தில்வந்த வொருகடைச்சி தனைமணஞ்செய் தொருமையானான். (7)

| | |
|---|---|
| இப்பாரில் ஊனநாட்டு எல்லை ஓர் ஊரில் இருக்கின்ற நாய்க் கறிப்போர் நீசர் மைப்பாவை யொருத்தி வயிற்று ஒரு சூலாகி | இந்தப்பூமண்டலத்தில் ஹூணதேசத்தின் கோடியில் ஒரு கிராமத்தில் நாய்மாமிசம் புஜிக்கும் நீசர்களாகிய கடையர் தங்களின் கரிய ஒரு பெண்ணின் உதரத்தில் ஒப்பற்ற கர்ப்பத்தை |

வருந்தி வளர்ந்துறுகாலம் வந்த வெல்லே பிறந்து கைப்பாலனுய் வளர்ந்துவெந்த கரிக்கட்டை போல் நிறத்துக்காளையாகி நாய்க் கறிப்போர் குலத்தில் ஒப்பாகி வந்த ஒரு கடைச்சிதனே மணஞ் செய்து ஒருமையானுன் = யடைந்து, துக்கத்தோடும் வளர்ந்து பிரசவ காலம் வந்தபோது ஜனித்துக் கைக்குழந்தை யாய் விருத்தியாய் (பெரிய குழந்தையாகி) அக் கினியால் எரிந்த கொள்ளிக்கட்டைபோல நிற முடையதருணனுய்ப் பதினறு வயதுடையவ னுய்த் தன்னைப் பார்த்தான். மணஞ்செய்யத் தனக்குச் சமானமானவளாய் நாய் மாமிசம் புஜிக்கும் கடையர் குலத்தில் உதித்த ஒரு நீச ஸ்திரீயை விவாகஞ் செய்து மனமொத்து வாழ்ந்துவந்தான்.

வரைகளினும் வனங்களினு முதலாயெங்கு மனமுயிரும்போல் வாழு நாளிற்
றரைமிசைதன் குலம்விளங்க மைந்தர்தம்மைச் சனிப்பித்தான் சிலநாளிற்
சரைவந் தெய்தி
நரைபெருக வருதலுமே தழையாற்செய்யு நன்மனைதூ ரத்தியற்றி
நண்ணலுற்ருன்
புரையறுமா தவர்போலங் குறையுநாளிற் புத்திரர்க்குஞ் சரைவந்து
புகுந்ததன்றே. (8)

வரைகளினும் வனங்களிலுமுத லாய் எங்கும் மனமும் உயிரும் போல வாழுநாளில் தரைமிசை தன்குலம் விளங்க மைந்தர் தம் மைச் சனிப்பித்தான் சிலநாளில் சரைவந்தெய்தி நரைபெருகவரு தலுமே தழையால் செய்யும் நல் மனே தூரத்தியற்றி நண்ணலுற் ருன் புரையறு மாதவர்போல் அங்கு உறையுநாளில் புத்திரர்க் குஞ் சரைவந்து புகுந்ததன்றே = பர்வதங்களிலும் மரங்கள் நிறைந்த பிரதேசங் களிலும் கங்கைக்கரை முதலிய பல இடங்களி லும் சித்தமும் ஜீவனும் ஒன்றுபட்டு இரமித்து இல்லறம் நடத்துங்காலத்தில் இப் பூமண்டலத் தில் தனது வம்சம் விருத்தியடைந்தோங்கும்படி யாகப் புத்திரர்களை உண்டாக்கினுன். சொற்ப தினத்தில் ஜரைவந்தடைந்து நரை விருத்தியாக வந்துறுதலும் சேய்மையிலுள்ள கிராமசம்பந்தி ஜன்ம பூமியை அடைவுற்றுத் தாலத்தழையால் கட்டப்பட்ட நல்ல சாலையைக் கட்டி வசிக்கலா னுன். குற்றமற்ற பெருந் தபசிகள்போல அச் சாலையில் வசிக்கும்போது அக்காலத்தில் மைந் தர்கட்கும் சரைப்பருவம் வந்து நேர்ந்தது.

மனையவட்கும் புத்திரர்க்குந் தனக்குஞ்சேர வார்த்திகம்வந் ததுநோக்கி
வருந்து நாளிற்
றனையொழிய வனைவரையுங் காலன்மாய்ப்பச் சந்ததம்வாய்விட்டலறித்
தனியாற் ருது
நினைவழிந்தோ ராசைமற் றனேகதேச நெடிதுழல்வான் கீரமெனு நீதிநாட்டிற்
புனைமுடிமன் னவனகரிற் புகுந்து வானிற் பொற்றெருப்போ லொருதெருவிற்
போகும்போதில். (9)



| | |
|---|---|
| மனையவட்கும் புத்திரர்க்குந்தனக் கும் வார்த்திகம் சேரவந்தது நோக்கி வருந்துநாளில் தனை யொழிய அனைவரையுங் காலன் மாய்ப்பச் சந்ததம் வாய்விட் டலறித் தனியாற்ருது நினை வழிந்து ஓர் ஆசையும் அற்று அநேகதேசம் நெடிதுழல்வான் கீரமெனும் நாட்டில் நீதிமுடிபுனை மன்னவன்நகரிற் புகுந்துவானில் பொற்றெருப்போல் ஒருதெருவில் போகும் போதில் = | மனைவிக்கும், மைந்தர்கட்கும் கிழப்பருவம் தனக் கும் ஒருங்கே வந்துசேர்ந்தது. அதனைக்கண்டு துயருற்றிருக்கும்போது தன்னைத்தவிரப் பிற யாவரையும் எமன் கொண்டுசெல்ல எப்போதும் ஓவென வாய்விட்டுக்கதறி தனியே இருந்து ஒரு காரியமுஞ் செய்வதற்கு இயலாதவனுகி, எண்ண மிழந்து சகல ஆசைகளும் ஒழிந்து, அனேக தேசங்களில் நெடுங்காலமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்த அவன் கீரமண்டலமென்னும் நீதி நிறைந்த தேசத்தில் கிரீடம் தரித்த ஓர் அரச னது பட்டணத்தில் பிரவேசித்துச் சொர்க்கத்தின் சொர்ணவீதிபோன்ற ஒருவீதியில்செல்லுங்கால். |

இறையவன்மாண் டனனுலகங் காக்கவேருே ரிறைவனைக் கொண்டேகுதியென்
றேவிச்செம்பொ
னிறைமணியா லலங்கரித்து விடுத்ததந்தி நிருபதியாரெனத் தேடிநேரே
போதக்
கறைவடிவோ டிவன்கண்டா னிவனையந்தக் கறையடிகாணலுங் கரத்தாற்
கழுத்திலேற்ற
வுரைதருபா னுவினுடன் செல்லுதயநாக மொத்ததுபல்லியஞ் சூழ்ந்த
துவரியொத்த. (10)

| | |
|---|---|
| இறையவன் மாண்டனன்உலகங் காக்க வேறு ஓர் இறைவனைக் கொண்டு ஏகுதியென்றே நிறை மணிச் செம்பொன்னுல் அலங் கரித்து விடுத்ததந்தி நிருபதியா ரெனத்தேடி நேரே போதக்கறை வடிவோடு இவன் கண்டான் இவனை அந்தக் கறையடிகாண லுங் கரத்தால் கழுத்தில் ஏற்ற செல் உதயநாகம் உறைதரு பானுவினுடன் ஒத்தது உவரி யொத்த பல்லியஞ் சூழ்ந்தது = | அவவிராஜ்ஜியத்து மன்னவன் இறந்தனன், அவனுக்குப் புத்திரன் இராஜ்ய பரிபாலனஞ் செய்ய இல்லாததினுல் வேறு ஒரு வேந்தனைக் கொண்டுவருவாயாக எனப் பிரேரித்து நவரத் தினகசிதமான சொர்ண ஆபரணங்களால் அலங் காரஞ்செய்யப்பட்டுவிட்ட யானையானது அரசன் யாரென்று தேடி நேராக வந்துசேரக் கருத்த உருவத்தையுடைய இவன் பார்த்தான். இக் கடையனை அவ்வுரற்கால் யானைகண்டதும் துதிக் கையால் கழுத்தில் புஷ்பமாலையைப் போட்டு ஆரோகணிப்பிக்கப் புறப்படும் உதயகிரியோடு திதிபெற்ற சூரியனுடன் வீற்றிருக்குமாறு செய் தது சமுத்திர ஓசைக்குச் சமமாக வாத்திய விசேடங்கள் கோஷித்தன. |

ஸ்ரீ

எண்டிசையுஞ் சயசயவென் றிறைஞ்சவந்தா னிவனிறையென்
றலங்கரித்தா ரெழில்கொண் மானூர்
பண்டையமைச் சருஞ்சேனைத் தலைவர்தாமும் பணிதலைக்கொண்
டார்தரணி பால னாகி
மண்டலமெங் கணுஞ்செங்கோன் முறையினேச்சி மரபினாற்
கவலனெனும் வண்பேர் பெற்றுத்
தொண்டையித ழார்விரும்பக் கீரநாட்டிற் சுடர்மணிச்சிங்காதனமேற்
றோற்ற மிக்கான். (11)

எண்திசையுஞ் சய சயவென்று இறைஞ்சவந்தான் இவன் இறையென்று எழில்கொள்மானார் அலங்கரித்தார் பண்டை அமைச்சருஞ் சேனைத்தலைவர் தாமும் பணிதலைக் கொண்டார் தரணிபாலனாகி மண்டலம் எங்கணுஞ் செங்கோல் முறையினேச்சி மரபினால் கவலன் எனும் வண்பேர் பெற்றுத் தொண்டை இதழார் விரும்பிக் கீரநாட்டில் சுடர்சிங்காதனமேல் தோற்றமிக்கான் =

எல்லாத்திசையினும் ஜயம் ஜயம் எனப்போற்றி ஆடவர் மலர்மாரியும், அரிவையர் பொரி மாரியும் தூவி வணங்க; யானைமீது பட்டணப்பிரவேசமாக அரண்மனைக்கு வந்தனன். இவனே அரசன் என்று கவின்மிகுந்திலங்கும் மான் போன்ற விழியை ஒத்த மடவார் அலங்காரஞ் செய்தனர், பழைய மந்திரிமாரும், சேனாதிபதிகளும் காலினால் ஏவிய பணிகளைச் சிரந்தாங்கிச் செய்தனர். பூரக்ஷகனாகிப் பூமண்டலமெங்கணும் இராஜ்ஜியத்தை மநுநீதி முறைப்படி நடாத்தி வங்கிசத்தால் கவலன் என்னும் வளப்பம்பொருந்திய நாமத்தையடைந்து கோவைக்கனிபோன்ற அதரமுடைய மடவார் விரும்ப கீரதேசத்தில் பிரகாசம் வீசும் இரத்தின சிம்மாசனத்தின்மீது மிகவும் விளங்கினான்.

நாலிரண்டு வருடமுயர் கவலனென்னு நாய்க்கறிக்குங்கடையர் நரபதியாய்
வாழ்ந்து
மேலதற்பின் னொருநாளிற் றனியனாகி மெய்யலங்காரங்க ளெல்லாம்
விட்டுத்தானே
காலினடந் துயர்மனையின் புறமுற்றத்திற் கடைவேடத்துடனுலவு
காலையாங்கே
நீலிமையா நிறத்தோர் நாய்க்கறிக்கு நீசர்நேர்வந்தார் வீணையிசை
நிரப்புங் கையார். (12)

நாய்க்கறிக்கும் கடையன் நாலிரண்டு வருடம் உயர் கவலன் என்னும் நரபதியாய் மேல் வாழ்ந்து அதன்பின் ஒருநாளில் தனியனாகி மெய் அலங்காரங்களெல்லாம் விட்டுத்தானே காலில்

நாய்மாமிசம் புஜிக்கும் நீசன் எட்டு வருடங்கள் மேன்மைமிக்க, கவலனென்னும் பூபதியாகி மேலாக வாழ்ந்து அதன்பின்பு மற்றொரு சமையத்தில் தான் ஒருவனாய்ச் சரீரத்தின்கண் அணிந்த ராஜ அலங்காரங்களெல்லாம் விட்டுத் தானே பாதத்துலாவி உயர்ந்த அரண்மனையில்

ஶ்ரீ

நடந்து உயர்மனையின் புறமுற்றத்தில் கடைவேடத்துடன் உலவுங்காலை ஆங்கே நீல் இமையாம் நிறத்தோர் வீணையினிசை நிரப்புங்கையாற் நாய்க்கறிக்கும் நீசர் நேர் வந்தார் = வெளி அங்கணமென்னும் முற்றத்தில் நாய்மாமிசம் புஜிக்கும் கடையர் வேடத்துடன் சஞ்சரித்துக் கொண்டிருக்கும்போது அவ்விடத்தே கருப்பு வர்ணமுடையவராய் நாய்மாமிசம் புஜிக்கும் கடையர் வீணையின்சுரத்தை மீட்டுங்கரத்தினராயுள்ள கடையர் கண்காண வந்துற்றனர்.

யாழுடை காளைக்குண் மேலாமற்றோ ரிருண்டநிறச் சிவந்தவிழி விருத்த
னெய்திக்
காழுடை நற்கிர மகிபந்தன்னைக் காண்டலுமே காதலுடன் கடைஞ்சனென்னு
மூழுறுதொல் பெயர்வினவி நெடுங்காலத்தி னுறவாநீ யெங்ககன்று
யுறைவதெங்ஙன்
சூழுறுநல் விதியாலே கண்டேனென்னுத் தொடர்பெல்லா முள்ளபடி
தோன்றச்சொன்னன். (13)

யாழுடைய காளைக்குள் மேலாம் மற்றோர் இருண்டநிறச் சிவந்த விழி விருத்தன் எய்திக் காழுடைய நற்கீரமகிபந்தன்னைக் காண்டலுமே காதலுடன் கடைஞ்சன் என்னும் ஊழுறுதொல் பெயர் வினவி நெடுங்காலத்தின் உறவாம் நீ எங்கு அகன்றாய் உறைவது எங்ஙன் சூழுறும் நல் விதியாலேகண்டேன் என்னுத்தொடர் பெல்லாம் உள்ளபடி தோன்றச் சொன்னன் = வீணையுடைய கடையர் கூட்டத்தில் தலைவனாக (நாயகனாகி) விளங்கும் மற்றொரு கறுத்தநிறமும் சிவந்த விழியும் உடைய கிழவன் முன்னிட்டு ஒளிபொருந்திய மேன்மை மிக்க கீரதேச மன்னவன்றன்னைப் பார்த்தலுமே அன்புடன் கடைஞ்சனெனும் ஊழ்வசத்தால் பழைய நாமத்தைச் சொல்லி விளித்து வெகுகாலத்து நேயனும் நீ எவ்விடத்துச் சென்றாய், இப்போது எங்கே இருக்கின்றாய் பூரண தெய்வகதியால் பார்த்தேன் என்று முன் சம்பந்தம் யாவற்றையும் இருந்தபடி யாவருக்குங் கேட்கும்படி விளங்க விளம்பினன்.

அதுபுகன்ற வவன்றன்னைக் கவலனான வரசனிகழ்ந்ததிர்ந் துரப்பியவனின்
றாங்கே
கதுமெனவுள் ளேகுதலு மிவற்றையெல்லாங் கனங்குழையார் சாளரத்திற்
கண்ணிற்கண்டார்
புதுமையினு னின்றார்நின் றுழியேகண்டு பூபதியாமிவன் கடைஞ்சப்
புலையனுமே
லெதுசெயப்பாற் றினியென்றே துணுக்குற்றேங்கி யிடருற்றா ரிவன்கலங்கா
திதயத்தெண்ணி. (14)

அதுபுகன்ற அவன்றன்னைக் கவலனான அரசன் இகழ்ந்து அதிர்ந்து அங்ஙனம் முறைமையால் கூவி அழைத்த அக்கிழவனை, கவலனான அரசன் தூஷித்துக் குமுறி

உரப்பி அவண் நின்று ஆங்கே கதுமென உள் ஏகுதலும் இவற்றையெல்லாங் கனங்குழை யார் சாளரத்தில் கண்ணிற்கண் டார் புதுமையினுல் நின்ருர் நின் றுழியேகண்டு பூபதியாம் இவன் கடைஞ்சப் புலையனுமேல் இனி எது செயற்பாற்று என்றே துணுக் குற்று ஏங்கி இடருற்ருர் இவன் கலங்காது இதயத்தெண்ணி =

அதட்டி அவ்விடத்தினின்றும் திடுக்கென்று அரண்மனையின் உள்ளே செல்லுறலும் இவ் வரலாறு யாவற்றையும், காதில் நவரத்னகசித ஆபரணந்தரித்த அந்தப்புர மடவார் பலகணி = (ஜன்னல்) வாயிலாகப் பிரத்தியக்ஷமாகப் பார்த்தார்கள், அதிசயத்தோடும் நின்ருர்கள், நின்ற இடத்திலேயே ஆலோசித்து மன்னவனும் இவன் கடைஞ்சன் என்னும் நீசன் ஆவனேல் இனி யாது இயற்றற்பாலது என்பதாகத் தாமே திடுக்கிட்டு இரங்கி வாடி துயரத்தை அடைந்தனர், இவன் சஞ்சலமுருது மனத்தில் திடமடைந்து.

அறியான்போ லவற்றையெல்லா மறைத்துமுன்போ லாதனத்தி லிருக்கவுமங் கவனைமுன்னஞ்
செறிவான வஞ்சியர்மந் திரியர்யாருந்தீண்டாத சவத்தைப்போற் றெறிசி யாராய்ப்
பிறியாது நின்றனரச் சனத்துட்சேர்ந்தும் பேதமா யிவன்றனித்த பெற்றி கூறிற்
பொரியாருங் கல்விதன மியாதுமின்றிப் புறநாட்டி லுறும்பதிகன் போலு மன்றே. (15)

இவற்றையெல்லாம் அறியான் போல மறைத்து முன்போல் ஆதனத்தில் இருக்கவும் அங்கு அவனை முன்னஞ் செறிவான வஞ்சியர் மந்திரியர் யாருந் தீண் டாத சவத்தைப்போற் றெறிசியா ராய்ப் பிறியாது நின்றனர் அச் சனத்துள் சேர்ந்தும் பேதமாம் இவன் தனித்தபெற்றி கூறில் பொறி ஆரும் கல்வி தனம் யாது மின்றிப் புறநாட்டிலுறும்பதிகன் போலும் =

அச்சரிதைகளனைத்தையும் தெரியாதவனைப் போல மறைத்து (ஒழித்து) பூர்வம்போல சிங்காதனத்தில் வீற்றிருக்கவும் அவ்விடத்தில் அம்மன்னனை பூர்வங்கூடி வாழ்ந்த இராஜஸ்திரீகள், அமைச்சர்கள், சேனதிபதிகள் சபையிலுள்ளவர்கள் யாவரும் தொடக்கூடாத அனுதிப்பிணத்தைப்போல பாராதவராய் அதனின்றும் அகலாது பக்கத்து இருந்தனர். திருஷ்டாந்தப்படுத்திச் சொல்லில் பொறி விவேகமும், ஆரும் நிறைந்த கல்வி, தனம் மற்றெது ஒரு உதவியுமில்லாமல் அன்னியதேசத்தில் அடைந்த வழிப்போக்கன் போல ஆயினன்.

ஆயிடையா வரும்புலைநாய்க் கறிப்போனுலே யனேகநாட் பாதகமே யடைத லானேம்
போயினியோர் சாந்தியினு முய்யமாட்டோம் புனிதமாம் படிதீயிற் புகுதுமென்னுத்

தீயில்விழ நிச்சயித்தந் நகரோ ரெல்லாஞ் சிசுக்கண்முதல் விருத்தர்கடை சேரக்கூடி
வீயிலுறை வண்டுகள்போ லெரியில்வீழ்ந்தார் வேந்தனும் புலைக்கடைஞ்சன் மிகவு நொந்தான். (16)

ஆயிடையாவரும் நாய்க்கறிப் போன் புலை ஆலே அனேகநாள் பாதகமே அடைதலானேம் போய் இனி ஓர் சாந்தியினும் உய்யமாட் டோம் புனிதமாம்படி தீயிற்புகுது மென்ன நிச்சயித்து தீயில்விழ சிசுக்கள் முதல் விருத்தர்கடை அந்நகரோர் எல்லாஞ் சேரக்கூடி வீயில் உறை வண்டுகள் போல எரியில் வீழ்ந்தார் வேந்தனும் புலைக்கடைஞ்சன் மிகவும் நொந் தான் = அவ்விடத்துள்ள மங்கையர் முதலிய யாவரும் நாய் மாமிசம் புஜிக்கும் நீசனலே வெகுகாலம் பாவதோஷமே அடைந்தோம். மூர்த்தி ஸ்தல யாத்திரை சென்றுங் கடைத்தேறமாட்டோம் பவுத்திரமாகும் வண்ணம் அக்கினியிற் பிரவேசிப் போமென்று துணிந்து அக்கினியில் பாய, பாலர் முதல் கிழவர் ஈருக அப் பட்டணத்திலுள்ள யாவ ரும் ஒருங்குசேர்ந்து புஷ்பத்தில் விழும் பிரமரம் போல அக்கினியில் பாய்ந்தார்கள். அரசனும் நீசக்கடைஞ்சன் அத்தியந்தம் துயரத்தை அடைந்தனன்.

நல்லினஞ்சேர் தலிர்சிந்தந் தெளிந்துநன்ரு நாய்க்கறிக்கும் புலைநிருப னுடுகிற்பான்
புல்லியநந் தொடற்பாலித் தேசத்துள்ளோர் பூரியராயனல் புகுந்து பொன்றிப்போன
ரல்லலுட னினியமையு மென்னநாடி யாவிவிடத் துணிந்தனலில் வீழும்போதிற்
பல்லவம்போ லெரிதுகடைஞ்ச னுடலிற்ருக்கப் படிபுனலுட் காதியுடல் பதைத்ததன்றே. (17)

நாய்க்கறிக்கும் புலைநிருபன் நல் லினஞ்சேர்தலில் சித்தந்தெளிந்து நன்ரும் நாடுகிற்பான் புல்லிய நம் தொடர்பால் இத் தேசத்துள் ளோர் பூரியராய் அனல்புகுந்து பொன்றிப்போனர் அல்லலுடன் இனியமையும் என்ன நாடி ஆவி விடத்துணிந்து அனலில் வீழும் போதில் பல்லவம் போல் எரி கடைஞ்சன் உடலிற்ருக்கப்படி புனலுள் காதி உடல் பதைத்தது = நாய் மாமிசம் புசிக்கும் சுவாபகனுகிய நீச அர சன், சங்கற்பத்தோடு எட்டு ஆண்டு கூடியிருந்த தால் மனந்தூயதாகி நன்று ஆம் = விவேகம் உதயமாய்ச் சிந்திப்பானுயினன், இழிவுபொருந் திய நமது சம்பந்தத்தால் இக் கீரமண்டலத்துற் ரேர் நீசராய் அக்கினியிற்பாய்ந்து இறந்து போனர்கள். துக்கத்தோடுகூடி வாழுதல் இனிப் போதும் எனச் சிந்தித்து உயிர்விட நிச்சயித்து அக்கினியிற் பாய்ந்தவுடனே உலர்ந்த சருகு போல அக்கினி கடஞ்சன் காயத்தில் தாக்க ஜலத்தில் மூழ்கிய அம் மறையவனும் காதி தேகம் துடிதுடித்தது.



மாமாயை நின்றகன்று தெளிந்தகாதி வருமுகுர்த்த மோரிரண்டின் மயக்கம் நீங்கி
யாமாரென் காண்கின்றே மென்செய்தோ மென்றெல்லாமுண் ணினைந்து சலத்திடை நின்றேறி
யாமாவிப் படியன்றே வுயிர்களெல்லா மரணியத்துட்சினப் புலிபோல் வாவியோடித்
தோமாரு நெடுமயக்கின் மனமோகித்துத் துவள்கின்று ரெனக்கருதித் துயரந் தீர்ந்தான். (18)

மாமாயை நின்றகன்று தெளிந்த காதி ஓரிரண்டின் முகூர்த்தம் வரு மயக்கம் நீங்கியாம் ஆர் என் காண்கின்றேம் என்செய்தோம் என்றெல்லாம் உள்நினைந்து சலத் திடைநின்று ஏறி ஆம் ஆம் இப் படியன்றே உயிர்களெல்லாம் அரணியத்துள் சினப்புலிபோல் அவாவி ஓடித்தோமாரும் நெடு மயக்கில் மனம்மோகித்துத் துவள் கின்றுர் எனக்கருதித் துயரந் தீர்ந்தான் =

அகடிதகடன மாயையின் வல்லமையினின்றும் வெளிப்பட்டு யாம் யார்என்று ஆராய்ச்சிபொருந் திய காதி பிராமணன் நாலு நாளிகை பரியந்தம் வாராநின்ற முகூர்த்தம் வருமயக்கம் நீங்கி அகம் யாவன் என பார்க்கின்றேம், என்னகாரியஞ் செய்தேன் என்பதாக யாவற்றையும் உள்ளே எண்ணி நீரினின்றும் கரை ஏறி மிகுந்த ஆச்சரிய மடைந்து இவ்வாறல்லவோ சகல பிராணிகளும் பெருங்காட்டிடை கோபமிகுந்த வியாக்கிரம் போல் ஆசைப்பட்டு ஓடிக் குற்றம் பொருந்திய மிக்க மயக்கத்தினல் மனமானது மயங்கிச் சஞ் சலப்பட்டுழல்கின்றுர்கள் என்று சிந்தித்துத் துக்கம் நீங்கப்பெற்றான்.

அக்கருத்தி னுடன்சிலநா ளகற்றிநின்று ஞச்சிரமத்தவ் வயினோரதிதி யெய்த
மிக்கமகிழ் வுடன்றேன்காய் விரும்பியூட்டி வெய்யவன்போஞ் சந்தியிற்றம் விதிகள்செய்து
தக்கசய னங்கள்பயின் றிருவர்தாமுந் தத்துவநூற்கதை க்ண்மொழி சமயந் தன்னி
லொக்கவுறை யதிதிதனைக் காதிநோக்கி யுத்தமநின்னுட லுணங்கி யோய்ந்த தென்னே. (19)

ஆச்சிரமத்து அக்கருத்தினுடன் சிலநாள் அகற்றிநின்றான் அவ் வயின் ஓர் அதிதி எய்த மிக்கமகிழ் வுடன் தேன் காய் விரும்பி ஊட்டி வெய்யவன்போஞ் சந்தியில் தத் தம் விதிகள் செய்து தக்க சயனங் கள் பயின்று இருவர்தாமும் தத் துவ நூற்கதைகள் மொழிசமயந்

ஆச்சிரமத்து அக்காதி வேதியன் அம் மோகத் தைச் சித்தத்தின்கண் வைத்துக்கொண்டே சில தினம் தவஞ்செய்து கழித்து வசித்துவந்தனன். அவ்வாசிரமத்து ஓர் அதிதிவந்துசேர மிகசந்தோ ஷத்துடன் தேன், காய், பழம், கிழங்கு முதலி யவை விருப்பத்தோடும் உண்ணுமாறு அளித்துச் சூரியன் அஸ்தமனமாகும் சந்தியாகாலத்தில் தங்களுடைய கடமைகளை (ஜபம் தியானுதி)

தன்னில் ஒக்கவுறை அதிதிதனைக்
காதி நோக்கி உத்தம நின்னுடல்
உணங்கி ஓய்ந்ததென்னோ =

செய்துமுடித்துத் தகுதியான ஆசனங்களில் வீற்றிருந்து இரண்டுபேர்களும் தத்துவ சாஸ்திரத்திலுள்ள கதைகளைப்பற்றிச் சம்பாஷித்துக் கொண்டிருந்த சமையத்தில் கூறுவான் சமாதானமாக விருந்து உரையாடிக்கொண்டிருக்கும் அதிதிதனைக் காதி பார்த்து ஹே! உத்தம தங்களுடைய தேகம் இளைத்து ஆயாசமடைந்திருக்கும் காரணம் யாதுகொல்லோ?

கூறுவா யெனுங்காதிக் கதிதிசொல்வான் குவலயத்துத் தரதிசையிற் குலவு செல்வந்
தேறுபுகழ் கீரமெனுந் தேசந்தன்னி லியான்மாதமொன்றிருந் தேனினியோர் வேண்ட
வாறுற யானுறைநகரி லொருவனென்பா லணுகியுரைப்பா னிந்நாட்டரசா யிவ்வூர்
மாறுபடா தெட்டாண்டிங் கொருவன்வாழ்ந்து மற்றவனுய்க் கறிப்பவனுமரபு தோன்ற. (20)

கூறுவாய் எனுங் காதிக்கு
அதிதி சொல்வான் குவலயத்து
உத்தரதிசையில் குலவு செல்வந்
தேறுபுகழ் கீரமெனும் தேசந்
தன்னில் இனியோர் வேண்ட
யான் மாதம் ஒன்று இருந்தேன்
ஆறுறயானுறை நகரில் ஒருவன்
என்பால் அணுகி உரைப்பான்
இந்நாட்டு அரசராய் இவ்வூர்
இங்கு ஒருவன் மாறுபடாது
ஆண்டு வாழ்ந்து மற்று அவன்
நாய்க்கறிப் புஜிப்பவனும் மரபு
தோன்ற =

சொல்வாயென்று கூறிய காதி வேதியனை நோக்கி வந்த மறையவன் சொல்வான் இப்பூமண்டலத்தின் வடக்கு திசையில் நிறைந்த செல்வம் மிகுந்த புகழ்வாய்ந்த கீரமண்டலமெனுந் தேயத்தில் அன்பர்கள் பிரார்த்தனைக்கிரங்கி யான் மாசம் ஒன்று வசித்தேன் விசிராந்தியாக யான் இருந்த பட்டணத்தில் ஓதி அன்பன் என்னிடம்வந்து சம்பாஷித்துக்கொண்டிருக்குஞ் சமயத்தில் கூறுவான், இந்நகரில் இத்தேசத்து இராஜனகி வேறுபாடின்றி எட்டு வருஷம் வாழ்ந்து பின்னர் (சுவபசனும்) நாய் மாமிசம் புஜிக்கும் நீசனும் வம்சம் தோன்றிய அளவே.

அனையவன் கனல்புக் கிறந்தன னுங்கே யந்தண ரனல்புகுந்த விந்தா
ரனையரென் றிசைக்கே னென்றலு மதுகேட் டியம்பிய தேசம்விட் டேகிக்
கனதிரைக் கடவுட் புனற்பிர யாகைக் கரையிலப் பாதகங் கழிப்பான்
றனைநிகர் மறையாற் சாந்திகள் செய்து சாந்திராய ணஞ்சரித் திளைத்தேன். (21)

அனையவன் கனல்புக்கு இறந்தனன் ஆங்கே அந்தணர் அனல் புகுந்து அவிந்தார் எனையரென்று இசைக்கேன் என்றலும் இயம்பிய அதுகேட்டு தேசம் விட்டு ஏகி பாதகங் கழிப்பான் கனதிரைக் கடவுள் புனல் பிரயாகைக் கரையில் தனைநிகர் மறையால் சாந்திகள் செய்து சாந்திராயணஞ் சரித்து இளைத்தேன் = அச்சுவபசன் அக்கினியில் வீழ்ந்து மரித்தனன் அவ்வாறே சுவபசன் (நீசன்) ஆட்சிக்குட்பட்டிருந்தோமே என்று பிராமணர் முதலிய சகல ஜனங்களும் அக்கினியிற் பாய்ந்து மடிந்தார்கள் உயிர் நீத்தவர்கள் எவ்வளவினரென்று என்னால் கூறவே முடியாது என்று சொல்ல கூறிய அதனைச் செவியுற்று அத்தேசத்தை விட்டுப் புறப்பட்டு அந்த நீச சம்பந்தமான பாவத்தை அகற்றும் பொருட்டுப் பேரலைகள் வீசும் தெய்வ கங்கையில் (யமுனையும் சரஸ்வதியும் கலக்கும் பிரயாகை தீரத்தில்) தனக்குத்தானே நிகரான சாஸ்திர யுக்தமாய் பிராயச் சித்தங்கள் செய்து சாந்திராயணம் அநுஷ்டித்து கிருசனாயினேன் (மெலிவை அடைந்தேன்.)

என்றுகொண் டதிதி யியம்பலுங் காதி யென்னுடைச் சரிதையீ தென்னு
தன்றனி யுளத்தி லதிசய மிக்குத் தன்னுடைப் புலைச் சரித்திரமாய்
முன்றிக ழியற்கை காண்பது விரும்பி முந்துள நாடுக ளகன்று
சென்றுபுக் கூண மண்டலந் தனிற்றன் செனித்துறை யிடமெலாங்
கண்டான். (22)

என்று அதிதி இயம்பலுங் காதி கொண்டு ஈது என்னுடைச் சரிதை என்னுத் தன்றனி உளத்தில் அதிசயமிக்குத் தன்னுடைப் புலைச் சரித்திரமாய் முன்திகழ் இயற்கை காண்பது விரும்பி முந்துள நாடுகள் அகன்று சென்றுபுக்கு ஊணமண்டலந் தனிற்றன் செனித்துறை இட மெலாங் கண்டான் = என இவ்வண்ணம் வந்த அதிதிப் பிராமணன் கூறலும், காதிப்பிராமணன் செவிமடுத்து, ஈது என்னுடைய சரித்திரமல்லவோ எனத் தன்னுடைய மனத்திற்றனே மிகுந்த ஆச்சரியத்தை யடைந்து தன்னுடைய நீச சரித்திரமாயிருப்ப பூர்வம் விளங்கும் சுபாவத்தைப் பார்க்கும் பொருட்டு விருப்பமிக்கவனாய் எதிர்ப்பட்ட தேசங்கள் கடந்து சென்று ஊணமண்டலந்தனில் தான் பிறந்து இருந்து ஆடித்திரிந்த பிரதேசங்கள் புத்திராதி சம்பத்துடன் இருந்து மிருத்யுவால் தன் சம்பந்திகள் யாவும் ஒழிய அன்னியனால் கேள்வியுற்றும் தானும் பார்த்தனன்.

முந்துதான் கண்டபடி யெலாங் கண்டு மொய்சடை முடிமிகத் துளக்கிச்
சிந்தையில் வியந்து நான்முகன் விவிதச் செய்கையை நோக்கி மேற்சென்று
னந்த நல் லூணமண் டலநீங்கி யணிதிகழ் கீரநா டணுகி
வந்துதான் முன்னஞ் செய்தன வெல்லாம் வழுவறக் கண்டு
கேட்டறிந்தான். (23)

முந்துதான் கண்டபடி யெலாங் கண்டு மொய்சடை முடிமிகத் துளக்கிச் சிந்தையில் வியந்து நான்முகன் விவிதச் செய்கையை நோக்கி மேற்சென்ருன் அந்த நல் ஊணமண்டலம் நீங்கி அணி திகழ் கீரநாடு அணுகிவந்து தான் முன்னஞ் செய்தனவெல் லாம் வழுவறக் கண்டு கேட்டு அறிந்தான் = நீரில் மூழ்கிய காலத்துத் தான் பார்த்த வகை யாவற்றையும் பார்த்து நெருங்கிய சடாமுடியை அசைத்து மனதில் ஆச்சரியத்தையடைந்து சதுர் முகன் (பிரமாவினது) நாளுவித காரியங்களைக் கண்டு மேலே போனுன், அழகுஞ் சிறப்பும் வாய்ந்த அந்த ஊணமண்டலம் தாண்டி அழ காக விளங்கும் கீரமண்டலமடைந்து தான் பூர் வம் எட்டு ஆண்டு அரசுபுரிந்தன யாவும் குறை வறப் பார்த்தும் பிறர் சொல்லக் கேட்டும் உணர்ந்தான்.

இதுகொலோ முன்ன மியம்பிய மாயோ னெனக்கறிவித்தமா மாயை
புதுமையா மிதனை நன்குற வறிந்தேன் புந்தியா லென்பது கருதிக்
கதுமென வந்தத் தேசநின் றகன்று கனவரைச் சாரலி னணுகி
யதுலமா தவனே ரங்கைநீ ருணவா யரிமகி ழருந்தவம் புரிந்தான். (24)

இதுகொலோ முன்னம் இயம்பிய மாயோன் எனக்கு அறிவித்த மா மாயை புதுமையா மிதனை புந்தியால் நன்குற அறிந்தேன் என்பது கருதிக் கதுமென அந்தத் தேசம் நின்று அகன்று கன வரைச் சாரலில் அணுகி அதுல மாதவன் ஓர் அங்கை நீர் உண வாய் அரிமகிழ் அருந்தவம் புரிந்தான் = இதுவன்றே பூர்வம் என்றுற் பிரார்த்திக்கப் பட்ட ஸ்ரீ பகவான் எனக்கு உணர்த்தி வைத்த மாட்சிமைபொருந்திய மாயையாம் விசித்திரமாம் இதனை புத்தியால் நன்ருக அறிந்தேன் என்ப தாக எண்ணி விரைவாக அத்தேசத்தை விட்டுச் சென்று மேகங்கள் படிந்த பர்வதத்தின் தாழ் வரையை அடைந்து ஒப்பற்ற காதி வேதிய மாதவன் ஓர் உளங்கை ஜலத்ஸுதயே ஆகார மாகக் குடித்து ஸ்ரீமந் நாராயணரது திருவுள்ளம் சந்தோஷமடையுமாறு அறிய தவத்தினைச் செய்தனன்.

ஆண்டுசென் றளவே யம்மலைச் சார லருந்தவனுச் சிரமத்தி
னீண்டமா னீல முகிலெனத் தோன்றி நிறைதவக் காதியைநோக்கி
யீண்டிய வெமது மாயையின்பெருமை யியல்புறக் கண்டனை யினிமேல்
வேண்டிய தென்னைக் கிரித்தடத்தியற்று மெய்த்தவ மெதுபொருட்
டென்ன (25)

ஆண்டு சென்றளவே அம்மலைச் சாரல் அருந்தவன் ஆச்சிரமத்தில் நீண்டமால் நீல முகிலெனத் தோன்றி நிறைதவக் காதியை = ஒரு வருஷம் தவத்திஞல் நாள் கழிக்கவே அந் தப் பர்வதத்தின் தாழ்வரைச் சோலையில் உள்ள அரியதவ முனிவனது ஆச்கிரமத்தில் நெடுமா லான ஸ்ரீ பகவான் நீர் உண்டு கருக்கொண்ட

நோக்கி யீண்டிய எமது மாயை யின் பெருமை இயல்புறக் கண் டனே இனிமேல் கிரித்தடத் தியற்றும் மெய்த்தவம் எது பொருட்டு வேண்டியதென்னை என்ன = கார்மேக மொப்ப பிரசன்னமாகி பூரண தவக் காதியைப் பார்த்தருளி சர்வ சக்தியும் நிரம்பிய எமது மாயையின் மகிமையை உள்ளவாறு பார்த் தனே இனிமேல் இப்பர்வதச் சாரலின்கண்ணே செய்யும் உண்மையான தவம் எப்பயனைப் பெறும்பொருட்டு விரும்பியது யாது என வினவி அருள.

துதித்தன னிறைஞ்சித் தொழுதனன் கரிய துங்கமா முகிலினைக்கண்டு
கதித்தசா தகம்போற் களிப்புறுகாதி கருணையங் கண்ணனை நோக்கி
விதித்துநீ காட்டும் வினையிருண் மாயைவிளங்குற விதுவெனக் கண்டேன்
மதித்தவம் மாயை மருமநா னறியேன்மயக்க மெய்யானதென் னென்றுன்.(26)

முகிலினைக்கண்டு கதித்த சாதகம் போல கரியதுங்கமா கருணையங் கண்ணனை களிப்புறு காதிநோக்கி துதித்தனன் இறைஞ்சித் தொழு தனன் விதித்து நீ காட்டும் வினை இருள் மாயை விளங்குற இது வெனக்கண்டேன் மதித்த அம் மாயை மருமம் நான் அறியேன் மயக்கம் மெய்யானது என் என்றுன் = மேகத்தினைக்கண்டு சந்தோஷித்த சாதகப்பக்ஷி போல நீலமேகம்போல் பரிசுத்தரும் மாட்சிமை பொருந்திய கிருபாசொரூபரும் அழகிய செந்தா மரை இதழ்போன்ற நேத்திரத்தையுடையவரும் ஆகிய அதிசந்தோஷமாக பகவானைக் கண்டு வாக்கால் தோத்திரஞ் செய்தனன், மனத்தால் தியானித்தனன், எண்ணினன், சரீரத்தால் விழுந்து நமஸ்கரித்தனன். நியமித்துத் தேவரீர் தரிசிப்பித்தருளிய வினை (விக்ஷேபம்) இருள் ஆவரணசத்தி விசிட்ட மாயை தெரியும்படியாக இத்தமையது இதுவெனும்படி உணர்ந்தேன், நிச்சயித்த அம் மாயையின் மர்மம் இரகசியத்தை அறியேன் (மயக்கம் மெய்யானது) சத்தியமா னது எங்ஙனம் என்பதனைக் கூறவேண்டுமென்று பிரார்த்தித்தான்.

மாலதற் குரைப்பா னந்தணுவிந்த மண்முதலி யாவையு மனத்தின்
பாலுற விருப்ப தன்றியேபுறத்திற் பயில்வதோர் காலமு மிலதா
மூலமில் கனவு மயக்கமுமதமு முதலிய நெறிகளி லியாருஞ்
சீலமாய் நோக்கி யநுபவிக்கின்றுர் சிந்தையுட் சக மிருப்பதுவே. (27)

மால் அதற்கு உரைப்பான் அந்தண இந்த மண்முதலி யாவையும் மனத்தின்பால் உற இருப்பதன்றியே புறத்தில் புயில்வதோர் காலமுமிலதாம் = ஸ்ரீ பகவான் அக் காதியின் கேள்விக்கு விடை பகர்ந்தருளுவார் ஹே விப்பிரவா! இப்பிருதுவி முதலியவெல்லாம் உள்ளத்திடத்தே திடவாசனு மாத்திரமாக இருப்பனவேயல்லாமல் ஒரு சிறி தும் பாகியத்தில் மனதுக்குப் பின்னமாகப்

மூலம்இல் கனவு மயக்கமும் மதமும் முதலிய நெறிகளில் யாருஞ் சிந்தையுள் சகம் இருப்பது சீலமாய் நோக்கி அநுபவிக்கின்றூர்கள் = பொருந்துவது எக்காலத்துமே தோற்றுவதே கிடையாதாம், வாசனையினுலன்றி உண்மையில் இல்லாத சொப்பன பதார்த்தங்கள் மோகத்தும் கட்குடி முதலிய மதம் பொருந்தியவிடத்தும் எவரும் மனத்தின்கண் உலகம் இருப்பதாகவே சுபாவமாகவே நாடி அநுபவிக்கின்றூர்கள்.

அனந்தமாய் விரிந்த சகத்திர ளெல்லா மயர்வற வமர்வதற் கிடமா
மனந்தனு லிந்த நாய்ப்புலேத் தன்மை வெளிசெயின் மற்றிதில் வியப்பென்
கனந்தரு பத்திப் பாய்ச்சலின் வயத்தாற் கடைப்புலேத் திறந்தெரிந் துளதா
முனந்தொட ரதிதி தானு மப்படியே மோகங்கள் முழுவதுங் கண்டான். (28)

அனந்தமாய் விரிந்த சகத்திரளெல்லாம் அயர்வற அமர்வதற்கிடமாம் மனந்தனுல் இந்த நாய்ப்புலேத் தன்மை வெளிசெயின் மற்றிதில் வியப்பென் கனந்தரு பத்திப் பாய்ச்சலின் வயத்தால் கடைப்புலேத்திறம் தெரிந்துளதாம் முனந்தொடர் அதிதிதானும் அப்படியே மோகங்கள் முழுவதுங் கண்டான் = அனேகவிதமாய் விசித்திரங்களாகப் பரவிய ஜகத் ஜாலங்களெல்லாம் யாதொரு தடையுமின்றி இஷ்டப்படி நிலேத்து இருப்பதற்கு ஸ்தானமாய்ச் சித்தத்தினுலே பார்க்கப்பட்ட இச்சுவபசத் தன்மை (நாய் மாமிசம் புஜிக்கும் நீசத்தன்மை) வெளிப்படுத்தில் அங்ஙன் வெளியாய இதன்கண் ஆச்சரியப்படல் என்கொண்டோ? உறுதி பயப்பதாகப் பிரதிபாச வயத்தினுலே இழிவான புலேத் தன்மை அறியப்பெற்றதாம், பூர்வம் சந்தித்த அதிதியும் அவ்வாறே அதிதியாகிய தான் வந்ததாகவும் உண்டதாகவும் துயின்றதாகவும் கதை கூறியதாகவும் மயக்கமே, பின்போய்ச் சென்று பார்த்த மயக்கங்கள் யாவற்றையும் பார்த்தான்.

கண்டவப் படியே நாய்ப்புலேத் தன்மை காகதா லீயயோ கத்தால்
வண்டுறை யூண கீரமண் டலத்தோர் மனத்தினும் பத்திப்பாய்ந் துளதா
லெண்டரு பத்திப் பாய்ச்சலொன் ருெருகா லெண்ணறு பெயர்க்குமுன் றேன்றும்
விண்டநெஞ் சியற்கை காகதா லீய நிலேமைபோல் விசித்திர கதியாம். (29)

கண்டவப்படியே நாய்ப்புலேத் தன்மை காகதாலீய யோகத்தால் வண்டுறை ஊன கீர மண்டலத் தோர் மனத்தினும் பத்திப்பாய்ந் துளதாம் எனதரு பத்திப் பாய்ச்சல் ஒன்று ஒருகால் எண்ணறு பெயர்க்கும் முன் தோன்றும் இந்தப் பிரகாரம் பார்த்த அவ்வாறே சுவபசத் தன்மை(நாய்மாமிசம்புஜிக்கும்நீசத்தன்மை)காக தாலீய நியாயத்தால் ஞிமிறினக்கள் வீற்றிருந்து ரீங்காரம் பாடுஞ் சோலே சூழ்ந்த ஊனமண்டலம் கீரமண்டலம் வசிப்பவர் மனத்தினும் பிரதிபிம் பித்துளதாம், கருதா நின்ற பிரதிபாசம் ஒன்றே ஒருபோது அளவிலாதவர்கட்கும் பிரத்தியக்ஷ

விண்ட நெஞ்சியற்கை காகதாலீய நிலைமைபோல் விசித்திர கதியாம் = மாய் விரித்த மனத்தினது சுபாவமானது காகதாலீய ஸ்திதியை அநுசரித்து நானாவித விசித்திர நடையுடையதாம்.

அப்படியன்றோ சொப்பன மொன்றை யனேக மானிடர் தனி காண்பர்
கைப்படு விநோத மொன்றிலே மகிழ்வர் காதல ரனேகமா னவர்கள்
செப்பிய கடைஞ்ச னனவப் புலையன் றிருமனை யூணமண் டலத்தே
தப்பற வந்தக் குறியினுன் முன்னே சனித்துள னப்படித் தானே. (30)

அப்படியன்றோ சொப்பனம் ஒன்றை அனேக மானிடர் தனி காண்பர் காதலர் அனேகமான வர்கள் கைப்படும் விநோதம் ஒன்றிலே மகிழ்வர் செப்பிய கடைஞ்சனை அப்புலையன் திருமனை ஊணமண்டலத்தே முன்னே தப்பற அந்தக் குறியினுல் அப்படித்தான் சனித்தனன் = அவ்வாறல்லவோ கனவு ஒன்றை அநேக மநுடர் பிருதக்காகப் (தனித்தனியாக) பார்ப்பார்கள், அநேகஞ் சிறுவரானவர் கூட்டப்பட்ட விநோத விளையாட்டு ஒன்றிலே இரமிப்பார்கள், கூறிய கடைஞ்சன் என்னும் அந்நீசனது அழகிய வீடு ஊணமண்டலத்தே பூர்வம் நீ பார்த்தபடியே தவறின்றி அவ்வடையாளம் உளது அவ்விதமாகவே கடைஞ்கன் பிறந்திருந்தான்.

அத்திறந் தானே தமரெலா பிறப்ப வன்னிய தேசத்தை யடைந்தான்
சத்திர நிழற்றக் கீரதே சத்திற் றலைவனுய்ப் பின்கனல் புக்கா
னுத்தம மாநின் னுளத்திலே வெறிதே யுன்னு சம்பந்தமா யதனுற்
பத்திப் பாய்ந் துளதா வப்படியாகப் பகர்புலைக் கடஞ்சன் தியற்கை. (31)

அத்திரந்தானே தமரெலாம் இறப்ப அன்னியதேசத்தை யடைந்தான் சத்திரம் நிழற்றக் கீரதேசத்தில் தலைவனுய்ப் பின்பு கனல்புக்கான் அதனுல் அப்படியாகப் பகர்புலைக்கடைஞ்சன தியற்கை உத்தமாம் நின் உளத்திலே வெறிதே உன்னுசம்பந்தமாய் பத்திப்பாய்ந்துளது = நீ கண்ட அவ்வகையானே சுற்றத்தாரெல்லாம் அழிந்தொழியவேதான் பிழைக்கும்பொருட்டு வேறுதேசத்திற்குச் சென்றனன். சந்திரவட்டக் குடைநிழல் பாலிப்பகீரதேசத்தில் மன்னவனுய் யாவருந் தெரிந்துகொண்டபின்னர் அக்கினியில் பிரவேசித்தான். அதனுல் நீ பார்த்தபடியே சொல்லாநின்ற நீச கடஞ்ச ஆசார ஸ்திதி மேன்மை வாய்ந்த நினது மனத்திலே பயனின்றியே எண்ணுறுமாறு சம்சர்க்கமானதனுல் பிரதிபலித்துள்ளது.

## அவதாரிகை

கடைஞ்சனது கிருக களத்திராதிகளாகிய அநாத்மீயத்தின்கண்ணும், எனக்கு அவனே, யான் எனவும் அவன்தேயாய அஃது எனக்கு என்றனதெனவும் எங்ஙனம்

மூழ்குதல் கூடுமெனின் எல்லா அனுத்ம வித்துக்களுக்குமே அனுத்மாவாய தேகத்தின் மாட்டும் அநாத்மீயமாய கிருக களத்திராதிகளிலும் யான் எனதுயென்னும் அபிமான தரிசனத்தினுல் கேவலம் ஆத்மவித்திற்கே அதில் மூழ்காமை உண்மையின் என்னுங் கருத்தால் உரைத்தருளல்.

இவனவ னுனீ ததுவென தென்றே யிடரில் மூழ்குவ ரறிவில்லா
ரவனியா முழுது நாமெனும் முண்மை யறிந்தவர் ரழுங்கிநின் றயராற்
புவனமார் பொருளிற் பகிர்வுறு மனர்த்த பாவனை புந்தியிற் பொருந்திக்
கவருரு ரதனு லிவர்கண்மோ கத்திற் கவல்வுருர் தத்துவங் கண்டோர். (32)

இவன் அவன் நான் ஈது அதுவென தென்றே அறிவில்லார் இடரில் மூழ்குவர் அவனிமுழுதும் யாம் நாம் எனும் உண்மையறிந்தவர் அழுங்கி நின்று அயரார் தத்துவங்கண்டோர் புவனம் ஆர் பொருளில் அனர்த்த பகிர்வுறு பாவனை புந்தியில் பொருந்தி கவருரு அதனுல் இவர்கள் மோகத்தில் கவல்வுருர் = தன்மை, முன்னிலை, படர்க்கை இவைகளில் யான் எனதுவென்றே அறிவில்லாத மூடர் சம்சார துக்கத்திலே மூழ்குவர், பிரஹ்மத்தின்கண் விவர்த்தமாதலின் ஆரோபமனைத்தும் அதிஷ்டானப் பிரஹ்மமே பிரத்தியகாத்மாவாகிய நாம் என்னும் மெய்ம்மையை உணர்ந்தவர் வருந்தி நின்று சோரார், பிரத்யக்கபின்ன பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்தவர் லோகத்திரய விஷயங்களிலுள்ள துன்பமய பேத பாவனையைப் புத்தியிற் பொருந்தி இன்பம் பயக்குமென்று பற்றமாட்டார்கள் அக்காரணத்தால் மோகத்தில் மூழ்கி வருத்தமுருர்.

ஞானபூ ரணமெய் தாமையான் மனத்தினன்னிய மோகத்தை நாடி
யீனமென் றகற்ற வறிகிலையிதனு லிந்த மோகத்திலே கணத்தி
னீநனி யமிழ லுற்றனை யிந்த நெடியமோகத் திகிரிக்கு
மானதந் தானே யச்சதா மதனை வலிந்தடர் வறிவதுநலியா. (33)

ஞானபூரணம் எய்தாமையால் மனதில் நண்ணிய மோகத்தை நாடி ஈனமென்று அகற்ரு அறிகிலை அதனுல் இந்த மோகத்திலே கணத்தில் நீநனி அமிழலுற்றனை நெடிய இந்த மோகத்திகிரிக்கு மானதந்தானே அச்சதாம் அதனை வலிந்து அடர்வுறில் அது நலியா = பரிபூரண ஞானத்தைத் திடமாக அறியாததால் சித்தத்தின்கண் மருவிய மயக்கத்தை ஆராய்ந்து ஈனம் (துச்சம்) என்று விளக்கி உணர்ந்தாயில்லை இக் காரணத்தினுல் இம் மயக்கத்தில் கணத்தில் பிராந்தியினுல் நீ எங்குஞ் சுழன்றுகொண்டிருக்கும் இம் மாயா சக்கரத்தில் மூழ்கி வருந்தினுய். நீண்ட இம் மாயா சக்கரத்துககு (சம்சாரசக்கரத்துக்கு) மனமே நாபியாம், நாபியாம் இந்த அசசரம் மனத்தைத் தகைந்திடில் அந்த மனம் துன்புறுத்தா.

எழுதிநீ கிரியின் முழையிடை வருடமீரைந்து நவநனி யியற்றின்
முழுதுமாய் முடிவொன் றிலாதமெய்ஞ் ஞானமுற்றிதி யென்றுபின் முகுந்தன்
றெழுதகு தோற்ற மெழுந்துழிமறையத் துயருறு மோகங்க ணீங்கிப்
பழுதறு காதி கற்பனையெல்லாம் பற்றறுத் தருந்தவம் புரிந்தான். (34)

எழுதிநீ கிரியின் முழையிடை வருடம் ஈரைந்து தவம்நனி இயற்றில் முழுதுமாய் முடிவொன்றிலாத மெய்ஞ்ஞானம் உற்றுதி தொழுதகு எழுந்துழி தோற்றம் மறையத் துயர்உறு மோகங்கள் நீங்கிப் பழுதறு காதி கற்பனையெல்லாம் பற்றறுத்து அருந்தவம் புரிந்தான் = எழுந்திருப்பாய் நீ கிரியின் குஞ்சத்தில் தசம் (பத்து)வருடங்கள் தவம் நன்ருகச்செய்து வருவாயாயின், சர்வான்மகமாய்ச் சச்சிதானந்த வடிவ பூரணமாக ஆகுதி என்று அருளி பின் போக மோக்ஷங்களைத்தரும் ஸ்ரீ முகுந்தனும் பகவானது துதிக்கத்தக்க உருவம் தோன்றிய அவ்விடத்திலேயே அந்தர்த்தானமாக, துக்கத்தைத் தரத்தக்க மயக்கங்கள் எவையும் அகன்றவனுகி ஸ்ரீ பகவான் தரிசனத்தால் நிர் தோஷமயமாய காதிப்பிராமணன் சங்கற்பங்கள் யாவையும் ஒழித்து வாசனையையுங் கெடுத்து அரிய பெரிய தவத்தைச் செய்தான்.

வருடமோர் பத்தின் ஞானபூரணனுய் வாழ்ந்தனன் பின்னரே தனதாம்
பொருவில் சற்பாவ மடைந்துயர்ந்தோனுய்ப் பொருந்திய பயந்துயர் நழுவிப்
பருகுறு போகத் திச்சையற் றுள்ளபடியிலே சந்ததஞ் சுகமே
யுருவமாஞ் சீவன் முத்தனுயாறி யுவாமதி யெனவுள நிறைந்தான். (35)

வருடம் ஓர் பத்தில் ஞானபூரணனுய் வாழ்ந்தனன் பின்னரே பொருவுஇல் தனதாம் சற்பாவமடைந்து உயர்ந்தோனுய்ப் பொருந்திய பயந்துயர்நழுவிப் பருகுறுபோகத்து இச்சை அற்று உள்ளபடியிலே சந்ததஞ் சுகமே யுருவாஞ் சீவன்முத்தனுய் ஆறி யுவாமதியென் உளம் நிறைந்தான் = பத்து வருடங்களில் உண்மை ஞானம் நிறைந்தவனுய்க் கவலையற்றிருந்தனன். அதன்பின் ஒப்பு உயர்வின்றிய தன்னுடைய சத்தாமாத்திர சொரூபத்தினை அடைந்து மகாத்மாவாய் முன்னர்ச் சித்தத்தின்கண் பொருந்திய அச்சம், சோகம் அற்றுப் போகிக்கத்தக்க போக்கிய விஷயங்களில் இச்சைலேசமுமின்றி எதார்த்த ஸ்திதியில் எப்போதும் இன்பமே வடிவமாஞ் ஜீவன் முத்தனுய் முத்தாபம் நீங்கிப் பூரணச் சந்திரனைப் போல மனம் பரிபூரணமாயினுன்.

5 - 5 காதி கதை முற்றிற்று.

ஆக விருத்தம் — 1012.



# 5-6 உத்தாலகன் கதை

## அவதாரிகை

முன்பு சித்தோபசாந்திநிமித்த மாயாவைசித்திரியஞ் சொல்லப்பட்டது. இப்போது திடபூமி யோகாப்பியாசத்தினால் சித்தசஞ்சலம் ஆயினும் உபசாந்தியாம் என்று உத்தாலகர் கதையால் நிரூபிக்கின்றார்.

இவ்வகையே யிம்மாயை யறநெடியதாய் வெலற்கரிதாய் யேறித் தாழ்ந்து
வெவ்வியமா மோகங்கள் விளைவித்துப் பரமத்தின் மேவி நிற்கு
மவ்வகையா லுரைக்கின்றே னநவரதஞ் சொருபத்தை யடையா தாரைப்
பவ்வமென வருந்துயரின் மூழ்குவிக்கு மிம்மாயைப் பண்பு தானே. (1)

இவ்வகையே இம் மாயை அற நெடியதாய் வெலற்கரிதாய் ஏறித் தாழ்ந்து வெவ்விய மாமோகங்கள் விளைவித்துப் பரமத்தில் மேவிநிற்கும் அவ்வகையால் உரைக்கின்றேன் அநவரதஞ் சொருபத்தை அடையாதாரைப் பவ்வம் என இம் மாயைப்பண்புதானே அருந்துயரில் மூழ்குவிக்கும் =

கூறியபிரகாரம் அகடிதகடனா சாமர்த்தியம் வாய்ந்த இம் மாயை அத்தியந்தம் விஸ்தாரமாய் (ஜயித்தற்கசக்கியமாய்விடமமாய்) தாரதம்மியத்தைச் செய்துவருவதாயுள்ள கொடிய பெரியமயக்கங்களைச் செய்வித்துப் பிரத்யக்கபின்ன பிரஹ்மத்தை சுவாசிரயசுவ விஷயமாய் இருக்கும், மகத்தான ஆபத்தை விளைவிக்குங் காரணத்தால் கூறுகின்றேன் எப்போதும் நிஜவஸ்துவைச் சேராதாரைச் சமுத்திரம் அலையினாலும், முதலை முதலிய ஜந்துக்களாலும் துக்கத்தைச் செய்வதே போல இம் மாயையின் குணம் சகித்தற்கரிய பெருந் துக்கத்தில் அமிழ்த்திவைக்கும்.

சித்தசய மாத்திரமாந் தெய்வமருந்தா லன்றிச்சென்ம வெந் நோய்
சத்தியமே பிறமுயற்சி யாவையினுந் தீராது தகைமை மிக்கோய்
வைத்தநிகழ் காலத்துக் கணத்தில்வரு மியல்புறவா கியத்தாற் பற்றி
யொத்துவரு மெதிர்கால மிறந்தகா லங்கருதா ருளமி லாதார். (2)

சித்தசயமாத்திரமாந் தெய்வமருந்தாலன்றிச் சென்மவெந்நோய் பிறமுயற்சி யாவையினுந் தீராது சத்தியமே வைத்த தகைமைமிக்கோய் நிகழ்காலத்துக் கணத்தில் வரும் இயல்புற வாகியத்தால் ஒத்து பற்றிவரும் எதிர்காலம்

மனோஜயமாத்திரமாந் தேவாமிர்தத்தாலன்றிச் சம்சார மகாரோகமானது வேறு எவ்விதப் பிரயத்தனத்தினாலும் நீங்காது உண்மையே. தத்தம் கோளகைகளில் இந்திரியங்களை நிறுவியும் சித்தத்தை அடக்குந் தன்மையிலும் மிகுந்த வல்லமையுடைய இராகவ! வர்த்தமான காலத்தில் நுகர்வினைவயத்தால் வாராநின்ற வருணாச்சிர

இறந்தகாலங் கருதார் உள மிலாதார் = மங்களுக்கு உரித்தாக பாகியமதியால் (கரணேந்திரிய தருமமாய்) சமமாக அவலம்பித்துப் பௌஷிய சென்றகால காரியங்களைக் கருதாதவர் மனமற்றவராவர்.

சங்கற்பம் வேட்கையனு சந்தானங் கணந்தோறுந் தவிர்த்தி யென்னின்
மங்குற்ற மனேலயந்தா னதுவாகு மனேலயத்தை மருவு போதம்
பங்கற்ற பிரத்யக்சே தனமாகு மதற்கு மனேபாவ மென்ப
தங்குத்தா னிலாவியல்பா மாதலினுன் மனேவிகற்ப மின்றிப் போமே. (3)

சங்கற்பம் வேட்கை அநுசந்தானம் கணந்தோறும் தவிர்த்தி யென்னில் அது மங்குற்ற மனேலயந்தான் ஆகும் மனேலயத்தை மருவுபோதம் பங்கற்ற பிரத்யக் சேதனமாகும் அதற்கு மனேபாவ மென்பது இயல்பாய் இலவாம் ஆதலினல் அங்குத்தான் மனே விகற்பமின்றிப்போம் = சங்கற்பம் = இவ்வகை இவ்வகை செய்வேன் என்று கருதுதல் = ஈது எனக்கு உளதாகுக வென்னும் சித்த விசேஷம் அநுசந்தானம் = இறந்தகால விஷய சிந்தனை ஒவ்வொரு கணமும் அகற்றுதியேலாயின் அது, அப் பிரகாசமனத்தின் லயமாகும். மனேலயத்தையடைந்த சேதனமே பிரஹ்மத்தினும் வேறுபாடின்றிய பிரத்யக் சேதனமாகும். சுபாவமாகவே இல்லாததாம் ஆகையினல் அவ்விடத்திற்குன மனேவிகற்பம் ஒன்றும் இலவாம் = நிர்மனஸ்க சுபாவமுடையதாம்.

அற்றமறு சத்தியமு முயர்சிவமுந் தற்பரம வவத்தை தானு
முற்றறிவு நிறைசுகமு மலமறலு மனப்பந்த முழுதுந் தீர்த
லுற்றவவி வேகத்தை யொழித்துறுதி யூகத்தா லுறுதி யாகக்
குற்றமறு சற்புருடர் கோதறுநூல் களின்மனத் தைக்கூட்டி யென்றும். (4)

மனப்பந்தமுழுதுந் தீர்தலுற்ற அற்றமறு சத்தியமும் உயர்சிவமும் தற்பரம அவத்தைதானும் முற்றறிவும் நிறைசுகமும் அவிவேகத்தை ஒழித்து உறுதி யூகத்தால் உறுதியாகக் குற்றமறு சற்புருடர் கோதறும் மனத்தை நூல்களில் ஒன்ருய்க்கூட்டி = மனக்கட்டு அனைத்தும் ஒழிதலுற்றதசையே அற்றமறு சத்தியமும்=அழிவற்றதும் மறைவின்றியதும் அபரோக்ஷமான ஜீவன்முத்தியும் உயர் சிவமும்=விதேகமுத்தியும்தற்பதஇலக்ஷியார்த்த நிருவிகற்பமும், சர்வஞ்ஞமும் பூரணமும் ஆனந்தமும், களங்கம் அறலும் ஆம். அறியாமையினின்றுஞ் சித்தத்தை அகற்றிப் புருடப் பிரயத்தனத்தோடு கூடிய அநுகூலமான தர்க்க பிரமாணத்தினுலும் திடமாகக் காமம் வெகுளி மயக்கம் அற்ற சாதுக்கள் சகவாசத்தாலும் குற்றமற்ற மனத்தை அத்தியான்ம சாஸ்திரங்களிலும் எப்போதுஞ் சேர்ப்பித்து வாழ்க.

அனவரத முரைத்தல்விடல் பற்றலிமைப் புறல்விழித்த லனைத்துஞ் செய்து
மனனமறு சுகவானுய்ச் சற்சின்மாத் திரபரனுய் வாழ்தி மைந்தா
கனமலமாங் காண்பவைதீர்ந் துள்ளத்தின் மலமறுத்துக் காதற் பாச
மெனவுயர் கோரையை யறுத்துநின் னறிவிற் றற்பரனுயிருத்தி யன்றே. (5)

அனவரதம் உரைத்தல் விடல் பற்றல் விழித்தல் இமைப்புறல அனைத்துஞ் செய்து மனனமறு சுக வானுய்ச் சற்சின்மாத்திரபரனுய் மைந்தா வாழ்தி கனமலமாங் காண்பவை தீர்ந்து உள்ளத்தின் மலமறுத்து காதற்பாசமெனவுயர் கோரையை அறுத்து நின்னறிவில் தற்பரனுய் இருத்தியன்றே= (இனி மூன்றுகவிகளால் ஆன்மாநு சந்தானத்தை உபதேசிக்கின்ருர்) எஞ்ஞான்றும் வசனித்தல், மலஜல, விசர்ச்சனம் (கழித்தல்) அன்னபானுதி கிரகித்தல், கண்திறத்தல், மூடுதல் முதலிய யாவுஞ் செய்து, இவற்றைப்பற்றி முன் பின் எண்ணுதவனுய் ஆனந்த தற்பரனுய் மெய்யறிவு வடிவினையுடையவனுய் மைந்தா வாழ்தி திட அசுத்த வாசனையால் பொருந்திய திருசியங்களை ஒழித்து ஆசாபாசமென்று சொல்லப்பட்ட ஓங்கி வளரும் கோரையைச் சேதித்து நினது அறிவின் கண்ணே நிர்விகற்பமாயிருத்தி.

நலனிழிவாஞ் சங்கேதத் தாசையெனும் வீடுசிகையை நண்ணு யாகிச்
சலனமுறு விருப்புவெறுப் பறவுணர்வின் சாரபரந் தானுய் வாழ்வா
யலகறநா னிவனவனீ ததுவெனதாம் வாதனைக ளறுத் தொன்றென்றே
நிலவியநிட் டையிலாறிச் சற்சின்மாத் திரபரனுய் நின்று வாழ்வாய். (6)

நலன் இழிவாஞ் சங்கேதத்து ஆசையெனும் விடூசிகையை நண்ணுயாகிச் சலனமுறு விருப்பு வெறுப்பு அற, உணர்வின் சார பரந்தானுய் வாழ்வாய் அலகற நான் இவன் அவன் ஈது அது வென தாம் வாதனைகளறுத்து ஒன்று என்றே நிலவிய நிட்டையிலாறி சற்சின்மாத்திரபரனுய் நின்று வாழ்வாய் = நலன் (சுபம்) உனது, இழிவாம் (அசுபம்) இலது என்னும் நிர்மித பதார்த்தங்களிடத்துண்டாம் சங்கேதம் (குழுக்குறி) பரிபாஷை சொல், ஆசை யென்னும் விஷவியாதியை பொருந்தாதவனுகிச் சித்த சஞ்சல ஏதுவாகிய இஷ்டா நிஷ்ட திருஷ்டி யுமின்றிச் சம்வித்சார=அந்தர்ப்பூதபர ஆத்மா வாய் வாழ்திமைந்தா அவித்தையாம் அந்த காரம் நீங்குமாறு அகம், அயம், இதம், தத், மமஎன அத்தியசித்துண்டாம் வாதனைகளைச் சேதித்து சின்மாத்திரம் ஏகமே என்று விளங்கும் உபசாந்தி நிஷ்டையுற்று சச்சிதானந்தமாய் நிலைபெற்றுச் சுகிப்பாய்.

எனதுபிற ரதுவென்னு மெண்ணமறச் சகநிலையி லிரண்டற் றென்ருய்க்
கனவயிரத் தர்பமென வுணர்வுருவைப் பற்றிநிலை கண்டு நிற்பா
யனகமுட னமலமா யகண்டமாந் தன்னறி விலமைவென் றுண்டாஞ்
சனனமயக் கத்துக்குக் காரணமாம் பிரிவன்று தவிர்ந்து போமே. (7)

சகநிலையில் எனது பிறரது வென்னும் எண்ணமற இரண்டற்று ஒன்றாய்க் கனவயிரத்தம்பமென உணர் உருவைப்பற்றி நிலைகண்டு நிற்பாய் அனகமுடன் அமலமாய் அகண்டமாந்தன் அறிவில் அமைவு என்றுண்டாம் அன்று சனனமயக்கத்துக் காரணமாம் பிரிவு தவிர்ந்துபோம் = பிரபஞ்சத்தின் ஸ்திதியில் தன்னுடையது அன்னியரது என உண்டாம் நினைவுகளை நீக்கித் துவைதமின்றி விபாகரகிதமாய்ப் பருத்த வச்சிரத்தம்பம்போல அறிவு சொரூபத்தைப் பொருந்தி உற்றுநோக்கி ஸ்திதியை அடைவாய் நிர்தோஷமாய் நிர்மலமாய்த் தேசகாலவஸ்து பரிச்சேதரகித சுவான்மாவின்கண்ணே எப்போது நிலைபெற்றிருக்குமோ அப்போது ஜனனமரண சம்சாரப் பிராந்திக்கு ஏதுவாய பிரிவு=மோகமானது அத்தியந்தம் அழிந்துபோம்,

பேரானந் தத்தின்ப நிலையினியல் பினைநோக்காய் பின்னை நிற்கும்
வாராத நல்லமுதம் வந்தாலு முயிர்தொலைக்க வருநஞ் சொக்குஞ்
சோராமெய் யுணர்வுடைமை தூரிதா மனந்தடித்துத் துன்று மாகிற்
காரான முகில்சூழ மறைத்தாலுண் டோமதியங் கண்ணின் காட்சி. (8)

இயல்பினை நோக்காய் பேரானந்தத்தின் நிலையில் பின்னை நிற்கும் வாராத நல்லமுதம் வந்தாலும் உயிர்தொலைக்க வரும் நஞ்சொக்கும் மனந்தடித்து துன்னுமாகில் சோராமெய் யுணர்வுடைமை தூரிதாம் காரான முகில்சூழ மறைத்தால் மதியங் காட்சி உண்டோ = சுபாவசித்தமான பரம்பொருளைச் சாக்ஷாத்கரிப்பாய், பிரத்யக்கபின்ன பிரஹ்மானந்த சுகவடிவினருக்கு இலட்சுமி வாசஞ்செய்யும் க்ஷீராப்தியிலுண்டாய மேருகிரியில் வைத்திருக்கும் கிடைக்கக்கூடாத நல்லமுதம் வந்தாலும் பிராணனை அகற்றிவைக்க வாராநின்ற காளகூடவிடத்திற்கொப்பாம் போகவிடயங்களில் ஆசக்தியுற்றுச் சித்தம் விருத்தியடையுமாயின் தளர்ச்சியின்றிக் கெடாத தத்துவஞானத் தகைமையானது சேய்மைத்தாம் கறுத்த மேகமண்டலம் ஆச்சாதித்தால் மறைத்தால் சந்திரன் நேத்திரேந்திரியத்துக்குப் புலப்படுமோ.

சரீரமாத் திரத்தாசை புந்தியாற் றானல்லா தனதா னென்றே
பறிவுறலான் மக்கண்மனை குடும்பமெனும் பாவனையான் பருக்கு முள்ளம்
விரியுமகங் காரவிகா ரத்தினுன் மமதைமல வினோதந் தன்னு
லுரியவென திதுவென்னும் பாவனையான் மிகப்பருக்கு முள்ளந் தானே. (9)

சரீரமாத்திரத்து ஆசை புந்தியால் தான் அல்லாதன தான் என்றே யறிவுறலால், மக்கள்மனை குடும்பமெனும் பாவனையால் பருக்கும் உள்ளம், விரியும் அகங்கார விகா (மனம் எப்படித் தூலிக்கும் என்று ஆகாங்க்ஷை வர இரண்டரைக் கவிகளால் கூறல்) கேவலம் சரீரமாத்திரத்தில் நான் என்னும் அபிமான வடிவ புத்தியால், ஆத்மாவல்லாத அநாத்மாக்களில் ஆத்மாவென்றே விரும்பி பாவித்தலால்

ரத்தினால் மமதை மல விநோதந் தன்னால் இஃது எனது உரிய வென்னும் பாவனையால் மிகப் பருக்கும் உள்ளந்தானே = புத்திர தார குடும்பமெனும், திடவாஞ்சையால், பாவனையால் தூலிக்கும் உள்ளம் விஸ்தரிக்கும் அகங்காரத்தின் வகைகளால் எனக்குச் சொந்தமானது என்னும் பாவனையால் அத்தியந்தம் தூலிக்கும் உள்ளம்.

ஆதிவியா தியின்விரிவா லவைமாறித் தேறுதலா லகற்றல் பற்ற
லூதியமா முயற்சியினாற் பிறவிதொறு மிகப்பருக்கு முள்ள மைந்தா
மாதர்மணி தனமுதலா நேயத்தா லிலாபத்தால் வருலோ பத்தாற்
போதுபொழு திவைநன்றா னலத்தினாற் பருத்துள்ளம் பூரிப் பாமே. **(10)**

ஆதி வியாதியின் விரிவால் அவை மாறித் தேறுதலால் அகற்றல் பற்றல் ஊதியமாம் முயற்சியினால் பிறவிதோறும் மிகப்பருக்கும் உள்ளம் மைந்தா மாதர் மணி தனம் முதலாம் நேயத்தால் இலாபத்தால் வரு லோபத்தால் போது பொழுது இவை நன்றாம் நலத்தினால் பருத்து உள்ளம் பூரிப்பாமே = ஆதி இராகத் தூவேஷாதிகள் ரோகாதிகள் இவைகளின் முதிர்ச்சியால் உண்டாகிப் பின் அவைகளெல்லாம் ஒழிந்து மனம் இரமித்தலால் தள்ளல்=அநிஷ்டபரிகாரம் இஷ்ட அபிமானம் மணி மங்கையரின் இலாபகர யத்தனங்களால் ஜன்மந்தோறும் மிகவுந் தூலிக்கும் உள்ளம். மைந்தா, அங்கனை, அரதனம், தங்கமே முதலியவற்றின் சினேகத்தாலும் லாபத்தாலுங் கிடைத்தபின் இச்சித்த பதார்த்தம் வரும்போது நன்றாம் என்னும் ரமணீயத்தால் தூலித்து மனம் பருக்கும்.

துராசையெனும் பால்பருகித் தொல்போக மெனுங்காற்றாற் றொடர்மொய்ம் புண்டா
யிராகமுறு வழியுலவி மனப்பாம்பு மிகப்பருக்கு மிராம கேளாய்
புராதனவுத் தாலகன்போ லைம்பூதத் தையும் பொடியாய் போகப்பண்ணி
நிராகுலமாம் புந்தியினா லிதயத்தே நினைத்தியென நிகழ்த்த லோடும். **(11)**

மனப்பாம்பு துராசையெனும் பால் பருகித் தொல் போகமெனுங் காற்றால் தொடர் மொய்ம்பு உண்டாய் இராகமுறு வழியுலவி மிகப்பருக்கும் இராம கேளாய் புராதன உத்தால கன்போல் ஐம்பூதத்தையும் பொடியாய் போகப்பண்ணி நிராகுலமாம் புந்தியினால் இதயத்தே நினைத்தி என நிகழ்த்தலோடும் = சித்தமாஞ் சர்ப்பம், கெட்ட ஆஸ்தை எனும் க்ஷீரத்தைப் புசித்தும் வெகுகாலமாய் அநுபவிக்கும் போக விஷயமெனும் காற்றையும் புசித்தும் அதனால் மிகத் தூலிக்கும் ஹே இராகவ! இதன் நிக்கிரக உபாயங் கேட்பாய், பிராசீன உத்தாலக முனிவனைப்போல் பாதி பூதபஞ்சகத்தையும் தேகாதி யாரம்பகமும் ஆகிய இவற்றை பிரவிலாப திருஷ்டியால் தூள் தூளாகப் போகப் பண்ணி (நேதிசெய்து) கவலையற்ற மனத்தினால் அகத்தே சொரூபத்தை விசாரஞ்செய் என்று உபதேசித்தபோது:

அருளியவுத் தாலகனு லெந்நெறியா லைம்பூத மறுத்துத் தன்னுட்
கருதியதென் னென்றிரா கவன்கேட்ப வசிட்டமுனி கருணை வள்ளால்
பெருகியவைம் பூதத்தை விசாரத்தாற் பேதித்துப் பிரம மெய்தி
யொருமைபெறு நிலையுடைய வுத்தாலகன் கதையா முரைப்பக் கேட்பாய். (12)

அருளிய உத்தாலகனால் எந் நெறியால் ஐம்பூதம் அறுத்துத் தன்னுள் கருதியது என் என்று இராகவன் கேட்ப வசிட்டமுனி கருணைவள்ளால் பெருகிய ஐம் பூதத்தை விசாரத்தால் பேதித்துப் பிரமம் எய்தி ஒருமைபெறு நிலை யுடைய உத்தாலகன் கதையால் உரைப்பக் கேட்பாய் = தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய உத்தாலக முனிவரால் எந்தக் கிரமத்தால் பஞ்சபூதங்களை நேதித்து தமது அந்தக் கரணத்தில் ஆராயப் பெற்றது யாது என்று ஸ்ரீ இராமபிரான் வினவ ஸ்ரீ வசிஷ்டமுனியானவர் கிருபாசொரூபியாகிய தாதாவே நானுவாக விஸ்தரித்துள்ள பஞ்சபூதங் களை ஆராய்ச்சியினுல் இல்லையென்று போம்படி செய்து பிரஹ்ம திருஷ்டியை அடைந்து ஏகீக பாவத்தை அடையச்செய்யும் நிருவிகற்ப சமாதி யில் சுகித்திருந்தனன் அந்த உத்தாலக முனிவ னது உபாக்கியானத்தை யாம்கூற சிரவணஞ் செய்வாயாக.

கந்தமா தனமென்னுங் கனவரையிற் கற்பூரங் கமழா நின்ற
கொந்தலர்சோ லைச்சார லுறைபவனுத் தாலகப்பேர் கோதி லாதோ
னந்தமுனி வரன்முன்னே சிற்றறிவன் விசாரத்தோ னகண்ட வாழ்விற்
சிந்தையிடர் தீரவிளைப் பாருதோன் புந்திநலந் திருந்தப் பெற்றேன். (13)

கன கந்தமாதனமென்னும் வரையில் கற்பூரங் கமழாநின்ற கொந்தலர்சோலைச்சாரல் உறை பவன் உத்தாலகப் பேர் கோதி லாதோன் அந்த முனிவரன் முன்னே சிற்றறிவன் விசாரத் தோன் அகண்ட வாழ்வில் சிந்தையிடர் தீர இளைப்பா ருதோன் புந்திநலந் திருந்தப் பெற்றேன் = மேகங்கள் படர்ந்த கந்தமாதனமென்னும் பர்வ தத்தில் கற்பூரம் பரிமளியா நின்ற பூங்கொத்துக் கள் நிறைந்து சோலை சூழ்ந்த தாழ்வரையில் தவம்புரிபவன் உத்தாலக முனிவனென்னும் நாமதேயம் வாய்ந்த எவ்வித குற்றமுமில்லாத வன் அம் முனிசிரேஷ்டன் பூர்வம் அற்பப் பிரஞ்ஞன் ஆயினும் ஆன்மா அநான்மா விசார வான், அத்வைத பிரஹ்ம பதத்தில் நிலைபெற்று விசிராந்தியை அடையாதவன் மதி மல விக்ஷேப மின்றி சுபாசயனுயும்=பிரபோதத்து அநுகூல மாய சுகிருதும் நிறைந்த புத்தியுடையவனு யிருந்தனன்.

பூதநெறி யாற்றவத்தா னுற்பொருளால் யமநியமம் பொருந்து நீராற்
றீதறுநல் விவேகந்தான் சேர்தலுமே யவனினைய சிந்தை செய்தான்
கேதமற விளைப்பாறும் பதமேது மறுபிறவிக் கேடி லாத
மேதகைய பதமேதிங் கிதுவன்றோ முதல்விரைவின் மேவற் பாற்றே. (14)

பூத நெறியால் தவத்தால் நூற் பொருளால்யமம் நியமம் பொருந் தும் நீரால் தீதறுநல் விவேகந் தான் சேர்தலுமே அவன் இனைய சிந்தை செய்தான் கேதம் அற இளைப்பாறும் பதம் ஏது கேடு மறுபிறவியிலாத மேதகைய பதம் ஏது இங்கு இதுவன்றே முதலில் விரைவில் மேவற்பாற்றே =

தீர்த்தாடன நிமித்தம் பூப்பிரதக்ஷண முதலிய சிரமத்தால் கிருச்சிர தவத்தாம் (மனம் பொறி களை ஒருமைப்படுத்தலால்) சாஸ்திரார்த்த விசா ரத்தால் இயம நியம அஷ்டாங்க யோகாப்பி யாசத்தால் ஆகிய இவைகளால் நித்தியாநித் திய விவேகந்தான் அடைதலுமே அம் முனிவன் பின் வருமாறு ஆராய்வானுயினன் சகல துயரங் களும் ஒழிந்து விசிராந்தியடையும் பதம் யாதாம், அனர்த்தமயமான மறுபிறவியிலாத மேன்மை யான பதம் யாதாம் இவ்விடத்து ஆரம்பத்தில் பிறிதொன்றையும் நாடுதல்விட்டு அதிவேகமாக அடைய முயலற்பாலதேயாம்.

உளநினைவி லாவிமல பரபதத்தே நெடுங்கால மொன்றி யொன்றுய்க்
கிளர்கனக வரைச்சிகரத் துறைமுகில்போ லிளைப்பாறக் கிடைப்ப தெந்நாட்
டளர்வறவீ தியற்றினமே லெவையியற்றத் தக்கவெனச் சலித்துச் செல்லு
மளவறுபோ கச்செல்வ மெனதுளநின் றெக்கால மவிழ்ந்து போமே. (15)

உளம் நினைவிலா விமல பர பதத்தே நெடுங்காலம் ஒன்றுய் ஒன்றி கிளர் கனகவரைச் சிக ரத்து உறைமுகில்போல் இளைப் பாறக் கிடைப்பது எந்நாள் தளர் வற ஈது இயற்றினமேல் எவை இயற்றத்தக்கனவெனச் சலித்துச் செல்லும் அளவறுபோகச் செல் வம் எனது உளம் நின்று எக் காலம் அவிழ்ந்து போம் =

நிர்விஷயமாய் சுயஞ்சைதன்யமாயிருத்தலின் மனமானது கோசரிக்க முடியாத பரமபாவன பதத்தில் ஏகைக பாவத்தை அடைந்து வெகு காலம் மேருகிரிச் சிகரத்தில் படிந்துள்ள மேகம் போல விசிராந்தியடைவது எக்காலம் கவலை யின்றி இதனைச் செய்தோம் இனி எவை இயற் றத்தக்கதெனச் சலித்து விவகரிக்கும் எண்ணில் லாத போக சிந்தனைகளாகிய ஐஸ்வரியம் எனது மனத்திலிருந்து எப்போதுதான் கழிந்து தொலைந்துபோமோ.

மனனமெனும் திரைமோதி மதத்தெழுந்த பேராசை வாரிதன்னிற்
புனிதமுறும் புந்தியினு லழுந்தாமற் கரையேறிப் போவதெந்நா
ளனவரதந் தொழிறெழிலி லாமைகள்போய்ப் பற்றுவீ டின்றியுள்ளே
தனதொளியாம் பதமேவி யெக்கால மகிழ்வுறுவேன் றளரா நின்றேன். (16)

மனனமெனுந் திரைமோதி மதத் தெழுந்த பேராசை வாரிதன்னில் புனிதமுறும் புந்தியினுல் அழுந் தாமல் கரையேறிப் போவது எந் நாள் அனவரதந் தொழில்

சிந்தனைகளென்னும் அலைகள் மோதிச் செருக் குற்றெழுந்த பேராசையாம் சமுத்திரத்தில் பவித் திரமான விசார திருஷ்டியினுல் மூழ்கிப்போகா மல் முத்தியங் கரையிலேறி உய்ந்துபோவது எக் காலமோ, எப்போதும் வினைசெய்தல் செய்

தொழிலிலாமைகள் போய்ப் பற்றுவீடு இன்றி உள்ளே தன றொளியாம் பதம் மேவி தளரா நின்றேன் எக்காலம் மகிழ்வுறு வேன் = யாமைபோய் கொள்ளல்தள்ளற்பாலன இன்றி மனத்தில் தனது சொரூபமாகிய சைதன்னியத் தைப் பொருந்திக் கவலேயுற்று நின்ற யான் எப்போது சந்தோஷமடைந்திருப்பேன்.

கருதுநினை வொழித்தொடுங்கிக் கார்வரையின் முழையிடத்திற் கருங்கற் போல
நிருவிகற்ப சமாதியினு லெக்கால மசைவற்ற நிலேயி நிற்பே
ஞெருபெறு தியானத்தா லிளைப்பாறு மென்னுடைய வுச்சி மீதே
குருவியினங் கூடமைத்துக் குடியிருப்ப தெக்காலங் குஞ்சி யாலே. (17)

கருது நினைவொழித்து ஒடுங்கி கார்வரையின் முழையிடத்தில் கருங்கற்போல நிருவிகற்பசமாதி யினுல் அசைவற்ற நிலேயில் எக் காலம் நிற்பேன் ஒருமைபெறு தியானித்தால் இளைப்பாறும் என்னுடைய உச்சிமீதே குஞ்சி யாலே குருவியினங் கூடமைத்துக் குடியிருப்பது எக்காலம் = சிந்திக்கும் சிந்தனைகள் யாவும் எழாமற் செய்து மேகஞ்சூழ்ந்த பர்வதக் குகையின்கண் கரும் பெரிய பாறைபோல நிருவிகற்ப சமாதியினுல் அசைவு இல்லாத ஸ்திதியில் மாருமலிருப்பேன் அவ்வாறு அசம்பிரஞ்ஞாத சமாதியிலிருந்து விசிராந்தியடைந்திருக்கும் என்னுடைய உச்சி யின்மீதுள்ள ரோமமாகிய திருணத்தில் குரு விக் கூட்டங்கள் கூடுகட்டி வாசஞ்செய்வது எப் போதோ?

ஊகத்திவ் வாறுன்னி மிகவுத்தா லகனுட் பரவசனு
யேகத்தி யானஞ்சா திப்பானிருந்த யிருந்தவிடந் தோறும்
வேகத்து களுமனக் குரங்குவிட யக்கொம்பு களிற்பாயச்
சோகத் திறன்தீர் மகிழ்ச்சிபெறுஞ் சொரூபசமாதி பெற்றிலனுல். (18)

இவ்வாறு ஊகத்து மிக உன்னி உத்தாலகன் உள் பரவசனுய் ஏகத் தியானஞ் சாதிப்பான் இருந்த இருந்த இடந்தோறும் வேகத்துகளும் மனக்குரங்கு விடயக் கொம்புகளிற்பாயச் சோகத்திறந்தீர் மகிழ்ச்சிபெறும் சொரூப சமாதி பெற்றிலனுல் = இங்ஙனம் கூறியபிரகாரம் யுக்தியால் மிகச் சிந் தித்து உத்தாலகமுனிவன் சிந்தா பரவசனுய் ஒருமைத் தியானத்தைச் சாதிக்கும்பொருட்டு முயன்ற, முயன்ற இடந்தனிலும் அதிவேகமாகக் குதித்தோடும்=தாவும் சப்தாதி விஷயக் கிளை களில் பாய்ந்து சுழல்வுறத் துக்கசமூகங்கள் ஒழிந்து சந்தோஷம் பயக்கும் தற்சொரூபமாய நிருவிகற்ப சமாதியை அடைந்திலன்,

நிறனுர் கானி லிவ்வகையே நிலையற் றலேவோன் பின்னெருகாற்
புறனுர் காட்சி யொழிந்திடலாற் பொல்லா மனமாம் வன்குரங்கு
திறனு ரிருண்மு டியதென்னத் தியானங்களிலே யுள்ளழியா
வறனுர் கிரியி லுலேந்துழல்வுற் றறவேவாடி யல்மந்தான். (19)

நிறனுர் காணில் இவ்வகையே நிலேயற்று அலேவோன் பின்னெருகால் புறனுர் காட்சி ஒழிந்திடலால் பொல்லாமனமாம் வன் குரங்கு திறனுர் இருள்மூடிய தென்னத் தியானங்களிலே உள் அழியா அறனுர் கிரியில் உலேந்து உழல்வுற்று அறவே வாடி அலமந்தான் = நிறம், குணம், வாசனே, வாசனே பொருந்திய சோலேயில் கூறிய பிரகாரம் நிலேயில்லாமல் அலேந்துகொண்டிருந்த அம் முனிவன் பின் ஒரு சமயம் பாகியதிருசியதரிசனம் பற்ருமையிஞல் கொடிய மனமாகிய மர்க்கடம் பேரிருள் (மிகுந்த அந்தகாரம்) தியானத்தில் மூடுவதும் ஒளியாக (பிரகாசமாகத்) தோற்றுவதும், இதனே நீக்க வேண்டுமென்னும் மனத்தில் வியாகூலமிகுந்த வனுய்ச் சங்கடப்பட்டுச் சுழன்று சுற்றித்திரிந்து அத்தியந்தஞ் சோர்ந்து வருத்தமுற்றனன்.

யாரு மின்றி யாராலுமெய்தற் கரிதா கியமுழைதான்
சாரு முத்திப் பதமெனவாந் தன்னிலொருகாற் றனிமேவி
யாரு மலேக்குன் றியின்றழைமே லருணச்சருமம் விரித்ததன்மே
லோரு மனத்தின் செயல்குறுக்கி யுணர்வான் புத்தன்போலாகி. (20)

யாருமின்றி யாராலும் எய்தற்கு அரிதாகிய முழைதான் சாரும் முத்திப்பதமெனல் ஆம் தன்னில் ஒருகால் தனிமேவி ஆரும் மலேக் குன்றியின் தழைமேல் அருணச் சருமம் விரித்து அதன்மேல் ஓரும் மனத்தின் செயல் குறுக்கி உணர் வான் புத்தன்போலாகி = நிர்ஜனபிரதேசமாய், எப்பிராணிக்கும் அப் பிராப்தமாய் (ஒருகந்தரம்) குகை அடையத்தக்க மோக்ஷபதமென்றே சொல்லலாம் = இடர் ஒன் றும் இன்மையின் ஒருபோது ஏகாங்கியாய் அடைவுற்று, நிறைந்த மலேக்குன்றின் மணி இலேகளேப் பரப்பி அதன்மேல் மான்றேலே விரித்து, விடயங்களேச் சிந்திக்கும் மனத்தின் செயலே ஒடுக்கி மெய்யுணர்வு நன்கடைந்த கபி லாதிபோலும் ஆலோசிப்பானுயினன்.

புண்டரீக வாதனத்திற் புத்தன் போலுத்தர முகனு
யண்ட மிரண்டு மிருகுதிமே லாக்கிப் பிரமாஞ் சலிபண்ணி
மண்டு கின்ற வாதனேயின் மருளுமனத்தை மீளவித்துத்
தண்ட லில்லா நிருவிகற்ப சமாதிப் பொருட்டிவ் வகைநினேந்தான். (21)

புத்தன்போல் உத்தரமுகனுய் புண்டரீகவாதனத்தில் அண்டம் இரண்டும் இருகுதிமேல் ஆக்கி பிரமாஞ்சலிபண்ணி மண்டுகின்ற அறிஞுசிகாமணியாகிய கபிலாதி மகரிஷிகளேப் போல வடக்குநோக்கி, விருசனம் இரண்டு குதி மீது சேர்ப்பித்து பிரஹ்மத்தை (பிரஹ்மம் ஆசிரி யர், ஆசிரியரை நமஸ்கரித்து ஜன்மஜன்மாந்

வாதனையில் மருளும் மனத்தை மீள்வித்துத் தண்டல் இல்லா நிருவிகற்ப சமாதிப்பொருட்டு இவ்வகை நினைந்தான் = தரம் மிகுந்து உண்டாகின்ற = நிறைகின்ற வாசனையினின்றும் மயங்கும் மனத்தினைத் தன் வசப்படுத்தி தடையின்றிய அசம்பிரஞ்ஞாத சமாதி சித்தித்தற்பொருட்டு பின் வருமாறு சிந்திக்கலாயினன்.

வாராய் மூட மனமேநின் மாயவாழ்க்கை களிற்பயனென்
றீரா விடரே முடிவில்வருஞ் செயலிற் பெரியோர் சேருவரோ
வாரா வமுதாஞ் சாந்தியைவிட் டழியும்போக மாதரிப்போ
ரேரார் மலர்க்கற் பகக்கான்விட் டெரிகூர்விடவெங் கானுறுவார். (22)

மூடமனமே வாராய் நின்மாய வாழ்க்கைகளில் பயன் என் முடிவில் தீரா இடரே வரும் செயலில் பெரியோர் சேருவரோ ஆரா அமுதாஞ் சாந்தியைவிட்டு அழியும் போகம் ஆதரிப்போர் ஏர் ஆர் மலர்க்கற்பகக்கான் விட்டு விடம் கூர் எரி வெங்கானுறுவார் = ஹே மூர்க்க மனமே! வாராய் உன்னுடைய பொய் வாழ்க்கைகளில் பிரயோஜனம் என்னே? விஷயங்களின் அந்தத்தில், தத்துவஞானத்தாலன்றி நீங்காத் துன்பமே வரும் கிரிகைகளில் மகான்கள் அடைவரோ (பற்றுவரோ) பருகப்பருகத் தெவிட்டாத அமிர்தமயமாஞ் சாந்தியை விடுத்து நைஸ்வரமாகும் போகங்களை அடைய விரும்புவரோ? அழகுவாய்ந்த மந்தார மலர் நிறைந்த கற்பகச்சோலையை விடுத்து விஷம் மிகுந்துள்ள அக்கினிமயமாயகாட்டை அடைந்து வருந்துவரோ?

அயனா டுற்றும் பாதலத்தி லணுகினுயா கிலுஞ்சாந்தி
வியனா தமுதை யொழிந்தந்த மிக்கநிருவா ணம்பயிலாய்
பயனா யதுபோல் விசித்திரமாய்ப் பாவாபாவ மயவடிவே
யியல்பா மிந்தச் செயல்கள்பெரி திடராமென்று மினிதாகா. (23)

அயன்நாடுற்றும் பாதலத்தில் அணுகினுயாகிலும் வியன் ஆர் சாந்தி அமுதையொழிந்து அந்த மிக்க நிருவாணம் பயிலாய் பயனா யதுபோல் விசித்திரமாய்ப் பாவம் அபாவம் மயவடிவே இயல்பாம் இந்தச் செயல்கள் பெரிது இடராம் என்றும் இனிதாகா = பிரமலோகத்துக்குச்சென்றாலும் பாதாளலோகத்தையடைந்தபோதினும் மேலாகப் பொருந்திய உபசாந்தியாகும் அமிர்தத்தையொழிய அந்த மேலான ஆனந்தத்தை அடையமாட்டாய். புருஷார்த்தப் பிரயோஜனமானதுபோல வைசித்திரியமாய் நானுவகையாய இஷ்டசம்பாதன வடிவபாவம் அநிஷ்டநிவாரண வடிவ அபாவம் ஆய இயல்பினவாம், இவ்வினைகள் உக்கிரமான துக்கப்பொருட்டதாம், ஓர்போதும் இன்பம் பயவாவாம்.

சத்தா திகளா மித்தொழில்க டம்மான் மண்டு கம்போலப்
பித்தாய் மூர்க்க மனமேயேன் பிரமிக் கின்ருய் விடாதவமே
யெத்தாற் சிறிது தனையடைந்தா யெதிலேயின்ப முறுகின்ருய்
நித்தா ரமுதாய்ச் சமமாகுமதனீ நிலைசே ராநெறியேன். (24)

சத்தாதிகளாம் இத்தொழில்கள் தம்மால் மண்டூகம்போலப் பித்தாய் மூர்க்க மனமே அவமே விடாது ஏன் பிரமிக்கின்ருய் எத்தால் சிறிதுதனை அடைந்தாய் எதிலே இன்பமுறுகின்ருய் நித்தாரமுதாய்ச் சமமாகும் அதில் நீ நிலைசேரா நெறியேன் = சப்தாதி விஷயங்களிற் செல்லும் இந் நிந்தித விருத்திகளானே, தவளைபோல் வெறிபிடித்த தாய மௌட்டிக மனமே புருஷார்த்த சூன்ய மான அவத்தினை விடாது மயங்கிச் சுழலுகின் ருய், எந்தச் சாந்தியினுல் சூக்குமத்தினும் சூக் குமமான வஸ்துவினை யடைந்தாயோ எச்சொரூ பத்தின்கண் ஜீவன்முக்தி விசிராந்தி சுகம்பெறு வாயோ, நித்தியமாகிய நிறைந்த அமுதாய் சமவடிவம் ஆகுமோ அச்சொரூபமாம் அதில் நீஸ்திதிபெருத காரணம் என்னே.

படர்மூர்க்க மாமனமே வீணுய்த்தோன்றிப் பருக்கின்ற செவித்தொழில்கள் பயின்றுசத்தந்
தொடர்கின்ற புந்தியினுல் மிருகமேபோற் றுஞ்சுறவேண் டாதோலின் ருெழிலைமேவி
யடர்பரிசோன் முகமாகு மதனுற்றுன்ப மடியாகப் பிடிக்கன்பா மியானைபோல்
மடமைமிகு மூர்க்கமா மனமேயென்று மாருத வாபத்தை மருவ வேண்டாம். (25)

வீணுய்த்தோன்றிப் பருக்கின்ற படர்மூர்க்கமா மனமே செவித் தொழில்கள் பயின்று சத்தந் தொடர்கின்ற புத்தியினுல் மிரு கமேபோல் துஞ்சுறவேண்டா தோலின் தொழிலைமேவி அடர் பரிசோன்முகமாகும் அதனுல் துன்பம் அடியாகப் பிடிக்கு அன் பாம் யானைபோல மடமைமிகு மூர்க்கமா மனமேயென்றும் மாருத ஆபத்தை மருவ வேண்டாம் = வியர்த்தமாய்ப் பகிர்முகத் தன்மை எழுச்சியானே வளர்வுற்று விருத்தியாகும் மூர்க்கமனமே சுரோத்திரேந்திரிய ஜன்னிய விருத்தியோடு கூடிய சப்த அநுசாரியாய புத்தியினுல் மான் போலக் கெட்டுப்போகவேண்டாம் துவக்கிந்திரி யத்துடன் கூடி நெருங்கிய பரிசம், பரிசாசிரய அநுசாரியாம் அதனுல் துன்பமே காரணமாகப் பெண் யானையினிடத்துக் காதலுற்ற ஆண் யானை கெடுவதுபோல அறியாமை மிகுந்தவ ஞனே மிக மூர்க்கத்தன்மை அடைவுற்ற மனமே எப்போதும் தீராத ஆபத்தை அடைய வேண்டாம்.

ஒளியுருவத் திரனோக்கு விழியின்செய்கை யுற்றுநீ வெவ்விளக்கை
யுணரா தாகி
விளிதலுறும் விட்டில்போல் வேகவேண்டா வெய்ய மனமே நாவின்
விருத்திமேவி
யெளிதருந்தி யுணவுகளி னிரதத்தாலே யிரைத்தூண்டில் கவர்மீன்போ
லிறக்க வேண்டா
நளினவித யத்துளுயிர் நெறிபோய்க் கந்த நாட்டத்தாற் கட்டுண்ணே
னனைவண்டேபோல். (26)

வெய்ய மனமே நீ ஒளியுருவத் திரன் நோக்கு விழியின் செய்கை யுற்று வெவ்விளக்கை உணரா தாகி இளிதலுறும் விட்டில்போல் வேகவேண்டாம் நாவின் விருத்தி மேவி உணவுகளின் இரதத்தாலே தூண்டில் இரை கவர் மீன்போல் எளிதருந்தி இறக்கவேண்டாம் இதயதா நளினத்துள் உயிர்நெறி போய்க் கந்த நாட்டத்தால் நனை வண்டேபோல் கட்டுண்ணேல் =

கொடிதாம் மனமே நீ ரூபம், ரூபாசிரய அநுசாரி யாய விருத்தியோடு கூடிய புத்தியானே சட்சு இந்திரியத்துடன் கூடி வெம்மையாம் தீபத்தினை யுற்றுச் சுடும் என்று உணராதாகி நாசமாகும் பதங்கம்போலச் சாம்பராக வேண்டாம், சிங்ந வேந்திரியத்துடன் கூடி ரசானுசாரியாம் புந்தி யால் தூண்டிலின் இரையைக் கவரும் மச்சம் போல எளிதாகப் புஜித்து நாசமடையவேண் டாம் இதய தாமரையினின்றெழும் பிராண வாயு வோடு கூடி மூக்கு மார்க்கமாய்க் கிராணேந்திரி யத்துடன் கூடிக் கந்த அநுசாரியாம் புந்தியால் தேன் உண்ணும் பிருங்கம் நாசமடையதுபோல் பந்தப்பட்டு நாசமடைய வேண்டாம்.

உரைத்தமிகு கங்களிறு விட்டின்மீன்றே னோசையூ றொளியிரத நாற்றமென்ன
நிரைத்தவிவற் றொற்றொன்றான் மாய்ந்துபோகு நிலையழிக்கு மவையைந்து
நேரேகூடிக்
கரைத்தலுறு பவர்க்கின்ப மெங்கேயுன்றன் கட்டுக்கு வாதனையே
கயிற்றுச்சாலம்
புரைத்தெழுநெஞ் சேயதுவே போகுமாகிற் பொருவில்சய மஃதுனக்குப்
புகலுங்காலே. (27)

உரைத்த மிருகம் களிறு விட்டில் மீன் தேன் ஓசை ஊறு ஒளி இரதம் நாற்றம் என்ன நிரைத்த இவற்று ஒன்றொன்றால் மாய்ந்து போகும் நிலையழிக்கும் அவை ஐந்தும் நேரே கூடிக் கரைத்த லுறுபவர்க்கு இன்பம் எங்கே உன்றன் கட்டுக்கு வாதனையே கயிற்றுச்சாலம் புரைத்தெழு

கூறிய மான், யானை. பதங்கம், மச்சம், வண்டு என்பவை வரிசைப்படுத்திய இவற்றுள் ஒவ் வொரு பிராணி மடிந்துபோகும், தனது சொரு பத்தை அடையவொட்டாமல் கெடுக்கும் ஐந்துங் கூடித் துன்பமடைபவர்களாம் ஆண், பெண் இவர்களுக்குச் சுகம் யாங்ஙனமாம் நினது பந் தனத்துக்கு வாசனையே இரச்சுப்போல பந்தனத் துப்பயனும்=வலையாம், தீய வழியில் எழும்

நெஞ்சே அதுவே போகுமாகில் பொருவு இல் சயம் அஃது உனக்குப் புகலுங்கால் = மனமே அவ்வாசனுஜாலம் ஒழிந்துபோகுமாயின் உண்மையைக் கூறுமிடத்து ஒப்பற்ற உனக்கு அவ்வாசனுக்ஷயம் வெற்றியாம்.

எதுபய ஞக நிற்கிங் கித்தண்ட மியான்செய் கின்றேன்
முதுவிசா ரத்தின் மிக்க முதன்மையோர்க் குளமொன் றில்லை
யதிகமா முடிவில் சித்துக் கற்பமா நிலையென் னெஞ்சில்
விதியதா யுளதோ யானை வில்வக்காய் புகுத லுண்டோ. (28)

எது பயனாக நிற்கு இங்கு இத் தண்டம் யான் செய்கின்றேன் முதுமிக்க விசாரத்தின் முதன்மை யோர்க்கு உளம் ஒன்று இல்லை அற்பமாம் என் நெஞ்சில் அதிக மாம் முடிவுஇல் சித்துநிலை விதி யாதாயுளதோ யானை வில்வக் காய் புகுதுலுண்டோ = எந்தப் பிரயோஜனத்தின் நிமித்தமாக உனக்கு இவ்விடத்து நிக்கிரகம் இதோபதேசத்தை நிருவிகற்ப சமாதிக்கு முயலும் யான் இயற்றுகின்றேன் நெடுங்காலம் நிரந்தரம் ஆராய்ச்சியுடைய மகாத்மாக்களுக்கு மனம் இன்று, குறுகிய எனது பரிச்சின்ன சித்தத்தில் விபுவாயும் அனந்தமாயுமுள்ள சிற்சொரூப ஸ்திதி உண்மையாய் உண்டோ, என் கஜேந்திரன் கூவிளங்கனிக்குள் பிரவேசித்திருக்குமே.

தசைபயில் பாதந் தொட்டுத் தலைமட்டும் வெவ்வே றுய்ந்து
மிசையுற யானங் கில்லை யானெனு நிலையெங் குண்டோ
திசையெலாம் விழுங்கி மேலாஞ் சித்ததாய்க் காண்ப தின்றி
யசைவற வெங்குந் தானு மென்றுறல் கனைத்துங் காண்கேன். (29)

தசைபயில் பாதந் தொட்டு தலை மட்டும் வெவ்வேருய்ந்து இசை யுற யான் அங்கில்லை யானெனும் நிலையெங்குண்டோ திசை யெலாம் விழுங்கிமேலாஞ் சித்த தாய்க் காண்பதின்றி அசைவற எங்குந்தானும் என்று உலகனைத்துங் காண்கின்றேன் = மாமிசமும் என்பும் மலிந்த அடிமுதல் சிரபரியந்தம் அணு அணுவாய்ப் பிரித்து விசாரித்து நோக்கில், தேகவிலக்ஷணமான அகம் சப்தத்தின் லக்ஷியார்த்தமான யான் தேகத்தின்கண் பொருள் இல்லை என்றால் சகல திசைகளையும் வியாபித்து அதீதமாகிய சேதனமாய் அசம்வேத்தியமாய் சலனமில்லாமல் சர்வான்மகமாய் என்பதாகப் பிரபஞ்சமனைத்தையும் எனது வடிவமாகவே காண்பேன்.

உயர்வுறு மதற்கு நாம கற்பனை யொருமை பன்மை
வியன்மகத் தணுவென் றேதும் விதமுறு குறிகள்காணே
னியலறி வாத லாலே யாண்காணு மென்பானீயே
துயர்தரு மேது வாகத் தோன்றினை பேதைநெஞ்சே. (30)

வியன் உயர்வுறும் அதற்கு நாம் கற்பனை ஒருமை பன்மை மகத்து அணுவென்று ஓதும் விதமுறு குறிகள் காணேன் இயல் அறிவு ஆதலாலே யான் காணும் என் பால் பேதைநெஞ்சே நீயே துயர் தரும் ஏதுவாகத் தோன்றினை = பெருமையும் உயர்ச்சியுமுடைய அவ்வகம் சப்த லக்ஷியார்த்த ஆத்மாவுக்கு, நாமம்=பெயர் கற்பனையும் நாமகற்பனையே ஏகத்வ சங்கியை யேனும் அனேகத்வ சங்கியையேனும் பெறுமை, சிறுமை என்று சொல்லப்பட்ட நானுவிதமான சின்னங்கள் கண்டிலேன், இயந்கையாகவே சித்துரூபமாதலாலே உன்னை அகம் அறிகின் றேன் சித்துரூபமாகிய என்னிடத்தில் அறியாமை மயமான மனமே நீதானே துக்கத்தை ஈயும் காரணமாகப் பிரதீதியாயினை.

முதுவிவே கத்தாற் போத மொய்ம்பினு லிந்த வுன்னைக்
கதுமெனக் கொல்லா நின்றேன் காணுதி கவலை நெஞ்சே
யிதுதசை யிதுபுண் ணீரீ தென்பிவை யுள வுயிர்ப்பாய்ப்
பொதுளிய வாத மிங்கே யகமெனல் பொருந்திற் றெங்கே (31)

முது விவேகத்தால் போத மொய்ம்பினுல் இந்த உன்னைக் கதுமெனக் கொல்லா நின்றேன் காணுதி கவலை நெஞ்சே இது தசை இது புண்ணீர் ஈது என்பு இவையுள உயிர்ப்பாய்ப் பொது ளிய வாதம் இங்கே அகம் எனல் பொருந்திற் றெங்கே = திடமான விசாரத்தால் ஜனித்த ஞானத்தின் வலிமையினுல் இவ்வாறு சேட்டை செய்யும் உன்னை விரைவாகக் கொல்லா நின்றேன், ஜாக் கிரதை கிலேசப்படுகின்ற மனமே பார். உம், உன்னை விட்டேனு, இது மாமிசம், இது இரத் தம், ஈது அஸ்தி. இவை பிராணகர்மேந்திரிய ஞானேந்திரியம் அன்னியம் இத்தன்மையதாய்க் கூட்டமாய்ப் பொருந்திய அதில்=இதம் விருத்தி விஷயமான பரிச்சின்னமாம் இதில் அகம் சப்த லக்ஷிய பதார்த்தமான ஆன்மா எங்கே.

தசைகள்வே றுதிரம் வேறு தடியென்பு வேறு மெய்யி
லசைவுவே றறிவு வேறு வகமெனல் பொருந்திற் றெங்கே
விசைவிழி யிதுதோ லீது வியன்செவி யிதுமூக் கீது
பசைவுறு நாவி திங்கே யகமெனல் பயின்ற தெங்கே. (32)

தசைகள் வேறு உதிரம் வேறு தடி என்பு வேறு மெய்யில் அசைவு வேறு அறிவு வேறு அகமெனல் பொருந்திற்றெங்கே விசை விழியிது தோல் ஈது வியன் செவியிது மூக்கு ஈது பசைவுறு மாமிசம் அன்னியம் இரத்தம் அன்னியம் பருத்த எலும்பு அன்னியம் பொய்யான தேகத்தில் பிரா ணன் அன்னியம் ஞானேந்திரியம் அன்னியம் இவைகளில் அகம் சப்த இலக்ஷியார்த்த பிரத் யக்க பின்ன பிரஹ்ம வஸ்து எங்கே, விரைந்து செல்லும் சட்சு இது இரசத்தைக் கவரும்

நாசி இது இங்கே அகமெனல் பயின்றதெங்கே = சிங்நகை இது இக்கூட்டத்துள் அகம் சப்த இலக்ஷியார்த்த பிரத்யக்கபின்ன பிரஹ்மம் நின்றது யாதுதான்.

அகமென வெங்கு மாகு மற்பமிங் ககமென் ருகு
நிகழுமிந் நல்ல நோக்கே நோக்கய னெறிவே றில்லைப்
புகரில்சின் மயனு மென்னைப் போதமி றூர்த்த நெஞ்சே
மிகவருத் தினையான் கன்றை வனச்செந்நாய் விரட்டு மாப்போல். (33)

அகமெனல் எங்குமாகும் அற்பம் இங்கு அகம் அன்ருகும் நிகழும் இந்நோக்கே நல்ல நோக்கு அயல்நெறி வேறு இல்லை புகர் இல் சின்மயனும் என்னைப் போதம்இல் தூர்த்த நெஞ்சே ஆன்கன்றை வனச்செந்நாய் வெருட்டுமாப்போல் மிக வருத்தினை = யான் எனக் கூறுவது எங்கும் இருக்கப்பட்ட அகம் சப்தலக்ஷியப் பிரத்யக்கபின்ன பிரஹ்மமே விளங்காநின்ற சன்மய இத்திருஷ்டியே உயர்வான சிறந்த திருஷ்டியாம், குற்றமற்ற அறிவு மயமாகிய என்னை அறியாமையிற் பிறந்த கெட்ட சித்தமே ரிஷக்கன்றை வனத்திலுள்ள செந்நாய்கள் இங்கும் அங்கும் ஓடி அலையும்படி விரட்டிப் பயப்படுத்துவதுபோல அதிகத் துயரப் படுத்தினய்.

தெய்வயோ கத்தா லின்று தேறினன் சொரூபச் செம்பொன்
கைவழி கவரஞ் ஞானக் கள்வன்மீண் டிவனைச் சேரே
னைவகைப் புலன்க ளொன்ரு வாதனை யற் றிருந்துந்
தைவரு புறனிற் றத்தம் புலன்களிற் ருவா நின்ற. (34)

சொரூபச் செம்பொன் கைவழி கவர் அஞ்ஞானக்கள்வன் தெய்வ யோகத்தால் இன்று தேறினன் இவனை மீண்டும் சேரேன் வாதனை அற்றிருந்தும் ஐவகைப் புலன்கள் புறனில் ஒன்ரும் தைவரு தத்தம் புலன்களில் தாவா நின்ற = ஆன்ம சொரூபமென்னுஞ் சிறந்த தங்கத்தை கைப்பறி பறிக்கும் அஞ்ஞானதஸ்கரன் (திருடன்) ஜன்மாந்தரத்திற் செய்த புண்ணியத்தாலான தேவதாநுக்கிரகத்தால் இப்போது அறியப்பட்டான், இத்திருடனை மறுபடி கூடேன், வெளியில் ஞானேந்திரியங்களோடு பொருந்திப் பற்றற்குரிய தத்தமக்குரிய விஷயங்களில் ஓடி விளையாடுகின்றன, அவிவேகியைப்போல விவேகிக்கும் விஷயங்களிற் செல்லுமாயின் அது பொருத்தமில்லையே எனின் அஞ்ஞர்கட்கு அங்ஙனமாம் விவேகிகளுக்கு நடனைப்போல் வேண்டியவற்றைக் காலத்திற்கேற்றபடி கற்பித்து விவகரிக்கலாம், எவ்வாற்ருனும் தேக அகம்பாவ வாசனையைத்தான் தியாகிக்க வேண்டும் சுத்த வாசனையிருந்து வெளிப் பிரவிருத்தியும் ஆம்.

வாதனை புலன்கட் கெல்லா மன்னுகா ரணமன் ருகு
மாதலான் மூர்க்க மான வைம்பொறி நீவிர் நெஞ்சி
னேதவா தனைகண் மாற்றிக் கருமங்க ளெல்லாஞ் செய்வீர்
வேதனைத் துன்ப மொன்றுங் கிஞ்சிலு மேவா தென்றும். (35)

புலன்கட்கெல்லாம் வாதனை மன்னுகாரணமன்ருகும் ஆதலால் மூர்க்கமான ஐம்பொறி நீவிர் நெஞ்சில் ஏதவாதனைகள் மாற்றிக் கருமங்கள் எல்லாஞ் செய்வீர் வேதனைத் துன்பம் ஒன்றும் கிஞ்சிலும் மேவாதென்றும் = இந்திரியாதிகள் விடயங்களை அடைவதற்குப் பொருந்தும் காரணமாகாதாம். வாசனையால் தாமவியாழ கடர் கதையில் பிரவிருத்தியாம் என்று கூறி இப்போது வாசனை காரணமல்ல என்று கூறுதல் பொருத்தமில்லை எனின் அஞ்ஞர் கட்கு அங்ஙனம், விவேகிகட்கு நடன்போல விவ கரிக்கலாம். ஆதலின் முரட்டுத்தனமாகச் செல் லும் ஐந்திந்திரியங்களாகிய நீங்கள் குற்றம் பொருந்திய மனதில் மலினவாசனைகள் ஒன்று மின்றித் தொழில்கள் யாவற்றையுமே விளைவிக்க லாம் சித்தத்தை வருத்தும் துன்பம் ஒரு சிறிதும் வந்துருது எப்போதும்.

கூடுசெயுந் தன்வாயி னூலாற்பொன்றுங் கோசகாரக் கிருமிக் கூட்டம்போல
வோடுபுல னெனுஞ்சிசுக்காள் மயலால் வீணேயுலர்ந்திடுவீர் புலனெல்லா
முறையுளான
நீடுமன னேயொடுங்கிப் புலன்களோடு நீவேறற் ருத்துமதத் துவத்தைநேரே
நாடுதிபற் றற்றென்ருய்முத்தி யானஞான வடிவினை நிலையாய் நண்ணு
வாயே. (36)

தன்வாயின் நூலால் கூடுசெயும் பொன்றுங்கோசகாரக் கிருமிக் கூட்டங்போல ஓடுபுலனெனுஞ் சிசுக்காள் மயலால் வீணே உலர்ந் திடுவீர் புலன் எல்லாம் உரையு ளான நீடுமன்னேபுலன்களோடு நீ வேறற்ற ஒடுங்கி ஆத்துமதத்து வத்தை பற்றற்றுநேரே நாடுதி ஒன்ருய் முத்தியான ஞானவடி வினை நிலையாய் நண்ணுவாயே = தனதுவாய் நீர்தந்துவினுலே கூடுகட்டி வாழ்ந்து நாசமாகும் கோசகாரக் கிருமிகளின் குழுவை யொத்து விஷயங்களில் பரவசமாய் ஓடும் இந்திரி யங்களாகிய குழந்தைகாள்! ஆசையினுல் வியர்த்தமாக நாசமடைவீர். இந்திரியங்களுக் கெல்லாம் இருப்பிடமான ஹே சித்தமே சர்வ இந்திரியங்களோடும் நீ ஐக்கியமாய்ப் பொருந்தி பிரஹ்மாபின்ன ஆன்மாவை பற்று (வாசனை) யற்றுநேரே நாடுதி தற்சாக்ஷியாய அத்வைத மாய் நிர்வாணமாயுள்ள அமலபோதத்தைத் திரமாக அடைவாய்.

ஆசகலா விடயவிட விடுசியாகி யனந்தமாநானெனும் வாதனேயைத் தீர
மாசறவிட் டிச்சையெலா மொழிப்பதென்னு மந்திரயுக்தியினுலே மறுஜென்மம் போய்த்
தேசமுறு பகவானு யச்சமெலாந் தீர்விடமாவாய் மனமேதிரள் சங்கற்பம்
வீசுதரு மயல்கொடியாய் நீயாங்காட்டை வெட்டிநெடும் பூமியிலே விநோதஞ் செய்வேன். (37)

ஆசகலாவிடயவிடுசியாகிஅனந்த மாம் நானெனும் வாதனேயைத் தீர மாசறவிட்டு இச்சையெலாம் ஒழிப்பதென்னும் மந்திரயுக்தியினுலே மறுசென்மம் போய் தேச முறு பகவானுய் அச்சமெலாந்தீர் விடமாவாய் மனமேதிரள் சங்கற்பம் வீசுதருமயல் கொடியாய் நீயாங் காட்டைவெட்டி நெடும் பூமியிலே விநோதஞ் செய்வேன்= ஆசையாம் குற்றத்தினின்றும் நீங்காதவிஷயங்களென்னும் விஷநோயாகி எல்லேயில்லாத அகங்காரமென்னும் வாதனேயை அடியோடு யாதொரு களங்கமுமில்லாமல் தொலேத்து நிராசையென்னும் இரகசிய யூகத்தால் புனர்ஜன்மம் ஒழிந்து வியாபகமாகிய பகவத்வடிவாய்ச் சகல பீதிகளுந் தீர்ந்தவனுவாய், ஹேமனமே! சங்கற்பமென்னும் விரித்த சாகைகளேயுடைய ஆசையாம் வதையாய் விளங்கும் விருக்ஷமாம் வனத்தைச் சேதித்து வியாபகமாகிய துரியபூமியில் விளேயாடி விநோதிப்பேன்.

வேண்டியவா விளேயாடித் தற்பதத்தை மேவினன் கேவலமானேன் வெற்றியுற்றே
னீண்டுஉயர் நிருவாண மானேன்செய்வ திலதானேன் பிறிவற்றேனிடம் வேறற்றே
னீண்டதெளி வுடைமையொளி யுடைமையுண்மை நிகழ்வுடைமை யறிவுடைமைநீங்கா மெய்ம்மை
மாண்டசுக முடைமையுப சாந்திநீர்மை மகிழ்வுடைமை நிறவுடைமை மகிமை பான்மை. (38)

வேண்டியவா விளேயாடித் தற்ப்தத்தை மேவினன் கேவலமானேன் வெற்றியுற்றேன் நீண்ட தெளிவுடைமை யொளியுடைமை உண்மை நிகழ்வுடமை அறிவுடைமை நீங்கா மெய்ம்மை மாண்ட சுகமுடைமை உபாசாந்தி நீர்மை மகிழ்வுடைமை நிறைவுடைமை மகிமை பான்மை = (உத்தமகுணங்களாகிய பாங்கிமார்களே பணியாளர் எனக் கூறல்) இஷ்டப்படி விநோதித்து பிரஹ்மமடைந்தேன், தன்னியனுனேன், அகப்பகை புறப்பகைகளே ஜயித்தேன், இங்கு மேன்மையான சுகரூபமாயினேன், கிருதகிருத்தியனுனேன், நிரம்சமானேன், நிராஸ்பதமானேன், மிகு சொச்சத்தன்மை ஊர்ஜிதமானேன் = தன்மை, சத்துத்தன்மை பெருமை, இரமணீயத்தன்மை, ஞானத்தன்மை, சத்தியத்தன்மை, பூரணத்தன்மை.

ஆவரண மில்லாமை யுதாரத்தன்மை யழியாததேசுடைமை யகண்ட நீர்மை
யாவதுந்தா னுமுறைமை யச்சமின்மை யேகமாந்தன்மை மனமெழுந்
தோடாமை
யோவலிலா துடனிறை யிக்குணங்க ளென்னுமுத்தமிகள் சுமங்கலிக
ளொப்பிலாதோர்
பாவனையொன் ருஞ்சொருப மடைந்தாற்கென்றும் பன்னியரா யுளங்கவரும்
பாவைமாறே. (39)

ஆவரணமில்லாமை உதாரத் தன்மை அழியாத தேசுடைமை அகண்டநீர்மையாவதுந்தானு முறைமை அச்சமின்மை ஏகமாந் தன்மை மனம் எழுந்தோடாமை ஓவலிலாது உடனுறை இக்குணங் களென்னுஞ் சுமங்கலிகள் உத்தமி கள்ஒப்பிலாதோர் பாவனையொன் ருஞ் சொருபமடைந்தாற்கு என் றும் பன்னியராம் உளங்கவரும் பாவைமாரே = மறைப்பு இன்மை, லோபமின்மை, குன்றுத பிரகாசத்தன்மை, கண்டிதமின்மை, சர்வான் மகத்தண்மை, பயமின்மை, ஏகத்தன்மை, உள் ளத்தின் ஒருமை, மாறுபடாமல் கூடவே நிகழும் இந்த இருபது குணங்களென்னுஞ் சுமங்கலிகள், உத்தம மிகுந்த மங்களத்தோடு கூடியவர்கள் உவமையற்றவர்கள் ஏகான்மாவின்கண்ணேசித் தத்தை நிறுத்தும் எனக்கு எப்போதும் காந்தை களாய் இருதயவல்லபைகள் ஆவார்கள்.

தேங்காது தன்வசமாய் விரிந்தபுந்திச் செயலாலேயிவ் வாறுதிறத்தி
லெண்ணிப்
பூங்காவி சிறிதலர்ந்தாற் போலப்பாதிப்புரை விழியோன்புண்ட ரிகாதனத்திற்
புல்கி
யோங்கார மேனேக்குந் தொனியதான வுத்தமநீண்முழக் காலே யுச்சரித்தான்
பாங்காக நாவறையு மணியினூடு பயின்றுதடையற்றேசை படர்வதே
போல். (40)

தேங்காது தன்வசமாய் விரிந்த புந்திச் செயலாலே இவ்வாறு திறத்திலெண்ணி பூங்காவி சிறிது அலர்ந்தால்போல பாதிப்புரை விழியோன் புண்டரிக ஆதனத்தில் புல்கி பாங்காக நா அறையும் ஓசை மணியினூடு பயின்று தடை யற்று படர்வதேபோல் ஓங்காரம் மேல்நோக்குந் தொனியதான உத்தம நீள்முழக்காலே உச்சரித்தான் = (இவ்வாறு நிர்ணயித்து நிருவிகற்ப சமாதியின் பொருட்டு ஓங்காரத்தை உச்சரித்தல்) நிலை பெருது. தனது இஷ்டப்படியே விசாலித்த விசுத்தபுத்தியின் விருத்திகளானே இப்போது கூறிய வகையே திரமாக நிச்சயித்து அழகாகக் குவளைமலர் கொஞ்சம் விரிந்தாற்போலப் பாதி திறந்த கண்களையுடையவனுகிப் பத்மாசனத்துப் பொருந்தியிருந்து, அழகாக நாவு அடிக்கும் சப்தம் மணியின்கண்ணே பொருந்தித் தடையில் லாமல் பிரமரந்திரம் வரை வியாபித்துச் சப்தித்து எழுவதான உத்தமமான உச்சசுரத்தாலே தொனித்தனன்.

சான்றபிர ணவமோது மவன்றன்சித்து தற்பதத்தை நோக்குதலுந் தனியோங்கார
மூன்றறவெவ் வளவுமேலுற்று நின்ற துயர்ந்தகன்று விமலமாமுணர்வின் கண்ணே
மூன்றறைமாத் திரையுடைய பிரணவத்தின் முற்கூறுவெளியாக முழங்கி யெங்கு
மான்றபிரா ணங்கடொனி கிளப்புமெய்யி லழகியதாய்க் கிளர்ந்தோங்கிய திருமெல்லை. (41)

சான்ற பிரணவம் ஓது அவன்றன் சித்து தற்பதத்தை நோக்குதலுந் தனி ஓங்காரம் ஊன்றற உயர்ந்து அகன்று எவ்வளவு மேலுற்று நின்றது விமலமாம் உணர்வின் கண்ணே மூன்றரை மாத்திரையுடைய பிரணவத்தின் முற்உறு வெளியாகமுழங்கி எங்கும் ஆன்ற பிராணன்கள் தொனிகிளப்பும் மெய்யில் அழகிதாய் கிளர்ந்தோங்கி அதிரும் எல்லை =

பெருமையான தாரகத்தை உச்சரிக்கும் அவனுடைய பிரஹ்மாகாரவிருத்தி பரமபத தத்துவத்தை நாடி நிற்றலும் ஒப்பற்ற பிரணவம் தடையின்றி உன்னதமாய் விசாலித்து எவ்வளவு மேலோங்கி நின்றது நிமலமாம் ஆத்மாவின் கண்ணே ஸ்திதிபெற்றது மூன்றரை மாத்திரையுடன் கூடி நிகழும் ஓங்காரம், அகாரம், உகாரம், மகாரம், அர்த்தமாத்திரையுடன் கூடி நின்று பிரதம அகாரமான மூர்த்தி தியானத்தில் ஸ்புடமாகத் தொனித்து எவ்விடத்தும் மேம்பட்ட பிராணன்கள் ஓசை எழுப்பும் தேகத்தில் கவின் பெறச் செழித்து வியாபித்து அதிருங்காலத்து.

இன்னுயிரைப் புறத்தகற்ற வல்லதான விரேசகப்பேர்கிரமந் தானியாக்கை முற்றுங்
கொன்னுறுபா ழாக்கினதா னிறைந்துயர்ந்த கும்பமுனிகிரை கடலைக்குறைத்ததே போற்
பின்னமல்சிற் சுவைநிறைந்த வாகாசத்திற் பிராண நிறைந்துள விதயப்பெகுந்தீ மண்டி
யன்னவுடன் முழுதுமெரித் துளதோங்காரத் தாதியாங்கிரமத்தி லவத்தையிதே. (42)

இன்னுயிரைப் புறத்த கற்ற வல்லதான இரேசகப்பேர் கிரமந் தான் ஆக்கைமுற்றுங் கொனுறு பாழாக்கின நிறைந்து உயர்ந்த கும்பமுனி குரைகடலைக் குறைத்ததேபோல் பின்னம்இல் சிற்சுவை நிறைந்த ஆகாசத்தில் பிராணன் நிறைந்துள இதயப் பெருந்தீ மண்டி அன்ன உடல்

இனிய பிராணனைப் பாகியத்து அகற்ற ஆற்றலையுடைய இரேசகமெனப் பெரிய பிராண நிஷ்கிரயணக்கிரமம்=உரசு தெலினனே சரீர முழுவதையும் அஞ்சும்படி சூன்யமாக்கினது, சகல சக்தியும் பூரணமாய் மேம்பட்ட ஸ்ரீ அகஸ்திய முனிவர் சப்தியா நின்ற சமுத்திரத்தை ஆசமனஞ் செய்ததேபோல பேதமில்லாத சித்து ரசமாயும் பூரணமாகியதும் ஆன ஆகாயத்தில் பிராணன் நிலைபெற்றது=பாகிய ஆகாயத்தில் நிலைபெற்றது

முழுதும் எரித்துளது ஓங்காரத்து ஆதியாங் கிரமத்தில் அவத்தை ஈதே = இருதயாக்கினி மிகுந்து அவ் வுத்தாலகனது அன்னமய சரீர முழுதையும் தகித்தது பிரணவத்தின் அகார பிரதம அம்சத்தில் இவ்வவத்தை இத்தகைத்தாய் வேண்டிய அளவு நிகழ்ந்தது.

அவ்வவத்தை வேண்டளவு நிகழ்ந்ததன்றே யடையோகத் தாலல்ல வடையோகந்தான்
வெவ்விடர் நல்குவதன்ரோ வதற்குப்பின்பு வியனோங்கா ரத்தினது வேற்றுக்கூறு
தவ்வலறச் சமநிலையா மவசரத்திற் சலனமிலாக் கும்பகப்பேர் தரிக்கப்பட்ட
வெவ்வமறு கிரமமுள தானதன்றே யியம்பியவிப் பிராணங்க ளெல்லாற்றிற்கும். (43)

அவ்வவத்தை வேண்டளவும் நிகழ்ந்தது அடையோகத்தால் அல்ல அடையோகந்தான் வெவ் விடர் நல்குவதன்ரோ அதற்குப் பின்பு தவ்வலறச் சமநிலையாம் வியன் ஓங்காரத்தினது வேற்றுக் கூறு அவசரத்தில் சலனமிலாக் கும்பகப்பேர் தரிக்கப்பட்ட இயம்பிய இப் பிராணங்களெல் லாற்றிற்கும் வெவ்வமறு கிரமம் உள்தானது = (இனிக் கும்பகத்தைக் கூறுகின்ருர்) மேற்புகன்ற இரேசகம் விரும்பிய வளவை உண்டாயது அது ஹடயோகப் பயிற்சியினல் அல்லவாம் ஹட யோகந்தான் குரூரமான துக்கத்தைக் கொடுப்ப தன்ரோ, அதன்பின்னர்த் தாவுதலின்றிச் சமஸ்திதியாம், அற்புத ஓங்காரத்தினது (பிரணவத்தினது) அயல் அங்கிசம் துவைத அவஸ்தையாம் உகாரமூர்த்தி தியான அவசரத்தில் சஞ்சலம் ஒழிந்த கும்பகமென்னும் நாமம் தரிக்கப் பட்டனவாம் கூறிய பிராணன்களெல்லாற்றிற்கும் முறையாய் உண்டாயது.

புறத்தகத்துங் கீழ்மேறிக் காகாசத்திற் புரிந்தசையாப் பிராணங்கள் புராணமாகித்
துறத்துருத்தி யிடைதடைப் பட்டனபேர் னின்றுதோன்றி முதலேயுடலைச் சுட்டவங்கி
நிறத்தவிடி போற்கணத்தி லவிந்ததன்றே நீகாரவெளி றெனவெண்ணீ ருயங்க
முறத்தெரிந்த தாலதற்கே யுடலென்பெல்லா மொழுங்காகத் தோன்றிநரம் புடனேநின்ற. (44)

துறத்துருத்தி யிடைதடைப் பட்டனபோல் புறத்து அகத்துங் கீழ், மேல், திக்கு, ஆகாசத்தில் புரிந்தசையாப் பிராணங்கன் புரணமாகி நின்று தோன்றி (அக் கும்பகத்தினது சலனமின்மையையே கூறல்) தோல் துருத்தியில் அடைக்கப்பட்ட காற்ருனது தடைபட்டு நிற்பனபோல், வெளியிலும் உள்ளிலும் கீழிலும மேலிலும் திசையிலும் பாகிய ஆகாயத்திலும் கும்பிக்கப்பட்ட சலனமில்

முதலே உடலைச் சுட்ட அங்கி நிறத்த இடிபோல கணத்தில் அவிழ்ந்தது அன்றே நீகாரம் வெளிறு என வெண்ணீருய் அங்கம் உறத்தெரிந்ததால் அதற்கே உடல் என்பு எல்லாம் ஒழுங்காக நரம்புடனே தோன்றி நின்ற = லாமல் பிராணன்கள் நிரம்பி நின்று பிரதீதியாய் நின்றபோதே தேகமாகிய புரத்தைத் தகித்த அக்கினியானது பேரிடிபோல க்ஷணத்தில் உபசாந்தியை அடைந்தது அப்போது பனி வென்மையாயிருப்பதுபோலச் சரீரம் வெள்ளிய பஸ்மமாய்த் தேகம் நன்ருகக் காணப்பட்டது அதனுல் உடல் (சரீரம்) அஸ்தியாவும் முறையாக நரம்புடனே தோன்றி கூடி நின்றன.

சுகமாய கருப்பூரப் பாயறன்னிற் றுயில்வதுபோ வெலும்புநிரை
தோன்றிற் றன்றே
மிகமோது பவனத்தா லந்தநீறு விசைந்தெழுந்து கணப்போதில்
விசும்பைச் சுற்றித்
திகழ்வான சரற்காலந் தன்னின் மேகஞ்செறிபனிபோ வோரிடத்திற்
சென்றுசேர்ந்த
விகலாத விவ்வவத்தை வேண்டுமட்டு மியலோங்காரத்திரண்டாங்
கிரமமெய்த. (45)

சுகமாய கருப்பூரப் பாயல் தன்னில் துயில்வதுபோல் எலும்பு நிரை தோற்றிற்று அன்றே மிக மோது பவனத்தால் அந்த நீறு விசைந்தெழுந்து கணப்போதில் விசும்பைச்சுற்றி திகழ்வான சரற் காலந்தன்னில் பனிசெறி மேகம் போல் ஓரிடத்திற் சென்றுசேர்ந்த இகலாத இவ்வவத்தை வேண்டு மட்டும் இயல் ஓங்காரத்திரண் டாங் கிரமம் எய்த = சுது ஏதுவாய கருப்பூரமாம் சயனத்தில் நித்திரை செய்வதுபோல எலும்பின் பந்திபாவனு திருஷ்டியால் இலக்ஷிக்கப்பெற்றதேயாம் அதிகமாகச் சரிக்குங் காற்றினுலே என்பு சகித அந்த பஸ்மம் விரைவில் மேல் கிளம்பி நொடிப்போதில் ஆகாசத்தைச் சுற்றி விளங்காநின்ற சரருதுவில் பனி பொருந்திய மேகம்போல ஓர் மூலையில் போயுற்றது அப்பியாசத்துக்கு விரோதமில்லாத பிரணவத்தின் மத்தியமாக சாத்திய கும்பகப் பெயரிய இவ்வவத்தை அவாவியவளவும் அழகிய பிரணவத்தின் அங்கமானது விதீயகிரமத்தில் நிகழ்ந்தது.

அவத்தையிது நிகழ்ந்ததட யோகத்தன்ருே லடையோகம் ஙேரிடரை
யளிப்பதன்ருே
வவற்றினிற்பின் பிரணவத்தின் மூன்ருங்கூரு யமையுமுப சாந்திதரு
மவசரத்தி
லுவப்புறுபூ ரணத்தாலே பூரகப்பே ருளகிரமம் பிராணங்கட்குண் டாயிற்ரு
யுவத்திரமி லாவந்த வவதரத்தி லுயிரெல்லா முணர்வினமு தத்துட்புக்க. (46)

அவத்தை இது நிகழ்ந்தது ஹட யோகத்தன்ரும் ஹடயோகம் (மூன்ருவதாகிய பூரகக் கிரமத்தைப் புகவல்ல) இக்கும்பக அவத்தையில் இவ்வாறு அப்பியாசிக்

பேரிடரை அளிப்பதன்றே அவற்றினின் பின் உபசாந்தி தரும் பிரணவத்தின் மூன்றுங் கூறுய் அமையும் அவசரத்தில் உவப்புறு பூரணத்தாலே பிராணங்கட்கு கிரமம் உள பூரகப்பேர் உண்டாயிற்ருய் உவற்திரமில்லா அந்த அவதரத்தில் உயிரெல்லாம் உணர்வின் அமுதத்துள்புக்க = கப்பட்டது ஹடயோகத்தால் அல்லவாங், ஹடயோகம் பெரிய துக்கத்தை கொடுப்பதல்லவோ, அதன்பின் சித்தத்தின் உபசாந்தி ஏறுவான ஓங்காரத்தினது திருதீயாம்சத்தினது மகார வடிவ மூர்த்தி தியானுவசரத்தில் சந்தோஷிக்கும் நிறைப்பாலே நெறியாலுள்ள பூரகம் என்னும் நாமம் கிரமமாய் உளதாயது, யாதொரு இடறுமில்லா அந்தப் பூரக அம்சத்தில் பிராணன்கள் யாவும் சேதன=ஞான அமிர்தத்தில் புகுந்தது.

உருபனிதோய்ந் தாலொப்ப வதிசீதத்தை யுற்றபிராணங்க
ளெலாமொழுங் கினுலே
ககனமுறு புகைதன்கா ராகுமாபோற் ககனநடு வுறமதியாய்க்
கலையின்கூட்ட
மிகவுநிறைந் தந்தமதி மண்டலத்தில் வியன்சுதைதா ரையையுயிர்கண்
மேவப்பெற்ற
திகழ்விசும்பி னின்றிழிந்த வமுததாரை சேடமாமுடனீற் றிற்சென்று
வீழ்ந்த (47)

உருபனி தோய்ந்தாலொப்ப அதி சீதத்தையுற்ற பிராணங்கள் எலாம் எழுங்கினுலே ககனமுறு புகைதண்கா ராகுமாபோல் ககன நடுவுற மதியாய்க் கலையின்கூட்டம் மிகவும் நிறைந்து அந்த மறி மண்டலத்தில் வியன்சுதை தாரையை உயிர்கள் மேவப் பெற்ற, திகழ்விசும்பில் நின்று இழிந்த அமுததாரை சேடமாம் உடல் நீற்றில் சென்று வீழ்ந்த = (அமுததாரை நேக பஸ்மத்தில் சேர்ந்ததெனல்) கொட்டாநின்ற பனியில் மூழ்கினுலென்ன மிகத் தண்மையை அடைந்த பிராணவாயுக்கள் யாவும் கிரமமாகவே ஆகாயத்தையடைந்த எக்ஞபுகை மழை மேகமாவதுபோல ஆகாயத்தின் மத்தியில் அடையவே சந்திரமண்டலத்தை அடைந்தன, கலையின் கலாபத்தானே சம்பூரணமாகிய அந்தச் சந்திரமண்டலத்தில் அற்புதமாகிய அமுததாரையைப் பிராணன்கள் அடையப்பெற்றன விளங்காநின்ற சிதாகாசத்தினின்றும் உண்டான அமிர்த தாரை காற்றுத் தூற்றியதுபோக எஞ்சிநின்ற சரீர சம்பந்த மத்தியின் பஸ்மத்தில் வந்து சொரிந்தது.

அரன்சிர நின் றிழியமுத கங்கைபோன்ற வமுததா ரையினுலே யமல மாகிக்
கரங்களொரு நான்குடன் வெண்மதித் தேசாகிக் கருணைமால் வடிவென்னக்
காணலாகி
யுரங்கிளருத் தாலகன்மெய் தோன்றிற் றன்றே யுயரமுத மயமான
வுயிர்களெல்லாங்
குரம்பையது தனைநிறைத்துச் சூழ்ந்துள்ளான குண்டலினி தனைப்பூரை
குயிற்றிநின்ற. (48)

அரன்சிரம் நின்று இழி அமுத கங்கைபோன்ற அமுத தாரையி ஞலே அமலமாகி ஒரு கரங்கள் நான்குடன் வெண்மதித் தேசாகி உரங்கிளர் உத்தாலகன் மெய் கருணைமால் வடிவென்னக் காண லாகி தோன்றிற்று உயர் அமுத மயமான உயிர்களெல்லாம் குரம் பையது தனைநிறைத்துச் சூழ்ந் துள்ளான குண்டலினிதனைப் பூரை குயிற்றிநின்ற = பரமேசுவரனது முடிநின்று பொழி அமுதமய மான கங்கைபோலுள்ள அமுத தாரையினுலே நிர்மலமாகி ஒப்பற்ற சதுர்ப்புஜங்களுடன் வெள் ளிய சந்திர தேஜசையடைந்து விளங்கியது; அவ்வுத்தாலகரது சரீரம் காருண்ய ஸ்ரீமந் நாரா யணரது தேகத்தைப்போல விளங்கியது; மேலான அமிர்தவடிவான உயிர்களெல்லாம் அச் சரீரத்தை நிரப்பி வியாபித்து உள்ளேயுள்ள குண்டலிசத்தியை பூரை பூரித்து விளங்கின; குண்டலிநி பூரித்து விளங்கினதுபோலுமெனின் சக்கராகாரமாங்ச் சுழலும் சுழிகளால் மிக்கவே வகிக்கும் கங்கையின் நீரேபோல.

இத்திறத்திற் பங்கயவா தனத்திருந்தோ னியாக்கைநிலை யழியாம
லியற்றிப்பின்னர்
மத்தமுறு பிரமரம்போற் சுழலுநெஞ்சை வன்பினுற்றகை வுற்ருன் மௌனியாகி
மெத்துபிராணு பானவேகநோக்கி மெல்லெனவுண் டாக்கினன் வவ்விடய நின்று
தத்துபுலன் களைவருந்தி வேறுசெய்தான் சற்றுமறப் புறப்பரிசந்
தள்ளினுனே. (49)

இத்திறத்தில் பங்கயவாதனத் திருந்தோன் ஆக்கை அழியாமல் இயற்றி பின்னர் மத்தமுறு பிர மரம்போல் சுழலுநெஞ்சை வன் பினுல் தகைவுற்ருன் மௌனியாகி மெத்துபிராண அபானவேகம் நோக்கி மெல்லென உண்டாக்கி னன் வல்விடயம் நின்று தத்து புலன்களை வருந்தி வேறுசெய் தான் சற்று மறப்புறப்பரிசந் தள்ளினுனே = இந்தப்பிரகாரம் பத்மாசனத்திருந்த உத்தால கன் தேகஸ்திதி கெடாமல் செய்து அதன்பின் மதுமாந்தி மதங்கொண்டு சுழலும் வண்டுபோல முன் அநுபவித்த விஷயங்களில் சென்று சுழலும் சித்தத்தை மிகுந்த முயற்சியினுல் தடைப்படுத்தி னுன், மகா மௌன விரதமுடையவனுய் மிதந் தோடும் பிராண அபானன்களுடைய வேகத் தைப்பார்த்து மெதுவாக அடக்கினன், சப்தாதி விடயகளில் நின்று தாவும் இந்திரியங்களை தோஷதிருஷ்டிவாயிலாக பிரயாசத்துடன் அப் புறப்படுத்தினுன். சேஷமின்றி பாகிய விஷயங் களை விட்டொழித்தான்.

பற்றறுதிண் ணியமதியோ னுள்ளேதோன்றும் பரிசமெலாந் தள்ளுகின்ற
பார்வையாலே
யற்றனவாக் கினன்மூல வாயில்செம்மி யங்கத்தொன்பதுவாயி லனில
மெல்லாங்

குற்றமற முகமடைத்தாற் புறத்துவாரங் கும்பத்துக்க டைபடல்போற் குறித்தடைத்தா
னுற்றலய மெனுங்குணத்தைச் சேர்ந்தநெஞ்சை யுயரிதயவாகாயத் தொடுக்கினனே. (50)

பற்றறுதிண்ணியமதியோன் உள்ளே தோன்றும் பரிசமெலாந் தள்ளுகின்ற பார்வையாலே அற்றனவாக்கினன்கும்பத்துக்குமுகம் அடைத்தால் புறத்துவாரம் அடைபடல்போல் அங்கத்து மூலவாயில் செம்மி ஒன்பதுவாயில் அனில மெல்லாம் குற்றமறக் குறித் தடைத்தான் உற்றலயம் எனுங் குணத்தைச்சேர்ந்த நெஞ்சை உயரிதயவாகாயத்து ஒடுக்கினனே = யாதொருவிதமான சங்கமுமில்லாத திடமான சித்தத்தையுடைய அவ்வுத்தாலகன்ஆந்தரத்தில் பிரதீதியாகும் வாசனை (மானசவிடயங்க)ளனைத்தையும் அகற்றுகின்ற விருத்திஞானத்தோடுகூடி அற்றனவாக்கினன் (தொலைத்தனன்) கும்பத்தினது சூக்ஷும துவாரங்களையும் அடைக்கின்றது போல சரீரத்தினது குதத்துவாரத்தினையும் குதியினாலே அடைத்து நவத்துவாரங்களனைத்தையும் குற்றமின்றி நிரோதஞ் செய்தான், பொருந்திய சிகைஷயை அடைந்த மனத்தை மேலான இருதயாகாசத்தில் நன்கு வைத்துக் கொண்டனன்.

உரத்தமத கரியையுபா யத்தால் விந்தத்துட்குழியில் சேர்ப்பதுபோ லொடுக்கிநெஞ்சை
சரற்ககனம் போனிமல தெளிவைச்சேர்ந்து தள்ளினன் பற்றிபாய் தன்மையாலே
வரத்துடைய விகற்பமெலா மீளமீள வருவனவேண்டிய படியேவந்து தோன்ற
பரப்புறுதோற் றங்களைவன் னெஞ்சான் மாய்த்தான்பகைவரை வாளாற்சூரன் படுப்பதேபோல். (51)

உரத்த மதகரியை விந்தத்துட்குழியில் உபாயத்தால் சேர்ப்பது போல் நெஞ்சை ஒடுக்கி சரற்கக னம்போல் நிமலதெளிவைச் சேர்ந்து பற்றிபாய்த்தன்மை யாலே தள்ளினன் மீளமீள வருவன வேண்டியபடியே வந்து தோன்ற பரப்புறு தோற்றங்களை வன்னெஞ்சால்பகைவன்வாளால் சூரன் படுப்பதேபோல மாய்த்தான் = வலிமைவாய்ந்த மதகஜத்தை விந்தகிரியின் அருகே தோண்டிய குழியில் சாகையாதிகளால் மறைக்கப்பெற்றுப் பெண்யானையைக் காட்டல் முதலிய உபாயத்தால் அடைவிப்பதுபோல, மனத்தை யூகத்தினால் லயஞ்செய்து சரற்கால ஆகாசம்போல நிர்மலமாகிய தூய்மையை அடைந்து பிரதிபாத்தன்மையாலே விகற்பத்தைத் தள்ளினன், ஓயாமல் இடைவிட்டு இடைவிட்டு வருவனவாகி இஷ்டப்படி வந்து தோன்றும் விஸ்தாரமான அவ் விருத்திகளை விவேக புத்தியால் சத்துருக்களை வாளால் சூரன் வெட்டித்தள்ளுவதுபோலத் தொலைத்தான்,

விகற்பமெலா மிறத்தலுமே யிதயவிண்ணில் விவேகபானுவை மறைத்துவிரிந்த கங்குல்
சகத்தினினு ளஞ்சனத்தின் பார்த்தப்போதே தன்னுள்விவே கத்தாலேதவிர்த் தானத்தை
யகத்திருணன் ருய்க்கெடலுஞ் சுடர்வந்தெய்த வம்முனிவன்தனையுங் கண்டகற்றி மாய்த்தான்
நிகழ்ச்சியொளி யகலுதலுஞ் சுழன்றுநெஞ்ச நிசியினடுப் போலுறக்க நேர்ந்ததன்றே. (52)

விகற்பமெலாம் இறத்தலுமே இதயவிண்ணில்விவேகபானுவை மறைத்து விரிந்த கங்குல் அத்தை சகத்தினுள் அஞ்சனத்தின் பார்த் தப்போதே தன்னுள் விவேகத் தாலே தவிர்த்தான் அவத்து இருள் நன்ருய்க் கெடலும் சுடர் வந்து எய்த அம்முனிவன் அதனை யுங்கண்டு அகற்றிமாய்த்தான் நிகழ்ச்சி ஒளி அகலுதலும் சுழன்று நெஞ்சம் நிசியினடுப்போல உறக் கம் நேர்ந்ததன்றே = சகல விகற்பங்களுக்கும் போனவுடனே இருதயாம்பரத்தில் ஞானபாஸ்கரனை ஆச்சாதித்து விஸ்தரித்த இருள்வடிவதமத்தை உலகத்தில் அஞ்சனம் மைக்கருப்புப்போல நோக்கிய அப் போதே தனிடத்தில் உதித்த விவேகத்தினுலே நாசஞ் செய்தான் உள்ளே தோன்றிய இருள் வடிவதமம் நன்ருய்ப்போகுதலும் பிரகாசம் வந்துபொருந்த அம் முனிசிரேஷ்டனுன உத்தாலகன் அவ்வொளியையும் பார்த்து விலக்கித் தொலைந்தான், விளங்கிய பிரகாசம் போதலும் சுழற்சியை அடைந்து மனமானது அர்த்த இராத்திரியைப்போல நித்திரை வந்துசேர்ந்தது.

போகாத துயிலினையு மறுத்தான் றூக்கம்போகுதலு மாகாசபோதம் வந்த
தாகாச போதமழிந்திடலும் வல்லை யவன்மனமோகஞ் சேர்ந்த வந்தமோக
நோகாமன் மனத்தினைவிட் டேகுமாறு நூக்கினன் பேரிதயநோக்கு மிக்கோ
னேகாத விரவுதரு மந்தகார மிவ்வுலகினின்றகற்று மிரவி போல. (53)

போகாத துயிலினையும் அறுத் தான் தூக்கம் போகுதலும் ஆகாச போதம் வந்தது ஆகாசபோதம் அழிந்திடலும்வல்லை அவன்மனம் மோகஞ்சேர்ந்த அந்த மோகம் நோகாமல் மனத்தினைவிட்டு ஏகு மாறு நூக்கினன் ஏகாத இரவு தரும் அந்தகாரம் இவ்வுலகி னின்று அகற்றும் இரவிபோல பேரிதயம் நோக்குமிக்கோன் = நீக்கமுடியாததான நித்திரையையும் நீக்கினன், நித்திரை நீங்கியவுடனே சூன்யம் உண்டாயது. சூன்யம் ஒழிதலும் அப்போதே அவ்வுத்தாலகனது மனம் மோகத்தை அடைந்தது (அறிவின்மை வடிவ ஜடத்தன்மை அடைந்தது) அந்த அறியாமை வடிவ ஜடத்தைத் தீப முதலியவற்ருல் அகலாத இரவு ஈன்ற இருட்டை இவ்வுலகினின்றும் அகற்றும் சூரியன்போல அநாயாசமாக மகா ஆந்தரதிருஷ்டியையுடைய அம் முனிவன் மனத்தினை விட்டு நீங்குமாறு போக்கினன்.

அன்ன காலையி லிருள்சுடர்துயில் மயக்கனைத்தையுமறுத் தோட்டி
மன்னு மோரவத் தையையடைந் தொருகணம்வருத்த மாறிய துள்ள
மின்ன றீர்ந்துட னேயனைத்துருவமா மறிவை யெய்திய தன்றே
நன்னெ டுங்கரை தடுக்கநின் றெதிர்த்துமுற்றல நிறைந்திடு நீர்போல். (54)

அன்னகாலையில் இருள் சுடர் துயில் மயக்கு அனைத்தையும் அறுத்து ஓட்டி மன்னும் ஓரவத்தையை அடைந்து ஒருகணம் உள்ளம் வருத்தம் ஆறியது இன்னல் தீர்ந்து உடனே அனைத்துருவமாம் அறிவை எய்தியது நல்நெடுங்கரை தடுக்க நின்று எதிர்த்து முன்தலம் நிறைந்திடும் நீர்போல் =

(பாக்கியவயத்தானே உத்தாலகமுனிசுவாநுபூதி நிலைமையடைந்ததைக்கூறல்) அப்போது தோற்றிய இருள் பிரகாசம், நித்திரை, மோகம்=அறிவின்மை வடிவ ஜடம், யாவற்றையுங் இன்றியதாக அறவே நாசஞ்செய்து பொருந்தாநின்ற நிருவிகற்ப சமாதியை அடைந்து ஒருகண காலம் மனம் விசிராந்தியுற்றது, அநர்த்தம் ஒழிந்த அப்போதே சர்வான்மக வடிவ சிற்சொரூபத்தை அடைந்தது. பெரிய அணையினால் ஜலம் தடைபட்டு முன்தலத்தில் எதிர்முகமாய்த் திரும்பும் அந்த ஜலம்போல.

விஞ்சு நீள்பகற் பரிசயத்தா லுந்தன்மெய்யறி வுணர்வா லும்
நெஞ்சு சின்மய மடைந்ததா லிரணியநிகழ் சிலம்பா மாபோல்
வஞ்ச வன்மனத் தன்மைபோய்ச் சின்மயமருவிய மனந் தீரச்
செஞ்செவ் வேவல்லை வேற்றுமை யானதாற் சேற்றினுட் குடமென்ன. (55)

நீள்பகல் விஞ்சு பரிசயத்தாலும் தன் மெய்யறிவுணர்வாலும் மனம் இரணிய சிலம்பாமாபோல் சின்மயம் அடைந்தது வஞ்சவன் மனத்தன்மை போய் சின்மயமருவிய மனம்தீரச் செஞ்செவ்வே வல்லை வேற்றுமையானது குடத்துள் சேறு என்ன =

நெடுங்காலம் நிரந்தரஞ்செய்யும் அப்பியாசத்தாலும் சுபாநுபவ பிரஞ்ஞையினாலும் மனம் சொர்னம் கம்மியனது வியாபாரத்தால் ஆபரணமாவதுபோலச் சிற்சொரூபமடைந்தது கபடமும் வலிமையும் பொருந்திய மனத்தன்மைபோய்ச் சித்துவடிவத்தைப்பொருந்திய அம் மனம் அத்தியந்தம் சாலவும் சிக்ஷிப்பட்டு திரும்பிய அப்போதே குடத்தினுள் ஜலங் காய்ந்தபின் சேறு கும்பபாவத்தையே அடையாநிற்கும் அதுபோல சிற்சொரூபமே ஆனது.

தங்கு காட்சிவிட் டமலமாய் ஞானத்தின்சம மடைந்தது போதம்
பொங்கு வாரிதி திரைமுதற் பகிர்ச்சிபோய்ப் புனல்சம மடைந்தென்ன
வெங்கு மோர்மதி யாயறிவுற்றவ னீறில் போகத் தெண்ண
மங்கி யாண்டண்டம் பரித்துயர்ந் தமலசின்மய விசும்புரு வானுன். (56)

தங்கு காட்சிவிட்டு அமலமாய் ஞானத்தின் சமமடைந்தது

(சித்தத்தினது சித்தபாவஞ் சென்றபின் அதன் பிரதிபிம்ப சைதன்யத்துக்குப் பிம்ப சிற் சாமா

போதம் பொங்குவாரிதி புனல் திரைமுதல் பகிர்ச்சிபோய் சமம் அடைந்தென்ன எங்கும் ஓர் மதியாய் அறிவுற்று அவன் ஈறில் போகத்து எண்ணம் மங்கி ஆண்டு அண்டம் பரித்து உயர்ந்து அமல சின்மய விசும்புருவானுன் = னிய ஐக்கியம் உண்டாயது எனல்) ஜன்ம ஜன்மமாக வந்திருந்த திருசியத்தை விடுத்து நிர்மலமாய் சிற்சாமானியமாய் இருந்தது ஆபாசசகித மனம், நிறைந்துள்ள சமுத்திரஜலம் அலை முதலியனவாய பேதம் ஒழிந்து சமபாவம் அடைந்ததுபோல,ஏகாகாரத்தின் சாக்ஷாத்காரமடைந்த உத்தாலகமுனி அளவில்லாத போகங்களின் சிந்தனங்குன்றி அவ்விடத்துத் திருசிய ஆதாரமாய் மகத்தாய நிர்மல சிதாகாசவடிமேயாயினுன்.

அவ்வி டத்தினிற் காண்பதுகாட்சியற் றனந்தமா நல்லின்பஞ்
செவ்வி யானந்த முற்றன னமுதமார் தெண்கடற் குளித்தென்ன
மெய்வி டக்கழன் றதீதனுயொரு தல்மேவினன் சதானந்த
பௌவ மாயின னெங்கணு மொத்ததற்பாவமே வடிவானுன். (57)

அவ்விடத்தினில் காண்பது காட்சி அற்று அமுதமார் தெண்கடற் குளித்தென்ன அனந்தமாம் நல்லின்பஞ் செவ்வியானந்தம் உற்றனன் மெய்விடக் கழன்று அதீதனுய் ஒருதலம் மேவினன் சதானந்த பௌவமாயினன் எங்கணும் ஒத்த தற்பாவமே வடிவானுன் = அச்சிதாகாசத்தில் திருசிய தரிசனவர்ஜ்ஜிதமாய் அமிர்தமயமாய தெளிந்த சமுத்திரத்தில் மூழ்கியதேபோல, அந்தமற்ற ஆனந்தத்தைப் பிரமாவிஷ்ணுவாதிகளானே அடையப்பெற்றதேபோலத் தேகாபிமான ஜீவபாவத்தினின்றும் விடுபட்டவனுய் அத்வைதசொரூபமடைந்தனன், சதானந்தசாகரமேயாயினன், எவ்விடத்தினும் ஒரேபடித்தானசத்தாசாமானியவடிவமாயிலங்கினன்.

அந்த ணன்றன தறிவெனு மன்னமானந்த மாநிலை யோடை
வந்த மர்ந்தது சரற்ககனத் திலேவயங்குமா மதி யென்ன
வுந்து காற்றிலா விளக்கென வோவியத்துருவெனத் திரை யில்லாச்
சிந்து வென்னநீர் கருக்கொண்டு பொழியலாச்சேண் முகிலென
நின்ருன். (58)

அந்தணன் றனது அறிவெனும் அன்னம் ஆனந்தமாம் ஓடைநிலை வந்தமர்ந்தது சரற்ககனத்திலே வயங்கும் மாமதியென்ன உந்து காற்றிலா விளக்கென ஓவியத்து உருவு என திரையில்லாச் சிந்து வென்ன கருக்கொண்டு பொழியலாச்சேண் முகில் என நின்ருன் = பிராமண உத்தமரான உத்தாலக மகிரிஷியினது அறிவு எனும் அன்னம்=அம்சமானது ஆனந்த சரசின்கண்ணே ஸ்திதமாயது சரற்காலத்திய நிர்மல ஆகாயத்தில் விளங்கா நின்ற பூரண சந்திரனைப்போலும் சலிக்கும் காற்றில்லாத தீபம் போலும் பித்திகையில் அமைத்த சித்திர பிம்பம் போலும் அலையில்லாத சமுத்திரம்போலும் ஜலம் பருகிக் கார்நிறம் வாய்ந்து முன்னர் பெய்து பின் பெய்யாத ஆகாய மேகம்போலும் நிருவிகற்பமாயிருந்தார்.

இந்த மிக்கபே ருலகினிற் றற்பதத் திருக்குமம் முனியைக்கண்
டந்த ரஞ்செறி சித்தர்விண் ணவர்குழு வற்புதப் பலபேரும்
வந்து சுற்றின ரரம்பையர் நிரம்பினர் வாசவன் றனிமூதூர்
தந்த ளிப்பவ னங்கவை யனைத்தையுந் தள்ளினன் விருப்பின்றி. (59)

இந்த மிக்கபேருலகினில் தற்பதத் திருக்கும் அம்முனியைக் கண்டு அந்தரஞ்செறி சித்தர் விண்ணவர் குழு அற்புதம் பலபேரும் வந்து சுற்றினர் அரம்பையர் நிரம்பினர் வாசவன் தனிமூதூர் தந்தளிப்ப அவன் அவையனைத்தையும் விருப்பமின்றி தள்ளினன் = இவ்வரிய மகாலோகத்தில் பரமபதத்தில் வீற்றிருக்கும் அந்த உத்தாலக மகாமுனியைக் கண்டு வியோமத்தில் வாழ்பவர்களாய சித்தர் கூட்டங்கள் தேவர் கூட்டங்கள் அற்புதம் வாய்ந்த மற்றையர் பலரும் சாத்தியர் வித்தியாதரர் யாவரும் அம் முனிவனது ஆசிரமத்துக்கு வந்து சூழ்ந்தனர் தேவாங்கனைகள் நிறைந்தனர், இந்திரன் ஐஸ்வரியம் நிறைந்த சொர்க்கலோகத்தை அன்போடும் ஈய்ந்திடவும் அவ்வுத்தாலகன் ஆண்டு அப்போகம் நிறைந்த யாவற்றையும பிரியம் லேசமுமின்றி தள்ளினன்.

அலங்கன் மாதரிங் கிதங்களைச் சைசவத் தறிகிலா னெனச்சற்றுங்
கலங்க லாதகெம் பீரமாமதியினன் கடவுள்வான் பேற் றெண்ணம்
விளங்கி யன்னதன் னுனந்த வீட்டிலே மேவினன் மதியாறு
துலங்கி யோங்கிய வுத்தரா யணத்திலே சுடர்விடு கதிரென்ன. (60)

அலங்கல் மாதர் இங்கிதங்களைச் சைசவத் தறிகிலான் எனச் சற்றுங் கலங்காத கெம்பீர மாமதியினன் கடவுள் வான் பேற்று எண்ணம் விலங்கியன்ன தன் னுனந்த வீட்டிலே மதியாறு மேவினன் துலங்கி யோங்கிய உத்தராயணத்திலே சுடர்விடு கதிரென்ன = கற்பக மலர்மாலை இரத்தினமாலை தரித்த மங்கையர் அபிநயங்களைச் செய்யச் சிசு அவஸ்தையில் அறியாதவன்போலச் சிறிதும் க்ஷோபத்தை யடையாத தீரபுத்தியையுடைவன் சொர்க்கலோகத்துப் போகங்களிலுள்ள கருத்தை நீக்கி முன்னர் தான் இருந்த ஆனந்த மந்திரமாகிய தன்னிடத்திற்றனே ஆறுமாதபரியந்தம் இளைப்பாறியிருந்தனன், மேகாவரணமில்லாமல் விளங்கி விரிந்த பிரகாசியா நின்ற சூரியனைப்போல.

மூவராகிய முதல்வரு மமரரு மொய்த்த சித்தரும் வாழுஞ்
சீவன் முத்தியாம் பதமடைந் தருந்தவன் செறியு மானந்தத்தி
னுேவ லின்றிய நிறைவினு லானந்த முதிர்ச்சியாம் பதமுற்று
னுவ தானபே ரானந்த மதுவிலவ் வறிவினுற் றிகழ்வுற்றுன். (61)

அருந்தவன் முதல்வராகிய மூவரும் அமரரும் மொய்த்த = அரிய தவத்தினையுடைய உத்தாலக முனிவன் முதன்மைவாய்ந்த மும்மூர்த்திகளும் தேவர்களும்

சித்தரும் வாழும் சீவன் முத்தி யாம் பதமடைந்து ஓவலின்றிய செறியும் ஆனந்தத்தின் நிறைவினுல் ஆனந்த முதிர்ச்சியாம் பத முற்ருன் ஆவதான பேராணந்த மதுஇல் அவ்வறிவினுல் திகழ்வுற்ருன் = நெருங்கிய சித்த சாத்தியர்களும் எழுந்தருளியிருக்கும ஜீவன்முத்தியென்று சொல்லப்பட்ட பதத்தினை அடைந்து இடைவிடாது பொருந்தும் ஆனந்த பூர்த்தியால் நிரதிசயானந்த பதத்தை அடைந்தனன், நிரதிசயானந்தத்தை அடைந்த அதனுல் ஒரு நிமித்தங்களாலுண்டாவதான விஷயானந்தமும், விஷயானந்தரகித = அனந்தபதமுமில்லாத அத்தகைய சொருப சற்பாவ வடிவமாகத் திதிபெற்று விளங்கினுன்.

ஒருக ணஞ்செறி வருடநூ றென்னினு முயர்ந்தவப் பதமுற்ருர்
வருப வந்தரு மேதுவாய்க் காண்பன் மருவுமிவ் விழிமேவார்
பெருமை யானவிப் பதத்திலுத் தாலகன் பிறைகளோ ராருலே
யருகு ருவகை சித்திபூ மியைக்கடிந் தமைந்திருந் துணர்வுற்ருன். (62)

செறி ஒருகணம் வருடம் நூறு என்னினும் உயர்ந்த அப்பதமுற்ரோர் வருபவந்தரும் ஏதுவாய்க் காண்பன மருவும் இவ்விழி மேவார் பெருமயான இப்பதத்தில் உத்தாலகன் ஓர் ஆறுபிறைகளாலே சித்திபூமியை அருகுருவகை கடிந்து அமைந்திருந்து உணர்வுற்ருன் = சூரியனது கதியாலடைவுறும் ஒரு கண மென்னினும் வருடம் நூறு என்னினும் உயர்ந்த அப்பதமுற்ரோர் வருபவந்தரும் ஏதுவாய்க் காண்பன=ஓயாமல் வந்துகொண்டேயிருக்கும் ஜனன மரணமாய திருசியவிடயங்களில் பொருந்தி இரமிக்கும் இத்திருஷ்டியை அடையமாட்டார்= சுவர்க்க ஐஸ்வரியத்தை அநுபவித்த புருடன் பூலோக சுகத்தை விரும்பாததுபோல, மகிமை வாய்ந்த இந்தப் பதத்தினில் உத்தாலகனென்னும் முனீந்திரன் ஆறுமாதம்வரை சித்தி பூமிகளின் நினைவை சமீபியாதபடி வெகுதூரத்து விட்டு நிருவிகற்பமாக இளைப்பாறியிருந்து அறிவுற்றனன்.

விழித்து நோக்கினன் சித்தரை யவர்களு மிக்குயரி வன்றன்னைப்
பழிச்சி யன்பொடு பகவநீ காண்டி யெம்பணிதல் பொன்னுலகத்தி
விழிச்சு மிவ்விமா னத்துவந் தேறுதி யிந்திரபதத் தின்பங்
கழித்த பூமிகளனைத் தினுமில்ல தோர்கற்ப மப்பயன் றுய்ப்பாய். (63)

விழித்து சித்தரை நோக்கினன் அவர்களும் மிக்குயர் இவன் றன்னை அன்பொடு பகவ பழிச்சி எம்பணிதல் நீகாண்டி பொன்னுலகத்தில் இழிச்சும் இவ்விமானத்து ஏறுதி இந்திரபதத்து கண்திறந்து சித்தர் சாத்தியர் தேவாதிகளைப் பார்த்தனன், அச்சித்தர் முதலியவர்களும் தவத்தினுலே மேன்மையடைந்திருக்கும் இம் முனீந்திரனை மிக்க பிரியத்தோடும் துதித்து எங்களது நமஸ்காராதிகளை ஹே பகவானே நீர் நோக்குதி, சொர்க்கலோகத்தில் இறக்கிவிடும் இந்த விமா

இன்பங் கழித்த பூமிகள் அனைத்தினும் இல்லது ஓர் கற்பம் அப்பயன் துய்ப்பாய் = னத்திண் வந்து ஆரோகணஞ் செய்தி, இந்திர பதத்தின் ஆனந்தம் நீக்கிய சகல லோகங்களிலுமில்லை இவ்வுலகில் தேவாங்கனைகள் உன்னை உபசரிப்பார்கள் ஒப்பற்ற பிரமப்பிரளயபரியந்தம் இருந்து இனிது அநுபவிப்பாய்.

பகவ செய்தன தவமெலா மிந்திர பதமுதற் பொருட்டேயென்
றகம லர்ந்துரை பன்னிய சித்தரை யதிதியரென நோக்கி
முகம லர்ந்துபூ சித்தனன் மயங்கலன் முந்துறு பெருஞ்செல்வ
மிகவி ரும்பலன் வெறுக்கலன் றிண்ணியோன் விபுதரேகுதி ரென்றான். (64)

பகவ செய்தன தவமெலாம் இந்திரபத முறற்பொருட்டே என்று அகமலர்ந்து உரைபன்னிய சித்தரை அதிதியரென நோக்கி முகமலர்ந்து பூசித்தனன் மயங்கலன் முந்துறு பெருஞ் செல்வம் மிக விரும்பலன் வெறுக்கலன் திண்ணியோன் விபுதர் ஏகுதீர் என்றான் = பகம் (ஸ்ரீ ஞானம்-வைராக்கியம், ஐஸ்வரியம், வீரியம். கீர்த்தி) இவையுடையவன் ஹே பகவந், உலகத்திற் செய்யப்பெற்ற தவங்கள் யாவுமே சுவர்க்காதி பல போகப்பொருட்டேயாம் என்பதாக இருதய தாமரை மலர்ந்து இன்சொல் சொல்லிய சித்தர் முதலியவரை உத்தாலகன் விருந்தினரெனப் பார்த்து பிரசன்ன கம்பீர முகத்துடனே முறைப்படி பூஜித்தான் சம்பிரமமற்றவனாயினன் எதிருற்ற பெரும் ஐஸ்வரியத்தைச் சிரேஷ்டமென்று = பொய்ம்மையாதி நிச்சயத்தரனே உயர்வு என்று குதுகூலத்தையடையாதவனாய் இருந்தனன் அதிதீரமதியினனாயே அம் முனிவன் தேவதைகளே நீங்கள் செல்லுங்கள் என்றான்.

மொய்த்த கூட்டத்தை விடுத்தனன் றன்செயன் முயன்றிருந் தனன்பேகா
பெத்த நீங்கிய வவனையச் சித்தரும் பின்பு சின்னாட்பேணி
சித்தம் விட்டனர் தாங்களே யகன்றனர் சீவன்முத் தனுங்கானின்
மெய்த்த மாதவ ரிடங்களிற் சுகத்திலே வேண்டள வுலாவுற்றான். (65)

மொய்த்த கூட்டத்தை விடுத்தனன் தன் செயல் முயன்றிருந்தனன் போக பெத்தம் நீங்கிய அவனை அச் சித்தரும் பின்பு சின்னாள் பேணி சித்தம் விட்டனர் தாங்களே அகன்றனர் சீவன் முத்தனுங் கானில் மெய்த்த = சூழ்ந்த இந்திராதி கூட்டத்திற்கு விடை தந்தனன் சமாதியாகிய தனது வியாபாரத்தைச் செய்துகொண்டிருந்தனன். போகங்களில் வைராக்கியமடைந்துள்ள அம் முனிவனை, அச் சித்தராதியர் பின்னரும் சிலநாள் ளுபாசித்து வேண்டியிருந்து தாம் எண்ணங்களெல்லாம் விட்டுச் சுயமே வந்த வழியே சென்றனர் சீவன்

மாதவரிடங்களிற் சுகத்திலே வேண்டளவு உலாவுற்றுன் = முத்தனுன அவ்வுத்தாலகனும் வனத்தில் உண்மையை உணர்ந்த முனிவர்களது ஆனந்த ஆச்சிரமங்களிலும் விருப்பமளவு ஆனந்தமாகச் சஞ்சாரஞ் செய்தனன்.

ஒருதி னத்தெல்லே யொருமதி யெல்லே மற்ருேர் வருடத்தெல்லே
பெருகு மாண்டெல்லே யெல்லேயோ ரோர்காற் பேதமிற் றியானத்தின்
மருவி யொன்றிடும் விழிக்குமந் நான்முதல் வருந்தொழில் களிற்சேர்ந்து
நிருவி கற்பமே யாயின னெருமையாய் நின்றனன் சித்தோடும். (66)

எல்லே ஓரேர்கால் ஒருதினத் தெல்லே ஒருமதி எல்லே மற்று ஓர் வருடத்தெல்லே பெருகும் ஆண்டெல்லே பேதமில் தியானத்தில் மருவியொன்றிடும் விழிக்கும் அந்நாள் முதலவருந் தொழில் களிற் சேர்ந்து நிருவிகற்பமேயாயினன் ஒருமையாய் சித்தோடும் நின்றனன் = அளவு ஓரோர்காலம் ஒருதினம் அளவும், ஒரு மாசம் அளவும், ஓர் அயனம் அளவும், ஓர் வருடம் அளவும், அனேக வருடம் அளவும், பேதவர்ஜ்ஜித நிருவிகற்ப சமாதியடைந்திடும் உத்தானமாகுமெல்லே பிராரத்தவசத்தால் வாரா நின்ற கிரிகைகளிற் சார்ந்தபோதினும் நிருவிகற்பசமாதியையே அடைந்தனன், சித்தத்துவ ஏகத்துவத்தை அடைந்திருந்தான்.

பரந்த சித்தின தொருமையின் செறிவினைப் பழகலாற் பெருஞ்சித்து
நிரந்த ரித்தெங்குஞ் சமமதா யினன்புவி நிறைவுறும் வெயிலென்னத்
திரந்த ருஞ்சித்தி னெருமையை நெடும்பகற் செறிபரிசயஞ் செய்ய
வரந்தை தீர்ந்தசற் பாவசா மானிய மடைந்தன னதனுலே. (67)

சித்தினது ஒருமையின் செறிவினே நிரந்தரித்து பரந்த பழகலாற் பெருஞ்சித்து எங்கும் சமமதாயினன் புவிநிறைவுறும் வெயில் என்னத்திரந்தருஞ் சித்தின் ஒருமையை நெடும்பகற்செறி பரிசயஞ் செய்ய அதனுலே அரந்தை தீர்ந்த சற்பாவ சாமானியம் அடைந்தனன் = சித்தத்துவ ஏகத்வத்தின் திடத்துவத்தை நிரந்தரம் வியாபக=மிக்க அப்பியாசத்தானே மகா சித்தத்வத்தை அடைந்து யாண்டும் அம் முனிவன் சமதேஜஸையுடையவனுயினன், அவனியின் கண்ணே பூரணமாகும் = நிரம்பும் சூரியகிரணமென்ன நித்தியமாகிய சிற்சாமானியசிராப்பியாசத்தானே சித்தத்துவ விவகாரத்துக்கும் உபரமம் உளதாகவே அரும் பூமியாமதனுல் சகல துயரமுமில்லாத சத்தா சாமானியமடைந்தனன், ஏழாம் பூமியாம் துரியமடைந்தனன்.

தெரிவ தாமிவற் றுதயமத் தமமுருன் சித்திரரவி போலப்
பெரிய தாய்ச்சம வின்பமாய் பதவியின் பேற்றினு லுபசாந்தி
புரியு நெஞ்சினன் பிறவியுமையமும் போய்ச்சரற் ககனம் போல்
விரியு நின்மல சாந்தமெய் யொளிநிறை வேதன வடிவானுன். (68)

தெரிவதாம் இவற்று உதய அத் தமுமுருன் சித்திரரவிபோலப் பெரியதாய்ச் சமவின்பமாம் பதவி யின்பேற்றினுல் உபசாந்திபுரியும் நெஞ்சினன் பிறவியும் ஐயமும் போய்ச் சரற்ககனம்போல் விரியும் நின்மலசாந்த மெய்யொளி நிறேவேதன் வடிவானுன் = திருசியபதார்த்தங்களின் லாப நஷ்டமில்லாத் வனுய்ச் சித்திரத்தில் எழுதப்பட்ட சூரியனைப் போல அபரிச்சின்னமும் அதனுனே நிரங்குச பிருகத்தன்மையால் நிரதிசயானந்த சமபரபத லாப அடைவினுல் உபசாந்திபற்றிய மனத் தினன், ஜனனபாசம் அறுபட்டவனுய் பிரமாண கதபிரமேயகத சம்சயங்கள் ஒழிந்து சரற்கால ஆகாசம்போல விரிந்த அமல உபசாந்த சத்திய பிரகாச பூரணமே தனது வடிவமாக இருந்திலங் கினன்.

என்ற வசிட்டன் றனைவள்ள லெதுசத்தாசா மானியமென
றன்று வினவ வவனுரைப்பா னகல்சிற்சாமா னியவடிவா
யொன்று வொன்ரு யில்லாமை யுறுபாவனையி னுறைப்பாலே
தன்ற னுள்ளங் கரைந்தேகிற் சத்தாசாமானிய மதுவே. (69)

என்ற வசிட்டன்றனை சத்தாசாமா னியம் எது என்று அன்று வினவ அவன் உறைப்பான் அகல் சிற் சாமானிய வடிவாயொன்று வொன்ருயில்லாமை உறுபாவனை யின் உறைப்பாலே தன்றன் உள் ளங்கரைந்தேகில் அதுவே சத்தா சாமானியம் = என்று அருளிச்செய்த ஸ்ரீ வசிஷ்டபகவானைத் தாதாவாகிய ஸ்ரீ இராமபிரான் சத்தாசாமா னியம் யாது என்பதாக அப்போது கேட்ப ஸ்ரீ வசிஷ்டபகவான் வியாபகமாகிய சிற்சாமா னிய வடிவமாகி திருசியப் பிரபஞ்சத்தின் அபா வத்தின் = ஆருவது பூமியாகிய பதார்த்தா பாவ னையின் திட அப்பியாசமிகுதியால் தன்னுடைய மனமானது நன்கு க்ஷீணித்துப்போகுமானுல் அந்நிலையே சேத்திய சமஸ்காரங்களின் ஆத்தி யந்திக அழிவுபாடெய்தவேசித்தம், சித்து இரண் டன்மாட்டும் அநுகதமான சத்தே சத்தாசாமா னியமென்பதாம்.

தேற்ற மாங்காண் பனநீங்கிச் சித்தினிடையே சித்திறக்கிற்
சாற்று முயற்கொம் பெனநொய்தாஞ் சத்தாசாமா னியமதுவே
தோற்றும் புறனுள் ளாய்ப்பலவாய்த் துவக்கமாகு மிவையனைத்து
மாற்றி யகன்று மனநிற்கி லதுசத்தாசாமா னியமே. (70)

காண்பன நீங்கி சித்துசாற்று முயற்கொம்பென நொய்தாம் தேற்றமாம் சித்தினிடையே இறக்கில் அதுவே சத்தா சாமா திருசியங்கள் ஒழிந்து பிரதிபிம்பித சித்துப் பிம்ப சித்தின்கண்ணே சிலயமாய் ஒடுங்கில் அந்

னியம் தோற்றுங் புறன் ஊளாய்ப் பலவாய்த் துவக்க மாகும் இவையனைத்தும் மாற்றி அகன்று மனம் நிற்கில் அது சத்தாசாமானியம் = நிலையே சத்தாசாமானியம், பிரதீதியாம் பாகிய மாயும் ஆந்தரமாகியும் நானுவாகியும் உதய மாகும் இவை யாவுமே மீண்டும் உதயமாகாமல் ஒழித்துச் சித்தமானது ஆன்மாவின்கண் லயிக் கும்போது அது சத்தாசாமானியம்.

உன்னு வெதிர்காண் பனவொன்று மொழியா தியாமையுறுப் பென்னத்
தன்னுற் றன்பா லிறக்குமெனிற் சத்தாசா மானிய மதுவே
முன்னு முடல்சேர் முத்தருட லிலதா முத்த ரிருவர்க்கு
மென்னு ளினுஞ்சேர் பெருங்கண் ணீதிதன் பேர்துரியா தீதபதம். (71)

எதிர்காண்பன வொன்றும் ஒழி யாது உன்னு, ஆமை உறுப் பென்னத் தன்னுல் தன்பால் இறக்குமெனில் அதுவே சத் தாசாமானியம் முன்னும் உடல் சேர் முத்தர் உடல்இலதா முத்தர் இருவருக்கும் ஈது எந்நாளினுஞ் சேர் பெருங்கண் இதன் பேர் துரியா தீதபதம் = திருசியங்கள் யாவையுமே பாவியாதவனுய்க் கூர்மம் தனது அவயவங்களை அடக்கிக் கொள் வதேபோலச் சுயமேவ தன் னுன்மாவில் சகஜ திருஷ்டியானே அடங்கிடுமோ (நசிக்குமோ) அதுவே சத்தாசாமானியம், பிரத்தியக்ஷ சதேக முத்தர் அதேகமுத்தர் என்னும் இரண்டு பெயர் கட்கும் இத்திருஷ்டியே எப்போதுஞ் சம்பவிக்கும் சத்தாசாமானியம் இதன் நாமம் துரியா தீதபத மெனவுஞ் சொல்வர்.

அறிந்து சமாதி யடைந்தோர்க்கு மனுபூ தியினின் றெழுந்தோர்க்குச்
செறிந்து தோன்று மூடர்க்குத் தெரியாதா மிப்பெருங் கண்ணு
முறிந்து பிறவி யறுஞ்சீவன் முத்தரான சித்த ரெலாம்
பிறிந்தி டார்விண் பயில்காற்றும் பெரிதா மண்ணி லிரதமும்போல. (72)

அறிந்து சமாதியடைந்தோர்க் கும் அநுபூதியில் நின்றெழுந் தோர்க்கும் இப் பெருங்கண்ணு செறிந்து தோன்றும் மூடர்க்குத் தெரியாம் முறிந்து பிறவி அறுஞ் சீவன் முத்தரான சித்தரெலாம் விண்பயில் காற்றும் பெரிதா மண்ணின் இரதம்போல பிறந்திடார் = சச்சிதானந்த சொரூபம்தான் என்று உணர்ந்து சமாதி அடைந்தோர்க்கும் சுவாநுபூதி=சமாதி யினின்றும் வெளிப்பட்ட உத்திதருக்கும் இம் மகத்துவ திருஷ்டியானது அபரோக்ஷமாய் விளங் கும் மூடர்களுக்கு விளங்காவாம் அறியாமை ஒழிந்து ஜன்மம் அற்ற ஜீவன்முத்தராகிய கைவல்யம் அடைந்த சித்தர்கள் யாவர்களும் வியோமவீதியில் அநிலம்போலவும் பரலோக இகலோக போகாசை ரசம்போலவும் நீங்காது இத் திருஷ்டியின்கண்ணே இருப்பார்கள்.

மூவர் முதல்வா னவரென்னை முதனாரதனை முதன் முனிவர்
மேவ லுற்ற திப்பெருங்கண் வேற்றுப் பயமெல்லா நசிப்பித்
தோவ லில்லா விப்பதத்தி லுத்தாலக னுற்றிருந் தனனு
லாவ றீர்வ தெவ்வளவவ் வளவுஞ் சகமா மகத்திடையே. (73)

முதல் மூவர் வானவர் என்னை முதல் நாரதனை முதல்முனிவர் இப்பெருங்கண் மேவலுற்றது வேற்றுப் பயமெல்லாம் நசிப்பித்து ஓவலில்லா இப்பதத்தில் சகமாம் அகத்திடை ஆவல்தீர்வது எவ் வளவு அவ்வளவும் உத்தாலகன் உற்றிருந்தனன் = முதன்மை வாய்ந்த பிரஹ்மா, விஷ்ணு, இந்திரன் முதலிய தேவர்கள், நான்முதலானவர்கள் நாரதாதிமுனீந்திரர்கள் இம் மகாதிருஷ்டியின் கண்ணிருந்து வாழ்கின்றார்கள். பேத அச்சங்கள் யாவும் அகன்று ஒழிதலில்லாத ஆனந்தவடிவ இம்மகாபதத்தை உலகமாகிய வீட்டின்கண்ணே அவாவு நீங்குவது எவ்வளது அவ்வளவு காலம், பிராரப்தக்ஷயபரியந்தம் உத்தாலக முனிவன் வாழ்ந்திருந்தான். (பொருந்தியிருந்தான்.)

கால மனேகஞ் சென்றதற்பின் கந்தமாதனக் கிரியில்
கோல முழையி லம்முனிவன் குரம்பைவிட்டுக் குரம்பையிலாச்
சீல முத்த னுயிருப்பேன் றீர்வென்றென் றேசிந்தித்துச்
சால நல்ல தளிர்த்தவிசிற் றளைத்தபதுமா சனத்திருந்தான். (74)

அனேககாலஞ் சென்றதன்பின் கந்தமாதனக்கிரியில் கோலமுழையில் அம்முனிவன் குரம்பைவிட்டுக் குரம்பையில்லாச் சீலமுத்தனுயிருப்பேன் தீர்வென்று என்றே சிந்தித்துச் சாலநல்ல தளிர்ந்த விசில்தளைத்த பதுமாதனத்திருந்தான் = (காலாந்தரத்தில் விதேகமுத்தி அடைய ஆலோசித்து முயலுதல்) வெகுகாலங் கழிந்தன பின்னர்க் கந்தமாதனபர்வதத்தில் அழகிய குகையில் அவ்வுத்தாலகமுனிவனது மதியானது தேகத்தை விடுத்துத் தேகமில்லா விதேகமுத்தனாய் இருப்பேன் நிச்சயம் என்பதாகச் சிந்தித்து மெல்லிய நல்ல பர்ண ஆசனத்தில் பெத்த பத்மாசனத்திருந்தான்.

அரைநோக் காக நோக்கியிருந் தபானவாயி லடைத்ததனாற்
புரையொன் பதுவா யடைத்துளத்தாற் பொறியும்புலனு மொன்றுக்கி
திரையில் கடல்போற் றன்சித்தன் செறிவைப் பாவித்தாருயிரின்
விரைவை நிறுத்தி வணங்காமன் மேனோக்கியகந் தரத்தினனாய். (75)

புரை அரை நோக்காக நோக்கியிருந்து அபானவாயிலடைத்து அதனால் ஒன்பது வாய் அடைத்து உளத்தால் பொறியும் புலனும் ஒன்றுக்கி திரை இல் கடல்போல் கிண்கிணிபோல பாதி விழிப்பாகப் பார்த்திருந்து குதசம்ரோதனஞ் செய்து ஆற்றுமதனால் ஒன்பது (நவதுவாரத்தை) அடைத்து மனத்தினால் விடயங்களின்றும் தடுத்துத் தத்தம் கொள்கைகளில் நிற்கும்படி இந்திரியங்களை பிரத்யாகாரஞ்

தன்சித்தின் செறிவைப்பாவித்து ஆர் உயிரின் விரைவை நிறுத்தி வணங்காமல் மேல்நோக்கிய கந்தரத்தினனாய் = செய்து நிஸ்தரங்கசமுத்திரமென்ன தனது சிற் கனசொரூபத்தைப் பாவித்து பிராணவாயுவினது வேகத்தை அடக்கி உடல் வளையாமல் நிமிர்ந்த கண்டத்தினனாய்.

நாவி னடிச்சென் றுறச்செறியுண் ணாவினடியை யுடையோனா
யோவின் முகக்காந் தியனாகியுள்ளிற் புறனின் மேற்கீழில்
வாவும் விடயத்தி னிற்பாழின் மனமுங்கண்ணு முருனாகி
வீவ தான வெயிற்றி னிரையெயிற் றினிரையைமேவானாய். (76)

நாவின் அடிசெறி சென்றுற உள் நாவினடியையுடையோனாய் ஓவு இல் முகக்காந்தியனாகி உள்ளில் புறனில் மேல் கீழில் வாவும் விடயத்தினில் பாழில் மனமுங் கண்ணும் உருனாகி வீவதான எயிற்றின் நிரை எயிற்றின் நிரையை மேவானாய் = தாலுமூலத்தில் பொருந்திச் சேரும்படி உள்நாவின் மூலத்தையுடையோனாய்க் கெடாத வதன காந்தியையுடையவனாய் ஆந்தரத்திலும், பாகியத்திலும், ஊர்த்துவபாகத்திலும், அதோபாகத்திலும் தாவாநின்ற விஷயங்களிலும் சூன்யத்திலும் மனோதிருஷ்டியைச் செலுத்தாதவனாகி வீழ்வதான தந்தம் (பல்வரிசைகள்) பல்வரிசைகளைப் பொருந்தாதவனாகி.

அங்கத் துயிரின் மிகுதிதகைந் ததனானொய் தாயவிர் முகத்தே
னங்கத் துருவுள் ளுணர்வுருவே யாகியெழலாற் புளகிப்போ
னங்கத் துருவுள் ளுணர்வுருவே யாகிப்பழகி யறிவொன்று
யங்கப் பொழுதப் பழக்கத்தா லகத்துத்தமமாஞ் சுகமடைந்தான். (77)

அங்கத்துயிரின் மிகுதிதகைந்து அதனால் நொய்தாய் அவிர்முகத்தோன் அங்கத்துரு உள்ளுணர்வுருவேயாகி யெழலால் புளகிப் போன அங்கத்துரு உள்ளுணர் உருவேயாகிப் பழகி அறிவு ஒன்றாய் அங்கு அப்பொழுது அப்பழக்கத்தால் அகத்து உத்தமமாஞ் சுகம் அடைந்தான் = இருதயத்துச் சலிக்கும் பிராணனது பிரவாகத்தைத் தடைசெய்து அதனால் சொச்சமாய் விளங்கும் வதனமுடையோனாய்ச் சொரூப சைதன்ய சாக்ஷாத்காரமாய் அச்சொரூப சாக்ஷாத்காரத்தால் ஜனித்த சந்தோஷத்தால் ரோமாஞ்சிதகாத்திரனானான். சிற்சாமானிய எங்கும் நிறைந்த சித்துருபமாய் ஆண்டு அப்போது அவ்வப்பியாசத்தால், சிற்சாமானிய அப்பியாசத்தால் அந்தரத்தே மேலான = நிரதிசய சுகம் அடைந்தான்.

ஆனந் தத்தின் பெருக்கைநுகர்ந்ததனாற் சிற்சாமானியம் போய்த்
தானந் தமற றெல்லாம்பரிக்குஞ் சத்தாசாமா னியமடைந்தான்
றீனந் தவிர்சம னுயிருந்தான் சிந்தாகுலமெல் லாந்தீர்ந்தான்
மோனந் தருமானந்த மிலாமுகா னந்தத்தான் முகமலர்ந்தான். (78)

ஆனந்தத்தின் பெருக்கை நுகர்ந்து அதனுல் சிற்சாமானியம் பேய்த்தான் அந்தம் அற்று எல் லாம் பரிக்குஞ் சத்தாசாமானிய மடைந்தான் தீனந்தவிர் சமனு யிருந்தான் சிந்தாகுலமெல்லாந் தீர்ந்தான் மானந்தரும் ஆனந் தம் இலா மகானந்தத்தால் முகமலர்ந்தான் = சுகப்பிரவாகத்தை அநுபவித்து அதனுல் சிற் சாமானியத்தைச் சிந்தித்த சித்தவிருத்தி தோற்ற மற்றுத்தான் அபரிச்சின்னமாய்ச் சகலத்தையுந் தாங்கும் சத்தா சாமானியமடைந்தான். தீனத்தை (இழிவை) தோஷத்தை சகல தோஷங் களும் ஒழிந்து சமதையை அடைந்திருந்தனன், மனேவியாகுலம் நீங்கி பரம விசிராந்தியை அடைந்தனன். மா, அம், பிரமாணம், பிரமா ணத்தால் கோசரிப்பதாய ஆனந்தமில்லா பேரா னந்தத்தாலே பிரசன்னவதனனுயினன்.

அனக பதமுற் றுடல்புளகமாறி நெடுநா ளிற்கரைந்து
மனமும் பிறப்பின் மயக்கமும்போய் மகாசத்துவ மாயோவியம்போற்
கனமில் ககனத் துவாமதிபோற் கதியிறசின்னு ளினிற்சுவறி
யினன தொளியின் மரப்பசைக ளிறப்புப்போலா யிறப்புற்ருன். (79)

அனகபதமுற்று உடல் புளகமாறி நெடுநாளில் மனமும் கரைந்து பிறப்பின் மயக்கமும்போய் மகா சத்துவமாய் ஓவியம்போல் கன மில் ககனத்து உவாமதிபோல் சின்னுளினில் கதியில் சுவறி இன னது ஒளியில் மரப்பசைகள் இறப் புப்போலாய் இறப்புற்ருன் = பரமபாவனத்தை அடைந்து சரீரம் ஆனந்த புளகமானது. நன்கு சாந்தமாகிச் சிரகாலத்தில் மனப்பிரமை நீங்கி ஜனனத்தின் மோகமும் ஒழிந்து மகாசத்துவமாய்ச் சித்திரம்போலச் சரற் போது மேகம் யில்லா ஆகாயத்தில் தெளிந்துள்ள பூரணச்சந்திரன் ஒப்பச் சிலதினங்களில்தானே விமலவடிவமாகிய தற்பதத்தில் உபசமமுற்று சூரிய உஷ்ணப்பிரகாசத்தால் விருக்ஷத்தின் ரசங் கள் காய்வதுபோல தூலதேகம் பூமியில் விழ மனம் பூரணப் பிரஹ்மத்தில் ஒடுங்கியது=உத் தாலகனது தூலசரிரம் சூரிய கிரணங்களினுலே தபிக்கப்பெற்றதாய்க் காய்ந்தவழி வீசுங் காற் றின் ஆற்றலாலேற்ற விசித்திர ஓசைகளானே இரம்மியமாய்ச் செடிகளினது நரம்புத்தந்தி களால் பர்வதத்தின்வீணேயேபோல விலாசவேது வாயது அந்தக்கங்காளத்தைப்பிராமிதேவிகளும் தலைவியாகிய சாமுண்டி தேவியும் சிரசில் பூஷண மாகத் தரித்து அலங்கரித்துக்கொண்டார்கள்.

5-6 உத்தாலகன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் — 1091.

# 5-7 சுரகு கதை

## அவதாரிகை

முன்பு யோகாப்பியாசத் தாட்டியத்தால் சித்த விசிராந்தியாம் அதுவே சமாதி உத்தம அவஸ்தையென்று கூறப்பட்டது. இப்போது மாயாதிமிரத்தைக் கெடுத்துத் தன்னையுணர்ந்தவன் வாசனுக்ஷயம் வந்தவனேயாதலின் விவகார பரனுயினும் சமாதிஸ்தனே யாவன் என உணர்த்தும் பொருட்டுச் சுரகு கதையால் சொல்லப் படுகின்றது.

இந்தவொழுங் காலுணர்வை யுணர்வினு லுணர்ந்துலகி லியங்கா நின்றே
யந்தமறும் பெரும்பதத்தே யாறுதியாற் காண்கின்ற வனைத்து மாளச்
சந்ததஞ்சா தித்ததனைப் பெறுமளவு நூல்குரவன் றனிநெஞ் சாலே
பந்தமறு தத்துவத்தை விசாரித்தே பெறவேண்டும் பதுமக் கண்ணுய். (1)

இந்த வொழுங்கால் உணர்வை உணர்வினுல் உணர்ந்து உலகில் இயங்கா நின்றே அந்த மறும் பெரும் பதத்தே ஆறுதி கான் கின்ற வனைத்தும்மாளச் சந்ததஞ் சாதித்து அதனைப் பெறுமளவும் நூல் குரவன் தனி நெஞ்சால் பந்தமறு தத்துவத்தை விசா ரித்தே பெறவேண்டுக் பதுமக் கண்ணுய் = முற்கூறிய உத்தாலக சமாசாரப் பிரவாகத்தால் சுவாத்மாவை விசிஷ்டாத்மாவால் உணர்ந்து பிரபஞ்சத்தில் விவகரித்துக்கொண்டே தேசகால வஸ்து பரிச்சேதரகித அகண்ட பூரணவஸ்துவில் இளைப்பாறுதலடைதி பார்க்கப்படுகின்ற சர்வ திருசியமும் க்ஷயமாக இடைவிடாமல் அப்பியா சித்து அப் பதத்தே அடையுங்காறும் தீக்ஷண மாய்ச் சாஸ்திரார்த்த ஆச்சார்ய சகித விவேக மனத்தாலே பந்தவர்ஜ்ஜித தத்துசொரூபமாகிய தன்னை ஆராய்ந்தே அடையவேண்டும், தாமரை மலர் போன்ற நேத்திரத்தையுடைய ராமா.

மயலின்மை சாதனை நூற்பொருட் போதங் குருயமமாம் வழிகளாலே
யுயர்பதவி பெறலாகு மன்றியுணர் வொன்றினு லுறுதற் காமா
லியலுபதே சம்பெற்றுக் கூரியதாய்க் கலங்கமிலா திருக்கு மாகில்
வியனுறுசா தனமுழுது மிலதேனும் புந்தியினுல் வீடு கூடும். (2)

மயலின்மை சாதனை நூற் பொருள் போதம் குருயமமாம் வழிகளாலே உயர்பதவி பெற லாகும் அன்றி உணர்வு ஒன்றி னுல் உறுதற்கு ஆம் இயல் உப தேசம்பெற்று கூரியதாய்க் = வைராக்கியம், பிரஹ்மாப்பியாசம், சாஸ்திரார்த் தம், பிரஞ்ஞை, ஞானசிரியர், மனோநிரோதக் கிரமங்களானே சிரேஷ்டமான பிரஹ்மபதம் அடையப்பெறும் இஃதல்லாமல் பிரஞ்ஞை ஒன் ருலேயே மதியானது மாசற்று விளங்குமாயின் மகாவாக்கிய அநுக்கிரகத்தைப் பெற்று வேண்

| | |
|---|---|
| களங்கமிலாதிருக்குமாகில் விய னுறு சாதனம் முழுதும் இல தேனும் புந்தியினுல் வீடுகூடும் = | டற்பாலனவாய சாதன முழுதுமிலதேனும் புகன்ற பிரஞ்ஞையால் முத்திகிட்டும். |

என்றுனே முகநோக்கி யிகத்தொழிலோ டிருந்தேயுஞ் சமாதி யெய்தி
யொன்றுன வுணர்வுற்றுன் போலிடர்தீர்ந் தாளெருவ னெருவன் செய்கை
யின்றுனுய்த் தனியிடத்திற் சமாதியடைந் தானிவரின் மிக்கோ னேவ
நன்றுக வருளுகென விராகவன்கேட் டலும்வசிட்ட னவில்வ தானுன். (3)

| | |
|---|---|
| என்றுனே முகநோக்கி சமாதி எய்தி ஒன்றுன உணர்வுற்றுன்போல் இகத் தொழிலோடு இருந்தேயும் இடர் தீர்ந்தான் ஒருவன் ஒருவன் செய்கையின் றுனுய்த் தனியிடத்தில் சமாதி யடைந்தான் இவரில் மிக்கோன் ஏவன் நன்றுக அருளுக என இராகவன் கேட்டலும் வசிட்டன் நவில்வதானுன் = | என இவ்வண்ணம் அருளிய ஸ்ரீ வசிஷ்ட பகவானது வதனத்தைப் பார்த்துச் சமாதியை அடைந்து ஏகமாகிய ஞானத்தை அடைந்தான் போல, லௌகீக விவகாரத்தோடு கூடியிருந்தும் சர்வ அனர்த்தங்களும் நீங்கினுன் ஒருவன், மற்றெருவன் தொழில் இல்லாதவனுய் ஏகாந்தத்திலிருந்து சமாதி நியதனுக விருந்தான், இவ் விருவரில் எவன் சிறந்து விளங்குபவன் சம்சயம் ஒழியும்படி நன்றுகத் திருவருள் செய்யவேண்டுமென்று ஸ்ரீ இராகவர் கேட்டலும் ஸ்ரீ வசிஷ்ட பகவான் அருளுவதாயினர். |

ஆற்றுமதத் துவமன்றுன் முக்குணத்தால் வருஞ்சகமென் றறிந்தோர்க் குள்ளே
தோற்றுகின்ற சீதளமே ததுதனேயே சமாதியெனச் சொல்லு மன்றே
யூற்றமறக் காண்பவற்றே டுறவுநமக் கிலதென்றே யுரத்துத் தண்ணென்
றேற்றசமா தியிலிருப்ப னெருவ னெருவன் றெழிலோ டிருப்பனன்றே. (4)

| | |
|---|---|
| முக்குணத்தால் வருஞ் சகம் ஆத்தும தத்துவம் அன்று என்று அறிந்தோர்க்கு உள்ளே தோற்றுகின்ற சீதளம் ஏது அது தனேயே சமாதி எனச் சொல்லும் ஊற்ற மறக் காண்பவற்றேடு உறவு நமக்கிலதென்றே உரத்துத் தண்ணென்று ஏற்ற சமாதியி லிருப்பன்ஒருவன் ஒருவன் தொழிலோடு இருப்பன் = | சத்துவாதிகுண சமுதாய ரூபமான இப் பிரபஞ்சம் தனது ஆன்ம சொரூபமன்று என உணர்ந்தோர்க்கு ஆந்தரத்தில் உண்டாகின்ற உபசாந்தி யாது அவ்வுபசாந்தியையே சமாதியெனக் கூறுவர். நிலேயின்றிய திருசியங்களோடு ஆசை நமக்கு இல்லே என்பதான நிச்சயமுடையவனுய் அதி திடமாகவும் சீதளமாகவும் இருந்து கைவந்த சமாதியில் இருப்பவன் ஒருவன். மற்றெருவன் விவகார பரனுயிருப்பவன். |

இவ்விருவ ரிதயமுந்தண் ணென்றிருக்கில் வேற்றுமையோ ரிறையு மில்லை
யவ்விதய சீதளமே யந்தத் தவப்பயனுமவ் வநுபூ திக்கே
கவ்வியிருப் போனுள்ளங் காரியத்தா லலையுமெனிற் கவலை யாகுஞ்
செவ்வியவச் சமாதான முன்மத்த நடனம்போற் சிறப்பின் ருகும். (5)

இவ்விருவரிதயமும் தண்ணென் றிருக்கில் வேற்றுமை ஓரிறையும் இல்லை அவ்விதயசீதளமே அந்தத் தவப்பயனும் அவ்வநுபூதிக்கே கவ்வியிருப்போன் உள்ளம் காரி யத்தால் அலையுமெனின் கவலை யாகும் செவ்விய அச் சமாதானம் உன்மத்த நடனம்போல் சிறப்பு இன்ருகும் = இந்த இரண்டு ஞானிகளுடைய மனமும், முத் தாபமும் அணுகாதபடி சீதளமாயிருக்கில் பேதம் ஓர் அற்பமுங் கிடையாது. அவ்விதயசீதளமே அனேக தின்மங்களில் ஆற்றிய தவத்தின் பிர யோஜனமாம், அவ்வநுபூதியோடு கூடிய சமா தியிலிருப்பவன் மனம் காரியங்கள் விவகாரங் களில் சலிக்குமெனில் சிறந்த அச் சமாதியானது பைத்தியக்காரனது நர்த்தனம்போல விசேட முடையதாகாதாம். (துக்க ஏதுவாம்.)

வருத்தமிலா வுன்மத்த நடத்தினன்வா தனைமாய்ந்த மனத்தோ ஞகிற்
றிருத்தமுற வவன்கூத்துத் தெளிவுற்றேன் சமாதிக்குத் தீர நேராம்
பெருத்ததொழிற் சேரறிஞர் பெரியவனஞ் சேரறிஞர் பேத நாடி
லொருத்தரொருத் தரைவிஞ்சா ரிருவருமொத் தையமில்வீ டுற்ருரன்றே. (6)

வருத்தமிலா உன்மத்த நடத்தி னன் வாதனைமாய்ந்த மனத்தோ ஞகில் திருத்தமுற அவன்கூத்துத் தெளிவுற்றேன் சமாதிக்குத் தீர நேராம் பெருத்ததொழில் சேர் அறிஞர் பெரியவனஞ் சேர் அறி ஞர் பேதம் நாடில் ஒருத்தர் ஒருத் தரை விஞ்சார் இருவரும் ஒத்து ஐயம் இல் வீடுற்ருர் = கஷ்டமில்லாத பைத்தியக்கார நர்த்தனத்தை யுடையவன் வாசனுக்ஷயம் வந்த மனத்தினன் ஆவனேல் கரணநிஷ்டமாய்ச் சீர்திருந்தியுள்ள அம் மகானது நடனம் விவேகியினது நிருவிகற்ப சமாதிக்கு முற்றும் அத்தியந்தம் துல்லியமாம், பெரிய விவகாரத்திற் பொருந்திய ஞானிகள், யுத்திதர், பேராரண்யத்தில் வசிக்கும் ஞானிகள், சமாகிதர், இருவரின் பேதம் நாடில் ஒருவருக் கொருவர் மேலோராகார். யுத்திதர், சமாகிதர் இருவரும் சமமாகவே சமாகிதர் சந்தேகமில்லாத பதம் அடைந்தவரேயாவர்.

சாலவும்வா தனைபோகி லிம்மனஞ்செய் தொழில்புரிந்துந் தான்செய் யாதாஞ்
சீலமன் நெடிதகலி லருகிருந்தார் செப்புமொழி தெரியாதாப் போற்
றூலமனந் தொழில்விடினுஞ் செய்ததாம் வாதனையே துன்னு மரகிற்
கோலவுட லசைவறினுங் கனவிலே வரைநின்றுங் குழிவீழ் வார்போல். (7)

சீலமனம் நெடிதகலில் அருகிருந் தார் செப்புமொழி தெரியாதாப் போல் சாலவும் வாதனைபோகில் நல்லகுணமான மனம் சேய்மைத்தாய் இருக்கு மாகில் சமீபத்திருந்தோர் சொல்லுமொழி உண ரப்பெருததேபோல, அத்தியந்தம் வாசனுக்ஷயம்

இம்மனஞ்செய் தொழில் புரிந்துந் தான் செய்யாதாம் தூலமனம் தொழில்விடினும் வாதனேயே துன்னுமாகில் செய்ததாம் கோல வுடல் அசைவறினும் கனவிலே வரைநின்றுங் குழிவீழ்வார் போல் = உண்டாயின் இம் மனம் உசிதமான விவகாரங் களைச் செய்தும் இராகாதி விகாரம் உதயமாகா மையின் தான் செய்யாததேயாம் தூலித்த் மனம் விவகாரங்களை விட்டிருப்பினும்வாசனேயே பொருந்துமாகில் கர்த்தாவேயாம். அழகிய சரீ ரம் சலியாமலிருப்பினும் சொப்பனத்தில் பர்வதத் தினின்று படுகுழியின்கண்ணே வீழ்ந்து பயம் அடைதல் போலவாம்.

தொலேவிருெழிற் செய்யுமனந் தொழினீங்கி லதுதானே சுக சமாதி
யலேவறுகை வல்லியமும் பரமானந்த முமென்றே யறிவாய் நெஞ்சி
னுலேவுதிர மெனுமிரண்டு மத்யானந் தியானமெனு முபயத் துக்கு
நிலேயுறுகா ரணங்களா மாதலிலி மனமுளேக்கு நீர்மை தீர்ப்பாய். (8)

தொலேவில் தொழில் செய்யும் மனம் தொழில் நீங்கிய அது தானே சுக சமாதி அலேவறு கைவல்லியமும் பரமானந்தமும் என்றே அறிவாய் நெஞ்சில் உலேவுதிரம் எனும் இரண்டும் அத்யயனம் தியானம் எனும் உபயத்துக்கும் நிலேயுறு கார ணங்களாம் ஆதலில் இம் மனமுளேக்கு நீர்மை தீர்ப்பாய் = அளவில்லாத வினைகளேயாற்றுங் கர்த்திருத் வாதி அபிமானம்ஒழிந்து அவ்வபிமானம் ஒழிந்த அளவே இன்பமய சமாதியாம் சஞ்சலமற்ற கைவல்யமும் பரமானந்தமும் என்பதாகத் தெரிந்துகொள்வாய். சித்தத்தின் சலனம் நிலே யெனும் இரண்டும் தியானமின்மை தியானம் எனும் உபயத்துக்கும் இரண்டிற்கும் திரமான பரம காரணங்களாம் ஆகலின் திருசிய நாட்ட மாய் எழும் மனத்தின் பீஜமான வாசனேயை ஹே ராமா அறவே ஒழிப்பாய்.

சிந்தனேவா தனேயின்றித் திரமான மனத்தினேயே தியான மென்ப
ரந்தவுப சாந்தமுமக் கேவலத் தன்மையு மென்று மதுவேயாகு
மிந்தவுயர் பதப்பொருட்டு வாதனேசா லவுநேர்மை யெய்த வேண்டுஞ்
சந்ததம்வா தனேயில்லா மனந்தொழிலில் லாப்பதத்தைச் சாரு மத்தால். (9)

சிந்தனே வாதனேயின்றித் திர மான மனத்தினேயே தியான மென்பர் அதுவே அந்த உப சாந்தமும் அக் கேவலத் தன் மையும் ஆகும் இந்த உயர்பதப் பொருட்டு வாதனே சாலவும் சங்கற்ப ஏதுவான வாசனேயில்லாமல் திடமுற்ற மனத்தினேயே சமாதியென்று சொல்லலாகும், அதுவே அந்த உபசாந்தமும் அக் கேவலத் தன் மையும் என்பதாகும் இந்த மேன்மையான

நேர்மை எய்தவேண்டும் சந்ததம் வாதனையில்லா மனம் அத்தால் தொழிலில்லாப்பதத்தைச் சாரும் = பதத்தை அடைதத்பொருட்டு வாசனையை அத்தியந்தஞ் சுருக்கஞ் செய்யவேண்டும். எப்போதும் வாசனக்ஷயம் அடைந்த மனமாம் அதனால் அகிருத்வ பதத்தை அடையப்படும்.

நெறுக்கமுறு வாசனையே நெஞ்சினது தொழிற்றிரமா நீங்காத் துன்பம்
பெருக்கவிடு மாதலினால் வாதனையை மிகநேர்மை பிறக்கச் செய்வாய்
வருக்கமுறு பலபொருளி னானெனும்பா வனைமனத்தால் மாற்றி யெங்ங
னிருக்குதியங் ஙனமிருப்பாய் வரையிலே மனையிலே யெங்கே யேனும். (10)

நெருக்கமுறு வாதனையே நெஞ்சினது தொழில்திரமாம் நீங்காத் துன்பம் பெருக்கவிடும் ஆதலினால் வாதனையை மிகநேர்மை பிறக்கச்செய்வாய் வருக்கமுறு பல பொருளில் நான் என்னும் பாவனை மனத்தால் மாற்றி அங்ஙனமிருப்பாய் வரையிலே மனையிலே எங்கேயேனும் எங்ஙனம் இருக்குதி அங்ஙனம் இருப்பாய் = திடமாகப் பொருந்திய வாசனையே திடமுற்ற மனத்தினது காத்திருதிரமாம் எல்லாத் துன்பத்தையும் மிக மிக விளைவிப்பதாம் ஆதலினால் வாசனையை அத்தியந்தம் சுருக்கம் செய்வாய் கூட்டமாகப் பொருந்திய பலவித பொருள்களில் நான் எனதெனும் பாவனையைச் சித்தத்திலே அகற்றி பர்வதங்களிலேனும் கிரகத்திலேனும் பிற எவ்விடத்திலேனும் எவ்வாறு இருப்பாயோ அவ்வாறேயிருப்பாய்.

இல்லுறைவோர் சமாதான விதயத்தோ ரகங்கரமா மேதந் தீர்ந்தோர்
புல்லுமனை யேகாந்த வனமாகுங் கடைவீதி புக்கிக் காண்போர்
செல்லவர வுலாவியும்பற் றுமையினாற் கடைவழிச் செல்லாதார் போல்வார்
நல்லறிவு நிறைந்தோர்க்கு மப்படியே காடொக்கும் நாடு தானே. (11)

இல்லுறைவொர் சமாதான இதயத்தோர் அகங்கரமாம் ஏதந் தீர்ந்தோர் புல்லுமனை ஏகாந்த வனமாகும் கடைவீதி புக்கிக் காண்போர் செல்லவர உலாவியும் பற்றுமையினால் கடைவழிச் செல்லாதார் போல்வார் நல்லறிவு நிறைந்தோர்க்கும் அப்படியே நாடுதானே காடு ஒக்கும் = கிரகத்தில் வசிப்பவர் உபசாந்த சித்தமுடையவர் அகங்காராதி குற்றம் அகன்றவர் இத்தகையருக்கு வசிக்கும் இல்லமே நிர்ஜனப்பிரதேசமாகிய ஆரண்யமாகும், கடைவீதி வழி சென்று பார்ப்பவர், போக்குவரவாகச் சுற்றியும் இருப்பினும் சங்கம், பற்று இன்மையினால் கடைவீதி வழியாகச் செல்லாதவர் போலவே யாவர் அவ்விதமே மெய்ஞ்ஞானம் பூரணமாணவருக்கும் நகரமும் சுகவனம்போலாகும்.

துயில்விழிப்புச் சொலல்செலவு தொடர்ந்தாலு மகமுகமாந் தொடர்பா லென்று
பயில்மனையூர் நாடெல்லாம் பழுவம்போற் காண்பவரே பரம சீலர்
செயிரிலா வகமுகத்தா லெல்லாமா காசமாய்த் தீருஞ் சித்த
முயிரனையாய் சீதளம்வந் துண்ணிறையிற் சீதளமா முலக மெல்லாம். (12)

துயில்விழிப்பு சொலல் செலவு தொடர்ந்தாலும் அகமுகமாம் என்றும் தொடர்பால் பயில்மனை ஊர் நாடெல்லாம் பழுவம்போல் காண்பவரே பரமசீலர் செயிர் இலா அகமுகத்தால் எல்லாம் ஆகாசமாய்த் தீருஞ்சித்தம் உயிரனையாய் சீதளம் வந்து உள் நிறையில் உலகமெல்லாம் சீதளமாம் = நித்திரையுற்றிடினும் விழித்திருப்பினும் பேசிடினும் கமனுகமனம் தொடர்ந்து செய்யினும் உள்முகமே (அந்தர்முகமே) எப்போதும் பற்றுதலால் வசிக்கும் வீடு, கிராமம், பட்டணம், தேசம் யாவும் காடுபோல நோக்கும் பெரியோரே பேரொழுக்கமுடையவர், துன்பம் இல்லா அந்தர்முக திருஷ்டியால் சர்வமும் ஆகாச சூன்யமாய் மருவுஞ் சித்தமானது பிராணசமான ஹேராமா தண்மை உண்டாய் அகத்தே பூரணமாகில் சகல பிரபஞ்சமும் குளிர்ந்து தோன்றும்.

இதயமய லாலெரியி லுலகெலாங் காட்டெரிபோ லெரிந்து தோன்று
முதயமுறு முயிர்க்கெல்லா முள்ளிருப்ப தேபுறத்து முண்டாய் நிற்குஞ்
சுதைபயிலூர் புவிகால்விண் டொருவரைநீ ணதிதிக்குச் சூழ்ந்த வெல்லாம்
புதைதலுறு முட்கரணத் தத்துவத்தின் பங்குகளாய்ப் புறத்தி னிற்ப. (13)

இதயம் மயலால் எரியில் உலகெலாங் காட்டெரிபோல் எரிந்து தோன்றும் உதயமுறும் உயிர்க்கெல்லாம் உள் இருப்பதே புறத்தும் உண்டாய் நிற்கும் சுதை பயில் ஊர் புவி கால் விண் தொகுவரை நீள்நதி திக்கு சூழ்ந்த எல்லாம் புதைத்தலுறும் உள்கரண தத்துவத்தில் பங்குகளாய்ப் புறத்தில் நிற்ப = மனம் விஷய ஆசக்தியால் தகிக்கப்படில் பிரபஞ்ச முழுவதும் பேரழல்போல் (காடாக்கினிபோல்) தாகமாய்ப் புலப்படும். கர்மாநுசாரமாய்ப் பிறவியுற்ற ஜீவர்களுக்கெல்லாம் ஆந்தரத்துள்ளதே பாகியத்தும் உதிதமாகித் திதிபெறும் சொர்க்கலோகம், பூலோகம், வாயு, ஆகாசபர்வதம், நீண்டுசெல்லும் நதி திசைமுதலியன யாவையுமே புதைந்து கிடக்கும் அந்தக் கரணத்தினுலேயே பதார்த்தங்களின் அம்சங்களாக வெளியில் விளங்கி நிற்கும்.

உள்ளுணர்வி லின்புறுவோன் பொறிகளாற் கருமங்க ளுய்ப்போ னுயும்
தள்ளுசுக துக்கவசஞ் சாராதோ னனவரதஞ் சமாதி யுற்றோ
னுள்ளுகின்ற தனைப்போலெவ் வுயிருமெனப் பிறர்பொருள்க ளோடே யென்ன
வெள்ளுபயத் தாலன்றி யியல்பாலே கண்டானே யெல்லாங் கண்டோன். (14)

உள்ளுணர்வில் இன்புறுவோன் பொறிகளாற் கருமங்களுய்ப்போனுயுந் தள்ளுதுக்க சுகவஞ்சா பிரஹ்மாபின்ன ஆந்தரான்மாவின்கண் இரமிப்பவன் இந்திரியங்களைக் கருமங்களிற் செலுத்துபவனுய்த் தள்ளத்தக்க துன்ப இன்பங்களை

ராதோன் அனவரதஞ் சமாதியுற்ரேன் உள்ளுகின்ற தனைப்போல எவ்வுயிரும் எனப் பிறர்பொருள்கள் ஓடேயென்ன வெள்ளுபயத்தாலன்றி இயல்பாலே கண்டானே எல்லாங் கண்டோன் = அடையாதோனுயிருப்பவனே எப்போதும் சமாகிதனேயாவன் கருதாநின்ற தான் மனைவி மைந்தர் சுகமாயிருக்கவேண்டுமென்பதுபோல எல்லா உயிர்களும் சுகமாயிருக்கவேண்டுமென்பதாகவும் பிறர் பொருள் ஓட்டுக்குச் சமானம் எனவும் மேலோர்களறு பயத்தால் அல்லது நிந்திப்பார்களென்னும் பயத்தால் அல்லாமல் இயற்கையானே யாவன் காண்பன் அவனே கண்டவனுவன்.

இன்றிறவு வந்தாலுங் கற்பாந்தத் தெய்துகினு மிலங்குஞானி
கன்றியசேற் றுறுபொன்போற் களங்கமுரு னெல்லாமாய்க் கண்ணுயாறி
பொன்றலடி முடிவின்றி யொன்ருயின் பத்தளவாய்ப் பொலிதேசாகித்
துன்றியகாட் சிகளில்லாக் குறியுடைத்தா மெனச்சுருதி
சொல்லுமன்றே. (15)

இன்று இறவுவந்தாலுங் கற்பாந்தத்தெய்துகினும் கன்றிய சேற்றுறு பொன்போல் களங்கமுருன் எல்லாமாய்க் கண்ணுய் ஆறி பொன்றல் அடிமுடிவின்றி ஒன்ருய் இன்பத்தளவாய்ப் பொலிதேசாகித்துன்றிய காட்சிகளில்லாக் குறியுடைத்தாம் எனச் சுருதி சொல்லும் = இப்போதே மரணமானதெய்துகினும் கற்பமுடிவு பரியந்தம் இருக்கினும் சர்வான்மகமாய் விளங்கும் ஞானி நைந்தசேற்றில் உற்ற தங்கம் கெடாததுபோல வாட்ட மகிழ்ச்சிகளையடையான். அனைத்துமாய் அறிவாய் திருக்குருபமாய் இளைப்பாறி நித்தியமாயும் ஆதி மத்தியாந்தரகிதமாயும் ஏகமாயும், சர்வரசானுபவயேதுவாயும், அதிதேஜோமயமாயும், நெருங்கிய திருசிய பற்றற்றதாயும் சின்னமுடையதாய் = இலக்கணமுடையதாய் இருக்கும் என அனுதியே மறையறையும்.

எல்லாமென் றுரைத்ததெலா மறிவித்தற் பொருட்டேயா மிசையச்சொன்ன
சொல்லாவென் வீணன்றே யாதலினு லோமென்று துணிகவித்தை
நல்லாயிங் கிதற்குமுத னுளதோ ரிதிகாச நவிலக்கேட்பாய்
புல்லாரென் வேடர்குலச் சுரகுவப் பேரோன்சரிதை புதுமைத்தன்றே. (16)

எல்லாமென்றுரைத்ததெலாம் அறிவித்தற்பொருட்டேயாம் இசையச்சொன்ன சொல்லால் என் வீணன்றே ஆதலினுல் ஓம் என்று துணிக இத்தை நல்லாய் இங்கு இதற்கு முதல்நாள் ஓர் இதிகாசம் உள நவிலக்கேட்பாய் (முற்கூறிய வெகு விசேடங்களால் சம்பந்தமாதலின் அத்துவிதபங்கம் என ஆசங்கித்துரைத்தல்) முற்கூறிய சர்வான்மகம் திருக்கு முதலிய விசேஷணங்களால் கூறிய யாவும் மந்தாதிகாரிக்கு உணர்த்துவித்தற்பொருட்டேயாம் பொருந்தச் சொன்ன மொழியால் என்னே வீண் அல்லவே ஆகையினுல், ஓம் என்று நிச்சயித்துக்கொள்க,

புல்லாரென் வேடர்குலச் சுரகு அப்பேரோன் சரிதை புதுமைத் தன்றே = இதனை ஹே நல்ல குழந்தாய் இங்கு இதற்குப் பூர்வகாலத்தே நடந்த ஓர் இதிகாசம் உள, யாம் சொல்லக் கேட்பாய், இழிந்த செயலையுடையவரான கிராதகுல மன்னவனை சுரகு யென்பவன் விருத்தாந்தம் அதி அற்புதமாம்.

இமகிரியின் கோடான கைலைவரை யினிலேம சடர்க ளென்னு
மமர்வரிவில் வேடருள ரவர்க்கரசன் சுரகுவெனு மசையா வீரன்
சமநிலையாற் கோமுறையா லருண்முனிவா லுலகநெறி சமைக்கு நாளி
னமதுவலி யாலுகை நலிகுதுமே லவர்சோக நமக்கே யன்றே. (17)

இமகிரியின் கோடான கைலை வரையினில் ஏமசடர்கள் என்னும் அமர்வரிவில் வேடர் உளர் அவர்க்கரசன் சுரகுவெனும் அசையாவீரன் சமநிலையால் கோமுறையால் அருள்முனிவால் உலகநெறிசமைக்கு நாளில் நமது வலியால் உலகை நலிகுது மேல் அவர் சோகம் நமக்கே யன்றே = இமபர்வதத்தின் சிகர ஓர் பகுதியான கைலாச பர்வதத்தில் ஹேமசடர்கள் என்றுசொல்லப்பட்ட யுத்தஞ்செய்யும் வில்லைக் கையில் தாங்கிய கிராதர் உள்ளனர். அவர்களுக்கு இராஜாவாக சுரகுவெனும் அதிதிட வீரன் சமதிருஷ்டியாலும் மநு நீதிமுறையாலும், அநுக்கிரகநிக்கிரகங்களாலும் இராஜரீகம் செய்யும் காலத்தில் நமது புஜவலியால் உலகத்தாரை தண்டித்தல் = வருத்துவமேல் அவர்தம் துயரம் நமக்கேயல்லவோ = என்னுடைய கொடூர நிக்கிரகங்களால் அவர் படுந் துன்பம் நமக்கேயல்லவோ.

அல்லாது தண்டமுறை யியற்றேமே லுயிர்காப்பற் றவத்தின் மாயும்
பொல்லாதிவ் வரசென்றே யூசலாகுளத்தி னனுய்ப் புந்தி நைந்தான்
மல்லாரும் புயத்தவன்பான் மாண்டவிய முனிவரலும் வணங்கிப் போற்றி
நல்லாயுன் வரவினுன் மிகவாழ்ந்தே னல்லோரி னுட்டப் பட்டேன். (18)

அல்லாது தண்டமுறை இயற்றேமேல் உயிர்காப்பற்று அவத்தில் மாயும் இவ்வரசு பொல்லாது என்றே ஊசலாடுளத்தினனுய்ப் புந்தி நைந்தான் மல்லாரும் புயத்தவன்பால் மாண்டவிய முனிவரலும் வணங்கிப்போற்றி நல்லாய் உன்வரவினுல் மிகவாழ்ந்தேன் நல்லோரில் நாட்டப்பட்டேன் = அங்ஙனம் அல்லாமல் மநு நீதிப்படி நிக்கிரகஞ் செய்யாவிடின் ஏனைய ஜீவர் இரக்ஷிப்பு இல்லாமல் வியர்த்தமாய் நாசமே அடைவர் ஆதலால், இவ்விராஜ்ஜியபரிபாலனம் கொடியதுஎன்பதாக ஊஞ்சல்போல் சலிக்கும் மனத்தினனுய்ப் புந்தியில் வேதனையை அடைந்தான், வலிமைபொருந்திய புஜபலத்தையுடைய அச் சுரகுவிடத்தே மாண்டவ்ய மகரிஷியானவர் வருதலும் நமஸ்கரித்துத் தோத்தரித்துப் பரமசாதுவே, தேவரீரது விஜயத்தால் பெருவாழ்வுற்றேன், சாதுக்களுக்குள் ஒருவனுய்த் தாபிக்கப்பெற்றேன்.

தருமமுழு தையுமுணர்ந்த பகவநீ நெடுங்காலந் தளர்வு தீர்ந்தா
மருவினையே னையப்பா டறுத்தியா லையம்போ லரந்தை யுண்டோ
விருநிலத்தென் கோற்கீழோ ரெண்கருணை முனிவுகளா லின்ப துன்ப
மருவுகின்ற கவலையைக்கண் டரியேற்றின் முன்கரிபோன்
மறுகுகின் றேன். (19)

தருமமுழுதையும் உணர்ந்த பகவ நீ நெடுங்காலந் தளர்வுதீர்ந்தாய் அருவினையேன் ஐயப்பாடறுத்தி ஐயம்போல் அரந்தையுண்டோ இருநிலத்தென்கோற் கீழோர் என்கருணை முனிவுகளால் இன்ப துன்பம் மருகின்ற கவலையைக் கண்டு அரியேற்றின் முன் கரிபோல் மறுகுகின்றேன் = சகல நீதிகளையும் தருமங்களையும் அறிந்த பகவானே தேவரீர் நீளபோது சொரூபத்தின் கண்ணே விசிராந்திபெற்றவராயிருக்கின்றீர். விவகரிப்பதில் சம்சயப்பட்டுக்கொண்டிருக்கும் அடியேனுடைய சம்சயத்தை அகற்றியருள்வாய்! சம்சயத்தைப்பார்க்கினும் துன்பம் வேறு இருக்கிறதோ, பெரிய இப்பூமியின்கண்ணே எனது ஆட்சிக்குட்பட்டோர் நிக்கிராநுக்கிரகங்களால் சுக துக்கம் பொருந்துகின்ற சஞ்சலத்தைப் பார்த்து ஆண் சிங்கத்தின் முன்னர் யானையைப் போல வாட்டமுறுகின்றேன்.

அருணன்வெயில் போலெங்கு நிறைசமமென் மதியிலே யணுகு மாறு
கருணையினு லுணர்த்தி யெனுங்காவலற்கு மாண்டவி யன்கழறு கிற்பான்
பொருவறுதன் விசாரத்தா லிமைப்போதின் மனவழுக்குப் போகா நிற்கும்
வருசரற்கா லந்தோன்று மாத்திரத்து மூடுபனி மாய்வதே போல். (20)

அருணன் வெயில்போல் எங்கும் நிறை சமம் என் மதியிலே அணுகுமாறு கருணையினுல் உணர்த்தி எனுங்காவலற்கு மாண்டவியன் கழறுகிற்பான் பொருவறுதன் விசாரத்தால் இமைப்போதில் மன அழுக்குப் போகாநிற்கும் வருசரற் காலந்தோன்றுமாத்திரத்து மூடு பனி மாய்வதேபோல் = சூரியகிரணமென்ன எவ்விடத்தும் சமத்தன்மை என்னுடைய புத்தியில் பொருத்தும் வண்ணம் தயையினுல் அருள்செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்ட சுரகுமன்னனுக்கு மாண்டவ்விய மகரிஷியானவர் உபதேசிப்பாராயினர்; உவமையில்லா தனது ஆராய்ச்சியினுல் (ஆத்மா, அனுத்மாவிசாரத்தினுல்) கணகாலத்தில் சித்தத்தின்கண்ணுள்ள அஞ்ஞான சந்தேக விபரீதங்கள் தொலைந்துபோகும். சூரியகதியால் வந்துறும் சரற்காலந் தோன்றியவுடனே மூடிக்கொண்டிருந்த பனியானது நீங்குவதுபோல.

யானுரிச் சகமெங்ஙன் பிறப்பிறப்பெங் ஙனமென்றே யிதயத் துள்ளே
யானும லிப்படியே யாராயின் மகத்துவமே யடைதி சாலத்
தானுன சுபாவனு யிருந்துள நின் விசாரத்தாற் றுனை நெஞ்ச
நீனுடும் படிதோன்றித் தன்னுருவிட் டிளைப்பாறித் துன்ப நீங்கும். (21)

யானுர் இச்சகம் எங்கன் பிறப்பு இறப்பு எங்ஙனம் என்றே இதயத் துள்ளே இப்படியே ஆனுமல் ஆராயின் சாலமகத்துவமே அடைதி தானுன சுபாவனுயிருந் துள நின் விசாரத்தால்தானே நெஞ்சம் நீ நாடும்படி தோன்றித் தன் உருவிட்டு இளைப்பாறித் துன்பம் நீங்கும் =

அகம் என்பது யாது? இவ்வுலகம் எவ்வாறு உண்டாயது? ஜனன மரணங்கள் எங்ஙனம் வருகின்றன என்பதாக மனத்தின்கண்ணே இவ் வாறே இடைவிடாமல் அதாவது நிரந்தரம் நெடுங்காலம் நேயத்தோடு விசாரிப்பாயாயின் முற்றினும் பெருமையே அடைவாய். தனது சொரூப இயற்கையனு இராநின்ற நின்றனது ஆராய்ச்சியினுனே் மனமானது நீ கருதியவாறே தோன்றிய தனது வடிவத்தை விட்டு விசிராந்தி அடைந்து சுரம் அற்றதாகும்.

வெம்புதல்போய்த் தண்ணென்ற வுன்மனதுக் கிவ்வுலகின் வியா பாரங்கள்
செம்புகர்வே ழத்தினுக்கான் குளப்படிபோற் றேன்று மாறீன நெஞ்சுக்
கம்புவியிற் றெழில்சிறிதே யாகினு நீந்திட வரிதா
மாவின்பாதப் பைம்புனலுங் கிழக்கொதுக்குக் கெல்லாகரை காணுத
பரவையன்றே. (22)

வெம்புதல்போய்த் தண்ணென்ற உன் மனதுக்கு இவ்வுலகின்வியா பாரங்கள் செம்புகர் வேழத்தி னுக்கு ஆன்குளப்படிபோல் தோன்றும் ஈன நெஞ்சுக்கு அம் புவியில் தொழில் சிறிதேயாகினும் நீந்திடவரிதாம் ஆவின் பாதப் பைம்புனலும் கிழக்கொதுக்கு தரைகாணுத எல்லே பரவை அன்றே =

(ஆயின் என்னே மனதிற்கு இருப்பே போய்விடு கின்றதா எனின், இல்லே. மனம் இருப்பவே களங்கங்கள் மாத்திரமே களேயவேண்டுமெனக் கூறுகின்றுர்.) முத்தாபங்கள் நீங்கிக் குளிர்ச்சி பொருந்தியிலாகா நின்ற உனது சத்துவ மன துக்கு இப்பிரபஞ்சத்தில் செய்யத்தக்க இராஜ காரியங்கள் சிவந்த புள்ளிகளுடைய மத்தகஜத் துக்குப் பசுவின் பாதத்திடம்போலப் பிரதீதியாம் கிருபண மனத்தினுக்கு அழகிய பூமண்டலத்தில் காரியம் = அற்பமேயாயினும் கடத்தற்கரிதாம். கோவின்குளப்படி சிருநீரும் இறகு ஒடிந்த கிழ விருத்த மசகத்துக்கு மரியாதையாங்கரைகாணுத விஸ்தாரமான கடலேயல்லவோ?

எத்தனையெத் தனைநீத்தா யகிலத்தைப் பரஞ்சுடராயெ றிக்கிஞ் சோதி
யத்தனையத் தனைதோன்று மெந்நாண்மட் டனைத்தும்வி டாயந்நாண் மட்டுந்
தத்துவமாம் பொருளெய்தாச் சகலமும்போ ஞற்சேடந் தானுஞ் சித்தந்
தொத்தறவேற் றுமையெல்லாம் போகாதேற் சமமான சோதி தோன்று. (23)

அகிலத்தை எத்தனை யெத்தனை நீத்தாய் அத்தனை அத்தனை பரஞ்

ஜகவிடயங்களை நீரசமென்று எவ்வளவு எவ் வளவு விட்டாயோ, அவ்வளவு அவ்வளவு சுயஞ்

சுடராய் எறிக்குஞ் சோதி தோன்றும் எந்நாள்மட்டு அனைத்தும் விடாய் அந்நாள்மட்டும் தத்துவமாம் பொருள் எய்தா சகலமும் போனல் சேடந்தானுகும் சித்தம் வேற்றுமையெல்லாம் தொத்தற போகாதேல் சமமான சோதி தோன்ரு = சோதிவடிவ பரப்பிரகாசமாய பரமாத்ம சைதன்யம் பிரதீதியாம், கூறிய பொருகாடு வதிரோக முகத்தால் கூறுகின்ருர். எவ்வளவுகாலபரியந்தம் யாவற்றையும் விடமாட்டாயோ அவ்வளவு காலபரியந்தம் உண்மையான ஆத்மா லபிப்பதில்லை. யாவும் ஒழிந்தால் சேடித்து நிற்பது தனது ஆத்மவடிவமேயாம், மனம் திருசியங்களெல்லாம் பற்றின்றி அகலாதேல் சமவடிவம் சாக்ஷாத்காரமாகாது.

பேதமுறு பொருளொருமை தோன்ருதேற் றன்னைத்தான் பெறுவ தெங்கே
யாதலினுற் றனைப்பெறுதற் பொருட்டாக வனைத்தினையு மகற்றல் வேண்டும்
ஏதமற வனைத்தையும்விட் டாயென்னிற் சேடித்த திறவா வீடா
மேதகைய பதமதுவாஞ் சுரகுவெனும் பெயர்கீர்த்தி வேடர் வேந்தே. (24)

பேதமுறு பொருளொருமை தோன்ருதேல் தன்னைத்தான் பெறுவதெங்கே ஆதலினுல் தனைப்பெறுதற் பொருட்டாக அனைத்தினையும் அகற்றல் வேண்டும் ஏதமற அனைத்தையும் விட்டாயென்னில் சேடித்தது இறவா வீடாம் மேதகைய பதம் அதுவாம் சுரகுவெனும் பெயர் கீர்த்தி வேடர் வேந்தே = வேற்றுமையான மனைவி மக்களை விட்டு அன்னியதனுதிகளை அடையும்பொருட்டுச் சென்ருல் சாதாரண இரத்தினுதிகளும் அடையாதேயாமாகில் தனது ஆத்மவடிவ லாபம் அடைவது என்னே கதை அன்னியவஸ்துவை விடவேண்டுமெனச் சொல்வது என் ஆகையால் ஆன்மலாப நிமித்தம் யாவற்றையும் நன்கு பரித்தியாகிக்க வேண்டும், குற்றம் நீங்க யாவற்றையும் தியாகித்தாயென்னில் எஞ்சியது சாஸ்வதமான மோக்ஷமேயாம். மேன்மையாகிய பதம் அஃதேயாம் சுரகுவெனும் நாமம்வாய்ந்த புகழ்பெற்ற கிராதர் மன்னவனே.

சகல காரண காரிய பரம்பரைத் தன்மையாஞ் சகமேவி
மிகவ ளர்ந்த வத்துவின் மலவாதனை மனத்தினை மிகநீக்கித்
திகழு மங்கமா மதையுமேல் விடுதியேற் றீதறு நலனுண்டாம்
புகழ்ந ராதிப வென்றுதன் னிடமுறப் போயினன் றவப்பாலன். (25)

சகல காரணகாரிய பரம்பரைத் தன்மையாஞ் சகம்வத்துவில் மேவி மிக வளர்ந்த மலவாதனை மனத்தினை மிக நீக்கித் திகழும் அங்கமா மதையும் மேல் விடுதியேல் தீதறு நலன் உண்டாம் சகல காரண காரிய பரம்பரா இயல்பினையுடைய பிரபஞ்ச வஸ்துக்களில் இது இன்பத்தைத் தரத்தக்கதென்னும் விஷயங்களில் பொருந்தி அதிகமாக விருத்தியடைந்த அசுத்த வாசனை மனத்தினை அஞ்ஞானத்தோடு நிவர்த்தித்து விளங்கா நின்ற தனது வடிவமாகிய மனோ பேதத்தையும்

புகழ் நராதிபவென்று தவப் பாலன் தன்னிடமுறப் போயினன் = ஒழிப்பாயாகில் துயரமற்ற பரமானந்தமுண்டாம் நரேந்திரனேயென்று கூறி மாண்டவ்ய முநியாம் தவப்பாலன் தமது மௌன மண்டலத்துக்குச் சென்றனன்.

முனிய கன்றபின் னெயினர்கோன் றனியிடமுந்தி நன்மதி யாலே
யனிச நானென்ப தாரென நாடின னடிமுதன் முடியீருந்
தனியு டம்பைநா னென்பது புதுமையாஞ் சடவுடல் காண்கேனுன்
றுனிசெ யிவ்வுட லசேதனந் தசைமுதற் றுன்னு மாதலினன்றே. (26)

முனி அகன்ற பின் எயினர்கோன் தனியிடம் உந்தி நல்மதியாலே அனிசம் நான் என்பது யார்என நாடினன் அடிமுதல் முடிஈரும் தனி உடம்பை நான் என்பது புதுமையாம் சடவுடல் காண்கேனுன் துனிசெய் இவ்வுடல் அசேதனம் தசைமுதல் துன்னு மாதலினன்றே = ஸ்ரீ மாண்டவ்ய முனிவர் உபதேசித்துப் போன பின்னர் வேடராஜாவாகிய சுரகுவானவன் ஏகாந்த ஸ்தானத்தை அடைந்து விவேக புத்தியால் சதா அகமென்று பிரதீதியாவது யாது என்று ஆலோசித்து கால்முதல் சிரம்வரை ஆபாதமஸ்தகம்வரை இழிவில் ஒப்பற்ற தேகத்தை அகம் என்பது அற்புதமாம் ஜடமாகிய இத்தேகத்தை யான் வேருயிருந்துணர்கின்றேன் துன்பத்தைக் கொடுக்கும் இத்தேகம் அறிவற்றது தோல் இரத்தம் எலும்பு இரைச்சியாதி நிறைந்திருத்தலின் அல்லவோ.

கரண மீரைந்து மன்னியஞ் சடமெனுங் கணக்கினு னறிந்
திரளெ னக்கில வுடன்முத னலன்சேட மேதென நோக்கில்
விரவு சீவனே சேடமா மின்னதும் வேருென்ருற் றெரிகின்ற
துரவி தானவே ருென்றினுற் றெரியுமீ துயர்ந்த தத்துவமாகா. (27)

கரணம் ஈரைந்தும் அன்னியம் சடம் எனுங் கணக்கினுல் நான் அன்று இத்திரள் எனக்கு இல உடல்முதல் நான் அலன் சேடம் ஏதென நோக்கில் விரவு சீவனே சேடமாம் இன்னதும் வேருென்ருல் தெரிகின்றது உரவிதான் வேறு ஒன்றினுல் தெரியும் ஈது உயர்ந்த தத்துவமாகா = கர்மேந்திரிய ஞானேந்திரிய பஞ்சகங்களாம் பத்தும் அயல் யான் அல்ல (ஆன்மபின்னமாம்) அந்தக் கரண வியானுதி கூட்டம் என் சம்பந்தியுமல்ல காரண சரீரம் அகம் அல்ல எஞ்சியிருப்பது யாதென்று நோக்கில் இச்சரீராதிகளில் கலந்திரா நின்ற ஜீவனே எஞ்சுவதாம் இந்த ஜீவனும் அயல் ஒரு வஸ்துவினுனே அறியப்பெறுகின்றது. ஞானசொருபமான ஆன்மவஸ்துவால் அறியப்படுகின்ற இந்த ஜீவன் மேலான வஸ்துவாகமாட்டாது.

தெரிவ தாகிய விதனையு மகற்றுவன் றெரிபொரு ளுனுமோ
பெரிது சேடமாய் விகற்பமற் றமலமாம் பேரறி வியானுகு
மரிய யன்சிவ னிந்திர னந்தகனுதியா மிடந் தோறும்
சுரிகொண் முத்தினுண் ணூலென நிற்குமாற் றேன்றுமிவ் வுயர்போதம். (28)

தெரிவதாகிய இதனையும் அகற்றுவன் தெரிபொருள் நான் ஆமோ பெரிது சேடமாய் விகற்பமற்ற மலமாம் பேரறிவு யான் ஆகும் தோன்றும் இவ்வுயர்போதம் அரி அயன் சிவன் இந்திரன் அந்தகன் ஆதியாம் இடந் தோறும் சுரிகொள் முத்துனுள் நூலென நிற்கும் = அறியப் பெறுவதாகிய இச் சீவனையும் யான் அல்லன் என்று விலக்குவன் சாக்ஷி சம்வேத்தியங்களான பிரமிதியையும் பிரமேயத்தையும் தியாகிப்பேன், பிரமிதி (உணர்பவன்) பிரமேயம் விஷயம் இவைகள் அகம் அல்ல அத்தியந்தம் எஞ்சியதாய் விகற்பமின்றியதாய் நிர்மலமாம் சுயஞ்சைதன்யம் அகம் சப்தத்தீன் உண்மைப் பொருளாம் பிரகாசியா நின்ற பகவானுகிய இந்த மேலான விஷ்ணு, பிரம்மா, ருத்திரன் மகபதி யமன் முதலியோரது சரீரங்கள்தோறும் தொடர்வை பொருந்திய முத்தினுள் தந்துவென ஊடுருவி நிற்கும்.

பகவ னுகுமிவ் வாத்தும தத்துவம் பரமமாஞ் சிற்சத்தி
சகநி கழ்ச்சியா நோயின்றி வெருவுறுந்தனி வடிவுடைத் தாகிக்
ககுப முற்றையும் விழுங்கி யெப்பொருளினுங் கலந்து நுண்ணியதாகி
மிகும பாவபாவங் களற் றயனுறை வீடுள வுளதாகி. (29)

பகவனுகும் இவ்வாத்துமதத் துவம் பரமமாஞ் சிற்சத்திசகம் நிகழ்ச்சியாம் நோயின்றி வெருவுறுந் தனிவடிவுடைத்தாகிக் ககுபம் முற்றையும் விழுங்கி எப் பொருளினுங்கலந்து நுண்ணிய பாவ சுபாவங்கள் அற்று அயனுறை வீடுளவுளதாகி = ஸ்ரீ பகவானுகிய இந்த ஆன்மதத்துவம், இத் தத்துவமே விவர்த்தத்தால் நிர்மலசத்தியாம், இச் சிற்சத்தி பிரபஞ்சத்தைத்தோற்றுவிப்பதாம்; ஆமயமின்றி அநதிகாரிகளால் பயப்படத்தக்க ஒப்பற்ற பெரிய ஆகிருதியுடைத்தாகி தசதிசைகளும் வியாபித்தவளாய்ச் சகல பொருள்களிலும் விரவி சூக்குமமாகிப் பாவ, அபாவ, வர்ஜ்ஜிதமாய் பிரமலோகம் வரை வியாபித்திருப்பதாகி.

சத்தி யாவுக்கு முறைவிட மாமிதுதனித் தனிச் சத்தாகிப்
புத்தி யாகியிச் சகத்தினிற் காண்பன யாவையும் பலவாகச்
சித்த சைந்துள விசாலமா மல்லதுசிறிதும் வேறில தாகுந்
தொத்து பற்றின்றிக் காண்பதற் றெழுபவந் தொடர்மயக்கமு மற்றே.(30)

சத்தியாவுக்கும் உறைவிடமாம் இது தனித்தனிச் சத்தாகிப் பத்தியாகி இச் சகத்தினில் பலவாக காரியசத்திகள் யாவற்றிற்கும் இருப்பிடமாம் இது, தனித்தனி (பிருதக் பிருதக் வெவ்வேருய்

காண்பன யாவையும் சித்து அசைந்துள விசாலமாம் அல்லது வேறு சிறிதும் இலதாகும் தொத்து பற்றின்றிக் காண்பதற்று எழுபவந்தொடர் மயக்கமுமற்றே = இருப்பதாகி வரிசையாய் இப்பிரபஞ்சத்தின்கண் அனேகபிரகாரமாகத் திருசியமியாவற்றும் சிற்சொரூபத்தில் சலனமாத்திர விஸ்தாரமேயல்லாமல் அயல் லேசமும் இல்லையாகும், தொடர்பான வாசனையின்றி விஷயமுமற்று எழுவகைப்பிறவித் தொடக்கமுமற்று, மோகமும் ஒழிந்து.

சுழுத்தி யிற்றிர முற்றவன்றொழி லெனத் துகளறு சமனுகி
யழுத்த மாகிய வாத்துமதத்துவத் தமர்ந்தன னெனத் தீர்ந்து
விழுத்த கும்பத மெய்தினன்விவே கத்தின்மெய்ம் மைநிச் சயத்தாலே
வழுத்த ருந்தவக் கௌசிகன்விப்பிர மரபினை யடைந் தென்ன. (31)

சுழுத்தியில்திரமுற்றவன்தொழில் எனத்துகளறு சமனுகி ஆத்துமதத்துவத்துஅழுத்தமாகியமர்ந்தனன் எனத் தீர்ந்து விழுத்தகும்பதம் எய்தினன்; விவேகத்தின் மெய்ம்மைநிச்சயத்தாலேவழுத்து அரும்தவக் கௌசிகன் விப்பிர மரபினை அடைந்தென்ன = காடசுழுத்தியுற்றவன் நிரபிமானமுடையவனுகி இருத்தல்போலக் குற்றமற்ற சமம் உடைத்தாய் பிரஹ்மாபின்ன ஆன்மாவின்கண் திடமாகப் பொருந்துவன் என நிச்சயித்துக்கூறிய மேன்மையான பரமானந்த அப் பதத்தை அடைந்தனன். விவேகத்தின் உண்மைத் துணிபானே யாவரும் துதிக்கத்தக்க அரிய தவத்தினையுடைய கோசிக காதி அரசன் புத்திரனுன கௌசிகன் பிராமண்யத்தை அடைந்ததேபோலும்.

வரகு ணங்களா மனைத்துமிற் றுயில்பவன் மனத்தொழி னிகராகி
சுரகு வென்பவ னசைவறு சிகையினுற் றுலங்குறு சுடரொத்தான்
விரவு நல்லரு ளருளின்மை விருப்பொடு வெறுப்புமச்சரந் தொந்தம்
பரவு நன்மதி மூடமென் றினையவும் பயில்வற நிகழ்வுற்ருன். (32)

வரகுணங்களாம் அனைத்தும் இல் துயில்பவன் மனத்தொழில் நிகராகி சுரகுவென்பவன் அசைவறு சிகையினுல் துலங்குறு சுடர் ஒத்தான் விரவும் நல் அருள், அருள் இன்மை விருப்பொடு வெறுப்புமச்சரம் பரவும்நல்மதி,மூடம், தொந்தம் என்றினையவும் பயில்வற நிகழ்வுற்ருன் = மேலான மைத்திரியாதி குணங்களாம் யாவும் இல்லாது நித்திரை செய்பவன் ஒப்பாகி சுரகு வென்னும் அம் மன்னவன் சலனமில்லாத கொழுந்தினுல் இலங்காநின்ற தீபத்தை ஒத்திருந்தான். இதயத்தில் பொருந்திய தயை, தயையின்மை, இராகம், துவேஷம், மச்சரம், பொருந்தும் விரிந்த நல்லபுத்தி, குமதி, துவந்துவம், சீதம், உஷ்ணம், மானம், அவமானம், சுகம், துக்கம் என்ற இவ்வியாவற்றையும் தன்பால் பொருந்துதலின்றி உள்சீதளம்மிருந்து இலங்கி விவகரித்தான்.

ஒன்றுயு ணர்ந்தசு ரகுப்பெய ருத்த மர்க்கும்
பன்னுதனெ னும்பெயர்ப் பார்த்திப மாமு னிக்கு
நன்றானவன் பால்வரு நன்மைந யந்து கேட்பாய்
குன்றார்புயத் தாயென மாதவன் கூற லுற்றான். (33)

ஒன்றாய் உணர்ந்த சுரகுப்பெயர் உத்தமர்க்கும் பன்னுதன் எனும் பெயர்ப் பார்த்திப மாமுனிக்கும் நன்றான அன்பால் வருநன்மை நயந்துகேட்பாய் குன்றார் புயத் தாய் என மாதவன் கூறலுற்றான் = (ஹே பகவன் விவகாரத்துழலும் மனம் எவ்வகை யானே ஏக சமாதானத்தை அடையும் அதுதான் எத்தகைத்தாம் என ஸ்ரீ இராமபிரான் வினவ ஸ்ரீ வசிஷ்டபகவான் உத்தரம் அருளல்) அத்வைதசொரூபமேதான் என்று அறிந்த சுரகு வெனும் நாமமுடைய உத்தமருக்கும், பர்னம் அசனம், பர்னம் (இலை) சருகு புஜித்தால் பர்னு தர் என்னும் நாமமுடைய இராஜரிஷிக்கும் சாந்தி அல்லது நன்மையைப் பயக்கும்படியான பேரன்பினால் வாராநின்ற அற்புத சம்வாதத்தை = குசலப்பிரசினத்தை அன்புடன் சிரவணிப்பாய் பர்வதம் போன்று திண்ணிய புஜத்தையுடைய இராகவ என பெருந் தவ சிரேஷ்டரான வசிஷ்டர் கூறினார்.

பாரக்கர் குலப்பரி கப்பெயர் பாரின் வேந்தாம்
வீரக்கழ லோன்சுர குப்பெயர் வேந்த னண்ப
னீரக்கன மாரிம றுத்தலி லியாருந் துஞ்சக்
கோரக்கனன் மண்டுதல் கண்டுகு லைந்து நொந்தான். (34)

பாரில் பாரக்கர் குலப்பரிகப் பெயர் வேந்தாம் வீரக்கழலோன் சுரகுப் பெயர் வேந்தன் நண்பன் வேந்தாம் னரகக்கனம்மாரி மறுத்தலில் யாருந் துஞ்சக் கோரக்கனல் மண்டுதல் கண்டு குலைந்து நொந்தான் = இவ்வுலகின்கண் பாரசீகத்தாருக்கு அரசனும் பரிகனென்னும் ஒரு மன்னவன் இருந்தான் வீர கண்டையை அணிந்தவன் அசனும் சுரகுப்பெயர் மன்னவனது சினேகனுமாகிய அப்பாரசீக மன்னவன் குளிர்ந்த மேகமானது மழை பொழியாததால் கற்பாந்தம்போலிருந்தது ஆயின் அரச தோஷத்தாலாயதோ அஃதெனின் இன்றும் மற்றோ பிரஜைகளினது குகாரிய தோஷத்தாலாயதாம் அதனால் பெருந் தாபாக்கினி நிறைந்து தோன்றுவதால் சகல பிராணிகளும் வருந்து தலைக் கண்டு தளர்ந்து துயருற்றான்.

இன்னுதன நாடுவிட் டேகி வனத்தி லெய்தி
யன்னுதரம் போய்த்தவஞ் செய்தவிழ் பன்ன மூனுய்ப்
பன்னுதநா மம்பதைத் துத்துவப் பான்மை யாலே
நன்னுதலும் பெற்றன னற்றவ மொப்ப துண்டோ. (35)

இன்னுதன நாடுவிட்டு ஏகி வனத்தில் எய்தி அன்னுதரம் போய்த் தவஞ்செய்து அவிழ் பன்னம் ஊனுய்ப் பன்னுத நாமம் படைத்துத் தவப் பான்மையாலே நன்னுதலும் பெற்றனன் நல்தவம் ஒப்பதுண்டோ = துன்பத்தைப் பயவா நின்ற தனது தேசத்தை விடுத்துச் சென்று சேய்மை ஆரண்யத்தை அடைந்து அன்னம் புசித்தல் நீங்கி அருந்தவம் புரிந்து உதிர்ந்த சருகையே ஆகாரமாகக் கொண்டு பர்ணுத மகரிஷியென்னும் காரணப் பெயர் செறிந்து அத் தவத்தின் மகிமையாலே ஞானியாயினன் நல்ல தவத்துக்குச் சமான மானது ஒரு பொருளுமுண்டோ?

ஒருமூவுல மென்னும டத்தொரு மித்தி ருந்தான்
பொருண் மேவுகின்ற சுரகுப்பெயர் பூபன் றன்பால்
வருவா னெதிர்தோன் றலு மற்றவ னன்போ டெய்தி
யிருவோரு மன்புற் றிருந் தின்னன பேசலுற்ருர். (36)

ஒரு மூவுலகென்னும் மடத்து ஒருமித்திருந்தான் பொருள் மேவுகின்ற சுரகுப்பெயர் பூபன் றன்பால் வருவான் எதிர் தோன்றலும் மற்றவன் அன்போடு எய்தி இருவோரும் அன்புற்றிருந்து இன்னன பேசலுற்ருர் = சொர்க்க மத்திய பாதாளம்=ஒப்பற்ற திரிலோக மென்னும் மடத்தில் இஷ்டப்படி ஒன்றுபட்டுச் சஞ்சரித்துக்கொண்டிருந்தனன் சகல ஐஸ்வரி யங்களும் பொருந்தாநின்ற சுரகுவென்னும் அரசனது அரண்மனையை நோக்கி வரலும் சுரகு நேத்திரத்துக்கு கர்ணும்படியாக பர்ணுத மகரிஷி வரலும் அச்சுரகு மன்னவன் பிரியத்தோடும் எதிர்கொண்டழைத்து வந்து இரண்டுபேர்களும் பரஸ்பரம் பேரண்போடு பூசித்து ஆசனத் தமர்ந்து இன்ன இன்வென்று பின் வருமாறு சம்பாஷிக்கத் தொடங்கினர்.

நினையிப் பொழுதெய்தலி னீங்கரு மின்ப முற்று
வினையற்ற தென்றசு ரகுப்பெயர் வேந்தை நோக்கி
யுனையுற்று மாண்டவ்விய னேதிய ஞான மொப்பத்
தனையுய்க்கு மெய்ம்மைப்பதஞ் சாந்தன னியானு மென்னு. (37)

நினை இப்பொழுது எய்தலின் நீங்கரும் இன்பமுற்று வினை யற்றது என்ற சுரகுப்பெயர் வேந்தைநோக்கி உனை உற்று தங்களை இப்போது சந்தித்ததால் அகலுதற்கரிய ஆனந்தம் அடைந்து சகல பாவங்களும் ஒழிந் தது எனக் கூறிய சுரகுவென்னும் நாமத்தினை யுடைய மன்னவனைப் பார்த்துத் தங்களை

மாண்டவ்வியன் ஓதிய ஞானம் ஒப்பதனை யுய்க்கும் மெய்ம்மைப் பதம் யானும் சார்ந்தனன் என்று = அடைந்து மாண்டவ்விய மகரிஷி உபதேசித்த பிரஹ்ம வித்தையை ஒப்ப தன்னை ஈடேற்றும்படியாகச் செய்யும் உண்மைப் பதத்தினை யானும் அவ்விதமே அடைந்தனன் என்றான்.

மிகத்தெ ளிந்துகெம் பீரமாய்ச் சமமதா விழியா
லிகத்து றுந்தொழின் மன்னவ வியற்றுதி கொல்லோ
பகுத்த காலத்தை யறிவுறு நினது பாவனைதான்
றொகுத்த வாதியும் வியாதியுந் தொடர் கிலைகொல்லோ. (38)

மிகத் தெளிந்து கெம்பீரமாய் சமமதாம் விழியால் இகத்துறுந் தொழில் மன்னவ இயற்றுதி கொல்லோ பகுத்த காலத்தை அறிவும் நினது பாவனை தான் தொகுத்த ஆதியும் வியாதியும் தொடர்கிலை கொல்லோ = (பரிகர் சுரகுவினது ஞானதிடத்தை நான்கு வகையாக வினுதல்) அத்தியந்தம் சொச்சமாய் அசையாத வீரத் தன்மையோடு சமதிருஷ்டியுடனிருந்து பிராரத்தவினை அனுசாரமாய் இவ்வுலோக விராச்சிய விவகாரங்களை, ஹே அரசரே செவ்வனே நடத்துகின்றனையோ இன்ன இன்ன காலத்தில் இன்ன இன்ன செய்யத்தக்கதென விதித்த காலத்தைப் பராமிருசம் செய்யும் தங்களுடைய பாவனையானது அதனாலேற்பட்ட இராகாதிகளும் ரோகாதிகளும் பற்றாமல் ஒழிந்தனவோ.

அடையும் போதினி தாகிய போகத்தி லழுந்தா
திடைநி லாய்கொலோ சங்கற்ப மற்றிளைப் பாறித்
தடையில் சாந்தமாய் முத்தியாய்ச் சலனமொன் றில்லா
நடைப யின்றுயிர் சமாதியை நண்ணினை கொல்லோ. (39)

அடையும் போதினிதாகிய போகத்தில் அழுந்தது இடை நிலாய் கொலோ சங்கற்பம் அற்று இளைப்பாறித் தடையில் சாந்தமாய் முத்தியாய்ச் சலனம் ஒன்றில்லா நடைபயின்று உயர் சமாதியை நண்ணினை கொல்லோ = கிடைத்த காலத்தில் இன்பமயமாய் அழுத்திவைக்கும் ஆபாத ரமனியமாய்ப் போகங்களில் மூழ்காமல் நடுநிலையாய் திரிபுடிசாக்ஷியாயிருந்து விவகரிக்கின்றீரா, பிராரத்தவினை அநுசாரமாய் இவ்வுலோக இராஜ்ய விவகாரங்களை இன்ன காலத்தில் இன்ன இன்ன செய்யத்தக்கதென விதித்த காலத்தைச் சங்கற்ப ரகிதமாயும் இளைப்பாறுதற்கிடமாயும் பிரதிபந்தங்களாயுள்ள விக்ஷேப துக்கங்களின் பரம உபசமமாயும் பயிற்சியைப் பழகி மேலான அசம்பிரஞ்ஞாத சமாதியை அடைந்து சுகித்தீரோ.

வெறிதி ருக்கினுந் தொழிலினை மேவினும் விடாம
லறிஞ னென்றுதான் சமாதிவிட் டகன்றவ னுகுஞ்
செறியு ஞானஞ்சேர் மனத்தினர் சகத்தொழில் செயினும்
பிறிவி றத்துவ நிட்டராய்ச் சமாதியிற் பெயரார். (40)

அறிஞன் வெறிதிருக்கினும் விடாமல் தொழிலினை மேவினும் என்றுதான் சமாதிவிட்டகன்றவனுகும் செறியும் ஞானஞ் சேர் மனத்தினர் சகத்தொழில் செயினும் பிறிவுஇல் தத்துவ நிட்டராய்ச் சமாதியிற் பெயரார் = (சுரகு கூறல்) சொரூபத்தை உள்ளவாறு உணர்ந்தவன் கருவிகரண வியாபாரமின்றிச் சமாகிதனுயிருப்பினும் விடாமல்=எப்போதும் இடைவிடாமல் விவகாரத்தைச் செய்யினும் எப்போதுந் தான் செய்யும் சமாதிவிட்டு ஒழிந்தவனுவான் பரிபூரண ஞானத்தையுடைய மனத்தோர் உலகத்தில் இராஜ விவகாரங்களைச் செய்யினும் பேதவர்ஜ்ஜித பிரஹ்ம நிஷ்டையுடையவராகிச் சமாதினின்றும் அகலார்.

பிரம வஞ்சலி யுடன்பது மாதனம் பெறினும்
விரவ சாந்தர்கள் சமாதியின் மேவல ராசைத்
திரண பாவக னுகிய சிற்றுணர் வொன்றே
வரச மாதியாம் வெறிதிருக் குமதன்று வள்ளால். (41)

பிரம அஞ்சலியுடன் பதுமாதனம் பெறினும் விரவு அசாந்தர்கள் சமாதியில் மேவலர் ஆசைத் திரணபாவனுகிய சித்து உணர்வு ஒன்றே வள்ளான் வரசமாதியாம் வெறிதிருக்கும் அதன்று = சச்சிதானந்த வடிவ பிரத்தியக்க பின்ன பிரஹ்ம நமஸ்காரத்துடன் பத்மாசனத்தைப் பெற்றிடினும் சாந்தியில்லாதவர்கள் சமாதியை அடைய மாட்டார். நசையாம் துரும்பைத் தகிக்குங் அக்னியாகிய தத்துவபோதம் (ஆன்மஞானம்) ஒன்றே ஹே வள்ளலே மேலான சமாதியாம் சும்மாவிருக்கும் அஃதல்ல.

## அவதாரிகை

நன்ருக மூலத்தோடுகூடச் சர்வ ஆசாவிடய பாதத்தால் (நிராசையினுல்) ஆத்மாவைப் பரமார்த்த சொரூபத்தில் சேர்ப்பித்தல் சமாதியாம் என்பது விற்பத்தியாம்.

ஒருமை யாயென்று மனமிறந் துண்மையை யுணரில்
வரச மாதியாஞ் சொல்லினுர் மனத்தினி னிறைந்தோர்
மருளின் மெய்ம்மையோர் மதிதம்மை மறக்கிலா சிறிதுந்
தருந்தொ ழிற்றிற மறக்கிலாக் காலமே சமமாம். (42)

மனத்தினில் நிறைந்தோர் ஒருமையாய் என்றும் மனம் பூரண மனத்தினையுடையவர் சமாகிதராய் எப்போதும் மனம் விகற்பமற்று உள்ள பொருளை

இறந்து உண்மையை உணரில் வரசமாதியாஞ் சொல்லினர் மருள்இல் மெய்ம்மையோர் மதி தம்மை சிறிதும் மறக்கிலா தருந் தொழில்திறம் மறக்கிலாக் காலமே சமமாம் = உள்ளபடியே காண்பதாய்=அபாதித ஆத்ம தரி சனரூபமாய் உணரில் உயர்ந்த சமாதி சப்தத்தி ஞலே பூரணப் பிரஞ்ஞையுற்ற பெரியோர் சொல் லினர் மயக்கம் இல்லாத உண்மையுணர்வினை யுடையவரது புத்தியானது ஆன்மசொரூபத்தைக் கிஞ்சிற்றும் மறக்கமாட்டாது; தான்தரும் கலை காஷ்டை நாழிகை கதியை மறவாத காலமே போல, சமம்போல, காலமேபோல.

நெறிகொள் காற்றுத்தன் கதியினை மறப்பிலா நெறிபோ
லறிஞர் புந்திவே றறிவதில் லறிவையே யயரா
பிறிவில் புத்தியி லொருமையோர் சமத்துவப் பெரியோர்
செறிதொ ழிற்பிறி வகற்றினோர் தற்பதம் பெற்றோர். (43)

நெறிகொள் காற்றுத் தன் கதியினை மறப்பிலா நெறிபோல் அறிஞர் புந்தி வேறறிவதில் அறிவையே அயரா புந்தியில் பிறிவுஇல் ஒருமையோர் சமத்துவப் பெரியோர் செறிதொழில் பிறிவு அகற்றினோர் தற்பதம் பெற்றோர் = சஞ்சல கதிவாய்ந்த வாயுவானது தனது நடையை மறக்கமாட்டாத மார்க்கமே என்ன பிராஞ்ஞரது புத்தியானது பேதம் ஒருபோதும் நாடாமல் சின்மாத்திர வஸ்துவை மறக்கவே மாட்டாது=சொரூபாகாரமாய் இருப்பதேயன்றி நழுவுரு, மதியில் நிரந்தரம்=நீக்கமின்றிச் சமா தியுடையோர் சமபாவனையுடைய மகாத்மாவான வர் பொருந்தாநின்ற காரியங்களில் பேத பாவ னையை ஒழித்தோர் நற்பதத்தை அடைந்தவ ராவர்.

ஆத லாற்பன்மை யொருமையா முடற்றொழி லனைத்திற்
போது செய்கிலா வுத்தம வாக்கினுற் பொலிந்த
சேத னத்தவ ரெங்குளர் சித்திர மாகப்
பேத மற்றறி வறிந்தனை தற்பதம் பெற்றாய். (44)

ஆதலால் பன்மை ஒருமையாம் உடல்தொழில் அனைத்தில் போது செய்கிலா உத்தம வாக்கினுற் பொலிந்த சேதனத்தவர் சித்திர மாக எங்குளர் பேதமற்று அறிவு அறிந்தனை தற்பதம் பெற்றாய் = அவ்வேதுவால் அசமாகித சமாகிதம் என்னும் தேகேந்திரியமனவியாபாரமனைத்தினும் காலத் தைக்கழியாத நராதிப வாக்குமாத்திரத்தால் பிரதீதியாம் பேதஞானத்தையுடைய சேதனத் தவர் அற்புதமாக எங்கிருக்கின்றனர் இல்லை யென்றபடி ; பரிகர் கூறுகின்றார் பேதரகித ஆன் மாவை உணர்ந்தனை, இராஜனே! நிச்சய மாகவே பிரபுத்தனாய்த் தற்பத இலக்ஷிய மெய்ப்பதத்தை அடைந்தீர்.

உள்ளூ றக்குளிர்ந் தனையுவா மதியென வுள்ளத்
துள்ள கங்கரத் துயரறத் துரிசற நிறைந்தாய்
தள்ள லாநிலை பெற் றெங்கும் விளங்குதிதானே
தெள்ளி யோயென்ற பரிகற்குச் சுரகு மேற்செப்பும். (45)

உள்ளூறக்குளிர்ந்தனை உவாமதி யெனவுள்ளத்துள்ள கங்கரத் துயரறத் துரிசறநிறைந்தாய் தள்ளலாநிலைபெற்றெங்கும் தானே விளங்குதி தெள்ளியோய் என்ற பரிகற்கு சுரகுமேற் செப்பும் = கலைகள் நிறைந்த பூரணச் சந்திரனைப்போல இதயத்தின்கண்ணே அதிசீதளமடைந்தனை, மனத்துள் அகங்காரத்தினது துன்பம் நீங்கி (குற்றம் நீங்கி) நிர்மலமாய்ப் பூரணரானீர். நீக்கமிலா நிலையை அடைந்து எவ்விடத்தும் சுயம் இலங்கா நின்றீர், காமம், வெகுளி, மயக்கம் அற்ற தெளிந்த அரசனே! எனக் கூறிய பரிகற்கு, சுரகுமன்னன் மேலே சொல்லுவதாவது.

பரந்த சொற்களாற் பயனென்கொல் பயனெலாம் பாறி
நிரந்த ரஞ்சம மாய்மனந் தன்னுளே நிகழ்ந்து
சுரந்த வின்பமாய் நிகரிலா வொருவிழி தோன்றித்
திரந்த னிற்றெரி கின்றதா லென்றனன் தெளிந்தோன். (46)

பரந்த சொற்களாற் பயன் என் கொல் பயன்எலாம் பாறி நிரந்தரஞ் சமமாய் மனந் தன்னுளே நிகழ்ந்து சுரந்த இன்பமாம் நிகர்இலா ஒருவிழி தோன்றி தெளிந்தோன் திரந்தனில் தெரிகின்றதால் என்றனன் = வாக்கிய விஸ்தாரங்களால் பிரயோஜனம் யாது தான் உளது, லோகபயன் யாவற்றையும் விடுத்து எப்போதும் உபசமமாய் உள்ளம் ஆன்மாவினுள்ளேயே இலங்கி மிக்க பேரானந்தமாய் ஒப்பற்ற ஏகவடிவ திருஷ்டியானது சமதிருஷ்டி உதயமாய் பஞ்சப்பிராந்தியினின்றும் தெளிந்த அச்சுரகு நிலையான தனது சொரூபத்தில் தோன்றுகின்றது என்று கூறினன்.

5-7, சுரகு கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1137.

  

# 5-8 பாசவிலாசர் கதை

## அவதாரிகை

முன்பு சித்தவிசிராந்தியே ஜீவன்முக்த சீமா அஃதாவது எல்லே எனப்பட்டது, இப்போது சகல அனர்த்தங்கட்கும் காரணம் அறியாமையுடன் வாழுதல், அவ்வறியாமை அகலுதலே பரமானந்தம் எய்தற்குக் காரணமாம் எனப் பாசவிலாசர் கதையை உதாகரணமாகத் தொடங்கும் ஸ்ரீ வசிஷ்டபகவான் ஆதியில் சுரகு பரிகர் சம்பாஷணையை உபசங்கரித்து ஆகுலம் அடையாநெறியினை அறிவித்தல்.

இத்திறஞ் சுரகுபரிகனன் றிசைத்த விருவருஞ் சகத்தொழுங் கெண்ணிப்
பத்திசெய் தொருவர்க் கொருவர் பூகித்துப்பரிந்து தம்பணிதலை நின்ரு
ரத்தியாத் துமமே நித்தமும் வடிவாயகமுகமாய் மகிழ் வெய்தி
சித்தினை விடாம லனுபவிப் பவர்க்குச்சிறிதுமோ ராகுலஞ் சேரா. (1)

இத்திறம் இசைத்த சுரகு பரிகன் என்றிருவரும் சகத்தொழுங்கு எண்ணி பத்திசெய்து ஒருவருக் கொருவர் பூசித்துப் பரிந்து தம் பணிதலை நின்ருர் நித்தமும் அத்தியாத்துமமே வடிவாய் அகமுகமாய் மகிழ்வெய்திச் சித்தினை விடாமல் அநுபவிப்பவர்க்கு ஓர் ஆகுலம் சிறிதுஞ் சேரா. =

இவ்வண்ணம் பிரசித்த நாமங்களால் இயம்பப் பெற்ற சுரகு பரிகன் என்பவரான இருவரும் பிரபஞ்ச மரியாதையை விசாரித்து அன்புசெய்து பரஸ்பரம் பூஜித்துக்கொண்டு பிரிந்துமகிழ்வுடன் தங்கள் தங்கள் கடமைகளைச் செய்தார்கள். எப்போதும் அத்தியாத்ம சாஸ்திர தற்பரராய் அந்தர்முகமாய்ச் சுகியாய்ச் சிற்சொரூபாநு சந்தானஞ் செய்பவருக்கு மன சோகங்கள் அற்பமும் மருவமாட்டா.

ஆசை வன்பாசத் திரளினுற் கட்டுண்டரும்பிணி யீக்கடிக் கணுங்கி
யேசுறு போகக் கதைகளான் மொத்துண்டிச்சை முட்கோலினு லுலைந்து
காசுறு கருமச் சேற்றிலே யழுந்திக்கடுஞ்சகக் காட்டிலே சுழன்று
வீசுமா மோகத் தளிர்நிழற் றுயிலும்வீரனே சீவனு மெருது. (2)

வீரனே சீவனும் எருதுவன் ஆசை பாசத்திரளினுல் கட்டுண்டு அரும் பிணி யீக்கடிக்கு அணுங்கி ஏசுறு போகக் கதைகளால் மொத்துண்டு இச்சை முள்கோலினுல் உலைந்து காசுறு கருமச்சேற்றிலே அழுந்தி கடுஞ்சகக் காட்டிலே சுழன்று

ஹே மகாவீரீய சௌரிய பராக்கிரமத்தையுடைய இராமா! ஜீவனுகிய காளைமாடு கொடிய ஆசா பாசக் கயிற்றினுல் கட்டப்பட்டு போக்குதற்கரிய (4448) நாலாயிரத்து நானூற்றி நாற்பத்தெட்டு வியாதியாம் ஈக்களின் கடிகளுக்கு நைவுற்று நிந்திதாம் போகங்களாகிய தடிகளானே அடிபட்டு இச்சையாகிற தார்க்கம்பினுல் குத்தப்பட்டு

வீசும் மாமோகத் தளிர் நிழல் துயிலும் = வருந்தித் தோஷம் பொருந்திய அசுப கருமம், சுபகருமம் ஆகிய சேற்றிலே (பங்கத்தில்) புரண்டு மூழ்கிக் கொடிய பிரபஞ்சமாகிய ஆரண்யத்தில் சுழன்று திரிந்து வீசாநின்ற மகாமோகத் தளிரின் சாயையில் தூங்கும்.

மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்துமீட்சிபோக் கிவையுடற் புண்ணு
யீவறு பிறவிக் குழியில்வீழ் சீவவெருத்தினை யிக்குழி நின்று
மோவலின் முயல்வா லெடுப்பதே வலியாமுயர்ந்தஞா னிகளுற வுளதே
ஞவிகர் நாவாய் தருவபோ லூகநல்குவர் பவக்கடல் கடக்க. (3)

மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்து மீட்சிபோக்கி இவை உடல் புண்ணாய் ஈவறு பிறவிக் குழியில்வீழ் சீவ எருத்தினைக்குழி நின்றும் ஓவல்இல் முயல்வால் எடுப்பதே வலியாம் உயர்ந்த ஞானிகள் உறவு உளதே நாவிகர் நாவாய் தருவபோல் பவக்கடல் கடக்க ஊகம் நல்குவர் = கருமத்தால் அடைவுறும் துயர்மயமாய அதி பாரத்தைச் சுமந்து கமனுகமனங்களாய நரக சொர்க்கங்களில் தொடக்குற்றலைதலாலே சரீரம் இரணத்தையடைந்து, உதவுதலின்றிய ஜனன சம்சார இப் படுகுழியில் நின்றும் இடைவிடாது செய்யுஞ் சிரவனுதி முயற்சியால், கரை ஏற்று வதே சாமர்த்தியமாம், மேம்பட்ட ஞானிகளி னுடைய நேசம் இருக்குமேல், சமுத்திரத்தைக் கடக்க மாலுமி ஓடத்தைக்கொடுத்து உதவுவது போல யுக்தியாகிய உபதேசத்தைச் செய்வர்.

எவ்விடத் தில்லை நல்லஞா னிகளாமீர்ங்கனி மலர்குளிர் சோலை
யவ்விடங் கானன் மேடதா மாங்கேயமர்பவ ரறிவிலா ரன்றே
கவ்விய செல்வ நட்புநூல் சுற்றங்கருமமா திகளெலா முதவா
செவ்விய மனமே யுதவுறல் வேண்டுஞ்சீவனைச் செல்கதி யேற்ற. (4)

நல்ல ஞானிகளாம் ஈர்ங்கனிமலர் குளிர் சோலை எவ்விடத்தில்லை அவ்விடம் கானல் மேடதாம் ஆங்கே அமர்பவர் அறிவிலார் அன்றே, சீவனைச் செல்கதி யேற்ற, கவ்வியசெல்வம், நட்பு, நூல், சுற்றம் கருமம் ஆதிக ளெலாம் உதவா செவ்வியமனமே உதவுறல் வேண்டும் = மைத்திரியாதி குணங்களோடு கூடின ஞானிக ளாகிய பலத்தோடு கூடிய வாசனை நிறைந்த தளிர் சீதள சோலை எவ்விடத்து இன்றே அந்தப் பிரதேசம் மேடான பேய்த்தேராம், அப்பிரதேசத் தில் அறிஞர் வசிக்கலாகாதென்பதாம், அவ் விடத்திலிருக்கப்பட்டவர் விவேகமில்லாதவர் அல்லவா, சம்சாரசாகரத்தில் மூழ்கிக்கிடக்கும் சுவான்மாவை முத்தியாங் கரையேற்ற, ஜன் மாந்தர புண்ணியத்தால் அடைவுற்ற ஐஸ்வரி யம், நேயன் = மித்திரன், சாஸ்திரம், பந்து, தொழில் முதலான யாவும் உதவிசெய்யமாட் டாது. சாதனங்கள் நிறைந்து குரு அநுக்கிரக முடைய மனமே உதவிசெய்யவேண்டும்.

நெறியுற விடாம லுடனுறை நட்பா நெஞ்சமத் திரத்தினைக் கூடிச்
சிறிதுநா டுதலுஞ் சீவனுய் வுறுமாற் சிங்கியா மிந்த வூனுடலைச்
முறிதரு காட்ட மோட்டினே ராக முற்றுறு கருத்தினு னோக்கி
யறியிலிவ் வளவா லறிந்துசேர்ந் திடலா மண்டரு மிறைஞ்சு பேரறிவை. (5)

விடாமல் உடனுறை நட்பாம் நெஞ்சமாத்திரத்தினைக் கூடிச் சிறிதும் நெறியுற நாடுதலுஞ் சீவன் உய்வுறும், சிங்கியாம் இந்த ஊன் உடலை முறிதரு காட்டம் ஓட்டின் நேராக முற்றுறு கருத்தினுல் நோக்கி அறியில் இவ்வளவால் அண்டரும் இரைஞ்சு பேரறிவை அறிந்து சேர்ந்திடலாம் = நிரந்தரம் தன்னேடு கூடவேயிருக்கின்ற பரிசுத்த சுகிருத்தாம் மனேமாத்திரத்தைக் கூடி சாஸ்திர முறையாக கிஞ்சித்து ஆராய்ந்து பார்த்தாலும் ஆன்மா நன்கு உத்தரிக்கப்பெறும் நோய்க்கு ஆஸ்பதமாகிய இத்தசைமய சரீரத்தைத் துண்டித்துவிழுங் காஷ்டம் ஓட்டாங்களிச்சி இவைகளுக்குச் சமானமாகப் பரிபூரண மதியால் ஆராய்ந்து அறியில் இத்துணைமாத்திரையானே தேவதைகளும் போற்றும் வியாபக சிற்சொரூப ஆன்மாவை அபரோக்ஷமாய் அடையலாம்.

நிறைபெருங் கடலொத் துரையெலாங் கடந்து நிகரறப் பற்றற வெறிதாய்க்
குறைவில்சிற் சுடரின் கொழுந்துடன் கூடிக் கோதற வசைவறக் குலாவு
மறைவறு துரிய விழிவெளிப் படுமேன் மற்றத னுடனது நிகரா
முறைமையிற் றுயில்வோர்க் கண்ணிதா வுவமை மொழிலாய்ந் தோன்றிடு
மன்றே. (6)

நிறைபெருங் கடல் ஒத்து உரையெலாங் கடந்து நிகர்அற பற்று அறவெறிதாய்க் குறைவில் சிற்சுடரின் கொழுந்துடன் கூடிக் கோதற அசைவு அறக் குலாவும் மறைவறு துரிய விழிவெளிப் படுமேல் அது அதனுடன் நிகராம் அண்ணிதாம் முறைமையில் துயில்வோர்க்கு உவமை மொழியலாய் தோன்றிடு மன்றே = நீரால் நிறைந்த மகோததிபோன்று வாக்கு மனம் இவைகட்குக் கோசரமாகாது ஒப்பற்றுத் திருசிய விஷய இரஞ்சனமகன்று கேவலமாய்ப் பூரண தத்பத இலக்ஷிய ஜோதி வடிவத்துடன் கூடி நிர்த்தோஷமாய் ஸ்திரமாக விளங்கும் ஆவரணமின்றிய துரிய திருஷ்டி கிடைத்திடுமாயின் அது அதற்குத்தானே சமானமாம் சமீபித்ததாய் உவமையின்றெனினும் நித்திரை செய்வோருக்கு உவமைகூறத் தக்கவாறு பிரதீதியாம் = நிர்விக்ஷேபத்வாம்சத்தில் துயில்வோனையே குறிக்கலாம்=துயில் அடைந்தவனுக்கு விஷய ஞானமின்மையும் குடும்ப நிவர்த்தியும் ஆம் அது நிர்விக்ஷேபத்வம் துயில் ஜாட்டியம் அதில் அறிவுபெறின் அஜடம் அதுவே துரியாவஸ்தையாம்.

ஆனவவ் வவத்தை வடிவெலாம் பரிக்கு மம்பரம் போலகன் றுளதா
மீனநெஞ் சுடன்சே ரகங்கர மிறந்தா லெப்பொரு ளிடத்தினு மிருக்குந்
தீனமில் பரமா னந்தமாய்த் தோன்றுந் திகழ்பர மாத்தும் வடிவாந்
தானனி முயலிற் கிடைத்திடுந் துயில்வோர் தன்மைபோற் றம்மினு
டுவதாம். (7)

ஆன அவ்வவத்தை வடிவெலாம் பரிக்கும் அம்பரம்போல் அகன்றுளதாம் ஈன நெஞ்சுடன் சேர் அகங்கரம் இறந்தால் எப்பொருளிடத்தினும் இருக்கும் தீனமில் பரமானந்தமாய்த் தோன்றும் திகழ்பரமாத்மவடிவாம் நனி முயலில்தான் கிடைத்திடும் துயில்வோர் தன்மைபோல் தம்மில் நாடுவதாம் = முன்னர்க் கூறியதான அப்பரமான்ம தசை= (அவஸ்தை) துரியாவஸ்தை ரூபாதிப் பொருள்களைத் தரிப்பதான ஆகாசம்போல வியாபகமுடையதாம், கீழான மனதுடனே சேர்ந்து திரியும் அகங்காரம் ஒழிந்தால் சகல பாவங்களினுள்ளும் திதியாம், பெருமையுடைய பரமானந்தமாக விளங்கும் அதுவே பரமேசுர சம்பந்த 'வடிவமாம், சமாதியில் மிக முயற்சிக்கில் அன்னியரது அபேக்ஷையின்றியே திருக்குவடிவ ஆன்மா அவசியம் அடையப் பெறுவதாம், அதுவே சுழுப்தனுக்குப்போலத் தமக்குள்ளேயே அநுபவிக்கப் படுவதாம். (சுவாநுபவமாம்)

உரைகளுக் கெட்டா துளத்தனு பவிக்கி லுறுவதா முறைத்தவத் துரியங்
கரையறு மிவைகண் முழுதுமப் பொருளாங் கனபரி ணுமியா முள்ளம்
வரைவற வொடுங்கி லுட்புற மெங்கு மன்னிய சராசர வடிவாம்
புரையறு தேவ தேவனும் பரமப் பொருளநு பவப்படுந் தானே. (8)

உரைகளுக்கெட்டாது உரைத்த அத்துரியம் உளத்தில் அனுபவிக்கில் உறுவதாம் கரையறும் இவைகள் முழுதும் அப்பொருளாம் மன்னிய சராசர வடிவாம் கனபரிணுமியாம் உள்ளம் புரையறு தேவதேவனும் பரமப் பொருள்தானே அநுபவப்படும் = வாக்கு மனங்கட்குக் கோசரமாகாதாம் = பல வியாப்தியால் அடையப் பெறுததாய் அந்தத் துரிய நிலைமை இருதயத்தின்கண்ணே விருத்தி வியாப்தியால் கம்மியமாம் = அடையப் பெறுவதாம் எல்லையில்லாத இவை யாவுமே ஆன்ம தத்துவமாம் ஆந்தரத்தும் பாகியத்தும் நிறைந்தமித்தையாகிய சேதனு சேதனப் பொருள்களைப் பற்றி எழும் திடபரிணுமியாகிய சித்தம் நிர்த்தோஷமான சட்சுராதி அதிதேவதைகளுக்கும் தேவனும் பரமான்ம வஸ்து, சுவசொரூபமாகவே சாக்ஷாத்கரிக்கப்படும்.

அதற்பின் விடய வாதனைக ளறுவதாகு மதற் பின்னர்
விதப்பி லாத பொருளினுடை விளக்கமாகு மதற்பின்னர்
சுதப்பண் பில்லாச் சமத்துவத்தாற் சொருபந்தன் னிற்பரினும்
மிதத்தி லுனதா முயர்ந்தோர்க்கு மெண்ணவொண்ணு வடிவிதுவே. (9)

அதன்பின் விடய வாதனைகள் அறுவதாகும் அதன்பின்னர் விதப்பிலாத பொருளினுடை விளக்கமாகும் அதன்பின்னர் சுதப் பண்பில்லாச் சமத்துவத்தால் சொரூபந்தன்னில் பரிணமம் இதத்தில் உளதாம் உயர்ந்தோர்க்கு இதுவே எண்ணவொண்ணு வடிவு = நான்காம் பூமியாம் சத்துவாபத்தி அடைந்த பின்னர் விஷய வாசனைகள் அறுவதாகிய அசம் சத்தியாம், அவ்வைந்தாம் பூமியாகிய அசம் சத்தியின் பின்னர் ஆரும் பூமியின்கண் முயல்வில்லாமலே சுயமான பரம்பொருளின் ஸ்புடமான பிரகாசமாம், அவ்வாரும் பூமியாம் பதார்த்தா பாவனையின் பின்னர் சமாதி அச் சமாதிகளின் சமதையின் வயத்தால் வைஷம்மிய நிவர்த்தியாதலின் சமுத்திரத்தினுள்ளே விலீனமான சைந்தவகனம்போலும் சுகைகரசமாகச் சொரூபத்தில் பரிணமனம் அநாயாசமாகவுண்டாம் இதுவே மகத்துக்களுக்கும் அசிந்திய ரூபமாம்.

மனத்தை மனத்தான் மாய்வித்து மாசில்பொரு ளுேக் காரேலோர்
தினத்து முலகின் றுயர்மாயாச் சித்தமிறக்கிற் செறி சுகத்தார்
கனத்த வுணர்வின் மதிநிகழும் கழறு மிதற்கோ ரிதிகாச
மினத்தி லினியாய் கேட்டியென விசைத்தான் வசிட்ட னிராமனுக்கே. (10)

மனத்தை மனத்தால் மாய்வித்து மாசுஇல் பொருள் நோக்காரேல் ஓர் தினத்தும் உலகின் துயர் மாயாச் சித்தம் இறக்கில் செறி சுகத்தால் கனத்த உணர்வின் மதிநிகழுங் கழறும் இதற்கு ஓர் இதிகாசம் இனத்தில் இனியாய் கேட்டிஎன இசைத்தான் வசிட்டன் இராமனுக்கே = சம்சார ஆசக்த மனத்தை சாஸ்திர சமஸ்காரமான விவேகமுள்ள சித்தத்தினலே சேதித்து சர்வதோஷ விநிர்முக்தமன ஆன்மாவைத் தரிசியாரேல் ஓர்போதும் ஜகத் சம்பந்தமான துன்பம் நீங்கமாட்டாது. உள்ளமானது ஒழிந்தால் நிரதிசயானந்த வடிவ பரிபூரண ஆன்மபோதம் உண்டாம். கூறிய இதற்கு ஓர்கதை அறிஞர்குழாத்து நல்லாய் ஒருமையுடன் சிரவணிப்பாயாக வென்று இராமச்சந்திரரை நோக்கி ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறியருளினர்.

சையமென்னு நெடுங்கிரிமேற் றவவத் திரிமா முனியுறையு
ளுய்ய வதன்பா லிருமுனிவர் சூழலொன்றி னுறைகிற் போர்
மெய்ய ராகு மவ்விருவர்க் கிருவர் பிறந்தார் வியன்புதல்வர்
செய்ய விலாசன் பாசனெனச் செப்பும் பெயரோர் செறிநண்போர். (11)

சையன் என்னும் நெடுங்கிரி மேல்மா அத்திரி தவமுனி உறையும் அதன்பால் சூழல் ஒன்றில் இருமுனிவர் உய்ய உறைகிற்போர் வியன்புதல்வர் இருவர் சஹ்யம் எனக் கியாதி நாமம் வாய்ந்த மகா பர்வதமீது மாட்சிமை பொருந்திய அத்திரியென்னும் நாமமுடைய தவமுனி உறையும் ஆசிரமம் ஒன்று உண்டு அதன் பக்கமாக ஓர் இடத்தில் இரு முனிசிரேஷ்டர்கள் சம்சார சங்கடத்தினின்

| | |
|---|---|
| பிறந்தார் செய்யவிலாசன் பாசன் எனச் செய்யும் பெயரோர் செறி நண்போர் = | றும் ஈடேறத் தவம்புரிந்து வந்தார்கள் சத்திய மாதி விரதங்களையுடைய அந்த இருவருக்கும் அற்புத புத்திரர் இருவர் உண்டானார்கள் சிறந்த விலாசன் என்றும் பாசன் என்றும் சொல்லப் பெற்ற நாமம் வாய்ந்தவர் மிக்க சிநேகித முடையவர். |

ஒழுங்கால் விருத்தி பெற்றிருந்தோ ரொன்றே யிரண்டாயின வென்ன
வழுங்கா வுளத்தோ ரவர்தந்தை யன்னை யென்போ ருயிரிறப்ப
விழுங்கா நின்ற பொருமலொடு மேற்செய் பிதுர்க்கள் விதிகண்முடித்
தெழுங்கா தலினு ணைந்திரங்கி யிருபா லகன்று ரிருவருமே (12)

| | |
|---|---|
| ஒழுங்கால் விருத்திபெற்றிருந் தோர் ஒன்றே இரண்டாயின வென்ன அழுங்கா உளத்தோர் அவர் தந்தை அன்னையென் போர் உயிர் இறப்ப விழுங்கா நின்ற பொருமலொடு மேற்செய் பிதுர்க்கள் விதிகள் முடித்து எழுங் காதலினால் நொந்து இரங்கி இருவரும் இருபால் அகன்றார் = | கிரமமாய் சமான வயது அடைந்து வளர்ந்து வந்தவர்கள் உயிர் (பிராணன்) ஒன்றே இரண் டாயினவென்ன அன்னியோன்னியம் அதிசுகிரு துக்களாய் வருங்கா (வாடா) வல்லபம் வல்லப முடைய மனத்தோர் அவர்கள் பிதா மாதாக்கள் மேல் உலகு அடைந்தவளவில் மேலும் மேலும் தகியாநின்ற விம்மலோடும் மேலே செய்யத்தக் கனவாய மாதா பிதாக்களது உத்தரகிரிகைகளைச் செய்துமுடித்து உண்டாம் அன்பினால் நைவுற்று சோகித்து இருவர்களும் வெவ்வேறு இடத்துக் குப் பிரிந்து சென்றார்கள். |

அளவில் காலம் வனத்துறைந்தா ரரியதவத்தா லுடல்வாட்டிக்
கிளரு மாசை விட்டகன்றார் கிட்டப்பெற்றார் கேண்மையினா
லுளமுங் கண்ணுங் களிப்பெய்தி யுயர்ந்தவிலாச னுரைசெய்வான்
வளரு முலகி னல்லுறவே மன்னுமுயிர்போல் வந்தனையால். (13)

| | |
|---|---|
| அளவில்காலம் வனத்துறைந்தார் அரியதவத்தால் உடல் வாட்டிக் கிளரும் ஆசைவிட்டகன்றார் கிட்டப்பெற்றார் கேண்மையினால் உளமுங் கண்ணும் களிப்பு எய்தி உயர்ந்த விலாசன் உரைசெய் வான் வளரும் உலகில் நல் லுறவே மன்னுமுயிர்போல் வந்தனையால் = | அநேக காலம் காட்டிலே வாசஞ் செய்தார்கள் அரும்பெருந் தவத்தினாலே சரீரத்தை இளைப் பித்து, மேற்கிளம்பித் துன்புறுத்தும் ஆசையை அறவே விட்டொழித்தார்கள். தெய்வகதியால் சந்தித்தார்கள், பழைய சிநேகிதத்தால் மனமும் விதியும் மகிழ்வடைந்து மேன்மைபொருந்திய விலாசன் கூறுவானுயிர்கள் விருத்தியடையா நின்ற இச் சகத்தில் மகா பந்துவே சரீரத்தே யிருக்கும் பிராணன்போல இப்போது வந்து எதிர்ப்பட்டனை. |

இதுநீள் கால மெங்குறைந்தா யிதயவிடர்தீர்ந் தனைகொல்லோ
பொதுவா யுனைநீ யறிந்தனையோ போதவிஞ்சை பலித்தனவோ
சதுரா நலனுண் டாயினையோ சாற்றுமென்ற மொழிகேட்டு
முதுவாய் மையினாற் பாசனிவை மொழிந்தான்விசாலன் முகநோக்கி. (14)

இது நீள்காலம் எங்குறைந்தாய் இதய இடர் தீர்ந்தனை கொல்லோ போதவிஞ்சை பலித்தனவோ பொதுவாய் உனை நீ அறிந்தனையோ சதுரா நலன் உண்டாயினையோ சாற்றும் என்ற மொழி கேட்டு பாசன் விலாசன் முகம் நோக்கி முதுவாய்மையினால் இவை மொழிந்தான் = இதுவரை அனேக வருடங்களாய் எவ்விடத்தில் தவம்புரிந்துகொண்டிருந்தாய் மனோ துக்கங்கள் யாவற்றையும் மருவாது அகற்றினையோ? ஞானம், ஞான சாதனங்கள் பயன்பெற வந்தனவோ சித்த விசிராந்தி அடைந்தனையோ, சொல்லவேண்டுமெனக் கூறிய வசனத்தைச் செவிகொண்டு பாசன் என்பவன் விலாசனது வதனத்தைப்பார்த்து முதிர்ந்த உண்மை வாக்கியங்களால் இவற்றைக் கூறத்தொடங்கினான்.

உயிர்போ லுறவே விதிவயத்தா லுன்னைக்கண்டே னுளங்குளிர்ந்தேன்
செயிர்சேர் பிறப்பி லுழல்வேற்குச் சிறந்தநலனுந் திறனெங்கே
பயில்வ தறிவ தறிவளவும் பாயுமுள்ளங் கெடாதளவும்
வெயில்வெம் பவநீங் காதளவு மிக்கநன்மைத் திறமெங்கே. (15)

உயிர்போல் உறவே விதிவயத்தால் உன்னைக்கண்டேன் உளங் குளிர்ந்தேன் செயிர்சேர் பிறப்பில் உழல்வேற்குச் சிறந்த நலனுந் திறன் எங்கே பயில்வதறிவது அறிவளவும் பாயும் உள்ளம் கெடாதளவும் வெயில் வெம்பவம் நீங்காதளவும் மிக்க நன்மைத் திறம் எங்கே = பிராணனுக்குச் சமானமான நேயனே! தெய்வ யோகத்தால் மனம் மகிழ்ந்து தன்மையுற்றேன், துன்பமயமாய சம்சாரத்திற் சுழன்றுதிரிவேனுக்கு விசேட நன்மை வாய்ந்த குசல விசிராந்தியென்பது எவ்வளவுதூரத்தது, சச்சிதானந்த சொரூபமாய் அறியும் தனது பிரத்யக் சொரூபத்தை ஆராய்ச்சி செய்யும்பரியந்தம் விடயங்களிற் தாவும் மனம் க்ஷீணமாகாதளவும் தாபத்திரயமும் பொருந்திய கொடிய ஜனன மரண சம்சாரக் கடல் தாண்டாதளவும் விசிராந்தி அடைந்து சுகமடைவது எங்ஙனம்?

மனத்தின் முளைக்கு மாசையெலாம் வடித்தகுடாரத் தான்மரம்போற்
கனத்த வேரோ டறுமளவுங் கண்ணுஞானம் பெறுமளவு
மனத்த பேதம் போய்ச்சமமா மளவும்போத முறுமளவுஞ்
செனித்து மரிக்குந் துயரல்லாற் சிறந்தநன்மைத் திறமெங்கே. (16)

மனத்தின் முளைக்கும் ஆசை எலாம் வடித்த குடாரத்தால் மரம் = உள்ளத்தின் கண்ணே எழாநின்ற ஆசைகள் யாவும் வார்த்து எடுக்கப்பட்ட கோடரியால்

போல் கனத்த வேரோடு அறுமலவும் போதம் உறும் அளவும் கண்ணும் ஞானம் பெறுமளவும் அனத்தபேதம் போய்ச் சமமாம் அளவும் செனித்து மரிக்குந்துயர் அல்லால் சிறந்த நன்மைத் திறம் எங்கே = வெட்டி வீழ்த்தப்பட்ட விருக்ஷம்போல திடமாக அடியோடு மூலாவித்தை நாசமாகும் பரியந்தம், போதமுறும் அளவும், பரோக்ஷஞானம் வரும் பரியந்தமும், கண்ணுஞானம் பெருமளவும், அபரோக்ஷ ஞானம் வரும்பரியந்தமும், துன்பமயபேதம் ஒழிந்து சமதிருஷ்டி வரும்பரியந்தமும், பிறந்து இறக்கும் துக்கமேயல்லாமல் நன்மை பயப்பதான விசிராந்தி சுகம் அடைது எங்ஙனம்?

மடமை நோய்க்கு மாமருந்தாய் வருமாத்தும தத்துவப்பேற்றை
விட நின் றவர்க்கு வன்பிறப்பாம் விடுசிமேன் மேல்வந்திடுமா
லிடரின் பத்தி னிடைப்பட்டு மிறப்புப்பிறப் பில்வீழ்ந்தலைந்துந்
தடமா ருலகி லுழலுயிர்கள் சருகினுலர் வரென் றிசைத்தான். (17)

மடமை நோய்க்கு மாமருந்தாய் வரும் ஆத்துமதத்துவப்பேற்றை விட நின்றவர்க்கு வன்பிறப்பாம் விடுசிமேல் மேல் வந்திடும் இடர் இன்பத்தில் இடைப்பட்டும் இறப்புப் பிறப்பில் வீழ்ந்தலைந்தும் தடமார் உலகில் உழல் உயிர்கள் சருகின் உலர்வரென் றிசைத்தான் = அறியாமையாகிய வியாதிக்குப் பூபதி ஔஷதமாய் வாராநின்ற ஆன்மதத்துவஞானமாகிய பிரயோஜனத்தை விட்டிருப்பவருக்கு (அடையாமலிருப்பவருக்கு) கொடிய ஜனனமாம், விடூசிகைமறித்தும் மறித்தும் வந்துசேரா நிற்கும் துக்க சுகமத்தியில் வீழ்ந்தும் இறப்பில் பிறப்பில் வீழ்ந்து அவதிப்பட்டுச் சுழன்றும் விசாலம் பொருந்திய உலகின்கண் சுழலாநின்ற பிராணிகள் பட்டுப்போன சருகுபோலக் காய்வர் (வருந்துவா) என்பதாகப் பாசன் கூறினன்.

5 – 8 பாசவிலாசர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம் — 1154.





# 5-9 வீதகவ்வியன் கதை

## அவதாரிகை

முன்புசித்த விசிராந்தியின்றெனில் வெகுவிதப் பிரயாசமெனப்பட்டது, இப்போது சித்தவிசிராந்தி சித்தித்தற்குச் சங்கத்தியாகமும், பிராண நிரோதமும், சமாதியப்பியாசமுஞ் செய்யவேண்டுமென வீதகவ்வியன் கதையால் நிரூபிக்கப்படுகின்றது.

இன்னணமே நன்மைவினுத் தம்மிற்ரு யியம்பியுறை யிருவருக்கு
முன்னியநற் காலத்தான் முத்திதரு மெய்ஞ்ஞான முந்திற்றன்றே
யன்னதினு லுரைக்கின்றேன் வெம்பவத்தை ஞானத்தாலன்றி மாய்க்கப்
பின்னையொரு நெறியில்லைப் பாசத்தாற் பிணிப்புண்ட பிணிநெஞ்சுக்கே. (1)

இன்னணமே நன்மை வினுத் தம்மிற்ரும் இயம்பியுறை இருவருக்கும் முத்திதரும் முன்னிய மெய்ஞ்ஞானம் நற்காலத்தால் உந்திற்று, அன்னதினல் உரைக்கின்றேன் வெம்பவத்தை ஞானத்தாலன்றி மாய்க்க பாசத்தால் பிணிப்புண்ட பிணிநெஞ்சுக்கு பின்னையொரு நெறியில்லை = இந்தப்பிரகாரம் குசலப்பிரசினம் (வினு அசலோத்தரம்) விடை குசலப்பிரசினங்களைப் பரஸ்பரம் சம்பாஷித்துக்கொண்டிருக்கும் பாசவிலாசர் இருவருக்கும் மோக்ஷம் அடைதற்குச் சாதனமாகக் கருதிய தத்துவ ஞானம் புண்ணிய புஞ்ச பரிபாகத்தால் அடைவுற்றது; அக் காரணத்தால் சொல்கின்றேன், கொடிய சம்சாரத்தைத் தத்துவஞானத்தாலல்லாமல் நாசஞ்செய்ய மற்று ஒரு மார்க்கமும் இல்லை. ஆசாபாசத்தினுலே கட்டுண்ட நோய்மய மனதுக்கு மற்றுமொரு மார்க்கமும் இல்லை.

பற்றிலதாய் நிற்மலமா மனம்விவகா ரம்பயின்றும் பந்தமேவாப்
பற்றுளநெஞ் சளவிறவம் படைத்தாலும் பந்தமேபயிலு முள்ளிற்
பற்றிலதா யினியதொழில் பயில்சீவன் புறத்தொழில்கள் பண்ணினுலும்
பற்றறப்பண் ணுவிடினும் பண்ணுவோரன் புசிப்போனும் பான்மைமேவா. (2)

பற்றிலதாய் நின்மலமாம் மனம் விவகாரம் பயின்றும் பந்தமேவா பற்றுளநெஞ்சு அளவில் தவம் படைத்தாலும் பந்தமே பயிலும்- உள்ளில் பற்றிலதாய் இனிய தொழில் பயில் சீவன் புறத் தொழில்கள் பண்ணினுலும் சங்கமிலதாய் அமலமான மனமானது இராஜ்யாதி விவகாரஞ் செய்யினும் பந்தம் (கட்டு) கட்டுப்படா நெஞ்சையுடைய (சங்கமுடைய) மனம் அளவற்ற தவங்களைச் செய்தபோதினும் பந்தமே அடையும். அந்தரத்தேசங்கமின்றி மதுரமுள்ளது = மதுரம் மதுகரம் மது=பூவிரதம் என்பது அநுபவிப்பது அதனது தொழில் பயில்

பற்றறப்பண்ணுவிடினும் பண்ணுவோன் புசிப்போனும் பான்மை மேவா = (மதுகரம்) வண்டு மலர்களில் கிட்டியமட்டும் (தேன்) தேனக்கிரகித்து பற்றின்றியே சுகமாகச் சஞ்சரிக்கும் அதுபோலத் தொழில் (லோகோபகார நன்மையான தொழிலை) இயற்றுஞ் சீவன் பாகிய விவகாரங்களைச் செய்யினும் சங்கமின்றிச் செய்யாவிடின் கர்த்தா போக்தாத்தன்மையை அடையார்.

என்னலுமே பற்றுவ தெத்தன்மை யெப்பற்று லெய்தும்பந்தத்
துன்னரும்வீ டெப்பற்று லெய்தலாந் தொடர்பற்றைத் துடைக்குமாறென்
பன்னுகெனு மிராமனுக்கு முனிபகர்வா னுடலுயிரைப் பகுப்பதொன்று
முன்னுகிலா துடலினைநம் புதல்பற்று மதனுலே யுளதாம்பந்தம். (3)

எப்பற்றல் என்னலுமேபற்றுவது எத்தன்மை எய்தும் பந்தம் துன்னரும் வீடு எப்பற்றல் எய்தலாம் தொடர்பற்றைத் துடைக்குமாறு என் பன்னுக எனும் இராமனுக்கு முனி பகர்வான் உடல் உயிரைப் பகுப்பது ஒன்றும் உன்னுகிலாது உடலினை நம்புதல் பற்றும் அதனுலே உளதாம் பந்தம் = சங்கமே பந்தகாரணம் என்று அருளலும் பற்று இலக்கணம் யாது எப்பற்றல் பந்தமாகும்? எப்பற்றல் மோக்ஷமாம்? பந்த ஏதுவாகத் தொடர்ந்த பற்றை அகற்றுவது எவ்வுபாயத்தால் அருளல் வேண்டும் என்று பிரார்த்தித்த ஸ்ரீ இராகவருக்கு, ஸ்ரீ வசிஷ்டபகவான் விடை கூறுகின்றார். உடல், ஜடம், க்ஷேத்திரம், உயிர், சேதனம், க்ஷேத்திரஞ்ஞன், சிறிதும் பிரித்துப்பாராமல் தேகத்தினை விசுவசித்து அபிமானித்தல், பற்றும், சங்கமமாம். அதனுற்றன் பந்தமானது உண்டாகின்றது.

ஈதனைத்துஞ் சொருபமே யானிங்கெத்தை யிச்சிப்பேனெதையிகழ்வே
னெனல்பற்றின்மை
மாதுயர்தீ ரிதுசீவன் முத்தர்மெய்யின் மன்னுமாலியானில்லைப் பிறருமில்லை
மேதகுமின் பங்களெலா மேவின்மேவ மேவாதேன்மேவாதா யிடுகவென்றே
யோதியவா றுள்ளேபற் றின்மையுண்டே லுயரவீட்டுக்கிதுநெறியென்
றுணர்தியன்றே. (4)

ஈது அனைத்துஞ் சொருபமேயான் இங்கு எத்தை இச்சிப்பேன் எதை இகழ்வேன் எனல் பற்றின்மை இது மாதுயர்தீர் சீவன்முத்தர் மெய்யில் மன்னும் யான் இல்லை பிறருமில்லை மேதகும் இன்பங்கள் எலாம் மேவில்மேவ மேவாதேல் = (பற்றின் விரோதியாய அசங்கஸ்திதி குறிப்பிக்கப்பெறுகின்றது) நாமரூபான்மகத்தோற்றமாம் இப் பிரபஞ்சம் யாவும் ஆன்மாவேயாம் (அதிஷ்டானசத்தாவெதிரிக்த சத்தா சூனியத்துவம்) ஈண்டுயான் எதனை வாஞ்சிப்பேன் (கொள்ளுவேன்) எதனைத் தள்ளுவேன் என்பது அசங்கத் தன்மையாம், இந்த அசங்கத்தன்மை பேரிடரை

மேவாதாயிடுக என்றே ஓதிய வாறு உள்ளே பற்றின்மை உண்டேல் உயர்வீட்டுக்கு இதுநெறி என்று உணர்தி = நிவர்த்திக்கும் ; ஜீவன்முத்தர் இருதயத்தில் இருப்பதாம் இது அகங்கார பரிச்சின்னன் ஆகேன் ; என்னினும் அன்னியம் எதுவுமில்லை. மேன்மை பொருந்திய சுகங்கள் யாவும் உண்டாகுமேல் உண்டாகுக. வாராதேல் வாராதொழிக என்பதாகவே கூறியபடி ஆந்தரத்தில் அசங்கத்தன்மை வருமானால் சிரேஷ்டமான மோக்ஷத்துக்கு இதுவே மார்க்கம் என்று அறிந்துகொள்வாய்.

கருமமிலா மையை விரும்பார் கருமம்பெற்றார் கருதுபலன் விட்டிரண்டுங் கண்டாலொப்போர்
மருவியபற் றிலாதவரென் றுரைப்பர் மேலோர் வருகரும பலாதிகளைக் கருமத்தாலே
யொருவலற மனத்தாலே நிபுணமாக வொருவுதல்பற் றின்மையென வுணர்தி யித்தால்
பெருகவளர் தொழிலனைத்துங் குற்றந்தீர்ந்து பெறலரிய முத்தியையும் பேரு நல்கும். (5)

கருமம் இலாமையை விரும்பார் கருமம் பற்றார் கருதுபலன் விட்டு இரண்டுங் கண்டால் ஒப்போர் மருவிய பற்றில்லாதவரென்று உரைப்பர் மேலோர் கரும வருபலாதிகளைக் கருமத்தாலே ஒருவல் அறமனத்தாலே நிபுணமாக ஒருவுதல் பற்றின்மை உணர்தி இத்தால் பெருகவளர் தொழில் அனைத்துங் குற்றந்தீர்ந்து பெறலரிய முத்தியையும் பேரு நல்கும் = கருமம் (ஜோதிஷ்டோமாதிகள்) பலம் (சுவர்க்காதிகள்) கருமத்தியாகம் வாஞ்சியார் ; கருமத்தில் தொடராரர்; விரும்பத்தக்க கருமபலேச்சை இன்றி இரண்டினையும் பார்த்தால் சித்தி, அசித்திகளில் சமமுளோர் ; பொருந்திய பற்றிலாதவர் என்பதாகச் சொல்லுவர் பெரியோர் ; கருமத்தினால் வாராநின்ற சொர்க்கலோகாதிப் பயன்களை ஜோதிஷ்டோம எக்ஞாதி கருமாதிகளாலே (காயிககருமம், உபாசனாதி மானசீக கருமங்களாலே) செய்கையில் ஒழிதல் இல்லாத மனத்தாலே சாமர்த்தியமாய் விட்டிருத்தல் (அசம்சத்தி) அசங்கம் என அறிந்துகொள்வாய் இதனால் நானாவிதமான பல இராகங்களானே விரிந்துள்ள துர்ச்சேட்டைகள் யாவற்றையும் அசம் சங்கனாற் சிக்ஷிக்கப்பெற்று அதனால் அடைதற்கரிய மோக்ஷத்தையும் பயனாகக் கொடுக்கும்.

புழுமுதலாம் பல்பிறப்பிற் றோன்றிப்பல்காற் பூதமெலாங் கடற்றிரைபோற் பொன்றுந்தன்மை
புழுதுதரும் பற்றினது படர்ச்சியாகும் பற்றுத்தானிருவகையா மவற்றினொன்று

நழுவுபய னிலியொன்று வணங்கற்பாற்று நவின்றபயனிலிமூடர்
நண்ணற்பாற்றும்
வழுவறுதத் துவமுணர்ந்தோர்க் குடைமையாக வணங்கற்பாற்றும்
பற்றுமருவுந்தானே. (6)

பூதமெலாம் புழு முதலாம் பல் பிறப்பிற் பல்கால்தோன்றி கடல் திரைபோல் பொன்றுந்தன்மை பழுதுதரும் பற்றினது படர்ச்சி யாகும் பற்றுத்தான் இருவகை யாம் அவற்றில் ஒன் று நழுவுபய னிலி ஒன்று வணங்கற்பாற்றும் நவின்ற பயனிலிமூடர் நண்ணற் பாற்றும் வழுவறு தத்துவமுணர்ந் தோர்க்கு உடைமையாக வணங் கற்பாற்றும் பற்று மருவுந் தானே =

உயிர்கள் யாவும் கிருமிகீட முதலிய அனேக ஜன்மங்களில் பலபடியாக விவர்த்த ரூபத்தால் உதித்துச் சமுத்திரத்தின் அலைபோல நாசமாந் தகைமையானது கெடுதலையே செய்யும். சங்கத் தினது விரிவு (விஜ்ரும்பிதமாம்சம்சத்தியானது) இரண்டு பிரகாரமாகும். தள்ளத்தக்கனவாம் வந்திபற்று ஒன்று அவற்றுள் கூறிய வந்திபற் றும் ஒன்று அன்னியம் பூஜிக்கத்தக்கதாம் நவின்ற பயனிலிமுத்தர் பொருந்துவதற்குரிய தாம். நிர்த்தோஷமான பிரஹ்மத்தை சாக்ஷாத் கரித்தவர்களுக்குச் செல்வமாக பூஜிக்கத்தக்க வந்திசங்கம் பொருந்தியிடும் சுயமாகவே.

ஆத்துமதத் துவவுணர்வால் விவேகந்தன்னுலடைவாக வுண்டாம்
பிண்பணுகாச்சென்ம
மேற்றமுள தொழுதகைய பற்றீதாகு மீதன்றிப்பயனிலி யாம்பற்றேதென்னி
லூற்றமுறு முணர்வின்றி யுடல்முன்னு முறுபொருளினுலுண்டாமூல கந்தன்னி
ரேற்றமுறு பிறவிமீண் டுள்ளதாக்குந் தோன்றலே யிவையிரண்டுந்துணிந்து
கொள்வாய். (7)

தோற்றமுறும் உலகந்தன்னில் ஆத்துமதத்துவ விவேகந்தன்னுல் அடைவாக உண்டாம் உணர் வால் சென்மம் பின்பு அணுகா ஈது ஏற்றமுள தொழுதகைய பற்று ஆகும் ஈதன்றி பயனிலி யாம் பற்று ஏதென்னில் ஊற்ற முறும் உணர்வின்றி உடல் முன் னும் உறுபொருளினுலுண்டாம் பிறவிமீண்டு உள்ளதாக்கும் தோன்றலே இவையிரண்டும் துணிந்துகொள்வாய் =

(அதனது சொரூபத்தை நிரூபித்திருந்தபோதி னும் பிரகாராந்தரத்தால் கூறல்) பிரதீதியாகா நின்ற பிரபஞ்சத்தில் நித்தியாநித்திய வஸ்து விவேக ஆராய்ச்சியினுல் கிரமமாக வைராக்கி யம், சமாதிஷ்டகசதம்பத்தி முமுக்ஷுத்வம் அடையப்பெறும். அதனுல் ஆன்மஞானம் அடை யப்பெறும், அதனுல் ஜனனம் பின்பு உண்டாகா. இதுவே சிரேஷ்டம் பொருந்திய வணங்கற்பாற் றும் பற்றுகும். இங்ஙனம் அல்லாமல் பயனிலி யாம் பற்று ஏதென்னில், தள்ளத்தக்க பற்று ஏதெனில் தேகமுதலிய திருசியப் பொருள்களி லுண்டாம் பிறவியை மறுபடியும் உண்டாக்குவ தாக்கும். இராகவனே! இவை இரண்டினையும் நிச்சயித்துக்கொள்வாய்.

வளையாழி கதைகரத்த செங்கண்மேனி வணங்கப்பா ற்றும்
பற்றின் வசத்தினலே
யிளையாமல் விவிதமாந் தொழிலினுலே யெவ்வுலகுநன்றுக விரங்கிக்காக்கு
முளையாத விஞ்ஞானக் கதிசேர் சித்தருலகபாலராதி யுரைத்தவாறே
விளையாடி வணங்கப்பாற் றென்னும்பற்ருல் விரிந்தசகமூர்த்தத்தின்
மேவிநுன்ருர். (8)

வளையாழி கதைகரத்த செங்கண் மேனி வணங்கற்பாற்றும் பற்றின் வசத்தினலே இளையாமல் விவித மாந் தொழிலினலே எவ்வுலகும் இரங்கி நன்ருகக் காக்கும் உளை யாத விஞ்ஞானக் கதிசேர் சித்தர் உலக பாலராதி உரைத்தவாறே விளையாடி வணங்கற்பாற்றென் னும் பற்ருல் விரிந்தமூர்த்த சகத் தின் மேவி நின்ருர் =

சங்கு, சக்கர, கதா, ஹஸ்த, செந்தாமரை விழி கார்மேனியனை ஸ்ரீ மகாவிஷ்ணு முதலியோர் களும் வணங்கற்பாற்றும் சம்சத்தி வசத்தினலே ஓயாமல் (தளராமல்) தசாவதார முதலிய நாஞ விவகாரங்களினலே எல்லா உலகங்களையும் தய வோடு சிறப்பாக இரக்ஷிக்கின்ருர்கள் மனம் நோவாத விஞ்ஞானத்தால் சொரூபத்தில் ஸ்திதி யடைந்த சித்தர் உலகபாலகர் முதலியவர்களும் கூறிய வண்ணமே கிரீடை புரிந்து வணங்கற் பாற்று என்னும் பற்ருல் விஸ்தாரமாய் மூர்த்தத் திரவியமாகிய சக மண்டலத்தில் வாழ்ந்து வரு கின்ருர்கள்.

கேடான நல்லதெனு நினைவினுலே கிளர்போக வசத்தாலே கிட்டிநெஞ்சம்
வீடாத பயனிலியாம் பற்றினலே வெறும்பிணத்துக் கழுகுபோல் வீழுமன்றே
பாடான பயனிலியாம் பற்றுளோர்க்குப் பன்னரகங்களும் வீடாய்ப் பண்ணப்பட்ட
வீடான பயனிலிப்பற் றுள்ளோரென்னு மிளவிறகா னரகவெரி
யெரியுமன்றே. (9)

நல்லதெனும் கேடான நினைவி னலே கிளர்போக வசத்தாலே நெஞ்சம் கிட்டி வீடாத பயனிலி யாம் ஙற்றினலே வெறும் பிணத் துக்கு கழுகுபோல் வீழுமன்றே பாடான பயனிலியாம் பற் றுளோர்க்குப் பன்னரகங்களும் வீடாய்ப் பண்ணப்பட்ட வீடான பயனிலிப்பற்றுள்ளோரென்னும் இளவிறகால் நரக எரி எரியு மன்றே =

இரமணீயமென்னும் வியர்த்தமான எண்ணத்தி னலே பார்வைமாத்திரத்தானே மயக்கஞ் செய் யும் போகவசத்தில் மனம் ஈடுபட்டு விவேகத்தா லன்றி நீங்காத பிரயோஜனமற்ற பயனிலியாம் சம்சத்தியாலே, கேவலம் பிணமாமிசலேசத்தில் வீழாநின்ற கழுகுபோல் வீழும் பெருந்துயரைப் பயப்பனவாய பயலினியாம் பற்று உடையவ ருக்கு பல நரகங்களும் (இரௌரவ அவீசி முத லிய நரகங்களும்) வீடாகக் கருமச்சிறப்பினலே செய்யப்பெற்றனவாம். ஈடு, வலிவிடற்கு அரிது என்றபடி; பயனற்ற பற்றுடையவர் எனப் பெறும் காய்ந்த சிறு சிறு இந்தனத்தால் நரகாக் கினி ஜொலித்து எரியும்.

விச்சையெனும் விழிநன்ருய் விளங்கப்பட்டு வெம்மாய விடயத்தின் மீட்சியெய்தி
யிச்சையுறு பற்றென்ப தெங்குமில்லா வியன்மனத்தோ டிருப்பவரே யிறவாமுத்தர்
நிச்சயமா யெப்போது மெவற்றின்பாலு நிற்பவனு யனைத்துடனு நிற்போனுகி
யெச்செயலுஞ் செய்வோனுஞ் சீவன்முத்தனியற்றிய விப் மனத்தின்ற னியல்புகேளாய். (10)

விச்சையெனும் விழிநன்ருய் விளங்கப்பட்டு வெம்மாய விடயத்தில் மீட்சி எய்தி இச்சையுறு பற்றென்பது எங்கும் இல்லா வியன் மனத்தோடிருப்பவரே இறவா முத்தர் நிச்சயமாய் எப்போதும் எவற்றின் பாலும் நிற்பவனுய் அனைத்துடனும் நிற்போனுகி எச்செயலுஞ் செய்வோனுஞ் சீவன் முத்தன் இயற்றிய இம் மனத்தின்றன் இயல்பு கேளாய் =

பிரஹ்மவித்தையென்னும் திருஷ்டி நலமாக இலங்கப்பெற்றுக் கொடிய சம்சார விடயங்களினின்றும் திரும்புதலடைந்து, அநுசந்தானரகிதனுய் ஆசாபாசசம்சத்தி எவ்விடத்துமில்லா, திருசிய விஷயத்தில் பற்றென்பதில்லா மேலான சத்துவமனத்தோடிருப்பவரே (நித்திய, கெடாத) முத்தராவர்; துணிபு பொருந்தியவனுய், எக்காலத்தும் சகல ஆசன, போஜனம், சையை முதலியவைகளில் கூடி நிகழ்பவனுய் எவ்விவகாரமும் தஞ்ஞுன் அஞ்ஞுனுடனும் விவகரித்து நிற்பவனுய் சாஸ்திரம் விதித்த கருமங்களைப் பரோபகாரப்பொருட்டுச் செய்வோனுஞ் சீவன் முத்தன் தன்வசஞ் செய்த இவ்வுள்ளத்தினது சுபாவத்தைக் கேட்பாயாக.

தொழிலினினை விற்பொருளிற் விண்ணின் மேல்கீழ்சூழ்திசையிற் புறப்போகத் தொகுதிதம்மி
லிழிதருமைம் பொறிநடையி லுள்ளினிற்கு மின்னுயிரிற் சென்னியிலா னனத்தினுவி
லழியும்விழி களின்மூக்கிற் புருவந்தன்னி லகங்கரத்திற் சீவனுள் ளாகாசத்தில்
விழிநனவிற் சொப்பனத்தில் சுழுத்திதன்னில் வெள்ளைமுத னிறமைந்தின் வியன்வண்ணத்தில். (11)

தொழிலின் நினைவிற் பொருளில் விண்ணில் மேல் கீழ் சூழ்திசையில் புறப்போகத் தொகுதி தம்மில் இழிதரும் ஐம்பொறி நடையில் உள்ளில் நிற்கும் இன் உயிரில் சென்னியில் ஆனனத்தில் நாவில் அழியும் விழிகளில் மூக்கில் புருவந் தன்னில் அகங்கரத்தில் சீவன்

முடியக்கூடிய விவிதமான சேஷ்டை (காரியங்) களிலும் (எண்ணந்தில்) (சென்ற விடயங்களின் சிந்தனையிலும்) வர்த்தமான வஸ்துக்களிலும் ஆகாசத்தில் மேல் கீழ் திக்குகளிலும் பாகிய களத்திர புத்திராதி விடயங்களிலும் நிந்திதமாய பஞ்ச இந்திரிய விருத்திகளிலும் ஆந்தரத்திலிருக்கும் இனிய பிராணனிலும் சிரசிலும் ஜிங்ஙவையிலும், நைஸ்வரமான நேத்திரங்களிலும்

உள்ளாகாசத்தில் விழி நனவில் சொப்பனத்தில் சுழுத்திதன்னில் வெள்ளைமுதல் நிறம் ஐந்தின் வியன்வண்ணத்தில் = நாசியிலும், புருவத்திடையிலும், அகங்காரத்திலும், ஜீவனிடத்திலும், இதயாம்பரத்திலும், சாக்கிரத்திலும், கனவிலும், சுழுத்தியிலும், சுவேதம், நீலம், பீதம், இரத்தம், சியாமளம் முதலிய பஞ்சவர்ணத்தில் கலந்த நானுத்துவத்திலும்.

சலனத்திற் றிரத்திலடி நடுவிலீற்றிற் சமீபத்திற் றூரத்திற் சரீராங்கத்திற்
பலபண்டந் தன்னிற் சேதனத்திற் சத்தபரிசாதிகளின் மகிமைபயி லின்பத்தி
லுலவுவரத் திற்போக்கிற் காலப்பண்பி லொருசிறிதும் பற்றும லுணர்விலாறி
நிலவியகாண் பனசிறிதுபயின்று மெங்கு நிராசையாய்ப் பரசுகத்தி
னிற்குநெஞ்சே. (12)

சலனத்தில் திரத்தில் அடி நடு ஈற்றில் சமீபத்தில் தூரத்தில் சரீராங்கத்தில் பலபண்டந்தன்னில் சேதனத்தில் சத்தபரிசாதிகளில் மகிமை பயில் இன்பத்தில் உலவு வரத்தில் போக்கில் காலப் பண்பில் ஒரு சிறிதும் பற்றுமல் உணர்வில் ஆறி நிலவிய காண்பன சிறிது பயின்று எங்கும் நிராசையாய்ப் பரசுகத்தில் நிற்கும் நெஞ்சே = அசைவில் அசைவின்மையில் ஆதியில் மத்தியில் கடையில் அண்மையில் சேய்மையில் தேக அவயவத்தில் பலபதார்த்தங்களில் சேதனத்தில் (ஆன்மாவில்) சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தங்களில் பெருமை செறிந்த ஆனந்தத்தில் சலித்து வாரா நின்ற கமனுக மனங்களில் காலகலனைகளில் அற்பமும் சம்பந்தியாமல் சொரூபத்தின்கண்ணே விசிராந்தியுற்றுப் புலப்படா நின்ற திருசிய விவகாரம் அற்பஞ்செய்து எவ்விடத்திலும் நீரசமென்று உணர்ந்து மனம்பற்றிடாவாறு வைராக்கியமாய் மேலான நிரதிசயானந்தத்தில் மனம் அமர்ந்திருக்கும்.

செப்பியவத் திறநின்று பற்றென்றிச் சீவத்தன்மை யைச்சேராச் சீவன்முத்த
ரிப்புவியிற் றெழிலெல்லாஞ் செய்கதீர்க வின்பவுணர்வன் செய்கை
யியற்றினுலுந்
தப்பறவே விட்டாலுந் தொழில்கடம்மாற் றருபயன்க ளொருசிறிதுந்
தாக்கமாட்டா
மைப்புயல்கள் பலவிதமா யெழுந்தபோதும் வானகத்திற் பற்றுத
வகையேபோல. (13)

செப்பிய அத்திறம் நின்று பற்றென்றிச் சீவத்தன்மையைச் சேராச் சீவன்முத்தர் இப்புவியிற் றெழிலெல்லாஞ் செய்க தீர்க இன்பவுணர்வன் செய்கை இயற்றினும் தப்பறவே விட்டாலுந் கூறிய அத்தன்மையுடனிருந்து சங்கம் சிறிதுமின்றி ஜீவத்துவம் ஒழிந்தவராய சீவன்முத்தர் இவ்வுலகில் சகல காரியங்களையுஞ் செய்க அல்லது செய்யாதொழிக விதிநிடேதகாரியங்களை இயற்றினும் தவறுதலின்றி விட்டபோதினும்

தொழில்கள் தம்மால் தருபயன் கள் ஒரு சிறிதும் தாக்கமாட்டா மைப்புயல்கள் பலவிதமாய் எழுந்தபோதும் வானகத்தில் பற்ருத வகையேபோல = அவ்வக்கருமங்களினுலே உண்டாகாநின்ற பிரயோஜனங்கள் அற்பயேனும் சம்பந்தியாவாம்; கார்மேகங்கள் நாஞவிதமாக உண்டானபோதிலும் ஆகாசத்தில் யாதொரு சம்பந்தமுருத் தன்மையே போலவாம்.

அன்றியே யதுதனையுந் தீரநீக்கி யறிபொருளின் முடிவான வறிவாற்றுன்னி
யொன்றுமுப சாந்தனுய்ப் பளிங்குபோ லுள்ளொளிமேவிச் சீவனொருமித்து நிற்ப
னன்றுணர்சிற் சுகராகிப் பெரியோராகி ஞானபரராய்ப் பரம நன்ருய்ப்பெற்ருேர்
நின்றசைவார் புறத்தின்மயிற் பீலிபோல நிலைகலங்கார் மேருவைப்போ னெஞ்சி னுள்ளே. (14)

அன்றியே அதுதனையுந் தீரநீக்கி அறிபொருளின் முடிவான அறிவால் துன்னி ஒன்றும் உபசாந்தனுய்ப் பளிங்குபோல் உள்ளொளிமேவிச் சீவன் ஒருமித்து நிற்பன் நன்று உணர் சிற்சுகராகிப் பெரியோராகி ஞானபரராய் பரமம் நன்ருய்ப் பெற்ருேர் மயிற்பீலிபோல புறத்தில் நின்று அசைவார் மேருவைப்போல் நெஞ்சினுள்ளே நிலைகலங்கார் = அல்லது மேற்கூறிய சிறிது பயின்ற திருசிய வியாபாரத்தினையும் அடியோடகற்றித் திருசிய அந்தமான அறிவோடு (சிற்சொருபத்தோடு) கூடினவனுய்ப் பொருந்தாநின்ற பரம சாந்தியையுடையவனுய் ஸ்படிக மணியைப்போல ஆந்தரப் பிரகாசத்தை அடைந்து ஜீவன் நிலைபெற்று இருப்பன். உண்மையையுணர்ந்த ஞானனந்த வடிவராய், ஞானதற்பரராய்ப் பரமான்ம வஸ்துவை ஐயந்திரிபு இன்றி அடைந்தோர் மயில் தோகைபோலப் பாகியத்தில் விவகாரங்களைச் செய்யினும் மேருகிரியைப்போல அந்தக்கரணத்தில் தங்கள் ஸ்திதியை விட்டுச் சலனமுருர்.

அறிபொருளை விட்டகன்ரு லழியுஞ்சித்த மந்தநிலைவியாபார மலைத்து மில்லாச்
செறிநனவிற் சுழுத்தியா மிதனைநாளுந் தீராதபரிசயமே செய்யச் செய்யப்
பிறிவின்முது துரியமா மென்பர் மேலோர்பிழையிலா விதனிலே நிலைமைபெற்றுக்
குறியறுமா னந்த வேகாந்தசீலக் குறியறுகொள்கையா லானந்தங் கூடுமன்றே. (15)

அறிபொருளைவிட்டகன்ருல் சித்தம் அழியும் அந்தநிலை வியாபார மனைத்துமில்லாச் செறிநனவிற் சுழுத்தியாம் இதனை நாளும் தோஷ திருஷ்டியால் திருசிய வஸ்துக்களைவிட்டு விலகினுல் மனமானது கெடும்; அந்த ஸ்திதி தொழில்கள் யாவற்றின் வாசனை ஒழிந்த பொருநதிய சாக்கிர சுழுத்தியாம்=சொருபத்தில்

தீராத பரிசயமே செயச்செய்ய பிரிவுஇல்முத்து துரியமாம் என்பர் மேலோர் பிழையிலா இதனிலே நிலைபெற்றுக் குறியறும் ஆனந்த ஏகாந்தசீலக் கொள்கையால் ஆனந்தந்தங் கூடுமன்றே = விழிப்பும் பிரபஞ்சத்தில் உறக்கமும் ஆம் இந்த நனவிற் சுழுத்தி நிலையினை நெடுங்காலம் நிரந்தரம் அப்பியாசம் செய்யச்செய்யப் பேதவர்ஜ்ஜிதமாம் பயன் நிறைந்த துரியமாம் என்று அறிஞர் கூறுவர். குற்றமற்ற இது தன்னிலே ஸ்திதியை அடைந்து அபரிச்சின்ன ஆனந்த ஏகாந்தலீனத்தன்மையால் அனுனந்தபதம் = சொரூபாதிரிக்த ஆனந்தரகித பிரஹ்மபாவத்தை அடைந்தவனேயாவன்.

அந்தவனு னந்தமானந்த மென்னுமறிவி னதீனந்தன்னை யடைந்துளோனைத்
தொந்தமிலா யோகியெனச் சொல்லாகுந் துரியாதீதந்தனையு துன்னிஞேனும்
பந்தமுறு பவம்போய்த் தாமதத்தால் வந்தபலவபிமானங்கள் போய்ப்பரமவின்ப
நந்தலிற் றன்மயமாஞ்சற் பாவந்தன்னி னன்னீரிலுப்புப்போ
னன்றுயொன்றும். (16)

அந்த அனுனந்தம் என்னும் அறிவின் அதீனந்தன்னையடைந்துளோனைத் தொந்தம் இலா யோகியெனச் சொல்லலாகும் துரியாதீதந்தனையும் துன்னிஞேனும் பவம் உறுபந்தம் போய்த் தாமதத்தால் வந்த பல அபிமானங்கள் போய்ப் பரம இன்பம் நந்தல்இல் தன்மயமாஞ்சற்பாவந் தன்னில் நல் நீரில் உப்புப்போல் நன்றுய் ஒன்றும் = அந்த அனுனந்தம் மாஆனந்தம் என்று சொல்லப்பட்ட (துரியபதமென்று சொல்லப்பட்ட) உணர்வின் அதீதத்தகைமையைப் பெற்றுள்ள பெரியோனைத்துவந்துவங்கடந்த=புகழ், இகழ், சுகம், துக்கம், மானம், அவமானம், சீதம், உஷ்ணம் இல்லாத மகா யோகி என்று கூறப்படும். துரியாதீதந்தனையும் அடைந்தவனுவன். பிறவிக்கேதுவாகப் பொருந்திய பந்தம் = பிராந்தி ஒழிந்து, தமோமயத்தினின்றும் எழுந்து வந்த அகந்தாமமதா அபிமானங்கள் நீங்கிப் பரமரசம் (பிரஹ்மரசம்) கெடாத ஆன்ம சொருப சற்பாவத்தில், ஜலத்திலிட்ட உப்பு ஜலமாயிருத்தல்போல் நன்கு அடையா நிற்பன்.

சடமசட மெனுநோக்க மிரண்டினூடே தனியாகி நின்றபர தத்துவத்தை
யிடவியபே ரரணிய முதலாம்வேத மிராமனேபல்காலு மியம்புமன்றே
படருநாண் பன்காட்சி மேவும்போதிற் பரம்பொருளின்
பற்றுகிப்பயின்றவின்பந்
திடவனுபூதியின் வடிவா மாதலாலே திகழ்பிரமசார
மென்ச்செப்புந்தானே. (17)

சடம் அசடம் மெனும் நோக்கம் இரண்டினூடுதனியாகி நின்ற பரதத்துவத்தை இடவியபேர் = சடம் = அசித்து இதுவென்னுந் திருசிய விஷயமான சம்பவித்து ஜடதிருஷ்டி, அசடம் = சித்து நான் என்னுந் திருஷ்டா விஷயமான சம்பவித்து

ஆரண்யம் முதலாம் வேதம் இராமனே பலகாலும் இயம்பும் படர்உறு கரண்பனகாட்சி மேவும் போதில் பரம்பொருளின்பற்று ீப் பயின்ற இன்பந் திட அனுபூதி யின் வடிவாமாதலாலே திகழ்பிரம சாரம் எனச் செப்புந்தானே =

அஜட திருஷ்டியாமென்னும் நாட்டம் இரண்டின் பத்தியில், கேவலமாகி ஸ்திதிபெற்ற பாரமார்த் திக சின்மாத்திர வடிவ பரமதத்துவத்தை ஞான ஏதுவான பிருகுதாரண்யமுதலாம் (வேதம்) உபநிடதங்கள் இராமனே! அனேகமுறையாக கவும் பிரதிபாதிக்கும்; விரிவாகப் பொருந்திய திருசிய தரிசனம், விருத்தி ஞானம், சம்பந்த மாகுங்கால் பரமாத்ம வஸ்துவின் சம்பந்தமாகி உதயமான சுகம் திரமாக அனுபூதியின் மய மாம்=சுவானுபூதிமயமாம். ஆதலாலே தன்து சொரூபமாகி விளங்காநின்ற பிரஹ்மம் சாரம் எனச் சாற்றப்பெறும்.

தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும்போதிற் சேர்ந்தசுக வறிவுமிகச் சிறந்ததாகுந்
தெரிபொருளால் வளைப்புண்டாற் பந்தமாகுந் தெரிபொருளை விட்டகன்றால் திடங்கொள்வீடாந்
தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும்போதிற் சேர்ந்தவநு பூதியிடர் தீர்ந்ததாகுந்
தெரிவுறவாங் கதுபற்றி நிற்பாய்நீ நின்றிர நிலையாஞ் சுழுத்திதனைச் சேருவாயே. (18)

தெரிபொருளுந் தரிசனமுஞ் சேரும்போதில் சேர்ந்தசுக அறிவு மிகச் சிறந்ததாகும் தெரிபொரு ளால் வளைப்புண்டால் பந்தமாகும் தெரிபொருளைவிட்டகன்றால் திடங் கொள்வீடாம் தெரிபொருளுந் தரி சனமுஞ் சேரும்போதில் சேர்ந்த அநுபூதி இடர் தீர்ந்ததாகும் ஆங்கு அது தெரிவுறப்பற்றி நிற் பாய்நீ நின்றிரநிலையாஞ் சுழுத்தி தனைச் சேருவாயே =

(விஷய சுகத்துக்கும் ஆன்ம சொருபத்துவமா யின் பந்தமோக்ஷ விபாகம் இன்றும் எனின் அதற்கு உத்தரம்) திருசியதரிசன சம்பந்தமாகுங் கால் உண்டாஞ் சுகாநுபவம் மிக உத்தமமாகும். அச்சுகாநுபவம் அஞ்ஞனுக்குத் திருசியத்தோடு அவச்சின்னத்தால் இராகாதிதோஷமாய் உண் டாவதாம், அது பந்தமாம் (கட்டாம்) திருசியப் பொருள் விட்டுத்தொலைத்தால் அதிதிடமான மோக்ஷமாம்; தெரிபொருளுந் தரிசனமும் சம்பந் தமாங் கால எவ்வநுபூதியானது எழுகின்றதோ அது அகண்டபரிபூரணனந்த வடிவமாய் விவே கிக்கு இருத்தலால் நிருபத்திர சுகமயமாம் ஆண்டு பரிபூரணப் பிரஹ்மாபின்ன ஆன்மாவை சந்தேகம் விபரீபங்களின்றி அதனை அபரோக்ஷ மாக அவலம்பித்து நீ திடமாக நனவிற் சுழுத் தியை அடைந்து விளங்குதி.

அதுதுரிய நிலையடையு மடைந்தபோதி லான்மாத்தான் றூலமல வணுவுமல்ல
தீதமுறுமுன் னிலையல்லப் படர்க்கையல்லச் சித்தசித்துண் டில்லையெனுந்
திறங்களல்ல
வுதிதமுறு நானல்லப் பிறனுமல்ல வொருவனல அனேகனல வுலகமென்றே
யிதுவெனக்காண் பனவாகிச் சித்தமாதி யிருமூன்றிந்திரிய துக்கிடமாய்
நிற்கும். (19)

அதுதுரிய நிலையடையும் அடைந்தபோதில் ஆன்மாத்தான் தூலமல அணுவுமல்ல தீதமுறு முன்னிலையல்லப் படர்க்கையல்லச் சித்து அசித்து உண்டு இல்லை யெனுந் திறங்கள் அல்ல உதித முறும் நான் அல்ல பிறனுமல்ல ஒருவன்அல அனேகன்அல உலக மென்றே இதுவெனக் காண்பன வாகிச் சித்தமாதி இருமூன்று இந்திரியத்துக்கு இடமாய் நிற்கும் = முற்கூறிய அந்த நனவிற் சுழுத்தியே துரியத் தன்மையை அடையாநிற்கும் அடைவுற்ற அந்தத் துரியான் மிகையான திருஷ்டியில் ஆன்மா வானது பெரிதுமல்ல, சிறிதுமல்ல, இந்திரிய அகோசரமாகலின் திடமான பிரத்தியக்ஷமல்ல, சாக்ஷாத் அபரோக்ஷம் ஆதலின் இதரமுமல்ல, பரோக்ஷமல்ல, சேதனுசேதன அஸ்தி நாஸ்தி யென்னுமியல்பும் அல்ல, தோற்றும்படி அகமுமல்ல, அன்னியமுமல்ல, ஏகத்வசங்கியாகுணசிரயமுமல்ல; அனேகமும் அல்ல பிரபஞ்சம் எனவே இது என்று திருசியமாகிய ஆறு இந்திரியங்கட்கும் ஆதாரமாய் இருக்கும்.

ஆங்கதுவே யதீதபத மாதலாலே யதுகிஞ்சிலன் றெங்கு மதுவேயாகும்
பாங்குறுவீ டென்றும்ப ருலகிலில்லைப் பாதளத்திற் பூதளத்திற்
பார்க்கிலில்லை
வீங்கியவா சைகளெல்லா மிறந்தகாலை விரிந்தமனமிறப் பதுவேவீடென்
றோது
மோங்கியவீ டெனக்குளதென் றுள்ளேயெண்ண முண்டாகின் மீண்டுமன
முற்பவிக்கும். (20)

ஆங்கதுவே அதீதபதம் ஆதலாலே அதுகிஞ்சில் அன்று எங்கும் அதுவேயாகும் பாங்குறு வீடென்று உம்பர் உலகிலில்லைப் பாதளத்தில் பூதளத்தில் பார்க்கில் இல்லை வீங்கிய ஆசைகளெல்லாம் இறந்தகாலை விரிந்தமனம் இறப்பதுவே வீடு என்று ஓதும் ஓங்கிய வீடு எனக்கு உளதென்று உள்ளே எண்ணம் உண்டாகில் மீண்டும் = முற்கூறிய அப்பொருளே சகலத்தையுங் கடந்த வஸ்து (ஆன்மதத்துவம்) அது அற்பம் அன்று (சிறிது அன்று) எவ்விடத்தும் அவ்வஸ்துவே யிருக்கும்; அழகாக மோக்ஷம் என்று மேலவர் = சுவர்க்க உலகத்திலில்லை; பாதாளத்திலும், பூவுலகத்திலும் நாடில் இல்லை. மேலும் மேலும் அதிகரித்த ஆசைகளெல்லாம் ஒழிந்தபோது விடயங்களைப்பற்றி விரிந்து எழுந்த மனம் லயம் ஆவதுவே மோக்ஷம் என்று மொழிவர்; பேரானந்தமயமாகிய மோக்ஷம் உண்டாகவேண்டும்

மனம் உற்பவிக்கும் = என்று என்றனக்கு உண்டாகுகவென்று அகத்தே மோக்ஷ இச்சையும் உளதாயின் அதுவும் விட வேண்டும் ஏனெனின் மீண்டும் மனம் எழுந்ததே யாகும்.

நினைப்புமிகி லிவனுக்குப் பிறப்பிறப்பு நீங்காது வன்பந்த நிலையதாகும்
மனைத்தினுக்கு மதீதமா யுருவமெல்லா மாகியதன் ருத்துமதத்துவமே நிற்கில்
வினைத்தொட ராம்பந்த மெதுமுத்தியேது வேரறச் சிந்தையைக்கெடுப்பாய் மேலதாகத்
தனைத்தெளிந்து நிறைந்தமல நெஞ்சாய்நல்ல சாந்தியையுற் ரோர் விரும்பார் சாற்றுமொன்றும். (21)

இவனுக்கு நினைப்பு மிகில் பிறப்பு இறப்பு நீங்காது வன்பந்த நிலைய தாகும் அனைத்தினுக்கும் அதீத மாய் உருவமெல்லாமாகி அகன்று ஆத்துமதத்துவமே நிற்கில் வினைத்தொடராம் பந்தம் எது முத்தி ஏதுவேர் அறச்சிந்தை யைக் கெடுப்பாய் மேலதாகத் தனைத்தெளிந்து நிறைந்து அமல நெஞ்சாய் நல்ல சாந்தியை யுற்ரோர் ஒன்றும் சற்றும் விரும்பார். = இவ்வதிகாரிக்குத் திருசிய பாவனை அதிகமாகு மானல் ஜனனமரணம் அகலாது கொடிய பந்த மானது திரமாகும்; சர்வப்பிரபஞ்சத்திற்கும் அப்பாற்பட்டதாய்ச் சர்வான்மகமாய் விஸ் தரித்து தருமத் தொடர்பு பொருந்திய பந்தம் எது வீடுயாது அஞ்ஞான மூலத்தோடு பாவ னையை (ஆசாசங்கத்தை) அறவே ஒழிப்பாய், சர்வசாக்ஷியாகத் தன்னுடைய வடிவத்தை சாக்ஷாத்கரித்துப் பரிபூரணமாய்ப் பரமபாவன மன்மாய்ப் பரமசாந்தத்தை அடைந்த பெரியோர் ஒன்றினையும் அற்பமும் இச்சியார்.

வெந்தோடு மாபத்தாங் கருவேற்காட்டை வெட்டுமழு பரமசுக மேவுந் தானஞ்
சந்தோடஞ் சாந்தியெனு மரப்பூங்கொத்துச் சாற்றுறுமிந் நிராசையு நிற்றனர்வுதீரு
மந்தோபார் குளப்படியா முனையாமேரு வாசைக்குருவிக் கூடாம வனிமூன்றும்
வந்தோர்புன் றரும்பாகு நிராசைபூண்ட மாருத வலங்கார வடிவுளோர்க்கே. (22)

வெந்தோடும் ஆபத்தாங் கரு வேற் காட்டை வெட்டும் மழுப் பரம சுகமேவும் தானம் சந்தோ டம் சாந்தியெனும் மரப்பூங் கொத்துச் சாற்றுறுங் இந் நிரா முத்தாபங்களால் தபிக்கப்பட்டுச் சுழன்று ஓடும் ஆபத்துக்களாகிய கருவேல் நிறைந்த ஆரண் யத்தைத் தொம்சம் செய்யும் (பரசு=கோடரி) கோடரியாம் நிராசை பேரானந்தம் அடையும் பதமாம்; பெற்றது கொண்டு மகிழ்ச்சியால் எழும்

ஸையுறில் தளர்வுதீரும் மாருத நிராசைபூண்ட அலங்கார வடிவுளோர்க்கு அந்தோபார் குளப்படியாம் மேருமுளையாம் ஆசைக் குருவிக்கூடாம் அவனிமூன்றும் வந்து ஓர்புன் றுரும்பாகும் = சந்தோஷம், உபசாந்தம் என்னும் தாருமஞ்சரியாய்ச் சொல்லப்பெறும் இவ்வைராக்கியம் அடையில் விசிராந்தியுண்டாம் திரிபுருத நிராசையை அடைந்து அலங்கரிக்கப்பட்ட ஆகிருதியுடையவர்களுக்கு ஆச்சரியம் பிருதுவி கோ, பசுவின் குளப்படிபதமாம் மேருகிரி கட்டுத்தறியாம்; திசைகள் இருவியின்பசரமாம் முப்புவனமும் ஒருங்குவரினும் சிறிய திரணமேயாம்.

காயத்தின் வேருகத் தன்னைக்கண்டோன் காயமிறினு மறியான் கன்னற்கட்டி
தீயிற்கா யினுமரிந்த போதுஙன்பந் தீராத வாறுபோற் றெளிந்தஞானி
மாயத்தின் மோகத்தாற் பேதமாகான் மணந்தபர புருடன்மேன் மனஞ்சேர்மங்கை
நேயத்தான் மனைத்தொழில் கள்செய்யுமாப் போ னிகத்தொழிற்செய் யினும்பரத்தி னிலைமைநீங்கார். (23)

காயத்தின் வேருகத் தன்னைக் கண்டோன் காயம் ஈரினும் அறியான் கன்னற்கட்டி தீயிற் காயினும் அறிந்தபோதும் இன்பந் தீராதவாறுபோல் தெளிந்த ஞானி மாயத்தின் மோகத்தால் பேதமாகான் மனந்த பர புருடன்மேல் மனஞ்சேர் மங்கை நேயத்தால் மனைத்தொழில்கள் செய்யுமாப் போல் நிகழ் தொழில்கள் செய்யினும் பரத்தின் நிலைமை நீங்கார் = தேக மூன்றிற்கும் வேருகிய சாக்ஷியாம் தன்னை பிரஹ்மரூபமாய்ச் சாக்ஷாத்கரித்தவன் தேகத்தை ஆயுதங்களால் துண்டம் துண்டமாகச் சேதித்த போதினும் உணரான் (வெட்டுப்பட்டதாக ஒரு சிறிதும் வேதனை அடையான்) வெல்லத்தை அக்கினியில் பாகு ஆகக் காய்ச்சினும் துண்டம் துண்டமாக நொறுக்கினும் (ஜலத்தில் கரைத்த போதினும்) மதுர சுபாவத்தை (தித்திப்பை) விடாத தகைமைபோலும் யாமாரென்னும் பஞ்சப் பிராந்தியினின்றும் தெளிவுற்ற ஞானி மாறுபாடாகமாட்டான்; அனுபவித்த சோரநாயகன் மீது மனம் பதிந்த நாரியானவள் அன்போடும் வீட்டின் வேலைகளைச் செய்யுமாப்போல் நுகர் வினைவயத்தால் எய்திய வினைகளை இயற்றினும் சுவாத்மானந்த சொரூபாது சந்தானத்தை விட்டகலான். (தத்துவ நிஷ்டனுக்கு விவகாரம் சமாதி பங்கமாகாது)

பண்டத்தின் பற்றின்மை யாலேசித்தம் பயில்சாந்தி முத்திதரும் பகர்ந்தமுத்தி
பிண்டத்தோ டிருந்தாலு மிராவிட்டாலும் பேருகும் பற்றறுத்த பெரியோர்க்கென்பர்

மண்டுற்ற நேயமறவாழ் வோரின்பம் வருஞ்சீவன் முத்தராம்
வளர்நேயத்தாற்
றொண்டுற்று வாழுமவர் பந்தமுற்றோர் சொன்னமூன் றுமவனே
தூயமுத்தன். (24)

பற்று அறுத்த பெரியோர்க்கு பண்டத்தில் பற்றின்மையாலே சித்தம் பயில் சாந்தி முத்திதரும் பகர்ந்தமுத்தி பிண்டத்தோடிருந் தாலும் இராவிட்டாலும் பேறு ஆகும் என்பர் மண்டுற்ற நேயம் அறவாழ்வோர் இன்பம் வருஞ் சீவன்முத்தாரம் வளர்நேயத்தால் தொண்டுற்று வாழும் அவர் பந்தமுற்றோர் சொன்ன மூன்று மவனே தூயமுத்தன் =

சங்கம்=வாசனை ஒழிந்த மகான்களுக்குத் திருசிய பதார்த்தங்களினுடைய சம்சங்கம் இன்மையி னாலே சித்தம் ஆன்மாவின்கண் முயற்சியால் இலயமாய்ப் பரம சாந்தியையும்; விமுக்தத் தன்மையையும் அடையும்: கூறிய மோக்ஷ மானது தேகத்தோடு கூடியிருப்பினும் இரா விடினும்=சதேக விதேகராயினும் பிரயோஜன மாகச் சம்பவிக்கும் எனக் கூறுவா நெருங் குற்றவா இயவஸ்துவில் ஆச்க்தியற்றவராய் வாழ்கின்றாரோ அவரே இன்பவடிவமாயிருக்கும் ஜீவன்முத்தராம் மேலும் மேலும் பொருள் விருத்தியாகும் சினேகத்தால் (பற்றால்) அடிமைப் பட்டு வாழும் அவர் பந்தம் அடைந்தோராவர்; கூறிவந்த ஜிவன்முத்தர் பெத்தர் 1, பெத்தர் 2, விதேகமுத்தர் 3. விதேகமுக்ரே உபாதிரகித பரிசுத்த முத்தராம்.

வருதொழிலின் விருப்புறான் வர்த்தமான வழிநிற்பன் சென்றவற்றை
மனத்திலெண்ணான்
கருமமுழு வதுமியற்றுந் தொடர்பந்தத்திற் கலந்தவர்பான் மனம்பற்றான்
கவலைகூரான்
மருவியவோர் பத்தர்பாற் பத்தனாகும் வஞ்சகர்பால் வஞ்சகனுகும்
வாலர்தம்பாற்
பருவமுறு வாலனும் விருத்தரானோர் பால்விருத்த னுந்தீரர் பாலுமாங்கே. (25)

வருதொழில் விருப்புறான் வர்த்த மான் வழிநிற்பன் சென்றவற்றை மனத்தில்எண்ணான் கருமம் முழு வதும் இயற்றும் தொடர்பந்தத் தில் கலந்தவர்பால் மனம்பற்றான் கவலைகூரான் மருவிய ஓர் பத்தர் மால் பத்தனாகும் வஞ்சகர்பால் வஞ்சகனும் வாலர்தம்பால் பருவ முறு வாலனும் விருத்தரானோர்

எதிர்காலம்=பௌஷிய விவகாரத்தை வாஞ்சி யான்; நிகழ்கால விவகாரத்தில் பற்றின்றி நிற்பன் பூத (இறந்த) கால காரியங்களை மன திய் எண்ணி வருந்துறான்; சகல காரியங்களையுஞ் செய்யா நிற்பன் தொன்றுதொட்டு வரும் பந் தம்=கட்டுப்பட்டவர் தம்மிடத்தே உள்ளங் கலவான்; சிறிதுங் கவலையை அடையான்; இறைவன்பால் அன்பு பொருந்திய ஒப்பற்ற அன்பர்பால் பக்தனாகும்; ஜடர்களிடத்தே ஜட

பால் விருத்தனும் தீரர்பாலும் ஆங்கே = ஞகியே இருப்பன்; குழவிப் பருவமுடையவர் பால் பருவமுரு பாலகனும். .வயோதிகர்பால் வயோதிகனும்; தைரியமுடையவர்பால் தைரிய வானுய் இலங்குவன்.

விடலேபால் விடலேயாந் துயருற்ருேர்பால் வெந்துயர முறுநிலேமை விடாதபுந்தி
திடமுளதா மானந்த நிறைந்துதோன்றுஞ் செவ்வியனும் புண்ணியர்தஞ் சிறப்பேசெய்யு
மடமையிலா வறிஞனுந் தெளிந்தோனுகு மதுரமுளானுந் தீனமன மில்லோனுஞ்
சுடர்குளிரின் மதிகருகி லெரிகீழ்நோக்கிற் றுளங்கிவியவான் சீவன்முத்தன் றூயோன். (26)

விடலேபால் விடலேயாம் துயருற்ருேர்பால் வெந்துயரமுறும் நிலேமை விடாதபுந்தி திடமுள தாம் ஆனந்தம் நிறைந்து தோன்றும் செவ்வியனும் புண்ணியர்தஞ் சிறப்பே செய்யும் மடமையிலா அறிஞனும் தெளிந் தோனுகும் மதுரமுளனும் தீன மனம் இல்லோனும் சுடர்குளிரில் மதிகருகில் எரிகீழ்நோக்கில் துளங்கிவியவான் சீவன்முத்தன் தூயோன் = யௌவனம் = தாருண்யசீலர்பால் தாருண்ய ஞகும்; துக்கிதரிடத்தே மிகத் துக்கிதனும் தன் நன்னிலேமை மாருத தீரமதியை யுடைமவனுய்ப் பூரணுனந்தமுடையவனுய் கோமள ஆசாரமுடை யவனும் உலகில் புண்ணியமாய சரித்திர வர்ண னங்கள் செய்பவனுயு நிற்கும்; மிகுந்த பிரஞ்ஞை யுடையவனுகியும், பிரசன்னமுடையவனுகியும், இனிமையான இயற்கையையுடையோனுயும், அதைரிய மனமில்லோனுயும், சூரியன் சீதளமா கினும், சந்திரன் தப்தமாயினும், அக்கினி கீழ்நோக்கி எரியினும் (விஸ்வமயமடைந்து) ஆச்சரியப்படான் பரிசுத்தனை சீவன் முத்தன்.

இதுவெனத்தோன் றியவெல்லாஞ் சிற்சொருபமிவ்வண்ணம் பலசத்தி யிலங்குமென்றே
புதுமைகளின் வியப்புருர் சீவன்முத்தர் புனலசைவால் வேற்றுமையேபோலத் தோன்று
முதுசுழிபோ லவுர்விண்ணின் மயிலின்ருேகை முன்புகடி தசைத்தலுமே முத்தின்கூட்டங்
கதுமெனமெய் போற்ருேன்றல் போலவுந்தான் கனத்தசக மனத்தசைவாற் கடிதுதோன்றும். (27)

இதுவெனத் தோன்றியவெல் லாஞ் சிற்சொருபம் இவ்வண்ணம் பலசத்தியிலங்குமென்றே புதுமை களில் சீவன்முத்தர் வியப்புருர் (யாது காரணத்தால் விஸ்வமயம் உண்டாவ தில்லேயெனின் கூறல்) இது, இதுவென்று புலப் படும் யாவுமே விவர்த்தமாதலின் சின்மாத்திர சொருமேயாம். இப்பிரபஞ்சாகாரமாக அநேக

புனல் அசைவால் வேற்றுமையே போல தோன்றும் முதுசுழிபோல வும் விண்ணில் முன்பு மயிலின் தோகை கடிது அசைத்தலுமே முத்தின் கூட்டம் கதுமென மெய் போற்றேன்றல் போலவுந்தான் கனத்தசகம் மனத்து அசைவால் கடிது தோன்றும் = சக்திகள் விளங்கும் என்பதாகத்தானே; நூதன மான காரியங்களில் ஜீவன் முத்தர் விஸ் மயத்தையடையார்; நீரின் அசைவினுலே நீரினும் வேறுபோல நீர்தானே தோற்றும் பெருஞ்சுழி சக்கராகாரம் போலவும், மயிலின் தோகை விரைந்து சுற்றலும் முத்துமண்டலம் திடீரென்றுஉண்மைபோலப் பிரதீதியாதல்போல வும் இப் பெரிய உலகமானது பொய்யாயினும் சித்தத்தினது மெய் சஞ்சலத்தாலே (சத்தியம்) போல் விரைவில் காணப்படும்.

என்னவோத லுமியாதினு லசைந்திடு மியாதினு லசையாது
சொன்னநெஞ் சகந்திருத் தலாநெறியெது சொல்லெனு மிராமற்குப்
பன்னுமா தவனுரை செய்வா னெள்ளிலேயெண்ணெயும் பனிதன்னின்
மன்னுவெண் மையும்போன் மனத்தசைவு தான்மருவியே
மிகத்தோன்றும். (28)

என்ன ஓதலும் சொன்ன நெஞ் சகம் யாதினுல் அசைந்திடும் யாதினுல் அசையாது திருத்த லாம் நெறி எது சொல் என்னும் இராமற்குப் பன்னுமாதவன் உரைசெய்வான் எள்ளிலே எண் ணெயும் பனிதன்னில் மன்னு வெண்மையும்போல் மனத்தசைவு தான் மருவியே மிகத் தோன்றும் = என்று வசிஷ்டர் உபதேசித்தலும் சொன்ன நெஞ்சகம் (உபதேசித்த மனம்) எவ்வியற்கை யானே அசைந்தாடுகின்றது எவ்வுபாயத்தானே அசையாமல் நிற்கும். சீர்படுத்தும் மார்க்கம் யாது கூறவேண்டுமென்று கேட்ட இராகவ ருக்கு, உபதேசஞ் செய்யும் ஸ்ரீ வசிஷ்டர் அசை யும் இயற்கையானது, சித்தத்தினின்றும் வேறு பிரித்துக்கூற முடியாதாம் என்று திருஷ்டாந்தங் களினுலே தரிசிப்பிக்கின்றுர்; திலத்திலே தைல மும்; இமத்திலே பொருந்தும் சுவேதமும் போல் மனே சலனமானது பொருந்தியே மிக மிகவும் பிரதீதியாம். (சகஜமாய்ப் பொருந்தியிருப் பதாம்.)

## அவதாரிகை

மனம் ஜீவித்திருப்ப அதன் அசைவை அகற்ற முடியவே முடியாதாம். அசைவின் நிரோதத்தால் உபயநாசப்பொருட்டு ஞானக்கிரமமும் சாஸ்திரத்திற் காண்பிக்கப்பெற்றதாம் என்று கூறுகின்றுர்.

சித்த நாசத்தி னெறியிரண் டியோகமுந் தெளிந்த ஞானமுமாகு
மொத்த யோகந்தான் மனத்துறுதொழி லீனயொரு வழிப்பட மாற்றல்

சுத்த ஞானந்தா னலம்பெறக் காண்பதாந் தொடர்மன மேதென்னின்
மெத்து மாகம பூடணருரைத்தது விசையுயி ரசைவாகும். (29)

சித்தநாசத்தின் நெறியோகமும் தெளிந்த ஞானமும் இரண்டு ஆகும் ஒத்தயோகந்தான் மனத் துறுதொழிலினை ஒருவழிப்பட மாற்றல் சுத்தஞானந்தான் நலம் பெறக்காண்பதாம் தொடர்மனம் ஏதென்னில் மெத்தும் ஆகமபூட ணர்உரைத்தது விசை உயிர் அசைவாகும் = மனோநாசமார்க்கம் யோகமும், தெளிந்த ஞான மும் ஆகும், ஆன்றோர்க்குப் சுருதிக்கும்பொருத்த மான யோகந்த ன் சித்தத்தினது விருத்திகளை நிரோதஞ் செய்தலாம்; தூய பிரஹ்மஞானம் ஐயந்திரிபின்றித் தரிசித்தலாம்; தொன்று தொட்டுவாரா நின்றமனம் எத்தகையதென்னில், மேலாகிய வேதாகமங்களையே ஆபரணமாகக் கொண்டவர் கூறியது விரைவான பிராணனின் சலனமாகும்.

உரைசெய் யாருயிர் தடைப்படி லுள்ளமுமொழியு நெஞ்சசைவற்றுற்
புரைசெய் சென்மம்போ மாதித்தன்போய் விழிற்புவித்தொழில் போமாபோல்
வரைசெய் மார்பனே யென்றலு முடலெனுமனையின் விண்ணிடைநாளும்
விரைவி லோய்வற வுழல்பிரா ணுதியை விலக்கு மாறெது வென்றுன். (30)

உரைசெய்ஆர்உயிர்தடைப்படில் உள்ளமும் ஒழியும் நெஞ்சு அசை வற்றால் ஆதித்தன்போய் விழில் புவித்தொழில் போமாபோல் புரை செய் சென்மம் போம்வரை செய் மார்பனே என்றலும் உடல் எனும் மனையில்விண்ணிடை நாளும் விரை வில்ஓய்வுஅறஉழல்பிராணுதியை விலக்குமாறு எது என்றான் = கூறிய சலனம் பொருந்திய பிராணனுனது தடுக் கப்படில் மனமும் இலயமாம்; மனமானது சலியா விடின் (சாந்தமானால்) சூரியன் அஸ்தமாயின் பூமியில் சிரார்த்தாதி கிரியை ஒழிவதுபோலும், குற்றமுற்ற பிறவியானது அகன்றுபோம்; மலை போலும் மார்பையுடைய மைந்தா என்று உபதே சித்தலும் தேகம் என்னும் கிரகாவச்சின்னம் ஆகா யத்தின்கண் எப்போதும்வேகமாக இடைவிடாது சஞ்சரிக்கும் பிராண அபானனைத் தடைசெய்யும் வகை யாது என்று வினவினர்.

முனிவ னோதுவா னூலொடுமறிஞரை முன்னியே விராகத்தை
நனிமு யன்றுகற் றிதனினுற் குடும்பமா நடை விலங்கதுவிட்டுத்
தனிநி ராசைதா னிறைந்திடில் விரும்பியதற்பொ ருட்டியானத்தா
லனிச நீள்பக லொருமையே விளங்கிட வடுத்த சாதனைதன்னால். (31)

முனிவன் ஓதுவான் நூலொடும் அறிஞரைமுன்னியேவிராகத்தை நனிமுயன்று கற்று இதனினால் நடைஆம்குடும்பம் அதுவிட்டுதனி ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுகின்றார் அத்தியாத்ம சாஸ்திரங்களுடனே ஆராய்ந்து சாதுக்களைச் சரண் அடைந்து வைராக்கியத்தை நன்றாக நண்ணி மனத்தடையான அப்பியாசஞ் செய்து

நிராசைதான் நிறைந்திடில் அனிசம் நீள்பகல் ஒருமையேவிளங்கிட விரும்பியதற்பொருள் தியானத்தால் அடுத்த சாதனேதன்னுல் = இவற்ருல் நடைவிலங்குஆம் குடும்ப ஆசக்தி ஒழிந்து, ஒப்பற்ற வைராக்கியத்தைத் திடப்படுத்திடில் நிரந்தரம் நெடுங்காலம் ஏகாக்கிரமடைய வாஞ்சித்த மூர்த்தி தியானத்தால் அடுத்த அப்பியாசத்திஞல்.

ஏக தத்துவக் கனபரிசயத்திஞ லிவ்வுயிர் தடையெய்துந்
தேக பூரகாதி யிலுயிரிளைப்பறத் திடமுறு பழக்கத்தா
லூக மாகவே காந்தமுற் றுள்ளுணர்யோக பாவனைதன்ஞன்
மேகமேனியாய் பிராணனி லசைவுதான் விலக்கிடப்படுமன்றே. (32)

ஏகதத்துவக் கனபரிசயத்திஞல் இவ்வுயிர் தடை எய்தும் தேகபூரகாதியில் உயிர் இளைப்பறத் திட பழக்கத்தால் ஊகமாகவேஏகாந்த முற்று உள்ளுணர் யோகபாவனே தன்ஞல் மேகமேனியாய் பிராணனில் அசைவுதான் விலக்கிடப் படும் = பேதத்திரயவர்ஜிதமாம் அத்வைத திட அப்பியாசத்தால் இப் பிராணனின் அசைவானது தடைப்பட்டுவிடும், சரீர, பூரக, ரேசக, கும்பக அப்பியாசத்தால் பிராணன் ஒடுங்கும்படியான திட அப்பியாசத்தைச்செய்யில் யுக்தியுடன் ஏகாக்கிரதை வடிவப் பரிணமத்தையடைந்து அந்தர்முக திருஷ்டியோடு கூடிய தியானசம் யோகத்தால் நீலமேக சியாமளவடிவ ஹே ராமா! பிராணயாமங்கூடும்.

பிரண வத்திஞுச் சாரண முடிவினிற் பிறந்தசொல் லுறுமுண்மை
விரவு நாட்ட த்தாற் றுயில்பவ னுணர்வுதான் வெளிப்படி லுயிர்நிற்கும்
பாவு தாலுமூ லஞ்செறி யிதழினைப் படருநாவாற் றள்ளி
யுரவி ஞலுயர் புரையிலே பிராணனை யோட்டிஞ லுயிர்நிற்கும். (33)

பரவுதாலுமூலஞ் செறி இதழினே படருநாவாற்றள்ளி உரவிஞல் உயர்புரையிலே பிராணனை ஓட்டிஞல் உயிர்நிற்கும், விரவு பிரணவத்தின் உச்சாரண முடிவினில் பிறந்த சொல்லுறும் உண்மை நாட்டத்தால்துயில்பவன் உணர்வு தான்வெளிப்படில் உயிர்நிற்கும்= யாவருந்தியானிக்கின்ற நாவினது அடிப்பாகத்தில் பொருந்திய உள்நாக்கு = கண்டிகையை ஊர்த்து வேதாந்தரத் துளைவழியே நீண்ட நாவால்தள்ளி ஓட்டிஞல் பிராணன் தடைப்படும், அர்த்தமாத்திரையாகப் பொருந்திய ஓங்காரத்தின் உச்சாரண முடிவில் உண்டாம் தொனி சப்ததத்துவத்தின் அப்பியாசத்தால் தூங்குபவன் போல விருத்தி சாந்தமடையில் பிராணன் அடங்கும்.

நாடு மங்குலி பன்னிரண் டெல்லையி நாசியி னுனிதன்னி
னீடு வானத்தி லறிவுக ளிறந்திடில் நிலைபெறவுயிர் நிற்குந்

தேடு சாதனை யாலுயர் புரைவழிசிங் குவைமேல்விர லீரா
றூடு போயுயி ரெல்லையி னின்றுணர் வொளிக்குமே லுயிர்நிற்கும். (34)

நாடும் அங்குலி பன்னிரண்டு எல்லையில் நாசியின் நுனிதன்னில் நீடுவானத்தில் அறிவுகள் இறந்திடில் நிலைபெற உயிர் நிற்கும் தேடு உயிர் சாதனையால் உயர் புரைவழி சிங்குவை மேல்விரல் ஈராறு எல்லையில் ஊடுபோய் நின்று உணர்வு ஒளிக்குமேல் உயிர் நிற்கும் =

கருதும் துவாதச அங்குலபரியந்தம் நாசிகாக்கிரத்தில் உபாதிகளுக்கு அதீதமான ஆகாசத்தில் விருத்திகள் லயமாகில் நிலையாகப் பிராணன் அசையாமலிருக்கும். ஆராயின் பிராணனது அப்பியாசத்தாலாய நிரோதத்தால் ஊர்த்துவோந்தரமார்க்கம் உள்நாவின்மேல் துவாதசாங்குலபரியந்தஞ்சென்றுபிரமரந்தரத்தை அடைந்து விருத்தி ஞானம் லயிக்கில் பிராணன் தடைப்படும்.

புருவநாப்பணே கண்மணிப் பார்வைதான் பொருவில் சாந்தியின் மாய்ந்து
தெருளுங்கேதன வறிவங்கு தெரிவறிற் றிரிவுரு துயிர்நிற்குங்
கருதுகின்றவிந் நெறிகளா லநேகசங்கற்ப கற்பித பேதத்
தருள்செயும்பல தேசிகர் சொற்களா லசைவற வுயிர்நிற்கும். (35)

கண்மணிப் பார்வைதான் புருவ நாப்பணே பொருவு இல் சாந்தியில் மாய்ந்து, தெருளுறுங்கேதன அறிவு அங்கு தெரிவு அறில் திரிவுருது உயிர்நிற்கும், கருதுகின்ற இந்நெறிகளால் அனேக சங்கற்ப கற்பித பேதத்து அருள் செயும் தேசிகர் சொற்களால் அசைவற உயிர் நிற்கும் =

நேத்திர திருஷ்டி புருவமத்தியாகச் சமானமின்றிய சத்துவமாகச் சாந்தியில் உபரதி அடைந்ததாயின் உணரா விருத்தி ஞானம் புருவமத்தியில் நாசமாகில், தெரிவுறில் என்றால் அதற்கு அர்த்தம் புருவமத்தியில் சின்மாத்திர வஸ்துவே தன் மாத்திர தத்துவம் என்று உணர்ந்துகொள்ளில் சஞ்சலமின்றிப் பிராண நிரோதமாம், எண்ணுநின்ற இம் மார்க்கங்களாலும் நானசங்கற்ப நிரோத வேற்றுமையாலும் கருணைசெய்யும் பல ஆசிரியர் உபதேசங்களாலும் சலனம் அறப் பிராணன் அடங்கும்.

இந்தயோகங்க ளறிவெலா மிளைப்பற வியற்று சாதனையாலே
வந்துமேற்பிற வாதவர்க் குபாயமாய் வந்துறும் பழக்கத்தா
லுந்துமாருயி ரசைவுதான் கெடுமெனி லுள்ளமுஞ் சமித்தாறுஞ்
சிந்தைதான்சமித் தாறுமேற் செல்கதி சேடமாய் விடுந்தானே. (36)

இந்த யோகங்கள் அறிவெலாம் இளைப்பற இயற்று சாதனையாலே மேல் வந்து பிறவாதவர்க்கு உபாயமாய் வந்துறும் பழக்கத்தால்

இந்த யோகக்கிரமங்கள் சித்தவிருத்தி விசிராந்தி அடையச்செய்யும்; செய்யாநின்ற அப்பியாசத்தினாலே இனிமேல் வந்து ஜன்மம் எடாதவருக்கு உபாயமாக வந்தடைந்திடும் அப்பியாசத்தால்

உந்தும் ஆர் உயிர் அசைவுதான் கெடுமெனில் உள்ளமுஞ் சமித்து ஆறும் சிந்தைதான் சமித்து ஆறு மேல் செல்கதி சேடமாய் விடுந் தானே = மேலும்மேலும் எழும் பிராணவாயுவினது சலனம் அடங்குமாயின் சித்தமும் சாந்தமுற்று விசிராந்தி அடைவுறும் சித்தமானது சாந்தியடையுமாயின் அடையத்தக்க மோக்ஷபதம் எஞ்சாநிற்கும் என்பதாம்.

விகற்ப வாக்கெலா மெப்பதநோக்கியே மீளுமப் பதந்தானே
விகற்ப மற்றிடிற் சேடிக்குமென முனிவிளம்பலும் விறல்வீர
னிகழ்த்தி யோகத்தை யுறுமனம் பொறிகளி னெறிசெலாச் சமந்தன்னை
நிகழ்த்தி னுயினி யுண்மைஞா னத்தையு நிகழ்த்தென முனிசொல்வான். (37)

விகற்ப வாக்கெலாம் எப்பதம் நோக்கியேமீளும் அப்பதந்தானே விகற்பம் அற்றிடில் சேடிக்கும்என முனி விளம்பலும், விறல் வீரன் யோகத்தை நிகழ்த்தி உறுமனம் பொறிகளின் நெறிசெலாச் சமந்தன்னை நிகழ்த்தினுய் இனி உண்மை ஞானத்தையும் நிகழ்த்தென முனி சொல்வான் = நாலுவிதமாய வாக்காதிகள் மனம் யாவும் எந்தப்பரமபதத்தினைக் கோசரிக்கமுடியாமல்திரும்பிவிடுமோ, அப்பதந்தானே யாதொரு விகற்பஞ் செய்யாதொழியின் எஞ்சிநிற்கும்என்றுஸ்ரீவசிஷ்டர் கூறுதலும் அசகாயசூரனை ஸ்ரீ இராமன் யோகத்தைக்கூறி அதனோடு சங்கற்பம் பொருந்திய மனம் இந்திரியவிடயங்களின் மார்க்கத்தில் போகாத சாந்தியைக் கூறினீர்; முற்கூறிய பிரகாரமாக மனத்தினது நாசம் தெரிவிக்கப்பட்டது என்பது பொருள், இனிமேல் தத்துவஞானத்தையும் உபதேசிப்பீர்களாகஎன்றுகேட்ப ஸ்ரீவசிஷ்ட பகவான் கூறத்தொடங்குகின்றார்.

ஆதியந்தமி றோற்றமே தன்வடிவாகிய பரமிங்குச்
சோதியாய்நின்ற தென்னுமிவ் வுறுதியே துகளறு மெய்ஞ்ஞானம்
பேதியாநின்ற கடபட வடிவமாம் பெரும் பொருட் பலசத்தி
தீதிறற்பரம் வேறில தென்றுணர் திண்மையே நற்காட்சி. (38)

ஆதியந்தம் இல் தோற்றமே தன் வடிவாகிய பரம் இங்குச் சோதியாய் நின்றது என்னும் இவ் வுறுதியேதுகளறு மெய்ஞ்ஞானம் பேதியா நின்ற கடபட வடிவமாம் பெரும்பொருள் பலசத்தி தீது இல் தற்பரம்வேறுஇலது என்றுஉணர் திண்மையே நற்காட்சி = ஆதிமத்தியாந்தரகிதஸ்புரணமே தனது சொருபமாகிய பிரஹ்மம் இவ்விடத்தில் பிரகாசமயமாய் நிலைபெற்றிருக்கின்றதென்னும் சிறந்த இந் நிச்சயமே குற்றமற்ற தத்துவ ஞானத்தின் சொருபமாம்; பரஸ்பரம் வேற்றுமையானகடபட ஆகாரங்களாய் நிகழும் நூற்றுக்கணக்கான பதார்த்த சமூகங்களும் அவைகளின் சிற்சத்தியாகிய இவைகளும்சர்வதோஷவிநிர்முக்த பிரத்யக்கபின்ன பிரஹ்மத்துக்கு அன்னியம் இல்லை என்று அறியும் நிச்சயமே சம்யக்ஞானமாம்.

செகங்கண் மூன்றினும் முண்மையா பொருளறி திறமெதுவெனச் செப்பில்
செகங்க ளியாவையுந் தற்பொருள் வடிவெனத் திரமுறு நிறைவாகுஞ்
செகங்க ளியாவையுஞ் சொரூபமே யிதிற்றிகல பாவ பாவனையெங்கே
செகங்களிற் செறிபெத்த முத்திகளெனத் தியங்கு வேற்றுமை யெங்கே. (39)

செகங்கள் மூன்றினும் உண்மை யாம் பொருள் அறிதிறம் எது வெனச்செப்பில் செகங்கள் யாவையும் தற்பொருள் வடிவெனத் திர முறு நிறைவாகும் செகங்கள் யாவையும் சொரூபமே இதில் திகழ் அபாவ பாவனை எங்கே செகங்களிற் செறிபெத்த முத்திகள் எனத்தியங்கும் வேற்றுமை எங்கே = சொர்க்க மத்திய பாதாளமென்னும் புவனத்திர யங்களிலும் சத்தியவஸ்துவை அறியும் தீமை யாது என வோதில் உலகமியாவையும் சைதன்ய பரமான்ம வடிவமேயாம் என்று நிச்சயித்ததே பூரணதிருஷ்டியாம், பிரபஞ்சம் யாவும் விவர்த்த மாதலின் ஆன்மாவேயாம் ஆன்மாவேயென் றல் எங்கே குறிப்பிக்கப்பெறுவனவாம். இதன் கண் விளங்கும் இன்மை உண்மையாங் கற்பனை எவ்விடத்தாம், உலகங்களிற் பொருந்தாநின்ற பந்தமுத்திகள் என மயங்குகின்ற அன்னியந் தான் யாதுளது.

பிறிதுகாண்பன வில்லைநெஞ் சில்லைமெய்ப் பிரமமே யவையாகிச்
செறியுமாலிவை யாவுமொன் றுகியசிற்பர விசும்பாகு
நெறிகொள் பந்தம்வீ டெங்குள விதுவென நிகழ்பெரு வடிவாகிக்
குறியறும்பெரும் பிரமமே நின்றது குறைந்திறந்தது நெஞ்சே. (40)

பிறிதுகாண்பன இல்லை நெஞ்சு இல்லை மெய்ப்பிரமமே அவையா கிச் செறியும்; இவையாவும் ஒன் றுகிய சிற்பரவிசும்பாகும் பந்தம் வீடுஎங்கு நெறிகொள் உளதுஇது வென நிகழ்பெரு வடிவாகி குறி யறும் பெரும் பிரமமே நின்றது நெஞ்சே குறைந்து இறந்தது = பிரத்யக்க பின்ன பிரஹ்மத்துக்கு வேருகத் திரு சியங்கள் ஒன்றுமில்லை மனம் இல்லை சத்திய பிரஹ்மமே அவ்வியாவுமாகி இருக்கும். மயக்க மாத்திரமாய்த் தோற்றும் இத்திருசியம் யாவும் ஏகமாகிய சிதாகாச பரம்பொருள் வடிவமேயா கும். பந்த மோக்ஷங்கள் எவ்விடத்து முறையாக உளது இதுவென்று விளங்கும் வியாபக வடிவ மாக அபரிச்சின்ன வடிவ பிரஹ்மமே நிலைபெற் றிருப்பது மனம் இலயமாகிப்போனதேயாம்.

ஒருமையாகவே யுணர்வினு லுணர்தியா லுருவைநன்குற நோக்கிற்
றுருவுங்கற்களும் படங்களு முதலிய சற்றும்வேற்று மையில்லை
மருவுசங்கற்ப மெங்குள சீவனும் வையகப் பொருள் யாவு
மருகலின்றிய சாந்தரு பம்பெறு மடிமுடிவுற நோக்கில். (41)

உணர்வினுல் ஒருமையாகவே உணர்தி உருவை நன்குற ஞானத்தினுல் (அறிவால்) இருள் இறந்துபோய தாதலின் நாமரூப சொரூபத்தை நன்ருக

நோக்கில் தருவும் கற்களும் முதலிய அடிமுடிவுற நோக்கில் மருவு சங்கற்பம் எங்கு உள சீவனும் வையகப்பொருள் யாவும் அருகலின்றிய சாந்த ரூபம் பெறும் வேற்றுமை சற்றும் இல்லை = ஆராய்ந்து பார்ப்போமானால் காஷ்டபாஷாண வஸ்திரங்கள் இவைகளாகவுள்ளன; உற்பத்திக்கு முன்னும் நாசத்திற்குப் பின்னும் ஆராயில் பொருந்திய சங்கற்ப விகற்பம் எவ்விடத்துள்ளன ஜீவனும் உலக வஸ்துக்கள் யாவும் நாசம் இல்லாத சாந்த வடிவத்தை அடையும் பேதம் கிஞ்சிற்றேனும் இல்லை.

அந்தரூபமெப் போதுநீ யாகுவை யண்ணலே யிரண்டொன்றென்
றுந்துபேதத்தாற் சரைமற ணங்களென் றுன்னுறு மயக்கத்தாற்
றெருந்தவுள்ளத்தாற் றன்றனிப் பிரமமே தோன்றுகின் றதுதன்னாற்
சிந்துகின்றநீ டிரையினுற் பன்மையாற் றெரிதருஞ் சலம்போல. (42)

அந்த ரூபம் எப்போது நீ ஆகுவை அண்ணலே இரண்டு ஒன்று என்று உந்து பேதத்தால் சரைமரணங்களென்று உன்னுறு மயக்கத்தால் தொந்த உள்ளத்தால் தான் தனிப் பிரமமே தோன்றுகின்றது தன்னால் சிந்துகின்ற நீள் திரையினால் பன்மையால் தெரிதருஞ் சலம்போல = சாந்த வடிவ சிற்சொரூபம் எக்காலத்திலும் நீயாயிருக்கிறாய்; ஹே இராகவ! பேதாபேதமாக எழுந்த பேதத் தோற்றங்களெல்லாவற்றாலும் ஜராமரணங்கள் என்று கருதும் விப்பிரமங்களாலும் துவந்துவம் வாய்ந்த மனத்தினாலும் ஆன்மாவாகிய கேவலம் ஒப்பற்ற பிரஹ்மமே விளங்குகின்றது; வீசி எறியாநின்ற பேரலைகளால் நானாவித கற்பகமாகக் காணப்படும் தண்ணீரே போலும்.

சுத்தமானதற் பரத்தினைத் தழுவியே தொடர்ந்த வுண்மதியாலே
யொத்துநிற்பவர் தம்மையெப் போகம்வந் துறுபிணி செயவற்று
மெத்துபோகத்தை முதலிய பகையெலாம் விசாரமே மிகுந்தோர்தம்
புத்தியைச்சிறி தசைத்திடா வசந்தனுற் பொருப்பசை வது
முண்டோ. (43)

சுத்தமான தற்பரத்தினைத் தழுவியே தொடர்ந்த உண்மதியாலே ஒத்துநிற்பவர் தம்மை எப்போகம் வந்துறு பிணிசெயவற்றும் மெத்து போகத்தை முதலிய பகையெலாம் விசாரமே மிகுந்தோர் தம் புத்தியைச் சிறிதசைத்திடா வசந்தனால் பொருப்பு அசைவதுமுண்டோ = தூய்தான பரமான்ம வஸ்துவைத் தானாக அனுபவித்து உள் நாட்டத்தோடே கூடியிருக்கும் திருஷ்டியினாலே சமமாய்வாழும் மகானை எந்தப் போகந்தான் வலிதில் வந்து தன்னிலுற்ற துக்கத்தைநோயைச்(செய்ய) சமர்த்துடையனவாம். மிகுந்து வந்து அடையும் போகமே முதலிய சத்துருக்கள் யாவும் அபார விசாரஞ் செய்துள்ளவருடைய புத்தியை அற்பமுஞ் சலனஞ் செய்யமாட்டாவாம் மந்தானிலத்தால் பர்வதம் சலனமாவதும் உண்டுகொல்லோ?

உரைத்த பன்மைக ணினைவிலே யுள்ளவா முண்மையாயில வுள்ளே
நிரைத்த பல்வகை வாவியிற் பிறிவிலா நிகழ்தரு நீர்போலக்
கரைத்த லன்றியிவ் வுறுதிசேர் மதியுளோர் களங்கமில் வீடுற்றோர்
புரைத்த லன்றியே நலனுறக் கண்டநற் பொருளுமிங் கிதுதானே. (44)

உரைத்த பல்வகை பன்மைகள் நினைவிலே உள்ளவாம் உள்ளே உண்மையாய் இல நிரைத்த வாவியிற் பிறிவிலா நிகழ்தரு நீர்போலக் கரைத்தலன்றி இவ் வுறுதி சேர்மதியுளோர் களங்கம் இல் வீடுற்றோர் புரைத்தலன்றியே நலன்உறக் கண்ட நற்பொருளும் இங்கு இதுதானே =

கூறிய நானாவிகற்பங்களோடு கூடிய பேதங்கள் பாவனை மாத்திரமாகவேயுள்ளனவாம், அகத்தே வாஸ்தவம் இன்றாம் அடுக்கடுக்காய்த் தோற்றா நின்ற தரங்கபேனற்புதாதிகள் தடாகத்தில் பேதம் ஒன்றுமின்றி நீர்மயமாகவே விளங்குவது போலக் கெடாததான (குன்றாத) இத்துணிபுடைய மதியுள்ளவர் சர்வ அநர்த்தங்களுந் தீர்ந்த ஆனந்த மோக்ஷமடைந்தவராவர்; நிர்த்தோஷமாகவே நன்கு தரிசித்த நல்ல வஸ்துவும் இவ்விடத்தில் இதுவேயாம்.

ஈதுவே றொன்று முத்திசென் றுறுநெறி யியம்புதுங் கேள்வீரா
வீத கவ்விய னென்றொரு பெருந்தவன் விந்தவெற் பிடைவாழ்வோன்
காத லாலுயர் கன்மகாண் டத்திலே காலமட்டற நின்று
கேத மாதியே வியாதிவன் பவந்தரு கிரியையான் மிகநொந்தான். (45)

ஈதுவேறு முத்திசென் றுறுநெறி ஒன்று இயம்புதுங் கேள்வீரா வீதகவ்வியன் என்றொரு பெருந்தவன் விந்தவெற்பிடை வாழ்வோன் மட்டற காலம்நின்று உயர் கன்மகாண்டத்திலே காதலால் நின்று கேதமாதியே வியாதிவன் பவந்தரு கிரியையால் மிக நொந்தான் =

இதற்கு அன்னியமாக இந்திரியங்கள் லீனபாவமடைந்து சமாதியால் மோக்ஷமடைந்து உய்யும் மார்க்கம் ஒன்று உளது கூறுவோம் கேட்பாய் வீர இராகவ! வீதகவ்வியன் என்று ஒரு பெரிய தவசிரேஷ்டன் விந்தியாசலக் குகைகளிற் சந்ததம் வசித்திருப்பவன்: அளவில்லாத காலம் மேலான கர்மகாண்டத்திலே பற்றிநின்று விருப்போடு சிரத்தையாய்த் துன்பம் பயவா நின்ற மனக் கிலேசங்களையும் காயக் கிலேசங்களையும் கொடிய ஜனனத்தையுங் கொடுக்கும் கருமங்களை இயற்றி மிக மிக நைவுற்றான்.

நிருவி கற்பமாஞ் சமாதியின் பொருட்டுமுன் னிகழ்கிரி யைகளெல்லா
மொருவி விட்டனன் பன்னசா லையினிடையுற்றனன் கலைத் தோன்மேல்
மருவு பெத்தபங் கேருகா சனத்தனன் வருகுதி மிசைவைத்த
விருக ரத்திரன் விரலின் னிவ்வகை யிருந்தன னொருப்பட்டு (46)

நிருவிகற்பமாஞ் சமாதியின் பொருட்டு முன்னிகழ் கிரியைக

அசம்பிரஞ்ஞாத சமாதியின் பொருட்டுப் பூர்வம் நடத்திவந்த (அநுஷ்டித்த வினைகள்) யாவற்றை

ளெல்லாம் ஒருவி விட்டனன் பன்னசாலையினிடையுற்றனன் கலைத்தோல்மேல் மருவுபெத்தபங் கேருக ஆசனத்தனன் வருகுதி மிசைவைத்ததிரள் விரல் இருகரத் தில் ஒருப்பட்டு இவ்வகை இருந் தனன் = யும் அத்தியந்தம் விட்டனர் தவத்தின்பொருட் டுக்கட்டப்பட்ட பர்னகசாலையுள்ளே புகுந்தனன்; மான்தோல்மீது பொருந்திய பத்மாசனத் திருந்தோனுகி வாராநின்றகுமீது அமைத்த = பாததலமூலங்களின் மேல் பெருத்த விரல்களை யுடைய இரண்டு கைகளையுடையவன் இங்ஙனம் ஏகாக்கிரமமாக ஆசனத்திலிருந்தனன்.

பரந்து திக்குறு மனத்தினைப் பையப்பையப் பார்த்து மீட்டனனுள்ளே
நிரந்த ரித்தனன் புறத்துள பரிசங்க ணீத்தனனொழுங் காலே
துரந்த சித்தத்தின் றிரநிலை விரும்பினன் றுகளறு மனத்தாலே
புரந்த நற்றவ வீதகவ் வியமுனி புலப்பட நிலைவுற்ருன். (47)

பரந்துதிக்குறு மனத்தினைப் பார்த்து பையப்பைய உள்ளேமீட் டனன் நிரந்தரித்தனன் ஒழுங் காலே புறத்துள பரிசங்கள் நீத் தனன் துகளறுமனத்தாலே துரந்த சித்தத்தின் திரநிலை விரும்பினன் நல்தவம்புரந்த வீதகவ்வியமுனி புலப்பட நிலை வுற்ருன் = நாலுதிசைகளில் திரியும் மனத்தினை தோஷ திருஷ்டிவாயிலாகப்பார்த்து மெதுவாக (சாவதா னமாய்) இருதயந்தில்திருப்பியவனுய் நிலைநிறுத் தினன்முறையாகப் பாகியங்களாயுள்ள இந்திரிய விடயங்களையும் (சப்தாதிவிடயங்களையும்) அகற் றினன் குற்றமற்றமனத்தினுலே ஆன்மசிந்தனம் நீங்கிய மனத்தின் ஸ்திதி பெறுந்தன்மையை விரும்பினன் உயர்வான தவத்தினைக்காத்த வீத கவ்வியமுனி நன்கு தெரிவுற்ருன். (ஆராய்ந் தனன்)

வியப்பு டைத்திது மீளுவித் திருக்கவும் விசையுயி ரசைவுற்றுத்
தியக்கு நெஞ்சகந் திர நிலை யன்றியே சிறுசரு கெனவோடும்
பயக்கு மின்பமில் கடநின்று படமுறும் படநின்று கடமெய்து
மயக்க மேவுபல் பொருள்களிற் போய்விழு மரங்களிற் குரங்கேபோல். (48)

மீளுவித்திருக்கவும் விசை உயிர் அசைவுற்றுத் தியக்கும் நெஞ்சகம் திரநிலையன்றியே சிறுசருகு என ஓடும் வியப்புடைத்திது இன்பம் பயக்கும் இல் கட நின்று படம் உறும்படம் நின்று கடம் எய்தும் மயக்கம் மேவும் பலபொருள்களில் போய்விழும் மரங்களில் குரங்கே போல் = பாகியத்தில் செல்லவிடாது தகைந்திருக்கவும் பிராண சலனத்தைப் பொருந்தி மயங்கிச் சலிக் கும் மனம்சொரூபத்தின்கண் நிலைபெருமல் அற்ப சருகுபோல ஓடும்; சுகத்தைப் பயப்பது அல்லாத கடம் நின்று வஸ்திரத்தைப் பொருந்தும்; வஸ் திரத்தினின்றும் கலசத்தைப் பொருந்தும், மயக்க மாகப் பொருந்திய அளவில்லாத திருசிய வஸ் துக்களில் ஓடியோடித் தாவி விழும்,

விழிமு தற்புல ஞய்மனத் துவாரமாய் மேதையிந் தியமென்றே
வொழிவி லாவபி தானஞ்செ யைம்புல லுணர்ந்து காண்புறுநானே
கழியு மிந்தியங்கா ளவமாகவே கலங்குகே னந்தோநீ
ரழிவில் சின்மயப் பகவனுய்ச் சகலசான்ருகி நின்றன ஞனே. (49)

விழிமுதல் புலஞய்மனத் துவாரமாய் மேதை இந்திய மென்றே ஒழிவு இலா அபிதானஞ்செய் ஐம்புலன் உணர்ந்து காண்புறும் நானேகழியும் இந்தியங்காள் அவமாகவே கலங்குகேன் அந்தோ நீர் அழிவு இல் நானே சின்மயப் பகவனுய்ச் சகல சான்ருகி நின்றனன் = சட்சுமுதலிய கரணங்களாய் உள்ளம் செல்ல வாயில்களாய் ஞானேந்திரியமெனவே இடைவிடாமல் அவதானஞ்செய்யும் பஞ்சேந்திரியங்களையும் திருஷ்டாவாகிய நானே நன்ருக அறிகின்றேன், கழிந்துபோகும் இந்திரியங்களே பயனின்றிக் கலக்கத்தை அடைந்து உழலுகின்றது ஏன்? ஐயோ நீங்கள் நித்திய சிற்சொரூப சேதனஞய நானே சர்வ சாக்ஷியாய் நிலைபெற்றிருக்கின்றேன்.

அன்ன தன்மையுற் றறிவிஞன் மிக்கயா னறிந்த கண்முத லைந்தும்
பின்ன மாகியே வானுல கத்தினைப் பிரிந்த பாதலம் போலாம்
பன்ன கங்களும் வழிச்செலு மவர்களும் பறையரு மறையோரு
மென்ன வச்சமுற் றுயர்ந்தசின் மாத்திர மிந்தியத் தருகெய்தா. (50)

அன்னதன்மையுற்று அறிவிஞல் மிக்கயான் அறிந்த கண்முதலைந்தும் பின்னமாகியே வானுலகத்தினைப் பிரிந்த பாதலம்போலாம் பன்னகங்களும் வழிச்செலும் அவர்களும் பறையரும் மறையோரும் என்ன அச்சமுற்று உயர்ந்த சின்மாத்திரம் இந்தியத்து அருகு எய்தா = சர்வசாக்ஷியே நான் என்னும் உணர்விஞல் மிகுந்த யான் உணர்ந்த நயஞதி ஐந்தும் வேருகியே சுவர்க்கத்தைப் பிரிந்து நின்ற பாதாளம் போலச் சிறிதேனும் சம்பந்தமில்லையாம் சர்ப்பங்களும் மார்க்கத்தே செல்லுபவர்களும் நீசரும் பிராமணரும்போலப் பயந்து மேலான சிதேகரசமாய் அநாயமயமாய் உள்ள பிரத்யக்காத்மாவினிடத்து இந்திரியங்கள் சமீபத்திலும் அடையா.

சாறு வாகனுய்ச் சாரண ஞகிநாற் றடந்திசை பலியேற்கப்
பாறு நெஞ்சமே வீணிலே வருந்துதல் பயனில படிமீதே
யாறி யேவிளை யாடுநீ யுனையறி வென்னும் வாதனை பொய்யாம்
வேறு பார்த்தான் மிகுந்துள மனத்தொடு மெய்யுணர் வொன்ருகா. (51)

சாறுவாகனுய்ச் சாரணஞகி நாற்றடந்திசை பலியேற்கப் பாறும் நெஞ்சமே படிமீதே வீணிலே = தேகாத்மவானுய்ப் புறநாடு செல்லும் தூதனுய் நான்கு திக்குகளிலுஞ் சென்று பிக்ஷைவாங்க ஓடும் மனமே! இச்சகத்தில் வியர்த்தமாகத்

வருந்துதல் பயன்இல ஆறியே விளையாடும் நீ உனை அறிவு என்னும் வாதனை பொய்யாம் வேறுபாடுதான் மிகுந்துள மனத் தொடு மெய்யுணர்வு ஒன்ருகா = துயருறல் பிரயோஜனமில்லை; விசிராந்தியுற்றுக் கிரீடைசெய்திடு மனமாம் நீ உன்னைச் சித்து என்னுந் துர்வாசனை மித்தையாம் அத்தியந்தம் பின்னங்களான மனத்தோடு சிற்சொரூப வஸ்துவுக்கு ஐக்கியம் கிடையாதாம்.

சுகமி ருக்குன ருனென வகங்கரத் துன்மதி யிதுதீதா
மகம திப்பினு லிவனவ னுகுநா னென்னுமிவ் வாரம்ப
மிகவ கற்றுவா யுன்வடி வெதுவெனில் விசார மின்மையதாகு
மிகவி சாரத்தா லழிந்திடும் பருதியா லிருள்கழிவது போல. (52)

சுகம் இருக்குனன் நான் என அகங்கரத் துன்மதி இது தீதாம் அகம் மதிப்பினுல் இவன் அவன் ஆகும் நான் என்னும் இவ் வாரம்பம் மிக அகற்றுவாய் உன் வடிவு எதுவெனில் விசாரம் இன்மையதாகும் இகவிசாரத்தால் அழிந்திடும் பரிதியால் இருள் கழிவது போல = சுகமாய் இருக்கின்றேன் யான் என்னும் அகங்காரமய கெட்டபுத்தியிது தன்னை நன்கு மதிக்கும் கர்வத்தால் இவன் இவன் ஆகும் நான் என்னும் அபிமான வடிவ இத்தொடக்கத்தை அத்தியந்தம் விட்டொழிப்பாய் நினது ரூபம் யாது எனில் அவிசார வடிவமேயாம்; ஈண்டு ஆன்மா அனுன்மா விசாரத்தால் சாந்தமுற்றிடுவாய் நீ சூரியனுல் அந்தகாரம் நீங்குவது போலவாம்.

முன்னந் தோற்றமற் றிப்பொழு துனக்கென வுருவின் றிம்முறையாலே
பின்னுந் தோன்றலை யென்னுடை நெஞ்சமே பெரிதுநீ பெறுநன்மை
யின்ன றீர்தெய்வ சகாயத்தா லிடரிலா வின்பமுற் றியானென்னுந்
துன்னு சாந்தனுய்த் துரியமாமென் சொருபத்தி லேசுகிக் கின்றேன். (53)

முன்னந் தோற்றம் அற்று இப்பொழுது உனக்கென உருவின்று இம் முறையாலே பின்னுந் தோன்றலை என்னுடை நெஞ்சமே பெரிதும் நீபெறும் நன்மை இன்னல்தீர் தெய்வ சகாயத்தால் இடரிலா இன்பமுற்று யான் என்னுந் துன்னுசாந்தனுய் துரியமாம் என் சொரூபத்திலே சுகிக்கின்றேன் = விசாரத்துக்கு முன்னரும் இல்லை; வர்த்தமானத்திலும் (இப்போதும்) கூட மனமாம் உனக்குத் தனக்கெனச் சொருபமில்லாமையினுல் முத்தியிலுமில்லை; இக் கிரமமாக இனிமேலும் தோன்றமாட்டாய்; என்னுடைய மனமே! மகத்பதத்தை அடைகுதி நீ சுபாசுபங்களை ஒழித்திடுதி; தெய்வ கிருபையால் துக்கமில்லாத ஆனந்தத்தை அடைந்து யான் எப்போதும் நிறைந்த உபசாந்தனுய்த் துரியமாகிய எனது வடிவத்திலே ஆனந்திக்கின்றேன். ஆகலின் சம்சாரத்தின் மனத்தின்திதி துரியரூப என்னிடத்தில் இல்லவே இல்லையாம்.

எனவொ ருப்பட்டு வாதனை தீர்முனி யிந்திய மலைவின்றி
மனனை வன்பினு னிறுத்தினன் விறகினை மாய்த்த தீச்சிகையுள்ளே
நனிய டங்கல்போ லிவனுயி ரொழுங்கிலே நன்கொடுங் கினமூக்கி
னுனிநுண் பார்வையாற் சிறிதலர் கமலமே நோக்கங்க ணிகரான. (54)

எனு ஒருப்பட்டு வாதனை தீர்முனி இந்தியம் அலைவின்றி மனனை வன்பினல் நிறுத்தினன் விறகினை மாய்த்த தீச்சிகை உள்ளே நனி அடங்கல்போல் இவன் உயிர் ஒழுங்கிலே நன்கு ஒடுங்கின மூக்கின் நுனி நுண்பார்வையால் சிறிதலர் கமலமே நிகரான நோக்கங்கள் = என இவ்வண்ணம் துணிந்து நிர்வாதனையை யுடைய வீதகவ்விய முனிவன் புலன்களைத் தகைந்து மனத்தினையும் வலிதில் அடக்கினன் கட்டையை எரித்து நாசஞ்செய்த அக்கினிச் சுடர் உள்ளேயே நன்ருக (முற்றிலும்) அடங்குதல்போல் இவனது பிராண சந்ததிகள் கிரமமாக உள்ளேயே ஒடுங்கின; நாசியில் வைத்த (நாசாக்கிரத்தில் வைத்த) சூக்கும திருஷ்டியால் அற்பம் விரிந்த தாமரை மலருக்குச் சமமாக விழிகள் திருஷ்டியுற்றன.

சிரங்க ழுத்துட ருனங்கள் சமமுறச் சிலையிலே வகுத்தென்ன
நிரந்த சித்திர மென்னமுந் நூறியாண் டிருந்தன னிமிடம்போற்
பரந்த காருநாள் வெள்ளத்தி னெக்கரிற் படிந்ததிங் கிவன்மேனி
யுரங்கொண் மாமுனி யுணர்ந்தனன் மண்ணினு ளுடலசைந் திலதென்றே. (55)

சிரம் கழுத்து உடல் தானங்கள் சமமுற சிலையிலே வகுத்தென்ன நிரந்த சித்திரம் என்ன நிமிடம் போல முந்நூறு ஆண்டு இருந்தனன் பரந்த காருநாள் வெள்ளத்தின் எக்கரில் இங்கு இவன் மேனி படிந்தது மண்ணினுள் உடல் அசைந்திலதென்றே உரங்கொள் மாமுனி உணர்ந்தனன் = தலை கண்டம் தேக முதலிய இடங்கள் செவ்வையாயிருப்பப் பாறையிலே வகுத்த பிம்பம்போல் பித்திகையில் மையால் எழுதிய பதுமைபோலக் கணப்போது ஒப்ப முந்நூறு வருஷம் சமாதியிலிருந்தனன் விரிந்த மழைகாலத்துப் பிரவாகத்தினது மண் எக்கரால் ஈண்டு இவன் சரீரமானது பதிந்து கிடந்தது; பூமிக்குள் பிராரத்த கர்மத்தால் சூக்குமச் சரீர சம்வித்துத் தரைக்குள் சரீரம் சலனமற்றிருக்கிறதென்று திடஞானமுடைய மாட்சிமைபொருந்தி வீதகவ்விய முனி அறிந்தனன்.

தரைம றைத்தலா லறிவிலே தோன்றிய சரீரத்தி லுயிர்முற்றும்
புரைக ளியாவையு மடைதலா லசைந்தில போதமுற் பவித்துள்ளே
விரையுந் தன்மன வடிவமா யிதயத்தில் விரிந்தறிந் ததுயாவு
நிரைகொள் சொப்பனம் போலவ னவ்வயி னெஞ்சுற விவை கண்டான். (56)

தரைமறைத்தலால் அறிவிலே தோன்றிய சரீரத்தில் உயிர்முற் மண் எக்கல் மூடியிருத்தலால் புத்திவிருத்தியிலுலே தேகத்தில் பிராணன் முழுவதும் நவத்

றும்புரைகள் யாவையும் அடைத லால் அசைந்தில போதம் உற்பவித்து உள்ளே விரையுந்தன்மன வடிவமாய் இதயத்தில் யாவும் விரிந்து அறிந்தது அவன் அவ்வயின்நெஞ்சுஉறசொப்பனம்போல் நிரைகொள் இவை கண்டான் =

துவாரங்கள் யாவும் தூர்க்கப்பட்டிருத்தலால் சலனம் பெற்றில : அம்முனிவனுடைய கலனை யாகிய ஜீவசம்வித்தானது உள்ளே உணர்ச்சி யுண்டாகி விரைந்து செல்லுந் தனது மன வடிவமாம் இருதயாந்தரத்தில் அனைத்தையும்விரிவாக நன்ருக உணர்ந்தது அவ்வீதகவ்வியன்ஜன்மாந்தர விருத்தாந்தங்களாகிய இவற்றைக் கனவு போல வரிசையாகப் பார்த்தனன்.

ஈசன் வெற்பயன் முனிவனுய் நூறியாண் டிருந்தது நூருண்டு
காசி லின்பவிச் சாதரனுனதுங் கடவுளர்தொழ விண்ணில்
வாச வன்னென வைந்துக மிருந்தது மதிச்சடை யிறைவற்கு
நேச மாங்கண மாயொரு கற்பநா ணின்றதுமவன் கண்டான். (57)

ஈசன் வெற்பு அயல் முனிவனுய் நூறு ஆண்டு இருந்ததும் நூறு ஆண்டு காசுஇல் இன்பவிச்சாதரனுனதும் கடவுளர்தொழ விண்ணில்வாசவன் என ஐந்து உகம் இருந்ததும் மதிச்சடை இறைவற்கு நேசமாங்கணமாய் ஒரு கற்பம்நாள் நின்றதும் அவன் கண்டான் =

ஈசுரவாசஸ்தானமாகிய கைலேயங்கிரிச் சாரலின் பக்கமான ஆரண்யத்தில் மனனசீலனுய்ச் சமாதி யுடையவனுய்ச் சம்வற்சரம் நூறு இருந்ததும் நூறு வருடம் களங்கம் இல்லாத ஆனந்தவித்தியாதரனுகவிருந்ததும், தேவதைகளால் வணங்கச் சுவர்க்கத்தில் இந்திரன் என ஐந்து யுகம் இருந்ததும் ; சந்திரனை ஜடாபாரத்தில் தரித்த சிவபெருமானுக்கு அன்புடைய சிவகணமாய் ஒரு கற்பதினம் இருந்ததும் அவ் வீதகவ்வியன் பார்த்தான்.

விரவு தோற்றர வாலிவை யனைத்தையும் வீதகவ்விய னேக்கிப்
பரனுக் காட்செய்த பலத்தினு லிறந்தன வறிந்து காண்வலி யுண்டாய்ப்
புரண மாகமுற் பவங்களிற் பொன்றிமுன் போய தன்னுடன் முற்றுங்
கரவ றக்கண்டு வீதகவ் வியப்பெயர் காயமாய் வரக்கண்டான். (58)

விரவுதோற்றரவால் இவை அனைத்தையும் வீதகவ்வியன் நோக்கிபரனுக்குஆட்செய்தபலத்தினுல் இறந்தன அறிந்துகாண் வலி உண்டாய் முற்பவங்களில் பொன்றிமுன் போயதன் உடல் முற்றும் புரணமாக கரவறக்கண்டு வீதகவ்வியப் பெயர் காயமாய் வரக்கண்டான் =

கலந்த பிரதீதியால் அல்லது ஞானத்தால் கூறிய இவ்வியாவற்றையும் வீதகவ்வியமுனி பார்த்துப் பரமசிவனுக்குச் சேவைசெய்த பலத்தால் சென்றன உணர்ந்துபார்க்கும் வல்லமையுண்டாகிப் பூர்வஜன்மத்தில் நசித்துப்போன தன்னுடைய முற்சரீரங்கள் யாவற்றையும் மறைப்பாம் கலக்கமின்றி விளக்கமாகப்பார்த்து வீதகவ்வியமுனிவனென்னும் நாமத்தோடுகூடிய சரீரமாய் வந்திருப்பதையும் பார்த்தான்.

மறையு மிவ்வுட லெடுத்துமென் றெண்ணிநன் வான்கதிர வன்பாற்போய்
முறைசெய் பிங்கலன் றனைக்கொணர்ந் தெடுப்பது முடியுமென் றொருப்பட்டா
னறையுங் காற்றுரு வாய்ப்புரி யட்டகவங்க மாய்க் கதிரோன்பாற்
பொறைகொண் மாமுனி சேர்தலு மிதயத்திற் புகுந்தவா றினன்கண்டு. (59)

மறையும் இவ்வுடல் எடுத்தும் என்றுஎண்ணி நல்வான் கதிரவன் பால்போய் முறைசெய் பிங்கலன் றனைக்கொணர்ந்து எடுப்பது முடியும் என்று ஒருப்பட்டான் அறையுங் காற்றுருவாய்ப் புரியட்டக அங்கமாய்க் கதிரோன்பால் பொறைகொள்மா முனிசேர்தலும் இதயத்தில் புகுந்தவாறு இனன் கண்டு =

பூமியில் மறைந்துகிடந்த இத்தேகத்தை எடுப்போம் என்று உத்தேசித்து நன்ருக ஆகாயத்தில் சஞ்சரிக்கப்பட்ட சூரியபகவானிடத்திற் சென்று அவருக்கு ஏவல் செய்யும் பிங்கலன்றனைச் சூரிய பகவான் ஆக்ஞையால் கூட்டிக்கொண்டுவந்து இத் தேகத்தை எடுப்பது (வெளிப்படுத்துவது) கூடும் என்று நிச்சயித்தான்; வீசாநின்ற பிராண வாயுவடிவமாய்ப் புரியட்டக=லிங்க சரீரமாய்ச் சூரியனிடத்தே பொறுமையையே பூஷணமாகக் கொண்டமாட்சிமைபொருந்திய வீதகவ்வியமுனி அடைதலும், பிரவேசித்தலும் வீதகவ்வியமுனி சூரியன் அழைத்ததைப்பார்த்து,

முன்ன நின்றபிங் கலன்றனைக் கதிரவன் முழுதுணர்ந் துடனேவ
வன்ன வீதகவ் வியப்பெய ருள்ளமு மாதித்தனுண் ணின்று
தன்ன தாக்கையில் விந்தவெற் பருகுபோய்ச் சார்தரக் கதிரோனுற்
சொன்ன பிங்கலன் வந்துகை நகத்தினுற் றொன்னில முறக்கீறி. (60)

கதிரவன் முழுதுணர்ந்து முன்னம் நின்ற பிங்கலன்றனை உடன் ஏவ அன்ன வீதகவ்வியப் பெயருள்ளமும் ஆதித்தன் உள்நின்றுவிந்த வெற்பு அருகுபோய்ச் சார்தரக் கதிரோனுற்சொன்ன பிங்கலன் வந்து கைநகத்தினுல் தொல்நிலம் உறக்கீறி =

சூரியபகவான் யாவற்றையும் தெரிந்து; சந்நிதியில் நின்ற பிங்களன்றனை விரைந்து அனுப்ப அந்த வீதகவ்வியன் லிங்க சரீரமும் சூரியபகவானுடைய இருதயத்திலேயே இருந்து பரஸ்பரம் வெகுமானவாயிலாக ஆசீர்வதிக்கப்பெற்றபின் சூரியபகவானது இருதயத்திலிருந்து பிங்கலன் இருதயத்தில் பிரவேசித்துப் புறப்பட்டு விந்த கிரியை அடைந்து தன் சரீரத்தில் அடையும்படியாகச் சூரியனது ஆக்ஞையால் வந்த பிங்கலன் வந்து கைநகத்தினுல் பூர்வம் மூடியிருந்தபூமியை நன்கு கீறி.

மாநி லத்தினை யகழ்ந்துபிங் கலன்றரவருங் களேபரந் தன்னின்
மோன மாம்புரி யட்டகம் புகுந்தது மொழிந்த பிங்கலன் போனு

னுன மாதவன் மூழ்கினன் செபித்தன னருச்சித்தான் கதிரோனை
ஞான நெஞ்சினு னிறையுடன் முன்புபோனலந் திகழ்ந்தது மீண்டும். (61)

மாநிலத்தினை அகழ்ந்து பிங்கலன் தர வருங்களேபரந்தன்னில் மோனமாம் புரியட்டகம் புகுந்தது மொழிந்த பிங்கலன் போனுன் ஆனமாதவன் மூழ்கினன் செபித்தனன் கதிரோனை அருச்சித்தான் நிறைஞான நெஞ்சினுன் உடல் மீண்டும் முன்புபோல் நலந் திகழ்ந்தது = பூமியைப் பிளவு செய்து பிங்கலன் வீதகவ்வியன் தேகத்தை எடுத்துக்கொடுப்பக் கிடைத்த சரீரத்தில் பிங்கலன் இருதயத்தினின்றும் வீதகவ்விய முனியினது மோனமாம் புரியட்டகம் நீங்கி வீதகவ்வியனது சரீரத்தில் வத்து சேர்ந்தது; பிங்கலவனும், வீதகவ்வியமுனியும் பரஸ்பரம் நமஸ்காரஞ் செய்துகொண்டார்கள். பிங்கலவனும் சூரிய பகவானிடம் சென்றனன். சமாதியினின்றும் எழுந்தவனுன மாட்சிமை பொருந்திய தவ சிரேஷ்டனுன வீதகவ்வியன், தடாகஞ் சென்று ஸ்நானஞ் செய்தனன்; ஜெபம் செய்தனன், பூரண ஞானத்தையுடைய மனத்தினன் சூரியனை அர்ச்சித்தான். சரீரம் மறுபடியும் பூர்வம்போல நன்ருக விளங்கியது.

சமம யித்திரி சாந்திசீ ரறிவருண் முதிதை
யமர் குணங்களா யனைத்தினு நெஞ்சு பற்றின்றிக்
கமர்கொள் விந்தநீர்த் தடங்கரை நாள்பல கழித்து
நிமல நெஞ்சினுற் பராபர முணர்முனி நினைப்பான். (62)

அமர் சமம் மயித்திரி சாந்தி சீர் அறிவு அருள் முதிதை குணங்களாய் அனைத்தினும் நெஞ்சு பற்று இன்றி கமர்கொள் தடங்கரை விந்தநீர் நாள்பல கழித்து நிமல நெஞ்சினுற் பராபரம் உணர் முனி நினைப்பான் = விசிராந்திக்கு ஏதுவாகப் பொருந்திய சமமாயிருத்தல் மித்திரசம்பந்தம், மித்திரபாவம், உபசாந்தி, நல்ல பிரக்ஞை, கருணை, உபேக்ஷை, ஆகிய குணங்களையுடையவனுய், இத்தகைய குணங்களையுடையவன் என்றும், மனத்தில் யாதொருபற்றுமின்றிப் பிளவுடைய விசாலமான விந்தியஜல நதிக்கரையில் வெகுகாலஞ் சஞ்சரித்து நீத்துப் பின்னர்த் தெளிந்த உள்ளத்தினுலே பராபர வஸ்துவைச் சாக்ஷாத்கரித்த அம் முனி திரசமாதியை அடைவதற்குநாடுவதாவது.

பொறிக ளின்றிரண் முன்னமே நிறுத்தினம் புரிந்து
நெறிகொள் சேடத்தைக் கூடியே மலையென நிற்போ
மறியத் தோன்றின மறைந்தபோ லாகுது மறைந்துஞ்
செறியத் தோன்றின மொத்துநிற்குது நொய்ம்மை சேர்ந்து. (63)

நெறிகொள் பொறிகளின் திரள் முன்னமே புரிந்து நிறுத்தினம் கிரமமாய்த் தத்தம் விடயாபாசத்தில் செல்லா நின்ற இந்தியக்கூட்டங்களைப் பூர்வமே விரும்பி

சேடத்தைக்கூடியே மலேயென நிற்போம் அறியத்தோன்றியும் மறைந்தபோலாகுதும் மறைந்துஞ்செறியத் தோன்றின நொய்ம்மை சேர்ந்து ஒத்து நிற்குதும் = ஆராய்ச்சி செய்து தடைசெய்துள்ளோம்; எஞ்சிய சின்மாத்திர வஸ்துவைச்சேர்ந்தே அசலம் என அசையாது நிற்போம்; தெரிய விளங்கியும், நிஷ்கிரியத்தன்மையால் தோன்ருதது (விளங்காதது போலவாகும்) இந்திரியங்களுக்கு அகோசரமாயினும் சர்வான்மகத்தன்மையால் ஸ்பஷ்டமாகத் தோன்றினம், சொச்சத்தன்மையை அடைந்து சமமாய் இருப்போம்.

உணர்வு விஞ்சியு முறங்கின ஞெக்குதுஞ் சுழுத்தி
தணிவ றப்பெற்று முணர்ந்தவ ஞெக்குதுஞ் சமனுய்க்
கணமும் வேறறத் துரியமே பற்றியிக் காயத்
தணவி நின்றுமோ ரசைவறு சோதிநா மாவேம். (64)

உணர்வுவிஞ்சியும் உறங்கினன் ஒக்குதும் தணிவற சுழுத்திபெற்று உணர்ந்தவன் ஒக்குதும் சமனுய்க் கணமும் வேறு அறத்துரியமே பற்றி இக்காயத்து அணவிநின்று ஓர் அசைவறு சோதி நாம் ஆவேம் = சாக்கிரத்தில் இந்திரியங்களோடு வனேந்திருந்தும் துவைதஜாலங்களேக் காணுமையால் துயின்றவனுக்குச் சமானனுகவே இருக்கின்றேன்; குறைவின்றித் துயின்றவனுகியும் சந்தோஷ விஷாதமின்றிய சுழுத்தியை அடைந்தும் சொச்சத்தன்மையானே சொச்சொருபத்தில் நித்தியம் திருசியநாட்டமின்றித் துரியத்தையே அவலம்பித்து இத்தேகத்தோடு கூடியிருந்தும் ஒப்பற்ற அசஞ்சல பரஞ்சோதி சொரூபமே நான் ஆவேன்.

என்று நாடிநற் றியானத்தி லாறுநா ளிருந்து
சென்று ணர்ந்தனன் கண்டுயில் சேர்பதி கனேப்போ
லொன்று சித்தனுய் வீதகவ் வியப்பெய ருயர்ந்தோன்
றுண்று சீவன்முத் தியிலடைந் தனேகநாட் சுகித்தான். (65)

என்றுநாடி நல் தியானத்தில் இருந்து ஆறுநாள் சென்று உணர்ந்தனன் கண்துயில்சேர் பதிகனேப்போல் ஒன்று சித்தனுய் வீதகவ்வியப்பெயர் உயர்ந்தோன் துன்று சீவன்முத்தியில் அடைந்து அனேகம் நாள் சுகித்தான் = என்று உத்தேசித்து அசம்பிரக்ஞாத சமாதியில் ஆறுநாள்இருந்து கழித்துபகிர்முகநாட்டமடைந்தனன் நித்திரை செறிந்த வழிப்போக்கனேப் போலவாம்; அத்வைத சமாதி நிஷ்டையால் சித்தனுய் வியுத்தானமாயினும் சமாகிதனுகவே யிருத்தல்பற்றிச் சித்தனே எனப்பெற்ருன் வீதகவ்விய நாமத்தினேப்பொருந்திய சிரேஷ்டன்; பொருத்தமாக அழுத்திய சீவன்முத்தித் தன்மையினே அடைந்து நெடுங்காலம் ஆனந்தித்தான்.

தீது நன்மையின் வீடுபற் றுஞ்சிதைந் தேக
வீத கவ்வியன் விருப்பொடு வெறுப்புநெஞ் சிலனாய்ப்
போதன் மீளலும் பிறவியுங் கருமமும் போக்கி
யோது தேகந்தீர் கேவல வீடுறூவுணர்ந்தான். (66)

தீது நன்மையில் வீடுபற்றும் சிதைந்துஏக வீதகவ்வியன் விருப்பொடு வெறுப்புநெஞ் சிலனாய்ப் போதல் மீளலும் பிறவியுங் கருமமும் போக்கிஓது கேவல தேகந்தீர் வீடுஉற உணர்ந்தான் = (பிராரத்த முடிவில் அம் முனிவனுக்கு எவ்விதமாக மனம் இருந்தது எனில் கூறுகின்றார்) விஷயம் குற்றமானது ஆகலின் விடத்தக்கதும் சிரவணாதிகள் கொள்ளத்தக்கது என்னும் அபிமானத்தினது தள்ளுதல் கொள்ளுதல் இரண்டு திருஷ்டிகளும் அழிவுறவே, வீதகவ்வியமுனிவன் இராகத்துவேஷமன மில்லாதவனாய்ச் செல்லுதலும், திரும்புதலும், ஜனனமும் கருமமும் ஒழிந்து, சாஸ்திரங்களிற் கூறப்பட்ட விதேக கைவல்ய பேரானந்தமாக இருக்க எண்ணினான்.

## அவதாரிகை

விதேகமுத்தியை அடைய விரும்பிய அம்முனிவன் சகஜ சத்துருக்களான இராகத் துவேஷாதிகளிடத்தும் நிர்த்துவேடத் தன்மையையும் மைத்திரியையும் பாவித்து இதத்தை உபதேசித்துக்கொண்டு நமஸ்கரித்துக்கொண்டு அவற்றை வேண்டியழைத்தல்.

சித்த னுமுனி யொருபகற் கிரிமுழை சேர்ந்து
பெத்த பங்கயா சனத்தினன் றான்றன் னிற் பேசு
மெத்து மாசையே நிராசையை மேவுதி முனிவே
யொத்து ளாறுதி விநோதித்தே நெடும்பக லும்மால். (67)

சித்தனும் முனிஒருபகல் கிரிமுழை சேர்ந்து பெத்தபங்கயாசனத்தினன்தான் தன்னிற் பேசும் மெத்தும் ஆசையே நிராசையை மேவுதி முனிவே ஒத்துஉள் ஆறுதி நெடும்பகல் உம்மால் விநோதித்தேம் = அத்விதீயசுபாவ சித்தனாகிய மனனசீலன் ஒருபோது பர்வதக்குகை அடைந்து கட்டப்பட்ட பத்மாசனத்தினனாகித் தானே தனக்குள் சொல்லிக்கொள்வான் மிக மிகவும் அதிகரிக்கும் ஆசையே, வைராக்கியத்தை அடைகுதி, ஏ கோபமே! சமாதானமாக அந்தரத்திலேயே சாந்தமடைகுதி, நீண்டகாலமாக இராகத் துவேஷங்களாகிய உங்களோடு சேர்ந்து கிரீடித்தேன்,

போகங்கா ளுமைத்தொழுதே னெடுநாளும்மாற் புவியில்விளை யாடியவா போதும் போதுஞ்
சோகந்தீ ரிவ்வீடு மறக்கச்செய்த சுகங்காளுங் களைத்தொழுதேன்
றுயர்கா ளும்மா லாகந்தான் வேகலினுலன்ருே வன்பா லாத்துமதத்துவ முணர்ந்தே னுதலாலே
யோகஞ்சேர் முத்தியெனக் குதவினீர்நீ ருபகரித்த வுமைத்தொழுத லுரிமையன்ருே. (68)

போகங்காள் உமைத்தொழுதேன் நெடுநாள் உம்மால் புவியில் விளையாடியவா போதும் போதும் சோகந்தீர் இவ்வீடு மறக்கச்செய்த சுகங்காள் உங்களைத் தொழுதேன் துயர்காள் உம்மால் ஆகந்தான் வேகலினுல் அன்ருேவன்பால் ஆத்துமதத்துவம் உணர்ந்தேன் ஆதலாலே யோகஞ்சேர் முத்தி எனக்கு உதவினீர் நீர் உபகரித்த உமைத்தொழுதல் உரிமை யன்ருே = விடயபோகம் எழும் யோக்கியங்களே உங்களை நமஸ்கரிக்கின்றேன், வெகுகாலம் உங்களால் இவ்வுலகத்தில் கிரீடித்தவாறு போதும் போதும்; சிற்றின்பங்களே உங்களை நமஸ்கரிக்கின்றேன்; துன்பம் (தரித்திரத்தாலாய துன்பம்) துன்ப ஏதுக்களாய உங்களால் தேகந்தான் மிகவும் தபித்தலால் அல்லவோ? பிரியத்தால் ஞானத்தாலடையத்தக்க மோக்ஷத்தை (அசம்பிரஞ்ஞாத சமாதியாலடையத்தக்க மோக்ஷத்தை) அடைந்தேன் ஆதலில் ஆசிரியன்போல உம்மால் உபதேசிக்கப்பெற்றது இவ்விவேகமார்க்கம் எனக்கு உதவினீர் உபகரித்த உங்களைப் போற்றுதல் கடன் அல்லவோ?

நெடுநாளைநண்பனுமுடலே யுன்னை நீக்குகின்றேன் மெய்ஞ்ஞான நிரம்பக்கற்றுக்
கெடுங்கேடுன் னுலுனக்குத் தேடிக்கொண்டாய் கிளராசை யெனுந்தாயே கேளாயென்சொற்
றடுமாறி நனிவாடித் தளரவேண்டாஞ் சாந்தனு யானகன்றேன் றருமமேநீ
யடுங்கோர நரகந்தீர் துறக்கத்தே முன்னுக்கினை யான்வாழி யுனைத்தொழுவே னன்பால். (69

நெடுநாளை நண்பனும் உடலே உன்னை நீக்குகின்றேன் மெய்ஞ் ஞானம் நிரம்பக்கற்று கெடுங்கேடு உன்னுல் உனக்குத் தேடிக்கொண் டாய் கிளர் ஆசையெனுந்தாயே என்சொல் கேளாய் தடுமாறி நனி வாடித் தளரவேண்டாஞ் சாந்தனும் யான்அகன்றேன் தருமமே நீ அடுங்கோர நரகந்தீர் துறக்கத்தே = வெகுகால சிநேகிதனுகிய தேகமே! உன்னை விட்டுவிடுகின்றேன்; தத்துவ ஞானத்தைப் பூரணமாகக் கற்று உன்னைக் கெடுக்கும் கெடுதலைத் தானே உன்னுலேயே உன்னுல் தேடிக்கொண் டாய் அந்தோ பாவம்; மீண்டும் மீண்டும் எழாநின்ற விஷய ஆசை அல்லது திருஷ்ணையென்னும் மாதாவே என்னுடைய வார்த்தையைத் தட்டுக்கெட்டுப் பதைபதைத்து மிகவும் வாட்டமுற்றுக்கேட்பாய், சோகிக்கவேண்டாம்; பரம சாந்

முன்னுக்கினையால் வாழஉனை அன்பால் தொழுவேன் = தியையுடையவனாகி யான் விலக்குகின்றேன்; சுகிருதமே! கொல்லத்தக்க உக்கிர நரகத்தை ஒழித்துச் சுவர்க்கத்தில் முன்னர் இருத்தி வாழ்த் தினுய் நீடுழிவாழக்கடவாய் உன்னைப் பக்தியோ டும் நமஸ்கரித்தேன்.

உடன்பிறந்த நண்பரா முயிர்கா ளும்மை யொழுங்கிலே யொழிக்கின்றே னுய்ந்துவாழ்தீர்
கடன்தகல்கே னுனென்ன விவ்வாறுள்ளே நாடுமன மேடணைக ணன்றுயாறி
யிடம்பெறநின் றோங்கார மெல்லவோதி யிகப்பொருள்கள் புறத்துள்ள விதயத்துள்ள
தடம்பெரிய நுண்ணியமு வுலகிலுள்ள சங்கற்பத் தமைந்தவெலாந் தள்ளினுனே. (70)

உடன்பிறந்த நண்பராம் உயிர்காள் உம்மை ஒழுங்கிலே ஒழிக்கின்றேன் உயர்ந்து வாழ்தீர் நான் கடன் தகல்கேன் என்ன இவ்வாறு உள்ளே ஏடணைகள் நாடும் மனம் நன்றுய் ஆறி இடம் பெற நின்று ஓங்காரம் மெல்லஓதி இகப்பொருள்கள் புறத்துள்ள இதயத்துள்ளதடம் பெரிய நுண்ணிய மூவுலகிலுள்ள சங்கற்பத்து அமைந்தவெலாந் தள்ளினுன் = கூடவே தோன்றிய நேசராம் பிராணன்களே! உங்களை யோகசாஸ்திர முறையே விடுகின்றேன் உங்களுக்குச் சுவஸ்திதி உண்டாகுக; நீங்கள் ஜீவித்து வாழுங்கள்; நான் செல்கின்றேன் என்ன இவ்வாறு அகத்தே ஆசைகளாகிய உங்களைக் கருதும் மனம் உபசாந்தியை அடைந்து பூமியை உற்றவனுய் (வீதகவ்வியமுனிவன்) பிரணவ உச்சாடன வாயிலாக விதேகத்தன்மையைக் கூறப் பெறல் ஓங்காரத்தை உச்சரித்து இகலோக வஸ்துக்கள் பாகியத்துள்ள மனத்தின்கண்ணுள்ள விசாலமாய மூவுலகிலுள்ள பொருள்கள், தூலம், சூக்குமம், அதிசூக்ஷுமப் பொருள்கள் சங்கற்ப கற்பிதங்களாய யாவற்றையும் அகற்றினுன்.

ஓங்கார முடிவாகத் தீர்க்கமான வோசையெனு நூலுடனே பொறிகளூற்ற
தேங்காத புலனெல்லா மணத்தைக் காற்றுத்தீர்வதுபோற் றீர்ந்தனன் சேணிடையேகங்கு
னீங்காது போலிருண்மாத் திரமுன்றோன்றி நிகழ்தலுந் தள்ளினன்சோதி நேர்முன்றோன்றப்
பாங்காகக் கணமதனைப் பார்த்துத் தீர்த்தான் பயிலிருடே சிரண்டுமறப் பாறிப்போன. (71)

ஓங்காரம் முடிவாகத் தீர்க்கமான ஓசையெனும் நூலுடனே பொறிகளூற்ற தேங்காதபுலனெல்லாம் மணத்தைக்காற்றுத்தீர்வதுபோல் பிரணவபரியந்தமான நீட்சிபெற்ற சப்தமென்னும் தந்துவோடுகூட இத்திரியங்கள் கவருற்ற திருப்தியுருத விஷயங்கள் யாவற்றையும், கந்தத்தை வாயு ஒழிப்பதேபோல விட்டனன்; ஆகா

தீர்ந்தனன் சேணிடையே கங்குல் நீங்காதுபோல் இருள்மாத்திரம் முன்தோன்றி நிகழ்தலும் தள்ளி னன் சோதிநேர்முன் தோன்றப் பாங்காகக் கணம் அதனைப் பார்த் துத் தீர்த்தான் பயில் இருள் தேசு இரண்டும் அறப்பாறிப்போன = யத்தின்கண் இருளானது அகலாததுபோலத் தமவிருத்திவடிவ அவித்யா அந்தகாரம் மாத் திரம் முன்னர்ப் பிரதீதியாகக் காணப்படலும் அதையும் ஒழித்தனன்; பின் பிரகாசமயமான சத்துவாகாரவிருத்தி முன்னேபிரதீதியாக அதனை யும் நன்ருக க்ஷணத்தில் ஆராய்ந்து நோக்கிவிட் டனன்; தோற்றிய இருளும் பிரகாசமும் ஆகிய இரண்டும் அத்தியந்தம் காணுமற்போயின.

அவித்தையிது தனைமனத்தாற் பற்றிமேலோ னங்குதித்த மனந்திரண மென்னமுற்றுந்
தவிர்த்தனனே ரிமைப்பிலதற் பின்னப்போதே சனித்தசிசு வறிவொத்துச் சாலநொய்தாய்
நிவக்குமொழி பெறுமறிவைப் பெற்றுப்பாதி நிமிடம்பாதியிலெண்ண நீக்கிநின்ருன்
றுவக்குறுகாற் றசைவுவிடல் போலச்சித்தின் ருெடர்காட்சிமாற்றினுன் றுகளி லாதோன். (72)

அவத்தை இதுதனை மனத்தால் பற்றி மேலோன் அங்கு உதித்த மனம் திரணமென்ன ஓர் இமைப் பில் முற்றுந்தவிர்ந்தனன் அதன் பின் அப்போதேசனித்தசிசு அறிவு ஒத்துச்சால நொய்தாய் நிவக்கும் ஒளிபெறும் அறிவைப்பெற்று பாதிநிமிடம் பாதியில் எண்ணம் நீக்கி நின்ருன் துவக்குறு காற்று அசைவு விடல்போல துகளிலா தோன் சித்தின்தொடர் காட்சி மாற்றினுன் = திரிகுணுன்மிக அவத்தையின் அதீதமான துரியா வஸ்தையாம் இவ்வஸ்துவை (சின்மாத்திர வஸ் துவை) மனத்தால் அவலம்பித்து உயர்ந்தோ னுன வீதகவ்வியன் ஆண்டு உதயமான மனத் தைத் துரும்புக்குச் சமானமாக ஓர் க்ஷணத்தில் அத்தியந்தம் அகற்றினுன். அதன் பின்னர் அப்போதே பிறந்த குழந்தை அறிவு ஒத்து (நிர்வாசனையாய்) அத்தியந்தம் சூக்குமமாய் உயர்ந்த சுயம்பிரகாச சோதியை அடைந்துமுன் னர்ப் பிரதீதியாக அதனையும் நன்ருக க்ஷணத் தில் கால் நிமிடத்தில் அவ்வெண்ணத்தையும் அகற்றிவிட்டான். துவக்கு இந்திரியத்தால் அறியற்பாலவாய, வாயு சலனத்தை விடுவது போலக் குற்றமற்ற அம் முனிவன் சித்தின் சேத்தியதசையையும் திருசியதசையையும் விட் டனன் நிருவிகற்பமாயினன்.

வருசிற்சா மானியத்தை யடைந்தான் சத்தா மாத்திரமே வடிவானுன் சுழுத்திமேவி
யிருபொற்குன் றெனநின்ருன் சுழுத்திமூற்ற மெய்தியபின் றுரியவடி வெளிதினுற்ரு

னருகுற்ற நிரானந்தமாயு மாயாவானந்த மாயசத்தாகியுஞ் சத்தாகு
மொருவுற்ற வசனங்கட் கெட்டாதான வொருபொருடா ணுய்நின்ரு
ஞெப்பி லாதான். (73)

வருசிற்சாமானியத்தை அடைந்தான் சத்தமாத்திரமே வடிவானுன் சுழுத்திமேவி இரு பொற்குன்று என நின்ருன் சுழுத்தியூற்றம் எய்தியபின் துரியவடிவு எளிதில் உற்ருன் அருகுற்றநிரானந்தமாயும் மாயா ஆனந்தமாய சத்தாகியுஞ் சத் ாகி ஒருவுற்ற வசனங்கட்கு எட்டாதான ஒரு பொருள் ஒப்பிலாதான் தாணுய் நின்ருன் = வாராநின்ற சாக்ஷிமாத்திர பரிசேடலக்ஷணமாய் காணும் பதத்தை அவஸ்தாத்திரய சாக்ஷிவடிவ பிரத்யகான்மாவை அடைந்தான்; தற்பத இலக்ஷியப் பிரஹ்மமே அகம் என்னும் பெருமை பொருந்திய மேருவைப்போலச் சலனமின்றிச் சத்தாமாத்திரசொருபமாஞன்; நனவிற் சுழுத்தி ஸ்திரமடைந்தபின் ஏழாம் பூமியான துரியகா பதத்தை அநாயாசமாக அடைந்தான்; சூக்குமமான திருசிய மஞே விருத்தியாலுண்டாகும் ஆனந்தமற்றதாயும் சாஸ்வத ஆனந்தமாயும் அசத்துப்போன்றிருந்ததாயினும் சத்தாகியும் நீக்குற்ற வசனம் மனம் இவைகளுக்குக் கோசரமாகாத அத்வைத வஸ்துவை ஒப்பற்ற வீதகவ்வியன் தனது வடிவமாய் நிலேத்தான்.

## அவதாரிகை

சர்வவாதிகளானே நாஞுவிகற்பங்களால் தத்தம் சித்தாந்தமாகவிகற்பித்த போதினும் வியாபகமும், சமமும் சர்வபாவாந்தரக்கதமும், சர்வவிவர்ஜ்ஜிதமும் ஆய பரமான்மருபமாயினுன் அவ் வீதகவ்விய முனிவன்.

சூனியமென் பார்க்கதுவாய்ப் பிரமமென்று சொல்லுவார்க் கதுவாய்விஞ்
ஞானமென்று
தானியம்பு வோர்க்கது வாய்ப் புருடனுகிச் சாங்கியர்க்கு மியோகியர்க்
கீசன்ருனுகி
ஞானமில்சை வாகமர்க்குச் சிவனுய்க்காலமென்பாருக் கதுவாய்மத்தியர்கட்
கெல்லா
மானமுறு மத்தியமாய்ச் சமமாய்க்காணு மனத்தினர்க்கெல் லாமான
பொருடானுனன். (74)

சூனியம் என்பார்க்கு அதுவாய் பிரமமென்று சொல்லுவார்க்கு அதுவாய்விஞ்ஞானம் என்றுதான் இயம்புவோர்க்கு அதுவாய் சாங்கியர்க்குப்புருடனுகி யோகியர்க்கு சூன்யமே உண்மைப்பொருள் என்பவருக்குஅந்த சூன்யமாய்ப் பிரஹ்மம் என்று சொல்லும் உபநிஷத்வாதிகளுக்கு, அந்தப் பிரஹ்மமாய், விஞ்ஞானமென்றுசொல்லும் க்ஷணிகவிஞ்ஞானவாதிகளுக்கு க்ஷணிக விஞ்ஞானமாய்ச் சாங்கியமதஸ்

ஈசன்ருனுகி ஈனமில்சைவஆகமர்க் குச்சிவனுய்க் காலமென்பாருக்கு அதுவாய் மத்தியர்கட்கெல்லாம் மானமுறு மத்தியமாய்ச் சமமாய்க் காணும் மனத்தினர்க்கு எல்லா மான பொருள்தானுனன் = தர்களுக்கு (அவன் அசங்கன் என்பவருக்குப்) புருடனுய்ப் பாதஞ்சல யோகியர்க்கு ஈசுரன் = பஞ்சக்கிலேசரகிதன், ஈசுரனுமாய்க் காலம் என் பாருக்குச்சூரியனுய், மாத்தியமிகர்களுக்குக்கீர்த் திக்கத்தக்க சித்து, அசித்து மத்தியம் சூன்யமாத் திரம் நல்ல சம சித்தமுடைய ஜீவன்முத்தர்கட் குச் சர்வான்மகவஸ்து தானே ஆயினுன்.

நூலனைத்தின் சித்தாந்த மேதெல்லோர்க்கு நோக்கிய தேதோர்ந்ததே
தெல்லாமேது
ஞாலமெல்லா முறைவதே தசைவொன்றில்லா நல்லதேதொளிக்கு
மொளிதருவதேது
பாலுறுதன் னநுபூதி யொன்ருய்க் காணப்பட்டதே தொன்ருயும்
பலவாமேது
சாலுகளங் கம்படைத்தும் படையாதேது சகலமுமா யலாததே
ததுதானுனன். (75)

நூலனைத்தின் சித்தாந்தம் ஏது எல்லோர்க்கும் நோக்கியது ஏது ஓர்ந்தது ஏது எல்லாம் ஏது ஞாலம் எலாம் உறைவது ஏது அசை வொன்றில்லா நல்லது ஏது ஒளிக் கும் ஒளிதருவது ஏது பாலுறுதன் அநுபூதியொன்ருய்க் காணப்பட் டது ஏது ஒன்ருயும் பலவாம் ஏது சாலுகளங்கம் படைத்தும் படை யாது ஏது சகலமுமாய் அலாதது ஏது அது தானுனன் = சர்வசாஸ்திரத்தின் துணிபு யாது சர்வத்திராளுக் கும் அநுகூதமாயிருப்பது யாது ஆராய்ந்து அறி வது யாது சர்வமும் யாது பிரமஞ்சமனைத்தும் ஆதேயத்தன்மையால் வியாபித்திருப்பது யாது சலனம் சிறிதுமில்லாத நிஷ்கிரியம்யாது அஷ்டப் பிரகாசங்கட்கும் பிரகாசம் செய்வது யாது தன் கண்ணுள்ள சுவாநுபூதிமயமாய் அறியப்பட்டது யாது உண்மையில் ஏகமாயும், மாயையால் பல வாயுமிருப்பது யாது மிகவும் மாயையால் அஞ் சனத்தோடு கூடியதாயினும் நிரஞ்சனமாயிருப் பது யாது சர்வமும் ஆகியும் உண்மையில் ஒன் றும் ஆகாதது யாதோ அதுவே தானுனன்.

அடர்பிறப்போ டிறப்பின்றி யாதியன்றி யாதியா யொன்ருகி யனேகமாகித்
தொடர்சகள நிட்களமாய் விண்ணிணுய்தாய்த் தூய்தான நிலையீசனுகி
யொல்லைத்
திடமுறவே முப்பதினு யிரமாண்டெல்லைச் செருக்குறவேண் டியபடியே
சகத்துலாவிப்
படர்மனமீண் டெழாதவகை சமித்தோன் ருனுன்பகர்வீத கவ்வியனும்
பரமயோகி. (76)

அடர்பிறப்போடு இறப்பு இன்றி ஆதியன்றி ஆதியாய் ஒன்ருகி (பரமேசுரசொரூபமாகி விளங்கியதன்மையையும் பின் வெகுகாலம் நுகர்வினைவயத்தால் இருந்த

அனேகமாகித் தொடர் சகளம் நிட்களமாய் விண்ணில் நொய் தாய்த் தூயதான நிலை ஈசனுகி ஒல்லைத்திடமுறவேமுப்பதினுயிரம் ஆண்டு எல்லைச் செருக்குறவேண் டியபடியே சகத்து உலாவி பகர் வீதகவ்வியனும் பரமயோகி படர் மனம் மீண்டு எழாதவகை சமித்து ஒன்ருனன் =

தன்மையையும் வர்ணித்தல்) சுர நர திரியக்காதி யாய் நெருங்கிய ஜனன மரணமில்லாமல், அநாதியாய், சர்வகாரணமாய், ஏகமாகி, ஜீவேசுர ஜகத்வடிவமாய், உபாதியுடைய சகளம் (அவயவ சகிதமாய்) உண்மையில் அவயவரகிதமாய் ஆகாயத்தினும் அதி சூக்குமமாய்ப் பரிசுத்தமான ஸ்திர பரமேசுவர சொரூபமாய் = பாகத்தியாக லக்ஷணையால் பக்த திருஷ்டியால் கணமாத்திரையில் ஈசுரனுகித் தனது காரியபேதங்களானே பல வாருக இருந்தான்; விரைவில் திடமாக முப்பதினுயிர வருஷபரியந்தம் சொரூபரமிப்பால் செருக்குற = கம்பீரமாய் இஷ்டப்படி பிரபஞ்சத்தில் சஞ்சாரஞ்செய்து இதுவரையும் கூறிவந்த வீதகவ்வியனும் மேலான யோக சிரேஷ்டன் ஜன்ம துன்பத்தை அடையச்செய்யும் மனம் மீண்டெழாதபடி உபசாந்தனுய்ப் பிரஹ்மமேயானுன். (ஏகைகபாவத்தை அடைந்தனன்)

5 – 9 வீதகவ்வியன் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—1230.



# 5 உபசாந்திப் பிரகரணம்

(ஆகாசகமனுதி அபாவ நிருபணம்)

## அவதாரிகை

முன்பு சித்தவிசிராந்தி சித்தத்திற்குச் சங்கத்தியாகப்பிராண நிரோத சமாதி அப்பியாசங்கள் சொல்லப்பட்டன. இப்போது ஜீவன்முக்தனுக்கு ஆகாசகமனுபாவாதி நிருபணமுகத்தால் சித்தத்திற்கு உபசப்பிராப்தியைக் கூறுகின்ருர்.

என்ன வுரைத்த முனிதன்னை யிராமனேக்கி யுரைசெய்வா
னுன்னு சீவன் முத்தியினே ருடல்கட்கெல்லா மாகாயந்
தன்னி னடத்தன் முதலான சத்திகாணே மென்னென்ன
வன்ன வினுவுக் குத்தரங்க ளறியவுரைத்தா னருள்வசிட்டன். (1)

என்ன உரைத்தமுனிதன்னை இராமன் நோக்கி உரைசெய்வான்

என்று இந்தப்பிரகாரம் உபதேசித்தருளிய ஸ்ரீ வசிஷ்டபகவானை ஸ்ரீ இராகவன் பார்த்துச் சங்

சீவன் முத்தியினேருடல்கட்கெல்லாம் ஆகாயந்தன்னில் நடத்தல் முதலான சத்திகாணேம் என் என்ன அன்னவினுவுக்கு உத்தரங்கள் அறிய உரைத்தான் அருள் வசிட்டன் = கிப்பாஞயினன் ; மகாத்மாக்களென்று கருதத் தக்க ஜீவன்முத்தியினேர் தேகங்களுக்கெல்லாம் கேசரத்வாதிசித்திகள் முதலிய சத்திகண்டிலேன்; அஃது என்னேயென்றுகேட்ப, அந்தச் சங்கைக்கு உத்தரங்களேத் தெரியும்படி அநுக்கிரகித்தார் கிருபையேவடிவமாகவுள்ளஸ்ரீ வசிஷ்டபகவான்.

பெரிய உணர்வில் பெத்தர்களும் பேணுமருந்தான் மந்திரத்தால்
கிரியை தன்னுற் காலத்தாற் கிளர்ந்தவூகத் தாலியற்றின்
விரியும் விண்போக் காதிகளே மேவாநிற்பர் மெய்யுணர்வோர்க்
குரிய வல்ல விவையவர்க ளுண்மைநோக்கே விடாதுறுவார். (2)

பெரிய உணர்வில் பெத்தர்களும் பேணும் மருந்தால் மந்திரத்தால் கிரியைதன்னுல் காலத்தால் கிளர்ந்த ஊகத்தால் இயற்றில் விரியும்விண் போக்காதிகளே மேவாநிற்பர்மெய்யுணர்வோர்க்கு இவை உரியவல்ல அவர்கள் உண்மைநோக்கேவிடாதுறுவார்= பிரஹ்ம சாக்ஷாத்காரமல்லாத பந்தமுடையவர்க்கும் விரும்பத்தக்க ஔடதங்களால், மந்திரங்களால், தொழில் விசேடங்களால், பரிபக்குவ காலத்தால் விளங்காநின்ற யூகத்தால் அப்பியாசஞ்செய்வதில் விஸ்தாரமாய ஆகாசகமனுதிகளே அடைந்திடுவர் ; தத்துவ ஞானமுடையோருக்கு இவற்ருல் சகமனுதிகள் தகுதியுடையதல்ல, அவ்வறிஞர்கள் எதார்த்த திருஷ்டியையே விடாமல் உற்றிடுவர்=ஆகாசகமனுதி துச்சமாகத்தோற்றுதலின் ஆன்மாவையே அநுசந்தானஞ் செய்பவராயிருப்பர்.

அறிந்தோ ரறிவா லறிவினிடத் தமைவதல்லா லாசையின்பின்
பிறிந்தோ டார்கள் சகப்பொருளின் பேதமெல்லா மாயைகளே
மறிந்தே மாயை கெடவென்ருேர் மறித்துமதனின் மூழ்குவரோ
செறிந்தே யறிஞர் களும்விரும்பிற் சித்தியுறுமுன் பகரொழுங்கால். (3)

அறிந்தோர் அறிவால் அறிவினிடத்து அமைவதல்லால் ஆசையின்பின் பிறிந்து ஓடார்கள் சகப்பொருளின்பேதம் எல்லாம் மாயைகளே மறிந்தே மாயைகெடவென்ருேர் மறித்துப் அதனில் மூழ்குவரோ அறிஞர்களும் விரும்பில் முன்பகர்செறிந்தே ஒழுங்கால் தம்மை அறிந்த பெரியோர் மெய்யுணர்வால் (தத்துவஞானத்தால்) ஆன்மாவாகிய தம்மிடத்தில் இனிதுமகிழ்ந்திருப்பதாலும் ஆசாவிஷமாயத்தின்பின் தம்மை மறந்து வேருய்ப் பிரிந்து தொடர்ந்து செல்லமாட்டார்கள். பிரபஞ்சவஸ்துக்கள் யாவும் அவித்யாகாரியங்களே; மீண்டும் அடங்குமாறு மாயை நாசமாம்படி ஜயித்தோர் அதனில் மூழ்குவரோ? சொரூபத்தை உணர்ந்

சித்தியுறும் = தவர்களும் நுகர்வினைவயத்தால் சித்திகளைவிரும்பில் முன் கூறப்பட்ட பிரகாரம் சாதனத்தை அடையப்பொருந்தி அனுஷ்டித்து அஷ்டமா சித்தியை அடைவர்.

கேட்ட மருந்து மந்திரங்கள் கிரியைகால மூகமெலா
நாட்டுஞ் சித்தி களைநல்கு நல்லமுத்தி தரமாட்டா
தேட்ட முளதே லொருத்தற்கொன் றதுதா னியற்றிற் சித்திக்கும்
பூட்டு மாசை வந்தணுகா புரணபோத முடையோர்க்கே. (4)

கேட்ட மருந்து மந்திரங்கள்; கிரியை காலம் ஊகமெலாம் நாட்டுஞ் சித்திகளைநல்கும் நல்லமுத்தி தரமாட்டா ஒருத்தற்கு ஒன்று தேட்டம் உளதேல் அதுதான் இயற்றல் சித்திக்கும் புரணபோத முடையோர்க்கு பூட்டும் ஆசை வந்தணுகா = சித்தி சாதனமாகக் கேள்வியுற்ற ஔஷதம், மந்திரங்கள், தொழில், பரிபாககாலம், யுக்தியென்னும் யாவும் புகழை நாட்டும் அணிமாதி சித்திகளைத்தரும், அனர்த்த நிவர்த்தி பரமானந்தப் பிராப்திவடிவ மோக்ஷத்தைக் கொடுக்காவாம்; யாவர் ஒருவருக்கு ஒன்று விருப்பம் உளதேல் அப்பொருள்தான்=ஞானமோ, சித்தியோ ஓதற்குரிய சாதனங்களைக்கொண்டு சாதிக்கில் அடைதல் கூடும் பரிபூரண ஞானமுடையோர்க்குச் சம்சாரத்தில் பிணிக்கும் ஆசைவந்து சாராது.

காத லெல்லா மிறந்தொழிந்தாற் கலங்காஞானே தயமுண்டா
மாத ரஞ்செய் சித்திகளி னமிழ்வோர்க் கப்பே றடையாதென்
றோது முனியை யோகிகடா மூழிகால முயிர்வாழ்தற்
கேது மூல மெனக்கேட்டா னிராமன் மீட்டு முனிசொல்வான். (5)

காதலெல்லாம்இறந்தொழிந்தால் கலங்கா ஞானேதயம் உண்டாம் ஆதரஞ்செய் சித்திகளில் அமிழ்வோர்க்கு அப்பேறு அடையாது என்று ஓதுமுனியை யோகிகள் தாம் ஊழிகாலம் உயிர் வாழ்வதற்கு ஏதுமூலம் எனக்கேட்டான் இராமன் மீட்டும் முனிசொல்வான் = (இச்சை அவனுக்கு ஏன் உண்டாகமாட்டாது எனின் கூறுதல்) சகல ஆசைகளும் மீட்டணுகாது நசித்தேகுமாயின் ஐயந்திரிபு இன்றிய மதவாதிகளால் கலக்கஞ்செய்யினும் பிரஹ்மவித்தையே உளவாகும், யாவர்களும் விரும்பத்தக்க அணிமாதி சித்திகளில் மூழ்கியிருப்பவருக்கு ஞானத்தாலாய அப்பரமானந்த பிரயோஜனம் அடைவுறுது என்று கூறிய ஸ்ரீ வசிஷ்டபகவானை யோகிகள் தாம் கற்பகாலம் பிராணனேடு கூடியிருத்தற்கு யாது காரணம் என்று ஸ்ரீ இராகவன் கேட்டான்; மீண்டும் ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவாராயினர்,

பிராண னசையி லசைந்திடுவர் பிராணனடங்கிற் கற்போல்வர்
பிராணன் றன்னைத் தரித்தலினுற் பெருநாணசியார் யோகிகடாம்
பிராணன் றன்னி னெஞ்சத்திற் பிறக்குமசைவுட் புறனடங்கிற்
பிராண னுச மூப்பிரண்டும் பெருந்தூ ரத்தி லேகிடுமால். (6)

பிராணன் அசையில் அசைந்திடுவர் பிராணன் தன்னைத் தரித்தலினுல் பெருநாள் நசியார் பிராணன் தன்னில் நெஞ்சத்தில் பிறக்கும் அசைவுஉள் புறன் அடங்கில் பிராணன் நாசம் மூப்பு இரண்டும் பெருந்தூரத்தில் ஏகிடும் = பிராண வாயு சலனமுறில் தேக சலனமுறுவர், பிராணவாயுநிரோதமாகில் சிலைபோன்றிருப்பர்; யோகிகள் தாம் பிராணன் தன்னிலும் மனத்திலும் உண்டாஞ் சலனம் ஆந்தரத்திலும், வெளியிலும், நிரோதமாயின், மரணம், ஜரை இரண்டும் வெகுதூரத்தில் ஓடிவிடும்.

உள்ளும் புறம்பு மசைவின்றி யுயிருமனனு மொடுங்குமெனிற்
றள்ளு ருமலொருக்காலுந் தாதுவெல்லாஞ் சடத்துறையுந்
தெள்ளி யறிவ தறிந்தாசை தீர்ந்துபுந்தி தெளிந்திதயங்
கொள்ளும் பந்த மெலாமறுத்தோ ரன்ரேவுண்மை குறித்தறிந்தோர். (7)

பிராணனும் மனமும் உள்ளும் புறம்பும் அசைவின்றி ஒடுங்குமெனில் தாதுவெல்லாம் ஒருக்காலும் தள்ளுருமல் சடத்து உறையும் தெள்ளி அறிவது அறிந்து ஆசை தீர்ந்து புந்தி தெளிந்து கொள்ளும் இதயபந்தம் எலாம் அறுத்தோரன்ரே உண்மை குறித்து அறிந்தோர் = பிராணனும் மனமும் ஆந்தரத்தும் பாகியத்தும் சலனமில்லாமல் அடங்குமாயின் துவக்கிந்திரிய முதலிய யாவும் ஓர் காலத்தும் நீங்காது தேகத்தில் இருக்கும் தெளிவாகத் தெரியவேண்டியதைத் தெரிந்து இராகம் அற்றுப் புத்தி தெளிந்து தாதாத்மிய அத்தியாசத்தால் பற்றும் மனேகிரந்திகள் அற்றவர் எவரோ அவரே எதார்த்த வஸ்துவை விசாரித்து அறிந்தவராவர். (சாக்ஷாத்கரித்தவராவர்)

என்ற முனியை விவேகத்தி னெழுச்சி யாலே மனமிறக்கிற்
றுன்று கின்ற மைத்திரியை முதலாங்குணமெவ் விடத்தொன்றுங்
குன்ற மனையா யுரையென்ற விராகவற்கு முனிகூறு
மொன்று மருவு முருவுமென வுளத்தி னுச மோரிரண்டே. (8)

என்ற முனியை விவேகத்தின் எழுச்சியாலே மனம் இறக்கில் துன்றுகின்ற மைத்திரியை முதலாங்குணம் எவ்விடத்து ஒன்றும் குன்றமனையாய் உரையென்ற இராகவற்கு முனிகூறும் ஒன்றும் = என்று கூறிய வசிஷ்ட மகரிஷியை ஆன்மா அனன்ம விவேக உதயத்தாலே சித்தம் லயமானல் ஆசிரயமாகவுடைய மைத்திரி, கருணை, முதிதை, உபேக்ஷை இத்யாதி குணங்கள் எவ்விடத்துப் பொருந்தியிருக்கும்; மேருவிற்குச் சமானமான மகரிஷியே அருளல்வேண்டும் என்ற

அருவும் உருவும் என உளத்தின் நாசம் ஓரிரண்டே = இராகவற்கு ஸ்ரீ வசிஷ்டமகரிஷி அருளுகின்றார்; பொருந்தும் அருவநாசம் உருவநாசம் என மனோ நாசம் இரண்டுபிரகாரமாகும்.

சீவன் முத்தி தனிலுருவ நாசஞ்சித்தந் தனக்குளதாந்
தாவி லுடறீர் முத்திதனிற் சாற்றுமருவ நாசமுறு
மேவு சித்த முண்டாகி லிடராமிறக்கின் மிகுமின்பம்
பாவி யுள்ள மெழாதபடி பண்ணி யதைநா சம்பயில்வாய். (9)

சித்தந்தனக்கு சீவன் முத்திதனில் உருவம் நாசம் உளதாம் தாவு இல் உடல்தீர் முத்திதனில் சாற்றும் அருவம் நாசம் உறும் மேவு சித்தம் உண்டாகில் இடராம் இறக்கில் மிகும் இன்பம் பாவி உள்ளம் எழாதபடிபண்ணி அதை நாசம் பயில்வாய் = மனதுக்கு ஜீவன் முத்திதனில் உருவம் நாசம் உண்டாம்; பின்னொரு தேகம் பற்றாத விதேக முத்தியில் முன்மொழிந்த அருபம் நாசம் உண்டாம்; திருசியோன்மகமாகப் பொருந்தி மனம் உண்டாகில் துக்கமேயாம், நாசமாயின் பேரானந்தம் ஆம், பாவகரணமான மனது எழுச்சியுறாது செய்து அது நாசமாவதற்கு அப்பியாசஞ் செய்வாய்.

பகுதி வழியின் குணபார மெனதென் றபிமா னம்பண்ணற்
றகுதி யுண்மை யறியாது தளர்நெஞ் சாஞ்சீ வனுமதுவே
தொகுதி யான சுகாசுகத்தைத் தொடர்ந்து நிற்குஞ் சுகாதிகளின்
மிகுதி யாசை யாதிம்மனமே மிகுமாயைக்கு விளைமுளையே. (10)

தகுதி உண்மை அறியாது குண பகுதி வழியின் பாரம் எனதென்று அபிமானம் பண்ணல் தளர்நெஞ்சாம் அதுவே சீவனும் தொகுதியான சுகாசுகத்தைத் தொடர்ந்து நிற்கும் சுகாதிகளில் மிகுதி அசையாது இம் மனமே மிகுமாயைக்கு விளைமுளையே = தக்கதான எதார்த்த வஸ்துவை உணராது திரிகுணான்மகமாகப் பொருந்தா நின்ற பிரகிருதியின்காரியமான (பிராகிருதமான) சம்சார ஆடம்பரத்தை யான் எனதென்று அபிமானஞ் செய்தல் துயரமடையும் மனமாம்; அதுவே கர்த்தாவாகிய ஜீவனும் கூட்டங்களான இன்ப துன்பங்களைத் தொடர்புற்று நிற்கும், இன்ப துன்பங்களில் இரமித்து மிகுதியாய் அழுந்தி அவ்வவ்வாகாரமாகும் பாரமான சம்சாரத்தை உண்டாக்குவதற்கு அங்குரம் ஆகும்.

மனத்தி னுண்மை யுரைத்தனமேன் மனத்தினசஞ் சொலக்கேட்பாய்
கனத்த கிரியை யுயிர்ப்பசையா வகைபோற் சமமாங் காட்சிதனி

லினத்த வின்ப துன்பங்க ளிறையுமசையா திருப்பவர்க்கே
யனத்த மான வுள்ளந்தா னழிந்ததென்ப ரறிந்தோரே. (11)

மனத்தின் உண்மை உரைத்தனம் மேல் மனத்தின் நாசம் சொலக் கேட்பாய் கனத்தகிரியைஉயிர்ப்பு அசையாவகைபோல் இனத்த இன்ப துன்பங்கள் இறையும் அசையாது சமமாங் காட்சிதனில் இருப்பவருக்கு அறிந்தோர் அனர்த்தமான உள்ளந்தான் அழிந்ததென்பர் = மனத்தின் இருப்பைக்கூறினேம், இனி மனத்தின் நாசம் கூறக் கேட்பாய், பெரிய பர்வதத்தைத் தென்றல் காற்று அசைக்கமுடியாதது போல வரிசையாக உண்டாம் சுகதுக்கங்களால் சிறிதும் சலனம் அடையாது அவ்வாறு இருப்பவருக்கே பெரியோர் துன்பத்தை இயற்றுவதான மனமானது க்ஷயமாயது என்று கூறுவர்.

மாவுச் சவமா பத்தூக்க மந்தங்கார்ப்பண் ணியமதங்கண்
மேவுற் றனபே தியாதெவரை யவர்க்கே யுள்ளம் வீந்துளதாந்
தாவுற் றெழுந்த பேதைமையே மனமா மதுவே தவிர்ந்தொழியி
லோவுற் றுள்ள நாசமெனு முறுபேருண்மை யுதித்திடுமால். (12)

மேவுற்றன மாஉச்சவம் ஆபத்து ஊக்கம் மந்தம் கார்ப்பண்ணியம் மதங்கள் எவரை பேதியாது அவர்க்கே உள்ளம் வீந்துளதாம் ஓவுற்று தாவுற்றெழுந்த பேதைமையே மனமாம் அதுவே தவிர்ந்தொழியில் உள்ள நாசமெனும் உறுபேருண்மை உதித்திடும் = ஊழியினுல் அடைவதாகிய பெருவிழா முதலிய மங்களம்(கல்யாணம்)ஆபத்து(புத்திராதிஆபத்து) பெரியகஷ்டம், உற்சாகம், மந்தபாவம், கிருபணபாவம் (லோபத்தன்மை) மதம் இத்யாதிகள்; எந்தத் தீரபுருடரை விகாரத்தைச் செய்யாதோ, அத் தீரபுருடர்க்கே மனமானது இறந்துபோயதாம், ஓர் விடயத்தினின்றும் ஒழிந்து பிறிதோர் விடயத்தில் தாவி உண்டாகும் அறியாமையே மனமாம்; அவ்வறியாமை எக்கால் நசிக்குமோ அக்கால் மனே நாசமென்னும் தக்க பெயரைப் பெறும் சுத்தசத்துவம் உதயமாம்.

ஆய குணமா மைத்திரியா திகள்சேர்நல்வா தனையடைந்து
தீய மறுசென் மமுமிலதாஞ் சீவன் முத்தர்க் கந்தமன
மோய மனதுக் கிதுவாகு முருவநாச மிதுதனிலே
மேய குணங்கண் வசந்தத்தின் விரிபூங் கொத்தா மெனவிளங்கும். (13)

ஆயமா மைத்திரியாதி குணங்கள் சேர்நல் வாதனையடைந்து சீவன்முத்தர்க்கு அந்தமனம் ஓய தீய மறுஜென்மமுமிலதாம் இது ஜீவன்முத்திக்கு உரியனவாய மாட்சிமைபொருந்திய மைத்திரிமுதலிய குணங்கள் சேர்ந்து உத்தம வாசனையைப் பெற்றுள்ள ஜீவன்முத்தர்கட்கு அந்த மனம் சாந்தியாய்க் கெட்ட புனர்ஜன்மமும்

உருவமனதுக்கு நாசம் ஆகும் இதுதனிலேமேய குணங்கள் வசந்தத்தின் விரிபூங்கொத்தாம் என விளங்கும் =

இலதாகும் இதுவே உருவ மனதுக்கு நாசமாகும் இந்த உருவ சொரூபநாசம் வந்து அரூப மனத்தின்கண்பொருந்திய கல்யாண குணங்கள் வசந்த காலத்தில் விஸ்தாரமாய்ப் புஷ்பக்கொத்துப் போலச் சோபிதமாய் விளங்கும்.

தத்துற்ற வுள்ளத்தி னருவநாசஞ் சரீரமிலா முத்தியினிட் களமாய்ச்சாரு
மெத்துற்ற நற்குணங்க டரிக்கு முண்மை வீந்துளதாய் மேனியிலா விமல வீடாய்ச்
சுத்தத்தா யுடறீர்ந்த முத்தர்க்கெய்துந் தொடர்பாய்ச் சத் துவநாசஞ் சொரூபமாகிச்
சித்தத்தி னருவநாசப் பேர்பெற்ற திகழ்பதத்தி லொன்றுமிலைச் செப்புதற்கே (14)

தத்துற்ற உள்ளத்தில் அருவநாசம் சரீரம் இலா முத்தியின் நிட்களமாய்ச்சாரும் மெத்துற்ற நற்குணங்கள் தரிக்கும் உண்மை வீந்துளதாய் மேனி இலா விமல வீடாய்ச் சுத்தத்தாய் உடல்தீர்ந்த முத்தர்க்கு எய்தும் தொடர்பாய்ச் சத்துவநாசம்சொரூபமாகி சித்தத்தில் அருவநாசப் பேர்பெற்ற திகழ்பதத்தில் செப்புதற்கு ஒன்றுமிலை =

தாவிப்பாயும் மனத்தின் அருவநாசம் விதேக முக்தனிடத்திலேயே நிஷ்களவடிவமாகச் சேரும்; மிகுதியாய்ப் பொருந்திய நல்ல குணங்களைத் தாங்கும் சத்துவமும் லயமுடையதாய தேகமின்றிய நிர்மலமான பதமாய்ப் பரமபாவனமாய்த் தேகந்தீர்ந்த முத்தர்கட்கு அடைவதற்கு உரியதாய்ச் சத்துவநாச வடிவமாகிய மனத்தினது அருவநாசப் பெயர் அடைந்து விளங்காநின்ற பதத்தில் கூறுவதற்கு ஒரு திருசியமும் இலவாம்.

குணங்குணமி லாமைசீர் சீரிலாமை குலவுதயமத்தமன மகிழ்வசூயை
யிணங்கொளிவல் லிருளிரவு பகன்முச் சந்தி யியலுண்மை யில்லாமை யிடையொன்றில்லை
புணர்ந்துளதற் பதமதுதான் மாயக்கூத்தும் புந்தியும்வென் றகன்றவர்க்குப் புகலேயாகும்
மணங்கவநுங் காற்றுமுத லனைத்தினுக்கு மருவிடமாய் நிற்கின்ற வானம்போல. (15)

குணம் குணம் இலாமை சீர் சீரிலாமை குலவு உதயம் அத்தமனம் மகிழ் அசூயை இணங்கொளிவல்லிருள் இரவு பகல் முச்சந்தி இயல் உண்மை இல்லாமை இடையொன்றில்லை புணர்ந்துள தற்பதம் அதுதான் மாயக்கூத்தும்

மைத்திரியாதி குணம் மனோதோஷங்கள் ஸ்ரீ ஸ்ரீ இன்மை, அலைதல், உதயம், அஸ்தமனம், மகிழ்ச்சி, வாட்டம், தேஜசு, தமம் இரவு, தினம், முச்சந்தி, சத்தை (பாவம்) அசத்தை (அபாவம்) இவைகளின் உபயமுமில்லை; இங்ஙனம் பொருந்தியுள்ள பிரஹ்மம் என்னும் அதன்கண்ணே விவர்த்தமாகத் தோற்றுநின்ற இச்சம்சார ஆடம்

புந்தியும் வென்று அகன்றவர்க்கு புகலேயாகும் மணங்கவரும் காற்றுமுதல் அனைத்தினுக்கும் மருவிடமாய் நிற்கின்ற வானம் போல = பரத்தையுஞ் சஞ்சல மதியையும் தாண்டின மகான்கட்கே நிலைபெற்று நன்மையேயாகும். நறுநாற்றங்கள் கவர்ந்தேகும் வாயுமுதலிய யாவற்றிற்கும் ஆஸ்பதமாய் நிற்கின்ற ஆகாசம் போல.

துன்பமெலா மிறந்தறிவே வடிவா யேகச் சுழுத்தியாய்த் தாமதரா சதந் தோன்றும
லின்பமிகுந் தழகாமப் பதத்தே விண்ணி னியாக்கையாய்ப் பெரியோரா யிலங்குமேலோர்
வன்படர்நெஞ் சறவுறைவ ரென்றலோடும் வளர்கொடி முந்திரிகைநிகர் மாயைக்கேது
முன்பயில்வித் ததற்கெதுவித் ததற்கென்வித்து மொழிந்தவதற் கெதுவித்து மொழிவாய்நாலும். (16)

துன்பமெலாம் இறந்து அறிவே வடிவாய் ஏகச்சுழுத்தியாய்த் தாமத ராசதந்தோன்றுமல் இன்பம்மிகுந்து அழகாம் அப்பதத்தே விண்ணினி யாக்கையாய் பெரியோராயிலங்குமேலோர் வன்படர் நெஞ்சு அற உறைவர் என்றலோடும் வளர்கொடி முந்திரிகை நிகர் மாயைக்கு ஏது முன் பயில் வித்து அதற்கு ஏது வித்து அதற்கு என்வித்து மொழிந்த அதற்கு ஏது வித்து நாலும் மொழிவாய் = சர்வ துக்கங்களும் ஒழிந்து சைதன்யமே சொரூபமாய் ஒரே நித்திரையாய்த் தாமதம் இராசதம் நீங்கியதாய்ப் பேரானந்த ரமணீய நித்திய அந்தப்பதத்தில் (விதேகமுத்திரூபமாகிய அந்தப்பதத்தில் சூன்ய ஆகிருதியாய் மகான்களாகிய அறிஞர்கள் மனத்தினை அத்தியந்தம் நாசஞ் செய்திருப்பர் என்றலோடும் விருத்தியாகாநின்ற முந்திரிக்கொடிபோன்ற சம்சாரத்திற்கு யாது முன்னுள்ள பீஜம், அதற்கு ஏது பீஜம், அதற்கு எது பீஜம் கூறியவதற்கு ஏது பீஜம் இந்த நான்கையும் கூறவேண்டும் என.

## அவதாரிகை

சம்சாரத்துக்குப் பீஜம் தேகம், தேகத்துக்குப் பீஜம் மனம் மனதுக்குப் பீஜம் பிராண சலனமும், திடவாசனையும், மனதுக்கும் பிராணன் அசைவு திடவாசனைக்கும் பீஜாங்குரநியாயம் பிராண நிரோதம் பண்ணினலும் மனம் சலிக்காது விசாரணையால் வாசனக்ஷயம் பண்ணினலும் மனம் சலிக்காது ஆகலின் பீஜாங்குரநியாயம் பிராணன் அசைவு திடவாசனைக்குப் பீஜம் திருசியம்; திருசியத்துக்குப் பீஜம் சம்வித்து, சம்வித்துக்குப் பீஜம் சத்தாசாமானியம் ; திருசியம் உலக விஷயம், உலக விஷயத்தை அறிவது சம்வித்து உலக விஷயத்தைப் பற்றுதது அசம் வேதனம் = திருசிய விஸ்மரணம் விஷயஞானம் குடும்பநிலைத்திருத்தலின் அசம் வேதனம், சுழுத்தியில், அசம் வேதனம் ஆனல் சுழுத்தி ஜாட்டியம் நாம் அஜடன். அசம் வேதனம், சம்வித்துக்கு பீஜம் சத்தாசாமானியம் இதனை ஸ்ரீவசிஷ்டபகவான் தெளிவாகக் கூறுகின்றார்

என்றிரா கவன்கேட்ப வசிட்டன்சொல்வா னெழுந்துளவா ரம்பசுபா சுபங்க ளென்னுந்
துன்றுமுளை தந்தருளு மேனிவித்தாஞ் சொன்னபெரு மாயையெனுஞ் சூழ்கொடிக்கு
நின்றவுட லெனும்வித்துக் கெதுவித்தென்னி னீண்டபாவாபாவ நிறைந்து நாளுங்
கன்றுதுய ரெனுமணிக்கு வைப்பாஞ்செப்பாங் காதலின்பின் னோடுகின்ற கவலைநெஞ்சே. (17)

என்று இராகவன் கேட்ப வசிட்டன் சொல்வான் சொன்ன பெரு மாயையெனுஞ் சூழ்கொடிக்கு எழுந்துள ஆரம்ப சுப அசுபங்கள் என்னுந் துன்றுமுளைதந்தருளும் மேனிவித்தாம் நின்ற உடல்எனும் வித்துக்கு எதுவித்து என்னில் நீண்டபாவம் அபாவம் நிறைந்து நாளுங் கன்று துயர் எனும் மணிக்கு வைப்பாஞ் செப்பாம் காதலின்பின் ஓடுகின்ற கவலை நெஞ்சே =

பீஜம் வகையைக் கூறவேண்டும் என்று ஸ்ரீ இராகவர் வினவ ஸ்ரீ வசிஷ்டபகவான் விடையருளிச் செய்வதாவது ; நீ வினவிய சம்சாரம் என்னுங் கொடிக்கு (லதைக்கு) ஊழ்வயத்தால் ஆரம்பித்த லிங்கதேகத்தில் மறைபட்டிருக்கும் நலன் தீங்கு என்னும் நெருங்கிய அங்குரம் தரும் போகாயதனமாகப் பொருந்தாநின்ற தூலசரீரமே பீஜமாம் ; பொருந்தாநின்ற தூலதேகம் என்னும் பீஜத்துக்கு யாது பீஜம் என்னில்; ஐஸ்வரியம் விருத்தி அதன் நாசம் என்னுந் தசைகட்குக் கோசமும் வருத்தாநின்ற துக்க இரத்தின சம்புடமும் ஆசாவசமாய் அதன்பின் வேலைக்காரன் போல் ஓடி அலையும் சஞ்சல மனமேயாம்.

இல்லதுள தெனுமிந்தத் திரனெஞ் சாலே யெல்லையறப் பிறக்குமா லிதனைத் தானே
புல்லுகின்ற கனவிலனு பவிப்பரன்றே புவித்தொழிலாங் கொடிகளே பொருந்திச்சுற்று
மல்லன்மன மெனுமரத்துக் கிரண்டுவித்தா மாவியசை யாவொன்றும் வாதனையமுத்தஞ்
சொல்லுமிரண் டாவதா மென்றுகொள்வாய் சூரியன்றெல் குலம்விளங்கத் தோன்றுந் தோன்றல். (18)

இல்லது, உளது எனும் இந்த திரள் நெஞ்சாலே எல்லையறப் பிறக்கும் இதனைத்தானே புல்லுகின்ற கனவில் அநுபவிப்பரன்றே புவித்தொழிலாங் கொடிகளே பொருந்திச்சுற்றும் அல்லல் மனம் எனும் மரத்துக்கு இரண்டுவித்தாம் ஆவி அசைவு ஒன்றும்

சென்றன, நிகழ்ந்தது அல்லது இராததன்றியிருப்பதாய்ச் சரீரங்கள் என்னும் இக்கூட்டம் மனத்தினாலேயே அளவின்றி உண்டாம் இவ்விடயத்தையே தோஷ சகிதமாய்ப் பொருந்துகின்ற சொப்பனத்தில் அநுபவிப்பர். உலக விவகாரமாம் உழவாதி, எக்ஞாதி, சிரவணாதி, கிருத்தியங்களாம் லதைகளே நெருங்கிச்சுற்றும் துன்பமயமாய மனம் எனும் விருக்ஷத்திற்கு இரண்டு

வாதனை சொல்லும் அழுத்தம் இரண்டாவதாம் என்றுகொள் வாய் சூரியன்ருெல்குலம் விளங் கத்தோன்றுந் தேர்ன்ருல் = பீஜங்கள் உளவாம் அவை பிராணனது அசைவு ஒன்ரும் கூறும் திடபாவனை இரண்டாவதாம் என நினது மனத்திற்கொள்ளுதி; சூரியபகவானது பிராசீனவம்சம் துலங்க அவதரித்த குழந்தாய்.

உண்டாகி யெவ்விடத்து முற்றபோத முயிரசைவாலுணர்வுறுமப் போதந்தன்னை
மண்டாமற் றடுக்கைபெரு நன்மையாகும் வளர்போதங் காண்பவற்றை
மருவு மாலாற்
றண்டாத காண்பவையே மனத்துக்கென்றுந் தவிராத துயராமத்
தனிப்போ தந்தான்
மீண்டாத சுழுத்தியிற்போ தம்போ னிற்கில் வீடதுபே றதுவிமல பதம்
வேறில்லை. (19)

உண்டாகி எவ்விடத்தும் உற்ற போதம் உயிர் அசைவால் உணர்வுறும் போதந்தன்னை மண்டாமல் தடுக்கைபெரு நன்மையாகும் மாலால் வளர்போதங் காண்பவற்றை மருவும் தண்டாத காண்பவையே மனத்துக்கு என்றும் தவிராத துயராம் அத்தனிப்போதந்தான் மிண்டாத சுழுத்தியிற் போதம்போல் நிற்கில் அது வீடு அதுபேறு விமலபதம் வேறில்லை = (பிராண சலனத்துக்குப் பீஜத்தன்மையை உரைத்தல்) சத்தாய் எங்கும் உள்ள சம்வித்துப் பிராணனது சலனத்தாலே திருசியஞானம் உறும் சம்வித்தை = போதந்தன்னை விஷயாகாரமாய்ப் பரிணமிக்காது தகைதல் மிக நன்மையேயாகும்; மயக்கத்தால் வளராநின்ற உணர்வு காண்பவற்றைப் பொருந்தும், தடையில்லாது திருசியமே, மனத்துக்கு எப்பொழுதும் ஒழியாத துன்பமாம்; அவ்வொப்பற்ற உணர்வானது, நெருக்கமின்றிய மீட்டும் அனுசந்தானமற்றுச் சுழுத்தியில் விஷய ஞானமில்லாததுபோல நிரபிமானமாய் ஆன்மாவின்கண்ணே நிற்கில் அதுவே மோக்ஷமாம்; அதுவே பிரயோஜனமாம் அமலபதமும் அதுவே அன்னியமில்லை.

ஆதலா லுயிரசைவால் வாதனைப்பா லழுத்தத்தா லறிவைவிரி வாக்காயென்னி
லேதுபிறப் பறுமறிவின்விரிவே யுள்ளமுள்ளத்தா லிவ்வனந்தவுயிர்கள்
வாழ்வாஞ்
சேதனயோ கிகளெல்லாம் பிராணுயாமந் தியானமருந் தூக்கத்தின்
றிறங்க ளாலே
பேதமன மொடுங்குவது பொருட்டாயன்ருே பிராணவா யுவைநிறுத்திப்
பிடிக்கின் ருரே. (20)

ஆதலால் உயிர் அசைவால் வாதனைப்பால் அழுத்தத்தால் அறிவை ஆகையினுல் பிராண சலனத்தினுல் திடவாதனையால் சம்வித்தை பருக்கும்படி (உப்பும்படி) செய்

விரிவாக்காயென்னில் ஓது பிறப்பு அறும் அறிவின் விரிவே உள்ளம்; உள்ளத்தால் இவ்வனந்த உயிர்கள் வாழ்வாம்; சேதன யோகியர்கள் எல்லாம் பிராணயாமம்; தியானம், மருந்து, ஊக்கத்தின் திறங்களாலே பேதமனம் ஒடுங்குவது பொருட்டாயன்றே பிராண வாயுவை நிறுத்திப்பிடிக்கின்றார் =

யாயென்னில் அப்போது எழுவகையாகச் சொல்லப்படும் ஜன்மம் ஒழிந்துபோம். சம்வித்தின் பொருமலே மனமாம்; அம் மனத்தால் அளவில்லாத பிராணிகள் ஜீவிதமாம்; அறிவையுடைய யோகிகள் எல்லாம் பிராணயாமம், தியானம், ஔஷதம், யோகசாஸ்திரங்களில் கூறிய சற்குரு சம்பிரதாயாதி முதலிய தன்மைகளாலே வேற்றுமை மிகுந்த மனத்தை நிரோதித்துப் பந்திக்கின்றார்.

உள்ளத்தை யொடுக்குவிக்குஞ் சமத்துவத்துக் குயர்ந்த காரணமாகுஞ் சுகமுண் டாக்கு
நள்ளுற்ற வறிவையெழ வொட்டாதாக்கு நல்லுயிரின் றடையென்று நல்லோர் சொல்வர்
தெள்ளியபல் பொருளறிவை விளக்குவித்துச் சேர்ந்தவா தனையாலே செனிப்பதாகி
விள்ளக்கண் டனுபவிப்ப தாநெஞ்சுக்கு மேலிரண்டா முற்பத்தி விளம்பக் கேட்பாய். (21)

உள்ளத்தை ஒடுக்குவிக்குஞ் சமத்துவத்துக்கு உயர்ந்த காரணமாகுஞ் சுகம்உண்டாக்கும் நள்ளுற்ற அறிவை எழவொட்டாதாக்கும் நல்லுயிரின் தடையென்று நல்லோர் சொல்வர் தெள்ளிய பல் பொருள் அறிவை விளக்குவித்துச் சேர்ந்த வாதனையாலே செனிப்பதாகி விள்ளக்கண்டநுபவிப்பதாம் நெஞ்சுக்குமேல் இரண்டாம் உற்பத்தி விளம்பக் கேட்பாய் =

சிறந்த பிராண நிரோதம் சித்தத்தை ஒடுங்கும்படியாகச் செய்யும் சாமியத்தை அடைய மேலான காரணமாகும். இன்பத்தை விளைவிக்கும் மிகுதியுற்ற திருசிய நாட்டத்தை (சம்வித்தை) எழும்படி செய்யாதாக்கும்; தெளிந்த நானாவஸ்துக்களின் உணர்வை இலக்குவித்து உற்ற வாதனையாலே உதிப்பதாகி வெளிப்படையாய்ப் பார்த்து அநுபவிப்பதாம் மனதுக்குப் பீஜமான வேறு இரண்டாவது காரணத்தை (பீஜத்தைக்) கூறக் கேட்பாய்.

திடமான பாவனையான் முன்பினெண்ணந் தீர்ந்துபதார்த் தனைச்சேர்வுறக் கைக்கொள்கை
மடமான வாதனையாங் கடுவேகத்தால் வல்லையிற்றானே யொன்றை மதித்துநாடி

யுடனேயவ் வுருவாய்வேற் றெண்ணமெல்லா மொழிந்திடுமிவ் வாதனையின்
வசத்தி லோடித்
தொடர்பான புருடனுமாங் கதன்மெய்யாகித் தோன்றுபொரு ணன்றென்றே
துவண்டு மாலாம். (22)

திடமான பாவனையால் முன்பின் எண்ணந்தீர்ந்து பதார்த்தனைச் சேர்வுறக் கைக்கொள்கை மடமான வாதனையாங், கடுவேகத்தால் வல்லையிற்றுனே ஒன்றை மதித்துநாடி உடனே அவ்வுருவாய் வேற்றெண்ணமெல்லாம் ஒழிந்திடும் தொடர்பான புருடனும் இவ்வாதனையின் வசத்தில் ஓடி ஆங்கு அதன் மெய்யாகித் தோன்றுபொருள் நன்றென்றே துவண்டுமாலாம் =

(வாசனை=பாவனை=சமஸ்காரம், முன்பின் ஒன்றையும் ஆலோசியாது காமக்குரோதாதி விருத்திக்கேதுவான அந்தக்கரணத்தின் சூட்சுமபரிணமம், மலினவாதனை (ஜன்ம ஏதுவல்லாதது சுத்த வாசனை) திடபாவனையினுலே பூர்வா பூர்வம் ஆராய்ச்சியின்றிப் பொருள்களை அடையும்படி பற்றுதலே அறியாமை மிகுந்த வாசனையாம் மிகுந்த வேகத்தால் சீக்கிரத்தில் ஒரு பொருளைத் துணிந்து நாடி அக்கணமே அந்த வடிவமாய் (விடயாகாரமாய்) இதர நினைவுகளையெல்லாம் அகற்றிடும்; வாசனு விடயம் பந்தமான புருடனும் இந்த வாசனையின் வயமாக ஒடி ஆண்டு அதன் வடிவமாகிப் பிரதீதியாகப்பட்ட வஸ்து நல்லதென்றே துவட்சியை அடைந்து மோகமுறும்.

வாதனையின் வேகத்தின் விவசத்தாற்றன் வினைவிட்டனைத்தினையு
மயக்கமாகத்
தீதமையுந் தியிற்காணு மதவசத்தாற் றியங்குதல்போ லிம்மனத்தைத்
தெரியக்கூறி
லேதமுறு காட்சியெது தானல்லாத தியானனெனும் பாவனை
யேதுபொருளல்லாத
தோதுபொரு ளெனுங்கருத்தே ததுவேசித்தமுறுபிறவி சரைமரண
முண்டாமித்தால். (23)

வாதனையின் வேகத்தின் விவசத்தால் தன்வினை விட்டு அனைத்தினையும் மயக்கமாக தீதமைபுந்தியிற் காணும் மதவசத்தால் தியங்குதல் போல் இம்மனத்தை தெரியக் கூறில் ஏதமுறுகாட்சி எதுதான் அல்லாத தியானனென்னும் பாவனை ஏதுபொருள் அல்லாதது

மிகமிகவும் உண்டாம் வாசனை பரவசத்தினுல் தனது இயற்கையினின்றும் நீங்கித் திருசிய பதார்த்தங்கள் யாவையும் பிராந்தியினுல் கெட்ட புத்தியின்கண் அகம், சுத்தம், நித்தியமாகப் பார்க்கும் கள்குடி வெறியால் மயங்கிப் பார்ப்பது போல இம்மனத்தின்வடிவத்தை நன்ருகஅறிந்து கொள்ளக்கூறில் குற்றமுற்ற திருசியம் யாது ஆன்மாவல்லாத அனுன்மாவின்கண்ணே. ஆன்

ஓதுபொருள் எனுங்கருத்தேது அதுவே சித்தம் இத்தால் உறு பிறவி சரை மரணம் உண்டாம் = மாவென்னும் புத்தியாது, நித்தியமல்லாத ஆகாசாதிப் பொருள்களில் நித்தியம் என்னும் புத்தியாது அதுவே மனமாம். இம்மனத்தால் எழுவகையாகப் பொருந்திய ஜன்மம் ஜரா மரணம் உண்டாம்.

மெத்துறுவன் பரிசயத்தாற் பதார்த்தந்தன்னின் மேவுமொரு பாவனையான் மிகச்சலிக்குஞ்
சித்தமுள தாற்பிறப்பா திகளுமுண்டாந் தீர்வதுகொள்வது வடிவாந்திரளி லொன்று
மித்தனையும் பாவியா தனைத்துநீங்கி யெப்போதுநின் றதப்போ தெழாதுசித்த
மொத்துளவா தனையொழிவா னினைவுதீரி லுயர்ந்தவுப சாந்திதருமுள மாய்வுண்டாம். (24)

மெத்துறுவன்பரிசயத்தால்பதார்த் தந்தனில் மேவும் ஒருபாவனையால் மிகச்சலிக்குஞ் சித்தம் உளதுபிறப் பாதிகளும் உண்டாம் தீர்வது கொள்வது வடிவாந்திரளில் ஒன் றும் இத்தனையும் பாவியாது அனைத்தும் நீங்கி எப்போது நின் றது அப்போது சித்தம் எழாது ஒத்துள வாதனையொழிவால் நினைவுதீரில் உயர்ந்த உபசாந்தி தரும் உளம்மாய்வுண்டாம் = மிகமிகவுண்டாம் பழக்கத்தினுல் பொருள்களில் பொருந்தாநின்ற ஓர்பாவனையால் மிகச்சலிக்குஞ் சித்தம் உளது, உண்டாகவே ஜன்ம ஜராமரணுதிகளும் உண்டாம். தள்ளத்தக்க, கொள்ளத்தக்க வடிவாந் திருசியக்கூட்டங்களில் சிறிதும் அணுவளவேனும் நினையாமல் யாவற்றையும் நீங்கி எக்கால் நின்றது அக்கால் மனம் எழாது இதயத்தின்கண் பொருந்திய வாசனை ஒழிவால் எண்ணம் சாந்தமாகில் உயர்ந்த உபசாந்திக்கு மனோநாசம் உண்டாம்.

சகப்பொருளி லோரிடத்தோர் நினைவுமின்றேற் றனியிதய சூனியவிண்டன்னி லுள்ள
நிகழ்ச்சியுறத் தோன்றுவதெப்படியே வள்ளாளெஞ் சுக்கிம் மட்டுருவமென நினைப்பே
னுகப்புறுமின் பத்தாலும் பொருண்மெய்யாலு முள்ளுறும்பல் பொருணினைவே யுளத்தின்மேனி
மிகப்படர்காண் பவைதொழிற் காகாதென் றெண்ணும்விண்ணினு நொய்யவர்க்கெங்ஙன் விளையுமுள்ளம். (25)

சகப்பொருளில் ஓரிடத்து ஓர் நினைவும் இன்றேல் தனி சூனிய இதய பிரபஞ்ச வஸ்துவில் எவ்விடத்தும் ஓர் எண்ணமு

விண்டன்னில் உள்ளம் நிகழ்ச்சி யுறத்தோன்றுவதுஎப்படியோவள் ளால் நெஞ்சுக்கு இம்மட்டு உருவ மென நினைப்பேம் உகப்புறும் இன் பத்தாலும் பொருள் மெய்யாலும் உள்ளுறுபல்பொருளின் நினைவே உளத்தின் மேனி மிகப்படர் காண் ப்வை தொழிற்காகாது என்றும் எண்ணும் விண்ணினும் நொய் யவர்க்கு உள்ளம் எங்ஙன் விளையும் =

மில்லாதாயின் ஒப்பற்ற சூன்ய இதய விண்தன் னில் மனம் பிரதீதியாகப் பொருந்தித் தோன்று வது எங்ஙனம் ஆம்; தாதாவாய ஸ்ரீ இராகவ மனதுக்கு இவ்வளவுமாத்திரமே வடிவமென்று எண்ணுகின்றேம் விருப்பத்தக்க இரசபாவனையா லும் பொருள் வடிவாலும் உள்ளேயுண்டாம் நானா வஸ்துக்களின் பாவனை வடிவு ஏது மன துக்குச் சொரூபமாம்; மிக விரிந்து தோன்றும் திரிசியாதிகள் நிவர்த்திமார்க்கத்திற்குத் தகுதி யாகாவென்று கருதும் ஆகாயத்தினும் சூக்கும மான மனம் எவ்வண்ணம் உதயமாம்.

அபாவமே பற்றலபாவம் பாவித்த லாய்ந்துண்மைப் பொருண்காண்டன் மனமாய்வென்பர்
சுபாவமா மனைத்தையுமுள் ளகற்றிச்சீதச் சுதைபோலு மிவ்விதயநடக்கு மென்னிற்
றவாத்தொழி லுற்றாலு மந்தச்சித்தந் தன்வடிவிலாத தெனச்சாற்றுங் கண்டாய்
குவான்மறு சன்மந்தருவா தனைதுன்னுதோர் குலாலவட்டம் போற்றிரிவர் குறைவின்முத்தர். (26)

அபாவம் பற்றல் அபாவம் பாவித் தல் ஆய்ந்து உண்மைப் பொருள் காண்டல் மனம் மாய்வு என்பர் சுபாவமாம் அனைத்தையும் உள் ளகற்றிச் சீதச்சுதைபோலும் இவ் விதயம் நடக்குமெனில் தவாத தொழிலுற்றாலும் அந்தச்சித்தம் தன்வடிவு இலாததெனச் சாற்றுங் கண்டாய் குவான்மறுசன்மந்தரும் வாதனை துன்னுதோர்குலாலவட் டம்போல் குறைவு இல் முத்தர் திரிவர் =

திருசியங்களில் சத்தியம் என்னும் ஆதரம் இன் மையைக் கைக்கொள்ளுதலும் திரிசியங்களில் திரிகாலத்திலும் அத்தியந்தாபாவமாகத் தரித் தல் மனோ நாசமென மொழிவர். இயற்கையாய (இயல்பாகவே) சகல திருசியப்பொருள்களனைத் தையும் அகத்தே அகற்றிச் சீதள அமிர்தம் போலும் இம்மனம் விவகரிக்குமாயின் இடைவி டாத காரியங்களை இயற்றிய கோர மூடவடிவ மனம் இல்லாதபோதினும் சுத்தவாசனை சேர்ந் துள்ளோர்க்குவரில் கூட்டமாகப் பொருந்திய குலாலசக்கரம்போலப் பூரண ஞானமுடைய ஜீவன்முத்தர் சஞ்சரிப்பர்.

வறுத்தவிதை யொப்பாகி யின்பமின்றி மறுசனன மற்றவாதனை சேர்ந்துள்ளோ
ரொறுத்தவிடர் சீவன்முத்த ராகுமுண்மை யுருவடைந்தமன முடையோ ரன்னுர்

நிறுத்துணர்ஞா னக்கரையுற் றவருமன்னுர் நெஞ்சமிலாதவரன்னுர் நிமலமாகப்
பொறுத்தவுட னீங்கிலா காசம்ருபம் பொருந்தின ரன்னுரென்று புகல்வரன்றே. (27)

வறுத்தவிதையொப்பாகி இன்பமின்றி மறுசனனமற்ற வாதனை சேர்ந்துள்ளோர் ஒறுத்த இடர் சீவன்முத்தராகும் உண்மை உரு அடைந்த மனமுடையோர் அன்னுர் நிறுத்துணர் ஞானக்கரையுற்றவரும் அன்னுர்நெஞ்சமிலாதவர் அன்னுர் நிமலமாகப் பொறுத்த உடல் நீங்கில் ஆகாசம் ரூபம் பொருந்தினர் அன்னுர் என்று புகல்வரன்றே =

தீனிக்குமாத்திரம் உதவுவதாய் வறுக்கப்பட்ட பீஜம்போல விஷயஇன்பமில்லாமல் மறுபிறப்பை அடைவியாத சுத்தவாசனை சேர்ந்துள்ளோர் வருத்திய துன்பங்கள் நீங்கிய சீவன்முத்தராகும் சச்சிதானந்த சொரூபத்தை இனிதாக அடைந்த மனத்தவர் அவர் சதுர்வேத பாரங்கர் அவர் உருவமனம் இல்லாதவர். தூய்தாகப் போகாயதனமாகத்தரித்த சரீராந்தத்தில் சிதாகாச சொரூபமாகவுமிருப்பர் அவர் ஆன்றோர் கூறுவர்.

உயிரினசை வொன்றுவா தனையொன்ருக வுபயமா மனத்தின்விதை
யிவற்றினென்று பயில்வுற மாய்ந்தாலிரண்டு முடனேமாயும் பகருருவாதனை வசத்தார் பிராணனேட்டம்
முயிரசைவால் வாதனையு முண்டா மத்தாலுள்ளமெ னும்விதைக்குவிதை முளையொழுங்காம்
பயில்வுறுவா தனையுயிரி னசைவிரண்டும் பலவிதங்காண் பவைவித்தாய்ப் படருமன்றே. (28)

மனத்தின் விதை உயிரின் அசைவு ஒன்று வாதனை ஒன்ருக உபயமாம் இவற்றில் ஒன்று பயில்வுறமாய்ந்தால் இரண்டும் உடனே மாயும் பகருறுவாதனை வசத்தால் பிராணன் ஓட்டம் உயிர் அசைவால் வாதனையும் உண்டாம் அத்தால் உள்ளம் எனும் விதைக்கு விதையொழுங்காம் பயில்வுறு வாதனை உயிரின் அசைவு இரண்டும் பலவிதம் காண்பவை வித்தாய்ப் படருமன்றே =

மனதுக்குப் பீஜம் பிராண சலனம் ஒன்று திடவாசனை ஒன்று ஆக இரண்டாம் இவற்றுள் ஒன்று அப்பியாசத்தாட்டியத்தால் இலயமாயின் இரண்டும் விரைவில் நாசமாம்; கூறிவந்த வாதனைவயத்தால் பிராணன் ஓட்டமும் பிராண சலனத்தால் வாதனையுமுளதாம், பிராணசலனம் திடவாசனையென்னும் அவற்ருல் மனமெனும் விதைக்குப் பீஜாங்குரநியாயமாம் இருதயத்தின் கண்பொருந்திய வாதனை உயிரின் அசைவு இரண்டும் பலவகையாகக் காணப்பெறும்.

ஆதலினுற் காண்பவற்றை விடுதலாலே யாருயிரி னசைவு வாதனையிரண்டும்
பாதவம்வே ரற்றுப்போல் வேரற்றேகும் படரறிவே காண்பவற்றின்
பயில்வித்தாகுஞ்
சேதனந்தோன் ருதெனிற் காண்பனவுமில்லைச் செறிதைல மில்லாமற்
றிலமுண்டாமோ
பேதமுற வுட்புறங்காண் பனவொன்றில்லைப் பிறம்போற் சங்கற்பிக்கும்
பிறக்கும்போதம். (29)

ஆதலினல் காண்பவற்றை விடுதலாலே ஆர் உயிரின் அசைவு வாதனை இரண்டும் பாதவம் வேரற்றுப்போல் வேரற்றேகும் காண்பவற்றின் பயில்வித்து படர் அறிவேயாகும் சேதனந் தோன்ரு தெனில் காண்பனவுமில்லைச் செறி தைலம் இல்லாமல் திலம் உண்டாகுமோ உட்புறங் காண்பனவொன் றில்லை பேதம் உற பிறம்போல் சங்கற்பிக்கும் பிறக்கும்போதம் = சம்வேத்தியம் பீஜம் ஆதலால் திருசியத்தைக் கவரும் ஆசையை விட்டொழித்தலால் பிராண சலனம் திடவாசனை இரண்டும் விருக்ஷம் வேர் அற்றதேபோலச் சம்வேத்தியமும் இல்லையாம் காரணமாகப்பொருந்திய எள்ளு இல்லாமல் எண்ணெய் எப்படி உண்டாகும். சேதனம்=சம்வித்து தோன்ருதெனின் சம்வேத்தியமும் இல்லை உள்ளிலும் வெளியிலும் வேறுபாடான திருசியம் சிறிதுமில்லை அன்னியமாய் இருப்பதுபோல உண்டாம் அறிவு சங்கற்பிக்கும்.

சங்கற்பத் தறிபொருளை யறிவுதன்பாற் ருனேநோக் கிடுங்கனவிற் றனதுசாவு
மங்குத்தே சாந்தரமுந் தன்வசத்தா லடைவதுபோல் லறிபொருளை
யறிவுகாணும்
பங்கிட்டு முன்னறிந்த தறியாதேனும் பகரறிவுக்கெது பத்தி பாய்ந்தத்ததைத்
துங்கத்தம் வருத்தத்தால் விசாரமுள்ளோர் துடைப்பதுவே வெம்மாயை
துடைத்ததாகும். (30)

அறிபொருளை அறிவுதன் சங்கற்பத்தால் தானே நோக்கிடும் கனவில் தனதுசாவும் அங்குத் தேசாந்தரமும் தன்வசத்தால் அடைவது போல் அறிபொருளை அறிவு காணும் பங்கிட்டு முன்னறிந்தது அறியாதேனும் பகர் அறிவுக்கு எது பத்திப்பாய்ந்தது அத்தை விசாரமுள்ளோர் துங்கத்தம் வருத்தத்தால் துடைப்பதுவே வெம் சம்வேத்தியத்தை (திருசியத்தை) சம்வித்துத் தனது சங்கற்பத்தால் தானுகவே காண்கின்றது சொப்பனுவஸ்தையில் மரணத்தையும் அவ்விடத்தில் வேறு தேசத்தில் வாழ்தலும் சுயமாகவே காண்பதுபோல நனவிற் சம்வேத்தியத்தைத் தனது சமஸ்காரயோகத்தானே(வாதனையானே) சம்வித்து அறியும்; கூறுபடுத்திப் பூர்வம் தெரிந்ததேயாயினும், தெரியாததேயாயினும் கூறிய சம்வித்துக்கு யாது யாது பிரதிபலித்துத் தோற்றுமோ அத் தோற்றமனைத்தையும் விசாரமுள்

மாயை துடைத்ததாகும் = ளோர் (வேறு என விளங்கும் திருசியப்பொருளை) நன்றான நெடுங்காலம் நிரந்தரம் செய்யும் தமது முயற்சியினால் மார்ஜனம் செய்வதுவே கொடிய மாயையை அகற்றியதாகும்.

அதுதுடையா மாத்திரமே மாமோகத்தை யடைந்ததாமது துடைத்த மாத்திரந்தான்
முதுகதியென் றுரைப்பரறி கின்றதன்றோ முடிவில் பிறப் பரந்தைதான் முளரிக்கண்ணு
கதுவுறுசாட் டியமில்லா வறிவிலாமை கடும்பவமில் லாதசுகங் காட்டுமன்றே
சதுரனு யசடனு யானந்தத்தைத் தவிர்ந்தொன்று மறிவதறச் சலனந்தீர்வாய். (31)

அது துடையாமாத்திரமே மாமோகத்தை அடைந்ததாம் அது துடைத்தமாத்திரந்தான் முதுகதி யென்று உரைப்பர் அறிகின்றதன்றோ முடிவில் பிறப்பு அரந்தை தான்முளரிக்கண்ணு கதுவுறுஜாட்டியமில்லா அறிவிலாமை கடும்பவமில்லாத சுகங்காட்டும் சதுரனுய் அசடனுய் ஆனந்தத்தைத் தவிர்ந்து ஒன்றும் அறிவதறச் சலனந்தீர்வாய் = அத்திருசியத்தை அகற்றாத மாத்திரையானே மகாமயக்கத்தைப்பற்றியதாம் அத்திருசியத்தை மார்ஜனம் செய்த மாத்திரையானே = திருசிய விஸ்மரணத்தானே மோக்ஷகதி=நித்திய நிவர்த்தத்தின்நிவர்த்தியென்பர்; திருசியபோதமன்றோ அளவில்லாத ஜன்ம துன்பம்; இராஜீயலோசனு ளக்கம் பொருந்திய ஜடம் இல்லா திருசியவிஸ்மரணம் கொடிய ஜனனமில்லாத ஆனந்தத்தை உண்டாக்கும் சாமர்த்தியவானுய் உணர்வுடையவனுய்த் திருசிய விஷயானந்தத்தை விட்டவனுய் யாதொரு பொருளையும் எண்ணுதவனுய்ச் சஞ்சலமறப்பாய்.

அறிபொருளை யறியாத வறிவே மெய்யாமவனீசத்திய மாமென்றறைதலோடுஞ்
செறிசடமற் றறிவின்மை யெங்ஙனுண்டாஞ்சித்தின்மை சடமாவதெங்ஙன்றீரு
நெறியிலுரை யென்றவிரா மனுக்கு மீட்டுநிறைதவன் சொல்வானெங்கு நிகழ்பற்றின்றி
வெறிதொரிடத் தாறுதலொன் றறிதலில்லா வியன்சீவன் சடமிலா வறிவிலாமை. (32)

அறிபொருளை அறியாத அறிவே மெய்யாம் அவன் நீ சத்தியமாம் என்றறைதலோடுஞ் செறிசடம் . திருசியவிஸ்மரணமான சச்சிதானந்தசொரூபமே உண்மை (சத்தியமாம்) அச்சச்சிதானந்த சொரூபமே நீ இஃதே உண்மை சந்தேகமென்று என்

அற்று அறிவின்மை எங்ஙன் உண்டாம் சித்தின்மை சடமாவது எங்ஙன் தீரும் நெறியில் உரை என்ற இராமனுக்கு மீட்டும் நிறைதவன் சொல்வான் எங்கும் நிகழ்பற்றின்றி வெறிதொரிடத்தாறுதல் ஒன்று அறிதலில்லாவியன்சீவன் சடமில்லாவறிவிலாமை = றறைதலோடும் ஜாட்டியத்தை விடுத்து அறிவில்லாமை = திருசியவிஸ் மரணம் ஜடத்தன்மையை எவ்வாறு உளதாகும்? அறிவில்லாமை விஸ்மரணம் ஜடத்தன்மையைவிட்டு எவ்வாறு விட்டிருக்கும், முறையாக அருளிச்செய்வீராக என்று வினவிய ஸ்ரீ இராகவருக்கு மீண்டும் பூரண தவசிரேஷ்டர் கூறுவார் எவ்விடத்திலும் விளங்கும் விடயப்பற்றின்றி வாளா ஒரு திருசிய விஷயத்திலும் விசிராந்தியுருமல் திருசியஸ் மரணமில்லா ஆச்சரிய ரூப ஜீவன் அஜடன் அசம் வித்தாகும் = ஜாட்டியமில்லா திருசியவிஸ் மரணமாவான்.

அறிபொருளைப் பற்ருத வறிவுபெற்ரு லாயிரங்கா ரியஞ்செயினுஞ் சடமிலாத
வறிவின்மை யதுவாகு மறிபவற்றை யற்பமுமுள் ளாகாச மணுகாதென்னி
லறிஞுனவ னசடமா மறிவிலாமை யவன்சீவன் முத்தனவ ஞுகுந்தன்பா
லறிதருவா சனையொழிவா லொன்றுமுன்ஞ தருங்குழவி யூமனறி
வொத்துநிற்கும். (33)

அறிபொருளைப் பற்ருத அறிவு பெற்ருல் ஆயிரங் காரியஞ் செய்யினும் சடமிலாத அறிவின்மை அது வாகும் அறிபவற்றை அற்பமும் உள்ளாகாசம் அணுகாதென்னில் அறிஞுனவன் அசடமாம் அறிவிலாமை அவன் சீவன்முத்தனவஞுகும் தன்பால் அறிதருவாசனை ஒழிவால் ஒன்றுமுன்ஞ அருங் குழவி ஊமன் அறிவொத்து நிற்கும் = திருசியத்தைக் கோசரிக்காத (அசம்வித்து உணர்வு) அஜடன் இயல்பைப்பெற்ருல் ஆயிரக் கணக்கான காரியங்களைச் செய்யினும் ஜாட்டியமில்லாத=அஜட அசம்வித்தாகும், திருசியத்தை அணுவுங்கூட இருதயாகாசம் அடையாதாயின் விவேகியாம் அவன் அஜட அசம் வித்தாவன் அன்ஞன் ஜீவித்திருக்குங்காலத்திலேயே முக்தஞவன். தன்னிடத்தில் விஷயங்களை நாடும் வாசனையின்மையால் ஒருபொருளையும் கருதாது அரியசிசு, ஊமன் அறிவு ஒப்பாகி=திரம்பெறும்.

அன்று சடபா வனைநீங்கி யகண்டவறிவின் மையைப்பெறலா
மொன்று மதஞன் மீளவறி வொன்றிற்பற்ரு தொருவகையாய்
நின்ற பலவா தனைநீங்கி நிருவிகற்பச 'மாதியிஞற்
றுன்று விண்ணிற் கருநிறம்போற் ருெடரானந்தந் துன்னுறுபால். (34)

அன்று சடபாவனை நீங்கி அகண்ட அறிவின்மையைப் பெறலாம் திருசியத்தைப்பற்ருத அப்போது ஜாட்டியவிநிர் முக்தமாய் (அறிவாய்) கண்டிக்கப்படாத அசம்

ஒன்றும் அதனுல் மீள அறிவு ஒன்றில் பற்றுது ஒருவகையாய் நின்ற பல வாதனை நீங்கி நிருவிகற்ப சமாதியினுல் துன்று விண்ணில் கருநிறம்போல் தொடர் ஆனந்தந் துன்னுறும் =

வேதனத்தை அடையலாம், அவ்வாறு அடையப் பெறுதலால் மறுபடியும் உணர்வு ஒரு பொருளினுஞ் சம்பந்தியாது சகல வாசனைகளும் ஒழிந்து ஒரேபிரகாரமாய்நின்ற அசம்பிரஞ்ஞாத சமாதியினுல், ஆகாயத்தில் பொய்யாய்ப் பொருந்தும் நீல நிறம்போலக் கற்பிதமாகப் பொருந்திய ஆனந்தம் பொருந்துறும்.

## அவதாரிகை

அற்றேல் அன்னிய ஆகாரசம்வேதனம் இலதேனும் பிரஹ்மாகாரவிருத்திரூபம், சம்வேதனம் சமாதியின்கண்ணும் தடுக்கமுடியாதாம் என யாங்ஙனம் அசம்வித்தகை எனின் ஆண்டுரைத்தல்.

நன்மை யான வதிற்பற்றி நாடாவறிவா மியோ கிக்குத்
தன்ம யந்தா ளுதலினுற் றனியானந்த மதனுடன்போந்
துன்னு நிலைபோக் கொலிபரிசந் தொடர்ந்து மவற்றிற் பற்றுதோன்
வன்மைச் சடனன் றுனந்தமில னென்றறியான் மகாசு கத்தன். (35)

நன்மையான அதில் பற்றி நாடா அறிவாம் யோகிக்குத் தன்மயந் தானுதலினுல் தனி ஆனந்தம் அதனுடன்போம் துன்னுநிலைபோக்கு ஒலி பரிசம் தொடர்ந்தும் அவற்றில் பற்றுதோன் வன்மைச்சடன் அன்று ஆனந்தமிலன் ஒன்றறியான் மகாசுகத்தன் =

நலம்மிக்கதான நிருவிகற்பசமாதியை அடைந்து திருசியானுசந்தானரகித அறிவினையுடைய யோகிக்கு எந்த வஸ்துவோடும் சமரசசுபாவ ஏதுவினுல் ஒப்பற்ற பிரதிபிம்ப ஆனந்தமும் பிரஹ்மாகாரமாய அச்சம் வேதனமும் பாதிதமாய்ப் பிரஹ்மத்தின்கண்ணே லீனமாம், பொருந்திநிற்றல், ஓடல், கேட்டல், தொடல், முகர்த்தல் முதலியவற்றைச் செய்யினும் அவைகளில் சிறிதும் சம்பந்தியாதோன்; அஜடன், ஆனந்தாநுபவமிலன் அறிவதற்கு ஒன்று இல்லாததால் சம்வேதனமற்றவன் பேரானந்த வடிவினன்.

இந்த நோக்கந் தனைப்பற்றி யீனத் தொழிலோ டிசைந்தாலும்
வெந்த துயரின் கரையேறி விஞ்சு குணத்தின் கடலாவா
யந்த வுயர்சன் மாத்திரமிவ் வறிவின் வித்தாமவ் வறிவு
முந்து சன்மாத் திர நின்று முளைக்குந்தேசி லொளிபோல. (36)

இந்த நோக்கந்தனைப்பற்றி ஈனத் தொழிலோடு இசைந்தாலும்

இத்திருஷ்டியை அவலம்பித்துக் கீழான (நிந்தித மான) காரியங்களோடு கூடினுலும் இதுவரை

வெந்ததுயரின் கரையேறி விஞ்சு குணத்தின் கடலாவாய் அந்த உயர் முந்து இவ்வறிவின்சன்மாத்திரம் நின்று வித்தாம் அறிவு மூளைக்குந்தேசில் ஒளிபோல = தபித்துக்கொண்டிருந்தசம்சாரதீரம்ஏறிச்சேடித்த அபாரகுணசாகரமாவாய்; கூறிய அந்தசிரேஷ்டமானசன்மாத்திரம் சம்வித்துக்குப்பீஜமாம்; அந்த உணர்வானது முதன்மையான சன்மாத்திரத்தினினும் சூரியாதி தேஜசினின்றும் பிரகாசமேயாய பிரகாசம் உண்டாவதேபோல.

இடமார் சத்துக் கிருவடிவா மேக நானு வித வடிவாந்
தடமா ரேக மொருவடிவாஞ் சாற்றுமிவற்றைப் பிரித்திடக்கேள்
கடமே படமே யுள்ளதெனக் கதுவக் காணும் பாவனைகள்
படருஞ் சத்தாம் ரூபத்தின் பிரிவாற் பலவா மதுவொன்றே. (37)

சத்துக்கு இடம் ஆர் இருவடிவாம் ஏகம் நானுவிதவடிவாந் தடம் ஆர் ஏகம் ஒருவடிவாம் சாற்றும் இவற்றைப் பிரித்திடக்கேள் கடமே படமே உள்ளதெனக்கதுவக்காணும் பாவனைகள் படருஞ் சத்தாம் ரூபத்தின் பிரிவால் அது ஒன்றே பலவாம் = சத்துக்குப்பூமிகாக்கிரமமாக இரண்டு வடிவங்கள் உண்டு; அவற்றுள் ஒன்றே பலவித வடிவாம்; மற்றொன்று ஒரேவடிவாம், கூறிய இவ்விரண்டையும் பகுத்திடக் கேட்குதி; கடம் இருக்கின்றது படம் இருக்கின்றது என்று பொருந்தக் காணும் பாவனைகள் விரவா நின்ற சத்தாம் வடிவத்தின் பகுப்பால் அது ஒன்றே நானுவடிவமாம்.

சற்றும் விசேட மறவிட்டுச் சன்மாத் திரமாய்ப் பற்றின்றி
யொற்றை வடிவா மகாவடிவா மதுவே சத்தைக் குறும்பதமாம்
மற்றுங் கால சத்தைகலா சத்தைவத்து சத்தையென
வுற்ற சத்தை மூன்றுமொழித் தொன்றுஞ்சன்மாத் திரத்துறுவாய். (38)

சற்றும் விசேடம் அறவிட்டு சன்மாத்திரமாய் பற்றின்றி ஒற்றை வடிவாம் மஹாவடிவாம் அதுவே சத்தை குறும்பதமாம் மற்றும் கால சத்தை கலாசத்தை வத்துசத்தை என உற்ற சத்தை மூன்றும் ஒழித்து ஒன்றும் சன்மாத்திரத்து உறுவாய் = வியாபகசத்துக்கு நாம ஜாதிபேதத்தைச் சேஷமின்றி அத்தியந்தம் விடுத்துச் சன்மாத்திரமாய் யாதொன்றினிடத்தும் ஒருவித சம்பந்தமின்றி ஒரேவடிவாம் மகாவடிவாம் அதுவே சத்தைக்குப் பரி அவசான வஸ்துவாம்; மீண்டும் பூதபௌதிக வர்த்தமான காலசத்தைத் தூல; சூக்கும தீர்க்கம், குறில் முதலிய ரூபமான கலாசத்தைக் கடம் இருக்கிறது; படம் இருக்கிறதுவத்துசத்தை எனப்பொருந்தும் வியாவகாரிகசத்தை மூன்றும் விட்டு ஏகமாகிய சத்தாமாத்திரத்திருப்பாய்.

காலசத்தை தன்சத்தை வேருய்க்கருது தொழில்விடினேர்
சீல தன்ரு கியசத்து ருபி யெனினும் பொருள்சேரா
கோல விவிதப் பதநல்குங் கொள்கைபலபா வனையுண்டா
மூலங் கண்ட தனேகத்துக் கதுநன் ருகு முறையெங்கே. (39)

காலசத்தை தன்சத்தை வேருய்க் கருதும் தொழில்விடில் ஓர் சீலம் நன்ருகிய சத்துருபி எனினும் பொருள்சேரா கோலவிவிதப்பதம் நல்கும் கொள்கை பலபாவனை உண்டாம் மூலங்கண்டது அநேகத்துக்கு அது நன்ருகும் முறை எங்கே =

காலசத்தை கலாசத்தை வஸ்துசத்தை சொருப சத்தை ஆன்மசத்தை பேதமாக எண்ணும் விகற்பத்தை விடினும், பரமபௌத்திரமான சத்தா சாமானியமாய் இருந்ததென்னினும் உபாதியோடிருத்தலின் எதார்த்த ஏகசத்து ஆகா; விசித்திர நாஞவித சொருபபேதஞ் செய்யுங் கொள்கையால் நாஞபாவனைகள் உண்டாம்; நாஞத்தன்மைக்கு ஏதுமயமாகிக் காரணங்கண்ட அதற்கு ஏகசத்தையைப் பொருந்துவது எங்கே?

சத்தா சாமா னியமொன்றுந் தனிப்பா வித்துப் பரிபூர்ணச்
சுத்தா னந்த ஞய்த்திசைக ளெல்லாந் துன்னி நின்றிடுவாய்
சத்தா சாமா னியமட்டின் கோடி யேதங் கதுதானே
சுத்தா கார மிதன்வித்தா மதினின் றிதுதான் ரேன்றிடுமே. (40)

சத்தாசாமானியமொன்றுந் தனிப்பாவித்துப் பரிபூர்ணசுத்தானந்தனுய் திசைகளெல்லாந் துன்னி நின்றிடுவாய் சத்தாசாமானிய மட்டின்கோடி ஏது அங்கு அது தானே சுத்தாகாரம் இதன்வித்தாம் அதில் நின்றும் இதுதான் தோன்றிடும் =

சத்தா சாமானியம் ஒன்றினையே (ஏகசத்தையையே) கேவலம் பாவனைசெய்து பரிபூரணமாய்த் தூய இன்பமுடையவனுய்ச் சகல திசைகளிலும் சகல பொருள்களிலும் நிறைந்தவனுய் நிலைத்திடுவாய்; சத்தாசாமானியமாத்திரத்தின் எல்லை எதுவோ அதுவே தூயவடிமாய்ப் பௌத்திரமான சொருபமாம் இதில் சம்வித்துத் தோன்றிடும், சம்வித்தினின்றும் திருசியம், திருசியத்தினின்றும் பிராணசலனம் திடவாசனை அதில் நின்றும், மனம், அதில் நின்றும் தேகம், அதில் நின்றும் சம்சாரம் தோன்றிடும்.

மொழிசத் தாசா மானியத்தின் முடிவி லெண்ண மெல்லாம்போ
யொழிவ தேதங் கதுதானல் லுணர்வின் பதமா முதலதுவா
மழிவி லதற்கு வித்தில்லை யாங்கே யிறந்து விகாரமறத்
தழிய வுணர்வு நிலைபெறுமப் பதஞ்சார்ந் தவர்மீண் டிடர்சாரார். (41)

மொழி சத்தாசாமானியத்தின் முடிவில் எண்ணம் எல்லாம்போய் ஒழி

கூறிய சத்தாசாமானியத்தின் அவசானத்தில் எண்ணமுற்றுஞ் சென்று லயமாவது ஏது அது

வது ஏது அங்கு அதுதான் நல் உணர்வின் பதமாம் முதலதுவாம் அழிவு இல் அதற்கு வித்தில்லை ஆங்கே இறந்து விகாரமறத்தழிய உணர்வு நிலைபெறும் அப்பதஞ் சார்ந்தவர் மீண்டு இடர்சாரார் = தான் சச்சிதானந்த வடிவமாம்; யாவற்றிற்கும் அதிஷ்டானமாம் நாசரகித நித்திய சத்தாசாமானியத்திற்குப் பீஜம் இல்லை; ஆண்டு லயித்து நிர்விகாரமாய் நிலைத்திருக்குமோ அதில் தழுவிய அறிவு நிலைத்துநிற்கும் அந்தப் பதத்தை அடைந்தவர் மறுபடியும் துயரத்தை அடையார்.

அதுவே யேது வனைத்திற்கு மேதுவதனுக் கேதுவிலை
யதுவே சார மனைத்திற்குஞ் சாரமதனிற் சாரமிலை
யதுவாம் பெரிய தர்ப்பணத்தி லனைத்துப்பொருள்களின் பார்வைகளா
யதுவீ தென்ப தெலாந்தோன்று மருகின் மரங்கள் வாவியிற்போல். (42)

அதுவே ஏதுவனைத்திற்கும் ஏது அதனுக்கு ஏதுவிலை அதுவேசாரம் அனைத்திற்கும் சாரம் அதனின் சாரமிலை அதுவாம் பெரிய தர்ப்பணத்தில் அனைத்துப்பொருளின் பார்வைகளாய் அது ஈது என்பதெலாம் தோன்றும் அருகில் மரங்கள் வாவியிற்போல = சத்தாசாமானியமே சர்வத்திற்கும் காரணமாம் அதன்கண்ணே யாவும் அத்தியஸ்தமாதலின் அதனுக்குக் காரணம் ஒன்றும் இன்றும் அதுவே சாரமனைத்தினுக்கும் இனியசாரமாம் அதனினும் சாரம் எதுவுமில்லை முற்கூறிய சத்தாசாமானியமாம் பெரிய கண்ணாடியில் எல்லாப் பொருள் எண்ணங்களாய அது இது என்பவை யாவும் பிரதிபிம்பிக்கின்றனவாம். ஜலத்தில் தடாகக் கரையிலிருக்கும் மரங்கள் பிரதிபிம்பித்துத் தோற்றுவது போல.

அதுவே யமலஞ் சரையற்ற தஃதாத் துமதத் துவமதுவே
சதுரா வதுவந் துறிலுள்ளஞ் சாற்றுமுபசாந் தியையடையுந்
திதமா யறிந்தவ் வடிவாவாய் சென்மமற்ற பதம்பெறுதி
முதல்வா வென்ன விராமனுமம் முனியை நோக்கி மொழிகின்றான். (43)

அதுவே அமலம் சரை அற்றது அஃது ஆத்துமதத்துவம் அதுவே சதுரா அது வந்துறில் உள்ளம் சாற்றும் உபசாந்தியை அடையும் திதமாய் அறிந்து அவ்வடிவாவாய் சென்மமற்ற பதம்பெறுதி முதல்வா என்ன இராமனும் அம் முனியை நோக்கி மொழிகின்றான் = சத்தாசாமானியமே நிர்மலவடிவம் ஜரையில்லாதது அதுவே ஆன்மதத்துவம் என்னும் பாரமார்த்திக வடிவம் ஆன்மாபின்னை பிரஹ்ம சாக்ஷாத்காரம் ஆயின் நலமிக்கதாகச் சொல்லப்படும் உபசாந்தியைப்பெறும், உணர்ந்து அதி திடமாக அச்சொரூபமேயாவாய்; பவபயம் விடுபட்ட பரசிவபத சொரூபமேயாவாய்.

அன்ன விதைக ளின்னதென வனைத்து முரைத்தா யனந்தமெனச்
சொன்ன பதமெம் முயற்சியினுற் றுன்னலாகும் விரைவிலென
மன்னு முனிசொல் வான்றுர்ப விதையா மிவற்றின் வகைமேன்மே
லென்னென் றுரைத்தே னவற்றவற்றின் முயல்வால் விரைவிற்
பதமெய்தும். (44)

அன்னவிதைகள் இன்னதென அனைத்தும் உரைத்தாய் அனந்தம் எனச்சொன்ன பதம் எம் முயற்சியினுல் விரைவில் துன்னலாகும் என மன்னுமுனி சொல்வான் துன்பவிதையாம் இவற்றின்வகைமேல் மேல் என்னென்று உரைத்தேம் அவற்றவற்றின் முயல்வால் விரைவில் பதம் எய்தும் = அவ்விதங்கேட்ட சம்சாரக்கொடியின் தேகாதி பீஜங்கள் இன்னின்னவை என்பதாக யாவற்றையுமே கூறியருளினீர் ; அனந்தம் எனக் கூறிய பதம் எம்முயற்சியால் சீக்கிரத்தில் அடையலாகும்? என்று இராகவர் வினவத் தவம்பொருந்திய ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறுவார், இச்சம்சாரத்திற்குப் பீஜங்களாம் இவற்றின் விபரத்தை உத்தரோத்தரம் யாது யாது எனக் கூறினேம், அதனதன் பாவனையால் சீக்கிரத்தில் தனது எதார்த்தசொரூபத்தை அறிந்து அழியாதசொரூபத்தின்கண் ஸ்திதிபெற்று அப்பதம் அடைவாய்.

சத்தா சாமா னியக்கோடி பதத்தே சார்வுற் றொருக்காலே
கொத்தா கியவா தனைபுருட வருத்தத் தாற்கோ ளறவிட்டுச்
சொத்தா கியதத் துவமுணர்ந்து தொலையா வடிவா நிலயமிழ்ந்த
வுற்ருய் கணப்போ தென்னினுமக் கணத்தே யுறுமப் பதமடைவாய். (45)

சத்தாசாமானியக் கோடிபதத்தே ஒருக்காலே சார்வுற்று கொத்தாகிய வாதனை புருட வருத்தத்தால் கோள் அறவிட்டுச் சொத்தாகிய தத்துவம் உணர்ந்து கணப்போதென்னினும் தொலையாவடிவாம் நிலை அமிழ்ந்தவுற்ருய் ; அக்கணத்தே உறும் அப்பதம் அடைவாய் = சத்தாசாமானியக்கோடி (கோடி = எல்லை) அவசானம் தற்பத இலக்ஷியார்த்த அகண்டைகரசபதத்தை ஓர்போது அடைவுற்றுப் பொருள் பிரிவால் பொருந்திய கூட்டமாகிய வாசனையைப் புருட முயற்சியால் நன்ருகத் தியாகஞ்செய்து, (அக்ஷயான்மிகமான=எப்போதும் தன்வயமாய் இருப்பதான) தனது எதார்த்த சொரூபத்தை அறிந்து க்ஷணநேரமாயினும் அழியாத சொரூபத்தின்கண் ஸ்திதிபெற்று நிலைபெறுவாயோ அந்நேரமே அடையத்தகும் சத்தாசாமானிய பதம் அடைவாய்.

நிகழ்சத் தாசா மானியத்தி னுருவா நிலய நேர்தி யெனிற்
பகரு மதனிற் சற்றதிக வருத்தத்தாலப் பதம்பெறுதி

திகழுஞ் சித்தத் துவத்திலுறு தியானஞ் செய்யி லதற் கதிக
மிகவும் வருத்த முறுதலினு லந்தப் பதத்தை மேவுதியால். (46)

நிகழ்சத்தாசாமானியத்தின் உருவாம் நிலயம் நேர்தி எனில் பகரும் அதனில் சற்று அதிக வருத்தத்தால் அப்பதம் பெறுதி திகழுஞ் சித்தத்துவத்திலுறுதியானஞ்செய்யில் அதற்கதிக மிகவும் வருத்த முறுதலினுல் அந்தப் பதத்தை மேவுதி = சாரமனைத்திற்குஞ் சாரமாய் விளங்கும் வடிவமாம் ஸ்திதியை அடைதி எனின் கூறிய பாவனுமயமாம் அதினின்றும் சிறிது அதிகப்பிரயத்தனமாகிய திடம்பொருந்திய முயற்சியால் அவஸ்தானபதத்தை அடைகுதி தற்பத இலக்ஷியார்த்தத்தைத்துவம்பத இலக்ஷியார்த்தமாய் விளங்கா நின்ற சாக்ஷியாம் அந்தராத்மாவில் பொருந்தி அழுத்தமாகத் தியானஞ்செய்யில் அதினினும் அதிகமான திடம்பொருந்திய முயற்சியால், அவஸ்தானபதம் (தற்பத இலக்ஷியார்த்தத்தை) அடைகுதி.

முந்து வெறிதே யறிபொருளிற் றியானந்தோன்ரு முகில்வண்ணு
விந்த வறிவின் சம்பவத்தா லென்று மெங்கு மெய்தாதாற்
றெருந்த மான வாதனையை வருந்தித் துடைத்தா யெனிலதனுல்
வெந்த வாதி வியாதியெலாம் விரைவிற் றுகளா யகன்றிடுமே. (47)

முகில்வண்ணு முந்துவெறிதே அறிபொருளில் தியானந்தோன்ரு என்றும் எங்கும் இந்த அறிவின் சம்பவத்தால் எய்தாது தொந்தமான வாதனையை வருந்தித் துடைத்தாயெனில் அதனுல் வெந்த ஆதி வியாதியெலாம்விரைவிற்றுகளாய் அகன்றிடுமே = நீலமேகசியாமளவர்ண ஹே இராகவ! முன்னர் கேவலம் சப்வேத்தியத்தில் (திருசியத்தின் கண்ணேதியானஞ்செய்யில்) சித்திக்கமாட்டாது, எக்காலத்தும், எத்தேசத்தும், இந்த்சம்வித்தின் இருப்பால்=திருசியங்களினும் முன் விளங்கும் திருக்காய், திருசியத்திகழ்வு கூடாமையின் திருசியம் அடையாது=துவந்துவங்களிற் செல்கின்றது, செய்கின்றது எதுவோ அதுவே அறிவு துவந்துவமான வாசனையைப் பிரயாசைப்பட்டு அகற்றுவதிலும் மனே நாசத்திலும் முயற்சித்தாயேயானல், உளத்தைத் தகிக்காநின்ற உள்நோய், வெளிநோய் யாவும் சீக்கிரத்தில் பொடிப் பொடியாய்ப்போம்.

முன்னஞ் சொன்ன வருத்தங்கண் முழுதுஞ்செயினும் வேரோடே
சொன்ன மலையைப் பிடுங்கிடினுந் தொடர்வா தனையை விடவரிதா

லுன்னு மனமெம் மட்டொழியா துறுவாதனையம் மட்டழியா
தன்ன படிவா தனையெம்மட் டழியா மட்டதுளம்மழியா. (48)

முன்னம் சொன்ன வருத்தங்கள் முழுதுஞ் செயினும் சொர்ன மலையை வேரோடேபிடுங்குகினும் தொடர்வாதனையை விடல் அரிதாம் உன்னுமனம் எம்மட்டு ஒழியாது உறுவாதனை அம்மட்டழியாது அன்னபடி வாதனை எம்மட்டழியாது உளம் அம்மட்டு ஒழியாது = பூர்வம் புகன்ற வருந்திச்செய்யாநின்ற அப்பியாசங்கள், சொர்னகிரியை வேரோடு பிடுங்குகினும் வெகுஜன்மங்களில் தொடர்ந்த வாசனையை விடுதல் துர்லபமாம். திருசியாகாரமாய்க் கருதாநின்ற மனம் எம்மட்டு நீங்கவில்லையோ அம்மட்டும் ஜன்ம ஏதுவாகப் பொருந்திய வாசனை அம்மட்டு நீங்காவாம். அவ்வாறு வாசனை எம்மட்டு அழியவில்லையோ மனம் அம்மட்டும் நீங்காவாம்.

உண்மை ஞான மெம்மட்டும் வாராதம்மட் டுளமழியா
திண்மை யுளமெம் மட்டழியா திகழ்தத் துவமம் மட்டெய்தா
தண்மை யுறுவா தனையெம்மட் டழியா தம்மட் டுணர் வணுகா
வண்மை யுணர்வெம் மட்டணுகா வருவாத னையம் மட்டழியா. (49)

உண்மை ஞானம் எம்மட்டும் வாராது அம்மட்டும் உளம் அழியாது திண்மை உளம் எம்மட்டழியாது திகழ்தத்துவம் அம்மட்டும் எய்தாது அண்மையுறுவாதனை எம்மட்டழியாது அம்மட்டும் உணர்வு அணுகாவண்மையுணர் எம்மட்டு அணுகா வருவாசனை அம்மட்டழியா = தத்துவஞானம் எத்துணையும் வரமாட்டாதோ அத்துணையும் மனம் நாசமாகமாட்டாது. திடமான மனம் எதுபரியந்தங் கெடாதோ விளங்காநின்ற ஆன்மவஸ்து அதுபரியந்தம் அடையமுடியாதாம்; சமீபத்துற்ற வாசனை எதுகாறுங் கெடாதோ அதுகாறும் ஆன்மஞானம் உண்டாகமாட்டாதாம். வண்மை, வாய்மை, மெய், தத்துவஞானம் அடைவுருதோ ஜன்மபீஜமாய் வரும் வாசனை அதுபரியந்தம் நாசமாகாதாம்.

செறிவா ஞான மனமாய்வு திரள்வா தனைமாய் விம்மூன்றும்
பிறிதாங் கார ணங்கடமைப் பெறுசா தித்தற் கரிதாகும்
நெறியா மதனுல் விவேகிகளா னிலைகூர்புருட வருத்தத்தாற்
பொறியார் போக மயல்தூரப் போக்கி லிவைதாம் பொருந்துவதாம். (50)

செறிவாம் ஞானம் மனம்மாய்வு திரள் வாதனை மாய்வு இம்மூன்றும் பிறிதாங்காரணங்கள் தமைப்பெறு = பூரண தத்துவஞானம் மனோநாசம் திரண்ட வாசனக்ஷயம் இம் மூன்றும் ஒன்றுக்கொன்று அநுசரித்திருத்தலின் வெவ்வேறு காரணங்களைக்

சாதித்தற்கரிதாகும் நெறியாம் அதனால் விவேகிகளால் கூர்நிலைபுருட வருத்தத்தால் பொறியார் போகமயல்தூரப்போக்கில் இவைதாம் பொருந்துவதாம் = கொண்டு சித்தி செய்வதற்கு அரிதாகும் அதனால் மூன்றுஞ் சமமாகவே அப்பியசிக்கவேண்டுமென்பது பொருள்; இம்முறையால் விவேகிகளால் நெடுங்காலம் நிரந்தரம் ஆதரவோடு செய்யும் முயல்வால் இந்திரியங்களில் பொருந்தி அநுபவிக்கும் போக ஆசையை வெகுதூரத்தில் போம்படி ஒழிக்கில் இம்மூன்றும் இயைவதாம் ஆகலின் இம்மூன்றுமே நன்கு அப்பியசிக்கவேண்டும்.

இனைய மூன்றுஞ் சமமாக வியற்றா ரெம் மட் டம்மட்டு
மனைய பதமெய் தாவருட மாயி ரங்கள் சென்றாலும்
வினையில் காலஞ் சமமாக மிகுநா ளியற்றின் மிகப்பலிக்கு
நினைவி லொன்றென் றுவியற்றி னிலைகூ டாநிட் பலமாகும். (51)

இனையமூன்றுஞ் சமமாக எம்மட்டு இயற்றார் அம்மட்டும் அனையபதம் எய்தா வருடம் ஆயிரங்கள் சென்றாலும் வினையில் காலஞ் சமமாக மிகுநாள் இயற்றில் மிகப்பலிக்கும் நினைவில் ஒன்றென்றுவியற்றில் நிலைகூடா நிட்பலமாகும் = தத்துவஞானம் வாசனக்ஷயம் மனோநாசம் இம்மூன்றையும் ஒக்க எம்மட்டு அப்பியசித்திலரோ அது பரியந்தம் சத்தாசாமானிய பதம் சித்தியா ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கழிந்தாலும் உபயத்துவமில்லாத = ஏககாலத்தில் ஒக்க நெடுங்காலம் நிரந்தரம் ஆதரவோடு அப்பியாசஞ் செய்யில் அவசியஞ் சித்திக்கும்; கருத்தில் தனித்தனி (மனோநாசமாத்திரம், வாசனக்ஷய மாத்திரம்) தத்துவஞானமாத்திரம் அப்பியாசிக்கில் சொரூப சித்தியைத் தரமாட்டா; பிரயோஜனமற்றதாகும்.

ஒக்க வியற்றி லிம்மூன்று முளத்தின் கட்டெல் லாமொழிக்குஞ்
சிக்க லாது தாமரைநூல் வளையஞ்சிதையிற் சிதையாதோ
தொக்க பிறவித் திரள்கடொறுந் தொடர்ந்து வந்த வாதனைதான்
மிக்க கால யோகத்தின் பழக்கத் தல்லால் விடாதெங்கும். (52)

இம்மூன்றும் ஒக்க இயற்றில்உளத்தின் கட்டெல்லாம் ஒழிக்கும் தாமரைநூல் வளையஞ் சிதையில் சிக்கலாது சிதையாதோ தொக்க = வாசனக்ஷயம் மனோநாசம் தத்துவஞானம் மூன்றையும் சமமாக அப்பியசிக்கப்பெறின் மனத்தின் பந்தபாசங்கள் அனைத்தையும் நாசஞ்செய்யும்; தாமரைத்தண்டு கெடில் தடையின்றி நூல் கெடா

| | |
|---|---|
| பிறவித்திரள்கள்தொறுந் தொடர்ந்து வந்த வாதனைதான் மிக்க காலயோகத்தின் பழக்கத் தல்லால் எங்கும் விடாது = | திருக்குமோ எழுவகை ஜன்மங்களிலும் தொடர்ந்துவந்த துவைத வாசனையானது வெகு கால அப்பியாச யோகத்தாலன்றி எக்காலத்தும் எவ்விடத்தும் க்ஷீணமாகமாட்டாது. |

பிறவா தனையை விடலொக்கும் பிராண வாயுத் தடை யென்று
திறமா யறிஞ ரியம்புவராற் றிடமா யதுவுஞ் செயவேண்டு
முறுவா தனையை விடிலுள்ள மில்லா மையை யடையு
நிறையா ருயிரைத் தடுக்கிலுமா நினக்கே திச்சை யதுசெய்வாய். (53)

| | |
|---|---|
| பிராணவாயுத்தடை பிறவாதனை யைவிடலொக்கும் என்றுதிறமாய் அறிஞர் இயம்புவர் திடமாய் அதுவும் செயவேண்டும் உறுவாதனையை விடில் உள்ளம் இல்லாமையை அடையும் நிறை ஆர் உயிரைத் தடுக்கிலும்ஆம் நினக்கு ஏது இச்சை அது செய்வாய் = | பிராண நிரோதம் அசுத்தமான வேற்று வாசனையை விடுவதற்குச்சமானமாம் என்பதாக நல்ல படியாகப் பெரியோர் கூறுவர். அனர்த்த ஏதுவாகப் பொருந்திய வாதனையை நிரோதஞ்செயில் மனம் கோர மூடத்தை விடுத்துச் சத்துவத் தன்மையை அடையும் தேகத்தைப் பூரித்துள்ள பிராணனைத் தடைசெய்தபோதினும் பிராண நிரோதத்தையும் வாசனக்ஷய முதலிய மூன்றோடு ஒப்பாகவே அப்பியசிக்கவேண்டும். மனோநாசத்தில் வாசனக்ஷயம் அல்லது பிராண நிரோதம் ஏதுவென்பது பொருள் சத்துவத்தன்மை ஆகின்றது. உனக்கு எது இச்சை அது செய்வாய். |

பிராணு யாம வன்பழக்கம் பேணுங் குருச்சொல் லுபாயங்கள்
விராவா சனம்போ சனமியோகம் விளம்பு மிவற்று லுயிரொடுங்கு
மிராமா சங்க விவகார மின்மைபவபா வனையின்மை
யொரா கந்தீரிட நோக்க லுரைத்தவிவற்றல் வாதனைபோம். (54)

| | |
|---|---|
| பிராணுயாமம் வன்பழக்கம் பேணுங் குருச்சொல்லுபாயங்கள் விராவு ஆசனம் போசனம் யோகம் விளம்புமிவற்றல் உயிர் ஒடுங்கும் இராமா சங்கவிவகாரமின்மை பவபாவனையின்மை ஒரு ஆகந் | நீள்போதியற்றும் பிராணுயாமத்தின் திட அப்பியாசம் விசுவசிக்கத்தக்க ஆசிரியர் உபதேசித்த ஊகங்கள் அனுகூலமாகப் பொருந்திய ஆசனம் போஜனம் இயம நியமாதிகள் கூறிய இவைகளின் நியமங்களாலும் பிராணனது தடையாம். ஹே இராமா ! பகிர்முக திருஷ்டியுடையவரது |

தீரிடம் நோக்க உரைத்த இவற்றுல் வாதனைபோம் = நேயமின்மை யாதொரு ஆகாரம் இல்லாத வியாபக சொரூபத்தை அநுசந்தானஞ் செய்தல் கூறிய இவைகளினுல் வாசனை ஒழிந்துபோகும்.

பகைவா தனைமாய்ந் திடிற்சித்தந் தோன்ருப் பவன மொடுங்கிவிடிற்
றெகைதீர் துகளந் தரத்துண்டோ சொன்ன பிராண னசைவேது
மிகையா ருள்ளத் தசைவதுவே யதனுற் பிராண விசைத்தடைதான்
றகைசேர் மதிமான் களுக்கியல்பாய்த் தப்பா தியற்றத் தக்கதுவே. (55)

பகைவாதனை மாய்ந்திடில் சித்தம் தோன்ரு பவனம் ஒடுங்கிவிடில் தொகைதீர்துகள் அந்தரத் துண்டோ சொன்ன பிராணனசைவேது அதுவே மிகையாருள்ளத் தசைவு அதனுற் பிராண விசைத் தடைதான் தகைசேர் மதிமான் களுக்கு இயல்பாம் தப்பாது இயற்றத்தக்கது = சத்துருவாகிய வாசனைக்ஷயமாகுமானுல் மனமானது தோன்றமாட்டாது; அளவற்ற தூளிகள் ஆகாயத்து உளவோ கூறிய பிராண சலனம் யாது அதுவே துக்கம் பொருந்திய மன அசைவாம்; அக்காரணத்தினுல் பிராண நிரோதமானது தகுதிவாய்ந்த புத்திமான்கட்குச் சுபாவமாய் விடாது செய்ய யோக்கியமாம்.

ஊக நன்மையா லல்லது வெலப்படா துள்ளம்
வேக மத்தமா வங்குசத் தலாலவெலப் படுமோ
வேக போதத்தை யறிதனல் லவருட னெய்தல்
சோக வாதனை விடலுயிர் தோன்றுரு தொடுக்கல். (56)

நன்மை ஊகம் ஆல் அல்லது உள்ளம் வெலப்படாது வேகமத்தமா அங்குசத்தலால் வெலப்படுமோ ஏகபோதத்தை அறிதல் நல்லவருடன் எய்தல் சோக வாதனை விடல் உயிர் தோன்றுருது ஒடுக்கல் = நல்ல ஊகத்தாலன்றி அத்தியாத்ம வித்தை, சாது சங்கம், வாசனுக்ஷயம், பிராண நிரோதம் என்பவைகளே யுக்திகளாம் இவற்ருலன்றி மனத்தை ஜயிக்கமுடியாது; உக்கிரமான மத யானையை அங்குசத்தல்லால் வென்றிடலாமோ அத்வைத பிரஹ்மசொரூபத்தை அறிதலும் சாது சங்கத்தை அடைதலும் துயர்மய வாசனையைத் தியாகஞ் செய்தலும் பிராணனை அசையாது நிறுத்தலும்.

உரைசெய் நால்வகையு நெஞ்சை யொடுக்கு மூகங்களாகும்
புரையிலா விவற்றுக் குள்ள மொடுங்குதல் புயன்மழைக்குத்
தரையுறு தூளிபோலாஞ் சாற்று மூகங்களன்றி
விரைவினெஞ் சடர்ப்பார் தீபம் விட்டிருளிருளாற் றீர்ப்பார். (57)

உரைசெய்நால்வகையும்நெஞ்சை ஒடுக்கும்ஊகங்களாகும்புரையிலா இவற்றுக்குள்ளம் ஒடுங்குதல் புயல் மழைக்குத் தரையுறுதூளி போல்ஆம்சாற்றும் ஊகங்களன்றி விரைவில் நெஞ்சு அடர்ப்பார் தீபம் விட்டு இருள் இருளால் தீர்ப்பார் = கூறிய நாங்குபிரகாரங்களும் மனத்தை அடக்கும் யுக்திகளாகும். குற்றமற்ற இவ்வுபாயங்கட்கு மனம் அடங்குதல், மேக வருஷத்தால் பூமியின்கண்படிந்த தூளி ஒடுங்குதல்போல ஒடுங்கும் கூறிய யூகங்கள் அல்லாமல் வேகமாக ஹடத்தால் மனம் அடக்கஞ் செய்பவர் விளக்கை அணைத்துவிட்டு அந்தகாரத்தை அந்தகாரத்தால் நீக்குவார் ஒப்பார்.

வலியினுல் விரைந்தூ கங்களன்றியே மனத்தை வெல்வா
ரொலிமதக் களிற்றைக் கஞ்சவளையநூ லொன்ருற் சேர்ப்பார்
மெலியுமம் மூர்க்க ருள்ளம் வெருவிநொந் தறநொய்தாகி
நலியுமென் றென்று நம்பா நகருற்று வெருளுமான்போல். (58)

ஊகங்களன்றியே வலியினுல் மனத்தை வெல்வார் ஒலிமதக் களிற்றைக்கஞ்சவளையநூல் ஒன்ருல் சேர்ப்பார் அம்மூர்க்கர் உள்ளம் மெலியும் வெருவி நொந்து அற நொய்தாகி ஒன்றும் நம்பா நகருற்று வெருளுமான்போல் நலியும் என்று = யூகசதுஷ்டயத்தாலன்றி ஹடத்தால் வேகமாய் மனத்தை ஐயங்கொள்ள முயல்பவர்; பிளிறுகின்ற மதம்பொருந்திய யானையைத் தாமரைத் தண்டின் சிறிய நூலால் கட்ட முயற்சித்தவருக்குச் சமானமாவார். அந்த மௌட்டியருடைய மனம் மெலிந்து அஞ்சி (பீதி அடைந்து) வருந்தி அத்தியந்தம் தீனத்தன்மையை அடைந்து ஒன்றையும் நம்பாது பட்டணத்துள் புகுந்து பயப்படும் மான்போலக் கெடும் என்று ஆன்ருேர் கூறுவர்.

தவமகந் தீர்த்தந் தேவ வருச்சனை தான மாதி
யவமயக் கத்தா னீனுள் விலங்குபோ லவத்தர் வாழ்வர்
பவமுறு மிவற்றை விட்டுப் பரிசுத்த பரமபோதங்
கவரறப் பற்றி யெல்லாக் காதலுநீக்கி நிற்பாய். (59)

அவத்தர் தவம் மகம் தீர்த்தம் தேவ அருச்சனை தானம் ஆதி அவ மயக்கத்தால் நீள் நாள்விலங்கு போல் வாழ்வர் பவ்முறும் இவற்றை விட்டுப் பரிசுத்த பரம போதங் கவரறப்பற்றி எல்லாக் காதலும் நீக்கி நிற்பாய் = ஆராய்ச்சியில்லாதவர் லோகபோகங்களை விரும்பிக் கிருச்சிரசாந்திரயாணுதி தவம், சோமாதியாகம், ஸ்ரீ கங்கையாதி தீர்த்தம் தெய்வ அருச்சனை தனைதைப் பிறரதாக்குதலாந் தானம் முதலிய வியர்த்தமாகிய பிராந்தியினுலே வெகுகாலம் = விலங்குபோல் கழிப்பர். ஜன்ம ஏதுவாகப் பொருந்திய இவைகளைத் தியாகஞ்செய்து தூய தற்பத இலக்ஷியார்த்தப் பிரஹ்மத்தைப் பேதமின்றித் தனது சொரூபமாகவே அவலம்பித்து வீத இராகனுய் ஸ்திரமுடையவனுய் வாழ்தி.

நோக்கும் பொருளாற் றற நன்ருய் முதலாய் நுனிக்குங் கருத்தற்றுத்
தாக்கு மறிவின் பதமான வொன்றை நாடிச் சான்ருேனே
வீக்கும் விசார மறவிதயத் துறைவாய் தொழிலே மேவுகினு
மாக்கஞ் செய்வா னலாதபத மடைதி சமமாஞ் சீர்விளங்க. (60)

நோக்கும் பொருளற்று அற நன்ருய் முதலாய் நுனிக்குங்கருத்தற்றுத் தாக்கும் அறிவின் பதமான ஒன்றை நாடிச் சான்ருேனே வீக்கும் விசாரம்அற இதயத்துறைவாய் தொழிலே மேவுகினும் சமமாஞ் சீர்விளங்க ஆக்கஞ்செய்வான் அலாதபதமடைதி = பார்க்கப்படும் திருசியம் அற்றுச் சம்வேத்தியவர்ஜிதமாய், அத்தியந்தம் உத்தமமாய் ஆத்யமாய் முதன்மையதாய் முளைக்குஞ்சித்த நினைவற்றுச் சர்வ கற்பனுவதிஷ்டானமாம் சித்துவடிவமான அத்வைத பிரஹ்மசொரூபத்தைச் சம்சாரத்தில் கிடத்தி இதயத்தைக்கெடுக்கும் திருசிய சிந்தனம் அற இருதயத்திலிருக்கும் பிரஹ்மத்தின்கண் ஸ்திதிபெறுவாயாக, வினைவயத்தால் விவகரித்த போதினும் சமமாம் சிறப்பு விளங்க (ஆக்கம் = பலன்) கர்த்தாவல்லாத அகர்த்துருபதம் அடைவாய்.

தனது மனத்தை யொருக்காலே விசாரத் தாலே சமிப்பித்த
வனகன் பிறவிப் பயன்பெற்ருே னற்பமெனினு மிதயத்தே
வினவு விசார மெழிலதுதான் விடாது பழகு மியோகத்தாற்
கனம தாகிப் பலவிதமாங் கப்பா யிரமாய்ப் பலவாகும். (61)

தனது மனத்தை ஒருக்காலே விசாரத்தாலே சமிப்பித்த அனகன் பிற தன்னுடைய மனதை ஒருபொழுது ஆராய்ச்சியினுலே நிக்கிரகித்த தூயோன் சிவமாவன் அவன்

விப்பயன் பெற்றேன் அற்பம் எனினும் வினவு விசாரம் இதயத்தே எழில் அதுதான் விடாது பழகும் யோகத்தால் கனமதாகிப் பலவிதமாங்கப்பாயிரமாய்ப் பலவாகும்= ஜன்ம நிவர்த்தி பிரயோஜனத்தை அடைந்தவனுவன் அணுவாயினும் ஆசிரியர்பால் வினவிக் கேட்ட விசாரம் மனத்தே உதயமாயில் அவ்வுதயமானது இடைவிடாது செய்யும் அநுசந்தானத்தால் யோகசாதனையால் பெரிதாகி நானுவிதமாம் ஆயிரஞ் சாகைகளாய் விரியாநிற்கும்.

தக்க விசார மெனும்பூத்த தருப்பூ வட்டத் தொருதாளாய்த்
துக்க விசாரச் சூறைக்காற் றசைத்தற் கரிதாய்த் துவட்சியிலா
மிக்க நிலையா நிலைபோக்கு விழித்த லுறங்க லுளோர்மனத்திற்
புக்க விசார மில்லாரேற் பொன்றி னோரா மெனப்புகல்வர். (62)

தக்க விசாரமெனும்பூத்த தருப்பூ வட்டத்தொருதாளாய்த் துக்க விசாரச் சூறைக்காற்று அசைத்தற்கரிதாய்த் துவட்சிஇலாமிக்க நிலைஆம் நிலை போக்கு விழித்தல் உறங்கல் உளோர் மனத்திற்புக்க விசாரமில்லாரேல் பொன்றினோராம் எனப்புகல்வர் = தகுதியான ஆன்ம அனான்ம ஆராய்ச்சியென்னும் புஷ்பித்த விருக்ஷம், பூமியின்கண் பலமான வேர்களையுடைத்தாய்த் துக்கவடிவ இராகாதி சூருவளி சலிப்பித்தற்கு முடியாததாய் அசையாத அதிதிர நிலைபேரும்; நிற்றல், செல்லுதல், வருதல், நனவு, கனவு முதலிய செய்கைகள் உள்ளவர் மனத்தில் எக்கால் பொருந்தி விசாரமயமாக வில்லையோ அக்கால் அவன் உயிரோடுகூடியிருப்பினும் மரித்தவன் என்றே புகலப்பெறுவன்.

கெடாத சிற்கண் ஞானீதான் கிளர்மே லவர்க ளுடனேதான்
விடாதிவ் வுலகே தியாமாரென் றுறைக்கமெல்ல விசாரிப்பாய்
தடாதுட் பொருடேர் வித்தைக்கு விசாரந் தானே தனி ஞானங்
கடாவி யறியத் தக்கதிற் காணும் பாலின் மதுரம்போல். (63)

கெடாத சிற்கண்ணால் நீதான் கிளர்மேலவர்களுடனேதான் இவ்வுலகு ஏதுயாம் யார் என்று உறைக்க மெல்லவிடாது விசாரிப்பாய் தடாது உட்பொருள்தேர் வித்தைக்கு விசாரந்தானே தனி கடாவி அறியத்தக்கது ஞானம் மறைவுபடாத அத்தியாத்ம திருஷ்டியால் நீ தனித்தேனும் மைத்திரியாதி கல்யாணகுணமுடையசற்ஜனருடனேயும் நாமரூபான்மகமாய்த் தோற்றுநின்ற இப்பிரபஞ்சம் எவ்வாறு உண்டாயது இந்தச் சகத்தாடம்பரத்தில் விளையாடித்திரியும் நாம் யார் என்பதாய்த் திடமாகச் சாவதானமாய் நிரந்தரம் ஆராய்வாய்; பிரதிபந்தமின்றி



அதில் பாலின் மதுரம்போல் காணும் = அந்தர்ஜோதியாய் விளங்கும் ஆன்மாவை நிச்சயிக்கும் அத்தியாத்ம வித்தைக்கு விசாரமே ஒப்பற்ற அங்கமாய் ; ஆசிரியர்பால் கேட்டு அறியத் தக்கது விசாரத்தால் எழுந்த ஞானமாம் அதில் க்ஷீரத்தின்கண்ணே மாதுர்யம்போல ஆன்மா அபரோக்ஷமாம்.

நன்று ஞானச் சமநோக்கா னுடும் பொருட்கும் சமந்தானே
யொன்றுத் தரித்தோன் றீனமுறு னுள்ள மஞ்சான் விவசமுறு
னன்றுஞ் சுத்த மபத்தியநஞ் சடுத்த தேனு மிவனருந்தி
லின்று யிமைப்பி லிறுநொந்த திறந்ததனங் கண்டது போலாம். (64)

நன்று ஞானம்ஆம் சமநோக்கால் சமந்தானே நாடும் பொருட்கு ஒன்றுத்தரித்தோன் தீனமுறுன் உள்ளம் அஞ்சான் விவசமுறுன் சுத்தம் அன்றும் அபத்தியம் நஞ்சு அடுத்ததேனும் நொந்தது இறந்தது அனம் கண்டதுபோல் அவன் அருந்தில் இன்றும் இமைப்பில் இறும் ஆம் = சிறந்த தத்துவஞானமாம் சமதிருஷ்டியால் சம சொரூபமாகிய சுயம் ஞேயவஸ்துவை அபேதமாய் அறிந்தோன் தைனியமடையான் ; மனம் வெருவான் பரவசமாகான், தேவதா ஆராதனைக்குத் தகுதியான சுத்த அன்னம், தேவதா ஆராதனைக்கு அருகமல்லாதது அன்னம் அபத்திய அன்னம் விஷங்கலந்ததேனும், நொந்துபோன அன்னம், இரசமற்ற அன்னங்கள் புஜிக்கில் கற்கண்டுக்குச் சமானமாய் தோஷம் இன்றுய்க் கணத்தில் சீரணம் ஆம்.

கரள காள மொப்பனபாற் கருப்பஞ் சாறு தனநுகரில்
விரவு புந்தி பற்றுமல் மெய்ம்மை யுணர்ந்தோர் சமமாவார்
சிரமங் கரிந்தோர் சிரந்தந்தோர் செறுனரென்னு றுறவென்னு
றுரவு ஞானத் தொருநோக்கா லொக்கக் காண்பருட்குளிர்ந்து. (65)

கரளகாளம் ஒப்பனபாற் கருப்பஞ் சாறு ஓதனம் நுகரில் விரவுபுந்தி பற்றுமல் மெய்ம்மை உணர்ந்தோர் சமம் ஆவார் சிரம் அரிந்தோர் சிரம் தந்தோர் செறுனரென்னுர் உறவென்னுர் உரவு = கரளம் (விஷம்) காளம் = பிரதி விஷம் ஆலகால விஷ சமானமான அன்னம் புஜித்தாலும், சுவை பொருந்திய பால், பால் அன்னம் புஜித்தாலும் கரும்பின் சாறு = வெல்லம், சர்க்கரை, சர்க்கரைப்பொங்கல் புஜித்தாலும் சொரூபத்தில் = பிரத்யக்க பின்ன பிரஹ்ம சொரூபத்தில் நிலை

ஞானத்தொருநோக்கால் ஒக்கக் காண்பர் உள்குளிர்ந்து = பெற்ற புத்தியில் இராகத்துவேஷமாகிய விருப்பு வெறுப்புக்களை அடையாமல் அசங்கமாயுள்ள தமது சொரூபத்தை உணர்ந்தவர் ஒப்பாவர், (சிரம்=தலை) தலையைக் கொய்தவரும் ஈர்வாள் கொண்டு வெட்டினவரும் சிரசை (தலையை) குதிரைத்தலையை வெட்டித் தத்யங்கதர்வணரிஷி யின் சிரசிலும் தத்யங்கதர்வண ரிஷியின் சிரசை வெட்டிக் குதிரைச் சிரசிலும் மாறி வைத்துத் தத் யங்கதர்வண ரிஷி அசுவினி குமாரர்களுக்கு உப தேசம் முடிந்ததும் குதிரைத் தலையைத் தத்யங் கதர்வண ரிஷியின் சிரசில் ஒட்டவைத்ததினுல் சிரம் தந்தவர் எனவும் இந்திரன் அசுவினி குமாரர்களுக்கு ஆன்ம உபதேசம் தத்யங்கதர் வணரிஷி செய்தாரென்பதைக்கேள்வியுற்று, தத் யங்கதர்வணரிஷியிடம் உபதேசிக்கும்படி கேட்க மகரிஷி உபதேசஞ் செய்ய அதைக்கேட்ட இந் திரன் கோபம் அடைந்த இத்தகைய உபதேசஞ் செய்வாயேயாகில் இந்த வஜ்ஜிராயுதத்துக்கு இரை ஆவீர் என்று கோபித்துக்கூறிய இந்திர னிடத்தில் மகரிஷிக்குக் கோபம் உண்டாகாமல் இருந்ததால் செறுனர் என்னுர் எனவும் திட ஞான திருஷ்டியால் இந்திரன் அசுவினி குமாரர் இருவரிடத்தும் சமமாகக் காண்பர் அந்தர்சீதள மாய்.

மூட விந்தி யங்கடமை மோக விடய நிலைதன்னி
வோட வொட்டா துரனரெவ்வ ரெவ்வ மொழிந்த புந்தியால்தடுப்பர்
கேடி லுண்மை யறிந்திளைப்பற் றுணர்வாந் தன்னைக் கிட்டாரை
நீடிந் தியங்கள் கெடவருந்து நிலச்சிற் றளிரை மானினம்போல். (66)

மூட இந்தியங்கள்தமை மோக விடய நிலைதன்னில் ஓடவொட்டாது உரனர் எவ்வம் ஒழிந்தபுந்தியால் தடுப்பர் கேடுஇல் உண்மை = அறியாமை வடிவ இந்தியங்களை மோகவிடய நிலைதன்னில் ஓடவொட்டாது உரனர் குற்ற மற்ற புத்தியால் தடைசெய்வர். நிர்த்தோஷ

அறிந்து இளைப்பற்று உணர்வாந் தன்னைக்கிட்டாரை நீடு இந்தியங்கள்கெட அருந்தும் நிலச்சிற்றனிரைமானினம் போல நாசமடையும்படி உண்ணும் = மாய சச்சிதானந்தவடிவ பிரஹ்மத்தைத் தாபம் ஒழிந்து அறிவு ரூபமானதன்னை அடையாதவரை நீண்டு செல்லும் இந்தியங்கள் நாசமாக ஒழிப்பன் பூமியிலுள்ள சிறிய புல்லைமான் கூட்டங்கள் புஜிக்கும்.

சங்க மடியாப் பொருளுண்டாஞ் சங்கமடியா வாபத் தாஞ்
சங்க மடியா வாசைவருஞ் சங்கமடியாப் பிறப் புண்டாஞ்
சங்க மறுத்தல் வீடென்பர் சங்கமறுத்தல் பிறப்பறுத்தல்
சங்க மறுத்துப் பொருள்களினீ தனிச்சீ வனின்முத் தியைப்பெறுவாய். (67)

சங்கம் அடியாப் பொருளுண்டாம் சங்கம்அடியாய் ஆபத்தாஞ்சங்கம் அடியா ஆசை வரும் சங்கம் அடியாப்பிறப்பு உண்டாம் சங்கம் அறுத்தல் வீடு என்பர் பொருள்களில் சங்கம் அறுத்து நீ தனிச் சீவனின் முத்தியைப் பெறுவாய் = சங்கம்=பற்று. சங்கத்தைக் காரணமாகக் கொண்டு பதார்த்தங்களுண்டாம், சங்கத்தைக் காரணமாகக்கொண்டு ஆசை உண்டாம், சங்கத்தைக்காரணமாகக்கொண்டு ஜனனமாம், சங்கத்தைக்காரணமாகக்கொண்டு ஜனனத்தை ஒழித்தலாம், பதார்த்தங்களில் சங்கத்தை விடுத்து ஒப்பற்ற சீவன் முத்தியைப்பெறுவாய்.

என்ற முனியை யனைத்தைய மென்னும் பனிக்குச் சரற்காலந்
துன்று கடுங்காற் றெப்பாயிச் சங்க மேது சொல்லென்ற
வென்றி யிராமற் கவனுரைப்பான் மிகுபல் பொருள்பாவா பாவத்துத்
தொன்று மகிழ்வு பொருமைகளை யுறுதன்மலின வாதனையே. (68)

என்ற முனியை அனைத்து ஐயமென்னும் பனிக்குச் சரற்காலந் துன்று கடுங்காற்றெப்பாய் இச் சங்கம் ஏது சொல் என்ற வென்றி இராமற்கு அவன் உரைப்பான் மிகு பல்பொருள் பாவ அபாவத்து ஒன்றும் மகிழ்வு பொருமைகளை யுறுதன் மலினவாதனையே = எனக்கூறிய வசிஷ்டபகவானை சர்வசம்சயம் என்னும் இமத்துக்குச் சரற்காலத்துற்ற கடுங்காற்றெப்பாய் (சமானமானவரே) சங்கம் எத்தகையது சொல்லவேண்டுமென்று புறப்பகை, அகப்பகைகளை வென்ற ஸ்ரீ இராமபிரானுக்கு ஸ்ரீ வசிஷ்டர் கூறுவதாவது திருசியங்களாம் பல பதார்த்தங்களில் இஷ்டம், அநிஷ்டம் அல்லது சையோகம் விபாகம் இவைகளில் பொருந்தாநின்ற சந்தோஷவிஷாதங்களை அடைதல் மலின வாதனையேயாம்.

சாற்று மலின வாதனையே சங்கமாஞ்சீ வனின் முத்தி
தோற்று முடற்கு மறுபிறவி யின்றி யின்ப துன்பங்கள்
மாற்றி விசுத்த வாதனைதான் மருவுஞ் சீவன் முத்தரலா
லூற்ற மடநெஞ் சினர்பிறவி யுறுவா தனையின் பெயர்சங்கம். (69)

மலினவாதனையே சாற்று சங்கமாம் சீவனின் முத்தி தோற்றும் உடற்கு மறுபிறவியின்றி இன்ப துன்பங்கள் மாற்றி விசுத்த வாதனைதான் மருவுஞ்சீவன்முத்தரல்லார் ஊற்ற மடநெஞ்சினர் பிறவியுறு வாதனையின் பெயர் சங்கம் =

கூறிய அசுத்த வாசனையே சங்கமாம் சீவனின் முத்தி தோற்றுமுடற்குப் புனர்ஜன்மத்தைக் கனவில் மரணத்தையும் அவ்விடத்தில் வேறு தேசத்தில் வாழ்தலும் உண்டாம். சரீரதாரியுடைய மகான்களுக்குப் புனர்ஜன்மத்தை யுண்டாக்காததாகவும் அங்ஙனமல்லாததான அசுத்தவாசனுமனத்தினர் எழுவகை ஜன்ம ஏதுவாகப் பொருந்திய மலினவாதனையே சங்கம் என நாமமுடையதாம்.

பிரிய மசூயை யிடராதி பீடி யாம னிற்றியெனில்
விரியு மாசை பயங்கோப மிலனாய்ச் சங்கம் விட்டவனீ
கரிய துயரா விளையாது கலந்த சுகத்தான் மகிழாது
புரியு மாசை வசம்போகா திருக்கிற் சங்கம் போக்கினையே. (70)

பிரியம் அசூயை இடராதி பீடியாமல் நிற்றியெனில் விரியும் ஆசை பயம் கோபம் இலனாய் நீ சங்கம் விட்டவன் கரியதுயரால் இளையாது கலந்த சுகத்தான் மகிழ்ந்து புரியும் ஆசைவசம் போகாது இருக்கில் நீ சங்கம் போக்கினை =

விருப்பு வெறுப்பு இன்பதுன்பமாதிகளை அடையாமல் இருப்பையேயாயின் பேராசை, பீதி, சினம் இலனாய் நீ அசங்கனேயாவாய்; வருத்திய இன்பதுன்பங்களால் வருந்தாது ஊழ்வினைவசத்தால் வந்து பொருந்திய தன்வசஞ் செய்யும் ஆசைவசத்தாய்ப் போகாதிருக்கில் நீ அசங்கனேயாவாய்.

சம்பத் தாபத் திரண்டினுநீ சமமாய் வந்த தனுசரிக்கி
னம்பற் சங்க மகன்றவனீ நாளுந் திரள்வத் துவிற்சமமாய்
விம்பத் திதயச் சத்துவனாய் மேவும் பதுதித் திறமியற்றி
யிம்பர் சங்க மறுத்தின்ப மிசைவா யிராம வெனச்சொன்னான். (71)

சம்பத்து ஆபத்து இரண்டினும் நீ சமமாய் வந்தது அனுசரிக்கில்

ஹே இராகவ நீ சம்பத்தடைந்த போதினும் ஆபத்தடைந்தபோதினும் ஒப்பாய்; கிடைத்தபடி

நம்பற்சங்கம் அகன்றவன் நீ
நாளும் திரள்வத்துவிற் சமமாய்
விம்பத்திதயச் சத்துவனுய் மேவும்
பகுதித்திறமியற்றி இம்பர்ச்சங்கம்
அறுத்து இன்பமிசைவாய் இராம
எனச்சொன்னுன் =

கொண்டு விவகரிக்கில் இருள்மயமாகிய சங்க விலகினவன் நீ என விசுவசிக்கலரம்; எப்பே தும் எல்லா வஸ்துக்களிடத்திலும் ஒப்பா விம்பம்போல இருதயஞ் சத்துவனுய்த் தானே வந்ததினியல்பினின்று விவகரித்து இங்குள்ள சங்கமெல்லாமெடுத்தெறிந்து ஆநந்தமடைவா என்று உபதேசித்தருளினுர்.

ஆகாச கமனு பாவர்தி நிருபணம் முற்றிற்று.

உபசாந்திப் பிரகரணம் முற்றிற்று.

ஆகச் செய்யுள்—1301.

முதற்பாகம் முடிந்தது.



## அறிவிப்பு

இந்நூலின் பிற்பகுதி இரண்டாம் பாகமாகக் கூடிய விரைவில் வெளிவரும். அதன் விலை ரூபாய் (10) பத்து ஆகக்கூடுமென மதிப்பிடப்படுகிறது. இரண்டாம் பாகம் வெளிவந்தபின் இரண்டு பாகங்களையும் ஒன்றாகவே சேர்த்து வெளியிடப்பெறும்.

இரண்டு பாகங்களும் விலை ரூ. 25—00.